𑌶𑍍𑌰𑍀𑌰𑌸𑍍𑌤𑍁.

𑌓𑌂. 𑌶𑍍𑌰𑍀𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌯 𑌪𑌰𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍇 𑌨𑌮𑌃.

**𑌗𑍀𑌤𑌾𑌰𑍍𑌥𑌦𑍀𑌪𑌿𑌕𑌾𑌖𑍍𑌯𑌾**

# 𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌦𑍍𑌗𑍀𑌤𑌾𑌟𑍀𑌕𑌾.

[illegible]

[illegible]

[illegible]

[illegible]

[illegible]

[illegible]

[illegible]

[illegible]

## கீதார்த்ததீபிகை

என்ற

# ஸ்ரீபகவத்கீதையின்

தமிழுரை.

நான்காவது பதிப்பு.

இஃது
கோயமுத்தூர் டிஸ்ட்ரிக்ட் கோர்ட் வக்கீல்
வில்லவாம்பல்
குப்புசாமி அய்யரவர்களால் இயற்றப்பட்டு,
வித்வான்களால் பரிசோதிக்கப்பட்டது.

சென்னைபுரி:
கலாரத்நாகர அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

கலியப்தம் - ௫௦௦௨. சார்வரி ளு.

𑌶𑍍𑌰𑍀 𑌮𑌹𑌾𑌦𑍇𑌵𑌾𑌯 𑌨𑌮𑌃.

---

𑌅𑌨𑍁𑌮𑍋𑌦𑌨𑌶𑍍𑌲𑍋𑌕𑌾𑌃.

---

𑌮-𑌰𑌾-𑌶𑍍𑌰𑍀, 𑌵𑍈. 𑌨𑍂. 𑌵𑌿. 𑌵𑍇𑌙𑍍𑌕𑌟𑌰𑌮𑌣𑌾𑌰𑍍𑌯𑌕𑍃𑌤𑌿𑌃.

𑌅𑌨𑌾𑌯𑌾𑌸𑌾𑌦𑍍 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌜𑌿𑌜𑍍𑌞𑌾𑌸𑍂𑌨𑌾𑌂 𑌸𑍍𑌵𑌾𑌨𑍍𑌤𑌸𑌂𑌶𑌯𑌭𑍇𑌦𑌨𑍇।
𑌸𑍃𑌷𑍍𑌟𑌾 𑌮𑍋𑌕𑍍𑌷𑌸𑌾𑌮𑍍𑌰𑌾𑌜𑍍𑌯𑌾 𑌵𑍍𑌯𑌾𑌖𑍍𑌯𑌾 𑌸𑌹𑌸𑍍𑌰𑌭𑌾𑌨𑌵𑍇॥
𑌕𑍃𑌷𑍍𑌣𑌸𑍂𑌰𑍀𑌯𑌕𑍃𑌤𑌾 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌬𑍋𑌧𑌿𑌕𑌾।
𑌦𑍀𑌪𑌿𑌕𑌾 𑌭𑌾𑌵𑌦𑍀𑌪𑌿𑌕𑌾 𑌜𑍀𑌯𑌾𑌦𑌾𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌤𑌾𑌰𑌕𑌮𑍍॥

---

𑌮𑌯𑌿𑌲𑌾𑌪𑍍𑌪𑍂𑌰𑍍,

𑌬𑍍𑌰-𑌶𑍍𑌰𑍀, 𑌰𑌾𑌮𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌕𑍃𑌤𑌿𑌃.

𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌤𑌿𑌮𑌿𑌰𑌾𑌨𑍍𑌧𑌾𑌨𑌾𑌂 𑌦𑍇𑌹𑌿𑌨𑌾𑌂 𑌵𑌸𑌤𑌿𑌶𑌯𑍇।
𑌕𑍃𑌷𑍍𑌣𑌸𑍂𑌰𑍀𑌯𑌰𑌚𑌿𑌤𑌾 𑌜𑍀𑌯𑌾𑌦𑍍 𑌦𑍀𑌪𑌿𑌕𑌾𑌯𑍁𑌤𑌦𑍀𑌪𑌿𑌕𑌾॥
𑌮𑌤𑌿𑌤𑍍𑌰𑌯𑌵𑌿𑌶𑌾𑌲 𑌜𑍍𑌞𑌾𑌨 𑌦𑍀𑌪𑌾𑌯𑍁𑌤𑌦𑍀𑌪𑌿𑌕𑌾।
𑌜𑍀𑌯𑌾𑌦𑌾𑌕𑌲𑍍𑌪𑌮𑌨𑍍𑌤𑌾 𑌨𑌿𑌵𑍃𑌤𑌾 𑌨𑌨𑍍𑌦𑌦𑌾𑌯𑌿𑌨𑍀॥

---

𑌮𑍈𑌸𑍂𑌰𑍍,

𑌬𑍍𑌰-𑌶𑍍𑌰𑍀, 𑌶𑍍𑌰𑍀𑌨𑌿𑌵𑌾𑌸𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌕𑍃𑌤𑌿𑌃.

𑌶𑍁𑌦𑍍𑌧𑌬𑍋𑌧𑌾𑌸𑍍𑌤𑌦𑌂𑌶𑌾𑌨𑍍𑌯𑌪𑌿 𑌤𑌦𑌨𑍍𑌤𑌶𑌾𑌨𑍍𑌯𑌾 𑌵𑌿𑌰𑌾𑌸𑌾𑌪𑍂𑌰𑍍𑌵𑌾𑌣𑌾
𑌨𑍍𑌯𑍋𑌕𑌂 𑌸𑍇𑌵𑍍𑌯𑍋𑌹𑌾𑌸𑌾 𑌨𑍍𑌯𑌿𑌹𑌨𑍍𑌤𑌨𑌤𑌮𑌂 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌪𑌾𑌣𑍍𑌯𑍁𑌪𑌾
𑌧𑍈𑌃। 𑌦𑍇𑌶𑌾𑌮𑌾𑌨𑌂𑌤𑍍𑌯𑌦𑍀𑌪𑌾𑌪𑌹𑌮𑌿𑌹𑌮𑌨𑌨𑌹𑍁𑌪𑌷𑌿𑌤𑍁 𑌸𑌷𑍍𑌟𑍍𑌵𑌾
𑌸𑌂𑌸𑌾𑌰𑍇𑌽𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌦𑌮𑍀𑌪𑌿𑌕𑌾 𑌨𑌿𑌪𑌿𑌤𑌿𑌷𑍁𑌵𑍃𑌤𑍀𑌨𑌾𑌪𑍁॥

𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 𑌸𑌂𑌶𑍍𑌰𑌿𑌤𑍍𑌯 𑌪𑌦𑍍𑌮𑌪𑌾𑌦 𑌸𑌦𑍍𑌵𑌾𑌦𑌪𑍁𑌨𑍍𑌯𑌾𑌦𑌶𑍋𑌤𑍍𑌤𑌰𑌾𑌶
𑌯𑌶𑌾𑌵𑌾𑌦𑌾𑌰𑌵𑌿𑌨𑍍𑌦 𑌵𑌿𑌯𑌦𑌨𑌿𑌤 𑌵𑌾𑌯𑍁𑌹𑌤𑌨𑍍𑌦𑍍𑌰 𑌬𑍋𑌧𑌾𑌯। 𑌦𑍀𑌪
𑌮𑍈𑌯𑌷𑍍𑌟𑌤𑍍𑌰𑌯𑌵𑌾𑌦𑌮𑌣𑌿𑌤𑌾 𑌯𑌾𑌯𑌶𑌾𑌯𑍁𑌬𑍋𑌧𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌤𑌾𑌂𑌶𑌂
𑌕𑌾𑌦𑍍𑌯𑌾𑌃 𑌸𑌕𑌲𑌸𑌮𑌯𑌸𑌮𑌂 𑌹𑌾𑌷𑍍𑌯𑌾 𑌗𑍍𑌰𑌨𑍍𑌥𑍁𑌵𑌰𑍍𑌯𑌃॥

𑌸𑌤𑌾𑌸𑌾𑌂 𑌸𑌂𑌸𑍍𑌕𑍃𑌤𑌕𑌾𑌵𑍍𑌯𑌪𑍂𑌦𑌪𑌿𑌷𑌣 𑌦𑍃𑌷𑍍𑌟𑌾𑌨𑍍𑌤𑌾𑌂 𑌵𑍀
𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑍃 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌕𑌾 𑌗𑍍𑌰𑌨𑍍𑌥𑍇𑌦𑌿𑌵𑌸 𑌮𑌾𑌵𑌦𑌵𑌕𑌾𑌵𑍇𑌕𑌃। 𑌸
𑌦𑍍𑌯𑍋𑌨𑍍𑌯𑌂 𑌪𑍀𑌠𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑍈𑌵 𑌸𑌣𑌿𑌤𑌿𑌮𑌿𑌜𑍍𑌞𑌾𑌜𑍍𑌞 𑌸𑌾𑌯𑌾𑌰𑌣𑌾𑌦𑌿𑌃 𑌕𑍃
𑌷𑍍𑌣𑌸𑍂𑌰𑍀𑌯𑌃 𑌯𑍀𑌮𑌨𑍍𑌤𑌿𑌰𑌸 𑌸𑌮𑌾𑌨 𑌪𑍍𑌰𑌵𑍀𑌣𑍀𑌂 𑌸𑌂𑌵𑌹𑌾𑌨॥

---

# சாற்றுக்கவிகள்.

தில்லையம்பூர் இயற்றமிழ் வித்துவான்

ம-ா-ா-ஸ்ரீ

## வெங்கடராமய்யங்கா ரியற்றியவை.

கழிநெடி லாசிரியம்.

உயர்வுபெறுந் தமிழ்நாட்டிற் செழுமறையோ பெரிடத மொருங்கு தேர்ந்தே
யுயர்வுமிகுந் தம்முதர நோய்தொலைப்பா னலைந்துசித மருளிற்குன்றி
மயர்வழிக்கத் தம்மவர்க்கே மனமிரங்கார் கல்வியினு மகிழ்ந்துநாளு
நயமுணர்த்தப் பிறர்க்கறிவி னுழைப்பவர்தங் கல்விவகை நன்காமன்றே. (க)

அன்றிருந்தார் தொன்முனிவ ரனைத்துணர்வு மளிக்கவரு மறிவுதாங்கி
யின்றறிந்தே யிருட்டகற்றுங் கைவிளக்காங் கீதையுரை யிரங்கித்தந்தார்
நன்றிருந்தே பார்த்திடுமின் றமிழ்நடையுஞ் சுலபமதா நவின்றதூயோன்
வென்றிமிகுஞ் சோணாட்டுக் குப்புசாமி வேதியனும் விபுதர்கோனே. (உ)

---

கோயமுத்தூர் நேட்டிவ் ஐஸ்கூல் தமிழ்முனிஷி

ம-ா-ா-ஸ்ரீ

## முத்துசாமி அய்யர் அவர்க ளியற்றிய

அகவல்

ஓதைநெடுங்கட லாடையுடுத்த
மேதகுபுவிக்கணுன் வெய்துறுமாந்தர்
பேதிருண்மூலப் பெருபிழம்பிடைபடிஇ
யோதுமுதகைமூன் றுகைரணம்பொறி
தம்மிலுழன்று தழையுமவர்க்கொடு
விம்மியவினைநாண் வீக்கிடாயாப்புணூஉ
தாபத்திரயத் தழலிடைப்புழுவாய்
சோபத்தினிலே தோய்ந்துமருண்டெனும்
பிறவியுமிறுமாம் பிழையொறுக்கி
மறுவிறனுணர்வுறாஉ மாண்சிவம்பெறவருள்
கொண்டுமெசங்கமலை தன்கொழுனனாதி
தண்டொடுநேமி தாங்கியவெம்பரன்
அண்டர்கணுயக னுயரிலவிலயெலா
முண்டவன்வாய்மலர்ந் துசிதவருச்சுனன்
கருத்தொடுவினவக் கசடறுஞானப்
பொருட்கதிர்விரித்த புனிதநற்கீதைக்
கறவிலவீடுண ரான்றோர்செய்யுரைத்
திறமெலாஞ்சேரத் திரட்டிவிளக்கியே
நல்வகைச்சோழநன் னாட்டினுலுதித்துவாழ்
சொல்வளக்கோயமுத் தூரினிலவுவோன்
பல்லுயிர்க்குபகரிப் பதுடற்பயனென
சொலலுநூற்கொக்கவே தொல்லுலகுக்குநற்
குப்புசாமிப்பெயர் கொண்டிடுவேதிய
நற்புதன்செய்தயோ னன்றியார்செய்வரே.

[illegible]

[illegible]

[illegible]

வி. கூ.

---

# அவதாரிகை.

நன்மையளிக்கவென்று நாரணனவதரித்து
மன்னுபூவுலகிற்காக்ஷி வரைவிலாதெல்லோருக்கும்
தன்மையாய்விளக்கிநல்ல தத்துவவுபதேசத்தைப்
பன்னுமாவாசுதேவன் பதத்திணைப்போற்றிபோற்றி.

நேத்தியாம்வேதாந்த வாக்குக்குமெட்டாத
நிர்குணாநந்த பரமே;
நெய்யுவெண்ணெயுநிகர் நேசமாம்ஜீவேச
நேர்மையாயுறு மாயமே;
எள்ளிலெண்ணெயுமேல் எங்குமேபரவிடும்
ஏகநாயக போதமே;
எண்ணிடத்தொலையாத எத்தனையோவஸ்துவாய்
என்றிடுசிதா நந்தமே;
பரிபூரணஅத்துவைத சச்சிதானந்தகன
பரதத்துவமெஞ் ஞானமே;
படைத்தன்முதல்செய்யினும் பற்றின்றிச்சாக்ஷியாய்
பார்க்கின்ற சைதன்னியமே;
வேதோபநிடதமெனும் வேதாந்தசாரமாம்
கீதோபதேச விதமே;
பாஷ்யவ்யாக்யாநாதி அர்த்தசங்கிரகமும்
பாங்கானதமிழ் நடையிலே;
கிளர்மைசேர்பண்டிதர்கள் பார்த்தியற்றியவிந்த
கீதார்த்த தீபிகையினை;
பரமார்த்தமென்னப் படித்துளோர்க்கின்புற
பரமபதம்நீ யருள்வையே.

ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தயே நம:

# முகவுரை.

இவ்வுலகத்தில் சகலமனிதர்களும் துக்கத்தை வெறுத்து சுகா நுபவத்தையே கோருகிறார்களென்பதை நாம் நிமிஷந்தோறும் காண் கிறோம். ஆனால் இவர்களில் பெரும்பாலோர் சுகத்தின் தாரதம்மியம் தெரியாமல் எதை வாஸ்தவமாய்க் கோரவேண்டியதோ அதை விட்டு கோரத்தகாததைக் கோருகிறார்கள். ஆகையினாலே சுகத்தின் தாரதம் மியத்தை விசாரிப்போம்.

இந்த சுகமானது உத்தமம் மத்தியமம் அதமம் என மூன்று வகைப்படும். இவைகளில் அதம மத்தியம சுகங்கள் பல உள்பிரிவு களை யுடையனவாகிலும் அந்த உள்பிரிவுகளைப்பற்றி விசாரிக்க இப் போது அவசியமுமில்லை. பொதுவாய் விசாரிப்பதே போதுமானதாயு மிருக்கிறது.

அதமசுக மெதுவென்றால், இவ்வுலகத்தில் காதுகளால் வீணை முதலிய வாத்தியாதிகளைக் கேட்பதினாலும் கண்களால் விநோதமான ரூபாதிகளைப் பார்ப்பதினாலும் மூக்குகளால் புஷ்பாதி வாசனைகளை கிர கிப்பதினாலும் நாவினால் பழம் முதலியவைகளை ருசிபார்ப்பதினாலும் துவக்கில் சந்தனம் முதலியவை பூசிக்கொள்ளுவதினாலும் பின்னு மிப் படியே தன கனக வஸ்து வாகன புத்திர மித்திர களத்திராதிகளுடன் கூடி யிருப்பதினாலும் உண்டாகிறவும் மனுஷியாநந்த மென்று சுருதி ஸ்மிருதிகளில் வழங்குகிறவுமான சுகமே.

பெரும்பாலோரால் விரும்பப்படுகிற இவ் வுலகசுகத்தை அதம மென்று எப்படிச் சொல்லலாமென்றால், அப்படிச் சொல்லப் பலமுகாந் திரங்களுண்டு. அவைகளில் சில இவ்விடத்தி லுதாரணமாய் எடுத்துக் கொள்ளுவோம்.

1. அது ஸ்திரமா யிருக்கத்தக்கதல்ல. எப்படியென்றால் - வீணை முதலிய வாத்தியாதிகளைக் கேட்கிறவரையிலும் விநோதமான ரூபாதி களைப் பார்க்கிறவரையிலும் புஷ்பாதிகளை முகருகிறவரையிலும் பழம் முதலியவைகள் நாக்கில் சம்பந்தித்திருக்கிறவரையிலும் சந்தனாதிகள் தேகத்தில் பூசியிருக்கிற வரையிலும் தன கனக வஸ்து வாகன புத்திர மித்திர களத்திராதிகளுக்குத் தீங்கு நேரிடாதிருக்கிற வரையிலும் ஏதோ சுவற்பகாலம் சுகமிருக்குமானாலும் அச் சுகம் நீடித்திராது. மேலும் இப்படிப்பட்ட சுக மனுபவிக்கும் காலத்திலேயே தற்செய

லாய் நேரிடும் துக்க சம்பந்தத்தினால் அச்சுகம்கூட நசித்துப்போகிறது.

2. இப்படிப்பட்ட விஷய சுகமானது எல்லோருக்கும் சமமாயிருப்பதாகச் சொல்லலா மென்றால் அப்படியு மில்லை. ஒருவனுக்கு சுககரமாயிருக்கிற ஆகாராதி வஸ்துக்கள் மற்றொருவனுக்கு சுககரமாயிருக்கவில்லை.

3. சிலருக்கு சுவற்பகாலமாவ திருக்கிறதாகச் சொல்லப்பட்ட அந்த சுகமானது துக்கக் கலப்பற்றதாக விருக்கிறதோ வென்றால், அப்படியுமில்லை. இராஜாவாகவிருந்து சகல பாக்கியங்களையும் அனுபவிக்கிற காலத்திலேயே தன் வம்சவிருத்திக்குப் புத்திர னில்லையென்றும், நித்திய தரித்திரனாயிருக்கிறவன் புத்திரபாக்கிய முண்டாச்சு தென்று சந்தோஷமடையும் காலத்திலேயே இக்குழந்தைகளை ரக்ஷிக்க தனமில்லையே என்றும், சுகத்தைக் கொடுக்கத்தக்க சகல சம்பத்திருந்தும் அவைகளை அனுபவிக்க ஏது வில்லாமல் வியாதியினால் பீடிக்கப்படுகிறேனென்றும், பின்னு மிப்படியே ஒவ்வொருவனும் சுகத்துடன் துக்கத்தைக் கலந்தே அனுபவிக்கிறான்.

ஆகையால், பலரால் விரும்பப்படுகிறதானாலும் இந்த உலக சுகம் வாஸ்தவமான சுகமல்ல. ஆனால் உலகத்தில் இதை சுகமென்று வியவகரிக்கிறார்களே வென்றால், வாஸ்தவத்தை யறியாததினால் அப்படி வியவகரிக்கப்படுகிறது. எப்படி என்றால், இராஜாவாயிருப்பது அதிக சுகமென்று சொல்வோமானால், அவ்வரசனுக்கும் பலவித துக்கங்களிருக்கின்றன. அவனுடைத்தாயிருக்கிற சேவகர்கள் புத்திர மித்திர களத்திராதிகள் வாகனாதிகள் இவைகள் மூலமாயும் சத்துருக்கள்மூலமாயும் நோய் பசி தாகம் முதலியவைகள் மூலமாயும் தன் தேசத்திலுண்டாகும் க்ஷாமம் முதலியவைகள் மூலமாயும் தனக்குச் சமானமானவர்கள் குரு மற்றுமுள்ள பெரியோர்கள் இவர்கள் விஷயமாய்ச் செய்யவேண்டிய மரியாதை பூஜை முதலியவைகளில் குறைவுண்டாகாமல் நடக்கவேண்டியதின் மூலமாயும் துக்க மெவ்வளவுண்டாகுமோ அவ்வளவு சுகமுண்டாக ஏதுவில்லை. இப்படியே நடக்க சக்தியற்றவன் நடப்பவனையும் நடக்கிறவன் வாகனாதிகளில் சவாரிபோகிறவனையும் சுகி என்று வியவகரித்தாலும் வாஸ்தவத்தில் அவர்களை சுகிகளென்று சொல்ல இடமில்லை. ஆகையால், இந்த உலகசுகத்தில் சுகமென்கிற வியவகாரம் அக்கியானத்தினா லுண்டானதே.

மத்தியம சுக மெதுவென்றால், இவ்வுலகத்தில் சிரத்தையோடு தேவதைகளை யுத்தேசித்தும் பலனை யுத்தேசித்தும் செய்கிற வேதோக்தமான நித்திய நைமித்திக கருமங்கள், சத்பாத்திரத்தில் செய்

யப்படும் தானம், தேவாலய பிரதிஷ்டை, சத்திரம் சாவடி தண்ணீர்ப்பந்தல் முதலியவை கட்டிவைத்தல், தடாகாதிகள் வெட்டிவைத்தல், தேவாலயம் சத்திரம் தண்ணீர்ப்பந்தல் முதலியவைகளில் பூஜை அன்னதான முதலியன நடப்பித்தல், முதலாயுள்ள புண்ணிய கருமங்களினல், அக்கருமங்களுக்குத் தக்கபடி பலன்களை அனுபவிக்க சுவர்க்கலோகம் முதலிய லோகங்களில் தேவசரீரமடைந்து, அந்தலோகங்களில் அனுபவிக்கத் தக்கதாயும் துக்கக்கலப் பற்றதாயும் எப்போதும் சந்தோஷ முள்ளதாயும் வியாதி முதலிய துக்கமில்லாததாயும், இப்பூலோக சுகத்தைவிட பலமடங்கு சிரேஷ்டமானதாயும், தேவாநந்தமென்று சுருதி ஸ்மிருதி புராணுதிகளில் சொல்லப்பட்டதாயுமுள்ள சுகமே. இந்த சுவர்க்காதி லோகங்களில் அனுபவிக்கப்படும் சுகத்தை மத்தியம சுகமென்று எப்படி சொல்லலா மென்றுலோ, இது அழிவற்ற சுகமல்லாததினுல்தான். ஏனென்றுல், எந்த புண்ணியகருமத்தின் பலனை அனுபவிக்க எந்தலோகத்தை ஒருவன் அடைந்தானே, அந்தலோகத்தில் அந்த புண்ணிய கருமத்திற்காகக் குறிப்பிட்டிருக்கிற காலம்வரையில்தான் அந்த லோகசுகத்தை யனுபவிக்கலாம். அந்தப் புண்ணியத்தின்பலனை அனுபவிக்கக் குறித்தகாலம் முடிந்தவுடனே “தஸ்மிந்யாவத்ஸம்பாதமுஷித்வாதைதமேவாத்வாநம் புநர்நிவர்த்தந்தே” “க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விசந்தி” என்கிற பிரமாணங்கள்படிக்கு அவன் இந்தமனுஷியலோகத்தில் ஜனித்து, மறுபடியும் இந்த உலகத்தின் சுகதுக்காதிகளையே அனுபவிக்க வேண்டியவனு யிருக்கிறு னைதினுல்தான்.

உத்தமசுக மெதுவென்றுல், சருவசிரேஷ்டமான மோக்ஷமே. மோக்ஷமென்கிற பதத்திற்கு விடுதலை யடைகிறதென்பதே சரியான அர்த்தம். எதிலிருந்து விடுதலையடைகிற தென்றுல், ஜனனமரணங்களாகிற சம்சாரதுக்கத்திலிருந்துதான். சம்சாரம் எப்படி துக்கமானதென்றுலோ, மலமூத்திர இரக்த மாம்சம் முதலியவைகளால் நிறைந்ததாகிய தாயின் கருப்பாசயத்தில் கட்டுண்டிருப்பதும் துக்கமே. அக்கருப்பத்திலிருந்து தலைகீழாய் பலதுன்பங்களடைந்து பூமியில் பிறப்பதும் துக்கமே. பிறந்தபிறகு பால்விய கௌமார யௌவன வார்த்தக தசைகளில் பசி தாகம் வியாதி குடும்ப சம்ரக்ஷணை குடும்ப வியோகம் அசக்தி முதலியவைகளும் துக்கமே. கடைசியாய் மரணுவஸ்தையும் துக்கமே. ஆகையால், இச்சம்சாரம் துக்கமென்று சொல்லப்பட்டது. அதிலிருந்து விடுபடுவதாகிய மோக்ஷமானது அழிவற்றதாகிய நித்தியாநந்தமென்றும் பிரம்மாநந்தமென்றும் சுருதி ஸ்மிருதி இதிஹாஸ புராணுதிகளில் பிரசித்தமா யிருக்கிறது.

சுகமானது இப்படி மூன்றுவித தாரதம்மிய முடையதாயிருப்பதினாலே, ஒவ்வொருவனும் உத்தம சுகமடைய முயலவேண்டுமேயன்றி மற்ற சுகங்களை விரும்பக்கூடாது. அதை யடைய முயற்சிசெய்துவந்தால் அவனவன் முயற்சிக்குத் தக்கபடி இந்த ஜன்மத்திலேயேயாவது "வஹூநாம் ஜந்மநாமந்தே ஜ்ஞாநவாந்மாம் ப்ரபத்யதே" என்கிற பிரமாணப்படிக்கு சில ஜன்மங்களுக்குப் பிறகாவது உத்தம சுகமடையலாம். மத்தியமாதம சுகங்களைக்கோரி அவைகளிலேயே பற்றுள்ளவன் எத்தனைகோடி ஜன்மங்களை எடுத்தாலும் உத்தம சுகமடைய மாட்டான்.

ஆகையால், இந்த உத்தம சுகமடைய சாதனமெதென்பதை இப்போது விசாரிக்கவேண்டியதாகிறது. முக்கிய சாதனம் ஞானமாயும் அமுக்கியசாதனம் நிஷ்காம கருமங்களாயு மிருக்கின்றன. அச்சாதனங்களை அடையும் மார்க்கத்தை நமக்கு வெளிப்படுத்துவதில் முக்கியமும் சருவசிரேஷ்டமுமானசாதனம் சுருதியே. சுருதி என்பது வேதமென்றறிக. வேதமானது கருமகாண்டம் ஞானகாண்டமென இருவகைப்படும். நித்திய நைமித்திக கருமங்களைப்பற்றியும் அவைகளை அநுஷ்டிக்கவேண்டிய விதத்தைப்பற்றியும் சொல்லுகிற பாகம் கருமகாண்டமென்றும், எது மோக்ஷத்திற்கு முக்கிய சாதனமோ, அந்த ஞானத்தை உண்டாக்குகிறவும் வேதாந்தமென்று சொல்லப்படுகிறவுமான பாகம் ஞானகாண்டமென்றும் சொல்லப்படுகிறது. இக்கருமகாண்டத்தில் சொல்லப்பட்டிருக்கிற நித்திய நைமித்திக கருமங்களை அவைகளுக்கு விதிக்கப்பட் டிருக்கிற பலனை அடையவேண்டுமென்கிற கோரிக்கையுடன் செய்தால் மத்தியம சுகமடையப்படுமானாலும் பலனில் அபேக்ஷையில்லாமல் விதிப்படி செய்து ஈசுவரார்ப்பணம்செய்துவந்தால், அதினால் சித்தசுத்தியும் சித்தசுத்தியினால் ஞானமும் ஞானத்தினால் மோக்ஷமு மடையலாம்.

விஸ்தாரமாயும் மகாத்துமாக்களுக்கே அர்த்தமாகக் கூடியதாயும் உத்தமசுக மடைவிக்க முக்கிய சாதனத்தை வெளிப்படுத்துகிறதாயு மிருக்கிற வேதாந்தமாகிய உபநிஷத்துகளி னர்த்தங்களைப் பூர்ணமாய் அறிந்துகொள்ளும் சக்தி நமக்கில்லையே என்றாலோ, இக்கொடுமையான கலியுகத்தில் நாமிப்படிப்பட்ட நிலைமைக்கு வருவோமென்பதை யுத்தேசித்தே சாக்ஷாத் மகாவிஷ்ணுவானவர் கிருஷ்ணாவதாரம் செய்திருந்த காலத்தில் அர்சுனனை நிமித்தமாகக்கொண்டு சகலரும் கடைத்தேற சுலபமா யிருக்கும்பொருட்டு வேதாந்தார்த்தங்களின் சாரமாகிய கீதா சாஸ்திரத்தை உபதேசித்திருக்கிறார்.

மகாவிஷ்ணுவானவர் கிருஷ்ணாவதாரம் செய்ய வேண்டிய தென்ன? அவர் அர்சுனனை நிமித்தமாகக்கொண்டு உபதேசிக்க வேண்

டியதென்ன? என்றுலோ இவ்விஷயம் சாதாரணமாய் பலருக்குத் தெரிந்திருந்தாலும் தெரியாத சிலர் பொருட்டு அச்சரித்திரத்தை இவ்விடத்தில் சுருக்கிச் சொல்லுவோம். "𑌯𑌦𑌾 𑌯𑌦𑌾 𑌹𑌿 𑌧𑌰𑍍𑌮𑌸𑍍𑌯 𑌗𑍍𑌲𑌾𑌨𑌿𑌰𑍍𑌭𑌵𑌤𑌿 𑌭𑌾𑌰𑌤 । 𑌅𑌭𑍍𑌯𑍁𑌤𑍍𑌥𑌾𑌨𑌮𑌧𑌰𑍍𑌮𑌸𑍍𑌯 𑌤𑌦𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌸𑍃𑌜𑌾𑌮𑍍𑌯𑌹𑌮𑍍 ॥ 𑌪𑌰𑌿𑌤𑍍𑌰𑌾𑌣𑌾𑌯 𑌸𑌾𑌧𑍂𑌨𑌾𑌂 𑌵𑌿𑌨𑌾𑌶𑌾𑌯 𑌚 𑌦𑍁𑌷𑍍𑌕𑍃𑌤𑌾𑌮𑍍 । 𑌧𑌰𑍍𑌮𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌪𑌨𑌾𑌰𑍍𑌥𑌾𑌯 𑌸𑌂𑌭𑌵𑌾𑌮𑌿 𑌯𑍁𑌗𑍇 𑌯𑍁𑌗𑍇" (இந்த பகவத்கீதை ச - வது அத்தியாயம், எ - அ - சுலோகங்களைப்பார்க்க,) என்கிற பகவத்வாக்கியப்படிக்கு துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனத்திற்காகவும் யாதவ வம்சத்தில் பிறந்திருந்தவர்களும் மகாபக்தர்களுமான வசுதேவர், தேவகி, இவர்களுடைய இஷ்டபூர்த்திக்காகவும் அவர்களுக்குப் புத்திரனுக அவதாரம் செய்தார்.

அக்காலத்தில் அஸ்தினுபுரத்தை யாண்டுவந்த சந்திரவம்சத் தரசர்களின் சந்ததியில் திருதராஷ்டரனென்றும் பாண்டு என்றும் இரு சகோதரர்க ளிருந்தார்கள். திருதராஷ்டரன் பிறவிக்குருடன். அவன் பட்டத்திற்கு அருகனல்லா விட்டாலும் தம்பியான பாண்டு தமையனிடத்திலுள்ள பக்ஷத்தினுல் தமயனை ராஜாவாக்கித் தான் இளவரசானுன். சிலகாலத்திற்குப்பிறகு இறந்துபோனுன். இந்த பாண்டுவுக்கு, தருமபுத்திரர், பீமசேனன், அர்சுனன், நகுலன், சகதேவன், என ஐந்து குமாரர்களும் திருதராஷ்டரனுக்கு துரியோதனன் முதலிய நூறுகுமாரர்களு மிருந்தார்கள். பாண்டு குமாரர்கள் வித்தையிலும் வல்லமையிலும் பெருந்தன்மையிலும் புத்தியிலும் சகலவித நற்குணங்களிலும் துரியோதனுதிகளைவிட சிரேஷ்டர்களாயும் சகலராலும் புகழப்படத் தக்கவர்களாயு மிருந்ததினுல் தன் தகப்பனுக்குப் பிறகு இராஜ்ஜியம் தனக்குக் கிடைக்காமல் போய்விடுமென்கிற பயத்தினுல் துரியோதனன் இவர்களை விரோதித்துத் தந்திரமாய்க் கொன்றுவிடவும் எண்ணங்கொண்டான். தன் குமாரன் பாண்டவர்களை விரோதிக்கிருனென்கிற சங்கதியை திருதராஷ்டரன் அறிந்து பாண்டவர்களுக்குப் பாதி இராஜ்ஜியம் கொடுத்து, இந்திரப் பிரஸ்தமென்கிற பட்டணத்தில் அவர்களை வசிக்கச்செய்தான். துரியோதனன் அத்துடன் திருப்தியடையாமல் பாண்டவர்களைக் கொன்றுவிடப் பலவித முயற்சி செய்தும் பயன்படாததினுல் அவர்களை அடுத்து அவர்களிடத்தில் சிநேகம் பாராட்டிக் கடைசியில் மோசடியாய் தருமபுத்திரரைச் சூதாட்டத்திற் குட்படுத்தி தனக்கு (துரியோதனனுக்கு) அம்மானுன சகுனி என்பவனைக் கொண்டு மாயச்சூதாடுவித்து, பாண்டவர்களுடைய சகல சொத்துக்களையும் அபகரித்துக்கொண்டது மல்லாமல் பாண்டவர்களையும் அவர்களுடைய பத்தினியும் பதிவிரதா சிரோமணியுமாகிய துரோ

பதையையும் சபையில் மானபங்கம் செய்தான். பீஷ்மாசாரியர் முதலான பெரியோர்களுடைய வேண்டுதலின்பேரில் பாண்டவர்கள் பன்னிரண்டுவருஷம் காட்டில் சஞ்சரித்துப் பதின்மூன்றாவது வருஷம் தனக்கு (துரியோதனனுக்கு)த் தென்படாதவிடத்தில் வசித்துப் பிறகு வந்தால் பாதிராஜ்ஜியம் கொடுக்கிறதாக துரியோதனன் உடன்பட்டான். மகா பலசாலிகளானாலும் தருமமென்கிற கயிற்றால் கட்டுண்ட பாண்டவர்கள் காட்டுக்குச்சென்று நிபந்தனை தப்பாமல் பதின்மூன்று வருஷம் காடுமலைமுதலிய விடங்களில் சஞ்சரித்து பிறகு பாதிராஜ்ஜியம் கொடுக்கும்படி துரியோதனனைக் கேட்டனுப்பினார்கள். அதற்கவன் சம்மதிக்கவில்லை பிறகு தங்களுக்கு அம்மான் பிள்ளையும் தங்களிடத்தில் அதிக வாத்ஸல்லியமுடையவருமான கிருஷ்ணபகவானைப் பிரார்த்தித்து அவர் மூலமாயும் துரியோதனனை பாதிராஜ்ஜியம் கொடுக்கும்படி கேட்டனுப்பினார்கள். துரியோதனன் ஊசிகுத்து மிடமுள்ள பூமிகூடகொடுக்க மனதில்லை என்றான். அதின் பிறகு இருகக்ஷியாரும் யுத்தம் செய்யவேண்டியதாய் நேரிட்டது. இந்த யுத்தத்திற்கு பாரதயுத்தமென்று பெயர்.

இந்த யுத்தத் துவக்கத்தில் இருதரத்துச் சேனைகளும் யுத்தகளத்தில் நிற்கும்போது, அச்சேனைகளை அர்சுனன் பார்த்து இருதரச் சேனைகளிலு முள்ளவர்களில் பெரும்பாலும் தன் பந்துக்களும் சிநேகிதர்களும் குருக்களுமா யிருக்கக்கண்டு, பரிதாபமடைந்து தனக்கு சாரதியாக விருந்தருளிய ஸ்ரீகிருஷ்ணபகவானை நோக்கி, நான் இந்தச் சேனைகளைக்கொல்லத் துணியேன், குருமுதலிய பந்துக்களைக் கொன்றால் நரகமடைவேன், எனக்கு இராஜ்ஜியம் வேண்டாம், காட்டுக்கே மறுபடி செல்வேனென்றான். அந்த வார்த்தைகளைக் கேட்ட கிருஷ்ண பகவானனவர் அர்சுனனை நிமித்தமாகக்கொண்டு சகலமான பெயர்களும் கடைத்தேறும்பொருட்டு, க்ஷத்திரிய தருமம் முதலிய வருணாசிரம தருமத்தையும், அவனவனுடைய வருணாசிரம தருமத்தை விட்டவன் நரகமடைவா னென்பதையும், ஆத்மானாத்ம விவேகத்தையும், உத்தம சுகத்தையடைய வேண்டியதற்கான ஞான கருமமார்க்கங்களையும் உபதேசித்தார். ஆகையால், இந்த கிரந்தமானது பகவானான கிருஷ்ணசுவாமியினா லுபதேசிக்கப் பட்டபடியால் பகவத்கீதை யென்றும், வேதாந்தார்த்தங்களைத் திரட்டிச் சொல்லி யிருக்கிறபடியால் உபநிஷத் என்றும், பரபிரம்மத்தைத் தெரிவிக்கிற வித்தையா யிருக்கிறதினால் பிரம்ம வித்தையென்றும், ஆத்மாநாத்ம விவேகத்தை விளக்குகிற சாங்கிய யோகமும் கருமயோகமும் சொல்லப்பட் டிருக்கிறதினால் யோக சாஸ்திரமென்றும், கிருஷ்ண பகவானுக்கும் அர்சுனனுக்கும் நடந்த உத்தரப் பிரத்தியுத்தரங்களா யிருக்கிறதினால் கிருஷ்ணார்சுன ஸம்வாதமென்றும் சொல்லப்படுகிறது.

பாரதயுத்தத்தில் நடக்கும் சகல சங்கதிகளையும் உடனுக்குடனே திருதராஷ்டரனுக்குச் சொல்லும்படியாய் மகாவிஷ்ணு அம்சத்தினால் அவதாரம் செய்திருக்கிற வேதவியாச மகரிஷியினால் அநுக்கிரகமும் ஞானக்கண்ணும் பெற்ற சஞ்சயனென்பவரால் இந்த உபதேசம் முழுவதும் திருதராஷ்டரனுக்குச் சொல்லப்பட்டது. வேதவியாச மகரிஷியானவர் மகாபாரத மென்கிற கிரந்தம் செய்தபோது இந்த கீதையை மகா பாரதத்துடன் சேர்த்தார். அப்படி சேர்த்தே ஐயாயிர வருஷங்களுக்கு அதிகமா யிருக்கவேண்டும். அதற்குப் பிந்தியகாலத்தில் இந்த சாஸ்திரார்த்தத்தைச் சரியாய்த் தெரிந்துகொள்ளும் சக்தி ஜனங்களிடத்தில் குறைந்துபோன படியால், இரண்டாயிரம் வருஷங்களுக்கு முந்தி ஸ்ரீமத் சங்கராசாரிய சுவாமியவர்கள் இந்த கீதார்த்தத்தை விவரித்துக்காட்டி அத்துவைத மத சித்தாந்தத்திற் கிணங்கவும், அதற்குச் சிலகாலத்திற்கு பிறகு ஸ்ரீமத் இராமானுஜாசாரிய சுவாமியவர்கள் விசிஷ்டாத்துவைத மத சித்தாந்தத்திற் கிணங்கவும், ஸ்ரீமத் மத்துவாசாரிய சுவாமிகள் துவைதமத சித்தாந்தத்திற் கிணங்கவும் பாஷியம் செய்தார்கள். அப்பாஷியங்களின் அர்த்தங்களைக்கூடத் தெரிந்துகொள்ளும் சக்தி ஜனங்களிடத்தில் குறைவுபடவே, அந்தந்த மதத்தைப் பின்பற்றிய சில விவேகிகள் அந்தந்த மதத்தை யனுசரித்து மூலத்திற்கு வியாக்கியானங்களும் பாஷியங்களுக்கு (டீகாவென்று வழங்குகிற) வியாக்கியானங்களும் செய்தார்கள். இக்காலத்திலோ, வயதுசென்றவும் வைதிக மார்க்கத்திலுள்ளவும் சிலர் தவிர மற்றவர்களிடத்தில் சம்ஸ்கிருதவித்பத்தி விசேஷமாயில்லாமையால் அவர்களின்பொருட்டு பிராகிருத பாஷையில் மொழிபெயர்ப்பது அவசியமாயிற்று. அப்படியே உத்கிருஷ்டமான இக்கிரந்தமானது யூரோப்தேசத்தில் கிரீக், ஜர்மன், லாட்டின், இங்கிலீஷ் பிரஞ்சு முதலிய பாஷைகளிலும் இந்த தேசத்தில் இங்கிலீஷ் தெலுங்கு கன்னடம் தமிழ் முதலிய பாஷைகளிலும் மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. அம்மொழி பெயர்ப்புகளைவிட இக்கிரந்தத்தினா லதிகப் பிரயோஜனமுண் டென்பதை இதைப்பார்த்த மாத்திரத்தில் சகலரும் தெரிந்து கொள்ளலாம், அதாவது, மூலசுலோகங்களும் பத பதார்த்தங்களும் பொழிப்புரையும் எழுதப்பட்டிருக்கின்றன. இவைகளிலிருந்து பேதப்பட்டிருக்கிற விஷயங்களில் பிரசித்தமான [illegible]ல்கண்ட மூன்றுமத பாஷியங்களி னுடையவும், அத்துவைத மத சித்[illegible]ந்தத்தை அனுசரித்து ஸ்ரீதரசுவாமிகளும் துவைத சித்தாந்தத்தை யனுசரித்து இராகவேந்திர சுவாமிகளுஞ் செய்திருக்கிற வியாக்கியானங்க ளுடையவும் முக்கியமான தாத்பரியங்கள் எழுதப்பட் டிருக்கின்றன. இந்த பாஷியங்களுடையவும் வியாக்கியானங்க ளுடையவும் தாத்பரியங்கள் சில பதங்கள் விஷயத்தில் மட்டும் பேதப்படு மிடங்களில், அந்தப்

பதங்களுக்கு அடையாளமிட்டு பேதமுள்ள அர்த்தங்கள் அந்தப் பக்கத்தின் அடியில் குறித்துக் காட்டப்பட்டிருக்கின்றன. அத்துவைத மதத்தை அநுசரித்த மதுசூதன சரஸ்வதி என்பவருடைய வியாக்கியானத்தி லிருந்தும் ஸ்ரீமத் சங்கராசாரிய சுவாமிகளுடைய கீதாபாஷியத்திற்கு ஆநந்தகிரி என்பவர் செய்திருக்கிற டீகாவிலிருந்தும் சில பதங்களுடைய அர்த்தபேதங்கள் சில விடங்களில் வெளிப்படுத்தப் பட்டிருக்கின்றன. பாஷியங்களையாவது வியாக்கியானங்களையாவது பூர்ணமாய் மொழிபெயர்த் திருப்பதாக கிரகிக்கக்கூடாது. அப்படிச் செய்வதினல் அதிகமாய்ப் பெருகுமென்றெண்ணி அந்தந்த தாத்பரியங்கள் கூடியவரையில் சுருக்கிச் சொல்லப்பட் டிருக்கின்றன. பாஷிய வியாக்கியானங்களில் குறிப்பிட்ட சுருதி ஸ்மிருதி புராணாதி வாக்கியங்களும் அவைகளுக்கு அர்த்தங்களும் அவ்வவ்விடங்களி லெழுதப்பட்டிருக்கின்றன. பெரியோர்களால் நான் தெரிந்து குறிப்பு போட்டிருந்தவைகளும் உபயோகமா யிருக்கலாமென்று நான் எண்ணினவைகளுமான சில அபிப்பிராயங்களும் சுருதி ஸ்மிருதி புராணாதி வாக்கியங்களும் அவசியமானவைகளுக்கு அர்த்தங்களும் சில சுலோகங்களின் அடியிலெழுதப்பட் டிருக்கின்றன. ஸ்ரீதர சுவாமிகளுடைய வியாக்கியானத்தை அனுசரித்தே பெரும்பாலும் பதவுரை பொழிப்புரைகள் எழுதப்பட் டிருக்கின்றன. ஏதாவதொரு மதத்தை சிலாகித்து அல்லது தூஷித்துச்சொல்ல எண்ணம் கொள்ளவுமில்லை, அப்படிச் செய்யவுமில்லை. அந்தந்த மதசுவரூபம் தெரிந்தவரையில் வெளியிடப்பட் டிருக்கின்றது.

இந்தக் கிரந்தத்தைச்செய்து இதனல் கீர்த்தி அடையவேண்டுமென்கிற எண்ணம்கொண்டு இதில் நான் பிரவிருத்திக்க வில்லை. கீதா சாஸ்திரமானது மோக்ஷ சுகத்திற்கு வழிகாட்டி யானதென்று பெரியோர்களால் அறிந்து அதை மனனம்செய்யத் தொடங்கினதில் சிரேஷ்டமான தத்துவார்த்தங்கள் என் அற்பபுத்தியில் நிலை நிற்காமையால் எழுதி மனனம் செய்யலாமென்று தொடங்கினேன். பிறகு பிரசித்தமான மூன்று சித்தாந்தங்களையும் விசாரிக்க புத்தி யுண்டானமையால் அவைகளை விசாரித்து எழுதினேன். அப்படி எழுதினது என்னை விட அற்பக்ஞான முள்ளவர்களுக்கு முபயோக மாகலாமென்றெண்ணி அச்சிடத் துணிந்தேன்.

இவ்வளவு செய்கைக்கும் என் சாமார்த்தியமே காரணமென்று மலைக்கவேண்டாம். ஒரு பாஷையிலாவது நான் போதுமான ஞானமுள்ளவனல்ல. அப்படியிருந்தும் இவ்வளவு பெரிதான காரியத்தில் தலையிடலாமா வென்றால், ஈசுவரானுக் கிரகமும் மகாவித்வான்களுடையஉதவியு முண்டானபோது என்னைவிட கிஞ்சிக்ஞனும் சமர்த்தனுவான்.

இந்த கிரந்தத்தைத் துடங்க முதல் காரணமானவர் கோயமுத்தூர் வாசியாயிருந்தவரும் கொச்சி புதுக்கோட்டை முதலிய சமஸ்தான வித்வானும் திருமத சித்தாந்தங்களை அறிந்தவருமான ஸ்ரீ வெங்கிட்டரமணாசார் அவர்கள்தான். அந்தமகானுடைய சகாயத்தினால் மொழிபெயர்க்கப்பட்ட இந்த கிரந்தத்தை பூர்ணமாய் ஒத்துப் பார்ப்பதற்குள்ளாக அவர் வைகுண்டபதவியை அடைந்தார். அந்த மன வருத்தத்தினால் இந்த கிரந்தத்தை அவ்வளவுடன் கைநழுவ விடத்தக்க நிலைக்குவந்துவிட்டேன். அப்படியிருக்க ஈசுவரானுக்கிரக பெலத்தால் விசேஷ பிரக்ஞையும் சுகுணமு முள்ளவரும் திருநெல்வேலி ஜில்லா கல்லடக்குருச்சி அக்கிரகாரவாசியும் இப்போது காசியில் பண்டித சுவாமிகளென்று பிரசித்திபெற்று பரம ஹம்ஸரா யிருக்கிற பூர்வாசிரமத்தில் ராமாதீக்ஷிதர் என்கிற பெயருடையவருடைய மூன்றாவது குமாரருமான ஸ்ரீ சந்திரசேகர சாஸ்திரிகளுடைய சகாயம் கிடைக்கப் பெற்றேன்.

இவ்விஷயத்தில் கோயமுத்தூர் வாசியான தெக்கலூர் ஸ்ரீ ராமாசாரியார் குமாரரும், பண்டிதருமான அகோபலாசாரியார் அவர்களுடைய சகாயமும், மத்துவமத சித்தாந்த விஷயமாக சில சமயங்களில் கிடைத்தது.

பின்னும் இக்கிரந்தம் எழுதத்தொடங்கினது முதல் எழுதின ஒவ்வொரு பாகத்தையும் பரிசோதனை செய்து பிழைகளை நீக்கி குணங்களைச் சேர்க்கும் விஷயத்தில் யுக்தாயுக்தங்களை எடுத்துக் காட்டியும் வாசகப்பிழை எழுத்துப்பிழைகளைத் திருத்துவித்தும் அப்படியே அச்சிட்டுவரும் ஒவ்வொரு புரூப் ஷீட்டுகளைப் பரிசோதித்தும் வந்தவர்களும் வைதீக லௌகீக பரிக்ஞான முள்ளவர்களும் நல்லவிவேகி களும் வேதாந்த விசாரம் செய்தும் இன்னும் செய்துகொண்டு மிருக்கிறவர்களும் எனக்கு அத்தியந்த சிநேகிதர்களுமான இரண்டு கனவான்களுடைய பெயரை வெளியிட அவர்களுக் கிஷ்டமில்லாவிட்டாலும் இவ்விடத்தில் வெளியிடாமலிருக்க என்மனம் கொள்ளவில்லை. அவர்களாரென்றால், கோயமுத்தூர் வாசியும் கோயமுத்தூர் சப்கலெக்ட்டர் ஆபீஸ் சிரஸ்ததாராகவிருந்து இப்போது பென்ஷன் வாங்குகிறவரும், ஆச்சரியதர்ப்பண மென்னும் கிரந்தத்திற்குக் கருத்தாவுமான ம-ா-ா-ஸ்ரீ பொன்முடி வெங்கட்டரமணய்யர் அவர்களும், டிப்டீகலெக்ட்டர் உத்தியோகத்திலிருந்து இப்போது பென்ஷன் வாங்குகிற ம-ா-ா-ஸ்ரீ வெங்

கடேசய்யர் அவர்களுமே. இக்கனவான்களுடைய விலைமதிப்புக்கெட்டாத உதவிக்கு நன்றியறிதலைச் செலுத்தி வந்தனம் செய்வதைத்தவிர வேறு பிரத்தியுபகாரம் செய்ய நான் அருகனல்ல. இவ்வளவு பரிசோதனை செய்யப்பட்டிருந்தாலும் இதில் தப்பிதமில்லையென்று சொல்ல நான் துணியவில்லை. பலதப்பிதங்கள் விவேகிகளுக்குத் தென்படக் கூடும். ஆனால் அதற்காக நான் சங்கோசப்படவில்லை. ஏனென்றால், குற்றங்களை நீக்கி குணங்களை கிரகிப்பதும் பிசகுகண்டால் அதையெடுத்துக்காட்டி திருத்துவிப்பதும் விவேகிகளுடைய சுபாவமானதால்தான். பிழைகளை யெடுத்துரைக்கும் விவேகிகளுக்கு மனப்பூர்வமாய் வந்தனம் செலுத்துவேன்.

தாரண௵
ஐப்பசி௴                வி. கு.

ஸ்ரீகோபாலபரமாத்துமனேநமஃ

இரண்டாவது பதிப்பு.

# முகவுரை.

முதல்பதிப்பாயிருந்த கீதார்த்ததீபிகை யென்கிற கிரந்தம் அச்சிட்ட காபிகள் முழுதும் சிலவாய் விட்டன. அநேகர் புஸ்தகம் வேண்டுமென்றுளஎழுதி கேட்டிருக்கிறார்கள். எனக்குள்ள பலதொந்திரவினாலும் சாவகாசக் குறைவினாலும் பின்னடைந்திருந்தும் பல சிநேகிதர்கள் என்னை கட்டாயப்படுத்தி இரண்டாவது தடவை அச்சிடும்படி செய்தார்கள், அப்படிச்செய்தது முடிவில் எனக்கு அதிகதிருப்தியை யுண்டாக்கியது. எப்படி என்றால், அஷ்டோத்தரசத உபநிஷத்துக்களிலிருந்து குறிப்பாய் எடுத்தெழுதி வைத்திருந்தவைகளும் அத்துவைத சித்தாந்தத்தை பிரகாசப் படுத்துகிறவைகளுமான அநேக உபநிஷத் வாக்கியங்கள் தமிழ்மொழி பெயர்ப்புடன் இப்பதிப்பில் சேர்க்க அவகாச முண்டாயிற்றென்பதே. மற்றும் சில புராணவாக்கியங்களும் சேர்க்கப்பட்டன. இதில் முதல்பதிப்பைவிட 60-பக்கங்கள் வரையில் அதிகப்பட்டன. அதினால் நான் நினைத்திருந்தபடி முதல்பதிப்பின் விலையைவிட குறைக்கக்கூடாமையாய்ப் போனதற்காக விசனப்படுகிறேன்.

உபநிஷத் முதலிய வாக்கியங்களுக்கு மொழிபெயர்த்த விஷயத்திலும் புரூப்களை பரிசோதித்துத் திருத்திய விஷயத்திலும் முதல்பதிப்புக்கு உதவிசெய்த இரண்டு லௌகீக கனவான்களுடைய பூர்ணமான சகாயம் கிடைக்கப்பெற்றேன்.

சர்வதாரிஹூ }
மாசிமீ கசஉ } வி. கு.

ஓம் பரப்ரஹ்மணே நம:.

ஶ்ரீ [illegible] நம:.

மூன்றாவது பதிப்பு.

# மு க வு ரை.

இக்கீதார்த்த தீபிகை இரண்டாவது பதிப்பாயிருந்த புஸ்தகங்கள் முழுதும் செலவாய்விட்டன. அநேகர் புஸ்தகத்திற்காக என்னை நிர்ப்பந்திக்கிறார்கள். அதினால் இம்மூன்றாம் பதிப்புக்கு அவசியமுண்டாயிற்று. இப்பதிப்பிலும் சிலஉபநிஷத் வாக்கியங்களையர்த்தத்துடன் சேர்த்திருக்கிறேன். இரண்டாவதுபதிப்பைவிட நான்குபக்கங்கள் அதிகப்பட்டன. பின்னும் ஸ்ரீவேதவியாஸமகரிஷியால் வெளியிடப்பட்டதும் ஸ்ரீசங்கராசாரியர் முதலான பாஷியகாரர்களால் பாஷியம் செய்யப்பட்டிருக்கிறதுமான பிர்ம்மசூத்திரம் (மூலம்மட்டும்) இப்பதிப்புடன் சேர்த்து அச்சிடப்பட்டிருக்கிறது. அது முமுக்ஷுக்களுக்குப் பாராயண யோக்கியமானதாயும் சித்தசுத்தியை யுண்டாக்கக் கூடியதாயு மிருக்கிறதினாலும் சூத்திரம் அதின் பாஷியம் இவைகள் இதுவரையில் கிரந்தாக்ஷரத்தில் அச்சிடப் படாமலிருக்கிறதினாலும் மூலம்மட்டுமாவது அச்சிடவேண்டுமென்று பலர் பிரார்த்தித்தார்கள். ஷை சூத்திரங்களை அத்துவைத பாஷியத்துடன் அச்சிட எண்ணம் கொண்டிருக்கிறேன். பாராயணம் செய்வதுடன் அர்த்தவிசாரமும் செய்தால் பிர்ம்மஞானமடையப் படுமென்பதில் அற்பமேனும் சந்தேகமில்லை.

மேல்கண்ட என் எண்ணத்தை உடனே நிறைவேற்றக் கூடாத விதமாயுண்டான அசமாதானத்தைச் சொல்ல விசனப்படுகிறேன். அதாவது, எனக்கு அத்தியந்த சிநேகிதர்களும் கீதார்த்த தீபிகை பஞ்சதசோபநிஷத் வாசுதேவமனனம் முதலிய கிரந்தங்களை மொழிபெயர்க்கும் விஷயத்தில் எனக்குப் பூர்ணமா யுதவிசெய்தவர்களும் ஸாதன சதுஷ்டய ஸம்பன்னர்களுமான பிர்ம்மஸ்ரீகளாகிய பொன்முடி வெங்கிட்டராமணய்யர் அவர்கள் வெங்கடேசய்யர் அவர்கள் இந்த மகான்கள் பரமபதமடைந்தவிஷயமே. அதினால் இரண்டுகண்களையுமிழந்த குருடனுக் கொப்பானவனானேன். ஆகையால் என் எண்ணம் துரையாய் முடியக்கூடவில்லை. தீநதயாபரரான பகவதநுக்கிரகத்தால் நிறைவேற வேண்டுமென்று பிரார்த்திக்கிறேன்.

விஜய௵
வைகாசிமீ ௧௪உ }

வி. கு.

ஸ்ரீ பார்த்தஸாரதயே நம:.

நான்காவது பதிப்பு.

# முகவுரை.

---

எனக்கு வயோதிகத்தினால் திருஷ்டிகுறைந்து நேத்திர சூக்ஷ்மம் சிறிது மட்டானதினிமித்தம் இந்நான்காவது பதிப்பைத் தொடங்குவதாக ஆதியில் நான் உத்தேசிக்கவில்லை. ஆனால் பல சிநேகிதர்கள் கனவான்கள் இவர்களுடைய வேண்டுகோளின்பேரில் இப்பதிப்பைத் தொடங்கி ஒரு வருஷத்துக்கு மேற்பட்டகாலமாயும் இப்போதுதான் முடிவுபெற ஈசுவரானுக்கிரகம் உண்டாயிற்று. இப்புத்தகத்தை சென்ற மார்ச்சுமாதக் கடைசிக்குள் வெளிப்படுத்த உத்தேசித்திருந்தும் அப்படி வெளிப்படுத்தக்கூடாத சில அசந்தர்ப்பங்கள் நேரிட்டதைப்பற்றி நான் மெத்த விசனப்படுகிறேன். இந்நான்காம்பதிப்பில் அவசியமான விடங்களில் புதிதாய்ச்சேர்க்க சுருதி, ஸ்மிருதி, புராணங்களிலிருந்தெடுத் தெழுதிவைத்திருந்தவைகளை அச்சிடும்பொருட்டு முந்திய புரூப்கரெக்டரிடம் கொடுக்கப்பட்டிருந்தது. அவைகளில் சிலபாகம் அச்சானதின்மேல் பெரும்பாகம் கைசோர்ந்து போய்விட்டதாகத் தெரிய வந்ததினால் அவைகளைப் புதிதாய்ச் சேர்க்கவேண்டி நேரிட்டது. அதனால் காலதாமதத்திற் கிடமுண்டானது மன்றியில் அவைகளை முன்போல் ௩0-பக்கங்கள்சேர்க்க முடியாமல் ஐந்து பக்கங்களுடன் திருப்தியடைய வேண்டியதாயிற்று. திருஷ்டிக் குறைவினால் இப்பதிப்பின் புரூப்களை முன்போல நானே நேரில்பார்த்துத் திருத்தமுடியாமல் மற்றவர்களைக்கொண்டு திருத்திவைக்கவேண்டி நேரிட்டபோதிலும் என் சொற்ப திருஷ்டியைக்கொண்டு கூடியமட்டில் பிழைகளில்லா திருக்க வேண்டி, அச்சுமுடிவானபிறகு நேரில் நான் சூக்ஷ்மமாய் பார்த்து எல்லாப் பிழைகளையும் பிழைத்திருத்தத்தில் சேர்த்திருக்கிறேன். இன்னும் ஏதாவது பிழைகளிருக்கக் கூடுமானதால், தப்பிதங்களைக் குறித்துக்காட்டும் நண்பர்களுக்கு மிக்க நன்றியளிப்பேன்.

அச்சிட்டிருக்கிற இப்புத்தகத்தின் கடிதங்கள் ஒரேவிதமாயில்லாமைக்குக் காரணமென்னவென்று கேட்கப்படுமானால் வேறு யாதொருகாரணத்தையும் சொல்லாமலே என்னுடைய அஜாக்கிரதையென்றே சொல்லிக்கொள்வது உத்தமமாயிருக்கிறது.

இப்பதிப்பில் கீதாமாகாத்மியம், கீதாபாராயணாரம்பத்தில் செய்ய வேண்டிய அங்கந்யாசம், கரந்யாசம், தியானசுலோகங்கள், பகவத்ஸ்தோத்திரம் இவைகளும் இக்கிரந்தத்தில் உபயோகிக்கப்பட்டிருக்கிற சுருதி, ஸ்மிருதி, புராணாதி வாக்கியங்களின் அகராதி அட்டவணையும் புதிதாய்ச் சேர்க்கப்பட்டிருக்கின்றன. முன்போலவே பிரும்ம சூத்திரங்களுடைய மூலமும், கீதாசுலோகங்களுடைய பூர்வார்த்த, உத்தரார்த்த வாக்கியங்களின் அகராதி அட்டவணையும் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

இந்த கீதார்த்ததீபிகை என்கிற இப்புஸ்தகத்தில் பலமதபாஷியார்த்தங்களை விரித்துரைத்து புஸ்தகத்தை விரிவாக்கிவிட்டதாயும் ஏதேனும் ஒருமத பாஷியம் அல்லது வியாக்கியானத்துடன் அச்சிட்டால் போதுமானதென்றும் சிலர் சொல்லுகிறார்கள். இக்கிரந்தத்தை ஆமோதிக்கிறவர்களெல்லோரும் இவ்வபிப்பிராயத்தைக் கொண்டிருக்கிறார்களென்று நினைக்கக்கூடவில்லை.

எம்மதத்தவராயினும் தம்மத சுவரூபத்தை நன்றாயறிய வேண்டுமானால், இதரமதங்களின் சுவரூபத்தை அறிவது அவசியமாகும். அப்படித் தெறிந்தவரெவரோ அவருக்குத்தான் தம்முடைய மதசுவரூபம் நன்றாய் விளங்கும். இதேகாரணத்தினால் தான் மதாசாரியர்களொவ்வொருவரும் இதர மதங்களுடைய சுவரூபத்தை நன்றாயறிந்து தம்மதத்திற்கும் இதரமதங்களுக்கும் உள்ள பேதா பேதங்களை அவரவர்கள் பாஷியத்தில் நன்றாய் விளக்கியிருக்கிறார்கள். அதே உத்தேசத்தைக் கொண்டுதான் மூன்று மதங்களுடைய சுவரூபத்தையும் அந்தந்த மதாசாரியர் அபிப்பிராயத்தையும் இக்கிரந்தத்தில் விளக்கிக் காட்டப்பட்டது. மேலும் இக்கிரந்தமானது அத்துவைதிகள், விசிஷ்டாத்துவைதிகள், துவைதிகள் இம்மூவகையாருக்கும் உபயோகப்பட வேண்டுமென்கிற எண்ணத்துட னாரம்பிக்கப்பட்ட தாகையாலும், அம்மூன்று மதங்களுடைய சுவரூபத்தையும், அந்தந்த மதஸ்தர்களுடைய பூர்வாசாரியரின் அபிப்பிராயத்தையும் சரியாய்ச் சொல்வதாக முந்தியே பிரதிக்ஞையும் செய்யப்பட்டிருக்கிறது.

சார்வரிஹு
ஆடிமீ கஉஉ }

வி. கு.

ஒழ ஜமதூதயெ நஃ.

# மதத்திரயசித்தாந்த சங்கிரகம்.

## அத்துவைதம்.

பிரம்மமொன்றே சத்தியமா யுள்ளது.

இரண்டாவது வஸ்து வாஸ்தவமாயில்லை. அதாவது—ஜீவஜடப் பிரபஞ்சங்கள் தோற்றமேயன்றி உண்மையானவையல்ல. பிரம்மமோ நிர்குணமாயும் நிராகாரமாயும் விகாரமற்றதாயும் சச்சிதாநந்த கனமாயும் எங்கும் நிறைந்ததாயும் பற்றற்றதாயும் சுவப்பிரகாசமாயு மிருக்கிறது. அப்பிரம்மமே ஜீவனாகவும் ஈசுவரனாகவும் சகலப் பிரபஞ்சமாகவும் தோற்றுகிறது. அத்தோற்றமானது அநாதி மாயையினாலுண்டானது. பரமார்த்த தெசையில் இப்படி தோற்றப்படும் சகலப் பிரபஞ்சமும் பொய்யானாலும் வியவகார தெசையில் ஜீவன் ஈசுவரன் மாயை ஜீவேசுவரபேதம் மாயாகாரியமான இப்பிரபஞ்சம் இவைகள் வாஸ்தவமே. இவைகளை அநாதிஎன்று ஏன் சொல்லவேண்டிய தென்றால், அவைகள் ஒருகாலத்தி லுண்டானவைக ளென்று குறிப்பிடத் தக்கவை யல்லவானதினால்தான்.

மாயையினிடத்தில் சகல வஸ்துக்களையும் தோற்றுவிக்கிறதாகிய விக்ஷேப சக்தியென்றும் வஸ்துக்களின் சுவபாவத்தை தோன்றவொட்டாமல் மறைக்கிறதாகிய ஆவரண சக்தியென்றும் இரண்டுவித சக்திகளுண்டு. விக்ஷேப சக்தியை மாயை என்றும் ஆவரண சக்தியை அவித்தையென்றும் சொல்லுவதுண்டு. சைதன்னிய (சுத்தப் பிரம்மம்) மானது மாயை சம்பந்தத்தினால் ஈசுவர னென்றும் அவித்தியா சம்பந்தத்தினால் ஜீவனென்றும் வியவகரிக்கப்படுகிறது. இச் சம்பந்தமும் அநாதியே. விக்ஷேப சக்தியான மாயா சம்பந்த முடைய ஈசுவரன் சருவக்ஞன். ஆவரண சக்தியான அவித்தியா சம்பந்த முடைய ஜீவன் கிஞ்சிக்ஞன். அதாவது—அற்ப ஞானமுடையவன். ஆனதால் பெத்தனா யிருக்கிறான்.

இந்த பெந்தத்தி லிருந்து நிவிருத்தியடைய வேண்டுமானால், வேதோக்தமான நித்திய நைமித்திக கருமங்களை ஈசுவரார்ப்பணமாய்ச் செய்வதினாலும் பகவத்பக்தி செய்வதினாலும் சித்தசுத்தியடைந்து சத்குருவினா லுபதேசிக்கப்படும் "தத்த்வமஸி" தத்துவமஸி முதலிய மகா வாக்கியார்த்தமாகிய ஜீவேசுவராபேதத்தை சிரவணம்செய்து அடிக்கடி சிந்திப்பதாகிய மனனத்தையு மிடைவிடாமல் சிந்திப்

பதாகிய நிதித்தியாசத்தையும் அநுஷ்டிக்கவேண்டும். அப்படிச் செய்துவந்தால் பிரத்தியக்ஷமா யுண்டாகும் "ஃஹம்ப்ரஹ்மாஸ்மி" அகம் பிரம்மாஸ்மி என்கிற மகா வாக்கியத்தின் அர்த்தமாகிய ஜீவேசுவரா பேதாநுபவத்திஞல் பிரபஞ்சவாசனையும் சகல கருமங்களும் நசித்து, தன் வாஸ்தவ சுவரூபமும் ஆநந்தமுமாகிய பிரம்ம சுவரூப மாகிருன். இதுதான் முக்தியென்று சொல்லப்படுகிறது.

இந்த முக்தியானது ஜீவன் முக்தியென்றும் விதேக கைவல்லிய மென்றும் இருவகைப்படும். மேற்சொல்லியபடி தானே பிரம்ம மெ ன்கிற அனுபவ பெலத்திஞலே பிராரப்தம்தவிர மற்ற சகலகருமங்க ளும் அவைகளுக்குக் காரணமாகிய அவித்தையும் நசித்து இத்தேகத் திற்குக் காரணமான பிராரப்தம் நசிக்கிறவரையில், சகல பற்றுகளும் அற்றவனுஞலும் பற்றுள்ளவனைப்போல் பிறருக்குக் காணும் நிலைமை யே ஜீவன் முக்திதெசை. இந்த ஸ்தூலதேகமும் சூக்ஷ்ம தேகமும் காரணதேகமும் நசித்து பிரம்மமாக விருக்கும் நிலைமையே விதேக கைவல்லியம்.

இவையன்றி கிரம முக்தி என்ருெரு வகையுமுண்டு. அதாவது, சகுணப் பிரம்மமென்கிற ஈசுவரோபாசனை பஞ்சாக்கினி வித்தை முதலியவைகளால் ஈசுவரானுக்கிரகம் பெற்று இத்தேகம் போனவு டன் அர்ச்சிராதி மார்க்கமாய் * பிரம்மலோகம் சென்று பிரம்மாவி ஞல் உபதேசம்பெற்று பிரம்மாவுடன் விதேக கைவல்லிய மடை வதே.

"தத்த்வமஸி" தத்துவமஸி வாக்கியத்தின் அர்த்தமென்னவெனில், தத் = அது (சருவக்ஞனை ஈசுவரன்), த்வம் = நீ (கிஞ்சிக்ஞனை ஜீவன்), அஸி = இருக்கிருய், அதாவது—ஜீவஞகிய நீ ஈசுவரஞ யிருக் கிரு யென்பதே. இதின் தாத்பரிய மென்னவென்ருல், ஜீவஞகிய உனக்குள்ள உபாதியான அவித்தையையும் ஈசுவரனுடைய உபாதி யான மாயையையும் விலக்கிப் பார்த்தால் இவ்விரண்டு மொன்றே என் பது தான்.

---

## விசிஷ்டாத்வைதம்.

ஈசுவரன் ஜீவர்கள் ஜடப்பிரபஞ்சம் இவர்கள் தனித்தனியாக வும் வாஸ்தவமாகவு மிருக்கிருர்கள். ஈசுவரன் சருவஞானம் சத் திய சங்கற்பம் முதலிய அநந்த கல்லியாண குணகெண நிதியாகவும் சருவசுவதந்திரஞகவும் ஜீவ ஜடப்பிரபஞ்சங்களுக்கு அந்தரியாமி

---

* இந்த மார்க்க மின்னதென்பதை இப்புத்தகத்தின் ௩0௫-வது முதல் ௩0௭-வது வரை பக்கங்களில் காண்க.

யாகவும், அவைகளுக்குச் சரீரியாகவும் நியாமகனுகவும் சேஷியாகவு * மிருக்கிறுர்.

ஜீவர்கள் ஈசுவரனுடைய அம்சர்களாகவும் சரீரமாகவும் சேஷ † மாகவும் ஞானத்தை குணமா யுடையவர்களாகவும் அணுக்களாகவும் இருக்கிறுர்கள். அநாதி கருமமென்கிற அவித்தையினுல் தங்களுடைய குணமாகிய ஞானம் குறைந்து சமுசாரிகளாக இருக்கிறுர்கள். இவர்கள் பகவதாராதன ரூபமாக செய்யப்பட்ட நித்திய நைமித்திக கருமங்களாலும் பக்தி பிரபத்தி இவைகளாலும் ஜீவேசுவரர்களுடைய யதார்த்த ஞானத்தினுலும் சுவசுவ ரூபாநு சந்தானத்தினுலும் பிரகிருதி சம்பந்தம் நீங்கி சுவசுவ ரூபமடைகிறுர்கள். இதுதான் கைவல்லியமென்று சொல்லப்படுகிறது. பிரகிருதி விமுக்த ஆத்மசுவரூபமடைந்த இந்த அவஸ்தையில் ஜீவர்களுடைய ஞானகுணம் விகாஸத்தையடைந்து சகலத்தையும் அறிவார்கள். இதன்பிறகு பகவத்கியாஞதிகளினுல் வைகுண்டத்தில் பகவானுடைய சரீரத்திற்கு சமமாகிய அப்பிராகிருத திவ்வியமங்கள விக்கிரகங்களை யுடையவர்களாய் பகவத்சந்நிதி முதலியவைகளா லுண்டாகும் பரமாநந்தத்தை அனுபவிக்கிறுர்கள். இதுதான் முக்தியெனப் படுகிறது. “ஏகமேவாத்விதீயம்” தத்துவமஸி முதலிய அபேதவாக்கியங்களுக்கேவெனில் சூக்ஷ்மசித் அசித் விசிஷ்டனை (சரீரியான) ஈசுவரனுக்கும் ஸ்தூலசித் அசித் விசிஷ்டனை (சரீரியான) ஈசுவரனுக்கும் அபேதமர்த்த மாகையால் விசிஷ்டாத்துவைதமென்று பெயர்வந்தது.

---

## மத்துவமதம்.

ஐந்து பேதங்கள் ‡ வாஸ்தவமாயும் அநாதியாயு மிருக்கின்றன. ஜீவர்கள் நித்திய சமுசாரிகள் நித்திய நரகிகள் முக்தி யோக்கியர்களென முவ்வகைப் பட்டவர்கள். ¶ இந்த ஒவ்வொரு வகையிலும் பல பிரிவுகளுண்டு. ஜீவர்களுடைய சுவரூபத்திலும் மனுஷிய பசுபக்ஷியாதி பேதங்களுண்டு. முக்தியோக்கியர்கள் தவிர மற்றவகை ஜீவர்

*-† சேஷ சேஷி பாவ மின்னதென்பதை இதின் உருசு-வது பக்கத்தில் காண்க.

‡ இப்பேதங்களின் விவரம் இப்புஸ்தகத்தின் உகஅ-வது பக்கத்தில் காண்க.

¶ ஜீவபேதத்தைப்பற்றிய விஷயம் இப்புஸ்தகத்தின் ருஅக-வது பக்கத்தில் காண்க.

களுக்கு முக்தி என்பதேயில்லை. முக்தி யோக்கியர்களான ஜீவர்களில் தங்கள் தங்கள் சுவரூபம் (மனுஷிய பசுபக்ஷியாதிகளில்) எதுவோ அந்த சுவரூபத்துடன் முக்தியடைகிறார்கள். முக்தியில் அவரவர்களுடைய உபாசனைக்குத் தக்கபடி ஆநந்தத்தில் தாரதம்மியமுண்டு. முக்தியடைவதற்கு மேல்கண்ட பஞ்ச பேதஞானம் சாதனமானது. "தத்ஸ்வமஸி" தத்துவமஸி வாக்கியத்திற்கு நீ ஈசுவரனுக்குச் சமானமான ரூபமுடையவனா யிருக்கிறாய் என்று அர்த்தம்.

மற்ற விஷயங்களில் பெரும்பாலும் விசிஷ்டாத்துவைத மதத்தை யொத்ததே.

மதத்திரய சித்தாந்த சங்கிரகம் முற்றும்.

---

𑌶𑍍𑌰𑍀𑌰𑌸𑍍𑌤𑍁.

𑌅𑌥 𑌶𑍍𑌰𑍀𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌯𑌪𑌰𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍇 𑌨𑌮𑌃.

---

𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌦𑍍𑌗𑍀𑌤𑌾𑌮𑌾𑌹𑌾𑌤𑍍𑌮𑍍𑌯 𑌪𑍍𑌰𑌾𑌰𑌮𑍍𑌭𑌃.

---

𑌧𑌰𑍋𑌵𑌾𑌚.

𑌭𑌗𑌵𑌨𑍍𑌪𑌰𑌮𑍇𑌶𑌾𑌨 𑌭𑌕𑍍𑌤𑌿𑌰𑌵𑍍𑌯𑌭𑌿𑌚𑌾𑌰𑌿𑌣𑍀।
𑌪𑍍𑌰𑌾𑌰𑌬𑍍𑌧𑌂𑌭𑍁𑌜𑍍𑌯𑌮𑌾𑌨𑌸𑍍𑌯 𑌕𑌥𑌂𑌭𑌵𑌤𑌿𑌹𑍇𑌪𑍍𑌰𑌭𑍋॥ ௧॥

𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌰𑍁𑌵𑌾𑌚.

𑌪𑍍𑌰𑌾𑌰𑌬𑍍𑌧𑌂𑌭𑍁𑌜𑍍𑌯𑌮𑌾𑌨𑍋 𑌹𑌿 𑌗𑍀𑌤𑌾𑌭𑍍𑌯𑌾𑌸𑌰𑌤𑌸𑍍𑌸𑌦𑌾।
𑌸𑌮𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌸𑌸𑍁𑌖𑍀𑌲𑍋𑌕𑍇 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌨𑍋𑌪𑌲𑌿𑌪𑍍𑌯𑌤𑍇॥ ௨॥
𑌮𑌹𑌾𑌪𑌾𑌪𑌾𑌦𑌿𑌪𑌾𑌪𑌾𑌨𑌿 𑌗𑍀𑌤𑌾𑌧𑍍𑌯𑌾𑌨𑌂𑌕𑌰𑍋𑌤𑌿𑌚𑍇𑌤𑍍।
𑌕𑍍𑌵𑌚𑌿𑌤𑍍𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌂 𑌨𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌤𑌿 𑌨𑌲𑌿𑌨𑍀𑌦𑌲𑌮𑌮𑍍𑌬𑍁𑌵𑌤𑍍॥ ௩॥
𑌗𑍀𑌤𑌾𑌯𑌾𑌃𑌪𑍁𑌸𑍍𑌤𑌕𑌂𑌯𑌤𑍍𑌰 𑌯𑌤𑍍𑌰 𑌪𑌾𑌠𑌃𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌤𑍇।
𑌤𑌤𑍍𑌰 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿𑌤𑍀𑌰𑍍𑌥𑌾𑌨𑌿 𑌪𑍍𑌰𑌯𑌾𑌗𑌾𑌦𑍀𑌨𑌿 𑌤𑌤𑍍𑌰 𑌵𑍈॥ ௪॥
𑌸𑌰𑍍𑌵𑍇𑌦𑍇𑌵𑌾𑌶𑍍𑌚𑌋𑌷𑌯𑍋 𑌯𑍋𑌗𑌿𑌨𑌃𑌪𑌨𑍍𑌨𑌗𑌾𑌶𑍍𑌚𑌯𑍇।
𑌗𑍋𑌪𑌾𑌲𑌾𑌗𑍋𑌪𑌿𑌕𑌾𑌵𑌾𑌪𑌿 𑌨𑌾𑌰𑌦𑍋𑌦𑍍𑌧𑌵𑌪𑌾𑌰𑍍𑌷𑌦𑍈𑌃॥ ௫॥
𑌸𑌹𑌾𑌯𑍋𑌜𑌾𑌯𑌤𑍇𑌶𑍀𑌘𑍍𑌰𑌂 𑌯𑌤𑍍𑌰 𑌗𑍀𑌤𑌾𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌤𑍇।
𑌯𑌤𑍍𑌰𑌗𑍀𑌤𑌾𑌵𑌿𑌚𑌾𑌰𑌶𑍍𑌚 𑌪𑌠𑌨𑌂𑌪𑌾𑌠𑌨𑌂𑌶𑍍𑌰𑍁𑌤𑌮𑍍॥ ௬॥
𑌤𑌤𑍍𑌰𑌾𑌹𑌂𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑌂𑌪𑍃𑌥𑍍𑌵𑌿 𑌨𑌿𑌵𑌸𑌾𑌮𑌿𑌸𑌦𑍈𑌵𑌹𑌿।
𑌗𑍀𑌤𑌾𑌶𑍍𑌰𑌯𑍇𑌹𑌂𑌤𑌿𑌷𑍍𑌠𑌾𑌮𑌿 𑌗𑍀𑌤𑌾𑌮𑍇𑌚𑍋𑌤𑍍𑌤𑌮𑌂𑌗𑍃𑌹𑌮𑍍॥ ௭॥
𑌗𑍀𑌤𑌾𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍁𑌪𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑍍𑌯 𑌤𑍍𑌰𑍀𑌂𑌲𑍍𑌲𑍋𑌕𑌾𑌨𑍍𑌪𑌾𑌲𑌯𑌾𑌮𑍍𑌯𑌹𑌮𑍍।
𑌗𑍀𑌤𑌾𑌮𑍇𑌪𑌰𑌮𑌾𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌰𑍂𑌪𑌾𑌨𑌸𑌂𑌶𑌯𑌃॥ ௮॥
𑌅𑌰𑍍𑌧𑌮𑌾𑌤𑍍𑌰𑌾𑌕𑍍𑌷𑌰𑌾𑌨𑌿𑌤𑍍𑌯𑌾 𑌸𑍍𑌵𑌨𑌿𑌰𑍍𑌵𑌾𑌚𑍍𑌯𑌪𑌦𑌾𑌤𑍍𑌮𑌿𑌕𑌾।
𑌚𑌿𑌦𑌾𑌨𑌨𑍍𑌦𑍇𑌨𑌕𑍃𑌷𑍍𑌣𑍇𑌨 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌾𑌸𑍍𑌵𑌮𑍁𑌖𑌤𑍋𑌰𑍍𑌜𑍁𑌨𑌮𑍍॥ ௯॥
𑌵𑍇𑌦𑌤𑍍𑌰𑌯𑍀𑌪𑌰𑌾𑌨𑌨𑍍𑌦𑌾 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌰𑍍𑌥𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌂𑌯𑍁𑌤𑌾।
𑌯𑍋𑌷𑍍𑌟𑌾𑌦𑌶𑌜𑌪𑍋𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌨𑌰𑍋𑌨𑌿𑌶𑍍𑌚𑌲𑌮𑌾𑌨𑌸𑌃॥ ௧௦॥
𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂𑌸𑌲𑌭𑌤𑍇 𑌤𑌤𑍋𑌯𑌾𑌤𑌿𑌪𑌰𑌂𑌪𑌦𑌮𑍍।
𑌪𑌾𑌠𑍇𑌸𑌮𑌰𑍍𑌥𑌸𑍍𑌸𑌂𑌪𑍂𑌰𑍍𑌣𑍇 𑌤𑌦𑌰𑍍𑌧𑌂𑌪𑌾𑌠𑌮𑌾𑌚𑌰𑍇𑌤𑍍॥ ௧௧॥

𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌦𑍍𑌗𑍀𑌤𑌾 𑌪𑌾𑌰𑌾𑌯𑌣𑌵𑌿𑌧𑍌 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯

𑌅𑌂𑌗𑌨𑍍𑌯𑌾𑌸𑌾𑌦𑌯𑌃.

---

𑍐 𑌪𑌰𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍇 𑌨𑌮𑌃.

𑌅𑌸𑍍𑌯 𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌦𑍍𑌗𑍀𑌤𑌾𑌮𑌾𑌲𑌾𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌸𑍍𑌯 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 𑌵𑍇𑌦𑌵𑍍𑌯𑌾𑌸𑌰𑍍𑌷𑌿𑌃 । 𑌅𑌨𑍁𑌷𑍍𑌟𑍁𑌪𑍍𑌛𑌨𑍍𑌦𑌃 । 𑌶𑍍𑌰𑍀𑌕𑍃𑌷𑍍𑌣𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌦𑍇𑌵𑌤𑌾 । 𑌅𑌶𑍋𑌚𑍍𑌯𑌾𑌨𑌨𑍍𑌵𑌶𑍋𑌚𑌸𑍍𑌤𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌵𑌾𑌦𑌾𑌂𑌶𑍍𑌚 𑌭𑌾𑌷𑌸𑍇 𑌇𑌤𑌿 𑌬𑍀𑌜𑌮𑍍 ॥ 𑌸𑌰𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑌾𑌨𑍍𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌜𑍍𑌯 𑌮𑌾𑌮𑍇𑌕𑌂 𑌶𑌰𑌣𑌂 𑌵𑍍𑌰𑌜 𑌇𑌤𑌿 𑌶𑌕𑍍𑌤𑌿𑌃 ॥ 𑌅𑌹𑌂 𑌤𑍍𑌵𑌾 𑌸𑌰𑍍𑌵𑌪𑌾𑌪𑍇𑌭𑍍𑌯𑍋 𑌮𑍋𑌕𑍍𑌷𑌯𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌮𑌾 𑌶𑍁𑌚 𑌇𑌤𑌿 𑌕𑍀𑌲𑌕𑌮𑍍 ॥ 𑌨𑍈𑌨𑌂 𑌛𑌿𑌨𑍍𑌦𑌨𑍍𑌤𑌿 𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌣𑌿 𑌨𑍈𑌨𑌂 𑌦𑌹𑌤𑌿 𑌪𑌾𑌵𑌕 𑌇𑌤𑍍𑌯𑌂𑌗𑍁𑌷𑍍𑌠𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌨𑌮𑌃 ॥ 𑌨 𑌚𑍈𑌨𑌂 𑌕𑍍𑌲𑍇𑌦𑌯𑌨𑍍𑌤𑍍𑌯𑌾𑌪𑍋 𑌨 𑌶𑍋𑌷𑌯𑌤𑌿 𑌮𑌾𑌰𑍁𑌤 𑌇𑌤𑌿 𑌤𑌰𑍍𑌜𑌨𑍀𑌭𑍍𑌯𑌾𑌂 𑌨𑌮𑌃॥ 𑌅𑌚𑍍𑌛𑍇𑌦𑍍𑌯𑍋𑌽𑌯𑌮𑌦𑌾𑌹𑍍𑌯𑍋𑌽𑌯𑌮𑌕𑍍𑌲𑍇𑌦𑍍𑌯𑍋𑌽𑌶𑍋𑌷𑍍𑌯 𑌏𑌵 𑌚 𑌇𑌤𑌿 𑌮𑌧𑍍𑌯𑌮𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌨𑌮𑌃 ॥ 𑌨𑌿𑌤𑍍𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑌗𑌤𑌃 𑌸𑍍𑌥𑌾𑌣𑍁𑌰𑌚𑌲𑍋𑌽𑌯𑌂 𑌸𑌨𑌾𑌤𑌨 𑌇𑌤𑍍𑌯𑌨𑌾𑌮𑌿𑌕𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌨𑌮𑌃॥ 𑌪𑌶𑍍𑌯 𑌮𑍇 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌰𑍂𑌪𑌾𑌣𑌿 𑌶𑌤𑌶𑍋𑌽𑌥 𑌸𑌹𑌸𑍍𑌰𑌶 𑌇𑌤𑌿 𑌕𑌨𑌿𑌷𑍍𑌠𑌿𑌕𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌨𑌮𑌃॥ 𑌨𑌾𑌨𑌾𑌵𑌿𑌧𑌾𑌨𑌿 𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌨𑌿 𑌨𑌾𑌨𑌾𑌵𑌰𑍍𑌣𑌾𑌕𑍃𑌤𑍀𑌨𑌿 𑌚 𑌇𑌤𑌿 𑌕𑌰𑌤𑌲𑌕𑌰𑌪𑍃𑌷𑍍𑌠𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌨𑌮𑌃.

𑌇𑌤𑌿 𑌕𑌰𑌨𑍍𑌯𑌾𑌸𑌃.

---

𑌅𑌥 𑌹𑍃𑌦𑌯𑌾𑌦𑌿𑌨𑍍𑌯𑌾𑌸𑌃.

𑌨𑍈𑌨𑌂 𑌛𑌿𑌨𑍍𑌦𑌨𑍍𑌤𑌿 𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌣𑌿 𑌨𑍈𑌨𑌂 𑌦𑌹𑌤𑌿 𑌪𑌾𑌵𑌕 𑌇𑌤𑌿 𑌹𑍃𑌦𑌯𑌾𑌯 𑌨𑌮𑌃 ॥ 𑌨 𑌚𑍈𑌨𑌂 𑌕𑍍𑌲𑍇𑌦𑌯𑌨𑍍𑌤𑍍𑌯𑌾𑌪𑍋 𑌨 𑌶𑍋𑌷𑌯𑌤𑌿 𑌮𑌾𑌰𑍁𑌤 𑌇𑌤𑌿 𑌶𑌿𑌰𑌸𑍇 𑌸𑍍𑌵𑌾𑌹𑌾 ॥ 𑌅𑌚𑍍𑌛𑍇𑌦𑍍𑌯𑍋𑌽𑌯𑌮𑌦𑌾𑌹𑍍𑌯𑍋𑌽𑌯𑌮𑌕𑍍𑌲𑍇𑌦𑍍𑌯𑍋𑌽𑌶𑍋𑌷𑍍𑌯 𑌏𑌵 𑌚 𑌇𑌤𑌿 𑌶𑌿𑌖𑌾𑌯𑍈 𑌵𑌷𑌟𑍍 ॥ 𑌨𑌿𑌤𑍍𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑌗𑌤𑌃 𑌸𑍍𑌥𑌾𑌣𑍁𑌰𑌚𑌲𑍋𑌽𑌯𑌂 𑌸𑌨𑌾𑌤𑌨 𑌇𑌤𑌿 𑌕𑌵𑌚𑌾𑌯 𑌹𑍁𑌂॥ 𑌪𑌶𑍍𑌯 𑌮𑍇 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌰𑍂𑌪𑌾𑌣𑌿 𑌶𑌤𑌶𑍋𑌽𑌥 𑌸𑌹𑌸𑍍𑌰𑌶 𑌇𑌤𑌿 𑌨𑍇𑌤𑍍𑌰𑌤𑍍𑌰𑌯𑌾𑌯 𑌵𑍌𑌷𑌟𑍍 ॥ 𑌨𑌾𑌨𑌾𑌵𑌿𑌧𑌾𑌨𑌿 𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌨𑌿 𑌨𑌾𑌨𑌾𑌵𑌰𑍍𑌣𑌾𑌕𑍃𑌤𑍀𑌨𑌿 𑌚𑍇𑌤𑌿 𑌅𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌯 𑌫𑌟𑍍 ॥ 𑌶𑍍𑌰𑍀𑌕𑍃𑌷𑍍𑌣𑌪𑍍𑌰𑍀𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑍇 𑌪𑌾𑌠𑍇 𑌵𑌿𑌨𑌿𑌯𑍋𑌗𑌃॥

𑌧𑍍𑌯𑌾𑌨𑌂.

𑌓𑌮𑍍॥ 𑌪𑌾𑌰𑍍𑌥𑌾𑌯 𑌪𑍍𑌰𑌤𑌿𑌬𑍋𑌧𑌿𑌤𑌾𑌂 𑌭𑌗𑌵𑌤𑌾 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑍇𑌨 𑌸𑍍𑌵𑌯𑌂
𑌵𑍍𑌯𑌾𑌸𑍇𑌨 𑌗𑍍𑌰𑌥𑌿𑌤𑌾𑌂 𑌪𑍁𑌰𑌾𑌣𑌮𑍁𑌨𑌿𑌨𑌾 𑌮𑌧𑍍𑌯𑍇 𑌮𑌹𑌾𑌭𑌾𑌰𑌤𑌮𑍍।
𑌅𑌦𑍍𑌵𑍈𑌤𑌾𑌮𑍃𑌤𑌵𑌰𑍍𑌷𑌿𑌣𑍀𑌂 𑌭𑌗𑌵𑌤𑍀𑌮𑌷𑍍𑌟𑌾𑌦𑌶𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑌿𑌨𑍀𑌮𑍍
𑌅𑌮𑍍𑌬 𑌤𑍍𑌵𑌾𑌮𑌨𑍁𑌸𑌨𑍍𑌦𑌧𑌾𑌮𑌿 𑌭𑌗𑌵𑌦𑍍𑌗𑍀𑌤𑍇 𑌭𑌵𑌦𑍍𑌵𑍇𑌷𑌿𑌣𑍀𑌮𑍍॥ ௧॥

𑌨𑌮𑍋𑌽𑌸𑍍𑌤𑍁 𑌤𑍇 𑌵𑍍𑌯𑌾𑌸 𑌵𑌿𑌶𑌾𑌲𑌬𑍁𑌦𑍍𑌧𑍇
𑌫𑍁𑌲𑍍𑌲𑌾𑌰𑌵𑌿𑌨𑍍𑌦𑌾𑌯𑌤𑌪𑌤𑍍𑌰𑌨𑍇𑌤𑍍𑌰।
𑌯𑍇𑌨 𑌤𑍍𑌵𑌯𑌾 𑌭𑌾𑌰𑌤𑌤𑍈𑌲𑌪𑍂𑌰𑍍𑌣𑌃
𑌪𑍍𑌰𑌜𑍍𑌵𑌾𑌲𑌿𑌤𑍋 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌯𑌃 𑌪𑍍𑌰𑌦𑍀𑌪𑌃॥ ௨॥

𑌪𑍍𑌰𑌪𑌨𑍍𑌨𑌪𑌾𑌰𑌿𑌜𑌾𑌤𑌾𑌯 𑌤𑍋𑌤𑍍𑌤𑍍𑌰𑌵𑍇𑌤𑍍𑌰𑍈𑌕𑌪𑌾𑌣𑌯𑍇।
𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍁𑌦𑍍𑌰𑌾𑌯 𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌯 𑌗𑍀𑌤𑌾𑌮𑍃𑌤𑌦𑍁𑌹𑍇 𑌨𑌮𑌃॥ ௩॥

𑌸𑌰𑍍𑌵𑍋𑌪𑌨𑌿𑌷𑌦𑍋 𑌗𑌾𑌵𑍋 𑌦𑍋𑌗𑍍𑌧𑌾 𑌗𑍋𑌪𑌾𑌲𑌨𑌨𑍍𑌦𑌨𑌃।
𑌪𑌾𑌰𑍍𑌥𑍋 𑌵𑌤𑍍𑌸𑌃 𑌸𑍁𑌧𑍀𑌰𑍍𑌭𑍋𑌕𑍍𑌤𑌾 𑌦𑍁𑌗𑍍𑌧𑌂 𑌗𑍀𑌤𑌾𑌮𑍃𑌤𑌂 𑌮𑌹𑌤𑍍॥ ௪॥

𑌵𑌸𑍁𑌦𑍇𑌵𑌸𑍁𑌤𑌂 𑌦𑍇𑌵𑌂 𑌕𑌂𑌸𑌚𑌾𑌣𑍂𑌰𑌮𑌰𑍍𑌦𑌨𑌮𑍍।
𑌦𑍇𑌵𑌕𑍀𑌪𑌰𑌮𑌾𑌨𑌨𑍍𑌦𑌂 𑌕𑍃𑌷𑍍𑌣𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌜𑌗𑌦𑍍𑌗𑍁𑌰𑍁𑌮𑍍॥ ௫॥

𑌭𑍀𑌷𑍍𑌮𑌦𑍍𑌰𑍋𑌣𑌤𑌟𑌾 𑌜𑌯𑌦𑍍𑌰𑌥𑌜𑌲𑌾 𑌗𑌾𑌨𑍍𑌧𑌾𑌰𑌨𑍀𑌲𑍋𑌤𑍍𑌪𑌲𑌾
𑌶𑌲𑍍𑌯𑌗𑍍𑌰𑌾𑌹𑌵𑌤𑍀 𑌕𑍃𑌪𑍇𑌣 𑌵𑌹𑌨𑍀 𑌕𑌰𑍍𑌣𑍇𑌨 𑌵𑍇𑌲𑌾𑌕𑍁𑌲𑌾।
𑌅𑌶𑍍𑌵𑌤𑍍𑌥𑌾𑌮𑌵𑌿𑌕𑌰𑍍𑌣𑌘𑍋𑌰𑌮𑌕𑌰𑌾 𑌦𑍁𑌰𑍍𑌯𑍋𑌧𑌨𑌾𑌵𑌰𑍍𑌤𑌿𑌨𑍀
𑌸𑍋𑌤𑍍𑌤𑍀𑌰𑍍𑌣𑌾 𑌖𑌲𑍁 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑍈 𑌰𑌣𑌨𑌦𑍀 𑌕𑍈𑌵𑌰𑍍𑌤𑌕𑌃 𑌕𑍇𑌶𑌵𑌃॥

𑌪𑌾𑌰𑌾𑌶𑌰𑍍𑌯𑌵𑌚𑌃𑌸𑌰𑍋𑌜𑌮𑌮𑌲𑌂 𑌗𑍀𑌤𑌾𑌰𑍍𑌥𑌗𑌨𑍍𑌧𑍋𑌤𑍍𑌕𑌟𑌂
𑌨𑌾𑌨𑌾𑌖𑍍𑌯𑌾𑌨𑌕𑌕𑍇𑌸𑌰𑌂 𑌹𑌰𑌿𑌕𑌥𑌾𑌸𑌮𑍍𑌬𑍋𑌧𑌨𑌾𑌬𑍋𑌧𑌿𑌤𑌮𑍍।
𑌲𑍋𑌕𑍇 𑌸𑌜𑍍𑌜𑌨𑌷𑌟𑍍𑌪𑌦𑍈𑌰𑌹𑌰𑌹𑌃 𑌪𑍇𑌪𑍀𑌯𑌮𑌾𑌨𑌂 𑌮𑍁𑌦𑌾
𑌭𑍂𑌯𑌾𑌦𑍍𑌭𑌾𑌰𑌤𑌪𑌙𑍍𑌕𑌜𑌂 𑌕𑌲𑌿𑌮𑌲𑌪𑍍𑌰𑌧𑍍𑌵𑌂𑌸𑌿 𑌨𑌃 𑌶𑍍𑌰𑍇𑌯𑌸𑍇॥ ௭॥

𑌮𑍂𑌕𑌂 𑌕𑌰𑍋𑌤𑌿 𑌵𑌾𑌚𑌾𑌲𑌂 𑌪𑌙𑍍𑌗𑍁𑌂 𑌲𑌙𑍍𑌘𑌯𑌤𑍇 𑌗𑌿𑌰𑌿𑌮𑍍।
𑌯𑌤𑍍𑌕𑍃𑌪𑌾 𑌤𑌮𑌹𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌪𑌰𑌮𑌾𑌨𑌨𑍍𑌦𑌮𑌾𑌧𑌵𑌮𑍍॥ ௮॥

𑌯𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾 𑌵𑌰𑍁𑌣𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌰𑍁𑌦𑍍𑌰𑌮𑌰𑍁𑌤𑌃 𑌸𑍍𑌤𑍁𑌨𑍍𑌵𑌨𑍍𑌤𑌿 𑌦𑌿𑌵𑍍𑌯𑍈𑌃 𑌸𑍍𑌤𑌵𑍈𑌃
𑌵𑍇𑌦𑍈𑌃 𑌸𑌾𑌙𑍍𑌗𑌪𑌦𑌕𑍍𑌰𑌮𑍋𑌪𑌨𑌿𑌷𑌦𑍈𑌰𑍍𑌗𑌾𑌯𑌨𑍍𑌤𑌿 𑌯𑌂 𑌸𑌾𑌮𑌗𑌾𑌃।
𑌧𑍍𑌯𑌾𑌨𑌾𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌤𑌦𑍍𑌗𑌤𑍇𑌨 𑌮𑌨𑌸𑌾 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌯𑌂 𑌯𑍋𑌗𑌿𑌨𑍋
𑌯𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌂 𑌨 𑌵𑌿𑌦𑍁𑌃 𑌸𑍁𑌰𑌾𑌸𑍁𑌰𑌗𑌣𑌾 𑌦𑍇𑌵𑌾𑌯 𑌤𑌸𑍍𑌮𑍈 𑌨𑌮𑌃॥ ௯॥

𑌇𑌤𑌿 𑌧𑍍𑌯𑌾𑌨𑌂 𑌸𑌮𑌾𑌪𑍍𑌤𑌮𑍍।

அஸ்ருஜந்நாதிவிமம் யோகிமந்த்ரைரதீந்த்ரியம் ।
அவ்யயம் புருஷம் நித்யமவ்யக்தமஜமவ்யயம் ॥ கஉ ॥

ப்ரஜயோ த்வத்ப்ரஹிதம் ஸர்வரூபமநீஶ்வரம் ।
ஸர்வஜ்ஞம் நிர்குணம் ஶுத்தமாநந்தமஜரம் பரம் ॥ கங ॥

போதரூபம் ப்ராப்யவம்ஶாங்கம் பரிணாமமேதமக்ஷயம் ।
அவதாரேஷு யாம்ஶக்தி: விஹரேத்தேவ யஶஸ்வ்யதே ॥ கச ॥

பரம்ஹாவமஜா நந்த ஸ்வாம்ஹஜஞ்ஜிதிவளக்ஷஸ: ।
க்ஷயம்க்ஷாஜீஜ்யம் ஸம்ப்ரக்ஷ்ம ஶப்தாதிபுருஷோத்தம ॥ கரு ॥

பூஷ்ய ப்ராஜிஹியுக்த த்வவஸர்வவிஹாரதய: ।
ஸம்க்ஷணாதிஹேதேவ தவயஸ்ப்ராஜிதாமயா ॥ ககா ॥

க்ஷம் தஹமஹுவஸித ஸ்வரும் யத்க்ருதம் நக்ருதம்மயா ।
நஶப்தாதிவிஹேஸக்ஷ்ம்யக்ஷி தவப்ராஜாம்யயோஜிதம் ॥ கஎ ॥

யத்க்ருதம்ஜவஹோமாதி அஸாஸ்யம் புருஷோத்தம ।
விநிஷ்டாதயிதம் ஸ்ருதா அத்ஸ்வாம்க்ஷமயாம்யஹம் ॥ கஅ ॥

திவாராத்ரஶ்வஸம்யாஸாம் ஸர்வாவஸ்தாஸுஸேவதம: ।
அசஶாதஹமோஹக்தி ஸ்வாம்ஹியமமேஷம ॥ ககூ ॥

ஶாஸ்ரேணதயோமாத்தி நர்வயமுராதிகேஷு ச ।
யயா த்வயிஜமந்நாய த்ரீதிராத்யம் தக்மம ॥ உ0 ॥

கிம் தந்நக்ருதம்கமு ஸ்வமுமோக்ஷாதிஸாயநம் ।
யஸ்யவிஷ்ணவத்ரஜாஹ க்தி ஸர்வகாமஹேமப்ரதே ॥ உக ॥

பத்மஜாம்க தத்தம் தயாஜிதாத்ரம் க்ஷுஷ்ந்தாதி தவாஸ்யச ।
ஸ்துதம் தவப்ரஜிதம்மேஜ்ய தக்க்ஷமஸ்வ நமோஸ்துதே ॥ உஉ ॥

ஏவம்மயா க்ஷம்பரமேப்ரஹாவ
மத்யஞ்ச ஹீநஸ்யபரஸ்யவிஷ்ணோ: ।
தஸ்மாதிஷ்ணு: பரமேஶ்வரோஸௌ
விமுக்திமேமுண நரோணஸம்ஶ்ய ॥ உங ॥

போயஸ்வராஜ்வம் புருஷம் புராண
மாதித்யவர்ணம் விமலம் விஶாலம் ।
ஸம்சிந்த்யவிஷ்ணும் பரமேஶிதீயம்
க்ஷஸ்த்யயோமீ நமயம்ப்ரயாதி ॥ உச ॥

ஶ்ரீமந்மதுஸூதநஸரஸ்வதீவிரசிதா: த்யாநஶ்லோகா:

ப்ரபந்நபாரிஜாதாய தோத்ரவேத்ரைகபாணயே।
ஜ்ஞாநமுத்ராய க்ருஷ்ணாய கீதாம்ருததுஹே நம:॥ ரு॥

கரகமலநிதர்ஶிதாத்மமுத்ர: பரிகலிதாந்தபர்ஹிபர்ஹசூட:।
உதரகலிதவேத்ரவேத்ரா ஜயதி ஹ்ருதிஸ்திதயோகி
தமநாதபயோதி:॥ சா॥

ஸம்ருக்க்வாக்ஷேவிவரணம் ஜாநந்தமநிகேதநிஷ்டம்
பஸ்யாஸவாயம் புண்யரஸஜ்ஞம் பக்ஷபக்ஷவிசக்ஷணம்।
ஸர்வோபநிஷத்ஸாரஸம்ஸாரஜ்ஞம் ஜ்ஞாநமுத்ரா
ஹஸ்தம் ஹ்ருதயஸ்தம் ஸுவர்ணாபம் ஸர்வஸாக்ஷிணமவ்யயம்॥ எ॥

க்ருஷ்ணம் கமலபத்ராக்ஷம் புண்யஶ்ரவணகீர்தநம்।
வாஸுதேவம் ஜகத்யோநிம் நௌமி நாராயணம் ஹரிம்॥ அ॥

க்ருஷ்ணாய யாதவேந்த்ராய ஜ்ஞாநமுத்ராய யோகிநே।
நாதாய ருக்மிணீஶாய நமோ வேதாந்தவேதிநே॥ கூ॥

ஸ்ரீரஸ்து.

# இப்புஸ்தகத்தி லுபயோகிக்கப்பட்டிருக்கிற குறிப்பக்ஷரங்களின் விவரம்.

---

ஸ்ரீ. ஸ்ரீதரசுவாமிகள்.

ஶம். சங்கராசாரிய சுவாமிகள்.

ரா. இராமாநுஜாசாரிய சுவாமிகள்.

ம. மத்துவாசாரிய சுவாமிகள்.

ஸ்ரீ வி. இராகவேந்திர சுவாமிகள் செய்திருக்கிற வியாக்கியானமாகிய கீதாவிவிருதி.

மதுஸூ. மதுசூதனஸரஸ்வதி.

ஆ. ஆநந்தகிரி சுவாமிகள்.

ஸ்வா. இக்கிரந்த கருத்தாவினுடைய சொந்த அபிப்பிராயம்.

ஶ்லோ. சுலோகம்.

அத். அத்தியாயம்.

சு. சுலோகம்.

---

# குறிப்பு.



இக் கிரந்த கர்த்தாவினுல் வெளியிடப்பட்டிருக்கிற கிரந்தங்களாவன:—

பஞ்சதசோபநிஷத் (பதினோந் துபநிஷத்துக்களடங்கியது) இதன்விலை ரூபா. ... ... ... ௨ 0 0

வாஸுதேவமனனம் இதன்விலை அணா. ... ... 0 ௧0 0

இக்கிரந்தங்கள் ஸம்ஸ்கிருத மூலமும் அதற்கு ஸரியான மொழிபெயர்ப்புமுடைய இரண்டாவது பதிப்பு.



# 𑌹𑌰𑌿𑌃 𑌓𑌮𑍍.

𑌶𑍍𑌰𑍀𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌯 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑍇 𑌨𑌮𑌃.

# 𑌭𑌗𑌵𑌦𑍍𑌗𑍀𑌤𑌾𑌪𑍍𑌰𑌾𑌰𑌮𑍍𑌭𑌃.

---

𑌧𑍃𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰 𑌉𑌵𑌾𑌚.

௧. 𑌧𑌰𑍍𑌮𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑍇 𑌕𑍁𑌰𑍁𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑍇 𑌸𑌮𑌵𑍇𑌤𑌾 𑌯𑍁𑌯𑍁𑌤𑍍𑌸𑌵𑌃।
𑌮𑌾𑌮𑌕𑌾𑌃 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌾𑌶𑍍𑌚𑍈𑌵 𑌕𑌿𑌮𑌕𑍁𑌰𑍍𑌵𑌤 𑌸𑌂𑌜𑌯॥

| 𑌪𑌦𑌮𑍍. | 𑌅𑌰𑍍𑌥𑌃. |
|---|---|
| 𑌧𑍃𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰 𑌉𑌵𑌾𑌚 | திருதராஷ்டரன் என்னும் அரசன்சொல்வது |
| 𑌸𑌂𑌜𑌯 | ஸஞ்சயனே ! |
| 𑌧𑌰𑍍𑌮𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑍇 | தருமத்திற் கிருப்பிடமாயிருக்கிற |
| 𑌕𑍁𑌰𑍁𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑍇 | குருக்ஷேத்திரமென்னுமிடத்தில் |
| 𑌯𑍁𑌯𑍁𑌤𑍍𑌸𑌵𑌃 | யுத்தஞ்செய்ய விரும்பியிருக்கிற |
| 𑌮𑌾𑌮𑌕𑌾𑌃 | (என்குமாரன் துரியோதனன் முதலிய) நம்மவர்களும் |
| 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌾𑌶𑍍𑌚𑍈𑌵 | (என்சகோதரன்) பாண்டுவின் குமாரன் தருமபுத்திரர் முதலிய பாண்டவர்களும் |
| 𑌸𑌮𑌵𑍇𑌤𑌾𑌃 | சேர்ந்து |
| 𑌕𑌿𑌮𑌕𑍁𑌰𑍍𑌵𑌤 | என்னசெய்தார்கள் ? |

திருதராஷ்டரனென்னு மரசன் சஞ்சயனென்பவனை நோக்கி புண்ணியபூமியான குருக்ஷேத்திரமென்னு மிடத்திலே யுத்தஞ்செய்ய விரும்பியிருக்கிற நம்மவர்களும் பாண்டவர்களுஞ் சேர்ந்து என்ன செய்தார்கள் என்று கேட்டான். (௧)

---

𑌸𑌂𑌜𑌯 𑌉𑌵𑌾𑌚.

௨. 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌤𑍁 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌾𑌨𑍀𑌕𑌂 𑌵𑍍𑌯𑍂𑌢𑌂 𑌦𑍁𑌰𑍍𑌯𑍋𑌧𑌨𑌸𑍍𑌤𑌦𑌾।
𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑌮𑍁𑌪𑌸𑌂𑌗𑌮𑍍𑌯 𑌰𑌾𑌜𑌾 𑌵𑌚𑌨𑌮𑌬𑍍𑌰𑌵𑍀𑌤𑍍॥

| | |
|---|---|
| 𑌸𑌂𑌜𑌯 𑌉𑌵𑌾𑌚 | சஞ்சயன்சொல்வது |
| 𑌤𑌦𑌾 | (இருகக்ஷி சேனைகளும் யுத்தகளத்தில் சேர்ந்திருந்த) அப்போது |

| | |
|---|---|
| രാജാ | இராஜாவான |
| ദുര്യോധനഃ | துரியோதனனானவன் |
| വ്യൂഢം | கிரமவரிசைப்படுத்தப்பட்டிருக்கிற |
| പാണ്ഡവാനീകം | பாண்டவர்களுடையசேனையை |
| ദൃഷ്ട്വാ | பார்த்தபின் |
| ആചാര്യം | கல்விகற்பித்தவரான துரோணாசாரியரை |
| ഉപസംഗമ്യ | நெருங்கி (ஸமீபம்போய்) |
| വചനം | (இனிச்சொல்லப்போகிற) வாக்கியத்தை |
| അബ്രവീത് | சொன்னான். |

சஞ்சயன் திருதராஷ்டரனைநோக்கிச்சொல்வது.

இருகக்ஷி சேனைகளும் யுத்தகளத்திற் சேர்ந்திருந்தபோது ராஜாவான துரியோதனனானவன் கிரமவரிசைப் படுத்தப்பட்டிருக்கிற பாண்டவர்களுடைய சேனையைப் பார்த்தபின் துரோணாசாரியர் சமீபத்திற் போய் இனிச் சொல்லப்போகிற வாக்கியத்தைச் சொன்னான். (௨)

---

௩. പശ്യൈതാം പാണ്ഡുപുത്രാണാമാചാര്യ മഹതീം ചമൂം।
വ്യൂഢാം ദ്രുപദപുത്രേണ തവ ശിഷ്യേണ ധീമതാ॥

| | |
|---|---|
| ആചാര്യ | துரோணாசாரியரே ! |
| തവ | உம்முடைய |
| ശിഷ്യേണ | சிஷியனாகிய |
| ധീമതാ | அதிபுத்திசாலியான |
| ദ്രുപദപുത്രേണ | துருபதராஜ குமாரனாலே (திருஷ்டத்யும்னன்) |
| വ്യൂഢാം | கிரமவரிசைப்படுத்தப்பட்டிருக்கிற |
| മഹതീം | விசாலமான (பெரிதான) |
| പാണ്ഡുപുത്രാണാം | பாண்டுபுத்திரர்களுடைய |
| ഏതാം ചമൂം | இந்தச்சேனையை |
| പശ്യ | பாரும். |

துரியோதனனானவன் துரோணாசாரியரைப் பார்த்துச் சொல்வதாகச் சஞ்சயன் திருதராஷ்டரனுக்குச் சொல்வது.

துரோணாசாரியரே ! உம்முடைய சிஷியனும் அதிபுத்திசாலியுமான திருஷ்டத்யும்னனாலே கிரமவரிசைப் படுத்தப்பட்டிருக்கிற விசாலமான பாண்டுகுமாரர்களுடைய சேனையைப்பாரும். (௩)

---

௪. 𑌅𑌤𑍍𑌰 𑌶𑍂𑌰𑌾 𑌮𑌹𑍇𑌷𑍍𑌵𑌾𑌸𑌾 𑌭𑍀𑌮𑌾𑌰𑍍𑌜𑍁𑌨𑌸𑌮𑌾 𑌯𑍁𑌧𑌿।
𑌯𑍁𑌯𑍁𑌧𑌾𑌨𑍋 𑌵𑌿𑌰𑌾𑌟𑌶𑍍𑌚 𑌦𑍍𑌰𑍁𑌪𑌦𑌶𑍍𑌚 𑌮𑌹𑌾𑌰𑌥𑌃॥

௫. 𑌧𑍃𑌷𑍍𑌟𑌕𑍇𑌤𑍁𑌶𑍍𑌚𑍇𑌕𑌿𑌤𑌾𑌨𑌃 𑌕𑌾𑌶𑍀𑌰𑌾𑌜𑌶𑍍𑌚 𑌵𑍀𑌰𑍍𑌯𑌵𑌾𑌨𑍍।
𑌪𑍁𑌰𑍁𑌜𑌿𑌤𑍍𑌕𑍁𑌨𑍍𑌤𑌿𑌭𑍋𑌜𑌶𑍍𑌚 𑌶𑍈𑌬𑍍𑌯𑌶𑍍𑌚 𑌨𑌰𑌪𑍁𑌂𑌗𑌵𑌃॥

௬. 𑌯𑍁𑌧𑌾𑌮𑌨𑍍𑌯𑍁𑌶𑍍𑌚 𑌵𑌿𑌕𑍍𑌰𑌾𑌨𑍍𑌤 𑌉𑌤𑍍𑌤𑌮𑍌𑌜𑌾𑌶𑍍𑌚 𑌵𑍀𑌰𑍍𑌯𑌵𑌾𑌨𑍍।
𑌸𑍌𑌭𑌦𑍍𑌰𑍋 𑌦𑍍𑌰𑍌𑌪𑌦𑍇𑌯𑌾𑌶𑍍𑌚 𑌸𑌰𑍍𑌵 𑌏𑌵 𑌮𑌹𑌾𑌰𑌥𑌾𑌃॥

| | |
|---|---|
| 𑌅𑌤𑍍𑌰 | இவ்விடத்திலே (பாண்டவசேனையிலே) |
| 𑌯𑍁𑌧𑌿 | யுத்தத்தில் |
| 𑌶𑍂𑌰𑌾𑌃 | வல்லமையுடையவர்களாயும் |
| 𑌭𑍀𑌮𑌾𑌰𑍍𑌜𑍁𑌨𑌸𑌮𑌾𑌃 | பீமன் அர்ஜுனன் இவர்களுக்குச் சமான மானவர்களாயும் |
| 𑌮𑌹𑍇𑌷𑍍𑌵𑌾𑌸𑌾𑌃 | பெரிதானவிற்களையுடையவர்களாயு மிருக்கிற |
| 𑌯𑍁𑌯𑍁𑌧𑌾𑌨𑌃 | யுயுதானனும் (ஸாத்யகியென்றுமறுபெயர்) |
| 𑌵𑌿𑌰𑌾𑌟𑌶𑍍𑌚 | விராடதேசத்தரசனும் |
| 𑌮𑌹𑌾𑌰𑌥𑌃 | மகாரதிகனை |
| 𑌦𑍍𑌰𑍁𑌪𑌦𑌶𑍍𑌚 | துருபததேசத்தரசனும் |
| 𑌧𑍃𑌷𑍍𑌟𑌕𑍇𑌤𑍁𑌃 | திருஷ்டகேதுவும் |
| 𑌚𑍇𑌕𑌿𑌤𑌾𑌨𑌃 | சேகிதானனும் |
| 𑌵𑍀𑌰𑍍𑌯𑌵𑌾𑌨𑍍 | வல்லமையுள்ள |
| 𑌕𑌾𑌶𑍀𑌰𑌾𑌜𑌶𑍍𑌚 | காசிதேசத்தரசனும் |
| 𑌪𑍁𑌰𑍁𑌜𑌿𑌤𑍍 | புருஜித்தென்பவனும் |
| 𑌕𑍁𑌨𑍍𑌤𑌿𑌭𑍋𑌜𑌶𑍍𑌚 | குந்திபோஜனும் |
| 𑌨𑌰𑌪𑍁𑌂𑌗𑌵𑌃 | மநுஷியசிரேஷ்டனை |
| 𑌶𑍈𑌬𑍍𑌯𑌶𑍍𑌚 | சைப்பியனென்பவனும் |
| 𑌵𑌿𑌕𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌃 | பராக்கிரமசாலியான |
| 𑌯𑍁𑌧𑌾𑌮𑌨𑍍𑌯𑍁𑌶𑍍𑌚 | யுதாமந்நியுவென்பவனும் |
| 𑌵𑍀𑌰𑍍𑌯𑌵𑌾𑌨𑍍 | பிடித்தகாரியத்தை முடிக்கும் வல்லமையுள்ள |
| 𑌉𑌤𑍍𑌤𑌮𑍌𑌜𑌾𑌶𑍍𑌚 | உத்தமௌஜாவென்பவனும் |
| 𑌸𑍌𑌭𑌦𑍍𑌰𑌃* | சுபத்திரைபுத்திரனும் |
| 𑌦𑍍𑌰𑍌𑌪𑌦𑍇𑌯𑌾𑌶𑍍𑌚† | திரௌபதைபுத்திரர்களும் |

* (ஸ்ரீ.) ஸுபத்திரையினிடத்தில் அர்ஜுனனுக்குப்பிறந்தவன் அபிமந்யு.

† (ஸ்வா.) துரோபதையினிடத்தில் தர்மபுத்திரருக்குப்பிறந்தவன், பிரதிவிந்தியன்
,, ,, பீமசேனனுக்கு ,, சுதசோமன்.

| | |
|---|---|
| ஸவ-ுஏவ | இவர்களெல்லோரும் |
| ஃஹாரயாஃ* | மகாரதிகர்களாகவிருக்கிறுர்கள். |

பாண்டவசேனையிலே யுத்தத்தில் வல்லமை யுடையவர்களாயும், (அதிகவல்லமை பொருந்தியவர்களென்று பெயர்போன) பீமார்ஜு-னர்களுக்குச் சமானமானவர்களாயும், பெரிதான விற்களையுடையவர் களாயு மிருக்கிற யுயுதானன், விராடன், மகாரதிகனுன துருபதன், திருஷ்டகேது, சேகிதானன், வல்லமையுள்ள காசிராஜன், புருஜித், குந்திபோஜன், மனுஷிய சிரேஷ்டனுன சைப்பியன், பராக்கிரமசாலி யான யுதாமன்னியு, வீரனுன உத்தமௌஜா, சுபத்திரை புத்திரன், திரௌபதை புத்திரர்கள் இவர்களெல்லோரும் மகாரதிகர்களாக விருக்கிறுர்கள். (ச-ரு-சா)

---

எ. அஸாகஞ-ுவிஶிஷ்டா யெ தாநிொவாயஃிஜொத்தஃ।
நாயகாஃஃஸெஸநூஸ்ய ஸஂஜஂாஃ-ஹாநூஸ்ய வீஃிமெ॥

| | |
|---|---|
| ஃிஜொத்தஃ | பிராம்மணச் சிரேஷ்டரான துரோணுசாரியரே! |
| அஸாகஃ- | நம்முடையபக்ஷத்தில் |
| விஶிஷ்டாஃ | வல்லவர்கள் |
| யெ | எவர்களோ |
| ஃஃஸெஸநூஸ்ய | என்னுடைய சேனைக்கு |

---

துரோபதையினிடத்தில் அர்ச்சுனனுக்குப் பிறந்தவன் சுருதகீர்த்தி
,, ,, நகுலனுக்கு ,, சதாநீகன்
,, ,, சகதேவனுக்கு ,, சுருதசேனன் (மகாபாரதம் ஆதிபருவம் சுங-வது அத்தியாயம் பார்க்க இந்த அத்தியாயக் கணக்கானது கல்கத்தா புஸ்தகப்படி போடப்பட்டது.

* ஸ்ரீ. (ஶ்லொ.) ஏகொஃஶஸஹஸ்ராணி யொயயெத்யஸ்து-யநிநாம்।
ஶஸ்த்ர ஶாஸ்த்ர ப்ரவீணஶ்ச ஃஹாரயஇதிஸ்ம்ருதஃ॥

யாவனொருவன் விற்பிடித்து யுத்தஞ்செய்கிற பதினுயிரம் பெயர்களோ டெதிர்த்து யுத்தஞ்செய்ய வல்லமையும் ஆயுத சாஸ்திரத்தில் அதிகப் பயிற்சியுமுள்ளவனே அவன் மகா ரதிகனென்று சொல்லப்படுகிறுன்.

(ஶ்லொ.) அமிதாநெ்யாயயெத்யஸ்து ஸஂப்ரொக்தொ திரயஸ்து-ஸஃ।
ரயீசைகெநயொயு-ஜெ்ய தந்ந்யூநொஃர்ாயொஃதஃ॥

அளவற்ற ரதிகர்களோ டெதிர்த்து யுத்தஞ்செய்யும் வல்லமையும் ஆயுதப் பயிற்சியு முள்ளவன் அதிரதனென்றும், ஒரே இரதத்திலிருந்துகொண்டு மற்றொரு ரதத்தி லிருக்கின்ற தனக்குச் சமானமானவனுன ஒருவனே டெதிர்த்து யுத்தஞ் செய்கிறவன் ரதி என்றும், அவனுக்குத் தாழ்ந்தவன் அர்த்தரதனென்றுஞ் சொல்லப் படுகிறுன்.

| | |
|---|---|
| நாயகா: | தலைவர்கள் |
| (மம) | எவர்களோ |
| தாந் | அவர்களை |
| தே | உமக்கு |
| ஸம்ஜ்ஞார்த²ம் | தெரியும்பொருட்டு |
| ப்³ரவீமி | சொல்லுகிறேன் |
| தாந் | அவர்களை |
| நிபோ³த⁴ | தெரிந்துகொள்ளும். |

பிராம்மண சிரேஷ்டரான துரோணசாரியரே ! நம்முடையபக்ஷத்திலுள்ள வல்லவர்களையும் சேனைத்தலைவர்களையும் உமக்குத் தெரியும் பொருட்டுச் சொல்லுகிறேன் ; அவர்களைத் தெரிந்துகொள்ளும். (எ)

---

அ. ப⁴வாந்பீ⁴ஷ்மஶ்ச கர்ணஶ்ச க்ருபஶ்ச ஸமிதிஞ்ஜய:।
அஶ்வத்தா²மா விகர்ணஶ்ச ஸௌமத³த்திர்ஜயத்³ரத²:॥

கூ. அந்யே ச ப³ஹவ: ஶூரா மத³ர்தே² த்யக்தஜீவிதா:।
நாநாஶஸ்த்ரப்ரஹரணா: ஸர்வே யுத்³த⁴விஶாரதா³:॥

| | |
|---|---|
| ப⁴வாந் | (துரோணசாரியராகிய) நீரும் |
| பீ⁴ஷ்மஶ்ச | பீஷ்மரும் |
| கர்ணஶ்ச | கர்ணனும் |
| க்ருபஶ்ச | கிருபாசாரியரும் |
| ஸமிதிஞ்ஜய: | யுத்தத்தில்ஜயசாலியான |
| அஶ்வத்தா²மா | அசுவத்தாமாவும் |
| விகர்ணஶ்ச | விகர்ணனும் |
| ஸௌமத³த்தி: | சோமதத்தன்குமாரன் பூரிசிரவஸும் |
| ஜயத்³ரத²:* | ஜயத்திரதனும் |
| அந்யே ச | பின்னும் |
| ப³ஹவ: ஶூரா: | பலசூரர்களும் |
| மத³ர்தே² | எனக்காக |
| த்யக்தஜீவிதா: | பிராணனைக் கொடுக்கத் துணிந்தவர்களாயும் |
| நாநாஶஸ்த்ரப்ரஹரணா: | பலவித ஆயுதங்களை யுடைத்தானவர்களாயுமிருக்கிற |

* (ஶ்ரீ. ரா. ச.) ததை²வ ச என்றும்பாடம். அப்படியே என்று அர்த்தம்.

| | |
|---|---|
| ஸர்வெ-பு | எல்லோரும் |
| யு-ஜவிமாரஜா: | யுத்தத்தில் வல்லமை பொருந்தியவர்கள். |

நீரும், பீஷ்மரும், கர்ணனும், கிருபாசாரியரும், யுத்தத்தில் ஜய சாலியான அசுவத்தாமாவும், விகர்ணனும், பூரிசிரவஸும், ஜயத்திரதனும், பின்னும் பலசூரர்களும் எனக்காகப் பிராணனைக் கொடுக்கத்துணிந்து, பலவித வாயுதங்களை யுடையவர்களாயு மெல்லோரும் யுத்தத்தில் வல்லமை பொருந்தியவர்களாயு மிருக்கிறீர்கள். (அ-கூ)

---

கo. அவாஜ்ாதுஜதஸ்லாகம் வலஂவீஷ்ாவிரக்ஷிதம்।
வாஜ்ாதுஂகிஜெஷெதஷாம் வலஂவீஜாவிரக்ஷிதம்॥

| | |
|---|---|
| (யசு) | எதானது |
| வீஷ்ாவிரக்ஷிதம் | பீஷ்மரால் செவ்வையாய் காக்கப்பட்டிருக்கிறதோ |
| தசு | அப்பேர்க்கொத்த |
| அஸ்லாகம் | நம்முடைய |
| வலம் | சேனையானது |
| அவாஜ்ாதும் | வல்லமையற்றது |
| வீஜாவிரக்ஷிதம் | பீமனுல்செவ்வையாய்க்காக்கப்பட்டிருக்கிற |
| ஷஜெதஷாம் ஜதம் | இவர்களுடைய இந்த |
| வலஜு | சேனையோ |
| வாஜ்ாதும் | வல்லமைபொருந்தியது. |

எதானது பீஷ்மரால் செவ்வையாய்க் காக்கப்பட் டிருக்கிறதோ அப்பேர்க்கொத்த நம்முடைய சேனையானது பாண்டவர்களோடு யுத்தஞ்செய்ய வல்லமையற்றது. பீமனுல் செவ்வையாய்க் காக்கப்பட்டிருக்கிற இவர்களுடைய இந்தச்சேனையோ வல்லமைபொருந்தியது. (கo)

---

கக. அயநெஷுவஸவெஷு யயாஹாமவஸ்திதா:।
வீஷ்ெமவாவிரக்ஷது ஹவதுஸவ-புவஹி॥

| | |
|---|---|
| ஸவெஹவநொஹி | நீங்களெல்லோரும் |
| ஸவெஷுவ அயநெஷு | சகலமான (சேனைக்குள் பிரவேசிக்கிற) மார்க்கங்களிலும் |
| யயாஹாமம் | அவரவர்களிடத்தில் |
| அவஸ்திதா: | இருந்தவர்களாய்க்கொண்டு |
| வீஷ்மெவ | பீஷ்மனையே |
| அவிரக்ஷது | எல்லாப்பக்கங்களிலும் காக்கவேண்டும். |

நீங்கள் (துரோணாசாரியர் உள்பட) சகலரும் சேனைக்குள் பிரவேசிக்கும் பொருட்டு வைக்கப்பட்டிருக்கிற வெல்லா மார்க்கங்களிலும், அவரவர்களுக்கு நியமிக்கப்பட்டிருக்கிற விடத்திலேயே யிருந்துகொண்டு பீஷ்மரையே எல்லாப்பக்கங்களிலும் காக்கவேண்டும் (என்றால் அவரொருபக்கத்தில் யுத்தஞ் செய்துகொண்டிருக்கையில் வேறே பக்கங்களிற் சத்துருக்கள்வந்து அவர்பேரில் பாணம் போடாமல் பாது காக்கவேண்டிய தென்பதே.)

(ஸூ) பீஷ்மரைக் காக்கவேண்டியதைப்பற்றிக் குறிப்பாய்ச்சொன்னதின் கருத்தானது – அவர் யுத்தத்தில் மகாவல்லமை யுடையவர். தன்றேகத்தைத் தனக் கிஷ்டமானகாலத்தில் விடலாமென்று வரம் பெற்றவர். இவரை யுத்தத்தில் ஜயிப்பது அசாத்தியமென்று எதிரிகளால் பயப்படத்தக்கவர். இப்போது சேனாதிபதியாயு மிருக்கிறவர். ஆகையா லவரைச் சத்துருக்கள் மோசடியாய் அங்கஹீனம் முதலியன செய்ய விடமன்றியில், காக்கிற பக்ஷத்தில் தன்னுடைய சேனைக்குக் கெடுதிவராமல் அவர் காப்பாரென்று துரியோதனன் எண்ணியிருக்கலா மென்பதே. (கக)

---

கஉ. தஸ்ய ஸஞ்ஜநயந் ஹர்ஷம் குருவ்ருத்த: பிதாமஹ:।
ஸிம்ஹநாதம் விநத்யோச்சை: ஶங்கம் தத்மௌ ப்ரதாபவாந்॥

| | |
|---|---|
| ப்ரதாபவாந் | சத்துருக்கள்பார்த்துப் பயப்படும்படியான வல்லமை பொருந்தினவரும் |
| குருவ்ருத்த: | குருவம்சத்தி லுள்ளவர்களுக்குள்ளே வயது சென்றவரும் |
| பிதாமஹ: | பாட்டனுமான (பீஷ்மர்) |
| தஸ்ய | அவனுக்கு (துரியோதனனுக்கு) |
| ஹர்ஷம் | சந்தோஷத்தை |
| ஸஞ்ஜநயந் | உண்டாக்கிக்கொண்டு |
| உச்சை: | பெரிதான |
| ஸிம்ஹநாதம் விநத்ய | சிம்மத்தின் ஒலியைப்போலொத்த ஒலியைச்செய்து |
| ஶங்கம் | சங்கத்தை |
| தத்மௌ | ஊதினர். |

சத்துருக்கள் பார்த்துப் பயப்படும்படியான வல்லமை பொருந்தியவரும், குருவம்சத்தி லுள்ளவர்களுக்குள்ளே வயது சென்றவரும், தகப்பனுடைய பெரிய தகப்பனுமான பீஷ்மர், துரியோதனனுக்குச் சந்தோஷ முண்டாகும்படி பெரிதானவும் சிம்மத்தின் சத்தம்போன்றவும் சததஞ்செய்து சங்கத்தை ஊதினர். (கஉ)

௧௩. ததஶ்ஶங்காஶ்ச பேர்யஶ்ச பணவாநககோமுகா:।
ஸஹஸைவாப்யஹந்யந்த ஸ ஶப்தஸ்துமுலோऽபவத்॥

| | |
|---|---|
| தத: | அதற்குப் (பீஷ்மர் சங்கத்தை யூதின) பிறகு |
| ஶங்காஶ்ச | சங்கங்களும் |
| பேர்யஶ்ச | நகாராக்களும் |
| பணவாநககோமுகா: | மிருதங்கங்களும், தப்பட்டைகளும், கொம்புகளும் |
| ஸஹஸைவ | சீக்கிரமாகத்தானே |
| அப்யஹந்யந்த | முழக்கப்பட்டன |
| ஸ: ஶப்த: | அந்தச்சத்தமானது |
| துமுல: | எங்கும் பரவினதாக |
| அபவத் | ஆச்சுது. |

பீஷ்மர் சங்கத்தொனி செய்தபிறகு கௌரவ சேனையிலுள்ள மற்றவர்களாலே சங்கங்கள், நகாராக்கள், மிருதங்கங்கள், தப்பட்டைகள், கொம்புகள் சீக்கிரமாக முழக்கப்பட்டன; அந்தச்சத்தமானது எங்கும் பரவியது. (௧௩)

---

௧௪. தத: ஶ்வேதைர்ஹயைர்யுக்தே மஹதி ஸ்யந்தநே ஸ்திதௌ।
மாதவ: பாண்டவஶ்சைவ திவ்யௌ ஶங்கௌ ப்ரதத்மது:॥

| | |
|---|---|
| தத: | அதற்குப் (கௌரவசேனையில் வாத்தியங்களின் சத்தமுண்டான) பிறகு |
| ஶ்வேதை: | வெள்ளையாயிருக்கிற |
| ஹயை: | குதிரைகளோடு |
| யுக்தே | கூடிய |
| மஹதி | பெரிதான |
| ஸ்யந்தநே | இரதத்திலே |
| ஸ்திதௌ | இருக்கிற |
| மாதவ:* | இலக்ஷ்மீபதியான கிருஷ்ணசுவாமியும் |
| பாண்டவஶ்ச | பாண்டுபுத்திரனை அர்ஜுனனும் |
| திவ்யௌ | தெய்வத்தன்மை பொருந்திய |

---

(ஶ்ரீ) சாந்தோக்கிய உபநிஷத்திலுள்ள மதுவித்தையென்கிற வேதபாகத்தினால் புகழப்பட்டவனானதால் மாதவனென்றும், மா = இலக்ஷ்மீ, தவ: = பதி (கணவன்). இலக்ஷ்மீபதியானதால் மாதவனென்றும், மௌனம், தியானம், யோகம், இவைகளை யுடையவனானதால் மாதவனென்றும் பெயர்வந்தது. (விஷ்ணு ஸஹஸ்ரநாமத்திற்கு (ஶம்) செய்திருக்கிற பாஷ்யம் ௨௭ - வது பக்கத்தில் பார்க்க.)

| | |
|---|---|
| 𑌶𑌙𑍍𑌖𑍌 | சங்கங்களை |
| 𑌪𑍍𑌰𑌦𑌧𑍍𑌮𑌤𑍁𑌃 | ஊரக்க ஊதினார்கள். |

அதற்குப்பிறகு வெள்ளைக்குதிரைகள் கட்டிய பெரிதான இரதத்திலேறியிருக்கிற கிருஷ்ண சுவாமியும் அர்ச்சுனனும் தெய்வத்தன்மை பொருந்திய சங்கங்களை உரக்க ஊதினார்கள். (௧௪)

---

௧௫. 𑌪𑌾𑌞𑍍𑌚𑌜𑌨𑍍𑌯𑌂 𑌹𑍃𑌷𑍀𑌕𑍇𑌶𑍋 𑌦𑍇𑌵𑌦𑌤𑍍𑌤𑌂 𑌧𑌨𑌞𑍍𑌜𑌯𑌃।
𑌪𑍌𑌣𑍍𑌡𑍍𑌰𑌂 𑌦𑌧𑍍𑌮𑍌 𑌮𑌹𑌾𑌶𑌙𑍍𑌖𑌂 𑌭𑍀𑌮𑌕𑌰𑍍𑌮𑌾 𑌵𑍃𑌕𑍋𑌦𑌰𑌃॥

௧௬. 𑌅𑌨𑌨𑍍𑌤𑌵𑌿𑌜𑌯𑌂 𑌰𑌾𑌜𑌾 𑌕𑍁𑌨𑍍𑌤𑍀𑌪𑍁𑌤𑍍𑌰𑍋 𑌯𑍁𑌧𑌿𑌷𑍍𑌠𑌿𑌰𑌃।
𑌨𑌕𑍁𑌲𑌃 𑌸𑌹𑌦𑍇𑌵𑌶𑍍𑌚 𑌸𑍁𑌘𑍋𑌷𑌮𑌣𑌿𑌪𑍁𑌷𑍍𑌪𑌕𑍌॥

௧௭. 𑌕𑌾𑌶𑍍𑌯𑌶𑍍𑌚 𑌪𑌰𑌮𑍇𑌷𑍍𑌵𑌾𑌸𑌃 𑌶𑌿𑌖𑌣𑍍𑌡𑍀 𑌚 𑌮𑌹𑌾𑌰𑌥𑌃।
𑌧𑍃𑌷𑍍𑌟𑌦𑍍𑌯𑍁𑌮𑍍𑌨𑍋 𑌵𑌿𑌰𑌾𑌟𑌶𑍍𑌚 𑌸𑌾𑌤𑍍𑌯𑌕𑌿𑌶𑍍𑌚𑌾𑌪𑌰𑌾𑌜𑌿𑌤𑌃॥

௧௮. 𑌦𑍍𑌰𑍁𑌪𑌦𑍋 𑌦𑍍𑌰𑍌𑌪𑌦𑍇𑌯𑌾𑌶𑍍𑌚 𑌸𑌰𑍍𑌵𑌶𑌃 𑌪𑍃𑌥𑌿𑌵𑍀𑌪𑌤𑍇।
𑌸𑍌𑌭𑌦𑍍𑌰𑌶𑍍𑌚 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍁𑌃 𑌶𑌙𑍍𑌖𑌾𑌨𑍍𑌦𑌧𑍍𑌮𑍁𑌃 𑌪𑍃𑌥𑌕𑍍𑌪𑍃𑌥𑌕𑍍॥

| | |
|---|---|
| 𑌹𑍇 𑌪𑍃𑌥𑌿𑌵𑍀𑌪𑌤𑍇 | ஓ! திருதராஷ்டர மகாராஜாவே! |
| 𑌹𑍃𑌷𑍀𑌕𑍇𑌶𑌃* | கிருஷ்ணசுவாமியானவர் |
| 𑌪𑌾𑌞𑍍𑌚𑌜𑌨𑍍𑌯𑌂† | பாஞ்சஜன்னியமென்னுஞ் சங்கத்தை |
| 𑌦𑌧𑍍𑌮𑍌 | ஊதினார் |
| 𑌧𑌨𑌞𑍍𑌜𑌯𑌃‡ | அர்ச்சுனன் |
| 𑌦𑍇𑌵𑌦𑌤𑍍𑌤𑌂 | தேவதத்தமென்னுஞ் சங்கத்தையும் |
| 𑌭𑍀𑌮𑌕𑌰𑍍𑌮𑌾 | பயங்கரமானகாரியத்தை யுடைய |

---

* (வ்யா) 𑌹𑍃𑌷𑍀𑌕 — இந்திரியங்களுக்கு, 𑌈𑌶𑌃 — (ஸாக்ஷியாயிருப்பதால்) எஜமானனாகிய க்ஷேத்திரக்ஞனாயிருக்கிறவன் இருஷீகேசனென்றும், இந்திரியங்களை சுவாதீனத்தில் வைத்துக்கொண்டு அவைகளை விஷயங்களி லேவுகிற பரமாத்மா வானதினால் இருஷீகேசனென்றும், சூரியசந்திர ரூபங்களாகவிருக்கிறவ ராகிய பகவானுடைய அந்த சூரியசந்திரானுடைய கேசங்கள் (மயிர்) என்று சொல்லப்பட்ட கிரணங்களாலே ஜகத்திற்கு ஜாக்கிரத் ஸுஷுப்தி யவஸ்தைகளினால் சந்தோஷத்தை உண்டு பண்ணுகிறதினால் இருஷீகேசனென்றும் பெயர்வந்தது. (விஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷியம் ௨௫ - வது பக்கம் பார்க்க.)

† (வ்யா) பஞ்சஜனனென்கிற அசுரனுடைய வயிற்றைக்கிழித்து அவனுடைய எலும்பிலிருந்து எடுக்கப்பட்டதினால் பாஞ்சஜன்னியமென்று பெயர் வந்தது. (விஷ்ணுபுராணம் ௫ - வது அம்சம், ௨௧ - வது அத்தியாயத்தையும், பாகவதம் ௧௦ - வது ஸ்கந்தம், ௪௫ - வது அத்தியாயத்தையும் பார்க்க.)

‡ (வ்யா) இராஜசூய யாகத்திற்காக அநேக ராஜாக்களைச்செயித்து தனங்களைச் சம்பாதித்தவனானதலால் தனஞ்சயனென்றும், தனத்தி லாசையற்றவனானதலால் தனஞ்சயனென்றும் பெயர் வந்தது.

| | |
|---|---|
| 𑌵𑍃𑌕𑍋𑌦𑌰𑌃* | பீமசேனன் |
| 𑌪𑍌𑌣𑍍𑌡𑍍𑌰𑌂 | பௌண்டரமென்னும் |
| 𑌮𑌹𑌾𑌶𑌙𑍍𑌖𑌂 | பெரிதான சங்கத்தையும் |
| 𑌰𑌾𑌜𑌾 | இராஜாவும் |
| 𑌕𑍁𑌨𑍍𑌤𑍀𑌪𑍁𑌤𑍍𑌰𑌃 | குந்தி என்பவளுடைய புத்திரனுமான |
| 𑌯𑍁𑌧𑌿𑌷𑍍𑌠𑌿𑌰𑌃 | யுதிஷ்டிரர் (தருமபுத்திரர்) |
| 𑌅𑌨𑌨𑍍𑌤𑌵𑌿𑌜𑌯𑌂 | அநந்தவிஜயமென்னுஞ் சங்கத்தையும் |
| 𑌨𑌕𑍁𑌲𑌃 | நகுலனும் |
| 𑌸𑌹𑌦𑍇𑌵𑌶𑍍𑌚 | சகதேவனும் |
| 𑌸𑍁𑌘𑍋𑌷 | சுகோஷமென்னுஞ் சங்கத்தையும் |
| 𑌮𑌣𑌿𑌪𑍁𑌷𑍍𑌪𑌕𑍌 | மணிபுஷ்பகமென்னுஞ் சங்கத்தையும் |
| 𑌪𑌰𑌮𑍇𑌷𑍍𑌵𑌾𑌸𑌃 | சிரேஷ்டமான வில்லையுடைய |
| 𑌕𑌾𑌶𑍍𑌯𑌶𑍍𑌚 | காசி ராஜனும் |
| 𑌮𑌹𑌾𑌰𑌥𑌃 | மகாரதிகனை |
| 𑌶𑌿𑌖𑌣𑍍𑌡𑍀 𑌚 | சிகண்டி என்பவனும் |
| 𑌧𑍃𑌷𑍍𑌟𑌦𑍍𑌯𑍁𑌮𑍍𑌨𑌶𑍍𑌚 | திருஷ்டத்யும்னனும் |
| 𑌵𑌿𑌰𑌾𑌟𑌶𑍍𑌚 | விராடதேசத்தரசனும் |
| 𑌅𑌪𑌰𑌾𑌜𑌿𑌤𑌃 | அபஜய மடையாதவனை |
| 𑌸𑌾𑌤𑍍𑌯𑌕𑌿𑌶𑍍𑌚 | சாத்தியகி என்பவனும் |
| 𑌦𑍍𑌰𑍁𑌪𑌦𑌶𑍍𑌚 | துருபத ராஜனும் |
| 𑌦𑍍𑌰𑍌𑌪𑌦𑍇𑌯𑌾𑌶𑍍𑌚 | பிரதிவிந்தியன் முதலிய திரௌபதையின் குமாரர்களும் |
| 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍁𑌃 | தோள் வலிமையுடைய |
| 𑌸𑍌𑌭𑌦𑍍𑌰𑌶𑍍𑌚 | சுபத்திரை குமாரன் அபிமந்யுவும் |
| 𑌸𑌰𑍍𑌵𑌶𑌃 | இவர்களெல்லோருமாக |
| 𑌪𑍃𑌥𑌕𑍍𑌪𑍃𑌥𑌕𑍍 | தனித்தனியாய் |
| 𑌶𑌙𑍍𑌖𑌾𑌨𑍍 | சங்கங்களை |
| 𑌦𑌧𑍍𑌮𑍁𑌃 | ஊதினார்கள். |

ஓ! திரதராஷ்டர மகாராஜாவே! (கேளும்,) கிருஷ்ண சுவாமியானவர் பாஞ்சஜன்னிய மென்னுஞ் சங்கத்தை யூதினர்; அர்சுனன் தேவதத்தமென்னுஞ் சங்கத்தையும், பயங்கரமான காரியத்தை யுடைய பீமசேனன் பௌண்டரமென்னும் பெரிய சங்கத்தையும், இராஜாவும் குந்தி புத்திரனுமான தருமபுத்திரர் அநந்தவிஜயமென்னுஞ் சங்கத்தையும், நகுலன் சுகோஷமென்னுஞ் சங்கத்தையும், சகதேவன் மணி

* (ஷூா) எதையும் பஸ்மம்செய்யும் "விருக" மென்கிற அக்கினியை வயிற்றிலுடையவன், அல்லது, செந்நாய் வயிற்றைப்போல் வயிறுடையவன்.

புஷ்பகமென்னுஞ் சங்கத்தையும், சிரேஷ்டமான வில்லையுடைய காசி ராஜனும், மகாரதிகனை சிகண்டியும், திருஷ்டத்யும்னனும், விராட ராஜனும், அபஜய மடையாதவனை சாத்தியகியும், துருபத மகாராஜ னும்,—திரௌபதை குமாரர்களும், தோள் வலிவுள்ள அபிமந்நுவும் இவர்களெல்லோருமாகத் தனித்தனியாய் (அவரவர்களுடைய) சங்கங் களை யூதினார்கள். (௧௫-௧௬-௧௭-௧௮)

---

௧௯. 𑌸𑌘𑍋𑌷𑍋𑌧𑌾𑌰𑍍𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌾𑌣𑌾𑌂 𑌹𑍃𑌦𑌯𑌾𑌨𑌿𑌵𑍍𑌯𑌦𑌾𑌰𑌯𑌤𑍍।
𑌨𑌭𑌶𑍍𑌚𑌪𑍃𑌥𑌿𑌵𑍀𑌂𑌚𑍈𑌵 𑌤𑍁𑌮𑍁𑌲𑍋𑌵𑍍𑌯𑌨𑍁𑌨𑌾𑌦𑌯𑌨𑍍॥

| | |
|---|---|
| 𑌤𑍁𑌮𑍁𑌲𑌃 | எங்கும்பரவின |
| 𑌸𑌃𑌘𑍋𑌷𑌃 | அந்தச்சத்தமானது |
| 𑌨𑌭𑌶𑍍𑌚 | ஆகாசத்தையும் |
| 𑌪𑍃𑌥𑌿𑌵𑍀𑌂𑌚𑍈𑌵 | பூமியையும் |
| 𑌵𑍍𑌯𑌨𑍁𑌨𑌾𑌦𑌯𑌨𑍍 | எதிரொலி கொடுப்பித்துக்கொண்டு |
| 𑌧𑌾𑌰𑍍𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌾𑌣𑌾𑌂 | திருதராஷ்டரன் குமாரர்களுடைய |
| 𑌹𑍃𑌦𑌯𑌾𑌨𑌿 | நெஞ்சுகளை |
| 𑌵𑍍𑌯𑌦𑌾𑌰𑌯𑌤𑍍 | பிளந்தது. |

எங்கும் பரவின அந்தச் (சங்கங்களுடைய) சத்தமானது ஆகாசத் தையும் பூமியையு மெதிரொலி கொடுக்கும்படி செய்தது மல்லாமல், திருதராஷ்டர னுடைய (துரியோதனன் முதலான நூறு) பிள்ளைக ளுடைய நெஞ்சுகளையும் பிளந்தது (பிளந்ததுபோல் அவரவர்கள் பயந் தார்களென்பது கருத்து.) (௧௯)

---

௨௦. 𑌅𑌥𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌨𑍍𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌧𑌾𑌰𑍍𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌾𑌨𑍍𑌕𑌪𑌿𑌧𑍍𑌵𑌜𑌃।
𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑍇𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌸𑌂𑌪𑌾𑌤𑍇 𑌧𑌨𑍁𑌰𑍁𑌦𑍍𑌯𑌮𑍍𑌯𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌃॥

௨௧. 𑌹𑍃𑌷𑍀𑌕𑍇𑌶𑌂𑌤𑌦𑌾𑌵𑌾𑌕𑍍𑌯𑌮𑌿𑌦𑌮𑌾𑌹𑌮𑌹𑍀𑌪𑌤𑍇।

| | |
|---|---|
| 𑌹𑍇 𑌮𑌹𑍀𑌪𑌤𑍇 | ஓ! திருதராஷ்டர மகாராஜாவே! |
| 𑌅𑌥 | பிற்பாடு |
| 𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌸𑌂𑌪𑌾𑌤𑍇 | ஆயுதப்பிரயோகம் |
| 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑍇 | துடங்கினபோது |
| 𑌕𑌪𑌿𑌧𑍍𑌵𑌜𑌃* | குரங்குக்கொடியோனாகிய |

---

* (ஸ்வா) பீமசேனனுடைய பிரார்த்தனையின்பேரில் அனுமாரானவர், யுத்தத் தில் பாண்டவர்களுக்கு ஜயமுண்டாகும் பொருட்டு அர்சுனன் இரதத்தின் கொடி யில் வந்திருப்பதாக வரங்கொடுத்திருந்த பிரகாரம், அர்சுனனுடைய விரதத்தின் கொ

| | |
|---|---|
| பாண்டவ: | பாண்டு புத்திரனை அர்சுனன் |
| வ்யவஸ்திதாந் | யுத்தஞ்செய்ய சித்தமாயிருக்கிற |
| தார்தராஷ்ட்ராந் | திருதராஷ்டரனுடைய புத்திரர்களை |
| த்ருஷ்ட்வா | பார்த்து |
| தநு: | வில்லை |
| உத்யம்ய | உயரவெடுத்து |
| ததா | அப்போது |
| ஹ்ருஷீகேசம் | கிருஷ்ணசுவாமியை (நோக்கி) |
| இதம் வாக்யம் ஆஹ | இந்த வார்த்தையைச் சொல்லுகிறான். |

ஓ! திருதராஷ்டர ராஜாவே! பிறகு ஆயுதங்களை பிரயோகிக்கத் துடங்கினபோது குரங்குக்கொடியோனாகிய அர்ச்சுனன் யுத்தஞ்செய்ய சித்தமாயிருக்கிற துரியோதனாதிகளைப் பார்த்து வில்லை யுயரவெடுத்துக்கொண்டு கிருஷ்ண சுவாமியை நோக்கி இந்த (அடியிற் சொல்லப்போகிற) வார்த்தையைச் சொல்லுகிறான். (உ0-உக)

---

அர்ஜுந உவாச.

ஸேநயோருபயோர்மத்யே ரதம் ஸ்தாபய மேऽச்யுத॥

உஉ. யாவதேதாந்நிரீக்ஷேऽஹம் யோத்துகாமாநவஸ்திதாந்।
கைர்மயா ஸஹ யோத்தவ்யமஸ்மிந் ரணஸமுத்யமே॥

உங. யோத்ஸ்யமாநாநவேக்ஷேऽஹம் ய ஏதேऽத்ர ஸமாகதா:।
தார்தராஷ்ட்ரஸ்ய துர்புத்தேர்யுத்தே ப்ரியசிகீர்ஷவ:॥

| | |
|---|---|
| அர்ஜுந உவாச | அர்சுனன் சொல்வது |
| ஹே அச்யுத* | ஓ! கிருஷ்ணா! |
| துர்புத்தே: | கெட்ட புத்தியையுடைய |
| தார்தராஷ்ட்ரஸ்ய | திருதராஷ்டர புத்திரனுக்கு |
| யுத்தே | யுத்தத்தில் |
| ப்ரியசிகீர்ஷவ: | பிரியத்தைச் செய்யவேண்டுமென்கிற இச்சையுள்ள |

டியில் அனுமார் வந்திருப்பதால் குரங்குக்கொடியோனென்று சொல்லப்பட்டது. (மகா பாரதம் ஆரண்ணிய பருவத்தில் கருக - வது அத்தியாயத்தில் பீமன் மந்தார புஷ்பம் கொண்டுவருங் கதையைப்பார்க்க). இந்த அத்தியாய கணக்கு கல்கத்தா புஸ்தகப்படி போடப்பட்டது.

* (ஸ்வா) ஸ்வரூப சாமர்த்தியத்திற்கு நாசமில்லாதவனானதாலும் தன் ஸ்தானத்திலிருந்து சலிக்காதவனாகையாலும் அச்சுதனென்று பெயர் வந்தது. (ஸஹஸ்ரநாமபாஷ்யம் உஅ - வது பக்கம் பார்க்க.

| | |
|---|---|
| யஏதே | எந்த இந்த ஜனங்கள் |
| அத்ர | இந்த யுத்தகளத்திலே |
| ஸமாகதா: | வந்திருக்கிறார்களோ |
| அஸ்மிந் | இந்த |
| ரணஸமுத்யமே | யுத்தத்துடக்கத்தில் |
| மயா | என்னாலே |
| கை: | யாரோடு |
| ஸஹ | கூட (எதிர்த்து) |
| யோத்தவ்யம் | யுத்தஞ் செய்யவேண்டியதோ |
| அவஸ்திதாந் | இவ்விடத்திலிருக்கிற |
| யோத்துகாமாந் | யுத்தஞ்செய்ய விச்சையுள்ள |
| ஏதாந் | இந்த ஜனங்களை |
| அஹம் | நான் |
| (யாவத்) | எதுவரையில் |
| நிரீக்ஷே | பார்க்கிறேனோ |
| யோத்ஸ்யமாநாந் | யுத்தஞ்செய்யப் போகிறவர்களை |
| அஹம் | நான் |
| யாவத் | எதுவரையில் |
| அவேக்ஷே | பார்க்கிறேனோ |
| (தாவத்) | அதுவரையில் |
| உபயோ: ஸேநயோ: | இரண்டு சேனைகளுடைய |
| மத்யே | நடுவில் |
| மே | என்னுடைய |
| ரதம் | இரதத்தை |
| ஸ்தாபய | நிறுத்தும். |

அர்சுனன் கிருஷ்ண சுவாமியை நோக்கி, ஓ! நாசமற்றவனே! கெட்டபுத்தியையுடைய திருதராஷ்டர புத்திரனாகிய துரியோதனனுக்கு யுத்தத்தில் பிரியத்தைச்செய்ய எண்ணங்கொண்டு எந்த ஜனங்கள் யுத்தகளத்தில் வந்திருக்கிறார்களோ, இந்த யுத்தத்துடக்கத்தில் நான் யாரோடு யுத்தஞ் செய்யவேண்டியதோ (அப்படிப்பட்டவர்களாய்) இவ்விடத்திலிருக்கிற யுத்தஞ்செய்ய விச்சையுள்ள இந்த ஜனங்களை நான் எதுவரையில் பார்க்கிறேனோ (மேற் சொல்லப்பட்டவர்களில் சேராத மற்ற) யுத்தஞ்செய்யப் போகிறவர்களை நா னெதுவரையில் பார்க்கிறேனோ அதுவரையி லிரண்டு சேனைகளுடைய நடுவில் என்னுடைய இரதத்தை நிறுத்தும் என்றான். (உக-உஉ-உ௩)

ஸஂஜய உவாச.

உச. ஏவமுக்தோ ஹ்ருஷீகேஶோ குடாகேஶேந பாரத।
ஸேநயோருபயோர்மத்யே ஸ்தாபயித்வா ரதோத்தமம்॥

உரு. பீஷ்மத்ரோணப்ரமுகத꞉ ஸர்வேஷாஞ்ச மஹீக்ஷிதாம்।
உவாச பார்த² பஶ்யைதாந் ஸமவேதாந்குரூநிதி॥

| | |
|---|---|
| ஸஂஜய உவாச | சஞ்சயன் சொல்வது |
| பாரத | பாரத வம்சத்தில் பிறந்த திருதராஷ்டரனே! |
| குடாகேஶேந | நித்திரையை ஜயித்த அர்சுனனாலே |
| ஏவம் | இவ்விதமாய் |
| உக்த꞉ | சொல்லப்படலான |
| ஹ்ருஷீகேஶ꞉ | கிருஷ்ண சுவாமியானவர் |
| உபயோ꞉ ஸேநயோ꞉ | இரு சேனைகளுடைய |
| மத்யே | நடுவில் |
| ஸர்வேஷாம் மஹீக்ஷிதாஞ்ச | எல்லா ராஜாக்களுடையவும் |
| பீஷ்மத்ரோணப்ரமுகத꞉ | பீஷ்மத் துரோணருடையவும் எதிராக |
| ரதோத்தமம் | சிரேஷ்டமான் ரதத்தை |
| ஸ்தாபயித்வா | நிறுத்தி |
| பார்த | ஓ! அர்ஜுனா! |
| ஸமவேதாந் | சேர்ந்திருக்கிற |
| ஏதாந் குரூந் | இந்த (துரியோதனன் முதலிய) கௌரவர்களை |
| பஶ்ய | பார் |
| இதி | என்பதாய் |
| உவாச | சொன்னார். |

சஞ்சயன் திருதராஷ்டரனை நோக்கிச்சொல்வது - நித்திரையை ஜயித்தவனான அர்சுனனாலே இவ்விதமாய்ச் சொல்லப்படலான கிருஷ்ணசுவாமியானவர் இருசேனைகளுடைய நடுவிலும், எல்லாராஜாக்கள், பீஷ்மர், துரோணர், இவர்களுக்கு எதிரிலும், சிரேஷ்டமான ரதத்தை நிறுத்தி, ஓ! அர்சுனா! சேர்ந்திருக்கிற இந்தக் கௌரவசேனையைப் பாரென்று சொன்னார். (உச-உரு)

---

உசா. தத்ராபஶ்யத்ஸ்தி²தாந்பார்த²꞉ பித்ரூநத² பிதாமஹாந்।
ஆசார்யாந்மாதுலாந்ப்⁴ராத்ரூந்புத்ராந்பௌத்ராந்ஸகீ²ம்ஸ்ததா²॥

உஎ. 𑌶𑍍𑌵𑌶𑍁𑌰𑌾𑌨𑍍𑌸𑍁𑌹𑍃𑌦𑌶𑍍𑌚𑍈𑌵 𑌸𑍇𑌨𑌯𑍋𑌰𑍁𑌭𑌯𑍋𑌰𑌪𑌿।

| | |
|---|---|
| 𑌅𑌥 | அதற்குப் (கிருஷ்ணசுவாமிசொன்னதற்கு) பிறகு |
| 𑌪𑌾𑌰𑍍𑌥𑌃 | அர்சுனன் |
| 𑌤𑌤𑍍𑌰 | அவ்விடத்தில் |
| 𑌉𑌭𑌯𑍋𑌃𑌸𑍇𑌨𑌯𑍋𑌰𑌪𑌿 | இருதாரத்துச் சேனைகளிலும் |
| 𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌨𑍍 | இருக்கிற |
| 𑌪𑌿𑌤𑍄𑌨𑍍 | தகப்பன்மாரையும் |
| 𑌪𑌿𑌤𑌾𑌮𑌹𑌾𑌨𑍍 | பாட்டன்மாரையும் |
| 𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑌾𑌨𑍍 | குருக்களையும் |
| 𑌮𑌾𑌤𑍁𑌲𑌾𑌨𑍍 | அம்மான்மாரையும் |
| 𑌭𑍍𑌰𑌾𑌤𑍄𑌨𑍍 | சகோதரர்களையும் |
| 𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌨𑍍 | புத்திரர்களையும் |
| 𑌪𑍌𑌤𑍍𑌰𑌾𑌨𑍍 | பேரன்மாரையும் |
| 𑌸𑌖𑍀𑌨𑍍 | சிநேகிதர்களையும் |
| 𑌤𑌥𑌾 | அப்படியே |
| 𑌶𑍍𑌵𑌶𑍁𑌰𑌾𑌨𑍍 | மாமனர்களையும் |
| 𑌸𑍁𑌹𑍃𑌦𑌶𑍍𑌚𑍈𑌵 | பிரதிப் பிரயோஜநத்தை யெதிர்பாராத சிநேகிதர்களையும் |
| 𑌅𑌪𑌶𑍍𑌯𑌤𑍍 | பார்த்தான். |

அதற்குப்பிறகு அர்சுனன் அவ்விடத்தி லிருதாரத்துச் சேனைகளிலுமிருக்கிற பூரிசிரவஸ்போலொத்த தகப்பன் முறைமையுள்ளவர்களையும், பீஷ்மனைப்போலொத்த பாட்டன் முறைமை யுள்ளவர்களையும், துரோணசாரியனைப் போலொத்த குருக்களையும்; சல்லியன்போ லொத்த தாய்மாமன் முறைமை யுள்ளவர்களையும், துரியோதனன்போலொத்த சகோதர முறைமை யுள்ளவர்களையும், துரியோதனன் குமாரன் இலக்ஷ்மணன் போலொத்த புத்திரன் முறைமை யுள்ளவர்களையும், இலக்ஷ்மணன் முதலிய புத்திரர்களுடைய புத்திரர்களான பேரன் முறைமை யுள்ளவர்களையும், கிருதவர்மாப்போலொத்த சிநேகிதர்களையும், அப்படியே துருபதராஜன்போலொத்த பெண்கொடுத்த மாமனர்களையும், பிரயோசனத்தை யடையலாமென்கிற வெண்ணத்தினல் சிநேகஞ் செய்கிறவர்களைப்போ லல்லாத சிநேகிதர்களையும் பார்த்தான். (உசு-உஎ)

---

𑌤𑌾𑌨𑍍𑌸𑌮𑍀𑌕𑍍𑌷𑍍𑌯 𑌸 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍𑌬𑌨𑍍𑌧𑍂𑌨𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌨𑍍॥

உஅ. 𑌕𑍃𑌪𑌯𑌾 𑌪𑌰𑌯𑌾𑌵𑌿𑌷𑍍𑌟𑍋 𑌵𑌿𑌷𑍀𑌦𑌨𑍍𑌨𑌿𑌦𑌮𑌬𑍍𑌰𑌵𑍀𑌤𑍍।

| | |
|---|---|
| सः कौन्तेयः | குந்திபுத்திரனை அந்த அர்சுனன் |
| अवस्थितान् | நிற்கிற |
| तान् | அந்த |
| सर्वान् | எல்லா |
| बन्धून् | பந்துக்களை |
| समीक्ष्य | பார்த்து |
| परया | அதிகமான |
| कृपया | தயவுடன் |
| आविष्टः | கூடினவனும் |
| विषीदन् | விசனமடைந்தவனும் |
| इदं | இதை (அடியில்வரும்வாக்கியத்தை) |
| अब्रवीत् | சொன்னான். |

அந்த அர்சுனனனவன் யுத்தகளத்தில் நிற்கிற அந்த எல்லாப் பந்துக்களையும் பார்த்து, அதிகமான தயவுடன் கூடினவனும், துக்கத்தை யடைந்தவனும் அடியில்வரும் வாக்கியத்தைச் சொன்னான். (௨௭-௨௮)

---

अर्जुन उवाच.

दृष्ट्वेमं स्वजनं कृष्ण युयुत्सुं समुपस्थितम्॥

௨௯. सीदन्ति मम गात्राणि मुखं च परिशुष्यति।
वेपथुश्च शरीरे मे रोमहर्षश्च जायते॥

௩௦. गाण्डीवं स्रंसते हस्तात्त्वक्चैव परिदह्यते।
न च शक्नोम्यवस्थातुं भ्रमतीव च मे मनः॥

௩௧. निमित्तानि च पश्यामि विपरीतानि केशव।

| | |
|---|---|
| अर्जुन उवाच | அர்சுனன் சொல்வது |
| हे कृष्ण * | ஓ! கிருஷ்ண! |
| युयुत्सुं | யுத்தஞ்செய்ய விச்சையுடையவும் |
| समुपस्थितं | வந்திருக்கிறவும் |
| इमं स्वजनं | இந்தப்பந்துக்களை |
| दृष्ट्वा | பார்த்து |
| मम | என்னுடைய |

---

* (धा) कृषि - பூமி, ண - சுகம், பூருபமாயும் சுகரூபமாயு மிருக்கிறதால், கிருஷ்ணனென்றும் - நீருண்ட மேகம்போற்கறுத்த வருணத்தை யுடையவனானதால் கிருஷ்ணனென்றும் பெயர். (सहस्रनामभाष्यं ௨௫ - வது பக்கம் பார்க்க.)

| | |
|---|---|
| காத்ராணி | அவயவங்கள் |
| ஸீதந்தி | சோர்வையடைகின்றன |
| முகம் ச | வாயும் |
| பரிசுஷ்யதி | வறண்டுபோகிறது |
| மே | என்னுடைய |
| சரீரே | தேகத்தில் |
| வேபது: ச | நடுக்கமும் |
| ரோமஹர்ஷ: ச | மயிர்க்கூச்சலும் |
| ஜாயதே | உண்டாகிறது |
| காண்டீவம் | காண்டீவமென்கிற என்னுடைய வில்லானது |
| ஹஸ்தாத் | கையிலிருந்து |
| ஸ்ரம்ஸதே | நழுவுகிறது |
| த்வக் ச | தேகத்தின் மேல்தோலும் |
| பரிதஹ்யதே | தபிக்கிறது (எரிகிறது) |
| அவஸ்தாதும் | (இரதத்தில்) இருக்கிறதற்கு |
| ந சக்னோமி | சக்தியற்றவனாயிருக்கிறேன் |
| மே | என்னுடைய |
| மந: | மனதானது |
| ப்ரமதீவ | பிரமையடைவதுபோலிருக்கின்றது |
| ஹே கேசவ* | ஓ! கேசவா! |
| விபரீதானி நிமித்தானி | அபசகுனங்களையும் |
| பச்யாமி | காண்கிறேன். |

அர்சுனன் கிருஷ்ணசுவாமியை நோக்கிச் சொல்வது. ஓ! கிருஷ்ண! யுத்தஞ்செய்யும் இச்சையுடன் வந்திருக்கிற இந்தப்பந்துக்களைப் பார்த்து என்னுடைய அவயவங்கள் சோர்வையடைகின்றன. வாயும் வறண்டு போகிறது. என்னுடைய தேகத்தில் நடுக்கமும் மயிர்க்கூச்சலும் உண்டாகிறது. காண்டீவங் கையிலிருந்து நழுவுகிறது. தேகத்தின் மேற்தோலும் எரிகிறது. இரதத்தி லிருக்கிறதற்கு சக்தியற்றவனா யிருக்கிறேன். என்னுடைய மனதானது பிரமையை யடைவது

* (ஸ்ரீ) அழகான மயிர்களையுடையவனானதால் கேசவனென்றும், கேசி - என்கிற அசுரனைக் கொன்றதினால், கேசவனென்றும், க:=பிர்மா, அ:=விஷ்ணு ஈச:=உருத்திரன், இம்மூவரையும், வ=சுவாதீனத்தில் வைத்திருப்பவனானதாற் கேசவனென்றும், க:=பிர்மா, ஈச:=உருத்திரன், இவர்களை (சிருஷ்டியாதி காரியங்களில்) பிரவிருத்தித்திருக்கும்படி யேவுகிறவனானதால் கேசவனென்றும் பெயர்வந்தது. (விஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்யம், உஉ-உ௩-பக்கங்களைப்பார்க்க.)

போலிருக்கிறது. ஓ! கேசவா! அபசகுனங்களையும் காண்கிறேன். (௨௮-௨௯-௩௦-௩௧.)

---

𑌨𑌚𑌶𑍍𑌰𑍇𑌯𑍋𑌨𑍁𑌪𑌶𑍍𑌯𑌾𑌮𑌿 𑌹𑌤𑍍𑌵𑌾𑌸𑍍𑌵𑌜𑌨𑌮𑌾𑌹𑌵𑍇॥

௩௨. 𑌨𑌕𑌾𑌂𑌕𑍍𑌷𑍇𑌵𑌿𑌜𑌯𑌂𑌕𑍃𑌷𑍍𑌣 𑌨𑌚𑌰𑌾𑌜𑍍𑌯𑌂𑌸𑍁𑌖𑌾𑌨𑌿𑌚।
𑌕𑌿𑌂𑌨𑍋𑌰𑌾𑌜𑍍𑌯𑍇𑌨𑌗𑍋𑌵𑌿𑌨𑍍𑌦 𑌕𑌿𑌂𑌭𑍋𑌗𑍈𑌰𑍍𑌜𑍀𑌵𑌿𑌤𑍇𑌨𑌵𑌾॥

௩௩. 𑌯𑍇𑌷𑌾𑌮𑌰𑍍𑌥𑍇𑌕𑌾𑌂𑌕𑍍𑌷𑌿𑌤𑌂𑌨𑍋 𑌰𑌾𑌜𑍍𑌯𑌂𑌭𑍋𑌗𑌾𑌸𑍍𑌸𑍁𑌖𑌾𑌨𑌿𑌚।
𑌤𑌇𑌮𑍇𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌯𑍁𑌦𑍍𑌧𑍇 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌂𑌸𑍍𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾𑌧𑌨𑌾𑌨𑌿𑌚॥

௩௪. 𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑌾𑌃𑌪𑌿𑌤𑌰𑌃𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌸𑍍𑌤𑌥𑍈𑌵𑌚𑌪𑌿𑌤𑌾𑌮𑌹𑌾𑌃।
𑌮𑌾𑌤𑍁𑌲𑌾𑌶𑍍𑌶𑍍𑌵𑌶𑍁𑌰𑌾𑌃𑌪𑍌𑌤𑍍𑌰𑌾𑌶𑍍𑌶𑍍𑌯𑌾𑌲𑌾𑌸𑍍𑌸𑌮𑍍𑌬𑌨𑍍𑌧𑌿𑌨𑌸𑍍𑌤𑌥𑌾॥

| | |
|---|---|
| 𑌆𑌹𑌵𑍇 | யுத்தத்தில் |
| 𑌸𑍍𑌵𑌜𑌨𑌂 | சொந்தபந்துஜனங்களை |
| 𑌹𑌤𑍍𑌵𑌾 | கொன்று |
| 𑌅𑌨𑍁 | பின்பு |
| 𑌶𑍍𑌰𑍇𑌯𑌃 | சுபபலத்தை |
| 𑌨𑌪𑌶𑍍𑌯𑌾𑌮𑌿 | நான் காண்கிறதில்லை |
| 𑌹𑍇𑌕𑍃𑌷𑍍𑌣 | ஓ! கிருஷ்ணா |
| 𑌵𑌿𑌜𑌯𑌂 | வெற்றியையாவது |
| 𑌰𑌾𑌜𑍍𑌯𑌂 | இராச்சியத்தையாவது |
| 𑌨𑌕𑌾𑌂𑌕𑍍𑌷𑍇 | நான் விரும்புகிறதில்லை |
| 𑌸𑍁𑌖𑌾𑌨𑌿𑌚 | சுகங்களையும் |
| 𑌨 | விரும்புகிறதில்லை |
| 𑌹𑍇𑌗𑍋𑌵𑌿𑌨𑍍𑌦* | ஓ! கோவிந்தா! |
| 𑌨𑌃 | எங்களுக்கு |
| 𑌰𑌾𑌜𑍍𑌯𑍇𑌨 | இராச்சியத்தினாலே |
| 𑌕𑌿𑌂 | என்ன? (பிரயோஜனம்) |
| 𑌭𑍋𑌗𑍈𑌃 | போகங்களினாலாவது |
| 𑌜𑍀𑌵𑌿𑌤𑍇𑌨𑌵𑌾 | உயிர்வாழ்வதினாலாவது |
| 𑌕𑌿𑌂 | என்ன? (பிரயோஜனம்) |
| 𑌨𑌃 | எங்களுக்கு |

---

* (𑌸𑍍𑌵) வராகரூபமெடுத்து ஜலத்தில் மூழ்கியிருந்த, 𑌗𑍋=பூமியை, 𑌵𑌿𑌨𑍍𑌦=அடைந்தவர் (என்றால் வெளிப்படுத்தினவர்) ஆனதால் கோவிந்தனென்றுபெயர் (விஷ்ணு 𑌸𑌹𑌸𑍍𑌰𑌨𑌾𑌮𑌭𑌾𑌷𑍍𑌯𑌂 ௩௩-வது பக்கம் பார்க்க.)

| | |
|---|---|
| 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌅𑌰𑍍𑌥𑍇 | யார்பொருட்டு |
| 𑌰𑌾𑌜𑍍𑌯𑌂 | இராச்சியமானது |
| 𑌕𑌾𑌂𑌕𑍍𑌷𑌿𑌤𑌂 | விரும்பப்படத்தக்கதோ |
| 𑌭𑍋𑌗𑌾𑌃 | போகங்களும் |
| 𑌸𑍁𑌖𑌾𑌨𑌿𑌚 | சுகங்களும் |
| (𑌯𑍇𑌷𑌾𑌮𑌰𑍍𑌥𑍇 𑌕𑌾𑌂𑌕𑍍𑌷𑌿𑌤𑌾𑌨𑌿) | யார்பொருட்டு விரும்பத்தக்கவைகளோ |
| 𑌤𑍇 | அப்பேர்க்கொத்த |
| 𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑌾𑌃 | குருக்கள் |
| 𑌪𑌿𑌤𑌰𑌃 | தகப்பன்மார் |
| 𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌃 | புத்திரர்கள் |
| 𑌤𑌥𑍈𑌵𑌚 | அப்படியே |
| 𑌪𑌿𑌤𑌾𑌮𑌹𑌾𑌃 | பாட்டன்மார் |
| 𑌮𑌾𑌤𑍁𑌲𑌾𑌃 | அம்மான்மார் |
| 𑌶𑍍𑌵𑌶𑍁𑌰𑌾𑌃 | மாமனார்கள் |
| 𑌪𑍌𑌤𑍍𑌰𑌾𑌃 | பேரன்மார் |
| 𑌸𑍍𑌯𑌾𑌲𑌾𑌃 | மைத்துனன்மார் |
| 𑌤𑌥𑌾 | அப்படியே |
| 𑌸𑌂𑌬𑌂𑌧𑌿𑌨𑌃 | சம்பந்திகள் |
| 𑌇𑌮𑍇 | இவர்களெல்லோரும் |
| 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌨𑍍 | உயிரையும் |
| 𑌧𑌨𑌾𑌨𑌿𑌚 | பொருள்களையும் |
| 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 | விட்டு (விடத்துணிந்து) |
| 𑌯𑍁𑌦𑍍𑌧𑍇 | யுத்தகளத்தில் |
| 𑌅𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌃 | நிற்கிறார்கள். |

யுத்தத்தில் சொந்தப் பந்துக்களைக்கொன்று பின்பு (யாதொரு) சுப பலத்தையும் நான் காண்கிறதில்லை. ஓ! கிருஷ்ணா! வெற்றியையாவது இராச்சியத்தை யாவது சுகங்களையாவது நான் விரும்புகிறதில்லை. ஓ! கோவிந்தா! எங்களுக்கு இராச்சியத்தினாலாவது போகங்களினாலாவது உயிர்வாழ்வதினாலாவது, என்னபிரயோஜனம்? எங்களுக்கு இராச்சியமும் போகங்களும் சுகங்களும் யார்பொருட்டு விரும்பத்தக்கவைகளோ அப்பேர்க்கொத்த குருக்கள் தகப்பன்மார் புத்திரர்கள் அப்படியே பாட்டன்மார் அம்மான்மார் மாமனார்கள் பேரன்மார் மைத்துனன்மார், அப்படியே சம்பந்திகள், இவர்களெல்லோரும் பிராணன்களையும் பொருள்களையும் விட்டு (விடத்துணிந்து) யுத்தகளத்தில் நிற்கிறார்கள். (௩௧-௩௨-௩௩-௩௪.)

௩௫. 𑌏𑌤𑌾𑌨𑍍𑌨 𑌹𑌨𑍍𑌤𑍁𑌮𑌿𑌚𑍍𑌛𑌾𑌮𑌿 𑌘𑍍𑌨𑌤𑍋𑌽𑌪𑌿 𑌮𑌧𑍁𑌸𑍂𑌦𑌨।
𑌅𑌪𑌿 𑌤𑍍𑌰𑍈𑌲𑍋𑌕𑍍𑌯𑌰𑌾𑌜𑍍𑌯𑌸𑍍𑌯 𑌹𑍇𑌤𑍋𑌃 𑌕𑌿𑌂 𑌨𑍁 𑌮𑌹𑍀𑌕𑍃𑌤𑍇॥

| | |
|---|---|
| 𑌹𑍇 𑌮𑌧𑍁𑌸𑍂𑌦𑌨* | ஓ! கிருஷ்ணா! |
| 𑌘𑍍𑌨𑌤𑍋𑌽𑌪𑌿 | (என்னை) கொல்லுகிறவர்களா யிருந்தபோதிலும் |
| 𑌏𑌤𑌾𑌨𑍍 | இவர்களை |
| 𑌤𑍍𑌰𑍈𑌲𑍋𑌕𑍍𑌯𑌰𑌾𑌜𑍍𑌯𑌸𑍍𑌯 | மூன்றுலகத்தின் ராஜ்ஜியாதிபத்தியத்தினுடைய |
| 𑌹𑍇𑌤𑍋𑌰𑌪𑌿 | நிமித்தியத்தினாலும் |
| 𑌹𑌨𑍍𑌤𑍁𑌂 | கொல்வதின்பொருட்டு |
| 𑌨𑍇𑌚𑍍𑌛𑌾𑌮𑌿 | நான் விரும்புகிறதில்லை |
| 𑌮𑌹𑍀𑌕𑍃𑌤𑍇 | பூமிக்காக |
| 𑌕𑌿𑌂 𑌨𑍁 | என்ன? |

ஓ! மதுசூதனா! என்னைக் கொல்லுகிறவர்களா யிருந்தபோதிலும், இவர்களை மூன்றுலகத்தின் ராஜ்ஜியாதி பத்தியத்தினுடைய இலாபத்தின் பொருட்டானாலுங்கூட கொல்வதின் பொருட்டு நான் விரும்புகிறதில்லை. இந்த பூமிக்காக வென்ன? என்றால் இந்த அற்ப இராஜ்ஜியத்தின்பொருட்டா அவர்களை நான் கொல்லவிரும்புவேன்? என்பது தாத்பரியம். (௩௫)

---

௩௬. 𑌨𑌿𑌹𑌤𑍍𑌯 𑌧𑌾𑌰𑍍𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌾𑌨𑍍𑌨𑌃 𑌕𑌾 𑌪𑍍𑌰𑍀𑌤𑌿𑌃 𑌸𑍍𑌯𑌾𑌜𑍍𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨।
𑌪𑌾𑌪𑌮𑍇𑌵𑌾𑌶𑍍𑌰𑌯𑍇𑌦𑌸𑍍𑌮𑌾𑌨𑍍 𑌹𑌤𑍍𑌵𑍈𑌤𑌾𑌨𑌾𑌤𑌤𑌾𑌯𑌿𑌨𑌃॥

| | |
|---|---|
| 𑌹𑍇 𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨† | ஓ! ஜநார்த்தனா! |
| 𑌧𑌾𑌰𑍍𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌾𑌨𑍍 | திருதராஷ்டரனுடைய புத்திரர்களை |
| 𑌨𑌿𑌹𑌤𑍍𑌯 | கொன்று |
| 𑌨𑌃 | எங்களுக்கு |
| 𑌕𑌾 𑌪𑍍𑌰𑍀𑌤𑌿𑌃 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 | என்ன சந்தோஷமாகப்போகிறது? |

---

* (𑌸𑍂) மதுவென்கிற இராக்ஷதனைக் கொன்றவனானதால் மதுசூதனன் (விஷ்ணு 𑌸𑌹𑌸𑍍𑌰𑌨𑌾𑌮 𑌭𑌾𑌷𑍍𑌯ம் பக்கம் ௨௭ - பார்க்க.)

† (𑌸𑍂.) துஷ்டநிக்கிரகம் செய்வதினால் ஜநார்த்தனனென்றும் இகத்திலும் பரத்திலும் சௌக்கியங்களைக் கொடுக்கும்பொருட்டு ஜனங்களால் யாசிக்கப்படுகிறவனாதினால் ஜநார்த்தனனென்றும் பெயர்வந்தது (𑌸𑌹𑌸𑍍𑌰𑌨𑌾𑌮 𑌭𑌾𑌷𑍍𑌯ம் ௩௰-வது பக்கம் பார்க்க.)

| | |
|---|---|
| 𑌆𑌤𑌤𑌾𑌯𑌿𑌨𑌃 * (𑌕𑌵𑌿) | ஆததாயிகளானலும் |
| 𑌏𑌤𑌾𑌨𑍍 | இவர்களை |
| 𑌹𑌤𑍍𑌵𑌾 | கொன்றால் |
| 𑌅𑌸𑍍𑌮𑌾𑌨𑍍 | எங்களை |
| 𑌪𑌾𑌪𑌮𑍇𑌵 | பாபமே |
| 𑌆𑌶𑍍𑌰𑌯𑍇𑌤𑍍 | அடையும். |

ஓ! ஜநார்த்தன! திருதராஷ்டரனுடைய புத்திரர்களைக் கொன்று எங்களுக்கென்ன சந்தோஷமாகப் போகிறது? ஆததாயிகளானலும் (ஆததாயிகளானவர்களைக் கொல்லும் விஷயத்தில் தோஷங்கிடையாதென்று சொல்லக்கூடுமான போதிலும்) இவர்களைக் கொன்றாலெங்களைப் பாபமேயடையும். (ருசு)

---

ருஎ. 𑌤𑌸𑍍𑌮𑌾𑌨𑍍𑌨𑌾𑌰𑍍𑌹𑌾 𑌵𑌯𑌂 𑌹𑌨𑍍𑌤𑍁𑌂 𑌧𑌾𑌰𑍍𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌾𑌨𑍍𑌸𑍍𑌵𑌬𑌾𑌨𑍍𑌧𑌵𑌾𑌨𑍍।
𑌸𑍍𑌵𑌜𑌨𑌂 𑌹𑌿 𑌕𑌥𑌂 𑌹𑌤𑍍𑌵𑌾 𑌸𑍁𑌖𑌿𑌨𑌃 𑌸𑍍𑌯𑌾𑌮 𑌮𑌾𑌧𑌵॥

| | |
|---|---|
| 𑌮𑌾𑌧𑌵 | ஓ! மாதவா! |
| 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 | ஆகையினாலே |
| 𑌵𑌯𑌂 | நாங்கள் |
| 𑌸𑍍𑌵𑌬𑌾𑌨𑍍𑌧𑌵𑌾𑌨𑍍 | பந்துக்களோடுகூடிய |
| 𑌧𑌾𑌰𑍍𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌾𑌨𑍍 | திருதராஷ்டரனுடைய புத்திரர்களை |
| 𑌹𑌨𑍍𑌤𑍁𑌂 | கொல்வதற்கு |

---

* (𑌶𑍍𑌰𑍀) (𑌶𑍍𑌲𑍋) 𑌅𑌗𑍍𑌨𑌿𑌦𑍋 𑌗𑌰𑌦𑌶𑍍𑌚𑍈𑌵
𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌪𑌾𑌣𑌿𑌰𑍍𑌧𑌨𑌾𑌪𑌹𑌃।
𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌦𑌾𑌰𑌾𑌪𑌹𑌰𑍍𑌤𑌾 𑌚
𑌷𑌡𑍇𑌤𑍇 𑌆𑌤𑌤𑌾𑌯𑌿𑌨𑌃॥
𑌆𑌤𑌤𑌾𑌯𑌿𑌨𑌮𑌾𑌯𑌾𑌨𑍍𑌤𑌂
𑌹𑌨𑍍𑌯𑌾𑌦𑍇𑌵𑌾𑌵𑌿𑌚𑌾𑌰𑌯𑌨𑍍।
𑌨𑌾𑌤𑌤𑌾𑌯𑌿𑌵𑌧𑍇 𑌦𑍋𑌷𑍋
𑌹𑌨𑍍𑌤𑍁𑌰𑍍𑌭𑌵𑌤𑌿 𑌕𑌶𑍍𑌚𑌨॥ (பத்மபுராணம் சிருஷ்டிகாண்டம் ருக-ம் அத்தியாயம் பார்க்க.)

(வீட்டுக்கு) நெருப்பு வைத்தவன், (அன்னத்தில்) விஷங்கலந்தவன், ஆயுதத்தினற் கொல்லவந்தவன், பொருளை யபகரித்தவன், பூமியை யபகரித்தவன், மனைவியை யபகரித்தவன் இவ்வாறு பெயரும் ஆததாயிகளென்று சொல்லப்படுவார்கள்.

எதிர்ப்பட்ட ஆததாயிகளை விசாரிக்காமலே கொல்லவேண்டியது. ஆததாயிகளைக் கொன்றவனுக்கு யாதொரு தோஷமு மில்லை.

(வ்யா) இந்த முதற்சுலோகத்திற் சொன்ன ஆறுவிதச்செய்கைகளும் துரியோதனுதிகளால் பாண்டவர்கள் விஷயத்திற் செய்யப்பட்டன. ஆனதால் ஆததாயிகளென்று சொல்லப்பட்டார்கள். (மகாபாரதம் ஆதிபருவம் கஉஅ - கசஅ, சபாபர்வம் எசு - இந்த அத்தியாயங்களைப்பார்க்க. (இந்த அத்தியாயக்கணக்கு கல்க்கத்தா புஸ்தகப்படி)

| | |
|---|---|
| 𑌨𑌾𑌰𑍍𑌹𑌾𑌃 | யோக்கியர்களல்ல |
| 𑌸𑍍𑌵𑌜𑌨𑌂 | பந்துக்களை |
| 𑌹𑌤𑍍𑌵𑌾 | கொன்று |
| 𑌕𑌥𑌂 | எப்படி |
| 𑌸𑍁𑌖𑌿𑌨𑌃 | சுகத்தையுடையவர்களாய் |
| 𑌸𑍍𑌯𑌾𑌮 | ஆகுவோம். |

ஓ! மாதவா! ஆகையால் பந்துக்களோடு கூடிய திருதராஷ்டர புத்திரர்களைக் கொல்வதற்கு நாங்கள் யோக்கியர்கள் அல்ல. பந்து ஜனங்களைக் கொன்று எப்படி சுகத்தை யுடையவர்களா யாகுவோம்? (௩௭)

---

௩௮. 𑌯𑌦𑍍𑌯𑌪𑍍𑌯𑍇𑌤𑍇 𑌨 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌲𑍋𑌭𑍋𑌪𑌹𑌤𑌚𑍇𑌤𑌸𑌃।
𑌕𑍁𑌲𑌕𑍍𑌷𑌯𑌕𑍃𑌤𑌂 𑌦𑍋𑌷𑌂 𑌮𑌿𑌤𑍍𑌰𑌦𑍍𑌰𑍋𑌹𑍇 𑌚 𑌪𑌾𑌤𑌕𑌂॥

௩௯. 𑌕𑌥𑌂 𑌨 𑌜𑍍𑌞𑍇𑌯𑌮𑌸𑍍𑌮𑌾𑌭𑌿𑌃 𑌪𑌾𑌪𑌾𑌦𑌸𑍍𑌮𑌾𑌨𑍍𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌿𑌤𑍁𑌮𑍍।
𑌕𑍁𑌲𑌕𑍍𑌷𑌯𑌕𑍃𑌤𑌂 𑌦𑍋𑌷𑌂 𑌪𑍍𑌰𑌪𑌶𑍍𑌯𑌦𑍍𑌭𑌿𑌰𑍍𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨॥

| | |
|---|---|
| 𑌲𑍋𑌭𑍋𑌪𑌹𑌤𑌚𑍇𑌤𑌸𑌃 | ஆசையினால் விவேகமற்றுப் போயிருக்கிற மனதையுடைய |
| 𑌏𑌤𑍇 | இவர்கள் (துரியோதனாதிகள்) |
| 𑌕𑍁𑌲𑌕𑍍𑌷𑌯𑌕𑍃𑌤𑌂𑌦𑍋𑌷𑌂 | குலநாசத்தினாலுண்டாகும் தோஷத்தையும் |
| 𑌮𑌿𑌤𑍍𑌰𑌦𑍍𑌰𑍋𑌹𑍇 | மித்திரதுரோகத்தில் |
| 𑌪𑌾𑌤𑌕𑌂𑌚 | பாதகத்தையும் |
| 𑌯𑌦𑍍𑌯𑌪𑌿 𑌨𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 | தெரிந்துகொள்ளாமற் போனபோதிலும் |
| 𑌕𑍁𑌲𑌕𑍍𑌷𑌯𑌕𑍃𑌤𑌂 | குலநாசத்தினா லுண்டாகும் |
| 𑌦𑍋𑌷𑌂 | பாபத்தை |
| 𑌪𑍍𑌰𑌪𑌶𑍍𑌯𑌦𑍍𑌭𑌿𑌃 | அறிகிற |
| 𑌅𑌸𑍍𑌮𑌾𑌭𑌿𑌃 | எங்களால் |
| 𑌅𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌪𑌾𑌪𑌾𑌤𑍍 | இந்தப்பாவத்தினின்றும் |
| 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌿𑌤𑍁𑌮𑍍 | நிவிர்த்தித்துக்கொள்ளும்பொருட்டு |
| 𑌹𑍇𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨 | ஓ! ஜநார்த்தனா! |
| 𑌕𑌥𑌂 | எப்படி |
| 𑌨𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 | தெரிந்துக்கொள்ளாமற்போகக்கூடும். |

(இராஜ்ஜிய) ஆசையினால் விவேகமற்றுப் போயிருக்கிற மனதை யுடைய துரியோதனாதிகள், குலநாசத்தினா லுண்டாகும் பாபத்தையும் மித்திர துரோகத்தினா லுண்டாகும் பாதகத்தையும் தெரிந்து கொள்ளாமற் போனபோதிலும், குலநாசத்தினா லுண்டாகும் பாவத்தை யறி

ந்திருக்கிற எங்களாலிந்தப் பாவத்திலிருந்து நிவிர்த்தித்துக்கொள்ளும் பொருட்டு ஓ! ஜநார்த்தந! எப்படித் தெரிந்துகொள்ளாமற் போகக்கூடும்? (௩௮-௩௯)

---

௪௦. 𑌕𑍁𑌲𑌕𑍍𑌷𑌯𑍇 𑌪𑍍𑌰𑌣𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌕𑍁𑌲𑌧𑌰𑍍𑌮𑌾𑌃 𑌸𑌨𑌾𑌤𑌨𑌾𑌃।
𑌧𑌰𑍍𑌮𑍇 𑌨𑌷𑍍𑌟𑍇 𑌕𑍁𑌲𑌂 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌮𑌧𑌰𑍍𑌮𑍋𑌽𑌭𑌿𑌭𑌵𑌤𑍍𑌯𑍁𑌤॥

௪௧. 𑌅𑌧𑌰𑍍𑌮𑌾𑌭𑌿𑌭𑌵𑌾𑌤𑍍𑌕𑍃𑌷𑍍𑌣 𑌪𑍍𑌰𑌦𑍁𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌕𑍁𑌲𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌯𑌃।
𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌷𑍁 𑌦𑍁𑌷𑍍𑌟𑌾𑌸𑍁 𑌵𑌾𑌰𑍍𑌷𑍍𑌣𑍇𑌯 𑌜𑌾𑌯𑌤𑍇 𑌵𑌰𑍍𑌣𑌸𑌂𑌕𑌰𑌃॥

௪௨. 𑌸𑌂𑌕𑌰𑍋 𑌨𑌰𑌕𑌾𑌯𑍈𑌵 𑌕𑍁𑌲𑌘𑍍𑌨𑌾𑌨𑌾𑌂 𑌕𑍁𑌲𑌸𑍍𑌯 𑌚।
𑌪𑌤𑌨𑍍𑌤𑌿 𑌪𑌿𑌤𑌰𑍋 𑌹𑍍𑌯𑍇𑌷𑌾𑌂 𑌲𑍁𑌪𑍍𑌤𑌪𑌿𑌣𑍍𑌡𑍋𑌦𑌕𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌃॥

௪௩. 𑌦𑍋𑌷𑍈𑌰𑍇𑌤𑍈𑌃 𑌕𑍁𑌲𑌘𑍍𑌨𑌾𑌨𑌾𑌂 𑌵𑌰𑍍𑌣𑌸𑌂𑌕𑌰𑌕𑌾𑌰𑌕𑍈𑌃।
𑌉𑌤𑍍𑌸𑌾𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌜𑌾𑌤𑌿𑌧𑌰𑍍𑌮𑌾𑌃 𑌕𑍁𑌲𑌧𑌰𑍍𑌮𑌾𑌶𑍍𑌚 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌾𑌃॥

௪௪. 𑌉𑌤𑍍𑌸𑌨𑍍𑌨𑌕𑍁𑌲𑌧𑌰𑍍𑌮𑌾𑌣𑌾𑌂 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌣𑌾𑌂 𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨।
𑌨𑌰𑌕𑍇𑌨𑌿𑌯𑌤𑌂 𑌵𑌾𑌸𑍋 𑌭𑌵𑌤𑍀𑌤𑍍𑌯𑌨𑍁𑌶𑍁𑌶𑍍𑌰𑍁𑌮॥

| | |
|---|---|
| 𑌕𑍁𑌲𑌕𑍍𑌷𑌯𑍇 | குலம்நாசமடைந்தால் |
| 𑌸𑌨𑌾𑌤𑌨𑌾𑌃 | அநாதியாயிருக்கிற |
| 𑌕𑍁𑌲𑌧𑌰𑍍𑌮𑌾𑌃 | குலாசாரங்கள் |
| 𑌪𑍍𑌰𑌣𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 | முழுதும் நாசமடையும் |
| 𑌧𑌰𑍍𑌮𑍇 𑌨𑌷𑍍𑌟𑍇 | ஆசாரம் நசித்தால் |
| 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌂𑌕𑍁𑌲𑌂 | குலமுழுமையையும் |
| 𑌅𑌧𑌰𑍍𑌮𑌃 | அநாசாரமானது |
| 𑌅𑌭𑌿𑌭𑌵𑌤𑌿 | வியாபிக்கும் |
| 𑌹𑍇 𑌕𑍃𑌷𑍍𑌣 | ஓ! கிருஷ்ண! |
| 𑌅𑌧𑌰𑍍𑌮𑌾𑌭𑌿𑌭𑌵𑌾𑌤𑍍 | அநாசாரம் வியாபித்தால் |
| 𑌕𑍁𑌲𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌯𑌃 | குலஸ்திரீகள் |
| 𑌪𑍍𑌰𑌦𑍁𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 | பழிப்படைவார்கள் |
| 𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌷𑍁 𑌦𑍁𑌷𑍍𑌟𑌾𑌸𑍁 | பெண்கள் பழிப்படைந்தால் |
| 𑌵𑌰𑍍𑌣𑌸𑌂𑌕𑌰𑌃 𑌜𑌾𑌯𑌤𑍇 | ஒருஜாதியுடன் மற்றொருஜாதியின் கலப்பானது உண்டாகும். |
| 𑌹𑍇 𑌵𑌾𑌰𑍍𑌷𑍍𑌣𑍇𑌯* | ஓ! கிருஷ்ண! |

* (ஸ்வா) வசுதேவருடைய குலமாகிய விருஷ்ணிகுலத்தி லவதரித்தபடியால் வார்ஷ்ணேய ரென்று பெயர்வந்தது.

| | |
|---|---|
| 𑌸𑌂𑌕𑌰𑌃 | ஜாதிசேர்க்கையானது |
| 𑌕𑌲𑌘𑍍𑌨𑌾𑌨𑌾𑌂 | குலநாசஞ் செய்தவர்களுக்கும் |
| 𑌕𑌲𑌸𑍍𑌯 𑌚 | குலத்திற்கும் |
| 𑌨𑌰𑌕𑌾𑌯𑍈𑌵 | நரகஹேதுவேயாகும் |
| 𑌏𑌷𑌾𑌂 | இக்குலநாசம் செய்தவர்களுடைய |
| 𑌪𑌿𑌤𑌰𑌃 | பிதுருக்கள் |
| 𑌲𑍁𑌪𑍍𑌤𑌪𑌿𑌣𑍍𑌡𑍋𑌦𑌕𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌃 | பிண்டோதகக் கிரியைகளை இழந்து |
| 𑌪𑌤𑌨𑍍𑌤𑌿 | (நரகத்தில்) விழுவார்கள் |
| 𑌵𑌰𑍍𑌣𑌸𑌂𑌕𑌰𑌕𑌾𑌰𑌕𑍈𑌃 | ஜாதிச்சேர்க்கை யுண்டாகும்படிசெய்த |
| 𑌕𑌲𑌘𑍍𑌨𑌾𑌨𑌾𑌂 | குலத்தைக் கெடுத்தவர்களுடைய |
| 𑌏𑌤𑍈𑌃 | இந்த |
| 𑌦𑍋𑌷𑍈𑌃 | பாபங்களினலே |
| 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌾𑌃 | அனுதியாகவிருக்கிற |
| ஜாதி𑌧𑌰𑍍𑌮𑌾𑌃 | ஜாதியாசாரங்களும் |
| 𑌕𑌲𑌧𑌰𑍍𑌮𑌾𑌶𑍍𑌚 | குலாசாரங்களும் |
| 𑌉𑌤𑍍𑌸𑌾𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 | அழிந்துபோய்விடும் |
| 𑌹𑍇 𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨 | ஓ! ஜநார்த்தன ! |
| 𑌉𑌤𑍍𑌸𑌨𑍍𑌨𑌕𑌲𑌧𑌰𑍍𑌮𑌾𑌣𑌾𑌂 | குலாசாரங்களையிழந்த |
| 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌣𑌾𑌂 | மனிதர்களுக்கு |
| 𑌨𑌰𑌕𑍇 | நரகத்தில் |
| 𑌨𑌿𑌯𑌤𑌂 | எப்பவும் |
| 𑌵𑌾𑌸𑌃 | வாசமானது |
| 𑌭𑌵𑌤𑍀𑌤𑌿 | உண்டாகுமென்று |
| 𑌅𑌨𑍁𑌶𑍁𑌶𑍍𑌰𑍁𑌮 | கேட்டிருக்கிறோம். |

குலம்நாசமடைந்தால் அனுதியாயிருக்கிற குலாசாரங்கள் முழுதும் நாசமடையும். ஆசாரம் நசித்தால் குலமுழுமையையும் அனுசாரமானது வியாபிக்கும். ஓ! கிருஷ்ண! அநாசாரம் வியாபித்தால் குலஸ்திரீகள் பழிப்படைவார்கள். பெண்கள் பழிப்படைந்தால் ஜாதிக் கலப்புண்டாகும் ஓ! கிருஷ்ண! ஜாதிசேர்க்கையானது குலநாசஞ் செய்தவர்களுக்கும் குலத்திற்கும் நரகஹேதுவேயாகும். குலத்தைக் கெடுத்தவர்களுடைய பிதுருக்கள் (தங்களுக்காக அந்தக் குடும்பத்தாரால் செய்யப்படும்) பிண்ட (அன்னத்திறைச் செய்யப்படுமுருண்டை) த்திலேயும் (உதக) ஜலத்தினலேயும் செய்யப்படும் (சிராத்த தர்ப்பணதி) கிரியைகளின லுண்டாகும் பிரயோஜனத்தை இழந்து நரகத்தில் தள்ளப்படுவார்கள். ஜாதிசேர்க்கை யுண்டாகும்படிச் செய்த குலத்தைக் கெடுத்தவர்களுடைய இந்தப் பாவங்களினலே அநாதியாயிருக்கிற

ஜாதியாசாரங்களும் குலாசாரங்களு மழிந்துபோய்விடும். ஓ! ஜனார்த்தன! குலாசாரங்களை யிழந்த மனிதர்களுக்கு நரகத்தி லெப்பவும் வாசமான துண்டாகுமென்று கேட்டிருக்கிறோம். (௪0 - ௪௧ - ௪௨ - ௪௩ - ௪௪.)

---

௪௫. 𑌅𑌹𑍋𑌬𑌤 𑌮𑌹𑌤𑍍𑌪𑌾𑌪𑌂 𑌕𑌰𑍍𑌤𑍁𑌂 𑌵𑍍𑌯𑌵𑌸𑌿𑌤𑌾 𑌵𑌯𑌮𑍍।
𑌯𑌦𑍍𑌰𑌾𑌜𑍍𑌯𑌸𑍁𑌖𑌲𑍋𑌭𑌨 𑌹𑌨𑍍𑌤𑍁𑌂𑌸𑍍𑌵𑌜𑌨𑌮𑍁𑌦𑍍𑌯𑌤𑌾𑌃॥

| | |
|---|---|
| 𑌯𑌤𑍍 * | எந்தக்காரணத்தினலே |
| 𑌵𑌯𑌂 | நாம் |
| 𑌰𑌾𑌜𑍍𑌯𑌸𑍁𑌖𑌲𑍋𑌭𑌨 | இராஜ்ஜிய சுக விருப்பத்தினல் |
| 𑌸𑍍𑌵𑌜𑌨𑌂 | பந்துஜனங்களை |
| 𑌹𑌨𑍍𑌤𑍁𑌂 | கொல்லுகைக்கு |
| 𑌉𑌦𑍍𑌯𑌤𑌾𑌃 | துணிந்தோமோ |
| (𑌤𑌤𑍍) | அந்தக்காரணத்தினலே |
| 𑌮𑌹𑌤𑍍𑌪𑌾𑌪𑌂 | மகாபாபத்தை |
| 𑌕𑌰𑍍𑌤𑍁𑌂 | செய்ய |
| 𑌵𑍍𑌯𑌵𑌸𑌿𑌤𑌾𑌃 | நிச்சயித்தோம் |
| 𑌅𑌹𑍋 | ஆச்சரியம்! |
| 𑌬𑌤 | கஷ்டம்! |

எந்தக் காரணத்தினலே நாம் ராஜ்ஜிய சுக விருப்பத்தினல் பந்து ஜனங்களைக் கொல்லத் துணிந்தோமோ அந்தக் காரணத்தினலே மகா பாபத்தைச்செய்ய நிச்சயித்தோம். (இதென்ன) ஆச்சரியம்! (மகா) கஷ்டம். (௪௫)

---

௪௬. 𑌯𑌦𑌿𑌮𑌾𑌮𑌪𑍍𑌰𑌤𑍀𑌕𑌾𑌰 𑌮𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌪𑌾𑌣𑌯𑌃।
𑌧𑌾𑌰𑍍𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌾 𑌰𑌣𑍇 𑌹𑌨𑍍𑌯𑍁𑌸𑍍𑌤𑌨𑍍𑌮𑍇 𑌕𑍍𑌷𑍇𑌮𑌤𑌰𑌂 𑌭𑌵𑍇𑌤𑍍॥

| | |
|---|---|
| 𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌪𑌾𑌣𑌯𑌃 | ஆயுதங்களை யுடைத்தாயிருக்கிற |
| 𑌧𑌾𑌰𑍍𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌾𑌃 | திருதராஷ்டரனுடைய புத்திரர்கள் |
| 𑌅𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 | ஆயுதத்தை யுடைத்தாயிராதவும் |
| 𑌅𑌪𑍍𑌰𑌤𑍀𑌕𑌾𑌰𑌂 | எதிர்க்காதவுமான |
| 𑌮𑌾𑌂 | என்னை |
| 𑌰𑌣𑍇 | யுத்தத்தில் |
| 𑌹𑌨𑍍𑌯𑍁𑌃 𑌯𑌦𑌿 | கொல்லுவார்களானல் |
| 𑌤𑌤𑍍 | அதானது |

| | |
|---|---|
| மே | எனக்கு |
| க்ஷேமதரம் | அதிகக்ஷேமமாக |
| பவேத் | ஆகும். |

ஆயுதங்களை யுடைத்தாயிருக்கிற திருதராஷ்டர புத்திரர்கள் ஆயுதமில்லாமலு மெதிர்க்காமலும் இருக்கிற என்னை யுத்தத்தில் கொல்லுவார்களானால் அதானது எனக்கு அதிக க்ஷேமமாகும். (௪௬)

---

ஸஞ்ஜய உவாச.

௪௭. ஏவமுக்த்வார்ஜுந: ஸங்க்யே ரதோபஸ்த உபாவிசத்।
விஸ்ருஜ்ய ஸசரம் சாபம் சோகஸம்விக்நமாநஸ:॥

| | |
|---|---|
| ஸஞ்ஜய உவாச | சஞ்சயன்சொல்வது |
| அர்ஜுந: | அர்சுனனானவன் |
| ஏவம் | இந்தப்பிரகாரம் |
| உக்த்வா | சொல்லி |
| சோகஸம்விக்நமாநஸ: | துக்கத்தினாலே துடிக்கிற மனதுடையவனாய் |
| ஸசரம் | பாணத்தோடுகூடிய |
| சாபம் | வில்லை |
| விஸ்ருஜ்ய | எறிந்து |
| ஸங்க்யே | யுத்தகளத்தில் |
| ரதோபஸ்தே | இரதத்தில் (தேர்த்தட்டில்) |
| உபாவிசத் | உட்கார்ந்தான். |

சஞ்சயன் திருதராஷ்டரனை நோக்கிச் சொல்வதாவது :— அர்சுனன் இவ்விதமாய்ச்சொல்லித் துக்கத்தினாலே துடிக்கிற மனதை யுடையவனாய் பாணத்தோடுகூடிய வில்லை யெறிந்துவிட்டு யுத்தகளத்தில் இரதத்தில் உட்கார்ந்தான். (௪௭)

இதி ஸ்ரீமத்பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம்
யோகசாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுநஸம்வாதே
அர்ஜுநவிஷாதயோகோ நாம
ப்ரதமோऽத்யாய:.

அர்சுன விஷாதயோகமென்கிற முதலாவது அத்தியாயம்
முற்றிற்று.

---

𑌶𑍍𑌰𑍀𑌰𑌸𑍍𑌤𑍁.

𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑌾𑌰𑌮𑍍𑌭𑌃.

# இரண்டாவது அத்தியாயம்.

𑌸𑌂𑌜𑌯 𑌉𑌵𑌾𑌚.

க. 𑌤𑌂 𑌤𑌥𑌾 𑌕𑍃𑌪𑌯𑌾𑌵𑌿𑌷𑍍𑌟𑌮𑌶𑍍𑌰𑍁𑌪𑍂𑌰𑍍𑌣𑌾𑌕𑍁𑌲𑍇𑌕𑍍𑌷𑌣𑌮𑍍।
𑌵𑌿𑌷𑍀𑌦𑌨𑍍𑌤𑌮𑌿𑌦𑌂 𑌵𑌾𑌕𑍍𑌯𑌮𑍁𑌵𑌾𑌚 𑌮𑌧𑍁𑌸𑍂𑌦𑌨𑌃॥

| | |
|---|---|
| 𑌸𑌂𑌜𑌯 𑌉𑌵𑌾𑌚 | சஞ்சயன்சொல்வது |
| 𑌮𑌧𑍁𑌸𑍂𑌦𑌨𑌃 | கிருஷ்ணசுவாமியானவர் |
| 𑌕𑍃𑌪𑌯𑌾 | தயவுடனே |
| 𑌆𑌵𑌿𑌷𑍍𑌟𑌂 | கூடியிருக்கிறவனும் |
| 𑌅𑌶𑍍𑌰𑍁𑌪𑍂𑌰𑍍𑌣 𑌆𑌕𑍁𑌲𑍇𑌕𑍍𑌷𑌣𑌂 | கண்ணீர் பெருகுகிறவும், விகாரத்தை யடைந் திருக்கிறவுமான கண்களோடு கூடினவனும் |
| 𑌤𑌥𑌾 | அப்படியே |
| 𑌵𑌿𑌷𑍀𑌦𑌨𑍍𑌤𑌂 | துக்கத்தையுடையவனுமான |
| 𑌤𑌂 | அவனை (அர்சுனனைநோக்கி) |
| 𑌇𑌦𑌂𑌵𑌾𑌕𑍍𑌯𑌂 | இந்தவார்த்தையை |
| 𑌉𑌵𑌾𑌚 | சொன்னர். |

சஞ்சயன் திருதராஷ்டரனுக்குச் சொல்வது: — கிருஷ்ணசுவாமியானவர் தயவுடன் கூடியிருக்கிறவனும் கண்ணீர் பெருகுகின்றனவும் விகாரத்தை யடைந்திருக்கின்றனவுமான கண்களோடு கூடினவனு மப்படியே துக்கத்தை யுடையவனுமான அர்சுனனைநோக்கி யினிச் சொல்லப்போகிறவாறு சொன்னர். (க)

---

𑌶𑍍𑌰𑍀 𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚.

உ. 𑌕𑍁𑌤𑌸𑍍𑌤𑍍𑌵𑌾 𑌕𑌶𑍍𑌮𑌲𑌮𑌿𑌦𑌂 𑌵𑌿𑌷𑌮𑍇 𑌸𑌮𑍁𑌪𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑍍।
𑌅𑌨𑌾𑌰𑍍𑌯𑌜𑍁𑌷𑍍𑌟𑌮𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑍍𑌯𑌮𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌕𑌰𑌮𑌰𑍍𑌜𑍁𑌨॥

| | |
|---|---|
| 𑌶𑍍𑌰𑍀 𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚 | கிருஷ்ணசுவாமி சொல்வது |
| 𑌹𑍇 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 | ஓ! அர்சுன! |
| 𑌅𑌨𑌾𑌰𑍍𑌯𑌜𑍁𑌷𑍍𑌟𑌂 | அக்ஞானிகளா லடையத்தக்கதும் |
| 𑌅𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑍍𑌯𑌂 | பரலோகத்திற் கானியானதும் |
| 𑌅𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌕𑌰𑌂 | அபகீர்த்தியை உண்டாக்கத்தக்கதுமான |
| 𑌇𑌦𑌂 𑌕𑌶𑍍𑌮𑌲𑌂 * | இந்த மனக்குழப்பமானது |

---

* (ஸ்ரீ-டீ,வி) மோகம்.

| | |
|---|---|
| 𑌕𑍁𑌤𑌃 | எந்தக் காரணத்தினாலே |
| 𑌵𑌿𑌷𑌮𑍇 | அகாலத்தில் |
| 𑌤𑍍𑌵𑌾 | உன்னை |
| 𑌸𑌮𑍁𑌪𑌸𑍍𑌥𑌿𑌤𑌂 | அடைந்தது. |

கிருஷ்ணசுவாமி யானவர் அர்சுனனை நோக்கிச் சொல்வது:— ஓ! அர்சுனா! அக்ஞானிகளுக் குண்டாகக் கூடியதும் பரலோகத்திற்குக் கெடுதியானதும் அபகீர்த்தியை யுண்டாக்கத் தக்கதுமான இந்த மனக் குழப்பமானது என்ன காரணத்தினா லிந்த அகாலத்தில் (இந்த யுத்த காலத்தில்) உனக்குண்டாச்சுது. (௨)

---

௩. 𑌕𑍍𑌲𑍈𑌬𑍍𑌯𑌂𑌮𑌾𑌸𑍍𑌮𑌗𑌮𑌃𑌪𑌾𑌰𑍍𑌥 𑌨𑍈𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌯𑍍𑌯𑍁𑌪𑌪𑌦𑍍𑌯𑌤𑍇।
𑌕𑍍𑌷𑍁𑌦𑍍𑌰𑌂𑌹𑍃𑌦𑌯𑌦𑍌𑌰𑍍𑌬𑌲𑍍𑌯𑌂 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑍋𑌤𑍍𑌤𑌿𑌷𑍍𑌠𑌪𑌰𑌨𑍍𑌤𑌪॥

| | |
|---|---|
| 𑌪𑌾𑌰𑍍𑌥 | ஓ! அர்சுனா! |
| 𑌕𑍍𑌲𑍈𑌬𑍍𑌯𑌂 | பயத்தை |
| 𑌮𑌾𑌸𑍍𑌮𑌗𑌮𑌃 | அடையாதே |
| 𑌤𑍍𑌵𑌯𑌿 | உன்னிடத்தில் |
| 𑌏𑌤𑌤𑍍 | இதானது (இந்தக் குழப்பமானது) |
| 𑌨𑍋𑌪𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 | தகுந்ததல்ல |
| 𑌪𑌰𑌨𑍍𑌤𑌪 | ஓ! சத்துருவை தபிப்பிக்கிறவனே! |
| 𑌕𑍍𑌷𑍁𑌦𑍍𑌰𑌂 | இழிவான |
| 𑌹𑍃𑌦𑌯𑌦𑍌𑌰𑍍𑌬𑌲𑍍𑌯𑌂 | மன அதைரியத்தை |
| 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 | விட்டு |
| 𑌉𑌤𑍍𑌤𑌿𑌷𑍍𑌠 | எழுந்திரு. |

ஓ! அர்சுனா! பயத்தை அடையாதே. இதுனக்குத் தகுந்ததல்ல. சத்துருவை தபிப்பிக்கிறவனே! இழிவான மன அதைரியத்தை விட்டு எழுந்திரு. (௩)

---

𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚.

௪. 𑌕𑌥𑌂𑌭𑍀𑌷𑍍𑌮𑌮𑌹𑌂𑌸𑌙𑍍𑌖𑍍𑌯𑍇 𑌦𑍍𑌰𑍋𑌣𑌞𑍍𑌚𑌮𑌧𑍁𑌸𑍂𑌦𑌨।
𑌇𑌷𑍁𑌭𑌿𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌯𑍋𑌤𑍍𑌸𑍍𑌯𑌾𑌮𑌿 𑌪𑍂𑌜𑌾𑌰𑍍𑌹𑌾𑌵𑌰𑌿𑌸𑍂𑌦𑌨।

| | |
|---|---|
| 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚 | அர்சுனன் சொல்வது |
| 𑌅𑌰𑌿𑌸𑍂𑌦𑌨 | பகைவரைக்கொல்லும் |
| 𑌮𑌧𑍁𑌸𑍂𑌦𑌨 | மதுசூதனா! |
| 𑌪𑍂𑌜𑌾𑌰𑍍𑌹𑍌 | பூஜிக்கத்தகுந்தவர்களான |
| 𑌭𑍀𑌷𑍍𑌮𑌂 | பீஷ்மாசாரியரையும் |

| | |
|---|---|
| 𑌦𑍍𑌰𑍋𑌣𑌞𑍍𑌚 | துரோணுசாரியரையும் |
| 𑌸𑌂𑌖𑍍𑌯𑍇 | யுத்தத்தில் |
| 𑌅𑌹𑌂 | நான் |
| 𑌇𑌷𑍁𑌭𑌿𑌃 | பாணங்களால் |
| 𑌕𑌥𑌂 | எப்படி |
| 𑌪𑍍𑌰𑌤𑌿𑌯𑍋𑌤𑍍𑌸𑍍𑌯𑌾𑌮𑌿 | எதிர்த்துப் போர்செய்வேன். |

அர்சுனன் சொல்வது:—ஓ! பகைவரைக்கொல்லும் மதுசூதன! பூஜிக்கத் தகுந்தவர்களான பீஷ்மாசாரியர் துரோணுசாரிய ரிவர்களை நான் யுத்தத்திலெதிர்த்து பாணங்களா லெப்படிப் போர்செய்வேன் (எனக்குப் பாட்டனரான பீஷ்மர்பேரிலும் எனக்கு வில்வித்தையைக் கற்பித்த துரோணுசாரியர் பேரிலும் பாணங்களைப் பிரயோகிக்க மனது துணியவில்லை யென்பது கருத்து.) (ச)

---

ரு. 𑌗𑍁𑌰𑍂𑌨𑌹𑌤𑍍𑌵𑌾 𑌹𑌿 𑌮𑌹𑌾𑌨𑍁𑌭𑌾𑌵𑌾𑌨𑍍 𑌶𑍍𑌰𑍇𑌯𑍋 𑌭𑍋𑌕𑍍𑌤𑍁𑌂 𑌭𑍈𑌕𑍍𑌷𑍍𑌯𑌮𑌪𑍀𑌹 𑌲𑍋𑌕𑍇 । 𑌹𑌤𑍍𑌵𑌾𑌰𑍍𑌥𑌕𑌾𑌮𑌾𑌂𑌸𑍍𑌤𑍁 𑌗𑍁𑌰𑍂𑌨𑌿𑌹𑍈𑌵 𑌭𑍁𑌞𑍍𑌜𑍀𑌯 𑌭𑍋𑌗𑌾𑌨𑍍 𑌰𑍁𑌧𑌿𑌰𑌪𑍍𑌰𑌦𑌿𑌗𑍍𑌧𑌾𑌨𑍍॥

| | |
|---|---|
| 𑌮𑌹𑌾𑌨𑍁𑌭𑌾𑌵𑌾𑌨𑍍 | வெகு மாகூதிமைதங்கிய |
| 𑌗𑍁𑌰𑍂𑌨𑍍 | ஆசாரியர்களை |
| 𑌅𑌹𑌤𑍍𑌵𑌾 | கொல்லாமல் |
| 𑌇𑌹 𑌲𑍋𑌕𑍇 | இந்த உலகத்தில் |
| 𑌭𑍈𑌕𑍍𑌷𑍍𑌯𑌂 | பிச்சை யன்னத்தை |
| 𑌭𑍋𑌕𑍍𑌤𑍁𑌮𑌪𑌿 | உண்பதாவது |
| 𑌶𑍍𑌰𑍇𑌯𑌃 | மேலானது |
| 𑌹𑌿 | ஏனென்றால் |
| 𑌅𑌰𑍍𑌥𑌕𑌾𑌮𑌾𑌨𑍍 | பொருளாசையுள்ள |
| 𑌗𑍁𑌰𑍂𑌨𑍍 | ஆசாரியர்களை |
| 𑌹𑌤𑍍𑌵𑌾𑌤𑍁 | கொன்றால் |
| 𑌇𑌹𑍈𑌵 | இவ்விடத்திற்றனே |
| 𑌰𑍁𑌧𑌿𑌰𑌪𑍍𑌰𑌦𑌿𑌗𑍍𑌧𑌾𑌨𑍍 | உதிரத்திலூறிய |
| 𑌭𑍋𑌗𑌾𑌨𑍍 | போகங்களை |
| 𑌭𑍁𑌞𑍍𑌜𑍀𑌯 | உண்கிறவனுவேன். |

வெகு மாகூதிமைதங்கிய ஆசாரியர்களைக் கொல்லாமல் (கொல்வதைப்பார்க்கிலும்) பிச்சையெடுத் துண்பதாவது இந்த உலகத்தில் மேலானது. ஏனென்றால், பொருளாசையுள்ள வாசாரியர்களைக்கொன்று இந்த உலகத்தில் நான் அனுபவிக்கும் போகங்களெல்லாம் (அவர்களுடைய) இரத்தத்தி லூறியதேயாகும்.

(ஸ்ரீ, வி) ஊஹா.நுபாவாந்—ஹரிபக்திமுதலிய குணங்களை யுடையவர்களாகிய இப்படிப்பட்ட பெரியோர்கள், இராஜ்ஜியந் தங்களுக்கு நிலைக்கவேண்டுமென்கிற ஆசைகொண்டு யுத்தத்திற்கு வந்திருக்கிறார்கள். நான் அவர்களென்ன கேட்டபோதிலும் கொடுத்து அவர்களைப் பூஜிக்க வேண்டியவனா யிருக்க அப்படிப் பட்டவர்களிச்சிக்கு மிந்த ராஜ்ஜியத்தை அவர்களைக் கொன்றுவிட்டு நா னனுபவிப்பது தர்மமல்லவென்று அர்சுனன் எண்ணினதாகத் தாற்பரியம்.

(வ்யா) "உதிரத்தி லூறிய போகங்களை யுண்கிறவனாவேன்" என்றால்' இரத்தத்தி லூறிய உணவுக்குரிய பதார்த்தங்கள் எப்படி நாமுண்பதற்கு யோக்கியமல்லவோ அப்படியே குருமுதலிய பெரியோரைக் கொன்று அந்தப் பெரியோர்களுடைய இரத்தச் சிதறுதலா லடையத்தகுந்த இந்த ராஜ்ஜியபோகங்களை நாமனுபவிப்பது யோக்கியமானதல்லவென்பது கருத்து. (௫)

---

சூ. நசைதத்வித்மஃகதரந்நோகரீயோ யத்வாஜயேம யதிவாநோஜயேயு: । யானேவஹத்வா நஜிஜீவிஷாம: தேவஸ்திதா: ப்ரமுகே தார்தராஷ்ட்ரா:॥

| | |
|---|---|
| (வயம்) | நாம் |
| ஜயேம யத்வா | ஜயிப்போமோ |
| தார்தராஷ்ட்ரா: | துரியோதனாதிகள் |
| ந: | எங்களை |
| ஜயேயு:யதிவா | வெல்லுவார்களோ |
| (அநயோ:) | இவ்விரண்டில் |
| ந: | எங்களுக்கு |
| கதரத் | :தானது |
| கரீய: | லாக்கியமானது |
| ஏதத் | 'ன்பதை |
| நவித்ம: | /றியோம் |
| யானேவ | எவர்களை |
| ஹத்வா | கொன்று |
| நஜிஜீவிஷாம: | உயிர்வாழவிரும்போமோ |
| தே | அவர்கள் |
| ப்ரமுகே | எதிரில் |
| அவஸ்திதா: | இருக்கிறார்கள். |

நாம் (துரியோதனாதிகளை) ஜயிப்போமோ துரியோதனாதிகள் எங்களை வெல்லுவார்களோ இவ்விரண்டிலெங்களுக் கெதானது சிலாக்கியமான தென்பதை யறியோம், எவர்களைக்கொன் றுயிர்வாழ விரும்போமோ அவர்க ளெதிரி லிருக்கிறார்கள்.

(ஸூ) நெருங்கிய பந்துக்களான இவ்விருகக்ஷியி லுள்ளவர்களு முயிருடனிருந்து இராஜ்ஜிய போகங்களை யனுபவிப்பது தான் மிகவும் சிலாக்கியமானதேயன்றி சகல பந்துக்களையுங் கொன்றுவிட்டுப் பிறகு மிஞ்சின சிலர்மாத்திரமிருந்து இராஜ்ஜிய போகங்களை யனுபவிப்பது சிலாக்கியமுஞ் சுகமுமல்ல வென்பதும், பிறகு நாம்மட்டும் பிழைத்திருக்க விச்சிக்கமாட்டோ மென்பதும் முக்கியக் கருத்து. (சு)

---

எ. 𑌕𑌾𑌰𑍍𑌪𑌣𑍍𑌯𑌦𑍋𑌷𑍋𑌪𑌹𑌤𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌃 𑌪𑍃𑌚𑍍𑌛𑌾𑌮𑌿 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌧𑌰𑍍𑌮𑌸𑌂
𑌮𑍂𑌢𑌚𑍇𑌤𑌾𑌃 । 𑌯𑌚𑍍𑌛𑍍𑌰𑍇𑌯𑌃 𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑌂 𑌬𑍍𑌰𑍂𑌹𑌿 𑌤𑌨𑍍𑌮𑍇 𑌶𑌿𑌷𑍍𑌯
𑌸𑍍𑌤𑍇𑌽𑌹𑌂 𑌶𑌾𑌧𑌿 𑌮𑌾𑌂 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌪𑍍𑌰𑌪𑌨𑍍𑌨𑌮𑍍 ॥

| | |
|---|---|
| 𑌕𑌾𑌰𑍍𑌪𑌣𑍍𑌯𑌦𑍋𑌷𑍋* 𑌪𑌹𑌤𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌃 | கார்ப்பண்ணியம், தோஷம் இவைகளினால் நசித்துப்போன சுபாவத்தையுடைய |
| 𑌅𑌹𑌂 | நான் |
| 𑌧𑌰𑍍𑌮𑌸𑌂𑌮𑍂𑌢𑌚𑍇𑌤𑌾𑌃 | தருமத்தில் சந்தேகித்த மனதையுடையவனாய் |
| 𑌤𑍍𑌵𑌾𑌂 | உம்மை |
| 𑌪𑍃𑌚𑍍𑌛𑌾𑌮𑌿 | வினவுகிறேன் |
| 𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑌂 | நிச்சயிக்கப்பட்ட |
| 𑌯𑌤𑍍 | எதானது |
| 𑌮𑍇 | எனக்கு |
| 𑌶𑍍𑌰𑍇𑌯𑌃 | சுகமாக |
| 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 | ஆகுமோ |
| 𑌤𑌤𑍍 | அதை |
| 𑌬𑍍𑌰𑍂𑌹𑌿 | சொல்லும் |

---

* (ஸ்ரீ-ஸ்ரீ, வி) அர்ச்சுனன் குருமுதலியவர்களைக் கொன்று நாமுயிர் வாழ்வது யோக்கிய மல்லவென்று படும் விசனமானது கார்ப்பண்ணியமென்று மப்படிப்பட்டவர்களைக் கொல்வதினா லுண்டாகும் பாபமே தோஷமென்றும் தன்னுடைய தற்காலமில்லாமை (அதாவது) சவுரியமில்லாமையைச் சுபாவமென்றுஞ் சொன்னதாக தாற்பரியம்.

| | |
|---|---|
| 𑌤𑍇 | உமக்கு |
| (𑌅𑌹𑌂) | நான் |
| 𑌶𑌿𑌷𑍍𑌯𑌃 | மாணுக்கன் |
| 𑌤𑍍𑌵𑌾𑌂 | உம்மை |
| 𑌪𑍍𑌰𑌪𑌨𑍍𑌨𑌂 | சரணமாகவடைந்த |
| 𑌮𑌾𑌂 | என்னை |
| 𑌶𑌾𑌧𑌿 | தெளிவுறச்செய்யும். |

கார்ப்பண்ணியம், தோஷ மிவைகளினுல் நசித்துப்போன சுபாவத்தையும், தருமத்தில் சந்தேகித்த மனதையுமுடைய நான் உம்மை வினவுகிறேன், எதான தெனக்குச் சுகமாகுமோ அதைச் சொல்லும் உமக்கு நான் மாணுக்கனல்லவா? உம்மைச் சரணமாக வடைந்த வென்னைத் தெளிவை யடையும்படி செய்யும். (எ)

---

அ. 𑌨𑌹𑌿𑌪𑍍𑌰𑌪𑌶𑍍𑌯𑌾𑌮𑌿 𑌮𑌮𑌾𑌪𑌨𑍁𑌦𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑌚𑍍𑌛𑍋𑌕𑌮𑍁𑌚𑍍𑌛𑍋𑌷𑌣𑌮𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌿
𑌯𑌾𑌣𑌾𑌮𑍍 । 𑌅𑌵𑌾𑌪𑍍𑌯𑌭𑍂𑌮𑌾𑌵𑌸𑌪𑌤𑍍𑌨𑌮𑍃𑌦𑍍𑌧𑌂 𑌰𑌾𑌜𑍍𑌯𑌂𑌸𑍁𑌰𑌾𑌣𑌾
𑌮𑌪𑌿𑌚𑌾𑌧𑌿𑌪𑌤𑍍𑌯𑌮𑍍 ॥

| | |
|---|---|
| 𑌭𑍂𑌮𑍌 | பூமியில் |
| 𑌅𑌸𑌪𑌤𑍍𑌨𑌂 | நிகரற்ற அல்லது எதிரியற்ற |
| 𑌋𑌦𑍍𑌧𑌂 | விருத்தியடைந்திருக்கிற |
| 𑌰𑌾𑌜𑍍𑌯𑌂 | இராஜ்ஜியத்தையும் |
| 𑌸𑍁𑌰𑌾𑌣𑌾𑌮𑌾𑌧𑌿𑌪𑌤𑍍𑌯𑌞𑍍𑌚 | தேவேந்திரப்பதவியையும் |
| 𑌅𑌵𑌾𑌪𑍍𑌯𑌾𑌪𑌿 | அடைந்தபோதிலும் |
| 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌾𑌂 | இந்திரியங்களுக்கு |
| 𑌉𑌚𑍍𑌛𑍋𑌷𑌣𑌂 | வறக்ஷியை உண்டாக்குகிற |
| 𑌮𑌮 | என்னுடைய |
| 𑌶𑍋𑌕𑌂 | விசனத்தை |
| 𑌯𑌤𑍍 | எதானது |
| 𑌅𑌪𑌨𑍁𑌦𑍍𑌯𑌾𑌤𑍍 | போக்கடிக்குமோ |
| 𑌤𑌤𑍍 | அதை |
| 𑌨𑌹𑌿𑌪𑍍𑌰𑌪𑌶𑍍𑌯𑌾𑌮𑌿 | நான்காணவில்லை. |

இவ்வுலகத்தில் நிகரற்றதும் (செல்வத்தில்) நிறைந்ததுமான இராஜ்ஜியத்தையும் தேவேந்திர பதவியையு மடைந்தபோதிலும் இந்திரியங்களுக்கு வறக்ஷியை யுண்டாக்குகிற வென்னுடைய விசனத்தை எதானது போக்கடிக்குமோ அதை நான் காணவில்லை. (அ)

---

ஸஞ்ஜய உவாச.

௯. ஏவமுக்த்வா ஹ்ருஷீகேசம் குடாகேச: பரந்தப:|
நயோத்ஸ்ய இதி கோவிந்த முக்த்வா தூஷ்ணீம் பபூவ ஹ||

௧௦. தமுவாச ஹ்ருஷீகேச: ப்ரஹஸந்நிவ பாரத|
ஸேநயோருபயோர்மத்யே விஷீதந்தமிதம் வச:||

| | |
|---|---|
| ஸஞ்ஜய உவாச | சஞ்சயன்சொல்வது |
| பரந்தப: | சத்துருக்களைத்தபிப்பிக்கிற |
| குடாகேச:* | அர்சுனனனவன் |
| ஹ்ருஷீகேசம் | கிருஷ்ணசுவாமியைப்பார்த்து |
| ஏவம் | இந்தப்பிரகாரம் |
| உக்த்வா | சொல்லி |
| (புநரபி) | மறுபடியும் |
| கோவிந்தம் (ப்ரதி) | கிருஷ்ணசுவாமியைநோக்கி |
| நயோத்ஸ்ய இதி | யுத்தஞ்செய்யமாட்டேனென்று |
| உக்த்வா | சொல்லி |
| தூஷ்ணீம்பபூவ ஹ† | மௌனமாயிருந்தான் |
| ஹே பாரத | ஓ! திருதராஷ்டர ராஜாவே! |
| உபயோ: ஸேநயோர்மத்யே | இருசேனைகளின் மத்தியில் |
| விஷீதந்தம் | துக்கத்தையடைந்திருக்கிற |
| தம் | அவனை (அர்சுனனைநோக்கி) |
| ஹ்ருஷீகேச: | கிருஷ்ணசுவாமியானவர் |
| ப்ரஹஸந்நிவ | புன்சிரிப்புள்ளவரைப்போல |
| இதம்வச: | இந்தவாக்கியத்தை |
| உவாச | சொன்னார். |

சஞ்சயன் திருதராஷ்டர மகாராஜாவைப்பார்த்துச் சொல்வது— சத்துருக்களைத் தபிப்பிப்பவனனை அர்சுனனனவன் கிருஷ்ணசுவாமியைப் பார்த்து இந்தப்பிரகாரம் சொல்லி மறுபடியும் கிருஷ்ணசுவாமியை நோக்கி யுத்தஞ்செய்ய மாட்டேனென்று சொல்லி மௌனமாயிருந்தான். ஓ! திருதராஷ்டர மகாராஜாவே! இருசுக்ஷி சேனைகளின் மத்தியில் துக்கத்தை யடைந்திருக்கிற அர்சுனனைநோக்கி கிருஷ்ணசுவாமி

* (ஸா) நித்திரையைச் செயித்தவன்.

† (ஶ்ரீ,வி) இந்த - ஹ—என்பதானது அதிக தைரியமும் பலமுமுள்ள வர்சுன னுக்குங்கூட அதைரியமுண்டானதைப்பற்றி சஞ்சயனுச்சரியப் பட்டானென்பதைக் குறிப்பிடுகிறது.

யானவர் புன்சிரிப்புள்ளவரைப் போல் இந்தவாக்கியத்தை (இனிச் சொல்லப்போகிறதை)ச் சொன்னார். (௯-௧௦)

---

ஸ்ரீ பகவாநுவாச.

௧௧. அசோச்யாநந்வசோசஸ்த்வம் ப்ரஜ்ஞாவாதாம்ச்ச பாஷஸே।
கதாஸூநகதாஸூம்ச்ச நாநுசோசந்தி பண்டிதா:॥

| | |
|---|---|
| ஸ்ரீ பகவாநுவாச | கிருஷ்ணசுவாமி சொல்வது |
| (ஹே அர்ஜுந) | ஓ! அர்சுன! |
| த்வம் | நீ |
| அசோச்யாந் | துக்கப்படத்தகாதவர்களைக்குறித்து |
| அந்வசோச: | துக்கப்படுகிறாய் |
| ப்ரஜ்ஞாவாதாந்* | விவேகிகளுடைய வார்த்தைகளைப்போலொத்த வார்த்தைகளையும் |
| பாஷஸே | பேசுகிறாய் |
| கதாஸூந்† | இறந்தவர்களைக்குறித்தும் |
| அகதாஸூந்‡ | உயிருடனிருக்கிறவர்களைக்குறித்தும் |
| பண்டிதா: | வித்துவான்கள் |
| நாநுசோசந்தி | துக்கிக்கமாட்டார்கள். |

கிருஷ்ணசுவாமியானவர் சொல்வது. ஓ! அர்சுன! நீ துக்கப்படத்தகாதவர்களைக் குறித்து துக்கப்படுகிறாய். விவேகிகளுடைய வார்த்தைகளைப்போல் வார்த்தைகளையுஞ் சொல்லுகிறாய். இறந்தவர்களைக் குறித்தும் உயிருடனிருக்கிறவர்களைக் குறித்தும் வித்துவான்கள் (ஞானிகள்) துக்கிக்கமாட்டார்கள்.

(ஸ்வா) இந்த சுலோகத்தின் கருத்தின்னதென்பதில் பாஷியக்காரர்களுக்குள்ளும் வியாக்கியாதாக்களுக் குள்ளும் விசேஷ பேதமில்லை. எந்தப்பதத்திற்குப் பேதமான அர்த்தஞ் செய்யப்பட்டிருக்கிறதோ அதை இதனடியிற்கண்ட குறிப்பிற் காணலாம். பேதமற்ற கருத்தானது ஆத்மா அழிவற்றதென்பதும் தேகம் நிலையற்றதென்பதும் உயிருடனிருக்கிறவனைக் குறித்து விசனப்படுவது எப்படி சுபாவமல்லவோ அப்படியே இறந்தவனைக் குறித்து விசனப்படுவது ஆத்மவிவேக ஞானமுள்ளவனுக்குச் சுபாவமல்லவென்பதுமே.

---

* (உ-ஶ்ரீ,வி) உன்புத்திக்குத் தோன்றினவார்த்தைகளை (ஶ்ரீ,வி) அல்லது ப்ரஜ்ஞ= ஞானிகள், அவாத்ய= சொல்லத்தகாதவார்த்தைகளை (ரா) தேகமே ஆத்மாவென்கிற புத்தியை யுடையவன் பேசும் வார்த்தைகளை.

† (ரா) தேகங்களைக் குறித்தும்.

‡ (ரா) ஆத்மாக்களைக் குறித்தும்.

இந்த சுலோகத்தைப்போலொத்த அர்த்தத்தை விரித்துரைக்கிற வராக புராணம் இரண்டாவது பாகம் அத்தியாயம் - கஅஎல் உள்ள அடியில்கண்ட சுலோகங்களைப்பார்க்க. அஶோச்யாநந்வஶோசஸ்த்வம் ப்ரஜ்ஞாவாதாம்ஶ்ச பாஷஸே । கதாஸூநகதாஸூம்ஶ்ச நாநுஶோசந்தி பண்டிதா: ॥ ௫௨ ॥ ம்ருதம் வா யதி வா நஷ்டம் யோ யாதமநுஶோசதி । ஸதித்ராஸ்ய ஹ்ருஷ்யந்தி ஸ்வாவிநிவர்த்ததே ॥ ௫௩ ॥ ஸ்தாவரஜங்கமாஶ்சைவ த்ரைலோக்யே ஸசராசரே । தேவதாஸுரமநுஷ்யாஶ்ச கந்தர்வா ம்ருகபக்ஷிண: । ஸர்வே காலவஶம் யாந்தி ஸர்வே காலப்ரதீக்ஷகா: ஜாதஸ்ய ஸர்வபூதஸ்ய காலோ ம்ருத்யுருபஸ்தித: ॥ அவஶ்யமேவ மரணம் க்ருதாந்தவிஹிதேந வை ॥ ௫௫ ॥ ஜாதஸ்ய ஹி த்ருவோ ம்ருத்யுர்த்ருவம் ஜந்ம ம்ருதஸ்ய ச । மோக்ஷ: கர்மவிஶேஷேண ப்ராயஶ்சித்தேந வா த்ருவம் । த்யஜ ஶோகம் மஹாமதே ஶோகஸ்ஸர்வவிநாஶந: । ஶோகோ தஹதி காத்ராணி புத்திஶ்ஶோகேந நஶ்யதி ॥ ௮௫ ॥ லஜ்ஜா த்ருதிஶ்ச ஸத்யம் ஶ்ரீ: கீர்த்திஸ்ஸ்ம்ருதிர்நய: । த்யஜந்தி ஸர்வதர்மாஶ்ச ஶோகேநாபஹதம் நரம் ॥ ௮௪ ॥ நீ துக்கப்படக்கூடாத விஷயத்தைக்குறித்துத் துக்கப்படுகிறாய். விவேகியாயிருந்தும் அறிந்துகொள்ளவில்லை, இறந்தவர்களைக்குறித்தும், உயிருடனிருக்கிறவர்களைக்குறித்தும் வித்துவான்கள் துக்கிக்கமாட்டார்கள். (ஏனென்றால் ஞானிகளுக்கு ஸ்நேகிதன், விரோதி யென்பவர்களில்லை. ஸ்நேகந்தான் இறந்தவனைக்குறித்து துக்கிக்கவும், விரோதந்தான் இருக்கிறவனைக்குறித்து துக்கிக்கவும் காரணம் (௫௨.) (அக்ஞானி இறந்தவர்களைக்குறித்து விசனப்படுகிறான் (அதனாலிறந்தவன்) திரும்பி வருகிறதில்லை. அநிஷ்டமடைந்தவனைப்பார்த்து அவன் விரோதி சந்தோஷப்படுகிறான் (௫௩.) ஸ்தாவர ஜெங்கமங்களோடு கூடிய இம்மூன்று லோகத்திலேயும் மரணமில்லாததை (ஜந்துக்களை) நான்பார்க்கவில்லை. தேவதைகள், அசுரர்கள், கந்தர்வாள், மனுஷியர்கள், மிருகங்கள், பக்ஷிகள் முதலிய வெல்லாஜெந்துக்களும் காலத்திற் குள்ப்பட்டவர்களாய்க் காலத்தை யெதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார்கள்! பிறந்திருக்கிற சகல பூதங்களுக்கும் மரணமாகிய காலன் நெருங்கியிருக்கிறான். நிச்சயிக்கப்பட்டிருக்குங்காலத்தி லவசிய மிறந்துபோக வேண்டியதாகவே யிருக்கிறது. (௫௫) பிறந்தவனுக்கிறப்புண்டென்பது நிச்சியம். இறந்தவனுக்குப் பிறப்புண்டென்பதும் நிச்சயம். கருமவிசேஷத்தினாலேயும், பிராயச்சித்தத்தினாலேயும் மோக்ஷம் (பிறப்பிறப்பிலிருந்து விடுபடுவது) நிச்சயம். (௭௫.) ஓ! புத்திமானே! துக்கத்தை விட்டுவிடு. துக்கமானது சகலத்தையும் நாசம்செய்யத்தக்கது. துக்கமானது தேகத்தை யெரித்துவிடும். துக்கத்தினால் புத்தியானது நாசத்தையடையும். (௮௫) துக்கத்தினா லடிபட்ட புருஷனை வெட்கம், தைரியம், தர்மம், ஐசுவரியம், புகழ்ச்சி, நினைப்பு, நன்னடக்கை மற்றயெல்லாதர்மம், இவைகள் தள்ளிவிடுகின்

றன (என்றால், அவனிடத்தி லக்குணங்க ளிருக்கமாட்டா தென்பது தாத்பரியம்) அசு. (கக.)

---

கஉ. நத்வேவாஹம்ஜாது நாஸம் நத்வம்நேமேஜநாதிபா:।
நசைவ நபவிஷ்யாம: ஸர்வே வயமத:பரம்॥

| | |
|---|---|
| அஹம் | நான் |
| ஜாது | ஒருகாலத்திலாவது |
| நாஸம் (இதி) து ஏவ ந | இல்லாமலிருக்கவேயில்லை |
| த்வம் | நீயும் |
| (நாஸீரிதி) ந | இல்லாமலிருக்கவேயில்லை |
| இமே ஜநாதிபாஶ்ச | (யுத்தகளத்திலிருக்கிற) இந்த ராஜாக்களும் |
| (நாஸந் இதி) ந | இல்லாதிருந்ததில்லை |
| வயம் ஸர்வே | நாமெல்லோரும் |
| அத:பரம் | தேகமழிந்தபின்னும் |
| நபவிஷ்யாம: (இதி) ந | இருப்பதில்லை யென்பதில்லை. |

நானும், நீயும், இந்த (யுத்தகளத்திலுள்ள) ராஜாக்களு நாமெல்லோரும் ஒருகாலத்திலாவது இல்லாமலிருக்கவில்லை. தேகமழிந்த பின்பு நாமில்லாம லிருப்போமென்பது மில்லை,

ஶம் (ஸ்ரீ) இந்த சுலோகத்தில் பிரயோகிக்கப் பட்டிருக்கிற வெகு வசனப்பதங்கள் தேகத்தைப் பற்றியவைகளேயன்றி ஆத்மாவைப்பற்றியவையல்ல; பலதேகங்களிலுமுள்ள ஆத்மா வொன்றுதான்.

(ரா) அஹம் = சர்வேசுவரனாகிய நான், ஜாது = அனாதிகாலமுதலிதுவரை யொருகாலத்திலாவது. நாஸமிதி ந = இருக்கவில்லை யென்பதில்லை, த்வம் - இமே - ஜநாதிபா: = நீ முதலிய விந்தச் சகல ராஜாக்களும் (என்றால், என்னுக்னைக்குட்பட்டு நடக்கப்பட்ட ஜீவர்கள்) நாஸந்நிதி ந = இருக்கவில்லை யென்பதுமில்லை, ஸர்வேவயம் = நான் நீ இவர்களெல்லோரும், அத:பரம் = இனிமேலும், நசைவநபவிஷ்யாம: = இருப்பதில்லை யென்பதுமில்லை, (என்றால் எப்பவு மிருக்கிறோம் இந்த சுலோகத்தின் தாற்பரிய மென்னவென்றால், சர்வேசுவரனாகிய நான் (கிருஷ்ணசுவாமி) எப்படி நித்தியனென்பதிற் சந்தேக மில்லையோ அப்படியே ஜீவாத்மாக்களாகிய நீங்களும் நித்தியமாயிருக்கிறவர்களென்றறியவேண்டியது. இவ்விதமாய்ப் பரமாத்மாவாகிய சர்வேசுவர னிடத்திலிருந்து ஜிவாத்மாக்களி லொவ்வொருவருக்கும் பரஸ்பர பேதமானது வாஸ்தவமென்று கிருஷ்ண சுவாமியினாலேயே சொலல்ப் பட்டிருக்கிறதாகக் காண்கிறது. மோகமடைந்திருக்கிற அர்சுனனுக்கு ஆத்மசுவரூப நிச்சயமாகிய தத்துவத்தை யுபதேசிக்கிற இந்தச்சமயத்

தில் நீ நான் இந்த ராஜாக்களென்றும், நாமெல்லோரு மென்றும், பகவான் சொல்லியிருக்கிறதினுலேயே, இவ்வித பேதமானது வாஸ்தவமாகத்தா னிருக்கவேண்டும். "இந்த ஆத்மபேதமானது பொய், உபாதியினுற் கற்பிக்கப்பட்டது" என்னும் பக்ஷத்தில் வாஸ்தவமாக ஆத்மதத்துவோபதேச காலத்தில், பகவானுன கிருஷ்ண சுவாமியானவர், பொய்யானதா யிருக்கிற பேதஞானத்தை யுபதேசிப்பாரென்பது அசம்பாவிதமா யிருக்கிறது. மேலு மிப்படிப்பட்ட பேதமானது எப்பவு முள்ளதென்றே «நித்யோநித்யாநாம் சேதநஸ்சேதநாநாம் ஏகோபஹூநாம் யோவிததாதிகாமாந்=நித்தியனுயும் சேதனனுயும் ஒருவனுயுமிருக்கிற எந்தசுவாமியானவர் நித்தியாளாயு மநேகர்களாயுமிருக்கிற சேதனுளான ஜீவர்களுக்கு அவரவர்களுடைய இஷ்டங்களைக் கொடுக்கிருரோ" என்கிற இந்த சுருதிவாக்கியத்திலுலும் வெளியாகிறது. ஜீவேசுவர பேதமானது அக்ஞானத்தினுலே கற்பிதமானதென்னும் பக்ஷத்தில் சர்வேசுவரராகவும் சுத்தநித்திய சுவரூபராகவும் சுவரூபசாக்ஷாத் காரத்தினுலேயே, அக்ஞானம், அக்ஞானத்தினு லுண்டாகுங் காரியமிவைகளற்றவராகவுமிருக்கிற கிருஷ்ணபகவானுக்கு, நீ - நான் - அவன் என்கிற பேதஞானம் இப்படிப்பட்ட தத்துவோபதேசகாலத்தி லிருக்கக்கூடாது. பகவானுன கிருஷ்ண சுவாமிக்கு அக்ஞானமு மதன் காரியமுமில்லாவிட்டாலும் தீப்பட்டு வெந்துபோன துணி பிறகு உபயோகத்திற்கு யோக்கியமில்லாவிட்டாலும் பார்வைக்குத் துணிபோற் காணப்படுவதுபோல, அக்ஞான மதன்காரிய மிவைகளுடைய வாசனையினுல் பகவா னுபதேசித்தாரென்னும் பக்ஷத்தில் அதுவும் அசம்பாவிதமே. பரமாத்மாவாகிய கிருஷ்ண சுவாமிக்கு அக்ஞானமாவது அதின்காரியமாவது, அவைகளின் வாசனையாவது எப்பவும் கிடையாது. ஆகையால் கிருஷ்ணசுவாமி யானவர், தன்னைத்தவிர வேறேவஸ்துக்களொன்றுமில்லை யென்பதும் இப்போது காணப்படுவதாயு மிருக்கிறதாயும் சொல்வது அக்ஞானத்தினுல் கற்பிதமான தென்பதும், வாஸ்தவமாக விருக்கும்பக்ஷத்தில் தத்துவோபதேசகாலத்தில் அபேதத்தைச் சோல்லாமல் நீ - நான் அவனென்கிற பேதத்தைச் சொல்வாரென்பது பின்னு மசம்பாவிதமா யிருக்கிறது. அக்ஞானம் அதின்காரியங்களிவைக ளற்றிருக்கிற பகவானுக்கு அவைகளின் வாசனைமட்டும் வெந்துபோன துணிபோ லிருக்குமென்பதும் சரியல்ல. பகவானுனவர் சர்வக்ஞரென்றும் ஞாநத்தையே சுவரூபமாகவுடையவர், மாயாதீதரென்றும், சுருதிப் பிரமாணங்களிற் சொல்லப்பட்டிருக்கிற தாகையால் பகவானுன கிருஷ்ண சுவாமிக்கு அக்ஞான மிருந்ததென்று சொல்லவிடமில்லை. தன்னைத் தவிர வேறேயாதொரு வஸ்துவுமில்லையென்றே யெண்ணி யிருப்பாரானுல், தன்னுடைய பிரதிபிம்பத்தைப்போ லிருக்கிற அர்சுனனுக்கு உபதேசிப்பதெப்படி? கண்ணுடியிற் காணப்படும்

துக்கம், இவைகளுண்டாகின்றன. வருகிறதும் போகிறதுமாய் நிலையற்றவைகளா யிருப்பதினாலே சீதோஷ்ணாதிகளை ஓ! பரதவம்சத்திலுதித்தவனே! பொறுத்துக்கொள்.

(ஸ்ரீ,வி) இந்திரியங்களுக்கு விஷயங்களோடு சம்பந்தமானது சுவபாவமாய் சீதோஷ்ண சுகதுக்காதிகளை யுண்டுபண்ண மாட்டாது. ஆனால் விஷயங்களில் அபிமானத்தோடுகூடிய சம்பந்தம்தான் சீதோஷ்ண சுகதுக்காதிகளை யுண்டுபண்ணுகிறது. ஆகையினாலே - தாந்= அப்படிப்பட்ட வபிமானத்தோடுகூடிய விஷயேந்திரிய சம்பந்தங்களை திதிக்ஷஸ்வ=விட்டுவிடு.

(ஸ்வா) இந்திரியங்களுக்கு விஷயங்களோடு சம்பந்தமுண்டானால் அதிலிருந்து சீதோஷ்ண சுகதுக்காதிகளுண்டாகின்றன வென்று சொல்லப்பட்ட தல்லவா? அதெப்படி யென்றால், இந்திரியங்களி லொன்றான கண்ணானது நிர்மலமான ஜலமுள்ள ஒரு தடாகத்தையும் அதை யடுத்திருக்கிற ஒரு சிங்காரத்தோட்டத்தையும் பார்த்துச் சந்தோஷத்தை யடைவதாகிய சுகமானது, கண்ணிந்திரியம் ஜலமுதலிய வஸ்துக்களாகிய விஷயங்களுடன் சம்பந்தப்பட்டதனா லுண்டானதென்று அறியத்தக்கது. மற்றவைகளு மிப்படியே. இந்தச்சுலோகத்தினாற் சொல்ல உத்தேசிக்கப்பட்ட தென்னவெனில், சுகதுக்காதிக ளாத்மாவுக்கு கிடையாது. இந்திரியங்களுடைய வியாபாரங்களாயிருக்கின்றன. ஆத்மாவாகிய உனக்குச் சம்பந்தமற்றதாகிய துக்காதிகளை நீயேனிப்போது அவலம்பிக்கிறா யென்பதுதான். (௧௪)

---

௧௫. 𑌯𑌂 𑌹𑌿 𑌨 𑌵𑍍𑌯𑌥𑌯𑌨𑍍𑌤𑍍𑌯𑌤𑍇 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌰𑍍𑌷𑌭।
𑌸𑌮𑌦𑍁𑌃𑌖𑌸𑍁𑌖𑌂 𑌧𑍀𑌰𑌂 𑌸𑍋𑌽𑌮𑍃𑌤𑌤𑍍𑌵𑌾𑌯 𑌕𑌲𑍍𑌪𑌤𑍇॥

| | |
|---|---|
| 𑌪𑍁𑌰𑍁𑌷𑌰𑍍𑌷𑌭 | ஓ! புருஷசிரேஷ்டனே! |
| 𑌏𑌤𑍇 | இவைகள் |
| 𑌸𑌮𑌦𑍁𑌃𑌖𑌸𑍁𑌖𑌂 | சுகம் துக்கமிவைகளைச் சமமாயெண்ணி யிருக்கிற |
| 𑌧𑍀𑌰𑌂 | விவேகியான, அல்லது, தைரியமுள்ள |
| 𑌯𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 | எந்தபுருஷனை |
| 𑌨 𑌵𑍍𑌯𑌥𑌯𑌨𑍍𑌤𑌿 𑌹𑌿 | பாதிக்கமாட்டாவோ |
| 𑌸𑌃 | அவன் |
| 𑌅𑌮𑍃𑌤𑌤𑍍𑌵𑌾𑌯 | மோக்ஷத்திற்கு |
| 𑌕𑌲𑍍𑌪𑌤𑍇 | தகுந்தவனாயிருக்கிறான். |

ஓ! புருஷசிரேஷ்டனான அர்சுனா! இவைகள் (இந்திரியங்களுக்கு விஷயங்களோ டுண்டாகிற சம்பந்தங்கள்) சுகந் துக்கமிவைகளைச் சமமாயெண்ணி யிருக்கிறவும் விவேகமல்லது தைரியமுள்ளவுமான எந்தப்

புருஷனை பாதிக்கமாட்டாவோ அந்தப்புருஷன் மோக்ஷமடைவதற்குத் தகுந்தவனு யிருக்கிறுன்.

(ஸூ) சுகமுண்டானகாலத்தில் அதிகசந்தோஷமும் துக்கம் வந்தகாலத்தில் அதிக வருத்தமுமடைவது விவேகிகளுடைய சுபாவமல்ல. ஏனென்றால், ஆத்மானுத்மஞானிகள், சுகதுக்காதிகள், அந்தக் கரண தருமமே யன்றி, ஆத்மதரும மல்லவென்று அறிகிறார்கள். அவர்களை, துக்கசுகாதிகள், பாதிக்க மாட்டா. அவர்கள்தான் மோக்ஷ யோக்கியர்கள். தேகமே ஆத்மாவென்று நினைத்து தேகேந்திரியாதிகளினல் அந்தக்கரணத்திற் குண்டாகும், சுகதுக்காதிகளை ஆத்மாவில் ஆரோபிக்கிற அக்ஞானிகளுக்கு, எத்தனைகோடி ஜென்ம மெடுத்தாலும், மோக்ஷம் கிடைக்கா தென்பதை இந்தச்சுலோகம் வற்புறுத்துகிறது. (௧௫)

---

௧௬. நாஸதோவித்யதேபாவோ நாபாவோவித்யதேஸத:।
உபயோரபித்ருஷ்டோந்தஸ்த்வநயோஸ்தத்வதர்சிபி:॥

| | |
|---|---|
| அஸத: | இல்லாததற்கு |
| பாவ: | இருப்பு |
| நவித்யதே | கிடையாது |
| ஸத: | இருக்கிறதற்கு |
| அபாவ: | இல்லாமை |
| நவித்யதே | கிடையாது |
| அநயோ: உபயோரபி | இவ்விரண்டினுடையவும் |
| அந்த: | நிச்சயமானது |
| தத்வதர்சிபி: | உண்மையறிந்தவர்களால் |
| த்ருஷ்ட: | தெரிந்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. |

இல்லாததற்கு இருப்புக்கிடையாது, இருப்பதற்கு இல்லாமை கிடையாது. இவ்விரண்டினுடைய நிச்சயமானது ஞானிகளாற் றெரிந்து கொள்ளப்பட்டிருக்கிறது.

(ஸூ) "நாஸதோவித்யதேபாவ:" என்பதற்கு பரமாத்மாதவிர மற்ற காணப்படுகிறசகலமும் மாயையினுற் ருேற்றப்படுகிறதேயன்றி வாஸ்தவமல்ல வாகையால் பொய்யான சீதோஷ்ணுதிகளுக்கு இருப்பில்லையென்று, சங்கராசாரியரும், அவை யாத்மாவைச் சார்ந்தனவல்ல வாகையால் அவைகளுக் கிருப்பில்லையென்று ஸ்ரீதரரும், அசேதனங்களாகிய தேகாதிகளுக்கு அவினுசி சுவபாவம் (நாசமடையாதிருத்தல்) இல்லையென்று, இராமானுஜாசாரியரும், பிரகிருதிக்கு இல்லாமை யில்லையென்று மத்துவாசாரியரும், துஷ்கருமத்தினல் சுகமுண்டாக மாட்டாதென்று இராக வேந்திரரும். "நாபாவோவித்யதேஸத:" என்பதற்கு,

ஆத்மாவுக்கு, இல்லாமை இல்லையென்று, சங்கராசாரியரும் ஸ்ரீதரரும், ஜீவேசுவரருக்கு நாசமடையும் சுவபாவ மில்லையென்று இராமானுஜரும், பிரம்மத்துக்கு இல்லாமை இல்லையென்று மத்துவாசாரியரும், சத்கருமத்தினால் துக்கமுண்டாக மாட்டாதென்று இராகவேந்திர சுவாமியும் சொல்லியிருக்கிறார்கள். (௧௬)

---

௧௭. அவிநாஶி து தத்வித்தி யேந ஸர்வமிதம் ததம்।
விநாஶமவ்யயஸ்யாஸ்ய ந கஶ்சித் கர்துமர்ஹதி॥

| | |
|---|---|
| ஸர்வம் இதம்* | இதெல்லாம் |
| யேந† | எந்தவஸ்துவினால் |
| ததம் | வியாபிக்கப்பட்டிருக்கிறதோ |
| தத் | அதை |
| அவிநாஶி து | நாசமற்றதாகவே |
| வித்தி | அறி |
| அவ்யயஸ்ய | நாசமற்ற |
| அஸ்ய | இதற்கு |
| விநாஶம் | நாசத்தை |
| கர்தும் | செய்கிறதற்கு |
| கஶ்சித் | ஒருவனும் |
| நார்ஹதி | சக்தனல்ல. |

இதெல்லாம் (இந்தஉலகமெல்லாம்) எந்தவஸ்துவால் (எந்தப்பிரம்மத்தால்) வியாபிக்கப்பட்டிருக்கிறதோ அதை (அப்படிப்பட்ட சர்வவியாபியான ஜீவனாகிய பிரம்மத்தை) நாசமற்றதாகவும், அதற்கு நாசத்தை யுண்டுபண்ண வொருவனும் சக்தனல்லவென்றுமறி. (௧௭)

---

௧௮. அந்தவந்த இமே தேஹா நித்யஸ்யோக்தா: ஶரீரிண:।
அநாஶிநோऽப்ரமேயஸ்ய தஸ்மாத்யுத்யஸ்வ பாரத॥

| | |
|---|---|
| நித்யஸ்ய‡ | நித்தியனையும் |
| அநாஶிந:§ | நாசமற்றவனையும் |
| அப்ரமேயஸ்ய¶ | அறியப்படாதவனையுமுள்ள |

* (ரா) ஜடமான சகல வஸ்துக்களும்.

† (ரா) எந்தச்சேதனத்தினால் அதாவது ஜீவேசுவரர்களால் (ஸ்ரீ,வி) எந்த ஈசுவரனால்.

‡ (ஶம்) விகாரமற்றவன்.

§ (ஶம்) தேகம் நாசமடைந்தபோதிலும் நாசமடையாதவன்.

¶ (ஶம்) பிரத்தியக்ஷம், அநுமானம், உபமானம், சப்தம், அருத்தாபத்தி, அநுபலப்தி, ஆகிய இந்த ஆறுபிரமாணங்களாலும் அறியத்தகாதவன். (ஸ்ரீ) காலம்,

𑌶𑌰𑍀𑌰𑌿𑌣𑌃 — தேகத்தையுடைத்தானவனுடைய (ஆத்மா)
𑌇𑌮𑍇 𑌦𑍇𑌹𑌾𑌃* — இந்ததேகங்கள்
𑌅𑌨𑍍𑌤𑌵𑌨𑍍𑌤𑌃 — முடிவையுடைத்தானவைகளாக
𑌉𑌕𑍍𑌤𑌾𑌃 — சொல்லப்பட்டிருக்கின்றன
𑌹𑍇 𑌭𑌾𑌰𑌤 — ஓ! பரதவம்சத்திற்பிறந்தவனே !
𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 — ஆகையினாலே
𑌯𑍁𑌧𑍍𑌯𑌸𑍍𑌵 — யுத்தஞ்செய்.

நித்தியனையும் நாசமற்றவனையும் அறியப்படாதவனையுமுள்ள தேகத்தை யுடைத்தானவனை ஆத்மாவினுடைய இந்தத்தேகங்கள் முடிவை யுடைத்தானவைகளாக (ஞானிகளால்) சொல்லப்பட் டிருக்கின்றன. ஓ! பரதவம்சத்திற்பிறந்த அர்சுனா! ஆகையினாலே யுத்தஞ்செய்.

(ஶா) தேகத்தையுடையவன் என்றதினால் அத்துவைத சித்தாந்தப்படிக்கு வியவகாரதெசையில் ஜீவனாகவும், பரமார்த்த தெசையில் பிரம்மமாகவும் சொல்லத்தக்கது. (௧௮)

---

௧௯. 𑌯 𑌏𑌨𑌂𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 𑌹𑌨𑍍𑌤𑌾𑌰𑌂 𑌯𑌶𑍍𑌚𑍈𑌨𑌂𑌮𑌨𑍍𑌯𑌤𑍇 𑌹𑌤𑌂।
𑌉𑌭𑍌 𑌤𑍌 𑌨𑌵𑌿𑌜𑌾𑌨𑍀𑌤𑍋 𑌨𑌾𑌯𑌂𑌹𑌨𑍍𑌤𑌿 𑌨𑌹𑌨𑍍𑌯𑌤𑍇॥

𑌯𑌃 — யாவனொருவன்
𑌏𑌨𑌂 — இவனை
𑌹𑌨𑍍𑌤𑌾𑌰𑌂 — கொல்லுகிறவனாக
𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 — அறிகிறானோ
𑌯𑌃 — எவன்
𑌏𑌨𑌂 — இவனை
𑌹𑌤𑌂 — கொல்லப்பட்டவனாக
𑌮𑌨𑍍𑌯𑌤𑍇 — அறிகிறானோ
𑌤𑌾𑌵𑍁𑌭𑍌 — அவ்விருவரும்
𑌨𑌵𑌿𑌜𑌾𑌨𑍀𑌤𑌃 — வாஸ்தவத்தை யறிந்தவர்களல்ல
𑌅𑌯𑌂 — இவன்

---

தேசம், ஸ்வரூப மிவைகளினால் அளவிடக்கூடாதவன். (ரா) ஜீவனானவன் அறிகிறவனேயன்றி தேகாதிகளைப்போல அறியப்படுகிறவ னல்ல. (ஸ்ரீ,வி) சர்வவியாபகனை ஈசுவரனுக்குச் சமானமான ரூபம் முதலியவையுள்ளவன்.

* (ஸ்ரீ,வி) இந்தத் தேகமென்று குறித்துச் சொல்லப்பட்டதினாலே இந்தத் தேக மழிவுள்ளதென்றும், அழிவற்ற ஒருதேகம் ஜீவனுக்கு முக்திதெசையி லுண் டென்றும் அருத்தஞ் செய்யவேண்டும்.

நஹந்தி — கொல்லுகிறதுமில்லை
நஹந்யதே — கொல்லப்படுகிறதுமில்லை.

யாவனொருவன் (தான்) இவனை (மற்றொருவனை) கொல்லுகிறவனாக அறிகிறானோ, எவனிவனை (மற்றொருவனை) கொல்லப்பட்டவனாக அறிகிறானோ, அவ்விருவரும் வாஸ்தவத்தை யறிந்தவர்களல்ல, இவன் கொல்லுகிறதுமில்லை. கொல்லப்படுகிறதுமில்லை.

(ஸ०) அவிவேகிகள் இவன் அவனைக் கொன்றானென்றும் அவனாலிவன் கொல்லப்பட்டானென்றும் நினைக்கிறார்கள். ஆத்மாநித்தியனும் அழிவற்றவனு மாகையால் அந்த ஆத்மா ஒருவனாற் கொல்லப்படத் தக்கவனல்ல வென்பது கருத்து. (கக)

---

உ०. நஜாயதே ம்ரியதே வா கதாசி ந்நாயம் பூத்வா பவிதா வா ந பூ
யஃ। அஜோ நித்யஶ்ஶாஶ்வதோயம் புராணோ ந ஹந்யதே ஹந்ய
மாநே ஶரீரே *

| | |
|---|---|
| அயம் | இவன் (ஆத்மா) |
| அஜஃ | பிறப்பற்றவன் |
| நித்யஃ | நாசமற்றவன் |
| ஶாஶ்வதஃ | ஒரேவிதமாயிருக்கிறவன் |
| புராணஃ | முன்னோன் |
| (தஸ்மாத்) | ஆகையினாலே |
| ஶரீரே | தேகமானது |
| ஹந்யமாநே | கொல்லப்பட்டாலும் |
| அயம் | இவன் (ஆத்மா) |
| கதாசித் | ஒருபோதும் |
| நஹந்யதே | கொல்லப்படுகிறதில்லை |
| நஜாயதே | பிறக்கிறதுமில்லை |
| ம்ரியதே வா | இறக்கிறதுமில்லை |
| பூத்வா | உண்டாகி |
| பூயஃ | மறுபடி |
| பவிதா ந | இருக்கப்போகிறதுமில்லை. |

ஆத்மா பிறப்பற்றவன், நாசமற்றவன், ஒரேவிதமா யிருக்கிறவன், முன்னோன், ஆகையினாலே தேகமானது கொல்லப்பட்ட போதிலும். ஆத்மா ஒருபோதுங் கொல்லப்படுவதில்லை, பிறக்கிறது மில்லை, இறக்கிறது மில்லை, உண்டாய் மறுபடி யிருக்கப்போகிறதுமில்லை.

---

* (ஶ்வ) கடோபநிஷத் உ - வது வல்லி, கஅ - வது வாக்கியம் இந்தச் சுலோகத்துக்குச் சரியானது.

(ஸ°) (ஶ்ரீ) தேகங்களுக்குள்ள ஆறுவிகாரங்களும், ஆத்மாவுக் கில்லையென்பது சொல்லப்பட்டது. ஆறுவிகாரங்களாவன.

| | |
|---|---|
| ௧. 𑌜𑌾𑌯𑌤𑍇 | பிறப்பு |
| ௨. 𑌅𑌸𑍍𑌤𑌿 | இருப்பு |
| ௩. 𑌵𑌰𑍍𑌧𑌤𑍇 | வளர்தல் |
| ௪. 𑌵𑌿𑌪𑌰𑌿𑌣𑌮𑌤𑍇 | திரிதல் (மற்றொன்றாய்மாறுதல்) |
| ௫. 𑌅𑌪𑌕𑍍𑌷𑍀𑌯𑌤𑍇 | குறுகுதல் |
| ௬. 𑌨𑌶𑍍𑌯𑌤𑌿 | நசித்தல். |

(ஶ்ரீ.வி) ஈசுவரனைப்போல ஜீவனும் பிறப்பிறப்பு முதலியவைகளற்றவன். ஈசுவர சுவரூபத்துக்கு சமமான ரூபமுள்ளவனாகச் சொல்லப்படுகிறான். ஆனால் பிறப்பிறப்புள்ளவனாகச் சொல்லப்படுகிறானே யென்றாலோ; தேகத்தை யடைகிறதும் விடுகிறதுமா யிருப்பதால் அக்ஞானிகள் பிறக்கிறா னிறக்கிறானென்று வியவகரிக்கிறார்கள். (௨௦)

---

௨௧. 𑌵𑍇𑌦𑌾𑌵𑌿𑌨𑌾𑌶𑌿𑌨𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌯 𑌏𑌨𑌮𑌜𑌮𑌵𑍍𑌯𑌯𑌮𑍍।
𑌕𑌥𑌂 𑌸 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌕𑌂 𑌘𑌾𑌤𑌯𑌤𑌿 𑌹𑌨𑍍𑌤𑌿 𑌕𑌮𑍍॥

| | |
|---|---|
| 𑌪𑌾𑌰𑍍𑌥 | ஓ! அர்சுனா! |
| 𑌯𑌃 | எவன் |
| 𑌏𑌨𑌂 | இவனை (ஆத்மாவை) |
| 𑌅𑌜𑌂 | பிறப்பற்றவனாகவும் |
| 𑌅𑌵𑍍𑌯𑌯𑌂 | குறைதலற்றவனாகவும் |
| 𑌅𑌵𑌿𑌨𑌾𑌶𑌿𑌨𑌂* | நாசமற்றவனாகவும் |
| 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂† | உயர்தலற்றவனாகவும் |
| 𑌵𑍇𑌦 | அறிகிறானோ |
| 𑌸𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 | அந்தப்புருஷனானவன் |
| 𑌕𑌥𑌂 | எப்படி |
| 𑌕𑌂 | யாரை |
| 𑌘𑌾𑌤𑌯𑌤𑌿 | கொல்லச்செய்கிறான் |
| 𑌕𑌂 | யாரை |
| 𑌹𑌨𑍍𑌤𑌿 | கொல்லுகிறான். |

ஓ! அர்சுனா! எவன் ஆத்மாவைப் பிறப்பற்றவன், குறைதலற்றவன், நாசமற்றவன், உயர்தலற்றவன், என்பதாக அறிகிறானோ அந்தப்

---

* (ஶ) நைமித்திக நாசமில்லாதவன்.

† (ஸ°) விகார மற்றவன். (ஶ) சுவாபாவிக நாசமற்றவன்.

புருஷனானவன் யாரையாவது கொல்லவாவது கொல்லச்செய்யவாவது எப்படிக்கூடும்?

(மீ. வி) இந்தசுலோகத்திற்கு பரப்பிரம்ம பரமாயும் ஒரு அர்த்த முண்டு. அதாவது ஓ! அர்சுனா! ஏனம் = பரமாத்மாவை, அஜம்=பிறப் பற்றவன், அவ்யயம்=விகாரமற்றவன், அவிநாசினம் = தேகநாசமற்றவன், நித்யம்=சுவரூபநாசமற்றவன். என்று, ய:=எவன், வேத=அறிகிறானோ (மற்றவைகளுக்கு முன்சொல்லிய அர்த்தந்தான்.) இப்படி பிரம்மத்தை யெவன் றெரிந்திருக்கிறானோ, அவன்தான் கர்த்தாவல்ல, சர்வத்திற்குங் கர்த்தா ஈசுவரன்றான் என்கிற ஞானமுடையவனா யிருப்பானானதால், அவனொருவனைக் கொல்லவாவது கொல்லச்செய்யவாவது மாட்டானென் பது தாத்பரியம்.

---

௨௨. வாஸாம்ஸி ஜீர்ணானி யதா விஹாய நவானி க்ருஹ்ணாதி நரோऽபராணி । ததா ஶரீராணி விஹாய ஜீர்ணான்யன்யானி ஸம்யாதி நவானி தேஹீ ॥

| | |
|---|---|
| நர: | மனிதன் |
| யதா | எப்படி |
| ஜீர்ணானி | பழய (கந்தலாயிருக்கிற) |
| வாஸாம்ஸி | துணிகளை |
| விஹாய | விட்டுவிட்டு |
| நவானி | புதிய |
| அபராணி | வேறு |
| (வாஸாம்ஸி) | துணிகளை |
| க்ருஹ்ணாதி | கிரகிக்கிறானோ |
| ததா | அப்படியே |
| தேஹீ | தேகத்தையுடையவன் (ஆத்மா) |
| ஜீர்ணானி | பழய (சிதிலப்பட்ட) |
| ஶரீராணி | தேகங்களை |
| விஹாய | விட்டுவிட்டு |
| நவானி | புதிய |
| அன்யானி | வேறு |
| (ஶரீராணி) | தேகங்களை |
| ஸம்யாதி | அடைகிறான். |

மனிதன் எப்படிப் பழயதுணிகளை விட்டு விட்டு வேறு புதிய துணிகளைக் கிரகிக்கிறானோ, அப்படியே ஆத்மாவானவன் பழயஉடல் களை விட்டுவிட்டு வேறு புதிய உடல்களை யடைகிறான். (௨௨)

௨௩. 𑌨𑍈𑌨𑌂 𑌛𑌿𑌨𑍍𑌦𑌨𑍍𑌤𑌿 𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌣𑌿 𑌨𑍈𑌨𑌂 𑌦𑌹𑌤𑌿 𑌪𑌾𑌵𑌕𑌃।
𑌨 𑌚𑍈𑌨𑌂 𑌕𑍍𑌲𑍇𑌦𑌯𑌨𑍍𑌤𑍍𑌯𑌾𑌪𑍋 𑌨 𑌶𑍋𑌷𑌯𑌤𑌿 𑌮𑌾𑌰𑍁𑌤𑌃॥

| | |
|---|---|
| 𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌣𑌿 | ஆயுதங்கள் |
| 𑌏𑌨𑌂 | இவனை (ஆத்மாவை) |
| 𑌨 𑌛𑌿𑌨𑍍𑌦𑌨𑍍𑌤𑌿 | வெட்டுகிறதில்லை |
| 𑌪𑌾𑌵𑌕𑌃 | நெருப்பானது |
| 𑌏𑌨𑌂 | இவனை (ஆத்மாவை) |
| 𑌨 𑌦𑌹𑌤𑌿 | சுடுகிறதில்லை |
| 𑌆𑌪𑌃 | ஜலங்கள் |
| 𑌏𑌨𑌂 | இவனை (ஆத்மாவை) |
| 𑌨 𑌕𑍍𑌲𑍇𑌦𑌯𑌨𑍍𑌤𑌿 | நனைக்கிறதில்லை |
| 𑌮𑌾𑌰𑍁𑌤𑌃 | வாயு |
| (𑌏𑌨𑌂) | இவனை (ஆத்மாவை) |
| 𑌨 𑌶𑍋𑌷𑌯𑌤𑌿 | வறளச்செய்கிறதுமில்லை. |

ஆத்மாவை ஆயுதங்கள் வெட்டுகிறதில்லை, நெருப்பு எரிக்கிறதில்லை, தண்ணீர் நனைக்கிறதில்லை, காற்று உலர்த்துகிறதுமில்லை. (௨௩)

---

௨௪. 𑌅𑌚𑍍𑌛𑍇𑌦𑍍𑌯𑍋𑌽𑌯𑌮𑌦𑌾𑌹𑍍𑌯𑍋𑌽𑌯𑌮𑌕𑍍𑌲𑍇𑌦𑍍𑌯𑍋𑌽𑌶𑍋𑌷𑍍𑌯 𑌏𑌵 𑌚।
𑌨𑌿𑌤𑍍𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑌗𑌤𑌃 𑌸𑍍𑌥𑌾𑌣𑍁𑌰𑌚𑌲𑍋𑌽𑌯𑌂 𑌸𑌨𑌾𑌤𑌨𑌃॥

| | |
|---|---|
| 𑌅𑌯𑌂 | இவன் (ஆத்மா) |
| 𑌅𑌚𑍍𑌛𑍇𑌦𑍍𑌯𑌃 | வெட்டப்படத்தக்கவனல்ல |
| 𑌅𑌯𑌂 | இவன் (ஆத்மா) |
| 𑌅𑌦𑌾𑌹𑍍𑌯𑌃 | எரிக்கப்படத்தக்கவனல்ல |
| 𑌅𑌕𑍍𑌲𑍇𑌦𑍍𑌯𑌃 | நனைக்கப்படத்தக்கவனல்ல |
| 𑌅𑌶𑍋𑌷𑍍𑌯 𑌏𑌵 𑌚 | உலர்த்தப்படத்தக்கவனுமல்ல |
| 𑌨𑌿𑌤𑍍𑌯𑌃 | நித்தியமானவன் (முக்காலத்திலு முள்ளவன்) |
| 𑌸𑌰𑍍𑌵𑌗𑌤𑌃* | எங்குநிறைந்தவன் |
| 𑌸𑍍𑌥𑌾𑌣𑍁𑌃† | ஸ்திரமானசுபாவமுள்ளவன் |
| 𑌅𑌚𑌲𑌃 | சலிக்காதவன் |
| 𑌅𑌯𑌂 | இவன் (ஆத்மா) |
| 𑌸𑌨𑌾𑌤𑌨𑌃 | அனாதியானவன். |

---

* † (ஜீ,வி) எப்பவு மெங்கும் வியாபித்திருக்கிற பிரம்மத்தினுடைய ஆதாரத்தின்பேரிலும் அணுவாயுமிருக்கிறவன்.

ஆத்மா வெட்டப்படத் தக்கவனுமல்ல, எரிக்கப்படத் தக்கவனுமல்ல, நனைக்கப்படத் தக்கவனுமல்ல, உலர்த்தப்படத் தக்கவனுமல்ல, நித்தியனுயும், எங்குநிறைந்தவனுயும், ஸ்திர சுவபாவமுள்ளவனுயும், சலிக்காதவனுயும், அநாதியாயு மிருக்கின்றவன்.

(ரா) இந்த சுலோகத்திற்கும் முந்திய சுலோகத்திற்கும் பேதமென்னவென்ருல், முந்தியசுலோகத்தில் ஆத்மாவை வெட்டுகிறது எரிக்கிறது முதலானவைகளைச் செய்யும் சக்தி ஆயுதம் முதலானவைகளுக்கு இல்லையென்பது சொல்லப்பட்டது- ஏன் ஆயுதம் முதலியவைகளுக்குச் சக்தியில்லை யென்ருலோ, ஆத்மா ஸ்திரஸ்வபாவ முதலியவைகளை யுடையவனுனதால் அவன் வெட்டப்படவாவது எரிக்கப்படவாவது தகுந்தவனல்லவென்ப ஹெது இதிற் சொல்லப்பட்டது. (௨௪)

---

௨௫. 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑍋𑌽𑌯𑌮𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑍋𑌽𑌯𑌮𑌵𑌿𑌕𑌾𑌰𑍍𑌯𑍋𑌽𑌯𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇।
𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍇𑌵𑌂 𑌵𑌿𑌦𑌿𑌤𑍍𑌵𑍈𑌨𑌂 𑌨𑌾𑌨𑍁𑌶𑍋𑌚𑌿𑌤𑍁𑌮𑌰𑍍𑌹𑌸𑌿॥

| | |
|---|---|
| 𑌅𑌯𑌂 | இவன் (ஆத்மா) |
| 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌃 | காணத்தக்கவனன்று |
| 𑌅𑌯𑌂 | இவன் |
| 𑌅𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑌃 | நினைவுக்கெட்டினவனன்று |
| 𑌅𑌯𑌂 | இவன் |
| 𑌅𑌵𑌿𑌕𑌾𑌰𑍍𑌯𑌃* | கைமுதலிய உறுப்புகளி லொன்றுஞ் செய்யப்படத்தக்கவனு மன்று |
| (இதி) | என்பதாக |
| 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 | சொல்லப்படுகிருன் |
| 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 | ஆகையினுலே |
| 𑌏𑌵𑌂 | இவ்விதமாய் |
| 𑌏𑌨𑌂 | இவனை (ஆத்மாவை) |
| 𑌵𑌿𑌦𑌿𑌤𑍍𑌵𑌾 | அறிந்து |
| 𑌅𑌨𑍁𑌶𑍋𑌚𑌿𑌤𑍁𑌂 | துக்கிக்கிறதற்கு |
| 𑌨𑌾𑌰𑍍𑌹𑌸𑌿 | நீயோக்கியனல்ல. |

ஆத்மா காணத்தக்கவனன்று, நினைவுக் கெட்டினவனன்று, கைமுதலிய அவயவங்களி லெதுவுஞ் செய்யப்படத் தக்கவனன்று என்பதாகச் சொல்லப்படுகிருன், ஆகையினுலே யிவ்விதமா யாத்மாவை யறிந்து துக்கிக்காதே. (இவ்விதமானவன் ஆத்மாவென்று நீ யறிந்து கொள்வாயாகில் விசனப்படக் காரண மிருக்கமாட்டாதென்பது தாத்பரியம்).

* (ஸா) (ரா) (ஸ்ரீ,வி) விகாரமடையாதவன்.

(ஸ்ரீ,வி) இந்த சுலோகத்திற் சொல்லப்பட்டிருக்கிற விசேஷங்களையுடைய ஈசுவரன் ஸர்வஸ்வதந்திரன், நா னவனுக்கு அதீனனாய் யுத்தஞ்செய்து அவனுக்குச் சமர்ப்பிக்க வேண்டியவ னென்பதாக நினைத்தால் உனக்குத் துக்கத்திற் கேதுவேயிருக்கமாட்டா தென்பது தாத்பரியம். (௨௫)

---

௨௬. 𑌅𑌥𑌚𑍈𑌨𑌂𑌨𑌿𑌤𑍍𑌯𑌜𑌾𑌤𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂𑌵𑌾𑌮𑌨𑍍𑌯𑌸𑍇𑌮𑍃𑌤𑌮𑍍।
𑌤𑌥𑌾𑌪𑌿𑌤𑍍𑌵𑌂𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌨𑍈𑌨𑌂𑌶𑍋𑌚𑌿𑌤𑍁𑌮𑌰𑍍𑌹𑌸𑌿॥

| | |
|---|---|
| 𑌅𑌥* | ஒருக்கால் |
| 𑌏𑌨𑌂 | இவனை (ஆத்மாவை) |
| 𑌨𑌿𑌤𑍍𑌯𑌜𑌾𑌤𑌂 | எப்போதும் பிறப்புள்ளவனாகவும் |
| 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 | எப்போதும் |
| 𑌮𑍃𑌤𑌂𑌵𑌾 | இறப்புள்ளவனாகவும் |
| 𑌮𑌨𑍍𑌯𑌸𑍇 𑌤𑌥𑌾𑌪𑌿 | எண்ணினபோதிலும் |
| 𑌹𑍇 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 | ஓ! தோள்வலிவுடைய அர்சுன! |
| 𑌤𑍍𑌵𑌂 | நீ |
| 𑌏𑌨𑌂 | இவனை (ஆத்மாவை) க்குறித்து |
| 𑌶𑍋𑌚𑌿𑌤𑍁𑌂 | விசனப்பட |
| 𑌨𑌾𑌰𑍍𑌹𑌸𑌿 | யோக்கியனல்ல. |

ஒருக்கால் ஆத்மாவை யெப்போதும் பிறப்பிறப் புடையவனாக எண்ணினபோதிலும், ஓ! அர்சுன! நீ ஆத்மாவைக்குறித்து விசனப் படுகைக்கு யோக்கியனல்ல. (௨௬)

---

௨௭. 𑌜𑌾𑌤𑌸𑍍𑌯𑌹𑌿𑌧𑍍𑌰𑍁𑌵𑍋𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌰𑍍𑌧𑍍𑌰𑍁𑌵𑌂𑌜𑌨𑍍𑌮𑌮𑍃𑌤𑌸𑍍𑌯𑌚।
𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌪𑌰𑌿𑌹𑌾𑌰𑍍𑌯𑍇𑌽𑌰𑍍𑌥𑍇 𑌨𑌤𑍍𑌵𑌂𑌶𑍋𑌚𑌿𑌤𑍁𑌮𑌰𑍍𑌹𑌸𑌿॥

| | |
|---|---|
| 𑌜𑌾𑌤𑌸𑍍𑌯 𑌹𑌿 | பிறந்தவனுக்கோ |
| 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌃 | மரணம் |
| 𑌧𑍍𑌰𑍁𑌵𑌃 | நிச்சயம் |
| 𑌮𑍃𑌤𑌸𑍍𑌯 𑌚 | இறந்தவனுக்கும் |
| 𑌜𑌨𑍍𑌮 | பிறப்பு |
| 𑌧𑍍𑌰𑍁𑌵𑌂 | நிச்சயம் |
| 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 | ஆகையினாலே |
| 𑌅𑌪𑌰𑌿𑌹𑌾𑌰𑍍𑌯𑍇𑌽𑌰𑍍𑌥𑍇 | பரிகரிக்க (விலக்க)க்கூடாத இந்த விஷயத்தில் |

---

* (ரா) தேகமே ஆத்மாவென்று ஒருக்கால் நினைத்தபோதிலும்.

| | |
|---|---|
| 𑌤𑍍𑌵𑌂 | நீ |
| 𑌶𑍋𑌚𑌿𑌤𑍁𑌂 | துக்கப்படுகைக்கு |
| 𑌨𑌾𑌰𑍍𑌹𑌸𑌿 | யோக்கியனல்ல. |

பிறந்தவனுக்கு மரணமும், இறந்தவனுக்குப் பிறப்பும் நிச்சயமாகையால் விலக்கக்கூடாத இவ்விஷயத்தைக்குறித்து நீ துக்கப்படுவது யுக்தமல்ல. (௨௭)

---

௨௮. 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌦𑍀𑌨𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌮𑌧𑍍𑌯𑌾𑌨𑌿 𑌭𑌾𑌰𑌤।
𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌨𑌿𑌧𑌨𑌾𑌨𑍍𑌯𑍇𑌵 𑌤𑌤𑍍𑌰 𑌕𑌾 𑌪𑌰𑌿𑌦𑍇𑌵𑌨𑌾॥

| | |
|---|---|
| 𑌹𑍇 𑌭𑌾𑌰𑌤 | ஓ! அர்சுன! |
| 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 | தேகாதிகள் |
| 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌦𑍀𑌨𑌿* | மாயையிலிருந்துண்டாய் |
| 𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌮𑌧𑍍𑌯𑌾𑌨𑌿 | மத்தியகாலத்திற் காணப்பட்டு |
| 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌨𑌿𑌧𑌨𑌾𑌨𑍍𑌯𑍇𑌵† | மாயையில்தானே லயிக்கின்றன |
| 𑌤𑌤𑍍𑌰 | இந்தவிஷயத்தில் |
| 𑌕𑌾 | என்ன |
| 𑌪𑌰𑌿𑌦𑍇𑌵𑌨𑌾‡ | விசனம். |

ஓ! அர்சுன! தேகாதிகள் மாயையிலிருந்துண்டாய் மத்தியகாலத்திற் காணப்பட்டு மாயையில் லயமடைகின்றன; இந்த விஷயத்தில் ஏன் விசனப்படவேண்டும்?

(𑌵𑍍𑌯𑌾) காணப்படுவதெதுண்டோ அதெல்லா மழிவது நிச்சயமென்பது இதன்கருத்து. (௨௮)

---

௨௯. 𑌆𑌶𑍍𑌚𑌰𑍍𑌯𑌵𑌤𑍍𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌕𑌶𑍍𑌚𑌿𑌦𑍇𑌨 𑌮𑌾𑌶𑍍𑌚𑌰𑍍𑌯𑌵𑌦𑍍𑌵𑌦𑌤𑌿 𑌤𑌥𑍈𑌵 𑌚𑌾𑌨𑍍𑌯𑌃।
𑌆𑌶𑍍𑌚𑌰𑍍𑌯𑌵𑌚𑍍𑌚𑍈𑌨 𑌮𑌨𑍍𑌯𑌃 𑌶𑍃𑌣𑍋𑌤𑌿 𑌶𑍍𑌰𑍁𑌤𑍍𑌵𑌾𑌪𑍍𑌯𑍇𑌨𑌂 𑌵𑍇𑌦 𑌨
𑌚𑍈𑌵 𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍॥

| | |
|---|---|
| 𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍 | ஒருவன் |
| 𑌏𑌨𑌂 | இவனை (ஆத்மாவை) |
| 𑌆𑌶𑍍𑌚𑌰𑍍𑌯𑌵𑌤𑍍 | ஆச்சரிய வஸ்துவைப்போல |
| 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 | பார்க்கிறான் |
| 𑌤𑌥𑍈𑌵 | அப்படியே |
| 𑌅𑌨𑍍𑌯𑌃 | மற்றொருவன் |

---

* (𑌸𑌂) (𑌨𑌾) பிறவிக்கு முன் காணப்படாதது.

† (𑌸𑌂) (𑌨𑌾) மரணத்திற்குப்பின் காணப்படாதது.

‡ 𑌪𑌰𑌿𑌵𑍇𑌦𑌨𑌾 என்று சிலபாடமிருக்கிறது.

| | |
|---|---|
| ஏநம் | இவனை (ஆத்மாவை) |
| ஆஸ்சர்யவத் | ஆச்சரிய வஸ்துவைப்போல |
| வததி | சொல்லுகிறுன் |
| ததா ஹ்யந்ய: | மற்றொருவன் |
| ஏநம் | இவனை (ஆத்மாவை) |
| ஆஸ்சர்யவத் | ஆச்சரியவஸ்துவைப்போல |
| ஸ்ருணோதி | கேட்கிறுன் |
| ஸ்ருத்வாऽப்யேநம் | { கேட்டும், சொல்லியும்பார்த்து மவர்களி லொருவனும் |
| வேத ந சைவ கஸ்சித் | அறிகிறதேயில்லை. |



ஆத்மாவை யொருவ ஞச்சரிய வஸ்துவைப்போற் பார்க்கிறுன்; அப்படியே மற்றொருவ ஞச்சரிய வஸ்துவைப்போற் சொல்லுகிறுன்; மற்றொருவ ஞச்சரிய வஸ்துவைப்போற் கேட்கிறுன். அப்படிக்கேட்டு, சொல்லி, பார்த்து இருந்தபோதிலும் அவர்களி லொருவனு மறிகிறதேயில்லை.

(ஸ்ரீ) சாஸ்திரம் ஆசாரியோபதேச மிவைகளினுல் அடைந்த யோகத்தினுலே ஆத்மாவைப் பார்க்கிற ஒருவன், ஸர்வ வியாபகனும் ஞாநாநந்த ஸ்வரூபனுயும் உலக விலக்ஷணனுயும் தன்னு லெப்பவும் பார்க்கப்பட் டிராதவனுயும் இருப்பதினுலே ஆச்சரியப்படுகிறுன். மற்றொருவன் சாஸ்திராதிகளால் ஆத்மா மேற்சொன்ன விதமான ஸ்வரூப முடையவனென்று தான் தெரிந்துக்கொண்டதை யொருவனுக்குச் சொல்லுகிறுன். அப்படிச் சொல்லும்போது தான் றெரிந்து சொல்லுகிற அந்த ஆத்ம ஸ்வரூபத்தை நினைத்து ஆச்சரியப் படுகிறுன். இப்படிச் சொல்வதைக் கேட்டவன் இப்படிப்பட்ட வஸ்துவுண்டாவென்று, கேட்டவுடனே ஆச்சரியப்படுகிறுன். இப்படிப் பார்த்தவனுவது சொன்னவனுவது கேட்டவனுவது நித்தியாநந்தஸ்வ ரூபமான ஆத்மாவைப் பூரணமா யறிந்தவ னல்லவென்பது தாத்பரியம்.

(வ்யா) கடவல்லி யுபநிஷத் இரண்டாவதுவல்லி ஏழாவது வாக்கியம் இந்த சுலோகத்திற்கொத் தது. ஸ்ரவணாயாபி பஹுபிர்யோ ந லப்ய: ஸ்ருண்வந்தோऽபி பஹவோ யம் ந வித்யு: । ஆஸ்சர்யோ வக்தா குஸலோऽஸ்ய லப்தா ஆஸ்சர்யோ ஜ்ஞாதா குஸலாநுஸிஷ்ட: ॥ இதின் தாத்பரியம் - அந்த ஆத்ம சுவரூபத்தை அநேகர் கேட்க கிடையாதவர்களா யிருக்கிறுர்கள். அநேகர் கேட்டாலும் அறிந்துகொள்ளும் திறமையற்றவர்களா யிருக்கிறுர்கள். இந்த ஆத்மாவை வுபதேசிக்கிறவனும் ஆச்சரியப்படுகிறுன். உபதேசம் பெற்றவனும் ஆச்சரியப்படுகிறுன். ஆத்மாவை யறிகிறவனும் ஆச்சரியப்படுகிறுன். (உகூ)

---

௩௦. 𑌦𑍇𑌹𑍀 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌵𑌧𑍍𑌯𑍋𑌽𑌯𑌂 𑌦𑍇𑌹𑍇 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌭𑌾𑌰𑌤 ।
𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌨 𑌤𑍍𑌵𑌂 𑌶𑍋𑌚𑌿𑌤𑍁𑌮𑌰𑍍𑌹𑌸𑌿 ॥

| | |
|---|---|
| 𑌭𑌾𑌰𑌤 | ஓ! அர்சுன! |
| 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 | எல்லாருடைய |
| 𑌦𑍇𑌹𑍇 | தேகமானது |
| (𑌵𑌧𑍍𑌯𑌮𑌾𑌨𑍇𑌽𑌪𑌿) | கொல்லப்பட்டபோதிலும் |
| 𑌅𑌯𑌂 𑌦𑍇𑌹𑍀 | இந்தத்தேகத்தையுடைய ஆத்மாவானவன் |
| 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 | ஒருபோதும் |
| 𑌅𑌵𑌧𑍍𑌯𑌃 | கொல்லப்படத்தக்கவனல்ல |
| 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 | ஆகையினாலே |
| 𑌤𑍍𑌵𑌂 | நீ |
| 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 | சகலபிராணிகளைக்குறித்தும் |
| 𑌶𑍋𑌚𑌿𑌤𑍁𑌂 | துக்கப்படுகைக்கு |
| 𑌨𑌾𑌰𑍍𑌹𑌸𑌿 | தகுந்தவனல்ல. |

ஓ! அர்சுன! எல்லாருடைய தேகமானது கொல்லப்பட்டபோதிலு மாத்மாவானவன் ஒருபோதுங் கொல்லப்படத் தக்கவனல்ல, ஆகையினாலே நீ சகலபிராணிகளைக் குறித்தும் துக்கப்படுவதற்குத் தகுந்தவனல்ல. (௩௦)

---

௩௧. 𑌸𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑌮𑌪𑌿 𑌚𑌾𑌵𑍇𑌕𑍍𑌷𑍍𑌯 𑌨 𑌵𑌿𑌕𑌮𑍍𑌪𑌿𑌤𑍁𑌮𑌰𑍍𑌹𑌸𑌿 ।
𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌾𑌦𑍍𑌧𑌿 𑌯𑍁𑌦𑍍𑌧𑌾𑌚𑍍𑌛𑍍𑌰𑍇𑌯𑍋𑌽𑌨𑍍𑌯𑌤𑍍𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 ॥

| | |
|---|---|
| 𑌅𑌪𑌿 𑌚 | மேலும் |
| 𑌸𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑌂 | உன் வருணத்தாருக்கு விதிக்கப்பட்டிருக்கிற தருமத்தை |
| 𑌅𑌵𑍇𑌕𑍍𑌷𑍍𑌯 | தெரிந்து |
| 𑌵𑌿𑌕𑌮𑍍𑌪𑌿𑌤𑍁𑌂 | நடுங்க அல்லது தயங்க |
| 𑌨𑌾𑌰𑍍𑌹𑌸𑌿 | யோக்கியனல்ல |
| 𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯 * | க்ஷத்திரியனுக்கு |
| 𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌾𑌤𑍍 | தருமத்தையடுத்த (நியாயமான) |
| 𑌯𑍁𑌦𑍍𑌧𑌾𑌤𑍍 | யுத்தத்தைக்காட்டிலும் |
| 𑌅𑌨𑍍𑌯𑌤𑍍 | வேறு |
| 𑌶𑍍𑌰𑍇𑌯𑌃 | நற்செய்கையானது |
| 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 | இல்லை. |

---

* (ஸ்வா.) க்ஷத்திரியனுடைய ஸ்வதரும மின்னதென்பதை இதின் ௧௮ - வது அத்தியாயம் ௪௩ - வது சுலோகத்தில் காணலாம்.

மேலும் உன் வருணத்தாருக்கு விதிக்கப்பட்டிருக்கிற (அதாவது க்ஷத்திரியனுக்கு யுத்தஞ்செய்வது ஸ்வதரும மானதா லந்த) தருமத்தைத்தெரிந்து யுத்தஞ்செய்யத் தயங்குவது உனக்குச்சரியல்ல, (ஏனென்றால்) க்ஷத்திரியனுக்குத் தருமத்தோடு கூடின யுத்தத்தைக் காட்டிலும் மேலானது வேறேயில்லை.

(ரா) அக்கினிஷ்டோமாதி யாகங்களில் பசுஹிம்சை எப்படித் தருமமானதோ, அப்படியே க்ஷத்திரியனுகிய உனக்கு நியாயமாய் நேரிட்டிருக்கிற இந்த யுத்தம் ஸ்வதருமமானதால் அதினல் தோஷம் உண்டாகாது. யுத்தஞ்செய்யென்பது தாத்பரியம். (௩௧)

---

௩௨. 𑌯𑌦𑍃𑌚𑍍𑌛𑌯𑌾 𑌚𑍋𑌪𑌪𑌨𑍍𑌨𑌂 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌦𑍍𑌵𑌾𑌰𑌮𑌪𑌾𑌵𑍃𑌤𑌮𑍍।
𑌸𑍁𑌖𑌿𑌨𑌃 𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯𑌾𑌃 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌲𑌭𑌨𑍍𑌤𑍇 𑌯𑍁𑌦𑍍𑌧𑌮𑍀𑌦𑍃𑌶𑌮𑍍॥

| | |
|---|---|
| 𑌹𑍇 𑌪𑌾𑌰𑍍𑌥 | ஓ! அர்சுன! |
| 𑌯𑌦𑍃𑌚𑍍𑌛𑌯𑌾 | தானகவே |
| 𑌉𑌪𑌪𑌨𑍍𑌨𑌂 | நேரிட்டிருக்கிறதும் |
| 𑌅𑌪𑌾𑌵𑍃𑌤𑌂 | திறந்திருக்கிற |
| 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌦𑍍𑌵𑌾𑌰𑌂 | சுவர்க்கவாசலுமான |
| 𑌈𑌦𑍃𑌶𑌂 | இப்படிப்பட்ட |
| 𑌯𑍁𑌦𑍍𑌧𑌂 | யுத்தத்தை |
| (𑌯𑍇) 𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯𑌾𑌃 | எந்த க்ஷத்திரியர்கள் |
| 𑌲𑌭𑌨𑍍𑌤𑍇 | அடைகிருர்களோ |
| 𑌤𑍇 | அவர்கள் |
| 𑌸𑍁𑌖𑌿𑌨𑌃 | சுகிகள். |

ஓ! அர்சுன! தானகவே நேரிட்டிருக்கிறதும், திறந்திருக்கிற சுவர்க்க வாசலுமான இப்படிப்பட்ட யுத்தத்தைச்செய்கிற க்ஷத்திரியர்கள் சுகிகள்; என்றல், தருமயுத்தத்தி லிறந்தவர்களுக்குச் சுவர்க்கவாசல் திறந்திருக்கிற தென்பது தாத்பரியம்.

(ஸ்ரீ.வி). யுத்தத்தி லிறந்தவர்கள் சீக்கிரமாய்ச் சுவர்க்கத்தை யடைவார்களென்கிற விதி இதனுற் சொல்லப்பட்டது. (௩௨)

---

௩௩. 𑌅𑌥 𑌚𑍇𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌿𑌮𑌂 𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌂 𑌸𑌂𑌗𑍍𑌰𑌾𑌮𑌂 𑌨 𑌕𑌰𑌿𑌷𑍍𑌯𑌸𑌿।
𑌤𑌤𑌃 𑌸𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑌂 𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌂 𑌚 𑌹𑌿𑌤𑍍𑌵𑌾 𑌪𑌾𑌪𑌮𑌵𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑌸𑌿॥

| | |
|---|---|
| 𑌅𑌥 | (ஸ்வர்க்கப் பிரயோஜனத்தை யிழப்பதுமாத்திரம்) அல்லாமல் |
| 𑌤𑍍𑌵𑌂 | நீ |
| 𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌂 | நியாயமான |

ஊ௨ம் — இந்த
ஸம்ஞாமம் — யுத்தத்தை
ந கரிஷ்யஸி செத் — செய்யாமற் போவாயாகில்
த த: — அதினாலே
ஸ்வயமம் — உன்னுடைய சுவதருமத்தையும்
கீர்த்திஞ்ச* — புகழ்ச்சியையும்
ஹித்வா — இழந்து
பாபம்† — பாவத்தையும்
அவாப்ஸ்யஸி — அடைவாய்.

ஸ்வர்க்கப் பிரயோஜனத்தை இழப்பது மாத்திரமல்லாமல் நீ தருமத்தோடு கூடின இந்த யுத்தத்தைச் செய்யாமற் போவாயாகி லதினாலே உன்னுடைய (க்ஷத்திரிய தருமமாகிய) சுவதருமத்தையும் புகழ்ச்சியையுமிழந்து பாபத்தையுமடைவாய். (௩௩)

௩௪. அகீர்த்திஞ்சாவி பூதாநி கயயிஷ்யந்தி தெவ்யயாம்।
ஸம்பாவிதஸ்யவாகீர்த்தி மரணாததிரிச்யதெ॥

அவிச — மேலும்
பூதாநி — (பிராணிகள்) ஜனங்கள்
அவ்யயாம் — சாசுவதமான (நீண்டகாலம்)
தெ — உன்னுடைய
அகீர்த்திஞ் — அபகீர்த்தியையும்
கயயிஷ்யந்தி — சொல்லுவார்கள்
ஸம்பாவிதஸ்ய — நன்குமதிக்கப்பட்டிருக்கிறவனுக்கு
அகீர்த்தி: — அபகீர்த்தியானது
மரணாத — மரணத்தைவிட
அதிரிச்யதெ — அதிகமாம்.

மேலும், ஜனங்கள் நீண்டகாலம் உன்னுடைய அபகீர்த்தியையுஞ் சொல்லுவார்கள். நன்குமதிக்கப்பட் டிருக்கிறவனுக்கு அபகீர்த்தியானது மரணத்தைவிட வதிகமானது. (௩௪)

௩௫. பயாத்ரணாதுபரதம் மம்ஸ்யந்தெத்வாம் மஹாரயா:।
யெஷாஞ்சத்வம் பஹுமதோ பூத்வாயாஸ்யஸி லாகவம்॥

* (ஶ) மகாதேவர் முதலானவர்களுடன் யுத்தஞ்செய்து அடைந்திருக்கிற கீர்த்தியையும்.

† (ஸ்வா) ஸ்வதருமமான கருமத்தைச்செய்யாமல் விடுவதினு லுண்டாகும் பாபத்தையும்.

| | |
|---|---|
| 𑌤𑍍𑌵𑌂 | நீ |
| 𑌯𑍇𑌷𑌾𑌂 | எவர்களுக்கு |
| 𑌬𑌹𑍁𑌮𑌤𑌃 (𑌬𑌹𑍁𑌮𑌤𑌃) | நன்குமதிக்கப்பட்டவனாகவிருந்தாயோ |
| (𑌚) 𑌮𑌹𑌾𑌰𑌥𑌾𑌃 | அந்தமகாரதிகர்கள் |
| 𑌤𑍍𑌵𑌾𑌂 | உன்னை |
| 𑌭𑌯𑌾𑌤𑍍 | பயத்தினாலே |
| 𑌰𑌣𑌾𑌤𑍍 | யுத்தத்தினின்றும் |
| 𑌉𑌪𑌰𑌤𑌂 | பின்னடைந்தவனாக |
| 𑌮𑌂𑌸𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 | நினைப்பார்கள் |
| 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 | (ஆகையால் நன்குமதிக்கப்பட்டு) இருந்தும் |
| 𑌲𑌾𑌘𑌵𑌂 | இகழ்ச்சியை |
| 𑌯𑌾𑌸𑍍𑌯𑌸𑌿 | அடைவாய். |

நீ யாரால் நன்கு மதிக்கப்பட்டிருந்தாயோ, அந்த மகாரதிகர்கள் உன்னை பயத்தினாலே யுத்தத்திலிருந்து பின்னடைந்தவனாக நினைப்பார்கள், ஆகையால் நன்கு மதிக்கப்பட்டவனாக விருந்தும் இகழ்ச்சியை யடைவாய். (௩௫)

---

௩௬. 𑌅𑌵𑌾𑌚𑍍𑌯𑌵𑌾𑌦𑌾𑌂𑌶𑍍𑌚 𑌬𑌹𑍂𑌨𑍍 𑌵𑌦𑌿𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌤𑌵𑌾𑌹𑌿𑌤𑌾𑌃।
𑌨𑌿𑌨𑍍𑌦𑌨𑍍𑌤𑌸𑍍𑌤𑌵 𑌸𑌾𑌮𑌰𑍍𑌥𑍍𑌯𑌂 𑌤𑌤𑍋 𑌦𑍁𑌃𑌖𑌤𑌰𑌂 𑌨𑍁 𑌕𑌿𑌮𑍍॥

| | |
|---|---|
| 𑌤𑌵 | உன்னுடைய |
| 𑌅𑌹𑌿𑌤𑌾𑌃 | சத்துருக்கள் |
| 𑌤𑌵 | உன்னுடைய |
| 𑌸𑌾𑌮𑌰𑍍𑌥𑍍𑌯𑌂 | சாமர்த்தியத்தை |
| 𑌨𑌿𑌨𑍍𑌦𑌨𑍍𑌤𑌃 | நிந்திக்கிறவர்களாக |
| 𑌬𑌹𑍂𑌨𑍍 | அநேகமான |
| 𑌅𑌵𑌾𑌚𑍍𑌯𑌵𑌾𑌦𑌾𑌂𑌶𑍍𑌚 | சொல்லத்தகாதவார்த்தைகளையும் |
| 𑌵𑌦𑌿𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 | சொல்லுவார்கள் |
| 𑌤𑌤𑌃 | அதைப்பார்க்கிலும் |
| 𑌦𑍁𑌃𑌖𑌤𑌰𑌂 | அதிகதுக்கம் |
| 𑌕𑌿𑌂 𑌨𑍁 | என்னவிருக்கிறது. |

உன்னுடைய சத்துருக்கள் உன்னுடைய சாமர்த்தியத்தை நிந்தித்து, சொல்லத்தகாத அநேக வார்த்தைகளையுஞ் சொல்லுவார்கள்; அதைப்பார்க்கிலு மதிகதுக்க மென்னவிருக்கிறது? (௩௬)

---

௩௭. 𑌹𑌤𑍋𑌵𑌾𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑌸𑍇 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌂 𑌜𑌿𑌤𑍍𑌵𑌾𑌵𑌾𑌭𑍋𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑍇𑌮𑌹𑍀𑌂।
𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍁𑌤𑍍𑌤𑌿𑌷𑍍𑌠 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌯𑍁𑌦𑍍𑌧𑌾𑌯𑌕𑍃𑌤𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑌃॥

| | |
|---|---|
| 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 | ஓ! அர்சுன! |
| 𑌹𑌤𑍋𑌵𑌾 | கொல்லப்பட்டாலோ |
| 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌂 | சுவர்க்கத்தை |
| 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑌸𑍇* | அடைவாய் |
| 𑌜𑌿𑌤𑍍𑌵𑌾𑌵𑌾 | ஜயித்தாலோ |
| 𑌮𑌹𑍀𑌂 | இராஜ்ஜியத்தை |
| 𑌭𑍋𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑍇 | அநுபவிப்பாய் |
| 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 | ஆகையினாலே |
| 𑌯𑍁𑌦𑍍𑌧𑌾𑌯 | யுத்தத்தின்பொருட்டு |
| 𑌕𑍃𑌤𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑌃 | நிச்சயித்தவனாக |
| 𑌉𑌤𑍍𑌤𑌿𑌷𑍍𑌠 | எழுந்திரு. |

ஓ! அர்சுன! நீ கொல்லப்பட்டாலோ ஸ்வர்க்கத்தை யடைவாய், ஜயித்தாலோ இராஜ்ஜியத்தை யனுபவிப்பாய்; ஆகையினாலே, யுத்தத்தின்பொருட்டு நிச்சயஞ் செய்துகொண் டெழுந்திரு. (௩௭)

---

௩௮. 𑌸𑍁𑌖𑌦𑍁𑌃𑌖𑍇 𑌸𑌮𑍇𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌲𑌾𑌭𑌾𑌲𑌾𑌭𑍌𑌜𑌯𑌾𑌜𑌯𑍌।
𑌤𑌤𑍋𑌯𑍁𑌦𑍍𑌧𑌾𑌯𑌯𑍁𑌜𑍍𑌯𑌸𑍍𑌵 𑌨𑍈𑌵𑌂𑌪𑌾𑌪𑌮𑌵𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑌸𑌿॥

| | |
|---|---|
| 𑌸𑍁𑌖𑌦𑍁𑌃𑌖𑍇 | சுகதுக்கங்களை |
| 𑌸𑌮𑍇 | சமமாக |
| 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 | செய்து (எண்ணி) |
| 𑌲𑌾𑌭𑌾𑌲𑌾𑌭𑍌 | லாபநஷ்டங்களையும் |
| 𑌜𑌯𑌾𑌜𑌯𑍌 | ஜயாபஜயங்களையும் |
| (𑌸𑌮𑍌𑌕𑍃𑌤𑍍𑌵𑌾) | சமமாக (யெண்ணி) |
| 𑌤𑌤𑌃 | அதற்குப்பிறகு |
| 𑌯𑍁𑌦𑍍𑌧𑌾𑌯 | யுத்தத்திற்கு |
| 𑌯𑍁𑌜𑍍𑌯𑌸𑍍𑌵 | சித்தனாகக்கடவாய் |
| 𑌏𑌵𑌂 (𑌸𑌤𑌿) | இப்படிப்பட்ட நிச்சயமுடையவனானல் |
| 𑌪𑌾𑌪𑌂 | பாபத்தை |
| 𑌨𑌾𑌵𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑌸𑌿 | அடையமாட்டாய். |

சுகதுக்கங்களையு மிலாப நஷ்டங்களையும், ஜயாபஜயங்களையும் சமமாகச்செய்து (நினைத்து) க்கொண்டு பிறகு யுத்தத்திற்குச் சித்தனாகக் கடவாய். இப்படிப்பட்ட நிச்சயமுள்ளவனாகவானல் பாபத்தை அடையமாட்டாய்.

---

* 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑌸𑌿 என்று (ஸ்ரீ) பாடம், அர்த்தத்தில் பேதமில்லை.

(ஶ்ரீ) சுக துக்கம், இலாப நஷ்டம், ஜயாபஜய மென்கிற பதார்த்தங்கள் காரணகாரியங்களாக விருக்கின்றன. சுகதுக்கத்திற்குக் காரணம் இலாப நஷ்டம். இலாப நஷ்டத்திற்குக் காரணம் ஜயாபஜயங்கள்; ஆகையால், காரணங்காரிய மிரண்டையும் விட்டுவிட வேண்டுமென்பது தாத்பரியம். (௩௮)

---

௩௯. 𑌏𑌷𑌾𑌤𑍇𑌽𑌭𑌿𑌹𑌿𑌤𑌾 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑍇 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌯𑍋𑌗𑍇𑌤𑍍𑌵𑌿𑌮𑌾𑌂𑌶𑍃𑌣𑍁।
𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌾𑌯𑍁𑌕𑍍𑌤𑍋𑌯𑌯𑌾𑌪𑌾𑌰𑍍𑌥 𑌕𑌰𑍍𑌮𑌬𑌨𑍍𑌧𑌂𑌪𑍍𑌰𑌹𑌾𑌸𑍍𑌯𑌸𑌿॥

| | |
|---|---|
| 𑌪𑌾𑌰𑍍𑌥 | ஓ ! அர்சுன ! |
| 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑍇* | ஆத்மதத்துவத்தில் |
| 𑌏𑌷𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 | இந்தப்புத்தியானது |
| 𑌤𑍇 | உனக்கு |
| 𑌅𑌭𑌿𑌹𑌿𑌤𑌾 | சொல்லப்பட்டது |
| 𑌯𑌯𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌾 | எப்படிப்பட்ட புத்தியோடு |
| 𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 | கூடினவனால் |
| 𑌕𑌰𑍍𑌮𑌬𑌨𑍍𑌧𑌂 | கருமபெந்தம் அல்லது கருமத்தினலுண்டான பெந்தத்தை |
| 𑌪𑍍𑌰𑌹𑌾𑌸𑍍𑌯𑌸𑌿 | விடுவாயோ |
| (𑌤𑌾𑌂) | அப்படிப்பட்ட |
| 𑌯𑍋𑌗𑍇† | யோகவிஷயத்தில் |
| 𑌇𑌮𑌾𑌂 | இதை (இப்போது சொல்லப்போகிற புத்தியை) |
| 𑌶𑍃𑌣𑍁 | கேள். |

ஓ ! அர்சுன ! ஆத்மதத்துவவிஷயத்தி லிந்தப்புத்தியானது உனக்கு (இதுவரையில்) சொல்லப்பட்டது. எப்படிப்பட்ட புத்தியோடு கூடினவனால் கருமபெந்தத்திலிருந்து விடுவித்துக்கொள்ளுவாயோ அப்படிப்பட்ட (கரும) யோகவிஷயமான புத்தியைச் சொல்லுகிறேன். கேள்.

(ஶம்) (ரா) இந்த அத்தியாயம் ௧௨ - வது சுலோகம் முதல் ௩௰ - வது சுலோகம் வரையில் ஆத்ம தத்துவத்தை விளக்குவதாகிய யோகமானது சொல்லப்பட்டது ௩௧ - வது சுலோகம் முதல் ௩௮-வது சுலோகம் வரையில், உலகவிஷயமான ஞானஞ் சொல்லப்பட்டது. ௪௰ - வது சுலோகம் முதல் ௫௧ - வது சுலோகம் வரையில் எதானது கருமபெந்தத்தை நிவிர்த்தித்து மோக்ஷத்தைக் கொடுக்குமோ, அப்படிப்பட்ட கரும யோகமானது சொல்லப்படும்.

---

* (ஸா வ) ஜீவாத்மா பரமாத்மாக்களுடைய தத்துவத்தைப்பற்றிய விஷயத்தில்

† (ஶம்) (ரா) (ஶ்ரீ, வி) ஆத்மதத்துவஞானத்திற்குக் காரணமானகருமயோகத்தில்.

(மீ,வி) சo - வது சுலோகம் முதல் சச - வது சுலோகம் வரையில் காம்மிய (பலன் வேண்டுமென்கிற ஆசையுடன் கூடின) கருமம் நிந்திக்கப்படுகிறது. (ஙகூ)

---

சo. 𑌨𑍇𑌹𑌾𑌭𑌿𑌕𑍍𑌰𑌮𑌨𑌾𑌶𑍋𑌽𑌸𑍍𑌤𑌿 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌵𑌾𑌯𑍋 𑌨𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇।
𑌸𑍍𑌵𑌲𑍍𑌪𑌮𑌪𑍍𑌯𑌸𑍍𑌯 𑌧𑌰𑍍𑌮𑌸𑍍𑌯 𑌤𑍍𑌰𑌾𑌯𑌤𑍇 𑌮𑌹𑌤𑍋 𑌭𑌯𑌾𑌤𑍍॥

| | |
|---|---|
| 𑌇𑌹 | பலாபேக்ஷையின்றி ஈசுவரார்ப்பணமாய்ச் செய்யப்படுங் கருமயோகத்தில் |
| 𑌅𑌭𑌿𑌕𑍍𑌰𑌮𑌨𑌾𑌶𑌃 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 | தொடங்குவது வீணாகாது |
| 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌵𑌾𑌯𑌃 | தோஷமானது |
| 𑌨𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 | கிடையாது |
| 𑌅𑌸𑍍𑌯 𑌧𑌰𑍍𑌮𑌸𑍍𑌯 | இந்த நிஷ்காம கருமமாகிய தருமத்தினுடைய |
| 𑌸𑍍𑌵𑌲𑍍𑌪𑌮𑌪𑌿 | சிறியபாகமுங்கூட |
| 𑌮𑌹𑌤𑌃 | மிகப்பெரிதான |
| 𑌭𑌯𑌾𑌤𑍍 | ஜநநமரணமாகிய பயத்திலிருந்து |
| 𑌤𑍍𑌰𑌾𑌯𑌤𑍇 | விடுவிக்கும். |

பலாபேக்ஷையின்றி ஈசுவரார்ப்பணமாய்ச் செய்யப்படுவதாகிய (நிஷ்காம) கருமயோகத்தில் தொடங்குவது வீணாகாது. (பூர்த்தியாகாவிட்டாலுங்கூட) தோஷமானது கிடையாது. இந்த நிஷ்காம கருமமாகிய தருமத்தினுடைய சிறிய பாகமுங்கூட மிகப்பெரிதான ஜநநமரண பயத்திலிருந்து விடுவிக்கும்.

(ஸ°) (ஸ்ரீ) வியவசாய முதலிய கருமங்களைச் செய்ய ஆரம்பித்து நடுவில் விட்டுவிடுவதினால் அல்லது இடையூறு நேரிட்டு அதினால் நடத்தக்கூடாமை யாவதினால் எப்படி யந்தப்பயிர் பிரயோஜனத்தைக் கொடுக்காமல் வீணாய்ப் போய்விடுமோ அப்படி நிஷ்காமகருமம் வீணாகாது. செய்தவரையில் மோக்ஷ சாதனமாகிய பெரிய பிரயோஜனமுண்டாகுமென்பது தாத்பரியம். (சo)

---

சக. 𑌵𑍍𑌯𑌵𑌸𑌾𑌯𑌾𑌤𑍍𑌮𑌿𑌕𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍇𑌕𑍇𑌹 𑌕𑍁𑌰𑍁𑌨𑌨𑍍𑌦𑌨।
𑌬𑌹𑍁𑌶𑌾𑌖𑌾 𑌹𑍍𑌯𑌨𑌨𑍍𑌤𑌾𑌶𑍍𑌚 𑌬𑍁𑌦𑍍𑌧𑌯𑍋𑌽𑌵𑍍𑌯𑌵𑌸𑌾𑌯𑌿𑌨𑌾𑌮𑍍॥

| | |
|---|---|
| 𑌹𑍇 𑌕𑍁𑌰𑍁𑌨𑌨𑍍𑌦𑌨 | ஓ! குருவம்சத்திற் பிறந்தவனே! |
| 𑌇𑌹* | இந்த நிஷ்காம கருமயோகத்தில் |
| 𑌵𑍍𑌯𑌵𑌸𑌾𑌯𑌾𑌤𑍍𑌮𑌿𑌕𑌾† | நிச்சயஸ்வரூபமான |

---

* (ரா) சாஸ்திரோக்தமான கருமத்தில்.

† (ஸ்ரீ) ஈசுவர பக்தியினாலே நான் சம்சாரமாகிய சமுத்திரத்தைத் தாண்டுவேன் என்கிற நிச்சயமான; (ரா) பரமாத்மாவைத்தெரிந்து நான் செய்யப்பட்ட வேதோக்தமான சகல கருமங்களையும் அந்தப் பரமாத்மாவுக்கு அர்ப்பணஞ்செய்து அதினாலேயே நான் கடைத்தேறுகிறேனென்கிற நிச்சயமான; (மீ,வி) சாஸ்திரப் பிரமாணங்களினால் நிர்ணயிக்கப்பட்ட பரமார்த்தமானது மீசுவர விஷயமானதுமான.

| | |
|---|---|
| வ்யவஸாயாத்மிகா | புத்தியானது |
| ஏகேஹ* | ஒன்றே |
| அவ்யவஸாயிநாம்† | நிச்சயபுத்தியில்லாதவர்களுடைய |
| புத்தய: | புத்திகள் |
| பஹுசாகா: | பலபிரிவுள்ளவைகளாயும் |
| அநந்தாஶ்ச | அநேகங்களாயுமிருக்கின்றன. |

ஓ! அர்சுன! இந்தக் கருமயோகத்தில் நிச்சய ஸ்வரூபமான புத்தியானது ஒன்றே. நிச்சய புத்தியில்லாதவர்களுடைய புத்திகள் பல பிரிவுள்ளவைகளாயு மநேகங்களாயு மிருக்கின்றன.

(வ்யா) நிச்சயபுத்தி யொன்றே யென்றும், அநிச்சயபுத்தி பலவென்றும் இதிற் சொல்லப்பட் டிருக்கிறது. இவ்விரண்டு புத்திகளும் கருமவிஷயத்திற்குச் சம்பந்தப்பட்டன. அதெப்படி யென்றால், ஸ்வர்க்கமடைய இச்சையுள்ளவன் ஜ்யோதிஷ்டோம மென்கிற யாகத்தையும், பசுக்கள் அதிகமாய் வேண்டுமென்கிற இச்சையுள்ளவன் சத்திரயாகத்தையும், செய்யவேண்டியதென்றும், இப்படியே ஒவ்வொரு கருமத்திற்கு மொவ்வொரு பலன் சொல்லப்பட் டிருக்கிறது. அந்தப் பலன் றனக்குக்கிடைக்க வேண்டுமென்கிற விச்சையுடையவன், எந்தக்கருமத்திற்கு விசேஷ பலனும் கருமஞ்செய்வதில் பிரயாசை சொற்பமுமுள்ள தென்பதைத் தெரிந்துகொள்ளவேண்டும். பிறகு அதைப்பற்றிய விதியை யறிந்துகொள்ளவேண்டும். பிறகு அதைச்செய்ய இடம், பொருள், ஏவல் இவைகளைத் தேடவேண்டும். இவைகளெல்லா மநுகூலமாய் யக்ஞாதி கருமங்களை யாரம்பித்தால் அதில் யாதொரு இடையூறில்லாமல் முடியவேண்டும். யாதொரு இடையூறு நேரிட்டால் செய்த காரியம் பிரயோஜன மற்றுப்போவது மாத்திரமல்ல, பாவமுமுண்டாகும், காம்மியகருமமாகிய விதில் இவ்வளவு நிர்ப்பந்த மிருப்பதால், இதைச் செய்பவனுக்குப் பலபிரிவுள்ள அநேக புத்திகளென்று சொல்லப்பட்டது. இவ்வளவு பிரயாசைப்பட்டுச் செய்வதற்குப் பலன்கொடுக்குந் தேவதையாவது ஒன்றாவென்றால், அப்படியுமில்லை. இந்திரன், அக்கினி, வாயு முதலான பல தேவர்களா யிருக்கிறார்கள். அவர்களாற் கொடுக்கப்படும் பலனோ, சுவர்க்கமு மதற்குத் தாழ்ந்தவைகளுமேயன்றி யதைவிடச் சிரேஷ்டமானதுமல்ல, பலனுமொன்றல்ல, சுவர்க்க முதலியவைகளை யனுபவிப்பவன் குறித்த காலம்வரையில அவ்விடமிருந்து பிறகு ஜன்மமெடுக்க வேண்டியதேயாகிறது. ஜநநமரணங்க ளிவனைவிட்டு நீங்குவதேயில்லை. ஆகையா

---

* (ஈா) ஒன்றே, என்றால் மோக்ஷமாகிய பலனுமொன்றே, அதற்குச் சாதனமு மொன்றேயென்று தாத்பரியம்.

† (ஸ்ரீ) பக்தியற்ற காம்மிய கருமிகள்.

லொரு நிச்சயமில்லாத பல புத்திகளை யுடையவனுக்கு இப்படிப்பட்ட பலன்றான் கிடைக்கும். இதே கருமங்களை யவைகளுக்குள்ள பலன்களை யிச்சிக்காமல் ஈசுவரார்ப்பணமாகச் செய்வானாகில், அவனுக்கெந்த கருமத்திற்கு என்னபலன் என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டியதுமில்லை. பிரயாசை யதிகமா, சுலபமா வென்பதை விசாரிக்க வேண்டியதுமில்லை. இடம், பொருள், ஏவல், கிடைக்க வில்லையே யென்கிற விசாரமுமில்லை. தொடங்கின கருமம் முடிவுபெறாவிட்டால் பாவம் வருமென்ற பயமுமில்லை. யாதொரு விசாரமு மில்லாமல் தன்னா லியன்றமாத்திரம் சத்கருமங்களைச்செய்து ஈசுவரார்ப்பணஞ் செய்துவிட்டால் ஈசுவரனவர் சித்த சுத்தியையும் ஞானத்தையு முண்டாக்கி ஜநநமரண துக்கத்தைப் போக்கடித்து நித்தியாநந்தமான மோக்ஷத்தை யடைவிக்கிறார். இப்படிப்பட்ட கருமயோகிக்கு, தான் செய்கிற கருமம் எப்படிப்பட்டது, அதை எப்படிச் செய்கிறது, என்னென்ன வஸ்துக்கள் வேண்டியது என்பது முதலிய பல புத்திகளுக்கு இடமன்றி சத்கருமங்களைச்செய்து ஈசுவரார்ப்பணஞ் செய்யவேண்டியதென்கிற ஓரே புத்திதான். அதற் கீசுவரனை யடைகிறதாகிய மோக்ஷமொன்றேதான் பலன். ஆகையா லிவன், ஓரே நிச்சயபுத்தி யுடையவனாகச் சொல்லப்பட்டான்.

ஒருவன் கருமத்தின் பலனை யபேக்ஷிக்கவுமில்லை, செய்கிற கருமத்தை ஈசுவரார்ப்பண புத்தியாய்ச் செய்யவுமில்லை. அப்படிப்பட்ட கருமத்திற்கு என்ன பலனென்கிற கேழ்வி யிதிலிருந்துண்டாகிறது. தனக்காவது பிறருக்காவது பிரயோஜனமற்றதாகிய காரியஞ்செய்வது எப்படி வீணானதோ அப்படி வீணானதென்றுதா னுத்தரஞ் சொல்ல வேண்டும். (சக)

---

சஉ. யாமிமாம் புஷ்பிதாம் வாசம் ப்ரவதந்த்யவிபஶ்சித:।
வேதவாதரதா: பார்த்த நாந்யதஸ்தீதி வாதிந:॥

சங. காமாத்மாந: ஸ்வர்க்கபரா ஜந்மகர்மபலப்ரதாம்।
க்ரியாவிஶேஷபஹுளாம் போகைஶ்வர்யகதிம் ப்ரதி॥

சச. போகைஶ்வர்யப்ரஸக்தாநாம் தயாபஹ்ருதசேதஸாம்।
வ்யவஸாயாத்மிகா புத்தி: ஸமாதௌ ந விதீயதே॥

| | |
|---|---|
| ஹே பார்த்த | ஓ! அர்சுந! |
| வேதவாதரதா: | வேதத்திற் பலத்தைச்சொல்லுகிற வாக்கியங்களில் (அர்த்தவாதத்தில்) பிரீதியை யுடையவும் |

| | |
|---|---|
| நாந்யதஸ்தீதிவாதிந:* | (சுவர்க்கத்தைக்காட்டிலும்) வேறே விசேஷபலன்க ளில்லையென்று சொல்லுகிறவும் |
| காமாத்மாந: | (புத்திர மித்திர களத்திராதிகளில்) ஆசை (அல்லது ஆசையினுல்) நிறைந்த மனதையுடையவும் |
| ஸ்வர்கபரா: | ஸ்வர்க்கமே சகலத்திலு மேலான பிரயோஜனமென்றெண்ணி யிருக்கிறவுமான |
| அவிபஶ்சித: | அவிவேகிகள் |
| போகைஶ்வர்யகதிம் ப்ரதி | போகைசுவரியங்களை யடைவதற்காக |
| க்ரியாவிஶேஷபஹுளாம் | அநேக கருமபேதங்களை யுளைப்பதும் |
| ஜந்மகர்மபலப்ரதாம் | ஜநநத்தையும் கருமத்தையும் கருமபலன்களையுங் கொடுப்பதும் |
| புஷ்பிதாம்† இமாம் | (பலமில்லாத) புஷ்பத்தையுடைய மரங்களைப்போல் விளங்குவதுமான இப்படிப்பட்ட |
| யாம் வாசம் | எந்த வார்த்தையை |
| ப்ரவதந்தி | சொல்லுகிறுர்களோ |
| தயா | அந்த வார்த்தையினுலே |
| அபஹ்ருதசேதஸாம் | அபகரிக்கப்பட்ட மனதை யுடையவர்களாயும் |
| போகைஶ்வர்யப்ரஸக்தாநாம் | போகைசுவரியங்களில் ஆசையை யுடையவர்களாயு மிருக்கிறவர்களுக்கு |
| வ்யவஸாயாத்மிகா புத்தி: | நிச்சயசுவரூபமான புத்தியானது |
| ஸமாதௌ‡ | மனதில் |
| நவிதீயதே | உண்டாகவேமாட்டாது. |

ஓ! அர்சுன! வேதத்திற் பலனைச் சொல்லுகிற வாக்கியங்களாகிய அர்த்தவாதத்தில் பிரீதியை யுடையவர்களும், சுவர்க்கத்தைக்காட்

* (ஶ) வேதங்கள் முழுவதும் பகவானைப்பற்றியே சொல்லுகிறதென் றறியாதவர்களாயும்; (மீ,வி) ஈசுவரனுவது மோக்ஷமாவது இல்லையென்று வாதிப்பவர்களாயும்.

† (ஶ) (மீ,வி) புஷ்பமாகிய சுவர்க்காதிகளையே பலனுகச்சொல்லுகிற,

‡ (ம௦) (ரா) அந்தக்கரணத்தில்; (ஸ்ரீ) யோக ஸமாதியில்; (ஶ) ஈசுவரத்தியான விஷயத்தில்; (மீ,வி) பகவானிடத்தில்.

டிலும் வேறே விசேஷபலன்களில்லையென்று சொல்லுகிறவர்களும், புத்திரமித்திர களத்திராதிகளி லாசையுடையவர்களும், சுவர்க்கமே மேலான பிரயோஜனமென்று எண்ணி யிருக்கிறவர்களுமாகிய அவிவேகிகள் போகைசுவரியங்களை அடைவதற்காக அநேக கருமபேதங்களைச் சொல்லுகிறவும், ஜநநத்தையும் கருமத்தையும் கருமபலன்களையுங் கொடுக்கிறவும், பலமில்லாத புஷ்பத்தையுடைய மரங்களைப்போல் விளங்குகிறவுமான விப்படிப்பட்ட எந்த வார்த்தையைச் சொல்லுகிறார்களோ அந்த வார்த்தையினாலே மயங்கிய மனதை யுடையவர்களாயும், போகைசுவரியங்களில் ஆசை யுடையவர்களாயு மிருக்கிறவர்களுக்கு நிச்சய சுவரூபமான புத்தியான துண்டாகவே மாட்டாது.

(ஸ்வா) யக்ஞம் முதலிய கருமங்களுக்குச் சிரேஷ்டமான பலன் ஸ்வர்க்காதிகளென்றும், புத்திரமித்திர களத்திர தனதான்னிய வஸ்துவாகனாதி பலன்களு முண்டாகுமென்றும் வேதங்களிற் பலன்களைச் சொல்லுகிற அர்த்தவாதங்களைக் கேட்டுப் போகைசுவரியாதிகளில் ஆசைகொண்டு அவைகளிடத்தி லிழுக்கப்பட்டிருக்கிற மனதையுடையவனுக்கு ஆத்மஸ்வரூப ஞானத்தில் பிரவிர்த்தியே யுண்டாகமாட்டாதென்பது இந்தச் சுலோகங்களின் கருத்து. (௪௨-௪௩-௪௪)

---

௪௫. த்ரைகுண்யவிஷயா வேதா நிஸ்த்ரைகுண்யோ பவார்ஜுந।
நிர்த்வந்த்வோ நித்யஸத்த்வஸ்தோ நிர்யோகக்ஷேம ஆத்மவாந்॥

| | |
|---|---|
| ஹே அர்ஜுந | ஓ! அர்சுந! |
| வேதா: | வேதங்கள் |
| த்ரைகுண்யவிஷயா:* | (சத்துவாதி) முக்குணங்களை விஷயமாக வுடையன |
| த்வம் | நீ |
| நிஸ்த்ரைகுண்ய:† | ஆசையற்றவனாகவும் |
| நிர்த்வந்த்வ:‡ | (சுகம் துக்க மிலாப நஷ்டமுதலான) துவந்துவங்க ளற்றவனாகவும் |

---

* (ஶம்) முக்குணங்களினா லுண்டாக்கப்பட்ட சம்சாரசுவரூபத்தைத் தெரிவிக்கின்றன; (ஸ்ரீ,வி) ஸ்வர்க்காதிகளைத் தெரிவிக்கின்றன.

† (ஸ்ரீ,வி) முக்குணங்களை விட்டவனாகவும். என்றால், முக்குணங்களா லுண்டாகும் காரியங்களை விடுவதென்று தாத்பரியம். (ஸ்வா) ஸத்துவாதி முக்குணங்களுடைய ஸ்வரூபம் அவைகளின் காரிய மிவைகளிதின் ௧௪-வது அத்தியாயத்திற் சொல்லப்படுகின்றன.

‡ (ஸ்வா) சுகம் துக்கம், இலாபம் நஷ்டம், ஜயம் அபஜயம், நன்மை தீமை, இப்படிப்பட்ட வொன்றுக்கொன்று விரோதமான விஷயங்கள் துவந்துவங்களென்று சொல்லப்படும்.

| | |
|---|---|
| நித்யஸத்வஸ்த:* | நித்திய சத்துவநிலையை யுடையவனாகவும் |
| நிர்யோகக்ஷேம:† | யோகக்ஷேமங்க ளற்றவனாகவும் |
| ஆத்மவாந் (ச)‡ | அப்பிரமத்தனாகவும் (ஊக்கமுள்ளவன்) |
| பவ | ஆகக்கடவாய். |

ஓ! அர்சுன! வேதங்கள் சத்துவாதி முக்குணங்களை விஷயமாக வுடையன (என்றால், காம்மிய கருமிகளுக்காக ஏற்பட்டன) நீ யாசை யற்றவனாகவும், துவந்துவங்க ளற்றவனாகவும், நித்திய சத்துவ நிலையை யுடையவனாகவும், யோகக்ஷேமங்க ளற்றவனாகவும், அப்பிரமத்தனாகவு மாகக்கடவாய்.

(ஸ்ரீ)(ரா) முக்குணங்களுடைய வதிகாரிகளுக்கு அவரவர்களுடைய கருமங்களினா லுண்டாகும் பலனிதிற் சொல்லப்பட்டது.

(மீ.வி) இந்தச் சுலோகம் முதல் சு - வது அத்தியாயம் முடியும் வரையில் நிஷ்காம கருமயோக முபதேசிக்கப் படுகிறது. ஆனால் சில சுலோகங்களில் வேறேசங்கதிகள் சொல்லப்படுகின்றனவே யென்றால், அவை மத்தியிலுண்டான கேள்விக்கு உத்தமாக விருக்கும். (சரு)

---

சசு. யாவாநர்த்த உதபாநே ஸர்வத: ஸம்ப்லுதோதகே।
தாவாந்ஸர்வேஷு வேதேஷு ப்ராஹ்மணஸ்ய விஜாநத:॥

| | |
|---|---|
| உதபாநே | ஸ்நாநபாநம் முதலிய காரியங்களுக்குச் சொற்பஜலமுள்ள கிணறுமுதலியவை களில் |
| யாவாநர்த்த: | எவ்வளவு பிரயோஜனமோ |
| தாவாந் | அவ்வளவு |
| ஸர்வத: ஸம்ப்லுதோதகே | நாலுபக்கங்களிலிருந்தும் வந்துசேருகிற விஸ்தாரமான ஜலமுள்ள ஏரியில் |
| (ஸவதி யதா) | உண்டாவதுபோல |

---

* (ஸ்ரீ) எப்போதும் தைரியத்தை யுடையவனாகவும்; (ஸம்) (ரா) எப்போதுஞ் சுத்தசத்துவ குணத்தையே ஆசிரயித்தவனாகவும்; (மீ,வி) எப்பவும் ஹரித்தியானத்தையே யுடையவனாகவும்.

† (ஸம்) (ஸ்ரீ) (ரா) (மீ,வி) தனக்கில்லாத வஸ்துவையடைவது (யோக:) யோகம். தனக்குள்ள வஸ்துக்களைப் போக்கடித்துக் கொள்ளாம லிரக்ஷிக்கிறது (க்ஷேம:) க்ஷேமம்; இவைகள் (நி:) = அற்றவனாகவும்.

‡ (ரா) ஆத்ம ஞானியாகவும், (மீ,வி) ஹரியே சுவாமியென்கிற நம்பிக்கை யுடையவனாகவும்.

| | |
|---|---|
| ஸவெ஼ஷு-வெதெஷு | வேதோக்தமான சகலகருமங்களிலேயும் |
| (யாவாநயஃ) | எவ்வளவு பிரயோஜனமோ |
| (தாவாநயஃ) | அவ்வளவு பிரயோஜனமும் |
| விஜாநதஃ | ஆத்மதத்துவ சுவரூப நிச்சயமுள்ள |
| ஬்ராஹ்மணஸ்ய | பிரம்மநிஷ்டனுக்கு |
| (ஸவதி) | உண்டாகும். |

ஸ்நாநபாநாதிகளுக்குச் சொற்பத் தண்ணீருள்ள கிணறு முதலியவைகளில் எவ்வளவு பிரயோஜனமோ அவ்வளவு பிரயோஜனம் நாலு பக்கங்களிலிருந்தும் வந்து சேருகிற விஸ்தாரமான ஜலமுள்ள ஏரியில் உண்டாவதுபோல் வேதோக்தமான சகல கருமங்களினுலேயும் எவ்வளவு பிரயோஜனமோ அவ்வளவு பிரயோஜனமும் ஆத்மஸ்வரூப நிச்சயமுள்ள பிரம்மநிஷ்டனுக் குண்டாகும்.

(ரா) பல திக்கிலிருந்தும் வருகிற வதிக ஜலமுள்ள ஏரி முதலியவைகளில் தாகத்திற்குத் தண்ணீர் குடிக்கப்போனவன் தனக் கெவ்வளவு வேண்டியதோ அவ்வளவு உபயோகம் செய்வதுபோல் வேதங்கள் எவ்வளவு விரிவாகவிருந்தாலும் வேதோக்த கருமானுஷ்டானமுள்ள வேதார்த்தங்களை யறிந்தவன் றனக்கு வேதத்திலிருந் துபயோகஞ் செய்துகொள்ள வேண்டிய தெவ்வளவோ அவ்வளவு மட்டுந்தானுபயோகஞ் செய்துகொள்ளுவானென்பது தாத்பரியம்.

(ஸ்ரீ, வி) (முதலில் அந்வயஞ்செய்து எழுதப்பட்டிருக்கிற அர்த்தத்தையே சொல்லி மறுபடி யடியிற்கண்டவிதமாய் வேருெரு அர்த்தஞ் செய்திருக்கிருர். எப்படியென்ருல்) ஸவஃதஸ்ஸம்ப்லுதொதகெ = பிரளய ஜலத்திலிருக்கிற, உதபாநெ = உ௧ = உத்தமனுயும், ௬வ = ஒருவராலு மிரக்ஷிக்கப்படாதவனுயும், ௬நெ = சகல பிரபஞ்சங்களையும் நடத்துகிறவனுயு மிருக்கிற பரமாத்மாவே (ப்ரஸந்நஸதி) பிரசன்னனுனல், ஸவெஷு-வெதெஷு - யாவாநயஃ = காம்மிய கருமங்களைச் செய்பவனுக்கு வேதங்களிற் சொல்லியிருக்கிற பலன்களெவ்வளவுண்டோ, தாவாநு = அவ்வளவும், விஜாநதஃ = சாஸ்திராசாரியோபதேசத்தினுல் பிரம்மத்தையறிந்தவனுயும், ஬்ராஹ்மணஸ்ய = பிரம்மத்தை நேராய்ப்பார்த்தவனுயு மிருக்கிறவனுக்கு, (ஸவதி) உண்டாகும்.

(ஸ்வா) ஸ்வல்ப ஜலமிருக்கிற கிணறு குட்டை முதலியதை யாசிரயம் பண்ணுகிறவனுக்குண்டாகும் பிரயோஜனம் மிகவுஞ் சொற்பமாகவேதானிருக்கும். பெரிய ஏரி நதி முதலியவைகளை ஆசிரயிக்கிறவனுக்குக் கிணறு குட்டை முதலியவைகளினு லுண்டாகும் பிரயோஜனத்தைவிட அநேகமடங் கதிகமாயிருக்கும். எப்படியென்ருல்,

கிணற்றின் தண்ணீர் சில வற்ப காரியங்களுக் காகுமேயன்றி நஞ்சை வயலுக்குப் பாச்சலாமா? எந்த வேலைக்கு முபயோகமாய் நிரந்தரமா யுபயோகிக்கத்தான் கூடுமோ? நதி யேரிகளோ, இப்படிப்பட்ட சகல காரியங்களுக்கு முபயோகமாகும். அந்த உபயோகத்தில் கிணறுகளி னுபயோகங்கூட அடங்கியே யிருக்கிறது. அப்படிப்போல பிரம்ம ஞானிக்குப் பெரிதானதும் நித்திய சுகமானதுமான மோக்ஷபலமானது, வேதங்களிற் சொல்லப்பட் டிருக்கிற ஸ்வர்க்காதி பலன்களைவிட எவ் வளவோ மேலான தாகையால அதைவிட அற்பமாகிய காம்மிய கரும பலனை பிரம்மஞானி விரும்பமாட்டான். பிரம்மாநந்தமான மோக்ஷமா னது அற்பமான ஸ்வர்க்காதிபலனை யடக்கிக்கொண் டிருக்கிற தென் பதுதான் கருத்து. (ஸ்ரீ) (ஸ) இவர்களுடைய வபிப்பிராய மிந்த தாத் பரியத்தை யாதரிக்கிறது. (௪௬)

---

௪௭. 𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑍇𑌵𑌾𑌧𑌿𑌕𑌾𑌰𑌸𑍍𑌤𑍇 𑌮𑌾 𑌫𑌲𑍇𑌷𑍁 𑌕𑌦𑌾𑌚𑌨।
𑌮𑌾 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌹𑍇𑌤𑍁𑌰𑍍𑌭𑍂𑌰𑍍𑌮𑌾 𑌤𑍇 𑌸𑌂𑌗𑍋𑌽𑌸𑍍𑌤𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌣𑌿॥

| | |
|---|---|
| 𑌤𑍇 | உனக்கு |
| 𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑍇𑌵 | கருமஞ் செய்வதிற்றுனே |
| 𑌅𑌧𑌿𑌕𑌾𑌰𑌃 | அதிகாரமிருக்கிறது |
| 𑌕𑌦𑌾𑌚𑌨 | ஒருபோதும் |
| 𑌫𑌲𑍇𑌷𑍁 | பலன்களிலே |
| (𑌅𑌧𑌿𑌕𑌾𑌰𑌃) | அதிகாரமானது |
| 𑌮𑌾 | இல்லை |
| 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌹𑍇𑌤𑍁𑌃 𑌮𑌾 𑌭𑍂𑌃 } * | கருமபலனுக்குப்பாத்திரனாகாதே |
| 𑌅𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 | கருமஞ்செய்யாமலிருப்பதில் |
| 𑌤𑍇 | உனக்கு |
| 𑌸𑌂𑌗𑌃 | ஆசையானது |
| 𑌮𑌾𑌸𑍍𑌤𑍁 | கூடாது. |

(அர்சுன!) உனக்கு கருமஞ்செய்வதிற்றுனே யதிகாரமிருக்கிறது (ஆனால்) ஒருபோதும் (கரும) பலனி லிச்சைவைக்காதே. (ஜநநமரணத்திற்கு ஏதுவாகிய) கருமபலத்திற்குப் பாத்திரனாகாதே. கருமஞ் செய்யாம லிருப்பதில் ஆசைவைக்காதே.

(ரா) கருமத்தை ஈசுவராதீனமாக நீ செய்யவேண்டியவன். அதின்பலனை யபேக்ஷிக்காமலும், கர்த்துருத்துவாபிமான மில்லாம

---

* (ஸ்ரீ) கருமபலனி லிச்சையுடன் பிரவிர்த்தித்தவனாகாதே.

லும், கருமத்தைச் செய்வாயானால், அதின்பலனை யடையாமல் மோக்ஷபலனை யடைவாய். கருமத்தை விட்டுவிட உனக்கதிகாரமில்லை. ஏனென்றால், ஈசுவராதீனமாகச் செய்யவேண்டியவன் என்பது தாத்பரியம்.

(ஸ்ரீ,வி) கருமஞ்செய்வதி லுனக்கு அதிகாரமென்று சொன்னதினால் கருமபலனை யடைவதிற்கூட வதிகாரமுண்டென்று நினைக்காதே. நீ செய்த கருமத்திற்குப் பலன்கொடுப்பது என்னுடைய விச்சையாக விருக்கிறது. நீ ஞானியாகிறவரையில் கருமங்களை விடாமலே செய்யவேண்டும். ஞானியுங்கூட பலாபேக்ஷையன்றி கருமஞ் செய்தால், அப்படிச்செய்த கருமம் சத்கருமமானால், மோக்ஷத்தி லதிக ஆனந்தமுண்டாகும். ஆகையால் ஞானிகூடச் செய்யவேண்டியதாயிருக்கிற கருமத்தை நீ செய்யாமல் விட்டுவிட யோக்கியனல்ல. ஆனால் பலனை மட்டு மபேக்ஷிக்காதே, பலனையடைய நீ சுவதந்திரனென்று மெண்ணாதே, ஈசுவர னெஜமானனென்றும் நீ தாசனென்று மெண்ணி ஐக்கிய பாவத்தைவிட்டு ஈசுவராராதனை ரூபமாக கருமங்களைச் செய்யென்பது தாத்பரியம். (௪௭)

---

௪௮. 𑌯𑍋𑌗𑌸𑍍𑌥𑌃 𑌕𑍁𑌰𑍁 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌸𑌂𑌗𑌂 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌧𑌨𑌂𑌜𑌯।
𑌸𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑌸𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑍋𑌃 𑌸𑌮𑍋 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌸𑌮𑌤𑍍𑌵𑌂 𑌯𑍋𑌗 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇॥

| | |
|---|---|
| 𑌹𑍇 𑌧𑌨𑌂𑌜𑌯 | ஓ! பொருளாசையற்ற அர்சுந! |
| 𑌤𑍍𑌵𑌂 | நீ |
| 𑌯𑍋𑌗𑌸𑍍𑌥𑌃 * | பகவன் நிஷ்டையிலிருந்துகொண்டு |
| 𑌸𑌂𑌗𑌂 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 † | (உன்னுடையதென்கிற) அபிமானத்தை விட்டு |
| 𑌸𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑌸𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑍋𑌃 ‡ | பலனாகிய ஞானசித்தியை யடைந்தாலு மடையாவிட்டாலு மதில் |
| 𑌸𑌮𑌃 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 | சமமா யிருந்துகொண்டு |
| 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 § | கருமங்களை |
| 𑌕𑍁𑌰𑍁 | செய் |

---

* (ஸ்ரீ,வி) கருமயோகம் அதாவது ஞானோபாயம்.

† (ஶம்) ஈசுவரன் திருப்தியடைய வேண்டுமென்கிற வெண்ணத்தைவிட்டு; (ரா) இராஜ்ஜியம், பந்துக்கள், புத்திரமித்திர களத்திராதிகளில் அபிமானம்விட்டு; (ஸ்ரீ,வி) பலாபேக்ஷையைவிட்டு.

‡ (ரா) யுத்தத்தில் ஜயம்வந்தாலும் அபஜயம் வந்தாலும்.

§ (ரா) யுத்தம் முதலிய கருமங்கள்.

| | |
|---|---|
| 𑌸𑌮𑌤𑍍𑌵𑌂 | (சித்தியை யடைந்தாலு மடையாவிட்டாலும்) அதிற் சமமாயிருப்பது |
| 𑌯𑍋𑌗 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 | யோகமென்று சொல்லப்படுகிறது. |

ஓ! பொருளாசை யற்றவனே! நீ பகவன்னிஷ்டையி லிருந்துகொண்டு அபிமானத்தைவிட்டு கருமபலனுகிய ஞாநசித்தியையடைந்தாலு மடையாவிட்டாலு மதில் சமமாயிருந்துகொண்டு (என்றால், ஞாநசித்தியை யடைந்துவிட்டோமென்று சந்தோஷத்தினுற் கர்வப்படாமலும் சித்தியை யடையவில்லையேயென்று துக்கத்தினுல் மயங்கிப்போகாமலும்) கருமங்களைச்செய், சித்தியசித்திகளில் சமமாயிருப்பது யோகமென்று சொல்லப்படும். (சஅ)

---

௪௯. 𑌦𑍂𑌰𑍇𑌣 𑌹𑍍𑌯𑌵𑌰𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌯𑍋𑌗𑌾𑌦𑍍𑌧𑌨𑌂𑌜𑌯।
𑌬𑍁𑌦𑍍𑌧𑍌 𑌶𑌰𑌣𑌮𑌨𑍍𑌵𑌿𑌚𑍍𑌛 𑌕𑍃𑌪𑌣𑌾𑌃 𑌫𑌲𑌹𑍇𑌤𑌵𑌃॥

| | |
|---|---|
| 𑌹𑍇 𑌧𑌨𑌂𑌜𑌯 | ஓ! அர்சுன! |
| 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌯𑍋𑌗𑌾𑌤𑍍 | நிச்சய சுவரூப புத்தியினுலே செய்யப்படுகிற நிஷ்காம கருமயோகத்தைப் பார்க்கிலும் |
| 𑌕𑌰𑍍𑌮 | பலேச்சையினுலே செய்யப்படுங் காம்மிய கருமமானது |
| 𑌦𑍂𑌰𑍇𑌣 𑌅𑌵𑌰𑌂 𑌹𑌿 | மிகவுமிழிவானது |
| (𑌤𑌤𑌃) | ஆகையினுலே |
| 𑌬𑍁𑌦𑍍𑌧𑍌 * | நிச்சய சுவரூபபுத்தியிலே |
| 𑌶𑌰𑌣𑌂 | காரணமான நிஷ்காம கருமயோகத்தை |
| 𑌅𑌨𑍍𑌵𑌿𑌚𑍍𑌛 | ஆசிரயிக்கக்கடவாய் |
| 𑌫𑌲𑌹𑍇𑌤𑌵𑌃 | பலனே யிச்சிக்கிறவர்கள் |
| 𑌕𑍃𑌪𑌣𑌾𑌃 § | துக்கத்தை யடைவார்கள். |

* (𑌶𑌂) 𑌬𑍁𑌦𑍍𑌧𑍌=நிஷ்காம கருமயோகத்தில் அல்லது சாங்கியபுத்தியில் 𑌶𑌰𑌣𑌂=ஆசிரயத்தை, 𑌅𑌨𑍍𑌵𑌿𑌚𑍍𑌛=விரும்பு, என்றால், பரமார்த்த ஞானத்தை சரணமடையக்கடவாய். (ஸ்ரீ) 𑌬𑍁𑌦𑍍𑌧𑍌 = ஞானத்தின்பொருட்டு, 𑌶𑌰𑌣𑌂 = காரணமாகிய கருமயோகத்தை அல்லது இரக்ஷிக்கிற ஈசுவரனை, 𑌅𑌨𑍍𑌵𑌿𑌚𑍍𑌛 = ஆசிரயிக்கக்கடவாய். (ரா) காம்மிய கருமமானது ஜநநமரணத்திற் கேதுவானதென்றும் நிஷ்காம கருமமானது மோக்ஷத்திற் கேதுவானதென்றும் அறிவை யடையக்கடவாய். (ம) (ஸ்ரீ,வி) 𑌬𑍁𑌦𑍍𑌧𑍌=ஞானத்திற்குக் காரணமான நிஷ்காம கருமயோகத்தில்.

§ (𑌶𑌂) (ரா) ஜநநமரண துக்கத்தை யடைவார்கள். 𑌫𑌲𑌹𑍇𑌤𑌵𑌃𑌕𑍃𑌪𑌣𑌾𑌃 (ஸ்ரீ,வி) ஈசுவர ஐக்கிய ஞானத்தை யிச்சிக்கிறவர்கள் அந்தகாரத்தை யுடைவார்கள்.

ஓ! அர்சுன! நிச்சய சுவரூப புத்தியினாலே செய்யப்படுகிற நிஷ்காம கரும யோகத்தைப்பார்க்கிலும் பலேச்சையினாலே செய்யப்படுங் காம்மிய கருமமானது மிகவு மிழிவானது. ஆகையினாலே, நிச்சய சுவரூப புத்திக்காக நிஷ்காம கருமயோகத்தை ஆசிரயிக்கக்கடவாய். பலனை யிச்சிக்கிறவர்கள் துக்கத்தை யடைவார்கள். (௪௯)

---

௫௰. 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑍋 𑌜𑌹𑌾𑌤𑍀𑌹 𑌉𑌭𑍇 𑌸𑍁𑌕𑍃𑌤𑌦𑍁𑌷𑍍𑌕𑍃𑌤𑍇।
𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌯𑍋𑌗𑌾𑌯 𑌯𑍁𑌜𑍍𑌯𑌸𑍍𑌵 𑌯𑍋𑌗𑌃 𑌕𑌰𑍍𑌮𑌸𑍁 𑌕𑍌𑌶𑌲𑌮𑍍॥

| | |
|---|---|
| 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑌃* | (சுகதுக்காதிகளிற்சம) புத்தியுடையவன் |
| 𑌉𑌭𑍇 𑌸𑍁𑌕𑍃𑌤𑌦𑍁𑌷𑍍𑌕𑍃𑌤𑍇 † | புண்ணியபாவங்க ளிரண்டையும் |
| 𑌇𑌹 | இந்தலோகத்திலேயல்லது, இந்த ஜந்மத்திலேயே |
| 𑌜𑌹𑌾𑌤𑌿 | விலக்கிக்கொள்ளுகிறான் |
| 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 | ஆகையினாலே |
| 𑌯𑍋𑌗𑌾𑌯‡ | (சமபுத்தி) யோகத்தின்பொருட்டு |
| 𑌯𑍁𑌜𑍍𑌯𑌸𑍍𑌵 | முயற்சிசெய் |
| 𑌕𑌰𑍍𑌮𑌸𑍁§ | கருமங்களிலேயுள்ள |
| 𑌕𑍌𑌶𑌲𑌮𑍍¶ | சாமர்த்தியமானது |
| 𑌯𑍋𑌗𑌃 | யோகமென்று சொல்லப்படுகிறது. |

---

* (ஸ்ரீ,வி) பகவத் ஞானத்துடன் கூடினவன்.

† 𑌸𑍁𑌕𑍃𑌤𑌂 (ஹ) புண்ணியமுங்கூடப் பாபத்தைப்போலவே மறுபடி ஜநந மரணத்தை யுண்டாக்கப்பட்டதாகையால் ஞானியானவன் பாபங்களின் பலனை எப்படி யபேக்ஷிக்கமாட்டானோ வப்படியே புண்ணியபலனையு மபேக்ஷிக்கமாட்டான். புண்ணியபலனை விடலாகாதென்று சொல்லுவார்கள், அப்படிச் சொல்லுகிறவர்க ளவிவேகிகள்; (ஸ்ரீ,வி) புண்ணிய கரும பலன்களுக்குள்ளே மறுபடி ஜநநத்தை யுண்டாக்கப்பட்ட புண்ணிய கருமங்களுடைய பலன்களை விட்டுவிடவேண்டும். மோக்ஷத்தி லாநந்தத்தை விருத்திசெய்கிற புண்ணிய கருமங்களுடைய பலன்களை விடக்கூடாது.

‡ (ஸ்ரீ,வி) ஞாநோபாயமாகிற நிஷ்காம கருமயோகத்தின்பொருட்டு.

§ (ஶம்) ஸ்வதருமமான கருமங்களிலேயுள்ள.

¶ (ஶம்) சமத்துவ புத்தியினாலே பந்த சுவபாவமுள்ள கருமத்திலிருந்து நிவர்த்திக்கிற சாமர்த்தியம்.

§ ¶ (ஸ்ரீ,வி) கருமங்களுக்குள் சிரேஷ்டமானது.

சுகதுக்கங்களில் சமபுத்தி யுடையவன் புண்ணியபாவங்க ளிரண்டையு மிந்த லோகத்திலே யல்லது இந்த ஜன்மத்திலேயே விலக்கிக் கொள்ளுகிருன். ஆகையினுலே, சமபுத்தி யோகத்தின் பொருட்டு முயற்சிசெய். கருமங்களிலுள்ள சாமர்த்தியமானது யோகமென்று சொல்லப்படுகிறது.

(ஸ்ரீ) "கருமங்களிலுள்ள சாமர்த்தியமானது" என்றுல், கருமங்களுடைய சுவபாவமானது பந்தத்தைக் கொடுக்கப்பட்ட தானபோதிலும் அந்தக் கருமத்தையே பலாபேக்ஷையின்றி ஈசுவரார்ப்பண புத்தியாய்ச்செய்து அதையே மோக்ஷத்திற்குச் சாதனமாய்ச் செய்துகொள்ளுவதுதான்.

(ரா) യോഗഃ കർമസു കൌശലം = கருமஞ்செய்யும் விஷயத்தில் சமத்துவ புத்தியானது பிரயாசையினு லடையத்தகுந்ததென்று தாற்பரியம். (௫௦)

---

(௫௧. കർമജം ബുദ്ധിയുക്താ ഹി ഫലം ത്യക്ത്വാ മനീഷിണഃ।
ജന്മബന്ധവിനിർമുക്താഃ പദം ഗച്ഛന്ത്യനാമയം॥

| | |
|---|---|
| ബുദ്ധിയുക്താഃ* | (சுகதுக்காதிகளில் சமத்துவ) புத்தியுடன் கூடினவர்கள் |
| കർമജം† | கருமத்திலுண்டாகிற |
| ഫലം | பயனை |
| ത്യക്ത്വാ | ஒழித்து |
| മനീഷിണഃ (സന്തഃ) | ஞானமுடையவர்களாகி |
| ജന്മബന്ധവിനിർമുക്താഃ‡ | பிறவித்துன்பத்திலிருந்து விடுபட்டு |
| അനാമയം§ | துன்பமற்ற |
| പദം | பதவியை (ஸ்தானத்தை) |
| ഗച്ഛന്തി | அடைகிருர்களென்பது |
| ഹി | பிரசித்தம். |

---

* (ശം) சுகதுக்காதிகளில் சமத்துவ புத்தியுடைய அல்லது பரமாத்ம தத்துவ ஞானமுடையவர்கள்.

† (ஶ்ரீ,வி) കർമജം ഫലം ത്യക്ത്വാ = கருமங்களினு லுண்டாகிற பலன்களையும் விஷய வாசனையையும்விட்டு.

‡ (ശം) ஜீவன் முக்தாளாக.

§ (സ്വാ) சுவர்க்காதிகளுக் கழிவுண்டு என்பதையும், மோக்ஷத்திற் கழிவில்லை, அதை யடைந்தால் துக்கமில்லையென்பதையும் குறித்துக் காட்டும்பொருட்டு (അനാമയം) என்கிற விசேஷபதம் பிரயோகிக்கப்பட்டதாக விருக்கிறது.

துக்க சுகாதிகளில் சமத்துவ புத்தியுடையவர்கள் கருமத்தினு லுண்டாகிற பயனையொழித்து ஞானமுடையவர்களாகிப் பிறவித்துன் பத்திலிருந்து விடுபட்டுத் துன்பமற்ற பதவியை (மோக்ஷத்தை) அடைகிறார்களென்பது பிரசித்தம். (ருக)

ருஉ. யதா தே மோஹகலிலம் புத்திர் வ்யதிதரிஷ்யதி।
ததா கந்தாஸி நிர்வேதம் ஸ்ரோதவ்யஸ்ய ஸ்ருதஸ்ய ச॥

| | |
|---|---|
| யதா | எப்போது |
| தே | உன்னுடைய |
| புத்தி: | புத்தியானது |
| மோஹகலிலம் | (தேகமே ஆத்மாவென்கிற) அக்ஞானமாகிய தோஷத்தை |
| வ்யதிதரிஷ்யதி | கடக்குமோ அல்லது தாண்டுமோ |
| ததா | அப்போது |
| ஸ்ரோதவ்யஸ்ய | கேட்கவேண்டிய வேதாந்தார்த்தத்திலும் |
| ஸ்ருதஸ்ய | கேட்ட வேதாந்தார்த்தத்திலும் |
| நிர்வேதம் | வைராக்கியத்தை அல்லது வெறுப்பை |
| கந்தாஸி | அடைவாய். |

எப்போ துன்னுடைய புத்தியானது தேகமே ஆத்மாவென்கிற அக்ஞானமாகிய தோஷத்தைக் கடக்குமோ அப்போ திதுவரையிற் கேட்ட வேதாந்தார்த்தத்திலும் இனிக் கேட்கப்போகிற வேதாந்தார்த்தத்திலும் வெறுப்பை யடைவாய்.

(ஶ0) இதுவரையில் செய்திருக்கிற வேதாந்த விசாரத்திலும் இனிச் செய்யவேண்டிய வேதாந்த சிரவணத்திலும் உனக்கு வெறுப் புண்டாகக் கூடாது. ஏனென்றால், நீ அக்ஞான நிலைமையி லிருக்கிற படியால் வேதாந்தார்த்தங்களை யறிந்து அதின்படி நடக்கவேண்டியவனாக விருக்கிறாய். கருமத்தையு மதைச்செய்யவேண்டிய விவரத்தையும் சொல்வதாகிய வேதவாக்கியங்களில் வெறுப்படைவது பிரம்மஞானிக்குத் தகுமானாலும் நீ யப்படி வெறுப்படையத் தகுந்தவனாகமாட்டாய். உனக்கு ஞானாதிகார மின்னும் வரவில்லையென்று தாத்பரியம்.

(ரா) எப்போதுன் புத்தியானது அக்ஞானத்தைக் கடக்குமோ அப்போது நானிதுவரையில் எதைவிடச் சொன்னேனோ இனி யெதைச்சொல்லப் போகிறேனோ அவைகளில் வைராக்கியத்தை யடைவாய்.

(ஸ்ரீ,வி) எப்போ துன்னுடைய புத்தியானது விபரீத ஞாநமாகிற தோஷத்தைத் தாண்டிநிற்குமோ வப்போது இதுவரையிற் பெரியோர்களாற் கேட்டதற்கும் கேட்கப்போகிறதற்கும் பலனை யடைவாய், நிஷ்காம கருமயோகத்தினு லுண்டாகிறவும் மோக்ஷஹேதுவுமான ஞானத்தை யடைவாயென்பது தாத்பரியம். (ருஉ)

ருங. ஶ்ருதிவிப்ரதிபந்நா தே யதா ஸ்தாஸ்யதி நிஶ்சலா।
ஸமாதாவசலா புத்தி: ததா யோகமவாப்ஸ்யஸி॥

| | |
|---|---|
| ஶ்ருதிவிப்ரதிபந்நா | அநேக அர்த்தங்களைக் கேட்டதினுல் கலங்கியிருக்கிற |
| தே | உன்னுடைய |
| புத்தி: | புத்தியல்லது அந்தக்கரணமானது |
| யதா | எப்போது |
| நிஶ்சலா | கலங்காத அல்லது சலிக்காததாய் |
| ஸமாதௌ | பரமாத்மாவிடத்தில் அல்ல திடைவிடாத தியானத்தில் |
| அசலா * | நிலையாய் |
| ஸ்தாஸ்யதி | நிற்குமோ |
| ததா | அப்போது |
| யோகம் | (கருமயோகத்திற்குப் பலனுன தத்துவ ஞாந) யோகத்தை |
| அவாப்ஸ்யஸி | அடைவாய். |

அநேக (வைதிக லவுகிக விஷயங்களான) அர்த்தங்களைக் கேட்டதினுல் கலக்கங்கொண்டிருக்கிற உன்னுடைய புத்தியானது கலக்கமற்று எப்போது இடைவிடாமல் பிரம்மநிஷ்டையில் நிலையாய் நிற்குமோ வப்போது கருமயோக பலனுகிய தத்துவஞ் ஞாநயோகத்தை யடைவாய்.

(ரா) ஶ்ருதி = நாமிதுவரையிற் சொல்லிவந்த சாஸ்திரார்த்தத்தை நீ கேட்டதினுல், வி = விசேஷமாய், ப்ரதிபந்நா = ஆத்மாவை, பிரபஞ்சத்தைக் காட்டிலும் விலக்ஷணனென்றும் நித்தியனென்றும் நிரதிசயனென்றும் சூக்ஷ்மனென்றும் கிரகித்திருக்கிற, தே = உன்னுடைய, புத்தி: = புத்தியானது, யதா = எப்போது, ஸமாதௌ=கருமாநுஷ்டானத்தினுற் சுத்தியை யடைந்திருக்கிற மனசில், நிஶ்சலா = சலிக்காமல், அசலா=ஒரேவிதமாய், ஸ்தாஸ்யதி = நிற்குமோ, ததா = அப்போது, யோகம் = ஞாநயோகமாகிற ஆத்ம தெரிசனத்தை, அவாப்ஸ்யஸி=அடைவாய். (ருங)

* (ஸ) விகல்பமற்ற.

கஜு-நஉவாவ.

௫௪. ஷ்யிதவூஜஜூஸ்யகாஷாஷா ஸமாயிஷ்யஸ்யகெஶவ।
ஷ்யிதயீ:கிவூஷாஷெத கிமாஸீதவூஜெதகி॥

| | |
|---|---|
| கஜு-நஉவாவ | அர்சுனன்சொல்வது |
| ஹெகெஶவ | ஓ! கேசவா! |
| ஸமாயிஷ்யஸ்ய | சமாதியிலிருக்கிற |
| ஷ்யிதவூஜஜூஸ்ய* | நிலைத்த ஞாநமடைந்தவனுடைய |
| ஷாஷா | லக்ஷணம் |
| கா | எப்படிப்பட்டது |
| ஷ்யிதயீ: | நிலைத்தஞாநமுடையவன் |
| கிம் | எப்படி |
| வூ ஷாஷெத† | பேசுவான் |
| கிம்‡ | எப்படி |
| ஆஸீத‡ | இருப்பான் (என்னத்தைச் செய்துக்கொண்டிருப்பான்) |
| கிம்§ வூஜெத§ | எப்படி நடப்பான் — நடத்தை அல்லது செய்கை எப்படிப்பட்டது. |

அர்சுனன் கிருஷ்ணசுவாமியை நோக்கிச் சொல்வது.

ஓ! கேசவா! சமாதியிலிருக்கிற நிலைத்த ஞாநமடைந்தவனுடைய லக்ஷண மெப்படிப்பட்டது? நிலைத்த ஞாநமுடையவ னெப்படிப் பேசுவான்? எப்படியிருப்பான்? எப்படி நடப்பான்?

(ஷா) இதில் நான்கு கேள்விகள் அடங்கியிருப்பதாகச் சொல்லலாம்; அல்லது இலக்ஷணமென்பதைப் பொதுவான கேள்வியாகவும் மற்ற மூன்றையு மதற்கு விவரமாயும் சொல்லலாம். நான்கு கேள்விகளாக பாஷியக்காரர்களும் வியாக்கியாதாக்களு மபிப்பிராயப்பட்டிருக்கிறார்கள். (௫௪)

* (ஶං) தானே பிரம்மமென்கிற ஞாநத்தை யுடையவனுடைய.

† (ரா) வாசிகம் (வாயினால் பேசுவது முதலியன) எப்படியிருக்கும்.

‡ (ரா) மானசிகம் (மனோவிருத்தி) எப்படியிருக்கும். (ஸ்ரீ,வி) எங்கேயிருப்பான்.

§ (ரா) காயிகம் (தேகத்தினால் செய்யுஞ்செய்கை) எப்படிப்பட்டதாயிருக்கும். (ஶ) நடப்பது, செய்வது, எப்படியிருக்கும். (ஸ்ரீ,வி) செய்கை எப்படி யிருக்கும்.

𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚.

௫௫. 𑌪𑍍𑌰𑌜𑌹𑌾𑌤𑌿 𑌯𑌦𑌾 𑌕𑌾𑌮𑌾𑌨𑍍𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍𑌪𑌾𑌰𑍍𑌥 𑌮𑌨𑍋𑌗𑌤𑌾𑌨𑍍।
𑌆𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑍇𑌵𑌾𑌤𑍍𑌮𑌨𑌾 𑌤𑍁𑌷𑍍𑌟𑌃 𑌸𑍍𑌥𑌿𑌤𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌸𑍍𑌤𑌦𑍋𑌚𑍍𑌯𑌤𑍇॥

| | |
|---|---|
| 𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚 | கிருஷ்ணபகவான் சொல்வது |
| 𑌹𑍇𑌪𑌾𑌰𑍍𑌥 | ஓ! அர்சுன! |
| 𑌯𑌦𑌾 | எப்போது |
| 𑌮𑌨𑍋𑌗𑌤𑌾𑌨𑍍 | மனதிலிருக்கிற |
| 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍 | சகலமான |
| 𑌕𑌾𑌮𑌾𑌨𑍍* | விருப்பங்களை |
| 𑌪𑍍𑌰𑌜𑌹𑌾𑌤𑌿 | முழுதும் விட்டொழிக்கிறானோ |
| 𑌆𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑍇𑌵† | ஆத்மாவினிடத்திலேயே |
| 𑌆𑌤𑍍𑌮𑌨𑌾‡ | தன்னாலே |
| 𑌤𑍁𑌷𑍍𑌟𑌃 | சந்துஷ்டி யுள்ளவனாக |
| (𑌭𑌵𑌤𑌿) | ஆகிறானோ |
| 𑌤𑌦𑌾 | அப்போது |
| 𑌸𑍍𑌥𑌿𑌤𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌃 (𑌇𑌤𑌿) 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 | நிலைத்த ஞானியென்று சொல்லப்படுகிறான். |

ஸ்ரீ கிருஷ்ணபகவான் அர்சுனனைநோக்கிச் சொல்வது.

ஓ! பார்த்தா! எப்போது மனதிலிருக்கிற சகல விருப்பங்களையும் முழுதும் விட்டொழித்து, ஆத்மாவி னிடத்திலேயே தன்னாலே சந்துஷ்டியுள்ளவனாக வாகிறானோ வப்போது நிலைத்த ஞானியென்று சொல்லப்படுகிறான்.

(வ்யா) இதினால் ஆத்மசந்துஷ்டிதான் இலக்ஷணமென்று சொன்னதாக ஆச்சுது. (௫௫)

---

௫௬. 𑌦𑍁𑌃𑌖𑍇𑌷𑍍𑌵𑌨𑍁𑌦𑍍𑌵𑌿𑌗𑍍𑌨𑌮𑌨𑌾𑌃 𑌸𑍁𑌖𑍇𑌷𑍁 𑌵𑌿𑌗𑌤𑌸𑍍𑌪𑍃𑌹𑌃।
𑌵𑍀𑌤𑌰𑌾𑌗𑌭𑌯𑌕𑍍𑌰𑍋𑌧𑌃 𑌸𑍍𑌥𑌿𑌤𑌧𑍀𑌰𑍍𑌮𑍁𑌨𑌿𑌰𑍁𑌚𑍍𑌯𑌤𑍇॥

| | |
|---|---|
| 𑌦𑍁𑌃𑌖𑍇𑌷𑍁 | துக்கம்வந்தாலும் |
| 𑌅𑌨𑍁𑌦𑍍𑌵𑌿𑌗𑍍𑌨𑌮𑌨𑌾𑌃 | துடிக்காதமனதை யுடையவனும் |
| 𑌸𑍁𑌖𑍇𑌷𑍁 | சுகம்வந்தாலும் |

---

* (தீ,வி) காமக்குரோதம் முதலியவைகளை.

† (ஸ்ரீ) தன்னுடைய ஸ்வரூபானந்தத்திலேயே. (ஸம்) (ரா) (உ) பிரத்தியகாத்ம ஸ்வரூபத்திலேயே.

‡ (ரா) மனதினாலே. (உ) (தீ,வி) பரமாத்துமாவினுடைய பிரசாதத்தினாலே,

| | |
|---|---|
| 𑌵𑌿𑌗𑌤𑌸𑍍𑌪𑍃𑌹𑌃 | பற்றற்றவனும் |
| 𑌵𑍀𑌤𑌰𑌾𑌗𑌭𑌯𑌕𑍍𑌰𑍋𑌧𑌃 | விருப்பம், பயம், கோபம் இதுகளற்றவனு கவு மிருக்கிற |
| 𑌮𑍁𑌨𑌿𑌃* | மௌநி அல்லது சந்நியாசியானவன் |
| 𑌸𑍍𑌥𑌿𑌤𑌧𑍀𑌃 | நிலைத்த ஞாநியாக |
| 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 | சொல்லப்படுகிறான். |

துக்கம்வந்தாலும் துடிக்காத மனதை யுடையவனும், சுகம் வந்தாலு மதிற்பற்றற்றவனும், விருப்பம், பயம், கோப மிதுகளில்லாதவனு மிருக்கிற முனியானவன் நிலைத்த ஞானியாகச் சொல்லப்படுகிறான்.

(ஸ்ரீ) இந்த சுலோகத்தினாலு மிதற்கு முந்திய சுலோகத்தினாலும் முதலாவது கேள்வியான நிலைத்த ஞாநியி னிலக்ஷணஞ் சொல்லப்பட்டது.

(ரா) முந்திய சுலோகத்தி லெவனைக்குறித்துச் சொல்லப்பட்டதோ, அவன் முதல் அந்தஸ்துள்ளவன். பிரபஞ்சவாசனை முற்றிலு மற்றவன். இதிற் சொல்லப்பட்டவனோ இரண்டாவ தந்தஸ்துள்ளவன், பிரபஞ்சவாசனை முற்றிலு மற்றுப்போகாமல் சில பற்றுதலுட னிருப்பவன். (ருசு)

---

ருஎ. 𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰𑌾𑌨𑌭𑌿𑌸𑍍𑌨𑍇𑌹𑌸𑍍𑌤𑌤𑍍𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌶𑍁𑌭𑌾𑌶𑍁𑌭𑌮𑍍।
𑌨𑌾𑌭𑌿𑌨𑌨𑍍𑌦𑌤𑌿 𑌨 𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌟𑌿 𑌤𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌾॥

| | |
|---|---|
| 𑌯𑌃 | எவன் |
| 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰† | சகலத்திலும் |
| 𑌅𑌨𑌭𑌿𑌸𑍍𑌨𑍇𑌹𑌃‡ | அபிமானமற்றவனோ |
| 𑌤𑌤𑍍𑌤𑌚𑍍𑌛𑍁𑌭𑌾𑌶𑍁𑌭𑌮𑍍 | அந்தந்த இஷ்டாநிஷ்டங்களை |
| 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 | அடைந்தாலும் |
| 𑌨𑌾𑌭𑌿𑌨𑌨𑍍𑌦𑌤𑌿 | சந்தோஷப்படுகிறதில்லையோ |
| 𑌨 𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌟𑌿 | வெறுப்படைகிறதில்லையோ |
| 𑌤𑌸𑍍𑌯 | அவனுடைய |
| 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾 | ஞானமானது |
| 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌾 | நிலைத்தது. |

---

* (ரா) ஆத்மத் தியானமுள்ளவன்.

† (ஶம்) தேகம், பிராணன் முதலியவைகளில்; (ஸ்ரீ) புத்திரமித்திராதிகளில்; (ரா) இஷ்டமான வஸ்துக்களில்.

‡ (ரா) உதாசீனன்.

எவன் சகலத்திலு மபிமானமற்றவனுயு மந்தந்த இஷ்டாநிஷ்டங் களை யடைந்தாலும் சந்தோஷப்படாதவனுயும், வெறுப்பு அல்லது துவேஷமற்றவனுயு மிருக்கிருனே வவனுடைய ஞானமானது நிலைத்த தென்று சொல்லப்படும்.

(ஸ்ரீ) இதிற் சொல்லப்பட்டவன் உதாஸீநஃ = அலக்ஷியமாயிருப் பவன்; எப்படி யென்றால், துக்கமுண்டானல் துக்கப்படாம லிதில் எனக்கென்ன சம்பந்தமென்றும், சுகமுண்டானு லதில் சந்தோஷப்படா மல் இந்தப் பிரபஞ்சத்தின் சுகம் சுகமாகுமா? இது எனக்குச் சந்தோ ஷத்தை யுண்டாக்கமாட்டாதென்றும் சொல்லுவான். இதானது ருச-வது சுலோகத்திலுள்ள விரண்டாவது கேள்வியான 'எப்படிப்பேசுவான்' என்பதற்கு உத்தரஞ் சொல்லப்பட்டதா யிருக்கிறது.

(ரா) இதிற் சொல்லப்பட்டவன் மூன்றாவது வகுப்பில் சேர்ந்த வன். பிரபஞ்சவிஷயத்தில் மனப்பிரவிர்த்தி யுள்ளவனுயும், ஆனல் அப்படிப்பட்ட பிரவிர்த்தியினு லுண்டாகும் சுகதுக்காதிகளில் தான் சம்பந்தமற்றவனென்று உதாசீனனுயு மிருப்பவன். (ருஎ)

---

ருஅ. யதா ஸம்ஹரதே சாயம் கூர்மோ(அ)ங்கானீவ ஸர்வஶ꞉।
இந்த்ரியாணீந்த்ரியார்தேப்யஸ் தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா॥

| | |
|---|---|
| அயம்* | இவன் (நிலைத்த ஞானமுடைய யோகியா னவன்) |
| கூர்ம꞉ | ஆமையானது |
| அங்கானீவ | அவயவங்களை (உள்ளுக் கிழுத்துக்கொள் வது)ப்போல |
| ஸர்வஶ꞉ | சகலமான |
| இந்த்ரியார்தேப்ய꞉ | விஷயங்களிலிருந்து |
| இந்த்ரியாணி | இந்திரியங்களை |
| யதா | எப்போது |
| ஸம்ஹரதே | இழுத்துக்கொள்ளுகிருனே |
| (ததா) | அப்போது |
| தஸ்ய | அவனுடைய |
| ப்ரஜ்ஞா | ஞானமானது |
| ப்ரதிஷ்டிதா | நிலைத்தது. |

---

* (ஶம்) ஞான நிஷ்டையிற் பிரவிர்த்தித்திருக்கிற யதியானவன்; (ஸ்ரீ) ஞானியானவன்.

நிலைத்த ஞானமுடைய யோகியானவன் ஆமையானது (வெளியிற் பிரவிர்த்திக்கவிட்ட தன்னுடைய) அவயவங்களை யுள்ளுக்கிழுத்துக் கொள்வதுபோல, சகல விஷயங்களிலிருந்தும் இந்திரியங்களை யெப்போ திழுத்துக்கொள்ளுகிறானோ வப்போ தவனுடைய ஞானமானது நிலைத்த தென்று சொல்லப்படும்.

(ஸ்ரீ) ஆமை தன்னவயவங்களை வருத்தமன்றி யிழுத்துக்கொள்வது போல இவனும் விஷயங்களிற் பிரவிர்த்தித்திருக்கிற விந்திரியங்களை வருத்தமன்றிச் சுவாதீனஞ் செய்துகொள்ளுவா னென்பதைச் சுட்டிக் காட்ட ஆமையானது உதாரணமாய்ச் சொல்லப்பட்டது.

(ரா) இவன் இந்திரியங்களை விஷயங்களிலிருந்து இழுப்பதும் மறுபடி விடுவதுமாய் இந்திரியங்களைத் தன் சுவாதீனமாக வைத்துக் கொண்டு முயற்சி செய்துகொண்டிருப்பவன், ஆகையால் நான்காவது வகுப்பில் சேர்ந்தவன். (ருஅ)

ருகூ. விஷயாவிநிவத்தந்தெ நிராஹாரஸ்ய்தெஹிநஃ।
ரஸவஜும்ரஸொவ்யஸ்ய பரம் த்ருஷ்ட்வா நிவத்ததெ॥

| | |
|---|---|
| நிராஹாரஸ்ய* | இந்திரியங்கள் மூலமாய் விஷயங்களைக் கிரகிக்காம லிருக்கிற |
| தெஹிநஃ† | ஆத்மாவுக்கு |
| ரஸவஜும் | இச்சையைத்தவிர |
| விஷயாஃ‡ | விஷயானுபவங்கள் |
| விநிவத்தந்தெ | நிவிர்த்தியாய்விடும் |
| அஸ்ய | இந்த ஸ்திதப்பிரக்ஞனுக்கு |
| ரஸொபி | (விஷய) இச்சையுங்கூட |
| பரம்¶ | பரமாத்மாவை |

* (ஸ்வா) ஆகாரஞ்செய்யாத (சாப்பிடாத.

† (ஸ்வா.) தேகத்தை யுடையவனென்று பொதுவான அர்த்தம். தேகத்தை யுடையவன் யாரென்றால், ஜீவனென்று துவைதிகளுடையவும் விசிஷ்டாத்துவைதிகளுடையவும் அர்த்தம். அத்துவைதிகளுக்கு அவித்தையுடன் சம்பந்தப்பட்டிருக்கிற வரையில் ஜீவனென்று வியவகாரமேயன்றி வாஸ்தவத்தில் ஜீவன்வேறே பரமாத்மா வேறேயல்லவென் றர்த்தம். ஆத்மாவென்பது ஜீவாத்மா பரமாத்மா இருவருக்கும் பொதுவானபதம். சந்தர்ப்பத்திற்குத் தகுந்தபடி யர்த்தஞ் செய்யவேண்டும்.

‡ (ஸ்ரீ) இந்திரியங்கள்.

¶ (ஸ்ரீ) தன்னையே பரமாத்மாவாக; (ரா) விஷயங்களைப் பார்க்கிலும் அன்னியமாகவும் சுகஸ்வரூபமாகவு மிருக்கிற ஆத்மஸ்வரூபத்தை.

| | |
|---|---|
| த்ருஷ்ட்வா* | பார்த்து |
| நிவர்த்ததே | நிவிர்த்தியாகிறது. |

இந்திரியங்கள் மூலமாய் விஷயங்களைக் கிரகிக்காம லிருக்கிற வாத்மாவுக் கிச்சைதவிர விஷயானுபவங்கள் நிவிர்த்தியாய்விடும். ஸ்திதப் பிரக்ஞனுக்கு இச்சையுங்கூடப் பரமாத்மாவைப் பார்த்தால் நிவிர்த்தியாய்விடும்.

(ஶா) இந்திரியங்கள் வெளியிலுள்ள விஷயங்களாகிய வஸ்துக்களையே யெப்போதும் பார்த்துக்கொண்டிருக்கிற படியால் இந்திரியங்களுக்கு விஷயங்க ளாகாரமாயிருக்கின்றன. ஆகையால், முதலி லிந்திரியங்களை யடக்கவேண்டும். இந்திரியங்களை யடக்கினாலும் இச்சாஸ்வரூபமான மனதடங்காது. பரமாத்ம தெரிசனத்தினால் அந்த மனதினுடைய விச்சையும் அடங்கிவிடு மென்பதொரு அர்த்தம். மற்றொரு அர்த்தமாவது, ஆகாரமில்லாம லிருக்கிறவனுக்குப் பசியினால் வருத்தப்படும்போது தேகபலங்குறைந்து கண், வாய் முதலிய விந்திரியங்கள் சோர்வடைந்து இந்திரியங்கள் விஷயங்களிற் பிரவிர்த்திக்காமல் விஷயங்களைவிட்டு இந்திரியங்கள் பிரிந்துவிடக் கூடுமானாலும், மனதிலுள்ள வாசையாகிய விச்சை பிரியமாட்டாது. இப்படிப்பட்ட விந்திரிய நிக்கிரகமானது மனதிலுள்ள வாசையை நிவிர்த்திக்கவாவது பரமாத்ம தெரிசனத்திற்காவது யோக்கியமாகிறதில்லை. ஞானியோ இந்திரியங்களை சுயேச்சையாய் அடக்கி மனதைப் பரமாத்மாவிடத்திற் செலுத்துகிறபடியால் பரமாத்ம தெரிசனத்திற்கு யோக்கியனாயிருக்கிறான். இந்த அர்த்தத்தையும் (ஶ்ரீ) ஆதரிக்கிறார். (௫௯)

---

௬௦. யததோ ஹ்யபி கௌந்தேய புருஷஸ்ய விபஶ்சித:।
இந்த்ரியாணி ப்ரமாதீநி ஹரந்தி ப்ரஸபம் மந:॥

| | |
|---|---|
| கௌந்தேய | ஓ! குந்திபுத்திரா! |
| யதத: | (மோக்ஷமடைய) பிரயத்தினஞ்செய்கிற |
| விபஶ்சித: | விவேகியான |
| புருஷஸ்ய | புருஷனுடைய |
| மநோபி | மனதையுங்கூட |
| ப்ரமாதீநி | கலங்கச்செய்கிற |
| இந்த்ரியாணி | இந்திரியங்கள் |
| ப்ரஸபம் | வலுமையாக (பலவந்தமாக) |
| ஹரந்தி | இழுத்துக்கொண்டு போகின்றன. |

---

* (ஶா) அறிந்து ; (ஶ்ரீ,வி) கண்ணாற்பார்த்து.

ஓ! குந்திபுத்திரா! மோக்ஷமடையப் பிரயத்தினஞ்செய்கிற விவேகியான புருஷனுடைய மனதையுங்கூடக் கலங்கும்படிச்செய்கிற விந்திரியங்கள் (அந்தமனதை) பலவந்தமா யிழுத்துக்கொண்டு போகின்றன.

(ஸ்ரீ,வி) இந்திரியங்களை வைராக்கியத்தினு லடக்கினுல் மனதும் சுவாதீனமாய் பிரம்மதெரிசனத்திற் கநுகூலமாகுமேயன்றி (முந்திய சுலோகத்திற் சொல்லியிருக்கிறபடி) ஆகாரஞ் செய்யாததினுல் இந்திரியங்கள் அடங்கி யிருக்கிறவனுக்கு மனது சுவாதீனமாகவாவது பரமாத்ம தெரிசனமாகவாவது சாத்தியமானதே யல்லவென்பது தாத்பரியம்.

(வூா) விவேகிகளின் மனதையுங்கூட விந்திரியங்கள் பலவந்தமா யிழுத்துக்கொண்டு போகுமென்றதினுல், அவிவேகிகளுடைய மனதை இழுத்துக்கொண்டு போகிறது ஆச்சரியமல்ல வென்கிற அர்த்தம் துவநிக்கிறது. (சு௦)

---

சுக. தாநிஸர்வாணிஸம்யம்ய யுக்த ஆஸீத மத்பர:।
வஶே ஹி யஸ்யேந்த்ரியாணி தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா॥

| | |
|---|---|
| தாநிஸர்வாணி | அவைகளை (இந்திரியங்களை) எல்லாம் |
| ஸம்யம்ய | அடக்கிக்கொண்டு |
| யுக்த: | மன நிலையுள்ளவனும் |
| மத்பர:* | என்னையே பரமான தெய்வமென் றெண்ணினவனும் |
| ஆஸீத† | இருக்கவேண்டியது |
| யஸ்ய | எவனுடைய |
| வஶே ஹி | சுவாதீனத்திலேயே |
| இந்த்ரியாணி | இந்திரியங்கள் |
| (வர்த்தந்தே) | இருக்கின்றனவோ |
| தஸ்ய | அவனுடைய |
| ப்ரஜ்ஞா | ஞாநமானது |
| ப்ரதிஷ்டிதா | நிலையுள்ளதாயிருக்கிறது. |

அந்த (முன்சொன்ன) இந்திரியங்களையெல்லா மடக்கிக்கொண்டு மனநிலை யுள்ளவனுயு மென்னையே பரமான தெய்வமென் றெண்ணினவனுயு மிருக்கவேண்டியது. எவனுடைய சுவாதீனத்தி லிந்திரியங்க

---

* (ஶம) பரமாத்மா தான்ருனென்று நினைத்தவனும்; (ரா) என்னிடத்தில் மனது வைத்தவனும்.

† (ஸ்ரீ,வி) ஞானசமாதியி லிருக்கவேண்டியது.

ளிருக்கின்றனவோ அவனுடைய ஞானமானது நிலையுள்ளதென்று சொல்லப்படும்.

(ஸ்ரீ) அர்ஜுனனுடைய மூன்றாவது கேள்வியான "கிமாஸீத = எப்படியிருப்பான்" என்பதற்கு உத்தரஞ் சொல்லப்பட்டது.

(ஸூ) இந்திரியங்களைச் சுலபமாய் சுவாதீனப்படும்படிச் செய்துக்கொள்ள வேண்டுமென்பதை டுஅ - வது சுலோகத்திலும், ஆறு லந்த விந்திரியங்கள் விவேகியின் மனதைக்கூடக் கலங்கச்செய் திழுத்துக்கொண்டுபோகும் சக்தியுள்ளன வென்பதை டுகூ - சுo-வது சுலோகங்களிலும், அவ்விதமான விந்திரியங்களை யடக்குவதற்கு மனநிலையும் பரமாத்மாவினிடத்தில் நம்பிக்கையும் காரணமா யிருக்கின்றனவென்று இந்த சுலோகத்திலுஞ் சொல்லப்பட்டதாக விருக்கிறது. (சுக)

சுஉ. த்யாயதோவிஷயாந் பும்ஸ: ஸங்கஸ்தேஷூபஜாயதே।
ஸங்காத்ஸஞ்ஜாயதேகாம: காமாத்க்ரோதோऽபிஜாயதே॥

சுங. க்ரோதாத்பவதிஸம்மோஹ: ஸம்மோஹாத்ஸ்ம்ருதிவிப்ரம:।
ஸ்ம்ருதிப்ரம்ஶாத் புத்திநாஶோ புத்திநாஶாத்ப்ரணஶ்யதி॥

| | |
|---|---|
| விஷயாந் | (உலகத்திலுள்ள) வஸ்துக்களை |
| த்யாயத: | சிந்திக்கிற |
| பும்ஸ: | புருஷனுக்கு |
| தேஷு | அவைகளில் |
| ஸங்க: | பற்றுதல் (பிரியம்) |
| உபஜாயதே | உண்டாகிறது |
| ஸங்காத் | பற்றுதலிலிருந்து |
| காம: | ஆசையானது |
| ஸஞ்ஜாயதே | உண்டாகிறது |
| காமாத்* | ஆசையிலிருந்து |
| க்ரோத: | கோபமானது |
| அபிஜாயதே | உண்டாகிறது |
| க்ரோதாத் | கோபத்திலிருந்து |
| ஸம்மோஹ:† | அறிவின்மை |
| பவதி | உண்டாகிறது |

* (ஶம்) (ஶ்ரீ,வி) ஆசைப்பட்ட வஸ்துவை யடைவதில் தடையுண்டானு லதிலிருந்து.

† (ஶ) (ஶ்ரீ,வி) பாபகாரியத்தி லிச்சையானது.

| | |
|---|---|
| ஸம்மோஹாத் | அறிவின்மையிலிருந்து |
| ஸ்ம்ருதிவிப்ரம:* | நினைவின்மை |
| (பவதி) | உண்டாகிறது |
| ஸ்ம்ருதிப்ரம்ஶாத் | நினைவின்மையிலிருந்து |
| புத்திநாஶ:† | புத்திக்கேடானது |
| (பவதி) | உண்டாகிறது |
| புத்திநாஶாத் | புத்திக்கேடினால் |
| ப்ரணஶ்யதி‡ | முழுதுங் கெட்டவனாவான், அதாவது, உபயோகமற்ற புருஷனாவான். |

விஷயங்களைச் சிந்திக்கிற (உலகத்திலுள்ள வஸ்துக்களி லெப்போதும் நினைப்புள்ள) புருஷனுக் கந்த வஸ்துக்களில் பற்றுதலுண்டாகிறது. பற்றுதலினாலாசையும், ஆசையினாற் கோபமும், கோபத்தினாலறிவின்மையும், அறிவின்மையால் நினைவின்மையும், நினைவின்மையினாற் புத்திநாசமு முண்டாகி, புத்திநாசத்தால் முழுதுங் கெட்டவனாகிறான்.

(ஶம்) விஷய சிந்தையிலிருந்துண்டாகிற பிரமாதங்கள் இதிற் சொல்லப்பட்டன. என்னத்திற்காகவென்றால், இந்திரியங்களை விஷயங்களிற் பிரவிர்த்திக்க விடாமல் அடக்கவேண்டியது முக்கிய மென்பதற்காகவும், அப்படியே மனதையும் அடக்கவேண்டு மென்பதற்காகவுந்தான்.

(ஸ்வா) இந்த சுலோகங்களின் அர்த்தத்தைத் தரத்தக்க பிரகந் நாரதீயபுராணம் ௩௧-வது அத்தியாயத்திலுள்ள அடியில்கண்ட சுலோகங்களைப்பார்க்க॥ கர்மணா தேஹஸம்பந்தோ தேஹினாம் காம வர்த்ததே । காமால்லோபாபிவ்ருத்திஸ்து லோபாத்க்ரோதபராயண: ॥ ௪ ॥ க்ரோதாத்தர்மநாஶ: ஸ்யாத் தர்மநாஶாந்மதிப்ரம: । ப்ரணஷ்டபுத்திர்மநுஜ: புந: பாபங்கரோதிவை ॥ ௫ ॥ தஸ்மாத்தேஹ: பாபமூலம் பாபகர்மரதஸ்ய॥ தேகிக்கு (ஜீவனுக்கு) கருமத்தினாற் றேகமுண்டாகிறது. (ஜீவனுக்கு) காமம் (ஆசை) விருத்தியடைகிறது (என்றால், காமத்தினா லுலகவியாபாரங்களைச் செய்கிறான்). காமத்தினால் லோபம் (சிக்கனம்) உண்டாகிறது. லோபத்தினால் குரோதம் (கோபம்) உண்டாகிறது. குரோதத்தி

* (ஶம்) ஸ்ரீ (ஆ) சாஸ்திரம் ஆசாரியோபதேச மிவைகளினால் தெரிந்துக் கொண்ட அர்த்தத்தை மறந்துபோகிறது.

† (ஶம்) காரியாகாரிய விவேகத்திற்கு யோக்கியமான வந்தக்கரணம் மலின மடைதல்.

‡ (ஶம்) புருஷார்த்தத்திற்கு அயோக்கியனாகிறான். (ரா) சமுசாரத்தை யடைகிறான்; (ஆ) (மீ,வீ) நரகத்தை யடைகிறான்,

ஞல் தருமம் நசிக்கிறது. தருமநாசத்திஞல் புத்திப்பிரமை யுண்டாகிறது. புத்திப்பிரமையடைந்த மனிதன் மறுபடி பாபத்தைச்செய்கிருன். ஆகையிஞற் தேகமானது பாபத்திற்குக் காரணமா யிருக்கிறது அதிஞற் பாபத்தைச்செய்ய முயல்கிருன். (என்ருல் பூர்வ கர்மத்திஞற் தேக முண்டாகிறதும் அந்ததேகத்திஞற் பாபம்செய்கிறதுமா யிருக்கிறது. தேகமெடுத்தவன் பாபம்செய்தா லதிஞல் பின்னும் பின்னும் பாபசுவ ரூபமான தேகத்தை யடைவானென்பது தாத்பரியம். (சுஉ. சுங.)

---

சாசு. ராகத்வேஷவியுக்தைஸ்து விஷயாநிந்த்ரியைஶ்சரந்।
ஆத்மவஶ்யைர்விதேயாத்மா ப்ரஸாதமதிகச்சதி॥

| | |
|---|---|
| ராகத்வேஷவியுக்தை: | விருப்பு வெறுப்பற்றும் |
| ஆத்மவஶ்யை: | தனக்கு ஸ்வாதீனங்களாயுமிருக்கிற |
| இந்த்ரியை:* | இந்திரியங்களிஞலே |
| விஷயாந் | அன்னபாஞதிவிஷயங்களை |
| சரந் † | அநுபவிக்கிறவஞஞலும் |
| விதேயாத்மா | சுவாதீனமான மனதையுடையவன் |
| ப்ரஸாதம் | மனச்சமாதானத்தை (தெளிவை) |
| அதிகச்சதி | அடைகிருன். |

விருப்பு வெறுப்பற்று தனக்கு சுவாதீனமா யிருக்கிற விந்திரியங்களிஞலே அன்னபாஞதி விஷயங்களை யநுபவிக்கிறவஞஞலும் சுவாதீனமான மனதையுடையவன் மனச்சமாதானத்தை யடைகிருன்.

(ஸ்ரீ) முந்திய விரண்டு சுலோகங்களு மிந்தச் சுலோகத்திற்குச் சம்பந்தப்பட்டவைகள்தான். விஷயங்களைவிட வேண்டுமென்று முன் சொல்லப்பட்டிருந்தாலும் அவசியமானவரையில் விஷயங்களை யநுபவிக்கிறதிஞல் பாதக மடையானென்பது இதிற் சொல்லப்பட்டது இதானது அர்ஜுனனுடைய நான்காவது கேள்வியான வ்ரஜேத கிம் — எப்படி நடப்பான் அல்லது செய்கை யெப்படி யிருக்கும்'' என்கிற தற்கு உத்தரமாக விருக்கிறது.

(ஸா) ஞாநியானவ னிந்திரியங்களையும் மனதையும் விஷயங்களிற் பிரவேசிக்கவிடாமல் தடுக்கவேண்டுமென்று முன்ஞலே சொல்லப்பட்டதல்லவா? அப்படியிருந்தாலு மிடைவிடாமல் பிரம்மத்தியானஞ் செய்பவனுங் கூடத் தேகத்தைக் காப்பாற்ருமல் போஞல் பிரம்மத்தியானத்திற் கிடையூறுண்டாகும், ஆகையால், தேக சம்ரக்ஷணார்த்தமாக அவசிய மெவ்வளவு வேண்டியதோ அவ்வளவுவரையி லன்

---

* (ஸ்ரீ,வீ) வெளியிந்திரியங்களிஞல்.
† (ரா) சுத்தமாய் விட்டுவிட்டவன்.

ஹுதிகளைச் சம்பாதிக்க விஷயங்களிற் பிரவிர்த்திக்கலாம். அப்படிப் பிரவிர்த்திப்பதினுலே இந்திரியங்கள் மனது இவைகளைச் சுவாதீனப் படுத்திக் கொண்டவனுக்கு அன்னபாஹுதிகளின் நிமித்தமுண்டான விஷயாநுபவமானது தியானத்திற்குத் தடையாகமாட்டா தென்பது தாத்பரியம். (௬௪)

---

௬௫. ப்ரஸாதே ஸர்வது:காநாம் ஹாநிரஸ்யோபஜாயதே।
ப்ரஸந்நசேதஸோ ஹ்யாஶு புத்தி: பர்யவதிஷ்டதி॥

ப்ரஸாதே (ஸதி) — மனச்சமாதானமானபின்பு
அஸ்ய — இவனுக்கு
ஸர்வது:காநாம் — சகல துக்கங்களுடைய
ஹாநி: — நாசமானது
உபஜாயதே — உண்டாகிறது
ப்ரஸந்நசேதஸ:* — சமாதானமான மனதை யுடையவனுக்கு
ஆஶு — சீக்கிரம்
புத்தி: } † — புத்தியானது
பர்யவதிஷ்டதி } — ஸ்திரமாய் நிற்கும்.

மனச்சமாதானம் (தெளிவு அல்லது அமரிக்கை) உண்டானவனுக் கெல்லாத் துக்கங்களும் நாசமடையும். சமாதானமான மனதை யுடையவனுடைய புத்தியானது சீக்கிரமாய் ஸ்திரத்தையடையும். (௬௫)

---

௬௬. நாஸ்தி புத்திரயுக்தஸ்ய நசாயுக்தஸ்ய பாவநா।
நசாபாவயதஶ்ஶாந்திரஶாந்தஸ்ய குத: ஸுகம்॥

அயுக்தஸ்ய ‡ — இந்திரிய சுவாதீனமற்றவனுக்கு
புத்தி: § — ஆத்மஸ்வரூபஞானமானது
நாஸ்தி — இல்லை

---

* (ஶ௦) சுத்தாந்தக்கரண முடையவனுக்கு; (ரா) ஆத்ம தெரிசனத்துக்கு விரோதமான தோஷங்களை நிவர்த்தித்த மனதை யுடையவனுக்கு.

† (ஶ௦) புத்தியானது அகண்ட பிரம்மாகாரமாய் நிற்கும். அதாவது, பிரம்மந்தவிர வேறொன்றுந் தோன்ருது. (ரா) (நீ,வி) புத்தி:= ஆத்ம தெரிசனமானது பர்யவதிஷ்டதி= உண்டாகும். (ஸ்ரீ) பர்யவதிஷ்டதே, யென்று மொருபாடம். இது தான் சரியானபாடமென்று தோற்றுகிறது.

‡ (ஶ௦) மனச்சமாதான மற்றவனுக்கு; (ரா) என்னிடத்தில் மனது வைக்காமலே யிந்திரிய சுவாதீனஞ்செய்ய முயல்பவனுக்கு.

§ (ரா) பிரகிருதியிலிருந்து விடுபட்ட ஆத்மஸ்வரூப ஞானமானது.

𑌅𑌯𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌯 — இந்திரிய சுவாதீனமற்றவனுக்கு
𑌭𑌾𑌵𑌨𑌾* — ஆத்மத்தியானமும்
𑌨 — இல்லை
𑌅𑌭𑌾𑌵𑌯𑌤𑌃† — ஆத்மத்தியான மற்றவனுக்கு
𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌃 𑌨 ‡ — ஆத்மாவினிடத்தில் மன நிலையுமில்லை
𑌅𑌶𑌾𑌨𑍍𑌤𑌸𑍍𑌯¶ — நிலையற்ற மனதை யுடையவனுக்கு
𑌸𑍁𑌖𑌂 𑌕𑍁𑌤𑌃 § — சுகமேது.

இந்திரிய சுவாதீன மற்றவனுக்கு ஆத்மஸ்வரூப ஞானமாவது ஆத்மத்தியான மாவதில்லை. ஆத்மத்தியான மற்றவனுக்கு ஆத்மாவினிடத்தில் மனது நிலைக்கிறதுமில்லை. நிலையற்ற மனதை யுடையவனுக்குச் சுகமேது?

(ஶ்ரீ,வி.) 𑌅𑌯𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌯 — மனோ நிக்கிரக மில்லாதவனுக்கு
𑌭𑌾𑌵𑌨𑌾 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 — தியானமில்லை
𑌅𑌭𑌾𑌵𑌯𑌤𑌃 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌨 — தியான மற்றவனுக்கு அபரோக்ஷ ஞான மில்லை
𑌅𑌬𑍁𑌦𑍍𑌧𑍇𑌃 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌃 𑌨 — அபரோக்ஷஞானமில்லாதவனுக்கு மோக்ஷ மில்லை
𑌅𑌶𑌾𑌨𑍍𑌤𑌸𑍍𑌯 𑌸𑍁𑌖𑌂𑌕𑍁𑌤𑌃 — மோக்ஷ மடையாதவனுக்குச் சுகமேது. (௬௬)

---

௬௭. 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌾𑌂 𑌹𑌿 𑌚𑌰𑌤𑌾𑌂 𑌯𑌨𑍍𑌮𑌨𑍋𑌽𑌨𑍁𑌵𑌿𑌧𑍀𑌯𑌤𑍇।
𑌤𑌦𑌸𑍍𑌯 𑌹𑌰𑌤𑌿 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌂 𑌵𑌾𑌯𑍁𑌰𑍍𑌨𑌾𑌵𑌮𑌿𑌵𑌾𑌮𑍍𑌭𑌸𑌿॥

𑌚𑌰𑌤𑌾𑌂 — (விஷயங்களில்) பிரவேசிக்கிற
𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌾𑌂+ — இந்திரியங்களை
𑌯𑌤𑍍 — யாதொரு

---

* (𑌶𑌂) ஆத்மஞானத்திற் பிரீதியும்; (ரா) ஆத்ம ஸ்வரூபத்தை யாராய்ந்தறிதலானது.

† (ரா) ஆத்மஸ்வரூபத்தை யாராய்ந் தறியாதவனுக்கு.

‡ (ரா) விஷய ஆசையற்றுப் போகுதலில்லை.

¶ (ரா) விஷய ஆசை நிவிர்த்தி ஆகாதவனுக்கு.

§ (𑌶𑌂) இந்திரிய நிக்கிரகசுகம் இல்லை. என்றால், இந்திரியங்களை விஷயங்களிற் பிரவிர்த்திக்கும்படி விட்டிருக்கிறவனாயிற் சுகமே யிருக்கமாட்டா தென்பதே; (ரா) மோக்ஷாநந்தமேது.

\+ 𑌅𑌵𑌶𑍀𑌣𑍇𑌷𑍁 அல்லது 𑌅𑌨𑌾𑌦𑍃𑌤𑍇𑌷𑍁.

| | |
|---|---|
| 𑌮𑌨𑌃 | மனதானது |
| 𑌅𑌨𑍁𑌵𑌿𑌧𑍀𑌯𑌤𑍇 | அநுசரித்துப்போகிறதோ |
| 𑌤𑌤𑍍 | அந்தமனதானது |
| 𑌅𑌸𑍍𑌯 | இவனுடைய (புருஷனுடைய) |
| 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌂 | விவேகத்தை |
| 𑌅𑌂𑌭𑌸𑌿 | (ஸமுத்திர) ஜலத்தில் |
| 𑌨𑌾𑌵𑌂 | கப்பலை |
| 𑌵𑌾𑌯𑍁𑌰𑌿𑌵 | காற்றுப்போல |
| 𑌹𑌰𑌤𑌿 | இழுத்துக்கொண்டு போகிறது. |

விஷயங்களிற் பிரவேசிக்கிற இந்திரியங்களை யாதொரு மனதான தநுசரித்துப்போகிறதோ வந்த மனதானது புருஷனுடைய விவேகத்தைச் சமுத்திரத்திற் கப்பலைக் காற்று (எப்படி இழுத்துக்கொண்டு போகுமோ வப்படி)ப்போல் இழுத்துக்கொண்டு போகிறது.

(ஸ்ரீ) 𑌚𑌰𑌤𑌾𑌂=விஷயங்களிற் பிரவேசிக்கிற, 𑌇𑌂𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌾𑌂=இந்திரியங்களுடைய மத்தியில் (என்று லிந்திரியங்களுக்குள்ளே), 𑌯𑌤𑍍= எந்த விந்திரியத்தை, 𑌮𑌨𑌃=மனதானது, 𑌅𑌨𑍁𑌵𑌿𑌧𑍀𑌯𑌤𑍇 = அநுசரித்துப்போகிறதோ, 𑌤𑌤𑍍=அந்த ஒரே இந்திரியமானது, 𑌅𑌸𑍍𑌯=இப்புருஷனுடைய, 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌂=விவேகத்தை, 𑌅𑌂𑌭𑌸𑌿=சமுத்திரத்தில், 𑌨𑌾𑌵𑌂= கப்பலை, 𑌵𑌾𑌯𑍁𑌰𑌿𑌵=காற்றுப்போல, 𑌹𑌰𑌤𑌿 𑌹𑌿 =அபகரிக்கிறது. (௬௭)

---

௬௮. 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌯𑌸𑍍𑌯 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌨𑌿𑌗𑍃𑌹𑍀𑌤𑌾𑌨𑌿 𑌸𑌰𑍍𑌵𑌶𑌃।
𑌇𑌂𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑍀𑌂𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌰𑍍𑌥𑍇𑌭𑍍𑌯𑌸𑍍𑌤𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌾॥

| | |
|---|---|
| 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 | ஓ! தோள்வலிமையுடைய வர்சுனா! |
| 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 | ஆகையினாலே |
| 𑌯𑌸𑍍𑌯 | எவனுடைய |
| 𑌇𑌂𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 | இந்திரியங்கள் |
| 𑌸𑌰𑍍𑌵𑌶𑌃 | சகலமான |
| 𑌇𑌂𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌰𑍍𑌥𑍇𑌭𑍍𑌯𑌃 | விஷயங்களிலிருந்து |
| 𑌨𑌿𑌗𑍃𑌹𑍀𑌤𑌾𑌨𑌿 | விடுவிக்கப் படுகின்றனவோ |
| 𑌤𑌸𑍍𑌯 | அவனுடைய |
| 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾 | ஞானமானது |
| 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌾 | நிலைத்திருக்கிறது. |

ஓ! அர்ச்சுனா! (இந்திரியங்கள் மனதை இழுத்துக்கொண்டுபோகுஞ் சக்தியை யுடைத்தா யிருக்கின்றன) ஆகையினாலே, எவனுடைய விந்திரியங்கள் சகலமான விஷயங்களிலிருந்தும் விடுவிக்கப் படுகின்ற

னவோ அவனுடைய ஞானமானது நிலைத்திருக்கிறதென்று சொல்லப் படும். (௬௮)

---

௬௯. 𑌯𑌾 𑌨𑌿𑌶𑌾 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌤𑌸𑍍𑌯𑌾𑌂 𑌜𑌾𑌗𑌰𑍍𑌤𑌿 𑌸𑌂𑌯𑌮𑍀।
𑌯𑌸𑍍𑌯𑌾𑌂 𑌜𑌾𑌗𑍍𑌰𑌤𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌸𑌾 𑌨𑌿𑌶𑌾 𑌪𑌶𑍍𑌯𑌤𑍋 𑌮𑍁𑌨𑍇𑌃॥

| | |
|---|---|
| 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 | எல்லாப் பிராணிகளுக்கும் |
| 𑌯𑌾 | எது (எந்தப் பிரம்மநிஷ்டையானது) |
| 𑌨𑌿𑌶𑌾 | இராத்திரியோ (இரவுபோலவோ) |
| 𑌤𑌸𑍍𑌯𑌾𑌂 | அதில் (அந்தப்பிரம்மநிஷ்டையில்) |
| 𑌸𑌂𑌯𑌮𑍀 | இந்திரியங்களையடக்கிய விவேகியானவன் |
| 𑌜𑌾𑌗𑌰𑍍𑌤𑌿 | விழித்துக்கொண்டிருக்கிறான் |
| 𑌯𑌸𑍍𑌯𑌾𑌂 | எதில் (எந்தவக்ஞானதெசையில்) |
| 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 | பிராணிகள் |
| 𑌜𑌾𑌗𑍍𑌰𑌤𑌿 | விழித்துக்கொண்டிருக்கிறதுகளோ |
| 𑌸𑌾 | அது (அந்த வக்ஞானாவஸ்தையானது) |
| 𑌪𑌶𑍍𑌯𑌤𑌃 | ஆத்மஞானியான |
| 𑌮𑍁𑌨𑍇𑌃 | முனிக்கு |
| 𑌨𑌿𑌶𑌾 | இரவு (இராத்திரிபோல.) |

எல்லாப் பிராணிகளுக்கு மெந்தப் பிரம்மநிஷ்டையானது இரவோ வந்தப் பிரம்மநிஷ்டையில் இந்திரியங்களை யடக்கிய விவேகியானவன் விழித்துக்கொண்டிருக்கிறான். எந்த வக்ஞானா வஸ்தையில் பிராணிகள் விழித்துக்கொண்டிருக்கிறதுகளோ வந்த வக்ஞானவஸ்தையானது ஆத்மஞானியான முனிக்கு இரவா யிருக்கிறது.

(𑌭𑌾) இந்திரியங்களை யடக்கிய வாத்மஞானிக் குலக விஷயங்களிற் பிரவிர்த்தியே யிருக்கமாட்டா தாகையால், அவனுக் குலக விஷயங்க ளிரவுபோலவும், பிரம்மதெரிசனம் பகல்போலவு மிருக்கும். இந்திரியங்களை யடக்காத வக்ஞானிக்கு பிரம்மநிஷ்டையில் பிரவிர்த்தி யிருக்கமாட்டா தாகையால் அவனுக்குப் பிரம்மநிஷ்டை இரவுபோலவும், உலக விஷயங்களுடைய தெரிசனம் பகல்போலவு மிருக்குமென்பது தாத்பரியம். (௬௯)

---

௭௦. 𑌆𑌪𑍂𑌰𑍍𑌯𑌮𑌾𑌣𑌮𑌚𑌲𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌂 𑌸𑌮𑍁𑌦𑍍𑌰𑌮𑌾𑌪𑌃 𑌪𑍍𑌰𑌵𑌿𑌶𑌨𑍍𑌤𑌿 𑌯𑌦𑍍𑌵𑌤𑍍।
𑌤𑌦𑍍𑌵𑌤𑍍𑌕𑌾𑌮𑌾 𑌯𑌂 𑌪𑍍𑌰𑌵𑌿𑌶𑌨𑍍𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌸 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌮𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌨 𑌕𑌾𑌮𑌕𑌾𑌮𑍀॥

| | |
|---|---|
| 𑌆𑌪𑍂𑌰𑍍𑌯𑌮𑌾𑌣𑌂 | ஜலங்களினாலே பூர்ணமாய் நிறைந்தவும் |
| 𑌅𑌚𑌲𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌂 | கரை கடக்காத, அல்லது ஸ்திரமான இருப்பை யுடையவுமான |

| | |
|---|---|
| ஸமுத்ரம் | சமுத்திரத்தை |
| ஆப: | (நதிமுதலியவைகளின்) ஜலங்கள் |
| யத்வத் | எப்படி |
| ப்ரவிஶந்தி* | பிரவேசிக்கின்றனவோ |
| தத்வத் | அப்படியே |
| ஸர்வே காமா: | சமஸ்தவிஷயங்களும் |
| யம் | எந்தப்பிரம்மநிஷ்டனை |
| ப்ரவிஶந்தி | பிரவேசிக்கின்றனவோ |
| ஸ: | அவன் |
| ஶாந்திம் | மோக்ஷத்தை |
| ஆப்நோதி | அடைகிறான் |
| காமகாமீ | விஷய ஆசையுள்ளவன் |
| ந | மோக்ஷமடைகிறதில்லை. |

ஜலங்களினால் பூர்ணமாய் நிறைந்தவும், ஸ்திரமான இருப்பை யுடையவுமாகிய சமுத்திரத்தை நதி முதலிய ஜலங்கள் எப்படிப்போ யடையுமோ (அப்படி அடைந்ததினால் சமுத்திரம் கரை கடக்கவாவது யாதொரு விகாரத்தை யடையவாவது மாட்டாதோ) அப்படியே சகல விஷயங் (இச்சை அல்லது ஆசை) களும் பிரம்மநிஷ்டனைப்போய் அடைந்தபோதிலும் அவன் (அதினால் விகாரமடையாமல்) மோக்ஷத் தையடைவான். விஷய இச்சையுள்ளவன் மோக்ஷமடைகிறதில்லை. (எ0)

---

எக. விஹாய காமாந்ய: ஸர்வாந் புமாம்ஶ்சரதி நிஸ்ப்ருஹ:।
நிர்மமோ நிரஹங்கார: ஸ ஶாந்திமதிக₃ச்ச₂தி॥

| | |
|---|---|
| ய: புமாந் | எந்த (பிரம்மநிஷ்டனான) புருஷன் |
| ஸர்வாந் காமாந் | சமஸ்தவிஷயங்களையும் |
| விஹாய | விட்டு |
| நிஸ்ப்ருஹ: | சகலத்திலுமாசையற்றும் |
| நிர்மம: † | (தன்னுடையதென்கிற) மமதையற்றும் |
| நிரஹங்கார: ‡ | (தானென்கிற) அகங்காரமற்றும் |

---

* (பா.) லயித்துப்போகின்றனவோ.

இந்த எ0 - வது சுலோகமானது அவதூதோபனிஷத்திற்காணப்படுகிறது.

† (பா.) தன்னுடைய தேகமாவது, தன்தேக சம்ரக்ஷணைக்காகக் கிரகிக்கிற பதார்த்தமாவது, தன்னுடையதென்று எண்ணமில்லாதவன்.

‡ (பா.) நான் பிரம்மநிஷ்டை செய்கிறேன், மற்றவர்களால் இப்படிச் செய்யக்கூடுமா வென்கிறது முதலிய அகங்காரங் கொள்ளாதவன். (ஈ) தேகமே ஆத்மா வென்று எண்ணமி லிருப்பவன்.

| | |
|---|---|
| 𑌚𑌰𑌤𑌿 ‡ | (எவ்விடத்திலும்) சஞ்சரிக்கிருனே |
| 𑌸𑌃 | அவன் |
| 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌂 ¶ | (சகல துக்கத்திலிருந்து விடுபட்டு) சுகத்தை அல்லது மோக்ஷத்தை |
| 𑌅𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 | அடைகிருன். |

எந்தப் பிரம்மநிஷ்டனை புருஷன் சமஸ்த விஷயங்களையும்விட்டு சகலத்திலும் ஆசை, மமதை, அகங்காரங்களற்று எவ்விடத்திலும் சஞ்சரிக்கிருனே அவன் சகல துக்கங்களிலிருந்தும் விடுபட்டு மோக்ஷத்தையடைகிருன்.

(மீ.வி) எந்தப் பிரம்ம நிஷ்டையுள்ள புருஷன் நிஷித்தமான கருமத்தி லாசையற்றும், மமதையற்றும், அகங்காரமற்று மிருந்து சகல விஷயங்களிலும் பற்றற்று சஞ்சரிக்கிருனே அவன் சாந்தியை அடைவான்.

(𑌵𑍍𑌯𑌾) இந்த அத்தியாயம் ருச - வது சுலோகத்திலுள்ள கடைசிக் கேள்வியான "எப்படி நடப்பான்" என்பதற்கு 𑌚𑌰𑌤𑌿 - என்பதினுல் உத்தரமாகலாம். (எக)

---

எஉ. 𑌏𑌷𑌾𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑍀𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌃𑌪𑌾𑌰𑍍𑌥 𑌨𑍈𑌨𑌾𑌂𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌵𑌿𑌮𑍁𑌹𑍍𑌯𑌤𑌿।
𑌸𑍍𑌥𑌿𑌤𑍍𑌵𑌾𑌸𑍍𑌯𑌾𑌮𑌨𑍍𑌤𑌕𑌾𑌲𑍇𑌪𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌨𑌿𑌰𑍍𑌵𑌾𑌣𑌮𑍃𑌚𑍍𑌛𑌤𑌿॥

| | |
|---|---|
| 𑌪𑌾𑌰𑍍𑌥 | ஓ! குந்திபுத்திரா! |
| 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑍀 𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌃 } * | பிரம்மஞான நிஷ்டையானது |
| 𑌏𑌷𑌾 | இதுவரைச் சொல்லிவந்ததாக விருக்கிறது |
| 𑌏𑌨𑌾𑌂 | இந்த (பிரம்மஞானநிஷ்டையை) |
| 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 | அடைந்து |
| 𑌨𑌵𑌿𑌮𑍁𑌹𑍍𑌯𑌤𑌿 | சமுசாரமோகத்தை யடைகிறதில்லை |
| 𑌅𑌸𑍍𑌯𑌾𑌂 | இந்தபிரம்மஞானநிஷ்டையில் |
| 𑌅𑌨𑍍𑌤𑌕𑌾𑌲𑍇 † | மரணகாலத்தில் |

---

‡ (𑌶𑌂) தேக சம்ரக்ஷணைக்காகமட்டுஞ் சஞ்சரிக்கிறவன்; (ஸ்ரீ) பிராரப்தத்தினுல் வந்ததை அனுபவிப்பவன்.

¶ (𑌶𑌂) (மேல்சொன்ன அர்த்தமுமல்லாமல்) பிரம்ம சுவரூபத்தை

* (𑌶𑌂) பிரம்ம சுவரூபமாகவே யிருக்கிறதானது; (ரா) 𑌏𑌷𑌾𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌃= ஆத்ம சுவரூப நிச்சயத்தோடு கூடின கரும யோகஸ்திதியானது - 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑍀=பிரம்மத்தை அடைவிக்கும்படியானது.

† (மீ,வி) அந்தியகாலத்திலுங் கூட. (𑌵𑍍𑌯𑌾) அத் - எ - சு - ௲0 - அத் - அ - சு - உ - ௫ - பார்க்க.

| | |
|---|---|
| அந்தகாலே(அ)பி | இருந்தபோதிலும் |
| ப்ரஹ்மநிர்வாணம்* | பிரம்மத்தில் லயத்தை |
| ருச்சதி | அடைகிறன். |

ஓ! குந்திபுத்திரா! பிரம்மஞான நிஷ்டையானது இதுவரை சொல்லிவந்ததாக விருக்கிறது. இந்த பிரம்மஞான நிஷ்டையை அடைந்து (பிறகு) சமுசாரமோகத்தை அடைகிறதில்லை. இந்த பிரம்மஞான நிஷ்டையில் மரணகாலத்தி லிருந்தபோதிலும் பிரம்மத்தில் லயத்தை அடைகிறன்.

(ஸ்வா) ஜனனகாலம்முதல் மரணகாலம் வரையில் பிரம்மஞான நிஷ்டையி லிருந்தால்தான் மோக்ஷம் கிடைக்குமென்பது (ஸ்ரீ,வி) அபிப்பிராயம். மற்றவர்களுடைய அபிப்பிராயமானது, மரணகாலத்திலாவது பிரம்மநிஷ்டையி லிருந்தபோதிலும் மோக்ஷம் கிடைக்குமென்பதே.

இதி ஸ்ரீ பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம்
யோகஶாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுநஸம்வாதே
ஸாங்க்யயோகோ நாம
த்விதீயோ(அ)த்யாய:.
ஸ்ரீ க்ருஷ்ணாயபரப்ரஹ்மணே நம:.
ஸாங்கிய யோகமென்கிற இரண்டாவது அத்தியாயம்
முற்றிற்று.

---

(ஸா) ஆநந்தரூபமான பிரம்மத்தை, (ஸ்ரீ,வி) பிராகிருத சரீரமற்ற பிரம்

ஸ்ரீரஸ்து.

த்ருதீயோऽத்யாயாரம்ப:.

# மூன்றாவது அத்தியாயம்.

---

அர்ஜுந உவாச.

க. ஜ்யாயஸீ சேத்கர்மணஸ்தே மதா புத்திர்ஜநார்த்தந।
தத்கிம் கர்மணி கோரே மாம் நியோஜயஸி கேசவ॥

| | |
|---|---|
| அர்ஜுந உவாச | அர்சுனன் சொல்வது |
| ஹே ஜநார்த்தந | ஓ! ஜனார்த்தன! |
| கர்மண: | கருமத்தைப்பார்க்கிலும் |
| புத்தி: | ஞானமானது |
| ஜ்யாயஸீ | சிரேஷ்டமென்பது |
| தே | உமக்கு |
| மதா சேத் | சம்மதமானால். |
| தத் | அப்போது |
| ஹே கேசவ | ஓ! கேசவா! |
| கிம் | என்னகாரணத்தால் |
| கோரே | பயங்கரமான அல்லது பிராணி ஹிம்சகரமான |
| கர்மணி | கருமத்தில் |
| மாம் | என்னை |
| நியோஜயஸி | பிரவிருத்திக்கும்படி செய்கிறீர். |

அர்சுனன் ஸ்ரீகிருஷ்ணசுவாமியை நோக்கிச்சொல்வது. ஓ! ஜனார்த்தன! கருமத்தைப்பார்க்கிலும் ஞானம் சிரேஷ்டமென்பது உம்முடைய அபிப்பிராயமானால், அப்போது, ஓ! கேசவா! எந்தக் காரணத்தால் பயங்கரமான கருமத்தில் என்னை பிரவிருத்திக்கும்படி செய்கிறீர்?

(ஸம்) பிரவிருத்தி புத்தி, நிவிருத்தி புத்தி, என்று இரண்டுள்ளது. “ப்ரஜஹாதியதாகாமாந்” (இதின் உ-அத். ருரு-சு.) என்பது முதல் “ஏஷாப்ராஹ்மீஸ்திதி:பார்த்த” (இதின் உ-அத். எஉ-சு.) என்பது வரையில் சாங்கியமாகிய நிவிருத்தி புத்தி, அதாவது, கருமசந்நியாஸத்தினாலே கிருதார்த்தனாகலாமென்று சொல்லப்பட்டது. “கர்மண்யேவாதிகாரஸ்தே மாபலேஷுகதாசந” (இதின் உ-அத். சஎ-சு.)

என்பதினுல், கருமத்தையே செய்யவேண்டுமென்கிற பிரவிருத்தி புத்தியினுல் கிருதார்த்தனுவாய் என்றும் சொல்லப்பட்டது. இவ்விரண்டிலேயும் கிருதார்த்தனுகக் கூடுமானுல், சுலபமானதாகிய நிவிருத்திமார்க்கமான சாங்கியபுத்தியை விட்டு கஷ்டசாத்தியமானதும் பிரவிருத்திபுத்தியை யுடையதுமான கருமத்தில் பிரவேசிக்கும்படி, என் என்னை ஏவுகிறீர் என்பது அர்சுனனுடைய கேள்வியாக விருக்கிறது.

சிலர், மோக்ஷமடைவதற்கு ஞானம், கருமம், (இரண்டும்) இரண்டும் வேண்டியதாகச் சொல்லுகிருர்கள். இதுதான் கிருதார்த்ததை யென்கிருர்கள். இந்த அபிப்பிராயம் தப்பானது. சுருதி ஸ்மிருதிகளிலே சகல ஆசிரமிகளுக்கும் (சந்நியாஸி, வானபிரஸ்தன், பிரம்மசாரி, கிரகஸ்தன் இவர்களுக்கு) கரும ஸந்நியாசம் சொல்லப்பட் டிருக்கிறது. அஸந்நியாசிக்கு மட்டுந்தான் கருமம் செய்யவேண்டியதாயுஞ் சொல்லப்பட்டிருக்கிறது. மோக்ஷ இச்சையுள்ள ஞானநிஷ்டனுக்கு கருமம் அவசியமில்லை யென்பதற்கு அநேக பிரமாணங்களுண்டு. ஆகையால், ஞானம், கருமம், இரண்டும் ஒருவனே செய்யவேண்டியதென்று சொல்லப்பட்டதாக நினைக்கக்கூடாது. ஒவ்வொரு அதிகாரிக்கு ஒவ்வொன்று சொல்லப்பட்டதாக நினைக்கவேண்டியது. இரண்டு மொருவனுக்குச் சொல்லப்பட்டதல்ல வாகையால், மோக்ஷமடைய ஞானம் காரணமேயன்றி, ஞானம் கருமமிரண்டுங் காரணமல்ல, என்பது தாத்பரியம். (அத் - கஅ - சு - சுகூ-ல் இந்த தாத்பரியம் விஸ்தாரமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது.)

(ரா) இந்திரியங்களை யடக்கிக்கொண்டு செய்வதாகிய ஆத்ம ஞான நிஷ்டையும் சொன்னீர். இந்திரியங்களை விஷயங்களில் பிரவிருத்தி செய்துக்கொண்டு செய்யப்படுவதாகிய நிஷ்காம கருமமானது ஞானத்திற்குக் காரணமானதென்றுஞ் சொன்னீர். ஞானநிஷ்டைக்கு விரோதமானதும் இந்திரியங்களை விஷயங்களில் பிரவிருத்திக்கச் செய்வதுமாகிய பயங்கரமான கருமத்தை ஏன் என்னைச் செய்யச்சொல்லுகிறீர் என்பது, அர்சுனன் தாத்பரியம்.

(மீ,வி) கருமத்தைப் பார்க்கிலும் புத்தி யோகமாகிய ஞானம் விசேஷமானதென்று (உ-அத். சகூ-சு.) சொல்லப்பட் டிருக்கிறது. சுவர்க்காதி பிராப்தியை அடைவிக்கும்படியான காம்மிய கருமத்தைச் செய்யும்படி (ஷை அத். ௩எ-சு.) சொல்லப்பட்டிருக்கிறது. கடைத்தேற வேண்டுமென்று கேட்ட வெனக்கு காம்மிய கருமத்தைச் செய்யச் சொல்லியது, என்னை சமுசாரத்தில் கொண்டுவந்து விடுகிறதாக விருக்கிறது. (மேற்படி அத். ௩கூ-சு.) நிஷ்காம கருமயோகமே சகல பந்தங்களை நிவர்த்தித்து மோக்ஷத்தையடைய ஏதுவென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இப்படிப் பலவிதமாய்ச் சொன்னதினுல் கலக்கமுற்

திருக்கிறேன். நிஷ்காமகருமம் மோக்ஷ ஏதுவா? ஆத்மஞானநிஷ்டை மோக்ஷ ஏதுவா? என்று சந்தேகப்பட்டு அர்சுனன் கேட்கிறான். (௧)

---

௨. வ்யாமிஶ்ரேணைவ வாக்யேந பு₃த்₃தி₄ம் மோஹயஸீவ மே।
தடே₃கம் வத₃ நிஶ்சித்ய யேந ஶ்ரேயோऽஹமாப்நுயாம்॥

| | |
|---|---|
| வ்யாமிஶ்ரேணைவ* | சமுசயத்தை யுண்டாக்குகிறதுபோலுள்ள |
| வாக்யேந | வாக்கியத்தினாலே |
| மே | என்னுடைய |
| பு₃த்₃தி₄ம் | புத்தியை |
| மோஹயஸீவ | மோகிக்கச்செய்கிறவர்போல் காண்கிறீர். |
| யேந | எதினாலே |
| ஶ்ரேய: | மோக்ஷத்தை |
| அஹம் | நான் |
| ஆப்நுயாம் | அடைவேனோ |
| தடே₃கம் | அவ்வொன்றையே |
| நிஶ்சித்ய | நிச்சயித்து |
| வத₃ | சொல்லும். |

சமுசயத்தை யுண்டாக்கிறதுபோலுள்ள வாக்கியத்தினாலே என்னுடைய புத்தியை மோகிக்கச் செய்கிறவர்போல் காண்கிறீர். எதினாலே மோக்ஷத்தை நான் அடைவேனோ அவ்வொன்றையே நிச்சயித்துச் சொல்லும். (௨)

---

ஶ்ரீ ப₄க₃வாநுவாச.

௩. லோகேऽஸ்மிந் த்₃விவிதா₄ நிஷ்டா₂ புரா ப்ரோக்தா மயாऽநக₄।
ஜ்ஞாநயோகே₃ந ஸாங்க்₂யாநாம் கர்மயோகே₃ந யோகி₃நாம்॥

| | |
|---|---|
| ஶ்ரீ ப₄க₃வாநுவாச | ஸ்ரீகிருஷ்ணசுவாமிசொல்வது |
| ஹே அநக₄ | ஓ! பாபமற்றவனே! |
| புரா† | முந்திய அத்தியாயத்திலே |

* (ரா) (ஸ்ரீ) "வ்யாமிஶ்ரேணைவ" என்றுபாடம், சமுசயத்தையே யுண்டாக்குகிற, என்பது அர்த்தம். இது விஷயம் (ஶம) பாஷியத்தில் தெளிவுபடுத்தப் பட்டிருக்கிறது.

† (ஸூ) இந்தப் பதத்திற்கு, 'முன்னாலே' என்பது சுபாவமான அர்த்தம். (ஸ்ரீ) முன்னாலே யென்றால், முந்திய அத்தியாயத்தில், என்று அர்த்தம் செய்தார். (ஶம) முன்னாலே யென்றால், சிருஷ்டிகாலத்தில், என்று அர்த்தம் செய்தார்.

| | |
|---|---|
| அஸ்மிந் லோகே | இந்த உலகத்தில் |
| ஸாங்க்யாநாம் | (ஞான யோகத்தோடு பிரம்ம நிஷ்டை செய்ய முயற்சி யுள்ளவர்களான) சாங்கியர்களுக்கு |
| ஜ்ஞாநயோகேந | (ஞானம் சித்திக்கும்பொருட்டுச் செய்ய வேண்டிய தியானமாகிய) ஞான யோகத்தினாலேயும் |
| யோகிநாம் | (கருமஞ்செய்து அதினால் சித்தசுத்தியாய் பிறகு சாங்கியத்தில் பிரவேசிக்க இச்சிப்பவர்களான) கரும யோகிகளுக்கு |
| கர்மயோகேந | (நிஷ்காம) கருமயோகத்தினாலேயும் |
| த்விவிதா | இரண்டுவிதமான |
| நிஷ்டா * | நிஷ்டையானது |
| மயா | என்னாலே |
| ப்ரோக்தா | சொல்லப்பட்டது. |

ஸ்ரீ கிருஷ்ணசுவாமியானவர் அர்சுனனை நோக்கிச் சொல்வது. ஓ! பாபமற்றவனே! முந்திய அத்தியாயத்தில் இந்த உலகத்திலே ஞான யோகமானது சாங்கியர்களுக்கும், கருமயோகமானது கருமயோகிகளுக்கு மாக இரண்டுவிதமான நிஷ்டை என்றுச் சொல்லப்பட்டது.(௩)

---

௪. நகர்மணாமநாரம்பாந் நைஷ்கர்ம்யம் புருஷோஸ்நுதே।
நசஸந்ந்யஸநாதேவ ஸித்திம்ஸமதிகச்சதி॥

| | |
|---|---|
| புருஷ: | புருஷனானவன் |
| கர்மணாம் † | கருமங்களுடைய |
| அநாரம்பாத் | அநுஷ்டானமில்லாமையால் |
| நைஷ்கர்ம்யம் ‡ | ஞானத்தை |

---

* (பா) (௨) இருப்பானது.

† (பா) சகல பாபங்களையும் போக்கடிக்கத் தக்கவைகளாயும், சித்தசுத்தியை உண்டாக்கத் தக்கவைகளாயும், ஞான நிஷ்டைக்கு ஏதுக்களாயு மிருக்கிற கருமங்களுடைய. (ஸ்ரீ) நிஷ்காம கருமங்களுடைய. (ரா) நிஷ்காமமாய் கோவிந்தனுடைய ஆராதனை ரூபமாயிருப்பதும், அநாதிகால பாபத்தைப் போக்கடிக்கிறதுமான கருமங்களுடைய.

‡ (பா) ஞான நிஷ்டையினா லுண்டாகும் நிஷ்கருமமாகிய ஆத்ம சுவரூபமாயிருக்குதலை. (ரா) ஞானநிஷ்டையை (௨) ஞானத்தினாலுண்டாகும் மோக்ஷத்தை.

| | |
|---|---|
| 𑌨𑌾𑌶𑍍𑌨𑍁𑌤𑍇 | அடைகிறதுமில்லை |
| 𑌸𑌨𑍍𑌨𑍍𑌯𑌸𑌨𑌾𑌦𑍇𑌵* | கருமத்தை விட்டுவிடுவதினாலேதானே |
| 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂† | மோக்ஷத்தை |
| 𑌨 𑌸𑌮𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 | அடைகிறதுமில்லை. |

புருஷனானவன் கருமங்களுடைய அநுஷ்டான மில்லாமையால் ஞானத்தை அடைகிறதுமில்லை; கருமத்தை விட்டுவிடுவதினாலேதானே மோக்ஷத்தை அடைகிறதுமில்லை.

(ஶம்) ஞானமடைவதற்குக் கருமாநுஷ்டானம் காரணமாயிருக்கிறது. எப்படியென்றால், கருமங்களை பலாபேக்ஷையன்றி ஈசுவரார்ப்பண புத்தியாய்ச் செய்துவந்தால் அதினால் சித்த சுத்தியும், சித்த சுத்தியினால் ஞானமும், அந்த ஞானத்தினால் மோக்ஷமு மடையவேண்டுமேயன்றி கருமங்களைச் செய்யாமலே விட்டுவிடுவதினால் ஞானமாவது, அதினால் நிஷ்கருமமான ஆத்ம சுவரூபமா யிருக்கிறதாவது உண்டாகிறதில்லை என்பது தாத்பரியம். (௪)

---

௫. 𑌨 𑌹𑌿 𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍𑌕𑍍𑌷𑌣𑌮𑌪𑌿 𑌜𑌾𑌤𑍁 𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑍍𑌯𑌕𑌰𑍍𑌮𑌕𑍃𑌤𑍍।
𑌕𑌾𑌰𑍍𑌯𑌤𑍇 𑌹𑍍𑌯𑌵𑌶𑌃 𑌕𑌰𑍍𑌮 𑌸𑌰𑍍𑌵𑌃 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌜𑍈𑌰𑍍𑌗𑍁𑌣𑍈𑌃॥

| | |
|---|---|
| 𑌜𑌾𑌤𑍁 | ஒருகாலத்திலும் |
| 𑌕𑍍𑌷𑌣𑌮𑌪𑌿 | நிமிஷமாவது |
| 𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍 | ஒருவனும் |
| 𑌅𑌕𑌰𑍍𑌮𑌕𑍃𑌤𑍍 | கருமம் செய்யாதவனாக |
| 𑌨 𑌹𑌿 𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿 | இருக்கிறதில்லை |
| 𑌹𑌿 | ஏனென்றால் |
| 𑌅𑌵𑌶𑌃 ‡ | பராதீனமாயிருக்கிற |
| 𑌸𑌰𑍍𑌵𑌃 | (ஜனங்கள்) எல்லோரும் |
| 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌜𑍈𑌃§ | சுபாவத்திலிருந்துண்டான |

* (ஶம்) ஞானமுண்டாகிறதற்கு முந்தியே கருமத்தை விட்டுவிடுவதினாலேயே (ஸ்ரீ) (ரீ,வி) ஞானமில்லாத சந்நியாசத்தினாலேதானே, (ரா) அநுஷ்டிக்கத் தகுந்ததாயும் சாஸ்திரோக்தமானதாயு மிருப்பதை விட்டுவிடுவதினாலேதானே.

† (ரா) ஞான நிஷ்டையை.

‡ (மா வ) அத் - ௬ - ௪ - ௪௪, அத் - ௧௮ - ௪ - ௬௦ - பார்க்க.

§ (ஶம்) மாயையிலிருந்துண்டான. (ரா) பிரகிருதியிலிருந்துண்டான.

இந்த ௫ - வது சுலோகத்தைபோலொத்த சுலோகத்தை ஸ்ரீ பாகவதம் ௬ - ௧ ௫௩-ல் காண்க.

| | |
|---|---|
| 𑌆𑌰𑌭𑌤𑍇 | ஆரம்பிக்கிறானோ |
| 𑌹𑍇 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 | ஓ! அர்சுனா! |
| 𑌸𑌃 | அவன் |
| 𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌯𑌤𑍇* | சிரேஷ்டனாயிருக்கிறான் |

எவன் ஞானேந்திரியங்களை மனதினாலடக்கி கருமேந்திரியங்களினாலே கருமயோகத்தை பலாபேக்ஷையன்றி செய்கிறானோ ஓ! அர்சுனா! அவன் சிரேஷ்டனா யிருக்கிறான். (எ)

---

அ. 𑌨𑌿𑌯𑌤𑌂𑌕𑍁𑌰𑍁𑌕𑌰𑍍𑌮𑌤𑍍𑌵𑌂 𑌕𑌰𑍍𑌮𑌜𑍍𑌯𑌾𑌯𑍋𑌹𑍍𑌯𑌕𑌰𑍍𑌮𑌣𑌃।
𑌶𑌰𑍀𑌰𑌯𑌾𑌤𑍍𑌰𑌾𑌪𑌿𑌚𑌤𑍇 𑌨𑌪𑍍𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑍇𑌦𑌕𑌰𑍍𑌮𑌣𑌃॥

| | |
|---|---|
| 𑌨𑌿𑌯𑌤𑌂† | நித்தியமாய்ச் செய்யத்தக்க |
| 𑌕𑌰𑍍𑌮 | கருமத்தை |
| 𑌤𑍍𑌵𑌂 | நீ |
| 𑌕𑍁𑌰𑍁 | செய் |
| 𑌅𑌕𑌰𑍍𑌮𑌣𑌃 | கருமஞ் செய்யாததைப்பார்க்கிலும் |
| 𑌕𑌰𑍍𑌮 | கருமஞ்செய்வது |
| 𑌜𑍍𑌯𑌾𑌯𑍋𑌹𑌿 | சிரேஷ்டமானது |
| 𑌅𑌕𑌰𑍍𑌮𑌣𑌃‡ | கருமஞ்செய்யாதிருக்கிற |
| 𑌤𑍇 | உன்னுடைய |
| 𑌶𑌰𑍀𑌰𑌯𑌾𑌤𑍍𑌰𑌾𑌪𑌿 | சரீரசம்ரக்ஷணையுங்கூட |
| 𑌨𑌪𑍍𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑍇𑌤𑍍 | சித்தியடையாது (நடவாது.) |

நித்தியமாய்ச் செய்யத்தக்க கருமத்தை நீசெய். கருமஞ் செய்யாததைப்பார்க்கிலும் கருமஞ்செய்வது சிரேஷ்டமானது. கருமஞ் செய்யாதிருப்பாயானால் உன்னுடைய சரீர சம்ரக்ஷணையுங்கூட நடவாது.

(ரா) ஒவ்வொருவனும் தான் நியாயமான விஷயமாய் சம்பாதித்த திரவியாதிகளைச் செலவுசெய்து யக்ஞம் முதலிய சத்கருமங்களை நடத்தி யக்ஞசேஷத்தை புசிப்பதினால் சித்த சுத்தியும், சித்த சுத்தியினால் ஞானமு மடையவேண்டியது. இந்த ஞானமானது கருமத்தினா லுண்டாகிறபடியால் கருமம் சிரேஷ்டமென்று சொல்லப் பட்டது. ஞானமானது சகலத்திலும் சிரேஷ்டமென்ற வாக்கியம் ஞானாதிகாரி விஷயத்தில்

---

* (ஶம்) பொய்யாசார முடையவனைவிட சிரேஷ்டன் (ஸ்ரீ) ஞானவானாகிறான்.

† (ஒ) (ஸ்ரீ.வி) வருணாசிரமங்களுக்குத் தகுந்த கருமங்கள்.

‡ (ஶம்) கருமஞ் செய்யாமலிருப்பதினால்.

சொல்லப்பட்டதே யன்றி ஞானமடையாதவன் விஷயமாய்ச் சொல்லப் பட்டதல்ல. அப்படி ஞானநிஷ்டையை யுடைய ஞானுதிகாரியுங்கூட ஞானநிஷ்டைக் கனுகூலமான 'தேகம் நிலைத்திருப்பதின் பொருட்டு' அவசியமான கருமங்களைச் செய்யவேண்டியவனுக விருக்கிறுன்; ஆகை யால், கருமமானது ஞானநிஷ்டைக்கு முந்திய சாதனமாயிருப்பதால் கருமம் சிரேஷ்டமென்று சொல்லப்பட்டது.

(ஷா) உண்பது, உடுப்பது, உறங்குவது, முதலியவைகளும் கரும மல்லவா? அவைகளைச் செய்யாமலிருந்தால் தேகம் நிலைக்குமோ? தேகம் நிலைக்காவிட்டால் எந்தகாரியமு மில்லை. ஆகையால் கருமங் களைச் செய்யாமலிருக்க ஒருவனுலுங் கூடாது. இதற்காகத்தான் நித் திய கருமமானது விதிக்கப்பட்டிருக்கிறது. அதாவது, உண்பதற்கு முந்தி ஸ்நானம், சந்தியாவந்தனம் முதலிய ஆந்நீகங்களும் தேவ; பிதுரு, அதிதி, பூஜை, சுவாமி நைவேத்தியம், அக்கினிஹோத்திரம், பலிகரணம் முதலியவைகளுமே. இவைகளை விதித்த உத்தேசமென்ன வென்றுல், தினமும் இப்படிப்பட்ட நித்திய கருமங்களைச் செய்து அவைகளின் பலனை இச்சிக்காமல் ஈசுவரார்ப்பணஞ் செய்துவிடுவானு கில் சித்தம் சுத்தியாய் ஞானமடைந்து அதிசீக்கிரத்தில் மோக்ஷமடை வானென்பதே. ஆகாராதி அவசியமான கருமங்களைத்தவிர மற்றவை களை விட்டுவிடுவது, ஞானிக்குத் தகுமானுலும் முமுக்ஷுவுக்குத் தகு தியல்ல. அக்ஞானிவிஷயத்தில் சொல்லவும் வேண்டுமோ? (௮)

---

௯. 𑌯𑌜𑍍𑌞𑌾𑌰𑍍𑌥𑌾𑌤𑍍𑌕𑌰𑍍𑌮𑌣𑍋𑌽𑌨𑍍𑌯𑌤𑍍𑌰 𑌲𑍋𑌕𑍋𑌽𑌯𑌂𑌕𑌰𑍍𑌮𑌬𑌨𑍍𑌧𑌨𑌃।
𑌤𑌦𑌰𑍍𑌥𑌂𑌕𑌰𑍍𑌮𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌮𑍁𑌕𑍍𑌤𑌸𑌙𑍍𑌗𑌃𑌸𑌮𑌾𑌚𑌰॥

| | |
|---|---|
| 𑌯𑌜𑍍𑌞𑌾𑌰𑍍𑌥𑌾𑌤𑍍 | விஷ்ணு வாராதனு ரூபமான |
| 𑌕𑌰𑍍𑌮𑌣𑌃 | கருமத்தைக்காட்டிலும் |
| 𑌅𑌨𑍍𑌯𑌤𑍍𑌰 | மற்ற காம்மியகருமத்திலே |
| (𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌃) | பிருவிருத்தித்திருக்கிற |
| 𑌅𑌯𑌂 𑌲𑍋𑌕𑌃 | இந்த ஜனங்கள் |
| 𑌕𑌰𑍍𑌮𑌬𑌨𑍍𑌧𑌨𑌃 | கருமத்தினுல் கட்டப்பட்டவர்க ளாகி றுர்கள் |
| 𑌤𑌦𑌰𑍍𑌥𑌂 | அந்தவிஷ்ணு வாராதனமாக |
| 𑌕𑌰𑍍𑌮 | கருமத்தை |
| 𑌹𑍇 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 | ஓ! குந்திபுத்திரா! |
| 𑌮𑍁𑌕𑍍𑌤𑌸𑌙𑍍𑌗𑌃 | பலாபேக்ஷையைவிட்டு |
| 𑌸𑌮𑌾𑌚𑌰 | செவ்வையாகச்செய். |

விஷ்ணு வாராதனரூபமான கருமத்தைக்காட்டிலும் மற்ற காம்மிய கருமத்திலே பிரவிருத்தித்திருக்கிற இந்த ஜனங்கள் கருமத்தினால் கட்டப்பட்டவர்களாகிறார்கள். (ஆகையினாலே) அந்த விஷ்ணுவாராதனமாக கருமத்தை, ஓ! குந்திபுத்திரா! பலாபேக்ஷையை விட்டுச் செவ்வையாகச் செய்.

(ஶம்) (ஸ்ரீ) கருமமானது புநர் ஜனனத்தையும் சமுசாரத்தையுமுண்டாக்கத்தக்கதாகையால் கருமஞ்செய்யக் கூடாதென்று சிலர் சொல்லும் ஆக்ஷேபணையை நிவர்த்திக்க பகவானானவர், யக்ஞமென்பது விஷ்ணுவாகையாலும் யக்ஞஞ்செய்வது விஷ்ணு ஆராதனையாகிறதாகையாலும் யக்ஞாதி கருமங்களைச்செய்து பலனை ஈசுவரார்ப்பணஞ் செய்வதினால் பந்த ஏதுவாகாதென்பதை இதில் விவரித்ததாக தாத்பரியம்.

(ரா) யஜ்ஞார்த்தாத் கர்மண:=யக்ஞஞ் செய்யும்பொருட்டு திரவியம் சம்பாதிப்பது முதலிய கருமங்களைக் காட்டிலும் அந்நியமானதாகிய தேகசம்ரக்ஷணை முதலியவைகளுக்காக திரவியஞ் சம்பாதிப்பது முதலிய கருமங்கள் பந்த ஹேதுவாகையால்-முக்தஸங்க:=தனக்கு வேண்டுமென்கிற அபிமானங்களை விட்டுக் கருமஞ்செய்யவேண்டியதென்பது தாத்பரியம். (கூ)

---

கo. ஸஹயஜ்ஞா: ப்ரஜா: ஸ்ருஷ்ட்வா புரோவாச ப்ரஜாபதி:।
அநேந ப்ரஸவிஷ்யத்வம் ஏஷ வோऽஸ்த்விஷ்டகாமதுக்॥

| | |
|---|---|
| ப்ரஜாபதி:* | பிரம்மாவானவர் |
| ஸஹயஜ்ஞா:† | யக்ஞத்தோடுகூடின |
| ப்ரஜா:‡ | ஜனங்களை |
| புரா | ஆதிகாலத்தில் |
| ஸ்ருஷ்ட்வா | சிருஷ்டித்து |
| அநேந | இந்தயக்ஞத்தினாலே |
| ப்ரஸவிஷ்யத்வம் | விருத்தியடையுங்கள் |

---

* (ரா) பிரம்மா முதலான சகலப் பிரஜைகளுக்கும் அதிபதியான விஷ்ணு.

† (ரா) ஸஹயஜ்ஞை:, என்று பாடம், யக்ஞங்களோடு, என்று அர்த்தம்.

‡ (ரா) அநாதிகாலமாயுண்டான பிரகிருதி சம்பந்தத்தினாலே பராதீனர்களாயும், புருஷார்த்தங்களைச் சாதித்துக்கொள்ள சக்தியற்றவர்களாயும், ஜடத்திற்கு சமானாளாயும் நாமரூபங்களில்லாதவர்களாயும், பிரளயகாலத்தில் தன்னிடத்தி லடக்கியிருந்தவர்களாயுமிருந்த ஜீவர்களை.

| | |
|---|---|
| 𑌏𑌷𑌃 | இந்தயக்ஞமானது |
| 𑌵𑌃 | உங்களுக்கு |
| 𑌇𑌷𑍍𑌟𑌕𑌾𑌮𑌧𑍁𑌕𑍍 * | இஷ்டமானபோகத்தைத் தரப்பட்டதாக |
| 𑌅𑌸𑍍𑌤𑍁 | ஆகட்டும் |
| (𑌇𑌤𑌿) | என்று |
| 𑌉𑌵𑌾𑌚 † | சொன்னார். |

பிரம்மாவானவர், யக்ஞத்தோடுகூடின ஜனங்களை ஆதிகாலத்தில் சிருஷ்டித்து, இந்தயக்ஞத்தினாலே விருத்தியடையுங்கள்; இந்த யக்ஞமானது உங்களுக்கு இஷ்டமான போகத்தைத் தரப்பட்ட தாகட்டுமென்று சொன்னார்.

(ஸா) இந்த சுலோகத்தினால் காம்மிய கருமங்களையுங்கூடச் செய்யவேண்டியதற்காகவே யக்ஞங்களை சிருஷ்டித்ததாக அர்த்தமாகிறது, ஏனென்றால் "விருத்தியடையுங்கள்" "இஷ்டமான போகங்களைத் தரத்தக்கதாகட்டும்" என்கிற வாக்கியங்கள் காம்மியபலனைக் குறிக்கின்றனவாகக் கொள்ளவேண்டியதா யிருக்கிறது. முந்திய சுலோகத்தில் காம்மியகருமங்கள் பந்தத்தை யுண்டுபண்ணுமாகையால் நிஷ்காமகருமம் செய்யவேண்டுமென்று சொல்லப்பட்டது. இவைகள் பரஸ்பர விரோதமாகத் தோற்றப்பட்டாலும் விரோதமல்ல. எப்படியென்றால், யக்ஞாதி கருமங்கள் அவைகளுக்குள்ள பலனை அபேக்ஷித்துச்செய்தால் பந்தஹேதுவான போகத்தைக் கொடுக்கும். பலாபேக்ஷையன்றி ஈசுவரார்ப்பணமாகச் செய்தால் மோக்ஷஹேதுவான ஞானத்தைக் கொடுக்கும். ஒரே கருமமானது ஒருவிதமாய்ச் செய்தால் பந்தஹேதுவாகவும், மற்றொருவிதமாய்ச்செய்தால் மோக்ஷஹேதுவாகவுமாகிறபடியால் செய்கிறவனுடைய எண்ணப்படி பலன் சித்தியாகட்டுமென்கிற உத்தேசத்துடன் யக்ஞம் சிருஷ்டிக்கப்பட்டது. அந்த யக்ஞமானது போகத்தைக்கொடாமல் ஞானத்தைமட்டும் கொடுக்கும்படி ஏன் பிரம்மாவானவர் விதிக்கக்கூடா தென்றாலோ, ஞானமாத்திர மதற்குப் பலனாகவிருந்தால் அந்தப்பலனையடைய இச்சிக்கும் ஜனங்கள் வெகுசிலராய்த்தானிருப்பார்கள். ஞானத்தி லிச்சையில்லாதவும் சுவர்க்காதி போகங்களையனுபவிக்க விச்சிக்கிறவுமான மற்றவர்கள் யக்ஞத்தினாலுண்டாகும் பிரயோஜனமடைய ஹேதுவிராது. சுவர்க்காதிபோகம் பந்தஹேதுவாயிருக்க அதையேன் அடைய முயலவேண்டுமென்றாலோ, அது கிரமக்கிரமமாய் மோக்ஷ ஹேதுவாகும். எப்படி என்றால், சுவர்க்காதி போகத்தை

* (ரா) மோக்ஷ பிரயோஜனத்தையும் அதற் கனுகுணமான மற்ற பிரயோஜனத்தையும், கொடுக்கப்பட்டதாக.

† (ரா) ஜீவர்களைப்பார்த்துக் கருணையினாற் சொன்னார்.

யனுபவிப்பவன் அப்படி அநுபவிக்கும் காலத்தில் அந்த சுவர்க்காதி லோகத்திலுள்ளவர்கள், அந்த சுவர்க்காதிகளே முடிவான சுகமென்றெண்ணி யிருக்கிறார்களா? அல்லது அதைவிட விசேஷ சுகமிருப்பதாக எண்ணி அதை யடைய முயலுகிறார்களா? என்பதை உணருவான். அப்போது இந்த சுவர்க்காதிகளைவிட சிரேஷ்டமான சுகமிருப்பதாகத் தெரிந்தால் அந்த சிரேஷ்டமான சுகத்தை யடையவேண்டுமென்கிற வெண்ண முண்டாகும். மேலும் தன்னுடைய புண்ணியபலனுக்குக் குறித்தகாலம் முடிந்தவுடனே "𑌕𑍍𑌷𑍀𑌣𑍇 𑌪𑍁𑌣𑍍𑌯𑍇 𑌮𑌰𑍍𑌤𑍍𑌯𑌲𑍋𑌕𑌂 𑌵𑌿𑌶𑌨𑍍𑌤𑌿" என்கிற வாக்கியப்படிக்குப் புண்ணியம் நசித்தவுடன் பூலோகத்திற்குத் தள்ளப்படுவதை யறிகிறான். அப்போது அவன் என்ன நினைக்கிறானென்றால், நான் காம்மியமாய் யக்ஞம் செய்ததினால் அற்பபலமான சுவர்க்காதிகளை அடைந்து மறுபடி பூலோகத்தில் ஜனனமெடுக்க வேண்டியதாயிற்று. நிஷ்காமமாய் யக்ஞம் செய்வோமாகில் மோக்ஷமடையலாமென் றெண்ணி பலாபேக்ஷையற்ற நிஷ்காம கருமம் செய்யத் தொடங்குவான். இப்படிச் சில ஜன்மங்களுக்குப் பிறகு அவனுக்கது மோக்ஷஹேதுவாகும். ஆகையால் ஜனங்களிடத்தில் கருணையுள்ள பிரம்மாவானவர் யக்ஞத்தை ஜனங்கள் நற்கதி யடையும் பொருட்டே சிருஷ்டித்தா ரென்பதில் சந்தேகமில்லை. (க௦)

---

கக. 𑌦𑍇𑌵𑌾𑌨𑍍𑌭𑌾𑌵𑌯𑌤𑌾𑌨𑍇𑌨 𑌤𑍇𑌦𑍇𑌵𑌾𑌭𑌾𑌵𑌯𑌨𑍍𑌤𑍁𑌵𑌃।
𑌪𑌰𑌸𑍍𑌪𑌰𑌂𑌭𑌾𑌵𑌯𑌨𑍍𑌤𑌃 𑌶𑍍𑌰𑍇𑌯𑌃𑌪𑌰𑌮𑌵𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑌥॥

| | |
|---|---|
| 𑌅𑌨𑍇𑌨 | இந்தயக்ஞத்தினாலே |
| 𑌦𑍇𑌵𑌾𑌨𑍍 * | தேவதைகளை |
| 𑌭𑌾𑌵𑌯𑌤 | ஆராதியுங்கள், அல்லது, அவிர்ப்பாகத்தினால் விருத்தி யடையச் செய்யுங்கள். |
| 𑌤𑍇 𑌦𑍇𑌵𑌾𑌃 | அந்தத் தேவதைகள் |
| 𑌵𑌃 | உங்களை |
| 𑌭𑌾𑌵𑌯𑌨𑍍𑌤𑍁 | இரக்ஷிக்கட்டும், அல்லது, இஷ்டங்களைக் கொடுத்து விருத்தியடையச் செய்யட்டும் |
| 𑌪𑌰𑌸𑍍𑌪𑌰𑌂 𑌭𑌾𑌵𑌯𑌨𑍍𑌤𑌃 | ஒருவரையொருவர் அபிவிருத்தி செய்து கொண்டு |
| 𑌪𑌰𑌂 | சிரேஷ்டமான |
| 𑌶𑍍𑌰𑍇𑌯𑌃 † | சிரேயஸை |
| 𑌅𑌵𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑌥 | அடைகிறவர்களாவீர்கள். |

---

* (ரா) என் சரீர பூதாளான தேவதைகளை.

† (ஶ௦) (ரா) (ஸ்ரீ.வி) மோக்ஷத்தை, (ஶ௦) அல்லது சுவர்க்கத்தை.

இந்த (முன்சொன்ன) யக்ஞத்தினல் தேவதைகளை ஆராதியுங்கள். அந்தத் தேவதைகளுங்களை இரக்ஷிக்கட்டும். (இப்படி நீங்கள் தேவதைகளையும், தேவதைகளுங்களையும்) ஒருவரையொருவர் அபிவிருத்தி செய்துகொண்டு சிரேஷ்டமான சிரேயஸை யடைகிறவர்களாவீர்கள்.

(ஸ்வா) இதில் தேவதைகள், மனுஷியாள், இருவகையாருக்கும் அபிவிருத்தியும் சிரேயஸும் சொல்லப்பட்டிருக்கின்றன. தேவதைகள் தங்களை அவிர்ப்பாகம் முதலியவைகளினல் திருப்திசெய்த மனிதர்களுக்கு அவர்கள் அபேக்ஷிக்கிற போகாதிகளைக் கொடுப்பதினல் அந்த மனிதர்களுக்கு சிரேயஸாக சொல்லலாம்; மனிதர்களால் கொடுக்கப்படும் அவிர்ப்பாகாதிகளினல் தேவதைகளுக்கு சிரேயஸ் உண்டாகிறதென்பது எப்படிப்பட்டதென்கிற சங்கையை அடியில் கண்டவிதமாய்ப் பரிகரிக்கலாம். யக்ஞாதிகருமங்களைச் செய்பவர்களுக்கு அந்தக்கருமங்களுக்கு விதிக்கப்பட்டிருக்கிற பலன்களைக் கொடுக்கவும், மனிதர்களுக்கு வேண்டிய மழை வெய்யில் காற்று முதலியவைகளைக் காலங்களில் உதவவும், தேவதைகள் பரமாத்மாவினல் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். பரமாத்மாவினுடைய ஆக்ஞையை சரியாய் நிறைவேற்றுவதினல் தேவதைகள் சிரேயஸை அடைகிறார்கள். அல்லது தேவதைகள் அமிருதபானம் செய்தவர்களானாலும் அதனல் தேவதைகளுக்கு மரணமில்லையேயன்றி பசிதாகமில்லையென்று சொல்லக்கூடாதாகையால் மனிதர்களால் செய்யப்படுகிற யக்ஞாதி கிரதுக்களின் மூலமாய்க் கொடுக்கப்படும் அவிர்ப்பாகத்தினல் தேவதைகள் திருப்தி அடைகிறார்களென்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. இரணியகசிபு, பலிசக்கரவர்த்தி, சூரபத்மா முதலிய அசுரர்கள் தேவதைகளுக்கு மனிதர்கள் அவிர்ப்பாகம் கொடுப்பதைத் தடுத்துவிட்டகாலத்தில் தேவதைகள் பசியால்வருந்தினதாக புராணங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் தேவதைகள் யக்ஞாதி கிரதுக்களில் கொடுக்கப்படும் அவிர்ப்பாகத்தை ஆகாரமாயடைந்து தேகபுஷ்டியுண்டாய், அதினல் போகங்களை யனுபவிக்கிறார்கள். இவைகள்தான் அந்தத்தேவதைகளுக்கு சிரேயஸென்று சொல்லலாம். (௧௧)

---

௧௨. 𑌇𑌷𑍍𑌟𑌾𑌨𑍍𑌭𑍋𑌗𑌾𑌨𑍍𑌹𑌿𑌵𑍋𑌦𑍇𑌵𑌾 𑌦𑌾𑌸𑍍𑌯𑌨𑍍𑌤𑍇𑌯𑌜𑍍𑌞𑌭𑌾𑌵𑌿𑌤𑌾𑌃।
𑌤𑍈𑌰𑍍𑌦𑌤𑍍𑌤𑌾𑌨𑌪𑍍𑌰𑌦𑌾𑌯𑍈𑌭𑍍𑌯𑍋 𑌯𑍋𑌭𑍁𑌙𑍍𑌕𑍍𑌤𑍇𑌸𑍍𑌤𑍇𑌨𑌏𑌵𑌸𑌃

| | |
|---|---|
| 𑌯𑌜𑍍𑌞𑌭𑌾𑌵𑌿𑌤𑌾𑌃 | யக்ஞங்களினலே ஆராதிக்கப்பட்ட |
| 𑌦𑍇𑌵𑌾𑌃 | தேவந்தகள் |
| 𑌵𑌃 | உங்களுக்கு |
| 𑌇𑌷𑍍𑌟𑌾𑌨𑍍 | இஷ்டங்களான |

| | |
|---|---|
| 𑌭𑍋𑌗𑌾𑌨𑍍 | போகங்களை |
| 𑌦𑌾𑌸𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌹𑌿 | கொடுப்பார்கள் |
| 𑌤𑍈𑌃 | அந்தத்தேவதைகளினாலே |
| 𑌦𑌤𑍍𑌤𑌾𑌨𑍍 | கொடுக்கப்படும் (அன்னாதி) அவைகளை |
| 𑌏𑌭𑍍𑌯𑌃 | இந்தத்தேவதைகளின் பொருட்டு |
| 𑌅𑌪𑍍𑌰𑌦𑌾𑌯 | கொடுக்காமல் |
| 𑌯𑌃 | எவன் |
| 𑌭𑍁𑌙𑍍𑌕𑍍𑌤𑍇 | (தான்) அனுபவிக்கிறானோ |
| 𑌸𑌃 | அவன் |
| 𑌸𑍍𑌤𑍇𑌨 𑌏𑌵 | திருடனே. |

(பிரம்மாவானவர் பின்னும் ஜனங்களைப்பார்த்துச் சொல்வதாவது) யக்ஞங்களினாலே ஆராதிக்கப்பட்ட தேவதைக ளுங்களுக்கிஷ்டமான போகங்களைக் கொடுப்பார்கள்; அப்படித் தேவதைகளால் கொடுக்கப் படுபவைகளை அந்தத் தேவதைகளுக்கு (மறுபடி) கொடாமல் எவன்தானே யனுபவிக்கிறானோ அவன் திருடனே.

(ஸ்வா) ஒருவன் யக்ஞாதி கிரதுக்கள் மூலமாய்த் தேவதைகளுக்குக் கொடுத்த அவிர்ப்பாகத்திற்கு பிரதியாய்த் தேவதைகள் அவனுக்குக் கொடுத்ததை அவன் மறுபடி தேவதைகளுக்குக் கொடாமல் அனுபவித்ததினால் இவனைத் திருடனாக எப்படிச் சொல்லலா மென்றாலோ, இவன் கொடுக்கும் அவிர்ப்பாகத்திற்கு அநேகமடங்கு அதிகமான போகங்களைத் தேவதைகள் இவனுக்குக் கொடுக்கிறார்கள். அப்படி அதிகமாய்க் கொடுக்கக் காரண மென்னவென்றால், இவனால் பின்னும் செவ்வையாய் யக்ஞாதிகளினால் ஆராதிக்கப் படுவோமென்பதே. இதினால்தான் சாஸ்திரங்களில் ஒருவன் அனுபவிக்கும் போகங்களில் இவ்வளவு பாகம் தேவதைகளுக்குக் கொடுக்கவேண்டுமென்று விதிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் தேவதைகளுக்குள்ள பாகத்தைக் கொடாமல் தானே அனுபவிப்பவன் திருடனென்று சொல்லப்பட்டது. (௧௨)

---

௧௩. 𑌯𑌜𑍍𑌞𑌶𑌿𑌷𑍍𑌟𑌾𑌶𑌿𑌨𑌃 𑌸𑌨𑍍𑌤𑍋 𑌮𑍁𑌚𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑌕𑌿𑌲𑍍𑌬𑌿𑌷𑍈𑌃।
𑌭𑍁𑌞𑍍𑌜𑌤𑍇 𑌤𑍇 𑌤𑍍𑌵𑌘𑌂 𑌪𑌾𑌪𑌾 𑌯𑍇 𑌪𑌚𑌨𑍍𑌤𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌕𑌾𑌰𑌣𑌾𑌤𑍍॥

| | |
|---|---|
| 𑌯𑌜𑍍𑌞𑌶𑌿𑌷𑍍𑌟𑌾𑌶𑌿𑌨𑌃 𑌸𑌨𑍍𑌤𑌃 | யக்ஞத்தில் ஈசுவராதிகளுக்கு அர்ப்பணஞ் செய்து மிச்சமான அன்னத்தை புஜிக்கிற சத்புருஷர்கள் |
| 𑌸𑌰𑍍𑌵𑌕𑌿𑌲𑍍𑌬𑌿𑌷𑍈𑌃* | (பஞ்சசூனாமுதலிய) சகலபாபங்களி லிருந்தும் |

---

* (ரா) அனாதிகாலமாய் வந்திருக்கிற சகல பாபங்களிலிருந்து, (ஸ்ரீ.வி) சகல பாபங்களிலிருந்து.

| | |
|---|---|
| முச்யந்தே | விடுபடுகிறார்கள் |
| யே | யார் |
| ஆத்மகாரணாத் | தங்களுக்காகவே |
| பசந்தி | பாகம்செய் (சமயல்செய்து புஜிக்) கிறார்களோ |
| தே பாபா: | அந்தபாபிகள் |
| அகம் து | பாபத்தையே |
| புஞ்ஜதே | புஜிக்கிறார்கள். |

யக்ஞத்தில் ஈசுவராதிகளுக்கு தத்தஞ்செய்து மிச்சமான அன்னத்தை புஜிக்கிற சத்புருஷர்கள் பஞ்ச சூநாமுதலிய சகலபாபங்களிலிருந்தும் விடுபடுகிறார்கள். யார் (ஈசுவரார்ப்பணம் செய்யாமல்) தங்களுக்காகவே பாகம் செய்து புஜிக்கிறார்களோ அந்தபாபிகள் பாபத்தையே புஜிக்கிறார்கள்.

(ஸா) இந்த சுலோகத்தில் யக்ஞத்தில் மிச்சமான அன்னத்தைச் சாப்பிடுகிறவன் சகல பாபத்திலிருந்தும் விடுபடுகிறான் என்கிற வாக்கியங்கள் மிகுந்த வியாக்கியானத்தை வேண்டுகின்றன. “யக்ஞத்தில் மிச்சமான அன்னம்” என்கிற பொதுவான வாக்கியம் உபயோகிக்கப் பட்டிருக்கிறது. எவ்வித யக்ஞமென்பது தெளிவாய்ச் சொல்லப்படவில்லை. (ஶம்) தேவயக்ஞ மிச்சான்னமென்றும், (ஸ்ரீ) வைசுவதேவமுதலிய யக்ஞ மிச்சான்னமென்றும் (ரா) பகவந் நிவேதனமான பிரசாதமென்றும் (மீ,வி) விஷ்ணுவுக்கும் இதரதேவதைகளுக்கும் நிவேதனம் செய்த அன்னமென்றும், அர்த்தஞ் செய்திருக்கிறார்கள். இதினால் சோதிஷ்டோமாதி யக்ஞங்கள் மாத்திரமல்ல; மனிதன் தினந்தோறும் செய்யவேண்டிய, பஞ்சயஜ்ஞம், கூட முக்கியமென்பதையும் சொன்னதாகக் காணுகிறது. ஏனென்றால், “ஸர்வகில்பிஷை:” என்கிற பதத்திற்கு பஞ்சசூநா என்கிற பாபங்கள் என்று அர்த்தஞ் செய்ததுமல்லாமல் அந்த பாபங்களின் விவரமும் (ஶம்) (ஸ்ரீ) (மீ.வி) இவர்களால் சொல்லப்பட்டிருக்கிறதினால் பஞ்சயக்ஞத்தில் மிச்சமான அன்னமென்றும் நினைக்கவேண்டியதா யிருக்கிறது. பஞ்சயக்ஞங்கள் எவையென்றால், (ஸ்ம்ரு.) “அத்யாபநம் ப்ரஹ்மயஜ்ஞ: பித்ருயஜ்ஞஸ்து தர்பணம் । ஹோமோ “தைவோ பலிர்பௌதோ ந்ருயஜ்ஞோ(அ)திதிபூஜநம் । பஞ்சைதாந் “யோ மஹாயஜ்ஞாந் ந ஹாபயதி ஶக்தித: । ஸ க்ருஹே(அ)பி வஸந் நித்யம் ஸூ“நாதோஷைர் ந லிப்யதே ॥— வேதமோதலாகிய பிரம்மயக்ஞம், ஜல “தர்ப்பணத்தினால் பிதுருக்களைத் திருப்தி செய்வதாகிய பிதுருயக் “ஞம், தேவதைகளைக்குறித்து அக்கினியில் ஹோமம்செய்வதாகிய தேவ “யக்ஞம், வாயஸபலி முதலியவை வைப்பதாகிய பூதயக்ஞம், அதிதி

"களுக்குச் சாப்பாடு போடுவதாகிய மாநுடயக்ஞம் இந்த ஐந்து "மகா யக்ஞங்களையும் தன் சக்திக்குத் தக்கபடி எவன் செய்கிருனே "அவன் கிரகஸ்தாசிரமத்தி லிருந்தபோதிலும் பஞ்சசூநா என்கிற "ஐந்து பிராணி ஹிம்ஸையாகிய தோஷத்திலிருந்து விடப்படுகிருன்" (மனுஸ்மிருதி மூன்ருவது அத்தியாயம், எ0 - எக - சுலோகங்களைப் பார்க்க.) பஞ்சசூநா தோஷமென்ப தெதுவென்ருல், (ஶ்லோ.) "𑌪𑌞𑍍𑌚 "𑌸𑍂𑌨𑌾 𑌗𑍃𑌹𑌸𑍍𑌥𑌸𑍍𑌯 𑌚𑍁𑌲𑍍𑌲𑍀 𑌪𑍇𑌷𑌣𑍍𑌯𑍁𑌪𑌸𑍍𑌕𑌰𑌃। 𑌕𑌣𑍍𑌡𑌨𑍀 𑌚𑍋𑌦𑌕𑍁𑌮𑍍𑌭𑌶𑍍𑌚 "𑌬𑌧𑍍𑌯𑌤𑍇 𑌯𑌾𑌸𑍍𑌤𑍁 𑌵𑌾𑌹𑌯𑌨𑍍। 𑌤𑌾𑌸𑌾𑌂 𑌕𑍍𑌰𑌮𑍇𑌣 𑌸𑌰𑍍𑌵𑌾𑌸𑌾𑌂 𑌨𑌿𑌷𑍍𑌕𑍃𑌤𑍍𑌯 "𑌰𑍍𑌥𑌂 𑌮𑌹𑌰𑍍𑌷𑌿𑌭𑌿𑌃। 𑌪𑌞𑍍𑌚 𑌕𑍢𑌪𑍍𑌤𑌾 𑌮𑌹𑌾𑌯𑌜𑍍𑌞𑌾𑌃 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌹𑌂 𑌗𑍃𑌹𑌮𑍇𑌧𑌿𑌨𑌾𑌮𑍍॥— "* கிரகஸ்தனுக்கு விறகு முதலியவைகளை எறிக்கிறதிலும், அம்மி, எந் "திர முதலியவைகளில் அறைக்கிறதிலும், உலக்கை முதலியவைகளி "ஞல் குத்துகிற அல்லது இடிக்கிறதிலும், குடத்தில் தண்ணீர் கொ "ண்டுவந்து அந்தத் தண்ணீரை உபயோகிப்பதிலும், பெருக்குவது "அல்லது மெழுகுவதிலும் ஜந்துக்கள் கொல்லப்படுகிற தோஷம் வரு "கிறபடியால் இந்த ஐந்துவித பாபங்களையும் போக்குவதற்காக மக "ரிஷிகளால் கிரகஸ்தாசிரமத்தி லிருப்பவனுக்குக் கிரமமாக ஐந்து "மகாயக்ஞங்கள் விதிக்கப்பட்டிருக்கின்றன" (மநுஸ்மிருதி, ங - வது அத்தியாயம் சுஅ - சுகூ சுலோகங்களையும் ஸ்கந்தபுராணம் காசீகண்டம் முதல்பாகம் ஙஅ - வது அத்தியாயம் உங - உச சுலோகங்களையும் பார்க்க) ஆகையால் கிரகஸ்தன் தினந்தோறு முண்டாகுமிந்த பாபங்களை நிவர்த்தித்துக்கொள்ள மேற்சொன்ன யக்ஞங்களைச்செய்து ஈசுவரார்ப்பணஞ் செய்துவிட்டு மிச்சமான அன்னத்தைப்புஜியாமல் தன்வயிறுநிறையும்பொருட்டே சமயல்செய்து புஜிப்பாஞனல் பாபத்தைப் புஜிக்கிருன். என்ருல், பாப சுவரூபமான அன்னத்தைப்புஜிக்கிரு னென்பது தாத்பரியம். ஆனுல் தங்களுக்காகவே பாகம்செய்து புஜிக்கிறவர்கள் பாபியாகிறதற்கு (ஶா) சொல்லுகிற காரண மென்னவென்ருல், ஈசுவரன் தன்னை ஆராதிப்பதற்காக மனிதர்களுக்குக் கொடுத்த ஆகாராதி வஸ்துக்களை அந்த ஈசுவரனுக்கு அர்ப்பணஞ் செய்யாமல் தனக்காகவே பாகம் செய்து புஜிப்பவர்கள் பாபத்தைப் புஜிப்பவர்க ளென்பதே (ச - வது அத்தியாயம் ஙக - வது சுலோகத்தைப் பார்க்க.) (கங)

---

கச. 𑌅𑌨𑍍𑌨𑌾𑌦𑍍𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌪𑌰𑍍𑌜𑌨𑍍𑌯𑌾𑌦𑌨𑍍𑌨𑌸𑌂𑌭𑌵𑌃।
𑌯𑌜𑍍𑌞𑌾𑌦𑍍𑌭𑌵𑌤𑌿 𑌪𑌰𑍍𑌜𑌨𑍍𑌯𑍋 𑌯𑌜𑍍𑌞𑌃 𑌕𑌰𑍍𑌮𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑌵𑌃॥ †

---

* (பா०) பாடம், "𑌕𑌣𑍍𑌡𑌨𑍀 𑌪𑍇𑌷𑌣𑍀 𑌚𑍁𑌲𑍍𑌲𑍀 𑌉𑌦𑌕𑍁𑌮𑍍𑌭𑍀 𑌚 𑌮𑌾𑌰𑍍𑌜𑌨𑍀। 𑌪𑌞𑍍𑌚𑌸𑍂 "𑌨𑌾 𑌗𑍃𑌹𑌸𑍍𑌥𑌸𑍍𑌯 𑌤𑌾𑌭𑌿𑌃 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌂 𑌨 𑌗𑌚𑍍𑌛𑌤𑌿॥— குத்துகிறது, அறைக்கிறது, எறிக்கிறது, "தண்ணீர் கொண்டுவருகிறது, பெருக்கிறது இந்த ஐந்துவிதங்களிஞல் உண்டாகும் "ஜீவஹிம்சைகளால், கிரஹஸ்தன் சுவர்க்கத்தை யடையமாட்டான்.

† (ஶா) இந்த சுலோகத்தை ஸ்கந்தபுராணம் ஸஹியாத்திரிகண்டம் கூ - வது அத்தி. சுலோ - கங - லும் காண்க.

௧௫. 𑌕𑌰𑍍𑌮 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍋𑌦𑍍𑌭𑌵𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌕𑍍𑌷𑌰𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑌵𑌮𑍍।
𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌗𑌤𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌯𑌜𑍍𑌞𑍇 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌮𑍍॥

௧௬. 𑌏𑌵𑌂 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌿𑌤𑌂 𑌚𑌕𑍍𑌰𑌂 𑌨𑌾𑌨𑍁𑌵𑌰𑍍𑌤𑌯𑌤𑍀𑌹 𑌯𑌃।
𑌅𑌘𑌾𑌯𑍁𑌰𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌰𑌾𑌮𑍋 𑌮𑍋𑌘𑌂 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌸 𑌜𑍀𑌵𑌤𑌿॥

| | |
|---|---|
| 𑌅𑌨𑍍𑌨𑌾𑌤𑍍 | அன்னத்திலிருந்து (அன்னரஸத்தினாலுண்டாகும் வீரியத்தினால்) |
| 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 | (ஜீவனுக்கு) சரீரங்கள் |
| 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 | உண்டாகின்றன |
| 𑌪𑌰𑍍𑌜𑌨𑍍𑌯𑌾𑌤𑍍 | மேகத்திலிருந்து (மழையிலிருந்து) |
| 𑌅𑌨𑍍𑌨𑌸𑌂𑌭𑌵𑌃 | (ஆகாரத்திற்கு வேண்டிய) அன்னமுண்டாகிறது |
| 𑌯𑌜𑍍𑌞𑌾𑌤𑍍 | யக்ஞத்தினாலே |
| 𑌪𑌰𑍍𑌜𑌨𑍍𑌯𑌃 | மேகமானது (மேகத்தின் மூலமாய் மழையானது) |
| 𑌭𑌵𑌤𑌿 | உண்டாகிறது |
| 𑌯𑌜𑍍𑌞𑌃 | யக்ஞமானது |
| 𑌕𑌰𑍍𑌮𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑌵𑌃 | செய்கையினாலுண்டாகிறது |
| 𑌕𑌰𑍍𑌮 | செய்கையானது |
| 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍋𑌦𑍍𑌭𑌵𑌂 | வேதத்தினாலுண்டாகிறது |
| 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 | வேதமானது |
| 𑌅𑌕𑍍𑌷𑌰𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑌵𑌂 | பரப்பிரம்மத்திலிருந்துண்டாகிறது |
| 𑌸𑌰𑍍𑌵𑌗𑌤𑌂 | எங்கும்வியாபித்திருக்கிற |
| 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮* | (அந்த) பரப்பிரம்மமானது |
| 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 | எப்போதும் |
| 𑌯𑌜𑍍𑌞𑍇 † | யக்ஞத்தில் |
| 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌂 | நிலையாயிருக்கிறது |
| 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 | ஆகையினாலே |
| 𑌏𑌵𑌂 | இவ்விதமாய் |
| 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌿𑌤𑌂 | (பிரம்மத்தினால்) உண்டுசெய்யப்பட்டிருக்கிற |
| 𑌚𑌕𑍍𑌰𑌂 | (கருமம்முதலிய கூட்டமாகிய) சக்கிரத்தை |
| 𑌇𑌹 | இந்தலோகத்தில் |
| 𑌯𑌃 | எவன் |

* † (ஸ்ரீ) (ஶாம்) 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 = வேதமானது 𑌯𑌜𑍍𑌞𑍇 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌂 = யக்ஞத்தை விசேஷமாய்ச் சொல்லுகிறது.

| | |
|---|---|
| நாநுவர்த்தயதி | அநுசரிக்கிறதில்லையோ |
| அகாயு: | பாபசுவரூபமான ஆயுசையுடையவும் |
| இந்த்ரியாராம: | இந்திரியங்கள் மூலமாய் விஷயங்களை எப்போதுமனுபவிக்கிறவும் |
| ஸ: | அவன் |
| ஹே பார்த்த | ஓ! குந்திபுத்திரா! |
| மோகம் | விருதாவாய் |
| ஜீவதி (இதி) | ஜீவிக்கிறானென்று |
| வித்தி | அறி. |

அன்னத்தினாற் சரீரங்களும், மழையினா லன்னமும், யக்ஞத்தினால் மழையும், கருமத்தினால் யக்ஞமும், வேதத்தினால் கருமமும், பிரம்மத்தினால் வேதமும் உண்டாகின்றன. எங்கும் வியாபித்திருக்கிற அந்த பிரம்மமானது எப்போதும் யக்ஞத்தில் நிலையாயிருக்கிறது, (என்றால் யக்ஞத்தினால் பிரம்மத்தை யடையலாமென்பது தாத்பரியம்). ஆகையினாலே இவ்விதமாய் பிரம்மத்தினா லுண்டுசெய்யப்பட்டிருக்கிற கருமம் முதலிய கூட்டங்களடங்கிய சக்கிரத்தை இந்த லோகத்தில் (ஜனங்களில்) எவனனுசரிக்கிற தில்லையோ (யக்ஞாதி கருமம் ஈசுவர சுவரூபமானது, ஈசுவராராதனை யானதென்றுந் தெரிந்துகொண்டு செய்கிறதில்லையோ) பாபசுவரூபமான ஆயுசை யுடையவும் இந்திரியங்கள் மூலமாய் விஷயங்களை யெப்போது மனுபவிக்கிறவுமான அவன், ஓ! குந்திபுத்திரா! விருதாவாய் ஜீவிக்கிறானென்றறி.

இந்த அர்த்தத்திலிருந்து (ரா) (ம) (ஸ்ரீ,வி) இவர்கள் வேறுபட்டிருக்கிற பாகம்வரையில் அவர்களுடை அர்த்தம் தனித் தனியாய் அடியில் விவரிக்கப்படுகிறது.

(ரா) கர்ம ப்ரஹ்மோத்பவம்=கருமமானது பிரகிருதி விகாரமான தேகத்திலிருந் துண்டாகிறது. ப்ரஹ்ம = தேகமானது, அக்ஷரஸமுத்பவம்=ஜீவனாலேயுண்டாகிறது, எப்படி என்றால், ஜீவன் புசித்த அன்னாதிகளினால் விருத்தி யடைந்தபடியால் ஜீவனாலே தேகமுண்டாச்சுதென்பது தாத்பரியம். ஸர்வகதம் = சகல ஜீவன்களையும் அடைந்திருக்கிற, ப்ரஹ்ம = தேகமானது, நித்யம் = எப்பவும், யஜ்ஞே ப்ரதிஷ்டிதம் = யக்ஞத்திற்கு மூலமா யிருக்கிறது. அகாயு: = பாபத்தினாலுண்டான ஆயுசு, அல்லது பாபத்திற்கு ஏதுவான ஆயுசுடையவன்.

(ம) (ஸ்ரீ,வி) கர்ம ப்ரஹ்மோத்பவம் = கருமமானது பரப்பிரம்மத்திலிருந்துண்டானது, ப்ரஹ்ம = பரப்பிரம்மமானது, அக்ஷரஸமுத்பவம் =

வேதத்தினு லறியப்படத்தகுந்தது. ஸர்வகதம் = சர்வவியாபகமான, ப்ரஹ்ம = பரப்பிரம்மமானது, நித்யம் = எப்போதும், யஜ்ஞே = யக்ஞத்தில், ப்ரதிஷ்டிதம் = இருக்கிறது. யக்ஞம் விஷ்ணுவென்று சுருதியில் சொல்லப்பட்டிருக்கிறதினுலும் யக்ஞமானது விஷ்ணுவுக்கு அதிப்பிரியமானதாலும் யக்ஞத்தில் பரப்பிரம்மமானது எப்போது மிருக்கிறதென்று சொல்லப்பட்டது.

(ஸா) இந்த சுலோகங்களில் தேகாதிகளை ஒன்றிலிருந்து ஒன்றுண்டாவதாகச் சொல்லி கடைசியில் "ஏவம் ப்ரவர்த்திதம் சக்ரம் = இவ்விதமா யுண்டாயிருக்கிற சக்கிரத்தை" என்று சொல்லப்பட்டிருக்கிறதினுல் அந்தச்சக்கிர மின்னவிதமான தென்பது, (ஸ்ரீ) (ரா) (மீ,வி) இவர்கள் சொல்லியிருக்கிற வாக்கியங்களை அனுசரித்துச் சக்கிரங்களாக வரைந்து இதனடியில் காட்டப்படும்.









(ஸ்ரீ) (ரா) இவர்களுடைய வாசகப்படி யெழுதிய சக்கிரங்கள் வாசகத்தில் வேறுபட்டிருந்தாலும் சங்கதிகளில் வித்தியாசமில்லை. ஒன்றிலிருந்து மற்றொன்றுண்டாய்க்கொண்டு ஒரு முடிவையடையாமல் சுத்திக்கொண்டே வருகிறபடியாலும், சுத்திவருகிற சக்கிரம்போ லிருக்கிறதாலுஞ் சக்கிரமென்று சொல்லப்பட்டது. இந்தச் சக்கிரத்தைப் பார்த்தால் அதில் கண்டவைகளில் எது முதலிலுண்டானதென்று அறியக்கூடுகிறதில்லை, ஸீஜாங்குர ந்யாயம் போலிருக்கிறது. அதாவது, விரை முதலிலுண்டாச்சுதா? மரம் முதலிலுண்டாச்சுதா? என்று கேட்கும்பக்ஷத்தில், விரையின்றி மரமுமில்லை, மரமின்றி விரையுமில்லை, ஆகையால் முந்தியுண்டான தெதுவென்று சொல்லக் கூடாதது போலவே.

(ஸ்ரீ,வி) (மற்றொரு அபிப்பிராயமும் சொல்லியிருக்கிறார். அதாவது,) இந்தச்சக்கிரத்தை அனுசரிக்கவேண்டியது கிரகஸ்தாசிரமிக்கு மட்டுமென்று நினைக்கக் கூடுமானாலும், சந்நியாசி, வானப்பிரஸ்தன், பிரம்மசாரி, இந்த ஆசிரமிகள் விலக்கப்பட்டிருப்பதாக நினைக்கக் கூடாது. ஏனென்றால், அவர்களுக்கும் மனோவாக்கு காயங்களினால் செய்யத்தக்க பல கருமங்களுண்டு. ஆகையால் அவர்களும் இந்தச் சக்கிரத்தை அநுசரிக்கவேண்டியதே. (கச-கரு-கசு.)

---

கஎ. யஸ்த்வாத்மரதிரேவ ஸ்யா தாத்மத்ருப்தஶ்ச மாநவ:।
ஆத்மந்யேவ ச ஸந்துஷ்ட ஸ்தஸ்ய கார்யம் ந வித்யதே॥

| | |
|---|---|
| யஸ்து மாநவ: | எந்தமனிதன் |
| ஆத்மரதிரேவ | ஆத்மாவினிடத்திலேயே பிரீதியுடையவனையும் |
| ஆத்மத்ருப்தஶ்ச | ஆத்மாவினிடத்திலேயே திருப்தியடைந்தவனையும் |
| ஆத்மந்யேவ ச | ஆத்மாவினிடத்திலேயே |
| ஸந்துஷ்ட: | சந்தோஷமடைந்தவனையும் |
| ஸ்யாத் | ஆகிறானோ |
| தஸ்ய | அவனுக்கு |
| கார்யம் | கருமமானது |
| ந வித்யதே | இல்லை. |

எந்த மனிதன் ஆத்மாவினிடத்திலே பிரியம், திருப்தி, சந்தோஷமடைந்தவனாகிறானோ அவனுக்குக் கருமமானதில்லை, (என்றால், அவனுக்குக் கருமம் செய்வதினால் அடையவேண்டிய பலனொன்றுமில்லை என்பது கருத்து).

(ஸ்ரீ) இந்த அத்தியாயத்தின் ௪-வது சுலோகம் முதல் கசு-வது சுலோகம் வரையில் அக்ஞானி, அந்தக்கரண சுத்தியின்பொருட்டு கருமங்களைச் செய்யவேண்டுமென்று சொல்லப்பட்டது. இந்த சுலோகத்திலும், அடுத்த சுலோகத்திலும், பிரம்மஞானிக்கு கருமத்தினல் பிரயோஜனமில்லை என்பது சொல்லப்படுகிறது.

(ரா) (கஎ-கஅ-ககூ, இம்மூன்று சுலோகங்களுக்கு ஓரே அந்வயமாகையால் அந்த சுலோகங்களின் தாத்பரியமும் சுருக்கி இவ்விடத்திலேயே எழுதப்படுகிறது.) யாதொரு சாதனமன்றியில் பிரம்மதெரிசன மடைந்திருப்பவர்களாயும், நித்தியமுக்தர்களாயு மிருக்கிற (நித்தியசூரிகள்) வர்களுக்குக் கருமம் வேண்டியதில்லை. சாதனங்களால் முக்தியடையும் பிரம்மஞானிகளுக்குச் சொற்ப கருமமாவதுண்டாகையால் அவர்களுக்குக் கருமம் கிடையாதென்று சொல்லக்கூடாது. ஆகையால், அர்சுன! நீ பலாபேக்ஷையன்றி கருமம்செய் என்பது கருத்து.

(ஸூ) இந்த சுலோகத்தில் "ஆத்மாவிடத்திலேயே" என்கிற வாக்கியத்திற்கு அத்துவைத பக்ஷத்தில் தனக்குள்ளேயே என்றும், துவைதபக்ஷத்தில் பரப்பிர்ம்மத்தி னிடத்திலேயே என்றும் அர்த்தம். (கஎ)

---

கஅ. 𑌨𑍈𑌵 𑌤𑌸𑍍𑌯 𑌕𑍃𑌤𑍇𑌨𑌾𑌰𑍍𑌥𑍋 𑌨𑌾𑌕𑍃𑌤𑍇𑌨𑍇𑌹 𑌕𑌶𑍍𑌚𑌨 ।
𑌨 𑌚𑌾𑌸𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌕𑌶𑍍𑌚𑌿𑌦𑌰𑍍𑌥𑌵𑍍𑌯𑌪𑌾𑌶𑍍𑌰𑌯𑌃 ॥

| | |
|---|---|
| 𑌤𑌸𑍍𑌯 | அவனுக்கு (ஆத்மாவிடத்திலேயே திருப்தி முதலியவை அடைந்தவனுக்கு) |
| 𑌇𑌹 | இந்த லோகத்தில் |
| 𑌕𑍃𑌤𑍇𑌨 | கருமத்தினலே |
| 𑌅𑌰𑍍𑌥𑌃 | பிரயோஜனம் |
| 𑌨𑍈𑌵 | கிடையாது |
| 𑌅𑌕𑍃𑌤𑍇𑌨 | கருமம் செய்யாததினலே |
| 𑌕𑌶𑍍𑌚𑌨 (𑌦𑍋𑌷𑌃) | யாதொருதோஷமும் |
| 𑌨 | இல்லை |
| 𑌅𑌸𑍍𑌯 | இவனுக்கு |
| 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 | பிரம்மாமுதலுள்ள எல்லா பூதங்களிடத்திலே |
| 𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍 𑌅𑌰𑍍𑌥𑌵𑍍𑌯𑌪𑌾𑌶𑍍𑌰𑌯𑌃 𑌨 | பிரயோஜனத்திற்காக ஆசிரயிக்கவேண்டிய தொன்றுமில்லை. |

ஆத்மாவிடத்திலேயே திருப்தி முதலியவைகளை அடைந்த பிரம்மஞானிக்கு இந்த லோகத்தில் கருமத்தினல் பிரயோஜனங் கிடை

யாது; கருமஞ் செய்யாததினால் யாதொரு தோஷமுமில்லை. இவனுக்கு (பிரம்மநிஷ்டனுக்கு) எல்லாபூதங்களையும் ஆசிரயித்து அடையவேண்டிய பிரயோஜன மொன்றுமில்லை.

(ஸ்ரீ,வி) பிரம்மத்தைத்தவிர வெறே யாதொன்றையும் நினைக்காதவனாகிய அஸம்பிரக்ஞாத சமாதியிலிருக்கிறவன் தேவதைகள் குரு முதலியவர்களுக்கு வணங்கவேண்டிய காலங்களில் வணங்காவிட்டாலும் அவனுக்கு யாதொரு பாதகமுமில்லை. அவனுக்கு ஒருவராலு மாக வேண்டிய பிரயோஜன மொன்றுமில்லை. (கஅ)

---

கசு. தஸ்மாத³ஸக்த: ஸததம் கார்யம் கர்ம ஸமாசர।
அஸக்தோ ஹ்யாசரந்கர்ம பரமாப்நோதி பூருஷ:॥

| | |
|---|---|
| தஸ்மாத் | ஆகையினாலே |
| அஸக்த: | பலாபேக்ஷையைவிட்டு |
| ஸததம் | எப்பவும் |
| கார்யம் | செய்யவேண்டிய |
| கர்ம | கருமத்தை |
| ஸமாசர | நன்றாகச்செய் |
| ஹி | ஏனென்றால் |
| அஸக்த: | பலாபேக்ஷையைவிட்டு |
| கர்ம | கருமத்தை |
| ஆசரந் | அநுஷ்டித்துவருகிற |
| பூருஷ: | புருஷனானவன் |
| பரம் | உத்தமமானதை |
| ஆப்நோதி | அடைகிறான். |

(அக்ஞானி கருமம் செய்யவேண்டியவன், பிரம்மஞானிக்குக் கருமத்தினால் பிரயோஜனமில்லையென்று சொல்லப்பட்டது.) ஆகையினாலே கருமபலனிலாசையைவிட்டு எப்பவுஞ் செய்யவேண்டிய கருமத்தை நன்றாகச்செய். ஏனென்றால், அப்படிச்செய்கிற புருஷனானவன் உத்தமமானதை (என்றால், சித்தசுத்தியையும், ஞானத்தையு மடைந்து மோக்ஷத்தை) அடைகிறான்.

(ஸ்ரீ,வி) அஸம்பிரக்ஞாத சமாதியில்லாதவும் (மோக்ஷ இச்சையுடையவனாகிய) முமுக்ஷுவுமான நீ கருமம் செய்தே தீரவேண்டுமென்பது கருத்து. (கசு)

---

உ௦. கர்மணைவ ஹி ஸம்ஸித்³தி⁴மாஸ்தி²தா ஜநகாத³ய:।
லோகஸங்க்³ரஹமேவாபி ஸம்பஶ்யந்கர்துமர்ஹஸி॥

| | |
|---|---|
| ஜநகாத³ய꞉ | ஜனகன் முதலானவர்கள் |
| கர்மணைவ ஹி | (நிஷ்காம) கருமத்தினுலேதானே |
| ஸம்ஸித்³தி⁴ம் | ஞானத்தை |
| ஆஸ்தி²தா꞉ | அடைந்தார்கள் |
| லோகஸங்க்³ரஹமேவாபி ஸம்பஶ்யந் | ஜனங்களுடைய பிரயோஜனத்தை யுத்தேசித்தாவது |
| கர்தும் | (கருமத்தை) செய்வதற்கு |
| அர்ஹஸி | யோக்கியனுகவிருக்கிருய். |

ஜனகமகாராஜா முதலானவர்கள் நிஷ்காம கருமத்தினுலேயே ஞானத்தை யடைந்தார்கள். ஜனங்களுடைய பிரயோஜனத்தை யுத்தேசித்தாவது நீ கருமத்தைச் செய்யவேண்டியவனுக விருக்கிருய்.

(ரா) (ஸ்ரீ) நீ, உனக்கு ஞானமுண்டாய்விட்டது, கருமம் செய்யவேண்டிய தில்லையென்று எண்ணினுலுங்கூட ஞானத்தில் பிரவிருத்தியற்றவும், கருமத்திலேயே அதிகாரமுள்ளவும், அக்ஞானத்திலிருக்கிறவுமாகிய ஜனங்கள் சத்கருமங்களைச் செய்ய இச்சையை யடையவும், துஷ்கருமங்களில் பிரவிருத்திக்காம லிருக்கவும், வேண்டியதின் பொருட்டு பெரியவர்களா யிருக்கிறவர்கள் தங்களுக்குக் கருமம்செய்து ஆகவேண்டிய தொன்றுமில்லா விட்டாலும் லோக ஜனங்களுக்காக சத்கருமங்களைச்செய்து காட்டவேண்டியது. (ஆ) ஏனென்ருல், உலக ஜனங்களுக்கு நன்மை செய்பவனிடத்தி லீசுவரப்பிரீதி யுண்டாகிறது, என்பது தாத்பரியம். ஜனகராஜனை திருஷ்டாந்தமாகச்சொன்ன உத்தேச மென்னவென்ருல், "அர்சுன! உன்னைப்போல் இராஜாவா யிருந்தது மாத்திரமல்ல, மகாஞானியாயுமிருந்த ஜனகமகாராஜனே கருமம்செய்திருக்க உனக்குக் கருமம் வேண்டியதில்லையென்று நீ எண்ணுவதானுல் அது பிசகு" என்பதைத் தெரிவிக்கும் பொருட்டுத்தான்.

(மீ,வி) முக்தியில் ஆநந்தம் அதிகமா யுண்டாகும் பொருட்டு பிரம்ம ஞானிகள்கூட நிஷ்காம கருமஞ்செய்கிருர்கள். (௨௦)

---

௨௧. யத்³யதா³சரதி ஶ்ரேஷ்ட²ஸ்தத்ததே³வேதரோ ஜந꞉।
ஸ யத்ப்ரமாணம் குருதே லோகஸ்தத³நுவர்ததே॥

| | |
|---|---|
| ஶ்ரேஷ்ட²꞉ | பெரியவனுனவன் |
| யத்³யத் | எந்தெந்தக் கருமத்தை |
| ஆசரதி | செய்கிருனே |
| தத்ததே³வ | அதனையே |
| இதர꞉ ஜந꞉ | அந்நியமனிதனும் |

| | |
|---|---|
| (𑌆𑌵𑍃𑌤𑍍𑌤𑌿) | செய்கிறான் |
| 𑌸𑌃 | அந்தப்பெரியவன் |
| 𑌯𑌤𑍍𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌂 𑌕𑍁𑌰𑍁𑌤𑍇 | எதை (எந்த சாஸ்திராதிகளை) பிரமாணமாக வெண்ணுகிறானே) |
| 𑌲𑍋𑌕𑌃 | உலகம் (உலகத்திலுள்ள ஜனங்கள்) |
| 𑌤𑌤𑍍 | அதையே |
| 𑌅𑌨𑍁𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 | அனுசரிக்கும். |

(வயது, யோக்கியதை, ஆசாரம் முதலியவைகளில்) பெரியவனானவன் எந்தக் கருமத்தைச் செய்கிறானே, அதையே மற்றவனுஞ் செய்கிறான். அந்தப்பெரியவன் எந்த சாஸ்திராதிகளைப் பிரமாணமாக வெண்ணி (அதின்படி) ச்செய்கிறானே, உலக மதை அனுசரிக்கும்.(உக)

---

உஉ. 𑌨 𑌮𑍇 𑌪𑌾𑌰𑍍𑌥𑌾𑌸𑍍𑌤𑌿 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 𑌤𑍍𑌰𑌿𑌷𑍁 𑌲𑍋𑌕𑍇𑌷𑍁 𑌕𑌿𑌂𑌚𑌨।
𑌨𑌾𑌨𑌵𑌾𑌪𑍍𑌤𑌮𑌵𑌾𑌪𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 𑌵𑌰𑍍𑌤 𑌏𑌵 𑌚 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿॥

| | |
|---|---|
| 𑌹𑍇 𑌪𑌾𑌰𑍍𑌥 | ஓ! குந்திபுத்திரா! |
| 𑌮𑍇* | எனக்கு |
| 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 | செய்யவேண்டியது |
| 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 | கிடையாது |
| 𑌤𑍍𑌰𑌿𑌷𑍁 𑌲𑍋𑌕𑍇𑌷𑍁 | மூன்றுலோகங்களிலே |
| 𑌅𑌨𑌵𑌾𑌪𑍍𑌤𑌂 | அடையாதது |
| 𑌅𑌵𑌾𑌪𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 | அடையவேண்டியதாய் |
| 𑌕𑌿𑌞𑍍𑌚𑌨 | யாதொன்றும் |
| 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 | கிடையாது |
| (𑌤𑌥𑌾𑌪𑌿) 𑌚 | அப்படியிருந்தாலும் |
| 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 | கருமத்தில் |
| 𑌵𑌰𑍍𑌤𑍇 | பிரவிருத்தித்தே யிருக்கிறேன். |

ஓ! குந்திபுத்திரா! எனக்குச் செய்யவேண்டியது (ஒன்றும்) கிடையாது, மூன்றுலோகங்களிலேயும் நான் அடையாதது அடையவேண்டியதாய் யாதொன்றுங் கிடையாது, அப்படியிருந்தும் கருமம் செய்கிறதில் பிரவிருத்தித்தே யிருக்கிறேன். (உஉ)

---

* (ரா) சர்வேசுவரனையும், சர்வக்ஞனையும், மூன்று லோகங்களில் தேவ மனுஷிய ரூபங்களாய் அவதாரஞ் செய்பவனையும், என்னிடத்திலில்லாத தொன்றுமில்லையாகையால் அடையவேண்டிய தொன்றுமில்லாதவனையுமுள்ள எனக்கு.

௨௩. 𑌯𑌦𑌿 𑌹𑍍𑌯𑌹𑌂 𑌨𑌵𑌰𑍍𑌤𑍇𑌯𑌂 𑌜𑌾𑌤𑍁 𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑌤𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌤𑌃।
𑌮𑌮𑌵𑌰𑍍𑌤𑍍𑌮𑌾𑌨𑍁𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌃𑌪𑌾𑌰𑍍𑌥𑌸𑌰𑍍𑌵𑌶𑌃॥

| | |
|---|---|
| 𑌪𑌾𑌰𑍍𑌥 | ஓ! குந்திபுத்திரா! |
| 𑌅𑌹𑌂 | நான் |
| 𑌜𑌾𑌤𑍁 | ஒருகாலத்திலாவது |
| 𑌅𑌤𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌤𑌃 | ஜாக்கிரதையாய் |
| 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 | கருமஞ்செய்வதில் |
| 𑌨𑌵𑌰𑍍𑌤𑍇𑌯𑌂 𑌯𑌦𑌿 | பிரவிருத்திக்காமல் போனேனேயானால |
| 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌃 | மனிதர்கள் |
| 𑌸𑌰𑍍𑌵𑌶𑌃 | எல்லாவிதத்திலும் |
| 𑌮𑌮 | என்னுடைய |
| 𑌵𑌰𑍍𑌤𑍍𑌮 | மார்க்கத்தையே |
| 𑌅𑌨𑍁𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 | அநுசரிப்பார்கள். |

ஓ! குந்திபுத்திரா! நான் ஒரு காலத்திலாவது ஜாக்கிரதையாய் (சாஸ்திர விதியைவிட்டுப் பிசகாமல்) கருமஞ்செய்வதில் பிரவிருத்திக்காமல் போனேனேயாகில் மனிதர்கள் எல்லாவிதத்திலும் என்னுடைய மார்க்கத்தை (நான் எப்படி நடக்கிறேனோ அவ்விதமாய்) அநுசரிப்பார்கள்.

(ஸா) மனிதர்கள் ஏன் என்னுடைய மார்க்கத்தை யனுசரிப்பார்களென்றால், நான் பரமபுருஷனென்று அறியாதவும், அஞ்ஞானிகளுமான ஜனங்கள் உயர்ந்த குலத்தில் பிறந்தவனும், சக்தி, சாமர்த்தியம், கீர்த்தி முதலியவைகளினால் பெரியவனென் றெண்ணப்படுகிறவனுமான நானே கருமஞ்செய்யாம லிருப்பேனானால் அதைப்பார்த்து கிருஷ்ணனே கருமம் செய்யாததினால் நாம் ஏன் செய்யவேண்டுமென்று கருமத்தை விட்டுவிடுவார்களென்பது தாத்பரியம். (௨௩)

---

௨௪. 𑌉𑌤𑍍𑌸𑍀𑌦𑍇𑌯𑍁𑌰𑌿𑌮𑍇𑌲𑍋𑌕𑌾 𑌨𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌂𑌕𑌰𑍍𑌮𑌚𑍇𑌦𑌹𑌮𑍍।
𑌸𑌙𑍍𑌕𑌰𑌸𑍍𑌯𑌚𑌕𑌰𑍍𑌤𑌾𑌸𑍍𑌯𑌾𑌮𑍁𑌪𑌹𑌨𑍍𑌯𑌾𑌮𑌿𑌮𑌾𑌃𑌪𑍍𑌰𑌜𑌾𑌃॥

| | |
|---|---|
| 𑌅𑌹𑌂 | நான் |
| 𑌕𑌰𑍍𑌮 | கருமத்தை |
| 𑌨𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌂 𑌚𑍇𑌤𑍍 | செய்யாமற்போனால் |
| 𑌇𑌮𑍇𑌲𑍋𑌕𑌾𑌃 | இந்தஜனங்கள் |
| 𑌉𑌤𑍍𑌸𑍀𑌦𑍇𑌯𑍁𑌃 | (கருமலோபத்தினால்) கெட்டுப்போவார்கள் |

| | |
|---|---|
| ஸங்கரஸ்ய* | (ஜாதி) சேர்க்கையை |
| கர்த்தா | செய்தவனாக |
| ஸ்யாம் | ஆவேன் |
| இமா: ப்ரஜா: | இந்த ஜனங்களை |
| உபஹந்யாம் | கொன்றவனாவேன். |

நான் கருமத்தைச் செய்யாமற்போவேனேயானால் இந்த ஜனங்கள் கெட்டுப்போவார்கள். ஜாதியின் சேர்க்கைக்குக் காரணமாவேன். இந்த ஜனங்களைக் கொன்றவனாகவு மாவேன்.

(ரா) பிரஜைகளை அநுக்கிரகிக்க பிரவிருத்தித்திருக்கிற எனக்கு ஜனங்கள் கெட்டுபோகும்படியான இப்படிப்பட்ட காரியம் செய்வது தகுந்ததல்லவென்பது கருத்து.

(ஸ்ரீ) அர்ச்சுனன் இதின் முதலத்தியாயத்தில் குலஸ்திரீகள் கெட்டுப்போனால் ஜாதிசேர்க்கை யுண்டாகுமென்று சொன்னான். அதினால் மாத்திரம் ஜாதிசேர்க்கை யுண்டாகிறதாக நினைக்கவேண்டாம், வருணாசிரம தர்ம்மமில்லாமல் போவதினாலும் ஜாதிசேர்க்கை யுண்டாகுமென்று சொன்னதாகவும் கொள்ளலாம். (உச)

---

உரு. ஸக்தா: கர்மண்யவித்வாம்ஸோ யதா குர்வந்தி பாரத।
குர்யாத்வித்வாம்ஸ்ததாஸக்தஶ்சிகீர்ஷுர்லோகஸங்க்ரஹம்॥

| | |
|---|---|
| ஹே பாரத | ஓ! பரதவம்சத்திற்பிறந்தவனே! |
| அவித்வாம்ஸ: | ஆத்மஞான மில்லாதவர்கள் |
| கர்மணி | கருமத்தில் (கருமத்தை) |
| ஸக்தா: | பலவிருப்ப முள்ளவர்களாய் |
| யதா | எப்படி |
| குர்வந்தி | செய்கிறார்களோ |
| ததா | அப்படியே |
| வித்வாந் | ஆத்மஞானமுள்ளவன் |
| அஸக்த: | பலனை யிச்சிக்காதவனாய் |
| லோகஸங்க்ரஹம் | ஜனங்களுடைய பிரயோஜனத்தை |
| சிகீர்ஷு: | செய்ய இச்சித்தவனாய் |
| குர்யாத் | செய்யவேண்டியது. |

---

* (ஸ்ரீ,வி) கருமத்தினால் வருணாசிரம தர்ம்மங்கள் நிலைத்திருக்கிற படியால் கருமம் செய்யாவிட்டால் வருணாசிரம தர்ம்மம்கெட்டு அதினால் ஜாதிசேர்க்கை யுண்டாகும்.

ஓ! பாரதா! ஆத்மஞான மில்லாதவர்கள் கருமத்தை பலவிருப்ப முள்ளவர்களாய் எப்படிச் செய்கிறார்களோ, அப்படியே ஆத்மஞான முள்ளவனும் பலனை யிச்சிக்காமல் ஜனங்களுடைய பிரயோஜனத்தை யிச்சித்து (கருமத்தைச்) செய்யவேண்டியது.

(௨௫) (இந்த சுலோகமும் அடுத்த சுலோகமும் சேர்த்து ஒரே அந்வயமாய்ச் செய்திருக்கிறதினால் அந்த இரண்டு சுலோகங்களின் அர்த்தமு மிதிலேயே விவரிக்கப்படுகிறது.)

ஆத்மாவலோகன மில்லாதவர்களாயும், மோக்ஷா பேக்ஷை யுள்ளவர்களாயும், கருமத்தில் சிரத்தையுள்ளவர்களாயும், கருமத்தைச் செய்துகொண்டே யிருக்கிறவர்களாயு முள்ள ஜனங்களுக்குக் கருமத்தைக்காட்டிலும் ஆத்மாவலோகனத்திற்கு வேறே சாதன மிருப்பதாகத் தோற்றுவித்து புத்தி பேதத்தை யுண்டாக்கக் கூடாது. புத்திபேத முண்டாகக் காரண மென்னவென்றாலோ, ஆத்மாவலோகன சக்தனானவனுக்குக் கருமஞ் செய்வதினாற் பிரயோஜன மொன்றுமில்லை. ஆதினால் இவன் கருமஞ்செய்கிறதில்லை. அக்ஞானியானவன், ஆத்மாவலோகனமுள்ளவன் கருமத்தை விட்டகாரண மின்னதென்று தெரியாமல் தானும் கருமத்தை விட்டுவிடுகிறான். ஆத்மாவலோகன முண்டாகவுமில்லை, கருமஞ் செய்வதினா லுண்டாகும் பிரயோஜனமுமில்லை. இரண்டுங் கெட்டவனாக ஆய்விடுவான். ஆகையால் ஞானிகள் இப்படிப்பட்ட அவிவேகிகள் கெட்டுபோகாம லிருக்கும்பொருட்டு கருமத்தில் பற்றுள்ள அவர்கள் கருமத்தையாவது கிரமமாய்ச்செய்து வருவதற்காக தாங்கள் செய்தும், செய்வித்தும் காட்டவேண்டுமென்பது தாத்பரியம்.

---

௨௬. 𑌨 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌭𑍇𑌦𑌂 𑌜𑌨𑌯𑍇𑌦𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌂 𑌕𑌰𑍍𑌮𑌸𑌙𑍍𑌗𑌿𑌨𑌾𑌂।
𑌜𑍋𑌷𑌯𑍇𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌸𑌮𑌾𑌚𑌰𑌨𑍍॥*

| | |
|---|---|
| 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍 | ஆத்மஞானமுள்ளவன் |
| 𑌕𑌰𑍍𑌮𑌸𑌙𑍍𑌗𑌿𑌨𑌾𑌂 | கருமத்தில் விருப்பமுள்ள |
| 𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌂 | அக்ஞானிகளுக்கு |
| 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌭𑍇𑌦𑌂 | புத்திபேதத்தை |
| 𑌨 𑌜𑌨𑌯𑍇𑌤𑍍 | உண்டாக்கக்கூடாது |
| 𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌸𑌮𑌾𑌚𑌰𑌨𑍍 | } கிரமமாய்க் கரும்மசெய்பவனாய் |
| 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 | சகலகருமங்களையும் |
| 𑌜𑍋𑌷𑌯𑍇𑌤𑍍 | செய்விக்க (வும்) வேண்டியது. |

ஆத்மஞானமுள்ளவன், கருமத்தில் விருப்பமுள்ள அக்ஞானிகளுக்கு புத்திபேதத்தை யுண்டாக்கக்கூடாது கிரமமாய், தான் கருமத்தைச் செய்யவும் சகலகருமங்களையுஞ் செய்விக்கவும் வேண்டியது.

---

* இந்த சுலோகத்தை கர்சஸம்ஹிதை மாதுரியகண்டம் அத்-௧-௬-௭ல் காண்க

(ஸ்ரீ) பலாபேக்ஷையுடன் (காம்மிய) கருமங்களைச் செய்வதிலேயே விருப்பமுள்ள அவிவேகிகளை அந்தக்கருமத்தைச் செய்துவரும்படி செய்யவேண்டியதின் பொருட்டு ஞானிகள் தாங்களும் கருமஞ் செய்துகொண்டும் செய்வித்துக் கொண்டும் வரவேண்டு மென்பது கருத்து. (உசு)

---

உஎ. 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍇𑌃 𑌕𑍍𑌰𑌿𑌯𑌮𑌾𑌣𑌾𑌨𑌿 𑌗𑍁𑌣𑍈𑌃 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌸𑌰𑍍𑌵𑌶𑌃।
𑌅𑌹𑌂𑌕𑌾𑌰𑌵𑌿𑌮𑍂𑌢𑌾𑌤𑍍𑌮𑌾 𑌕𑌰𑍍𑌤𑌾𑌹𑌮𑌿𑌤𑌿 𑌮𑌨𑍍𑌯𑌤𑍇॥

| | |
|---|---|
| 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍇𑌃 | பிரகிருதி அல்லது மாயையினுடைய |
| 𑌗𑍁𑌣𑍈𑌃 * | குணங்களாகிய இந்திரியங்களினாலே |
| 𑌸𑌰𑍍𑌵𑌶𑌃 | அநேகவிதமாய் |
| 𑌕𑍍𑌰𑌿𑌯𑌮𑌾𑌣𑌾𑌨𑌿 | செய்யப்படுகிற |
| 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 | கருமங்களை |
| 𑌅𑌹𑌂𑌕𑌾𑌰𑌵𑌿𑌮𑍂𑌢𑌾𑌤𑍍𑌮𑌾 † | அகங்காரத்தினால் விவேகமற்ற மனதையுடையவன் |
| 𑌅𑌹𑌂 𑌕𑌰𑍍𑌤𑌾 𑌇𑌤𑌿 | நான் செய்கிறேனென்று |
| 𑌮𑌨𑍍𑌯𑌤𑍇 | நினைக்கிறான் |

மாயையினுடைய குணங்களாகிய இந்திரியங்களினாலே அநேகவிதமாய்ச் செய்யப்படுகிறகருமங்களை நான் செய்கிறேனென்று அகங்காரத்தினால் விவேகமற்ற மனதையுடையவன் நினைக்கிறான். (கருமங்களுக்கு கர்த்தா மாயாகாரியங்களேயன்றி ஆத்மாவல்லவென்பதை யிதின் அத் - கஅ - சு - கங - கச - கரு - கசு களில் காண்க.)

(ஸ்ரீ,வி) 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍇𑌃=மாயையினுடைய, 𑌗𑍁𑌣𑍈𑌃=சத்வாதிகுணங்களைக் கொண்டு, 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍇𑌃=ஜீவ சுவபாவத்தினுடைய, 𑌗𑍁𑌣𑍈𑌃= குணங்களினாலே, என்றால் தத்வஞானம், மித்தியா ஞானம், மிசிரஞானம் இவைகளினாலே, 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍇𑌃 = பரமாத்மாவுடைய, 𑌗𑍁𑌣𑍈𑌃= இச்சா சக்திமுதலிய குணங்களினாலே (இப்படி மூன்றுவிதமா யர்த்தம் செய்திருக்கிறார். கருமங்களென்றால், சாதுகருமம், மிசிரகருமம், அசாதுகருமம். மற்றவைகளுக்கு மேற்கண்ட அர்த்தமே.) (உஎ)

---

உஅ. 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌵𑌿𑌤𑍍𑌤𑍁 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌗𑍁𑌣𑌕𑌰𑍍𑌮𑌵𑌿𑌭𑌾𑌗𑌯𑍋𑌃।
𑌗𑍁𑌣𑌾 𑌗𑍁𑌣𑍇𑌷𑍁 𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤 𑌇𑌤𑌿 𑌮𑌤𑍍𑌵𑌾 𑌨 𑌸𑌜𑍍𑌜𑌤𑍇॥

---

* (பா) சத்வாதி குணங்களினாலே.

† 𑌅𑌹𑌂𑌕𑌾𑌰𑌃 (பா) தேகமே தானென்கிற அகங்காரம்.

| | |
|---|---|
| ஹே மஹாபாஹோ | ஓ! பெரியகைகளையுடையவனே! |
| குணகர்மவிபாகயோ: | குணங்களுடையவும் கருமங்களுடையவும் விபாகத்தினுடைய |
| தத்வவித்து | யதார்த்தத்தைத்தெரிந்தவன் |
| குணா: | இந்திரியங்கள் |
| குணேஷு | (சப்தாதி) விஷயங்களில் |
| வர்த்தந்தே இதி | பிரவிருத்திக்கின்றனவென்று |
| மத்வா | தெரிந்து |
| ந ஸஜ்ஜதே | அபிமானம் வைக்கிறதில்லை. |

ஓ! அர்ச்சுன! குணகருமங்களுடைய விபாகத்தின் யதார்த்தத்தைத் தெரிந்தவன் இந்திரியங்கள் விஷயங்களில் பிரவிருத்திக்கின்றனவென்று தெரிந்து (கருமத்தில்) அபிமானம் வைக்கிறதில்லை.

(ஸ்ரீ) குணகருமங்களுடைய விபாகத்தின் வாஸ்தவத்தை யறிந்தவனென்றால், சத்வம், ரஜஸ், தமஸ் என்கிற குணங்கள் தன்னுடையவையல்ல, ஆத்மாவாகிய தான் அந்தக்குணங்களுமல்ல, கருமம் தன்னுடையது மல்ல, தான் கருமங்களைச் செய்கிறவனுமல்ல, குணங்கள், கருமங்கள் இவைகளுக்கு தான் வேறானவன் என்பதைத் தெரிந்தவன் தான் குணகருமவிபாகங்களைத் தெரிந்தவன், என்று தாத்பரியம்.

(ஸ்ரீ,வி) குணகர்மவிபாகயோ: குணாநாம்=பகவானுடைய இச்சைமுதலிய குணங்களுக்கும், பிரகிருதியின் சத்வாதி குணங்களுக்கும், பிரகிருதிவிகாரமான தேகேந்திரிய மனசுகளுக்கும் பரஸ்பரபேதத்தையும், கர்மணாம்=பகவத் சிருஷ்டிமுதலிய கருமங்களுக்கும், பகவத் அதீனனாகிய ஜீவனால் செய்யப்படும் கருமங்களுக்கும் பரஸ்பர பேதத்தையும், தத்வவித்து = யதார்த்தமா யறிந்தவன், குணா: = பகவத் இச்சாதிகுணங்கள், குணேஷு = ஜீவசுவபாவ கருமாதிகளிலும், குணா:=இந்திரியங்கள் பகவத் இச்சானுசாரமாய், குணேஷு=சப்தாதிவிஷயங்களிலேயும், வர்த்தந்தே=பிரவிருத்திக்கின்றன. (உஅ)

---

உக. ப்ரக்ருதேர்குணஸம்மூடா: ஸஜ்ஜந்தே குணகர்மஸு।
தாநக்ருத்ஸ்நவிதோ மந்தாந் க்ருத்ஸ்நவிந்ந விசாலயேத்॥

| | |
|---|---|
| ப்ரக்ருதே: | மாயையினுடைய |
| குணஸம்மூடா: | குணங்களினாலே மூடர்களாயிருக்கிற |
| (யே) | எவர்கள் |

| | |
|---|---|
| 𑌗𑍁𑌣𑌕𑌰𑍍𑌮𑌸𑍁 | இந்திரியங்களுடைய வியாபாரங்களில் |
| 𑌸𑌜𑍍𑌜𑌨𑍍𑌤𑍇 | அபிமானம் வைக்கிறார்களோ |
| 𑌅𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌵𑌿𑌦𑌃 | ஒன்றுந்தெரியாத |
| 𑌮𑌨𑍍𑌦𑌾𑌨𑍍 | அறிவீனர்களாகிய |
| 𑌤𑌾𑌨𑍍 | அவர்களை |
| 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌵𑌿𑌤𑍍 | ஆத்மஞானி |
| 𑌨𑌵𑌿𑌚𑌾𑌲𑌯𑍇𑌤𑍍 | மாறிநடக்கும்படிசெய்யக்கூடாது. |

மாயையினுடைய குணங்களினாலே மூடர்களாயிருக்கிற எவர்கள் இந்திரியங்களுடைய வியாபாரங்களில் அபிமானம் வைக்கிறார்களோ, ஒன்றுந்தெரியாத அறிவீனர்களாகிய அவர்களை ஆத்மஞானியானவன் (கருமத்தைவிட்டு) மாறிநடக்கும்படி செய்யக்கூடாது.

(ரா) 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌵𑌿𑌤𑍍 = சகலகருமமும், பிரகிருதி காரியமென்றறிந்த ஞானியானவன், ஆத்மாநாத்மஞான மில்லாத மூடர்களுக்குக் கருமத்தைவிட்டு ஞானமார்க்கத்தில் பிரவிருத்திக்கும்படி போதிக்கக்கூடாது. ஏனென்றால், மூடனும், அவிவேகியுமான அவனுக்கு ஞானமார்க்கம் சித்திக்கவேமாட்டாது. இந்த ஞானியானவன் கருமத்தினால் பிரயோஜனமில்லையென்று சொன்னவாக்கியத்தை ஆதாரமாகக் கொண்டு மூடன்கருமத்தை மட்டும் விட்டுவிடுவான். அதினாற் கருமபலனுண்டாக ஏதுவுமில்லை; ஞானசித்திக்கு யோக்கியனுமன்று; இரண்டுங் கெட்டவனாவான். ஆகையால், ஞானியானவன், கருமமானது ஆத்மதெரிசனத்திற்குச் சாதனமானதென்றும் அதைவிட்டால் உனக்கு வேறே பிரயோஜனங் கிடைக்கமாட்டாதென்றும் செவி, தான் கருமத்தைச்செய்தும், செய்வித்தும் காட்டவேண்டுமென்பது தாத்பரியம்.

(௩) இந்திரியங்கள், சப்தாதிவிஷயங்கள், சத்வ இரஜஸ்தமஸ்கள், முக்கியமல்லாதவைகளெவையோ அவைகள், முதலிய இவைகளுக்கெல்லாம், குணங்கள் என்று பெயருண்டு. (௨௯)

௩௦. 𑌮𑌯𑌿 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌯𑌾𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌚𑍇𑌤𑌸𑌾।
𑌨𑌿𑌰𑌾𑌶𑍀𑌰𑍍𑌨𑌿𑌰𑍍𑌮𑌮𑍋 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌯𑍁𑌧𑍍𑌯𑌸𑍍𑌵 𑌵𑌿𑌗𑌤𑌜𑍍𑌵𑌰𑌃॥

| | |
|---|---|
| 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 | சகலகருமங்களையும் |
| 𑌮𑌯𑌿* | என்னிடத்தில் |

* (ரா) பரமாத்மாவாகிய என்னிடத்தில்.

ஸந்ந்யஸ்ய* — ஒப்பித்து

அத்யாத்மசேதஸா† — நான் பரமாத்மாவினுடைய ஏவற்காரனாக சகலகருமத்தையும் செய்து பரமாத்மாவுக் கொப்பிக்கவேண்டியவ னென்கிற எண்ணத்துடன்.

நிராஶீ: — பலாபேக்ஷையன்றியும்

நிர்மம: — (தன்னுடைய தென்கிற) மமதையைவிட்டும்

விகதஜ்வர: பூத்வா — தாபத்தை (விசனத்தை) விட்டவனாயிருந்துகொண்டும்

யுத்யஸ்வ — யுத்தத்தைச்செய்.

ஓ! அர்சுனா! நீ, சகலகருமங்களையு மென்னிடத்தி லொப்பித்து (கருமங்களின் பலன்களை எனக்கு அர்ப்பணஞ்செய்து) நான் பரமாத்மாவினுடைய ஏவற்காரனாக சகல கருமங்களையுஞ் செய்து பரமாத்மாவுக்கு அர்ப்பணஞ் செய்யவேண்டியவனென்கிற எண்ணத்துடன் பலாபேக்ஷையன்றியும், மமதையைவிட்டும், விசனத்தை விட்டவனாயிருந்துகொண்டும் யுத்தத்தைச்செய். (௩௦)

---

௩௧. யே மே மதமிதம் நித்யமநுதிஷ்டந்தி மாநவா:।
ஶ்ரத்தாவந்தோঽநஸூயந்தோ முச்யந்தே தேঽபி கர்மபி:॥

யே மாநவா: — எந்தமனிதர்கள்

ஶ்ரத்தாவந்த: — (என்வாக்கியத்தில்) விசுவாச முள்ளவர்களாயும்

அநஸூயந்த: — (என்னிடத்தில்) துவேஷ மற்றவர்களாயும்

மே — என்னுடைய

இதம் மதம் — இந்த அபிப்பிராயத்தை (சித்தாந்தத்தை)

நித்யம் — எப்போதும்

அநுதிஷ்டந்தி — அநுசரித்து நடக்கிறார்களோ

தேঽபி — அவர்களுங்கூட

கர்மபி: — (பாபபுண்ணிய) கருமங்களினாலே

முச்யந்தே — விடுபடுகிறார்கள்.

எந்தமனிதர்கள் என்னுடைய வாக்கியத்தில் விசுவாசம்வைத்தும், என்னை துவேஷிக்காமலும், என்னுடைய அபிப்பிராயத்தை

---

* (ஸ்ரீ,வி) பகவானே என்னுடைய இருதயத்திலிருந்து செய்கிறானென்கிற எண்ணத்துடன் செய்து அவருக்கு ஒப்பித்து.

† (௨) (ஸ்ரீ,வி) கிருஷ்ணசுவாமியானவர் சர்வோத்தமனாயிருக்கிற பரமாத்மாவென்கிற புத்தியினாலே.

யநுசரித்து நடக்கிறார்களோ அவர்களுங்கூட பாபபுண்ணிய கருமங்களினால் (கருமபலத்திலிருந்து) விடுபடுகிறார்கள்.

(ரா) "𑌤𑍇𑌽𑌪𑌿—அவர்களுங்கூட" என்கிற வாக்கியமானது பின்னுஞ் சிலரைச் சேர்ப்பதற்காக உபயோகம் செய்யப்பட்டிருக்கிறது. அவர்களாரென்றால், சாஸ்திராதிகாரிகளாகிய எந்தமனிதர்கள் இது (இந்த கீதாசாஸ்திரம்) தான் சாஸ்திரார்த்தமென்று தெரிந்து அதின்படி அநுஷ்டிக்கிறார்களோ அவர்களும், அநுஷ்டிக்காவிட்டாலும் இந்த சாஸ்திரார்த்தத்தைத் தெரிந்து அதில் பக்தி சிரத்தை வைக்கிறார்களோ அவர்களும், பக்திசிரத்தையில்லாவிட்டாலு மிந்தசாஸ்திரத்தை நிந்திக்காமலிருக்கிறார்களோ அவர்களும், அனாதியாய் வந்திருக்கிற சகலகருமங்களி லிருந்தும் விடுபடுகிறார்கள்.

(ஷா) "𑌇𑌦𑌂 𑌮𑌤𑌂—இந்த அபிப்பிராயம்" என்பது இதற்கு முந்திய சுலோகத்தில் சொன்ன அபிப்பிராயமென்று தோற்றுகிறது. அதாவது, கருமங்களை ஈசுவரார்ப்பணமாகச்செய்து பலனை யீசுவரனுக் கொப்பித்துவிட்டு தான் பலனைக்கோராமலும், அபிமானமில்லாமலு மிருப்பதே. (௩௧)

---

௩௨. 𑌯𑍇 𑌤𑍍𑌵𑍇𑌤𑌦𑌭𑍍𑌯𑌸𑍂𑌯𑌨𑍍𑌤𑍋 𑌨𑌾𑌨𑍁𑌤𑌿𑌷𑍍𑌠𑌨𑍍𑌤𑌿 𑌮𑍇 𑌮𑌤𑌂।
𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌿𑌮𑍂𑌢𑌾𑌂𑌸𑍍𑌤𑌾𑌨𑍍𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌨𑌷𑍍𑌟𑌾𑌨𑌚𑍇𑌤𑌸𑌃॥

| | |
|---|---|
| 𑌯𑍇 𑌤𑍁 | எவர்கள் |
| 𑌮𑍇 | என்னுடைய |
| 𑌏𑌤𑌤𑍍 𑌮𑌤𑌂* | இந்த (மேல்சொன்ன) அபிப்பிராயத்தை |
| 𑌅𑌭𑍍𑌯𑌸𑍂𑌯𑌨𑍍𑌤𑌃 | துவேஷிக்கிறவர்களாய் |
| 𑌨 𑌅𑌨𑍁𑌤𑌿𑌷𑍍𑌠𑌨𑍍𑌤𑌿 | அநுசரித்து நடக்கிறதில்லையோ |
| 𑌅𑌚𑍇𑌤𑌸𑌃 | அவிவேகிகளாயும் |
| 𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌿𑌮𑍂𑌢𑌾𑌨𑍍 | பிரம்மவிஷயமாயும் சகல கருமவிஷயமாயுமுள்ள ஞானத்தில் மூடர்களாயு மிருக்கிற |
| 𑌤𑌾𑌨𑍍 | அவர்களை |
| 𑌨𑌷𑍍𑌟𑌾𑌨𑍍 | கெட்டுப்போனவர்களாக |
| 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 | அறி. |

எவர்கள் என்னுடைய இந்த அபிப்பிராயத்தைத் துவேஷிக்கிறவர்களாய்க் கொண்டு அநுசரிக்கிறதில்லையோ, அவிவேகிகளாயும்,

* (ரா) சகல வஸ்துக்களு மென்னுடைய சரீரமானபடியால் என்னையே ஆதாரமா யுடையனவென்றும், என்னுடைய சேஷபூதங்களென்றும், என்னாலேயே ஏவப்படுகிறவை யென்றுமுள்ள என் மதத்தை.

பிரம்மவிஷயமாயும் சகலகருமவிஷயமாயுமுள்ள ஞானமில்லாதமூடர்களாயு மிருக்கிற அவர்களைக் கெட்டுப்போனவர்களாயறி. (௩௨)

---

௩௩. ஸத்ருசம் சேஷ்டதே ஸ்வஸ்யா: ப்ரக்ருதேர்ஜ்ஞானவானபி।
ப்ரக்ருதிம் யாந்தி பூதானி நிக்ரஹ: கிம் கரிஷ்யதி॥

| | |
|---|---|
| ஜ்ஞானவானபி | ஞானியுங்கூட |
| ஸ்வஸ்யா: | சொந்தமான |
| ப்ரக்ருதே: | பூர்வகருமசேஷத்திற்கு |
| ஸத்ருசம் | அநுகூலமாய் |
| சேஷ்டதே | (பிரகிருதிவிஷயங்களில், அல்லது உலக வியாபாரங்களில் பிரவிருத்திக்கிறான் |
| பூதானி | பிராணிகள் |
| ப்ரக்ருதிம் | கருமசேஷத்தை |
| யாந்தி | அடைகிறார்கள் |
| நிக்ரஹ:* | இந்திரியநிக்கிரகமானது |
| கிம்கரிஷ்யதி | (இவர்களுக்கு) என்னசெய்யப்போகிறது ? |

ஞானியுங்கூட சொந்தமான கருமசேஷத்திற்கு அநுகூலமாகவே பிரகிருதி விஷயங்களில் பிரவிருத்திக்கிறான். பிராணிகள் கருமசேஷத்தை யடைகிறார்கள். இந்திரியநிக்கிரகம் (அடக்குதல்) ஆனது இவர்களுக்கு என்னசெய்யப்போகிறது ? (என்றால் பூர்வகருமசேஷத்தினால் இவர்கள் பலவந்தமாய் விஷயங்களில் இழுக்கப்படுகையில் இந்திரியங்களை யடக்குவதினால் பிரயோஜனமில்லை யென்பது கருத்து).

(ஸ்வா) ப்ரக்ருதே: - என்கிற பதத்திற்கு (ஶம்) (ஸ்ரீ,வி) பூர்வகருமஸம்ஸ்காரமென்றும் (ரா) பூர்வகருமவாசனை யென்றும் (ஸ்ரீ) பூர்வகரும ஸம்ஸ்காரத்திற்குள்பட்ட சுபாவமென்றும் சொல்லியிருக்கிறார்கள். அன்வயார்த்தத்தில் பூர்வகருமசேஷமென்று போட்டிருக்கிறது. இவைகளெல்லாம் ஒன்றையேதான் குறிக்கிறது. அவைகளில் ஒன்றுக்குச் சொல்லுமர்த்தந்தான் எல்லாத்திற்கும் சொன்னதாகும், பூர்வஜன்மத்தில் ஒருவன் செய்த புண்ணியகருமங்களுக்காக சுவர்க்காதி லோகங்களில் சுகபலனையும், பாபங்களுக்காக நரகாதிலோகங்களில் துக்கபலனையு மடைகிறான். அப்படி சுவர்க்கநரகாதி லோகங்களை யடைந்தவன் அந்த லோகங்களில் சுகதுக்கங்களை அனுபவித்து மிச்சமுள்ள கருமமானது, பாபமோ, புண்ணியமோ, அதற்குத் தகுந்தபடி இந்த மனுஷியலோகத்திலாவது, அல்லது, அதைவிட உயர்ந்த,

---

* (ரா) (ஶம்) சாஸ்திர நிஷேதமானது, (ஸ்ரீ,வி) மனோ நிக்கிரகமானது, அல்லது தெண்டிப்பதானது.

அல்லது, தாழ்ந்த, லோகத்திலாவது ஜன்மத்தை யடைகிறான். அந்த மிச்சம்தான் கருமசேஷம், கருமவாசனை, சம்ஸ்காரமென்று சொல்லப்படுகிறது. அந்தமிச்சமென்பது எப்படிப்பட்டதென்றால், கஸ்தூரி, புனுகு, முதலிய வாசனையுள்ள வஸ்துக்கள் வைக்கப்பட்டிருந்த பெட்டி முதலானவைகளில் அந்தவஸ்துக்கள் முழுதும் செலவழிந்து விட்டாலும் பெட்டி முதலானவைகளில் வாசனைமட்டும் எப்படிப்போகாமலிருக்குமோ; எண்ணெய்வைத்திருந்த பாத்திரத்தில் எண்ணெய் செலவழிந்தபிறகு எண்ணெயின் பற்றுதல் எப்படி யிருக்குமோ அப்படி புண்ணிய, பாபகருமங்களுக்குப் பலனநுபவித்த பின்னுங் கூட அந்தக்கருமங்களின் வாசனை அவனைத்தொடர்ந்தே அதற்குத் தக்கபடி ஜன்மங்களையும் பிரவிருத்தியையு முண்டாக்கிறதென்று சிலர் பக்ஷம். (ஸ்ரீ) பிரம்மசூத்திரம் ௩ - க - அ - க்குச் செய்திருக்கிற பாஷியத்தில் கருமசேஷ மென்பது அனுபவிக்காமல் மிச்சமிருக்கிற ஸஞ்சிதமேயன்றி அனுபவித்த கருமத்தின் வாசனை யல்லவென்று சொல்லியிருக்கிறார். (௩௩)

---

௩௪. 𑌇𑌂𑌦𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯𑍇𑌂𑌦𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑍇 𑌰𑌾𑌗𑌦𑍍𑌵𑍇𑌷𑍌 𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑍌।
𑌤𑌯𑍋𑌰𑍍𑌨 𑌵𑌶𑌮𑌾𑌗𑌚𑍍𑌛𑍇𑌤𑍍𑌤𑍌 𑌹𑍍𑌯𑌸𑍍𑌯 𑌪𑌰𑌿𑌪𑌂𑌥𑌿𑌨𑍌॥

| | |
|---|---|
| 𑌇𑌂𑌦𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯 𑌇𑌂𑌦𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯 | அந்தந்த இந்திரியத்தினுடைய |
| 𑌅𑌰𑍍𑌥𑍇 | சப்தாதிவிஷயத்தில் |
| 𑌰𑌾𑌗𑌦𑍍𑌵𑍇𑌷𑍌 | ஆசைதுவேஷங்கள் |
| 𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑍌 | இருக்கின்றன |
| 𑌤𑌯𑍋𑌃 | அவைகளுடைய (ஆசை துவேஷங்களுடைய) |
| 𑌵𑌶𑌂 | சுவாதீனத்தை |
| 𑌨𑌾𑌗𑌚𑍍𑌛𑍇𑌤𑍍 | அடையக்கூடாது |
| 𑌤𑍌 | அவைகள் (ஆசைதுவேஷங்கள்) |
| 𑌅𑌸𑍍𑌯 | இவனுக்கு (ஞானிக்கு) |
| 𑌪𑌰𑌿𑌪𑌂𑌥𑌿𑌨𑍌 𑌹𑌿 | சத்துருக்களாகவிருக்கின்றன. |

அந்தந்த இந்திரியத்தினுடைய விஷயத்தில் ஆசையும், துவேஷமுமிருக்கின்றன. அவைகளுடைய சுவாதீனத்தை யடையக் கூடாது. அவைகள் ஞானிக்குச் சத்துருக்களா யிருக்கின்றன.

(ஸ்ரீ) (ஸ்ரீ) ஆசை துவேஷங்களுக்குச் சுவாதீனமாகாம லிருக்க வேண்டுமானால் சாஸ்திரார்த்தங்களை அறிந்து, அநுஷ்டித்து (ஸ்ரீ. ஈசுவர பஜனைசெய்து), வரவேண்டியது முக்கியமானது.

(ஜ) கருமவாசனையினு லிழுக்கப்படுகிறவனுக்கு இந்திரிய நிக்கிர கத்தினுல் பிரயோஜன மில்லையென்று முன்னுலே சொல்லப் பட்டது. காமக்குரோதங்களுக்குச் சுவாதீனமாகக் கூடாதென்று இதில் சொல் லப்பட்டது. இதினுல் கிரமக்கிரமமாய் இந்திரிய நிக்கிரகஞ் செய்து வந்தால் (பிறகு காமக்குரோதங்களையுமடக்கி) காலாந் தரத்தில் பிர யோஜன மடையலாமென்பது கருத்து.

(ஸ்வா) ஸ்ரீதரசுவாமிகளுடைய அபிப்பிராயமானது சொற்பம் விவ ரித்துச் சொல்லப்படுகிறது. இந்திரியங்கள் உலகத்திலுள்ள வஸ்துக் களைப்பார்ப்பது, கேட்பது முதலியவைகளினுல், ஆசையும், கோப மல்லது துவேஷமு முண்டாகின்றன. எப்படி யென்ருல், இன்பமுண் டாக்கத் தக்கதான ஒரு வஸ்துவைக் கண் பார்த்தவுடன் அந்த வஸ்துவி னிடத்தில் ஆசையுண்டாகிறது. ஆசைப்பட்ட வஸ்துகிடைக்க யா தொரு தடைசெய்யப்பட்டால் அந்தத்தடை யாராலுண்டாச் சுதோ அவனிடத்தில் கோபமல்லது துவேஷமுண்டாகிறது. ஆகையால்தான் ஆசையும் துவேஷமும் விஷயங்களாகிய வஸ்துக்களி லிருக்கிறதாகச் சொல்லப்பட்டன. ஞானியானவன் வஸ்துக்களில் விருப்பம்வைப்பா ஞுகில் அதிலிருந்து ஆசையும், கோபமு முண்டாய் ஞானத்தில் பிர விருத்தியைக் கெடுத்துவிடும். ஆகையால் ஞானிக்குச் சத்துருவென்று சொல்லப்பட்டன. சாஸ்திரார்த்த விசாரமானது பரமேசுவர பஜனை யை யுண்டாக்கிறது. பரமேசுவர பஜனையானது ராகதுவேஷங்களுக் குட்படாமல் காக்கிறது. (௩௪)

---

௩.௩௫. ஶ்ரேயாந்ஸ்வத⁴ர்மோ விகு³ண: பரத⁴ர்மாத்ஸ்வநுஷ்டி²தாத்।
ஸ்வத⁴ர்மே நித⁴நம் ஶ்ரேய: பரத⁴ர்மோ ப⁴யாவஹ:॥

ஸ்வநுஷ்டி²தாத் — செவ்வையாயனுஷ்டிக்கப்பட்ட
பரத⁴ர்மாத்* — பிறருடைய தருமத்தைக்காட்டிலும்
விகு³ண:† — குணமில்லாத
ஸ்வத⁴ர்ம:‡ — தன்னுடைய தருமமானது
ஶ்ரேயாந்§ — சிரேஷ்டமாகும்
ஸ்வத⁴ர்மே — தன்னுடைய தருமத்தில்

---

* (ரா) ஞானயோகத்தைக் காட்டிலும்.

† (ஸ்ரீ) (தீ,வி) ஸமக்³ரம், (என்ருல், பரிபூர்ணமாகாதகருமம்)

‡ (தீ,வி) தன்னுடைய வருணுசிரமத்துக்கு யோக்கியமான தருமம் (ரா) கருமயோகமானது.

§ (ஸ்ரீ) சுவர்க்காதிப் பிராப்தியைக் கொடுக்கும்.

| | |
|---|---|
| (ஷிதஸ்ய) | இருந்தவனுக்கு |
| நிடநம் | மரணமானது |
| ஶ்ரேயஃ | சிரேஷ்டமாகும் |
| பரயஊஃ* | பிறருடையதருமமானது |
| ஸயாவஹஃ | நரகபயத்தையுண்டாக்கும். |

செவ்வையா யநுஷ்டிக்கப்பட்ட பிறருடைய தருமத்தைக் காட்டிலும் குணமில்லாத தன்னுடைய தருமமானது சிரேஷ்டமாகும். தன்னுடைய தருமத்திலிருந்தவனுக்கு மரணமானது சிரேஷ்டமாகும். பிறருடைய தருமமானது நரகபயத்தை யுண்டாக்கும்.

(ரா) அர்சுன! கருமத்திற்கு மாத்திரமதிகாரியான நீ, சிரேஷ்டமான ஞானாதிகாரி யாகலாமென்று எண்ணி யுத்தஞ் செய்வதை விட்டு விடுவாயாகில் நரகமடைவாயென்பது பகவானுடைய தாத்பரியம்.

(ஸ்வா) ஒவ்வொருவனும் அவனவனுக்கு எந்த (கருமம்) தருமம் விதிக்கப்பட்டிருக்கிறதோ, அதை யநுஷ்டிக்கிறது சிரேஷ்டமே யல்லாது தன்னுடைய தருமத்தைவிடப் பிறருடைய தருமம் சிரேஷ்டமாய்த் தோற்றினபோதிலும் அந்தப்பிறருடைய தருமத்தை அநுஷ்டிக்கிறவன் நரகமடைவானென்பது கருத்து. உதாரணம்: வைசியன் அவனுடைய கருமங்களாகிய பயிரிடுதல், கோசம்ரக்ஷணை, வியாபாரம் இவைகளைவிட்டு யாகாதிக் கிரதுக்களைச் செய்விப்பது, யக்ஞத்தில் ரித்விக்காக விருப்பது போலொத்தப் பிராம்மண தருமத்தையும், பிராம்மணன் பயிரிடுவது முதலிய வைசியதருமத்தையும் அநுஷ்டிப்பாராகில் நரகம் கிடைக்கும். தன்னுடைய கருமம் குறைவுள்ளதென்று தோற்றினும் அதையே யநுஷ்டித்தால் நற்கெதியடைவானென்பது கருத்து. இதின், அத். கஅ - சு. சஎ - ம் மேலும் "ஸ்வயஊாவரணம் ஶக்த்யா விய ஊாநிவத்நம் । ஜெவாஜெஸ்நஸங்தோஷ ஆத்மவித்ஸேவநம்" —தன்னால் கூடியவரையில் சுவதர்மத்தை யாசரிக்கவேண்டியது. பிறர் தருமத்தை யனுஷ்டிக்காமல் நிவர்த்திக்க வேண்டும். தெய்வாதீநமாய் கிடைத்த வஸ்துக்களில் சந்தோஷமடைந்தவனும் ஞாநிகளுடைய பாதஸேவை பண்ணுகிறவனுமிருக்கவேண்டியது. ஸ்ரீபாகவதம், ௩. உஅ - உ. பார்க்க. (௩௫)

அஜுந உவாச.

௩௬. அய கெந ப்ரயுக்தோயம் பாபஂசரதி பூருஷஃ।
அநிச்சந்நபி வாஷ்ணேய பலாதிவ நியோஜிதஃ॥

---

* (ஸ்ரீ,வி) அன்னியருடைய வருணாசிரமத்திற்கு யோக்கியமான தருமமானது.

| | |
|---|---|
| அர்ஜுந உவாச | அர்சுனன்சொல்வது |
| ஹே வார்ஷ்ணேய | ஓ! விருஷ்ணிவம்சத்தில் ஜநித்தவரே ! |
| அத | அப்படியானால் |
| அயம் பூருஷ: | இந்தப்புருஷனானவன் |
| அநிச்சந் அபி* | (பாபஞ்செய்ய) இச்சையில்லா திருந்தாலும் |
| பலாத் | பலவந்தமாய் |
| நியோஜித இவ | ஏவப்பட்டவனைப்போல |
| கேந | எதினாலே |
| ப்ரயுக்த: | ஏவப்பட்டவனாக |
| பாபம்† | பாபத்தை |
| சரதி | செய்கிறான் |

அர்சுனன் சொல்வது-ஓ! விருஷ்ணிவம்சத்தில் ஜநித்த கிருஷ்ண சுவாமியே! அப்படியானால் இந்தப் புருஷனானவன் பாபஞ் செய்ய விச்சையில்லா திருந்தாலும் பலவந்தமாய் ஏவப்பட்டவனைப்போல் எந்தக் காரணத்தினாலே பாபத்தைச் செய்கிறான்?

(௨) காமம், குரோதம், லோபம், மோஹம், மதம், மாச்சரியமாகிய இந்த (அரிஷட்வர்கம்) ஆறுகளில் பிரதானமானவை காமக்குரோதங்கள். இந்த விரண்டினுடைய சுவாதீனத்தை யடையக்கூடாதென்று முந்தி (௩௪-வது சுலோகத்தில்) சொல்லப்பட்டது. அந்த இரண்டில் பாபத்திலேவுவது, எது என்பது அர்சுனன் கேள்வி. (௩௬)

---

ஸ்ரீ பகவாநுவாச.

௩௭. காம ஏஷ க்ரோத ஏஷ ரஜோகுணஸமுத்பவ: ।
மஹாஶநோ மஹாபாப்மா வித்த்யேநமிஹ வைரிணம் ॥

| | |
|---|---|
| ஸ்ரீ பகவாநுவாச ‡ | ஸ்ரீகிருஷ்ணபகவான்சொல்வது |

---

* (ரா) விஷயாநுபவத்திலிச்சையில்லா திருந்தாலும்.

† (ரா) விஷயாநுபவரூபமான பாபத்தை.

‡ பகவாநு (ஶ்லோ) (ஶ்லோ) ஐஶ்வர்யஸ்ய ஸமக்ரஸ்ய வீர்யஸ்ய யஶஸ: ஶ்ரிய: । ஜ்ஞாநவைராக்யயோஶ்சைவ ஷண்ணாம் பக இதீரணா ॥ — சம்பூர்ணமான ஐசுவரியம், வீரியம், கீர்த்தி, சம்பத்து, ஞானம், வைராக்கியம் இவ்வாறும் "பக" என்று சொல்லப்படுகின்றன. இந்த ஆறும் வாசுதேவனிடத்திலே தடையில்லாமல் சேர்க்கையாயிருக்கிறதினாலே அவருக்கு பகவானென்று பெயர்வந்தது. இந்த சுலோகத்தை அக்னி புராணம் பிர்ம்மக்ஞான கண்டம். அத். ௩௭௮. ஶ்லோ - ௧௧ - காண்க—(ஶ்லோ) உத்பத்திம் ப்ரலயம் சைவ பூதாநாமாகதிம் கதிம் । வேத்தி வித்யாமவித்யாம் ச ஸ வாச்யோ பகவாநிதி ॥—பூதங்களுடைய உற்பத்தி, நாசம், வரவு, போக்கு, வித்தை, அவித்தை இவைகளை அறிந்தவராரோ அவர் பகவானென்று செல்லப்படுகிறார்.

| | |
|---|---|
| 𑌏𑌷𑌃 | நீ கேட்டகாரணமானது |
| 𑌰𑌜𑍋𑌗𑍁𑌣𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑌵𑌃 | இரஜோகுணத்தினுலுண்டான |
| 𑌕𑌾𑌮𑌃 (𑌏𑌷𑌃) | ஆசைதான் |
| 𑌏𑌷𑌃 | இந்த ஆசையானது |
| 𑌕𑍍𑌰𑍋𑌧𑌃 | கோபமாகிறது |
| 𑌮𑌹𑌾𑌶𑌨𑌃* | அநுபவிக்கத்தக்க அநேக வஸ்துக்களுக்கு ஏதுவாகிறது |
| 𑌮𑌹𑌾𑌪𑌾𑌪𑍍𑌮𑌾 | மகாபாபங்களுக்குக் காரணமாகிறது |
| 𑌏𑌨𑌂 | இதை (ஆசையை) |
| 𑌇𑌹† | இதில் (மோக்ஷமார்க்கத்தில்) |
| 𑌵𑍈𑌰𑌿𑌣𑌂 | சத்துருவாக |
| 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 | அறி. |

கிருஷ்ணபகவான் சொல்வது, நீ கேட்டகாரண மெதுவென்றால் (பாபத்தைச்செய்ய எதினால் ஏவப்படுகிறானென்றால்) இரஜோகுணத்திலிருந் துண்டான ஆசையினாற்றான். அந்த ஆசையானது கோபமாயும், அநுபவிக்கத்தக்க அநேக வஸ்துக்களையடைய ஏதுவாகவும், மகாபாபங்களுக்குக் காரணமாகவும், ஆகிறது. மோக்ஷவழிக்குச் சத்துருவுமாகிறதாக அறி. (௩௭)

---

௩௮. 𑌧𑍂𑌮𑍇𑌨𑌾𑌵𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 𑌵𑌹𑍍𑌨𑌿𑌃 𑌯𑌥𑌾𑌦𑌰𑍍𑌶𑍋 𑌮𑌲𑍇𑌨 𑌚।
𑌯𑌥𑍋𑌲𑍍𑌬𑍇𑌨𑌾𑌵𑍃𑌤𑍋 𑌗𑌰𑍍𑌭𑌸𑍍𑌤𑌥𑌾 𑌤𑍇𑌨𑍇𑌦𑌮𑌾𑌵𑍃𑌤𑌮𑍍॥

| | |
|---|---|
| 𑌵𑌹𑍍𑌨𑌿𑌃 | நெருப்பானது |
| 𑌧𑍂𑌮𑍇𑌨 | புகையினாலேயும் |
| 𑌆𑌦𑌰𑍍𑌶𑌃 | கண்ணாடியானது |
| 𑌮𑌲𑍇𑌨 | அழுக்கினாலேயும் |
| 𑌯𑌥𑌾 | எப்படி |
| 𑌆𑌵𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 | மூடப்படுகிறதோ, அல்லது, சூழப்படுகிறதோ |
| 𑌗𑌰𑍍𑌭𑌃 | வயிற்றுக்குள்ளிருக்கிற சிசுவானது |
| 𑌉𑌲𑍍𑌬𑍇𑌨 | கருப்பையினாலே |
| 𑌯𑌥𑌾 | எப்படி |
| 𑌆𑌵𑍃𑌤𑌃 | மூடப்பட்டிருக்கிறதோ |
| 𑌤𑌥𑌾 | அப்படியே |

---

* (ஸ்ரீ) (ம௦) திருப்தியடையாதது. (ரா) சத்துரு.

† (ம௦) ஜநநமரணமாகிய சமுசாரத்தில், (ரா) ஞானயோகத்தில், (ஸ்ரீ,வி) இஹபரபுருஷார்த்த விஷயத்தில்.

| | |
|---|---|
| ஊ௰௦* | இந்த்ஞானமர்னது |
| தெந | அதினுலே (அந்த ஆசையினுலே) |
| ஸ்வாத்ம | மூடப்பட்டிருக்கிறது. |

அக்கினி புகையினுலேயும், கண்ணுடி அழுக்கினுலேயும, வயிற்றி லிருக்கிற சிசு (குழந்தை) வானது கருப்பையினுலேயும் எப்படி மூடப் பட்டிருக்கிறதோ, அப்படியே ஞானமானது ஆசையினுலே மூடப்பட் டிருக்கிறது.

(ர) (ஶ்ரீ,வி) சுவயம் பிரகாசமுள்ள அக்கினியானது புகையினுல் மறைக்கப்பட்டிருப்பதுபோல சர்வக்ஞனை ஈசுவரன் ஜீவனுக்குக் காமத்தினுல் மறைக்கப்பட்டிருக்கிறுன். அதினுல், ஈசுவரன் ஜீவனு லறியப்படுகிறதில்லே. கண்ணுடியானது அழுக்கினுல் மறைபட்டிருப் பதுபோல் அந்தக்கரணமானது காமத்தினுல் மறைக்கப்பட்டிருக் கிறது. எப்படியென்முல், அந்தக்கரணம் காமத்தினுல் மூடப்பட்ட தாய்க்கொண்டு ஈசுவரன், ஜீவன் இவர்களே காண்பிக்கிறதில்லே. சிசு வானது கருப்பையிலிருக்கையில் எப்படி யொரு காரியமும் செய்ய சக்தியற்றிருக்கிறதோ அப்படிப்போல காமத்தினுல் மூடப்பட்டிருக் கிற ஜீவன் பிரம்மத்தையாவது, ஞானமுதலியதையாவது அடையக் கூடாதவனு யிருக்கிறுன்.

(வா) இதில் சொல்லப்பட்டிருக்கிற புகை, அழுக்கு, கருப்பை, இந்த மூன்று திருஷ்டாந்தங்களால் ஆசையினுல் சூழப்பட்ட அந்தக் கரணத்தையுடைய மூன்றுவகை ஜனங்களேக் குறிப்பிட்டதாகக் காணு கிறது. அதாவது, ஆசையாகிய புகையினுல் ஆத்மஞானமாகிய அக் கினி மூடப்பட்டிருப்பதென்பது ஒருவகை ஜனங்கள். இவர்க ளெப் படிப்பட்டவர்களென்முல், ஆத்மஞானமுள்ளவர்களே, ஆனுல் நிஷ் களங்கமாய், ஆத்மஞானத்திலேயே நிலேயாயில்லாமலும் விஷயப்பற்று தலேமுழுதும் விடாமலு மிருப்பவர்கள். இவர்கள் அதிசீக்கிரத்தில் ஆத்மஞான மடைவார்கள். அதெப்படிப் போலென்முல், அக்கினி யைச் சூழ்ந்திருக்கிற புகையானது எவ்வளவு வியாபகமானுலும் அக் கினியின் அடிபாகமும், காற்றுமுதலானதினுல் புகை விலக்கப்பட்ட போது வேறு சிலபாகமும் காணக்கூடியதாகவே யிருக்கும். மேலும் அக்கினி செவ்வையாய்ப் பிரகாசிக்கத் தொடங்கினவுடன் புகை இருந்த விடம் தெரியாமற் போய்விடும். அப்படிப்போல இவன் கூடிய சீக் கிரத்தில் அப்பியாசத்தினுலே ஆத்மஞானமடைவான். ஆகையாலிவன் முதல்வகுப்பில் சேர்ந்தவன்.

அழுக்கினுல் மூடப்பட்ட கண்ணுடியில் பார்ப்பவனுக்குத் தன் முகமானது பிரகாசமாயும், சுத்தமாயும் தெரியாவிட்டாலும் ஏகதேசம்

* (ரா) பிராணிகள் (ஶ்ரீ,வி) ஈசுவரன், ஜீவன், அந்தக்கரணம்.

தெரியும். ஆனால் முகம் பிரகாசமாய்த் தெரியவேண்டுமென்கிற எண்ணமட்டுமிருக்கிறது. அழுக்கை நீக்கிவிட்டால் கண்ணாடிபிரகாசிக்குமென்கிற ஞானமட்டுமில்லை. அப்படிப்போல ஆத்ம ஞானம் சம்பாதிக்கவேண்டுமென்கிற அபேக்ஷையிருக்கிறது, ஆனால் ஆசையை ஒழித்தாற்றான் ஆத்மஞான மடையலாமென்கிற நிச்சயத்தை யடையாமல் கலங்கி நிற்கிறான். இவன் இரண்டாவது வகுப்பிற்சேர்ந்தவன்.

கருப்பைக்குள்ளிருக்கும் சிசுவானது எப்படித் தானாக அந்தப் பையை விட்டு வெளிப்பட சக்தியற்றிருக்கிறதோ, அப்படிப்போல ஆத்மஞான மில்லாதவன் ஆத்மா இன்னதென்பதையே அறியாமலும் ஆசையாகிற வலையினால் கட்டப்பட்டு மிருப்பானாகையால் ஆசையை நிவர்த்திக்க சக்தியற்றவனாயிருக்கிற இவன் மூன்றாவது வகுப்பில் சேர்ந்தவன். இம்மூன்று வகுப்பாருக்கு முள்ள தாரதம்மியத்தை விளக்கும் பொருட்டு மூன்று திருஷ்டாந்தங்கள் சொல்லப்பட்டனவென்று காணுகிறது. (௩௮)

---

௩௯. 𑌆𑌵𑍃𑌤𑌂𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍇𑌤𑍇𑌨 𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑍋𑌨𑌿𑌤𑍍𑌯𑌵𑍈𑌰𑌿𑌣𑌾।
𑌕𑌾𑌮𑌰𑍂𑌪𑍇𑌣𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌦𑍁𑌷𑍍𑌪𑍂𑌰𑍇𑌣𑌾𑌨𑌲𑍇𑌨𑌚॥

| | |
|---|---|
| 𑌹𑍇 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 | ஓ! குந்திபுத்திரா! |
| 𑌦𑍁𑌷𑍍𑌪𑍂𑌰𑍇𑌣 | நிரம்பாததும் |
| 𑌅𑌨𑌲𑍇𑌨𑌚* | திருப்தியற்றதும் |
| 𑌕𑌾𑌮𑌰𑍂𑌪𑍇𑌣 † | ஆசாசுவரூபமானதும் |
| 𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑌃 𑌨𑌿𑌤𑍍𑌯𑌵𑍈𑌰𑌿𑌣𑌾 | ஞானிக்கு எப்போதும் சத்துருவாயிருக்கிறதுமான |
| 𑌏𑌤𑍇𑌨 | இந்த (காமம்) ஆசையினாலே |
| 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 | ஆத்மஞானமானது |
| 𑌆𑌵𑍃𑌤𑌂 | மூடப்பட்டிருக்கிறது. |

ஓ! அர்சுனா! நிரம்பாததும், திருப்தியற்றதும், ஆசாசுவரூபமானதும், ஞானிக் கெப்போதுஞ் சத்துருவா யிருக்கிறதுமான இந்த ஆசையினாலே ஞானம் மூடப்பட்டிருக்கிறது.

---

* (ஸ்ரீ. ரா) அக்கினியைப்போலொத்தது (என்றால், "இவ்வளவு விறகுபோடுகிறவனாயிற்றான் நான் அவைகளை எரிப்பேன், பின்னும் விறகுபோட்டால் நான் எரிக்கமாட்டேன்" என்று எப்படி அக்கினி திருப்தியடைகிறதில்லையோ, அப்படிப் போல திருப்தியடையாத தென்பது தாற்பரியம்.

† (ரா) 𑌕𑌾𑌮𑌰𑍂𑌪𑍇𑌣 = மோகத்தை யுண்டாக்குகிறது என்று அர்த்தம், (ஸ்ரீ,வி) காமமென்கிற பெயரையுடையது.

(ஸூ) காமமானது ஞானிக்கு எப்போதுஞ் சத்துருவென்பதினல் அக்ஞானிக்கு ஏதோவொரு காலத்தில் மட்டும் சத்துருவென்று நினைக்கக்கூடியதாக விருக்கிறது. அக்ஞானிக்கு ஒருகாலத்தில் சத்துருவாயிருக்கிற காமமானது ஞானிக்கு எப்போதும் சத்துருவாக விருப்பதெப்படியென்ருல், அக்ஞானி ஒரு காரியத்தைச் செய்யத் தொடங்குகையில் அதினலுண்டாகும் விரோதம் அல்லது விபரீதத்தைத் தெரியாமல் அந்தக்காரியத்தைச் செய்கிருன். அதினல் துன்பத்தை யடைந்தபின் இந்தக்காரியம் தனக்குச் சத்துருவென்று நினைக்கிருன். ஞானியோவென்ருல், பூர்வகருமவசத்தினல் தன்னிச்சை யன்றிலேயே ஒரு காரியத்தைச்செய்யப் பலவந்தமாய் இச்சைகொள்ளும்படி செய்யப்படுகிருன். அதெப்படி யென்ருல், ஜடபரதரென்று மறுபெயரை யடைந்த பரதர் என்பவர் மகாதபசியாய் பிரம்ம நிஷ்டையி லிருந்துவிட்டு நதியில் ஸ்நானத்திற்குப் போனபோது, பூரண கருப்பமாயிருந்த ஒரு மானனது, சிங்கநாத பயத்தினல் அதின் கருப்பத்திலிருந்து குட்டி நதிக்கரையில் விழுந்தவுடன் (அந்த தாய் மான்) நதியில் விழுந்து இறந்து போனதைப் பார்த்தார். “இந்தக்குட்டியை யார் காப்பாற்றுவார்? இவ்விடத்தில் ஒருவருமில்லையே! நாம் காப்பாற்ருமற் போனல் இந்தக்குட்டியு மிறக்கும்” என்கிற பரிதாப முண்டாயிற்று. அந்தக் குட்டியைத் தானிருக்குமிடத்திற்குக் கொண்டுவந்து வளர்க்கத் தொடங்கினர். அப்படிச் சிலகாலம் சம்ரக்ஷணை செய்து வருகையில் அவருக்கு மரணகாலம் சமீபித்தது. அந்தக் காலத்தில் இந்த மானை யார் இனி சம்ரக்ஷணை செய்யப்போகிருர்களென்று மனவருத்தத்துட னிறந்தார். மரணகாலத்தில் மானை ஸ்மரித்தபடியால் மானக அடுத்த ஜன்மமடைந்தார். (பாகவதம் ரு-வது ஸ்கந்தம், அ-வது அத்தியாயத்தைப் பார்க்க) இவருக்கு மான் குட்டியை முதலி லெடுக்கும் போதும், தன்னிருப்பிடத்திற்குக் கொண்டுவந்தபோதும், அதை சம்ரக்ஷிக்கும்போதும் இதினலுண்டாகும் துன்பமின்னதென்று தெரிந்திருந்தும், இது தன்னுடைய ஞான நிஷ்டைக்குச் சத்துருவென்று தெரிந்திருந்தும் பூர்வகரும சேஷமானது அவருடைய நிஷ்டையைக் கெடுத்தது. ஆகையால் ஞானிக்கு எப்போதும் சத்துருவென்று சொல்லப்பட்டது. (௩௯)

---

௪௦. 𑌇𑌂𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿𑌮𑌨𑍋𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑌸𑍍𑌯𑌾𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌨𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇।
𑌏𑌤𑍈𑌰𑍍𑌵𑌿𑌮𑍋𑌹𑌯𑌤𑍍𑌯𑍇𑌷 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌾𑌵𑍃𑌤𑍍𑌯𑌦𑍇𑌹𑌿𑌨𑌮𑍍॥

| | |
|---|---|
| 𑌇𑌂𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 | இந்திரியங்கள் |
| 𑌮𑌨𑌃 | மனசு |
| 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 | புத்தி |
| 𑌅𑌸𑍍𑌯 | இந்தக்காமத்திற்கு (ஆசைக்கு) |
| 𑌅𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌨𑌂 | இருப்பிடமாக |

| | |
|---|---|
| உச்யதே | சொல்லப்படுகிறது |
| ஏஷ: | இந்தக் காமமானது |
| ஏதை: | இந்திரியாதிகளினாலே |
| ஜ்ஞாநம் | ஆத்மஞானத்தை |
| ஆவ்ருத்ய | மறைத்து |
| தேஹிநம் | தேகத்தையுடையவனை (ஜீவனை) |
| விமோஹயதி | மயக்குகிறது. |

இந்திரியங்கள் மனசு, புத்தி, இவைகள் காமத்திற்கு இருப்பிடமாகச் சொல்லப்படுகின்றன; இந்தக் காமமானது இந்திரியம், மனசு, புத்தி இவைகளினாலே ஞானத்தை மறைத்து ஜீவனை மயக்குகிறது.

(ஸா) காமத்திற்கு இந்திரியங்கள், மனசு, புத்தி இவைகள் இருப்பிடமாகச் சொல்லப்பட்டன. ஏனென்றால், சப்தாதிவிஷயங்களை இந்திரியங்கள் கிரகித்து மனசில் சேர்ப்பிக்கின்றன. மனசு, தான் விஷயங்களை கிரகித்தவுடனே புத்தியினிடத்தில் சேர்ப்பிக்கிறது. புத்தி, ஆத்மாவிடத்தில் சேர்ப்பிக்கிறது. நிஷ்களங்கமான ஆத்மாவிடத்தில் விஷயங்களாகிற அழுக்குகளைச் (அதாவது காமத்தை) சேர்ப்பித்தவை, இந்திரியங்கள், மனசு, புத்தி, இவைகளானகையால் அவைகள் காமத்திற்கு இருப்பிடமாகச் சொல்லப்பட்டன. காமமாகிற அழுக்கை அடைந்த ஆத்மா, அசுத்தனாய் விட்டபடியால் தன்னுடைய நிஷ்களங்கமான ஆத்மஞானம் மறைபட்டு மயங்குகிறான். (ஸ்ரீ) இந்தத் தாத்பரியத்தைச் சுருக்கமாய் சொல்லியிருக்கிறார். (சo)

---

சக. தஸ்மாத்த்வமிந்த்ரியாண்யாதௌ நியம்ய பரதர்ஷப।
பாப்மாநம் ப்ரஜஹி ஹ்யேநம் ஜ்ஞாநவிஜ்ஞாநநாஶநம்॥

| | |
|---|---|
| ஹே பரதர்ஷப | ஓ! பரதவம்சசிரேஷ்டனே! |
| தஸ்மாத் | ஆகையினாலே |
| த்வம் | நீ |
| ஆதௌ* | முதலில் |
| இந்த்ரியாணி | இந்திரியங்களை |
| நியம்ய | அடக்கி |
| ஜ்ஞாநவிஜ்ஞாநநாஶநம்† | ஞானவிக்ஞானங்களைப்போக்கடிக்கிற |

* (ரா) மோக்ஷ உபாயாரம்ப சமயத்தில், (ஞானத்திற்குக் காரணமான கருமயோக ஆரம்பசமயத்தில்.)

† ஜ்ஞாநம். (ஸ) (ஸ்ரீ) சாஸ்திரங்களினாலும், ஆசாரியோப தேசத்தினாலும், அறிந்துகொள்ளுகிற ஆத்மஞானம், (ரா) ஆத்மசுவரூபஞானம், விஜ்ஞாநம் (ஸ) (ஸ்ரீ) சாஸ்திராசாரியோப தேசத்தினாலறிந்ததை அதின்படி அனுபவிப்பது (ரா) ஆத்மசுவரூப விவரஞானம்.

| | |
|---|---|
| പാപ്മാനം | பாபகாரணமான |
| ഏനം | இந்தக்காமத்தை (ஆசையை) |
| പ്രജഹി ഹി | விட்டுவிடு. |

ஓ! பரதசிரேஷ்டனே! (காம மிவ்வளவு அநர்த்தத்தை யுண்டாக்கு கிறது) ஆகையால் நீ முதலில் இந்திரியங்கள், மனசு, புத்தி, இவைகளை யடக்கி ஞான விக்ஞானங்களைப் போக்கடிக்கிற பாபசுவரூபமான இந்தக்காமத்தை விட்டுவிடு. (சக)

---

சஉ. ഇംദ്രിയാണി പരാണ്യാഹുഃ ഇംദ്രിയേഭ്യഃ പരം മനഃ।
മനസസ്തു പരാ ബുദ്ധിഃ യോ ബുദ്ധേഃ പരതസ്തു സഃ॥

| | |
|---|---|
| ഇംദ്രിയാണി | (தேகாதிகளைக்காட்டிலும்) இந்திரியங்கள் |
| പരാണി | சிரேஷ்டமானவை |
| ഇംദ്രിയേഭ്യഃ | இந்திரியங்களைக்காட்டிலும் |
| മനഃ | மனசு |
| പരം | சிரேஷ்டமானது |
| മനസഃ | மனதைக்காட்டிலும் |
| ബുദ്ധിഃ | புத்தியானது |
| പരാ | சிரேஷ்டமென்று |
| ആഹുഃ | சொல்லுகிறார்கள் |
| യഃ | எவன் |
| ബുദ്ധേഃ | புத்தியைக்காட்டிலும் |
| പരതഃ | சிரேஷ்டனாயும், சாக்ஷியாயுமிருக்கிறானோ |
| സഃ* | அவனே (சo - வது சுலோகத்தில் சொல்லியிருக்கிற ஆத்மா.) |

தேகாதிகளைக்காட்டிலும் இந்திரியங்களும், இந்திரியங்களைக்காட்டிலும் மனசும், மனசைக்காட்டிலும் புத்தியும் சிரேஷ்டமானதென்று சொல்லுகிறார்கள். எவன் புத்தியைக்காட்டிலும் சிரேஷ்டனாயும் சாக்ஷியாயு மிருக்கிறானோ அவனே ஜீவாத்மா.

(ஶம்) ஆத்மசுவரூபத்தை யாசிரயித்தால் (ஆத்மநிஷ்டையை யடைந்தால்) காமத்தை ஜயிக்கலாமென்பது இதினால் சொல்லப்படுகிறது.

(ரா) ஞானத்திற்கு முக்கியவிரோதி இந்திரியங்கள், அவைகளை விட அதிக விரோதி மனசு, அதைவிட அதிகவிரோதி புத்தி, அதைவிட மேலானவும் அதிகமானவும் விரோதி காமம், என்று தாத்பரியம்.

---

* (ஶம்) (ஶ்ரீ,வி) பரமாத்மா, (ரா) காமம், (ஸ்ரீ) புத்திக்கு சாக்ஷியாயும் ஸர்வாந்தரனும்மிருக்கிற தேகத்தையுடைய ஆத்மா.

(ஸ்ரீ,வி) இந்திரியங்கள் எதைக்காட்டிலும் பெரியவை என்ருல், "தேகத்தைக்காட்டிலும்" என்பதைச் சேர்த்துக்கொள்ள வேண்டும். இந்திரியங்களுக்கு அபிமானி தேவதைகளான சந்திரன், குபேரன், சூரியன், வருணன், அசுவினீ தேவதைகள், அக்கினி, இந்திரன், ஜயந்தன், யமன், தக்ஷன் இவர்களைக்காட்டிலும் விஷயாபிமானி தேவதைகளான ஸௌபர்ணீ, வாருணீ, பார்வதி இவர்கள் சிரேஷ்டமானவர்கள். இவர்களைக்காட்டிலும் மனேபிமானி தேவதைகளான கருடன், சேஷன், ருத்திரன், இவர்கள் சிரேஷ்டமானவர்கள். இவர்களைக்காட்டிலும் புத்தி அபிமானி தேவதையான சரஸ்வதி சிரேஷ்டமானவள். இவளைக்காட்டிலும் மகத்தத்துவாபிமானியாகிய பிரம்மா சிரேஷ்டர். அந்தப் பிரம்மாவைக் காட்டிலும் பிரகிருதி அபிமானி தேவதையான இலக்ஷ்மி சிரேஷ்டமானவள். இலக்ஷ்மியைக்காட்டிலும் சகலகுண பரிபூர்ணரான விஷ்ணு சிரேஷ்டமானவர். இவருக்குப் பெரியவர் ஒருவருமில்லை, அவர்தான் அடையத்தகுந்தவர். (ஷா) இந்த வியாக்கியானத்திற் காதாரமாய் கடோபநிஷத் வாக்கியத்தையும், அதின் பாஷியத்தையும் குறிப்பிடுகிருர், கடோபநிஷத், ௩-வது வல்லி ௧௦-௧௧-வாக்கியங்கள், இந்த்ரியேப்ய: பரா ஹ்யர்தா அர்தேப்யஶ்ச பரம் மந: । மநஸஸ்து பரா புத்திர் புத்தேராத்மா மஹாந் பர: ॥ மஹத: பரமவ்யக்தமவ்யக்தாத் புருஷ: பர: । புருஷாந்ந பரம் கிஞ்சித் ஸா காஷ்டா ஸா பரா கதி: ॥ (௪௨)

---

௪௩. ஏவம் புத்தே: பரம் புத்த்வா ஸம்ஸ்தப்யாத்மாநமாத்மநா ।
ஜஹி ஶத்ரும் மஹாபாஹோ காமரூபம் துராஸதம் ॥

| | |
|---|---|
| மஹாபாஹோ | ஓ! பெரிதான கைகளையுடையவனே! |
| ஏவம் | இவ்விதமாய் |
| புத்தே: பரம்* | புத்தியைக்காட்டிலும் சிரேஷ்டமான |
| (ஆத்மாநம்) | ஆத்மாவை |
| புத்த்வா | அறிந்து |
| ஆத்மநா | நிச்சயபுத்தியினலே |
| ஆத்மாநம் | மனசை |
| ஸம்ஸ்தப்ய | நிறுத்தி |

---

* (ஶா) புத்தியைக்காட்டிலும் முக்கியமானதாகிய காமத்தை. (ம) புத்தியைவிட சிரேஷ்டமான பரமாத்மாவை.

| | |
|---|---|
| துராஸதம் | தடுக்கக்கூடாத |
| காமரூபம் ஶத்ரும் | காமரூபமானசத்துருவை |
| ஜஹி | நிவர்த்தி. |

ஓ! அர்சுந! இவ்விதமாய்ப் புத்தியைக்காட்டிலும் சிரேஷ்டமான ஆத்மாவை யறிந்து நிச்சயபுத்தியினலே மனசைநிறுத்தித் தடுக்கக் கூடாத காமரூபமான சத்துருவை நிவர்த்தி. (கொல்லு என்று தாத்பரியம்.)

(ஸ்ரீ) விஷயேந்திரியங்களினு லுண்டாகிற காமாதி விகாரங்கள், புத்திவரையிலுள்ள தத்துவங்களைச் சேர்ந்தன. ஆத்மாவுக்குச் சேர்ந்தனவல்லவென்பது தாத்பரியம். (௪௩)

இதி ஶ்ரீமத்பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம்

யோகஶாஸ்த்ரே ஶ்ரீக்ருஷ்ணார்ஜுநஸம்வாதே

கர்மயோகோ நாம

த்ருதீயோऽத்யாய꞉.

ஶ்ரீக்ருஷ்ணாய பரப்ரஹ்மணே நம꞉.

கருமயோகமென்கிற மூன்றாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

ஸ்ரீ:

அத சதுர்த்தோத்யாயப்ராரம்ப:.

# நான்காவது அத்தியாயம்.

ஸ்ரீபகவாநுவாச.

க. இமம் விவஸ்வதே யோகம் ப்ரோக்தவாநஹமவ்யயம்।
விவஸ்வாந்மநவே ப்ராஹ மநுரிக்ஷ்வாகவேऽப்ரவீத்॥

| | |
|---|---|
| ஸ்ரீபகவாநுவாச | பகவான் சொல்வது |
| அவ்யயம் | நாசமற்ற பலனைக்கொடுக்கிறதற்கு ஹேதுவா[ன |
| இமம் யோகம்* | இந்த யோகத்தை |
| அஹம் | நான் |
| (புரா) | ஆதிகாலத்தில் |
| விவஸ்வதே | சூரியனுக்கு |
| ப்ரோக்தவாந் | சொன்னேன் |
| விவஸ்வாந் | சூரியன் |
| மநவே | (தன்குமாரனை வைவசுவத) மநுவுக்கு |
| ப்ராஹ | சொன்னார் |
| மநு: | மநுவானவர் |
| இக்ஷ்வாகவே | (தன் குமாரனை) இக்ஷ்வாகுவுக்கு |
| அப்ரவீத் | சொன்னார். |

பகவானை கிருஷ்ணசுவாமியானவர் அர்சுனனை நோக்கிப் பின்னும் சொல்வது.— நாசமற்ற பலனைக் கொடுக்கிறதற்கு ஹேதுவான இந்த (ஞானகரும) யோகத்தை நான் ஆதிகாலத்தில் சூரியனுக்குச் சொன்னேன். சூரியன் மநுவுக்கும், மநு இக்ஷ்வாகுவுக்கும் சொன்னார்கள்.

(ரா) நீ யுத்தஞ்செய்ய வேண்டியதின் பொருட்டு இந்தக்கரும யோகத்தை உனக்குச்சொன்னதாக நினைக்கவேண்டாம். மநுவந்தர ஆதியிலேயே நான் சூரியனுக்குச் சொல்லியிருக்கிறேன். (க)

உ. ஏவம் பரம்பராப்ராப்தமிமம் ராஜர்ஷயோ விது:।
ஸ காலேநேஹ மஹதா யோகோ நஷ்ட: பரந்தப॥

* (தே) (ஶ்ரீ,வி) இந்தக்கருமயோகத்தை.

| | |
|---|---|
| பரந்தப | ஓ! சத்துருவைத் தபிக்கச்செய்கிறவனே! |
| ஏவம் | இவ்விதமாய் |
| பரம்பராப்ராப்தம் | பரம்பரையாய்வந்த |
| இமம் | இந்தயோகத்தை |
| ராஜர்ஷய:* | இராஜரிஷிகள் |
| விது: (ஹு) | அறிந்திருந்தார்கள் |
| மஹதா காலேந | வெகுகாலமாய்விட்டதினலே |
| ஸ: யோக: | அந்தயோகமானது |
| இஹ | இந்தலோகத்தில் |
| நஷ்ட:† | நஷ்டமாய்விட்டது. |

ஓ! பரந்தப! இவ்விதமாய்ப் பரம்பரையாய் (சொல்லப்பட்டு) வந்த இந்தயோகத்தை இராஜரிஷிகளறிந்திருந்தார்கள். வெகுகாலமாய் விட்டதினலே அந்த யோகமானது நஷ்டமாய்விட்டது.

(ஶம்) (ஸ்ரீ) (ரா) ஏன் நஷ்டமாய்விட்டதென்ருல், காலம் செல்லச்செல்ல உபதேசிக்கிறவர்களும், அந்த உபதேசத்தைக்கேட்டு அறிந்துகொள்ளுகிற புத்தியுள்ளவர்களும், விசேஷமா யில்லாமற் போய் விட்டதினற் ருன். (௨)

---

௩. ஸ ஏவாயம் மயா தேத்ய யோக: ப்ரோக்த: புராதந:।
஭க்தோஸி மே ஸகா சேதி ரஹஸ்யம் ஹ்யேததுத்தமம்॥

| | |
|---|---|
| மே | என்னுடைய |
| பக்த: | பக்தனுகவும் |
| ஸகா | தோழனுகவும் |
| அஸி இதி | இருக்கிரு யாகையினலே |
| புராதந: | பழமையான |
| ஸ: ஏவ அயம் யோக: | அதேயோகமானது |
| மயா | என்னலே |
| அத்ய | இப்போது |
| தே | உனக்கு |
| ப்ரோக்த: | சொல்லப்பட்டது |
| ஏதத் | இதானது |
| ரஹஸ்யம் | இரகசியமும் |
| உத்தமம் ஹி | சிரேஷ்டமுமானது. |

---

* (ஸ்ரீ,வி) இராஜாக்களும, ரிஷிகளும், அல்லது இராஜரிஷிகள்.

† (ரா) நஷ்டமானதுபோ லாயிற்று.

நீ என்னுடைய பக்தனும், தோழனுமிருக்கிற யாகையினாலே, பழமையான அதே (சூரியனுக்குச்சொன்ன) யோகமானது என்னாலே இப்போதுனக்குச் சொல்லப்பட்டது. இதானது இரகசியமும் சிரேஷ்டமுமானது. (௩)

---

அர்ஜுந உவாச.

௪. அபரம்பவதோஜந்ம பரம்ஜந்மவிவஸ்வத꞉।
கதமேதத்விஜாநீயாம் த்வமாதௌப்ரோக்தவாநிதி॥

| | |
|---|---|
| அர்ஜுந உவாச | அர்சுனன் சொல்வது |
| பவத꞉ | உம்முடைய |
| ஜந்ம | பிறவியானது |
| அபரம்* | இப்போதுண்டானது |
| விவஸ்வத꞉ | சூரியனுடைய |
| ஜந்ம | பிறவியானது |
| பரம் | முந்தியது |
| த்வம் | நீர் |
| ஆதௌ | ஆதிகாலத்தில் |
| ப்ரோக்தவாநு இதி ஏதத் | சொன்னீரென்பதை |
| கதம் | எப்படி |
| விஜாநீயாம் | அறிவேன். |

அர்சுனன் கிருஷ்ணசுவாமியை நோக்கிச்சொல்வது—உம்முடைய பிறவியானது இப்பால் (நான்பிறந்தகாலத்தில்) உண்டானது. சூரியனுடைய பிறவியானது முந்தியது. நீர் ஆதிகாலத்தில் (சூரியனுக்கு) சொன்னீரென்பதை யெப்படி யறியக்கூடும்? (நம்பக்கூடும்.)

(ஸம்) அர்சுனன் கிருஷ்ணசுவாமியை பரப்பிரம்மமென் றறிந்திருந்தபோதிலும் இவர் பிரம்மமென்பதைத் தெரியச்செய்யும் பொருட்டு இந்தக் கேழ்விகேட்டதாக தாத்பரியம்.

(ரா) இருபத்தெட்டு சதுர்யுகத்திற்கு முந்திப்பிறந்த சூரியனுக்கு இப்போது சொற்பகாலத்திற்கு முந்திப்பிறந்த நீர் எப்படிச் சொல்லியிருக்கக்கூடு மென்பது கருத்து. (௪)

---

ஸ்ரீ பகவாநுவாச.

௫. பஹூநிமேவ்யதீதாநி ஜந்மாநிதவசார்ஜுந।
தாந்யஹம்வேதஸர்வாணி நத்வம்வேத்தபரந்தப॥

---

* (ரா) அவரம் — என்று பாடம், அர்த்தமொன்றே.

| | |
|---|---|
| ஸ்ரீ ஸமவா_நுவாச | கிருஷ்ணசுவாமிசொல்வது. |
| ஹெ ஊஜு-ந | ஓ! அர்சுந! |
| மெ | என்னுடையவும் |
| தவ | உன்னுடையவும் |
| வஹுநி | அநேகங்களான |
| ஜந்மாநி* | ஜன்மங்கள் |
| வ்யதீதாநி | சென்றுபோயின |
| தாநிஸவாணி | அவை யெல்லாவற்றையும் |
| அஹம் | நான் |
| வெட | அறிவேன் |
| ஹெ வரந்தப | சத்துருக்களைத் தபிக்கச்செய்பவனே! |
| த்வம் | நீ |
| நவெத்ம | அறியமாட்டாய். |

கிருஷ்ணசுவாமி அர்சுனனைநோக்கிச் சொல்வது — என்னுடையவும், உன்னுடையவு மநேகங்களான ஜன்மங்கள் சென்றுபோயின. அவையெல்லாவற்றையும் நானறிவேன். நீ யறியமாட்டாய்.

(ஶம்) அஹம்வெட — நித்திய, சுத்த, புத்த, முத்த, சுபாவமுடையவனுனதாலும், என்னுடைய ஞானமானது எப்பவும், எதினுலேயும், மறைக்கப்படத்தக்கதல்ல வாகையாலும், நான் அறிவேன், என்பது தாத்பரியம்.

(ரா) உனக்கும், எனக்கும், அநேக ஜன்மங்களாயின வென்று சொன்னதினுலே இந்த ஜன்மங்களெல்லாம் வாஸ்தவமென்று சொன்னதாகிறது.

(மீ,வி) சுவாமியானவர் தன்னுடைய ஜன்மத்தைக்குறித்துமட்டும் பதில் சொல்லவேண்டியதாயிருக்க, அர்சுனனுடைய ஜன்மத்தையும் சொல்லி “நான் அறிவேன், நீ அறியமாட்டா” யென்று சொன்னதின் உத்தேசமென்னவென்ருல், நான் பரப்பிரம்மம், நீ ஜீவன், பரப்பிரம்மம் சகலத்தையும் அறியும், ஜீவன் சகலத்தையுமறியமாட்டான், ஆகையால் ஜீவன் வேறே, பரப்பிரம்மம் வேறேயென்கிற பேதத்தைக் காட்டும் பொருட்டு பகவானுனவர் அர்சுனனையும் சேர்த்து உத்தரஞ்சொன்னதாக தாத்பரியம். (ரு)

---

சா. அஜொவிஸந்நவ்யயாத்மா ஹூதாநாமீஶ்வரொவிஸந்|
ப்ரக்ருதிம்ஸ்வாமயிஷ்டாய ஸம்ஸவாம்யாத்மாயயா||

---

* (ஸ்வா) கிருஷ்ணசுவாமி விஷயத்தில் ஜன்மங்களென்பவை அவதாரங்கள்.

| | |
|---|---|
| அஜோபிஸந் | பிறப்பற்றவனுனலும் |
| அவ்யயாத்மா (அபிஸந்) | நாசமற்றசுபாவமுடையவனுனலும் |
| பூதாநாம் | பிராணிகளுக்கு |
| ஈச்வரோபிஸந் | ஈசுவரனுயிருந்தாலும் |
| ஸ்வாம் | சொந்தமான |
| ப்ரக்ருதிம் | சத்துவாம்சமாயையை |
| அதிஷ்டாய | சுவீகரித்து |
| ஆத்மமாயயா | சுவரூபசக்தியினுலே |
| ஸம்பவாமி | அவதாரஞ்செய்கிறேன். |

(நான்) பிறப்பற்றவனுனலும், நாசமற்ற சுபாவமுள்ளவனுனலும், பிராணிகளுக் கீசனுயிருந்தாலும், சொந்தமான சத்துவாம்சமாயையை சுவீகரித்து, சுவரூபசக்தியினுலே அவதாரஞ்செய்கிறேன்.

(ஶம) ஆத்மமாயயா = என்னுடைய அதீனமாயும், முக்குணங்களோடு கூடியுமிருக்கிற மாயையினுலே, ஸம்பவாமி (ஜவ) பிறந்தவனைப் போல (காணப்படுகிறேன்.)

(ரா) ஸ்வாம்ப்ரக்ருதிமதிஷ்டாய = என்னுடைய சுவகீயமான சுவபாவத்தோடுகூடி, ஆத்மமாயயா = என்னுடைய ஆத்மஞானமாகிற சங்கல்பத்தினுலே, ஸம்பவாமி = தேவமனுஷியாதி ரூபங்களாய் * அப்பிராகிருத சரீரத்துடன் அவதரிக்கிறேன்.

(ம) (ஶ்ரீ,வி) அவ்யயாத்மா = நாசமற்ற சுவபாவத்தையுந் தேகத்தையுமுடையவனுனலும், ஸ்வாம் = சொந்தமான, என்றால், என்னுலுண்டாக்கப்பட்ட, ப்ரக்ருதிம் = வாஸுதேவாதி தேகங்களை, அதிஷ்டாய = பிரவேசித்து, ஆத்மமாயயா = சுவேச்சையினுலே அல்லது, சுவஞானத்தினுலே, ஸம்பவாமி = உண்டானவனைப்போல காணுகிறேன். (சு)

---

எ. யதாயதாஹிதர்மஸ்ய க்லாநிர்பவதிபாரத।
அப்யுத்தாநமதர்மஸ்ய ததாத்மாநம்ஸ்ருஜாம்யஹம்॥

| | |
|---|---|
| ஹே பாரத | ஓ! பரதவம்சத்திற்பிறந்தவனே! |
| யதாயதாஹி | எந்தெந்தக்காலங்களில் |
| தர்மஸ்ய † | தருமத்திற்கு |

---

* (ஸ்வா) அப்பிராகிருத மென்றால், உலகத்தில் காணப்படுகிறதைப்போலல்லாத உலகவிலக்ஷணமானது.

† (ரா) என்னையே ஆசிரயித்துக்கொண்டும், என்தரிசனத்தை யெதிர்பார்த்துக்கொண்டும், தன்னுடைய தேகசம்ரக்ஷணையி லாசையைவிட்டும், என்னைப்பாராத க்ஷணகாலத்தை அனேக கல்பங்களாக வெண்ணியும், தேகேந்திரியங்களை யடக்கியு மிருக்கிற வைஷ்ணவ சிரேஷ்டாளுக்கு.

| | |
|---|---|
| க்லாநி: | குறைவும் |
| அதர்மஸ்ய | அதருமத்திற்கு |
| அப்யுத்தாநம் | அபிவிருத்தியும் |
| பவதி | உண்டாகிறதோ |
| ததா | அப்போது |
| ஆத்மாநம் | என்னை |
| அஹம் | நான் |
| ஸ்ருஜாமி | சிருஷ்டித்துக்கொள்ளுகிறேன். |

ஓ! அர்சுன! எந்தெந்தக்காலங்களில் (வருணாசிரம) தருமத்திற்குக் கெடுதியும், அதருமத்திற்கு அபிவிருத்தியு முண்டாகிறதோ, அப்பொழுது, என்னை நான் சிருஷ்டித்துக் கொள்ளுகிறேன். (அதாவது, நான் ஒரு ரூபத்துடன் வெளிப்படுகிறேன், அல்லது அவதாரஞ் செய்கிறேன்.) (எ)

---

அ. பரித்ராணாய ஸாதூநாம் விநாஶாய ச துஷ்க்ருதாம்।
தர்மஸம்ஸ்தாபநார்தாய ஸம்பவாமி யுகே யுகே॥

| | |
|---|---|
| ஸாதூநாம் | சாதுக்களுடைய |
| பரித்ராணாய* | இரக்ஷணைக்காகவும் |
| துஷ்க்ருதாம்† | துஷ்டர்களுடைய |
| விநாஶாய ச | நாசத்திற்காகவும் |
| தர்மஸம்ஸ்தாபநார்தாய‡ | தருமத்தை நிலைநிறுத்தும் பொருட்டும் |
| யுகே யுகே§ | அந்தந்தயுகத்தில் |
| ஸம்பவாமி | அவதாரஞ்செய்கிறேன். |

---

* (ரா) என்னுடைய சுவரூபதரிசனம், லீலாவிசேஷங்கள், இவைகளைக் காண்பிப்பதினாலேயும் என்னுடைய சம்பாஷணையை அவர்களடையும்படி செய்வதினாலேயும் சம்ரக்ஷிக்கிறதற்காகவும்.

† (ரா) மேற்சொன்ன சாதுக்களல்லாதவர்களுடைய.

‡ (ரா) வேதோக்தமாயும் என்னுடைய ஆராதனரூபமாயுமுள்ள தருமத்தைக் காப்பதின் பொருட்டும்.

§ (ஸ்ரீ) அந்தந்தக்காலத்தில்.

சாதுக்களுடைய ரக்ஷணைக்காகவும், துஷ்டர்களுடைய நாசத்திற்காக (என்றால், அவர்களை சிக்ஷித்து நல்ல மார்க்கத்தில் கொண்டுவருகிறதற்காக) வும், தருமத்தை நிலைநிறுத்தும்பொருட்டு மந்தந்த யுகத்தில் அவதாரஞ் செய்கிறேன். (௮)

---

௯. ஜந்ம கர்ம ச மே திவ்யமேவம் யோ வேத்தி தத்த்வத:।
த்யக்த்வா தேஹம் புநர்ஜந்ம நைதி மாமேதி ஸோऽர்ஜுந॥

| | |
|---|---|
| ஹே அர்ஜுந | ஓ! அர்சுனை! |
| திவ்யம்* | திவ்வியமான |
| மே | என்னுடைய |
| ஜந்ம | அவதாரத்தையும் |
| கர்ம ச | செய்கையையும் |
| ய: | எவன் |
| ஏவம் தத்த்வத: | இவ்வித (மேற்சொன்னவித) மாய் உண்மையாக |
| வேத்தி | அறிகிறானோ |
| ஸ: | அவன் |
| தேஹம்† | தேகத்தை |
| த்யக்த்வா | விட்டு |
| புந: | மறுபடியும் |
| ஜந்ம‡ | பிறப்பை |
| ந ஏதி | அடைகிறதில்லை |
| மாம் | என்னை |
| ஏதி | அடைகிறான். |

ஓ! அர்சுனை! திவ்வியமான என்னுடைய அவதாரத்தையும், செய்கையையு மெவன் இவ்விதமாய் உண்மையாக வறிகிறானோ, அவன் தேகத்தை விட்டு மறுபடியும் பிறப்பை யடைகிறதில்லை. என்னை யடைகிறான்.

(ரா) மே — முக்குணங்களோடு கூடிய பிரகிருதி சம்பந்தமான ஜநநமற்றவனும், சர்வேசுவரத்துவ, சர்வக்ஞத்துவ, சத்திய ஸங்கல்

---

* (ஶா) அப்பிராகிருதம், ஐசுவரம், (ஸ்ரீ) தெய்வசம்பந்தமான. (ரா) அப்பிராகிருதமான (பிரகிருதி சம்பந்தமில்லாத.)

† (ஸ்ரீ) தேகாபிமானத்தை.

‡ (ஸ்ரீ) சமுசாரத்தை.

பத்துவாதி அநந்த கல்யாண குணங்களுடன் கூடினவனுயுமிருக்கிற என்னுடைய - ஜந்ம=அவதாரத்தையும், கர்ம = சாதுக்களுடைய சம்ரக்ஷணார்த்த மாகவும் என்னை யாசிரயித்து ஜனங்கள் கடைத்தேறட்டு மென்றும் நான்செய்த அவதார சரித்திரத்தையும், திவ்யம் = அப்பிராகிருதமென்பதாக உண்மையாய் எவனறிகிருனே.

(தா) (மீ,வி) என்னுடைய அவதாரமகிமை, சரித்திரமகிமை இவைகளின் தத்துவத்தை யறிந்து, அதினுல் முக்தியடையத் தகுந்த ஜீவனெவனே அப்படிப்பட்டஜீவன் முக்தியடையும் விஷயத்தை நிரூபித்துக்காட்ட இந்த சுலோக முண்டானதாக அறியத்தக்கது.

(ஷா) இந்த சுலோகத்தில் ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய ஜந்ம=அவதாரம், கர்ம = செய்கை, இவைகளை யறிந்தவனுக்கு மறுபிறப்பில்லையென்று சொல்லியிருக்கிறது. இராமகிருஷ்ணுதி அவதாரங்களையும் இராவண சிசு பாலாதிவதம் முதலிய செய்கைகளையும் சாதாரண ஜனங்கள்கூட அறிவார்களே? அவர்களுக்கெல்லாம் மறுபிறப்பில்லையோ? என்ருல்—

இதில்சொன்ன அறிவு மேல்கண்ட சாமான்னியமான அறிவல்ல. ஏனெனில் “ தத்வத: = உண்மையாய்” என்கிற பதம் இந்த சுலோகத்தில் உபயோகிக்கப்பட் டிருக்கிறது. அதினுல் அவதாரபுருஷன் யார்? அவன்செய்கை எப்படிப்பட்டது? என்பவைகளை யறியவேண்டியதவசியமாகிறது. முந்திய சுலோகங்களினுல், உலகத்தில் தருமம் குறைந்து அதருமம் தலையெடுக்கும் காலத்திலும் துஷ்டர்கள் அதிகரித்து சத்துக்களுக்குத் துன்பமுண்டாக்கும் காலத்திலும் அவதாரங்கள் செய்யப்படுகிறதாக சொல்லப்படுகிறது. எந்த உத்தேசமாய் அவதாரம் செய்யப்படுகிறதோ அந்த அவதாரத்தில் அந்தக்காரியம் தடையன்றி நிறைவேற்றவும் படுகிறது. இவைகளை சாமான்னியமான தேவதையாவது மனுஷியனுவது செய்யத்தகுமோ? ஆகையால் சாக்ஷாத் பரமேசுவரனே லோகத்தை ரக்ஷிக்கும்பொருட்டு அவதாரம் செய்து துஷ்டர்களையடக்கி சத்துக்களை ரக்ஷிக்கிருனென்றும் அவர் அநந்தகல்யாணகுணகெணநிதியென்றும் சகல உலகத்தையும் படைத்துக்காத்து அதில்தான் லீலாவதாரம் செய்கிருனென்றும் அவனை ஸ்மரித்தவன்பாபம் நாசமடையுமென்றும் உண்மையாயறிந்து (அடுத்த சுலோகப்படி) உலகப்பற்றுக்களை நீக்கி மனதை யந்தப் பரமேசுவரனிடத்தில் நிறுத்துகிறவன் மறு

பிறப்பற்றதாகிய வைகுண்ட பதவியை யடைவானென்பதிற் சந்தேகமே யில்லை. அப்படியன்றி இராமகிருஷ்ணுதி யவதாரங்கள் செய்கிற புருஷனை சாதாரண இராஜகுமாரர்களென்றும் ஆனால் விசேஷபலமும் சாமர்த்தியமும் அதிகமா யிருக்கிறதென்றும் நினைத்து உண்மையை யறியாமல் போவார்களாகில் அவர்கள் பிறவியாகிய கடலிலிருந்து கரையேற மாட்டார்களென்பது இந்த சுலோகத்தின் கருத்து. (க)

---

கo. வீதராகபயக்ரோதா மந்மயா மாமுபாஸ்ரிதா:।
பஹவோ ஜ்ஞாநதபஸா பூதா மத்பாவமாகதா:॥

| | |
|---|---|
| வீதராகபயக்ரோதா: | ஆசை, பயம், கோப மிவைகளற்ற |
| மந்மயா:* | மனசையென்னிடத்தில் வைத்திருக்கிற |
| மாம் | என்னையே |
| உபாஸ்ரிதா:† | உபாசித்துக்கொண்டிருக்கிற |
| பஹவ: | அநேகர் |
| ஜ்ஞாநதபஸா ‡ | ஞானமாகிறதபசினாலே |
| பூதா: | பரிசுத்தர்களாய் |
| மத்பாவம்§ | என்னுடைய ஸாயுச்சியத்தை |
| ஆகதா: | அடைந்தார்கள். |

ஆசை, பயம், கோப மிவைகளற்றும், மனசை யென்னிடத்தில வைத்து மென்னையே யுபாசித்தும், அநேகர் ஞானமாகிற தபசினாலே பரிசுத்தர்களாய் என்னுடைய ஸாயுச்சியத்தை யடைந்தார்கள். (என்றால், ஐக்கிய முக்தியை யடைந்தார்களென்று தாத்பரியம்.)

(ஸா) மத்பாவம்; இதற்கு (ரா) அர்த்தஞ் சொல்லவில்லை. ஆனால் அ-அத். ரு-சு. இந்தப் பதத்திற்கு, "என்னை எந்த ஆகாரமாய் ஸ்ம

---

* (ஶம்) தானே ஈசுவரனென்று அறிந்தவர்களா யிருக்கிற. (ர) என்னைத் தவிர மற்ற வஸ்துக்களில் திருஷ்டியில்லாத. (ஸ்ரீ,வி) நானே சர்வோத்தம னென்றும், சகல ஜகத்திற்கும் முக்கிய காரணனென்று மறிந்திருக்கிற.

† (ஶம்) ஞானநிஷ்டையினாலறிகிற (ஸ்ரீ,வி) என்னையே சரணுகதியடைந்திருக்கிற.

‡ (ஸ்ரீ) ஞானத்தினாலும், தபசினாலும், (ரா) என்னுடைய ஜன்ம கருமத்தினுடைய தத்துவத்தை யறிகிற ஞானமாகிய தபசினாலே, (ஸ்ரீ,வி) ஞானமாகிற தபசினாலே அல்லது, ஞானத்தினாலேயும் தபசினாலேயும்.

§ (ஶம்) மோக்ஷத்தை, (ஸ்ரீ,வி) ஸாயுச்சியத்தை, (ஸ்ரீநாராயணனுடைய சமீபத்தி லிருப்பதானது, ஸாயுச்சியமென்று சொல்லப்படும்.)

ரிக்கிருனே அந்த சுவரூபம்" என்றும், ௧௪ - அத். ௧௯ - ௨௦ - ௪. "ஆத்மாநுபவத்தை" என்றும் அர்த்தஞ் செய்திருக்கிறதினுல் அதிலொன்றை இவ்விடத்தில் சொன்னதாகக் கொள்ளத்தக்கது. (௧௦)

---

௧௧. 𑌯𑍇 𑌯𑌥𑌾 𑌮𑌾𑌂 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌤𑌾𑌂𑌸𑍍𑌤𑌥𑍈𑌵 𑌭𑌜𑌾𑌮𑍍𑌯𑌹𑌮𑍍।
𑌮𑌮 𑌵𑌰𑍍𑌤𑍍𑌮𑌾𑌨𑍁𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌃 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌸𑌰𑍍𑌵𑌶𑌃॥

| | |
|---|---|
| 𑌹𑍇 𑌪𑌾𑌰𑍍𑌥 | ஓ! அர்சுன! |
| 𑌯𑍇 | எவர்கள் |
| 𑌯𑌥𑌾* | எவ்விதமாய் |
| 𑌮𑌾𑌂 | என்னை |
| 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 | உபாசிக்கிருர்களோ |
| 𑌤𑌾𑌨𑍍 | அவர்களை |
| 𑌤𑌥𑍈𑌵 | அவ்விதமாகவே |
| 𑌅𑌹𑌂 | நான் |
| 𑌭𑌜𑌾𑌮𑌿† | அநுக்கிரகிக்கிறேன் |
| 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌃 | மனிதர்கள் |
| 𑌮𑌮 | என்னுடைய |
| 𑌵𑌰𑍍𑌤𑍍𑌮‡ | மார்க்கத்தை |
| 𑌸𑌰𑍍𑌵𑌶𑌃§ | சகலவிதத்திலுலேயும் |
| 𑌅𑌨𑍁𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 | அநுசரிக்கிருர்கள். |

ஓ! அர்சுன! எவர்க ளெவ்விதமா யென்னை யுபாசிக்கிருர்களோ அவர்களை யவ்விதமாகவே நான் அநுக்கிரகிக்கிறேன். மனிதர்கள், என்னுடைய மார்க்கத்தை சகலவிதத்திலுலேயும் அநுசரிக்கிருர்கள்.

---

* (𑌶𑌂) பலனைக்கோரியாவது, பலனைக்கோராமலாவது.

† (𑌸𑍍𑌵𑌾) இந்தப்பதத்திற்கு பஜிக்கிறேன், உபாசிக்கிறேன், என்னு மர்த்தந்தான் சாதாரணமாய்ச் சொல்லக்கூடுமாலுைம் இது பரமாத்மாவாகிய கிருஷ்ண சுவாமி வாக்கியமாகையால் பாஷியக்காரர்கள் அநுக்கிரகிக்கிறேனென்று அர்த்தஞ் செய்தார்கள்.

‡ (𑌶𑌂) பூஜாரூபமான மார்க்கத்தை (ஸ்ரீ) பஜனைமார்க்கத்தை, (ரா) சுவபாவத்தை.

§ (𑌸𑍍𑌵𑌾) சத்கருமத்திலுலாவது, ஞானத்திலுலாவது, கீர்த்தனுதிகளினுலாவது, மற்றெப்படியாவது.

(ஸ்ரீ) என்னையே யுபாசிப்பவர்களுக்கு ஸாயுச்சியபதவியைக் கொடுப்பதாக முந்திச் சொல்லப்பட்டதினால், மற்ற இந்திராதி தேவதைகளை யுபாசிப்பவர்களுக்குப் பலனைக்கொடுப்பதில்லை யென்றாகிறது. இதினால் ஈசுவரனிடத்தில் பக்ஷபாத மிருப்பதாக காணப்படுகிறதே யென்றாலோ, அப்படி பக்ஷபாதமில்லையென்பதை யிந்த சுலோகத்தினாற் பகவான் வெளிப்படுத்துகிறார். எப்படியென்றால், ''யதா = எவ்விதமாய்'' என்கிறபதத்தினாலே, பலனை இச்சித்தாவது, இச்சிக்காமலாவது, என்னை நேராயாவது, இந்திராதி தேவதாசுவரூபமான என்னை அந்த தேவதைகளாகவாவது உபாசிக்கிறார்களோ, அவர்களுக்கு அவரவர்கள் கோரிக்கையை யநுசரித்து நானே பலனைக்கொடுக்கிறேன் என்றாகிறது.

(ஸா) மேற்கண்ட அர்த்தத்தை (ம) ஆதரிக்கிறார். ஆனால் தேவதைகளைப்பற்றி மேற்சொல்லப்பட்டிருக்கிற பாகங்களைக் குறிக்கவில்லை. (த) யக்ஞத்தினா லாராதிக்கிற இந்திராதி தேவதாநாமங்கள் என்னுடைய நாமங்களே யாகையால் அந்த நாமங்களினாலாராதிக்கப் படுகிறவனும் நானே ஆகிறேன். என்பதுதவிர மற்ற விஷயத்தில்மேற் சொல்லப்பட்டிருக்கிற தாத்பரியந்தான். (ரா) என்னை ஆசிரயிக்கிறவனைமட்டும் அநுக்கிரகிக்கிறேனென்பதல்ல, என்னை ஆசிரயிக்க மனமுள்ளவனாய் எவ்விதப்பலனைக் கோரியாவது உபாசிப்பவனையுங்கூட அநுக்கிரகித்து தரிசனமும் கொடுக்கிறே னென்பது தாத்பரியமென்கிறார். (கக)

---

கஉ. காංக்ஷந்த꞉ கர்மணாං ஸித்திං யஜந்த இஹ தேவதா꞉।
க்ஷிப்ரං ஹி மாநுஷே லோகே ஸித்திர்ப⁴வதி கர்மஜா॥

| | |
|---|---|
| இஹ | இந்தலோகத்தில் |
| கர்மணாං | கருமங்களுடைய |
| ஸித்திං | பலனை |
| காංக்ஷந்த꞉ | அபேக்ஷிக்கிறவர்கள் |
| தேவதா꞉ | இந்திராதிதேவதைகளை |
| யஜந்தே | ஆராதிக்கிறார்கள் |
| ஹி | ஏனென்றால் |
| மாநுஷே லோகே | மநுஷியலோகத்தில் |
| கர்மஜா | கருமத்தினாலுண்டாகிற |
| ஸித்தி꞉ | பலனானது |
| க்ஷிப்ரං | சீக்கிரமாக |
| ப⁴வதி | உண்டாகிறது. |

இந்தலோகத்தில் கருமங்களுடைய பலனை யபேக்ஷிக்கிறவர்களிந்திராதி தேவதைகளை யாராதிக்கிறுர்கள். ஏனென்றுல், மனுஷியலோகத்தில் கருமபலனுனது சீக்கிரமாயுண்டாகிறது.

(ரா) கமஜா = கருமத்திஞலுண்டாகிற, ஸிஷிஃ = பலனுனது, ஐ ஹ மா நு-ஷெ லொகெ = இந்த மனுஷிய லோகத்திலேயும், சுவர்க்க லோகத்திலேயும், ஹி = யாதொருகாரணத்திஞலே, க்ஷிப்ரம் = சீக்கிரமாக, ஭வதி = உண்டாகிறதோ, (கூதஃ) அந்தக்காரணத்திஞலே, கமணாம்ஸிஷிம் = கருமத்திஞலுண்டாகிற பசு, புத்திர, சுவர்க்காதி பலனை, காங்க்ஷஂதஃ = அபேக்ஷிக்கிறவர்கள், தேவதாஃ = தேவதைகளை, யஜஂதே = ஆராதிக்கிறுர்கள். இதின் தாத்பரிய மென்னவென்றுல், தேவதைகளை ஆராதிப்பவர்களுக்குச் சீக்கிரமாய்ப் பலன்கிடைக்கிறதென்று சொன்னதிஞலேயே என்னை யாராதிப்பவர்களுக்குச் சீக்கிரம் பலன்கிடைக்க மாட்டாதென்று சொன்னதாகிறதாகையால், நித்திய சுகமான மோக்ஷபலன் சீக்கிரம் கிடைக்கமாட்டாதென்பதும் இந்த மோக்ஷபலனை அபேக்ஷிக்கிறவர்கள், வெகுசிலரொன்பதுமே.

(ஶ்ரீ,வி) எந்த தேவதைகளை யாராதித்தாலும் அந்ததேவதாந்தர்யாமியாயிருக்கிற நானே பலனைக்கொடுக்கிறேன். (கஉ)

---

கங. சாதுவணுமி஧யாஸ்ருஷ்டம் ஗ுணகமவி஭ா஗ஶஃ।
தஸ்ய கதாரமபிமாம் விஷ்யகதாரமவ்யயம்॥

சாதுவணுமி *  நாலுவருணங்களும்
மயா  என்ஞலே
஗ுணகமவி஭ா஗ஶஃ  குணகருமங்களைப் பாகஞ்செய்வதிஞலே
ஸ்ருஷ்டம் †  உண்டுபண்ணப்பட்டன
தஸ்ய  அதற்கு (அந்தக்குண கருமபாகமாகிய சிருஷ்டிகளுக்கு)
கதாரமபி  கர்த்தா (உண்டுபண்ணினவன்) வானபோதிலும்
மாம்  என்னை
அவ்யயம்  பற்றுதலற்றவனென்றும்
அகதாரம்  உண்டுபண்ணினவனல்லவென்றும்
விஷி  அறி.

---

* (ரா) நாலு வருணங்களை முக்கியமாயுடைய பிரம்மாமுதல் ஸ்தம்பம்வரையிலுள்ள ஜகத்.

† (ரா) ஸ்திதி சங்காரமுமடங்கி யிருக்கிறது.

(பிரம்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திராகிய) நாலுவருணங்களு மென்னுல் குணங்கள், கருமங்கள், இவைகளைப் பாகஞ்செய்வதினுலே யுண்டாக்கப்பட்டன. அந்தக்குணகருமபாகமாகிய சிருஷ்டிகளுக்கு நானே கர்த்தாவானுலும் என்னைப் பற்றற்றவனுகவும் (அல்லது சிரம மற்றவனுகவும்) கர்த்தாவல்லவென்பதாகவுமறி.

(இந்தசுலோகத்தில் முதலில் சிருஷ்டிக்குக் கர்த்தா தானென் றும், பிந்தி சிருஷ்டிக்குத் தான் கர்த்தாவல்லவென்றும் சொல்லப் பட்டது. இதொன்றுக்கொன்று விரோதம்போல் காணப்பட்டாலும் விரோதமல்லவென்பதை யடியிற்கண்ட பாஷியக்காரர்களும் வியாக் கியாதாக்களும் நிரூபித்திருக்கிறுர்கள். எப்படியென்றுல்) (ஸ்ரீ) மா யையை சுவீகரித்து சிருஷ்டிகளைச் செய்கிறபடியால் கர்த்தாவாகச் சொல்லப்பட்ட போதிலும் பாரமார்த்திகத்தில் கர்த்தாவல்ல. (ஸ்ரீ) (ஸ்ரீ,வி) சிருஷ்டி விஷயத்தில் நான் கர்த்தாவானுலும், பலாபேக்ஷை யாவது பற்றுதலாவது எனக்கில்லாததினுல் அந்தசிருஷ்டி கருமபலன் என்னை ஒட்டுகிறதில்லை யாகையால் நான் கர்த்தாவல்ல. (ரா) எனக்கு ஒன்றை சிருஷ்டிசெய்வதில் யாதொருப்பிரயாசமுமில்லை. மற்றவர்கள் ஒன்றை யுண்டாக்கவேண்டுமானுல் அதிகப்பிரயாசைப்படவேண்டும். நான் நினைத்தமாத்திரத்தில் சிருஷ்டியாய்விடு மாகையால் நான்கர்த்தா வல்ல. (ஸ்ரீ,வி) சகலசிருஷ்டிக்கும் நான் கர்த்தாவானுலும் எனக்குக் கர்த்தாவில்லை யாகையால், நான் (அகர்த்தா) கர்த்தாவுடையவனல்ல. ஏன் அகர்த்தா வென்பதற்குக் காரணம் அடுத்த சுலோகத்தில் சொல் லப்படுகிறது.

(ஸூ) இதில் சொல்லப்பட்டிருக்கிற வருணங்கள் என்பது பிரா மணுதி நாலுஜாதிகள். குணங்களென்பது, மூன்றுவகைப்படும், அவை யாவன, சத்துவ (உத்தமமான) குணம், இரஜோ (மத்தியமான) குணம், தமோ (அதமமான) குணம். கருமமென்பது பிரம்ம, க்ஷத்திரிய, வை சிய, சூத்திரர்களுக்கு விதிக்கப்பட்டிருப்பதும் இதின், கஅ - அத் சஉ - சங - சச - சு சொல்லப்பட்டிருக்கிறவைகளுந்தான். அந்த சுலோகங் களில் முறையே கருமவிபாகஞ் சொல்லப்பட்டிருக்கின்றது. குணவி பாகம் மட்டும் பாஷியக்காரர்களும் வியாக்கியாதாக்களும் சொல்லியிருக் கிறபடி அடியில் விவரிக்கப்படும்.

பிராமணனுக்கு
- (ஸ்ரீ) சத்துவகுணமதிகம்.
- (ரா) சத்துவகுணமுடையவன் பிராமணன்.
- (ஸ்ரீ,வி) சத்துவகுணமதிகம், இரஜோகுணம் குறைச்சல்.

**க்ஷத்திரியனுக்கு**

(ஶம், ஸ்ரீ,வி) சத்துவகுணம் குறைச்சல், இரஜோ குணமதிகம்.
(ஸ்ரீ) சத்துவ ரஜோகுணங்கள் அதிகம்.
(உ) சத்துவரஜோகுணங்களையுடையவன் க்ஷத்திரியன்.

**வைசியனுக்கு**

(ஶம்) இரஜோகுணமதிகம், தமோகுணம் சொற்பம்.
(ஸ்ரீ) இராஜஸ் தமோகுணங்க ளிரண்டுமதிகம்.
(உ) இரஜோகுணதமோகுணமுள்ளவன் வைசியன்.
(ஸ்ரீ,வி) இரஜஸ் அதிகம், அதைவிட சத்துவம் குறைச்சல், அதைவிட தமஸ்குறைச்சல்.

**சூத்திரனுக்கு**

(ஶம்) இரஜஸ் சொற்பம், தமோ குணமதிகம்.
(ஸ்ரீ) தமோகுணமதிகம்.
(உ) தமோகுணமுள்ளவன் சூத்திரன்.
(ஸ்ரீ,வி) தமஸ் அதிகம், அதைவிடக் குறைச்சல் இரஜஸ், அதைவிடக்குறைச்சல் சத்துவம்.

இந்தத் தாத்பரியங்களைச் சேர்த்துப் பார்ப்போமாகில் ஒவ்வொரு வருணத்தாரும் முக்குணங்க ளுள்ளவர்களென்றும், சிலகுணம் சிலரிடத்தி லதிகமும் சிலரிடத்தில் குறைச்சலுமா யிருக்குமென்றும் குறித்துக்காட்டியதாக விருக்கிறது. அந்தவருணங்கள் சிருஷ்டிக்குங் காலத்தில் அவனவனுடைய பூர்வஜன்ம கருமாநுசாரமாய் சிருஷ்டிக்கப்பட்டன. எப்படியென்றால், சத்துவகுணப் பிரதானமான சமதமம் முதலிய தருமங்களையுடையவனைப் பிராமணனாகவும், இரஜோகுணப் பிரதானமான சவுரியம் முதலிய தருமங்களை யுடையவனை க்ஷத்திரியனாகவும், மற்று மிப்படியே மற்றவருணங்களும் சிரிஷ்டிக்கப்பட்டதாகத் தாத்பரியம், (ஸ்ரீ,வி) இவர் ஸாத்துவிகத்தில் ஸாத்துவிகம், இராஜஸத்தில் ஸாத்துவிகம், தாமஸத்தில் ஸாத்துவிகம், என்பதாய் பாகித்து மத்தியிலிருப்பதாகிய இராஜஸ ஸாத்துவிகத்தைமட்டும் எடுத்துக்கொண்டு மேல்கண்டவிதமாய்ப் பாகிக்கவேண்டியதாகச் சொல்லியிருக்கிறார். (௧௨)

---

௧௩. ந மாம் கர்மாணி லிம்பந்தி ந மே கர்மபலே ஸ்ப்ருஹா।
இதி மாம் யோऽபிஜாநாதி கர்மபிர் ந ஸ பத்யதே॥

| | |
|---|---|
| 𑌮𑌾𑌂 | என்னை |
| 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 | கருமங்கள் |
| 𑌨 𑌲𑌿𑌮𑍍𑌪𑌨𑍍𑌤𑌿 | ஒட்டுகிறதில்லை |
| 𑌮𑍇 | எனக்கு |
| 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑍇 | கருமபலத்தில் |
| 𑌸𑍍𑌪𑍃𑌹𑌾 | ஆசையானது |
| 𑌨 | இல்லை |
| 𑌇𑌤𑌿 | இவ்விதமாய் |
| 𑌮𑌾𑌂 | என்னை |
| 𑌯𑌃 | எவன் |
| 𑌅𑌭𑌿𑌜𑌾𑌨𑌾𑌤𑌿 | தெரிந்துகொள்ளுகிறானோ |
| 𑌸𑌃 | அவன் |
| 𑌕𑌰𑍍𑌮𑌭𑌿𑌃 | கருமங்களினாலே |
| 𑌨 𑌬𑌧𑍍𑌯𑌤𑍇 | கட்டப்படுகிறதில்லை. |

என்னைக் கருமங்களொட்டுகிறதில்லை. எனக்குக் கருமபலனிலாசையில்லை. இவ்விதமா யென்னை யெவன் தெரிந்துகொள்ளுகிறானோ, அவன் கருமங்களினாலே கட்டப்படுகிறதில்லை. (ஏனென்றால், கருமங்களுக்குக் காரணமான அகங்காரம் க்ஷீணிக்கிறதினாலேதான்.)

(௱௦) ஏன் கருமபலன் பகவானை யொட்டுகிறதில்லை யென்றால், அகங்காரமாவது, பலாபேக்ஷையாவது அவருக்கில்லாததி னால்தான். தானே பிரம்மமென்பதையும், ஒரு கருமத்திற்கும் தான் கர்த்தா வல்லவென்பதையும் அறிந்தும், அகங்காரம், மமகாரம், ஆசை முதலியவைக ளில்லாமலு மிருக்கிறவனையும், கருமங்கள் கட்டுப்படுத்து கிறதில்லை.

(௱௧) என்னைக் கருமபலன் ஏன் ஒட்டுகிறதில்லையென்றால், அந்தந்தப் பிராணிகளுடைய பிராசீனகருமங்களுக்குத் தக்கபடி, தேவ, மனுஷிய, பசு, பக்ஷியாதி தேகங்களாய் சிருஷ்டிக்கிறேனே யன்றியில் யாதொரு வைஷம்மியத்தினால் நான் அப்படி சிருஷ்டிசெய்கிறதில்லை. அந்தந்தப் பிராணிகளுடைய தேகத்திற்குக் காரணம் அவரவர்களுடைய பிராசீனகருமமாகையால் நான் யாதொரு பக்ஷபாதஞ் செய்தவனாகிறதுமில்லை. யாதொரு தோஷமென்னை யொட்டவுமாட்டாது. அப்படியே பிராசீனகருமத்திற்குத் தக்கபடி அவர்களுக்குப் புசிக்கத் தகுந்த வஸ்துக்களையும் சிருஷ்டிக்கிறேன். அந்தப் பலனில் எனக்கு யாதொரு சம்பந்தமுமில்லை. ஆகையால் பலனுமென்னை யொட்டுகிறதில்லை. சிருஷ்டிக்குக் காரணம் அவரவர்களுடைய பிராசீனகருமமே. நான் நிமித்தியகாரணமாய் மட்டுமிருக்கிறேன். இப்படி என்னை

யெவனறிகிருனோ அவன், அவனுடைய கருமயோகத்திற்கு விரோதியான பிராசீனகருமத்தினுல் கட்டப்படுகிற தில்லையென்பது தாத்பரியம்.

(உ) பக்ஷபாதம் (வைஷம்மியம்) இல்லாததினுல் கரும மொட்டுகிறதில்லை. ஆசையில்லாததினுல் பலன் ஒட்டுகிறதில்லை யென்பது கருத்து.

(மீ,வி) ஜீவனைப்போல் நான் பலனை அபேக்ஷித்துக் கருமங்களைச் செய்கிறதில்லை. ஆகையால், கருமங்களாவது பலனுவது என்னைக் கட்டுப்படுத்துகிறதில்லை. அந்தந்தப் பிராணியின் பிராசீனகருமத்தை யநுசரித்து சிருஷ்டிசெய்வதினுல் பலவிசித்திர சிருஷ்டிசெய்த பக்ஷபாத தோஷமென்னை யடைகிறதில்லை. இப்படி என்னை யறிந்தவனுக்குப் பந்தமில்லை. அவனுக்கே பந்தமில்லாதபோது எனக்கு பந்தமெப்படி யுண்டாகும்? "இப்படி என்னை யறிந்தவன்" என்கிற வாக்கியத்தினுல் ஸ்ரீ கிருஷ்ணபகவான் பரமாத்மாவென்பதும், அறிகிறவன் ஜீவன், அறியப்படுகிறவன் அந்தபரமாத்மா, வென்பதும், விசதமாகிறபடியால் ஜீவேசுவரபேதம் ஸ்தாபிக்கப்பட்டது.

(ஷா) கருமங்களாவது அவைகளின் பலனுவது ஈசுவரனை ஒட்டுகிறதில்லையென்று அக்ஞானியுங்கூடத் தெரிந்துகொள்ளக்கூடும். அப்படித் தெரிந்துகொண்டவன் கருமங்களினுல் கட்டுப்படுகிறதில்லையென்று சொன்னபடியால், ஞானநிஷ்டை முதலியவைகள் அனுவசியமென்று சொல்லவேண்டியதாகுமே யென்ருலோ! ஈசுவர சக்தி, மகிமை, செய்கை முதலியவைகள் இப்படிப்பட்டவையென்று தெரிந்தால் ஈசுவரனிடத்தில் பக்தி விசுவாசம்வைத்து உபாசிப்பான். அப்படி யுபாசித்து வந்தால் ஈசுவரானுக்கிரகத்தினுல் கிரமமாய்ப் பந்தம் விட்டுப்போகுமென்பது தாத்பரியம். (௧௪)

---

௧௫. ஏவம் ஜ்ஞாத்வா க்ருதம் கர்ம பூர்வைரபி முமுக்ஷுபி:।
குரு கர்மைவ தஸ்மாத் த்வம் பூர்வை: பூர்வதரம் க்ருதம்॥

| | |
|---|---|
| ஏவம் | இவ்விதமாய் |
| ஜ்ஞாத்வா | தெரிந்து |
| பூர்வை: | முன்னேர்களான |
| அபி முமுக்ஷுபி: | மோக்ஷத்தையடைய இச்சையுள்ளவர்களினுலேயுங்கூட |
| கர்ம | கருமமானது |
| க்ருதம் | செய்யப்பட்டது |
| தஸ்மாத் | ஆகையினுலே |

| | |
|---|---|
| 𑌪𑍂𑌰𑍍𑌵𑍈𑌃 | முன்னோர்களாலே |
| 𑌕𑍃𑌤𑌂 | செய்யப்பட்டதும் |
| 𑌪𑍂𑌰𑍍𑌵𑌤𑌰𑌂 | நீடித்துவந்ததுமான |
| 𑌕𑌰𑍍𑌮𑍈𑌵 | கருமத்தையே |
| 𑌤𑍍𑌵𑌂 | நீ |
| 𑌕𑍁𑌰𑍁 | செய். |

(அகங்காரம், கர்த்திருத்துவ முதலியவைக ளில்லாமல் செய்யும் கருமங்கள் பந்த ஹேதுவல்ல.) இவ்விதமாய்த் தெரிந்து முன்னோர்களும், மோக்ஷ இச்சை யுள்ளவர்களுமான ஜனகாதிகளினாலேயுங்கூட கருமஞ் செய்யப்பட்ட தாகையினாலே முன்னோர்களாலே செய்யப்பட்டதும் நீடித்து வந்ததுமான கருமத்தையே நீ செய். (மகாஞானிகளான ஜனகன் முதலானவர்கள்கூட கருமஞ் செய்து வந்தார்கள். ஆகையால் நீ கருமஞ் செய்யமாட்டே னென்று சொல்ல யோக்கியனல்லவென்பதும், கருமத்தைச்செய்து பலனை ஈசுவரார்ப்பணஞ் செய்தால், அதினால் சித்தசுத்தியும் ஞானமுமடைந்து ஞானத்தினால் மோக்ஷமடையலா மென்பதும் கருத்து.) (௧௫)

---

௧௬. 𑌕𑌿𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌕𑌿𑌮𑌕𑌰𑍍𑌮𑍇𑌤𑌿 𑌕𑌵𑌯𑍋𑌽𑌪𑍍𑌯𑌤𑍍𑌰 𑌮𑍋𑌹𑌿𑌤𑌾𑌃।
𑌤𑌤𑍍𑌤𑍇 𑌕𑌰𑍍𑌮 𑌪𑍍𑌰𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌯𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌮𑍋𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑍇𑌽𑌶𑍁𑌭𑌾𑌤𑍍॥

| | |
|---|---|
| 𑌕𑌰𑍍𑌮 𑌕𑌿𑌂 | கருமமெப்படிப்பட்டது |
| 𑌅𑌕𑌰𑍍𑌮 𑌕𑌿𑌂 | அகருமமெப்படிப்பட்டது |
| 𑌇𑌤𑍍𑌯𑌤𑍍𑌰 | என்கிற இந்தவிஷயத்தில் |
| 𑌕𑌵𑌯𑍋𑌽𑌪𑌿 | பண்டிதர்களுங்கூட |
| 𑌮𑍋𑌹𑌿𑌤𑌾𑌃 | மோகித்திருக்கிறார்கள் |
| 𑌯𑌤𑍍 | எதை |
| 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 | தெரிந்து, அல்லது, அநுஷ்டித்து |
| 𑌅𑌶𑍁𑌭𑌾𑌤𑍍 | சமுசாரபந்தமான பாபத்திலிருந்து |
| 𑌮𑍋𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑍇 | விடுபடுவாயோ |
| 𑌤𑌤𑍍𑌕𑌰𑍍𑌮 (𑌤𑌦𑍍𑌕𑌰𑍍𑌮) | அந்தக்கருமாகருமங்களை |
| 𑌤𑍇 | உனக்கு |
| 𑌪𑍍𑌰𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 | சொல்லுகிறேன். |

கரும மெப்படிப்பட்டது? அகரும மெப்படிப்பட்டது? என்கிற விஷயத்தில் பண்டிதர்களுங்கூட மோகித் திருக்கிறார்கள். எதைத் தெரிந்து; அல்லது அநுஷ்டித்து சம்சாரபந்தத்திலிருந்து விடுபடுவாயோ, அந்தக் கருமாகருமங்களை உனக்குச் சொல்லுகிறேன்.

(ஷா) இந்தசுலோகத்தின் இரண்டாவது பாகத்தில், தத்தேகர்ம என்கிற வாக்கியம் பிரயோகிக்கப்பட்டிருக்கிறது. இந்தப் பதங்களை (ஸ்ரீ-வி) தத்-தே-கர்ம, என்று முதலில் பிரித்தார். அப்படியானல், தத் = அந்த - கர்ம = கருமத்தை, தே = உனக்கு என்று அர்த்த மாகிறது. கருமத்தை உனக்குச் சொல்லுகிறேனென்ருல், அகருமத் தைச் சொல்லவில்லையென்ருகிறது. அகரும மெப்படிப்பட்டதென்று மேலாகக் கேழ்வி போடப்பட்டிருக்கையிலும், பிந்திய சுலோகத்தி லுத்தரஞ் சொல்லப்பட்டிருக்கையிலும் அகருமத்தையுங்கூடச் சொ ல்லுகிறேனென்பது இந்த சுலோகத்தினுல் விளங்கவேண்டும். ஆகை யால், தத்தே கர்ம-தத்-தே-அகர்ம- என்று பிரித்து அந்தக்கருமா கருமங்களை, உனக்குச் சொல்லுகிறேனென்று பின்னுமோரர்த்தஞ் செய்தார். (ஶம) (ஸ்ரீ) ஈகர்மத்தையும் சேர்த்தார்கள். (ரா) கர்மகிம் = முமுக்ஷுக்கள் அநுஷ்டிக்க வேண்டிய கரும மெப்படிப்பட்டது, அகர்மகிம் = அந்தக்கருமத்திற் குள்ளடங்கி யிருப்பதாகிய கர்த்தாவி னுடைய ஆத்ம சுவரூபஞானமாகிற அகரும மெப்படிப்பட்டது, என் கிற விஷயத்தில், வித்துவான்கள்கூட மோகித்திருக்கிருர்க ளென்ப தாக அர்த்தஞ் செய்திருக்கிருர். (அகருமமென்பது, கருமஞ் செய் கிறவனுடைய ஆத்ம சுவரூப மிப்படிப்பட்டதென்று தெரிந்துகொள் ளுகிற ஞானமெதுவோ அந்த ஞானமென்றும், அந்த ஞானம் கருமத்தி லடங்கி யிருப்பதாகவும் (ரா) தாத்பரியம்.) (கசு)

---

கஎ. கர்மணோஹ்யபிபோத்தவ்யம் போத்தவ்யஞ்சவிகர்மண:।
அகர்மணச்சபோத்தவ்யம் கஹநாகர்மணோகதி:॥

| | |
|---|---|
| கர்மண:* | கருமத்தினுடைய |
| (தத்வம்) | சுவரூபமானது |
| போத்தவ்யம் | அறிந்துகொள்ளப்படவேண்டியது |
| விகர்மணாபி(தத்வம்)† | விகருமத்தினுடைய சுவரூபமும் |
| போத்தவ்யம் | அறிந்துகொள்ளப்படவேண்டியது |
| அகர்மணஸ்ச ‡ | அகருமத்தினுடைய |

* (ஶம) (ஸ்ரீ) (ம) (ஸ்ரீ,வி) வேதோக்தமான சத்கருமம், (ரா) மோக்ஷ சாதனகருமம்.

† (ஶம) (ஸ்ரீ) (ம) (ஸ்ரீ,வி) செய்யக்கூடாதென்று வேதத்தினுல் நிஷேதிக் கப்பட்ட நிஷித்தகருமம், (ரா) நித்திய நைமித்திக காம்மிய கருமங்களும், அவை களுக்குக் காரணமான திரவிய சம்பாதனை முதலிய பலவித கருமங்களும்.

‡ (ஶம) (ஸ்ரீ) (ம) (ஸ்ரீ,வி) கருமத்தைச் செய்யாமை, (ரா) கருமத்தி லடங்கியிருக்கிற அகர்த்தாவாகிய தன்னுடைய ஆத்ம சுவரூபஞானம்.

| | |
|---|---|
| (த்3வ்யம்) | சுவரூபமும் |
| போ3த்3த4வ்யம்* | அறிந்துகொள்ளப்படவேண்டியது |
| ஹி | ஏனென்றால் |
| கர்மண: | கருமம், விகருமம், அகருமம், இவைகளினுடைய |
| க3தி: | சுவரூபத்தினுண்மையானது |
| க3ஹநா | தெரிந்துகொள்ளுவதற்குக்கடினமானது. |

கருமம், விகருமம், அகருமம், இவைகளினுடைய சுவரூபமானது அறிந்து கொள்ளப்படவேண்டியது. ஏனென்றால், அவைகளினுடைய சுவரூபத்தின் உண்மையானது தெரிந்து கொள்ளுவதற்குக் கடினமானது. (௧௭)

---

௧௮. கர்மண்யகர்ம ய: பஶ்யேத3கர்மணி ச கர்ம ய:।
ஸ பு3த்3தி4மாந் மநுஷ்யேஷு ஸ யுக்த: க்ருத்ஸ்நகர்மக்ருத்॥

| | |
|---|---|
| கர்மணி | கருமத்தில் |
| அகர்ம | அகருமத்தை |
| ய: | எவன் |
| பஶ்யேத் | பார்க்கிறானோ |
| அகர்மணி | அகருமத்தில் |
| கர்ம | கருமத்தை |
| ய: | எவன் |
| (பஶ்யேத்) | பார்க்கிறானோ |
| ஸ: | அவன் |
| மநுஷ்யேஷு | மனிதர்களில் |
| பு3த்3தி4மாந் | விவேகமுள்ளவன் |
| யுக்த: | மனச்சமாதானமுள்ளயோகி |
| ஸ: | அவன் |
| க்ருத்ஸ்நகர்மக்ருத் | சகலமான கருமங்களையுஞ் செய்தவனுமாகிறான். |

---

* (ஈ) விகருமத்தி லறியவேண்டியதாவது—நித்திய, நைமித்திக, காம்மிய, திரவியார்ஜனாதி கருமங்களில் பலபேதத்தைவிட்டு மோக்ஷமே பலமென்றும், கருமங்களுடைய சுவபாவமொன்றென்றும் அநுசந்தானம், (ஸ்ரீ,வி) கர்மண: = ந: = நமக்கு, கர்ம = கருமமானது உத்தமமானது. விகர்மண: = ந: = நமக்கு, விகர்ம = விகருமமானது நிஷித்தமானது. அகர்மண: = ந: = நமக்கு, அகர்ம = சகலகருமமும் ஈசுவராதீனமாயுள்ளது, என்று அறிவது.

கருமத்தில் அகருமத்தையும், அகருமத்தில் கருமத்தையும் எவன் பார்க்கிருனே அவன் மனிதர்களில் விவேக முள்ளவனுயும், மனச் சமாதானமுள்ள யோகியாயும், சகலமான கருமங்களேயும் செய்தவனுயு மாகிருன்.

(பாஉ) தேகம், மனசு, இந்திரியங்கள் இவைகளுடைய வியாபாரம் அல்லது, செய்கை கருமமென்றும், தேகாதிகளா லெந்தச்செய்கை அல்லது, வியாபாரம் செய்யப்படுவதில்லேயோ, அந்தச் செய்யாமை அகருமமென்றுஞ் சொல்லப்படும். ஆத்மாவுக்குச் செய்வதும், செய்யாமலிருப்பதுமாகிய கருமாகருமங்க ளிரண்டுமில்லே. அவிவேகிகள் கருமா கருமங்களே ஆத்மாவிடத்தி லாரோபித்து, அகங்கார மமகாரங்களினுல் நான் செய்கிறேன், நான் செய்யாம லிருக்கிறேன் என்று வியவகரிக்கிருர்கள். அதினுல் ஆத்மா கருமஞ்செய்வது போல் தோற்றப்பட்டாலும்; கருமம்செய்வது தேகாதிகளென்றும் ஆத்மா கருமஞ்செய்வதில்லே யென்றும் எவன் அறிகிருனே அவன் கருமத்தில் அகருமத்தைப் பார்க்கிருன். அதெப்படியென்ருல் நதியில் ஓடத்தில் வேகமாய் ஒருவன் போகிருன். அந்நதிக் கரையிலுள்ள மரங்கள் வேகமாய்ப் போவதுபோல அவனுக்குக் காணப்படுகின்றன. வேகமாய்ப் போகிறதாகிய செய்கை ஓடத்திலிருக்கிற தன்னிடத்திலிருக்க, செய்கையற்றனவா யிருக்கிற மரங்களில் செய்கையைப் பார்க்கிருன். அதுபோல தேகாதிகள்செய்யும் கருமத்தை ஆத்மா செய்வதாகப் பார்க்கிருன். மரங்களில் கரும (செய்கை) மில்லாததுபோல ஆத்மாவிலும் கருமமில்லேயென்று பார்க்கிறவன் கருமத்தில் அகருமத்தைப் பார்க்கிருன்.

செய்யாம லிருக்கையுங்கூட (அகருமம்) அகங்காரத்தின் குணமாயிருக்க அதை தான் (ஆத்மா) செய்யவில்லேயென்று மூடன் வியவகரிக்கிருன். எப்படியென்ருல், நான் அதைச்செய்யவில்லே, அதினுல் சுகியாயிருக்கிறேன் என்கிருன். அந்தச் செய்யாமலிருப்பதாகிய அகருமத்தில் "அதை நான் செய்யவில்லே அதினுல் சுகமாயிருக்கிறேன்" என்பதாகிய அகங்காரத்தினுடைய கருமமிருக்கிறது. இதில்தான் விவேகி அகருமத்தில் கருமத்தைப்பார்க்கிருன். (அதாவது, செய்யாம லிருப்பதிலுங்கூட கருமம் அடங்கி யிருக்கிறதென்று விவேகியானவன் அறிகிருனென்பது கருத்து.)

(ஸ்ரீ) (கர்மணாபத்யதெஜந்து: = பிராணியானவன் கருமத்தால் கட்டப்படுகிருன். என்கிறப் பிரமாணத்தினுல்) கருமத்தின் சுவபாவமே பந்தத்தைக் கொடுக்கிறதாக விருக்கிறது. அப்படி பந்தத்தைக் கொடுப்பதாகிய கருமமே, பலாபேக்ஷயன்றியிலும், மமகார அகங்காரங்களே விட்டும், ஈசுவரார்ப்பண புத்தியாய்ச் செய்பவனுக்குத் தன்

சுபாவமான பந்தத்தைக்கொடாமல் பிராகிரை கருமபந்தத்தையுங்கூட நிவர்த்தித்து மோக்ஷப்பிரயோஜனத்தை யுண்டாக்கிறது. ஆகையால்; பந்தரூபமான கருமத்தில் பந்த நிவிர்த்தியான அகருமத்தைப் பார்க்கிருன். அதாவது, செய்கிற கருமமே அகருமமாய் விடுகிறது.

சோம்பலினுலாவது, தோஷபுத்தியினுலாவது சத்கருமங்களை விட்டுவிடுகிருன். சத்கருமங்களைச் செய்யாமல் விடுவதே தோஷத்தையும், பந்தத்தையு முண்டுபண்ணுவதாக விருக்கிறது. ஆனதால் கருமத்தை விடுகிறதாகிய அகருமத்தில் தோஷமாகிய பந்தத்தைக் கொடுக்கிற கருமமடங்கி யிருப்பதாகவும், கருமத்தை விட்டுவிடாமல் செய்யவேண்டியதென்றும் தெரிகிறவன் அகருமத்தில் கருமத்தைப் பார்க்கிருன்.

(ரா) தன்னுடைய ஆத்மசுவரூபானு சந்தானத்தோடு கூடிச் செய்யப்படும் கருமத்தில் ஆத்மசுவரூபஞான மடங்கியிருப்பதாக அறிகிறவன், கருமத்தில் ஞானமாகிற அகருமத்தைப்பார்க்கிருன். அகருமமாகிற தன்னுடைய ஆத்ம சுவரூபஞானத்தோடு செய்யப்படும் கருமமானது ஞானத்துடன் கலந்தபடியால் ஞானமாகிற அகருமத்தில் கருமத்தைப் பார்க்கிருன். இவ்விதமாய் ஞானம், கருமமிரண்டு மொன்றுடனென்று சேர்ந்திருப்பதால் ஞானம் கருமாகாரமாயும், கருமம் ஞானகாரமாயுமாகிற தென்பதை அறிந்தவன், விவேகியென்பது தாத்பரியம்.

(உ) கஉ — செய்கை அல்லது கிரியை, ககஉ — க — விஷ்ணு, கஉ — செய்கை. விஷ்ணுவினுடையசெய்கை, அல்லது விஷ்ணுவைச் சேர்ந்தசெய்கை, தான் கருமம்செய்தாலும் அந்தக்கருமத்திற்குக் கர்த்தாவும் கருமத்தைச் செய்விப்பவரும் விஷ்ணுவாகையால், தான் கர்த்தா வல்லவென்றும், கருமம் விஷ்ணுவைச் சேர்ந்ததென்றும் எவன் அறிகிருனே அவன் கருமத்தில் அகருமத்தைப் பார்க்கிருன். ஜீவன் கருமம் செய்யாதகாலமாகிய நித்திரைக்காலத்தி லுண்டாகும் சுவப்னுவஸ்தையில் அநேககருமங்களை தான் செய்ததுபோல் காணுகிருன். சுவப்னு வஸ்தையில் காணும் சகலகாரியங்களும் ஈசுவர சிருஷ்டியாயிருந்தாலும் தான் செய்ததுபோல் சுவப்னத்தில் காணுகிருன். சுவப்னுவஸ்தையில் தான் யாதொரு கருமமும் செய்யாத அகருமாவாகவிருக்கையில் காணப்படும் செய்கையெல்லாம் ஈசுவர சிருஷ்டியென்று எவனறிகிருனே, அவன் அகருமத்தில் கருமத்தைப் பார்கிருன்.

(மீ,வி) (இவர் பிரயோகித்திருக்கிற வாக்கியங்கள் வேறேயானுலும் தாத்பரியம், (உ) தாத்பரியத்தை அனுசரித்தே ஒருவித அர்த்தம் சொல்லிவிட்டு பின்னும் ஒரு அர்த்தஞ் சொல்லியிருக்கிருர்.

அதாவது, கருமம் பந்தமான தாகையாலும், ஜீவன் பெந்தத்தி லகப்பட்டிருக்கிறு ணுகையாலும் கருமம் என்றால் ஜீவன். அவனிடத்தில் கர்த்திருத்துவமில்லை என்று அறிகிறவன் கருமத்தில் அகருமத்தைப் பார்க்கிறான். கருமபத்தனல்ல வாகையால் அகருமா ஈசுவரன். அவ னிடத்தில் பிரபஞ்ச சிருஷ்டி முதலிய கருமமிருக்கிறதாக எவன் அறிகிறானே அவன் அகருமத்தில் கருமத்தைப் பார்க்கிறான்.

(ஸூ) கருமமென்பது பிரபஞ்சசிருஷ்டி. அகருமமென்பது பரப்பிரம்மம். சிருஷ்டிகருமத்தில் சிருஷ்டிக்குக் கர்த்தா பரப்பிரம்ம மல்ல. அவருடைய சந்நிதிமாத்திரத்தில் சகலபிரபஞ்ச சிருஷ்டிக ளாகின்றன. ஆகையால் சிருஷ்டிகாரியத்தில் பரப்பிரம்மம் (அகர்த்தா வாகிய) அகருமம், என்று பார்க்கிறவனும், அப்படிப்பட்ட அகரும மாகிய பிரம்மத்தையன்றி பிரபஞ்ச சிருஷ்டிகாரியஞ்செய்ய சக்தியுள்ள வேறேயொருவருமில்லை ஆகையால், அகருமமாகிய பிரம்மத்தில் சிரு ஷ்டியாகிய கருமத்தைப் பார்க்கிறவனும் மனிதர்களுக்குள்ளே விவே கியாயும் யோகியாயும் சகலகருமங்களையும் செய்தவனாயு மாகிறான். இதின் தாத்பரிய மென்னவென்றால், பிரம்மத்தின் சக்தியன்றி சிருஷ் டியாகவில்லை. ஆனால் அந்தப் பிரம்மமானது குசவன் பானைசெய்வது போல் பிரபஞ்சங்களை சிருஷ்டிக்கவில்லை. அவர் இச்சித்தமாத்திரத்தி லும், அவர் சந்நிதிமாத்திரத்திலும் சகல சிருஷ்டியு மாய்விடுகிறதென் பதே. இந்த அர்த்தத்தைத்தான் பகவான் கிருஷ்ணசுவாமியானவர் இந்த அத் ௧௩ - ௪ல் "சிருஷ்டிக்கு நான் கர்த்தாவானாலும் நான் கர்த் தாவல்லவென்று அறி" என்பதாக அர்சுனனுக்குச் சொல்லியிருக்கிற தாகத் தோற்றுகிறது.

இப்படிப் பிரம்மத்தை யறிவதினால் என்னப் பிரயோஜனமென் றால், பிரம்மசுவரூபம், சக்தி, மகிமை, இவைகளைத் தெரிவதே மோக்ஷ சாதனமாயும் அப்படிப்பட்ட பிரம்மத்தை ஆசிரயித்து பக்திசெய்தால் பந்தநிவர்த்தி அடையலாமென்கிற திருடமுண்டாக ஹேதுவாகவு மிரு க்கிறது. (௧௮)

---

௧௯. 𑌯𑌸𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌸𑌮𑌾𑌰𑌮𑍍𑌭𑌾𑌃 𑌕𑌾𑌮𑌸𑌙𑍍𑌕𑌲𑍍𑌪𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌾𑌃।
𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌗𑍍𑌨𑌿𑌦𑌗𑍍𑌧𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌂 𑌤𑌮𑌾𑌹𑍁𑌃 𑌪𑌣𑍍𑌡𑌿𑌤𑌂 𑌬𑍁𑌧𑌾𑌃॥ *

| | |
|---|---|
| 𑌯𑌸𑍍𑌯 | எவனுடைய |
| 𑌸𑌰𑍍𑌵𑍇 | சகல |
| 𑌸𑌮𑌾𑌰𑌮𑍍𑌭𑌾𑌃 | கருமங்களும் |

---

* இந்த சுலோகத்தை கர்க்கசம்ஹிதை மாதுரியகண்டம். அத் - ௧ - ௪ - ௪௮-ல் காண்க.

| | |
|---|---|
| காமஸங்கல்பவர்ஜிதா꞉* | ஆசை, சங்கல்பம், இவைகளற்றிருக்குமோ |
| ஜ்ஞாநாக்³நித³க்³த⁴கர்மாணம்† | ஞானமாகிற அக்கினியால் எரிக்கப்பட்ட கருமத்தையுடைய |
| தம் | அவனை |
| பு³தா⁴꞉ | ஞானிகள் |
| பண்டி³தம் | விவேகியாக |
| ஆஹு꞉ | சொல்லுகிறார்கள். |

எவனுடைய சகலகருமங்களும் ஆசையும் (இன்னதை அடைய வேண்டுமென்கிற இச்சையாகிற) சங்கல்பமு மில்லாம லிருக்கின்றனவோ, ஞானமாகிற அக்கினி (நெருப்பு) யினால் எரிக்கப்பட்ட கருமத்தையுடைய அவனை, ஞானிகள் விவேகியாகச் சொல்லுகிறார்கள்.

(ஸ்வா) ஆசையும், சங்கல்பமுமில்லாமல் ஈசுவரார்ப்பண புத்தியாய்க் கருமம் செய்துவந்தால், சித்தசுத்தியாய்ப் பிறகு ஞானோதயமாகும். அப்படி உதயமான ஞானமானது, அக்கினி, குப்பை முதலியவைகளை யெப்படி யெரித்துவிடுமோ, அப்படி ஸஞ்சிதம்‡ முதலிய கரும பந்தங்களை யெரித்துவிடுமென்பது கருத்து. (கசு)

---

* (ஸ்ரீ,வி) பலவிச்சை, கருமத்தினால் சுவர்க்கத்தையடைவேனென்கிற உத்தேசம், இவைகளற்றிருக்குமோ, (ஸ்ரீ) பல விச்சையற்றதா யிருக்கிறதோ, (ரா) பலவிச்சை யில்லாதவர்களும், பிரகிருதி விமுக்த ஆத்ம சுவரூபாநுசந்தான முள்ளவர்களுமா யிருக்கிற.

† (ரா) கருமத்திலடங்கியிருக்கிற தன்னுடைய சுவரூபஞானமாகிற அக்கினியினா லெரிக்கப்பட்ட பூர்வகருமத்தையுடைய. (ஸ்ரீ,வி) தான்கர்த்தாவல்ல, சகலத்திற்கும் கர்த்தா விஷ்ணுவென்றுதெரிந்த ஞானியாகிற, (ஸ்ரீ) (ஸம) கருமம், அகருமமாகிற தென்பது தாத்பரியம்.

‡ (ஸ்வா) ஸஞ்சிதம் முதலிய கருமங்களின் விபரம் சிவபுராணம் வாயுஸம்கிதை அத். உகூ-ல் காணலாம். அவை வருமாறு — கர்மத்ரிவித⁴ம் ப்ரோக்தம் கிஞ்சித்³வ ஶ்ரூயதாம் வாமன꞉॥ ௧௧॥ ஸஞ்சிதம் க்ரியமாணஞ்ச ப்ராரப்³த⁴ஞ்ச த்ரிதா⁴ ஸ்தி²தம் । பூர்வஜந்ம ஸமுத்³பூ⁴தம் ஸஞ்சிதம் ஸமுதா³ஹ்ருதம்॥ ௧௨॥ இஹ ஜந்மனி யத்க்ருத்யம் க்ரியதே கர்மஸாம்ப்ரதம் । ஶாஸ்த்ரஶாஸனயைவ க்ரியமாணம் விது³ர்பு³தா⁴꞉॥ ௧௩॥ ஸ்ருஜ்யதே ச ஶரீரேண ப்ராரப்³த⁴ம் பரிகீர்திதம் । ப்ராரப்³த⁴கர்மணோ போ⁴கா³த் க்ஷயமேவ ந சான்யதா²॥ ௧௪॥ பாபம் விநாஶமாயாதி து³꞉க²ம் நாஸ்தி வதே³ வதே³ । யத்கிஞ்சித் து³ஷ்க்ருதம் து³꞉க²ம் ஸர்வம் பாபஸமுத்³ப⁴வம் ॥ ௧௫॥ ஸுக²ம் புண்யம் சைவாயம் ஸௌக்²யஞ்ச து³꞉க²ம் பாபஸமுத்³ப⁴வம் । ஸுபாபஞ்சயதா²ஶ்யாதி ஶரீரம் ஸம்ப⁴வாதி³கம் ॥ ௧௬॥ போ⁴க³ம் விநா ந ப்ராரப்³த⁴ம் நஶ்யதீதி ஸுநிஶ்சிதம்॥ —கருமம் மூன்றுவிதமென்று சொல்லப்பட்டிருக்கிறது

உ௦. 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌾𑌸𑌙𑍍𑌗𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌤𑍃𑌪𑍍𑌤𑍋 𑌨𑌿𑌰𑌾𑌶𑍍𑌰𑌯𑌃।
𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑌭𑌿𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑍋𑌽𑌪𑌿 𑌨𑍈𑌵 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌤𑍍𑌕𑌰𑍋𑌤𑌿 𑌸𑌃॥

| | |
|---|---|
| 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌾𑌸𑌙𑍍𑌗𑌂 | கருமத்தில் அபிமானம், பலனிலாசையை |
| 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 | விட்டு |
| 𑌨𑌿𑌤𑍍𑌯𑌤𑍃𑌪𑍍𑌤𑌃* | எப்போது மாத்மாநந்தத்தினல் திருப்தி யடைந்தவனும் |
| 𑌨𑌿𑌰𑌾𑌶𑍍𑌰𑌯𑌃† | ஒருவனையும் ஆசிரயிக்காதவனுயு மிருக்கிறவன் |
| 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 | கருமத்தில் |
| 𑌅𑌭𑌿𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑍋𑌽𑌪𑌿 | பிரவிருத்தித்திருந்தபோதிலும் |
| 𑌸𑌃 | அவன் |

அவைக ளவையென்பது கேட்கத்தக்கது. ஸஞ்சிதம், கிரியமாணம், (ஆகாமி) பிராரப்தம், என மூன்றுவிதம். முன் ஜந்மங்களிலுண்டாயிருக்கிற (முன் ஜந்மங்களில் செய் தனுபவிக்கப்படாமல் பாக்கியிருக்கிற) தானது, ஸஞ்சிதமென்று சொல்லப்படு கிறது. ஸஞ்சித கருமத்திஞலடைந்த ஜந்மத்திலிப்போது சுபாசுபங்களான எந்தக் கருமங்கள் செய்யப்படுகின்றனவோ அதையே 'கிரியமாணம்' (ஆகாமி) என்று வித் வான்க ளறிகிருர்கள். இந்தத் தேகத்திஞ லநுபவிக்கிறதெதுவோ அது பிராரப்த மென்று சொல்லப்படுகின்றது. பிராரப்தகருமமானது அநுபவித்தாலன்றி நசிக்கிற தில்லே. பாபமன்றியில் சரீரத்திற்கு துக்கமென்பதில்லே. துக்கம் எப்படிப் பட்டதா ஞலும் அதெல்லாம் பாபத்திஞலுண்டானதே, துக்கமானது பெரிதாஞலும் சுவற்ப மாஞலும் அது பாபத்திஞலுண்டானதே. எப்போது சரீரமானது பாபமற்றதாகிற தோ அப்போது சுகத்திற் கிருப்பிடமாகிறது. அநுபவித்தாலன்றி பிராரப்தமானது நாசமடைகிறதில்லே யென்பது நிச்சயம்||—"[illegible] "[illegible] | [illegible] "[illegible]॥— தேகத்தை யுடையவ (ஜீவன்) ஞடைய பதிஞன்காவது "வயதுமுதல் செய்த கருமங்க ளொவ்வொன்றும் பத்து (க௦) ஜன்மங்களேக்கொடு "த்து அப்படிக்கொடுக்கும் ஜன்மங்களில் அதின்பலனே யனுபவிக்கச் செய்வதாயு "மிருக்கிறது. இவ்விதமாய்ப் பல ஜன்மங்களில் செய்த பலகருமங்களின் பலனை யனு "பவித்து முடிவுண்டாவதும், மோக்ஷமடைவதுமேது?" இதை (ஒ) பாஷியத்தில் காண்க. "[illegible] | [illegible]॥" இதற்கும் முந்திய அர்த்தமே. மகாபாரதம் க-க௦அ-உ௫-ல் காண்க.

* (ரா) தன்னுடைய ஆதம சுவரூபத்திலேயே திருப்தியுள்ளவனும்.

† (ரா) ஸ்திரமற்ற பிரகிருதியிடத்தி லாசிரயபுத்தி யில்லாதவனும்,

| | |
|---|---|
| கிஂசித்* | ஒருகருமத்தையும் |
| ந கரோதி ஸ:† | செய்யவேயில்லை (பந்தமில்லை.) |

கருமத்தி லபிமானமும், பலனிலாசையும் விட்டு எப்போதும் ஆத்மாநந்தத்தில் திருப்தியடைந்தவனும், ஒருவனையு மாசிரயிக்கா தவனு மிருக்கிறவன், கருமத்தில் பிரவிருத்தித் திருந்தபோதிலும் அவன் ஒருகருமத்தையும் செய்யவேயில்லை.

இந்த சுலோகத்தின் அர்த்தத்தை தெளிவாய் விரித்துரைக்கும் வராகோபநிஷத்து அத். உ-ல் உள்ள அடியிற்கண்ட சுலோகத்தைப் பார்க்க. ஸம்ஸாரம்ஸவிஷயே க்ஷணதரவ்யாபாரா ஹ்யவரோகணயம் நஜஹாதியோகீ । ஸம்கீததாளலயவாத்யவஶம் கதாபி மௌளிஸ்தகும்ப பரிரக்ஷணதீர் நடீவ॥— சங்கீததாளலய வாத்தியங்களுக்கு சுவாதீனமாயிருந்தாலும் ஆட்டக்காரியானவள் தன் தலைமேலிருக்கிற குடத்தை சம்ரக்ஷணை செய்கிற விஷயத்தில் புத்தியுடையவள்போல் கூட்டம் கூட்டமா யிருக்கிற விஷயங்களைப் பார்த்துக்கொண்டு அதற்கு சுவாதீனமா யிருந்தாலும் யோகியானவன் பிரம்மத்தைப் பார்த்துக்கொண்டிருக்கிற புத்தியை விடுகிறதில்லை. (உ0)

---

உக. நிராஶீர்யதசித்தாத்மா த்யக்தஸர்வபரிக்ரஹ:।
ஶாரீரம்கேவலம்கர்ம குர்வந்நாப்நோதிகில்பிஷம்॥

| | |
|---|---|
| நிராஶீ: | ஆசையற்றும் |
| யதசித்தாத்மா ‡ | மனசு, இந்திரியங்க ளிவைகளை யடக்கியும் |
| த்யக்தஸர்வபரிக்ரஹ: § | பொருளீட்டுதலை அல்லது, சகலவிதமான சம்பாத்தியத்தைவிட்டு |
| ஶாரீரம்கேவலம்கர்ம | சரீரம் நிலைத்திருப்பதற்குள்ள (ஆஹாராதி நிமித்தியமான) கருமத்தைமட்டும். |

---

* † (ரா) கருமஞ் செய்தாலும் ஞானப்பியாசத்தையே செய்கிறான். கருமஞ்செய்தவனாகான்.

‡ (ரா) (ச) (ஸ்ரீ,வி) சித்தம், மனசு, இவைகளை சுவாதீனஞ் செய்துக்கொண்டிருப்பவன்.

மேல்கண்ட உ0-உக சுலோகங்களை கூர்மபுராணம் உத்திரபாகம் அத் கக-பக்கம் ருக-லும் உக-சுலோகத்தை கர்கசம்ஹிதை மாதுரியகண்டம் அத் க-சு சகூ-லும் காண்க.

§ (ரா) ஆத்மாவையே முக்கியப்பிரயோஜனமாய் எண்ணி, பிரகிருதி, பிரகிருதியின லுண்டானவஸ்துக்கள், இவைகளில் மமதையற்றவன். (ச) (ஸ்ரீ,வி) தேகேந்திரியாதிகளின் அபிமானத்தை விட்டவன்.

| | | |
|---|---|---|
| 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍 | | செய்கிறவன் |
| 𑌕𑌿𑌲𑍍𑌬𑌿𑌷𑌂 | } * | பாபத்தை யடைகிறதில்லை. |
| 𑌨𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 | | |

ஆசையற்றும், மனசு இந்திரியங்களை யடக்கியும், சகலவித சம்பாத்தியத்தைவிட்டும், சரீரம் நிலைத்திருப்பதற்குள்ள ஆஹார நிமித்தமாய்ச் செய்யவேண்டிய கருமமெவ்வளவோ அவ்வளவுமட்டுஞ் செய்கிறவன் பாபத்தை யடைகிறதில்லை.

(𑌶𑌾𑌂) முந்திய சுலோகத்தில் சொல்லப்பட்டவன் கருமயோக நிஷ்டன்; இவன் ஆருருக்ஷு என்றுஞ் சொல்லப்படுகிறான். இந்த சுலோகத்தில் சொல்லப்பட்டவனோ அவனைவிட மேலந்தஸ்திலிருக்கிற பரம்மஞான நிஷ்டன்; இவன் ஆரூடனென்று சொல்லப்படுகிறான். (௨௧)

---

௨௨. 𑌯𑌦𑍃𑌚𑍍𑌛𑌾𑌲𑌾𑌭𑌸𑌨𑍍𑌤𑍁𑌷𑍍𑌟𑍋 𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑌾𑌤𑍀𑌤𑍋 𑌵𑌿𑌮𑌤𑍍𑌸𑌰𑌃।
𑌸𑌮𑌃 𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌵𑌸𑌿𑌦𑍍𑌧𑍌 𑌚 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾𑌪𑌿 𑌨 𑌨𑌿𑌬𑌧𑍍𑌯𑌤𑍇॥

| | |
|---|---|
| 𑌯𑌦𑍃𑌚𑍍𑌛𑌾𑌲𑌾𑌭𑌸𑌨𑍍𑌤𑍁𑌷𑍍𑌟𑌃 † | விரும்பாமல் கிடைத்த லாபத்தினால் திருப்தியடைந்தவனையும் |
| 𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑌾𑌤𑍀𑌤𑌃 | சீதோஷ்ண சுகதுக்காதிகளில் விருப்புவெறுப்பற்றவனையும் |
| 𑌵𑌿𑌮𑌤𑍍𑌸𑌰𑌃 | மாச்சரியமில்லாதவனையும் |
| 𑌸𑌿𑌦𑍍𑌧𑍌 𑌅𑌸𑌿𑌦𑍍𑌧𑍌 𑌚 ‡ | (ஆகாராதிகள்) கிடைத்தாலும் கிடைக்காவிட்டாலும் |
| 𑌸𑌮𑌃 | சந்தோஷமாவது விசனமாவது இல்லாமல் சமமாயிருக்கிறவன் |
| 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾𑌪𑌿 § | (கருமங்களை) செய்தபோதிலும் |
| 𑌨 𑌨𑌿𑌬𑌧𑍍𑌯𑌤𑍇 | கருமபந்தத்தை யடைகிறதில்லை. |

விரும்பாமல் கிடைத்த லாபத்தினால் திருப்தியடைந்தவனையும், சீதோஷ்ண சுகதுக்காதிகளில் விருப்பு வெறுப்பற்றவனையும், மாச்சரிய

---

* (𑌶𑌾𑌂) (ரா) பாபபுண்ணியங்களின் பலனான சமுசாரத்தை அடைகிறதில்லை; (ரா) என்றால் கருமயோகத்தினாலேயே ஆத்மாவைப் பார்க்கிறானென்பது தாத்பரியம்.

† (ரா) விரும்பாமல் சரீர சம்ரக்ஷணைக்காக கிடைத்தவஸ்துவில் திருப்தியடைந்தவன்.

‡ (ரா) யுத்தமுதலிய கருமங்களில் ஜயம்முதலியன கிடைத்தாலும் கிடைக்காவிட்டாலும்.

§ (ரா) ஞானநிஷ்டையில்லாமல் கருமத்தையே செய்தபோதிலும்.

மற்றவனாயும், கிடைத்தாலும் கிடைக்காவிட்டாலும் சந்தோஷம் விசன மில்லாமல் சமமாயு மிருக்கிறவன் கருமங்களை (பிக்ஷாடனாதிகளை) செய்தபோதிலும் கருமபந்தத்தை யடைகிறதில்லை. (உஉ)

---

உ௩. கதஸங்கஸ்ய முக்தஸ்ய ஜ்ஞாநாவஸ்திதசேதஸ:।
யஜ்ஞாயாசரத: கர்ம ஸமக்ரம் ப்ரவிலீயதே॥

| | |
|---|---|
| கதஸங்கஸ்ய* | அபிமானங்களைவிட்டும் |
| முக்தஸ்ய† | காமக்குரோதங்களைவிட்டும் |
| ஜ்ஞாநாவஸ்திதசேதஸ: | ஞானத்திலேயே ஸ்திரமானமனதுடையவனாய் |
| யஜ்ஞாய‡ | ஈசுவரா ராதனார்த்தமாகவே |
| ஆசரத: | செய்கிறவனுடைய |
| கர்ம | கருமமானது |
| ஸமக்ரம்§ | பலனுடன்கூடி |
| ப்ரவிலீயதே | நசித்துப்போகும். |

அபிமானங்கள், காமக்குரோதங்கள் இவைகளைவிட்டு ஞானநிஷ்டையிலேயே ஸ்திரமான மனதையுடையவனாய் ஈசுவரா ராதனார்த்தமாகவே செய்கிறவனுடைய கருமமானது பலனுடன்கூடி நசித்துப் போகும். (என்றால் கருமமும், கருமபலனு மிவனைப் பந்தப்படுத்த மாட்டாது. ஞானத்தை யுண்டாக்கு மென்பது தாத்பரியம்). (உ௩)

---

உ௪. ப்ரஹ்மார்பணம் ப்ரஹ்ம ஹவிர் ப்ரஹ்மாக்நௌ ப்ரஹ்மணா ஹுதம்।
ப்ரஹ்மைவ தேந கந்தவ்யம் ப்ரஹ்மகர்மஸமாதிநா॥¶

| | |
|---|---|
| அர்பணம்$ | யக்ஞத்தில் நெய் எதினாலெடுத்து அக்கினியில் விடப்படுகிறதோ அந்தவஸ்துவும் |

---

* (ஆ) (ஸ்ரீ,வி) பலாபேக்ஷை யற்றவும்.

† (ஆ) (ஸ்ரீ,வி) சரீராதிகளில் அபிமானம் விட்டவன்.

‡ (௱) (ஸ்ரீ) ஜனங்களின் பிரயோசனத்தை உத்தேசித்து ஞானிகள் செய்கிற யாகங்கள். (என்று பின்னுமொரு அர்த்தஞ்செய் திருக்கிறார்கள்)

§ (ஈா) பிராசீனகருமம் முழுவதும்.

¶ இந்த சுலோகத்தை சரபோபனிஷத்தில் காண்க.

$ (ஸ்ரீ) ஸ்ருக், ஸ்ருவ:, (ஸ்ருக்.) 'சுருக்' என்றால், யக்ஞத்தில் ஹோமம் செய்யவேண்டிய அன்னாதிகள் எதினாலெடுத்து ஹோமம் செய்யப்படுகிறதோ அந்த மரத்தினால் செய்யப்பட்டிருக்கிற பாத்திரம். (ஸ்ருவம்) சுருவம் என்றால், மேல்கண்டபடி ஹோமம் செய்ய நெய் முதலியவற்றை எடுக்கும் பாத்திரம். (நாம் அன்னம், நெய்களை ஹோமம்செய்ய பிலாசவிலை உபயோகிப்பதுபோல்.)

| | |
|---|---|
| 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 | பிரம்மமே |
| 𑌹𑌵𑌿𑌃 | அன்னம், நெய்முதலியவையும் |
| 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 | பிரம்மமே |
| 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌗𑍍𑌨𑍌 | பிரம்மமாகிற அக்கினியில் |
| 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌾 | யக்ஞகர்த்தாவாகிறபிரம்மத்தினாலே |
| 𑌹𑍁𑌤𑌂 | (செய்யப்படுகிற) ஹோமமும் |
| (𑌬𑍍𑌰𑌹𑍍𑌮) | பிரம்மமே |
| 𑌤𑍇𑌨 | அந்த |
| 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌕𑌰𑍍𑌮𑌸𑌮𑌾𑌧𑌿𑌨𑌾 | பிரம்மமாகிற (இந்தயக்ஞ) கருமத்தில் நிலையுள்ளமனதை யுடையவனாலே |
| 𑌗𑌨𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 | அடையப்படுவதும் |
| 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵 | பிரம்மமே. |

யக்ஞத்தில் எந்தவஸ்துவினால் நெய்யெடுத்து அக்கினியில் ஹோமம் செய்யப்படுகிறதோ அந்த வஸ்துவும் பிரம்மமே. ஆகுதி செய்யப்படுகிற அன்னம், நெய், முதலியவைகளும் பிரம்மமே. பிரம்மமாகிற அக்கினியில் யக்ஞ கர்த்தாவாகிற பிரம்மத்தினாலே செய்யப்படுகிற ஹோமமும் பிரம்மமே. அந்தப் பிரம்மமாகிற இந்த யக்ஞகருமத்தில் நிலையுள்ள மனதை யுடையவனாலே யடையப்படுவதும் பிரம்மமே.

(ஷா) முந்திய சுலோகத்தில், யஜ்ஞாய—என்கிற பதத்திற்கு ஞானிகள் ஜனங்களின் பிரயோசனத்தை யுத்தேசித்து அல்லது யக்ஞஸம்ரக்ஷணார்த்தம் யக்ஞஞ்செய்கிறார்களென்று (ஸ்ரீ) அர்த்தஞ் செய்திருக்கிறார். அந்த அர்த்தத்தை யனுசரித்தே அவர் இந்த சுலோகத்திற்கும் அப்படிப்பட்ட ஞானிகள் செய்யும் யக்ஞத்தில் உபயோகிக்கப்படும் சகலவஸ்துக்களும், யக்ஞத்தைச் செய்விக்கிற ரித்துவிக்குகள் முதலாயுள்ள சகலமும் பரப்பிரம்மமென்ற அநுசந்தானத்தோடு செய்கிறபடியால் அவர்கள் பிரம்மமாய் விடுகிறார்களென்று அர்த்தஞ்செய் திருக்கிறார்.

(ரா) கருமமானது, அதற்குச்சாதனமான சகல வஸ்துக்களும் பிரம்மமென்கிற அநுசந்தானத்துடன் செய்யப்படுகிறபடியால் ஞானாகாரமாக ஆகிறது. இந்தக்கருமத்தினால் பரப்பிரம்மத்தை ஆத்மாவாகவுடைத்தானவன் ஆத்மசுவரூபத்தை யடைகிறானென்பது தாத்பரியம்.

(உ) (ஸ்ரீ,வி) யக்ஞசாதனமான சகலமும் பரப்பிரம்மத்தின் அதீனமாகையால், அவைகளும் பிரம்மமென்றே சொல்லப்பட்டன. (ஸ்ரீ,வி) அல்லது சகலத்திற்கும் பிரம்மம் சுவாமியாகையால், எல்லாம் பிரம்மமென்று சொல்லப்பட்டது. இதினால் அபிமானத்தியாகம் சொல்லப்பட்டதாகிறது.

(ஸா) " 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌖𑌲𑍍𑌵𑌿𑌦𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 — எல்லாம் பிரமசுவரூபமே" என்றிருக்கிறதாகையால், தான் செய்கிற ஒவ்வொரு கருமத்திலும், காணப்படும் சகலமான வஸ்துக்களிலும் பிரம்மம் நிறைந்திருப்பதாக அநுசந்தானம் செய்துகொண்டு எவன் தான் செய்யுமொவ்வொரு கருமத்தையும், அதின் சாதனங்களையும், பிரம்மமென்றே அறிகிறானோ, அவன் பிரம்மமாவானென்பது இச் சுலோகத்தின் கருத்தாகக் காணுகிறது. (௨௪)

---

௨௫. 𑌦𑍈𑌵𑌮𑍇𑌵𑌾𑌪𑌰𑍇 𑌯𑌜𑍍𑌞𑌂 𑌯𑍋𑌗𑌿𑌨𑌃 𑌪𑌰𑍍𑌯𑍁𑌪𑌾𑌸𑌤𑍇।
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌗𑍍𑌨𑌾𑌵𑌪𑌰𑍇 𑌯𑌜𑍍𑌞𑌂 𑌯𑌜𑍍𑌞𑍇𑌨𑍈𑌵𑍋𑌪𑌜𑍁𑌹𑍍𑌵𑌤𑌿॥

| | |
|---|---|
| 𑌅𑌪𑌰𑍇 𑌯𑍋𑌗𑌿𑌨𑌃 | சிலகருமயோகிகள் |
| 𑌦𑍈𑌵𑌂* | இந்திராதிதேவதைகளை உத்தேசித்ததான |
| 𑌯𑌜𑍍𑌞𑌮𑍇𑌵 | யக்ஞத்தையே |
| 𑌪𑌰𑍍𑌯𑍁𑌪𑌾𑌸𑌤𑍇 | செவ்வையாயுபாசிக்கிறார்கள் |
| 𑌅𑌪𑌰𑍇† | சில ஞானயோகிகள் |
| 𑌯𑌜𑍍𑌞𑍇𑌨𑍈𑌵 | பிரம்மார்ப்பணமானயக்ஞத்தினாலேயே |
| 𑌯𑌜𑍍𑌞𑌂 | ஆத்மாவை |
| 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌗𑍍𑌨𑍌 | பிரம்மமாகிற அக்கினியில் |
| 𑌉𑌪𑌜𑍁𑌹𑍍𑌵𑌤𑌿 | ஹோமம்செய்கிறார்கள். |

கருமயோகிகள் இந்திராதி தேவதைகளை உத்தேசித்த தாகிய யக்ஞத்தையே செய்கிறார்கள். சில ஞானயோகிகள் முந்திய சுலோகத்தில் சொன்னவிதமான பிரம்மார்ப்பணமான யக்ஞத்தினாலேயே ஆத்மாவை பிரம்மமாகிற அக்கினியில் ஹோமம் செய்கிறார்கள்.

(ஸா) 𑌯𑌜𑍍𑌞𑍇𑌨𑍈𑌵 — தன்னாலேயே, 𑌯𑌜𑍍𑌞𑌂 — தன்னை, 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌗𑍍𑌨𑍌 — பிரம்மமாகிற அக்கினியில், 𑌉𑌪𑌜𑍁𑌹𑍍𑌵𑌤𑌿 — ஹோமம்செய்கிறார்கள். இதின் தாத்பரியமென்னவென்றால், நெய்யானது அக்கினியில் எப்படிச் சேர்க்கப்படுகிறதோ அப்படிப்போல உபாதியுடைய ஆத்மாவை நிருபாதிகனான பரமாத்மாவிடத்தில் ஐக்கியம் செய்வது அல்லது சேர்ப்பதென்பதே.

---

* (ரா) தேவதார்ச்சனை ரூபமான.

† 𑌅𑌪𑌰𑍇 — பின்னும் சிலகருமயோகிகள், 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌗𑍍𑌨𑍌 — அக்கினியையே பிரம்மமாகவெண்ணி, 𑌯𑌜𑍍𑌞𑍇𑌨𑍈𑌵 — சுருக், சுருவம் முதலியவைகளினாலே 𑌯𑌜𑍍𑌞𑌂 — அவிசை, 𑌉𑌪𑌜𑍁𑌹𑍍𑌵𑌤𑌿 — ஹோமம் செய்கிறார்கள்.

(ரா) இந்த சுலோகம் முதல் கருமயோகம் பலவித மென்பது சொல்லப்படுகிறது.

(ஶ) அபரேயோகிந: = சில ஞானிகள், தைவமேவ = பகவானையே, யஜ்ஞம் = ஆராதித்து, பர்யுபாஸதே = உபாசனை செய்கிறார்கள், அபரே = சில ஞானிகள் - யஜ்ஞேநைவ = யக்ஞமாகிய பசுவினாலே, யஜ்ஞம் = விஷ்ணுவைக்குறித்து, ப்ரஹ்மாக்நௌ = பிரம்மத்தை அக்கினியாகபாவித்து அந்த அக்கினியில், உபஜுஹ்வதி = ஹோமம் செய்கிறார்கள். "விஷ்ணும்யஜ்ஞேநயஜ்ஞேஶ்ருஷ்டேநைவபஶுநா। யஜ்ஞோவையஜ்ஞோ விஷ்ணுர்யஜ்ஞோப்ரஹ்ம" (மேல்கண்ட தாத்பரியத்திற்கு ஆதாரமாய் இந்தவாக்கியங்களைக் குறிக்கிறார்.) இந்த சுலோகத்தின் பிந்தியபாகமானது மானஸயக்ஞமென்று அறியத்தக்கது.

(ஸ்ரீ,வி) தைவம்=விஷ்ணு, ஆகையால் விஷ்ணு உபாசனையாகிய யக்ஞம் செய்கிறார்கள். யஜ்ஞேநைவ = பகவானை நிமித்தமாகக்கொண்டு, ப்ரஹ்மாக்நௌ = சுவாநந்தமான அவிசைபுஜிக்கிறபடியால் அக்கினியாக சொல்லப்பட்ட பிரம்மத்தினிடத்தில், உபஜுஹ்வதி = சமர்ப்பிக்கிறார்கள்.

(ஹா) இந்த அத்தியாயத்தின், உரு - முதல், உகூ - வரையிலுள்ள சுலோகங்களில் சொல்லிய விஷயங்களை மனு ஸ்மிருதி, ச-வது அத்தியாயம், உஉ - உங - உச - சுலோகங்களில் காண்க. (உரு)

---

உசா. ஶ்ரோத்ராதீநீந்த்ரியாண்யந்யே ஸம்யமாக்நிஷு ஜுஹ்வதி।
ஶப்தாதீந்விஷயாநந்ய இந்த்ரியாக்நிஷு ஜுஹ்வதி॥

| | |
|---|---|
| அந்யே | சிலர் |
| ஶ்ரோத்ராதீநி | காதுமுதலிய |
| இந்த்ரியாணி | இந்திரியங்களை |
| ஸம்யமாக்நிஷு | அடக்குவது, அல்லது விஷயங்களி லிருந்து இழுத்துக்கொள்ளுவதாகிய அக்கினியில் |
| ஜுஹ்வதி | ஹோமம்செய்கிறார்கள் |
| அந்யே* | பின்னும்சிலர் |

* (பா) அந்யேவி என்று பாடமுமுண்டு.

ஶப்³தா³தீ³ந் — சப்தம்முதலிய
விஷயாந் — விஷயங்களை
இந்த்³ரியாக்³நிஷு — இந்திரியங்களாகிற அக்கினியில்
ஜுஹ்வதி — ஹோமம்செய்கிறார்கள்.

சிலர் காதுமுதலிய இந்திரியங்களை யடக்குகிறதாகிய அக்கினியில் ஹோமம்செய்கிறார்கள். சிலர் சப்தம்முதலிய விஷயங்களை இந்திரியங்களாகிற அக்கினியில் ஹோமம் செய்கிறார்கள்.

(ஸ்ரீ) நைஷ்டிக பிரம்மசாரிக்கு, இந்திரியங்களை யடக்குவதே யக்ஞமாகிறது. எப்படியென்றால், யக்ஞத்தில் பலவஸ்துக்கள் அக்கினியில் ஆகுதி செய்யப்படுகின்றன. அக்கினியில் போடப்பட்ட அந்த வஸ்துக்கள் நசித்துப் (வஸ்துக்களின் ரூபந்தெரியாமல்) போகின்றன. அப்படிப்போல, இந்திரியங்களுடைய வியாபாரத்தை அவைகள் போகிற வழிகளைத்தடுத்து நிறுத்துவதே அக்கினி; அந்த அக்கினியில் இந்திரியங்களுடைய வியாபாரத்தை ஹோமம் செய்துவிட்டால், அந்த வியாபாரம் நசித்துப்போகிறது.

கிரகஸ்தாசிரமத்தி லிருப்பவனுக்கு விஷயங்களில் பற்றுதலை விடுவதே யக்ஞமாகிறது. எப்படியென்றால், அவன் சப்தாதிவிஷயங்களை அனுபவித்துக்கொண் டிருந்தாலும், அந்த விஷயங்களிலுள்ள பற்றுதலை ஹவிஸாகவும், இந்திரியங்களை அக்கினியாகவும் பாவித்து அந்த விஷயப்பற்றுதலாகிய ஹவிஸை இந்திரியங்களாகிற அக்கினியில் ஹோமம் செய்கிறான். அந்தந்த இந்திரியங்கள் எந்தவஸ்துவை கிரகித்தபோதிலும் அந்த வஸ்துவினிடத்தி லுண்டாகிற பற்றுதலை நசிக்கச்செய்கிறதுதான் ஹோமம்.

(ஸ்வா) நைஷ்டிக பிரம்மசாரி, கிரகஸ்தன் என்று பிரித்துச் சொல்லாமல், அவிருத்தமான விஷயக்கிரகணங்களை ஹோமம் செய்கிறனென்று (ஸ்ரீ) சொல்லியிருக்கிறார். மற்றவிஷயத்தி லிவருடைய தாத்பரியம் மேல்கண்ட அர்த்தத்தோ டொத்திருக்கின்றது.

(ரி,வி) விஷயபோகங்களை அனுபவித்தாலும் அப்படி அனுபவிக்கிற விஷயங்களை ஈசுவராராதனமாக எண்ணுவதே ஹோமம். (இந்தபேதம் தவிர மற்றவைகள் மேற்கண்ட அர்த்தத்தோ டொத்திருக்கின்றன.) (௨௬)

---

௨௭. ஸர்வாணீந்த்³ரியகர்மாணி ப்ராணகர்மாணி சாபரே।
ஆத்மஸம்யமயோகா³க்³நௌ ஜுஹ்வதி ஜ்ஞாநதீ³பிதே॥

| | |
|---|---|
| அபரே | சிலர் (ஞானநிஷ்டர்கள்) |
| ஸர்வாணி இந்த்ரியகர்மாணி | ஞானேந்திரிய கருமேந்திரிய வியாபாரங்களையும் |
| ப்ராணகர்மாணி ச | பிராணவாயு முதலிய பத்துவாயுக்களுடைய * வியாபாரங்களையும் |
| ஜ்ஞாநதீபிதே † | பிரம்மஞானத்தினால் பிரகாசிக்கிற |
| ஆத்மஸம்யமயோகாக்நௌ | பிரம்மஞான நிஷ்டையில் மனசை நிறுத்தலாகிய யோகமென்கிற அக்கினியில் |
| ஜுஹ்வதி | ஹோமம்செய்கிறார்கள். |

சிலர் ஞானேந்திரிய கருமேந்திரியங்களுடையவும், பிராணவாயு முதலிய பத்துவாயுக்களுடையவும் வியாபாரங்களைப் பிரம்மஞானத்தினால் பிரகாசிக்கிற பிரம்மஞான நிஷ்டையில் மனசை நிறுத்தலாகிய யோகமென்கிற அக்கினியில் ஹோமம் செய்கிறார்கள். (இந்திரியங்களுடைய வியாபாரத்திலாவது, பிராணன் முதலிய வாயுக்களுடைய

---

* (ஸ்ரீ) பத்துவாயுக்களாவன — வாயுக்களின் செய்கையாவன.

| | |
|---|---|
| க. பிராணன். | தேகத்திற்குள் ளிருந்துகொண்டு ஞானேந்திரியங்கள் மூலமாய்ச் சிலபாகம் வெளியிற்போவதும் வருவதுமா யிருப்பது |
| உ. அபானன் | அபானத்தின் வழியாச் சிலபாகம் வெளியிற் போவதும் வருவதுமா யிருப்பது. |
| ௩. வியானன். | தேகம்முழுதும் சுற்றிக்கொண்டே யிருப்பது. (இந்த வாயு சுத்துகிறதினால்தான், இரத்தத்தை தேகம் முழுவதும் ஓடும்படி செய்கிறது.) |
| ச. உதானன். | தேகத்திற்குள் நாபியிலிருந்து தலையுச்சிவரையில் போய் வருகிறதாக விருப்பது. |
| ரு. சமானன். | ஆகாராதிகளை ஜீரணஞ்செய்வித்து ஆகாரத்தின் சத்துக்களை அவைபோய்ச் சேரவேண்டிய இடத்தில் சேர்த்து அசத்தை மலஜலரூபமாய் வெளிப்படும்படி செய்கிறது. |
| சு. நாகன் | வாந்தியை யுண்டுபண்ணுகிறது. |
| எ. கூர்மன். | கண்களை மலரச்செய்கிறது. |
| அ. கிருகரன். | தும்மலை யுண்டாக்குகிறது. |
| கூ. தேவதத்தன். | கொட்டாவியை யுண்டாக்குகிறது. |
| க0. தனஞ்சயன். | தேகத்தில் பிராணனிருக்கையிலும், பிராணன் போன பிறகும், தேகத்திலிருக்கிறது. |

இந்த பத்து வாயுக்களின் பெயர்களையும் செய்கைகளையும் யோகசூடாமணியுபனிஷத்திலும் லிங்கபுராணம் அத் - அ - சுவது ச முதல் கூகூ வரையிலுள்ள சுலோகங்களிலும் சிவ புராணம் வாயுசம்ஹிதை அத் - உகூ - ௩கூ முதல் சுக வரையிலுள்ள சுலோகங்களிலும் காண்க.

† (மூ॰) விவேகத்தினால் பிரகாசிக்கிற.

வ்யாபாரத்திலாவது மனதைச் செல்லவொட்டாமல் தடுப்பதுதான் ஹோமமென்பது (ரா) தாத்பரியம். (உஎ)

---

உஅ. த்ரவ்யயஜ்ஞாஸ்தபோயஜ்ஞா யோகயஜ்ஞாஸ்ததாபரே।
ஸ்வாத்யாயஜ்ஞானயஜ்ஞாஶ்ச யதய: ஸம்ஶிதவ்ரதா:॥

| | |
|---|---|
| அபரே | சிலர் |
| த்ரவ்யயஜ்ஞா: * | திரவியதானத்தை யக்ஞமாகச் செய்கிருர்கள் |
| (அபரே) | சிலர் |
| தபோயஜ்ஞா: † | தபஸை யக்ஞமாகச்செய்கிருர்கள் |
| (அபரே) | சிலர் |
| யோகயஜ்ஞா: ‡ | யோகத்தையே யக்ஞமாகச் செய்கிருர்கள் |
| (அபரே) | சிலர் |
| ததா | அப்படியே |
| ஸ்வாத்யாயஜ்ஞானயஜ்ஞாஶ்ச § | வேதசாஸ்திரங்களைப் பாராயணஞ் செய்வது, அவைகளின் அர்த்தவிசாரஞ் செய்வது, இவைகளையே யக்ஞமாகச் செய்கிருர்கள் |

---

* (ஶம்) திரவியங்களை (பொருள்களை) நல்ல க்ஷேத்திரம், தீர்த்தமுள்ள விடங்களில் சத்பாத்திரத்தில் தானஞ்செய்வதையே யக்ஞமாக வெண்ணுகிருர்கள் (ரா) ஞாயமாய் ஸம்பாதித்தபொருளை சுவாமிபூஜை, யாகங்கள், நியமமாய்ச் செய்கிற ஹோமம், தானம், முதலிய விஷயங்களுக்காக செலவிடுவதையே யக்ஞமாக வெண்ணுகிருர்கள். (ஶ) ஆத்மஸம்யம யோகாக்கினியில் ஹவிஸ்முதலிய திரவியங்களை ஹோமம் செய்கிறது. அல்லது பொருளை யோக்கியர்களுக்கு தானஞ்செய்வது. (ஶ்ரீ,வி) பகவதர்ப்பணமாக திரவியத்தைச் செலவிடுவது.

† (ஶம்) தபசு செய்வதையே யக்ஞமாக வெண்ணுகிருர்கள் (ஶ்ரீ) (ரா) (ஶ்ரீ,வி) கிருச்சிர சாந்திராயணவிரதம், உபவாசாதி. (ஶ) தான் செய்யும் தபஸை பிரம்மார்ப்பணஞ் செய்வது. (இந்த அர்த்தத்தையும் (ஶ்ரீ,வி) ஒப்புக்கொள்ளுகிறர்.)

‡ (ஶம்) பிராணயாமப் பிரத்தியாஹாராதி அஷ்டாங்கயோகம். (ஶ்ரீ) மனதைச் சமாதானமாக ஒரேயிடத்தில் நிறுத்துவது. (ரா) புண்ணியக்ஷேத்திரம், புண்ணிய தீர்த்தமுள்ள இடத்தில் வாசம்செய்வது. (ஶ்ரீ,வி) பகவத்தியானமாகிற யக்ஞம்.

§ (ஶம்) (ஶ்ரீ) (ரா) (ஶ்ரீ,வி) ஸ்வாத்யாயயஜ்ஞம் = வேதாதிபாராயணம்; ஜ்ஞானயஜ்ஞம் = வேதார்த்த விசாரம் செய்தறியும் ஜ்ஞானம் (ஶ்ரீ) அல்லது, வேதார்த்த விசாரத்தினல் சம்பாதிக்கிற ஜ்ஞானமே யக்ஞம்.

| | |
|---|---|
| யதய꞉ * | இவ்விதமான யக்ஞங்களைச் செய்பவர்கள் |
| ஸம்ஶிதவ்ரதா꞉ † | தீக்ஷணமான, அல்லது கடினமான விரதத்தை யுடையவர்களா யிருக்கிறார்கள். |

சிலர் திரவியதானத்தையும், சிலர் தபஸையும், சிலர் யோகத்தையும், சிலர் வேதமோதல் வேதார்த்த விசாரம்செய்தல் இவைகளையும், யக்ஞங்களாகச் செய்கிறார்கள். இவ்வித யக்ஞங்களைச் செய்கிறவர்கள் கடினமான விரதத்தை யுடையவர்களா யிருக்கிறார்கள். (உ௮)

---

உ௯. அபானே ஜுஹ்வதி ப்ராணம் ப்ராணே அபானம் ததாபரே।
ப்ராணாபானகதீ ருத்வா ப்ராணாயாமபராயணா꞉॥

| | |
|---|---|
| ப்ராணாயாமபராயணா꞉ | பிராணாயாமம் செய்கிறவர்களாயிருக்கிற |
| அபரே | பின்னும்சிலர் |
| ப்ராணாபான கதீ ருத்வா | பிராணாபான வாயுக்களுடைய நடைகளைத்தடுத்து } கும்பகம். |
| அபானே ப்ராணம் | அபானவாயுவில் பிராணவாயுவையும் } பூரகம். |
| ததா | அப்படியே |
| ப்ராணே அபானம் | பிராண வாயுவில் அபானவாயுவையும் } ரேசகம். |
| ஜுஹ்வதி | ஹோமம்செய்கிறார்கள். |

பிராணயாமஞ் செய்கிறவர்களாயிருக்கிற பின்னும் சிலர், பிராணாபான வாயுக்களுடைய நடைகளைத்தடுத்து, அபானவாயுவில் பிராணவாயுவையும், அப்படியே பிராணவாயுவில் அபானவாயுவையும், ஹோமஞ் செய்கிறார்கள்.

(ஸ்ரீ) பூரகமென்றால், மூக்கினால் சுவாசத்தை உள்ளுக்கிழுப்பது. கும்பகமென்றால், மூக்கினால் உள்ளுக்கிழுத்த சுவாசத்தை

---

* (ஶம்) (ரா) (மீ,வி) யதநஶீலா꞉ (ஸ்ரீ) ப்ரயத்நஶீலா꞉ (இந்த இரண்டு வாக்கியங்களுடைய அர்த்தமொன்றுதான். அதாவது பிரயத்தினம், அல்லது முயற்சி செய்கிறவர்கள்.)

† (ரா) திருடமான நிச்சயமுள்ளவர்கள். (ஸ்ரீ) தினம் ஆயிரம் சிவலிங்கம் செய்து பூஜைசெய்தாலன்றி சாப்பிடுகிறதில்லை. திரவியஞ் சம்பாதித்து இந்தக் கோவிலைக் கட்டுகிறவரையில் அரிகண்டம் போட்டுக்கொள்ளுகிறேன். திருப்பதிக்கு அங்கப்பிரதக்ஷணஞ் செய்துகொண்டு போகிறேன். என்பவைகளைப்போலொத்த கடினவிரதங்கள் செய்துகொண்டு அவ்விதமாய் நடக்கிறவர்கள்.

உள்ளேயே நிறுத்துவது. ரேசகமென்றால், நிறுத்தப்பட்ட சுவாசத்தில் சொற்ப பாகம் வெளியில்விடுவது. பூரககாலத்தில் ஒரு மூக்கினால் சுவாசமிழுக்கப்படுகிறது. ரேசககாலத்தில் மற்றொரு மூக்கினால் சுவாசம் விடப்படுகிறது. இப்படி சுவாசத்தை இழுக்கையிலும், விடுகையிலும், ஹம்ஸஃஸோஹம், என்று நேராகவும் தலைகீழாகவும் பிரகாசிக்கிற, (அஜபாமந்த்ரம்)அஜபாமந்திரத்தினால், "தத்த்வமஸி" என்கிறஇடத்தில் சொல்லப்படுகிற ஜீவப்பிரம்ம ஐக்கியத்தை மறுபடியும், மறுபடியும் சிந்திக்கிறவர்களா யிருக்கிறார்கள்.) (இதற் காதாரமாய் யோகசாஸ்திரத்திலிருந்து ஒரு சுலோகம் குறிக்கிறார்.) "ஸகாரேண பஹிர்யாதி ஹகாரேண விசேத்புந꞉ । ப்ராணஸ்தத்ர ஸவா ஹம்ஸ꞉ ஹம்ஸஇதி ந்விஜ்ஞேய꞉" * இந்த சுலோகத்தின் அர்த்தத்தையும் இதின் வியாக்கியானார்த்தத்தையும் விளக்குகிற ஸ்கந்தபுராணம் காசிகண்டம் முதல் பாகம் அத் ௪௧-லுள்ள அடியில்கண்ட வாக்கியங்களைப்பார்க்க— அபாந꞉ கர்ஷதி ப்ராணம் ப்ராணோ(அ)பாநம் ச கர்ஷதி । ஊர்த்⁴வாத⁴ஸ்ஸ்தி²தாவேதௌ ஸம்யோஜயதி யோகவித் ॥ ௧௫௫ ॥ ஹகாரேண பஹிர்யாதி ஸகாரேண விசேத்புந꞉ । ஹம்ஸஹம்ஸேத்யமும் மந்த்ரம் ஜீவோ ஜபதி ஸர்வதா ॥ ௧௫௬ ॥ ஷட்ஸதாநி திவாராத்ரௌ ஸஹஸ்ராண்யேகவிம்சதி꞉ । ஏதத்ஸம்க்²யாந்விதம் மந்த்ரம் ஜீவோ ஜபதி ஸர்வதா ॥ ௧௫௭ ॥ அஜபா நாம கா³யத்ரீ யோகி³நாம் மோக்ஷதா³யிநீ । அஸ்யா꞉ ஸங்கல்பமாத்ரேண ஸர்வபாபை꞉ ப்ரமுச்யதே ॥ ௧௫௮ ॥ — அபான வாயுவானது பிராணவாயுவை இழுக்குகிறது. பிராண வாயுவானது அபானவாயுவை இழுக்குகிறது. மேலும் கீழுமாயிருக்கிற இந்த (இரண்டு) வாயுக்களையும் யோகமறிந்தவன் சேர்க்கிறான். (என்றால், அசையவொட்டாமல் செய்கிறான்.) ஹகாரரூபமாய் வெளிப்படுத்துகிறதும் ஸகாரரூபமா யுள்ளுக்கிழுக்கிறதுமா யிருக்கிறான். இதனால் ஹம்ஸ ஹம்ஸ என்ற மந்திரத்தை ஜீவனெப்போதும் ஜபம் செய்கிறவனாகிறான். இந்த மந்திரத்தை ஜீவனானவன் இராப்பகல் சேர்ந்த ஒருநாளி லெப்போதும் ஜபிப்பானாகில் உ௧௬00 - மந்திரமாகிறது. (என்றால், அவ்வளவுசுவாஸம் விடுகிறானென்பது தாத்பரியம்)

* (ஹ்வா) இந்த சுலோகத்தின் அர்த்தத்திற் கொத்ததான அடியில்கண்ட சுலோகத்தை யோகசூடாமணி யுபநிஷத்திலும் யோகசிகோபநிஷத் ௧-௬-அத்தியாயங்களிலும் த்தியானபிந்தூபநிஷத்திலும் காண்க. "ஹகாரேண பஹிர்யாதி ஸகாரேண விசேத்புந꞉ । ஹம்ஸஹம்ஸேத்யமும் மந்த்ரம் ஜீவோ ஜபதி ஸர்வதா ॥" மற்றொருபாடம். "ஹம்ஸஹம்ஸேதி மந்த்ரோ(அ)யம் ஸர்வைர்ஜீவைஶ்ச ஜப்யதே ॥"

இந்த அஜபா (ஜபிக்காத) மந்திரமாகிய காயத்திரியானது யோகிகளுக்கு மோக்ஷத்தைக் கொடுக்கத் தக்கதாயிருக்கிறது. இந்த காயத்திரியைச் செய்ய யெண்ணின மாத்திரத்தில் மனிதனுனவன் பாபங்களிலிருந்து விடுபடுகிறுன். (௨௯)

---

௩0. அபரே நியதாஹாரா: ப்ராணாந் ப்ராணேஷு ஜுஹ்வதி।
ஸர்வேऽப்யேதே யஜ்ஞவிதோ யஜ்ஞக்ஷபிதகல்மஷா:॥

| | |
|---|---|
| அபரே | சிலர் |
| நியதாஹாரா: (ஸந்த:) | மிதமான ஆகாரஞ் செய்துகொண்டு |
| ப்ராணாந்* | இந்திரியங்களுடைய வியாபாரங்களை |
| ப்ராணேஷு† | வசமான இந்திரியங்களிலேயே |
| ஜுஹ்வதி | ஹோமம்செய்கிருர்கள் |
| ஏதே ஸர்வேऽபி | (௨௫-வது சுலோகம்முதல் இதுவரையில் சொல்லப்பட்டிருக்கிற) இவர்களெல்லோரும் |
| யஜ்ஞவித: | யக்ஞத்தையறிந்தவர்கள். அல்லது யக்ஞத்தைச் செய்தவர்கள் |
| யஜ்ஞக்ஷபிதகல்மஷா: | யக்ஞத்தினுல் தங்கள்பாபத்தைப் போக்கடித்துக்கொண்டவர்கள். |

சிலர் மிதமான ஆகாரஞ் செய்துகொண்டு இந்திரியங்களுடைய வியாபாரங்களை, வசமான் இந்திரியங்களிலேயே ஹோமம் செய்கிருர்கள். (சேர்க்கிருர்கள்.) இவர்களெல்லோரும் யக்ஞம் செய்து அதினுல் தங்கள் பாபங்களைப் போக்கடித்துக்கொண்டவர்க ளாகிருர்கள்.

(ஸ்ரீ) மிதமான ஆகார மென்பது, ஒருவன் தன் வயிற்றை நிரப்ப எவ்வளவு ஆகாரம் வேண்டியதோ, அந்த அளவை நாலுபங்காக்கி, இரண்டு பங்கை அன்னுதிகளாலும், ஒருபங்கை ஜலத்தினுலும் நிரப்பி மற்றொரு பாகத்தை நிரப்பாமல் விட்டுவிடுவது. (ஏனென்முல், வாயுக்கள் சஞ்சாரஞ் செய்யவேண்டியதற்காகத்தான்.) இப்படி புஜிப்பதுதான் மிதமான ஆகாரம்.‡

(ஸ்வா) இந்திரிய வியாபாரங்களை இந்திரியங்களிலே யடக்குவதென்று (ஸ்ரீ)ம், பிராணன்முதலிய வாயுக்களை பிராணன் முதலிய

---

* (மூ) பிராணன் முதலிய வாயுக்களை.

† (ரா) பிராணன்முதலிய வாயுக்களிலே, அதாவது எந்தெந்தவாயுக்கள் அடக்கப் படுகின்றனவோ அதில் மற்றவாயுக்களை.

‡ இந்த அர்த்தத்தைக்கொடுக்கிற சுலோகத்தை ௬-வது அத்தியாயம் ௧௬-வது சுலோகத்தின் வியாக்கியானத்தில் காண்க.

வாயுக்களிலே யடக்குவதென்று (ஶ்ரீ) ம், சொல்லியிருக்கிருர்கள். இந்திரியங்களானுலும், அல்லது வாயுக்களானுலும் ஒன்றையொன்றி லடக்குவதெப்படி யென்ருலோ, யோகாப்பியாசஞ் செய்கிறவர்கள் இந்திரியங்கள், வாயுக்களிவைகளை அவைகளின் விஷயங்களில் பிரவேசிக்காம லடக்கவேண்டியது அவசியம். எல்லா இந்திரியங்களை யாவது, அல்லது வாயுக்களையாவது ஒரேகாலத்தி லடக்கிவிடுவது, ஆரம்பத்தில் சாத்தியமல்லவாகையால், ஒவ்வொன்ருய் அடக்கவேண்டும்; முதலிலெது அடக்கப்படுகிறதோ அதோடு அடக்கப்படாம லிருப்பவைகளை ஒவ்வொன்ருகச் சேர்ப்பதுதான் ஒன்றில் மற்ருென்றைச் சேர்ப்பது, அல்லது ஹோமஞ்செய்வது. இப்படி யடக்கிக்கொண்டே வந்து கடைசியில் எல்லாமடங்கிஞல், பிறகு மனசு சலிக்காமல் ஒரே நிலையில் நிற்கும். (௩௦)

---

௩௧. யஜ்ஞஶிஷ்டாம்ருதபுஜோ யாந்தி ப்ரஹ்ம ஸநாதநம்।
நாயம் லோகோஸ்த்யயஜ்ஞஸ்ய குதோந்ய꞉ குருஸத்தம॥

| | |
|---|---|
| யஜ்ஞஶிஷ்டாம்ருதபுஜ꞉ | நித்தியம், நைமித்திகம்முதலிய யக்ஞங்கள் செய்து மிச்சமாகிற அமிருதமாகிய அன்னத்தைப் புஜிக்கிறவர்கள் |
| ஸநாதநம் ப்ரஹ்ம | சாசுவதமானபிரம்மத்தை |
| யாந்தி | அடைகிருர்கள் |
| ஹே குருஸத்தம | ஓ! குருவம்ச சிரேஷ்டனே! |
| அயஜ்ஞஸ்ய | யக்ஞஞ் செய்யாதவனுக்கு |
| அயம் லோக꞉ | (அற்பசுகமாகிய தருமார்த்த காமானுபவமுள்ள) இந்தலோகம் |
| நாஸ்தி | கிடையாது |
| அந்ய꞉ | (சுவர்க்காதி) மற்றது |
| குத꞉ | ஏது? |

நித்திய நைமித்திகங்களான யக்ஞங்களைச்செய்து (ஹோமாதிகள், வைசுவதேவம், பலிகரணம், சுவாமி நிவேதனம், அதிதிபூஜை முதலிவைசெய்து) மிச்சமான அன்னம் அமிருதமானது. அதை சாப்பிடுகிற (யக்ஞஞ்செய்த) வர்கள் சாசுவதமான பிரம்மத்தை யடைகிருர்கள். ஓ! அர்சுஞ! யக்ஞஞ் செய்யாதவனுக்கு இந்தலோகத்திலாவது, சுவர்க்காதி பரலோகத்திலாவது பிரயோஜனம் கிடையாது.

(ஶ்ரீ) (ஸ்ரீ) திரவியயக்ஞம், தபோயக்ஞம் முதலிய யக்ஞங்கள் முந்திச் சொல்லப்பட்டிருக்கின்றனவல்லவா? அந்த யக்ஞங்களில் அன்னமேது? மிச்சந்தானேது? என்ருலோ, எங்கெந்த யக்ஞத்தில் அன்னமிச்சமுண்டோ, அவைகளின் விஷயத்தில் அன்னமிச்சமென்றும்,

அன்ன சம்பந்தமில்லாத யக்ஞவிஷயத்தில், யக்ஞஞ் செய்தகாலம் போக மிச்சமானகாலத்தில் விதிப்படி புஜிக்கத்தக்க சுத்தமான யாதொரு அன்னமென்றும் தாத்பரியம்.

(ரா) அயஜ்ஞஸ்ய = மகாயக்ஞத்துடன் நித்தியநைமித்திக யக்ஞஞ் செய்யாதவனுக்கு, அயம்லோக:=சுவர்க்காதி லோகங்களில் தருமார்த்த காமங்களுடைய அநுபவமாவது, அந்ய: = மோக்ஷமாவது, குத:= ஏது? நாஸ்தி = கிடைக்கமாட்டாது.

(ஸ்ரீ) இந்த சுலோகத்தினுடைய அர்த்தத்திற் கொத்ததாகிய இதின் மூன்றுவதத்தியாயம், கங-வது சுலோகத்தைப்பார்க்க. (ஙக)

---

ஙஉ. ஏவம்பஹுவிதா யஜ்ஞா விததா ப்ரஹ்மணோ முகே।
கர்மஜாந்வித்தி தாந்ஸர்வா நேவம் ஜ்ஞாத்வா விமோக்ஷ்யஸே॥

| | |
|---|---|
| ஏவம் | இப்படிப்பட்ட |
| பஹுவிதா: | அநேகவிதங்களான |
| யஜ்ஞா: | யக்ஞங்கள் |
| ப்ரஹ்மண: முகே | வேதத்தினுடையமுகத்தில் (வேதத்தில்) |
| விததா: | விவரித்துச்சொல்லப்பட்டிருக்கின்றன |
| ஸர்வாந் தாந் | அந்த சமஸ்த யக்ஞங்களையும் |
| கர்மஜாந் | (மனோ, வாக், தேகங்களின் செய்கையாகிய) கருமத்தினுலுண்டானவையாக |
| வித்தி | அறி |
| ஏவம் | இவ்விதமாய் |
| ஜ்ஞாத்வா | அறிந்து (ஞானநிஷ்டனாய்) |
| விமோக்ஷ்யஸே | கருமபந்தத்திலிருந்துவிடுபடுவாய். |

(மேலே சொல்லிவந்த) இப்படிப்பட்ட அநேகவிதமான யக்ஞங்கள் வேதத்தில் விவரித்துச் சொல்லப்பட்டிருக்கின்றன. அந்த சமஸ்த யக்ஞங்களையும், மனசு, வாக்கு, தேகம், இவைகளின் செய்கையாகிய கருமத்தின லுண்டானவையாக அறி. இவ்விதமா யறிந்து (ஞான நிஷ்டையை யடைந்தால்) கருமபந்தத்திலிருந்து விடுபடுவாய்.

(ஸம்) "இவ்விதமாயறிந்து கருமபந்தத்தி லிருந்து விடுபடுவாய்" என்று சொன்னதின் தாத்பரிய மென்னவென்றால், யக்ஞம் முதலிய கருமங்கள் ஆத்மாவைச் சேர்ந்ததல்ல. மனோ, வாக், தேகங்களுடைய செய்கையென்றறிந்து, ஆத்மஞான நிஷ்டையிலேயே யிருப்பானுகில் கருமம் இவனைத் தொடராதென்பதுதான்.

(ரா) ஏவம் பஹுவிதா: = இப்படிப்பட்ட அநேகவிதமான, யஜ்ஞா: = கருமயோகங்கள், ப்ரஹ்மணோமுகே விததா: = ஆத்ம சுவ ரூப நிச்சயமடைவதற்குக் காரணங்களா யிருக்கின்றன; ஸர்வாந் தாந் கர்மஜாந் = மேல்சொன்ன சகல கருமயோகங்கள், பிரதி தினம், தான் அநுஷ்டிக்கிற நித்திய நைமித்திக கருமங்களா லுண்டாயினவென்று, வித்தி = அறி. ஏவம் = இவ்விதமாய், ஜ்ஞாத்வா = தெரிந்தும், அநுஷ்டித்தும் வந்தால், விமோக்ஷ்யஸே = மோக்ஷமடைவாய்.

(ம) (ஸ்ரீ,வி) ப்ரஹ்மணோமுகே விததா: = யக்ஞபோக்தா பிரம்ம மானதினுல் பிரம்மத்தின் முகத்தில் யக்ஞங்கள் விசாலமாயிருக்கின்றன. ஸர்வாந்தாந்கர்மஜாந்வித்தி = இந்த யக்ஞங்களெல்லாம் மனோ வாக் காயங்களுடைய கருமங்களாலுண்டாயினவென்று அறி. (மற்றவை வித்தியாசமில்லை.) (௩௨)

---

௩௩. ஶ்ரேயாந்த்ரவ்யமயாத்யஜ்ஞாஜ் ஜ்ஞாநயஜ்ஞ: பரந்தப।
ஸர்வம் கர்மாகிலம் பார்த ஜ்ஞாநே பரிஸமாப்யதே॥

| | |
|---|---|
| பரந்தப | ஓ! சத்துருவைத் தபிப்பிக்கிறவனே! |
| த்ரவ்யமயாத் | திரவியத்தினுல் செய்யக்கூடிய |
| யஜ்ஞாத் | யக்ஞத்தைப்பார்க்கிலும் |
| ஜ்ஞாநயஜ்ஞ: | ஞானமாகிற யக்ஞமானது |
| ஶ்ரேயாந் | சிரேஷ்டமாகும் |
| பார்த | ஓ! குந்திபுத்திரா! |
| ஸர்வம் கர்ம | ஈசுவரார்ப்பணமாகச் செய்யப்படும் சகல கருமமும் |
| அகிலம் | பலன்களுடன் |
| ஜ்ஞாநே | (பிரம்ம) ஞானத்திலே |
| பரிஸமாப்யதே | அடங்கியிருக்கிறது. |

ஓ! அர்சுனு! திரவியங்களால் (பணம், அல்லது யக்ஞத்தி லுபயோகிக்கவேண்டிய வஸ்துக்களால்) செய்யக்கூடிய யக்ஞத்தைப் பார்க்கிலும், ஞானமாகிற யக்ஞமானது சிரேஷ்டமாகும். ஓ! குந்திபுத்திரா! ஈசுவரார்ப்பணமாகச் செய்யப்படும் சகல கருமமும் அதின் பலனுடன் பிரம்மஞானத்தில் அடங்கி யிருக்கிறது. (ஞானத்தைவிட கரும பலன் மிகவும் அற்பமானதென்று கருத்து.)

(ரா) திரவியம் முதலியவைகளால் செய்யப்படுகிற (கருமமாகிய) யக்ஞத்தில் ஞானமடங்கி யிருக்கிறது. எப்படியென்றால் யக்ஞரூபமான ஒவ்வொரு கருமத்திலும், ஒரு பாகம் கருமமாயும், மற்றொரு பாகம்

ஞானமாயு மிருக்கிறது, கருமபாகத்தைக் காட்டிலும் ஞானபாகம் சிரேஷ்டமானது. ஓ! அர்சுன! சகல கருமமும், 𑌸𑌰𑍍𑌵𑌂—அந்தக் கருமத்திற்குபயோகமான சகலவஸ்துக்களும், ஞானத்தில் முடிவையடையும், என்றால், இப்படி கருமம் செய்துவந்தால், அந்தக்கருமமே ஞானகாரமாய் விடுமென்பது கருத்து.

(ஃ; (ஶ்ரீ,வி) 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌕𑌰𑍍𑌮𑌾𑌖𑌿𑌲𑌂—பூரணமாய் (குறைவன்றி) செய்யப்படும் கருமம் ஞானத்தை பலனாகவுடையதாக வாகிறது. (௩௩)

---

௩௪. 𑌤𑌦𑍍𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌪𑍍𑌰𑌣𑌿𑌪𑌾𑌤𑍇𑌨 𑌪𑌰𑌿𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑍇𑌨 𑌸𑍇𑌵𑌯𑌾।
𑌉𑌪𑌦𑍇𑌕𑍍𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌤𑍇 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑌸𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌃॥

௩௫. 𑌯𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌨 𑌪𑍁𑌨𑌰𑍍𑌮𑍋𑌹𑌮𑍇𑌵𑌂 𑌯𑌾𑌸𑍍𑌯𑌸𑌿 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵।
𑌯𑍇𑌨 𑌭𑍂𑌤𑌾𑌨𑍍𑌯𑌶𑍇𑌷𑍇𑌣 𑌦𑍍𑌰𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑌥𑍋 𑌮𑌯𑌿॥

| | |
|---|---|
| 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵 | ஓ! பாண்டவா! |
| 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌃 | (ஆத்ம) தத்துவத்தையறிந்த |
| 𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑌃 | பிரம்மஞானிகள் |
| 𑌯𑌤𑍍 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 | எந்தபிரம்மஞானத்தை |
| 𑌤𑍇 | உனக்கு |
| 𑌉𑌪𑌦𑍇𑌕𑍍𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 | உபதேசஞ்செய்வார்களோ |
| (𑌯𑌤𑍍) 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 | எந்தஞானத்தையடைந்து |
| 𑌪𑍁𑌨𑌃 | மறுபடியும் |
| 𑌏𑌵𑌂 𑌮𑍋𑌹𑌂 | இவ்வித (பந்துவதமாகிறதென்கிற) மோகத்தை |
| 𑌨 𑌯𑌾𑌸𑍍𑌯𑌸𑌿 | அடையமாட்டாயோ |
| 𑌯𑍇𑌨 | எதினாலே (எந்த்ஞானத்தினாலே) |
| 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌅𑌶𑍇𑌷𑍇𑌣 | சகலப்பிராணிகளையும் |
| 𑌆𑌤𑍍𑌮𑌨𑌿 | உன்னிடத்திலும் |
| 𑌅𑌥𑍋 | அப்படியே |
| 𑌮𑌯𑌿 (𑌚) | என்னிடத்திலும் |
| 𑌦𑍍𑌰𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑌿 | பார்ப்பாயோ |
| 𑌤𑌤𑍍 | அந்தஞானத்தை |
| 𑌪𑍍𑌰𑌣𑌿𑌪𑌾𑌤𑍇𑌨 | சாஷ்டாங்கநமஸ்காரத்தினாலேயும் |
| 𑌪𑌰𑌿𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑍇𑌨 | செவ்வையாய்க்கேட்பதினாலேயும் |
| 𑌸𑍇𑌵𑌯𑌾 | குருவணக்கத்தினாலேயும் |
| 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 | அறிந்துகொள். |

ஓ! அர்சுந! ஆத்மதத்துவமறிந்த பிரம்மஞானிகள் எந்தப் பிரம்ம ஞானத்தை யுனக் குபதேசஞ் செய்வார்களோ, எந்த ஞானத்தை யடைந்தால் மறுபடி இவ்வித (பந்துவைக் கொல்லுகிறதாகிய யுத்தத்தைச் செய்யமாட்டேன் என்கிற) மோகத்தை யடையமாட்டாயோ, எந்த ஞானத்தினல் சகலப்பிராணிகளையும் உன்னிடத்திலு மப்படியே என்னிடத்திலும் பார்ப்பாயோ, அந்த ஞானத்தை, சாஷ்டாங்கநமஸ்காரம், செவ்வையாய்க் கேட்பது, குருசேவைசெய்வது இவைகளினலே யறிந்துகொள்.

(ஸ்ரீ) சகலபூதங்களையு முன்னிடத்தில் அபேதமாய்ப் பார்த்து, பிறகு உன்னையும் என்னிடத்தில் அபேதமாய்ப் பார்ப்பாய் என்பது தாத்பரியம்.

(கூச - வது சுலோகத்திற்குத் தனியாயும், கூரு - வது சுலோகத்திற்குத் தனியாயும், (ரா) (மீ,வி) இவர்கள் வியாக்கியானஞ்செய்திருக்கிறதினல், அவைகள் தனித்தனியாகவே அடியி லெழுதப்படுகின்றன.)

கூச-வது.—

(ரா) "அவிநாஶிது தத்வித்தி" (அத்-உ. சு - கஎ) முதல், "ஸ்வதர்மமபிசாவேக்ஷ்ய" (அத்-உ. சு - கூக.) வரையிலுள்ள சுலோகங்களினல் ஆத்மவிஷயத்தை உனக்கு நான் சொல்லியிருக்கிறேன்; இப்போது நான் சொல்லிவந்தவிதமாய்க் கருமயோகத்தை, நீ அநுஷ்டித்து வந்தால் கருமயோகத்தினுடைய சித்தியுண்டாகும். அப்படிக் கருமயோகசித்தி யுனக்குண்டாகும் காலத்தில், பெரியோர்களை யடைந்து சேவைசெய்வாயாகில் அவர்களுனக்கு ஞானத்தை யுபதேசிப்பார்களென்பது கருத்து.

(மீ,வி) "நத்வேவாஹம்ஜாது நாஸம்" அத்-உ. சு-கஉ.) முதலுள்ள சுலோகங்களினல் ஆத்மஞானம் சுருக்கமாய்ச் சொல்லப்பட்டது. "ஜ்ஞாநம்தேஹம்ஸவிஜ்ஞாநம்" (அத் - எ. சு - உ) முதலுள்ள சுலோகங்களினல் அந்த ஆத்மஞானம் இனி உபதேசஞ் செய்யவும் படுகிறது. அர்சுனனுக்கு ஞானேபதேசஞ் செய்யும் பொருட்டே இந்த கீதை ஆரம்பிக்கப்பட்ட தாகையால், "உபதேக்ஷ்யந்தி = உபதேசஞ் செய்வார்கள்" என்ருல், நாம் (பகவான்) உபதேசிக்கிருேமென்று தாத்பரியம்.

(ஸ்ரீ) பிரம்மஞானமான்று குரு உபதேசத்தினல் அடையவேண்டிய தென்பதையும், ஞானேபதேசம் பெற்றுக்கொள்ள இச்சிக்கிறவன் உபதேசிக்கும் குருவுக்குச் சுசுரூஷை வணக்கம்முதலியவை செய்யவேண்டிய தென்பதையும், பிரம்ம ஞானேபதேசம் செய்ய பிரம்ம

ஞானிகளே தகுந்தவர்களென்பதையும், பகவானுனவர் வெளிப்படுத்தின தாகவும் சொல்லலாம்.

நடு-வது.—

(ரா) எந்த ஞானத்தை யடைந்தால் தேகாதிகளில் ஆத்மாபிமானமும், அதினுலுண்டான, மமதை முதலியவைகளுமாகிய மோகத்தை யடைய மாட்டாயோ, எந்தஞானத்தை யடைந்தால், தேவமனுஷிய மிருகாதி ஆகாரத்தோடிருக்கிற சகலபூதங்களேயும், உன்னிடத்தில் பார்ப்பாயோ, என்னுல். பிரகிருதியிலிருந்து விடுபட்ட ஜீவாத்ம சுவரூபமெல்லாம் ஓரேமாதிரியாய் உன் ஆத்மசுவரூபம் போலவே ஞாஞகார சுவரூபமென்று பார்ப்பாயோ, என்பதுதாத்பரியம். இந்த அர்த்தமானது " நிர்தோஷம்ஹிஸமம்ப்ரஹ்ம தஸ்மாத் ப்ரஹ்மணிதேஸ்திதா:" (அத் - ரு - சு - கக) என்கிற இடத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அப்படியே என்னிடத்தில் சகலப் பிராணி களேயும் பார்ப்பாயோ, என்னுல், பிரகிருதி விமுக்தமான சகலஜீவ சுவரூபத்தையும் என்னுடைய சுவரூபத்திற்கு சமமென்று பார்ப்பாயோ, என்பது தாத்பரியம். இந்த அர்த்தமானது " இதம்ஜ்ஞாநமுபாச்ரித்ய மமஸாதர்ம்யமாகதா:" (அத் - கச, சு-உ) என்கிறவிடத்திலும் " ததாவித்வாந் புண்யபாபே விதூய நிரஞ்ஜந: பரமம்ஸாம்யமுபைதி" என்கிற சுருதிவாக்கியத்திலும் வெளியிடப்பட்டிருக்கிறது. இப்படிப்பட்ட வாக்கியங்களினுலே சகல ஜீவாத்ம சுவரூபமு மொன்றோ டொன்று சமமானதென்றும், அப்படியே சகல ஜீவாத்ம சுவரூபமும் பரமாத்ம சுவரூபத்திற்குச் சமமானதென்றும் பார்ப்பாய் என்பது தாத்பரியம்.

(ஶ) நீ ஞானமடைந்தால், சகல பூதங்களேயும் என்னிடத்திலும் உன்னிடத்தில் என்னேயும் பார்ப்பாய், என்பது தாத்பரியம்.

(மீ,வி) நீ ஞானமடைந்தால், ஆத்மநி = அந்தர்யாமியா யிருக்கிற, அதோ=என்னிடத்தில், அல்லது ஆத்மநி = சர்வவியாபகமான, அதோ = என்னிடத்தில், சகலப் பிரபஞ்சமு மிருப்பதாகப் பார்ப்பாய் என்பது தாத்பரியம். (நச-நரு)

---

ந௬. அபிசேதஸிபாபேப்ய: ஸர்வேப்ய: பாபக்ருத்தம:।
ஸர்வம்ஜ்ஞாநப்லவேநைவ வ்ருஜிநம்ஸந்தரிஷ்யஸி॥

ஸர்வேப்ய:பாபேப்ய: சகலமான பாபிகளேப்பார்க்கிலும்
(த்வம்) நீ
பாபக்ருத்தம: } அதிகபாபம் செய்தவனுக விருந்தபோதிலும்
அபிசேதஸி

ஸர்வம் } சகலபாபத்தையும் (சகலபாபங்களாகிற சமுத்திரத்தை)
வ்ருஜிநம்
ஜ்ஞாநப்லவேநைவ — ஞானமாகிறஓடத்தினலேயே
ஸந்தரிஷ்யஸி — தாண்டிவிடுவாய்.

(முந்திச்சொல்லியபடி ஞானமடைந்தாயாகில்) சகலமான பாபங்களைச் செய்திருக்கிற பாபிகளைப்பார்க்கிலும், நீ யதிகபாபஞ் செய்திருந்தபோதிலும் அந்த பாபங்களாகிற சமுத்திரத்தை ஞானமாகிற ஓடத்தினல் தாண்டிவிடுவாய்.

(ஸ்வா) "ஜ்ஞாநாக்நிதக்தகர்மாணம்— கருமபந்தமானது ஞானமாகிற அக்கினியினல் எரிக்கப்படுகிறது" என்று (அத் - ச, சு - கக) சொல்லப்பட்டிருப்பதை, இந்த சுலோகத்துடன் ஒப்பிட்டுப்பார்க்க. இந்த அர்த்தம் அடுத்த சுலோகத்திலேயும் சொல்லப்படுகிறது. (ஙசு)

---

ஙஎ. யதைதாம்ஸி ஸமித்தோऽக்நிர் பஸ்மஸாத்குருதேऽர்ஜுந।
ஜ்ஞாநாக்நி: ஸர்வகர்மாணி பஸ்மஸாத்குருதே ததா॥

ஹே அர்ஜுந — ஓ! அர்சுன!
ஸமித்த: } நன்றாய் சுவலித்துக்கொண்டிருக்கிற அக்கினியானது
அக்நி:
ஏதாம்ஸி — விறகுகளை
யதா — எப்படி
பஸ்மஸாத் } எரித்துச்சாம்பலாக்குமோ
குருதே
ததா — அப்படி
ஜ்ஞாநாக்நி: — ஞானமாகிற அக்கினியானது
ஸர்வகர்மாணி* — சகலகருமங்களையும்
பஸ்மஸாத் } சாம்பலாக்கிவிடும். (நசிக்கச்செய்யும்)
குருதே

ஓ! அர்சுன! நன்றாய் சுவலித்துக்கொண் டிருக்கிற அக்கினியானது (அதை யடுத்திருக்கிற) விறகுகளை எப்படி யெரித்துச் சாம்பலாக்குமோ (என்றல், விறகின் ரூபந்தெரியாமல் நசிக்கச்செய்யுமோ) அப்படிப்போல ஞானமாகிற அக்கினியானது, அதை யடுத்திருக்கிற சகல கருமங்களையும் (அவைகளின் பலனுடன்) நசிக்கச்செய்துவிடும். ()

---

* (ஸம்) (ஸ்ரீ) (ஸ்ரீ,வி) பிராரப்தகருமம் தவிர மற்ற சகலகருமங்களையும். (ஸ்வா) (ரா) அநாதியாய்த் தொடர்ந்து வந்திருக்கிற கருமங்களுடைய அநேககூட்டத்தை. (ஸ்வா) (ஸம்) ஏனென்றல் பிராரப்தம் அனுபவத்தினல் நசிக்கவேண்டுமேயன்றி ஞானத்தினல் நசிக்கமாட்டாது.

௩௮. நஹி ஜ்ஞாநேந ஸத்ருசம் பவித்ரமிஹ வித்யதே।
தத்ஸ்வயம் யோகஸம்ஸித்த: காலேநாத்மநி விந்ததி॥

| | |
|---|---|
| இஹ | இந்த உலகத்தில், அல்லது மேற்சொன்ன யக்ஞாதிகளில் |
| ஜ்ஞாநேந | ஞானத்தோடு |
| ஸத்ருசம் | சமானமாயுள்ள |
| பவித்ரம் | பரிசுத்தமானது, அல்லது பாபத்தைப் போக்கடிக்கத் தக்கது |
| நஹி வித்யதே | கிடையாது |
| யோகஸம்ஸித்த: | கருமயோகசித்தியை யடைந்தவன் |
| காலேந | வெகுகாலத்திற்குப்பிறகு |
| ஆத்மநி* | தன்னிடத்தில் |
| தத்† | அந்தஞானத்தை |
| ஸ்வயம் | தானகவே |
| விந்ததி | அடைகிறான். |

இந்த லோகத்தில், அல்லது மெற்சொன்ன யக்ஞாதிகளில் ஞானத்திற்குச் சமானமான பரிசுத்தமுள்ளது கிடையாது. கருமயோக சித்தியை (கருமயோகம் செய்து சித்தசுத்தியை) அடைந்தவன், வெகு காலத்திற்குப் பிறகு தன்னிடத்தி லந்த ஞானத்தைத் தானகவே யடைகிறான் (௩௮)

---

௩௯. ச்ரத்தாவாம்ல்லபதே ஜ்ஞாநம் தத்பர: ஸம்யதேந்த்ரிய:।
ஜ்ஞாநம் லப்த்வா பராம் சாந்திமசிரேணாதிகச்சதி॥

| | |
|---|---|
| ச்ரத்தாவாந்‡ | குரு உபதேசித்த அர்த்தத்தில் நம்பிக்கையுள்ளவனும் |
| தத்பர:§ | ஞானம் சம்பாதிப்பதிலேயே முயற்சியுள்ளவனும் |
| ஸம்யதேந்த்ரிய: | இந்திரியங்களை யடக்கினவனுயு மிருக்கிறவன் |
| ஜ்ஞாநம் | பிரம்மஞானத்தை |
| லபதே | அடைகிறான் |
| ஜ்ஞாநம் | ஞானத்தை |

---

* † (ஸ்ரீ) ஆத்மநி தத்—ஆத்மசுவரூப ஞானத்தை.

‡ (ஸ்ரீ,வீ) ஆஸ்திகபுத்தியுடையவன். (தெய்வமுண்டென்று நம்புகிறவன்.)

§ (ஸ்ரீ,வீ) என்னிடத்தில் நிஷ்டையுடையவன்.

இந்த சுலோகத்தை கர்கசம்ஹிதை மாதுரியகண்டம் முதலாவது அத் ௹௦-வது சுலோகத்தில் காண்க.

| | |
|---|---|
| லப்த்வா | அடைந்து |
| பராம் ஶாந்திம் | } உத்தமமானதாகிய மோக்ஷத்தை |
| அசிரேண | சீக்கிரமாக |
| அதிகச்சதி | அடைகிறான் |

எந்தப் பிரம்மஞானம், குருவினு லுபதேசிக்கப் படுகிறதோ, அதில் நம்பிக்கையும், ஞானம் சம்பாதிப்பதிலேயே முயற்சியு முள்ளவனும் இந்திரியங்களையடக்கி யிருக்கிறவன், ஞானத்தை யடைந்து சீக்கிரமாக மோக்ஷத்தை யடைகிறான்.

இந்தசுலோகத்தினுடையவும் இதற்குமுந்திய இரண்டு சுலோகங்களினுடையவும் அர்த்தத்தை விவரிக்கிற சிவபுராணம் வாயுஸம்ஹிதை அத் - உ௯ - லுள்ள அடியிற்கண்ட சுலோகங்களைப்பார்க்க. "நாஸ்தி ஜ்ஞாநம் விநாஜ்ஞாநம் நாஸ்தி ஜ்ஞாநம் விநா ஶிவ: । ஜ்ஞாநஞ்ஜ்ஞாநஞ்ச யஸ்யாஸ்தி ஸ தீர்ணஸ்து பவார்ணவம்॥ ௧எக ॥ ஜ்ஞாநம் ப்ரஸந்நமேகாக்ரமஶேஷோபாதிவர்ஜிதம் । யோகாப்யாஸேந யுக்தஸ்ய யோகிநஸ்த்வபி ஸித்யதி ॥ ௧எ௨ ॥ ப்ரக்ஷீணாஶேஷபாபாநாம் ஜ்ஞாநே த்யாநே ச ஜாயதே । பாபோபஹதபுத்தீநாம் தத்வார்தாபி ஸுதுர்லபா ॥ ௧எ௩ ॥ யதா வஹ்நிர்மஹாதீப்த: ஶுஷ்கமார்த்ரம் ச நிர்தஹேத் । ததா ஶுபாஶுபம் கர்ம ஜ்ஞாநாக்நிர்தஹதே க்ஷணாத் ॥ ௧எச ॥ அத்யல்போऽபி யதா தீபோ ஸுமஹந்நாஶயேத்தம: । யோகாப்யாஸஸ்ததா ஜ்ஞாநம் பாபம் நாஶயதே ச ॥ ௧எ௫ ॥ ஜ்ஞாநம் தத் க்ஷணமாத்ரம் ஶ்ரத்தயா பரமேஶ்வரே । யத் ஸர்வபாபஸம்ஹர்த்ரு ப்ரயாஸ்யத்யேவ தந்நஹி ॥ ௧எ௬ ॥ நாஸ்தி த்யாநஸமம் தீர்த்தம் நாஸ்தி த்யாநஸமம் தப: । நாஸ்தி த்யாநஸமோ யஜ்ஞஸ்தஸ்மாத்த்யாநம் ஸமாசரேத் ॥ ௧எஎ ॥ தியானமன்றி ஞானமில்லை. யோகமில்லாதவனுக்குத் தியானமில்லை. எவனுக்குத் தியானமும் ஞானமும் இருக்கிறதோ அவன் சம்சாரமான சமுத்திரத்தைத் தாண்டுகிறான். யோகாப்பியாசத்தி லிருக்கிற யோகிக்கு சுத்தமானவும் ஒரேநிலையிலிருக்கிறவும் உபாதியற்றவுமான ஞானம் சித்திக்கிறது பாபம் முழுவதும் நசித்தவர்களுக்கு தியானத்திலேயும் ஞானத்திலேயும் புத்தியுண்டாகிறது.

பாபத்தினலடிபட்ட புத்தியுடையவர்களுக்கு அந்த (ஞானத்தியானங்கள்) வார்த்தைகூட அதிதுர்லபம். எறிகிற அக்கினியானது எப்படி காய்ந்தவிறகுகளை எறித்துவிடுகிறதோ அப்படியே ஞானமாகிற அக்கினி, சுபாசுபகர்மங்களை க்ஷணத்தில் எறித்துவிடுகிறது. தீபம் (விளக்கு ஆனது

மிகச்சிறிதாயிருந்தாலும் பெரிதான இருட்டை எப்படி நாசஞ்செய்கிறதோ அப்படியோகாப்யாசம் அற்பம் செய்திருந்தாலும் அது பெரிதான பாபத்தை நாசஞ்செய்கிறது. சிரத்தையுடன் பரமேசுவரனை க்ஷணகாலமாவது தியானம் செய்கிறவனுக்கு அதிகமான எந்த சிரேயஸுண்டாகிறதோ அந்த சிரேயஸுக்கு முடிவேகிடையாது. (கங்கைமுதலிய) தீர்த்தமாவது, தபஸாவது, யக்ஞமாவது தியானத்திற்கு சமானமாகமாட்டா. ஆகையினால் தியானத்தைச் செய்யவேண்டியது. (௩௯)

---

௪0. 𑌅𑌜𑍍𑌞𑌶𑍍𑌚𑌾𑌶𑍍𑌰𑌦𑍍𑌦𑌧𑌾𑌨𑌶𑍍𑌚 𑌸𑌂𑌶𑌯𑌾𑌤𑍍𑌮𑌾 𑌵𑌿𑌨𑌶𑍍𑌯𑌤𑌿।
𑌨𑌾𑌯𑌂 𑌲𑍋𑌕𑍋𑌽𑌸𑍍𑌤𑌿 𑌨 𑌪𑌰𑍋 𑌨 𑌸𑍁𑌖𑌂 𑌸𑌂𑌶𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑌃॥

| | |
|---|---|
| 𑌅𑌜𑍍𑌞𑌃 | (குருபதேசத்தை) தெரிந்துகொள்ளாதவனும் |
| 𑌅𑌶𑍍𑌰𑌦𑍍𑌦𑌧𑌾𑌨𑌃 | (குருசொன்ன அர்த்தத்தில்) நம்பிக்கையில்லாதவனும் |
| 𑌸𑌂𑌶𑌯𑌾𑌤𑍍𑌮𑌾 | (குரு உபதேசித்தவிஷயத்தில்) பலனுண்டாகுமோ, உண்டாகாதோ, என்கிற சமுசயமுடையவனும் |
| 𑌵𑌿𑌨𑌶𑍍𑌯𑌤𑌿* | கெட்டுப்போவான் |
| 𑌸𑌂𑌶𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 | சமுசயமனதையுடையவனுக்கு |
| 𑌅𑌯𑌂 𑌲𑍋𑌕𑌃 | இந்த உலகப்பிரயோசனமும் |
| 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 | இல்லை |
| 𑌪𑌰𑌃 | பரலோகப்பிரயோசனமும் |
| 𑌨 | இல்லை |
| 𑌸𑍁𑌖𑌂 | சுகமும் |
| 𑌨 | இல்லை. |

குரு உபதேசித்ததைத் தெரிந்துகொள்ளாதவனும், அதில் நம்பிக்கை யில்லாதவனும், அதினால் பலனுண்டாகுமோ உண்டாகாதோ வென்கிற சமுசயமுடையவனும் கெட்டுப்போவான். சமுசய முடையவனுக்கு இந்த உலகத்திலாவது, சுவர்க்காதி உலகத்திலாவது, பிரயோஜனமுமில்லை, சுகமுமில்லை. (௪0)

---

௪௧. 𑌯𑍋𑌗𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌤𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌂𑌛𑌿𑌨𑍍𑌨𑌸𑌂𑌶𑌯𑌮𑍍।
𑌆𑌤𑍍𑌮𑌵𑌨𑍍𑌤𑌂 𑌨 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌨𑌿𑌬𑌧𑍍𑌨𑌨𑍍𑌤𑌿 𑌧𑌨𑌞𑍍𑌜𑌯॥

---

* (ஸ்ரீவி) நரகத்தை யடைவான்.

𑌹𑍇 𑌧𑌨𑌞𑍍𑌜𑌯 — ஓ! பொருளாசையற்றவனே!

𑌯𑍋𑌗𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌤𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌂 * — பலாபேக்ஷையைவிட்டு ஈசுவரார்ப்பண புத்தியாய்ச் செய்கிற கருமயோகியாயும்

𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌞𑍍𑌛𑌿𑌨𑍍𑌨𑌸𑌂𑌶𑌯𑌂 † — பிரம்ம ஞானத்தினால் சகல சமுசயங்களையும் போக்கடித்துக் கொண்டவனையும்

𑌆𑌤𑍍𑌮𑌵𑌨𑍍𑌤𑌂 ‡ — பிரம்மநிஷ்டனையுமிருப்பவனை

𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 — கருமங்கள்

𑌨𑌿𑌬𑌧𑍍𑌨𑌨𑍍𑌤𑌿 — கட்டுப்படுத்தமாட்டா.

ஓ! அர்சுன! பலாபேக்ஷையைவிட்டு ஈசுவரார்ப்பண புத்தியாய்க் கருமஞ்செய்கிற நிஷ்காம கருமயோகியாயும், பிரம்மஞானத்தினால் சகல சமுசயங்களையும் போக்கடித்துக் கொண்டவனையும், பிர்ம்மநிஷ்டனையுமிருப்பவனைக் கருமங்கள் கட்டுப்படுத்தமாட்டா. (௪௧)

---

௪௨. 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌮𑍍𑌭𑍂𑌤𑌂 𑌹𑍃𑌤𑍍𑌸𑍍𑌥𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌸𑌿𑌨𑌾𑌤𑍍𑌮𑌨𑌃।
𑌛𑌿𑌤𑍍𑌤𑍍𑌵𑍈𑌨𑌂 𑌸𑌂𑌶𑌯𑌂 𑌯𑍋𑌗𑌮𑌾𑌤𑌿𑌷𑍍𑌠𑍋𑌤𑍍𑌤𑌿𑌷𑍍𑌠 𑌭𑌾𑌰𑌤॥

𑌹𑍇 𑌭𑌾𑌰𑌤 — ஓ! பரதவம்சத்தி லுதித்தவனே

𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 § — ஆகையினாலே

𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 — உன்னுடைய

𑌹𑍃𑌤𑍍𑌸𑍍𑌥𑌂 ¶ — புத்தியிலிருக்கிறவும்

𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌮𑍍𑌭𑍂𑌤𑌂 — அஞ்ஞானத்தினாலுண்டாயிருக்கிறவும்

𑌏𑌨𑌂 𑌸𑌂𑌶𑌯𑌂 — இந்தசமுசயத்தை

---

* (ஶ0) ஞானயோகத்தினால் சகலகருமங்களையும் விட்டவனையும். (ரா) ஞானாகாரமான கருமத்தை யுடையவனையும்.

† (ரா) குருவினா லுபதேசிக்கப்பட்ட ஞானத்தினால் ஆத்மாவினிடத்தில் சகலசமுசயத்தையும் போக்கடித்துக்கொண்டவனையும்.

‡ (ரா) உபதேசிக்கப்பட்ட அர்த்தத்தில் திருடமானமனதையுடையவனையும். (ஸ்ரீ,வி) பரமாத்ம பக்தனையும். (ஶ0) (ஶ்ரீ) தவறுதவனை.

§ (ஶ0) கருமயோகாநுஷ்டானத்தினால் சித்தசுத்திமூலமாய் ஞானமடைந்தவனையும், சமுசயத்தைப் போக்கடித்துக்கொண்டவனையுமிருக்கிறவன், சமுசாரத்தில் கட்டுப்பட மாட்டான். சமுசயமுள்ளவனுக்கு இஹபரம்கெடும், ஆகையினாலே.

¶ (ரா) ஆத்மவிஷயமான.

| | |
|---|---|
| ஜ்ஞாநாஸிநா | ஞானமாகிற கத்தியினாலே |
| ச்சித்வா | வெட்டி |
| யோகம் | ஞானயோகசாதனமான கருமயோகத்தை |
| ஆதிஷ்ட | அநுஷ்டானஞ்செய் |
| உத்திஷ்ட | (யுத்தத்திற்கு) எழுந்திரு. |

ஓ! அர்சுனா! (இதுவரையில் கேட்ட என்னுடைய உபதேசத்தினால் உனக்கு மோகம்நீங்கி யிருக்கலாம்) ஆகையினாலே உன்னுடைய புத்தியிலிருக்கிறவும், அக்ஞானத்தினா லுண்டானவுமான (பந்து முதலானவர்களைக் கொல்லலாமா என்கிற) இந்த சமுசயத்தை, ஞானமாகிற கத்தியினால் வெட்டி, ஞானயோக சாதனமான கருமயோகத்தை அநுஷ்டானம் செய்; யுத்தஞ்செய்ய எழுந்திரு. (சஉ)

இதி ஸ்ரீபகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம்
யோகசாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுநஸம்வாதே
ஜ்ஞாநயோகோ நாம
சதுர்த்தோத்யாய:.

ஸ்ரீ க்ருஷ்ணாயபரப்ரஹ்மணே நம:.

ஞானயோகமென்கிற நான்காவது அத்தியாயம்
முற்றிற்று.

---

ஶ்ரீரஸ்து.

பஞ்சமாத்யாயப்ராரம்ப꞉.

## ஐந்தாவது அத்தியாயம்.

அர்ஜுந உவாச.

௧. ஸந்ந்யாஸம் கர்மணாம் க்ருஷ்ண புநர்யோகம் ச ஶம்ஸஸி।
யச்ச்ரேய ஏதயோரேகம் தந்மே ப்ரூஹி ஸுநிஶ்சிதம்॥

| | |
|---|---|
| அர்ஜுந உவாச | அர்சுனன்சொல்வது |
| ஹே க்ருஷ்ண | ஓ! கிருஷ்ணசுவாமியே! |
| கர்மணாம் | கருமங்களுடைய |
| ஸந்ந்யாஸம் | விட்டுவிடுதலையும் |
| புந꞉ | மறுபடியும் |
| யோகஞ்ச | கருமயோகத்தையும் |
| ஶம்ஸஸி | சொல்லுகிறீர் |
| ஏதயோ꞉ | இவைகளில் |
| யத் | எதானது |
| ஶ்ரேய꞉ | சிரேஷ்டமோ |
| ஸுநிஶ்சிதம் தத் ஏகம் | செவ்வையாய் நிச்சயிக்கப்பட்ட அதொன்றையே |
| மே | எனக்கு |
| ப்ரூஹி | சொல்லும். |

அர்சுனன் கிருஷ்ணசுவாமியைநோக்கிச் சொல்வது—கருமங்களை விட்டுவிடும்படியாயும், மறுபடி கருமயோகத்தைச் செய்யும்படியாயும் சொல்லுகிறீர். இவ்விரண்டிலெது சிரேஷ்டமானதோ, செவ்வையாய் நிச்சயிக்கப்பட்ட அதொன்றையே எனக்குச்சொல்லும்.

(ஸ்ரீ) "யஸ்த்வாத்மரதிரேவஸ்யாத்" (அத் - ௩, சு - ௧௭) "ஸர்வம் கர்மாகிலம் பார்த்த" (அத் - ௪, சு - ௩௩) இவை முதலியவைகளினால் ஞானிக்குக் கருமஸந்நியாசம் (கருமத்தை விட்டுவிடுதல்) சொல்லப்பட்டது. "சித்த்வைநம் ஸம்ஶயம் யோகமாதிஷ்டோத்திஷ்ட பாரத" (அத் - ௪, சு - ௪௨) என்கிறதினால் கருமத்தைச் செய்யும்படியாய்ச் சொல்லப்பட்டது. இவ்விரண்டையும் ஒருகாலத்தில் ஒருமனிதன் அநுஷ்டிக்கிறது சாத்தியமல்ல வாகையால் இவைகளில் சிரேஷ்டமான ஒன்றைச் சொல்லுமென்பது தாத்பரியம்.

(௴௦) சாஸ்திரோக்த மானதும் அநுஷ்டிக்கத் தக்கதுமான கருமங்களைச், செய்யும்படியாய் ஒரு இடத்திலும், விடும்படியாய் மற்றொரிடத்திலும், சொல்லப்பட்டிருக்கிறது. கருமாநுஷ்டானஞ் செய்யவேண்டியதாக இதின் (அத் - ௨, சு - கஅ - ருக - சஎ - சஅ; அத் - ரு, சு - அ - கூ; அத் - ச, சு - சஉ) இவைமுதலிய சுலோகங்களிலும், விட்டுவிடும்படியாக (அத் - ச, சு - கஅ-ககூ-உக-உஉ-உச-ருஉ-ருரு-ருஎ - சக) இவை முதலிய சுலோகங்களிலும் சொல்லப்பட்டிருக்கின்றது. * இதிலெது சிரேஷ்டமானதோ நிச்சயிக்கப்பட் டிருக்கிற அதைச் சொல்லுமென்பது அர்சுனனுடைய கேள்வி.

(ராா) ச - வது அத்தியாயத்தில் கருமயோகத்தில் ஞானம அடங்கியிருக்கிறபடியால் கருமம் செய்துவந்தால் அந்தக்கருமமே ஞானகாரமாகிறதாகவும், அந்த ஞானந்தான் சிரேஷ்டமான தென்றும் சொல்லப்பட்டது. ரு - வது அத்தியாயத்தில் ஞானாதிகாரிக்குங்கூட கருமயோகத்தில் ஞானமடங்கி யிருக்கிறதினலேயும், சுலபமா யிருக்கிறதினலேயும் சுவூஜஂ = தப்பித மில்லாததா யிருக்கிறதினலேயும் கருமயோகம் சிரேஷ்டமென்று சொல்லப்பட்டது. இப்போது ஞான நிஷ்டையைக் காட்டிலும் கருமயோகமானது ஆத்மப் பிராப்தியை சீக்கிரமுண்டாக்கு மென்பதும், கருமயோகத்தில், தான் கர்த்தாவல்ல வென்கிற ஆத்மாநு சந்தானமும், ஆத்மசுவரூபத்தை யறிகிறதற்குக் காரணமான ஞர்னத்தின்விவரமும் இந்த அத்தியாயத்தில் சொல்லப்படுகிறது.

இந்த சுலோகத்தின் தாத்பரிய மென்னவென்றல், சந்நியாசமென்கிற ஞானயோகத்தையும், மறுபடி கருமயோகத்தையும் சொன்னதாகக் காணுகிறது. அதெப்படியென்றல், உ - வது அத்தியாயத்தில், முமுக்ஷுக்களுக்கு முதலில் கருமயோகந்தான் செய்யவேண்டு மென்பதையும், கருமயோகத்தினல் அந்தக்கரண சுத்தியையடைந்தவனுக்கு ஞானயோகத்தினல் ஆத்மதெரிசனமாகிற தென்பதையும் சொல்லி, மறுபடி ரு - வது அத்தியாயத்திலும், ச - வது அத்தியாயத்திலும், ஞானயோகாதிகாரிகளுக்குங்கூட கருமயோகமே சிரேஷ்டமென்றும், என்னத்தினலென்றல், அந்தக் கருமயோகமானது ஞானயோகத்தை அபேக்ஷிக்காமலே, ஆத்மப்பிராப்தியை யுண்டுபண்ணுகிற தென்றும் சொல்லியிருக்கிறீர். இந்தக் கருமயோகம், ஞானயோக மிவைகளிரண்டில், எது சுலபமாயும் சீக்கிரமாயும் ஆத்மப்பிராப்தியை யுண்டாக்குமோ அதைச் சொல்லுமென்பது தாத்பரியம்.

---

* (ஷூா) இந்தப் பாஷியத்தில் சுலோகங்களின்முதல் வாக்கியங்கள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன.

(ஸ்ரீ,வி) "யோகஸ்தஃகுருகர்மாணி" (அத் - உ, சு - சஅ) என்கிற தினல் கருமங்கள் செய்யவேண்டிய தென்பது, பொதுவாய்ச் சொல்லப்பட்டது. அந்தக் கருமங்களை பலாபேக்ஷையன்றி ஈசுவரார்ப்பண புத்தியாய்ச் செய்யவேண்டுமென்பது ந - வது அத்தியாயத்தில் சொல்லப்பட்டது. மேலாகச்சொன்ன கருமயோகமே இந்த அத்தியாயத்தில் விஸ்தாரமாய்ச் சொல்லப்படுகிறது.

இந்தச் சுலோகத்தின் தாத்பரிய மென்னவென்றால், (ஸ்ரீ,வி) "யஜ்ஞாத்ராரவஞ்ச்ஷோ" (அத்-ச, சு - உஉ) என்கிற சுலோகத்தினால், கருமாதிகளை விட்டுவிடுவதாகிய சந்நியாசமும், "கர்மகமெனஷவத்தநாத்தம்" (அத் - ச, சு - கரு) என்கிற சுலோகத்தினால், ஈசுவரார்ப்பண புத்தியாய்ச் செய்கிறதும் வருணாசிரம தருமத்திற்கு யோக்கியமானதுமான கருமயோகமும் சொல்லப்பட்டன. இவைகளிலெது சிரேஷ்டமோ, அதை நிச்சயித்துச் சொல்லுமென்பது தாத்பரியம். (க)

---

ஸ்ரீ ஸமவாநுவாச,

உ. ஸந்ந்யாஸஃகர்மயோகஸ்ச நிஸ்ஸ்ரேயஸகராவுபௌ।
தயோஸ்துகர்மஸந்ந்யாஸாத் கர்மயோகோவிஸிஷ்யதே॥

| | |
|---|---|
| ஸ்ரீ ஸமவாநுவாச | ஸ்ரீ கிருஷ்ணபகவான்சொல்வது |
| ஸந்ந்யாஸஃ* | கருமத்தைவிடுவதும் |
| கர்மயோகஸ்ச | ஈசுவரார்ப்பணபுத்தியாய்க் கருமஞ் செய்வதுமாகிய |
| உபௌ | இவ்விரண்டும் |
| நிஸ்ஸ்ரேயஸகரௌ | மோக்ஷத்தைக்கொடுக்கத்தக்கவை |
| தயோஸ்து | அவைகளில் |
| கர்மஸந்ந்யாஸாத்† | கருமத்தைவிடுவதைக்காட்டிலும் |
| கர்மயோகஃ | பலாபேக்ஷையன்றி ஈசுவரார்ப்பண புத்தியாய்ச் செய்யப்படும் கருமயோகம் |
| விஸிஷ்யதே | சிரேஷ்டமானது. |

ஸ்ரீ கிருஷ்ணபகவான் அர்சுனனை நோக்கிச் சொல்வது — கருமத்தைவிடுவதும், ஈசுவரார்ப்பண புத்தியாய் கருமஞ் செய்வதுமாகிய

---

* (ஸம்) (ஸ்ரீ) ஞானியானவன் கருமத்தை விடுவதும். (ரா) ஞானயோகமும். (ஸ்ரீ,வி) காமக்குரோதாதி துவந்துவங்களை விடுவதும்.

† (ரா) ஞானநிஷ்டையைக் காட்டிலும். (ஸ்ரீ,வி) கருமாநுஷ்டான விஷயத்தில் காமாதி வர்ஜநருபமான சந்நியாசத்தைக் காட்டிலும்.

இவ்விரண்டும் மோக்ஷத்தைக் கொடுக்கத்தக்கவைகள்; அவைகளில் கருமத்தை விடுவதைக்காட்டிலும் பலாபேக்ஷையன்றி ஈசுவரார்ப்பண புத்தியாய்ச் செய்யப்படும் கருமயோகம் சிரேஷ்டமானது.

(பா°) (ஸ்ரீ) கருமயோகமானது நேராய் மோக்ஷத்திற்குக் காரணமாகாவிட்டாலும் ஞானத்திற்குக் காரணமாயிருக்கிறது. அந்தஞானமானது மோக்ஷத்திற்குக் காரணமாயிருக்கிறது. ஞானி கருமத்தை விடக்கூடுமாலும் அதிகாரி விஷயமாய்ப் பார்க்கையில் உன்னைப்போலொத்தவன் கருமத்தை விடக்கூடாது. (உ)

---

ங. ஜ்ஞேய: ஸ நித்யஸந்ந்யாஸீ யோ ந த்வேஷ்டி ந காங்க்ஷதி।
நிர்த்வந்த்வோ ஹி மஹாபாஹோ ஸுகம் பந்தாத்ப்ரமுச்யதே॥

| | |
|---|---|
| மஹாபாஹோ | ஓ! பெரிதானகைகளையுடையவனே |
| ய: | எவன் (எந்தக் கருமயோகி) |
| ந த்வேஷ்டி | துவேஷிக்கிறதில்லையோ |
| ந காங்க்ஷதி* | விரும்புகிறதில்லையோ |
| நிர்த்வந்த்வோ ஹி | சுகதுக்கமுதலிய இருமைகளற்றவனோ |
| ஸ: | அவன் |
| நித்யஸந்ந்யாஸீ (இதி) ஜ்ஞேய: † | நித்தியசந்நியாசியாக அறியத்தக்கவன் |
| (ஸ:) | அவன் |
| ஸுகம் | பிரயாசையன்றி |
| பந்தாத் | கருமபந்தத்திலிருந்து |
| ப்ரமுச்யதே | விடுபடுவான். |

ஓ! அர்சுன! எவன் விருப்பு வெறுப்பற்று சுகதுக்கமுதலிய இருமைகளை சகிக்கிறவனோ, அவனை நித்திய சந்நியாசியாக அறியத்தக்கது. அவன் பிரயாசையன்றி கருமபந்தத்திலிருந்து விடுபடுவான். (ங)

---

ச. ஸாங்க்யயோகௌ ப்ருதக்பாலா: ப்ரவதந்தி ந பண்டிதா:।
ஏகமப்யாஸ்தித: ஸம்யகுபயோர்விந்ததே பலம்॥

---

* (ரா) கருமத்திற் குள்ளடங்கியிருக்கிற ஆத்மாநுபவத்தில் திருப்தியடைந்திருக்கிறதினால் அதைத்தவிர மற்றதில் விருப்பற்றவன்.

† (ரா) எப்போதும் ஞானநிஷ்டையிலிருப்பவனாக வறியத்தக்கவன், (ஸ்ரீ,வி) யதி முதலிய ஸந்நியாஸி விஷயமல்ல. காம்மியகருமங்களை விட்டவனாக அறியத்தக்கவன்.

| | |
|---|---|
| 𑌸𑌾𑌙𑍍𑌖𑍍𑌯𑌯𑍋𑌗𑍌 | ஞான, கருமயோகங்களை |
| 𑌪𑍃𑌥𑌕𑍍 (𑌇𑌤𑌿) | பலன்வெவ்வேறென்று |
| 𑌬𑌾𑌲𑌾𑌃 | அவிவேகிகள் |
| 𑌪𑍍𑌰𑌵𑌦𑌨𑍍𑌤𑌿 | சொல்லுகிறார்கள் |
| 𑌪𑌣𑍍𑌡𑌿𑌤𑌾𑌃 | விவேகிகள் |
| 𑌨 | (அப்படி) சொல்லுகிறதில்லை |
| (𑌯𑌤𑌃) | ஏனென்றால் |
| 𑌉𑌭𑌯𑍋𑌃 | இரண்டில் |
| 𑌏𑌕𑌮𑌪𑌿 | ஒன்றையாவது |
| 𑌸𑌮𑍍𑌯𑌕𑍍 | செவ்வையாய் |
| 𑌆𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 | அநுஷ்டித்தவன் |
| (𑌉𑌭𑌯𑍋𑌃) | இரண்டினுடைய |
| 𑌫𑌲𑌂 | பலத்தை (மோக்ஷத்தை) |
| 𑌵𑌿𑌨𑍍𑌦𑌤𑍇 | அடைகிறான் |

ஞானயோகபலன் வேறே, கருமயோகபலன் வேறே, என்று அவிவேகிகள் சொல்லுகிறார்கள். விவேகிகள் சொல்லுகிறதில்லை. ஏனென்றால், இரண்டிலொன்றையாவது செவ்வையா யநுஷ்டித்தவ னிரண்டினுடைய பலமாகிய மோக்ஷத்தை யடைகிறான்.

(ஶ்ரீ,வி) ஞானத்திற்குப் பலன் வேறே, கருமத்திற்குப் பலன் வேறேயாகையால், ஞானத்திற்குக் கருமம் சாதன மல்லவென்று அவிவேகிகள் சொல்லுகிறார்கள். விவேகிகள், ஞானத்திற்குக் கருமம் சாதனமாயும் முடிவில் மோக்ஷபலனைக் கொடுக்கத்தக்கதாயு மிருக்கிறதென்று சொல்லுகிறார்கள்.

(ஶம்) (ஶ்ரீ) கருமசந்நியாசம், கருமயோகம், இவைகளி லெது சிரேஷ்டமென்கிற அர்ச்சுனனுடைய கேழ்விக்குப்பதிலாய் சாங்கிய யோகத்தையும் கருமயோகத்தையும் சொல்லவேண்டிய தென்னவென்றாலோ, சாங்கியமென்பது, ஞானம். ஞானமே கருமஸந்நியாச மாகிறது. எப்படியென்றால், ஞானநிஷ்டை யுள்ளவனுக்குக்கருமம் விட்டுப் போகிறது. ஆகையால் சந்நியாசத்திற்குப் பிரதிபதமாக ஞானமாகிற சாங்கியமென்கிறபதம் இதில் பிரயோகிக்கப் பட்டிருக்கிறது.

(ரா) கருமயோகத்திற்குப் பலன் ஞானயோகமென்றும், ஞானயோகத்திற்குப் பலன் ஆத்ம தரிசனமென்றும், ஆகையா லிரண்டுக்கும் பலன் வெவ்வேறே யென்று அவிவேகிகள் சொல்லுகிறார்கள். விவேகிகள் அப்படிச் சொல்லுகிறதில்லை. ஏனென்றால், ஞானயோகம், கருமயோக மிரண்டிற்கும் ஆத்ம தரிசனமாகிய ஒரே பலனுண்டானதால் தான்.

(ஹா) ஞானயோகமானது [மோக்ஷத்திற்குக்] காரண மென்றும், கருமயோகமானது ஞானத்திற்குக் காரணமென்றும், ஞானயோகமே சிரேஷ்டமென்றும் முந்திசொல்லப்பட்டு மிருக்கிறது. இனி சொல்லவும் படுகிறது. இவ்விரண்டு மொன்றே இரண்டுக்கும் பலன் ஒன்றேயென்று சொன்னது எப்படிப்பொருந்து மென்றாலோ, ஞானநிஷ்டைக்கு யோக்கியதை யில்லாமலும் கருமயோகத்திற்கு அதிகாரியாயு மிருக்கிறவனைக்குறித்து "ஞானநிஷ்டையே சிரேஷ்டமானது, அதைத்தான் நீ அநுஷ்டிக்கவேண்டியதென்று" சொல்லும்பக்ஷத்தில், ஞானநிஷ்டை செய்ய சக்தியற்ற அவன் கருமத்திலும் சிரத்தையற்று இரண்டுங் கெட்டவனாகி விடுவானாகையால், கருமத்தை சிலாகித்ததாகக் கொள்ளவேண்டும். (ச)

---

ரு. 𑌯𑌤𑍍𑌸𑌾𑌙𑍍𑌖𑍍𑌯𑍈𑌃 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌤𑍇 𑌸𑍍𑌥𑌾𑌨𑌂 𑌤𑌦𑍍𑌯𑍋𑌗𑍈𑌰𑌪𑌿 𑌗𑌮𑍍𑌯𑌤𑍇।
𑌏𑌕𑌂 𑌸𑌾𑌙𑍍𑌖𑍍𑌯𑌂 𑌚 𑌯𑍋𑌗𑌂 𑌚 𑌯𑌃 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌸 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿॥

| | |
|---|---|
| 𑌸𑌾𑌙𑍍𑌖𑍍𑌯𑍈𑌃 | ஞானநிஷ்டாளான சந்நியாசிகளினாலே |
| 𑌯𑌤𑍍 𑌸𑍍𑌥𑌾𑌨𑌂 * | எந்தஸ்தான (மோக்ஷ) மானது |
| 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌤𑍇 | அடையப்படுமோ |
| 𑌤𑌤𑍍 | அந்தஸ்தானமானது |
| 𑌯𑍋𑌗𑍈𑌰𑌪𑌿 | கருமயோகிகளாலேயும் |
| 𑌗𑌮𑍍𑌯𑌤𑍇 | அடையப்படும் |
| 𑌸𑌾𑌙𑍍𑌖𑍍𑌯𑌂 𑌚 | சாங்கிய யோகத்தையும் |
| 𑌯𑍋𑌗𑌂 𑌚 | கருமயோகத்தையும் |
| 𑌏𑌕𑌂 | ஒரேபலனுள்ளதாக |
| 𑌯𑌃 | எவன் |
| 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 | அறிகிறானோ |
| 𑌸𑌃 | அவன் |
| 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 | அறிகிறான். |

ஞானநிஷ்டாளான சந்நியாசிகளினாலே எந்த ஸ்தானமானது அடையப்படுமோ, அந்த ஸ்தானமானது கருமயோகிகளினாலேயு மடையப்படும். சாங்கியயோகத்தையும் கருமயோகத்தையும் ஒரே பலனுள்ளதாக எவன் அறிகிறானோ அவன் அறிந்தவன்.

(ஶ௦) முந்தி கருமயோகம் சிரேஷ்டமென்று சொல்லிவிட்டு இப்போது ஞானயோகம், கருமயோக மிரண்டும் ஒன்றென்றும், ஒரே பலனுள்ளதென்றும், எப்படிச் சொல்லலாமென்றால், கருமயோகம்

---

* (ஶா) ஆத்மதரிசனம்.

ஞானத்தை யுண்டாக்கி, முடிவில் மோக்ஷத்தைக் கொடுக்கிறது. ஞானமும் மோக்ஷத்தைத்தான் கொடுக்கிறது. முடிவானபலன் இரண்டுக்கு மொன்றே; ஆகையா லிரண்டு மொன்றென்று சொல்லப்பட்டது. ஞானயோகத்தைவிட கருமயோகம் ஒரு படி தாழ்ந்ததாகவிருக்க, கருமயோகம் சிரேஷ்டமென்று எப்படிச் சொல்லலாமென்றால், கருமம் செய்யாமல் விடுவதாகிய சந்நியாசம் சிரேஷ்டமா? கருமயோகம் சிரேஷ்டமா? என்று நீ கேட்டபடியாலும், நீ இப்போது கருமாதி காரியாயிருக்கிறதினாலும் உனக்குக்கருமயோகம் சிரேஷ்டமென்றுசொன்னேம். வாஸ்தவத்தில் ஞானயோகந்தான் சிரேஷ்டமானது.

(ஸ்ரீ,வீ) ஸாங்கியமென்பது ஞானம்; யோகமென்பது நிஷ்காம கருமம்; ஞானத்திற்குப்பலன் மோக்ஷம்; நிஷ்காம கருமத்திற்குப் பலன் ஞானம். இவ்விரண்டும் ஓரே பலனாக எப்படி யாகுமென்றால், ஞானம் உடனே மோக்ஷபலனைக் கொடுப்பதாலும், நிஷ்காம கருமமும் சொற்பகால விளம்பத்தின் பேரில் மோக்ஷத்தைக் கொடுக்குமாகையாலும், பலன் ஒன்றென்று சொல்லப்பட்டது. மேலும் ஞான கருமங்கள் காரியகாரண ரூபமாய் ஒன்றாகவே யிருக்கின்றன. (இதற்கு இவர் மற்றொருவிதமாயு மர்த்தஞ் செய்திருக்கிறார். அதாவது) யதியாகியஞானி மோக்ஷத்திலாநந்த விருத்திக்காக கருமஞ் செய்யவேண்டும்; கிரகஸ்தனை கருமயோகி மோக்ஷமடைவதற்காக ஞானத்துடன் கருமஞ் செய்யவேண்டும்; ஆகையால் அதிகாரக் கிரமமாய்ப் பார்த்தால் ஞானிக்குக் கருமமும், கருமயோகிக்கு ஞானமும் வேண்டியிருப்பதால் ஞானமும் கருமமும் ஒன்றாகச் சொல்லப்பட்டதாகத் தாத்பரியம். (௫)

---

௬. ஸந்ந்யாஸஸ்து மஹாபாஹோ து:க²மாப்துமயோக³த:।
யோக³யுக்தோ முநிர்ப்³ரஹ்ம நசிரேணாதி⁴க³ச்ச²தி॥

| | |
|---|---|
| ஹே மஹாபாஹோ | ஓ! அர்சுன! |
| ஸந்ந்யாஸ:* | பரமார்த்த சந்நியாசமானது |
| அயோக³த: | கருமயோகியல்லாதவனால் |
| ஆப்தும் | அடைகிறதற்கு |
| து:க²ம் | பிரயாசையாயிருக்கிறது |
| யோக³யுக்த: | கருமயோகத்துடன்கூடிய |

* (௱௦) (ஸ்ரீ) பரமார்த்த சந்நியாசம். அதாவது, ஞானநிஷ்டையை நிலையா யடைந்தவனுக்குக் கருமம் தானாகவே விட்டுப்போகிறதுதான். (ரா) ஞானயோகமானது.

| | |
|---|---|
| முநி: | மநநசீலன் (தியானஞ்செய்கிறவன்) |
| ப்ரஹ்ம* | பிரமத்தை |
| நசிரேண | சீக்கிரமாக |
| அதிகச்சதி | அடைகிருன். |

ஓ ! அர்சுனு ! பரமார்த்த சந்நியாசத்தைக் கருமயோகி யல்லாதவனடைகிறதற்குப் பிரயாசையா யிருக்கிறது. கருமயோகத்தி லிருக்கிறவன் பிரம்மத்தியானம் செய்து, பிரம்மத்தைச் சீக்கிரமாயடைகிருன்.

(ரா) முநி:—சுவரூபாநு சந்தானத்துடனிருக்கிற; யோகயுக்த:— கருமயோகியானவன், ப்ரஹ்ம—தன்னுடைய பிரகிருதி விமுக்த ஆத்ம சுவரூபத்தை, நசிரேண — சீக்கிரமாக, அதிகச்சதி — அடைகிருன். ஞானியானவன் பிரயாசையுடன் ஞானயோகத்தைச் சாதிக்கிறபடியால் அவனுக் கதிககாலஞ் செல்லும்.

(ஸ) சந்நியாசமென்பது - காமக்குரோதாதிகளை விடுவதுதான். யோகமென்பது - பலாபேக்ஷையன்றி ஈசுவரார்ப்பண புத்தியாய்ச் செய்கிறதாகிய நிஷ்காம கருமந்தான். ஒருவன் காமக் குரோதாதிகளை விட்டதிலேயே பிரம்மத்தை யடையமாட்டான். காமக்குரோதாதிகளை விட்டு நிஷ்காம கருமயோகஞ் செய்துவந்தால், சீக்கிரமாகப் பிரம்மத்தை யடைவான். ஆகையினுல் காமக்குரோதாதிகளை விடுவதாகிய சந்நியாசத்தைப்பார்க்கிலும் கருமயோகம் சிரேஷ்டமாகச் சொல்லப் பட்டது. காமக்குரோதாதிகளை விடுவதினுலே சித்தசுத்தி முதலிய பலனுண்டாகுமேயெனுல், அவை அற்ப பலமாகையால் அது இவ் விடத்தில் உத்தேசிக்கப் படவில்லை.

(மீ,வி) காமக்குரோதாதித்தியாகம் (விடுவது) அன்றியில் கருமயோக மாத்திரமாவது, கருமயோக மன்றியில் காமக்குரோதாதித்தியாக மாத்திரமாவது மோக்ஷ ஏதுவாகாது. தியாகமும், கருமயோகமும் சேர்ந்தால், சீக்கிரமாக மோக்ஷம் கிடைக்கு மென்பது தாத்பரியம். (சு)

---

எ. யோகயுக்தோ விசுத்தாத்மா விஜிதாத்மா ஜிதேந்த்ரிய:।
ஸர்வபூதாத்மபூதாத்மா குர்வந்நபி ந லிப்யதே॥

| | |
|---|---|
| யோகயுக்த: | கருமயோகத்துடன்கூடினவனும் |
| விசுத்தாத்மா | பரிசுத்தமானமனத்தையுடையவனும் |
| விஜிதாத்மா | தேகசுவாதீனமுள்ளவனும் |
| ஜிதேந்த்ரிய: | இந்திரியங்களையடக்கினவனும் |

---

* (ஸ०) பரமார்த்த சந்நியாசத்தை. அதாவது, பரமாத்மநிஷ்டையை.

| | |
|---|---|
| ஸர்வபூதாத்ம பூதாத்மா * | சகல பூதங்களிலுள்ள பரமாத்மாவையும் தன் ஆத்மாவையு மொன்றுயறிந்தவனுயு மிருக்கிறவன் |
| குர்வந்நபி | கருமங்களைச்செய்தாலும் |
| ந லிப்யதே | (கருமபந்தம்) ஒட்டுகிறதில்லை. |

கருமயோகியாயும் பரிசுத்தமான மனதை யுடையவனுயும் தேகேந்திரியங்களை அடக்கினவனுயும் சகல பூதங்களிலுள்ள பரமாத்மாவும் தன் ஆத்மாவும் ஒன்றென்று தெரிந்து மிருக்கிறவன், (லோக சங்கிரகத்துக்காக) கருமங்களைச் செய்தாலும் கரும பந்த மவனை யொட்டுகிறதில்லை. (எ)

---

அ. நைவ கிஞ்சித்கரோமீதி யுக்தோ மந்யேத தத்த்வவித்।
பஶ்யஞ்ஶ்ருண்வந்ஸ்ப்ருஶஞ்ஜிக்ரந்நஶ்நந்கச்சந்ஸ்வபஞ்ஶ்வஸந்॥

கூ. ப்ரலபந்விஸ்ருஜந்க்ருஹ்ணந்நுந்மிஷந்நிமிஷந்நபி।
இந்த்ரியாணீந்த்ரியார்தேஷு வர்தந்த இதி தாரயந்॥

| | |
|---|---|
| யுக்த꞉ | கருமயோகியானவன் |
| தத்த்வவித் | ஆத்ம தத்துவத்தை யறிந்தவனுய் |
| பஶ்யந் | பார்த்தவன் (கண்களின் செய்கை) |
| ஶ்ருண்வந் | கேட்டவன் (காதுகளின் செய்கை) |
| ஸ்ப்ருஶந் | தொட்டவன் (துவக்கின் செய்கை) |
| ஜிக்ரந் | முகர்ந்தவன் (மூக்கின் செய்கை) |
| அஶ்நந் | புஜித்தவன் (நாக்கின் செய்கை) |
| கச்சந் | நடந்தவன் (கால்களின் செய்கை) |
| ஸ்வபந் | தூங்கினவன் (புத்தியின் செய்கை) |
| ஶ்வஸந் | சுவாசம் விட்டவன் (பிராணவாயுவின் செய்கை) |
| ப்ரலபந் | பேசினவன் (வாயின் செய்கை) |
| விஸ்ருஜந் | (மலஜலம்) விட்டவன் (பாயு - உபஸ்தங்களின் செய்கை) |
| க்ருஹ்ணந் | எடுத்தவன் (கைகளின் செய்கை) |
| உந்மிஷந் | கண்களை விழித்தவன் (கூர்மனென்கிற வாயுவின் செய்கை) |
| நிமிஷந் | மூடினவன் (கூர்மனென்கிற வாயுவின் செய்கை) |

---

* (ரா) தேவாதி சகலபூதங்களுக்கும் ஆத்மாவாயிருக்கிற சுவரூபத்தையே தனக்கும் ஆத்மாவாக அறிகிறவன். என்றால், ஞானாகாரத்தினுல் ஆத்மாக்கள் சமானமானவர்களென்று அறிகிறவன். (உ) (ஸ்ரீ,வி) பிரம்மா முதலாயுள்ள சகலப்பிரபஞ்சத்திற்கும் ஈசுவரனெவனே அவனே தனக்கும் ஈசுவரனென்று அறிகிறவன்.

| | |
|---|---|
| அபி | ஆயிருந்தபோதிலும் |
| இந்த்ரியாணி | இந்திரியங்கள் |
| இந்த்ரியார்தேஷு | சப்தாதிவிஷயங்களில் |
| வர்தந்த இதி | பிரவிருத்தித் திருக்கின்றனவென்று |
| தாரயந் | நிச்சயித்துக்கொண்டவனாக |
| கிஞ்சித் | ஒரு காரியத்தையாவது |
| நைவ கரோமீதி | நான் செய்யவில்லையென்று |
| மந்யேத | அறிகிறான். |

கருமயோகியானவன் ஆத்ம தத்துவத்தை யறிந்து, பார்த்த, கேட்ட, தொட்ட, முகர்ந்த, புஜித்த, நடந்த, தூங்கின, சுவாசம் விட்ட, பேசின, மலஜலம்விட்ட, எடுத்த, கண்களைவிழித்த, மூடின தாகிய செய்கைகளைச் செய்தவனா யிருந்தபோதிலு மிந்திரியங்கள் அவைகளின் காரியமாகிய விஷயங்களில் பிரவிருத்தித் திருக்கின்றன வென்று நிச்சயித்துக் கொண்டவனாக ஒரு காரியத்தையாவது நான் செய்யவில்லையென் றறிகிறான். (பஶ்யந் - முதலிய பதங்கள் நிகழ் காலத்தைக் குறித்தவைகளானாலும் பொருந்தும்பொருட்டு இறந்த காலமாய்ச் சொல்லப்பட் டிருக்கின்றன.)

(ஸ்ரீ) இதில் குறிக்கப்பட் டிருக்கிறவனை ஞானாதிகாரியாக அறியத்தக்கது. (அ-கூ)

---

க௦. ப்ரஹ்மண்யாதாய கர்மாணி ஸங்கம் த்யக்த்வா கரோதி ய: ।
லிப்யதே ந ஸ பாபேந பத்மபத்ரமிவாம்பஸா ॥ *

| | |
|---|---|
| ய: | எவன் |
| கர்மாணி | கருமங்களை |
| ப்ரஹ்மணி † | பரமாத்மாவிடத்தில் |
| ஆதாய | ஒப்பிவித்து (அர்ப்பணஞ்செய்து) |
| ஸங்கம் ‡ | பலனில் ஆசையை |
| த்யக்த்வா | விட்டு |
| கரோதி | செய்கிறானோ |
| ஸ: | அவன் |
| அம்பஸா | ஜலத்தினாலே |
| பத்மபத்ரமிவ | தாமரையிலையானதுபோல |

---

* இந்த சுலோகத்தை கர்க்கசம்ஹிதை மாதுரியகண்டம் அத் - ௪ - ௬ - ருச - ல் காண்க.

† (ரா) பிரகிருதியினிடத்தில்.

‡ (ரம) மோக்ஷபலனில்கூட இச்சையை.

| | |
|---|---|
| வாவெ_ந | பாபபுண்ணியங்களினுல் |
| நவிவ_ரூ)வெ_த | ஒட்டப்படுகிறதில்லை. |

எவன் கருமங்களைப் பரமாத்மாவிடத்தில் ஒப்பிவித்து (ஈசுவ ரார்ப்பண புத்தியாய்ச்செய்து) பலாபேக்ஷையை விட்டுச் செய்கிருனே, அவன் தாமரையிலையானது, எப்படி ஜலத்தினு லொட்டப்படுகிறதில்லையோ, அப்படிப்போல புண்ணிய பாபங்களினு லொட்டப்படுகிறதில்லை.

(ஸூா) இதில் குறிக்கப்பட்டிருக்கிறவனைக் கருமாதி காரியாக அறியத்தக்கது. (க0)

---

கக. காயெ_ந௨_நவஸாவ_ஜ்ூ)ா கெவலெெரிஂஜ்ரியெரவி।
யொகி_ந꞉கூ௩_கூவ_ஞ்தி ஸஂமஂ த்ூக்ூா தூஶ_ஜெயெ॥

| | |
|---|---|
| யொகி_ந꞉ | கருமயோகிகள் |
| ஸஂமஂ | பலாபேக்ஷையை |
| த்ூக்ூா | விட்டு |
| ஆத்ூஶ_ஜெயெ | மனச் சுத்திக்காக |
| காயெ_ந | தேகத்தினுலேயும் |
| உ_நஸா | மனதினுலேயும் |
| வ_ஜ்ூ)ா | புத்தியினுலேயும் |
| கெவலெெ꞉ ஐஂஜ்ரியெரவி | அபிமான மற்றிருக்கிற இந்திரியங்களினுலேயும் |
| கூ௩ | கருமத்தை |
| கூவஞ்தி | செய்கிருர்கள். |

கருமயோகிகள் பலாபேக்ஷையைவிட்டு மனச் சுத்திக்காக, தேகம், மனசு, புத்தி, அபிமானமற்றிருக்கும் இந்திரியங்கள் இவைகளினுலே கருமத்தைச் செய்கிருர்கள்.

(ஸ்ரீ) தேகத்தினுல் செய்யப்பட்டது ஸ்நாநாதிகள். மனதினுல் செய்யப்பட்டது தியானுதிகள். புத்தியினுல் செய்யப்பட்டது தத்துவ நிச்சயம். இந்திரியங்களினுல் செய்யப்பட்டது சிரவண கீர்த்தனுதிகள்.

(ஸூா) "அபிமானமற்றிருக்கிற இந்திரியங்களினுலே" என்பது, தான் செய்யும் கருமத்தில், இந்திரியங்களால் கிரகிக்கப்படும் வஸ்துக்களில் விருப்பு வெறுப்பு வைக்காமலென்று கருத்து. (கக)

---

கஉ. 𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌂 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌮𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌨𑍈𑌷𑍍𑌠𑌿𑌕𑍀𑌮𑍍।
𑌅𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌕𑌾𑌮𑌕𑌾𑌰𑍇𑌣 𑌫𑌲𑍇 𑌸𑌕𑍍𑌤𑍋 𑌨𑌿𑌬𑌧𑍍𑌯𑌤𑍇॥

| | |
|---|---|
| 𑌯𑍁𑌕𑍍𑌤𑌃* | கருமயோகியானவன் (நிஷ்காமகருமி) |
| 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌂 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 | கருமத்தில் பலாபேக்ஷையைவிட்டு |
| 𑌨𑍈𑌷𑍍𑌠𑌿𑌕𑍀𑌂 | ஆதம நிஷ்டையினுலுண்டாகிற |
| 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌂 † | மோக்ஷத்தை |
| 𑌆𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 | அடைகிறான் |
| 𑌕𑌾𑌮𑌕𑌾𑌰𑍇𑌣 | ஆசையினு லேவப்பட்டு |
| 𑌫𑌲𑍇 | பலனில் |
| 𑌸𑌕𑍍𑌤𑌃 | ஆசையையுடைய |
| 𑌅𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 | கருமயோகியானவன் (காம்மியகருமி) |
| 𑌨𑌿𑌬𑌧𑍍𑌯𑌤𑍇 | (பந்தத்தில) கட்டுப்படுகிறான். |

கருமத்தில் பலாபேக்ஷையை விட்டிருக்கிற கருமயோகியானவன், ஆத்ம நிஷ்டையினுல அடையததகுந்த மோக்ஷததை யடைகிறான். ஆசையினுலேவப்பட்டு பலனி லிச்சையுடைய கருமயோகியானவன், பந்தத்தில் கட்டுப்படுகிறான். (கஉ)

கங. 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌮𑌨𑌸𑌾 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌯𑌾𑌸𑍍𑌤𑍇 𑌸𑍁𑌖𑌂 𑌵𑌶𑍀।
𑌨𑌵𑌦𑍍𑌵𑌾𑌰𑍇 𑌪𑍁𑌰𑍇 𑌦𑍇𑌹𑍇 𑌨𑍈𑌵 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌨 𑌕𑌾𑌰𑌯𑌨𑍍॥

| | |
|---|---|
| 𑌵𑌶𑍀 | இந்திரியங்கள், மனசு, இவைகளை சுவாதீனமா யுடையவன் |
| 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 | சகலகருமங்களேயும |
| 𑌮𑌨𑌸𑌾 | (விவேகத்தையுடைத்தான) மனதினுலே |
| 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌯 | விட்டுவிட்டு |
| 𑌨𑌵𑌦𑍍𑌵𑌾𑌰𑍇 | ஒன்பது வாயிலகளையுடைய |
| 𑌪𑍁𑌰𑍇 (𑌇𑌵) | பட்டணத்தைப்போலிருககிற |
| 𑌦𑍇𑌹𑍇 ‡ | தேகத்தில் |

* (𑌶𑌂) ஈசுவரப்பிரீதியாயச் செய்கிறேனெனகிற மனச் சமாதானததை யடைந்திருக்கிறவன். (ஸ்ரீ) பரமேசுவரநிஷ்டையில் நிலைததிருக்கிறவன. (ரா) ஆத்மப் பிரயோஜனத்திலேயே திருஷ்டியுள்ளவன்.

† (ரா) ஆத்மாநுபவசுகத்தை.

‡ (ஸ்ரீ) (ரா) (மீ்வி) 𑌦𑍇𑌹𑍀 - என்று பாடம் தேகததையுடைய ஆத்மாவென்று அர்த்தம் (இந்த அர்த்தம் - 𑌪𑍁𑌰𑍇 என்பதுடன் பொருந்தும்பொருட்டு, 𑌪𑍁𑌰𑍇=தேகததில 𑌦𑍇𑌹𑍀=தேகத்தையுடைய ஆத்மாவானவன், என்று அர்த்தஞ் செய்யப்பட்டிருக்கிறது.)

| | |
|---|---|
| 𑌨𑍈𑌵 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍 | (ஒன்றும்) செய்யாமலும் |
| 𑌨 𑌕𑌾𑌰𑌯𑌨𑍍 | செய்விக்காமலும் |
| 𑌸𑍁𑌖𑌂 | ஆனந்தமாக |
| 𑌆𑌸𑍍𑌤𑍇 | இருக்கிறான். |

இந்திரியங்கள், மனசு, இவைகளை சுவாதீனமா யுடையவன் சகல கருமங்களையும், விவேகத்தை யுடைத்தான மனதினாலே விட்டுவிட்டு ஒன்பது வாயில்களையுடைய பட்டணத்தைப்போ லிருக்கிற தேகத்தில் ஒன்றும் செய்யாமலும், செய்விக்காமலும் ஆனந்தமா யிருக்கிறான்.

(ஶ௦) இவன் இதின் அ - கூ - சுலோகங்களில் குறிப்பிடப்பட்டவனே.

(ஶா) தேகம் ஒன்பது துவாரங்களை யுடையதாகையால் அந்தத் தேகத்தை ஒன்பது வாயில்களையுடைய பட்டணத்திற்குச் சமானமாக வருணிக்கப்பட்டது. தேகத்தி லொன்பது வாயில்க ளெவையென்றால், கண் - உ, காது - உ, மூக்கு - உ, வாய் - க, பாயு - க, உபஸ்தம் - க, ஆக ஒன்பது. பட்டணத்தை யுபமானமாகச் சொன்னதின் கருத்தென்னவென்றால், ஒன்பது வாயில்களையுடைய ஒரு கோட்டையிலிருந்துகொண்டு தானாகவும், தன் மந்திரிமுதலிய பரிவாரங்கள் மூலமாகவும் பலவிஷயங்களில் பிரவிருத்தித்தும் பல செய்கைகளைச் செய்துகொண்டும், செய்வித்துக்கொண்டும், நெடுங்காலம் இராஜ்ஜிய தந்திரம் நடத்திவந்த ஒரு அரசன், இராஜ்ஜியாதிகாரத்தில் வெறுப்புற்று அந்த அதிகாரத்தை வேறொருவர் வசம் செய்துவிட்டு அந்தப் பட்டணத்திலேயே வாசஞ் செய்துகொண் டிருக்கிறான். அவன் அந்தப் பட்டணத்திற்குள்ளேயே வாசமாயிருந்தாலும், இராஜ்ஜிய தந்திரத்தினா லுண்டாகும் சகல கவலையும் அவ்வரசனை விட்டுநீங்கி கவலையற்று அந்த அரசன் எப்படிச் சுகமாக விருப்பானோ, அப்படிப்போல தேகமாகிற கோட்டைக்குள் ளிருந்துகொண்டு, இந்திரியங்கள், மனசு, புத்தி, அகங்காரம், தேகம் இவைகளாற் செய்யப்படும் சகல கருமங்களையும் தானே செய்வதாகவும், இந்திரியாதிகளைக் கொண்டு தான் செய்விப்பதாகவும், பிரமையடைந்து அதினால் சுகதுக்கங்களை தன்னுடையதாகப் பாவித்துவந்த இந்த ஆத்மாவானவன் ஞானமடைந்து தான் அனுபவித்துவந்த துக்கசுகாதிகள் தன்னுடையதுமல்ல, தேகேந்திரியாதிகளின் செய்கைக்குத் தான் கர்த்தாவு மல்லவென்று அறிவானாகில், அப்படித் தேரிந்த பிறகு தேகாதிகளால் அவைகளின் வியாபாரம் நடந்துகொண்டிருந்தபோதிலும் அவைகளின் சம்பந்தத்தைவிட்டு தேகத்திற்குள் சுகமாயிருப்பான், என்பதை விளக்கும் பொருட்டு, பட்டணம் திருஷ்டாந்தமாகச் சொல்லப்பட்டது. (கரு)

**கச.** ந கர்த்ருத்வம் ந கர்மாணி லோகஸ்ய ஸ்ருஜதி ப்ரபு:।
ந கர்மபலஸம்யோகம் ஸ்வபாவஸ்து ப்ரவர்த்ததே॥

| | |
|---|---|
| ப்ரபு:* | ஈசுவரன் |
| லோகஸ்ய | ஜனங்களுக்கு |
| கர்த்ருத்வம் | கர்த்திருத்துவ (சுதந்தர) த்தை |
| ஸ்ருஜதி | உண்டாக்குகிறதில்லை |
| கர்மாணி | கருமங்களை |
| ந | உண்டாக்குகிறதில்லை |
| கர்மபலஸம்யோகம் | கருமபலனில்பற்றுதலை |
| ந | உண்டாக்குகிறதில்லை |
| ஸ்வபாவஸ்து | மாயையானது |
| ப்ரவர்த்ததே | பிரவிருத்தித்திருக்கிறது. |

ஈசுவரன் ஜனங்களுக்காக கர்த்திருத்து வத்தையாவது, கருமங்களையாவது, கருமபலனிற் பற்றுதலையாவது உண்டாக்குகிறதில்லை. மாயையானது பிரவிருத்தித் திருக்கிறது. (கர்த்திருத்துவாதி மாயையின் குணத்தாலுண்டான தென்று தாத்பரியம்.)

(ரா) லோகஸ்ய—தேவ, மநுஷிய, பசு, பக்ஷிஸ்தாவராதி ரூபங்களானதும், பிரகிருதி சம்பந்தத்தோடு கூடியிருக்கிறதுமான இந்த லோகத்திற்கு - கர்த்ருத்வம்—தேவமனுஷியாதிகளில் அவரவர்களுக்குத் தனித்தனி கர்த்திருத்துவத்தையும், கர்மாணி — அவரவர்களுக்குத் தனித்தனி கருமங்களையும், கர்மபலஸம்யோகம் — அந்தந்த கருமங்களாலுண்டான பலன்களில் அவரவர்களுக்குத் தனித்தனி சம்பந்தத்தையும், ப்ரபு: — கரும பந்தம் நீங்கி தன் ஸ்வ ஸ்வரூபத்தோடிருக்கிற ஆத்மாவானவன், ந ஸ்ருஜதி—உண்டாக்குகிறதில்லை, ஸ்வபாவஸ்து — பிரகிருதி வாசனையாகிற அநாதிகாலமாய்த் தொடர்ந்து வந்த பூர்வகருமங்களா லுண்டான தேவமனுஷியாதி ஆகாரங்களாகிய பிரகிருதி சம்பந்தத்தினு லுண்டான தேகாபிமான வாசனையானது, ப்ரவர்த்ததே — உண்டு பண்ணுகிறது. கர்த்திருத்துவாதி, சுவபாவத்தினுலுண்டானதே யன்றி ஆத்மாவுக்குக் கர்த்திருத்துவ மில்லை யென்பது தாத்பரியம்.

(ஸ்ரீ,வி) ப்ரபு: — ஜடவஸ்துக்களைப் பார்க்கிலும் சமர்த்தனுன ஜீவனுனவன், லோகஸ்ய — ஜனங்களுக்காவது, தனக்காவது, கர்த்ருத்வம் — கர்த்திருத்துவத்தையாவது, கர்மாணி — கருமங்களையாவது,

* (ஸம்) ஆத்மா அல்லது தேகி.

கர்மபலஸம்யோகம்—கருமபலனில் பற்றுதலையாவது, ந ஸ்ருஜதி—சுதந்தரனா யுண்டுபண்ணவாவது, தானடையவாவது சக்தனல்ல. ஸுவதந்தரனாய் சகலத்தையு முண்டு பண்ணுகிறவ னாகிய ஈசுவரன், ப்ரவர்த்தகே — சுதந்தரனா யுண்டுபண்ணுகிறார்; அல்லது ப்ரபு: — ஈசுவரன், லோகஸ்ய — ஜீவர்களுக்கு, கர்த்ருத்வம் — கர்த்திருத்துவம், கர்மாணி — கருமங்கள், கர்மபலஸம்யோகம் — கருமபல சம்பந்தம், இவைகளில், ந ஸ்ருஜதி — சுவாதந்திரியம் கொடுக்கிறதில்லை. (கச)

கரு. நாதத்தே கஸ்யசித்பாபம் நசைவ ஸுக்ருதம்விபு:।
அஜ்ஞானேநாவ்ருதம் ஜ்ஞானம் தேந முஹ்யந்தி ஜந்தவ:॥

| | |
|---|---|
| விபு: | ஈசுவரன் |
| கஸ்யசித் | ஒருவனுடைய |
| பாபம் | பாபத்தையும் |
| நாதத்தே | கிரகிக்கிறதில்லை |
| ஸுக்ருதம் | புண்ணியத்தையும் |
| நசைவ | கிரகிக்கிறதில்லை |
| அஜ்ஞானேந | அக்ஞானத்தினாலே |
| ஜ்ஞானம் | விவேகமானது |
| ஆவ்ருதம் | மூடப்பட்டிருக்கிறது |
| தேந | அதினாலே |
| ஜந்தவ: | மனிதர்கள் |
| முஹ்யந்தி | மோகித்திருக்கிறார்கள். |

ஈசுவரன் ஒருவனுடைய பாபத்தையாவது, புண்ணியத்தையாவது கிரகிக்கிறதில்லை. அக்ஞானத்தினாலே விவேகமானது மூடப்பட்டிருப்பதினாலே, மனிதர்கள் மோகித்திருக்கிறார்கள்.

(ஸ்ரீ) ஈசுவரன் சர்வத்திரசமமா யிருக்கிறானென்கிற ஞானமானது; தண்டனையும்கூட அநுக்கிரகம் தானென்று அறியாமையாகிய அக்ஞானத்தினால் மூடப்பட்டிருக்கிறது. அதினால் தங்கள் பூர்வ கருமாநுசாரமாய்த் துக்கத்தை அனுபவிக்கும்போது, பகவான் பக்ஷபாதியென்று எண்ணுகிறார்கள்

(ஶங்) நான் செய்கிறேன், செய்விக்கிறேன், புஜிக்கிறேன், புஜிப்பிக்கிறேன், என்று மோகித்திருக்கிறார்கள்.

(ரா) விபு:—ஆத்மா (ஜீவன்) வானவன், கஸ்யசித்— புத்திர மித்திராளுடைய, பாபம் — பாப பலனாகிய துக்கத்தை, நாதத்தே — போக்கடிக்கிறதில்லை. அதாவது தன்னுடையவனென்கிற அபிமானத்

தால் அந்தப் பாபத்திற்குப் பரிகாரஞ் செய்யவாவது, அந்தப் பாபத்தைத் தான் கிரகித்துக் கொள்ளவாவது ஏற்படுகிறதில்லை. கஸ்யசித்- சத்துருவாகிய ஒருவனுடைய, ஸுக்ருதம்— புண்ணியபலமாகிய சுகத்தை, நாதத்தே — போக்கடிக்கிறதில்லை. (அதாவது முன்சொன்ன அர்த்தந்தான்) ஏனென்றால், விபு:— குறித்த ஒருதேசத்தி லிருக்கிறவனல்ல; அதாவது எங்கும் வியாபித்தவன், இவனுக்கு புத்திரமித்திரனென்பது மில்லை, துவேஷியுமில்லை. ஆகையால், ஒருவனுடைய பாபபுண்ணியங்களைப் போக்கடிகக் காரணமேயில்லை. ஆனால் உலகத்தில் துவேஷி, பந்து என்று வியவகரிக்கப்படுகிறதே யென்றால், அந்த வியவகாரம் பூர்வ கருமவாசனையினா லுண்டானது. எப்படியெனில், அஜ்ஞானேநாவ்ருதம்ஜ்ஞானம் — சுகசுவரூப ஞானமானது அக்ஞானத்தினால் மறைக்கப்பட்டிருக்கிறது. அதினால் பந்து, துவேஷி என்கிற அபிமான முண்டாகிறது.

(ஸ்ரீ,வி) விபு:—ஜீவனானவன், கஸ்யசித்பாபம் நாதத்தே — ஒரு துஷ்கருமத்தினுடைய பலனாகிய பாபத்தைச் சுதந்திரமாயடையவாவது, கஸ்யசித் ஸுக்ருதம் — ஒரு ஸத்கருமத்தினுடைய பலனாகிய புண்ணியத்தை சுதந்திரமாயடையவாவது சத்தனல்ல. ஈசுவரந்தான் அந்தக் கருமபலன்களைக்கொடுக்க சத்தன். அல்லது, விபு:— ஈசுவரனுக்கு—பாபகருமமாவது, புண்ணியகருமமாவது ஒன்று மில்லாததினாலே அந்தக் கருமபலனும் அவனுக்கில்லை. பாபபுண்ணிய பலன்களற்ற ஈசுவரன் ஒருவனிருப்பானாகில், ஏன் காணப்படுகிறதில்லை யென்றால், ஜீவனுடைய ஞானமானது அக்ஞானத்தினால் மறைக்கப்பட்டிருப்பதால், ஈசுவரனை யறியவில்லை. (கரு)

---

கசா. ஜ்ஞாநேந து ததஜ்ஞாநம் யேஷாம் நாஶிதமாத்மந:।
தேஷாமாதித்யவஜ்ஜ்ஞாநம் ப்ரகாஶயதி தத்பரம்॥

| | |
|---|---|
| ஆத்மந: } ஜ்ஞாநேந து } * | பிரம்மஞானத்தினாலே |
| யேஷாம் | எவர்களுடைய |
| ததஜ்ஞாநம் | அந்த அக்ஞானமானது |
| நாஶிதம் | நசிப்பிக்கப்பட்டிருக்கிறதோ |
| தேஷாம் | அவர்களுக்கு |
| ஜ்ஞாநம் | ஞானமானது |

* (பா) ஆத்மநா என்றுபாடம். ஆத்மாக்களுடைய என்று அர்த்தம்.

ஆதித்யவத் — சூரியனைப்போல
தத்பரம் — பரப்பிரம்மசுவரூபத்தை
ப்ரகாசயதி — பிரகாசிப்பிக்கிறது.

பிரம்ம ஞானத்தினால் எவர்களுடைய அக்ஞானமானது நசிப்பிக்கப் பட்டிருக்கிறதோ, அவர்களுக்கு ஞானமானது சூரியனைப்போல பரப் பிரம்ம சுவரூபத்தைப் பிரகாசிப்பிக்கிறது. எப்படியென்றால், சூரிய னுடைய பிரகாசமானது இருட்டைப்பொக்கடித்து வஸ்துக்களைப் பிர காசிப்பிக்கிறதுபோல.

(ரா) யேஷாமாத்மநாம் — பிரகிருதியிலிருந்து விடுபட்டிருக்கிற ஆத் மாக்களுடைய, அஜ்ஞாநம் — அநாதிகாலமாய் பிரவிருத்தித்திருக்கிற கரு மகூட்டங்களாகிய அக்ஞானமானது, ஜ்ஞாநேந — எந்த ஞானத்தி னாலே, அதாவது ஆத்மசுவரூபவிஷய பரிபூர்ணஞானத்தினாலே, நா சிதம் — நசிக்கப்பட்டதோ, தேஷாம் — அந்த அக்ஞானம் நீங்கினவர்க ளுடைய, தத்பரம், ஜ்ஞாநம் — பரிபூர்ணமானதும் சுபாவமானது மாகிய அந்த ஞானமானது, ஆதித்யவத் — சூரியனுடைய பிரகாசம்போல், ப்ரகாசயதி — சகலத்தையும் பிரகாசிப்பிக்கிறது. எவர்களுடைய அக் ஞானம் நாசமடைந்ததோ, தேஷாம் — அவர்களுடைய என்கிற இந்த பகுவசனமானது ஜீவசுவரூபம் பலவென்பதைக் காண்பிக்கிறது. அவித்தையினால் பலவாகத் தோற்றுகிறதே யன்றியில் வாஸ்தவத்தி லொன்றுதானென்னும் பக்ஷம் சரியல்ல. ஏனென்றால். அவித்தை நாசமடைந்தபிறகும், பலவென்கிற அர்த்த மிதில் சொல்லப்பட்டிரு ப்பதால் ஜீவன்கள் பலவென்பதும், ஜீவேசுவர பேதமென்பதும் ஏற் படுகிறது. (௧௬)

---

௧௭. தத்புத்தயஸ்ததாத்மாநஸ்தந்நிஷ்டாஸ்தத்பராயணா:।
கச்சந்த்யபுநராவ்ருத்திம் ஜ்ஞாநநிர்தூதகல்மஷா:॥*

தத்புத்தய:† — நிச்சயமான பிரம்மஞானத்தை யுடையவர்க ளாயும்

ததாத்மாந:‡ — பிரம்மத்தினிடத்தில் நிலைத்த மனதையு டையவர்களாயும்

---

* இந்தசுலோகத்தை கூர்மபுராணம் ௧௨-வது அத்-பக்கம், ௧௪௦-ல் காண்க.

† (ரா) தன்னுடைய ஆத்மசுவரூப தரிசனத்தில் நிச்சயஞானமுள்ளவர்க ளாயும்.

‡ (மூல) பிரம்மமே தன் ஆத்மாவாகவுடையவர்கள் (என்றால்) தானே பிரம்மமென்கிற நிச்சய முடையவர்கள். (ரா) ஆத்மசுவரூப தரிசனத்தில் மனதைச் செலுத்துகிறவர்கள், (ஸ்ரீ,வி) தனக்குப் பரமாத்மாவே யஜமானனென்று எண்ணு கிறவர்கள்.

தந்நிஷ்டா:* — பிரம்மநிஷ்டையுடையவர்களாயும்
தத்பராயணா:† — பிரம்மத்தையே ஆசிரயித்தவர்களாயும்
ஜ்ஞாநநிர்தூதகல்மஷா: ‡ — ஞானத்தினலே சகலபாபங்களையும் போக்கடித்துக் கொண்டவர்களாயு மிருக்கிறவர்கள்
அபுநராவ்ருத்திம்§ — திரும்பவும் சமுசாரத்திற்குவாராத ஸ்தானத்தை (மோக்ஷத்தை)
கச்சந்தி — அடைகிறுர்கள்.

நிச்சயமான பிரம்மஞானத்தையும், பிரம்மத்தினிடத்தில் நிலேத்த மனதையும், பிரம்மநிஷ்டையையும் உடையவர்களாயும், பிரம்மத்தையே ஆசிரயித்தவர்களாயும், ஞானத்தினல் சகல பாபங்களையும் போக்கடித்துக் கொண்டவர்களாயு மிருக்கிறவர்கள், திரும்பவும் சமுசாரத்திற்கு வாராத ஸ்தானமாகிய மோக்ஷத்தை யடைகிறுர்கள். (கஎ)

---

கஅ. வித்யாவிநயஸம்பந்நே ப்ராஹ்மணே கவி ஹஸ்திநி।
சுநி சைவ ச்வபாகே ச பண்டிதா: ஸமதர்சிந:॥¶

வித்யாவிநயஸம்பந்நே $ — கல்வியும், வணக்கமுமுள்ள
ப்ராஹ்மணே — பிராமணனிடத்திலும்
கவி — பசுவினிடத்திலும்
ஹஸ்திநி — யானையினிடத்திலும்
சுநி — நாயினிடத்திலும்
ச்வபாகே ச — நாயை சமயல்செய்து தின்கிறவனிடத்திலும்
ஸமதர்சிந: — பிரம்மத்தைச்சமமாய்ப் பார்ப்பவர்கள்
பண்டிதா: — ஞானிகளென்று சொல்லப்படுகிறுர்கள்.

கல்வியும், வணக்கமுமுள்ள பிராமணனிடத்திலும், பசுவினிடத்திலும், யானையினிடத்திலும், நாயினிடத்திலும், நாய் மாமிசம் புஜிப்ப

---

* (ரா) ஆத்மசுவரூபத்தில் எப்போதும் அப்பியாசமுள்ளவர்கள். (ஸ்ரீ,வி) அசஞ்சலமாய் பிரம்மநிஷ்டையை யுடையவர்கள்.

† (ரா) தன்னுடைய ஆத்மசுவரூபத்தை யறிகிறதே பரமப் பிரயோஜனமாக எண்ணினவர்கள்.

‡ ஸ்ரீ பகவத் பிரசாதத்தினுலுண்டான ஞானத்தினுலே சகல பாபங்களு மற்றவர்கள்.

§ (ரா) புநர்ஜநநமில்லாத தன்னுடைய முக்தசுவரூபத்தை.

¶ இந்த சுலோகத்தை பிரம்ம புராணம் அத். கஉரு. சு, கசு. ல்காண்க.

$ (ஸம்) விநயம்—உபசமம்.

வனிடத்திலும, பிரம்மத்தைச் சமமாய்ப்பார்ப்பவர்கள் ஞானிகளென்று சொல்லப்படுகிறார்கள்.

(ரா) ஸம்ஷிதாஃ = பிரகிருதி விமுக்த ஆத்ம சுவரூபத்தையறிந்தவர்கள், ஸமதர்ஷிநஃ—சகலஜீவ சுவரூபமும், ஞானகாரமாய் சமமானதென்று அறிகிறார்கள்.

(ஶ்ரீ,வி) ஸமதர்ஷிநஃ = உத்தம, மத்தியம, நிகிர்ஷ்டப் பிராணிகளிடத்தில் சகலகுண பரிபூர்ணரான பரமாத்துமாவானவர், அந்தரியாமியாய் சமமாயிருக்கிறாரென்று அறிகிறவர்கள். என்றால், உத்தமமானவஸ்துவில் பரமாத்மா பூர்ணமாயும், நிகிர்ஷ்டமான வஸ்துவில் சொற்பமாயுமிருக்கிறதாக அக்ஞானிகள் நினைப்பார்கள்; விவேகிகள் எங்கும் பரமாத்மா சமமாயிருக்கிறதாகப் பார்க்கிறார்களென்பது தாத்பரியம். (கஅ)

---

கக. இஹைவதைர்ஜித꞉ ஸர்கோ யேஷாம் ஸாம்யே ஸ்தி²தம் மந꞉।
நிர்தோ³ஷம் ஹி ஸமம் ப்³ரஹ்ம தஸ்மாத்³ ப்³ரஹ்மணி தே ஸ்தி²தா꞉॥

யேஷாம் எவர்களுடைய
மந꞉ மனதானது
ஸாம்யே* { பிரம்மம் சர்வத்திலும் சமமென்கிற விஷயத்தில்
ஸ்தி²தம் ஸ்திரமாயிருக்கிறதோ
தை꞉ அவர்களாலே
இஹைவ இந்தத்தேகத்துடனிருக்கையிலேயே
ஸர்க³꞉ ஜனனமரண ஸம்ஸாரமானது
ஜித꞉ ஜயிக்கப்பட்டது
நிர்தோ³ஷம் குற்றமற்ற
ப்³ரஹ்ம பிரம்மமானது
ஸமம் ஹி சர்வத்திலும் சமமானதல்லவா
தஸ்மாத் ஆகையினாலே
ப்³ரஹ்மணி பிரம்மத்தினிடத்தில்
தே அவர்கள்
ஸ்தி²தா꞉ (நிஷ்டையையடைந்து) இருக்கிறார்கள்.

எவர்களுடைய மனதானது பிரம்மம் சகலத்திலும் சமமென்கிற விஷயத்தில் ஸ்திரமாயிருக்கிறதோ, அவர்களாலே இந்தத் தேகத்துட

---

* (ஶ்ரீ,வி) கல்யாணகுணங்கள், தோஷமின்மை இவைகளில் சமமாயிருக்கிற.

னிருக்கையிலேயே ஜனன மரணமாகிற ஸம்ஸாரமானது ஜயிக்கப் பட்டது. குற்றமற்ற பிரம்மமானது சர்வத்திலும் சமமானதல்லவா? ஆகையினலே பிரம்மத்தினிடத்தில் அவர்க ளிருக்கிறார்கள். (பிரம்ம சுவரூபத்தை யடைகிறார்களென்பது கருத்து.)

(ஸ்ரீ) யோக்கியா யோக்கியர்களிடத்தில் சமமாயிருக்கத்தகாது. தாரதம்மிய ஞானமிருக்க வேண்டியது. அப்படித் தாரதம்மியமில்லாமல் இருவரையும் சரியாய் எண்ணி நடக்கிறவனுக்கு இந்தலோகத்திலும், பரலோகத்திலும் நிந்தனையே யுண்டாகிறதென்று गौतममहर्षि, சொல்லியிருக்கிறாரே! அப்படியிருக்க சகலத்தையும் சமமாய் எப்படிப் பார்க்கலாமென்றாலோ, ஆத்மசுவரூபஞான மெவனுக்குண்டாகவில்லையோ அவனுக்குத் தாரதம்மிய ஞானம் சொல்லப்பட்டதேயன்றி ஆத்மசுவரூப ஞானமுடையவனுக்குத் தாரதம்மியஞானஞ் சொல்லப்படவில்லை.

(ரா) साम्ये = பிரகிருதி விமுக்தஆத்ம சுவரூபமெல்லாம் சமமானதென்கிற விஷயத்தில், येषां स्थितं मनः = எவர்களுடைய மனதானது ஸ்திரமாயிருக்கிறதோ, तैः = அவர்களாலே, इहैव = சாதனனுஷ்டான சமயத்திலேயே, सर्गो जितः = ஜனன மரணமானது ஜயிக்கப்பட்டது. निर्दोषं = பிரகிருதி சம்பந்த தோஷமற்றதும், समं हि = சகலத்திலும் ஞான சுவரூபமாகவே யிருக்கிறதுந்தான் ஆத்மவஸ்து. அதுதான், ब्रह्म = பிரம்மம் என்று சொல்லப்படுகிறது. ते = அந்த பிரகிருதி விமுக்த ஆத்மசுவரூபிகள், ब्रह्मणि स्थिताः = ஞானகார சுவரூபத்தோடிருக்கிறார்கள். (௧௯)

---

உ0. न प्रहृष्येत् प्रियं प्राप्य नोद्विजेत् प्राप्य चाप्रियम् ।
स्थिरबुद्धिरसम्मूढो ब्रह्मविद् ब्रह्मणि स्थितः ॥

| | |
|---|---|
| स्थिरबुद्धिः | பிரம்மத்தினிடத்தில் ஸ்திரமான புத்தியை யுடையவனும் |
| असम्मूढः* | முற்றிலும் மோகமற்றவனும் |
| ब्रह्मणि स्थितः | பிரம்மநிஷ்டையையுடையவனுமிருக்கிற |
| ब्रह्मवित्† | பிரம்மஞானியானவன் |
| प्रियं प्राप्य | இஷ்டமானதையடைந்தும் |

---

* (ரா) தேகமே ஆத்மாவென்று நினையாதவன். (ஸ்ரீ,வி) தான் சுதந்திரனென்கிற அக்ஞானமில்லாதவன்.

† (ஸ்ரீ,வி) பரமாத்மாவே சுதந்திரனென்று அறிந்தவன்.

| | |
|---|---|
| நவு ஹுஷ்யேக் | சந்தோஷிக்கிறதில்லை |
| அப்ரியம் | } அநிஷ்டமானதை யடைந்தும் |
| ப்ராப்ய | |
| நோத்விஜேத் | விசனப்படுகிறதில்லை. |

பிரம்மத்தினிடத்தில் ஸ்திரமான புத்தியை யுடையவனும், முற்றிலும் மோகமற்றவனும், பிரம்மநிஷ்டையை யுடையவனு மிருக்கிற பிரம்மஞானியானவன் இஷ்டமானதை யடைந்ததினால் சந்தோஷமாவது, அநிஷ்டமானதை யடைந்ததினால் விசனமாவது படுகிறதில்லை.

(ரா) (முந்திய சுலோகத்தில் செய்ததுபோலவே இந்த சுலோகத்திலும், மேலாக பிரம்ம பரமாக சொல்லியிருக்கிறவைகளை யெல்லாம் ஆத்மபரமாக அர்த்தஞ்செய்திருக்கிறதுதான் வித்தியாசம்; மற்றவைகள் வித்தியாச மில்லை.)

(ஸ்ரீ) இப்படிப்பட்ட பிரம்ம நிஷ்டனுக்கு இஷ்டா நிஷ்ட மெப்படி யுண்டாகுமென்றாலோ, அவனுக்கு இஷ்டமானதும், அநிஷ்டமானதுமில்லை யென்பது நிச்சயமே. ஆனால், பிராரப்தகருமமானது அவனை இந்தத் தேகமுள்ளவரையில் விடாது, அதை அவன் அநுபவித்தே தீரவேண்டும். அப்படி அநுபவிக்கும் விஷயத்தில் அந்தத் தேகத்திற்குண்டாகிற இஷ்டாநிஷ்டங்களை அவன் அனுபவிப்பதேயில்லை. ஆனால், அவன் அநுபவிப்பதுபோல் பிறருக்குக் காணப்படும். (உ0)

---

உக. பாஹ்யஸ்பர்சேஷ்வஸக்தாத்மா விந்தத்யாத்மநி யத்ஸுகம்।
ஸப்ரஹ்மயோகயுக்தாத்மா ஸுகமக்ஷயமச்நுதே॥

| | |
|---|---|
| பாஹ்யஸ்பர்சேஷு | உலகத்திலுள்ளவஸ்துக்களில் |
| அஸக்தாத்மா | ஆசையற்ற மனதையுடையவன் |
| ஆத்மநி* | தன்னிட அந்தக்கரணத்தில் |
| யத் } † | எந்தச்சுகமுண்டோ |
| ஸுகம் | |
| (தத் ஸுகம்) | } அந்தச்சுகத்தை |
| விந்ததி | அடைகிறான் |

---

* (ரா) தன்னுடைய ஆத்மசுவரூபத்தில்.

† (ரா) யஸ்ஸுகம் - என்றுபாடம், ய: = எவன், ஸுகம் = சுகத்தை விந்ததி = அடைகிறானோ, ஸ: = அவன் என்று அந்வயம்.

| | |
|---|---|
| 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌯𑍋𑌗𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 | பிரம்மத்தியானத்தில் மனதையுடையவன் (ஆகில்) |
| 𑌸𑌃 | அவன் |
| 𑌅𑌕𑍍𑌷𑌯𑌂 | நாசமற்ற |
| 𑌸𑍁𑌖𑌂 | சுகத்தை |
| 𑌅𑌶𑍍𑌨𑍁𑌤𑍇 | அடைகிறான். |

உலகத்திலுள்ள விஷயங்களில் ஆசையற்ற மனதையுடையவன் தன்னிட அந்தக்கரணத்தில் எந்தச்சுகமுண்டோ அந்தச் சுகத்தை யடைகிறான். பிரம்மத்தியானத்தில் மனதையுடையவனானால், அவன் நாசமற்ற சுகத்தை யடைகிறான். என்றால், விஷயங்களி லாசையுள்ளவனுக்கு எப்பவும் மனதில் கவலை யுண்டாகிக்கொண்டே யிருக்கும். ஆசையற்ற மனதை யுடையவனாகவானால் கவலையற்ற அந்தக்கரணத்தை யடைகிறான். அப்படிக் கவலையற்றிருப்பதே சுகமல்லவா? ஆனாலிது அற்பசுகமே. கவலையற்ற அந்த அந்தக்கரணம் பிரம்மத்தியானத்தில் நின்றுவிட்டால் நாசமற்ற மோக்ஷசுகம் கிடைக்குமென்பது கருத்து. (உக)

---

உஉ. 𑌯𑍇 𑌹𑌿 𑌸𑌂𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌜𑌾 𑌭𑍋𑌗𑌾 𑌦𑍁𑌃𑌖𑌯𑍋𑌨𑌯 𑌏𑌵 𑌤𑍇 ।
𑌆𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑌵𑌨𑍍𑌤𑌃 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌨 𑌤𑍇𑌷𑍁 𑌰𑌮𑌤𑍇 𑌬𑍁𑌧𑌃 ॥

| | |
|---|---|
| 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 | ஓ! குந்திபுத்திரா! |
| 𑌸𑌂𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌜𑌾𑌃* | விஷயங்களினாலுண்டான |
| 𑌭𑍋𑌗𑌾𑌃 | போகங்கள், அல்லது சுகங்கள் |
| 𑌯𑍇 | எவையோ |
| 𑌤𑍇 | அவை |
| 𑌦𑍁𑌃𑌖𑌯𑍋𑌨𑌯𑌃 | துக்கத்திற்குக் காரணமானவைகளே |
| 𑌹𑌿 | ஏனென்றால் |
| 𑌆𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑌵𑌨𑍍𑌤𑌃 | உண்டாவதும், அழிவதுமாகவே யிருக்கின்றன |
| 𑌤𑍇𑌷𑍁 | அவைகளில் |
| 𑌬𑍁𑌧𑌃 | உண்மைதெரிந்த விவேகியானவன் |
| 𑌰𑌮𑌤𑍇 | சந்தோஷிக்கிறதில்லை. |

ஓ! அர்சுனா! விஷயங்களினா லுண்டான சுகங்கள் எவையோ அவை துக்கத்திற்குக் காரணமானவைகளே. ஏனென்றால், உண்டா

---

* (பா) விஷயேந்திரிய சம்பந்தத்தினாலுண்டான. (ஸ்வா) இதின் உ-வது அத்தியாயம், கச-வது சுலோகத்திலுள்ள "𑌮𑌾𑌤𑍍𑌰𑌾𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌾𑌸𑍍𑌤𑍁" பார்க்க.

வதும், அழிவதுமா யிருக்கின்றன. (நிலையற்றவைகள்) அவைகளில், உண்மைதெரிந்த விவேகியானவன் சந்தோஷமடைகிறதில்லை. (உஉ)

---

உ௩. 𑌶𑌕𑍍𑌨𑍋𑌤𑍀𑌹𑍈𑌵𑌯𑌸𑍍𑌸𑍋𑌢𑍁𑌂 𑌪𑍍𑌰𑌾𑌕𑍍𑌶𑌰𑍀𑌰𑌵𑌿𑌮𑍋𑌕𑍍𑌷𑌣𑌾𑌤𑍍।
𑌕𑌾𑌮𑌕𑍍𑌰𑍋𑌧𑍋𑌦𑍍𑌭𑌵𑌂 𑌵𑍇𑌗𑌂 𑌸𑌯𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌸𑌸𑍁𑌖𑍀 𑌨𑌰𑌃॥

| | |
|---|---|
| 𑌕𑌾𑌮𑌕𑍍𑌰𑍋𑌧𑍋𑌦𑍍𑌭𑌵𑌂 | ஆசை, கோபம் இவைகளினாலுண்டாகும் |
| 𑌵𑍇𑌗𑌂 | மனத்துடிப்பை |
| 𑌇𑌹𑍈𑌵 | உடனுக்குடனே (இந்த ஜன்மத்தில்தானே) |
| 𑌶𑌰𑍀𑌰𑌵𑌿𑌮𑍋𑌕𑍍𑌷𑌣𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌾𑌕𑍍 | * சரீரத்தை விடுவதற்குமுந்தியே |
| 𑌸𑍋𑌢𑍁𑌂 | சகிக்கிறதற்கு |
| 𑌯𑌃 𑌨𑌰𑌃 | எந்தமனிதனானவன் |
| 𑌶𑌕𑍍𑌨𑍋𑌤𑌿 | சக்தியுடையவனோ |
| 𑌸𑌃 | அவன் |
| 𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 | மனச்சமாதானமுள்ளயோகி |
| 𑌸𑌃 | அவன் |
| 𑌸𑍁𑌖𑍀† | சுகமுள்ளவன். |

ஆசை, கோப மிவைகளாலுண்டாகும் மனத்துடிப்பை (அதுண்டான) உடனுக்குடனே (சகித்து, அப்படியே) சரீரமுள்ளவனாயில் சகிக்கிறதற்கு, எந்தப் புருஷன் சக்தியுடையவனோ, அவனே மனச் சமாதானமுள்ளயோகி. அவனே சுகி.

(ஸ்ரீ) பிராணவியோகமான பிறகு ஸ்திரீகள் ஆலிங்கனஞ்செய் வதினாலும், புத்திரன் தகனஞ்செய்வதினாலும், எப்படி மனோவிகார முண்டாகிறதில்லையோ, அதுபோல உயிரோ டிருக்கையிலேயே தன் தேகவிஷயமாயுண்டாகும் சுகதுக்கங்களிலும் விகாரமடையாம லிருக்கவேண்டுமென்பது கருத்து. (இதற்கு ஞானவாசிஷ்ட சுலோகத்தை உதாகரிக்கிறார். அதாவது) "𑌪𑍍𑌰𑌾𑌣𑍇 𑌗𑌤𑍇 𑌯𑌥𑌾 𑌦𑍇𑌹𑌃 𑌸𑍁𑌖𑌂 𑌦𑍁𑌃𑌖𑌂 𑌨 𑌵𑌿𑌨𑍍𑌦𑌤𑌿। 𑌤𑌥𑌾 𑌚𑍇𑌤𑍍𑌪𑍍𑌰𑌾𑌣𑌯𑍁𑌕𑍍𑌤𑍋𑌽𑌪𑌿 𑌸 𑌕𑍈𑌵𑌲𑍍𑌯𑌾𑌶𑍍𑌰𑌮𑍇 𑌵𑌸𑍇𑌤𑍍॥"

(𑌸𑌂) இதில் சொல்லப்பட்டிருக்கிற, 𑌕𑌾𑌮𑌂 = ஆசை; இதெப்படிப்பட்டதென்றால், தனக்கு எது சுகமென்று காணப்படுகிறதோ, அந்த வஸ்துக்களைப் பார்ப்பது, கேட்பது முதலியவைகளா லுண்டாகும் விருப்பம். 𑌕𑍍𑌰𑍋𑌧𑌂 = கோபம்; இதெப்படிப்பட்டதென்றால்,

---

* (𑌭𑌾) சாதனானுஷ்டான சமயத்தில்.

† (𑌭𑌾) ஆத்மாநுபவத்தினா லுண்டாகும் சுகத்தை யடைந்தவனாகிறான்.

தனக்கு எது துக்கத்தை யுண்டாக்குகிறதோ அந்த வஸ்துக்களைப் பார்ப்பது கேட்பது, நினைப்பது முதலியவைகளா லுண்டாகும் வெறுப்பு; வெகம்—மனத்துடிப்பு இது காமத்தினால் உண்டாவது; கோபத்தினா லுண்டானதென்று இருவகைப்படும். காமத்தினாலுண்டாவது-மயிர்க்கூர்ச்செறிகிறது, கண்கள் முகம் இவைகளில் மலர்ச்சி யுண்டாகிறது, கண்களில் ஆநந்தபாஷ்ப முண்டாகிறது, புன்சிரிப்புண்டாகிறது, இப்படிப்பட்டவைகளினால் மனதிலுண்டாகும் பரபரப்பு. குரோதத்தினாலுண்டாவது - தேகப் படபடப்பு, வேர்வை, உதட்டைக்கடித்தல், கண்கள் செவப்பது, வாய்குளறல், இவைகளினால் மனதிலுண்டாகும் பரபரப்பு. ஸோடும்—சகிப்பது; இது எப்படிப்பட்டதென்றால், மேல் கண்ட காமக்குரோதங்களினா லுண்டாகும் மனத்துடிப்பை அதுண்டானவுடனே, அதற்குள்ளாகாமல் விவேகத்தினால் அடக்குவதுதான்.

(ஶ) (ஸ்ரீ,வி) பசு பக்ஷிமுதலிய தேகத்தையடைந்தால் காமக்குரோதாதிகளை யடக்குவது சாத்தியமல்ல. ஆகையால், இந்தமனுஷ்ய தேகத்தி லிருக்கையிலேயே அடக்கவேண்டுமென்று சொல்லப்பட்டது. உ௩

---

௨௪. யோ௨ந்தஸ்ஸுகோ௨ந்தராராம ஸ்ததா௨ந்தர்ஜ்யோதிரேவய:।
ஸயோகீ ப்ரஹ்மநிர்வாணம் ப்ரஹ்மபூதோ௨திகச்சதி॥

| | |
|---|---|
| அந்தஸ்ஸுக: | தன் ஆத்மாவிடத்திலேயே சுகமுடையவனையும் |
| அந்தராராம:* | தன் ஆத்மாவிடத்திலேயே கிரீடையுடையவனையும் |
| ய: | எவனிருக்கிறானோ |
| ததா | அப்படியே |
| அந்தர்ஜ்யோதிரேவ† | தன் ஆத்மாவிடத்திலேயே பிரகாசமுடையவனாய் |
| ய: | எவனிருக்கிறானோ |

---

* (ஸ்ரீ) தன் விளையாடல் ஆத்மாவிடத்திலேயேயன்றி வெளிவஸ்துக்களிடத்திலுண்டாவதில்லை. (ஶ) ஆராம = பரமாத்மதரிசனம், ஸ்பரிசனம், சல்லாபம் முதலிய பலவிதமா யுண்டாக்கப்பட்ட, சுகமுடையவன். (ஸ்ரீ,வி) பகவத்தரிசனத்தினா லுண்டான சுகத்தை யுடையவன். (ஸ்வா) ஸுகமேவஸ்வம் நாந்யத் ந்யேதைவதத்ஸ்வம்। ஸுகம் ஸ்வாந்தஹ்ருதே யோஸுகம் ஸ்வந்தஸ்ஸுக: யம॥—நானேசுகம், வேறொன்றல்ல; வேறே (சுகம்) ஒன்றுண்டென்றால் அது சுகமல்ல. என் பிரயோஜனத்தின் பொருட்டன்றி பிரேமை என்பது கிடையாது. என் பொருட்டாக விருக்கிற அந்த பிரியமானது என்னுடைய சுவபாவமல்ல.

† (ஸ்ரீ,வி) தனக்குள்ளே பிரகாசித்துக்கொண்டிருக்கிற பகவானாகிற ஜோதியையுடையவன்.

| | |
|---|---|
| ஸ: யோகீ | அந்தப் பிரம்மநிஷ்டனான யோகியானவன் |
| ப்ரஹ்மபூத:* | ஜீவன்முக்தனாய், அல்லது பிரம்மசுவரூபமாய் |
| ப்ரஹ்மநிர்வாணம் † | பிரம்மத்தில் லயத்தை, அல்லது பிரம்மாநந்தத்தை |
| அதிகச்சதி | பூர்ணமாயடைகிறான். |

தன் ஆத்மாவிடத்திலேயே சுகத்தையும், கிரீடையையும், அப்படியே பிரகாசத்தையும், அடைந்திருப்பவனெவனோ, அந்தயோகியானவன் பிரம்மசுவரூபமாய் பிரம்மத்தில் லயத்தையடைகிறான். (உச)

---

உரு. லபந்தே ப்ரஹ்மநிர்வாணம் ருஷய: க்ஷீணகல்மஷா:।
சின்னத்வைதா யதாத்மாந: ஸர்வபூதஹிதே ரதா:॥

| | |
|---|---|
| க்ஷீணகல்மஷா: | பாபங்களைப் போக்கடித்துக்கொண்டிருக்கிற |
| சின்னத்வைதா:‡ | சமுசயம், அக்ஞான மிவைகளற்றிருக்கிற |
| யதாத்மாந: | இந்திரியங்கள், மனசு இவைகளைச் சுவாதீனமாய் வைத்துக்கொண்டிருக்கிற |
| ஸர்வபூதஹிதே ரதா: | சகலப்பிராணிகளுக்கும் நன்மையைக் கோரிக்கொண்டிருக்கிற. |
| ருஷய: § | ரிஷிகள் (ஞானிகள்) |
| ப்ரஹ்மநிர்வாணம் ¶ | பிரம்மத்தில் லயத்தை, அல்லது மோக்ஷத்தை, அல்லது பிரம்மாநந்தத்தை |
| லபந்தே | அடைகிறார்கள். |

பாபங்களையும், சமுசயத்தையும், அக்ஞானத்தையும், நிவர்த்தித்துக்கொண்டும், இந்திரியங்கள், மனசு, இவைகளை சுவாதீனத்தில் வைத்

---

* (ஸ்ரீ,வி) பிரம்மத்தினிடத்தில் நிஷ்டையை யுடையவனாய்.

† (ரா) தன்னுடைய ஆத்மாநுபவசுகத்தை.

‡ (ரா) சீதோஷ்ணாதி த்வந்த்வங்க ளற்றவர்கள். (ஓ) (ஸ்ரீ,வி) சின்னத்வையாய தாத்மாந:, சின்னத்வையா: = சமுசயம், விபரீதஞான மிவைகளற்றவர்களாயும், ஆயதாத்மாந: = விசாலமான மனதையுடையவர்களாயு மிருக்கிறவர்கள். (ஸ்ரீ,வி) மனசுவாதீனமுடையவர்கள்.

§ (ரா) ஆத்மதரிசன முள்ளவர்கள்.

¶ (ரா) தன்னுடைய ஆத்மாநுபவசுகத்தை. (ஓ) பிரம்மத்தினால் கொடுக்கப்பட்ட சுகத்தை. (ஸ்ரீ,வி) பிராகிருத சரீரமில்லாத பிரம்மத்தை.

துக்கொண்டும் சகலப் பிராணிகளுக்கு நன்மையையே கோரிக்கொண்டு மிருக்கிற ஞானிகள் பிரம்மத்தை யடைகிறார்கள். (உரு)

---

உசா. காமக்ரோதவியுக்தாநாம் யதீநாம் யதசேதஸாம்।
அபிதோ ப்ரஹ்மநிர்வாணம் வர்ததே விதிதாத்மநாம்॥

| | |
|---|---|
| காமக்ரோதவியுக்தாநாம் | ஆசை கோபங்களிலிருந்து விடுபட்டவர்களாயும் |
| யதசேதஸாம் | மனதை யடக்கினவர்களாயும் |
| விதிதாத்மநாம்* | ஆத்மதத்துவத்தை யறிந்தவர்களாயுமிருக்கிற |
| யதீநாம்† | யதி (சகல கருமத்தையும்விட்ட பிரம்ம நிஷ்டர்) களுக்கு |
| ப்ரஹ்மநிர்வாணம்‡ | பிரம்மத்தில் லயம், அல்லது மோக்ஷம், அல்லது பிரம்மாநந்தம் |
| அபித:§ | இருபக்கத்திலும் (தேகத்தோ டிருக்கையிலும், தேகம்போன பின்பும்) |
| வர்ததே | இருக்கிறது. |

ஆசை கோபங்களிலிருந்து விடுபட்டும், மனதை யடக்கியும், ஆத்மதத்துவத்தை யறிந்தும் சகல கருமங்களும் விட்டுப்போயு மிருக்கிற பிரம்ம நிஷ்டர்களான யதிகளுக்கு பிரம்மாநந்த மெவ்விடத்திலு மிருக்கின்றது. (உசா)

---

உஎ. ஸ்பர்சாந்க்ருத்வா பஹிர்பாஹ்யாம்ஶ்சக்ஷுஶ்சைவாந்தரே ப்ருவோ:। ப்ராணாபாநௌ ஸமௌ க்ருத்வா நாஸாப்யந்தரசாரிணௌ॥

உஅ. யதேந்த்ரியமநோபுத்திர்முநிர்மோக்ஷபராயண:।
விகதேச்சாபயக்ரோதோ ய: ஸதா முக்த ஏவ ஸ:॥

| | |
|---|---|
| பாஹ்யாந் ஸ்பர்சாந் | (தேகத்திற்கு) வெளியிலுள்ள விஷயங்களை |
| பஹி: க்ருத்வா | வெளியில்தள்ளியும் |
| சக்ஷு: | கண்களை |

---

* (ரா) விஜிதாத்மநாம் - என்றுபாடம் = மனதைஜயித்தவர்கள்.

† (ரா) (ஸ்ரீவி) முயற்சிசெய்கிறவர்களுக்கு.

‡ (ரா) தன்னுடைய ஆத்மாநுபவசுகம்.

§ (ஶம) கைக்குள்ளேயே (ஆ) எவ்விடத்திலும் (ஸ்ரீவி) எந்தக்காலத்திலும், இடத்திலும். (ஸ்வா) சீக்கிரமாய், தக்ஷணமே, ஸமீபத்தில்.

| | |
|---|---|
| ப்ருவோ꞉ அந்தரே * | புருவங்களின் மத்தியிலேயே |
| க்ருத்வா | வைத்து |
| ப்ராணாபானௌ | பிராணுபான வாயுக்களை |
| நாஸாப்யந்தரசாரிணௌ | மூக்குக்குள்ளாக சஞ்சரிக்கும்படியாய் |
| ஸமௌ க்ருத்வா | சமமாகச்செய்து |
| யதேந்த்ரியமனோபுத்தி꞉ † | இந்திரியங்கள், மனசு, புத்தி இவைகளை யடக்கிய |
| விகதேச்சாபயக்ரோத꞉ | ஆசை, பயம், கோபம் இவைகளைவிட்ட |
| மோக்ஷபராயண꞉ | மோக்ஷத்தையே யெதிர்பார்த்துக் கொண்டிருக்கிற |
| முனி꞉ ய꞉ ‡ | மௌனத்தோடு கூடிய யோகியெவனே |
| ஸ꞉ | அவன் |
| ஸதா § | எப்போதும் |
| முக்த ஏவ ¶ | முக்தனே. |

தேகத்திற்கு வெளியி லிருப்பதாகிய சப்தாதி விஷயங்களைத் தேகத்திற்குள் சேரவொட்டாமல் வெளியில் தள்ளியும், கண்களைப் புருவங்களின் மத்தியில்வைத்தும், பிராணுபானவாயுக்களை மூக்குக் குள்ளாகச் சமமாய் சஞ்சரிக்கும்படி (கும்பகம்) செய்தும், இந்திரியம், மனசு, புத்திகளையடக்கியும், ஆசை, பயம், கோபங்களை விட்டும், மோக்ஷத்தையே யெதிர் பார்த்துக்கொண்டு மிருக்கிற மௌனத்தோடு கூடிய யோகியெவனே, அவன் எப்போதும் முக்தனே. (என்றால், சகல துக்கங்களிலுமிருந்து விடுபட்டவனே என்பது தாத்பரியம்.)

---

* (ரா) நாஸிகாக்ரே. (ஸ்வா) மூக்குநுனி—நுனி என்பது புருவத்திற்குச் சமீபத்தில் சிறுத்திருக்கிற பாகமென்றும் அல்லது இதை அடியாகவைத்துக் கொண்டால், மற்றொருமுனையா யிருப்பதற்கு நுனி என்றும் சொல்லலாம். ஆனல் புருவத்தின் மத்தியென்று இந்த சுலோகத்தி லிருக்கிறதினுலும் அதற்கே - நாஸிகாக்ரே - என்று (ரா) அர்த்தஞ் செய்திருக்கிறதினுலும், மூக்கு நுனி புருவத்திற்கு சமீபத்தில் சிறுத்திருக்கிற பாகமென்றுதான் அர்த்தமாகிறது. சு - வது அத்தி. கரு, அ - வது அத்தியாயம் - க0 - இந்த சுலோகங்களையும்பார்க்க.

† (ரா) ஆத்மதரிசனத்தின் பொருட்டு இந்திரிய, மனசு, புத்திகளையடக்கி.

‡ (ரா) ஆத்மதரிசனத்திலேயே யிருப்பவன்.

§ (ரா) சாதநாநுஷ்டான சமயத்திலும்.

¶ (ஸ்ரீ,ஸ்வா) முக்தன்போலுள்ளவனே. அதாவது காமக்குரோதாதிகளிலிருந்து விடுபட்டவனுனதினுலே முக்தனுக்கு சமானமானவன்.

(ஸா) ஸ்ரீதர சுவாமிகளுடைய வியாக்கியானத்தை ஆதாரமாய்க் கொண்டு இந்த சுலோகங்களிலுள்ள அடியில் விவகரித்த பதங்களுக்கு விரிவாய் அர்த்த மெழுதப்படுகிறது. "வெளியிலுள்ள விஷயங்களை வெளியில்தள்ளி" என்றால்,இந்திரியங்களுக்குப் புலப்படுவதாகிய சப்த, ஸ்பரிச, ரூப, இரச, கெந்தங்களும், இவைகளையுடைய வஸ்துக்களுந் தான் விஷயங்களென்று சொல்லப்படுகின்றன. இந்த விஷயங்களை இந்திரியங்கள் கிரகித்துக்கொண்டுபோய் மனதிடத்தில் சேர்க்கின் றன. மனசு அந்தவிஷயங்களைப் புத்தியினிடத்தில் சேர்க்கிறது. புத்தி யானது அந்த விஷயங்களை தன் சமீபத்திலிருக்கிற ஆத்மாவிடத்தில் சேர்க்கிறது. ஆத்மா அந்தவிஷயங்களைக் கிரகித்தானனால் அந்தவிஷ யங்களினு லுண்டாகிற சுகதுக்கங்களை ஆத்மா அடைகிறான்; அந்த சுக துக்கங்களை ஆத்மா கிரகித்துக்கொண் டிருக்கிறவரையிலும் நிஷ்டை செய்ய யோக்கிய னகமாட்டான். ஆகையினலே தேகத்திற்கு வெளியி லிருப்பதாகிய விஷயங்களை வெளியிலிருந்து தன்னிடத்திற்குக் கொண் டுவந்து சேர்க்க இடம் கொடாமல், வெளியிலே தள்ளிவிட வேண்டு மென்று சொல்லப்பட்டது. தன் சமீபமாகவந்துவிட்ட விஷயங்களை யநுபவிக்காமலே தள்ளி விடுவதற்கு நல்ல ஞானி தகுந்தவனுனலும் யோகாப்பியாசி தகுந்தவனல்ல. ஆகையா லவனுக்குபாயம் இந்த சுலோ கத்திலேயே சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது, விஷயங்களை எதெது தன்னிடம் கொண்டுவந்து சேர்க்கிறதோ அந்தப்புத்தி, மனசு, இந்திரி யங்களை அடக்குவதுதான். இவைகளில் முதலிலடக்கவேண்டியது இந் திரியங்கள்தான். ஏனென்றால், அவைகள்தான் முதலில் விஷயங்களைக் கிரகிக்கின்றன. அப்பியாசத்தினல் முதலில் இந்திரியங்களையும் பிறகு மனதையும் பிறகு புத்தியையும் கிரமமா யடக்கவேண்டும். இவைக ளடங்கிவிட்டால் சுகதுக்காதிகள் ஆத்மாவுக்குண்டாக ஹேதுவேயில்லை. இந்திரியங்களில் பிரதான இந்திரியங்களாகிய கண், மூக்கு, வாய்களை அடக்கும் மார்க்கமும், இதில் சொல்லப்பட் டிருக்கிறது. எப்படியென் றால், கண்களை மூடிக்கொண்டால் தூக்கம்வரும். திறந்திருந்தால் விஷ யங்களைக் கிரகிக்குமாகையால் அரைக்கண்கள் மூடியும், அரைக்கண்கள் திறந்து மிருக்கும்படி செய்து அவைகளின் பார்வையைப் புருவங்களின் மத்தியில் நிறுத்தும்படிக்கும், பிராணபான வாயுக்கள்மூலமாய் மூக்கு வாசனை முதலியவைகளைக் கிரகிக்கிறபடியால் அந்தவாயுக்களை வெளி யிலும், உள்ளேயும் அதிகமாய் சஞ்சரிக்கவிடாமல் மூக்குக்குள்ளாகவே அடக்கும்படிக்கும் (ஏனென்றால், அப்படி வாயுக்களை முழுது மடக்கி

விட்டால் பிராணன் நிற்கமாட்டா தாகையாலும் முழுதும் விட்டும் இழுத்தும்வந்தால் வாசனை முதலியவைகளைக் கிரகித்துக் கொண்டுவரு மாகையாலும் தான்.) மௌநம்—மௌனமானது-வாக்கு, நாக்கு, இவை களின் பிரவிருத்தியைத் தடுக்குமாகையால் மௌனத்தினால் வாக்கை நிறுத்தும்படிக்கும் சொல்லப்பட்டது. (௨௭-௨௮)

---

௨௯. போக்தாரம் யஜ்ஞதபஸாம் ஸர்வலோகமஹேஶ்வரம்।
ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம் ஜ்ஞாத்வா மாம் ஶாந்திம்ருச்சதி॥

| | |
|---|---|
| யஜ்ஞதபஸாம் | யக்ஞம், தபசு இவைகளின் பலன்களை |
| போக்தாரம்* | அனுபவிக்கிற, அல்லது இரக்ஷிக்கிறவும் |
| ஸர்வலோகமஹேஶ்வரம் | சகல லோகங்களுக்கும் மகேசுவரனா யிருக்கிறவும் |
| ஸர்வபூதாநாம் ஸுஹ்ருதம் | சகலப் பிராணிகளுக்கு முபகாரியாக விருக்கிறவும் |
| மாம் | என்னை |
| ஜ்ஞாத்வா | (யோகநிஷ்டையால்) அறிந்து |
| ஶாந்திம் | மோக்ஷத்தை |
| ருச்சதி | அடைகிறான். |

யக்ஞம், தபசு, இவைகளின் பலன்களை அனுபவிக்கிறவனையும் அல்லது இரக்ஷிக்கிற (பலன்களைக்கொடுத்து சம்ரக்ஷணை செய்கிற) வனையும், சகலலோகங்களுக்கு ஈசன் (யஜமான் அல்லது பிரபு) ஆயும், சகலப் பிராணிகளுக்கு முபகாரியாயுமிருக்கிற என்னை யெவன் அறிகிறானோ, அவன் மோக்ஷத்தை யடைகிறான்.

(ரா) நான் சகலலோகத்திற்கும் ஈசனென்றும், சகலப் பிராணி களுக்கும் சுகிருத்தென்றும் அறிந்து கருமயோகம் செய்வதிலேயே சுகத்தை யடைகிறான்.

(ஸ்வா) யக்ஞம், தபசு இவைகளின் பலனை, தான் அனுபவிக்கிற தாக பகவான் சொன்னதின் கருத்தானது (௯) சொல்லியிருக்கிற வபிப் பிராயத்தை யனுசரித்து விவரமாய்ச் சொல்லப்படுகிறது. அதாவது, சர்வப்பிராணிகளுக்கு மீசனான பரமாத்துமாவானவர், அவரதீனனாகிய ஜீவர்கள்செய்கிற யக்ஞதபசுகளின் பூர்ணமானபலன்களில் அந்தந்த

---

* (ஶம்) கர்த்தாவாகவும், தேவதாரூபியாகவு மிருந்து புஜிக்கிற.

ஜீவசுவபாவத்திற்குத் தகுந்தபடி அவர்களுக்கு எவ்வளவு கிடைக்கத் தகுமோ அவ்வளவை அவர்களுக்குக் கொடுத்து மிச்சத்தை ஈசுவரனே யனுபவிக்கிறார். அதெப்படியென்றால், இராஜாவினால் அந்நியதேசத்திற்கு யுத்தத்தின் பொருட்டு அனுப்பப்பட்ட சேனைத்தலைவன் அவ்விதமாகப்போய் தேசத்தை ஜயித்து சம்பாதித்துவந்த பொருள்களை முழுதும் அந்த இராஜாவே புஜிக்கிறான். ஆனால் அந்தச்சேனாதிபதி முதலியவர்களில் அவரவர்களின் யோக்கியதாநுசாரமாய் அந்தப் பொருளில் சிலபாகம் அவர்களுக்குக் கொடுப்பதுபோல ஜீவனுக்குச் சொற்பபலனை ஈசுவரன் கொடுக்கிறானென்பது கருத்து. (உகூ)

இதி ஸ்ரீ பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம்
யோகசாஸ்த்ரே ஸ்ரீ க்ருஷ்ணார்ஜுந ஸம்வாதே
கர்மஸந்ந்யாஸயோகோ நாம
பஞ்சமோத்யாய:.
ஸ்ரீ க்ருஷ்ணாய பரப்ரஹ்மணே நம:.
கருமஸந்நியாச யோகமென்கிற ஐந்தாவது அத்தியாயம்
முற்றிற்று.

---

𑌶𑍍𑌰𑍀𑌰𑌸𑍍𑌤𑍁.

𑌷𑌷𑍍𑌠𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃.

# ஆறாவது அத்தியாயம்.

---

𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚.

க. 𑌅𑌨𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌃 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌂 𑌕𑌾𑌰𑍍𑌯𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌕𑌰𑍋𑌤𑌿 𑌯𑌃।
𑌸 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑍀 𑌚 𑌯𑍋𑌗𑍀 𑌚 𑌨 𑌨𑌿𑌰𑌗𑍍𑌨𑌿𑌰𑍍𑌨 𑌚𑌾𑌕𑍍𑌰𑌿𑌯𑌃॥

| | |
|---|---|
| 𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚 | ஸ்ரீ கிருஷ்ணபகவான் சொல்வது |
| 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌂 𑌅𑌨𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌃 | கருமபலனை அபேக்ஷியாதவனாய் |
| 𑌕𑌾𑌰𑍍𑌯𑌂 | செய்யவேண்டிய |
| 𑌕𑌰𑍍𑌮 | கருமத்தை |
| 𑌯𑌃 | எவன் |
| 𑌕𑌰𑍋𑌤𑌿 | செய்கிறானோ |
| 𑌸𑌃 | அவனே |
| 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑍀 𑌚 | சந்நியாசியும் |
| 𑌯𑍋𑌗𑍀 𑌚 | யோகியும் |
| (𑌭𑌵𑌤𑌿) | ஆகிறான் |
| 𑌨𑌿𑌰𑌗𑍍𑌨𑌿𑌃 | அக்கினியைவிட்டவனும் |
| 𑌨 | அல்ல |
| 𑌅𑌕𑍍𑌰𑌿𑌯𑌶𑍍𑌚 | கிரியையைவிட்டவனும் |
| 𑌨 | அல்ல. |

கருமபலனில் அபேக்ஷை வைக்காதவனாய்ச் செய்யவேண்டிய (நித்திய நைமித்திக) கருமத்தை எவன் செய்கிறானோ, அவனே சந்நியாசி. அவனே யோகி. அக்கினியை விட்டவன் (அக்கினியில் செய்யத்தக்கதாகிய ஆகுதி, ஹோமம் முதலியவைகளை விட்டவன்.) சந்நியாசியாகவும் மாட்டான். கிரியைகளை விட்டவன் (யாதொரு கருமத்தையும் செய்யாமலிருப்பவன்) யோகியாகவும்மாட்டான் (அல்லது அக்கினி கிரியை இவைகளை விட்டவன் சந்நியாசியுமல்ல, யோகியுமல்ல.)

(ஶ்ரீ) அக்கினியையும் கிரியைகளையும் விட்டு உலகத்தில் பிரசித்தமாயிருக்கிற சந்நியாஸாசிரமத்தை நிஷேதிக்கும் பொருட்டுச் சொல்லப்பட்டதல்ல. பலாபேக்ஷையைவிட்டுக் கருமங்களைச்செய்து ஈசுவரார்ப்பணம் செய்யும் கருமயோகியுங்கூட சந்நியாசி யாகிறானென்பதைச் சொல்லியிருக்கிறதாகத் தாத்பரியம்.

(ஹூ) ஞான மடைகிறதற்குமுந்தி அக்கினிஹோத்திரம், வைசுவதேவம் முதலிய கிரியைகளை விடக்கூடாது. ஏனென்றால், பிரம்ம க்ஷத்திரிய வைசியர்களுக்கு அவைக ளவசியமென்று விதிக்கப்பட்டிருக்கிறது. / "அமுளெடிவொ உிஜா தீநாம் உ-நீநாம் ஹுடிெெடிவதம். "வரதிமாலுவு வுஹோ நாம் ஸவ-தஹஸடிஸிநாம்" துவிஜர்களுக்கு "(பிரம்ம க்ஷத்திரிய வைசியர்களுக்கு)த் தெய்வமக்கினியில், முனிகளுக்குத் தெய்வம் ஹிருதயத்தில், அக்ஞானிகளுக்கு (ஆத்மஞானமில்லாதவர்களுக்கு)த் தெய்வம் பிரதிமைகளில், சமதிருஷ்டியுள்ளவர்களுக்கு எங்கும் தெய்வம்." உத்தரகீதை பார்க்க. ஆகையால், துவிஜர்கள் ஞான மடைவதற்கு முந்தி அக்கினிமூலமாய்ச் செய்யத்தக்க கிரியைகளைவிட்டால், அதினால் கெடுதி யடைவார்களேயன்றி சந்நியாசியாகமாட்டார்கள். (௧)

---

௨. யம் ஸநூாஸமிதி வுாஹு: யொாம் தம் விஷி வாணுவ।
நஹ்யஸநூஸ்தஸங்கவுொ யொகீ ஹவதி கசுந॥

| | |
|---|---|
| வொணுவ | ஓ! அர்சுன! |
| யம் | எதை |
| ஸநூாஸமிதி* | சந்நியாசமென்று |
| வுாஹு: | சொல்லுகிறார்களோ |
| தம் | அதை |
| யொாம் (ஊதி)† | யோகமென்று |
| விஷி | அறி |
| ஹி | ஏனென்றால் |
| அஸநூஸ்தஸங்கவு: | சகலவிருப்பத்தையும்விடாத |
| கசுந | ஒருவனும் |
| யொகீ | கருமயோகியாக |
| நஹவதி | ஆகிறதில்லை. |

ஓ! அர்சுன! எதைச் சந்நியாசமென்று சொல்லுகிறார்களோ அதைக் கருமயோகமென்றறி. ஏனென்றால், சகல விருப்பத்தையும் விடாத வொருவனும் கருமயோகியாக வாகிறதில்லை.

(ஸ) பரமார்த்த சந்நியாசியையும், நிஷ்காம கருமயோகியையும் எப்படிச் சமமாய்ச் சொல்லலாமென்றால், பலனி லிச்சையைவிட்டவிஷயத்தி லிருவரும் சமமாகையா லப்படிச் சொல்லப்பட்டது. (௨)

---

* (ரா) "ஸநூாஸஇதி" என்று பாடம். ஞானயோகமென்று அர்த்தம். (ஸ்ரீ,வி) காமக்குரோதாதிகளை விடுவது.

† (ஸ்ரீ,வி) தியானயோகத்திற்குக் காரணமானவும் காமக்குரோதாதிகளை விட்டுச் செய்யப்படுகிறவுமான கருமயோகத்தில் அடக்கி யிருக்கிறதாக.

௩. 𑌆𑌰𑍁𑌰𑍁𑌕𑍍𑌷𑍋𑌰𑍍𑌮𑍁𑌨𑍇𑌰𑍍𑌯𑍋𑌗𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌕𑌾𑌰𑌣𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇।
𑌯𑍋𑌗𑌾𑌰𑍂𑌢𑌸𑍍𑌯 𑌤𑌸𑍍𑌯𑍈𑌵 𑌶𑌮𑌃 𑌕𑌾𑌰𑌣𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇॥

| | |
|---|---|
| 𑌯𑍋𑌗𑌂* | ஞானயோகத்தை |
| 𑌆𑌰𑍁𑌰𑍁𑌕𑍍𑌷𑍋𑌃 | அடைய விச்சிக்கிற |
| 𑌮𑍁𑌨𑍇𑌃 | யோகிக்கு |
| 𑌕𑌰𑍍𑌮 | கருமயோகமானது |
| 𑌕𑌾𑌰𑌣𑌂 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 | காரணமாய்ச் சொல்லப்படுகிறது |
| 𑌯𑍋𑌗𑌾𑌰𑍂𑌢𑌸𑍍𑌯 𑌤𑌸𑍍𑌯 | ஞானயோகத்தை யடைந்திருக்கிறவனுக்கு |
| 𑌶𑌮𑌏𑌵† | மனதை நிறுத்தலே |
| 𑌕𑌾𑌰𑌣𑌂 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 | அகண்டத் தியானத்திற்குக் காரணமாகச் சொல்லப்படுகிறது. |

ஞானயோகமடைய விச்சிக்கிற யோகிக்குக் கருமயோகம் காரணமாயும், ஞானயோக மடைந்திருக்கிறவனுக்கு மனதைநிறுத்தலே அகண்டத் தியானத்திற்குக் காரணமாயும் சொல்லப்படுகிறது.

(𑌸𑌂) (ஸ்ரீ) நிஷ்காம கருமமானது ஞானத்திற்குக் காரணமாயும், ஞானமடைந்தவனுக்கு மனதை நிறுத்தலானது நிலைத்தத் தியானத்திற்குக் காரணமாயுமிருக்கிறது.

(𑌰𑌾) 𑌶𑌮𑌃=கருமத்தை விட்டுவிடுவது, 𑌕𑌾𑌰𑌣𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇=காரணமாகச் சொல்லப்படுகிறது. ஏனென்றால், ஆத்மாவலோகனம் வரையில்தான் கருமம் செய்யவேண்டியது. தன் ஆத்மசுவரூப தரிசனமாகிய மோக்ஷத்தை யடைந்தவன், பிறகு கருமத்தை விட்டு விடலாமென்பது தாத்பரியம். (௩)

---

௪. 𑌯𑌦𑌾 𑌹𑌿 𑌨𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌰𑍍𑌥𑍇𑌷𑍁 𑌨 𑌕𑌰𑍍𑌮𑌸𑍍𑌵𑌨𑍁𑌷𑌜𑍍𑌜𑌤𑍇।
𑌸𑌰𑍍𑌵𑌸𑌙𑍍𑌕𑌲𑍍𑌪𑌸𑌨𑍍𑌨𑍍𑌯𑌾𑌸𑍀 𑌯𑍋𑌗𑌾𑌰𑍂𑌢𑌸𑍍𑌤𑌦𑍋𑌚𑍍𑌯𑌤𑍇॥

| | |
|---|---|
| 𑌯𑌦𑌾𑌹𑌿 | எப்போது |
| 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌰𑍍𑌥𑍇𑌷𑍁 | விஷயங்களில் |
| 𑌨 𑌅𑌨𑍁𑌷𑌜𑍍𑌜𑌤𑍇 | இச்சைவைக்கிறதில்லையோ |

* (𑌰𑌾) தன்னுடைய ஆத்ம சுவரூபதரிசனம்.

† (𑌶) (ஸ்ரீ,வி) 𑌶𑌮𑌃 = பகவத்ஞானத்தில் எப்பவும் நிஷ்டையும், ஸ்தோத்திரம், கீர்த்தனம், நமஸ்காரம், அர்ச்சனை முதலியனவும், 𑌕𑌾𑌰𑌣𑌂 = முக்திக்கு உபாயமாக, 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇=சொல்லப்படுகின்றன. (𑌸𑍍𑌵𑌾) 𑌶𑌮𑌃=𑌸𑌰𑍍𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌂- அதாவது - மனது - புத்தி - சித்தம் - அகங்கார மின்னுன்கையும் அவைகளின் விஷயங்களில் பிரவேசிக்க வொட்டாமல் தடுப்பது.

| | |
|---|---|
| கர்மஸு ந | கருமங்களைச் செய்கிறதி லிச்சைவைக்கிற தில்லையோ |
| ததா | அப்போது |
| ஸர்வஸங்கல்பஸந்ந்யாஸீ * | சகலமான அபேக்ஷையையும் விட்டவனான அவன் |
| யோகாரூடஃ | யோகாரூடனென்று |
| உச்யதே | சொல்லப்படுகிறான். |

எப்போது விஷயங்களி லிச்சை வைக்கிறதில்லையோ, கருமங்களைச் செய்கிறதிலிச்சைவைக்கிற தில்லையோ, அப்போது சகலமான அபேக்ஷையையும் விட்டவனாகிய அவன் யோகாரூடனென்று சொல்லப்படுகிறான்.

(ஸாம) யதா ஹி நேந்த்ரியார்தேஷு - என்று பாடம். யதா ஹி = எப்போது, இந்த்ரியார்தேஷு = விஷயங்களிலேயும், கர்மஸு = கருமங்களிலேயும், நாநுஷஜ்ஜதே = இச்சை வைக்கிறதில்லையோ, ததா = அப்போது (மற்றவைகளில் வித்தியாசமில்லை.) (௪)

---

௫. உத்தரேதாத்மநாத்மாநம் நாத்மாநமவஸாதயேத்।
ஆத்மைவ ஹ்யாத்மநோ பந்துராத்மைவ ரிபுராத்மநஃ॥

| | |
|---|---|
| ஆத்மநா † | தன்னாலே அல்லது விவேகமுள்ள மனதினாலே |
| ஆத்மாநம் | தன்னை |
| உத்தரேத் | கரையேற்றிக்கொள்ளவேண்டியது |
| ஆத்மாநம் | தன்னை |
| நாவஸாதயேத் | கெடுத்துக்கொள்ளலாகாது |
| ஹி | ஏனென்றால் |
| ஆத்மநஃ | தனக்கு |
| ஆத்மைவ ‡ | தானேஅல்லதுமனதே |
| பந்துஃ § | பந்து |

---

* (ஶ்ரீ,வீ) சகல கருமங்களையும் விடுகிறவன். என்றால், தன்னுடைய பிரயத்தினமன்றி கிடைத்தவஸ்துக்களிலும்கூட அபிமானத்தை விட்டவனென்பது கருத்து.

† (ஶ்ரீ,வீ) மனதினாலே அல்லது பரமாத்மாவினாலே.

‡ - § (ஸாம) உலகத்திலுள்ள பந்துக்கள் சிநேகபாசத்திற்கு இடமாவார்களேயன்றி மோக்ஷத்திற்கு அவர்கள் விரோதிகளே. ஆகையாலவர்கள் பந்துக்களல்ல. தானேதனக்குப் பந்துவாகவும் சுகிருத்தாகவு மாகவேண்டும். (ரா) தன் மனதே தனக்குப்பந்து. ஒப்படிப்பட்ட மனதென்றால், விஷயத்தில் பற்றுதலற்ற

ஆத்மநஃ — தனக்கு
ஆத்மைவ* — தானேஅல்லது மனதே
ரிபுராத்மநஃ† — சத்துரு.

தன்னாலே அல்லது விவேகமுள்ள மனதினாலே தன்னை (சமுசாரமாகிய சமுத்திரத்திலிருந்து) கரையேற்றிகொள்ள வேண்டியது. தன்னைச் (சமுசாரதுக்கத்தில் அல்லது நரகத்தில் விழும்படியாய்) கெடுத்துக்கொள்ளலாகாது. ஏனென்றால், தனக்குத்தானே அல்லது மனதே பந்து. தனக்குத்தானே அல்லது மனதே சத்துரு.

(ஸா) ஒவ்வொருவனும் மோக்ஷம் அல்லது நரகமாவது, சுகம் அல்லது துக்கமாவது அடைவதற்கு அவனுடைய சுவ பிரயத்தினம் காரணமென்று குறித்துக் காட்டப்பட்டது. (ரு)

---

சா. பந்துராத்மாத்மநஸ்தஸ்ய யேநாத்மைவாத்மநா ஜிதஃ।
அநாத்மநஸ்து ஶத்ருத்வே வர்தேதாத்மைவ ஶத்ருவத்॥

யேநாத்மநா — எந்தஆத்மாவினாலேயே
ஆத்மா — மனதானது
ஜிதஃ — ஜயிக்கப்பட்டதோ
தஸ்யாத்மநஃ — அந்த ஆத்மாவுக்கு
ஆத்மா — மனதானது
பந்துஃ — பந்து
அநாத்மநஃ — மனதை ஜயிக்காதவனுக்கு
ஆத்மா — மனதானது
ஶத்ருவத் — சத்துருவைப்போல
ஶத்ருத்வே — அபகாரத்திலேயே
வர்தேத — இருக்கும் (பிரவிருத்தித்திருக்கும்.)

எவனாலே மனதானது ஜயிக்கப்பட்டிருக்கிறதோ அவனுக்கு மனதானது உபகாரத்தைச் செய்கிறது. மனதை ஜயிக்காதவனுக்கு மனதானது சத்துருவைப்போல அபகாரத்தைச் செய்கிறது.

---

மனசு (ஸ்ரீ,வீ) மனதேபந்து. அல்லது பரமாத்மாவே பந்து ஏனென்றால், அவரிடத்தில் பக்திசெய்தால் பந்துவைப்போலாகிறார் என்பதே.

* † (ஶம்) தன் ஆத்மாவே பிறரைச் சத்துருவாக எண்ணக் காரணமாயிருப்பதால் தனக்குத்தன் ஆத்மாவே சத்துருவாகிறது. (ரா) தன்மனதே தனக்குச் சத்துரு, எப்படிப்பட்ட மனதென்றால், விஷயத்தில் பற்றுதலையுடைய மனசு. (ஸ்ரீ,வி) மனதே-அல்லது பரமாத்மாவே. ஏனென்றால், பரமாத்மாவிடத்தில் பக்தி செய்யாவிட்டால் பரமாத்மா இவனைச் சத்துருவைப்போல் எண்ணுகிறார் என்பதே.

(ஸ்ரீ,வீ) எந்த ஜீவனாலே பரமாத்மாவானவர் ஜயிக்கப்பட்டாரோ என்றால், பக்தியினால் சுவாதீனம் செய்துகொள்ளப்பட்டவ ராஞரோ, அந்த ஜீவனுக்கு அந்தப் பரமாத்மா பந்து. பரமாத்மாவிடத்தில் பக்தி செய்யாதவனுக்கு அந்தப் பரமாத்மாவே சத்துருவைப் போல அபகாரஞ்செய்கிருர். (சு)

---

எ. ஜிதாத்மநஃ ப்ரஶாந்தஸ்ய பரமாத்மா ஸமாஹிதஃ।
ஶீதோஷ்ணஸுகது:கேஷு ததா மாநாபமாநயோஃ॥

| | |
|---|---|
| ஜிதாத்மநஃ | மனதை ஜயித்தவனும் |
| ப்ரஶாந்தஸ்ய | காமக்குரோதாதிகளை யடக்கினவனுயுமிருக்கிறவனுடைய |
| ஆத்மா | மனதானது. |
| ஶீதோஷ்ணஸுக-து:கேஷு | சீதம், உஷ்ணம், சுகம், துக்கங்களை யடைந்தாலும் |
| ததா | அப்படியே |
| மாநாபமாநயோஃ | மாஞவமானங்களையடைந்தாலும் |
| பரம் | அதிகமாய் |
| ஸமாஹிதஃ | தன் ஆத்மாவில் நிஷ்டையையுடைய தாகவேயிருக்கும். |

மனதை ஜயித்தும் காமக்குரோதாதிகளை யடக்கியு மிருக்கிறவனுடைய மனதானது சீதோஷ்ண சுகதுக்கங்களையும் அப்படியே மாஞவமானங்களையு மடைந்தாலும் அதிகமாய் தன் ஆத்மாவில் நிஷ்டையை யுடையதாகவே யிருக்கும்.

(ஶம்) (ஸ்ரீ) சீதோஷ்ண சுகதுக்கங்களிலும், மாஞவமானங்களிலும் சமமாயிருந்தும், காமக்குரோதங்களை யடக்கியும், மனது இந்திரியங்களை ஜயித்து மிருக்கிறவனுடைய இருதயத்தில், பரமாத்மா, ஸமாஹிதஃ=பரமாத்மா பிரகாசித்துக்கொண்டிருக்கிருர்.

(ரா) பரமாத்மா ஸமாஹிதஃ = ஆத்மா = தன்னுடைய சுவரூபமானது, ஸமாஹிதஃ=பிரகாசிக்கிறது; இப்படிப்பட்ட ஆத்ம சுவரூபமானது பிரகிருதி பந்தத்தைப் போக்கடித்துக் கொண்டு சுத்தமாயிருப்பதால், பரமாத்மா= பரமாத்மாவென்று சொல்லப் பட்டது. அல்லது, ஆத்மா=ஆத்மாவானது, பரம்= அதிகமாய், ஸமாஹிதஃ= பிரகாசிக்கிறது. (எ)

---

அ. ஜ்ஞாநவிஜ்ஞாநத்ருப்தாத்மா கூடஸ்தோ விஜிதேந்த்ரிய:।
யுக்த இத்யுச்யதே யோகீ ஸமலோஷ்டாஶ்மகாஞ்சந:॥

| | |
|---|---|
| ஜ்ஞாநவிஜ்ஞாந-த்ருப்தாத்மா * | அறிவு, அறிந்தபடி அனுபவம் இவைகளினால் திருப்தியானமனதை யுடையவனும் |
| கூடஸ்த: † | மனோவிகாரமற்றவனும் |
| விஜிதேந்த்ரிய: | இந்திரியங்களைச் செவ்வையாய் ஜயித்தவனும் |
| ஸமலோஷ்டாஶ்ம-காஞ்சந: ‡ | மண்கட்டி, கல்லு, தங்கம், இவைகளைச் சமமாய் நினைக்கிறவனுமி ருக்கிற |
| யோகீ § | ஞானயோகியானவன் |
| யுக்த இதி உச்யதே ¶ | யோகாரூடனென்று சொல்லப்படுகிறான். |

* (ராா) ஞானமென்பது ஆத்மசுவரூப ஞானமே. விக்ஞானமென்பது சகல கிரியைகளையும் நடத்துகிறது பிரகிருதியேயன்றி ஆத்மாவுக்குச் சம்பந்தமில்லையென்று தெரிகிறதுதான். இப்படிப்பட்ட ஞானத்தினால் திருப்தியடைந்த மனதை யுடையவனும். (ஶ) ஞானமென்பது பகவத் சுவரூபத்தை யறிகிற ஞானம். அல்லது பகவத் விஷயமான சிரவணமனனாதிகளாலுண்டாவது. விக்ஞானமென்பது பகவத்மகிமைகளை விசேஷமாயறிவது. அல்லது சிரவணாதிகளாலுண்டான ஞானத்தினால் கிடைக்கும் பகவத்தரிசனம். (ஸ்ரீ,வீ) பகவான் சர்வோத்தமனென்பதை வேதங்களினாலறிவதுதான் ஞானம். பகவான்மகிமைகளை வேதத்தினால் அறிவது விஞ்ஞானம்.

† (ராா) தேவமனுஷியாதி தேகங்களிலிருந்தாலும் ஞானாகாரமான ஆத்மசுவரூபத்துடனிருப்பவன் (ஶ) (ஸ்ரீ,வீ) சீதோஷ்ணாதிகளால் விகாரமடையாதவன்.

‡ (ஶ) மண் முதலிய சகலவஸ்துக்களையும் அததினுடைய சுவபாவமெப்படியோ அப்படியே சரியாய் அறிவது. (என்றால், இந்தமத சித்தாந்தப்படிக்கு ஐந்துவித பேதஞானம் மோக்ஷ ஏதுவானது. பேதங்களாவன, (க) ஜீவேசுவரபேதம். (உ) ஜீவபரஸ்பரபேதம். (ங) ஜீவஜடபேதம். (ச) ஜடபரஸ்பரபேதம். (ரு) ஜடேசுவரபேதம். இந்த நான்காவது வகுப்பில் இந்த மண், கல், தங்கம் முதலியவை சேருகின்றன. தங்கத்தைத் தங்கமாகவும் கல்லைக் கல்லாகவும் மண்ணை மண்ணாகவும் இப்படியே மற்றுமுள்ள ஜடவஸ்துக்களை அததின் சுபாவப்படி அறிவதுதான் சமமான ஞானம். அப்படியன்றி மண்ணைக் கல்லாகவும் கல்லைத் தங்கமாகவும் இப்படிப்போல ஒன்றை வேறொன்றாக அறிவதுதான் விபரீதஞானம்.)

§ (ராா) கருமயோகி. (ஶ) ஞானயோகி.

¶ (ராா) சுவரூபத்தை யறிகிற யோகாப்பியாசத்திற்குத் தகுந்தவனென்று சொல்லப்படுகிறான். (ஸ்ரீ,வீ) சம்பூர்ணமான யோகத்தையுடையவனாகச் சொல்லப்படுகிறான்.

அறிவு, அறிந்தபடி யனுபவம் இவைகளினால் திருப்தியான மனதை யுடையவனும், மனோவிகார மற்றவனும், இந்திரியங்களைச் செவ்வையாய் ஜயித்தவனும், மண்கட்டி, கல்லு, தங்கமிவைகளைச் சமமாய் நினைத்திருக்கிறவனுமி ருக்கிற ஞானயோகி யானவன் யோகாரூடனென்று சொல்லப்படுகிறான். (அ)

---

சு. ஸுஹ்ருந்மித்ராயுர்யுதாஸீந மத்யஸ்த த்வேஷ்ய பந்துஷு।
ஸாதுஷ்வபி ச பாபேஷு ஸமபுத்திர் விசிஷ்யதே॥

| | |
|---|---|
| ஸுஹ்ருந்மித்ராயுர்யுதா-ஸீநமத்யஸ்தத்வேஷ்ய பந்துஷு | சுகிருத், மித்திரன், அரி, உதாசீநன், மத்தியஸ்தன், துவேஷி, பந்து, இவர்களிடத்திலும் |
| ஸாதுஷ்வபி | சாத்வீககுண முள்ளவர்களிடத்திலும் |
| பாபேஷு ச | பாபிகளிடத்திலும் |
| ஸமபுத்தி: | சமமானபுத்தியை யுடையவன் |
| விசிஷ்யதே | சிரேஷ்டனாயிருக்கிறான். |

சுகிருத் (பிரதிப்பிரயோசனத்தை யெதிர்பாராமல் உபகாரஞ்செய்கிற சிநேகிதந்தான் சுகிருத்), மித்திரன் (ஒரு பிரதிப்பிரயோசன உத்தேசத்துடன் சிநேகஞ் செய்கிறவன் மித்திரன்), அரி (அபகாரஞ் செய்கிறவன்), உதாசீநன் (விவாதப்படுகிற இருகக்ஷிக்காரர்களுக்கும் சாதகம் அல்லது பாதகம் செய்யவேண்டியவனாக விருந்தும் அப்படிச் செய்யாமலொதுங்கியிருப்பவன்), மத்தியஸ்தன் (விவாதப்படுகிற இருகக்ஷியாரையும் சமாதானஞ் செய்கிறவன்), துவேஷி (வெறுக்கத்தக்கவன்), பந்து (தன்னிடத்தில் விசுவாசமுள்ள உறவின் முறையான்), இவர்களிடத்திலும், சாதுக்களிடத்திலும், பாவிகளிடத்திலும் சமானமான புத்தியை யுடையவன் சிரேஷ்டனாயிருக்கிறான்.

(பா) ஸுஹ்ருத் = வயோவிசேஷாநங்கீகாரேண ஹிதைஷிண: = சுகிருத் என்றால், வயதின்விசேஷத்தைக் கவனியாமலே தனக்கு எவன் உபகாரஞ் செய்கிறானோ அவந்தான் சுகிருத். மித்ரம் = தனக்குச் சமவயதுள்ளவனும், தனக்குபகாரஞ் செய்கிறவனுமி ருப்பவந்தான் மித்திரன், அரி: = ஒரு நிமித்தியத்தைக்கொண்டு தனக் கபகாரஞ் செய்பவன் அரி. உதாஸீந: = உபகார அபகாரங்களுக்கு நிமித்திய மில்லாததினால் உபகார அபகாரங்கள் செய்யாமலிருப்பவன் உதாசீநன். மத்யஸ்த: = பிறவியினாலேயே உபகார அபகாரங்கள் செய்யாதவன். த்வேஷ்ய: = பிறவியினாலேயே தீங்கு நினைக்கிறவன். பந்து: = பிறவியினாலேயே நன்மையைக் கோருகிறவன். ஸாதுஷு = தருமத்தை யுடையவர்களி டத்திலும், பாபேஷு ச = அதருமம் செய்கிறவர்களிடத்திலும்,

(௩) (மீ,வி) ஸுஹ்ருத் = தன் சிநேகிதனுக்கு இன்ன காரியத்தைச் செய்தால் கெடுதி யுண்டாகுமென்று சொல்லி அதிலிருந்து ரக்ஷிக்கிறவன் மித்திரன். உதாஸீந꞉ = அபகார உபகாரங்கள் செய்வதற்கு நிமித்தியமிருந்துஞ் செய்யாதவன். த்வேஷ்ய꞉ = உபகாரம் அபகார மிரண்டும் செய்கிறவன். ஸம்பந்து꞉ = பிரதிப்பிரயோஜனத்தை யெதிர் பார்த்து உபகாரஞ் செய்கிறவன், ஸாது꞉ = சுகிருத்துவம், மித்திரத்துவம் முதலியவைகள் அந்தக்கரணத்தினு லுண்டானவையே யன்றி ஜீவ சுவரூபத்திற் கில்லையென்றும் எல்லா ஜீவ சுவரூபமும் சைதன்னியாம்சத்தில் ஒரேமாதிரியாய் சமமா யிருக்கிறதென்றும் தெரிகிறவன். (௯)

---

௧௦. யோகீ யுஞ்ஜீத ஸததமாத்மாநம் ரஹஸி ஸ்தித꞉।
ஏகாகீ யதசித்தாத்மா நிராசீரபரிக்ரஹ꞉॥

| | |
|---|---|
| யதசித்தாத்மா | மனசு தேகம் இந்திரியங்கள் இவைகளைச் சுவாதீனப்படுத்திக் கொண்டவனும் |
| நிராசீ꞉* | ஆசையற்றவனும் |
| அபரிக்ரஹ꞉† | தனக்கு வேண்டுமென்று எந்தவஸ்துக்களையும் வைத்துக்கொள்ளாதவனுயு மிருக்கிற |
| யோகீ‡ | யோகியானவன் |
| ரஹஸி | ஏகாந்தமானவிடத்தில் |
| ஏகாகீ | ஒருவனுகவே |
| ஸ்தித꞉ | ஸ்திரமா யிருந்துகொண்டு |
| ஆத்மாநம்§ | மனதை |
| ஸததம்¶ | எப்போதும் |
| யுஞ்ஜீத‖ | நிறுத்தவேண்டியது. |

---

* (ரா) ஆத்மாவைத்தவிர மற்றவஸ்துக்களி லிச்சையற்றவன்.

† (ரா) ஆத்மாவைத்தவிர மற்றவஸ்துக்களில் அபிமானமற்றவன்.

‡ (ரா) கருமயோகநிஷ்டன். (மீ,வி) ஞானுேபாயத்தை அனுஷ்டிக்கிறவன்.

§ (ரா) தன்னை.

¶ (ரா) யோகாப்பியாச காலம் முழுதும்.

‖ (ரா) தன்னுடைய ஆத்மதரிசன நிஷ்டையை யுடையவனுகச் செய்துகொள்ள வேண்டியது. (மீ,வி) அகண்டத் தியானத்தில் நிறுத்தவேண்டியது.

மனசு, தேகம், இந்திரியங்கள் இவைகளைச் சுவாதீனப் படுத்திக் கொண்டவனும், ஆசையற்றவனும், தனக்கு வேண்டுமென்று யாதொரு வஸ்துக்களையும் வைத்துக்கொள்ளாதவனுமி ருக்கிற யோகியானவன் ஏகாந்தமானவிடத்தில் ஒருவனாகவே ஸ்திரமா யிருந்துகொண்டு மனதை எப்போதும் நிறுத்தவேண்டியது. (கo)

கக. ஶுசௌ தேஶே ப்ரதிஷ்டாப்ய ஸ்திரமாஸநமாத்மந:।
நாத்யுச்ச்ரிதம் நாதிநீசம் சைலாஜிநகுஶோத்தரம்॥

கஉ. தத்ரைகாக்ரம் மந: க்ருத்வா யதசித்தேந்த்ரியக்ரிய:।
உபவிஶ்யாஸநே யுஞ்ஜ்யாத் யோகமாத்மவிஶுத்தயே॥

| | |
|---|---|
| ஶுசௌ | பரிசுத்தமான |
| தேஶே | இடத்தில் |
| நாத்யுச்ச்ரிதம் | அதிக உயரமல்லாமலும் |
| நாதிநீசம் | அதிகத்தாழ்மையல்லாமலும் |
| சைலாஜிந-குஶோத்தரம் | தருப்பை, மான்தோல், வஸ்திரம், இவைகள் முறையே ஒன்றின்பேரி லொன்றாய்ப் போடப்பட்ட |
| ஸ்திரம்* | ஸ்திரமான |
| ஆஸநம் | ஆஸனத்தை |
| ஆத்மந: | தனக்காக |
| ப்ரதிஷ்டாப்ய | செய்துகொண்டு |
| தத்ர ஆஸநே | அந்த ஆஸனத்தில் |
| உபவிஶ்ய | உட்கார்ந்து |
| மந: | மனதை |
| ஏகாக்ரம் | ஓரே நிலையாக |
| க்ருத்வா | செய்து |
| யதசித்தேந்த்ரியக்ரிய: | மனசு, இந்திரியங்கள், இவைகளுடைய செய்கைகளை யடக்கினவனாய் |
| ஆத்மவிஶுத்தயே† | மனச்சுத்திக்காக |
| யோகம்‡ | பிரம்மத்தியானத்தை |
| யுஞ்ஜ்யாத் | செய்யவேண்டியது. |

* (பா) மரத்தினல் செய்யப்பட்ட.
† (பா) பந்த நிவிர்த்திக்காக.
‡ (பா) ஆத்மாவலோகனத்தை.

இந்த அத்தியாயத்தின் கo-வது சுலோகத்தினுடைய உத்தரார்த்தத்தையும் கக-கஉ-சுலோகங்களையும் வராஹபுராணம் கஅஎ-வது அத்தியாயத்தில் காண்க.

பரிசுத்தமானவிடத்தில் அதிக வுயரமும், அதிகத் தாழ்மையுமன்றி தருப்பை, மான்தோல் அல்லது புலித்தோல், வஸ்திரம் இவைகள் முறையே ஒன்றின்மேலொன்றாய்ப் போடப்பட்ட ஸ்திரமான ஆசனத்தைத் தனக்காகச் செய்துகொண்டு அந்த ஆசனத்தி லுட்கார்ந்து, மனதை யொரே நிலையாகச்செய்தும், மனசு, இந்திரியங்கள் இவைகளுடைய செய்கைளை யடக்கியும், மனச் சுவாதீனத்திற்காக பிரம்மத்தியானத்தைச் செய்யவேண்டியது. (௧௧-௧௨)

---

௧௩. 𑌸𑌮𑌂 𑌕𑌾𑌯𑌶𑌿𑌰𑍋𑌗𑍍𑌰𑍀𑌵𑌂 𑌧𑌾𑌰𑌯𑌨𑍍𑌨𑌚𑌲𑌂 𑌸𑍍𑌥𑌿𑌰𑌃।
𑌸𑌂𑌪𑍍𑌰𑍇𑌕𑍍𑌷𑍍𑌯 𑌨𑌾𑌸𑌿𑌕𑌾𑌗𑍍𑌰𑌂 𑌸𑍍𑌵𑌂 𑌦𑌿𑌶𑌶𑍍𑌚𑌾𑌨𑌵𑌲𑍋𑌕𑌯𑌨𑍍॥

௧௪. 𑌪𑍍𑌰𑌶𑌾𑌨𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 𑌵𑌿𑌗𑌤𑌭𑍀𑌃 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌾𑌰𑌿𑌵𑍍𑌰𑌤𑍇 𑌸𑍍𑌥𑌿𑌤𑌃।
𑌮𑌨𑌃 𑌸𑌂𑌯𑌮𑍍𑌯 𑌮𑌚𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑍋 𑌯𑍁𑌕𑍍𑌤 𑌆𑌸𑍀𑌤 𑌮𑌤𑍍𑌪𑌰𑌃॥

| | |
|---|---|
| 𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 | யோகியானவன் |
| 𑌕𑌾𑌯𑌶𑌿𑌰𑍋𑌗𑍍𑌰𑍀𑌵𑌂 | தேகம், கழுத்து, தலை இவைகளை |
| 𑌅𑌚𑌲𑌂 | அசங்காமல் |
| 𑌸𑌮𑌂 | சமமாய் |
| 𑌧𑌾𑌰𑌯𑌨𑍍 | வைத்துக்கொண்டும் |
| 𑌸𑍍𑌥𑌿𑌰𑌃 | ஸ்திரமாயிருந்துகொண்டும் |
| 𑌸𑍍𑌵𑌂 | தன்னுடைய |
| 𑌨𑌾𑌸𑌿𑌕𑌾𑌗𑍍𑌰𑌂* | மூக்குநுனியை |
| 𑌸𑌂𑌪𑍍𑌰𑍇𑌕𑍍𑌷𑍍𑌯 | பார்த்துக்கொண்டும் |
| 𑌦𑌿𑌶𑌃 | திக்குகளை |
| 𑌅𑌨𑌵𑌲𑍋𑌕𑌯𑌨𑍍 | பாராதவனாக |
| 𑌪𑍍𑌰𑌶𑌾𑌨𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 | மனச்சமாதானத்தை யடைந்தவனாய் |
| 𑌵𑌿𑌗𑌤𑌭𑍀𑌃 | பயங்களைவிட்டவனாய் |
| 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌾𑌰𑌿𑌵𑍍𑌰𑌤𑍇 † | பிரம்மசாரிவிருதத்தில் |
| 𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 | இருந்துகொண்டவனாய் |
| 𑌮𑌨𑌃 | மனதை |

---

* (ஸ்வா) மூக்குநுனியென்பது புருவங்களுக்கடுத்ததும், சிறுத்துமிருக்கிற மூக்கின் பாகமென்று அர்த்தம். ௫-வது அத்தியாயம், ௨௭-வது சுலோகத்தினுடைய குறிப்பையும் பார்க்க.

† (ஸ்வா) ஸ்த்ரீகளைப்பற்றி சிந்திக்காமை, பிக்ஷையெடுத்தவன்னத்தைப் புஜிப்பது, குருசுச்ருஷை செய்வது, வேதாத்தியயனஞ் செய்வது, பிரம்மவிசாரஞ் செய்வது, இவைகள் பிரம்மசாரி விருதங்கள்.

ஸம்யம்ய — விஷயங்களில் போகாமல்திருப்பி
மச்சித்த꞉ — என்னிடத்தில் சித்தத்தை வைத்தவனும்
மத்பர꞉ — என்னையே நம்பினவனாய் அல்லது என்னையே தியானஞ் செய்துகொண்டவனாயும்
ஆஸீத — இருக்கவேண்டியது.

யோகியானவன் தேகம், கழுத்து, தலை இவைகளை அசங்காமல் சமமாய் வைத்துக்கொண்டும், ஸ்திரமா யிருந்துகொண்டும், தன்னுடைய மூக்குநுனியைப் பார்த்துக்கொண்டும், திக்குகளைப் பாராமல் மனச் சமாதானத்தை யடைந்தவனாய், பயங்களைவிட்டுப் பிரம்மசாரி விருதத்தி லிருந்துகொண்டும், மனதை விஷயங்களில் போகாமல் திருப்பி யென்னிடத்தில் சித்தத்தைவைத்து என்னையே நம்பினவனாயிருக்கவேண்டியது; அல்லது என்னையே தியானஞ் செய்துகொண்டிருக்கவேண்டியது. (௧௩-௧௪)

---

௧௫. யுஞ்ஜந்நேவம் ஸதாத்மாநம் யோகீ நியதமாநஸ꞉।
ஶாந்திம் நிர்வாணபரமாம் மத்ஸம்ஸ்தாமதிகச்சதி॥

நியதமாநஸ꞉ — விஷயங்களிலிருந்து இழுக்கப்பட்டிருக்கிற மனதையுடைய
யோகீ — யோகியானவன்
ஸதா — எப்போதும்
ஏவம் — மேலாகச் சொல்லிவந்தவிதமாய்
ஆத்மாநம்* — மனதை
யுஞ்ஜந்† — நிறுத்தினவனாய்
நிர்வாணபரமாம்‡ — மோக்ஷத்தையேநிஷ்டையாகவுடையதும்
மத்ஸம்ஸ்தாம்§ — என்னுடைய அதீனமானதுமாகிய
ஶாந்திம் — துக்கத்தின்முடிவை அல்லது பிறப்பிறப்புகளின் முடிவை
அதிகச்சதி — அடைகிறான்.

மனோ நிக்கிரகமுடைய யோகியானவன், எப்போதும் மேல்சொன்னவிதமாய் மனதை நிறுத்தினால், மோக்ஷத்தையே நிஷ்டையாக

---

* (ஸ்ரீ,வி) பரமாத்மாவை.

† (ஸ்ரீ,வி) தியானஞ் செய்பவனாய்.

‡ (ஸ்ரீ) அடையத்தகுந்ததாயிருக்கிற மோக்ஷத்தை யுடையது. (ரா) சுகத்தை முடிவானதா யுடைத்தாயிருக்கிற. (ஸ்ரீ,வி)(ம) சரீரம்போனவுடனே.

§ (ஸ்ரீ) என்னுடைய சுவரூபமாக விருத்தாலாகிய. (ரா) (ம) என்னிடத்திலிருப்பை.

வுடையதும், என்னுடைய அதீனமானதுமாகிய பிறப்பிறப்புகளின் முடிவை யடைகிறுன். (௧௫)

---

௧௬. 𑌨𑌾𑌤𑍍𑌯𑌶𑍍𑌨𑌤𑌸𑍍𑌤𑍁𑌯𑍋𑌗𑍋𑌽𑌸𑍍𑌤𑌿 𑌨𑌚𑍈𑌕𑌾𑌨𑍍𑌤𑌮𑌨𑌶𑍍𑌨𑌤𑌃।
𑌨𑌚𑌾𑌤𑌿𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌶𑍀𑌲𑌸𑍍𑌯 𑌜𑌾𑌗𑍍𑌰𑌤𑍋 𑌨𑍈𑌵𑌚𑌾𑌰𑍍𑌜𑍁𑌨॥

| | |
|---|---|
| 𑌹𑍇 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 | ஓ! அர்சுன! |
| 𑌯𑍋𑌗𑌃 | தியானயோகமானது |
| 𑌅𑌤𑍍𑌯𑌶𑍍𑌨𑌤𑌃* | அதிகமாயுண்பவனுக்கும் |
| 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 | இல்லை |
| 𑌏𑌕𑌾𑌨𑍍𑌤𑌂 𑌅𑌨𑌶𑍍𑌨𑌤𑌶𑍍𑌚 | சுத்தமாய் உணவற்றவனுக்கும் |
| 𑌨 | இல்லை |
| 𑌅𑌤𑌿𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌶𑍀𑌲𑌸𑍍𑌯 | அதிகதூக்கமுள்ளவனுக்கும் |
| 𑌨𑌚 | இல்லை |
| 𑌜𑌾𑌗𑍍𑌰𑌤𑌶𑍍𑌚 | எப்போதும் விழித்திருக்கிறவனுக்கும் |
| 𑌨𑍈𑌵 | இல்லை. |

ஓ! அர்சுன! தியானயோகமானது, அதிகமாய் உண்பவன், சுத்தமாயுணவை விட்டவன், அதிகத்தூக்கமுள்ளவன், சுத்தமாய்த் தூக்கமற்றவன் இவர்களுக்கில்லை. (சித்திக்கமாட்டாது.)

(𑌸:) 𑌅𑌰𑍍𑌧𑌂 𑌸𑌵𑍍𑌯𑌞𑍍𑌜𑌨𑌾𑌨𑍍𑌨𑌸𑍍𑌯 𑌤𑍃𑌤𑍀𑌯𑌮𑍁𑌦𑌕𑌸𑍍𑌯 𑌚 । 𑌵𑌾𑌯𑍋𑌸𑍍𑌸𑌞𑍍𑌚𑌾𑌰𑌣𑌾𑌰𑍍𑌥𑌂 𑌤𑍁 𑌚𑌤𑍁𑌰𑍍𑌥𑌮𑌵𑌶𑍇𑌷𑌯𑍇𑌤𑍍॥ (𑌯𑍋𑌗𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌂)

(ஸ்ரீ) 𑌦𑍍𑌵𑍌 𑌭𑌾𑌗𑍌 𑌪𑍂𑌰𑌯𑍇𑌦𑌨𑍍𑌨𑍈𑌸𑍍𑌤𑍋𑌯𑍇𑌨𑍈𑌕𑌂 𑌪𑍍𑌰𑌪𑍂𑌰𑌯𑍇𑌤𑍍 । 𑌮𑌾𑌰𑍁𑌤𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌚𑌾𑌰𑌾𑌰𑍍𑌥𑌂 𑌚𑌤𑍁𑌰𑍍𑌥𑌮𑌵𑌶𑍇𑌷𑌯𑍇𑌤𑍍. (யோகசாஸ்திரம்) (இந்த இரண்டு சுலோகங்களின் அர்த்தமு மொன்றே. அந்த அர்த்தம் ௪-வது அத்தியாயம் ௩௦-வது சுலோகத்தி னடியில் காண்க.)

(௩) 𑌨𑌿𑌦𑍍𑌰𑌾𑌶𑌨𑌭𑌯𑌶𑍍𑌵𑌾𑌸 𑌚𑍇𑌷𑍍𑌟𑌾𑌤𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌦𑌿𑌵𑌰𑍍𑌜𑌨𑌂 । 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌨𑌿𑌮𑍀𑌲𑌿𑌤𑌾𑌕𑍍𑌷𑌸𑍍𑌤𑍁 𑌸𑌮𑍇𑌕𑌾𑌗𑍍𑌰𑍍𑌯𑌾𑌯𑌨𑍁 𑌪𑍍𑌰𑌵𑌿𑌶𑍍𑌯𑌤𑌿॥ (𑌨𑌾𑌰𑌦𑍀𑌯𑌪𑍁𑌰𑌾𑌣𑌂) சக்தியுள்ளவன், நித்திரை, உணவு, பயம், சுவாசம், சேஷ்டை, சோம்பல் முதலியவைகளை விட்டு, கண்களை மூடிக்கொண்டு யோகம் செய்ய வேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. (ஆனல் இந்த கீதா சுலோ

---

* (𑌸𑍍𑌵𑌾) இந்த ஆகாரவிஷயமாய், ௪-வது அத்தியாயம், ௩௦-வது சுலோகத்தில் சொல்லப்பட்டிருப்பதையும், இந்த சுலோகத்தின் அடியில் வரும் சுலோகத்தையும் பார்க்க.

க்மானது, ஆகாரம் முதலியவைகளை முற்றிலும் விட சக்தியற்ற யோகி விஷயமாய்ச் சொல்லப்பட்டதாக வறியவேண்டியது.) (௧௬)

---

௧௭. யுக்தாஹாரவிஹாரஸ்ய யுக்தசேஷ்டஸ்ய கர்மஸு।
யுக்தஸ்வப்நாவபோதஸ்ய யோகோ பவதி து:கஹா॥

| | |
|---|---|
| யுக்தாஹாரவிஹாரஸ்ய | மிதமான உணவு நடை யுடையவனும் |
| கர்மஸு யுக்தசேஷ்டஸ்ய | கிரியைகளை அவசியமானவரையில் செய்கிறவனும் |
| யுக்தஸ்வப்நாவபோதஸ்ய | மிதமானதூக்கம், விழிப்புடையவனு முள்ளவனுக்கு |
| து:கஹா* | துக்கத்தைப்போக்குகிறதாகிய |
| யோக: | தியானயோகமானது |
| பவதி | உண்டாகிறது. |

மிதமான உணவும், மிதமான நடையும், (தேகசம்ரக்ஷணார்த்தம் எவ்வளவு அவசியமோ, அவ்வளவுவரையில் ஆகாராதிகள் சம்பாதிக்கச் செய்யவேண்டிய) கிரியைகளைச் செய்தலும், மிதமான தூக்கமும், மிதமான விழிப்பு முள்ளவனுக்குத் துக்கத்தைப் போக்கடிக்கிறதாகிய தியானயோகம் நிறைவேறும் (தியானயோகம் செய்ய முயல்பவன், இவ்விதமாயிருந்து அப்பியாசஞ் செய்யவேண்டு மென்பது கருத்து). (௧௭)

---

௧௮. யதா விநியதம் சித்தமாத்மந்யேவாவதிஷ்டதே।
நிஸ்ப்ருஹ: ஸர்வகாமேப்யோ யுக்த இத்யுச்யதே ததா॥

| | |
|---|---|
| யதா | எப்போது |
| சித்தம் | மனதானது |
| விநியதம் | சுவாதீனப்பட்டு |
| ஆத்மந்யேவ† | பரப்பிரம்மசுவரூபத்திற்றானே |
| அவதிஷ்டதே | நிற்குமோ |
| (யதா) | எப்போது |
| ஸர்வகாமேப்ய: நிஸ்ப்ருஹ: | சகலவிஷயங்களிலிருந்து முண்டாகும் ஆசையை விட்டிருப்பானோ |
| ததா | அப்போது |

---

* (௪) சமுசார துக்கமென்னும் பிறவித்துன்பத்தைப் போக்குகிறதாகிய.

† (௫௦) தன்னுடைய ஆத்ம சுவரூபத்திலேயே.

யுக்த:* — யோகசித்தியையடைந்தவனென்று
உச்யதே — சொல்லப்படுகிறான்.

எப்போது மனதானது சுவாதீனப்பட்டு பிரம்மத் தியானத்திற் றானே நிற்குமோ, எப்போது சகலவிஷயங்களிலிருந் துண்டாகுமாசையை விட்டிருப்பானோ, அப்போது யோகசித்தியை யடைந்தவனென்று சொல்லப்படுகிறான். (கஅ)

---

ககூ. யதா² தீ³போ நிவாதஸ்தோ² நேங்க³தே ஸோபமா ஸ்ம்ருதா।
யோகி³நோ யதசித்தஸ்ய யுஞ்ஜதோ யோக³மாத்மந:॥

ஆத்மந: / யோக³ம் } ஆத்மத்தியானத்தை
யுஞ்ஜத: — அப்பியாசஞ்செய்கிற
யதசித்தஸ்ய — சுவாதீனமானமனதையுடைய
யோகி³ந: — யோகிக்கு
நிவாதஸ்த²: — காற்றில்லாதவிடத்திலிருக்கிற
தீ³ப: — விளக்கானது (தீபமானது)
யதா² — எப்படி
நேங்க³தே — அசையாமலிருக்குமோ
ஸா — அது
உபமா — திருஷ்டாந்தமாக
ஸ்ம்ருதா — சொல்லப்பட்டிருக்கிறது.

பரமாத்மத்தியானத்தை அப்பியாசஞ் செய்கிற சுவாதீனமான மனதையுடைய யோகிக்கு, காற்றில்லாத விடத்திலிருக்கிற விளக்கானது எப்படி அசையாமலிருக்குமோ, அது திருஷ்டாந்தமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

(ஸ்ரீ) காற்றில்லாதவிடத்தில் வைக்கப்பட்டிருக்கிற தீபமானது அசைவன்றி யெப்படி ஒரே நிலையாய் நிற்குமோ, அப்படிப்போல யோகியானவன், மனசு தேகேந்திரியாதிகளைச் சலிக்கவொட்டாமல் ஒரே நிலையாயிருந்து யோகநிஷ்டை செய்யவேண்டுமென்பது கருத்து.

(ரா) யதசித்தஸ்ய = மனசுவாதீனமுடைய, யோகி³ந: = யோகியினுடைய, யோக³ம் யுஞ்ஜத: = யோகத்தைச்செய்கிற, ஆத்மந: = ஆத்மசுவரூபத்திற்கு. (மற்றவை சரி.)

---

* (ரா) யோகஞ்செய்ய அருகனென்று.

௨0. 𑌯𑌤𑍍𑌰𑍋𑌪𑌰𑌮𑌤𑍇 𑌚𑌿𑌤𑍍𑌤𑌂 𑌨𑌿𑌰𑍁𑌦𑍍𑌧𑌂 𑌯𑍋𑌗𑌸𑍇𑌵𑌯𑌾।
𑌯𑌤𑍍𑌰 𑌚𑍈𑌵𑌾𑌤𑍍𑌮𑌨𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌨𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 𑌤𑍁𑌷𑍍𑌯𑌤𑌿॥ *

௨௧. 𑌸𑍁𑌖𑌮𑌾𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌿𑌕𑌂 𑌯𑌤𑍍𑌤𑌦𑍍𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌗𑍍𑌰𑌾𑌹𑍍𑌯𑌮𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌮𑍍।
𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 𑌯𑌤𑍍𑌰 𑌨 𑌚𑍈𑌵𑌾𑌯𑌂 𑌸𑍍𑌥𑌿𑌤𑌶𑍍𑌚𑌲𑌤𑌿 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌤𑌃॥

௨௨. 𑌯𑌂 𑌲𑌬𑍍𑌧𑍍𑌵𑌾 𑌚𑌾𑌪𑌰𑌂 𑌲𑌾𑌭𑌂 𑌮𑌨𑍍𑌯𑌤𑍇 𑌨𑌾𑌧𑌿𑌕𑌂 𑌤𑌤𑌃।
𑌯𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌸𑍍𑌥𑌿𑌤𑍋 𑌨 𑌦𑍁𑌃𑌖𑍇𑌨 𑌗𑍁𑌰𑍁𑌣𑌾𑌪𑌿 𑌵𑌿𑌚𑌾𑌲𑍍𑌯𑌤𑍇॥

௨௩. 𑌤𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌦𑍍𑌦𑍁𑌃𑌖𑌸𑌂𑌯𑍋𑌗𑌵𑌿𑌯𑍋𑌗𑌂 𑌯𑍋𑌗𑌸𑌂𑌜𑍍𑌞𑌿𑌤𑌮𑍍।
𑌸 𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑍇𑌨 𑌯𑍋𑌕𑍍𑌤𑌵𑍍𑌯𑍋 𑌯𑍋𑌗𑍋𑌽𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌣𑍍𑌣𑌚𑍇𑌤𑌸𑌾॥

| | |
|---|---|
| 𑌯𑍋𑌗𑌸𑍇𑌵𑌯𑌾 | யோகாப்பியாசஞ்செய்வதினாலே |
| 𑌨𑌿𑌰𑍁𑌦𑍍𑌧𑌂 | விஷயங்களிலிருந்திழுக்கப்பட்ட |
| 𑌚𑌿𑌤𑍍𑌤𑌂 | மனதானது |
| 𑌯𑌤𑍍𑌰 † | எந்தயோகத்தில் |
| 𑌉𑌪𑌰𑌮𑌤𑍇 | நிற்குமோ |
| 𑌯𑌤𑍍𑌰 (𑌸𑍍𑌥𑌿𑌤𑌃) } ‡ | எந்த யோகத்திலிருக்கிறவன் |
| 𑌆𑌤𑍍𑌮𑌨𑌾 § | மனதினாலே |
| 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 ¶ | ஆத்மாவை |
| 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍 ‖ | பார்த்து |
| 𑌆𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑍇𑌵 + | தன்னிடத்திலேயே |
| 𑌤𑍁𑌷𑍍𑌯𑌤𑌿 ÷ | சந்தோஷமடைகிறானோ |
| 𑌯𑌤𑍍𑌰 𑌚 | எந்தயோகத்தில் |
| 𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 | ஸ்திரமாயிருக்கிற |
| 𑌅𑌯𑌂 | இந்த யோகியானவன் |
| 𑌅𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌂 | இந்திரியங்களுக்குப்புலப்படாதவும் |
| 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌗𑍍𑌰𑌾𑌹𑍍𑌯𑌂 𑌚 | புத்தியினாலேயேயறியத்தக்கவும் |
| 𑌯𑌤𑍍𑌤𑌤𑍍 | அளவிறந்தவும் |
| 𑌆𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌿𑌕𑌂 𑌚 | அந்தமில்லாதவுமான |
| 𑌸𑍁𑌖𑌂 | சுகத்தை |
| 𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 | அறிகிறானோ (அநுபவிக்கிறானோ) |

* இந்த ௨0-௨௧-௨௨, சுலோகங்களை யோகசிகோபநிஷத்தில் அத். ௩-ல்காண்க.

† ‡ (ஸ்ரீ) எந்த அவஸ்தையில்.

§ ¶ ‖ + ÷ (ஶ) (ஸ்ரீ,வீ) 𑌆𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑍇𑌵 = தன்னுடைய தேகத்திலேயே யிருக்கிற, 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 = பரமாத்மாவை, 𑌆𑌤𑍍𑌮𑌨𑌾 = மனதினாலே, 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍 = பார்க்கிறவனாய் 𑌤𑍁𑌷𑍍𑌯𑌤𑌿 = சந்தோஷிக்கிறானே.

| | |
|---|---|
| தத்த்வத:* | (எந்த) சுகாநுபவத்திலிருந்து |
| ந சலதி | பிரிகிறதேயில்லையோ |
| யம்† | எதை |
| லப்³த்⁴வா | அடைந்து |
| தத: | அதைக்காட்டிலும் |
| அபரம் | மற்றொன்றை |
| அதி⁴கம் லாப⁴ம் | அதிகப்பிரயோசனமாக |
| ந மந்யதே | எண்ணுகிறதில்லையோ |
| யஸ்மிந் ஸ்தி²த: | எந்தயோகத்திலிருக்கிறவன் |
| கு³ருணா | விசேஷமான |
| து:³கே²நாபி | துக்கத்திலுங்கூட |
| ந விசால்யதே | சலிப்பிக்கப்படுகிறதில்லையோ |
| து:³க²ஸம்யோக³வியோக³ம் | சகல துக்கங்களுடைய சம்பந்தத்தைப் போக்கடிக்கிற |
| தம் | அதை |
| யோக³ஸம்ஜ்ஞிதம் | யோகமென்கிற பெயரை யுடையதாக |
| வித்³யாத்‡ | அறியவேண்டியது |
| நிஶ்சயேந | நிச்சயத்துடன் அல்லது உறுதியுடன் |
| அநிர்விண்ணசேதஸா § | சலிக்காதமனதை யுடையவனாலே |
| ஸ: | அப்படிப்பட்ட |
| யோக³: | யோகமானது |
| யோக்தவ்ய:¶ | அடையத்தகுந்தது. |

அப்பியாசஞ் செய்வதினால் விஷயங்களிலிருந்து இழுக்கப்பட்ட மனதானது, எந்தயோகத்தில் நிற்குமோ, எந்தயோகத்தி லிருக்கிற வன் மனதினாலே ஆத்மாவைப்பார்த்துத் தன்னிடத்திலேயே சந்தோஷமடைகிறானோ, எந்தயோகத்தில் ஸ்திரமாயிருக்கிற யோகியான

* (ஶம்) (ஸ்ரீ) ஆத்ம சுவரூபத்திலிருந்து. (உ) (ஸ்ரீ,வி) பகவானுடைய ரூபத்திலிருந்து.

† (ஶம்) (ஸ்ரீ) எந்த ஆத்ம லாபத்தை. (ரா) எந்தயோகத்தை.

‡ (ஸ்ரீ,வி) வித்³யாத்ஸ:—என்றுபாடம். அர்த்தமொன்றே.

§ (ஸ்ரீ,வி) நிர்விண்ணசேதஸா— விஷயவைராக்கியத்தை யடைந்த மனதை யுடையவனாலே.

¶ (ஸ்ரீ,வி) அநுஷ்டிக்கத்தகுந்தது.

வன், இந்திரியங்களுக்குப் புலப்படாதவும், புத்தியினாலேயே யறியத்தக்கவும், அளவிறந்தவும், அந்தமில்லாதவுமான சுகத்தை யநுபவிக்கிறானோ, எந்த சுகாநுபவத்திலிருந்தும் பிரிகிறதில்லையோ, எதை யடைந்து (பிறகு) அதைக்காட்டிலும் மற்றொன்றை யதிகப் பிரயோசனமாக வெண்ணுகிற தில்லையோ, எந்த யோகத்தி லிருக்கிறவன் விசேஷமான துக்கத்தினாலுங் கூடச் சலிப்பிக்கப் படுகிற தில்லையோ, சகல துக்கங்களுடைய சம்பந்தத்தைப் போக்கடிக்கிற அதை (அந்தயோகநிஷ்டா நிலைமையை) யோகமென்கிற பெயரை யுடையதாக வறியவேண்டியது. உறுதியுடன் சலிக்காம லிருக்கிற மனதை யுடையவனாலே அப்படிப்பட்ட யோகமானது, அடையத் தகுந்தது. (௨0 ௨௧.௨௨.௨௩.)

---

௨௪. 𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌪𑍍𑌰𑌭𑌵𑌾𑌨𑍍𑌕𑌾𑌮𑌾𑌂𑌸𑍍𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑌶𑍇𑌷𑌤𑌃।
𑌮𑌨𑌸𑍈𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌗𑍍𑌰𑌾𑌮𑌂 𑌵𑌿𑌨𑌿𑌯𑌮𑍍𑌯 𑌸𑌮𑌨𑍍𑌤𑌤𑌃॥

௨௫. 𑌶𑌨𑍈𑌃𑌶𑌨𑍈𑌰𑍁𑌪𑌰𑌮𑍇𑌦𑍍𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌾 𑌧𑍃𑌤𑌿𑌗𑍃𑌹𑍀𑌤𑌯𑌾।
𑌆𑌤𑍍𑌮𑌸𑌂𑌸𑍍𑌥𑌂𑌮𑌨𑌃𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌨𑌕𑌿𑌂𑌚𑌿𑌦𑌪𑌿𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑍇𑌤𑍍॥ *

| | |
|---|---|
| 𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌪𑍍𑌰𑌭𑌵𑌾𑌨𑍍 | சங்கற்பத்தினாலுண்டாகிற |
| 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍 | சகலமான |
| 𑌕𑌾𑌮𑌾𑌨𑍍 † | காமங்களை (விஷய ஆசைகளை) |
| 𑌅𑌶𑍇𑌷𑌤𑌃 | முற்றிலும் |
| 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 | விட்டு |
| 𑌮𑌨𑌸𑍈𑌵 | மனதினாலேயே |
| 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌗𑍍𑌰𑌾𑌮𑌂 | சகலமான இந்திரியங்களை |
| 𑌸𑌮𑌨𑍍𑌤𑌤𑌃 | சகலவிஷயங்களினின்றும் |
| 𑌵𑌿𑌨𑌿𑌯𑌮𑍍𑌯 | திருப்பி |
| 𑌧𑍃𑌤𑌿𑌗𑍃𑌹𑍀𑌤𑌯𑌾 ‡ | தைரியத்தினால் ஸ்வாதீனஞ்செய்து கொள்ளப்பட்ட |

---

* இந்த சுலோகத்தை தியான பிந்தூபநிஷத்தில் காண்க.

† (பா) காமங்கள், சங்கற்பத்தினா லுண்டாவது, ஸ்பரிசத்தினாலுண்டாவது என விருவகைப்படும். சங்கற்பமென்பது - இன்னகாரியத்தைச் செய்யவேண்டும், அதினாலிவ்விதபலனை யடையலாமென்று மனதினாலுண்டாகும் தோற்றம், அல்லது மனதினாலுத்தேசிப்பது; இதினாலுண்டாவது புத்திராதிகள். ஸ்பரிசமென்பது-ஞானேந்திரிய கருமேந்திரியங்கள் விஷயங்களில் சம்பந்தப்படுவது; இதினாலுண்டாவது சீதோஷ்ணாதிகள். இவ்விரண்டு விதமாய்த்தான் காமங்களுண்டாகின்றன. முந்தியதை விட்டுவிடவேண்டும். பிந்தியதை முழுதும் விடுவது அசாத்தியமானதால் அதின் மூலமா யுண்டாகும் சுகதுக்கத்தை விடவேண்டியது.

‡ (பா) விவேகத்தோடுகூடின.

| | |
|---|---|
| 𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌾 | புத்தியினாலே |
| 𑌮𑌨𑌃 | மனதை |
| 𑌆𑌤𑍍𑌮𑌸𑌂𑌸𑍍𑌥𑌂* | ஆத்மாவிடத்திலே யிருக்கும்படி |
| 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 | செய்து |
| 𑌶𑌨𑍈𑌃𑌶𑌨𑍈𑌃 | மெள்ள மெள்ள (சிறுகச்சிறுக) |
| 𑌉𑌪𑌰𑌮𑍇𑌤𑍍 | (மனதை) நிறுத்தவேண்டும் |
| 𑌨 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌦𑌪𑌿 𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑍇𑌤𑍍 | ஒன்றையுஞ் சிந்திக்காம லிருக்கவேண்டியது. |

சங்கற்பத்தினா லுண்டாகிற சகலமானவிஷய ஆசைகளை முற்றிலும் விட்டு, மனதினாலேயே சகலமான விந்திரியங்களைச் சகலவிஷயங்களினின்றும் திருப்பி, தைரியத்தினால் சுவாதீனஞ் செய்துகொள்ளப்பட்ட புத்தியினாலே மனதை ஆத்மாவிடத்தி லிருக்கும்படிசெய்து, மெள்ள மெள்ள மனதை நிறுத்தவேண்டும். (அப்படி நிறுத்தியபின்பு பிரம்மத்தைத் தவிர வேறே) ஒன்றையுஞ் சிந்திக்காம லிருக்கவேண்டியது. (௨௪.௨௫.)

---

௨௬. 𑌯𑌤𑍋 𑌯𑌤𑍋 𑌨𑌿𑌶𑍍𑌚𑌲𑌤𑌿 𑌮𑌨𑌶𑍍𑌚𑌞𑍍𑌚𑌲𑌮𑌸𑍍𑌥𑌿𑌰𑌮𑍍।
𑌤𑌤𑌸𑍍𑌤𑌤𑍋 𑌨𑌿𑌯𑌮𑍍𑌯𑍈𑌤𑌦𑌾𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑍇𑌵 𑌵𑌶𑌂 𑌨𑌯𑍇𑌤𑍍॥

| | |
|---|---|
| 𑌅𑌸𑍍𑌥𑌿𑌰𑌂 | நிலையற்றதும் |
| 𑌚𑌞𑍍𑌚𑌲𑌂 | சஞ்சலசுவபாவமுள்ளதுமான |
| 𑌮𑌨𑌃 | மனதானது |
| 𑌯𑌤𑍋 𑌯𑌤𑌃 | எங்தெந்தவிஷயங்களில் |
| 𑌨𑌿𑌶𑍍𑌚𑌲𑌤𑌿 | பிரவேசிக்கிறதோ |
| 𑌤𑌤𑌸𑍍𑌤𑌤𑌃 | அந்தந்தவியங்களிலிருந்து |
| 𑌏𑌤𑌤𑍍 | இந்தமனதை |
| 𑌨𑌿𑌯𑌮𑍍𑌯 | திருப்பி (இழுத்து) |
| 𑌆𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑍇𑌵 | பரமாத்மாவிடத்தில் அல்லது தன் ஆத்மசுவரூபத்திற்றானே |
| 𑌵𑌶𑌂 𑌨𑌯𑍇𑌤𑍍 | நிற்கும்படி செய்யவேண்டியது. |

நிலையற்றதும், சஞ்சல சுவபாவ முள்ளதுமான மனதானது, எங்தெந்த விஷயங்களில் பிரவேசிக்கிறதோ அந்தந்த விஷயங்களி லிருந்து இந்த மனதைத் திருப்பி, பரமாத்மா விடத்திலேயே நிற்கும்படி செய்யவேண்டியது. (௨௬)

* (8) (ஸ்ரீ,வீ) பரமாத்மாவிடத்தி லிருக்கும்படி,

உஎ. 𑌪𑍍𑌰𑌶𑌾𑌨𑍍𑌤𑌮𑌨𑌸𑌂 𑌹𑍍𑌯𑍇𑌨𑌂 𑌯𑍋𑌗𑌿𑌨𑌂 𑌸𑍁𑌖𑌮𑍁𑌤𑍍𑌤𑌮𑌮𑍍।
𑌉𑌪𑍈𑌤𑌿 𑌶𑌾𑌨𑍍𑌤𑌰𑌜𑌸𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌭𑍂𑌤𑌮𑌕𑌲𑍍𑌮𑌷𑌮𑍍।

| | |
|---|---|
| 𑌪𑍍𑌰𑌶𑌾𑌨𑍍𑌤𑌮𑌨𑌸𑌂 | சாந்தமானமனதையுடைய |
| 𑌶𑌾𑌨𑍍𑌤𑌰𑌜𑌸𑌂 | இராஜோகுணமற்றிருக்கிற |
| 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌭𑍂𑌤𑌂* | ஜீவன்முக்தனுயிருக்கிற |
| 𑌅𑌕𑌲𑍍𑌮𑌷𑌂 | பாபமற்றவனுயிருக்கிற |
| 𑌏𑌨𑌂 | இப்படிப்பட்ட |
| 𑌯𑍋𑌗𑌿𑌨𑌂 | யோகியை |
| 𑌉𑌤𑍍𑌤𑌮𑌂 | சிரேஷ்டமான |
| 𑌸𑍁𑌖𑌂 | சுகமானது |
| 𑌉𑌪𑍈𑌤𑌿 } 𑌹𑌿 } | { அடைகிறதென்பது வேதத்தில் பிரசித்தமாயிருக்கிறது. |

சாந்தமான மனதையுடையவும், இராஜோகுணமற்றிருக்கிறவும், ஜீவன் முக்தனு யிருக்கிறவும், பாபமற்றவனுயு மிருக்கிற யோகியை சிரேஷ்டமான சுகமானது அடைகிற தென்பதில் சந்தேகமில்லை. (உஎ)

---

உஅ. 𑌯𑍁𑌞𑍍𑌜𑌨𑍍𑌨𑍇𑌵𑌂 𑌸𑌦𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌯𑍋𑌗𑍀 𑌵𑌿𑌗𑌤𑌕𑌲𑍍𑌮𑌷𑌃।
𑌸𑍁𑌖𑍇𑌨 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌸𑌂𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌮𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌂 𑌸𑍁𑌖𑌮𑌶𑍍𑌨𑍁𑌤𑍇।

| | |
|---|---|
| 𑌏𑌵𑌂 | இவ்விதமாய் (மேற்சொல்லிவந்த விதமாய்) |
| 𑌸𑌦𑌾 | எப்போதும் |
| 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂† | மனதை |
| 𑌯𑍁𑌞𑍍𑌜𑌨𑍍‡ | சுவாதீனஞ்செய்துகொண்டிருக்கிற |
| 𑌵𑌿𑌗𑌤𑌕𑌲𑍍𑌮𑌷𑌃§ | பாபங்களற்ற |
| 𑌯𑍋𑌗𑍀 | யோகியானவன் |
| 𑌸𑍁𑌖𑍇𑌨 | பிரயாசையன்றி |
| 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌸𑌂𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌂¶ | பிரம்மதரிசனமாகிய |

---

* (ஶா) ஜீவன்முக்தன் என்றால், இறந்தபிறகு அடையும் மோக்ஷசுகத்தை இந்தத் தேகமிருக்கையிலேயே அடைந்திருக்கிறவன். (ரா) பிரகிருதி சம்பந்தமற்றுத் தன் சுவரூபத்துடனிருக்கிற. (ஶ்ரீ,வி) பிரம்மத்தியானத்தில் நிலைத்திருக்கிற.

† (ஶ்ரீ,வி) பரமாத்வை.

‡ (ஶ்ரீ,வி) தியானிக்கிற.

§ (ரா) சகலமான பிராசீனகருமங்களையும் போக்கடித்துக் கொண்டிருக்கிற. (ஶ்ரீ,வி) காமக்குரோதங்களைப் போக்கடித்துக்கொண்டிருக்கிற.

¶ (ஶா) பிரம்மைக்கிய மாகிய (ரா) பிரம்மாநுபவ ரூபமான (ஶ்ரீ,வி) பகவானை யடைந்தபிறகு தனக்குண்டாகும்.

அத்யந்தம் ஸுகம் } சிரேஷ்டமானசுகத்தை
அச்நுதே அடைகிறான்.

மேற்சொல்லிவந்த விதமாய், எப்போதும் மனதை சுவாதீனஞ் செய்துகொண்டிருக்கிற பாபங்களற்ற யோகியானவன், பிரயாசையன்றி பிரம்மதரிசனமாகிற சிரேஷ்டமான சுகத்தை யடைகிறான். (௨௮)

---

௨௯. ஸர்வபூதஸ்தமாத்மாநம் ஸர்வபூதாநி சாத்மநி।
ஈக்ஷதே யோகயுக்தாத்மா ஸர்வத்ர ஸமதர்சந:॥

ஸர்வத்ர { (பிரம்மாமுதல் ஸ்தம்ப பரியந்தமுள்ள) சகலவஸ்துக்களிலேயும்
ஸமதர்சந: சமமாய் பிரம்மத்தைப்பார்க்கிற
யோகயுக்தாத்மா { தியான யோகத்திலேயே மனதையுடைய யோகியானவன்
ஆத்மாநம் தன்னை
ஸர்வபூதஸ்தம் சகலவஸ்துக்களிலுமிருக்கிறதாகவும்
ஆத்மநி தன்னிடத்திலே
ஸர்வபூதாநி ச சகலவஸ்துக்களுமிருக்கிறதாகவும்
ஈக்ஷதே பார்க்கிறான்.

பிரம்மாதி ஸ்தம்ப பரியந்தமுள்ள சகல வஸ்துகளிலேயும் சமமாய் பிரம்மத்தைப் பார்க்கிற தியானயோகத்திலேயே மனதை யுடைய யோகியானவன், தன்னைச் சகல வஸ்துக்களிலு மிருக்கிறதாகவும், தன்னிடத்திலே சகல வஸ்துக்களு மிருக்கிறதாகவும் பார்க்கிறான்.

(ஶம்) சகல பூதங்களிலுமுள்ள ஆத்மா தானே என்பதாயும், தன்னிடத்தில் சகல பூதங்களைச் சமமாயும் (என்றால்) ஆத்மா ஒன்றே என்பதாயும், பார்க்கிறவன்தான் யோகி என்பது தாத்பரியம்.

(ரா) பிரகிருதியிலிருந்து விடுபட்ட (பிரகிருதிவிமுக்தமான) மற்ற ஜீவசுவரூபமும், பிரகிருதி விமுக்தமான தன்னுடைய ஜீவ சுவரூபமும் சமமானதென்பதாகவும், பிரகிருதி விமுக்தமான தன்னுடைய ஜீவ சுவரூபமானது, பிரகிருதி விமுக்தமான மற்ற ஜீவ சுவரூபத்திற்குச் சமமான தென்ப தாகவும் பார்க்கிறவன் யோகி. (என்றால்) தன்னுடைய பிரகிருதி விமுக்த சுவரூபத்தைப் பார்க்கிறவன், மற்றவர்களும் பிரகிருதி விமுக்தர்களானால் தன்னுடைய விமுக்த சுவரூபத்திற்குச் சமானமானவர்களென்று நிச்சயங் கொள்ளுகிறவன்

என்பது தாத்பரியம். இந்த அர்த்தமானது, ரு-வது அத்தியாயம் ௧௯-இந்த அத்தியாயம் ௩௩-சுலோகங்களிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

(௨) (ஶ்ரீ,வி) பிரபஞ்சத்திலுள்ள சகல வஸ்துக்களிலும், பிரம்மமானது ஓரேவிதமா யிருப்பதாகவும், சகல வஸ்துக்களும் பிரம்மத்தினிடத்தி லிருக்கிறதாகவும் அறிகிறவன் யோகி என்பது தாத்பரியம்.

(ஸூ) இந்த சுலோகத்தி னர்த்தத்தையே சொல்லுகிற சுருதிகள் அடியில் குறிக்கப்படுகின்றன.

“ 𑌯𑌸𑍍𑌤𑍁 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑍇𑌵𑌾𑌨𑍁𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 । 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌚𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌤𑌤𑍋 𑌨 𑌵𑌿𑌜𑍁𑌗𑍁𑌪𑍍𑌸𑌤𑍇॥ ” (ஈஶாவாஸ்யோபநிஷத் ௬-வது வாக்கியம்.) “ 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌸𑍍𑌥𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌚𑌾𑌤𑍍𑌮𑌨𑌿। 𑌸𑌂𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌪𑌰𑌮𑌂 𑌯𑌾𑌤𑌿 𑌨𑌾𑌨𑍍𑌯𑍇𑌨 𑌹𑍇𑌤𑍁𑌨𑌾॥” (கைவல்யோபநிஷத்.)

---

௩௰. 𑌯𑍋 𑌮𑌾𑌂 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 𑌸𑌰𑍍𑌵𑌞𑍍𑌚 𑌮𑌯𑌿 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿।
𑌤𑌸𑍍𑌯𑌾𑌹𑌂 𑌨 𑌪𑍍𑌰𑌣𑌶𑍍𑌯𑌾𑌮𑌿 𑌸 𑌚 𑌮𑍇 𑌨 𑌪𑍍𑌰𑌣𑌶𑍍𑌯𑌤𑌿॥

| | |
|---|---|
| 𑌯𑌃 | எவன் |
| 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 | சகலவஸ்துக்களிடத்திலும் |
| 𑌮𑌾𑌂 | என்னை |
| 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 | பார்க்கிருனே |
| 𑌸𑌰𑍍𑌵𑌞𑍍𑌚 | சகலவஸ்துக்களேயும் |
| 𑌮𑌯𑌿 | என்னிடத்தில் |
| 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 | பார்க்கிருனே |
| 𑌤𑌸𑍍𑌯 | அவனுக்கு |
| 𑌅𑌹𑌂 | நான் |
| 𑌨𑌪𑍍𑌰𑌣𑌶𑍍𑌯𑌾𑌮𑌿 | காணுமல்போகிறதில்லே |
| 𑌸𑌚 | அவனும் |
| 𑌮𑍇 | எனக்கு |
| 𑌨𑌪𑍍𑌰𑌣𑌶𑍍𑌯𑌤𑌿 | காணுமல்போகிறதில்லே. |

எவன் சகல வஸ்துக்களிடத்திலும் (பரமாத்மாவாகிய) என்னேயும், என்னிடத்தில் சகல வஸ்துக்களேயும் பார்க்கிருனே, அவனுக்கு நான் காணுமல் போகிறதுமில்லே. எனக்கு அவன் காணுமல் போகிறது மில்லே.

(ஸம்) “நான் அவனுக்கும், அவன் எனக்கும் காணுமல் போகிறதில்லே” என்ருல், நானே அவன். அவனே நானுக வொன்ருய் விடுகிருேமென்பது தாத்பரியம்.

(ரா) ஸர்வபூத—பிரகிருதி விமுக்தாளாயிருக்கிற சகலப் பிராணிகளுடைய சுவரூபங்களுக்கு, ஸமம்—சமமான சுவரூபத்தை யுடையவனாக என்னை, ய꞉ — எவன், பஶ்யதி — பார்க்கிறானோ அல்லது அறிகிறானோ, மயி — என்னுடைய சுவரூபத்திற்குச் சமமான சுவரூபமுடையதாக, ஸர்வஞ்ச — பிரகிருதி விமுக்தமான சகல ஆத்ம சுவரூபத்தையும், ய꞉ — எவன், பஶ்யதி — பார்க்கிறானோ; தஸ்ய— அப்படிப்பட்ட ஆத்மதரிசனமுள்ள யோகிக்கு, அஹம் — நான், நப்ரணஶ்யாமி—பிரத்தியக்ஷமாகவே யிருக்கிறேன். ஸ꞉ச — அவனும், மே—என்க்கு, நப்ரணஶ்யதி — பிரதியக்ஷமாகவே யிருக்கிறான்.

(ஶ) என்னிடத்தில் சகலபூதங்களையும், சகலபூதங்களில் என்னையும் பார்க்கிறவனுடைய, நப்ரணஶ்யாமி — யோகக்ஷேமங் களுக்கு நான் பாத்தியப்படாமல் போகிறதில்லை, அவனும் என்னுடைய, நப்ரணஶ்யதி—பக்தனுகாமல் போகிறதில்லை.

(மீ,வி) ஸர்வஞ்சமயிபஶ்யதி—சகலமான பூதங்களும் என்னுடைய அதீனமானதென்று பார்க்கிறானே, (மற்றவை (ஶ) போலவே.) (௩௰)

௩௧. ஸர்வபூதஸ்திதம்யோமாம் பஜத்யேகத்வமாஸ்தித꞉।
ஸர்வதாவர்த்தமானோபி ஸயோகீமயிவர்த்ததே॥

| | |
|---|---|
| ஸர்வபூதஸ்திதம் | சகலப்பிராணிகளிடத்திலுமிருக்கிற |
| மாம் | என்னை |
| ஏகத்வம் ஆஸ்தித꞉ } * | அபேதத்தையாசிரயித்து |
| ய꞉ | எவன் |
| பஜதி | பஜிக்கிறானோ |
| ஸயோகீ | அந்தயோகியானவன் |
| ஸர்வதா வர்த்தமானோபி } † | எந்த மார்க்கத்தில் பிரவிருத்தித் திருந்த போதிலும் |
| மயி வர்த்ததே } ‡ | என்னிடத்திலேயே யிருக்கிறான். |

* (ரா) பூர்ணமான ஞானுகாரமாய் ஒரேவிதமாயிருக்கிற.

† (ரா) எந்தக்காலத்திலும். என்றால், தியானகாலத்திலும் தியானம்விட்டு எழுந்திருந்தகாலத்திலும். (மீ,வி) நன்மைதீமைகளைச் செய்தபோதிலும்.

‡ (ஶம்) வைஷ்ணவேபரமேபதே வர்த்ததேநித்யமுக்தோ ஸவதீத்யர்த்த꞉ — விஷ்ணு சம்பந்தமாகிய உத்தமபதத்திலிருக்கிற நித்தியமுக்தனுகவிருக்கிறான். (ஸ்ரீ) முக்தியை யடைகிறான். (ரா) தன்னையும், மற்றப்பிராணிகளையும் என்றுப

சலப் பிராணிகளிடத்திலு மிருக்கிற என்னை அபேதத்தை யாசிரயித்து (ஒன்றாகவே அபேதமாக அறிந்து) எவன் பஜிக்கிறானோ, அந்த யோகியானவன் எந்த மார்க்கத்தில் பிரவிருத்தித் திருந்த போதிலும் என்னிடத்திலேயே யிருக்கிறான். (௩௧)

---

௩௨. ആത്മൌപമ്യേന സർവത്ര സമം പശ്യതി യോഽർജുന।
സുഖം വാ യദി വാ ദുഃഖം സ യോഗീ പരമോ മതഃ॥

| | |
|---|---|
| ഹേ അർജുന | ஓ ! அர்சுனா ! |
| സർവത്ര | எல்லாப்பிராணிகளிடத்திலும் |
| സുഖം വാ | சுகத்தையாவது |
| യദി വാ ദുഃഖം | துக்கத்தையாவது |
| ആത്മൌപമ്യേന | தன்னிடத்தில்போல் |
| സമം | சமமாக |
| യഃ | எவன் |
| പശ്യതി | பார்க்கிறானோ |
| സ യോഗീ | அந்தயோகியானவன் |
| പരമഃ മതഃ | சிரேஷ்டனென்று (என்னால்) நிச்சயிக்கப் பட்டிருக்கிறான். |

ஓ! அர்சுனா! எல்லாப் பிராணிகளிடத்திலும் சுகத்தை யாவது, அல்லது துக்கத்தையாவது, தன்னிடத்தில்போல் சமமாக எவன் பார்க்கிறானோ, அந்த யோகியானவன் சிரேஷ்டனென்பது என்னுடைய மதம்.

(ஸம) (ஶ்ரீ) (மீ,வி) தனக்கு சுகத்தில் விருப்பும், துக்கத்தில் வெறுப்பும் எப்படியோ அப்படிப்போல், மற்ற பிராணி களுக்குப் சுகமுண்டாகவும், துக்கமுண்டாகாமலிருக்கவும், கோரி அவ்விதமாய் நடக்கிறவ னெவனோ, அவன் சமமாய்ப்பார்க்கிற யோகியாயும், சிரேஷ்டனாயு மிருக்கிறானென்பது கருத்து.

(ரா) பிரகிருதி விமுக்தமான தன்னுடைய ஆத்ம சுவ்ரூபத்தில் பிரகிருதி சம்பந்தமான சுகதுக்கங்கள் எப்படி யொட்டுகிறதில்லையோ அப்படிப்போல, மற்றப் பிராணிகளுடையப் பிரகிருதி விமுக்த ஆத்ம சுவரூபத்தில் சுகதுக்கங்க ளொட்டுகிறதில்லை யென்று அறிகிறவன் சிரேஷ்டன். அல்லது பிறருக்குண்டாகும் சுகதுக்கங்களினால் எப்ப

---

த்திற்குச் சமமான ரூபமுடையவர்களாய்ப் பார்க்கிறான். (சு) (மீ,வி) மோக்ஷத்தி லிருக்கிறான்.

தான் விருப்புவெறுப்புகளை யடைகிறதில்லையோ, அப்படிப் போலவே, தனக்குண்டாகும் சுகதுக்கங்களினல் தான் விருப்புவெறுப்புகளை யடையாம லிருக்கிறவன் சிரேஷ்டனென்பது என்னுடைய அபிப்பிராயம். ()

---

𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚.

௩௩. 𑌯𑍋𑌯𑌂𑌯𑍋𑌗𑌸𑍍𑌤𑍍𑌵𑌯𑌾𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌃 𑌸𑌾𑌮𑍍𑌯𑍇𑌨 𑌮𑌧𑍁𑌸𑍂𑌦𑌨।
𑌏𑌤𑌸𑍍𑌯𑌾𑌹𑌂 𑌨 𑌪𑌶𑍍𑌯𑌾𑌮𑌿 𑌚𑌞𑍍𑌚𑌲𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌂𑌸𑍍𑌥𑌿𑌰𑌾𑌂।

| | |
|---|---|
| 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚 | அர்சுனன் சொல்வது |
| 𑌹𑍇 𑌮𑌧𑍁𑌸𑍂𑌦𑌨 | ஓ! மதுசூதன! (கிருஷ்ணசுவாமியே) |
| 𑌤𑍍𑌵𑌯𑌾 | உம்மாலே |
| 𑌸𑌾𑌮𑍍𑌯𑍇𑌨 | சாம்மியமாகிய (சமமாயறிவதாகிய) |
| 𑌯𑍋𑌽𑌯𑌂 𑌯𑍋𑌗𑌃 | யாதொருயோகமானது |
| 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌃 | சொல்லப்பட்டதோ |
| 𑌏𑌤𑌸𑍍𑌯 | இந்தயோகத்தினுடைய |
| 𑌸𑍍𑌥𑌿𑌰𑌾𑌂 | நிலையான அல்லது ஸ்திரமான |
| 𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌂 | இருப்பை |
| 𑌚𑌞𑍍𑌚𑌲𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 | (மனது) சஞ்சலமுள்ளதாகையால் |
| 𑌅𑌹𑌂 | நான் |
| 𑌨 𑌪𑌶𑍍𑌯𑌾𑌮𑌿 | பார்க்கவில்லை (தெரிந்து கொள்ளவில்லை.) |

ஓ! மதுசூதன! உம்மாலே, சமமா யறிவதாகிய யாதொரு யோகமானது சொல்லப்பட்டதோ, அந்த யோகத்தினுடைய ஸ்திரமான இருப்பை, மனது சஞ்சலமுள்ளதாகையால், நான் தெரிந்துகொள்ளவில்லை.

(𑌶𑌂) சகல வஸ்துக்களையும், பிரம்மமாகவும், பிரம்மத்தைச் சகல வஸ்துக்களாகவும் சமமா யறியவேண்டு மென்பதாய்ச் சொன்னீர். மனது சஞ்சலமானதால் அப்படிப்பட்ட அபேதபுத்தி ஸ்திரமாயுண்டாவது மிகுந்தப் பிரயாசையென்பது அர்சுனன் தாத்பரியம்.

(ஸ்ரீ) பிரம்மத்தியானத்தில் சலிக்காமலும் ஸ்திரமாயும் மனசை நிறுத்தவேண்டுமென்று சொன்னது அசாத்தியமானதென்பது அர்சுனன் தாத்பரியம்.

(ரா) (௩௩ - ௩௪ - சுலோகங்களைச் சேர்த்து பாஷியம் செய்யப்பட்டிருக்கிறது. அதாவது) பிரகிருதி சம்பந்தத்தினல் தேவதைகள் வேறே, மனிதர்கள் வேறே, மற்ற ஜந்துக்கள் வேறே என்று தோற்றுகிறது. பிரகிருதிசம்பந்தம் நீங்கினல் எல்லா ஆத்மசுவரு

பங்களும் ஞானகாரங்களானதினுலே தேவமனுஷ்யாதி பேதமில்லாமல் சமமாகவே யிருக்கும். அப்படி பிரகிருதி சம்பந்தம் நீங்கிய ஞானகாரமாயிருக்கிற ஆத்மாவும், பரமாத்மாவும் பேதமுள்ளவர்களானுலும், பரமாத்மாவுக்கு எப்படி பிரகிருதி சம்பந்தமும், கருமாதிகளு மில்லேயோ, அப்படிப்போல் பிரகிருதி விமுக்த ஆத்மாக்களுக்கு மில்லே. ஆகையால் ஜீவேசுவர ஆகாராபேதமான சமத்துவம் சொல்லப்பட்டது. அதை யறிகிறதுதான் சமதரிசனயோக மென்பதாகவும் சொன்னீர். இது அசாத்தியமா யெனக்குத் தோற்றுகிறது. ஏனென்ருல், ஜீவனுடைய கருமவாசனேயினுலே அவனுடைய மனதானது வெகுகாலமாய் எப்போதும்விஷயங்களில்முழுகி, அந்தவிஷயங்களிலுங்கூட ஒரு நிலேயை யடையாமல் சஞ்சலமாகவே யிருக்கிறது. இப்படி வெகுகாலப் பழக்கத்தினுல் வைரமேறி யிருக்கிற இந்த மனதை என்றைக்கும் காணுததும், கேட்காததும், நினேக்காததுமாகிய பிரகிருதி விமுக்த ஆத்ம சுவரூபசாம்மிய தரிசனமாகிற தியானயோகத்தில்நிலேயாய் வைத்திருக்க வேண்டுமென்ருல், எப்படி சாத்தியமாகும்? பெருங்காற்றைத் தடுத்து நிறுத்துவது எப்படி அசாத்தியமோ அப்படிப்போல தடுக்கக்கூடாததாயும், பலவந்தமாய்த் தன்னிச்சைப்படிப் பிரவேசிக்கிறதாயு மிருக்கிற மனதை நிறுத்துவது அசாத்தியமென்பது அர்சுனன் தாத்பரியம்.

(ஸ்ரீ,வி) சகலப் பிராணிகளிடத்திலும் பரமாத்மாவை ஓரேவிதமாய்ப் பார்க்கிறதாகிய சமதரிசனயோகமும், சுகதுக்கங்களில் தன்னேப்போலவே சகலப் பிராணிகளேயும் பார்க்கிறதாகிய சமதரிசன யோகமும் சொன்னீர். அதில் மனசு நிலேத்திருப்பது அசாத்திய மென்பது அர்சுனன் தாத்பரியம். (௩௩)

---

௩௪. 𑌚𑌞𑍍𑌚𑌲𑌂𑌹𑌿𑌮𑌨𑌃𑌕𑍃𑌷𑍍𑌣 𑌪𑍍𑌰𑌮𑌾𑌥𑌿𑌬𑌲𑌵𑌦𑍍𑌦𑍃𑌢𑌂।
𑌤𑌸𑍍𑌯𑌾𑌹𑌂𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌂𑌮𑌨𑍍𑌯𑍇 𑌵𑌾𑌯𑍋𑌰𑌿𑌵𑌸𑍁𑌦𑍁𑌷𑍍𑌕𑌰𑌂॥

| | |
|---|---|
| 𑌹𑍇𑌕𑍃𑌷𑍍𑌣 | ஓ! கிருஷ்ணசுவாமியே! |
| 𑌮𑌨𑌃 | மனதானது |
| 𑌚𑌞𑍍𑌚𑌲𑌂 | (சுவபாவமாகவே) சஞ்சலமுள்ளதாயும் |
| 𑌪𑍍𑌰𑌮𑌾𑌥𑌿 | (தேகேந்திரியங்களே) புரட்டுகிற அல்லது கலங்கச் செய்கிறதாயும் |
| 𑌬𑌲𑌵𑌤𑍍 | அடங்காததாயும் |
| 𑌦𑍃𑌢𑌂𑌹𑌿 | (விஷயங்களில்) கெட்டியாய்ப் பற்றுதலுடையதாயு மிருக்கிறது. |
| 𑌤𑌸𑍍𑌯 | அந்த மனதினுடைய (அந்தமனதை) |
| 𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌂 | அடக்குவதை |

| | |
|---|---|
| 𑌵𑌾𑌯𑍋𑌰𑌿𑌵 | காற்றைப் (அடக்குவது) போல |
| 𑌸𑍁𑌦𑍁𑌷𑍍𑌕𑌰𑌂 * | மிகவும் அசாத்தியமாக |
| 𑌅𑌹𑌂 | நான் |
| 𑌮𑌨𑍍𑌯𑍇 | எண்ணுகிறேன். |

ஓ! கிருஷ்ணசுவாமியே! மனதானது, சுபாவமாகவேசஞ்சலமுள்ளதாகவும், தேகேந்திரியங்களைக் கலங்கச்செய்கிறதாகவும், அடங்காததாகவும், விஷயங்களில் கெட்டியாய்ப் பற்றுதலை யுடையதாகவு மிருக்கிறது. அந்த மனதினுடைய அடக்குதலை, காற்றைப் (பிடித்து கரகத்திலடக்குவது) போல் மிகவும் அசாத்தியமாக நான் எண்ணுகிறேன். (௩௪)

---

𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚.

௩௫. 𑌅𑌸𑌂𑌶𑌯𑌂 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌮𑌨𑍋 𑌦𑍁𑌰𑍍𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌂 𑌚𑌲𑌮𑍍।
𑌅𑌭𑍍𑌯𑌾𑌸𑍇𑌨 𑌤𑍁 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑍇𑌣 𑌚 𑌗𑍃𑌹𑍍𑌯𑌤𑍇॥

| | |
|---|---|
| 𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚 | கிருஷ்ணபகவான் சொல்வது |
| 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 | புஜபலமுள்ள |
| 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 | ஓ! அர்சுந! |
| 𑌮𑌨𑌃 | மனதானது |
| 𑌦𑍁𑌰𑍍𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌂 | அடக்குவதற்கு மிகவும் பிரயாசையானது |
| 𑌚𑌲𑌂 | சஞ்சலமுள்ளது |
| (𑌇𑌤𑍍𑌯𑌤𑍍𑌰) | என்பதில் |
| 𑌅𑌸𑌂𑌶𑌯𑌂 | சமுசயமில்லை |
| (𑌤𑌥𑌾𑌪𑌿) | அப்படியிருந்தபோதிலும் |
| 𑌅𑌭𑍍𑌯𑌾𑌸𑍇𑌨 𑌤𑍁 † | பழக்கத்தினுலேயும் |
| 𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑍇𑌣 𑌚 ‡ | (விஷயங்களை) வெறுப்பதினுலேயும் |
| 𑌗𑍃𑌹𑍍𑌯𑌤𑍇 | அடக்கப்படுகிறது. |

ஸ்ரீ கிருஷ்ணபகவான் சொல்வது. புஜபலமுள்ள ஓ! அர்சுந! மனதானது அடக்குவதற்கு மிகவும் பிரயாசமான தென்பதிலும், சஞ்சலமுள்ள தென்பதிலுஞ் சந்தேகமில்லை. அப்படி யிருந்தபோதினும் பழக்கத்தினுலேயும், விஷயங்களில் வைராக்கிய மடைவதினுலேயும் அடக்கப்படுகிறது.

---

* (𑌸𑍍𑌵𑌾) மிகவும் பிரயாசை, மிகவும்வருத்தமானது, என்றும் அர்த்தமுண்டு.

† (𑌰𑌾) ஆத்மா சத்குணகாரமென்கிற அப்பியாசத்தி னுலுண்டாகிற பிரியம்.

‡ (𑌰𑌾) விஷயங்கள் தோஷாகாரமானவையென்று அப்பியாசத்தினுலே தெரிந்து விஷயங்களைவிட்டு மனசு விலகுவதுதான் வைராக்கியம். (𑌸𑍍𑌵𑌾) 𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌂 [illegible] । [illegible] ॥ பார்க்க.

(ஸ்ரீ) (ஶ்லோ) "ப்ரஶாந்தவ்ருத்திகம் சித்தம் பரமாநந்ததாயகம்। "அஸம்ப்ரஜ்ஞாதநாமாயம் ஸமாதிர்யோகிநாம் ப்ரிய:॥ = பிரவிருத்தியற்ற "மனதினுடைய பிரம்மசுவரூபமாயிருக்கிற ஸ்திதியெதுவோஅது" அஸம்ப்ரஜ்ஞாத=அசம்பிரக்ஞாத சமாதியென்று சொல்லப்படுகிறது." (யோக சாஸ்திரம்.) (௩௫)

---

௩௬. அஸம்யதாத்மநா யோகோ துஷ்ப்ராப இதி மே மதி:।

வஶ்யாத்மநா து யததா ஶக்யோऽவாப்துமுபாயத:॥

| | |
|---|---|
| அஸம்யதாத்மநா | அடக்கப்படாதமனதையுடையவனாலே |
| யோக: * | யோகமானது |
| துஷ்ப்ராப இதி | அடையக்கூடியதல்லவென்பது |
| மே | என்னுடைய |
| மதி: | நிச்சயம் |
| வஶ்யாத்மநா | அடக்கப்பட்டமனதையுடையவனாய் |
| யததா | முயற்சிசெய்பவனாலே |
| உபாயத: † | (அப்பியாசம், வைராக்கிய மிந்த) உபாயத்தினாலே |
| அவாப்தும் | அடைகிறதற்கு |
| ஶக்ய: | ஸாத்தியமானது. |

அடக்கப்படாத மனதையுடையவனாலே யோகமானது அடையக் கூடியதல்ல வென்பது என்னுடைய நிச்சயம். அடக்கப்பட்ட மனதை யுடையவனாய் முயற்சி செய்பவனாலே அப்பியாசம், வைராக்கிய மிந்த வுபாயங்களினா லடைகிறதற்குச் சாத்தியமானது. (௩௬)

---

௩௭. அயதி: ஶ்ரத்தயோபேதோ யோகாச்சலிதமாநஸ:।

அப்ராப்ய யோகஸம்ஸித்திம் காம் கதிம் க்ருஷ்ண கச்சதி॥

| | |
|---|---|
| அர்ஜுந உவாச | அர்சுனன்சொல்வது |
| ஹே க்ருஷ்ண ‡ | ஓ! கிருஷ்ணசுவாமியே! |

* (ரா) சமதரிசன யோகமானது.

† (ரா) முன்சொல்லப்பட்டிருக்கிறஎன்னுடையஆராதனரூபமானஞானத்தை யடைக்கிக்கொண்டிருக்கிறதுமான கருமயோகமாகிற உபாயத்தினால்.

‡ (ஸ்வா) முதலத்தியாயம், உ௮- வது சுலோகத்தினடியில் அர்த்தமெழுதப் பட்டிருக்கிறது. பக்தர்களுடைய பயங்களைப் போக்கடிக்கிறதினால் கிருஷ்ணனென்கிற பெயர்வந்தது.

| | |
|---|---|
| ச்ரத்தயா உபேத: | நம்பிக்கையுடன் கூடியோகத்தில் பிரவேசித்து |
| அயதி: | (பூர்ணஞ்செய்ய) முயற்சி யில்லாதவனாய் |
| யோகாத் | யோகத்திலிருந்து |
| சலிதமாநஸ: | நழுவி விஷயத்தில் பிரவேசித்த மனதையுடையவன் |
| யோகஸம்ஸித்திம் | யோகத்தினாலுண்டாகும்பலனை |
| அப்ராப்ய | அடையாமல் |
| காம் கதிம் கச்சதி | என்னகெதியை யடைகிறான், |

அர்சுனன் சொல்வது. ஓ! கிருஷ்ணசுவாமியே! நம்பிக்கையுடன் கூடி யோகத்தில், பிரவேசித்து (ஆனால்) பூர்ணமாய்ச் செய்ய முயற்சி செய்யாததினால், யோகத்தைவிட்டு நழுவி விஷயங்களில் பிரவேசித்த மனதையுடையவன் (யோகபிரஷ்டனென்று இவன் சொல்லப்படுகிறான்.) யோகத்தினாலுண்டாகும் பலனை யடையாம லென்னகெதியை யடைகிறான்.? (௩௭)

---

௩௮. கச்சிந்நோபயவிப்ரஷ்டச்சிந்நாப்ரமிவ நச்யதி।
அப்ரதிஷ்டோ மஹாபாஹோ விமூடோ ப்ரஹ்மண: பதி॥

| | |
|---|---|
| மஹாபாஹோ | ஓ! புஜபலமுடையவனே! |
| உபயவிப்ரஷ்ட: | (கருமமார்க்கம், யோகமார்க்கம்) இரண்டுங் கெட்டு |
| அப்ரதிஷ்ட: | ஆசிரய (பிடிப்பு) மற்று |
| ப்ரஹ்மண: பதி | பிரம்மத்தையடையு முபாயத்தில் |
| விமூட: | ஞானமில்லாதவன் |
| சிந்நாப்ரமிவ | சிதறிப்போன மேகம்போல |
| நச்யதி கச்சித் | நாசமடைய மாட்டானா? |

ஓ! புஜபலமுடைய கிருஷ்ணசுவாமியே! கருமமார்க்கம், யோகமார்க்க மிரண்டுங்கெட்டு ஆசிரயமற்று பிரம்மத்தை யடையுமுபாயத்தில் ஞானமில்லாதவன், சிதறிப்போன மேகம்போல நாசமடைவானா? அல்லது ஒருபோது மடையமாட்டானா?

(ஸ்ரீ) எப்படி இரண்டுங் கெட்டவனாகிறானென்றால், யோகத்தில் பிரவேசித்ததினால், இப்போது கருமாநுஷ்டானமுமில்லை. முன் செய்த கருமங்களினுடைய பலனை ஈசுவரரார்ப்பணஞ் செய்துவிட்டானாகையால், கருமங்களுடைய பலனாகிய சுவர்க்காதி சுகபலனுமில்லை,

அப்பியாசம், வைராக்கியமுதலிய சாதனங்களிலே முயற்சியின்மையால் ஞானயோக சித்தியையடைந்து மோக்ஷபலனையடைய ஹேதுவுமில்லை யென்பதே.

"ஆசிரயமற்ற" என்னல், கருமத்தில் பிடிப்புமில்லை. ஞானமடையும் வழியான யோகத்தில் பிடிப்புமில்லை யென்பதே.

"பிரம்மத்தை யடையுமுபாயம்" என்பது மனோநிக்கிரகம், இந்திரியநிக்கிரகம், சமதமாதிகள், விடாமுயற்சி, வைராக்கிய முதலியவைகளே.

"சிதறிப்போன மேகம்போல நாசமடைவது" என்றால், கூட்டமாய்ச் சேர்ந்திருக்கிற மேகங்கள் காற்றினல் பிரிக்கப்பட்டு பல பிரிவுகளாய் விடுகின்றன. அப்படிப்பிரிந்த (சிதறின) மேகமானது, தானெதிலிருந்து பிரிந்ததோ அந்த மேகத்துடன் மறுபடிபோய்ச் சேராமலும், அல்லது வேறே மேகங்களுடன் சேராமலும், அதின் சுவரூபம் காணப்படாமலே நாசத்தையடையும். ஆகையா லிதுத் தியானத்திலிருந்து நழுவின யோகப்பிரஷ்டனுக்கு திருஷ்டாந்தமாய்ச்சொல்லப்பட்டது.

(ரா) உபயவிப்ரஷ்ட:=இரண்டுங்கெட்டவன். எப்படியென்றால் அப்ரதிஷ்ட:=சுவர்க்காதி பிராப்திக்கு ஏதுவான கருமபலனைத் தியாகம் செய்வதினலே சுவர்க்காதிகள் கிடைக்கும்படிச் செய்துகொள்ளாதவன். விமூடோ ப்ரஹ்மண: பதி= பிரம்மத்தை யடையத்தகுந்த யோகமார்க்கத்தை விட்ட அக்ஞானி.

(ஸ்ரீ,வி) உபயவிப்ரஷ்ட:= சுவர்க்கமுமில்லை, மோக்ஷமு மில்லை. அல்லது சுவர்க்கப்பிராப்திக்குச் சாதனமான காம்மியகருமமு மில்லை. மோக்ஷத்திற்குச் சாதனமான பூர்ணமானத் தியானயோகமு மில்லை. அல்லது இந்த உலக சுகமுமில்லை பரலோக சுகமுமில்லை. ஆகையா லிரண்டுங் கெட்டவனென்று சொல்லப்பட்டது. (௩௮)

---

௩௯. ஏதந்மே ஸம்ஶயம் க்ருஷ்ண சேத்துமர்ஹஸ்யஶேஷத:।
த்வதந்ய: ஸம்ஶயஸ்யாஸ்ய சேத்தா நஹ்யுபபத்யதே॥

| | |
|---|---|
| ஹே! க்ருஷ்ண! | ஓ! கிருஷ்ணசுவாமியே! |
| மே | என்னுடைய |
| ஏதம் ஸம்ஶயம் | இந்தச் சந்தேகத்தை |
| அஶேஷத: | முழுவதும் |
| சேத்தும் | நிவர்த்திக்க |
| அர்ஹஸி | அருகராயிருக்கிறீர் |

அஸ்ய
ஸம்ஶயஸ்ய } இந்தச் சந்தேகத்தினுடைய
சேத்தா நிவர்த்தியைச் செய்கிறவன்
த்வதந்ய: உம்மைத்தவிரவேறொருவன்
ந ஹ்யுபபத்யதே கிடையாது.

ஓ! கிருஷ்ணசுவாமியே! என்னுடைய இந்தச் சந்தேகத்தை முழுதும் நிவர்த்திக்க அருகராயிருக்கிறீர். இந்தச் சந்தேகத்தை நிவர்த்திசெய்ய உம்மைத்தவிரத் தகுந்த மற்றொருவன் கிடையாது. (௩௯)

---

௪0. பார்த்த நைவேஹ நாமுத்ர விநாஶஸ்தஸ்ய வித்யதே।
ந ஹி கல்யாணக்ருத்கஶ்சித் துர்கதிம் தாத கச்சதி॥

ஸ்ரீ பகவாநுவாச பகவான் சொல்வது
தாத அப்பா! அல்லது குழந்தாய்!
பார்த்த ஓ! அர்சுன!
தஸ்ய அவனுக்கு (யோகப்பிரஷ்டனுக்கு)
இஹ இந்தலோகத்திலும்
விநாஶ: நாசமானது
ந ஏவ வித்யதே உண்டாகிறதேயில்லை
அமுத்ர பரலோகத்திலும்
ந நாசமானது உண்டாகிறதேயில்லை
கல்யாணக்ருத்
கஶ்சித் } † சத்கருமத்தைச்செய்கிற ஒருவனும்
துர்கதிம் கெடுதியை
ந ஹி கச்சதி அடைகிறதில்லை.

ஸ்ரீ கிருஷ்ணபகவான் சொல்வது குழந்தாய்! அர்சுன! யோகப்பிரஷ்டனுக்கு இந்தலோகத்திலாவது, பரலோகத்திலாவது கெடுதியுண்டாகிறதேயில்லை. சத்கருமத்தைச்செய்த ஒருவனும் கெடுதியையடைகிறதில்லை. (௪0)

* (ஶம்) பூர்வஜன்மத்தைப்பார்க்கிலும் தாழ்ந்த ஜன்மமானது. (ஸ்ரீ) தோஷமாவது, நரகப்பிராப்தியாவது. (ரா) சுவர்க்காதி அனுபவம், பிரம்மப் பிராப்தி இவைகளில் தான் கோரினது கிடைக்காமல் போகிறதாகிய விநாசம். அல்லது ஆரம்பித்தகாரியத்தை மத்தியில் விட்டுவிட்டதினு லுண்டானதோஷம். (மீ,வி) இந்தலோகத்தில் மிருகாதி ஜந்மங்களாவது, பரலோகத்தில் நரகமாவது.

† (மீ,வீ) ஆஸ்திகபுத்தியுடன் கொஞ்சகாலமாவது, ஈசுவரத்தியானஞ்செய்த ஒருவனும்.

௪௧. 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌪𑍁𑌣𑍍𑌯𑌕𑍃𑌤𑌾𑌂 𑌲𑍋𑌕𑌾𑌨𑍍 𑌉𑌷𑌿𑌤𑍍𑌵𑌾 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑍀𑌃 𑌸𑌮𑌾𑌃।
𑌶𑍁𑌚𑍀𑌨𑌾𑌂 𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑌾𑌂 𑌗𑍇𑌹𑍇 𑌯𑍋𑌗𑌭𑍍𑌰𑌷𑍍𑌟𑍋𑌽𑌭𑌿𑌜𑌾𑌯𑌤𑍇॥

| | |
|---|---|
| 𑌯𑍋𑌗𑌭𑍍𑌰𑌷𑍍𑌟𑌃 | (யோகஞ்செய்தும் பூர்ணமாய்ச் செய்யாமல் விட்டுவிட்டவனாகிய) யோகப் பிரஷ்டன். |
| 𑌪𑍁𑌣𑍍𑌯𑌕𑍃𑌤𑌾𑌂 | புண்ணியம்செய்தவர்களுடைய |
| 𑌲𑍋𑌕𑌾𑌨𑍍 | உலகங்களை |
| 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 | அடைந்து |
| 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑍀𑌃 𑌸𑌮𑌾𑌃 | வெகுகாலம் |
| 𑌉𑌷𑌿𑌤𑍍𑌵𑌾 | சுகமாயிருந்து |
| 𑌶𑍁𑌚𑍀𑌨𑌾𑌂 | சதாசாரமுள்ள |
| 𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑌾𑌂 | ஐசுவரியவான்களுடைய |
| 𑌗𑍇𑌹𑍇 | வீட்டில் |
| 𑌅𑌭𑌿𑌜𑌾𑌯𑌤𑍇 | பிறக்கிறான். |

யோகப் பிரஷ்டனவன் (அசுவமேதாதி கிரதுக்கள் செய்த) புண்ணியமுடையவர்கள் எந்தலோகத்தை யடைவார்களோ அந்த லோகத்தை யடைந்து வெகுகாலம் சுகமாயிருந்து (பிறகு) சதாசாரமுள்ள ஐசுவரியவான்களுடைய வீட்டில் பிறக்கிறான்.

(ரா) எந்த விஷயாநுபவத்தை யிச்சித்து யோகத்தை விட்டுவிட்டானே, அந்த விஷயாநுபவத்தைப் புண்ணிய லோகங்களில் தனக்கிஷ்டமான காலம்வரையி லனுபவித்து, பிறகு இந்த லோகத்தில் சுத்தமும், ஐசுவரியமுமுள்ள யோகத்திற்கு யோக்கியமான குலத்தில் பிறக்கிறான். (௪௧)

---

௪௨. 𑌅𑌥𑌵𑌾 𑌯𑍋𑌗𑌿𑌨𑌾𑌮𑍇𑌵 𑌕𑍁𑌲𑍇 𑌭𑌵𑌤𑌿 𑌧𑍀𑌮𑌤𑌾𑌮𑍍।
𑌏𑌤𑌦𑍍𑌧𑌿 𑌦𑍁𑌰𑍍𑌲𑌭𑌤𑌰𑌂 𑌲𑍋𑌕𑍇 𑌜𑌨𑍍𑌮 𑌯𑌦𑍀𑌦𑍃𑌶𑌮𑍍॥

| | |
|---|---|
| 𑌅𑌥𑌵𑌾 | அல்லது |
| 𑌧𑍀𑌮𑌤𑌾𑌂 | ஞானிகளான |
| 𑌯𑍋𑌗𑌿𑌨𑌾𑌂* | யோகாப்பியாசஞ்செய்கிறவர்களுடைய |
| 𑌕𑍁𑌲𑍇𑌏𑌵† | குலத்திலேயே |
| 𑌭𑌵𑌤𑌿 | ஜநிக்கிறான் |
| 𑌲𑍋𑌕𑍇 | இந்தலோகத்தில் |
| 𑌈𑌦𑍃𑌶𑌂 | இப்படிப்பட்ட |
| 𑌜𑌨𑍍𑌮 | பிறவியானது |

---

*, † (𑌶𑌂) யோகிகளான தரித்திரர்களுடைய குலத்திலே.

| | |
|---|---|
| 𑌯𑌤𑍍 | எதுவோ |
| 𑌏𑌤𑌦𑍍𑌧𑌿 | இதானது |
| 𑌦𑍁𑌰𑍍𑌲𑌭𑌤𑌰𑌂 | மிகதுர்லபமானது. (மிகஅரிது) |

அல்லது ஞானிகளான யோகாப்பியாசஞ் செய்கிற வர்களுடைய குலத்திலேயே ஜநிக்கிறான். இந்த லோகத்தில் இப்படிப்பட்ட பிறவி யானது அதிக துர்லபமானது.

(ரா) முந்திய சுலோகத்தில் குறிக்கப்பட்டவன், சொற்பகாலம் யோகாப்பியாசஞ்செய்து பிறகு விட்டுவிட்டவன். இந்த சுலோகத்தில் குறிக்கப்பட்டவனோ, வெகுகாலம் யோகம் செய்து வந்து சித்தி யடையும் சமயத்தில் விட்டுவிட்டவன். 𑌏𑌤𑌦𑍍𑌧𑌿= இதானது, என்றால், முந்திய சுலோகத்தில் சொன்னபிறவியும், இந்த சுலோகத்தில் சொன்னபிறவியும். (௪௨)

---

௪௩. 𑌤𑌤𑍍𑌰 𑌤𑌂 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌸𑌂𑌯𑍋𑌗𑌂 𑌲𑌭𑌤𑍇 𑌪𑍌𑌰𑍍𑌵𑌦𑍇𑌹𑌿𑌕𑌮𑍍।
𑌯𑌤𑌤𑍇 𑌚 𑌤𑌤𑍋 𑌭𑍂𑌯𑌃 𑌸𑌂𑌸𑌿𑌦𑍍𑌧𑍌 𑌕𑍁𑌰𑍁𑌨𑌨𑍍𑌦𑌨॥

| | |
|---|---|
| 𑌹𑍇 𑌕𑍁𑌰𑍁𑌨𑌨𑍍𑌦𑌨 | ஓ! குருவம்சத்தில் ஜனித்தவனே ! |
| 𑌤𑌤𑍍𑌰 | அதில் (அப்படிஜனிக்கும் ஜன்மத்தில்) |
| 𑌪𑍌𑌰𑍍𑌵𑌦𑍇𑌹𑌿𑌕𑌂 | பூர்வதேகவாசனையினால் தனக்குண்டான |
| 𑌤𑌂 | அப்படிப்பட்ட |
| 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌸𑌂𑌯𑍋𑌗𑌂 | புத்திசம்பந்தத்தை |
| 𑌲𑌭𑌤𑍇 | அடைகிறான் |
| 𑌤𑌤𑌃 | அதற்குப்பிறகு |
| 𑌭𑍂𑌯𑌃* | மறுபடியும் |
| 𑌸𑌂𑌸𑌿𑌦𑍍𑌧𑍌 | (பூர்வஜன்மத்தில் விட்டுப்போன யோக) சித்தியை யடைவதிலே |
| 𑌯𑌤𑌤𑍇 | பிரயத்தினஞ்செய்கிறான். |

ஓ! அர்சுன! அதில் (மேல்கண்டவிதமாய் நல்லகுலத்தில் ஜனித்த ஜன்மத்தில்) பூர்வதேக வாசனை (முன்ஜன்மத்தில் செய்து நிறைவேறாமல்போன யோகமாகிய வாசனை) யினால் தனக்குண்டான அப்படிப்பட்ட (யோகஞ்செய்ய முயற்சியுள்ள) புத்தி சம்பந்தத்தை யடைகிறான். அதன்பிறகு பூர்வஜன்மத்தில் விட்டுப்போன அந்த யோக சித்தியை அடைவதில் மறுபடி பிரயத்தினஞ் செய்கிறான்.

(ஷா) ஸ்ரீ இராமாநுஜர் தவிர மற்ற பாஷியக்காரர்களும், வியாக்கியாதாக்களும், ௪௪-வது சுலோகத்தின் முந்திய அரைச் சுலோ

---

* (ரா) (ஸ்ரீ,வி) அதிகமாய்.

கத்தை, இந்த சுலோகத்துடன் சேர்த்து அந்வயம் செய்திராவிட்டா லும், இந்த சுலோகத்துடன் சேர்ந்ததாகவே அர்த்தஞ் செய்திருக்கி ருர்கள். மேலும், பிந்திய அனை சுலோகத்திற்குச் செய்திருக்கிற அர்த் தமானது, இந்த ௪௩ - வது சுலோகத்திற் குறிக்கப்பட்டவனைக் குறிக் காமல் வேறே தனியான 𑌜𑌿𑌜𑍍𑌞𑌾𑌸𑍁வைக்குறிக்கிறது. (௯) அடுத்த சுலோகத்தின் முந்தியபாகத்தை இத்துடன் சேர்த்து அர்த்தஞ் செய் திருக்கிருர். (௪௩)

---

**௪௪.** 𑌪𑍂𑌰𑍍𑌵𑌾𑌭𑍍𑌯𑌾𑌸𑍇𑌨 𑌤𑍇𑌨𑍈𑌵 𑌹𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 𑌹𑍍𑌯𑌵𑌶𑍋𑌽𑌪𑌿 𑌸𑌃।
𑌜𑌿𑌜𑍍𑌞𑌾𑌸𑍁𑌰𑌪𑌿 𑌯𑍋𑌗𑌸𑍍𑌯 𑌶𑌬𑍍𑌦𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌤𑌿𑌵𑌰𑍍𑌤𑌤𑍇॥

| | |
|---|---|
| 𑌤𑍇𑌨𑍈𑌵 𑌪𑍂𑌰𑍍𑌵𑌾𑌭𑍍𑌯𑌾𑌸𑍇𑌨 | அந்தப் பூர்வ (ஜன்ம) அப்பியாசத்தினுலே தானே |
| 𑌅𑌵𑌶𑍋𑌽𑌪𑌿 | பராதீனனுய் |
| 𑌸𑌃 | அவன் (பூர்வ ஜன்மத்தில் யோகப்பிரஷ்ட னுனவன்) |
| 𑌹𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 | (விஷயங்களிலிருந்து யோகத்திற்கு) இழு க்கப்படுகிருன் |
| 𑌯𑍋𑌗𑌸𑍍𑌯 𑌜𑌿𑌜𑍍𑌞𑌾𑌸𑍁𑌰𑌪𑌿 | யோகத்தையப்பியசிக்க வேண்டுமென்கிற இச் சையுள்ளவனுனுலுங்கூட |
| 𑌶𑌬𑍍𑌦𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 | வேதோக்த கருமபலத்தை |
| 𑌅𑌤𑌿𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 𑌹𑌿 | அதிக்கிரமிக்கிருன். ஞானயோகத்திற்குப் பாத்திரனுகிருன். |

அந்தப் பூர்வ ஜன்மாப்பியாசத்தினுலேதானே பராதீனனுய் அவன் (பூர்வஜன்ம யோகப்பிரஷ்டன்) யோகத்திற்கு இழுக்கப் படுகிருன். யோகத்தை யப்பியசிக்க வேண்டுமென்கிற இச்சையுள்ளவ னுனுலுங் கூட (அவன் அடுத்த ஜன்மத்தில் அந்த இச்சையாகிய பூர்வஜன்ம வாசனையினுலே) வேதோக்தமான கருமபலனை அதிக்கிரமிக்கிருன். (என்ருல், வேதத்தில் கருமங்களுக்கு விதிக்கப்பட்டிருக்கிற சுவர்க் காதிபலனை யபேக்ஷிக்காமல் யோகநிஷ்டையையே யிச்சித்து அதில் பிர விருத்திக்கிருன்.)

(௰) (ஸ்ரீ) 𑌜𑌿𑌜𑍍𑌞𑌾𑌸𑍁𑌃 = யோகத்தை யறியவேண்டுமென் றிச்சித்து, அதில் பிரவிருத்தித்த சந்நியாசியுங்கூட, என்று தாத் பரியம்.

முந்திச் சொல்லப்பட்டிருக்கிற யோகப்பிரஷ்டனைக்காட்டிலும் இவனுக்கு முக்தியடையுங்காலம் நீடித்ததாகும்.

𑌶𑌬𑍍𑌦𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌤𑌿𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 = வேதோக்த கருமங்களுடைய பல னைக்காட்டிலும், அதிகபலனை யடைகிருனென்பது தாத்பரியம்.

கைமுத்யந்யாயம் - என்று கிரகிக்கத்தக்கது (அதாவது, ஜிஜ்ஞாஸுவுக்கு இந்தப்பலனானால் முந்தியவனுடைய பலனின்னதென்று சொல்லவும் வேண்டுமோ? என்பதே.

(ஙா) (இந்த சுலோகத்தின் பிந்திய அரை சுலோகத்திற்கு), யோகஸ்ய = யோகத்தை, ஜிஜ்ஞாஸு: = தெரிந்துகொள்ள வேண்டுமென்கிற இச்சையுள்ளவன், அந்த ஜன்மத்தில் தெரிந்துகொள்ளாவிட்டால், அடுத்த ஜன்மத்தில் தெரிந்து, அநுஷ்டித்து, ஞானியாய், ஶப்த=தேவ, மனுஷிய, பூமி, சுவர்க்காதி சப்தங்களால் (பெயர்களால்) சொல்லத்தகுந்த, ப்ரஹ்ம = பிரகிருதியை, அதிவர்த்ததே = அதிக்கிரமிக்கிறான். என்றால், ஞானுநந்த சுவரூபமான ஆத்ம சுவரூபத்தை யடைகிறான்.

(ஐ) ஶப்தப்ரஹ்ம=பரமாத்மாவை, அதிவர்த்ததே = கிரமக் கிரமமாய் அடைகிறான். எப்படிக் கிரமக்கிரமமா யடைகிறானென்பது அடுத்த சுலோகத்தினால் சொல்லப்படுகிறது.

(மீ,வி) ஶப்தப்ரஹ்ம = வேதத்திலுள்ளவிதி நிஷேதங்களை, அதிவர்த்ததே=அதிக்கிரமிக்கிறான். என்றால், முக்தனாய் விடுகிறானென்பது தாத்பரியம். இது (கைமுத்யந்யாயம்) கைமுத்திய நியாயம். (௪௪)

---

௪௫. ப்ரயத்நாத்யதமாநஸ்து யோகீ ஸம்ஶுத்தகில்பிஷ:।
அநேகஜந்மஸம்ஸித்தஸ்ததோ யாதி பராம் கதிம்॥

| | |
|---|---|
| ப்ரயத்நாத் | முயற்சியினாலே |
| யதமாநஸ்து | யோகாப்பியாசஞ்செய்கிற |
| யோகீ | யோகியானவன் |
| ஸம்ஶுத்தகில்பிஷ: | பாபத்திலிருந்துவிடுபட்டவனாய் |
| அநேகஜந்மஸம்ஸித்த: | அநேக ஜன்மங்களில் (ஞான) சித்தியை யடைந்தவனாய் |
| தத: | அதற்குப்பிறகு |
| பராம் கதிம் | உத்தமமான கதியை (மோக்ஷத்தை |
| யாதி | அடைகிறான். |

முயற்சியினாலே யோகாப்பியாசஞ் செய்கிற யோகியானவன், பாபத்திலிருந்து விடுபட்டு அநேக ஜன்மங்களில் செய்தயோகத்தினாலே ஞானசித்தியை யடைந்து, பிறகு மோக்ஷத்தை யடைகிறான். (இந்த யோகியானவன், முந்திய சுலோகத்தின் முதல்பாகத்தில் சொல்லியிருக்கிற யோகியே. ஜிஜ்ஞாஸு அல்ல.)

(ரா) அநேகஜந்ம—அநேக ஜன்மங்களில் சம்பாதித்த புண்ணிய கருமங்களால், ஸம்ஶுத்தகில்பிஷ:—பாபங்களைப் போக்கடித்துக்கொண்டவனும், ஸம்ஸித்த:— சித்தியை யடைந்தவனும், ப்ரயத்நாத்யதமாந:—மறுபடியும் யோகத்தில் பிரயத்தினஞ் செய்கிறவனுயு மிருக்கிற, யோகீ—யோகியானவன், யோகத்திலிருந்து சலித்தபோதிலும், தத:—யோகாப்பியாச மகிமையினுலே, பராம்கதிம்யாதி — மோக்ஷத்தை யடைகிருன்.

(ஶ்ரீ) (ஶ்ரீ,வி) முந்திய சுலோகத்தில் குறிக்கப்பட்ட ஜிஜ்ஞாஸு, விஷயமாய் இந்தசுலோகம் பிரவிருத்தித்ததாக அறியத்தக்கது. (௪௫)

---

௪௬. தபஸ்விப்யோऽதிகோ யோகீ ஜ்ஞாநிப்யோऽபி மதோऽதிக:।
கர்மிப்யஶ்சாதிகோ யோகீ தஸ்மாத்யோகீ பவார்ஜுந॥

| | |
|---|---|
| யோகீ | தியானயோகியானவன் |
| தபஸ்விப்ய:* | தபசுசெய்கிறவர்களைப்பார்க்கிலும் |
| அதிக: | அதிகமானவன் |
| ஜ்ஞாநிப்யோऽபி | சாஸ்திரஞானமுள்ளவர்களைப்பார்க்கிலும் |
| அதிக: | அதிகமானவன் |
| யோகீ | தியானயோகியானவன் |
| கர்மிப்ய: | கருமங்களைச்செய்கிறவர்களைப்பார்க்கிலும் |
| அதிக: (ஏ.தி) | அதிகமானவனென்று |
| மத: | எண்ணப்பட்டிருக்கிருன் |
| தஸ்மாத் | ஆகையால் |
| ஹே அர்ஜுந | ஓ! அர்சுன! |
| யோகீபவ | யோகியாகக்கடவாய். |

† தபஸ்செய்கிறவர்கள், சாஸ்திர ஞானமுள்ளவர்கள், கருமஞ் செய்கிறவர்கள், இவர்களைப்பார்க்கிலும், தியானயோகி சிரேஷ்டனென்பது என்னுடையமதம். ஆகையினுலே, ஓ! அர்சுன! யோகியாகக்கடவாய்.

(ஶ்வா) தபசு, சாஸ்திரஞானம், கருமமிவைகளைக் காட்டிலும் யோகமெப்படி சிரேஷ்டமென்றுல், இம்மூன்றும் தியானயோகியினிட

---

* (ஶ்ரீ) (ஶ்ரீ,வி) கிருச்சிர சாந்திராயணுதி விரதங்கள். அதாவது, தேகபலனைக் குறைக்கச்செய்யப்படும் விரதங்கள். இந்த விரதங்களுடன், மந்திரங்களை உருவேற்றுகிறதுமுண்டு. இதுதான் தபஸ்.

† (ஶ்வா) ப்ருஹதாரண்யகோபநிஷத் ... ॥ ...

த்திலேயே யிருக்கின்றன; அத்துடன் தியானயோகமுஞ் சேர்ந்திருப்பதினால் தியானயோகி சிரேஷ்டனே. ஏனென்றால், இவன் இராகத்துவேஷாதிகளற்றவனாயிரு னைதினால் தான். (சகூ)

---

சஎ. யொமிநாஊவிஸவெஷாம் ஊஹ்ரெதநாஆராதூநா।
ஶ்ரஜாவாநுஸஜெதயொஊாம் ஸமெயாக்ததொஊதமஃ॥

| | |
|---|---|
| ஸவெஷாஊவி யொமிநாம் (ஊஜெர) | சகலவிதமானயோகிகளுக்குள்ளேயும் |
| யஃ | எவன் |
| ஊஹ்ரெதந ஆராஊதூநா | என்னிடத்தில்நிறுத்தப்பட்டமனதினால் |
| ஶ்ரஜாவாநு | பக்தியோடுகூடியவனாய் |
| ஊாம் ஸஜெத | என்னை பஜிக்கிறானே |
| ஸஃ யாக்ததஃ (ஊதி) | அவன் சிரேஷ்டமானயோகியாக |
| மெ ஊதஃ | எனக்குச் சம்மதனாயிருக்கிறான். |

சகலவித யோகிகளுக்குள்ளே, எவன் என்னிடத்தில் நிறுத்தப்பட்ட மனதினால் பக்தியோடு என்னை பஜிக்கிறானோ, அவன் சிரேஷ்டமானயோகி என்று எனக்குச் சம்மதனாயிருக்கிறான்.

(ரா) ஊஹ்ரெதநாஆராதூநா = எனக்குப் பிரியஞ் செய்கிறதைத் தவிர மற்றசகலவியாபாரங்களையும் விட்டிருக்கிற மனதினாலே, என்றால், பாகியாந்தர (வெளியுள்) விருத்தியிரண்டிலும் என்னையே யதிகப் பிரியமான வஸ்துவென்று அடுத்து என்னைவிட்டொரு க்ஷணங்கூடப் பிரியாமலும், என்னைவிட்டுப் பிரிந்திருந்தால் நசித்துப்போவோமென்கிற எண்ணங்கொண்டதாயு மிருக்கிறமனதினாலே, ஶ்ரஜாவாநு = என்னைச் சீக்கிரமாக அடையவேண்டுமென்பதில் அதிகப் பரபரப்போடு கூடியிருக்கிறான். ஆகையால்தான் இவன் மேலாகச் சொல்லிவந்த நான்குவித யோகிகளைக் காட்டிலும் சிரேஷ்டன்.

(ஷா) "யொமிநாஊவிஸவெஷாம்=யோகிகளுக்குள்ளே" சிரேஷ்டனாக இவனைச் சொல்லப்பட்டிருக்கிறது. எப்படிப்பட்ட யோகிகளுக்குள்ளே சிரேஷ்டனென்கிற கேள்வி யுண்டாகிறது. இதுவிஷயமாய் (ஸ்ரீ) வியக்தமாய்ச் சொல்லாவிட்டாலும் இதின் ச - வது அத். உடு - முதல் ௩௦ - வரையிலுள்ள சுலோகங்களில் சொல்லப்பட்டிருக்கிற, யக்ஞமென்கிற பெயரினால் அழைக்கப்படும் பதினொருவகை

கருமங்களைச்செய்யும் கருமயோகிகளுக்குள்ளே நேராய் ஈசுவரபக்தி செய்து ஈசுவரனையே பஜிக்கிற தியானயோகி சிரேஷ்டனென்று அபிப்பிராயப் பட்டதாகக் காணுகிறது. (ரா) இந்த அத்தியாயம். சு - வது சுலோகத்தில் குறித்தயோகியைவிட, ௱௦ - வது சுலோகத்தில் குறித்த யோகி சிரேஷ்டன். இவனைவிட, ௱க-வது சுலோகத்தில் குறித்தயோகி சிரேஷ்டன். இவனைவிட, ௱உ - வது சுலோகத்தில் குறித்தயோகி சிரேஷ்டனென்று அந்தந்த சுலோகத்தின் அவதாரிகையில் சொல்லியிருக்கிறது மல்லாமல், அந்த நால்வகை யோகிகளைக் காட்டிலும், இவன் சிரேஷ்டனென்று இதிலும் சொல்லியிருக்கிறார். (மீ,வி) ஞானயோகி, பக்தியோகி, இவர்களுக்குள்ளே பக்தியோகி சிரேஷ்டன். ஏனென்றால் "பக்தியோடு பகவானைச்சேவிக்கிறவனுதலால்தான்" என்று சொல்லி யிருக்கிறார். (ஶை) சில யோகிகள், யோகசமாதியில், தியானத்திற்கு விஷயமாக, ருத்திரன், இந்திரன், சூரியன், சுப்பிரமணியன், கணபதி, முதலிய தேவதைகளில் ஒன்றைக் குறித்துக்கொள்ளுகிறார்கள். சிலயோகிகள், தியானத்திற்கு விஷயமாக பரமாத்மாவையே குறித்துக்கொண்டு அதிக பக்தி விசுவாசத்துடன் தியானஞ் செய்கிறார்கள். இவர்களுக்குள்ளே, பரமாத்ம தியானமுள்ள யோகியே சிரேஷ்டன் என்று சொல்லுகிறார். இந்த அர்த்தத்தை இதினடுத்த ஏழாவது அத்தியாயம், உ௱ - வது சுலோகமாகிய "சதுர்விதா ஐஜந்தே மாம் ஜநாஸ் ஸுக்ருதி நோர்ஜுந। ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ ஜ்ஞானீ ச பரதர்ஷப॥" இதுமுதலிய வாக்கியங்கள் ஆதரிக்கின்றன. (சஎ)

இதி ஸ்ரீ பகவத்கீதா ஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம்
யோகசாஸ்த்ரே ஸ்ரீ க்ருஷ்ணார்ஜுந ஸம்வாதே
ஆத்மஸம்யமயோகோ நாம
ஷஷ்டோத்யாய:.
ஸ்ரீ க்ருஷ்ணாயபரப்ரஹ்மணே நம:.
ஆத்மஸம்யம யோகமென்கிற ஆறாவது அத்தியாயம்
முற்றிற்று.

---

𑌶𑍍𑌰𑍀𑌃.

𑌸𑌪𑍍𑌤𑌮𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃.

# ஏழாவது அத்தியாயம்.

𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚.

க. 𑌮𑌯𑍍𑌯𑌾𑌸𑌕𑍍𑌤𑌮𑌨𑌾𑌃 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌯𑍋𑌗𑌂 𑌯𑍁𑌞𑍍𑌜𑌨𑍍𑌮𑌦𑌾𑌶𑍍𑌰𑌯𑌃।
𑌅𑌸𑌂𑌶𑌯𑌂 𑌸𑌮𑌗𑍍𑌰𑌂 𑌮𑌾𑌂 𑌯𑌥𑌾 𑌜𑍍𑌞𑌾𑌸𑍍𑌯𑌸𑌿 𑌤𑌚𑍍𑌛𑍃𑌣𑍁॥

| | |
|---|---|
| 𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚 | கிருஷ்ணசுவாமிசொல்லுது |
| 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 | ஓ! குந்திபுத்திரா! |
| 𑌮𑌯𑌿 | (பரமாத்மாவாகிய) என்னிடத்தில் |
| 𑌆𑌸𑌕𑍍𑌤𑌮𑌨𑌾𑌃 | பற்றுள்ளமனதையுடையவனும் |
| 𑌯𑍋𑌗𑌂 | யோகத்தை |
| 𑌯𑍁𑌞𑍍𑌜𑌨𑍍 | செய்கிறவனும் |
| 𑌮𑌦𑌾𑌶𑍍𑌰𑌯𑌃 | என்னையேசரணுகதியடைந்தவனும் |
| (𑌸𑌨𑍍) | இருந்துகொண்டு |
| 𑌸𑌮𑌗𑍍𑌰𑌂* | பூர்ணமாயிருக்கிற |
| 𑌮𑌾𑌂 | என்னை |
| 𑌯𑌥𑌾 | எவ்விதமாய் |
| 𑌅𑌸𑌂𑌶𑌯𑌂 | சமுசயமில்லாமல் |
| 𑌜𑍍𑌞𑌾𑌸𑍍𑌯𑌸𑌿 | அறிவாயோ |
| 𑌤𑌤𑍍 | அதை |
| 𑌶𑍃𑌣𑍁 | கேள். |

கிருஷ்ணசுவாமி சொல்வது, ஓ! பார்த்தா! என்னிடத்தில் மனதை வைத்து, யோகத்தைச் செய்கிறவனும், என்னையே சரணமடைந்தவனு யி மிருந்துகொண்டு, பூர்ணனுயிருக்கிற என்னை யெவ்விதமாய் சமுசயமன்றி யறிவாயோ அதைச் சொல்லுகிறேன் கேள்.

(ஸ்ரீ) இதுவரையில் ஆத்ம தத்துவத்தைச்சொல்லி இனியுபாசிக்க யோக்கியமான ரூபத்தைச் சொல்லப்போகிருர்.

(ரா) முதலாறு அத்தியாயங்களால், பரமாத்மாவாகிய நாரா யணனை யடைவதற்குக் காரணமாகிய உபாசனையைச் சொல்லுவதின் பொருட்டு, தன்னுடைய (ஜீவனுடைய) ஆத்ம சுவரூப நிச்சயத்துடன்

* (ஶ௦) (ஸ்ரீ) சகல விபூதி, பலம், சக்தி, ஐசுவரியம் முதலிய குணசம் பன்னராயிருக்கிற.

கூடிய கருமாநுஷ்டானஞ் சொல்லப்பட்டது. இதுமுதல் ஆறு அத்தியாயங்களால், பரமாத்ம சுவரூபமும், பரமாத்மாவை யடைகிறதற்குக் காரணமாகிய உபாசனையென்று சொல்லப்படுகிற பக்தியும், சொல்லப்படும்.

இந்த ஏழாவதத்தியாயத்தில், பரமாத்ம சுவரூப நிச்சயமும், பிரகிருதியினால் பரமாத்ம சுவரூபமானது ஜீவனுக்கு மறைபட்டிருக்கிற விதமும், பிரகிருதியைப் போக்கடித்துக் கொள்ளுவதற்குச் செய்யவேண்டிய சரணாகதியின் விவரமும், சரணாகதி செய்யப்பட்டவர்களுக்குள் பேதமும், ஞானம் சிரேஷ்டமென்பதும் சொல்லப்படுகின்றன.

இந்த சுலோகத்தி னர்த்தமாவது - மய்யாஸக்தமநா꞉=என்னை யெதிர்பார்த்தும், என்னிடத்தில் பிரியம்வைத்தும், என்னுடைய சுவரூபம், குணம், செய்கை, மகிமை, இவைகளி லெப்பவும் பற்றியுமிருக்கிற மனதையுடையவனையும், மதா³ஶ்ரய꞉ = என்னையே ஆதாரமா யுடையவனையும், யோக³ம் = என்விஷயமான யோகத்தை, யுஞ்ஜந் = ஆரம்பஞ் செய்கிறவனையுமிருக்கிற நீ, அஸம்ஶயம் = சமுசயமில்லாமல், ஸமக்³ரம் = பூர்ணமாயிருக்கிற, மாம் = என்னை, யதா² = எப்படி, ஜ்ஞாஸ்யஸி = அறிவையோ, தச்ச்²ருணு = அதைக்கேள்.

(ஶ) (ஸ்ரீ,வி) மய்யாஸக்தமநா꞉ = என்னிடத்தில் பிரீதிவைத்த மனதை யுடையவும், மதா³ஶ்ரய꞉ = "பகவானே என்னைக்கொண்டு சகலத்தையும் செய்விக்கிறார். எனக்கு அவரோ சரணமடையத் தகுந்தவர் சகலத்திற்கும் கர்த்தா அவரோ" என்கிற நிச்சயமுடையவும், யோக³ம் யுஞ்ஜந் = யோகத்தில் பிரவேசிக்கிறவனும் (மற்றதில் வித்தியாசமில்லை.) (க)

---

உ. ஜ்ஞாநம் தே(அ)ஹம் ஸவிஜ்ஞாநமித³ம் வக்ஷ்யாம்யஶேஷத꞉।
யஜ்ஜ்ஞாத்வா நேஹ பூ⁴யோ(அ)ந்யஜ்ஜ்ஞாதவ்யமவஶிஷ்யதே॥

| | |
|---|---|
| யத் | எதை |
| ஜ்ஞாத்வா | அறிந்து |
| இஹ* | இதில் (மோக்ஷமார்க்கத்தில்) |
| பூ⁴ய꞉ | மறுபடியும் |
| அந்யத் | வேறொன்று |
| ஜ்ஞாதவ்யம் | தெரியவேண்டியதாய் |
| நாவஶிஷ்யதே | மிச்சமிருக்கமாட்டாதோ |

---

* (ரா) மயி = என்னிடத்தில்.

| | |
|---|---|
| 𑌸𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌂* | அநுபவஞானத்தோடுகூடின |
| 𑌇𑌦𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 † | இந்தஞானத்தை |
| 𑌅𑌶𑍇𑌷𑌤𑌃 | குறைவன்றியில் |
| 𑌅𑌹𑌂 | நான் |
| 𑌤𑍇 | உனக்கு |
| 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 | சொல்லுகிறேன். |

எதையறிந்து, மோக்ஷமார்க்கத்தில் மறுபடி வேறொன்று தெரிய வேண்டியதாய் மிச்சமிருக்கமாட்டாதோ, அநுபவஞானத்தோடு கூடின அந்த ஞானத்தைக் குறைவன்றி நானுனக்குச் சொல்லுகிறேன். (௨)

---

௩. 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌣𑌾𑌂 𑌸𑌹𑌸𑍍𑌰𑍇𑌷𑍁 𑌕𑌶𑍍𑌚𑌿𑌦𑍍𑌯𑌤𑌤𑌿 𑌸𑌿𑌦𑍍𑌧𑌯𑍇।
𑌯𑌤𑌤𑌾𑌮𑌪𑌿 𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌨𑌾𑌂 𑌕𑌶𑍍𑌚𑌿𑌨𑍍𑌮𑌾𑌂 𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌤𑌃॥

| | |
|---|---|
| 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌣𑌾𑌂‡ | மனிதர்களுடைய (மனிதர்களுக்குள்ளே) |
| 𑌸𑌹𑌸𑍍𑌰𑍇𑌷𑍁§ | அநேகர்களில் (ஆயிரத்தில்) |
| 𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍 | ஒருவன் |
| 𑌸𑌿𑌦𑍍𑌧𑌯𑍇 | ஞானமடையும் பொருட்டு |
| 𑌯𑌤𑌤𑌿 | முயற்சிசெய்கிறான் |
| 𑌯𑌤𑌤𑌾𑌮𑍍 | முயற்சிசெய்கிற |
| 𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌨𑌾𑌂 | ஞானிகளுடைய (ஞானிகளுக்குள்ளே) |
| (𑌸𑌹𑌸𑍍𑌰𑍇𑌷𑍁) | அநேகர்களில் (ஆயிரத்தில்) |
| 𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍 | ஒருவன் |
| 𑌮𑌾𑌂 | என்னை |
| 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌤𑌃 | உண்மையாய் |
| 𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 | அறிகிறான். |

அநேக மனிதர்களில் ஒருவன், ஞானமடையும் பொருட்டு, முயற்சி செய்கிறான். முயற்சிசெய்கிற அநேக ஞானிகளுக்குள்ளே ஒருவ னென்னை யுண்மையா யறிகிறான். (௩)

---

* (ரா) ஜீவஜடங்களுக்கு விலக்ஷணமான பகவானுடைய மஹிமைகளையும், குணதிசயங்களையும் அறிகிற ஞானத்தோடு கூடின. (ஶ) (ஸ்ரீ,வி) பகவானுடைய விசேஷமாகாத்மிய ஞானத்தோடு கூடின.

† (ரா) பகவத் ஸ்வரூபஞானம். (ஶ) என் விஷயமான ஞானம். (ஸ்ரீ,வி) சாமான்னிய மாகாத்மியஞானம்.

‡ - § (ரா) சாஸ்திராதிகாரிகளான ஆயிரம் பெயர்களில்.

ச. பூமிராபோநலோ வாயு꞉ கம் மநோ புத்திரேவ ச।
அஹங்கார இதீயம் மே பிந்நா ப்ரக்ருதிரஷ்டதா॥

| | |
|---|---|
| மே | என்னுடைய |
| இயம் ப்ரக்ருதிரேவ | (சக்தியான) இந்தமாயைதானே |
| பூமி꞉* | பூமி |
| ஆப꞉† | ஜலம் |
| அநல꞉‡ | அக்கினி |
| வாயு꞉§ | காற்று |
| கம்¶ | ஆகாசம் |
| மந꞉‖ | மனது |
| புத்தி꞉+ | புத்தி |
| அஹங்கார꞉÷ | அகங்காரம் |
| இதி அஷ்டதா × | இப்படி யெட்டுவிதமாய் |
| பிந்நா | பிரிந்திருக்கிறது. |

* ¶ (ஸ்ரீ) பூமி, ஜலம், அக்கினி, காற்று ஆகாசம், இந்த பூதங்களுடைய சூட்சுமமாகிய தன்மாத்திரைகள், அல்லது ஸ்தூலசூட்சும பூதங்கள். (ஶாம்) பூத தன்மாத்திரைகள். ஸ்தூலமல்ல.

‖ (ஶாம்) (ஸ்ரீ) மனதுக்குக்காரணமான அகங்காரதத்துவம். (ஸ்ரீ) அல்லது பிரதானம். (ரா) மனது முதலிய இந்திரியங்கள்.

+ (ஶாம்) அகங்கார தத்வத்திற்குக் காரணமான மகத்தத்துவம். (ஸ்ரீ) (ரா) மகத்தத்துவம்.

÷ (ஶாம்) அவித்தையுடன் கூடிய அவ்வியக்தம். (ஸ்ரீ) அவித்தை அல்லது அகங்காரமும், இந்திரியங்களும். (ம) (மீ,வி) அகங்கார தத்துவமும் மகத்தத்துவமும்; அகங்காரதத்துவத்தில் மகத்தத்துவம் அடங்கியேயிருக்கிறதினால், மகத்தத்துவம் பிரத்தியேகமாய்ச் சொல்லப்படவில்லை.

× (ஸ்வா) இதில் பிரகிருதி (தத்துவம்) எட்டுவிதமென்று சொல்லப்பட்டிருக்கிறது. சில புராணங்களில், தத்துவங்கள் கஎ - என்றும், உ௩ - என்றும், உச - என்றும், ௩௬-என்றும், ௬௬-என்றும் இப்படிப் பலவிதங்களாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆனால், அப்படிச்சொன்னது பிசகானதென்றெண்ண விடமில்லை. ஏனென்றால், இந்த சுலோகத்தின் அர்த்தத்திலேயே (ஸ்ரீ) சொல்லியிருக்கிறபடிக்கு இதின் க௩ - வது அத்தியாயம், ரு - வது சுலோகத்தில் சொல்லப்பட்டிருக்கிற உச - தத்துவங்களைச் சுருக்கி இதில் எட்டாகச் சொல்லப்பட்டதுபோல், சுருக்கியும் விவகரித்தும் சொல்வதினால் புராணுதிகளில் அப்படி வித்தியாசம்தோற்றப்படுகிறது. இந்த பூததத்துவங்களினுற்பத்திக்கிரமத்தைக் குறித்து, விஷ்ணுபுராணம் முதலா

என்னுடைய பிரகிருதியே பூமி, ஜலம், அக்கினி, காற்று, ஆகாசம், மனசு, புத்தி, அகங்காரம், இப்படி எட்டுவிதமாய்ப் பிரிந்திருக்கிறது. (௪)

---

௫. அபரேயமிதஸ்த்வந்யாம் ப்ரக்ருதிம்வித்திமேபராம்।
ஜீவபூதாம்மஹாபாஹோ யயேதம்தார்யதேஜகத்॥

| | |
|---|---|
| மஹாபாஹோ | ஓ! புஜபலமுள்ளவனே! |
| இயம் | இது (மேற்குறித்த எட்டுவிதமான பிரகிருதி) |
| அபரா | நிகிருஷ்டமானது (தாழ்ந்தது) |

---

வது அம்சம், உ - வது அத்தியாயத்திலும், பாகவதம் உ - வது ஸ்கந்தம் ௫ - வது அத்தியாயத்திலும் சொல்லப்பட்டிருக்கிறதானது, சுருக்கமாய் அடியில் விவரிக்கப்படுகிறது. அவ்வியக்தம், பிரதானம், மூலப்பிரகிருதி என்கிற பெயர்களாற் சொல்லப்படுவதாகிய மாயையிலிருந்து, சத்தவ, ரஜஸ், தமஸ்களாகியவைகூம்மியரூபமான மகத்தத்துவமுண்டாயிற்று. அந்த மகத்தத்துவத்திலிருந்து, வைகாரிகம், தைஜஸம், பூதாதி என்ற மூன்று விதமான அகங்காரத்துவம் பிறந்தது. வைகாரிக அகங்காரமானது சாத்துவிகமென்றும், தைஜஸ அகங்காரமானது இராஜஸமென்றும், பூதாதி அகங்காரமானது தாமஸமென்றும் சொல்லப்படுகின்றன. பூதாதியென்று சொல்லப்படுகிற தாமஸாகாரம் விகாரப்பட்டு சப்ததன்மாத்திரையை யுண்டாக்கிற்று. அந்தச் சப்ததன்மாத்திரையிலிருந்து ஆகாசமுண்டாயிற்று. அந்த ஆகாசத்திற்குச் சப்தமே குணமாகவாயிற்று. அந்த ஆகாசம் விகாரப்பட்டு ஸ்பரிசதன்மாத்திரையை யுண்டாக்கிற்று. அந்த ஸ்பரிசத்திலிருந்து வாயுவுண்டாயிற்று. அந்தவாயுவுக்கு சப்தம் ஸ்பரிசமிரண்டும் குணங்களாயின. அந்தவாயு விகாரப்பட்டு ரூபதன்மாத்திரையை யுண்டாக்கிற்று. ரூபத்திலிருந்து, தேஜஸ் (அக்கினி) உண்டாயிற்று. தேஜஸுக்கு ரூபம், ஸ்பரிசம், சப்தம், இம்மூன்றும் குணங்களாயின. தேஜஸ் விகாரப்பட்டு, இரஸதன்மாத்திரையை யுண்டாக்கிற்று. இந்த இரஸத்திலிருந்து அப்பு (ஜலம்) உண்டாயிற்று. அந்த அப்புவுக்கு இரஸம், ரூபம், ஸ்பரிசம், சப்தம், இந்நான்கும் குணங்களாயின. அந்த அப்பு விகாரப்பட்டு, கந்ததன்மாத்திரையை யுண்டாக்கிற்று. அந்தக் கந்தத்திலிருந்து பிருதிவி (பூமி) உண்டாயிற்று. பிருதிவிக்கு கந்தம், இரஸம், ரூபம், ஸ்பரிசம், சப்தம் இவ்வைந்து குணங்களாயின. ஆனால், ஆகாசத்திற்கு சப்தமும், வாயுவுக்கு ஸ்பரிசமும், தேஜஸுக்கு ரூபமும், அப்புக்கு இரசமும், பிருதிவிக்கு கந்தமும் பிரதானகுணமாம். சப்தாதி தன்மாத்திரைகள் அந்தந்த பூதங்களின் சூக்ஷ்மமென்று சொல்லப்படும்.

மேற்சொன்ன வைகாரிகமென்கிற சாத்துவிகாகங்காரத்திலிருந்து மனதும், அதின் அபிமானி தேவதையான சந்திரனுமுண்டானார்கள். அப்படியே திக்குகள், வாயு, சூரியன், வருணன், அசுவநிதேவதைகள், அக்கினி, இந்திரன், உபேந்திரன், மித்திரன், பிரஜாபதி, இந்தப் பத்து அபிமானதேவதைகளுண்டானார்கள்.

தைஜசமென்கிற இராஜஸாகங்காரத்திலிருந்து ஞானேந்திரியங்கள் ஐந்தும், கருமேந்திரியங்கள் ஐந்து முண்டாயின. மேற்கண்ட பத்து தேவதைகளும் பத்து இந்திரியங்களுக்கு அபிமானதேவதைகளானார்கள். அப்படியே ஞானசக்தியான புத்தியும், கிரியாசக்தியான பிராணனும், தைஜஸாகங்காரத்திலிருந்துண்டாயின.

| | |
|---|---|
| 𑌇𑌤𑌸𑍍𑌤𑍁 | இதைப்பார்க்கிலும் |
| 𑌅𑌨𑍍𑌯𑌾𑌂 | வேறானதும் |
| 𑌯𑌯𑌾 | எந்தப்பிரகிருதியினாலே |
| 𑌇𑌦𑌂 𑌜𑌗𑌤𑍍 | இந்தப்பிரபஞ்சமானது |
| 𑌧𑌾𑌰𑍍𑌯𑌤𑍇 | தரிக்க அல்லது தாங்கப்பட்டிருக்கிறதோ |
| 𑌤𑌾𑌂 | அப்படிப்பட்டதும் |
| ஜீவ𑌭𑍂𑌤𑌾𑌂 | ஜீவசுவரூபமானதும் |
| 𑌮𑍇 | என்னுடைய ஆத்மசுவரூபமான அல்லது என்னுடைய அதீன மானதுமான |
| 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 | பிரகிருதியை |
| 𑌪𑌰𑌾𑌂 | சிரேஷ்டமென்று |
| 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 | அறி. |

ஓ! புஜபலமுடையவனே, (அர்சுன) மேற்குறித்த எட்டுவிதமான பிரகிருதி நிகிருஷ்டமானது. இதைப்பார்க்கிலும் வேறானதும், எந்தப் பிரகிருதியினாலே இந்தப்பிரபஞ்சமானது தரிக்கப்பட்டிருக்கிறதோ அப்படிப்பட்டதும், ஜீவசுவரூபமானதும் (பிராணனைத் தரிக்கிறதற்கு ஏதுவானதும்) என்னுடைய சுவரூபமான (அம்சபூதமான) துமான அந்தப்பிரகிருதியை சிரேஷ்டமென்று அறி. *

(ஶம்) (ரா) என்னுடைய ஜடப்பிரகிருதியை என்னுடையசேதன பிரகிருதியானது தரித்துக்கொண்டிருக்கிறது.

(உ) (மீ,வி) சேதனபிரகிருதியான இலக்ஷ்மியினாலே ஜடப்பிரகிருதியான இந்தப் பிரபஞ்சமானது தரிக்கப்பட்டிருக்கிறது. பிராணங்களை தரிக்கிறதினாலும், எப்போதும், எவ்விடத்திலும் வியாபித்திருக்கிறதினாலும், இந்த இலக்ஷ்மி ஜீவபூதமென்று சொல்லப்பட்டாள். (௫)

---

௬. 𑌏𑌤𑌦𑍍𑌯𑍋𑌨𑍀𑌨𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑍀𑌤𑍍𑌯𑍁𑌪𑌧𑌾𑌰𑌯 ।
𑌅𑌹𑌂 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌸𑍍𑌯 𑌜𑌗𑌤𑌃 𑌪𑍍𑌰𑌭𑌵𑌃 𑌪𑍍𑌰𑌲𑌯𑌸𑍍𑌤𑌥𑌾 ॥

| | |
|---|---|
| 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 | சகலமான |
| 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 | பூதங்களை |
| 𑌏𑌤𑌦𑍍𑌯𑍋𑌨𑍀𑌨𑌿 𑌇𑌤𑌿 | இவ் விருவகையான பிரகிருதியினாலே யுண்டானவைகளாக |
| 𑌉𑌪𑌧𑌾𑌰𑌯 | தெரிந்துகொள் |
| 𑌤𑌥𑌾 | அவைகளின்மூலமாய் |

* (ஸூ) அத் - ௬ - ௬. ௬, அத் - ௧௫, ௬ - ௬, பார்க்க.

| | |
|---|---|
| க்ருத்ஸ்நஸ்ய ஜகத: | சகலமானஜகத்திற்கு |
| ப்ரபவ: | உத்பத்திகாரணமும் |
| ப்ரலய: | லயத்திற்குக்காரணமும் |
| அஹம் | நானே. |

சகலபூதங்களையும், இந்த (ஜட, சேதன) இருவகைப் பிரகிருதியினாலே யுண்டானவைகளாகத் தெரிந்துகொள். அவைகளின் மூலமாய் சகல ஜகத்திற்கும்; உற்பத்தி லயங்களுக்குக்காரணம் நானே. ✻ (சு)

---

எ. மத்த: பரதரம் நாந்யத் கிஞ்சிதஸ்தி தநஞ்ஜய।
மயி ஸர்வமிதம் ப்ரோதம் ஸூத்ரே மணிகணா இவ॥

| | |
|---|---|
| தநஞ்ஜய | ஓ! தனத்தைஜயித்தவனே! |
| மத்த: | என்னைப்பார்க்கிலும் |
| பரதரம் | மகாசிரேஷ்டமானது |
| அந்யத் | வேறே |
| கிஞ்சித் | ஒன்றும் |
| நாஸ்தி | கிடையாது |
| ஸூத்ரே | நூற்சரட்டில் |
| மணிகணா இவ | மணிகளைப்போல |
| மயி | என்னிடத்தில் |
| இதம் ஸர்வம் | இந்தச் சகலப்பிரபஞ்சமும் |
| ப்ரோதம் | கோர்க்கப்பட் டிருக்கிறது. (ஆசிரயித்துக் கொண்டிருக்கிறது.) |

ஓ! அர்சுந! என்னைவிட சிரேஷ்டமானது, வேறே யாதொன்றுங் கிடையாது. ஆனால், காணப்படுகிற பிரபஞ்சமெல்லாம், நூலில் மணிகள் கோர்க்கப்பட்டிருப்பதுபோல, என்னிடத்தில் கோர்க்கப்பட்டிருக்கின்றன.

(ஸா) "மகாசிரேஷ்டமானது" எப்படி யென்றால், பரமாத்மா ஜட சேதனங்களுக்கு † சேஷியாயும், அவைகளுக்குக் காரணமாயு

---

✻ (ஸ்வா) அத் - கங, சு - உஎ பார்க்க.

† (ஸ்வா) சேஷி என்பது எப்படியென்றால், ஜீவன் சேஷி. அவனுக்குத் தேகேந்திரியங்களும், சப்தாதிவிஷயங்களும், மற்றுமுள்ள வஸ்துக்களும், போக்கிய வஸ்துக்களாயிருப்பதால், இவைகள் சேஷம். இப்படிப்போலவே, பரமாத்மாசேஷி. ஜீவனும், மற்ற சகல அசேதனப்பிரபஞ்சமும், பரமாத்மாவுக்கு போக்கியமானதால், அந்தச் சேதனசேதனங்கள் சேஷம்.

மிருக்கிறதினுலேயும், ஞானம், சக்தி, பலம், முதலியகுணங்களுடன் கூடியிருக்கிறதினுலேயும், சிரேஷ்டமாகச் சொல்லப்பட்டது. “நூலில் மணிகள்போல் என்னிடத்தில் சகலப் பிரபஞ்சமும் கோர்க்கப்பட்டிருக்கிறது.” எப்படியென்றால், காரியகாரண அவஸ்தைகளோடுகூடியிருக்கிற இந்த ஜடசேதன ரூபமான சகலப்பிரபஞ்சமும் எனக்கு சரீரம். சகலத்திற்கும் ஆத்மாவான (சரீரியான) என்னிடத்தில் சகலப் பிரபஞ்சமும் ஆசிரயித்திருக்கிறதென்பது தாத்பரியம். இந்த அர்த்தமானது, “യസ്യ പൃഥിവീ ശരീരം। യസ്യാത്മാ ശരീരം। ഏഷ സർവഭൂതാന്തരാത്മാ। അപഹതപാപ്മാ ദിവ്യോ ദേവ ഏകോ നാരായണ ഇതി” இந்த சுருதிவாக்கியங்களிலும் சொல்லப்பட்டிருக்கிறது. (எ)

---

அ. രസോഽഹമപ്സു കൌന്തേയ പ്രഭാസ്മി ശശിസൂര്യയോഃ।
പ്രണവഃ സർവവേദേഷു ശബ്ദഃ ഖേ പൌരുഷം നൃഷു॥

| | |
|---|---|
| കൌന്തേയ | ஓ! குந்திபுத்திரா! |
| അപ്സു | ஜலங்களில் |
| രസഃ | உருசியும் |
| ശശിസൂര്യയോഃ | சந்திரசூரியர்களிடத்திலே |
| പ്രഭാ | காந்தி அல்லது ஒளியும் |
| സർവവേദേഷു | சகலவேதங்களுக்குள்ளே |
| പ്രണവഃ | பிரணவமென்கிற ஓங்காரமும் |
| ഖേ | ஆகாசத்தில் |
| ശബ്ദഃ | சத்தமும் |
| നൃഷു | மனிதர்களுக்குள்ளே |
| പൌരുഷം | மானிடத்தன்மை அல்லது புருஷசுவபாவமும் |
| അഹം അസ്മി | நானகவிருக்கிறேன். |

ஓ! குந்திபுத்திரா! ஜலங்களில் ருசியும், சந்திர சூரியர்களிடத்தில் ஒளியும், சகலவேதங்களில் பிரணவமும், ஆகாசத்தில் சத்தமும், மனிதர்களிடத்தில் மானிடத்தன்மையும் நானே.

(ஸூ) இதுமுதல் கக - வது வரையிலுள்ள சுலோகங்களுக்கு வியாக்கியானம், கக-வது சுலோகத்தி னடியில் காண்க. (அ)

---

கூ. പുണ്യോ ഗന്ധഃ പൃഥിവ്യാം ച തേജശ്ചാസ്മി വിഭാവസൌ।
ജീവനം സർവഭൂതേഷു തപശ്ചാസ്മി തപസ്വിഷു॥

| | |
|---|---|
| ப்ருதிவ்யாம் | பூமியில் |
| புண்ய꞉ ; கந்த꞉ | நல்லவாசனையும் |
| விபாவஸௌ | அக்கினியிடத்தில் |
| தேஜ꞉ | பிரகாசமும் |
| அஸ்மி | நானாக இருக்கிறேன் |
| ஸர்வபூதேஷு | சகலப்பிராணிகளிடத்திலேயும் |
| ஜீவநம் | ஆயுசு அல்லது பிராணனைத் தரிப்பதும் |
| தபஸ்விஷு | தபசுசெய்கிறவர்களிடத்தில் |
| தப꞉ | தபசும் |
| அஸ்மி | நானாக இருக்கிறேன். |

பூமியில் நல்லவாசனையும், அக்கினியின் பிரகாசமும், பிராணிகளின் ஆயுசும், தபசு செய்கிறவர்களின் தபசும், நானே. (௯)

---

௰. பீஜம்மாம்ஸர்வபூதாநாம் வித்தி பார்த்த ஸநாதநம்।
புத்திர்புத்திமதாமஸ்மி தேஜஸ்தேஜஸ்விநாமஹம்॥

| | |
|---|---|
| ஹே பார்த்த | ஓ! குந்திபுத்திரா! |
| ஸநாதநம் | நித்தியனை |
| மாம் | என்னை |
| ஸர்வபூதாநாம் | சகலபூதங்களுக்கும் |
| பீஜம் | வித்தாக |
| வித்தி | அறி |
| புத்திமதாம் | புத்திசாலிகளுடைய |
| புத்தி꞉ | நிச்சயஞானமும் |
| தேஜஸ்விநாம் | தேஜஸ்விகளுடைய |
| தேஜ꞉ * | தேஜஸும் |
| அஹம் ; அஸ்மி | நானாகவிருக்கிறேன். |

ஓ! குந்திபுத்திரா! நித்தியனைஎன்னைச்சகல பூதங்களுக்கும் விதையாகவறி. புத்திசாலிகளுடைய நிச்சய ஞானமும், தேஜஸ்விகளுடைய தேஜஸும் நானே. (௰)

---

௧௧. பலம்பலவதாஞ்சாஹம் காமராகவிவர்ஜிதம்।
தர்மாவிருத்தோ பூதேஷு காமோஸ்மி பரதர்ஷப॥

* (தே꞉) (ஸ்ரீ) ப்ராகல்ப்யம் = மனோதைரியம்.

| | |
|---|---|
| பரதர்ஷப | ஓ! பாரதகுல சிரேஷ்டனே! |
| பலவதாம் | பலவான்களுடைய |
| காமராகவிவர்ஜிதம் | பிரியமும், அபேக்ஷையுமற்ற |
| பலம் | பலமும் (தேகவலிமை) |
| பூதேஷு | பிராணிகளுடைய |
| தர்மாவிருத்த: | தருமத்திற்குவிரோதமில்லாத |
| காம: | ஆசையும் |
| அஹம் அஸ்மி | நானாகவிருக்கிறேன். |

ஓ! பாரதகுல சிரேஷ்டனே! பலவான்களுடைய பிரியமும் அபேக்ஷையு மற்ற தேகபலமும், பிராணிகளுடைய தருமத்திற்கு விரோத மில்லாத ஆசையும் நானே.

(இந்த அத்தியாயம், அ-வது சுலோகம் முதல், இந்த - கக - வது சுலோகம் வரையிலுள்ள சுலோகங்களில் சொல்லப்பட்டிருக்கிற "ஜலத்திலுள்ள இரஸம்" முதல் "தருமத்திற்கு விரோத மில்லாத ஆசை" என்பது வரையிலுள்ள இரஸம் முதலியவைகள் நானேயென்று பகவான் சொன்னதின் தாத்பரியமும், சில பதங்களுக்குத் தாத்பரியமும், பாஷியக்காரர்களும், வியாக்கியாதாக்களும் சொல்லியிருக்கிறபடி அடியில் விவரிக்கப்படுகிறது.)

(ஸம்) எ - வது சுலோகத்தில், நூலில் மணிபோல பிரபஞ்சம் என்னிடத்தில் கோர்க்கப்பட்டிருக்கிறதேன்று சொல்லப்பட்ட தல்லவா? அதெப்படி யென்பது அ - முதல் கக - வரையிலுள்ள சுலோகங்களினால் விவகரிக்கப்படுகிறது. ஜலத்தில் இரஸாம்சமெதுவோ அது என்னுடைய சுவரூபம். அந்த ரஸமான என்னுடைய சுவரூபமாகிற நூலில் மணியாகிற ஜலமானது கோர்க்கப்பட்டிருக்கிறது. ஆகையால், இரஸமே நானென்று சொல்லப்பட்டது. மற்ற சந்திரசூரியர் முதலிய விஷயங்களிலும், இதுபோலவே அர்த்தங் கிரகிக்கவேண்டியது.

"புண்யோகந்த:" நற்கெந்தமென்று சொல்லப்பட்டிருக்கிறது. துர்க்கெந்தத்தில் ஈசுவராம்சமில்லையோ வென்றால், இல்லையென்று சொல்லும்பொருட்டு இவ்விடத்தில், "புண்ணியகெந்தம்" என்று சொன்னதாக தாத்பரியமல்ல. பூமியிலும் மற்ற வஸ்துக்களிலு முள்ளவைகளெல்லாம் நற்கெந்தமே. ஆனால், மற்றதத்துவங்களுடைய சேர்க்கையினால், நற்கெந்தம் துர்க்கெந்தமாகிறதே யன்றியில், சுவபாவமல்ல. அதெப்படியென்றால், சுத்தமும், ஞானப்பிரகாசமுமுள்ள ஜீவசுவரூபமானது, அவித்தையினுடைய சம்பந்தத்தால், அசுத்தத்தையும், அக்ஞானத்தையு மடைந் திருக்கிறதுபோல.

காமஃ = அடைப்படாத வஸ்துக்களை யடையவேண்டு மென்கிற விருப்பம். ராகஃ = தானபேக்ஷித்து, அதினால் கிடைத்த வஸ்துக்களிடத்தில் பிரியம். யதூராவிரூஐஃகாமஃ = தேகசம்ரக்ஷணத்திற்காகவே அன்னபானாதிகளிலிச்சை.

(ஸ்ரீ) இரஸத்தின் சூக்ஷ்மபாகம் என்னுடைய அம்சம். அந்த அம்சமானது விபூதி யென்றுஞ் சொல்லப்படும். அந்த என்னுடைய அம்சமாகிய இரஸத்திற்கு நானிருப்பிடமாகையால் "ஜலத்திலுள்ள இரஸம் நான்" என்று சொல்லப்பட்டது. மற்றவைகளு மிதேயர்த்தத்தில் கிரகிக்கப்படவேண்டும். ராகஃ = கிடைத்தது போதாது; பின்னும் வேண்டுமென்கிற அபேக்ஷை. (ஷமூஂஷமூ வதாஐஷ்லி என்று இவர்பாடம்.) யதூராவிரூஐஃ காமஃ = சுவஸ்திரி விஷயத்திலுண்டாகும் காமவிஷயத்திலுங்கூட தருமத்திற்கு விரோதமாயிருக்கக்கூடாது.

(ரா) இரஸமுதலியவைகள் என்னைவிட வேறானதாகிலும் அவைகள் என்னாலுண்டாக்கப்பட்டவைகள். என்னாலுண்டான வைகளாயும், என்னை ஆசிரயித்தவைகளாயும், என்னுடைய சரீரமாயும், என்னுடைய சேஷபூதமாயும், நான் அவைகளுக்குச் சேஷியாயு மிருக்கிறதினால், அவைகள் நானென்று சொல்லப்பட்டன. மற்றவைகளு மிப்படியே கிரகிக்கத் தக்கவைகள்.

(ஃ) சகல வஸ்துக்களும் ஈசுவராதீனமாயும், ஈசுவரனை ஆதாரமாயுடையனவாயு மிருக்கிறதினால், எந்தவஸ்து எவனுடைய அதீனமாயிருக்கிறதோ, அந்தவஸ்து அவனாகவே சொல்லப்படுகிறது. ஆகையால், தன்னுடைய அதீனமானது இரஸம் முதலியவைகள், தானே யென்று பகவான் சொன்னார்.

ஜலம் முதலியவைகளில், இரஸம் முதலியவைகள் எப்படி சிரேஷ்டமோ, அப்படியே, நான் எல்லாவிடத்திலும் சிரேஷ்டனாகவிருக்கிறேன்.

(மீ,வி) ஜலத்திலுள்ள இரஸம் முதலானவைகளை, அதிலிருக்கும் பரமாத்மாவுக்குப்பிரதிமையாகப் பாவித்து, உபாசிக்கிற ஞானிகளுண்டு. ஆகையால், இரஸ முதலியவை நானே என்று பகவான் அபேதமாகச் சொன்னார்.

"நாஜெ௱ஹெதூ஡ஷாமெஷ" முதலிய சுருதி வாக்கியங்களில் உபாஸனாஸ்தலங்களில், பிரதிமையான நாமங்களையும் உபாசிக்கப்பட்டபிரம்மத்தையும் அபேதமாய்ச் சொல்லியிருக்கிறதுபோல இவ்விடத்திலும், அபேதமாய்ச் சொன்னதாக வறியவேண்டியது. அல்லது, ஜல முதலானவைகளின் அபிமானி தேவதைகளிடத்தி லுள்ள

பரமாத்ம சுவரூபத்தை உபாசனைசெய்யும்பொருட்டு, அபேதமாய்ச் சொன்னதாகவாவது கிரகிக்கவேண்டியது. (௧௧)

---

௧௨. யெசைவஸாத்விகாபாவா ராஜஸாஸ்தாமஸாஶ்சயெ।
மத்தஏவேதிதாந்வித்தி நத்வஹம்தேஷுதெமயி॥

ஸாத்விகா:*  சத்துவகுணத்தினலேயேயுண்டான
பாவா:  வஸ்துக்கள்
யெ  எவையோ
ராஜஸா:†  இரஜோகுணத்திலுண்டானவும்
தாமஸா:‡  தமோகுணத்திலுண்டானவும்
(பாவா:)  வஸ்துக்கள்
யெ  எவையோ
தாந்  அவைகளை
மத்தஏவேதி  என்னாலேயேயுண்டானவையென்று
வித்தி  அறி
தேஷு§  அவைகளில்
அஹம்¶  நான்
ந||  இல்லை
தெ+  அவைகள்
மயி÷  என்னிடத்தில்
(ஸந்தி)  இருக்கின்றன.

சத்துவ, ரஜஸ் தமோகுணங்களினு லுண்டான வஸ்துக்களெவையோ, அவைக ளென்னாலேயே யுண்டானவை யென்றும், நான் அவைகளி லில்லை, என்னிடத்தில் அவைக ளிருக்கின்றன வென்றும் அறி. (௧௨)

---

* (ஶம்) (ஸ்ரீ) சத்துவகுணத்தினுலுண்டான ஶமதமாதிகள்.

† (ஶம்) (ஸ்ரீ) இரஜோகுணத்தினுலுண்டான ஹர்ஷதர்பாதிகள்.

‡ (ஶம்) (ஸ்ரீ) தமோகுணத்தினுலுண்டான ஶோக, மோஹாதிகள்.

§ || (ஶம்) (ஸ்ரீ) அவைகளுக்கு நான் (அதீனம்) சுவாதீனமன்று. (ரா) (ம) (தீ,வி) என்னுடைய இருப்பானது அவைகளுடைய அதீனமல்ல.

+ ÷ (ஶம்) (ஸ்ரீ) (தீ,வி) அவைகள் எனக்கு அதீனமானவைகள். (ரா) அவைகள் எனக்கு சரீரமாய் என்னை யாசிரயித்திருக்கின்றன. இதின் தாத்பரிய மென்னவென்முல், ஆத்மாவன்றியில் சரீரமிருக்கமாட்டாது. ஆத்மா தேகத்தை விட்டுமிருப்பான். அவன் தேகத்தினுல், போகவிஷயமாய் உபகாரமடைகிருன். எனக்கோ, தேகத்தினுலாகவேண்டிய தொன்றுமில்லை. லீலையின்பொருட்டு தேகத்தை கிரகித்திருக்கிறேன் என்பதே.

௧௩. 𑌤𑍍𑌰𑌿𑌭𑌿𑌰𑍍𑌗𑍁𑌣𑌮𑌯𑍈𑌰𑍍𑌭𑌾𑌵𑍈𑌰𑍇𑌭𑌿𑌃 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌜𑌗𑌤𑍍।
𑌮𑍋𑌹𑌿𑌤𑌂 𑌨𑌾𑌭𑌿𑌜𑌾𑌨𑌾𑌤𑌿 𑌮𑌾𑌮𑍇𑌭𑍍𑌯𑌃 𑌪𑌰𑌮𑌵𑍍𑌯𑌯𑌮𑍍॥

| | |
|---|---|
| 𑌤𑍍𑌰𑌿𑌭𑌿𑌃 * | மூன்றுவிதமான |
| 𑌗𑍁𑌣𑌮𑌯𑍈𑌃 | குணவிகாரங்களாயுள்ள |
| 𑌏𑌭𑌿𑌃 𑌭𑌾𑌵𑍈𑌃 | இந்தவஸ்துக்களினலே |
| 𑌮𑍋𑌹𑌿𑌤𑌂 † | மோகத்தையடைந்த |
| 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌇𑌦𑌂 𑌜𑌗𑌤𑍍 | இந்த சகலமான (பிராணிகளும்) பிரபஞ்சமும் |
| 𑌏𑌭𑍍𑌯𑌃 | இவைகளினின்றும் |
| 𑌪𑌰𑌂 ‡ | வேறாயிருக்கிற |
| 𑌅𑌵𑍍𑌯𑌯𑌂 | நாசமற்ற |
| 𑌮𑌾𑌂 § | என்னை |
| 𑌨𑌾𑌭𑌿𑌜𑌾𑌨𑌾𑌤𑌿 | அறிகிறதில்லை. |

(சத்துவ - ரஜஸ் - தமஸ்) குணவிகாரங்களாயும், மூன்றுவிதங்களாயுமுள்ள இந்த (சமதமாதி, இராகதுவேஷாதி, சோகமோகாதி சுவரூபமாயிருக்கிற) வஸ்துக்களினலே, மோகத்தையுடைய சகலப்பிராணிகளும், இந்தவஸ்துக்களி னின்றும் வேறாயிருக்கிற நாசமற்ற என்னை யறிகிறதில்லை.

(ஸா) "வஸ்துக்களி னின்றும் வேறாயிருக்கிற" "நாசமற்ற" என்கிற இந்த விசேஷணங்களினல், காணப்படுகிற சகலப்பிரபஞ்ச சுவரூபத்தைவிட பிரம்மசுவரூபம் அந்நியமானதென்றும், காணப்படுகிற இந்த சகல பிரபஞ்சமும் நாசத்தை யடையுமென்றும், பிரம்மசுவரூபமானது நாசமடையாததென்றும், இந்த சகல வஸ்துக்களிலு மிருக்கிற பிரம்மம், " 𑌸𑌾𑌕𑍍𑌷𑍀 𑌚𑍇𑌤𑌾 𑌕𑍇𑌵𑌲𑍋 𑌨𑌿𑌰𑍍𑌗𑍁𑌣𑌶𑍍𑌚 " என்கிற வேதவாக்கியப்படிக்கு, அந்த வஸ்துக்களில் ஓட்டாமல் சாக்ஷியாய் மட்டு மிரு

* (ஶா) தேகம், இந்திரியங்கள், போக்கிய சுவரூபமானவஸ்துக்கள் என மூன்று விதம்.

† (ஶ) (ஸ்ரீ,வி) குண சுவரூபத்துடனிருக்கிற ஜீவர்கள் தங்களைப்போல் பரமாத்மாவும், குணசுவரூபத்துடனிருப்பதாக மோகத்தை யுடையவர்களா யிருக்கிறார்கள்.

‡ (ஶா) சிரேஷ்டமாயிருக்கிற.

§ (ஶ) (ஸ்ரீ,வி) அப்பிராகிருத தேகத்தையுடைய என்னை.

க்கிறதேயன்றி, வஸ்து சுவரூபமாயில்லாமையால் வஸ்து நாசத்தினால் பிரம்மத்திற்கு நாசமில்லை யென்றும் ஏற்படுகிறது. (கங)

---

கச. ദൈവീ ഹ്യേഷാ ഗുണമയീ മമ മായാ ദുരത്യയാ।
മാമേവ യേ പ്രപദ്യന്തേ മായാമേതാം തരന്തി തേ॥

| | |
|---|---|
| ദൈവീ | தெய்வசம்பந்தமான |
| ഗുണമയീ | குணத்திரயரூபமான (முக்குணரூபமான) |
| ഏഷാ | இந்த |
| മമ | என்னுடைய |
| മായാ | பிரகிருதியானது |
| ദുരത്യയാ | தாண்டக்கூடாதது |
| മാമേവ* | என்னையே |
| യേ | எவர்கள் |
| പ്രപദ്യന്തേ | சரணமடைகிறார்களோ |
| തേ | அவர்கள் |
| ഏതാം മായാം | இந்தமாயையை |
| തരന്തി | தாண்டுகிறார்கள். (நிவர்த்தித்துக் கொள்ளுகிறார்கள்.) |

தெய்வசம்பந்தமானதும், குணத்திரய மானதுமாகிய இந்த வென்னுடைய மாயையைத் தாண்டுவதரிது. என்னையே எவர்கள் சரணமடைகிறார்களோ, அவர்க ளிந்தமாயையைத் தாண்டுகிறார்கள்.

(ரா) மாயையயானது முக்குணங்களுடன் கூடினது. அது ஈசுவரனால் சிருஷ்டிக்கப்பட்டது. அது (மாயை) மித்தை (பொய்) என்பது சரியல்ல. அது சத்தியமானது. எப்படியென்றால், மந்திரங்கள், (வெடி) மருந்துகள், முதலியவைகளில், பலவிசித்திரங்களைக் காண்பிக்கிறவர்கள் மாயாவிகளென்று சொல்லப்படுகிறார்கள். இப்படிப்பட்ட இந்திரஜாலம் முதலிய வித்தைகளினால் காணப்படும் விசித்திரங்கள் மித்தையானாலும், அந்த இந்திரஜாலம் முதலிய வித்தைகளில் காணப்படுகிற விசித்திரங்கள் எதினாலோ, அந்தக் கருவியாகிய மந்திராதிகள் மித்தையல்ல. இந்தச்சத்தியமாகிய மாயையைத் தான், "മായാന്തു പ്രകൃതിം വിദ്യാൽ" என்கிற சுருதியில் ஈசுவரமாயை என்று சொல்லியிருக்கிறது. இதெப்படி உலகத்தை மோகிப்பிக்கிறதென்றால், ஈசுவர சுவரூபத்தை மறைத்து, விஷயங்களில் பற்றுதலை யுண்டாக்கிறது. இது அந்த மாயையினுடைய சக்தி. இந்தச் சக்தியை

---

* (ருo) சகலதருமங்களையும் விட்டுவிட்டு ஆத்மாவாயிருக்கிற என்னையே.

யும், அந்த மாயையும், சத்தியமானவையேயன்றி மித்தையல்ல. இந்த மாயையைத் தாண்டுகிறதென்றால், மாயையைப் போக்கடித்துக் கொள்ளுவதல்ல. மாயையினா லுண்டாகும் துன்பங்களை நிவர்த்தி செய்து கொள்ளுவதே.

(மீ,வி) மாயையென்பவள் விஷ்ணுவினுடைய ஒரு ஸ்திரீயான துர்க்கை. இவள் உலகத்தை மோகிப்பிக்கிற சக்தியை யுடையவள். அவளாலுண்டாகும் துன்பத்தை நிவர்த்தித்துக் கொள்ளுவது கடினமென்பது தாத்பரியம்.

(ஷா) "என்னையே சரணமடைந்தவர்கள்" என்பது பிரபஞ்சவாசனையற்று, பிரம்மத்தைத்தவிர வேறொன்றையும் சிந்திக்காமலிருக்கிற பிரம்ம நிஷ்டர்களென்று தாத்பரியம். (௧௪)

---

௧௫. 𑌨 𑌮𑌾𑌂 𑌦𑍁𑌷𑍍𑌕𑍃𑌤𑌿𑌨𑍋 𑌮𑍂𑌢𑌾𑌃 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌨𑌰𑌾𑌧𑌮𑌾𑌃।
𑌮𑌾𑌯𑌯𑌾𑌪𑌹𑍃𑌤𑌜𑍍𑌞𑌾𑌨𑌾 𑌆𑌸𑍁𑌰𑌂 𑌭𑌾𑌵𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃॥

| | |
|---|---|
| 𑌦𑍁𑌷𑍍𑌕𑍃𑌤𑌿𑌨𑌃 | பாபிகளாயும் |
| 𑌮𑍂𑌢𑌾𑌃 | மூடர்களாயும் |
| 𑌮𑌾𑌯𑌯𑌾 𑌅𑌪𑌹𑍃𑌤𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌃 | மாயையினா லபகரிக்கப்பட்ட ஞானமுள்ளவர்களாயும் (ஆத்மஞான மற்றவர்கள்) |
| 𑌆𑌸𑍁𑌰𑌂 𑌭𑌾𑌵𑌂 * | அசுரசுவபாவத்தை |
| 𑌆𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃 | ஆசிரயித்திருக்கிறவர்களாயும் |
| 𑌨𑌰𑌾𑌧𑌮𑌾𑌃 | மனிதரில் கடையோராயு மிருக்கிறவர்கள் |
| 𑌮𑌾𑌂 | என்னை |
| 𑌨 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 | சரணமடைகிறதில்லை. (உபாசிக்கிற தில்லை.) |

பாபிகளாயும், மூடர்களாயும், ஆத்மசுவரூப ஞானமற்றவர்களாயும், அசுரசுவபாவத்தை யுடையவர்களாயும், மனிதரில் கடையோராயு மிருக்கிறவர்கள், என்னை சரணமடைகிறதில்லை.

---

* (ஶா) பரஹிம்சையும், அசத்தியமுமுள்ள சுவபாவத்தை. (ஸ்ரீ) "𑌦𑌮𑍍𑌭𑍋 𑌦𑌰𑍍𑌪𑍋𑌽𑌭𑌿𑌮𑌾𑌨𑌶𑍍𑌚" என்கிற (இதின், ௧௬ - வது அத்தியாயம், ௪ - வது) சுலோகத்தில் சொல்லியிருக்கிற சுபாவத்தை. (மீ,வி) தேகேந்திரிய பிராணன்களை இரக்ஷிக்கிறதில் திருஷ்டியுள்ளவர்கள் அசுரர்கள். அவ்வித சுவபாவமுள்ளவர்கள் அசுரசுவபாவமுள்ளவர்கள்.

(ரா) பாபிகள் நால்வகைப்பட்டவர்கள். அவர்களாவென்றால்:—

க. மூடர்கள்.—ஒன்றை மற்றொன்றாக கிரகிக்கிற விபரீதஞான முள்ளவர்கள். அதாவது ஈசுவரனுக்கே சேஷமாயிருக்கவே ண்டிய (ஜீவ) ஆத்மாவையும், போகத்திற் குபயோகமான வுலகத்திலுள்ள வஸ்துக்களேயும், தன்னுடைய சேஷமாக நினைக்கிறவர்கள்.

உ. நராதமர்கள்.—சாமான்னியமாய் ஈசுவர சுவரூப ஞானமிருந்தாலும் அதிலேயே பிடிமானம் வைக்க யோக்கியதை யில்லாதவர்கள்.

ங. மாயையினால் அபகரிக்கப்பட்ட ஞானமுடையவர்கள்.— ஈசுவரனுடைய சுவரூபஞானம், ஐசுவரியம் மகிமை முதலிய ஞானம், இவைகளே குதர்க்கங்களினால் அசம்பாவிதமென்றெண்ணுகிறவர்கள்.

ச. அசுர சுவபாவமுடையவர்கள்.—ஈசுவரனுடைய மகிமை ஐசுவரியம் முதலியவைகளேத் தெரிந்தும், அந்த மகிமை முதலியவைகளேத் தூஷித்து ஈசுவரனிடத்தில் துவேஷஞ் செய்கிறவர்கள்.

இப்படி முறையே ஒருவரைவிட ஒருவர் அதிகபாபிகளென்று தாத்பரியம். (கரு)

---

கசா. சதுர்விதா பஜந்தே மாம் ஜநா: ஸுக்ருதிநோऽர்ஜுந।
ஆர்தோ ஜிஜ்ஞாஸுரர்தார்தீ ஜ்ஞாநீ ச பரதர்ஷப॥

| | |
|---|---|
| ஹே பரதர்ஷப<br>அர்ஜுந | ஓ! பரதகுலசிரேஷ்டனை அர்சுன! |
| ஆர்த:* | வியாதிமுதலியதுன்பத்தையடைந்தவன் |
| ஜிஜ்ஞாஸு:† | சுவரூபஞானமடையவிச்சையுள்ளவன் |
| அர்தார்தீ‡ | பொருளேக்கோருகிறவன் |
| ஜ்ஞாநீ§ | பிரம்மஞானி |

---

* (ரா) போக்கடித்துக்கொண்ட ஐசுவரியத்தை மறுபடியுங் கோருகிறவன்.
† (ரா) தாரித்திரியத்திலிருந்து பாக்கியத்தைக் கோருகிறவன்.
(இவ்விருவரும் ஓரே அதிகாரிகள்.)

‡ (ரா) பிரகிருதி விமுக்தமான தன்னுடைய சுவரூபத்தை யடைய விச்சிக்கிறவன்.

§ (ரா) இந்த அத்தியாயம், ரு-வது சுலோகம் முதல் சொல்லிவந்திருக்கிறபடி பகவானுக்குச் சேஷமாயிருக்கிற தன்னுடைய ஆத்ம சுவரூபத்தைத் தெரி

| | |
|---|---|
| (ஜாதி) வதுர்விதா: | } இந்நான்குவித |
| ஸுக்ருதிந: | புண்ணியசாலிகளான |
| ஜநா: | ஜனங்கள் |
| மாம் | என்னை |
| பஜந்தே | பஜிக்கிறார்கள். |

பரதகுல சிரேஷ்டனான ஓ! அர்சுன! வியாதி முதலிய துன்பத்தை யடைந்தவன், (ஆத்ம) சுவரூபஞானமடைய விச்சையுள்ளவன், பொருளைக் கோருகிறவன், பிரம்மஞானி, இப்படிப்பட்ட நான்குவித புண்ணியசாலிகளான ஜனங்கள் என்னைப் பஜிக்கிறார்கள். (௧௬)

---

௧௭. தேஷாம் ஜ்ஞாநீ நித்யயுக்த ஏகபக்திர்விஶிஷ்யதே।
ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோऽத்யர்த்தமஹம் ஸ ச மம ப்ரிய:॥

| | |
|---|---|
| தேஷாம் | இவர்களில் (மேல்சொன்னநால்வர்களில்) |
| நித்யயுக்த: * ஏகபக்தி: † | { நிலையானயோகத்தையும், என் ஒருவனிடத்திலேயே பக்தியையுமுடைய |
| ஜ்ஞாநீ | ஞானியானவன் |
| விஶிஷ்யதே | சிரேஷ்டனாகிறான் |
| ஜ்ஞாநிந: | அந்தஞானிக்கு |
| அஹம் | நான் |
| அத்யர்த்தம் ‡ | மிகவும் |
| ப்ரிய: | பிரியமுள்ளவன் |
| ஸ: | அவனும் |
| மம | எனக்கு |
| ப்ரியோ ஹி | பிரியமுள்ளவனே. |

---

ந்து, தன்னாலடையவேண்டியவர் பரமாத்மாவென்று அறிகிறவன். (ஞா) இவன் ஆத்மஞானி. ௬-வது அத்தியாயம், ௪௬-வது சுலோகத்தில் சொன்ன ஞானியல்ல. மூன்று அதிகாரிகளென்பது (ரா) அபிப்பிராயம்.

* (ரா) ஒருகாரியமாகிறவனாயில் என்னிடத்தில் மற்றவர்கள் பக்திசெய்வார்கள். இவன் நித்தியமாய் ஆசிரயித்துக்கொண்டிருக்கிறவன்.

† (ஸ்ரீ) பரமாத்மாவைத்தவிர வேறே வஸ்து இல்லாததினால் ஒரே பக்தியுடையவன். (ரா) என்னிடத்திலேயே பக்தியுடையவன்.

‡ (ஸ்ரீ) விஷயங்களைவிட, அதாவது, உலகத்திலுள்ள வஸ்துக்களைப் பார்க்கிலும், அஹம்—நான், ப்ரிய:—இஷ்டன், என்றும் அர்த்தமாகலாம்.

இவர்களில் நிலையான யோகத்தையும், என் ஒருவனிடத்திலேயே பக்தியையு முடைய ஞானியானவன் சிரேஷ்டனுகிருன். அந்த ஞானிக்கு நான் மிகவும் பிரியமுள்ளவன். அவனும் எனக்குப் பிரியமுள்ளவனே. (கஎ)

---

கஅ. உதா³ரா: ஸர்வ ஏவைதே ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்।
ஆஸ்தி²த: ஸ ஹி யுக்தாத்மா மாமேவாநுத்தமாம் க³திம்॥

| | |
|---|---|
| ஏதே<br>ஸர்வே | இந்தசகலரும் (மேல்சொன்னநால்வரும்) |
| உதா³ரா:<br>ஏவ | சிலாக்கியமானவர்களே! |
| ஜ்ஞாநீ து | ஞானியோ |
| ஆத்மைவ | நானே |
| (இதி) | என்பதாக |
| மே | என்னுடைய |
| மதம் | நிச்சயம் (அபிப்பிராயம்) |
| ஹி | ஏனென்றால் |
| ஸ: | அவன் |
| யுக்தாத்மா | என்னிடத்தில் மனதை நிலையாய் நிறுத்தினவன் |
| மாமேவ | என்னையே |
| அநுத்தமாம் | சர்வோத்தமமான |
| க³திம் | கதியாக |
| ஆஸ்தி²த: | நம்பியிருக்கிறான். |

மேலே சொன்ன நால்வரும் சிலாக்கியமானவர்களே! (அவர்களுக்குள்ளே) ஞானியோ, நானே என்பது என்னுடைய நிச்சயம். ஏனென்றால், அவன் (அந்தஞானி) என்னிடத்தில் மனதை நிலையாய் நிறுத்தினவனும், என்னையே சர்வோத்தமமான கதியாக நம்பினவனுகவு மிருக்கிறுன்.

(ரா) என்னையன்றியில் அந்த ஞானிக்குப் பிராண தாரணையில்லையாகையால், எனக்கு அந்த ஞானியைத்தவிர ஆத்மதாரணையில்லை என்பது தாற்பரியம்.

(ஸ்ரீ,வி) ஆத்மைவ = நானே யென்றதினுல், அதிகப் பிரியத்தினுல், ஒருவனைக்குறித்துப் பேசும்போது, "அவன் நானே" யென்று சொல்லப் படுகிறதுபோல, பகவான் ஞானிகளிடத்திலுள்ள பிரியத்தினுல், "நானே" யென்று சொன்னதாக கிரகிக்கவேண்டும். அல்லது

ஆஸ்தித:=முயற்சிசெய்து, மாமேவ=என்னையே, அநுத்தமாம் கதிம்=அடைந்திருக்கிறான். என்றாவது அர்த்தஞ்செய்யலாம் (கஅ)

---

கக. பஹூநாம் ஜந்மநாமந்தே ஜ்ஞாநவாந்மாம் ப்ரபத்யதே।
வாஸுதேவஸ்ஸர்வமிதி ஸமஹாத்மா ஸுதுர்லப:॥

| | |
|---|---|
| பஹூநாம் ஜந்மநாம் அந்தே | வெகு ஜன்மங்களெடுத்தபின் |
| ஸர்வம் | சகலமும் |
| வாஸுதேவ இதி | வாசுதேவ சுவரூபமென்று |
| ஜ்ஞாநவாந் | ஞானமடைந்தவனாய் |
| மாம் | என்னை |
| ப்ரபத்யதே | பஜிக்கிறான் |
| ஸமஹாத்மா | அப்படிப்பட்ட நல்லமனதை யுடையவன் |
| ஸுதுர்லப: | மிகவும் துர்லபமானவன். |

வெகு ஜன்மங்க ளெடுத்தபின், சகலமும் வாசுதேவ சுவரூபமென்று ஞானமடைந்து என்னை பஜிக்கிறான். அப்படிப்பட்ட நல்ல மனதையுடையவன் மிகவுமரிது. (இப்படிப்பட்டவன் கிடைப்பது அரிது என்பது கருத்து.)

(ரா) ஜ்ஞாநவாந்=வாசுதேவனுக்கு, "நான் சேஷபூதன் என்னுடைய ஸ்வரூபத்திதிருப்பு, பிரவிருத்தி, இவைகள் அவருடைய அதீனமானவை, அவர் சகல கல்யாணகுணங்களால் சிரேஷ்டர்" என்று ஞானமடைந்தவனாய், "வாஸுதேவஸ்ஸர்வமிதி = நானடையத் தகுந்த சிரேஷ்டமானவஸ்து வாசுதேவன்தான்" என்றும், "என்னை யடைவிப்பது மவர்தான்" என்றும், "என் மனதிலுள்ள சகல கோரிக்கைகளும் அவர்தான்" என்றும், மாம் ப்ரபத்யதே=என்னை யுபாசிக்கிறான். இந்த அர்த்தத்திற்கு ஆதாரம், இந்த வத்தியாயம். ச - ரு - சு - எ - கஉ - கஎ - கஅ, சுலோகங்கள்.

(ம) வாஸுதேவஸ்ஸர்வமிதி = சகலமும் வாசுதேவாதீனம். (ஸ்ரீதர) சகலப் பிரபஞ்சத்தி னிருப்புமுதலானது வாசுதேவாதீனம். அல்லது, ஸர்வம்=பூர்ணமான வஸ்துவானது, வாஸுதேவ:=வாசுதேவனே.

(ஷா) சகலத்திலும் தான் வசிக்கிற படியினாலும், சகலத்தையும் தன்னிடத்தில் வசிக்கும்படி செய்வதினாலும், சகலத்தையும்

மறைக்கிறதினுலேயும் வாசு என்கிறபேயர்; மோக்ஷமடைய விரும்பும் முமுக்ஷுக்களாலே பிரார்த்திக்கப்படுகிறவனுயும், சர்வ சுவதந்தரனுயு மிருக்கிறதினுல் தேவனென்கிறபேயர்; ஆகையால். வாசுதேவன் என்று (ஶம்) ஸஹஸ்ர நாம பாஷியத்தில் அர்த்தஞ் செய்திருக்கிறுர். (கசு)

---

உ0. காமைஸ்தைஸ்தைர்ஹ்ருதஜ்ஞாநா꞉ ப்ரபத்³யந்தே(அ)ந்யதே³வதா꞉।
தம் தம் நியமமாஸ்தா²ய ப்ரக்ருத்யா நியதா꞉ ஸ்வயா॥

| | |
|---|---|
| ஸ்வயா | தங்களுடைய |
| ப்ரக்ருத்யா | சுவபாவத்தினுலே (பூர்வஜந்ம கருமவாசனையினுலே) |
| நியதா꞉ | ஏவப்பட்டவர்களாய் |
| தைஸ்தை꞉ | (எதெதுகளிலிச்சையோ) அந்தந்த |
| காமை꞉ | விஷயங்களினுலே |
| ஹ்ருதஜ்ஞாநா꞉* | ஞானமற்றிருக்கிறஜனங்கள் |
| தம்தம் நியமம் | அந்தந்தநியமத்தை |
| ஆஸ்தா²ய | ஆசிரயித்து |
| அந்யதே³வதா꞉† | இதரதேவதைகளை |
| ப்ரபத்³யந்தே | பஜிக்கிறுர்கள். |

தங்களுடைய பூர்வஜந்ம கருமவாசனையினுலே கட்டுப்பட்டும், எதெதுகளி லிச்சையோ, அந்தந்த விஷயங்களினுலே ஞானமற்று மிருக்கிற ஜனங்கள் (எந்தெந்த தேவதைகளைக்குறித்து என்னென்ன விரதாதிகளைச் செய்யவேண்டுமோ) அந்தந்த நியமங்களைச் செய்து இதர தேவதைகளைப் பஜிக்கிறுர்கள்.

(ஸ்வா) தேவதைகளைப் பஜிப்பதற்கு நியமத்தோடு கூடிய யக்ஞாதிகளைச் செய்யவேண்டியதல்லவா; அந்த யக்ஞாதிகளுக்கு, வேதத்தில் விதிக்கப்பட்ட நியமங்களி லற்பமாவது பிசகாமல் செய்யவேண்டியது. பிசகினுல் பலன் கெடுவது மாத்திரமல்ல, அதினுல் தோஷங்களு முண்டாகும். அந்த யக்ஞாதிகளுக்குப் பலனே அற்பமானது. ஈசுவரனைப் பஜிக்கிற விஷயத்தில், அப்படிப்பட்ட யாதொரு நியமமு மவசியமில்லை. இந்திரியங்கள், மனது இவைகளை விஷயங்களில் பிரவேசிக்கவொட்டாமல் தடுத்து ஈசுவரனிடத்தில் மனதைவைத்துத் தியான

---

* (ரா) என்னுடைய சுவரூப ஞானமற்றவர்கள்.

† (ஶம்) தன்னுடையஆத்ம சுவரூபியானபிரம்மத்தைவிட்டு இதர தேவதைகளை. (ஶ்ரீ) பூதப்பிரேத பிசாசம் முதலிய அற்பதேவதைகளை. (ரா) இந்திராதி தேவதைகள் என்னுடைய சரீரமென்று தெரியாமல் அவர்களை.

ஞ்செய்தல், பிரயோஜனகரமாயும், சுலபமானதாயு மிருக்கிறது. எப்படி சுலபமென்றால், யக்ஞாதிகளைச்செய்ய எவ்வளவு வஸ்துக்களும், மனுஷிய சகாயமும், திரவியங்களும் வேண்டுமோ, எவ்வளவு தேகப் பிரயாசையும், இந்திரியங்கள், மனது முதலியவைகளுக்கு வருத்தமு முண்டோ, அவ்வளவு வருத்தம் பிரம்மத்தியானத்திலில்லை. இதுவுமல்லாமல் பிரம்மத்தியானத்தைச் சொற்பஞ்செய்து விட்டுவிட்டாலும் செய்தவரையில் பலனுண்டேயன்றி தோஷமுண்டாகாது. (யோகப் பிரஷ்டன் விஷயத்தில், சு-வது அத்தியாயம், ௪௦-வது சுலோகம் முதல் ௪௪-வது சுலோகம்வரையில் பார்க்க.) பூர்ணமாய்த் தியானஞ்செய்தாலோ நாசமற்ற பலன் கிடைக்கும். (உ௦)

---

உக. யோயோயாம்யாம் தநும் பக்த꞉ ச்ரத்தயார்சிதுமிச்சதி।
தஸ்ய தஸ்யாசலாம் ச்ரத்தாம் தாமேவ விதகாம்யஹம்॥

| | |
|---|---|
| ய꞉ ய꞉ பக்த꞉ * | எந்தெந்தபக்தன் |
| யாம்யாம் தநும் | எந்தெந்த தேவசரீரத்தை |
| ச்ரத்தயா | விசுவாசத்துடனே |
| அர்சிதும் | பூஜிக்கிறதற்கு |
| இச்சதி | இச்சிக்கிறானோ |
| தஸ்ய தஸ்ய | அந்தந்த பக்தனுடைய |
| தாம் ச்ரத்தாம் | அந்த விசுவாசத்தை |
| அசலாமேவ | ஸ்திரமானதாகவே |
| அஹம் | நான் |
| விதகாமி | செய்கிறேன். |

எந்தெந்த பக்தன் எந்தெந்த தேவசரீரத்தை விசுவாசத்துடன் பூஜிக்கிறதற்கு இச்சிக்கிறானோ, அந்தந்த பக்தனுடைய அந்த விசுவாசத்தை ஸ்திரமா யிருக்கும்படியே நான் செய்கிறேன்.

(ரா) யாம்யாம் தநும்—என்னுடைய சரீரமாகிய எந்தெந்த இந்திராதி தேவதையை என்பது தாத்பரியம். ஏனென்றால், "யஸ்ய ஆத்மா சரீரம்" "யஸ்ய ப்ருதிவீ சரீரம்" முதலிய சுருதி வாக்கியங்களால் சகல

* (ரா) இந்திராதி தேவதைகள் என்னுடைய சரீரமென்று தெரியாத எந்தெந்த தேவதாபக்தன்.

மான தேவதைகளும் ஈசுவரனுடைய சரீரமென்று ஏற்படுகிறது. எந்த தேவதையைப் பூஜித்தாலும் ஈசுவரதேகத்தைப் பூஜித்ததாகவே யாகிறது அப்படிப் பூஜிப்பதை ஈசுவரன், தன்னைப் பூஜித்ததாகவே கிரகித்து அதற்குள்ள பலனைக் கொடுக்கிறார். ஆகையால் இப்படிப்பட்ட ஆராதனம் ஈசுவராராதனமே என்பது தாத்பரியம். (உக)

---

உஉ. 𑌸 𑌤𑌯𑌾 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾 𑌯𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌤𑌸𑍍𑌯𑌾𑌰𑌾𑌧𑌨𑌮𑍀𑌹𑌤𑍇।
𑌲𑌭𑌤𑍇 𑌚 𑌤𑌤𑌃 𑌕𑌾𑌮𑌾𑌨𑍍 𑌮𑌯𑍈𑌵 𑌵𑌿𑌹𑌿𑌤𑌾𑌨𑍍𑌹𑌿 𑌤𑌾𑌨𑍍॥

| | |
|---|---|
| 𑌸𑌃 | அவன் (மேல்சொன்னபக்தன்) |
| 𑌤𑌯𑌾 | அப்படிப்பட்ட (ஸ்திரப்படுத்தப்பட்ட) |
| 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾 | விசுவாசத்துடன் |
| 𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 | கூடினவனாய் |
| 𑌤𑌸𑍍𑌯 𑌆𑌰𑌾𑌧𑌨𑌮𑍍 | அந்த தேவதையுடைய ஆராதனத்தை |
| 𑌈𑌹𑌤𑍇 | செய்ய இச்சிக்கிறான் |
| 𑌮𑌯𑍈𑌵* | என்னாலேயே |
| 𑌵𑌿𑌹𑌿𑌤𑌾𑌨𑍍† | ஏற்படுத்தப்பட்ட |
| 𑌤𑌾𑌨𑍍 𑌕𑌾𑌮𑌾𑌨𑍍 | அந்த இஷ்டமான வஸ்துக்களை |
| 𑌤𑌤𑌃‡ | அந்த தேவதையினாலே |
| 𑌲𑌭𑌤𑍇 | அடைகிறான். |

மேல்சொன்ன பக்தன் ஸ்திரமான விசுவாசத்துடன் கூடினவனாயந்த தேவதையுடைய ஆராதனத்தைச்செய்ய இச்சிக்கிறான். என்னாலேயே ஏற்படுத்தப்பட்ட அந்த இச்சித்த விஷயங்களாகிய பலன்களை அந்த தேவதையினாலேயே யடைகிறான். (என்றால், தேவதைகளைக் குறித்துச் செய்யு மாராதனைக்குப் பல னின்னதென்று என்னாலே யேற்படுத்தப்பட் டிருக்கிறது. அப்படி ஏற்படுத்தப்பட் டிருக்கிறதை, தேவதைகள் அந்த ஆராதனை செய்தவனுக்குக் கொடுக்கிறார்க ளென்பது கருத்து.)

(ரா) "𑌹𑌿𑌤𑌾𑌨𑍍 𑌕𑌾𑌮𑌾𑌨𑍍"—ஹிதமான காமங்களை (இஷ்டமான வஸ்துக்களை) என்று சிலர் அர்த்தஞ் செய்திருக்கிறார்கள். அது சரியல்ல. ஏனென்றால், காமம் ஒருவனுக்கும் ஹிதமானதல்ல. (உஉ)

---

* (ஸ்ரீ.வி.) தேவதைகளுக்குள்ளிருக்கிற என்னாலேயே.

† (ரா) கொடுக்கப்பட்ட.

‡ (ரா) என்னுடைய ஆராதனமானபடியினாலே.

௨௩. அந்தவத்து ஃபலம் தேஷாம் தத்பவத்யல்பமேதஸாம்|
தேவாந்தேவயஜோ யாந்தி மத்பக்தா யாந்தி மாமபி||

| | |
|---|---|
| தேவயஜ: | தேவதைகளைப் பூஜிக்கிறவர்கள் |
| தேவாந் | தேவதைகளை |
| யாந்தி | அடைகிறார்கள் |
| அல்பமேதஸாம்* | அற்ப புத்தியுள்ள |
| தேஷாம் | அவர்களுடைய |
| தத் ஃபலம் | அந்த தேவதா பூஜையினா லுண்டாகும் பலன் |
| அந்தவத்து† | முடிவையுடையதாகவே |
| பவதி | ஆகிறது |
| மத்பக்தா: | என்னுடைய பக்தர்களோ வென்றால் |
| மாம் | என்னை |
| யாந்தி | அடைகிறார்கள் |

தேவதைகளைப் (யக்ஞாதி கிரதுக்களினால்) பூஜிக்கிறவர்கள் தேவதைகளை யடைகிறார்கள். அற்ப புத்தியுள்ள அவர்களுடைய அந்த தேவதா பூஜையினால அடையப்படும்பலன் முடிவை யுடைய தாகவே ஆகிறது. என்னுடைய பக்தர்களோ வென்றால் (அவர்கள் நேராய் என்னையே பூஜிக்கிறபடியால்) என்னையே யடைகிறார்கள்.

(ஸ்ரீ,வி) மாமபி—என்னையும், யாந்தி= அடைகிறார்கள். என்றால் அந்தந்த தேவதைகளைக் கிரமக்கிரமமாயடைந்து கடைசியில் என்னையும அடைகிறார்க ளென்பது தாத்பரியம்.

(ஸ்வா) எந்தெந்த தேவதையைப் பூஜிக்கிறார்களோ அந்தந்த தேவதையின் லோகத்தையும், அந்தந்தலோகத்தின் சுகமெதுவோ அந்த சுகத்தையும் அடைகிறார்கள். அந்த லோகமும சுகமும் முடிவை யுடையன என்றால், சாசுவதமானவையல்ல. என்னை யடைதல் சாசுவதமான பலன் என்பது கருத்து. (௨௩)

---

* இந்திராதி தேவதைகள் பரமாத்மாவுக்குச்சரீரமெனகிற ஞானமில்லாமல அந்த தேவதைகளைப பூஜிக்கிறவாகள் அற்பபுத்தியுள்ளவாகள். (ஸ்ரீ,வி) அறப மானபலனில் புத்தியுள்ள.

† (ஸ்ரீ) தேவதைகளுக்கே முடிவுண்டாகையால் அவாகளை யடைந்தவாகளுக்கும் முடிவுண்டென்பது தாத்பரியம். (ரா) முடிவையுடையது, அல்லது அற்ப காலமுள்ளது.

உ௪. அவ்யக்தம் வ்யக்திமாபந்நம் மந்யந்தே மாமபுத்தய:।
பரம் பாவமஜாநந்தோ மமாவ்யயமநுத்தமம்॥ *

| | |
|---|---|
| அவ்யயம் | நாசமற்றவும் |
| அநுத்தமம் | சர்வோத்தமமும் |
| பரம் | உலக விலக்ஷணமுமான |
| மம பாவம் | என்னுடைய சுவரூபத்தை |
| அஜாநந்த: | அறியாத |
| அபுத்தய: | அவிவேகிகள் |
| அவ்யக்தம் | காணப்படாத |
| மாம் | என்னை |
| வ்யக்திம் ஆபந்நம் | காணப்படுதலை (மனுஷியாதி ரூபத்தை) அடைந்தவனாக |
| மந்யந்தே | நினைக்கிறார்கள். |

நாசமற்றவும் சர்வோத்தமமும் உலக விலக்ஷணமுமான என்னுடைய சுவரூபத்தை யறியாத அவிவேகிகள் காணப்படாத என்னை, மனுஷியாதி ரூபமாய்க் காணப்படுகிறவனாக நினைக்கிறார்கள்.

(ஶம்) அவ்யக்தம்=ஈசுவரனாயும், மாயையை சுவாதீனத்தில் வைத்திருக்கிறவனாயுமுள்ள, மாம் = என்னை, வ்யக்திமாபந்நம் = மாயைக்குட்பட்ட சாதாரண மனிதனாக, மந்யந்தே=எண்ணுகிறார்கள்.

(ஸ்ரீ) அவ்யக்தம்=பிரபஞ்சாதீதனாயும், மாம் = ஜகத் ரக்ஷணார்த்தம் லீலையினாலே பிரகாசிக்கிற பலவித ரூபமுடையவனாயும், சுத்த சத்துவ சுவரூபனாயு மிருக்கிற என்னை, வ்யக்திமாபந்நம் = கருமத்தினாலுண்டான பாஞ்சபௌதிக தேகத்தை யுடையவனாயும் தேவதைகளுக்குச்சமானனாயும், மந்யந்தே=நினைக்கிறார்கள்.

(ரா) என்னுடைய அநந்த கல்யாண குணங்களையும், சுவரூபத்தையும், லோகசம்ரக்ஷணார்த்தம் அவதாரஞ் செய்திருக்கிறேனென்பதையும் அறியாதவர்கள், உலகத்திலுள்ள இராஜகுமாரர்களில் ஒருவனாக என்னை யெண்ணுகிறார்கள்.

(ம) சச்சிதாநந்த தேகத்தையுடையவனான வென்னை அவிவேகிகள் குணத்திரயங்களினா லுண்டான தேகத்தை யுடையவனாக வெண்ணுகிறார்கள்.

(நீ,வி) அவ்யக்தம் = ஒருவருக்குந்தெரியாத மகாமகிமையோடு கூடிய, மாம் = என்னை, வ்யக்திமாபந்நம் = இப்போது நான் பிரகாசிப்பி

* (வா) அத் - ௬, சு - ௧௧ பார்க்க.

விக்கிற அற்பமான மகிமையை மாத்திரந்தானுடையவனென்று, மூடாலோகா꞉=நினைக்கிறார்கள். (௨௪)

---

௨௫. நாஹம் ப்ரகாஶஸ்ஸர்வஸ்ய யோகமாயாஸமாவ்ருத꞉।
மூடோயம் நாபிஜாநாதி லோகோ மாமஜமவ்யயம்॥

| | |
|---|---|
| யோகமாயாஸமாவ்ருத꞉* | யோகமாயையினாலே மறைக்கப்பட்டிருக்கிற |
| அஹம் | நான் |
| ஸர்வஸ்ய | எல்லாருக்கும் |
| ப்ரகாஶ꞉ ந | பிரத்தியக்ஷனன்று (காணப்படுகிறதில்லை) |
| (அதஏவ) | ஆனபடியினாலேதான் |
| மூட꞉ | விவேகமற்ற |
| அயம் லோக꞉ | இந்தஜனங்கள் |
| மாம் | என்னை |
| அஜம் | பிறப்பற்றவனாகவும் |
| அவ்யயம் | நாசமற்றவனாகவும் |
| நாபிஜாநாதி | அறிகிறதில்லை. |

யோகமாயையினால் மறைக்கப்பட்டிருக்கிற நான் எல்லாருக்குங் காணப்படுகிறதில்லை. ஆகையால், அவிவேகிகளான விந்தஜனங்கள் என்னைப் பிறப்பற்றவனாகவும், நாசமற்றவனாகவும், அறிகிறதில்லை. (௨௫)

---

௨௬. வேதாஹம் ஸமதீதாநி வர்த்தமாநாநி சார்ஜுந।
பவிஷ்யாணி ச பூதாநி மாம் து வேத ந கஶ்சந॥

| | |
|---|---|
| ஹே அர்ஜுந | ஓ! அர்சுனா! |
| ஸமதீதாநி | சென்றுபோனவும் (அழிந்துபோன) |

---

* (ஸ்ரீ) மனிதனாலுண்டாக்கத்தக்கதல்லாததும், இன்னவிதமாயுண்டாக்கலா மென்று மனிதன் மனதினால் நினைக்கத்தகாததுமாகிய விசித்திரமான சிருஷ்டியாதி சக்தி. (ம॰) குணங்களுடைய சேர்க்கையாகிய மாயை. அல்லது ஸம்வலிதாவஸ்தாநம் என்பது யோகம். அதினாலுண்டானது மாயை. (ரா) ஜீவனையடைத்தகுந்த மனுஷிய தேகமடைவது யோகம். அதுதான் மாயை. இப்போது நானந்த தேகத்தை யடைந்திருக்கிறதினால், யோகமாயையினால் மறைந்திருக்கிறேனென்பது தாத்பரியம். (ஶ) (ஸ்ரீ,வி) யோகசாமர்த்தியமாகிய வோருபாயம். அதினாலும் மாயையினாலும், ஸமாவ்ருத꞉ = சூழப்பட்டிருக்கிறேன்.

| | |
|---|---|
| 𑌵𑌰𑍍𑌤𑌮𑌾𑌨𑌾𑌨𑌿 | இருக்கிறவும் (இப்போது காணப்படுகிற) |
| 𑌭𑌵𑌿𑌷𑍍𑌯𑌾𑌣𑌿 | வரப்போகிறவும் (உண்டாகப்போகிற) |
| 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 | பிரபஞ்சங்களை |
| 𑌅𑌹𑌂 | நான் |
| 𑌵𑍇𑌦 | அறிவேன் |
| 𑌮𑌾𑌂𑌤𑍁 | என்னையோ |
| 𑌕𑌶𑍍𑌚𑌨 | ஒருவனும் |
| 𑌨𑌵𑍇𑌦* | அறியமாட்டான். |

ஓ! அர்சுன! சென்றுபோன, இருக்கிற, வரப்போகிற பிரபஞ்சங்களை நானறிவேன். என்னையோ ஒருவனு மறியமாட்டான்.

(ஶ°) என்னை யொருவனு மறியமாட்டானென்றால், என்னைச் சரணமாக வடைந்திருக்கிற பக்தன்தவிர, மற்றவர்கள் அறியமாட்டார்களென்பது தாத்பரியம். (௨௬)

---

௨௭. 𑌇𑌚𑍍𑌛𑌾𑌦𑍍𑌵𑍇𑌷𑌸𑌮𑍁𑌤𑍍𑌥𑍇𑌨 𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑌮𑍋𑌹𑍇𑌨 𑌭𑌾𑌰𑌤।
𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌿𑌸𑌮𑍍𑌮𑍋𑌹𑌂 𑌸𑌰𑍍𑌗𑍇𑌯𑌾𑌨𑍍𑌤𑌿𑌪𑌰𑌨𑍍𑌤𑌪॥

| | |
|---|---|
| 𑌹𑍇 𑌭𑌾𑌰𑌤 | ஓ! பரதகுலத்திற் பிறந்தவனே! |
| 𑌹𑍇 𑌪𑌰𑌨𑍍𑌤𑌪 | ஓ! சத்துருக்களைத் தபிப்பிப்பவனே! |
| 𑌸𑌰𑍍𑌗𑍇 | தேகத்தையடையும்போதே |
| 𑌇𑌚𑍍𑌛𑌾𑌦𑍍𑌵𑍇𑌷𑌸𑌮𑍁𑌤𑍍𑌥𑍇𑌨 | காமக்குரோதங்களினாலுண்டாயிருக்கிற |
| 𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑌮𑍋𑌹𑍇𑌨 | சுகதுக்கங்களினாலுண்டான அவிவேகத்தினாலே |
| 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 | சகலப்பிராணிகளும் |
| 𑌸𑌮𑍍𑌮𑍋𑌹𑌂 | விஷயாபிமானத்தை |
| 𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 | அடைகிறார்கள். |

ஓ! பரதகுலத்தில் பிறந்தவனே! சத்துருக்களைத் தபிப்பிப்பவனே! தேகத்தை யடையும்போதே காமக்குரோதங்களினா லுண்டானதாகிய சுகதுக்கங்களினா லுண்டாயிருக்கிற அவிவேகத்தினாலே சகலப் பிராணிகளும் விஷயாபிமானத்தை யடைகிறார்கள்.

(ஸ்வா) விஷயாபிமானமென்பது உலகத்திலுள்ள ரூப, ரஸ, கெந்தாதி ஸ்வரூபமான வஸ்துக்களிலுண்டாகும் பற்றுதல். அப்படிப்பட்டப் பற்றுதலுக்குக் காரணம் சுகதுக்கங்கள். சுகதுக்கங்களுக்குக் காரணம் விருப்பு வெறுப்பு. இவைகள் தேகத்தை யடையும்போதே பூர்வஜந்ம

---

* (ரா) லோகோபகாரமாக கிருஷ்ணவதாரஞ் செய்திருக்கிறதாக வறியவில்லை. (ஆ) தன்சுவசக்தியினாலறியமாட்டான்.

கருமவாசனைக்குத் தகுந்தபடி யுண்டாகின்றன. ஆத்மாவுக்குச்சுகதுக்காதிகள் வாஸ்தவத்தில் சம்பந்தப்பட்டவையல்ல. (உஎ)

---

உஅ. யேஷாம் த்வந்தகதம் பாபம் ஜநாநாம் புண்யகர்மணாம்।
தே த்வந்த்வமோஹநிர்முக்தா பஜந்தே மாம் த்ருடவ்ரதா꞉॥

| | |
|---|---|
| புண்யகர்மணாம்* | புண்ணியசாலிகளான |
| யேஷாம் ஜநாநாம் | எந்தஜனங்களுடைய |
| பாபம் து | பாபமானது |
| அந்தகதம் | நசித்ததோ அல்லது நாசமடைந்ததோ |
| தே | அந்தஜனங்கள் |
| த்வந்த்வமோஹநிர்முக்தா꞉ | துவந்துவமோகத்திலிருந்து விடுபட்டு |
| த்ருடவ்ரதா꞉† | திருடமானவிரதத்தையுடையவர்களாய் |
| மாம் | என்னை |
| பஜந்தே | பஜிக்கிறார்கள். |

புண்ணியசாலிகளான எந்த ஜனங்களுடைய பாபமானது நசித்ததோ, அந்த ஜனங்கள் துவந்துவமோகத்திலிருந்து விடுபட்டு திருடமான விரதத்தை யுடையவர்களாய் என்னைப் பஜிக்கிறார்கள். (உஅ)

---

உகூ. ஜராமரணமோக்ஷாய மாமாஶ்ரித்ய யதந்தி யே।
தே ப்ரஹ்ம தத்விது꞉ க்ருத்ஸ்நமத்யாத்மம் கர்ம சாகிலம்॥

| | |
|---|---|
| யே | யார் |
| மாம் ஆஶ்ரித்ய | என்னை யாசிரயித்து |
| ஜராமரணமோக்ஷாய‡ | வார்த்தகத்தையும் (கிழத் தனம்) மரணத்தையும் போக்கடித்துக் கொள்ளும் பொருட்டு. |

---

* (பா) புண்யகர்மணா - என்றுபாடம்=புண்ணியகருமங்களால்.

† (ஶம்) பரமாத்மதத்துவநிச்சயமுடையவர்கள். (பா) திருடஸங்கற்பமுடையவர்கள்.

‡ (பா) பிரகிருதி விமுக்த ஆத்ம சுவரூபதரிசனத்தின் பொருட்டு. (இவன் தான் ஜிஜ்ஞாஸு) (ம) (ஸ்ரீ வி) பக்தர்களில் உத்தமன், மத்தியமன், அதமன் என மூன்றுவித பக்தர்களுண்டு. அவர்களில் உத்தமபக்தன் யாரென்றால், ஸ்ரீ நாராயணனுடைய சரணாரவிந்த பக்தியைத்தவிர, மோக்ஷமுதலியவொன்றிலும் அபேக்ஷையே

| | |
|---|---|
| யதந்தி | முயலுகிறார்களோ |
| தே | அவர்கள் |
| அகிலம் கர்ம ச | சகலகருமத்தையும் |
| க்ருத்ஸ்னம் | சகலவிதமான |
| அத்யாத்மம் | அத்தியாத்மத்தையும் |
| தத் ப்ரஹ்ம | அந்த பிரம்மத்தையும் |
| விது: | அறிகிறார்கள். |

யார் என்னை யாசிரயித்து, வார்த்தகத்தையும், மரணத்தையும், போக்கடித்துக் கொள்ளும் பொருட்டு முயலுகிறார்களோ, அவர்கள் சகல கருமத்தையும், சகலவித அத்தியாத்மத்தையும், அந்த பிரம்மத்தையும் அறிகிறார்கள். (உகூ)

---

௩௰. ஸாதிபூதாதிதைவம் மாம் ஸாதியஜ்ஞம் ச யே விது:।
ப்ரயாணகாலேऽபி ச மாம் தே விதுர்யுக்தசேதஸ:॥

| | |
|---|---|
| யே | எவர்கள் |
| ஸாதிபூதாதிதைவம் | அதிபூத அதிதெய்வங்களுடன் கூடினவனாகவும் |
| ஸாதியஜ்ஞம் | அதியக்ஞத்துடன் கூடினவனாகவும் |
| மாம் | என்னை |
| விது: | அறிகிறார்களோ |
| தே | அவர்கள் |
| ப்ரயாணகாலேऽபி | மரணகாலத்திலும் |
| யுக்தசேதஸ: | என்னிடத்தில் மனதைவைத்தவர்களாய் |
| மாம் | என்னை |
| விது: | அறிகிறார்கள். |

எவர்கள் அதிபூத, அதிதெய்வங்களுடன் கூடினவும், அதியக்ஞத்துடன் கூடினவுமான வென்னை யறிகிறார்களோ, அவர்கள் மரணகாலத்திலும், என்னிடத்தில் மனதை வைத்தவர்களாய், என்னை யறிகிறார்கள்.

(ரா) "ஜராமரணமோக்ஷாய = பிரகிருதி விமுக்த ஆத்மதரிசனத்தின்பொருட்டு" முயலுகிறவர்கள் என்று முந்திய சுலோகத்தில் சொ

---

யில்லாதவன். மத்தியம பக்தன் யாரென்றால், மோக்ஷாபேக்ஷை யுடையவன். அதம பக்தனென்றால், சுவர்க்காதிபலனை யபேக்ஷிப்பவன். இம்மூவரில் இவனை மத்தியம பக்தனாகச் சொல்லலாம்.

ல்லப்பட்டிருக்கிறவர்கள், கருமம், அத்தியாத்மம், பிரம்மம், இவைகளை யறிய முயலுகிறார்கள். சிலர் ஐசுவரியத்தை யடையும் பொருட்டு (ஸாதிபூதம்) ஸாதிபூதனும் (ஸாதிதைவம்) ஸாதிதெய்வனுமான என்னை அறியமுயலுகிறார்கள். இந்த இருவகையாரும், ஞானியும் (ஸாதியஜ்ஞம்) ஸாதியக்ஞமாகிய நாராயணனை யுபாசிக்கிறவர்களா யிருக்கிறார்கள். இம்மூவகையாரும் மரணகாலத்தில் எவ்விதமான வென்னுடைய ரூபத்தை யடைய விரும்புகிறார்களோ, அவ்விதமா யவரவர்கள் கோரும் ரூபத்தை யவரவர்கள் கோரியபடி யறிகிறார்கள். (பார்க்கிறார்கள்.)

(ஞா) முந்திய சுலோகத்திலு மிந்தசுலோகத்திலும் சொல்லப்பட்டிருக்கிற கருமம், அத்தியாத்மம், பிரம்மம், அதிபூதம், அதிதைவம், அதியக்ஞம், பிரயாணகாலம், இவைகள் இப்படிப்பட்டன வென்பது பகவானால் எட்டாவது அத்தியாயத்தில் விவரிக்கப்படுகிற தாகையால் அவைகளுக்கு அர்த்தம் இவ்விடத்தில் சொல்லப்படவில்லை. (௩௦)

இதி ஸ்ரீ ஹகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம்
யொகஶாஸ்த்ரெ ஸ்ரீக்ருஷ்ணார்ஜுநஸம்வாதெ
விஜ்ஞாநயொகொ நாம
ஸப்தமோऽத்யாயः.
ஸ்ரீ க்ருஷ்ணாயபரப்ரஹ்மணெநமঃ.
விக்ஞானயோகமென்கிற ஏழாவது அத்தியாயம்
முற்றிற்று.

---

𑌶𑍍𑌰𑍀𑌰𑌸𑍍𑌤𑍁.

𑌅𑌷𑍍𑌟𑌮𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃.

# எட்டாவது அத்தியாயம்.

---

𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚.

க. 𑌕𑌿𑌂 𑌤𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌕𑌿𑌮𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌂 𑌕𑌿𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌤𑍍𑌤𑌮।
𑌅𑌧𑌿𑌭𑍂𑌤𑌂 𑌚 𑌕𑌿𑌂 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌮𑌧𑌿𑌦𑍈𑌵𑌂 𑌕𑌿𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇॥

| | |
|---|---|
| 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚 | அர்சுனன்சொல்வது |
| 𑌹𑍇 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌤𑍍𑌤𑌮 | ஓ! புருஷர்களிலுத்தமனே! |
| 𑌤𑌤𑍍 | அந்த (முன்சொன்ன) |
| 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 | பிரம்மமென்பது |
| 𑌕𑌿𑌂 | யாது? |
| 𑌅𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌂 | அத்தியாத்மமென்பது |
| 𑌕𑌿𑌂 | யாது? |
| 𑌕𑌰𑍍𑌮 | கருமமென்பது |
| 𑌕𑌿𑌂 | யாது? |
| 𑌅𑌧𑌿𑌭𑍂𑌤𑌂 | அதிபூதமென்று |
| 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌂 𑌚 | சொல்லப்பட்டதும் |
| 𑌕𑌿𑌂 | யாது? |
| 𑌅𑌧𑌿𑌦𑍈𑌵𑌂 | அதிதெய்வமென்பது |
| 𑌕𑌿𑌂 | எதாக |
| 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 | சொல்லப்படுகிறது? |

அர்சுனன் சொல்வது. ஓ! புருஷோத்தமா! முன்சொன்ன பிரம்மமென்பதும், அத்தியாத்ம மென்பதும், கருமமென்பதும், அதிபூத மென்பதும், அதிதெய்வமென்பதும் யாது?

(ரா) (இந்த சுலோகமும், அடுத்த இரண்டாவது சுலோகமும் சேர்த்து பாஷியம் செய்யப்பட்டிருக்கிறது, எப்படி யென்றால்)

பிரகிருதி விமுக்தாத்ம தரிசனத்தின் பொருட்டு முயலுகிறவர்கள் அறியவேண்டிய பிரம்மம், அத்தியாத்மம், கருமம், இவைகள் எப்படிப்பட்டவை?

ஐசுவரியாதிகளைக் கோருகிறவர்கள் அறிய முயலுகிற அதிபூதம், அதிதெய்வம் எப்படிப்பட்டவை? (அத் - ௭, ௬ - ௩0 - ல் குறிக்

கப்பட்டிருக்கிற) மூவகையாரும் அறியவேண்டிய அதியக்ஞ சப்தத்திற்கு விஷயமானவர் யார்? அவர் சுவபாவ மெப்படிப்பட்டது? இம்மூவகையாராலும் மரணகாலத்தில் நீர் எப்படி யறியப்பட வேண்டியவர்? என்பது கேள்வியின் கருத்து. (௧)

---

௨. 𑌅𑌧𑌿𑌯𑌜𑍍𑌞𑌃 𑌕𑌥𑌂 𑌕𑍋𑌽𑌤𑍍𑌰 𑌦𑍇𑌹𑍇𑌽𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌮𑌧𑍁𑌸𑍂𑌦𑌨।
𑌪𑍍𑌰𑌯𑌾𑌣𑌕𑌾𑌲𑍇 𑌚 𑌕𑌥𑌂 𑌜𑍍𑌞𑍇𑌯𑍋𑌽𑌸𑌿 𑌨𑌿𑌯𑌤𑌾𑌤𑍍𑌮𑌭𑌿𑌃॥

| | |
|---|---|
| 𑌹𑍇 𑌮𑌧𑍁𑌸𑍂𑌦𑌨 | ஓ! மதுசூதன! |
| 𑌅𑌤𑍍𑌰 𑌅𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌦𑍇𑌹𑍇 | இந்தச்சரீரத்தில் |
| 𑌅𑌧𑌿𑌯𑌜𑍍𑌞𑌃 | அதியக்ஞன் (இருக்கிறவனும், ஏவுகிறவனும், பலனைக் கொடுப்பவனும்) |
| 𑌕𑌃 | யார்? |
| 𑌕𑌥𑌂 | எப்படிப்பட்டவர்? |
| 𑌪𑍍𑌰𑌯𑌾𑌣𑌕𑌾𑌲𑍇 𑌚 | மரணகாலத்தில் |
| 𑌨𑌿𑌯𑌤𑌾𑌤𑍍𑌮𑌭𑌿𑌃 | மனதையடக்கினவர்களாலே |
| 𑌕𑌥𑌂 | எப்படி |
| 𑌜𑍍𑌞𑍇𑌯𑌃 𑌅𑌸𑌿 | தெரிந்துகொள்ளத்தக்கவராகிறீர்? |

ஓ! மதுசூதன! இந்தச் சரீரத்திலிருக்கிறவரும், பலனைக்கொடுக்கிறவரும், ஏவுகிறவருமான அதியக்ஞன் யார்? எப்படிப்பட்டவர்? மரணகாலத்தில் மனதை யடக்கினவர்களாலே யெப்படித் தெரிந்துகொள்ளத்தக்கவ ராகிறீர்?

(ஸ்ரீ,வி) 𑌅𑌧𑌿𑌯𑌜𑍍𑌞𑌃=அதியக்ஞன், 𑌕𑌃=யார்? 𑌅𑌧𑌿𑌯𑌜𑍍𑌞𑌃 = அதியக்ஞன், 𑌕𑌥𑌂 = எப்படிப்பட்டவன்? இவ்விரண்டுஞ் சேர்ந்து, எட்டுவிதக் கேள்வியாகிறது. முதல் சுலோகம் சுவரூபத்தைப்பற்றிய கேள்வி. இந்தசுலோகம் தருமத்தைப்பற்றிய கேள்வி. (௨)

---

𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚.

௩. 𑌅𑌕𑍍𑌷𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌪𑌰𑌮𑌂 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇।
𑌭𑍂𑌤𑌭𑌾𑌵𑍋𑌦𑍍𑌭𑌵𑌕𑌰𑍋 𑌵𑌿𑌸𑌰𑍍𑌗𑌃 𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌜𑍍𑌞𑌿𑌤𑌃॥

| | |
|---|---|
| 𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚 | ஸ்ரீ கிருஷ்ணபகவான்சொல்வது |
| 𑌪𑌰𑌮𑌂 | உத்தமமான |
| 𑌅𑌕𑍍𑌷𑌰𑌂 | நாசமற்றது அல்லது உலகத்திற்கு மூலகாரணமானது |

| | |
|---|---|
| ப்ரஹ்ம | பிரம்மம் |
| ஸ்வபாவ: | ஜீவஸ்வபாவமானது |
| அத்யாத்மம் | அத்தியாத்மமென்று |
| உச்யதே | சொல்லப்படுகிறது |
| பூதபாவோத்பவகர: | பூதங்களாகிற வஸ்துக்களுக்கு உற்பத்தியையுண்டாக்குகிற |
| விஸர்க: | யக்ஞத்தில் ஹோமம்செய்தல் |
| கர்மஸம்ஜ்ஞித: | கருமமென்கிறபெயரையுடையது. |

ஸ்ரீ கிருஷ்ணபகவான் சொல்வது. உத்தமமானவும், நாசமற்றவும் வஸ்துவே பிரம்மம். ஜீவஸ்வபாவமானது அத்தியாத்மம். பூதங்களாகிற வஸ்துக்களுக்கு உற்பத்தியையுண்டாக்கிற யக்ஞத்தில ஹோமம்செய்தல் கருமமென்கிற பெயரை யுடையது.

(ஶம்) ஸ்வபாவ:—பிரம்மத்தினுடைய இருப்பு. அதாவது—பிரம்மமானது தேகத்தினிடத்தில் ஜீவஸ்வரூபமாய் விளங்குவதே. அப்படி விளங்கும் ஜீவஸ்வரூபமே அத்தியாத்மம். அத்தியாத்ம மென்றால், தேகத்தை யிருப்பிடமாயுடைத்தான தெதுவோ அந்த ஜீவஸ்வபாவம்.

(ஸ்ரீ) ஸ்வபாவ: — தேகத்தை யாசிரயித்து அல்லது அனுசரித்துக் கொண்டும், நான் செய்கிறேன், நானனுபவிக்கிறேன், என்பது முதலிய அபிமானத்தைக் கொண்டும், விளங்குகிற பிரம்மத்தினுடைய அம்சமாகிய ஜீவஸ்வரூபமானது சுவபாவம். அந்த சுவபாவந்தான் அத்தியாத்மம், பூதபாவோத்பவகர:—பூதம்—வஸ்துக்களுக்கு, பாவ:—உற்பத்தி, உத்பவ: — விருத்தி, கர: — உண்டுபண்ணுகிற, விஸர்க:— தேவதைகளை யுத்தேசித்து மந்திரபூர்வமாய் யக்ஞத்தில் கொடுக்கப் படும் ஆகுதிதான் கருமம்.

(ரா) அக்ஷரம்—நாசமற்ற க்ஷேத்திரக்ஞசமஷ்டி ரூபமான, பரமம்— பிரகிருதி விமுக்தாத்மஸ்வரூபமானது, ப்ரஹ்ம—பிரம்மமென்று சொல் லப்படுகிறது, (அதாவது முக்தஜீவஸ்வரூபம்.)

ஸ்வபாவ:—பிரகிருதி. அதாவது, ஆத்மாவல்லாதவும், ஆத்மாவை யொட்டியு மிருக்கிற பூதசூக்ஷ்மாதிகள். இதுதான் அத்தியாத்மம்.

பூதபாவோத்பவகரோவிஸர்க:கர்மஸம்ஜ்ஞித:—பூதபாவ:— மனுஷிய, பசு, பக்ஷியாதிகளுடைய, உத்பவகர: — உற்பத்தியைச்செய் கிற, விஸர்க: — புருஷ சம்பந்தத்தின லுண்டாகிற ரேதஸ் ஸ்கலன மானது, கர்மஸம்ஜ்ஞித:—கருமமென்று சொல்லப்படுகிறது. இம்மூன்றும்

முமுக்ஷுக்க ளறிந்துகொள்ளும் பொருட்டு சொல்லப்பட்டது. ஏனென்றால், முதலிற்சொன்ன முக்த ஜீவஸ்வரூபத்தை யடையவும், பிந்திச் சொன்ன இரண்டையும் விடவும் வேண்டியதென்பதை முமுக்ஷுக்களறிய வேண்டியவர்களா யிருக்கிறார்கள்.

(3) (ஸ்ரீ,வி) உத்தமமானவும் நாசமற்றவுமான விஷ்ணுவே பிரம்மம்.

ஜீவனுக்குச் சேர்ந்த வஸ்துவானது, ஸ்வபாவ: = அதாவது, அவனுக்குபகாரமான தேகேந்திரியாந்தக்கரண முதலியவைகள். இதுதான் அத்தியாத்மமென்று சொல்லப்படுகிறது. அல்லது ஜீவனுடைய நிலையான இருப்பே. ஸ்வபாவ:=அதுதான் அத்தியாத்மம்.

பூதபாவோத்பவகரோ விஸர்க: கர்மஸம்ஜ்ஞித: = பூத = ஜீவர்களுக்கும், பாவ = ஜடபதார்த்தங்களுக்கும், உத்பவ = உற்பத்தியை, கர: = செய்கிற, விஸர்க: = ஈசுவரசிருஷ்டியானது, கர்மஸம்ஜ்ஞித: = கருமமென்று சொல்லப்படுகிறது. (௩)

---

௪. அதிபூதம் க்ஷரோ பாவ: புருஷஶ்சாதிதைவதம்।
அதியஜ்ஞோ(அ)ஹமேவாத்ர தேஹே தேஹப்ருதாம் வர॥

| | |
|---|---|
| தேஹப்ருதாம்வர | ஓ! தேகத்தை யுடையவர்களில் சிரேஷ்டனானவனே! |
| க்ஷர: பாவ: * | நாசமடையத்தக்கவஸ்துக்கள் |
| அதிபூதம் † | அதிபூதம் என்று சொல்லப்படுகின்றன |
| புருஷ: ‡ | விராட்புருஷன் |
| அதிதைவதம் § | அதிதெய்வதமாகச் சொல்லப்படுகிறான் |

---

*-† (ஶம்) (ஸ்ரீ,வி) பிறப்பு இறப்புள்ள வஸ்துக்களெல்லாம் அதிபூதம். (ஸ்ரீ) நாசமடையத்தக்க தேகாதிகள் அதிபூதம். (ரா) ஐசுவரியத்தைக் கோருகிற ஜனங்களினால் அறியவேண்டியதாய்ச் சொல்லப்பட்ட அதிபூதமானது அழியத்தக்கதாயும், பஞ்சமகாபூதங்களி லிருக்கிறதாயும், பஞ்சமகாபூதங்களினா லுண்டானதாயுமுள்ள, ஸ்தூல சப்த ஸ்பரிசாதிகள். (3) நாசமடையத்தக்க சகல வஸ்துக்களும் அதிபூதமென்று சொல்லப்படுகின்றன. ஏனென்றால், அந்தச் சகல வஸ்துக்களும் ஜீவனைச் சேர்ந்தவைகளே. ஜீவனுக்குபயோகமில்லாத வஸ்துக்களொன்றுமில்லை என்பது தாத்பரியம்.

‡-§ (ஶம்) சூரியமண்டலத்தி லிருக்கிறவனுயும், இந்திராதிகளைப் பிரேரிக்கப்பட்டவனுயு முள்ள இரண்ணியகர்ப்பனே அதிதெய்வதம். (ஸ்ரீ) சூரியமண்ட

| | |
|---|---|
| தேஹெ* | இந்தத்தேகத்தில் (அந்தரியாமியாய் இருக்கிற) |
| அஹமேவ† | நானே |
| அதியஜ்ஞ:‡ | அதியக்ஞன். |

ஓ! அர்சுனா! நாசமடையத்தக்க வஸ்துக்கள் அதிபூதமென்றும், விராட்புருஷனே அதிதெய்வமென்றும் சொல்லப்படுகின்றன. இந்த தேகத்தில் அந்தரியாமியா யிருக்கிற நானே அதியக்ஞன்.

(ஹா) இந்த சுலோகத்திலும் முந்திய சுலோகத்திலு மிருக்கிற சிலபதங்களுக்கு பாஷியக்காரர்களும் வியாக்கியாதாக்களும் செய்திருக்கிற அர்த்தத்தின் சுருக்கமாவது.

ப்ரஹ்ம—(ஶம்) (ஸ்ரீ) (ஐ) மீ,வி) பரப்பிரம்மம். (ரா) பிரகிருதி விமுக்தாத்ம (ஜீவ) சுவரூபம்.

அத்யாத்மம்—(ஶம்) (ஸ்ரீ) (ஐ) (மீ,வி) ஜீவசுவபாவம். (ரா) ஜீவனுக்குச் சாதகமா யிருக்கிற சூக்ஷ்ம பூதங்கள். (ஐ) (மீ,வி) அல்லது தேகேந்திரிய அந்தக்கரணாதிகள்.

கர்ம—கிரியை.

அதிபூதம்—நாசத்தை யடையத்தக்க, அல்லது பிறப்பிறப்பையுடைய (அசேதனம்) வஸ்துவே.

அதிதைவதம்—(ஶம்) (ஸ்ரீ) (ஐ) (மீ,வி) பிரம்மா. (இவர் இரண்ணிய கர்ப்பன், விராட்புருஷன், சிருஷ்டிகர்த்தா, ஆதிபுரு

---

லத்தி லிருக்கிறவனும், தன்னுடைய அம்சங்களான தேவதைகளுக்கு அதிபதியா யிருக்கிறவனுமான (பிரம்மா) விராட்புருஷனே அதிதெய்வம், (ரா) பிரம்மாதி தேவதைகளுக்கு மேற்பட்டவனும், அவர்கள் அனுபவிக்கிறவிஷயங்களைவிட விசேஷமான விஷயங்களை யனுபவிக்கிறவனுமுள்ள புருஷனே. (ஐ) (மீ,வி) தேவேந்திரன் முதலான தேவதைகளுக்கு அதிபதியான பிரம்மாவே அதிதெய்வதம். அல்லது ஜீவாபிமானியான சங்கர்ஷண மூர்த்தியே அதிதெய்வதம்.

*-†-‡ (ஶம்) தேகங்களினாலே நடத்தப்படுகிற யக்ஞங்களுக்கு அபிமானியான விஷ்ணு அதியக்ஞன், அவனே நான். (ஸ்ரீ) தேகத்திலே அந்தரியாமியாயிருந்து கொண்டு யக்ஞத்தில் பிரவிருத்திக்கும்படி ஏவுகிறவனும் பலனைக்கொடுப்பவனும் இருக்கிற நானே அதியக்ஞன். (ரா) இந்திராதி தேவதைகளுக்குச் சரீரியானவும் சகல யக்ஞங்களினாலும் ஆராதிக்கப்படுகிறவுமான நானே அதியக்ஞன். (ஐ) (மீ,வி) சகல தேகத்திலும் அந்தரியாமியாயிருக்கிற நான் யக்ஞபலனைப் புஜிக்கிறவனானதால் நானே அதியக்ஞன். இவன்றான், ஸர்வாந்தர்யாமீ – என்ற பரமாத்மா. (மீ,வீ) அதியக்ஞன் எப்படிப்பட்டவன்? அவன் யார்? என்ற கேழ்விகளுக்கு இதினால் சொல்லப்பட்டதாக கிரகிக்கவேண்டியது.

ஷன், இந்திரன் சந்திரன் சூரியன்முதலிய தேவதைக ளுக்கு நியாமகனானதினால் தேவேசன் முதலிய பெயர் களால் அழைக்கப்படுகிறார். சிருஷ்டிசெய்து சகல லோ கங்களையும் பிரகாசிப்பிவிக்கிற அவரோ அதிதெய்வம். இவைகளைப் பிரம்மத்தினுடைய வியாபக ரூபமென்றும் சொல்லலாம். (ரா) பிரம்மாதி தேவதைகளுக்கு மேற் பட்ட புருஷன் அதிதெய்வமென்றார். இன்னொன்று சொல்லவில்லை. ஆனால் சுத்தஜீவசமஷ்டி ரூபமென்பது கருத்து.)

அதியஜ்ஞ: = யக்ஞாபிமானியான விஷ்ணு. (ச)

(ரு). அந்தகாலேசமாமேவ ஸ்மரந்முக்த்வாகலேபரம்।
யஃப்ரயாதிஸமத்பாவம் யாதிநாஸ்த்யத்ரஸம்ஶய:॥

| | |
|---|---|
| ய: | எவன் |
| அந்தகாலேச* | (மரண) அந்தியகாலத்திலும் |
| மாமேவ † | என்னையே |
| ஸ்மரந் | ஸ்மரிக்கிற அல்லது நினைக்கிறவனாய் |
| கலேபரம் | சரீரத்தை |
| முக்த்வா | விட்டு |
| ப்ரயாதி ‡ | போகிறானோ |
| ஸ: | அவன் |
| மத்பாவம் § | என்னுடைய ஸ்வரூபத்தை |
| யாதி | அடைகிறான் |
| அத்ர | இந்தவிஷயத்தில் |
| ஸம்ஶய: | சந்தேகம் |
| நாஸ்தி | கிடையாது. |

எவன் பிராணாந்தியகாலத்தில் என்னையே ஸ்மரித்து சரீரத்தை விட்டுப்போகிறானோ அவன் என்னுடைய சுவரூபத்தை யடைகிறான். இந்தவிஷயத்தில் சந்தேகம் கிடையாது. (ரு)

* (ஸ்வா) உ-வது அத்தியாயம், எஉ-வது சுலோகத்திலுள்ளதைப் பார்க்க.

† (ஸ்ரீ) அந்தரியாமி ரூபமாயிருக்கிற பரமேசுவரனாகிய என்னையே. (மத) பரமேசுவரனாயும் விஷ்ணுவாயு மிருக்கப்பட்ட என்னையே.

‡ (ஸ்ரீ) அர்ச்சிராதி மார்க்கத்தில் போகிறான்.

§ (மத) வைஷ்ணவம்தத்வம் = வியாபகமான விஷ்ணு சுவரூபத்தை. (ரா) என்னை யெவ்வித ஆகாரமாய் ஸ்மரிக்கிறானோ அவனதைப்போலொத்த ஆகாரத்தை. (உ) (ஸ்ரீ,வி) என்னிடத்தில் நித்தியாநந்தமான இருப்பை.

௬. 𑌯𑌂𑌯𑌂𑌵𑌾𑌪𑌿𑌸𑍍𑌮𑌰𑌨𑍍𑌭𑌾𑌵𑌂 𑌤𑍍𑌯𑌜𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑍇𑌕𑌲𑍇𑌵𑌰𑌂।
𑌤𑌂𑌤𑌮𑍇𑌵𑍈𑌤𑌿𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌸𑌦𑌾 𑌤𑌦𑍍𑌭𑌾𑌵𑌭𑌾𑌵𑌿𑌤𑌃॥

| | |
|---|---|
| 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 ! | ஓ! குந்திபுத்திரா! |
| (𑌯𑌃) | எவன் |
| 𑌅𑌨𑍍𑌤𑍇 | அந்தியகாலத்தில் |
| 𑌯𑌂 / 𑌯𑌂𑌵𑌾𑌪𑌿 / 𑌭𑌾𑌵𑌂 * | எந்தெந்தரூபத்தை |
| 𑌸𑍍𑌮𑌰𑌨𑍍 | ஸ்மரிக்கிறவனாய் |
| 𑌕𑌲𑍇𑌵𑌰𑌂 | தேகத்தை |
| 𑌤𑍍𑌯𑌜𑌤𑌿 | விடுகிறானோ |
| (𑌸𑌃) | அவன் |
| 𑌸𑌦𑌾 | எப்போதும் |
| 𑌤𑌦𑍍𑌭𑌾𑌵𑌭𑌾𑌵𑌿𑌤𑌃 | அந்தந்த ரூபத்தின் ஸ்மரணையோடு கூடினவனாய் |
| 𑌤𑌂 / 𑌤𑌂 / 𑌏𑌵 (𑌭𑌾𑌵𑌂) | அந்தந்தரூபத்தையே |
| 𑌏𑌤𑌿 | அடைகிறான். |

ஓ! குந்திபுத்திரா! எவன் அந்தியகாலத்தில் எந்தெந்த ரூபத்தை ஸ்மரித்தவனாய்த் தேகத்தை விடுகிறானோ, அவன் எப்போதும் அந்தந்த ரூபத்தின் ஸ்மரணையோடு கூடினவனாய் (இருந்தபடியினாலே) அந்தந்த ரூபத்தையே யடைகிறான்.

(ஸ்ரீ) எவன், மரணகாலத்தில் ஈசுவரத் தியானமன்றியில் தேவதைகள், (மனுஷியாள், மிருகங்கள்,) முதலிய எந்தரூபத்தில் மனதை வைக்கிறானோ, அல்லது மனதிலே எந்தரூபத்தை நினைத்துக்கொண்டிருக்கிறானோ, அந்தமாதிரியான தேகந்தான் அடுத்த ஜன்மத்தி லுண்டாகுமென்பது கருத்து. (இந்த அபிப்பிராயத்தை (ஸ்ரீ,வி) ஆதரிக்கிறார்.)

(ஸா) மரணகாலத்தில் மானை ஸ்மரித்த ஜடபரதருக்கு மான்ஜன்மம் வந்ததை இதற்கு திருஷ்டாந்தமாய்க் கொள்ளலாம். (விஷ்ணுபுராணம் இரண்டாவது அம்சம், ௧௩-வது அத்தியாயம், ௩௨-௩௩-சுலோகங்களைப்பார்க்க) பரமாத்ம ஸ்மரணையாவது தேவதா ஸ்மரணையாவது

* (𑌰𑌾) எந்தெந்த தேவதையை.

ஒருவனுக்கு அந்தியகாலத்தி லுண்டாகவேண்டுமானல், எந்தக்காலத்தி லும் ஸ்மரணைசெய்து அப்பியாசப்பட் டிருந்தாலன்றியி லுண்டாகமாட் டாது. அந்தியகாலத்தில் பரமாத்ம ஸ்மரணை எவனுக்குண்டாகிறதோ அவனுக்கு மறுபடி ஜனனமென்பது கிடையாதாகையால் முமுக்ஷு வான ஒவ்வொருவனும் எப்போதும் பரமாத்மாவை பஜித்துக்கொண்டே யிருக்கவேண்டியது அவசியம். (௬)

---

௭. 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌕𑌾𑌲𑍇𑌷𑍁 𑌮𑌾𑌮𑌨𑍁𑌸𑍍𑌮𑌰 𑌯𑍁𑌧𑍍𑌯 𑌚।
𑌮𑌯𑍍𑌯𑌰𑍍𑌪𑌿𑌤𑌮𑌨𑍋𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌮𑌾𑌮𑍇𑌵𑍈𑌷𑍍𑌯𑌸𑍍𑌯𑌸𑌂𑌶𑌯𑌃॥

| | |
|---|---|
| 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 | ஆகையினலே |
| 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌕𑌾𑌲𑍇𑌷𑍁 | எல்லாக்காலங்களிலும் |
| 𑌮𑌾𑌂 | என்னை |
| 𑌅𑌨𑍁𑌸𑍍𑌮𑌰 | நினை, அல்லது ஸ்மரித்துக்கொண்டிரு |
| 𑌯𑍁𑌧𑍍𑌯 𑌚* | யுத்தத்தையுஞ்செய் |
| 𑌮𑌯𑌿 | என்னிடத்தில் |
| 𑌅𑌰𑍍𑌪𑌿𑌤𑌮𑌨𑍋𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 | மனசு புத்தி இவைகளை வைத்தவனாக |
| 𑌮𑌾𑌮𑍇𑌵 | என்னையே |
| 𑌏𑌷𑍍𑌯𑌸𑌿 | அடைவாய் |
| 𑌅𑌸𑌂𑌶𑌯𑌃† | சமுசயமில்லை. |

(என்னிடத்தில் எப்போதும் மனதை வைத்துக்கொண் டிருப்ப வன் மரணகாலத்திலும் என்னிடத்திலே மனதுள்ளவனாக விருப்பான்) ஆகையினலே எல்லாக்காலங்களிலும் என்னை ஸ்மரித்துக்கொண்டிரு. யுத்தத்தையுஞ்செய். என்னிடத்தில் மனசு புத்தி இவைகளை வைத்தவ னாகவானல், என்னையே யடைவாய். சமுசயமில்லை.

(ரா) எக்காலத்திலு மென்னையே ஸ்மரித்துக்கொண் டிருவென் று பகவானல் சொல்லப்பட்டது. பகவானிடத்தில் எப்போதும் மன தை வைத்துக்கொண் டிருக்கவேண்டிய தானதினல், இனி யுத்தஞ் செய்ய வேண்டியதில்லை யென்பதாக அர்சுனன் எண்ணுவானென்று நினைத்து, நீ என்னை ஸ்மரித்துக்கொண்டே யுத்தத்தைச் செய்யென்று பகவான் சொன்னர். எப்படி யும்மை ஸ்மரித்துக்கொண்டு யுத்தஞ்செய் கிறதென்று கேட்பாயானல், யுத்தம் முதலிய செய்கையின லுண்டா

---

* (ரா) யுத்தத்தையும், நித்தியநைமித்திக கருமங்களையுஞ்செய்.

† (ஸ்ரீ,வி) 𑌅𑌸𑌂𑌶𑌯𑌂 = என்று பாடம். அர்த்தபேதமில்லை.

கும் ஜயாபஜயத்தில் மனதைவைக்காமல், ஈசுவர கைங்கரியமாக ஸ்மரித்துக்கொண்டு யுத்தஞ்செய்யென்பது கருத்து. (எ)

---

அ. அப்யாஸயோகயுக்தேந சேதஸா நாந்யகாமிநா।
பரமம் புருஷம் திவ்யம் யாதி பார்த்தாநுசிந்தயந்॥

| | |
|---|---|
| ஹே பார்த்த! | ஓ! பார்த்தா! |
| அப்யாஸயோகயுக்தேந* | அப்பியாசமாகிற வுபாயத்தோடு கூடியிருக்கிற |
| நாந்யகாமிநா | வேறுவிஷயங்களில் பிரவேசமற்ற |
| சேதஸா | மனதினலே |
| திவ்யம்† | பிரகாசரூபமான |
| பரமம் புருஷம் ‡ | பரமபுருஷனை |
| அநுசிந்தயந் | தியானிக்கிறவன் |
| (தமேவ) | அவனையே (அந்தப் பரமபுருஷனையே) |
| யாதி | அடைகிறன். |

ஓ! பார்த்தா! அப்பியாசமாகிற வுபாயத்தோடு கூடியவும், வேறு விஷயங்களில் பிரவேசமற்றவுமான மனதினலே பிரகாசமான பரம புருஷனை (பிரம்மத்தை) தியானிக்கிறவன், அந்தப் பிரம்மத்தையே யடைகிறன்.

(ஸ்வா) இந்த சுலோகத்தை முந்திய சுலோகத்துடன் ஒட்டிப் பொருள்செய்தால், மனதை ஈசுவரத்தியானத்தில் நிறுத்தப்பழகினவன், வேறுவிஷயங்களில் பிரவேசித்தபோதிலும், மனது ஈசுவரத்தியானத்திலேயே யிருக்குமென்கிற அர்த்தங் கிடைக்கிறது. (அ)

---

* (ஶம்) (ஸ்ரீ) முதலில் எந்த வஸ்துவை தியானஞ்செய்யத் தொடங்கினனே, அதையே விடாமல் தியானிப்பதுதான் அப்பியாசம். இதுவே யடைகிறதற்குபாயமாகிறது. (ரா) நித்திய நைமித்திக கருமானுஷ்டானங்களுக்கு விரோதமில்லாத காலங்களில் தான் நினைத்துக்கொண்டிருக்கிற மூர்த்தியைத்தியானஞ்செய்ய மனதைப் பழக்குவது அப்பியாசம். அந்த மூர்த்தித்தியானமே யோகம். (ஸ்வா) அத்-கஉ, சு கூ, பார்க்க.

† (ஶம்) சூரியமண்டல மத்தியத்திலிருக்கிறவராகிய.

‡ (ரா) நாராயணனுகிய என்னை, அநுசிந்தயந்—அந்தியகாலத்தில் ஸ்மரிக்கிறவன் எனக்கு சமானமானரூபத்தை, யாதி—அடைகிறன்.

௯. 𑌕𑌵𑌿𑌂 𑌪𑍁𑌰𑌾𑌣 𑌮𑌨𑍁𑌶𑌾𑌸𑌿𑌤𑌾𑌰 𑌮𑌣𑍋𑌰𑌣𑍀𑌯𑌾𑌂𑌸 𑌮𑌨𑍁𑌸𑍍𑌮𑌰𑍇-
𑌦𑍍𑌯𑌃 । 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌧𑌾𑌤𑌾𑌰 𑌮𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑌰𑍂𑌪 𑌮𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌵𑌰𑍍𑌣𑌂 𑌤𑌮𑌸𑌃
𑌪𑌰𑌸𑍍𑌤𑌾𑌤𑍍॥

௧0. 𑌪𑍍𑌰𑌯𑌾𑌣𑌕𑌾𑌲𑍇 𑌮𑌨𑌸𑌾𑌽𑌚𑌲𑍇𑌨 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌯𑍁𑌕𑍍𑌤𑍋 𑌯𑍋𑌗𑌬𑌲𑍇-
𑌨𑌚𑍈𑌵 । 𑌭𑍍𑌰𑍁𑌵𑍋𑌰𑍍𑌮𑌧𑍍𑌯𑍇 𑌪𑍍𑌰𑌾𑌣𑌮𑌾𑌵𑍇𑌶𑍍𑌯 𑌸𑌮𑍍𑌯𑌕𑍍 𑌸 𑌤𑌂
𑌪𑌰𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷 𑌮𑍁𑌪𑍈𑌤𑌿 𑌦𑌿𑌵𑍍𑌯𑌂॥

| | |
|---|---|
| 𑌅𑌚𑌲𑍇𑌨<br>𑌮𑌨𑌸𑌾 | சஞ்சலமற்றமனதோடும் |
| 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 | பக்தியோடும் |
| 𑌯𑍋𑌗𑌬𑌲𑍇𑌨𑌚𑍈𑌵 | தியானபலத்தோடும் |
| 𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 | கூடியிருக்கிற |
| 𑌯𑌃 | எவன் |
| 𑌪𑍍𑌰𑌯𑌾𑌣𑌕𑌾𑌲𑍇 | அந்தியகாலத்தில் |
| 𑌪𑍍𑌰𑌾𑌣𑌂 | பிராணவாயுவை |
| 𑌭𑍍𑌰𑍁𑌵𑍋𑌃* | புருவங்களின் |
| 𑌮𑌧𑍍𑌯𑍇† | மத்தியில் |
| 𑌸𑌮𑍍𑌯𑌕𑍍‡ | செவ்வையாக |
| 𑌆𑌵𑍇𑌶𑍍𑌯 | நிறுத்தி (பிரவேசிப்பித்து) |
| 𑌕𑌵𑌿𑌂 | சர்வக்ஞனும் |
| 𑌪𑍁𑌰𑌾𑌣𑌂 | அநாதிகாலமாயிருக்கிறவனும் |
| 𑌅𑌨𑍁𑌶𑌾𑌸𑌿𑌤𑌾𑌰𑌂§ | சகலத்திற்கும் பிரேரகனும் |
| 𑌅𑌣𑍋𑌃 | அணுவைப்பார்க்கிலும் |
| 𑌅𑌣𑍀𑌯𑌾𑌂𑌸𑌂¶ | அணுவாயிருக்கிறவனும் |
| 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯‖ | சகலப்பிரபஞ்சத்திற்கும் |
| 𑌧𑌾𑌤𑌾𑌰𑌂+ | இரக்ஷகனும் |
| 𑌅𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑌰𑍂𑌪𑌂÷ | சிந்திக்கக்கூடாத ரூபமுடையவனும் |

---

*-† (ஷா) அத்-௫, சு-௨௯, அத்-௬, சு-௧௩, பார்க்க.

‡ (ம0) ஜாக்கிரதையாய்.

§ (ம0) (ஸ்ரீ,வி) சகலலோக நியாமகன்.

¶ (ரா) ஜீவனைப்பார்க்கிலும் அணுவாயிருக்கிறவன்.

‖-+ (ம0) சகல கருமங்களின் பலன்களையும் பாகித்துக்கொடுப்பவன். (ரா) சகலப் பிரபஞ்சங்களையும் சிருஷ்டிக்கிறவன். (ஸ்ரீ,வி) சகலப் பிரபஞ்சங்களையும் தரிக்கிறவும், போஷிக்கிறவுமானவன்.

(ரா) பிரபஞ்ச விலக்ஷணரூபமுடையவன்.

| | |
|---|---|
| 𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑌵𑌰𑍍𑌣𑌂 * | சூரியனைப்போல் பிரகாசமுடையவனும் |
| 𑌤𑌮𑌸𑌃 𑌪𑌰𑌸𑍍𑌤𑌾𑌤𑍍 † | மாயை அல்லது அந்தகாரத்தைக் கடந்தவனுமாகிய |
| 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 ‡ | புருஷனை (பரமாத்மாவை) |
| 𑌅𑌨𑍁𑌸𑍍𑌮𑌰𑍇𑌤𑍍 | இடைவிடாமல் ஸ்மரிக்கிருனே |
| 𑌸𑌃 | அவன் |
| 𑌦𑌿𑌵𑍍𑌯𑌂 | திவ்வியமான |
| 𑌤𑌂 𑌪𑌰𑌂 § | அந்தப் பரமாத்மாவை |
| 𑌉𑌪𑍈𑌤𑌿 ¶ | அடைகிருன். |

சஞ்சலமற்ற மனதோடும், பக்தியோடும், தியானபலத்தோடும் கூடினவனுய் அந்தியகாலத்தில் பிராணவாயுவை புருவங்களின் மத்தியில் செவ்வையாய் நிறுத்தி சர்வக்ஞனும், புராதனனும், சகலத்திற்கும் பிரேரகனும், அணுவிலுமணுவாயும், சகலப் பிரபஞ்சத்திற்கும் இரக்ஷகனுயும், சிந்திக்கக்கூடாதரூபமுடையவனுயும், சூரியனைப்போல் பிரகாசமுடையவனுயும், மாயையைக் கடந்தவனுயு மிருக்கிறவனுமான பரமபுருஷனை, எவன் இடைவிடாமல் ஸ்மரிக்கிருனே அல்லது தியானிக்கிருனே, அவன் திவ்வியமான அந்தப் பரமாத்மாவை யடைகிருன்.

(ஸ்வா) இந்த சுலோகங்களினுல் இந்த தேகம் போனபின் உத்தமமான தேகத்தை யடையு முபாயம் வெளியிடப்பட் டிருக்கின்றது. எப்படி யெனில்,

மனது சலனமற்று ஒரு வஸ்துவையேபற்றி நிற்கவேண்டும். பக்தி (விசுவாசம் அல்லது பிரியம்) யில்லாதவஸ்துவை மனம் பற்ருதாகையால் பக்தியும் வேண்டும். அவ்விரண்டும் சிலசில காலத்திலிருந்தால் அது மரணகாலத்தில் உதவுவது அசாத்தியமாகையால், பலமானதும் ஸ்திரமானதுமாகிய நீண்டகால அப்பியாசம் வேண்டும். பிராணவாயுவை (மற்ற வாயுக்களும் அதற்குளடக்கம்) தடுத்து நிறுத்தினுலன்றி தியானம் நிலைக்காதாகையால் வாயுக்களைத்தடுத்து புருவத்தின் மத்தியில் நிறுத்தவேண்டும். இவ்வளவு பிரயாசைப்பட்டும் தியானவஸ்து அற்ப தேவதையானுல் புனர் ஜனனமில்லாத ஆனந்தானுபவ மிராதாகையால் இந்த சுலோகங்களில் சொல்லப்படுகிற உத்தம குணங்களை

---

* (𑌰𑌾) அப்பிராகிருத, சுவாபாவிக, அசாதாரண திவ்வியரூபமுடையவன்.

† (𑌮𑌾) மோகாந்தகாரமற்றவன். (ஸ்ரீ,வி) மாயையை அல்லது மிருத்தியுவைக்கடந்தவன்.

‡-§-¶ 𑌪𑌰𑌂𑌪𑍁𑌰𑍁𑌷𑌮𑍁𑌪𑍈𑌤𑌿 (𑌰𑌾) பரமபுருஷனுடைய ஐசுவரியத்திற்குச் சமமான ஐசுவரியத்தை யுடைத்தான ஆகாரத்தை யடைகிருன்.

யுடைய (பிர்ம்மா, விஷ்ணு ருத்திரர்களாகிய) சகுண பிர்ம்மோபாசனை யா யிருக்கவேண்டும். இந்த உபாசனையினால் உபாசிக்கிற சகுணபிர்ம்ம சுவரூபத்தை யடைகிறான், அந்த சுவரூபத்துடன் ஆனந்தத்தை அனு பவித்து பிறகு மோக்ஷமடைகிறான். இது கிரமமுக்தி மார்க்கமென்று சொல்லப்படும். இதுதான் பரமாத்துமாவை யடைகிறதாக சொல்லப் பட்டது. (கூ-௧0)

---

கக. யதக்ஷரம் வேதவிதோ வதந்தி விஶந்தி யத்யதயோ வீதராகாஃ ।
யதிச்சந்தோ ப்ரஹ்மசர்யம் சரந்தி தத்தே பதம் ஸங்க்ரஹேண ப்ர
வக்ஷ்யே ॥

| | |
|---|---|
| வேதவிதஃ | வேதார்த்தங்களை யறிந்தவர்கள் |
| யத் | எதை |
| அக்ஷரம்* | நாசமற்றதாக. |
| வதந்தி | சொல்லுகிறார்களோ |
| வீதராகாஃ | காமக்குரோதங்களை விட்டிருக்கிற |
| யதயஃ | சந்நியாசிகள் |
| யத் | எதை |
| விஶந்தி | அடைகிறார்களோ |
| யத் | எதை |
| இச்சந்தஃ | அறியவிரும்புவோர் |
| ப்ரஹ்மசர்யம்† | பிரம்மசாரி விரதத்தை |
| சரந்தி | அனுஷ்டிக்கிறார்களோ |
| தத் பதம் ‡ | அந்தஸ்தானத்தை |
| ஸங்க்ரஹேண | சுருக்கமாய் |
| தே | உனக்கு |
| ப்ரவக்ஷ்யே | சொல்லுகிறேன். |

வேதார்த்தங்களை யறிந்தவர்கள் எதை நாசரகிதமானதென்று சொல்லுகிறார்களோ, காமக்குரோதங்களை விட்டிருக்கிற சந்நியாசிகள் எதை யடைகிறார்களோ, எதையறிய விரும்பி பிரம்மசாரி விரதத்தை யநுஷ்டிக்கிறார்களோ அந்த ஸ்தானத்தை (அதெப்படிப்பட்டதென் பதை) சுருக்கமா யுனக்குச் சொல்லுகிறேன். (கக)

---

* (ரா) ஸ்தூல சூக்ஷ்மமுதலிய ரூபங்களற்றதாக.

† (ஶ்ரீ) இதின் கூ-வது அத்தியாயம், சச-வது ஶ்லோகத்தில் இந்தப் பதத் திற்குச் செய்திருக்குமர்த்தத்தைப்பார்க்க.

‡ (ரா) மனசினாலே யறியத்தகுந்ததான என் சுவரூபத்தை. (ஶ்ரீ) என்னுடைய சுவரூபத்தை.

௧௨. 𑌸𑌰𑍍𑌵𑌦𑍍𑌵𑌾𑌰𑌾𑌣𑌿 𑌸𑌂𑌯𑌮𑍍𑌯 𑌮𑌨𑍋 𑌹𑍃𑌦𑌿 𑌨𑌿𑌰𑍁𑌧𑍍𑌯 𑌚 ।
𑌮𑍂𑌰𑍍𑌧𑍍𑌨𑍍𑌯𑌾𑌧𑌾𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑌮𑌾𑌸𑍍𑌥𑌿𑌤𑍋 𑌯𑍋𑌗𑌧𑌾𑌰𑌣𑌾𑌮𑍍 ॥

௧௩. 𑌓𑌮𑌿𑌤𑍍𑌯𑍇𑌕𑌾𑌕𑍍𑌷𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌵𑍍𑌯𑌾𑌹𑌰𑌨𑍍𑌮𑌾𑌮𑌨𑍁𑌸𑍍𑌮𑌰𑌨𑍍 ।
𑌯𑌃 𑌪𑍍𑌰𑌯𑌾𑌤𑌿 𑌤𑍍𑌯𑌜𑌨𑍍𑌦𑍇𑌹𑌂 𑌸 𑌯𑌾𑌤𑌿 𑌪𑌰𑌮𑌾𑌂 𑌗𑌤𑌿𑌮𑍍 ॥

| | |
|---|---|
| 𑌯𑌃 | எவன் |
| 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 | தன்னுடைய |
| 𑌸𑌰𑍍𑌵𑌦𑍍𑌵𑌾𑌰𑌾𑌣𑌿* | சகலஇந்திரிய துவாரங்களை |
| 𑌸𑌂𑌯𑌮𑍍𑌯 | அடக்கி |
| 𑌮𑌨𑌃 | மனதை |
| 𑌹𑍃𑌦𑌿† | இருதயத்தில் |
| 𑌨𑌿𑌰𑍁𑌧𑍍𑌯 | நிறுத்தி |
| 𑌮𑍂𑌰𑍍𑌧𑍍𑌨𑌿‡ | சிரசில் (தலையினுச்சியில்) |
| 𑌪𑍍𑌰𑌾𑌣𑌂 | பிராணவாயுவை |
| 𑌆𑌧𑌾𑌯 | வைத்து |
| 𑌯𑍋𑌗𑌧𑌾𑌰𑌣𑌾𑌂§ | ஸ்திரமான யோகநிலையை |
| 𑌆𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 | அடைந்தவனாய் |
| 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 | பிரம்மத்தைச்சொல்லுகிற |
| 𑌓𑌮𑌿𑌤𑍍𑌯𑍇𑌕𑌾𑌕𑍍𑌷𑌰𑌂¶ | ஓமென்கிற வொருஅக்ஷரத்தை |
| 𑌵𑍍𑌯𑌾𑌹𑌰𑌨𑍍 | உச்சரிக்கிறவனும் |
| 𑌮𑌾𑌂 | என்னை |
| 𑌅𑌨𑍁𑌸𑍍𑌮𑌰𑌨𑍍 | இடைவிடாமல் ஸ்மரிக்கிறவனும் |
| 𑌦𑍇𑌹𑌂 | தேகத்தை |
| 𑌤𑍍𑌯𑌜𑌨𑍍 𑌚 | விடுகிறவனும் |
| 𑌪𑍍𑌰𑌯𑌾𑌤𑌿 | போகிறானோ (மரணமடைகிறானோ) |
| 𑌸𑌃 | அவன் |
| 𑌪𑌰𑌮𑌾𑌂 𑌗𑌤𑌿𑌂 \|\| | சிரேஷ்டமான கதியை |
| 𑌯𑌾𑌤𑌿 | அடைகிறான். |

* (ரா) ஞானேந்திரியங்களை (ஸ்ரீ,வி) சுஷும்நாநாடி தவிர மற்ற நாடிகளை.

† (ரா) (ஶ) (ஸ்ரீ,வி) இருதயத்திலிருக்கிற என்னிடத்தில்.

‡ (ஸ்ரீ) புருவங்களின் மத்தியில். (ஸ்ரீ,வி) பிரம்மரந்திரத்தால்.

§ (ரா) (ஸ்ரீ,வி) யோகமாகிய தாரணை. அதாவது அகண்டத்தியானம்.

¶ (ஷா) கஎ-வது அத்தியாயம் உங-வது சுலோகத்தையும் சாந்தோக்கியோபநிஷத்து முதலாவது பிரபாடகம் க-முதல் கo-வரை கண்டங்களையும் பார்க்க.

|| (ரா) பிரகிருதி விமுக்தமானவும், எனக்குச் சமானமான ஆகாரமுடையவும் புநர் ஜனனமற்றவுமான ஆத்மாவை.

எவன் தன்னுடைய சகல இந்திரிய துவாரங்களையு மடக்கி மனதை இருதயத்தில் நிறுத்தி, சிரசில் பிராணவாயுவைவைத்து, ஸ்திரமான யோகாப்பியாசத்தை யடைந்து, பிரம்மத்தைச் சொல்லுகிறதாகிய ஓம் என்கிற ஒரு அக்ஷரத்தை யுச்சரித்து, என்னை (பிரம்மத்தை) இடைவிடாமல் ஸ்மரித்து தேகத்தை விடுகிறானோ, அவன் சிரேஷ்டமான கதியை யடைகிறான். (௧௨-௧௩)

---

௧௪. அநந்யசேதா: ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யஶ:।
தஸ்யாஹம் ஸுலப: பார்த்த நித்யயுக்தஸ்ய யோகிந:॥

| | |
|---|---|
| பார்த்த ! | ஓ ! அர்சுன ! |
| ஸததம்* | எப்போதும் |
| அநந்யசேதா: | வேறுபற்றில்லாதவனாய் |
| ய: | எவன் |
| மாம் | என்னை |
| நித்யஶ:† | பிரதிதினமும் |
| ஸ்மரதி | ஸ்மரிக்கிறானோ (சிந்திக்கிறானோ) |
| தஸ்ய | அப்படிப்பட்ட |
| நித்யயுக்தஸ்ய‡ | ஸ்திரமான மனதையுடைய |
| யோகிந: | யோகிக்கு |
| அஹம் | நான் |
| ஸுலப: | சுலபன் (பிரயாசையன்றி யடையத்தகுந்தவனாவேன்.) |

ஓ ! அர்சுன ! எப்போதும் வேறு (விஷயங்களில்) பற்றில்லாமல், எவன் என்னைப் பிரதிதினமும் ஸ்மரிக்கிறானோ, அப்படிப்பட்ட ஸ்திரமான மனதையுடைய யோகிக்கு, நான் சுலபன்.

(ரா) இதுவரையில் ஐசுவரியத்தைக் கோரப்பட்டவர்களும், விமுக்தாத்ம சுவரூபத்தை யடையப்பட்டவர்களும், உபாசிக்கும் மார்க்கத்தைச்சொல்லி, இப்போது (இந்த சுலோகத்தினால்) ஞானியைப்பற்றிச் சொல்லுகிறார். (௧௪)

---

௧௫. மாமுபேத்ய புநர்ஜந்ம து:காலயமஶாஶ்வதம்।
நாப்நுவந்தி மஹாத்மாந: ஸம்ஸித்திம் பரமாம் கதா:॥

---

* (ஸ) இடைவிடாமல்.

† (ஸ) தீர்க்ககாலம். அதாவது, மரணம் வரையில்.

‡ (ரா) ஸ்திரமாய் என்னை யடையவேண்டுமென்கிற ஆசையுடன் கூடியிருக்கிற

| | |
|---|---|
| பரமாம் | சிரேஷ்டமான |
| ஸம்ஸித்திம் | மோக்ஷத்தை |
| கதா: | அடைந்த |
| மஹாத்மாந: | மகாத்துமாக்கள் (யோகிகள்) |
| மாம் உபேத்ய | என்னை அடைந்து |
| புந: | மறுபடியும் |
| து:காலயம் | துக்கங்களுக்கிருப்பிடமும் |
| அசாச்வதம் | அநித்தியமுமான |
| ஜந்ம | பிறப்பை |
| நாப்நுவந்தி | அடைகிறதில்லை. |

சிரேஷ்டமான மோக்ஷத்தை யடைந்த மகாத்மாக்கள் (அப்படி) என்னை யடைந்தபின்பு, துக்கங்களுக் கிருப்பிடமும் அநித்தியமுமான பிறப்பை யடைகிறதில்லை.

(ஸ்வா) இந்த சுலோகத்தில் மோக்ஷமடைந்த மகாத்மாக்கள் "என்னை யடைந்து பிறப்பை யடைகிறதில்லை" என்று சொல்லப்பட்டிருக்கிறதினாலே மோக்ஷம் என்கிறது வேறேயாயும் என்னை யென்கிறது வேறேயாயும் தோற்றுகிறது. அப்படி வேறேயல்ல. பிரம்மத்தை யடைவதுதான் மோக்ஷமடைவது; மோக்ஷமடைவதுதான் பிரம்மத்தையடைவது; இதில் யாதொரு பேதமுமில்லை யென்பதைக் காண்பிவிக்கும் பொருட்டு "மோக்ஷமடைந்தவன் என்னை யடைந்தவனாகிறான்" என்று சொன்னதாகக் கொள்ளவேண்டியது. பாஷியக்காரர்களும், வியாக்கியாதாக்களும், "என்னை யடைந்தபின் பிறப்பையடைகிறதில்லை. ஏனென்றால், சிரேஷ்டமான மோக்ஷமடைந்தவர்களானதினால்தான்" என்று அர்த்தஞ் செய்திருக்கிறார்கள். இதினாலேயும், முந்திய அத்தியாயம் முதலானவைகளினாலேயும், பிரம்மமாவதுதான் மோக்ஷமென்று தெளிவாயிருக்கிறது. (கரு)

---

கசா. ஆப்ரஹ்மபுவநால்லோகா: புநராவர்திநோऽர்ஜுந।
மாமுபேத்ய து கௌந்தேய புநர்ஜந்ம ந வித்யதே॥

| | |
|---|---|
| ஹே அர்ஜுந! | ஓ! அர்சுனா! |
| ஆப்ரஹ்மபுவநாத்* | பிரம்மலோகம் முதலுள்ள |
| லோகா: | சகலலோகங்களும் |
| புநராவர்திந: | மறுபடி உற்பத்தியுடையன |

* (ஸ்ரீ) ஆப்ரஹ்மபவநாத் - என்றும் பாடம்.

| | |
|---|---|
| கௌஂதேய ! | ஓ! குந்திபுத்திரா ! |
| மாஂ | என்னை |
| உபேத்ய து | அடைந்தாலோ |
| புநர்ஜந்ம | மறுபிறப்பானது |
| ந வித்யதே | கிடையாது. |

ஓ! அர்சுனா! பிரம்மலோகம் முதலுள்ள சகலலோகங்களும் மறுபடி உற்பத்தியை யுடையன. ஓ! குந்திபுத்திரா! என்னை யடைந்தாலோ, மறுபிறப்பானது கிடையாது.

(ஸ்ரீ) பிரம்மலோகத்தை முக்திக்குப்போகிற வழியாகுமாத்திரமுடைய கிரமமுக்தி யடையப்பட்டவர்களுக்கு மறுபிறப்புக் கிடையாது. அவர்களுக்குப் புநர் ஜநநம் சொன்னதாக வெண்ணக்கூடாது.

(ஸ்ரீ,வி) "பிரம்மலோகமுதலுள்ள" என்றதினால், பிரம்மலோகத்திற்குக் கீழ்ப்பட்ட சகல லோகங்களுக்கும், அவ்விடத்திலுள்ள ஜனங்களுக்கும், புநர் ஜநநமுண்டு என்பது தாத்பரியம். இப்படிச்சொன்னதினால், பிரம்மலோகத்தி லிருக்கிறவர்களுக்குப்புநர் ஜநநமில்லை என்றாகிறது. "என்னை யடைந்தவர்களுக்குப் புநர்ஜந்மமில்லை" என்று சொல்லப்பட் டிருக்கிறதினால், பிரம்மலோகத்திலுள்ளவர்களுக்கு மறுபிறப்புண்டென்று தோன்றுகிறது. இப்படி ஒன்றுக்கொன்று விரோதமாகத் தோன்றுகிறதே யென்றால், "பிரம்லோகத்தில் என்னை யுபாசித்துக்கொண்டிருக்கிறவர்களுக்கு மறுபிறப்பில்லை" என்பது தான் "என்னை யடைந்தவர்களுக்கு" என்பதின் தாத்பரியம். மற்றவர்களுக்கு அம்சமான ஜநநமுண்டு.

(ஸா) பிரம்மலோகம் முதலுள்ள சகலலோகங்களும் மறுபிறப்புடையன வென்பதற்கு, பிரம்மலோகமும், அதற்குத் தாழ்ந்ததாகவுள்ள லோகங்களும் என்றாவது, பிரம்மலோகம் வரையிலென்றாவது அர்த்தமாகலாம். புநர் ஜந்மமடைவிப்பது லோகங்களா? என்றாலோ, அதின் தாத்பரியம் அப்படியல்ல. கிரமமுக்திக்கு யோக்கியர்களல்லாதவர்கள், பிரம்மலோகத்தையாவது அல்லது மற்றெந்த லோகத்தையாவது அடைந்தால், மறுபடியும் ஜந்மத்தை யடைவார்கள். மேலுமந்த லோகமுங்கூட நாசமடையத்தக்கதே. நாசமடையத்தக்க லோகத்தையே புருஷார்த்தமாக வெண்ணி அடைந்தவர்களும் நாசமடையத்தக்கவர்களே. ஆகையால், மோக்ஷமடைந்தாலன்றியில் புநர் ஜந்மம் விடாதென்று தாத்பரியம். (கசு)

---

கஎ. ஸஹஸ்ரயுகபர்யந்தம் அஹர்யத் ப்ரஹ்மணோ விது:।
ராத்ரிம் யுகஸஹஸ்ராந்தாம் தேஹோராத்ரவிதோ ஜநா:॥

| | |
|---|---|
| ப்³ரஹ்மண: | பிரம்மாவுக்கு |
| யத் | எந்த |
| அஹ: | பகலை |
| ஸஹஸ்ரயுக³பர்யந்தம் | ஆயிரம்யுகங்களை முடிவாயுடையதாகவும் |
| ராத்ரிம் | இரவை |
| யுக³ஸஹஸ்ராந்தாம் | ஆயிரம்யுகங்களை முடிவாயுடையதாகவும் |
| (யே) ஜநா: | எந்தஜநங்கள் |
| விது³: | அறிந்திருக்கிறார்களோ |
| தே | அவர்கள் |
| அஹோராத்ரவித³: | பகலிரவை யறிந்தவர்கள். |

பிரம்மாவுக்கு ஆயிரம் யுகங்கள் பகலென்றும், ஆயிரம் யுகங்கள் இரவென்றும் எந்த ஜனங்களறிந்தவர்களோ அவர்களே இராப்பகலறிந்தவர்கள்.

(ஸ்ரீ) பிரம்மலோகமானது வெகுகாலம் நீடித்திருக்கிறதென்பதையும், சிரேஷ்டமானதென்பதையும் காண்பிவிக்கும் பொருட்டு இந்த சுலோகம் ஆரம்பிக்கப்பட்டது. ஆயிரம் யுகங்களென்றால், ஆயிரம் சதுர்யுகங்களென்றர்த்தம்.

(ரா) பிரம்மலோகங்கூட கால அளவை யுடையதாயிருக்கிறதினாலே கால அளவுள்ள லோகங்களெல்லாம் அழியத்தக்கவை என்பதைக் காண்பிவிக்கும் பொருட்டு இந்த சுலோகம் ஆரம்பிக்கப்பட்டது.

(ம) (ஸ்ரீ,வி) ப்³ரஹ்மண: = பரப்பிரம்மத்தினுடைய, ஸஹஸ்ரயுக³பர்யந்தம், யுக³ஸஹஸ்ராந்தாம் = அநேக ஆயிர யுகங்களை, என்றுவிரண்டு பாரார்த்த மல்லது சதுர்முக பிரம்மாவினுயுளை அளவாகவுடைய காலம். பரப்பிரம்மத்துக்கு இப்படிப்பட்ட வநேக ஆயிரம் சதுர்யுகங்களை ஒரு பகலாகவும், அநேக ஆயிரம் சதுர்யுகங்களை ஒரு இரவாகவும், அறிந்தவர்கள் இராப்பகலை யறிந்தவர்கள். என்றால், பிரம்மலோகம் முதல் அதற்குக் கீழ்ப்பட்ட சகலலோகங்களும் பிரளயத்தில் முழுகும் காலமாகிய மகா விஷ்ணுவினுடைய யோகநித்திரை காலத்தை இரவாகவும், சகலப் பிரபஞ்சங்களும் சிருஷ்டியாகும் காலத்தைப் பகலாகவும் உபசாரமாகச் சொன்னதென்று கிரகிக்கவேண்டியது.

(ஸ்வா) ஒரு பிரம்மாவினுடைய ஆயுளை (சகாப்தத்தை) கணக்கிடுவது எவ்விதமெனில்,

| | | | |
|---|---|---|---|
| கஅ | கண்ணிமைப்பொழுது கொண்டது | காஷ்டை | க |
| ௩௰ | காஷ்டை ,, | கலை | க |
| ௩௰ | கலை ,, | முகூர்த்தம் | க |
| ௩௰ | முகூர்த்தம் ,, | இராப்பகலுள்ளநாள் | க |
| கரு | நாள் ,, | பக்ஷம் | க |
| உ | பக்ஷம் ,, | மாதம் | க |
| உ | மாதம் ,, | இருது | க |
| ௩ | இருது ,, | அயனம் | க |
| உ | அயனம் ,, | வருஷம் | க |
| க | மனிதவருஷம் ,, | தேவநாள் | க* |
| ௩௱௬௰ | தேவநாட்கள் ,, | தேவவருஷம் | க |
| சஅ00 | தேவவருஷங்கள் அல்லது, களஉஅ000 - மனிதவருஷங்கள் கொண்டது கிருதயுகம் | | க |
| ௩௬00 | ,, கஉகூ௬000 ,, | திரேதாயுகம் | க |
| உச00 | ,, அகூச000 ,, | துவாபரயுகம் | க |
| கஉ00 | ,, ச௩உ000 ,, | கலியுகம் | க |

இப்படிப்பட்ட நாலு யுகங்கள் சேர்ந்தது, அதாவது தேவவருஷங்கள் பன்னிரெண்டாயிரம், மனுஷிய வருஷங்கள் ச௩உ0000 கொண்டது சதுர்யுகம் - க. இப்படிப்பட்ட சதுர்யுகம் - க000, கொண்டது சதுர்முகப் பிரம்மாவினுடைய ஒருபகல். இந்தப் பகல்காலத்தில் பதினான்கு மனுவந்திரங்களாகின்றன. (எக) எழுபத்தியொரு சதுர்யுகங்கள் கொண்டது ஒரு மனுவந்திரம். சதுர்யுகம் க000 - கொண்டது, பிரம்மாவினுடைய ஒரு இரவு. இப்படிப்பட்ட பகல் இரவு சேர்ந்த நாள் ௩௬0 - கொண்டது பிரம்மாவினுடைய ஒருவருஷம். இப்படிப்பட்ட க00 - வருஷம் கொண்டது ஒரு பிரம்மாவினுடைய ஆயுஸ். இந்த ஆயுஸ்காலமானது பராவென்று சொல்லப்படுகிறது. ஒரு பராவுக்கு (௩கக0ச0000000000) மூன்றுகோடி பதினொருலக்ஷத்து நான்காயிரம் கோடி மனுஷிய வருஷங்களாகின்றன.

மேலேசொன்ன கிருதயுகத்தில் அ00-வருஷங்களும், திரேதாயுகத்தில், ௬00 - வருஷங்களும், துவாபரயுகத்தில் ச00 - வருஷங்களும், கலியுகத்தில், உ00-வருஷங்களும், சந்தியென்று சொல்லப்படும். இந்த ஒவ்வொரு சந்தி வருஷங்களிலும், பாதி பூர்வசந்தி யென்றும் மற்றொரு பாதி உத்தரசந்தியென்றும் சொல்லப்படுகிறது. விஷ்ணுபுராணம் பிரதம அம்சம், ௩-வது அத்தியாயமும் லிங்கபுராணம் அத்-ச. கூர்மபுராணம் அத்-ரு. பத்மபுராணம் சிருஷ்டிகண்டம் அத்-௩௬. ஐயும்பார்க்க.

மேற்சொன்ன சந்தியென்பது எப்படிப்பட்டதென்றால், முதல் யுகமாகிய கிருதயுகத்தின் கடைசியில், ச00-வருஷங்களும், இரண்டா

* உத்தராயணமாகிய ௬-மாதம்பகல், தக்ஷிணயனமாகிய ௬-மாதம் இரவு.

வது யுகமாகிய திரேதாயுகத்தின் துவக்கத்தில், ௪00 - வருஷங்களும், சேர்ந்த ௮00 - வருஷங்கள், முதல் யுகத்தின் சந்தி. அப்படியே இரண்டாவது யுகத்தின் கடைசியில் ௩00 - வருஷங்கள், மூன்றாவது யுகத்தின் துவக்கத்தில் ௩00 - வருஷங்கள் ஆக அறுநூறு வருஷங்கள் இரண்டாவது யுகத்தின் சந்தி. இப்படியே மற்ற யுகங்களுக்கும் சந்தி வருஷங்களைக் கணக்கிடவேண்டியது. இப்படிப்பட்ட சந்திவருஷங்களின் பிரயோஜன மென்னவென்றால், கிருதயுகத்தின் கடைசியிலுள்ள ௪00 - வருஷங்களாகிய சந்தியிலேயே திரேதாயுகத்தின் தருமம் முதலிய குணங்கள் காணப்படும். திரேதாயுகத்தின் முதல் ௪00 - வருஷங்களாகிய சந்தியில் கிருதயுகத்தின் தருமம் முதலிய குணங்களிருந்துகொண்டே யிருக்கும். அந்தச் சந்திவருஷங்கள் முடிவானபிறகு அந்த யுகத்தின் சுபாவமான தருமம்முதலிய குணங்கள் மாத்திரமிருக்கும். இந்த சந்திவருஷங்களைக் கழித்து மிச்சமுள்ள வருஷங்கள்தான் யுகமென்று சொல்லப்படுகின்றன. மற்ற யுகங்களுக்கும் இப்படியே சந்தி வருஷங்களை யறியவேண்டியது. (௧௭)

---

௧௮. 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌦𑍍𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑌾𑌃 𑌪𑍍𑌰𑌭𑌵𑌨𑍍𑌤𑍍𑌯𑌹𑌰𑌾𑌗𑌮𑍇 ।
𑌰𑌾𑌤𑍍𑌰𑍍𑌯𑌾𑌗𑌮𑍇 𑌪𑍍𑌰𑌲𑍀𑌯𑌨𑍍𑌤𑍇 𑌤𑌤𑍍𑌰𑍈𑌵𑌾𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌸𑌂𑌜𑍍𑌞𑌕𑍇 ॥

| | |
|---|---|
| 𑌅𑌹𑌰𑌾𑌗𑌮𑍇 | (பிரம்மாவினுடைய) பகற் காலாரம்பத்தில் |
| 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌤𑍍* | காணப்படாததி (சூக்ஷ்ம பிரகிருதியி) லிருந்து |
| 𑌸𑌰𑍍𑌵𑌾𑌃 𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌯𑌃 | காணப்பட்ட சகல (ஸ்தூல) பிரபஞ்சங்களும் |
| 𑌪𑍍𑌰𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 | உண்டாகின்றன |
| 𑌰𑌾𑌤𑍍𑌰𑍍𑌯𑌾𑌗𑌮𑍇 | இரவுவரும்போது |
| 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌸𑌂𑌜𑍍𑌞𑌕𑍇 | காணப்படாததென்று சொல்லப்பட்ட |
| 𑌤𑌤𑍍𑌰𑍈𑌵 | அந்தப்பிரகிருதியினிடத்திலேயே |
| 𑌪𑍍𑌰𑌲𑍀𑌯𑌨𑍍𑌤𑍇 | அடங்குகின்றன. |

பிரம்மாவினுடைய பகற்காலாரம்பத்தில், காணப்படாமலிருக்கிற சூக்ஷ்ம பிரகிருதியினிடத்திலிருந்து, காணப்படுகிற ஸ்தூல பிரபஞ்சங்களுண்டாகின்றன. இரவுவரும்போது, அந்தப் பிரகிருதியினிடத்திலேயே (இந்த ஸ்தூலபிரபஞ்சங்கள்) அடங்குகின்றன.

(ஸ்ரீ) முந்தியசுலோகத்தில் “𑌯𑌦𑌹𑌃 = எந்தப் பகலோ” என்று சொல்லப்பட்டிருக்கிறதல்லவா? இந்த இடத்தில் அந்தப்

---

* (மூ) பிரம்மாவினுடைய சித்திராவஸ்தை (மாயை) யிலிருந்து. (ஸ்ரீ) காரணத்திலிருந்து. (ரா) சதுர்முகப் பிரம்மாவினுடைய தேகத்திலிருந்து. (ம) விஷ்ணுவினிடத்திலிருந்து.

பிரம்மாவினுடைய பகலென்றும் இரவென்றும் கிரகித்துக்கொள்ள வேண்டியது. (கஅ)

---

ககூ. 𑌭𑍂𑌤𑌗𑍍𑌰𑌾𑌮𑌃 𑌸 𑌏𑌵𑌾𑌯𑌂 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌪𑍍𑌰𑌲𑍀𑌯𑌤𑍇।
𑌰𑌾𑌤𑍍𑌰𑍍𑌯𑌾𑌗𑌮𑍇𑌽𑌵𑌶𑌃 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌪𑍍𑌰𑌭𑌵𑌤𑍍𑌯𑌹𑌰𑌾𑌗𑌮𑍇॥

| | |
|---|---|
| 𑌹𑍇 𑌪𑌾𑌰𑍍𑌥 ! | ஓ ! குந்திபுத்திரா ! |
| 𑌭𑍂𑌤𑌗𑍍𑌰𑌾𑌮𑌃 | பூதக்கூட்டமானது |
| 𑌅𑌵𑌶𑌃* | பராதீனமாய் |
| 𑌅𑌹𑌰𑌾𑌗𑌮𑍇 | பகலாரம்பத்தில் |
| 𑌪𑍍𑌰𑌭𑌵𑌤𑌿 | உண்டாகிறது |
| 𑌰𑌾𑌤𑍍𑌰𑍍𑌯𑌾𑌗𑌮𑍇 | இரவுவருகையில் |
| 𑌪𑍍𑌰𑌲𑍀𑌯𑌤𑍇 | அடங்குகிறது |
| 𑌸𑌏𑌵𑌾𑌯𑌂 | அதேபூதக்கூட்டம் |
| 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 | பிறந்துபிறந்து |
| (𑌪𑍍𑌰𑌲𑍀𑌯𑌤𑍇) | அடங்குகிறது. |

ஓ ! குந்திபுத்திரா ! பூதக்கூட்டமானது பராதீனமாய் (பிரம்மாவினுடைய) பகலாரம்பத்திலுண்டாய், இரவாரம்பத்தில் அடங்குகிறது. அந்தப் பூதக்கூட்டம் பிறந்து பிறந்து அடங்குகிறது. (என்றால், பிரபஞ்சங்கள் பிரளயகாலத்தில் சூக்ஷ்மமா யடங்கியிருந்து, சிருஷ்டிகாலத்தில் ஸ்தூலமா யுண்டாகின்றன வென்பது கருத்து.)

(ரா) ஐசுவரியத்தைக்கோரி, பிரம்மலோகம் முதலிய லோகங்களை யடைந்தவர்கள், அவர்களடைந்த அந்த லோகமும் அந்தலோகத்திலுள்ள ஐசுவரியமும் நாசமடைகிறபடியால், மறுபடி பூலோகத்தில் ஜநநமடைவார்களென்பது இதினால் வெளியிடப்பட்டது.

(ஸா) இந்த அத்தியாயம், கசு-முதல் ககூ-வரையிலுள்ள சுலோகங்களினால், தெரிந்துகொள்ளவேண்டிய தென்னவென்றால், சகலதேவதைகளுக்கும் முந்தியவரும், அவர்களுக்கு நியாமகருமான பிரம்மாவுக்குங்கூட கால அளவு ஏற்பட்டிருக்கிறதினாலும், சிருஷ்டியி லடங்கிய சகலலோகத்திற்கும் மேலானதாகிய பிரம்மலோகமுங்கூட அழியத்தக்கதா யிருக்கிறதினாலும், மற்றப் பிராணிகளுடையவும் மற்றலோகங்களுடையவும்கதி இப்படிப்பட்டதென்பது தானாய்விளங்கும் ஆகையாலிப்படிப்பட்ட பிரபஞ்சத்தில் நித்தியமான அல்லது அழிவற்றப் பிரயோசனமில்லையென்று விரக்தியை யடைந்து, சாசுவதமான மோக்ஷமடைய முயற்சிசெய்ய வேண்டுமென்பதே. (ககூ)

---

* (ரா) கருமாதீனமாய். (ஸ்ரீ, வீ) பகவததீனமாய், (ஸா) அத் - ந, சுகூ; அத் - சு, சு - அ, இவைகளைப் பார்க்க.

௨௰. 𑌪𑌰𑌸𑍍𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌤𑍁 𑌭𑌾𑌵𑍋𑌽𑌨𑍍𑌯𑍋𑌽𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑍋𑌽𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌤𑍍𑌸𑌨𑌾𑌤𑌨𑌃।
𑌯𑌃 𑌸 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌨𑌶𑍍𑌯𑌤𑍍𑌸𑍁 𑌨 𑌵𑌿𑌨𑌶𑍍𑌯𑌤𑌿॥

| | |
|---|---|
| 𑌯𑌃 | எதானது |
| 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌤𑍍 | (பிரகிருதி என்று சொல்லப்பட்ட) அந்த அவ்வியக்தத்தைக்காட்டிலும் |
| 𑌅𑌨𑍍𑌯𑌃 | விலக்ஷணமாயும் (வேறானதாயும்) |
| 𑌪𑌰𑌃 | உத்தமமாயும் |
| 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌃 | காணப்படாததாயும் |
| 𑌸𑌨𑌾𑌤𑌨𑌃 | அநாதியாயுமிருக்கிறதோ |
| 𑌸𑌃 𑌤𑍁 𑌭𑌾𑌵𑌃 | அந்தப்பிரம்மமானது |
| 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 | சகலபூதங்களும் |
| 𑌨𑌶𑍍𑌯𑌤𑍍𑌸𑍁 | நாசமடைகிறபோதும் |
| 𑌨 𑌵𑌿𑌨𑌶𑍍𑌯𑌤𑌿 | நாசத்தையடைகிறதில்லை. |

எதானது அவ்வியக்தத்தைக்காட்டிலும் வேறானதாயும், உத்தமமாயும், காணப்படாததாயும், அநாதியாயுமிருக்கிறதோ, அந்தப் பிரம்மமானது சகல பூதங்களும் (சகலப் பிரபஞ்சங்களும்) நாசமடைகிறபோதும் நாசமடைகிறதில்லை.

(ஸ॰) முந்திய சுலோகத்தில் சொல்லப்பட்டிருக்கிற அவ்வியக்தமென்பது, பிரகிருதி யென்றும், இந்த சுலோகத்தில் சொல்லப்பட்டிருக்கிற அவ்வியக்தமென்பது, பரப்பிரம்ம மென்றும் அறியத்தக்கது. "𑌓𑌮𑌿𑌤𑍍𑌯𑍇𑌕𑌾𑌕𑍍𑌷𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮" என்ற சுலோகம் முதல் முந்திய (க௩-வது) சுலோகம்வரையில், அக்ஷரத்தை (பிரம்மத்தை) யடைய வுபாயஞ் சொல்லப்பட்டது. இது முதல் அக்ஷரசுவரூப மிப்படிப்பட்ட தென்பது சொல்லப்படுகிறது.

(ரா) * 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌤𑍍 = அந்த அசேதன பிரகிருதியைக்காட்டிலும் (பிரம்மாவினுடைய தேகத்தைக் காட்டிலும்) 𑌪𑌰𑌃 = புருஷார்த்தமாகையா லுத்தமமாயும், 𑌅𑌨𑍍𑌯𑌃 = ஞானாகாரத்தினாலே வேறேயாயும், 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌃 = ஒரு பிரமாணத்தினாலும் தெரியக்கூடாததினாலே காணப்படாததாயும், 𑌸𑌨𑌾𑌤𑌨𑌃 = நித்தியமாயு மிருக்கிற, 𑌯𑌃𑌭𑌾𑌵𑌃=எந்தவஸ்துவானது, 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 = காரியகாரணங்களுடன் கூடிய பஞ்சமகாபூதம் முதலியவை, 𑌨𑌶𑍍𑌯𑌤𑍍𑌸𑍁=நாசமடையுங்காலத்திலும், 𑌨 𑌵𑌿𑌨𑌶𑍍𑌯𑌤𑌿 = நாசமடைகிறதில்லையோ, 𑌸𑌃=

* ஶ்லோ - ௨௰, ௨௧, இவ்விரண்டுக்கும் ஒரு அந்வயம்.

அந்தச் சேதன பிரகிருதியான புருஷன், அக்ஷர இத்யுக்த: = அக்ஷர னென்று சொல்லப்படுகிறான். தம் = அவனே, பரமாம் கதிம் = பிரகிருதி விமுக்தாத்ம ஸ்வரூபமாகிய பரமமான கதியென்று, ஆஹு: = வேதமறிந்தவர்கள் சொல்லுகிறார்கள். யம் = எந்தப் பிரகிருதி விமுக்தமான (ஜீவ) ஆத்மசுவரூபத்தை, ப்ராப்ய = அடைந்து, ந நிவர்த்தந்தே = திரும்புகிறதில்லையோ (புநர் ஜநநமடைகிறதில்லையோ தத் = அந்த சுவரூபம், மம = எனக்கு, பரமம் தாம = ஏவுதலுக்கு முக்கியமான பாத்திரமானது. அதாவது மற்ற ஜடசேதனங்களும் என்னுடைய ஏவுதலுக்குப் பாத்திரமானாலும், பிரகிருதி விமுக்தாத்மா, என்னுடைய ஏவுதலுக்கு முக்கியபாத்திர மென்பது கருத்து.

(ஸ்ரீ,வி) * தஸ்மாத்வ்யக்தாத் = அந்த பூதக்கூட்டங்களைக் காட்டிலும், அந்ய: = விலக்ஷணனையும், பாவ: = சுவதந்திரனையும், பர: = உத்தமனையும், ஸநாதந: = அநாதியாயுமிருக்கிற, ய: அவ்யக்த: = எந்தபகவானுனவர், ஸர்வேஷு - பூதேஷு = சகலபூதங்களும் நஶ்யத்ஸு = நசித்தபோதிலும், நவிநஶ்யதி = நாசமடைகிறதில்லையோ, ஸ: ஏவ = அவன்தான், அக்ஷர இத்யுக்த: = அக்ஷரனென்று சொல்லப்படுகிறான், தம் = அவனே, பரமாம் - கதிம் = அடையவேண்டிய உத்தமமான ஸ்தானமென்று, ஆஹு: = ஞானிகள் சொல்லுகிறார்கள். யம் = எதை, ப்ராப்ய = அடைந்து, ந நிவர்த்தந்தே = திரும்புகிறதில்லையோ, தத் = அதானது, மம = என்னுடைய, பரமம் - தாம = சிரேஷ்டமான ஸ்வரூபம். (௨௦)

௨௧. அவ்யக்தோऽக்ஷர இத்யுக்த ஸ்தமாஹு: பரமாம் கதிம்।
யம் ப்ராப்ய ந நிவர்த்தந்தே தத்தாம பரமம் மம॥

| | |
|---|---|
| ய: | எவர் (பரமாத்மா) |
| அவ்யக்த: | காணப்படாதவொன்றும் |
| அக்ஷர: இதி | நாசரகிதவொன்றும் |
| உக்த: | (வேதத்தில்) சொல்லப்பட்டிருக்கிறாரோ |
| தம் | அவரை |
| பரமாம் கதிம் | பரம புருஷார்த்தமாக (மேலானப் பிரயோசனமாக) |
| ஆஹு: | (வேதங்கள்) சொல்லுகின்றன |

* ௨௦ - ௨௧, சுலோகங்களுக்கு ஒரு அந்வயம்.

| | |
|---|---|
| 𑌯𑌂 | எதை |
| 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 | அடைந்து |
| 𑌨𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 | திரும்புகிறதில்லையோ |
| 𑌤𑌤𑍍 | அந்த |
| 𑌪𑌰𑌮𑌂 | உத்தமமான |
| 𑌧𑌾𑌮 | ஸ்வரூபம் |
| 𑌮𑌮 | என்னுடையது. |

எவர் காணப்படாதவரென்றும், நாசரகிதரென்றும், வேதத்தில் சொல்லப்படுகிருரோ, அவரை பரம புருஷார்த்தமாக வேதங்கள் சொல்லுகின்றன. எதை யடைந்து திரும்புகிறதில்லையோ, (மறுபடி ஜனன மடைகிறதில்லையோ) அந்த உத்தமமான சுவரூபமானது என்னு டையது. (௨௧)

---

௨௨. 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌸 𑌪𑌰𑌃 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌲𑌭𑍍𑌯𑌸𑍍𑌤𑍍𑌵𑌨𑌨𑍍𑌯𑌯𑌾।
𑌯𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌃𑌸𑍍𑌥𑌾𑌨𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌯𑍇𑌨 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌤𑌤𑌮𑍍॥

| | |
|---|---|
| 𑌹𑍇 𑌪𑌾𑌰𑍍𑌥 ! | ஓ ! பார்த்தா ! |
| 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 | பிராணிகள் |
| 𑌯𑌸𑍍𑌯 𑌅𑌨𑍍𑌤𑌃𑌸𑍍𑌥𑌾𑌨𑌿 | எவனுக்குள்ளேயிருக்கின்றனவோ |
| 𑌯𑍇𑌨 | எவனாலே |
| 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌇𑌦𑌂 | இந்த சகலப்பிரபஞ்சமும் |
| 𑌤𑌤𑌂 | வியாபிக்கப்பட்டிருக்கிறதோ |
| 𑌸𑌃 𑌪𑌰𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 | அந்தப் பரமபுருஷனைவன் |
| 𑌅𑌨𑌨𑍍𑌯𑌯𑌾* | வேறுபற்றில்லாத |
| 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 | பக்தியினாலே |
| 𑌲𑌭𑍍𑌯𑌃 | அடையத்தக்கவன். |

ஓ ! பார்த்தா ! பிராணிகள் எவனுக்குள்ளே (அடங்கி) இருக்கின் றனவோ, எவனாலே யிந்த சகலப்பிரபஞ்சமும் வியாபிக்கப்பட்டிருக் கின்றதோ, அந்தப் பரமபுருஷன் வேறு பற்றில்லாத பக்தியினாலே அடையத்தக்கவன்.

(ஶா) இந்த சுலோகத்திற்கு (ரா) பரமாத்ம பரமாயும் முந்திய சுலோகத்திற்கு முக்தாத்மபரமாயு மர்த்தஞ்செய்திருக்கிருர். (௨௨)

---

* (பா) ஆத்மவிஷயமான.

௨௩. யத்ர காலே த்வநாவ்ருத்திமாவ்ருத்திஞ்சைவ யோகிந꞉।
ப்ரயாதா யாந்தி தம் காலம் வக்ஷ்யாமி பரதர்ஷப॥

| | |
|---|---|
| ஹே பரதர்ஷப | ஓ! அர்சுன! |
| யத்ர காலே* | எந்தக்காலத்தில் |
| ப்ரயாதா꞉ | (தேகத்தைவிட்டு) போன |
| யோகிந꞉† | யோகிகள் |
| அநாவ்ருத்திம் | அபுனர்ஜனனத்தையும் (ஜன்மமில்லாததையும்) |
| ஆவ்ருத்திஞ்சைவ | புனர்ஜனனத்தையும் |
| யாந்தி | அடைகிறார்களோ |
| தம் காலம்‡ | அந்தக்காலத்தை |
| வக்ஷ்யாமி | சொல்லுகிறேன். |

ஓ! அர்க்சுன! எந்தக்காலத்தில் தேகத்தைவிட்டுப்போகிற யோகிகள் புனர் ஜன்மத்தை யடையார்களோ, (எந்தக்காலத்தில் தேகத்தை விட்டுப்போகிற யோகிகள்) புனர் ஜனனத்தை யடைவார்களோ, அந்தக்காலத்தைச் சொல்லுகிறேன் கேள். (௨௩)

---

௨௪. அக்நிர்ஜ்யோதிரஹ꞉ ஶுக்ல꞉ ஷண்மாஸா உத்தராயணம்।
தத்ர ப்ரயாதா கச்சந்தி ப்ரஹ்ம ப்ரஹ்மவிதோ ஜநா꞉॥

| | |
|---|---|
| அக்நி꞉§ | அக்கினியபிமானிதேவதை |
| ஜ்யோதி꞉¶ | பிரகாசத்திற்கு அபிமானிதேவதை |
| அஹ꞉ ‖ | பகற்காலத்திற்கு அபிமானிதேவதை |
| ஶுக்ல꞉ + | சுக்கிலபக்ஷத்திற்கு அபிமானிதேவதை |

---

* (ஸ்ரீ) (ரா) (ம) (ஸ்ரீ,வி) காலாபிமானி தேவதைகள் வாசஞ்செய்யப்பட்ட உலகங்களின் மார்க்கமாய்.

† (ஶம்) (ஸ்ரீ) (ரா) ஞானயோகிகள், கருமயோகிகள்.

‡ (ஸ்ரீ) (ரா) (ம) (ஸ்ரீ,வி) காலாபிமானி தேவதைகள் வாசஞ்செய்யப்பட்ட உலகங்களின் மார்க்கத்தை.

§ - ¶ (ஸ்ரீ,வி) அர்ச்சிஸ் என்கிற தேவதை.

‖ (ஸ்ரீ,வி) அபிசித், தேவதை, அதாவது, மத்தியானகாலத்திற்கு அபிமானி தேவதையுள்பட பகல்காலத்திற்கு அபிமானிதேவதை.

+ (ஸ்ரீ,வி) பௌர்ணமியின் அபிமானி தேவதை யுள்பட சுக்கிலபக்ஷாபிமானி தேவதை,

| | |
|---|---|
| ஷண்மாஸா꞉ உத்தராயணம் * | ஆறுமாதங்களடங்கிய உத்தராயணத்திற்கு அபிமானிதேவதை |
| தத்ர | அந்த தேவதைகளுடைய லோகங்களின் மார்க்கமாய் |
| ப்ரயாதா꞉ | போன |
| ப்ரஹ்மவித³꞉ | பிரம்மஞானிகளான |
| ஜநா꞉ | ஜனங்கள் |
| ப்ரஹ்ம | பரப்பிரம்மத்தை |
| க³ச்ச²ந்தி | அடைகிறார்கள். |

அக்கினிக்கும், பிரகாசத்திற்கும், பகற்காலத்திற்கும், சுக்கிலபக்ஷத்திற்கும், ஆறுமாதங்களடங்கிய உத்தராயணத்திற்கும், அபிமானி தேவதைகளுடைய லோகங்களின் மார்க்கமாய்ச் செல்லும் ஞானிகள் பரப்பிரம்மத்தை (கிரமமாய்) அடைகிறார்கள்.

(ஸ॰) (ஸ்ரீ) உபாசகர்கள் கிரமக்கிரமமாய் அந்தந்த லோகங்களையடைந்து, பிறகு பிரம்மத்தை யடைகிறார்கள். இவர்கள்தான் கிரமமுக்தியை யடையப்பட்டவர்கள். (௨௪)

---

௨௫. தூ⁴மோ ராத்ரிஸ்ததா² க்ருஷ்ண꞉ ஷண்மாஸா த³க்ஷிணாயநம்।
தத்ர சாந்த்³ரமஸம் ஜ்யோதிர்யோகீ³ ப்ராப்ய நிவர்ததே॥

| | |
|---|---|
| தூ⁴ம꞉ | புகைக்கு அபிமானிதேவதை |
| ராத்ரி꞉ | இரவுக்கு அபிமானிதேவதை |
| ததா² | அப்படியே |
| க்ருஷ்ண꞉ | கிருஷ்ணபக்ஷாபிமானிதேவதை |
| ஷண்மாஸா꞉ த³க்ஷிணாயநம் | ஆறுமாதங்க ளடங்கிய தெக்ஷிணாயனாபிமானி தேவதை |
| தத்ர | அந்த தேவதைகளுடைய லோகங்களின் மார்க்கமாய் |
| (ப்ரயாதா꞉) | போன |
| யோகீ³ | கருமயோகியானவன் |
| சாந்த்³ரமஸம் ஜ்யோதி꞉ | சந்திரப்பிரகாசத்தோடு கூடின சுவர்க்கலோகத்தை |

* (ஓ) (ஸ்ரீ,வி) உத்தராயணத்திலுள்ள ஆறுமாதங்களில் ஒவ்வொரு மாசாபிமானி தேவதைகளுடைய லோகத்தையும், பிறகு உத்தராயணாபிமானி தேவதையின் லோகத்தையும். (ஸ்ரீ,வி) விஷுவ - அபிமானி தேவதையுங்கூட இதில் சேர்ந்ததாக கிரகிக்கத்தக்கது.

ப்ராப்ய அடைந்து
நிவர்த்ததே திரும்புகிறான்.

புகைக்கும், இரவுக்கும், கிருஷ்ணபக்ஷத்திற்கும், தக்ஷிணாயனத்திற்கும், அபிமானியான தேவதைகளுடைய லோகங்களின் மார்க்கமாய்ச் செல்லும் யோகியானவன், சந்திரப்பிரகாசமுள்ள சுவர்க்கலோகத்தை யடைந்து திரும்புகிறான். (புநர் ஜந்மத்தை யடைகிறான்.)

(ரா) இந்த தூமாதிமார்க்கத்தில் பிதுருலோகாதிகளும் சேர்ந்ததாகக் கொள்ளவேண்டியது.

(ஸ்ரீ,வி) முந்திய உ௪-வது சுலோகத்திற் சொன்ன அர்ச்சிராதி மார்க்கத்தில் போகிறவன் யாரென்றால், அந்தியகாலத்தில் பிரம்மத்தை ஸ்மரித்துக்கொண்டு தேகத்தை விடுகிற மோக்ஷமடையத் தகுந்தவனே. தூமாதிமார்க்கத்தில் போகிறவன் யாரென்றால், கருமயோகியாயிருந்து அந்தியகாலத்தில் பிரம்மத்தை ஸ்மரிக்காமல் தேகத்தை விடுகிற சுவர்க்காதி லோகங்களை யடையத்தகுந்தவனே. இஷ்டமான காலத்திலும், இஷ்டமான மார்க்கத்திலும், பிரம்மலோகம் முதலிய லோகங்களில் சஞ்சரிக்கிற அல்லது, அந்தந்த லோகங்களில் வாசஞ்செய்கிற மற்ற ஞானிகள் கருமிகள் இவர்கள் இந்த இரண்டு மார்க்கங்களி லொன்றிற்றான் போகவேண்டுமென்பது அவசியமல்ல. (உ௫)

---

உ௬. ஶுக்லக்ருஷ்ணே கதீ ஹ்யேதே ஜகத꞉ ஶாஶ்வதே மதே।
ஏகயா யாத்யநாவ்ருத்திம் அந்யயாவர்த்ததே புந꞉॥

ஶுக்லக்ருஷ்ணே* — சுக்கில கிருஷ்ணபக்ஷ முதலியவற்றி னபிமானி தேவதைகளின் உலகங்களான
ஏதே கதீ — இந்தவழிகள்
ஜகத꞉ — (ஞானிகள் கருமிகளான அதிகாரிகளடங்கிய) ஜகத்திற்கு
ஶாஶ்வதே மதே — சாசுவதமானவையென் றெண்ணப்பட் டிருக்கின்றன
ஏகயா — (முந்திய) ஒரு மார்க்கத்தினாலே
அநாவ்ருத்திம் — அபுநர் ஜன்மத்தை
யாதி — அடைகிறான்
அந்யயா — (பிந்திய) மற்றொரு மார்க்கத்தினாலோ

* (ரா) ஶுக்ல = ஞானப்பிரகாசம். க்ருஷ்ண = அஜ்ஞானம் (ஸ்ரீ) ஶுக்ல = பிரகாசமுள்ளது. க்ருஷ்ண = இருட்டுள்ளது.

வ-௩௪
சுவகடு௫௩

மறுபடியும்
ஜன்மத்தையடைகிறான்.

(முன் சொல்லப்பட்ட) சுக்கில, கிருஷ்ணபக்ஷம் முதலிய அபிமானி தேவதைகளின் உலகங்களாகிய மார்க்கங்கள் ஞானிகளுக்கும் கருமிகளுக்கும் (தனித்தனியாய்) சாசுவதமா யுள்ளனவென்பது என் அபிப்பிராயம். முந்தியமார்க்கத்தில் போகிற ஞானிகள் புநர் ஜன்மத்தை யடைகிறதில்லை. பிந்தியமார்க்கத்தில் போகிற ஸகாம கருமிகள் புநர்ஜன்மத்தை யடைகிறார்கள்.

(ஸா) இந்த அத்தியாயத்தின் உச-வது சுலோகத்தில் பிரகாசம் பொருந்திய (அக்நிர்ஜ்யோதி) அர்ச்சிராதி மார்க்கமொன்றும் உரு-வது சுலோகத்தில் அந்தகாரம்பொருந்திய (தூமோ ராத்ரி) தூமாதி மார்க்கமொன்றும்சொல்லி இந்த சுலோகத்தில் அந்த விரண்டு மார்க்கங்களில் போகத்தக்கவர்க ளின்னார், அவர்கள் அடையும்பல மின்னதென்று சொல்லப்பட்டது. (உச-சு-த்தில்) (ப்ரஹ்மவிதோ ஜநா꞉=பிர்ம்ம ஞானிகளான ஜனங்களென்றும் (உரு-சு-த்தில்) யோகீ=யோகி என்றும் சொல்லியிருக்கிறதினாலே வியாக்கியாதாக்கள் அவர்களைமுறையே ஞானியென்றும் கருமயோகியென்றும் அர்த்தம் செய்திருக்கிறார்கள். அத்வைத சித்தாந்தப்படிக்கு விதேக கைவல்லியமாகிய சத்தியோ மூக்தி யடையத்தகுந்த பரமார்த்த ஸந்நியாஸியாகிய ஜீவன் முக்தனானவன் மேற்கண்ட அர்ச்சிராதி மார்க்கத்தில் போகவேண்டியவனாகிறானா? (க்ஷேத்ர கர்மி) பாபபுண்ணிய மிசிரகருமிகள் மேற்கண்ட இரண்டு மார்க்கங்களி லெந்த மார்க்கத்திலாவதுபோக யோக்கியர்க ளாகிறார்களா? என்கிற சந்தேகம் ஜனிக்கலாம். சத்தியோ முக்தியென்பது ஜீவன் முக்ததசையிலிருந்து பிராரப்த தேகம்போனதும் விதேக கைவல்லியமடைவது. இவனுக்குப் போகவேண்டியமார்க்கமென்பதேயில்லை. "யத்ர யத்ர
"ம்ருதோ ஜ்ஞாநீ யேந வா கேந ஹேதுநா। யதா ஸர்வகதம் வ்யோம தத்ர
"தத்ர லயம் கத꞉। கடாகாஶவதாத்மாநம் விலயம் வேத்தி தத்த்வத꞉। ஸ கச்சதி
"நிராலம்பம் ஜ்ஞாநாலோகம் ஸமந்தத꞉॥ — ஞானியானவன் எங்கெந்த
"விடத்தில் எவ்விதமாய் மரணமடைந்தாலும் எங்கும் பரவிய ஆகா
"சம்போல் அந்தந்த விடத்திலேயே லயமடைகிறான். வாஸ்தவமாய்
"கெடாகாசம்போல் (கெடமுடைந்தவுடனே கெடாகாசமானது மகா
"காசத்தில் லயமடைவதுபோல்) ஆத்மாவானவன் லயமடைகிறதாக
"அறியத்தக்கது, அவன் நிராலம்பமாகிய (தனக்கு ஆசிரயமான வஸ்

"துவையுடையவனல்லாதவனுய்) ஞானப்பிரகாசத்தை எவ்விடத்திலு "மடைகிருன்." (பைங்கலோபநிஷத் நாலாவதத்தியாயம் பார்க்க) (ஸு௨௰௬-நீ) கிரமமுக்தியடையத் தகுந்தவனும் நிஷ்காம கருமத்தினல் சித்தசுத்தி துவாராஞானமடைந்தவனு மெவனே அவன்தான் அர்ச்சிராதி மார்க்கமாய்ப் போகிறவன். இந்த விருவகைமுக்தி விஷயமாய் வராஹோபநிஷத் நான்காவது அத்தியாயத்தில் சொல்லப்படுகிறதாவது.

[illegible]

"சுகர் முக்தர். வாமதேவர் முக்தர். அவர்களைத்தவிர முக்தியடை-
"ந்தவர்களில்லை. (இவ்விருவருடைய மார்க்கத்தைத்தவிர முக்திக்கு
"வேறே மார்க்கமில்லையென்பது தாத்பரியம்) இந்த லோகத்தில்
"சுகமார்க்கத்தை யெந்த தைரியசாலிகள் அனுசரிக்கிருர்களோ அவர்
"கள் ஸத்தியோ உடனே (என்ருல், இந்தத் தேகம்போனஉடனே)
"முக்தர்களாகிருர்கள். இந்த லோகத்தில் வாமதேவ மார்க்கத்தை
"யெப்போது மனுசரிக்கிறவர்கள் மறுபடி மறுபடி பிறப்பையடைந்து
"சத்துவத்தோடு கூடின யோகமார்க்கங்களினுலேயும் ஸாங்கிய
"(ஞான) மார்க்கங்களினுலேயும் கருமங்களினுலேயும் கிரமமுக்தர்க
"ளாகிருர்கள்- சுகமார்க்கம் வாமதேவ மார்க்கமென இரண்டு மார்க்கங்

" கள் தேவனு லேற்படுத்தப்பட்டன. சுகமார்க்கமானது பக்ஷிமார்க்
" கம் (அதாவது, குறித்த விடத்திற்கு பக்ஷியானது அதிசீக்கிரம் பறந்து
" போவதுபோல் தேகம் போனஉடனே முக்தியடைவது) என்றும்
" வாமதேவமார்க்கமானது எறும்பு மார்க்கம் (அதாவது, குறித்தவிடத்
" திற்கு எறும்பு போகவேண்டுமானல் ஊர்ந்து போவதுபோல ஒவ்
" வொரு லோகமாகபோய் கடைசியில் மறுபிறப்பற்ற பிர்ம்மலோகம்
" வைகுண்டம் முதலியவைகளை யடைவது) என்றும் சொல்லப்பட்
" டிருக்கிறது. விதிவாக்கியங்களினுலேயாவது நிஷேத வாக்கியங்களி
" னுலேயாவது மகாவாக்கிய விசாரத்தினுலேயாவது சாங்கியயோக சமா
" தியினுலேயாவது அஸம்பிரக்ஞா சமாதியினுலே யாவது தன் ஆத்ம
" சுவரூபத்தை யறிந்து நிர்மலமானவர்கள் சுகமார்க்கத்தினுலெ பரம
" பதத்தை (மோக்ஷத்தை) அடைகிருர்கள். யமம் முதலிய ஆசனங்களி
" னுலே யுண்டாகிற ஆயாசமாகிய அடாப்பியாசத்தினுலே அடிக்கடி
" அநேக தடைகளினு லுண்டான அணிமாதி (சித்தி) களுக்குள்பட்டவ
" னய் நல்லபலனை யடையாமல் (அதாவது, அர்ச்சிராதி மார்க்கங்களா
" கிய தேவதைகளுடைய லோகத்தை யடைந்து) மறுபடி நல்லகுலத்
" தில் பிறந்து முந்திய (ஜன்மத்தின்) வாசனையினுலேயே மறுபடி யோ
" காப்பியாசத்தினுல் வாமதேவ மார்க்கத்தினுலே அந்த விஷ்ணுவினு
" டைய பரமபதமாகிய முக்தியை யடைகிருன். பிர்ம்மபிராப்தியை
" கொடுக்கத்தக்கவும் மங்களகர மானவும் இந்த விரண்டு மார்க்கங்க
" ளிருக்கின்றன. இவைகளி லொன்று சத்தியோ முக்தியையும் மற்
" ருென்று கிரமமுக்தியையும் கொடுக்கத்தக்கது."

இதில்கண்ட வாமதேவமார்க்கம்தான் அர்ச்சிராதி மார்க்கமென்று கொள்ளத்தக்கது. தூமாதி மார்க்கமானது பலாபேக்ஷயுடன் கருமம் செய்த கருமயோகி செல்லும்மார்க்கம், அவர்கள் அந்தக் கருமபலனை அனுபவித்தவுடன் தாழ்ந்த ஜன்மங்களை யடைவார்கள். க்ஷுத்திர கருமிகள் (பாபபுண்ணிய மிசிரகருமம் செய்தவர்கள்) சுவர்க்காதி லோகங்களையாவது நரகாதிலோகங்களையாவது அடையாமல் அந்தந்த கருமபலனுக்குத் தக்கபடி இந்த உலகத்தில் மறுபடிமறுபடி பிறப்பை யடைகிருர்கள். (உசு)

---

உஎ. நைதே ஸ்ருதீ பார்த² ஜாநந் யோகீ³ முஹ்யதி கஶ்சந।
தஸ்மாத்ஸர்வேஷு காலேஷு யோக³யுக்தோ ப⁴வார்ஜுந॥

| | |
|---|---|
| 𑌹𑍇 𑌪𑌾𑌰𑍍𑌥 | ஓ! குந்திபுத்திரா! |
| 𑌨𑍈𑌤𑍇 | இந்த இரண்டு மார்க்கங்களையும் |
| 𑌸𑍃𑌤𑍀 | |
| 𑌜𑌾𑌨𑌨𑍍 | அறிகிற |
| 𑌕𑌶𑍍𑌚𑌨 | (ஞான) யோகியான ஒருவனும் |
| 𑌯𑍋𑌗𑍀 | |
| 𑌨𑌮𑍁𑌹𑍍𑌯𑌤𑌿* | மோகத்தை யடைகிறதில்லை |
| 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 | ஆகையினாலே |
| 𑌹𑍇 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 | ஓ! அர்ச்சுனா! |
| 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 | எல்லாக்காலங்களிலும் |
| 𑌕𑌾𑌲𑍇𑌷𑍁 | |
| 𑌯𑍋𑌗𑌯𑍁𑌕𑍍𑌤𑌃† | (ஞான) யோகியாக |
| 𑌭𑌵 | ஆகக்கடவாய். |

ஓ! குந்திபுத்திரா! (அர்ச்சிராதி தூமாதி) இவ்விரண்டு மார்க்கங்களை யறிந்திருக்கிற ஞானயோகியான ஒருவனும் அக்ஞானத்தை யடைகிறதில்லை. ஆகையினாலே, ஓ! அர்ச்சுனா! எல்லாக் காலங்களிலும் ஞானயோகி யாகக்கடவாய். (என்றால், புநர் ஜனனத்தைக் கொடுக்கும்படியான காம்மிய கருமத்தைச் செய்யாதே யென்பது தாத்பரியம்.) (உஎ)

---

உஅ. 𑌵𑍇𑌦𑍇𑌷𑍁 𑌯𑌜𑍍𑌞𑍇𑌷𑍁 𑌤𑌪𑌃𑌸𑍁𑌚𑍈𑌵 𑌦𑌾𑌨𑍇𑌷𑍁 𑌯𑌤𑍍𑌪𑍁𑌣𑍍𑌯
𑌫𑌲𑌂 𑌪𑍍𑌰𑌦𑌿𑌷𑍍𑌟𑌮𑍍 । 𑌅𑌤𑍍𑌯𑍇𑌤𑌿 𑌤𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌵𑌿𑌦𑌿𑌤𑍍𑌵𑌾 𑌯𑍋𑌗𑍀 𑌪𑌰𑌂
𑌸𑍍𑌥𑌾𑌨𑌮𑍁𑌪𑍈𑌤𑌿 𑌚𑌾𑌦𑍍𑌯𑌮𑍍 ॥

| | |
|---|---|
| 𑌵𑍇𑌦𑍇𑌷𑍁 | வேதங்களிலேயும் |
| 𑌯𑌜𑍍𑌞𑍇𑌷𑍁 | யக்ஞங்களிலேயும் |
| 𑌤𑌪𑌃𑌸𑍁 | தபசுகளிலேயும் |
| 𑌦𑌾𑌨𑍇𑌷𑍁𑌚𑍈𑌵 | தானங்களிலேயும் |
| 𑌯𑌤𑍍 | எந்த |
| 𑌪𑍁𑌣𑍍𑌯𑌫𑌲𑌂 | புண்ணியபலன் |
| 𑌪𑍍𑌰𑌦𑌿𑌷𑍍𑌟𑌂 | சொல்லப்பட்டிருக்கிறதோ |
| 𑌤𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌂 | அந்த சகலபலனையும் |

---

* (ஸ்ரீ) சுவர்க்காதி சுகங்களை யபேக்ஷிக்காமல் பரமேசுவர நிஷ்டனாகவாகிறான். (மீ,வி) மரணகாலத்தில் பகவானை மறக்கிறதில்லை.

† (ரா) அர்ச்சிராதி மார்க்கங்களில் போகவேண்டு மென்கிற எண்ணமாகிய யோகத்துடன் கூடினவனாக. (மீ,வி) பக்தியோடு ஞானகருமம் இரண்டையு மனுஷ்டிக்கிறவனாக.

| | |
|---|---|
| யோகீ | (ஞான) யோகியானவன் |
| அத்யேதி | அதிக்கிரமிக்கிருன் (இதைவிட மேலான பலனை யடைகிருன் அல்லது இது அற்பபலமென்று நினைக்கிருன்) |
| (கிம்) ச | பின்னும் |
| இதம் விதித்வா } * | இதைத்தெரிந்து |
| ஆத்யம் | மூலகாரணமான |
| பரம் ஸ்தாநம் } † | உத்தமமான ஸ்தானத்தை |
| உபைதி | அடைகிருன். |

வேதங்களிலேயும், யக்ஞங்களிலேயும், தபசுகளிலேயும், தானங்களிலேயும், எங்கெந்தப் புண்ணியபலன் சொல்லப்பட்டிருக்கிறதோ, அந்த சகல பலனையும் ஞானயோகியானவன் அற்பமாக நினைக்கிருன். பின்னு மிதைத் தெரிந்து, மூலகாரணமானவும், உத்தமமானவும் ஸ்தானத்தை யடைகிருன். (உஅ)

இதி ஸ்ரீமத்பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம்
யோகசாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுநஸம்வாதே
அக்ஷரப்ரஹ்மயோகோ நாம
அஷ்டமோऽத்யாய:.
ஸ்ரீக்ருஷ்ணாயபரப்ரஹ்மணே நம:.
அக்ஷரபரப்பிரம்மயோகமென்கிற எட்டாவது அத்தியாயம்
முற்றிற்று.

---

* (ஶம்) இந்த அத்தியாயத்தில், அர்ச்சுனன் கேட்ட ஏழு கேள்விகளுக்குச் சொல்லப்பட்டிருக்கிற உத்தரங்களைத் தெரிந்து அநுஷ்டித்து. (ஸ்ரீ) எட்டு கேள்விகளுக்குச் சொல்லியிருக்கிற உத்தரங்களைத் தெரிந்து அந்தப்படி யநுஷ்டித்து ஞானியாய் (ரா) (ஏழாவது - எட்டாவது) இரண்டத்தியாயங்களில் சொல்லப்பட்டிருக்கிற பகவானுடைய மகிமைகளை யறிந்து. (மீ,வி) அத்தியாத்ம முதலியவைகளையும், சுக்கிலகிருஷ்ண மார்க்கங்களையும் அறிந்து.

† (ஶம்) பிரம்மத்தை. (ஸ்ரீ) (மீ,வி) விஷ்ணுவினுடைய பரமபதமாகிய ஸ்தானத்தை.

𑌶𑍍𑌰𑍀𑌃.

𑌨𑌵𑌮𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃.

# ஒன்பதாவது அத்தியாயம்.

---

𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚.

க. 𑌇𑌦𑌂 𑌤𑍁 𑌤𑍇 𑌗𑍁𑌹𑍍𑌯𑌤𑌮𑌂 𑌪𑍍𑌰𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑍍𑌯𑌨𑌸𑍂𑌯𑌵𑍇।
𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌹𑌿𑌤𑌂 𑌯𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌮𑍋𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑍇𑌽𑌶𑍁𑌭𑌾𑌤𑍍॥

| | |
|---|---|
| 𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚 | பகவான்சொல்லுவது |
| 𑌯𑌤𑍍 | எதை |
| 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾* | அறிந்து |
| 𑌅𑌶𑍁𑌭𑌾𑌤𑍍† | சம்சாரத்திலிருந்து |
| 𑌮𑍋𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑍇 | விடுபடுவாயோ |
| (𑌤𑌤𑍍) | அப்படிப்பட்ட |
| 𑌗𑍁𑌹𑍍𑌯𑌤𑌮𑌂‡ | அதிரகசியமான |
| 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌹𑌿𑌤𑌂§ | உபாசனையோடுகூடின |
| 𑌇𑌦𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 ¶ | இந்தப் பிரம்மஞானத்தை |
| 𑌅𑌨𑌸𑍂𑌯𑌵𑍇‖ | அசூயையில்லாத (பொறுமையற்ற) |

---

* (ரா) அறிந்து அனுஷ்டித்து.

† (ரா) என்னை யடைய விரோதமான சகல பாபங்களி லிருந்தும்.

‡ (ஸ்ரீ) 𑌗𑍁𑌹𑍍𑌯𑌂 = தருமஞானம், 𑌗𑍁𑌹𑍍𑌯𑌤𑌰𑌂 = ஆத்மஸ்வரூபஞானம், 𑌗𑍁𑌹𑍍𑌯𑌤𑌮𑌂 = பரப்பிரம்மஞானம்.

§ (ஶம்) அநுபவஞ்ஞானத்தோடுகூடின. (ரா) உபாசனை யிவ்விதமாகச் செய்யவேண்டுமென்பதை யறிவது விஞ்ஞானம். அதோடுகூடின. (ஸ்ரீ,வி) விசேஷமா யறியவேண்டியதோடு கூடியிருக்கிற.

¶ (ஶம்) இதுவரையில் சொல்லிவந்ததும், இனிசொல்லப்போகிறது மாகிய ஞானத்தை. (ரா) 𑌇𑌦𑌂 = பக்திருபமான உபாசனையென்கிற பெயரையுடைய, 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 = ஞானத்தை. (ஸ்ரீ,வி) இனி சொல்லப்போகிற ஞானத்தை.

‖ (ஸ்ரீ) அடிக்கடி தன்மகிமையையே கிருஷ்ணசுவாமி சொல்லிக்கொள்ளுகிறுரென்று பொறுமைகொள்ளாத. (ரா) பகவான் சொல்லுகிற அவருடையமகிமைகள் அவ்வளவும் வாஸ்தவமென்று நம்பியிருக்கிற.

𑌤𑍇 — உன்பொருட்டு
𑌪𑍍𑌰𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 — செவ்வையாய்ச்சொல்லுகிறேன்.

எதை யறிந்து சம்சார (பந்த) த்தி லிருந்து விடுபடுவாயோ, அப்படிப்பட்ட அதிரகசியமானவும், உபாசனையோடு கூடினவுமான இந்தப் பிரம்மஞானத்தை, அசூயையற்ற உன்பொருட்டு செவ்வையாய்ச் சொல்லுகிறேன்.

(ஸ்ரீ,வி) ஏழாவது அத்தியாயத்தின் கடைசியில் சொன்ன, 𑌸𑌾𑌧𑌿𑌭𑍂𑌤𑌾𑌧𑌿𑌦𑍈𑌵𑌂𑌸𑌾𑌧𑌿𑌯𑌜𑍍𑌞𑌂 - முதலிய பகவானுடைய மகிமைகள் இந்த அத்தியாயத்தில் விஸ்தரித்துச் சொல்லப்படுகின்றன. எட்டாவது அத்தியாயத்திலேயே ஏனவை சொல்லப்படவில்லை யென்றாலோ, அர்சுனன், 𑌸𑌾𑌧𑌿𑌭𑍂𑌤𑌾𑌧𑌿𑌦𑍈𑌵𑌂𑌸𑌾𑌧𑌿𑌯𑌜𑍍𑌞𑌂, முதலியவை எவையென்று கேழ்க்காமல், 𑌅𑌧𑌿𑌭𑍂𑌤𑌂, 𑌅𑌧𑌿𑌯𑌜𑍍𑌞𑌂, முதலியவை எவையென்று கேட்டதினால், அவைகளுக்குமட்டும் அந்த எட்டாவது அத்தியாயத்தில உத்தரஞ் சொல்லப்பட்டது. (௧)

---

௨. 𑌰𑌾𑌜𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌰𑌾𑌜𑌗𑍁𑌹𑍍𑌯𑌂 𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌮𑌿𑌦𑌮𑍁𑌤𑍍𑌤𑌮𑌮𑍍।
𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌾𑌵𑌗𑌮𑌂𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌂 𑌸𑍁𑌸𑍁𑌖𑌂𑌕𑌰𑍍𑌤𑍁𑌮𑌵𑍍𑌯𑌯𑌮𑍍॥

| | |
|---|---|
| 𑌇𑌦𑌂 | இந்தஞானமானது |
| 𑌰𑌾𑌜𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 | வித்தைகளுக்கெல்லாம் சிரேஷ்டம் |
| 𑌰𑌾𑌜𑌗𑍁𑌹𑍍𑌯𑌂 | இரகசியங்களுக்கெல்லாம் சிரேஷ்டம் |
| 𑌉𑌤𑍍𑌤𑌮𑌂 | உத்தமமானது |
| 𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌂 | பரிசுத்தமானது |
| 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌾𑌵𑌗𑌮𑌂* | பிரத்தியக்ஷமாயறியத்தகுந்தது |
| 𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌂† | தருமமார்க்கத்தினின்று விலகாதது |
| 𑌕𑌰𑍍𑌤𑍁𑌂 | செய்கிறதற்கு (அநுஷ்டிப்பதற்கு) |
| 𑌸𑍁𑌸𑍁𑌖𑌂 | மிகவும் சுலபமானது |
| 𑌅𑌵𑍍𑌯𑌯𑌂‡ | அழிவற்றது. |

(முந்திய சுலோகத்தில் சொன்ன அதிரகசியமான) இந்தஞானமானது வித்தைகளுக்கெல்லாம் சிரேஷ்டம், இரகசியங்களுக்கெல்லாம்

---

* (ரா) (உ) பிரத்தியக்ஷமாய் என்னைக் காண்பிவிக்கத் தகுந்தது.

† (ரா) மோக்ஷசாதனமானது. (உ) (ஸ்ரீ,வி) சகல ஜகத்தையும் தரிக்கிறதினாலே, (𑌧𑌰𑍍𑌮𑌃) தருமம் பகவான். பகவத் விஷயமான ஞானமானதால் 𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌂, என்று சொல்லப்பட்டது.

‡ (ஸ்ரீ,வி) அழிவற்ற பலத்தைக்கொடுப்பது.

சிரேஷ்டம், உத்தமமானது, பரிசுத்தமானது, பிரத்தியக்ஷமா யறியத் தக்கது, தருமத்தோடு கூடினது, அனுஷ்டிப்பதற்கு மிகவும் சுலபமானது, அழிவற்றபலத்தைக் கொடுப்பது. (௨)

---

௩. அஶ்ரத்ததாநா: புருஷா தர்மஸ்யாஸ்ய பரந்தப।
அப்ராப்ய மாம் நிவர்தந்தே ம்ருத்யுஸம்ஸாரவர்த்மநி॥

| | |
|---|---|
| பரந்தப | ஓ! அர்சுன! |
| அஸ்ய தர்மஸ்ய * | பக்தியோடுகூடி யிருக்கிற ஞானமாகிற தருமத்தை |
| அஶ்ரத்ததாநா: † | நம்பாமலிருக்கிற |
| புருஷா: | புருஷர்கள் |
| மாம் | என்னை |
| அப்ராப்ய | அடையாமல் |
| ம்ருத்யுஸம்ஸாரவர்த்மநி | மிருத்தியுவுடன்கூடிய சம்சார மார்க்கத்தில் |
| நிவர்தந்தே | திரும்பிவருகிறார்கள். |

ஓ! அர்சுன! இந்த பக்தியோடுகூடிய ஞானமாகிற தருமத்தை நம்பாமலிருக்கிற புருஷர்கள் என்னை யடையாமல், மிருத்தியுவுடன் கூடிய சம்சார மார்க்கத்தில் திரும்பிவருகிறார்கள். (என்றால், துக்கமாகிற சம்சாரத்தை யடையும்பொருட்டே மறுபடி ஜனனமடைகிறார்கள்.) (௩)

---

௪. மயா ததமிதம் ஸர்வம் ஜகதவ்யக்தமூர்த்திநா।
மத்ஸ்தாநி ஸர்வபூதாநி ந சாஹம் தேஷ்வவஸ்தித:॥

௫. ந ச மத்ஸ்தாநி பூதாநி பஶ்ய மே யோகமைஶ்வரம்।
பூதப்ருந்ந ச பூதஸ்தோ மமாத்மா பூதபாவந:॥

| | |
|---|---|
| அவ்யக்தமூர்த்திநா | தெரியப்படாமலிருக்கிறரூபத்தையுடைய |
| மயா ‡ | என்னாலே |

---

* (ஶம) இந்த ஆத்மஞான ஸ்வரூப விஷயத்திலேயும், அதினுடைய பலன் விஷயத்திலேயும், (ரா) இந்த உபாசனையாகிற தருமத்தில்.

† (ஶம) (ரா) விசுவாச மற்றிருக்கிற. (ஸ்ரீ,வி) மோக்ஷ ஏதுவானதென்கிற விஷயத்தில் சிரத்தையற்றிருக்கிற.

‡ (ரா) அந்தரியாமியா யிருக்கிற என்னாலே. (ஸ்ரீ) ஜகத்காரணமா யிருக்கிறவென்னாலே.

| | |
|---|---|
| இதம் ஸர்வம் ஜகத் * | இந்த சகலப்பிரபஞ்சமும் |
| ததம் | வியாபிக்கப்பட்டிருக்கிறது |
| ஸர்வபூதாநி † | சகலபூதங்களும் |
| மத்ஸ்தாநி ‡ | என்னிடத்திலிருக்கின்றன |
| அஹம் § | நான் |
| தேஷு ¶ | அவைகளிடத்திலே |
| நாவஸ்தித: ‖ | இருக்கிறதில்லை |
| பூதாநி + | பூதங்கள் |
| மத்ஸ்தாநி ந ச × | என்னிடத்திலிருப்பவையல்ல |
| மே | என்னுடைய |
| ஐஶ்வரம் யோகம் ÷ | அற்புதமானசக்தியை |
| பஶ்ய | பார் |
| மம ஆத்மா ∴ | என்னுடைய ஸ்வரூபமானது |

* (ரா) (ஸ்ரீ,வி) சேதனு சேதனமான இந்த சகலப்பிரபஞ்சம்.

† (ஸ்ரீ) சேதனு சேதனமான சகலப் பிரபஞ்சங்கள்.

‡ (ஶம்) என்னை ஆத்மாவாக வுடைத்தா யிருக்கின்றன. (ரா) அந்தரியாமியான என்னுடைய அதீனமான ஸ்திதியை யுடைத்தாயிருக்கின்றன. (ஸ்ரீ,வி) என்னுடைய ஆதாரத்தின் பேரில் நிற்கின்றன.

§ - ¶ - ‖ (ஶம்) (ஸ்ரீ) நான் அவைகளிலே ஒட்டி யிருப்பதில்லை. எப்படியென்றால், ஆகாசத்தைப்போல. (ரா) நான் அவைகளுடைய அதீனமான ஸ்திதியை யுடையவனல்ல. என்றால், என்னுடைய இருப்புக்கு அவைகள் ஆதாரமல்ல. (உ) (ஸ்ரீ,வி) ஜலமானது பூமியை எப்படி ஆதாரமாகவுடையதோ, அப்படி என்னுடைய இருப்புக்கு ஆதாரம் வேண்டியதில்லை யென்பது கருத்து.

+ - × (ரா) ஜலம் பூமியிலொட்டி யிருப்பதுபோல பூதங்கள் என்னிடத்திலொட்டி யிருப்பதில்லை. (ஸ்ரீ,வி) நான் அப்பிராகிருதன். பிராகிருதமான வஸ்துக்களென்னை யொட்டமாட்டா. ஆகையால், பூதங்கள் என்னிடத்தி லொட்டியிருக்கவில்லை.

÷ (ஸ்ரீ) அகடிதகடனு சாதுரியமாகிய யோகமாயா வைபவம். அல்லது, (ரா) (ஸ்ரீ) அசாதாரணமான (வேறெங்கு மில்லாத) யோகத்தை.

∴ (ரா) என்னுடைய சங்கற்பமானது. (ஸ்ரீ,வி) என்னுடைய தேகமானது

| | |
|---|---|
| 𑌭𑍂𑌤𑌭𑍃𑌤𑍍 | பூதங்களைத்தரிக்கிறதும் (தாங்குகிறது) |
| 𑌭𑍂𑌤𑌭𑌾𑌵𑌨𑌃 (𑌚) } * | { பூதங்களை யுண்டாக்குகிற அல்லது ரக்ஷிக்கிறதுமானபோதிலும் |
| 𑌭𑍂𑌤𑌸𑍍𑌥𑌃 𑌨 } † | பூதங்களிடத்தி லிருப்பதன்று. |

தெரியப்படாமலிருக்கிற ரூபத்தை யுடைய என்னாலே இந்த சகலப் பிரபஞ்சமும் வியாபிக்கப்பட்டிருக்கிறது. சகலபூதங்களு மென்னிடத்தி லிருக்கின்றன. நான் அவைகளிடத்திலே யிருக்கிறதில்லை. பூதங்க ளென்னிடத்தி லிருப்பதில்லை. என்னுடைய அற்புதமான சக்தியைப்பார். என்னுடைய ஸ்வரூபமானது பூதங்களைத் தரிக்கிறதும், பூதங்களை யுண்டாக்குகிற அல்லது இரக்ஷிக்கிறதுமானபோதிலும், பூதங்களிடத்திலிருப்ப தன்று.

(ஸ்ர) இந்த சுலோகங்களில் பரஸ்பர வித்தியாசங் காணப்படும். எப்படியென்றால், பூதங்கள் என்னிடத்தி லிருக்கின்றன வென்று ஒரு இடத்திலும், இல்லையென்று ஒரு இடத்திலும், நான் பூதங்களி லில்லையென்று ஒரு இடத்திலும், நான் பூதங்களைத் தரிக்கிறேனென்று ஒருவிடத்திலும், சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் விரோதமல்ல. பிரம்மம் தனக்குச் சுவாதீனமான மாயாசக்தி மூலமாய்ப் பிரபஞ்சங்களுடைய சிருஷ்டி, ஸ்திதி, லயாதிகளுக்குக் காரணமாயிருக்கிறபடியால், அந்தப் பிரபஞ்சங்களெல்லாம் பிரம்மத்துக் குள்ளாகவே யிருக்கின்றன. பரமார்த்தமாய்ப் பார்த்தால் அந்த நிர்குணமானதும், அசங்கமானதுமான பிரம்ம ஸ்வரூபத்துக்கும் மாயாகாரியங்களுக்கும் சம்பந்த மில்லாததினாலே வஸ்துக்கள் பிரம்மத்தினிடத்திலு மில்லை, பிரம்மம் வஸ்துக்களிடத்திலு மில்லையென்பது தாத்பரியம். (௪-௫)

---

௬. 𑌯𑌥𑌾𑌕𑌾𑌶𑌸𑍍𑌥𑌿𑌤𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌵𑌾𑌯𑍁𑌃 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰𑌗𑍋 𑌮𑌹𑌾𑌨𑍍।
𑌤𑌥𑌾 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌮𑌤𑍍𑌸𑍍𑌥𑌾𑌨𑍀𑌤𑍍𑌯𑍁𑌪𑌧𑌾𑌰𑌯॥

| | |
|---|---|
| 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰𑌗𑌃 | சர்வவியாபியாயிருக்கிறதும் |
| 𑌮𑌹𑌾𑌨𑍍 | நிறைந்திருக்கிறதுமான |
| 𑌵𑌾𑌯𑍁𑌃 | வாயுவானது |
| 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 | எப்போதும் |
| 𑌯𑌥𑌾 | எப்படி |

* (ரா) பூதங்களைத் தரிக்கிறதும், நியமிக்கிறதும்.

† (ரா) பூதங்களின் ஆதாரத்தின்பேரில் நானிருக்கவில்லை. (ஸ்ரீ,வி) பூதங்களிலொட்டி யிருக்கவில்லை.

| | |
|---|---|
| 𑌆𑌕𑌾𑌶𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 | ஆகாசத்தி லிருக்கிறதோ (ஆகாசத்திலொட்டாமலிருக்கிறதோ) |
| 𑌤𑌥𑌾 | அப்படியே |
| 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 | சகலபூதங்களும் |
| 𑌮𑌤𑍍𑌸𑍍𑌥𑌾𑌨𑌿 𑌇𑌤𑌿 * | என்னிடத்திலிருப்பதாக |
| 𑌉𑌪𑌧𑌾𑌰𑌯 | தெரிந்துகொள். |

சர்வவியாபகமாயும், நிறைந்து மிருக்கிற வாயுவானது எப்போதும் எப்படி யாகாசத்தில் (ஒட்டாமல்) இருக்கிறதோ அப்படி சகலபூதங்களும் என்னிடத்தி லொட்டாம லிருப்பதாகத் தெரிந்துகொள்.

(ஸ்ரீ,வி) எப்படி யொட்டாம லிருக்கலாமென்றாலோ, ஜலத்தின் ரேணுக்களை வாயு கிரகித்துவந்து நமக்கு சீதளத்தை யுண்டுபண்ணினாலும், அந்த ஜலரேணுக்கள் வாயுவி லொட்டாததுபோல. (கூ)

---

எ. 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 𑌮𑌾𑌮𑌿𑌕𑌾𑌮𑍍 ।
𑌕𑌲𑍍𑌪𑌕𑍍𑌷𑌯𑍇 𑌪𑍁𑌨𑌸𑍍𑌤𑌾𑌨𑌿 𑌕𑌲𑍍𑌪𑌾𑌦𑍌 𑌵𑌿𑌸𑍃𑌜𑌾𑌮𑍍𑌯𑌹𑌮𑍍 ॥

| | |
|---|---|
| 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 | ஓ! குந்திபுத்திரா! |
| 𑌕𑌲𑍍𑌪𑌕𑍍𑌷𑌯𑍇 † | பிரளயகாலத்தில் |
| 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 ‡ | சகலபூதங்களும் |
| 𑌮𑌾𑌮𑌿𑌕𑌾𑌂 § 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 ¶ | என்னுடைய மாயையை |
| 𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 ‖ | அடைகின்றன |
| 𑌕𑌲𑍍𑌪𑌾𑌦𑍌 | சிருஷ்டிகாலத்தில் |
| 𑌤𑌾𑌨𑌿 | அவைகளை |
| 𑌪𑍁𑌨𑌃 | மறுபடியும் |

---

* (ரா) காணப்படாத மூர்த்தியையுடைய என்னிடத்தி லிருப்பதாக.

† (ரா) சதுர்முகப் பிரம்மாவினுடைய முடிவுகாலத்தில்.

‡ (ரா) (ஸ்ரீ,வி) ஸ்தாவர ஜங்கம ரூபங்களான சகல பூதங்கள்.

§ (ரா) என்னுடைய சரீரமான. (ஸ்ரீ,வி) என்னுடைய அதீனமான.

¶ (ரா) தமஸ் என்கிற பெயரையுடைய பிரகிருதியை. (ஸ்ரீ,வி) முக்குணமயமான பிரகிருதியை.

‖ (ரா) என் சங்கற்பத்தா லடைகின்றன.

| | |
|---|---|
| அஹம் | நான் |
| விஸ்ருஜாமி* | சிருஷ்டிக்கிறேன். |

ஓ! கௌந்தேயா! பிரளயகாலத்தில் சகலபூதங்களும் என்னுடைய மாயையை யடைகின்றன. (மாயையில் லயத்தை யடைகின்றன.) சிருஷ்டிகாலத்தில் மறுபடியும் அவைகளை நான் சிருஷ்டிக்கிறேன். (௭)

---

௮. ப்ரக்ருதிம்ஸ்வாமவஷ்டப்ய விஸ்ருஜாமிபுந:புந:।
பூதக்ராமமிமம்க்ருத்ஸ்நமவசம்ப்ரக்ருதேர்வசாத்॥

| | |
|---|---|
| ஸ்வாம்† | என்னுடைய (சுவாதீனமான) தான |
| ப்ரக்ருதிம் | மாயையை |
| அவஷ்டப்ய‡ | ஆசிரயித்து (சுவீகரித்து) |
| அவசம்§ | பிராசீனகருமாதீனமான |
| க்ருத்ஸ்நம் இமம் பூதக்ராமம் | சகலமான இந்த பூதக்கூட்டங்களை |
| புந:புந: | மறுபடிமறுபடி |
| ப்ரக்ருதே: வசாத் | பிராசீன கருமசுவபாவத்தை யநுசரித்து |
| விஸ்ருஜாமி | சிருஷ்டிக்கிறேன். |

என்னுடையதான மாயையை சுவீகரித்து பிராசீன கருமாதீனமான சகலபூதங்களையும் அந்த பிராசீன கருமத்தை யநுசரித்தே மறுபடி மறுபடி சிருஷ்டிக்கிறேன்.

---

* (மா) சங்கற்பத்தினால் சிருஷ்டிக்கிறேன். (ஸ்ரீ,வி) பலவிதமாக சிருஷ்டிக்கிறேன்.

† (ஸ்வா) அத் - ௪, சு - ௬, பார்க்க.

‡ (ஶ) பிரகிருதியை யாசிரயித்து - ஆசிரயிக்காமலே சிருஷ்டிக்க நான் வல்லவனானாலும், திருடமாயுள்ள ஒருவன் விளையாட்டினிமித்தியம் கையில் தடி பிடிப்பது போல். (ஸ்ரீ,வி) உபாதானகாரணமா யாசிரயித்து.

§ (மாம) அவித்தை முதலிய தோஷங்களுக்கு வசப்பட்டிருப்பதினாலே அசுவதந்திரமான. (ஸ்ரீ,வி) பிரகிருதிக்கு சுவாதீனமானதால் பராதீனமான. அல்லது அ = விஷ்ணு, வசம் = சுவாதீனமாயிருக்கிற. என்றால், விஷ்ணுவினுடைய சுவாதீனமான பிரகிருதிக்கு சுவாதீனமாயிருப்பதினாலே விஷ்ணுவினுடைய சுவாதீனமாயிருக்கிற என்றும் அர்த்தம். (ஸ்வா) அத் - அ, சு - ௧௧, பார்க்க.

(ஈ) என்னுடைய சுவாதீனமான பிரகிருதியை, அவஷ்டப்⁴ய = எட்டுவிதமாய்ப் பரிணமிக்கச்செய்து, ப்ரக்ருதேர்வஶாத் = பிரகிருதிக்கு சுவாதீனமா யிருக்கிறதினாலே, அவஶம் = பராதீனமா யிருக்கிற, இமம் க்ருத்ஸ்நம் = இந்த தேவ மனுஷிய திர்யங் முதலிய சகலமான பூதங்களை மறுபடி மறுபடி சிருஷ்டிக்கிறேன். (அ)

---

௯. ந ச மாம் தாநி கர்மாணி நிப³த்⁴நந்தி த⁴நஞ்ஜய।
உதா³ஸீநவதா³ஸீநமஸக்தம் தேஷு கர்மஸு॥

| | |
|---|---|
| ஹே த⁴நஞ்ஜய | ஓ! அர்சுன! |
| தாநி கர்மாணி | அந்த சிருஷ்டிகருமங்கள் |
| தேஷு கர்மஸு | அந்தக்கருமங்களிலே |
| அஸக்தம்* | அபிமானமற்றும் |
| உதா³ஸீநவத் ஆஸீநம் † | சம்பந்தமற்றவனைப்போலவுமிருக்கிற |
| மாம் | என்னை |
| ந நிப³த்⁴நந்தி | பந்திக்கமாட்டா. |

ஓ! அர்சுன! அந்த சிருஷ்டி கருமங்களில் அபிமானமற்றும். கருமங்களைச் செய்யாதவனைப்போலவும், அல்லது சம்மந்தமற்றவனைப் போலவும் இருக்கிற என்னையந்த சிருஷ்டிகருமங்கள் பந்திக்கிறதில்லை.

(ஈர) மேற்சொன்ன பலவித சிருஷ்டியானது விஷமசிருஷ்டியா யிருக்கிறதி (அதாவது சகலபிராணிகளைச் சமமாய் சிருஷ்டிக்காமல் தேவ மனுஷியாதி பலவிதங்களா யிருக்கிறதி) னாலே எனக்குப் புண்ணிய பாபங்களை யாவது தயவற்றவன் பக்ஷபாத முள்ளவன் என்கிற அப வாதத்தையாவ துண்டாக்கிறதில்லை. ஏனென்றால், அந்தந்தப் பிராணிக ளுடைய பூர்வகருமத்திற்குத் தக்கபடி சிருஷ்டிப்பதினாலும், பலாபே க்ஷையாவது கர்த்திருத்வாபிமானமாவது இல்லாததினாலுந்தான். (௯)

---

* (ஸ) பந்தத்திற்கு ஏதுவான கருமபலனில் அபேக்ஷையாவது கர்த்திருத் துவாபிமானமாவது இல்லாம லிருக்கிற.

† (ஸ்ரீ,வி) கருமங்கள் செய்தபோதிலும் கருமஞ்செய்யாதவனுக்கு எப்படிப் பலனில்லையோ, அப்படி எனக்குப் பலனில்லை ஆகையால், செய்யாதவனைப்போ லிருக்கிற

௧௦. 𑌮𑌯𑌾𑌧𑍍𑌯𑌕𑍍𑌷𑍇𑌣 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌃 𑌸𑍂𑌯𑌤𑍇 𑌸𑌚𑌰𑌾𑌚𑌰𑌮𑍍।
𑌹𑍇𑌤𑍁𑌨𑌾𑌨𑍇𑌨 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌜𑌗𑌦𑍍𑌵𑌿𑌪𑌰𑌿𑌵𑌰𑍍𑌤𑌤𑍇॥

| | |
|---|---|
| 𑌹𑍇 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 | ஓ! குந்திபுத்திரா! |
| 𑌅𑌧𑍍𑌯𑌕𑍍𑌷𑍇𑌣* | சாக்ஷியாயிருக்கிற |
| 𑌮𑌯𑌾† | என்னாலே (என்னுடைய சந்நிதி நிமித்தியத்தினாலே) |
| 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌃‡ | மாயையானது |
| 𑌸𑌚𑌰𑌾𑌚𑌰𑌂 | ஸ்தாவர ஜங்கமங்களுடன்கூடின பிரபஞ்சத்தை |
| 𑌸𑍂𑌯𑌤𑍇 | உண்டுபண்ணுகிறது |
| 𑌅𑌨𑍇𑌨 𑌹𑍇𑌤𑍁𑌨𑌾 | இந்த நிமித்தியத்தினாலே |
| 𑌜𑌗𑌤𑍍 | பிரபஞ்சமானது |
| 𑌵𑌿𑌪𑌰𑌿𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 | திரும்பிக்கொண்டே யிருக்கிறது. |

ஓ! குந்திபுத்திரா! சாக்ஷியாயிருக்கிற என்னுடைய சந்நிதான விசேஷத்தினாலே மாயையானது ஸ்தாவர ஜங்கமத்தோடு கூடின இந்தப் பிரபஞ்சத்தை யுண்டுபண்ணுகிறது. இந்த சந்நிதான விசேஷமாகிற) நிமித்தியத்தினாலே பிரபஞ்சமானது திரும்பிக்கொண்டே யிருக்கிறது.

---

௧௧. 𑌅𑌵𑌜𑌾𑌨𑌨𑍍𑌤𑌿 𑌮𑌾𑌂 𑌮𑍂𑌢𑌾 𑌮𑌾𑌨𑍁𑌷𑍀𑌂 𑌤𑌨𑍁𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌮𑍍।
𑌪𑌰𑌂 𑌭𑌾𑌵𑌮𑌜𑌾𑌨𑌨𑍍𑌤𑍋 𑌮𑌮 𑌭𑍂𑌤𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌮𑍍॥

| | |
|---|---|
| 𑌮𑌮 | உன்னுடைய |
| 𑌪𑌰𑌂 𑌭𑌾𑌵𑌂 § | பரமதத்துவத்தை (சிரேஷ்டமான சுவரூபத்தை) |
| 𑌅𑌜𑌾𑌨𑌨𑍍𑌤𑌃 | தெரியாத |
| 𑌮𑍂𑌢𑌾𑌃 | மூடர்கள் |

* - † - ‡ (ரா) பிராணிகளுடைய பூர்வஜன்ம கருவத்தை யனுசரித்து சத்தியசங்கற்பத்தோடுகூடிய வென்னால் பார்க்கப்பட்ட பிரகிருதியானது. (ஸ்ரீ.வி) முக்கியகர்த்தாவா யிருக்கிற என்னாலேவப்பட்ட என் அதீனமான பிரகிருதியானது. அல்லது, (புருஷனாகிய) அதிபதியாகிய என்னால் (ஸ்திரீயாகிய) பிரகிருதியானது, 𑌸𑌚𑌰𑌾𑌚𑌰𑌂 𑌸𑍂𑌯𑌤𑍇 = சராசரப் பிரபஞ்சத்தைப் பிரசவிக்கிறது. அதாவது பிரசவிக்கிறான்.

§ (ரா) ஜனங்களுக்கு அநுக்கிரகஞ் செய்யும் பொருட்டு தயவுடன் நான் செய்திருக்கிற இந்த அவதாரத்தின் கருத்தை. (ஸ்ரீ.வி) என்னுடைய சிரேஷ்டமான உண்மையை.

| | |
|---|---|
| ஹு஬ுதமஹெமுவுரம் ஈரம் | பூதங்களுக்கெல்லாம் மகா ஈசனுயிருக்கிற என்னை |
| ஈானுஷீம் தநுஂ | மனுஷியதேகத்தை |
| ஆஶ்ரிதம் | ஆசிரயித்திருக்கிறவனுக (எண்ணி) |
| அவஜாநந்தி* | அவமதிக்கிறுர்கள். |

என்னுடைய பரம தத்துவத்தை அறியாத மூடர்கள் பூதங்களுக்கெல்லாம் மகா ஈசனுயிருக்கிற என்னை, மனுஷியதேகத்தை யாசிரயித்திருக்கிறதாக அவமதிக்கிறுர்கள்.

(ஸா) அவதார ரூபங்களை மனுஷிய ரூபங்களாக எண்ணுகிறவர்கள் மூடர்களென்பது கருத்து. (கக)

---

கஉ. மொவாஶாமொவகஊ்ராணொ மொவஜ்ஞாநாவிெவதஸஃ।
ராக்ஷஸீமாஸுரீஂசெவ வ்ரக்ருதிஂமொஹிநீஂஶ்ரிதாஃ॥

| | |
|---|---|
| மொவாஶாஃ† | வீணுசையையுடைய |
| மொவகஊ்ராணஃ‡ | வீணுன கருமங்களையுடைய |
| மொவஜ்ஞாநாஃ$ | வீணுன ஞானங்களையுடைய |
| விெவதஸஃ¶ | அவிவேகிகள் |
| மொஹிநீஂ‖ | மோகிக்கச்செய்கிறதும் |
| ராக்ஷஸீஂ+ | இராக்ஷஸமாயும் |

---

* (ரா) சாதாரண மனுஷியனுகவெண்ணி அவமதிக்கிறுர்கள்.

† (ஶ்ரீ) அந்நியதேவதைகளை யாசிரயித்தால் சீக்கிரம் பலன் கிடைக்குமென்கிற வீணுன ஆசை. (ம) தான் செய்கிற கருமமே தனக்குப் பலன்கொடுக்குமென்கிற ஆசை.

‡ (ஶ்ரீ) வீணுசையினுல் செய்கிற கருமமானது என்னுடைய ஆராதனையல்லவாகையால் அது வீணுனது.

$ (ஶ்ரீ) தான் கற்றறிந்த சாஸ்திராதி ஞானங்களை, குயுக்தி வாதங்களினுல் வீணுக்கிக்கொள்ளுகிறது. (ரா) என்னுடையதா யிருக்கிற (என்றுல், என்னுடைய சேஷபூதமாயும் சரீரமாயுமிருக்கிற) சகல சராசரப் பிரபஞ்சத்தில் விபரீத ஞானமுடைய.

¶ (ஶ்ரீ) (ஶ்ரீ,வி) கெட்டவழியில் பிரவிருத்தித்திருக்கிற மனதை யுடையவர்கள். (ரா) சகலத்திலும் யதார்த்த ஞானமற்றவர்கள்.

‖ (ஶ்ரீ) புத்தியைக்கெடுக்கிற. (ரா) மனுஷியாவதாரஞ் செய்திருக்கிற என்னுடைய பூர்ணகருணை, சர்வோத்தமத்துவம், முதலியவைகளை மறைக்கிற.

\+ (ஶ்ரீ) பிறருக் குபத்திரவம் செய்ய எண்ணமுடையதான தாமச சுவபாவம். (ரா) என்னுடைய மகாத்தான குணங்களை மறக்கடிக்கிற சுவபாவம்.

𑌆𑌸𑍁𑌰𑍀𑌂* — ஆசுரமாயுமிருக்கிற
𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌮𑍇𑌵 — சுவபாவத்தையே
𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃 — ஆசிரயித்தவர்களாய் (அவமதிக்கிறார்கள்.)

வீணான ஆசையையும், வீணான கருமங்களையும், வீணான ஞானங்களையுமுடைய அவிவேகிகள் மோகிக்கச் செய்கிறதாகிய இராக்ஷஸ ஆசுர சுவபாவத்தையே ஆசிரயிக்கிறதினாலென்னை அவமதிக்கிறார்கள். (௧௨)

---

௧௩. 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌸𑍍𑌤𑍁 𑌮𑌾𑌂 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌦𑍈𑌵𑍀𑌂 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃।
𑌭𑌜𑌨𑍍𑌤𑍍𑌯𑌨𑌨𑍍𑌯𑌮𑌨𑌸𑍋 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌭𑍂𑌤𑌾𑌦𑌿𑌮𑌵𑍍𑌯𑌯𑌮𑍍॥

𑌪𑌾𑌰𑍍𑌥 — ஓ! அர்ச்சுந!
𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌸𑍍𑌤𑍁 — மகாத்மாக்களோ
𑌦𑍈𑌵𑍀𑌂 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌆𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃 † — தேவதைகள் சம்பந்தமான சுவபாவத்தை (சாத்விக சுவபாவத்தை) யாசிரயித்தவர்களாய்
𑌭𑍂𑌤𑌾𑌦𑌿𑌂 — பிரபஞ்சத்திற்குக் காரணமானவும்
𑌅𑌵𑍍𑌯𑌯𑌂‡ — நாசமற்றவுமான
𑌮𑌾𑌂 — என்னை
𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾§ — அறிந்து
𑌅𑌨𑌨𑍍𑌯𑌮𑌨𑌸𑌃 — வேறிடத்தில் மனதை வைக்காதவர்களாய்
𑌭𑌜𑌨𑍍𑌤𑌿 — பஜிக்கிறார்கள்.

ஓ! அர்ச்சுந! மகாத்மாக்கள், சாத்துவிக சுவபாவத்தையே யாசிரயித்து, பிரபஞ்சத்திற்குக் காரணமானவும் நாசமற்றவுமான என்னையறிந்து, அன்னிய தேவதைகளிடத்தில் மனதை வைக்காமல் என்னிடத்திலேயே மனதைவைத்து, (என்னையே) பஜிக்கிறார்கள். (௧௩)

---

* (ஸ்ரீ) அதிகாசை, அகங்காரம், சோபம் முதலிய குணங்களையுடைய ராஜஸ சுவபாவம். (ஸ்வா) (காஶ்யபே) காசியபப்பிரஜாபதிக்கு திதி என்பவளிடத்திலுண்டானவர்கள் அசுரர். புலஸ்தியமகரிஷியின் சந்ததிகள் இராக்ஷஸர். என்று சொல்லப்படுகிறார்கள்.

† (ஸ்ரீ,வி) முக்தியோக்கியமாகிய உத்தம சுவபாவத்தை யாசிரயித்தவர்கள் (ஸ்வா) இந்த தெய்வசம்பத்து விஷயம், அத் - ௧௬, பார்க்க.

‡ (ரா) வாக்கு மனசுகளுக்கெட்டாத நாமகருமங்களையுடைய.

§ (ரா) பூர்ணதயவோடுகூடி சாதுக்களை இரக்ஷிக்கும்பொருட்டு மனுஷிய ரூபமா யவதாரஞ் செய்திருக்கிறேனென்றறிந்து.

௧௪. ஸததம் கீர்த்தயந்தோ மாம் யதந்தஶ்ச த்ருடவ்ரதா꞉।
நமஸ்யந்தஶ்ச மாம் பக்த்யா நித்யயுக்தா உபாஸதே॥

| | |
|---|---|
| யதந்த꞉* | இந்திரியநிக்கிரகம், சமம், தமம், தயை, முதலிய தருமங்களோடு கூடினவர்களாய் |
| ஸததம் | எப்போதும் |
| மாம் | பிரம்மசுவரூபியான பகவானாகிய என்னை |
| கீர்த்தயந்த꞉† | கீர்த்தனஞ் செய்கிறவர்களாயும் |
| த்ருடவ்ரதா꞉‡ | சலிக்காத அல்லது ஸ்திரமான விரதமுடையவர்களாயும் |
| நித்யயுக்தா꞉§ | ஜாக்கிரதையுள்ளவர்களாயும் |
| பக்த்யா | பக்தியினாலே |
| மாம் | இருதயவாசியாகிய ஆத்மாவான என்னை |
| நமஸ்யந்த꞉ | நமஸ்காரஞ் செய்கிறவர்களாயும் |
| உபாஸதே | உபாசிக்கிறார்கள். |

இந்திரியநிக்கிரகம், சமம், தமம், தயை முதலிய தருமங்களோடு கூடினவர்களாய் எப்போதும் பிரம்ம சுவரூபியாகிய பகவானான என்னைக் கீர்த்தனஞ் செய்கிறவர்களாயும், சலிக்காத அல்லது ஸ்திரமான விரதமுடையவர்களாயும், ஜாக்கிரதை யுடையவர்களாயும், பக்தியினாலே என்னை நமஸ்காரஞ் செய்கிறவர்களாயும், உபாசிக்கிறார்கள்.

(ஸ்ரீ) சிலர் ஈசுவரபூஜை முதலியவைகளில் பிரயத்தினஞ் செய்கிறவர்களாயும், திருடமான விரதத்தை யுடையவர்களாயும், சிலர் எப்போதும் என்னை ஜாக்கிரதையோடும் பக்தியோடும் கீர்த்தனஞ் செய்கிறவர்களாயும், சிலர் ஜாக்கிரதையோடு பக்தியினாலே எப்போதும் என்னை நமஸ்காரஞ் செய்கிறவர்களாயும் உபாசிக்கிறார்கள்.

(ரா) ஸததம் கீர்த்தயந்த꞉ = எப்பொழுதும் என்னுடைய குண விசேஷங்களைச் சொல்லுகிற என்னுடைய நாமங்களை ஸ்மரிக்கிறதினால் உண்டாகிற மயிர்க்கூச்சம், தழதழத்த ஸ்வரம், இவைகளோடு கூடினவர்களாயும், நாராயண கிருஷ்ண வாசுதேவாதி நாமங்களை யுச்சரிக்கிறவர்களாயும், த்ருடவ்ரதா யதந்த꞉ = என்னுடைய ஆராதனை

* (ம) ஈசுவரனுடைய நிஜ சுவரூபத்தையறிய முயலுகிற.

† (ஸ்ரீ,வி) இராமகிருஷ்ணாதி நாமங்களைக் கீர்த்தனஞ்செய்கிறவர்களாகவும்.

‡ (ஸ்ரீ,வி) உபவாசாதி திருடவிரதங்களுடையவர்கள்.

§ (ஸ்ரீ,வி) எப்பவும் என்னிடத்தில் மனதுள்ளவர்களாயும்.

ளிலேயும், ஆராதனைக் குபயோகமாய்க் கோவில்கட்டுவது நந்தவனம் வைப்பது முதலிய காரியங்களிலேயும், திருடமான முயற்சி யுள்ளவர்களாயும், பக்த்யா நமஸ்யந்த:—அதிக பக்தியால் வணக்கமுடைய மனது, புத்தி, அகங்காரம், கால்கள், கைகள், சிரசு, இந்த எட்டு அங்கங்களினால் கல்லு, முள்ளு, புழுதி முதலிய இடங்களென்று பாராமல் தெண்டாகாரமாய் நமஸ்காரஞ் செய்கிறவர்களாயும், மாம்—என்னை, நித்யயுக்தா:—எப்போதும் என்னையே யடையவேண்டுமென்கிற எண்ணத்தோடு கூடியும், தங்களையும், தங்களைச்சேர்ந்த சகல வஸ்துக்களையும் பரமாத்மாவுக்கு அர்ப்பிதஞ் செய்கிறோமென்கிற நிச்சயத்தோடு கூடியும், உபாஸதே—உபாசிக்கிறார்கள். (௧௪)

---

௧௫. ஜ்ஞாநயஜ்ஞேந சாப்யந்யே யஜந்தோ மாமுபாஸதே।
ஏகத்வேந ப்ருதக்த்வேந பஹுதா விஶ்வதோமுகம்॥

அந்யே — பின்னும்சிலர்
விஶ்வதோமுகம்* — சர்வாத்மகனை
மாம் — என்னை
ஜ்ஞாநயஜ்ஞேந† — ஞானமாகிறயக்ஞத்தினாலே
யஜந்த: — பூஜித்துக்கொண்டும்
ஏகத்வேந‡ — அபேதபாவனையினாலும்
ப்ருதக்த்வேந§ — பேதபாவனையினாலும்
பஹுதா¶ — அனேகவிதமாய்
உபாஸதே — உபாசிக்கிறார்கள்.

---

* (ஶா) விசுவரூபியான.

† (ரா) பகவத்விஷய ஞானமாகிற யக்ஞத்தினாலே (ஸ்ரீ) சகலமும் பிரம்ம சுவரூபமென்கிற ஞானமாகிய யக்ஞத்தினாலே.

‡ (ஶா) பரமாத்மா ஒருவனே யென்கிற பரமார்த்த தரிசனத்தினாலே. (ஆந) தானே பிரம்மம்; பிரம்மமே தான்; என்கிற அபேதபாவனையினாலே.

§ (ஸ்ரீ) நான் ஈசுவரனுடைய தாசன் என்கிற பாவனையினாலே. (ஶா) ஒரே விஷ்ணுவானவர், சூரிய, சந்திராதிதேவதா ரூபியாயிருக்கிறானென்கிற பாவனையினாலே.

¶ (ஸ்ரீ) பிரம்மருத்திராதி ரூபங்களாய்.

பின்னும் சிலர் சர்வாத்மகனுன என்னை ஞானமாகிற யக்ஞத்தி ஞலே பூஜித்துக்கொண்டும், சிலர் அபேத பாவனையினுலேயும், சிலர் பேதபாவனையினுலேயும், வெகுவிதமாய் உபாசிக்கிருர்கள். இதிலுள்ள, கெநே—சிலர் என்கிற பதத்தை, பிந்திய இடங்களிலும் அந்வயித்துக் கொள்ளவேண்டும்.

(ரா) சில மகாத்மாக்கள் முந்திய சுலோகத்திற் சொல்லியபடி கீர்த்தன நமஸ்காராதிகளினுலேயும், ஞானமாகிய யக்ஞத்தினுலே யும், என்னை பஜித்து உபாசிக்கிருர்கள். எப்படியென்ருல், ஷுயெக்ஷேந = ஜகதாகாரத்தினுலே, விஸ்வதோமுவம்=சகலசேஷியான மாம்= என்னை, வஹுயா = அநேகவிதமாய், ஏகக்ஷேந = ஒன்றேயென் றறிந் துபாசிக்கிருர்கள். அதெப்படியென்ருல், பகவானுனை வாசு தேவன் நாமரூபங்க ளற்றிருந்த சூக்ஷ்மசிதசித் வஸ்துக்களை சரீரமா யுடைத்தாயிருந்து சத்திய சங்கற்பனுன அவர் ஸ்தூலசித சித்வஸ்துக் களின் தேகியாகத் தானுக வேண்டுமென்று சங்கல்பித்த மாத்திரத் தில், தேவ - மனுஷிய - பசு - பக்ஷி - மிருக - ஸ்தாவராதி வெவ்வேறு விசித்திரமான வஸ்துக்களை சரீரமாக உடைத்தானவராய் அவரொரு வரோ யிருக்கிருரொன்று அனுசந்தானஞ்செய்து உபாசிக்கிருர்கள்.

(ஶ்ரீ) (ஶ்ரீ,வி) ஏகக்ஷேந = எங்கும் நிறைந்திருக்கிற நாராயணன் ஒருவர்தானென்று சிலரும், ஷுயக்ஷேந = அந்த நாராயணன் சகல வஸ்துக்களைக் காட்டிலும் விலக்ஷணனென்று சிலரும், வஹுயா = அந்த நாராயணன் அநேக ரூபங்களை யுடைத்தானவனென்று சிலரும், உபாசிக்கிருர்களென்பது இந்த சுலோகத்தின் கருத்து. (௧௫)

---

௧௬. அஹம் க்ரதுரஹம் யஜ்ஞஃ ஸ்வதாஹமஹமௌஷதம்।
மந்த்ரோஹமஹமேவாஜ்யம் அஹமக்நிரஹம் ஹுதம்॥

| | |
|---|---|
| க்ரதுஃ | வேதோக்தமான அக்கினிஷ்டோமாதிகள் |
| அஹம் | நானே |
| யஜ்ஞஃ | ஸ்மிருதிகளினுல் விதிக்கப்பட்ட பஞ்சம காயக்ஞங்கள் |
| அஹம் | நானே |
| ஸ்வதா | பிதுருக்களை யுத்தேசித்துச் செய்யப்படும் சிரார்த்தாதிகள் |
| அஹம் | நானே |

ஔஷதம்* மருந்து அல்லது தான்னியாதிகள்
அஹம் நானே
மந்த்ர:† வேதமந்திரம்
அஹம் நானே
ஆஜ்யம் { நெய் (ஹோமத்திற்கு வேண்டிய திரவியங்கள்)
அஹம் நானே
அக்நி: { அக்கினி (ஆகவநீயம், காருகபத்தியம், தக்ஷிணாக்கினி)
அஹம் நானே
ஹுதம் ஹோமம்
அஹமேவ நானே.

வேதோக்தமான அக்கினிஷ்டோமாதிகளும், பஞ்சமகா யக்ஞாதிகளும், சிரார்த்தாதிகளும், மருந்து அல்லது தானியாதிகளும், வேதமந்திரங்களும், யக்ஞாதிகளி லுபயோகப்படு நெய்யும், அக்கினியும், ஹோமமும், நானே.

(ஸ்ரீ,வி) யஜ்ஞ: = முக்கிய தேவதையை யுத்தேசித்துச் செய்யப்பட்ட பிரதான ஹோமம். இந்த சுலோகத்தில் "கிரது முதலியவைகள் நான்" என்று சொன்னதின் தாத்பரிய மென்னவென்றால், அவைகளுக்கு நான் நியாமகனுயும், அவைகளின் அவிஸ் முதலியவைகளைப் புஜிப்பவனுயு மிருப்பதினாலே, அவைகள் நானென்ற அபேதமானது, உபசாரமாகச் சொல்லப்பட்டது. இதின் ஏழாவது அத்தியாயம், கக-வது, சுலோகத்தின் வியாக்கியானத்தைப் பார்க்க. (கசு)

---

கஎ. பிதாஹமஸ்ய ஜகதோ மாதா தாதா பிதாமஹ:।
வேத்யம் பவித்ர மோங்கார ருக்ஸாமயஜுரேவ ச॥

அஸ்ய } இந்த ஜகத்திற்கு
ஜகத: }
பிதா தகப்பனும்
மாதா‡ தாயும்

---

* (பா) ஹவிஸ்.

† (ஸ்ரீ) தேவபிதுருக்களுக்கு ஹோமாதிகளால் அர்ப்பணஞ் செய்யப்படும்போது உச்சரிக்கப்படுவதாகிய மந்திரம்.

‡ (ஸ்ரீ,வி) ஜ்ஞாதா = அறிகிறவனும்.

| | |
|---|---|
| பிதாமஹ:* | பிதாமகனும் |
| தாதா† | தரிக்கிறவனும் |
| வேத்யம்‡ | அறியவேண்டியவஸ்துவும் |
| பவித்ரம் | பரிசுத்தவஸ்துவும் |
| ஓங்கார:§ | ஓங்காரமும் |
| ருக்¶ | இருக்குவேதமும் |
| ஸாம‖ | சாமவேதமும் |
| யஜுரேவ ச+ | யஜுர்வேதமும் |
| அஹம் | நானே. |

இந்த ஜகத்திற்குத் தகப்பனும், தாயும், பிதாமகனும், தரிக்கிறவனும், அறியவேண்டிய வஸ்துவும், பரிசுத்தவஸ்துவும், ஓங்காரமும், இருக்குவேதமும், சாமவேதமும், யஜுர்வேதமும் நானே. (௧௭)

---

௧௮. கதிர்பர்த்தா ப்ரபு: ஸாக்ஷீ நிவாஸ: ஶரணம் ஸுஹ்ருத்।
ப்ரபவ: ப்ரலய: ஸ்தாநம் நிதாநம் பீஜமவ்யயம்॥

| | |
|---|---|
| கதி:× | அடையத்தகுந்தவனும் |
| பர்த்தா÷ | போஷகனும் |
| ப்ரபு:√ | நியாமகனும் (ஏவுகிறவனும்) |
| ஸாக்ஷீ∴ | சாக்ஷியும் |
| நிவாஸ:$ | இருப்பிடமும் |

---

* (ஸ்ரீ,வி) பூஜ்ஜியனும்.

† (ஶம்) (ஸ்ரீ) விபாதா = கருமபலனை யுண்டாக்குகிறவனும். (ஸ்ரீ,வி) இரக்ஷகனும்.

‡ (ரா) வேதத்தினலறியவேண்டியதும்.

§ - ¶ - ‖ - + (ஸ்ரீ,வி) இப்பதங்களினல் சொல்லப்படுகிற வஸ்துவும்.

× (ஶம்) (ஸ்ரீ) கருமபலமும். (ரா) அடையவேண்டிய ஸ்தானமும். (ஸ்ரீ,வி) முமுக்ஷுக்க ளறியத்தகுந்தது.

÷ (ரா) தரிக்கிறவனும்.

√ (ஶம்) சுவாமியும்.

∴ (ஶம்) (ஸ்ரீ) செய்வது செய்யாமல் விடுவது இவைகளைப் பார்த்துக்கொண்டிருக்கிறவனும்.

$ (ஶம்) (ரா) பிராணிகளுக்கிருப்பிடமும். (ஸ்ரீ,வி) ஆசிரயனும்.

| | |
|---|---|
| ஶரணம் * | சரண மடையத்தகுந்தவனும் |
| ஸுஹ்ருத் † | பிரியத்தைச்செய்கிறவனும் |
| ப்ரபவ: | சிருஷ்டிகர்த்தாவும் |
| ஸ்தாநம் ‡ | ஸ்திதிகர்த்தாவும் |
| ப்ரளய: | நாசஞ்செய்கிறவனும் |
| நிதாநம் § | லயமடையும் ஸ்தானமும் |
| அவ்யயம் பீஜம் ¶ | நாசமற்றவிதையும் (காரணமும்) |
| (அஹமேவ) | நானே. |

அடையத்தகுந்தவனும், போஷகனும், நியாமகனும், சாக்ஷியும், இருப்பிடமும், சரணமடையத் தகுந்தவனும், பிரியத்தைச் செய்கிறவனும், சிருஷ்டி ஸ்திதிலய கர்த்தாவும், லயமடையும் ஸ்தானமும், நாசமற்றவிதையும் நானே. (௧௮)

---

௧௯. தபாம்யஹமஹம் வர்ஷம் நிக்ருஹ்ணாம்யுத்ஸ்ருஜாமி ச।
அம்ருதம் சைவ ம்ருத்யுஶ்ச ஸதஸச்சாஹமர்ஜுந॥

| | |
|---|---|
| ஹே அர்ஜுந | ஓ! அர்சுன! |
| அஹம் | நான் |
| தபாமி ‖ | தாபத்தை (வெப்பத்தை) உண்டாக்குகிறேன் |
| அஹம் | நான் |

---

* (ஶம்) துக்கத்தைப் போக்கடிக்கிறவனும். (ரா) ஆசிரியக்கத்தகுந்தவனும். (ஆ) ஆசிரயனும். (ஶ்ரீ,வி) சம்சாரபயத்தி லிருந்து இரக்ஷிப்பவனும்..

† (ஶம்) (ஶ்ரீ,வி) பிரதிப்பிரயோசனத்தை யெதிர்பாராமல் உபகாரஞ் செய்கிறவனும்.

‡ (ரா) ப்ரபவப்ரளயஸ்தாநம் (என்றுபாடம்)—சிருஷ்டிப் பிரளயங்களுக்கு ஸ்தானமும். (ஶ்ரீ,வி) சர்வாதாரமானவனும்.

§ (ஶம்) காலாந்தரத்தில் உபயோகமாகிற வஸ்துவாகையால், நிக்ஷேபம், (அதாவது, புதையலாயிருக்கிற தனம்போல.) (ரா) உத்பாத்யம் = உண்டுபண்ணத் தக்க வஸ்துவும், உபஸம்ஹார்யம் = சம்கரிக்கப்படுகிற வஸ்துவும். (ஆ) (ஶ்ரீ,வி) பிரளயகாலத்தில் சகலத்திற்கும் இருப்பிடமும்,

¶ (ஶம்) சம்சாரமாகிய விருக்ஷத்திற்கு விதையும்.

‖ (ஶம்) (ஸ்ரீ) சூரியனாகவிருந்து வெப்பத்தை யுண்டாக்குகிறேன். (ரா) அக்கினி, சூரியன், இந்த ரூபத்தினால் தபிப்பிக்கிறேன்.

| | |
|---|---|
| வர்ஷம்* | மழையை |
| உத்ஸ்ருஜாமி† | வருஷிக்கிறேன் (பொழிகிறேன்) |
| நிக்ருஹ்ணாமி‡ | வருஷிக்காமலுந் தடுக்கிறேன் |
| அம்ருதம்§ | ஜீவித்திருப்பதும் (உயிர்வாழ்வதும்) |
| ம்ருத்யு:¶ | நாசஹேதுவும் |
| ஸத் \|\| , அஸத் ÷ | ஸ்தூலமும் (காணப்படுகிறது) சூக்ஷ்மமும் (காணப்படாதது) |
| அஹமேவ | நானே. |

ஓ! அர்சுனா! தாபத்தை யுண்டாக்குகிறவனும் நானே. மழையை வருஷிக்கிறவனும், வருஷிக்காமல் தடுக்கிறவனும் நானே. உயிர்வாழ்வதும், நாசஹேதுவும், ஸ்தூலமும், சூக்ஷ்மமும் நானே. (௧௯)

---

௨௦. த்ரைவித்₃யா மாம் ஸோமபா: பூதபாபா யஜ்ஞைரிஷ்ட்வா ஸ்வர்க₃திம் ப்ரார்த₂யந்தே । தே புண்யமாஸாத்₃ய ஸுரேந்த்₃ரலோகமஶ்நந்தி தி₃வ்யாந் தி₃வி தே₃வபோ₄கா₃ந் ॥

| | |
|---|---|
| த்ரைவித்₃யா: | இருக்கு, யஜுஸ், சாமமென்கிற மூன்று வேதங்க ளறிந்தவர்கள் |
| யஜ்ஞை: | யக்ஞங்களினாலே |
| மாம் | என்னை |
| இஷ்ட்வா | பூஜித்து |
| ஸோமபா:+ | சோமபானஞ் செய்தவர்களாயும் |

---

* - † - ‡ - (ரா) சூரியனாகவிருந்து சில கிரணங்களினாலே மழையை வருஷிக்கிறேன். சில கிரணங்களினாலே மழையைத் தடுக்கிறேன்.

§ (ரா) தேவதைகளுடைய அமிருதமும். (சா) உலகம் ஜீவிப்பதற்குக் காரணமானதும். (ஸ்ரீ,வி) மரணமின்றி செய்வதனால் அமிருதம்.

¶ (ரா) மரணத்தை யுடையவர்களுக்கு மிருத்தியுவும் (சா) நாசத்தையுண்டாக்குகிறதும்.

|| - ÷ - (ரா) எந்தவஸ்துவினுடைய இருப்பானது மற்றொன்றின் அதீனமாயிருக்கிறதோ அந்த அதீனவஸ்து ஸத். அந்த மற்றொன்று அஸத். (சா) தற்காலத்தி லிருக்கும் வஸ்துக்கள் ஸத். சென்றவைகளு மினி வரப்போகிறவைகளும் அஸத் (ஆ) (ஸ்ரீ,வி) (ஸத்) காரியங்கள். (அஸத்) காரணம். (ஸ்வா) அத் - ௧௧, அ-௩௭, அத்-௧௩, அ-௧௩, பார்க்க.

+ (ஸ்வா) ஆட்டாங்கொடியிலிருந்து பிழிந்தெடுக்கப்படும் இரசத்தை வேதமந்திரங்களினா லோமஞ்செய்த மிச்சமானதை யஜமானன், ரித்துவிக்குகள், சாப்பிடுகிறதுண்டு. அப்படிச் சாப்பிட்டவர்கள் சோமபானஞ் செய்தவர்களென்று சொல்லப்படுகிறார்கள்.

| | |
|---|---|
| 𑌪𑍂𑌤𑌪𑌾𑌪𑌾𑌃 | பாபமற்றவர்களாயும் |
| 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌤𑌿𑌂 | சுவர்க்கலோகத்தை |
| 𑌪𑍍𑌰𑌾𑌰𑍍𑌥𑌯𑌨𑍍𑌤𑍇 | அபேக்ஷிக்கிறூர்கள் |
| 𑌤𑍇 | அவர்கள் |
| 𑌪𑍁𑌣𑍍𑌯𑌂 | புண்ணியபலனுகிய |
| 𑌸𑍁𑌰𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌲𑍋𑌕𑌂 | தேவேந்திரலோகத்தை |
| 𑌆𑌸𑌾𑌦𑍍𑌯 | அடைந்து |
| 𑌦𑌿𑌵𑌿 | சுவர்க்கத்தில் |
| 𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌨𑍍 | உத்தமமான |
| 𑌦𑍇𑌵𑌭𑍋𑌗𑌾𑌨𑍍 | தேவதைகளுடைய போகங்களை |
| 𑌅𑌶𑍍𑌨𑌨𑍍𑌤𑌿 | அனுபவிக்கிறூர்கள். |

மூன்றுவேதங்களை யறிந்தவர்கள் யக்ஞங்களினுல் என்னைப் பூஜித்து, சோமபானத்தைச் செய்து, பாபமற்றவர்களாய், சுவர்க்கலோகத்தை யபேக்ஷிக்கிறூர்கள். அவர்கள் புண்ணிய பலனுகிய தேவேந்திர லோகத்தையடைந்து, சுவர்க்கத்தில் உத்தமமான தேவதைகளுக்குள்ள போகங்களை யனுபவிக்கிறூர்கள்.

(𑌶𑌂) சுவர்க்காதி அனுபவத்திலாசை யுள்ளவர்கள் வேதங்களில் சொல்லியிருக்கிற யக்ஞங்களினுலே வசுவாதி தேவதாரூபனுயிருக்கிற என்னைப் பூஜிக்கிறூர்கள். (மற்றவைகளுக்கு அந்வயத்தில் சொல்லப் பட்டிருக்கிற அர்த்தமே.)

(ஸ்ரீ) மூன்று வேதங்களையும் அத்தியயனம் செய்கிறவர்கள் அல்லது, அதின் அர்த்தவிசாரம் செய்கிறவர்கள் திரைவித்தியாள். என்றூல், அந்த வேதங்களில் சொல்லியிருக்கிற விதமாய் யக்ஞாதிகளை அனுஷ்டிக்கிறவர்கள் தேவதாஸ்வரூபமாய் நானிருக்கிறே னென்பதை யறியாமல் பூஜிக்கிறூர்கள். (மற்றவைகளில் வித்தியாசமில்லை).

(𑌰𑌾) வேதங்களை யறிந்தும், வேதாந்தத்தை (பிரம்மவித்தையை) அறியாமல் வேதோக்த கருமங்களை யனுஷ்டித்து என்னை தேவதாசுவரூபமா யறியாமல் பூஜிக்கிறூர்கள். 𑌪𑍂𑌤𑌪𑌾𑌪𑌾𑌃 = சுவர்க்கத்தை யடைய விரோதமான பாபமற்றவர்களாய். (மற்றது சரி).

(ஸ்ரீ,வி) மூன்றுவேதங்களை யறிந்தவர்கள் விஷ்ணு சர்வோத்தம னென்று தெரிந்திருந்தபோதிலும், வேதத்தில் முதலெடுப்பில் சொல்லப்பட்டிருக்கிற சுவர்க்காதி பலனை உத்தேசித்து அந்நியதேவதைகளை பஜிக்கவேண்டுமென்று தெரிந்து அனுஷ்டித்துக் கடைசியில் விஷ்ணு

வாகிய எனக்கு சமர்ப்பணை செய்கிருர்கள். அவர்கள் சுவர்க்காதிகளை யடைய என்னைப் பிரார்த்திக்கிருர்கள். (மற்றவை சரி.) (௨௦)

---

௨௧. 𑌤𑍇𑌤𑌂𑌭𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌲𑍋𑌕𑌂𑌵𑌿𑌶𑌾𑌲𑌂 𑌕𑍍𑌷𑍀𑌣𑍇𑌪𑍁𑌣𑍍𑌯𑍇 𑌮𑌰𑍍𑌤𑍍𑌯𑌲𑍋𑌕𑌂𑌵𑌿𑌶𑌨𑍍𑌤𑌿 । 𑌏𑌵𑌂𑌤𑍍𑌰𑌯𑍀 𑌧𑌰𑍍𑌮𑌮𑌨𑍁𑌪𑍍𑌰𑌪𑌨𑍍𑌨𑌾 𑌗𑌤𑌾𑌗𑌤𑌂 𑌕𑌾𑌮𑌕𑌾𑌮𑌾 𑌲𑌭𑌨𑍍𑌤𑍇॥

| | |
|---|---|
| 𑌤𑍇 | அவர்கள் (சுவர்க்கத்தை யடைந்தவர்கள்) |
| 𑌵𑌿𑌶𑌾𑌲𑌂 | விஸ்தாரமான |
| 𑌤𑌂 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌲𑍋𑌕𑌂 | அந்த சுவர்க்கலோகத்தை (சுவர்க்கலோக சுகத்தை) |
| 𑌭𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 | அனுபவித்து |
| 𑌪𑍁𑌣𑍍𑌯𑍇 | புண்ணியமானது |
| 𑌕𑍍𑌷𑍀𑌣𑍇 (𑌸𑌤𑌿) | நசித்தபின் |
| 𑌮𑌰𑍍𑌤𑍍𑌯𑌲𑍋𑌕𑌂 | மனுஷியலோகத்தை |
| 𑌵𑌿𑌶𑌨𑍍𑌤𑌿 | அடைகிருர்கள் |
| 𑌏𑌵𑌂 | இந்தப்படி |
| 𑌤𑍍𑌰𑌯𑍀𑌧𑌰𑍍𑌮𑌂* | வேதோக்ததருமத்தை (புண்ணியத்தை) |
| 𑌅𑌨𑍁𑌪𑍍𑌰𑌪𑌨𑍍𑌨𑌾𑌃 | அனுசரித்தவர்களான |
| 𑌕𑌾𑌮𑌕𑌾𑌮𑌾𑌃 | விஷய இச்சையுள்ளவர்கள் |
| 𑌗𑌤𑌾𑌗𑌤𑌂 | போக்குவரத்தை (பிறப்பிறப்பை) |
| 𑌲𑌭𑌨𑍍𑌤𑍇 | அடைகிருர்கள். |

சுவர்க்கத்தை யடைந்தவர்கள் விஸ்தாரமான அந்த சுவர்க்கலோகத்தை யனுபவித்து புண்ணியம் நசித்தபின் மனுஷியலோகத்தை யடைகிருர்கள். இந்தப்படி வேதோக்த தருமத்தை யனுசரித்தபோக விச்சை யுள்ளவர்கள் பிறப்பிறப்புகளை யடைகிருர்கள்.

(𑌸𑍍𑌵𑌾) இதின் அத் - அ, சு - ௨௫, ல் சொல்லப்பட்டிருக்கிற 𑌧𑍂𑌮𑌾𑌦𑌿—புகைமார்க்கத்தில் போகிறவன் இந்த சுலோகத்தில் குறிப்பிடப் பட்டவனுகக் காணப்படுகிருன். (௨௧)

---

௨௨. 𑌅𑌨𑌨𑍍𑌯𑌾𑌶𑍍𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑌨𑍍𑌤𑍋𑌮𑌾𑌂 𑌯𑍇𑌜𑌨𑌾𑌃𑌪𑌰𑍍𑌯𑍁𑌪𑌾𑌸𑌤𑍇।
𑌤𑍇𑌷𑌾𑌂𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌭𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌨𑌾𑌂 𑌯𑍋𑌗𑌕𑍍𑌷𑍇𑌮𑌂𑌵𑌹𑌾𑌮𑍍𑌯𑌹𑌮𑍍॥

---

* (𑌶𑌂) கேவலம் வேதோக்த கருமத்தை.

| | |
|---|---|
| யே ஜநா:* | எந்தஜனங்கள் |
| அநந்யா:† | அந்நியதேவதைகளை யுபாசிக்காமல் |
| மாம்‡ | என்னையே |
| சிந்தயந்த:§ | சிந்திக்கிறவர்களாய்க்கொண்டு |
| பர்யுபாஸதே | இடைவிடாமலுபாசிக்கிறார்களோ |
| நித்யாபியுக்தாநாம்¶ | எப்போது மென்னுடைய நிஷ்டையிலிருக்கிற |
| தேஷாம் | அவர்களுடைய |
| யோகக்ஷேமம்‖ | யோகக்ஷேமத்தை |
| அஹம் | நான் |
| வஹாமி | வஹிக்கிறேன். |

எந்த ஜனங்கள் அந்நியதேவதைகளை யுபாசிக்காமல், என்னையே சிந்தித்து இடைவிடாமல் உபாசிக்கிறார்களோ, எப்போதும் நிஷ்டையுள்ள அவர்களுடைய யோகக்ஷேமத்தை நானே வகித்துக்கொள்ளுகிறேன். (என்றால், அவர்களுக்கு வேண்டியதை நான் கொடுக்கிறேனென்பது கருத்து.) (௨௨)

---

௨௩. யேऽப்யந்யதேவதாபக்தா யஜந்தே ஶ்ரத்தயாந்விதா:÷
தேऽபி மாமேவ கௌந்தேய யஜந்த்யவிதிபூர்வகம்॥

---

* (ரா) எந்த மகாத்மாக்கள்.

† - ‡ - § (ஶம்) என்னை அந்நியமாயெண்ணாமல் நானே அவர்களாத்மாவென்று சிந்தித்து. (ரா) என்னைத்தவிர வேறே யாதொரு பிரயோசனத்தை யிச்சிக்காமலென்னையே பரமபிரயோசனமாக எண்ணித் தியானித்து. (ஸ்ரீ,வி) சிந்தையற்று என்னையே சிந்தித்து.

¶ (ஶம்) மேற்கண்ட பிரகாரமாய் பரமார்த்த தரிசனமுடையவர்கள். (ரா) எப்போதும் என்னை யடையவேண்டுமென்று கருதிக்கொண்டிருக்கிற. (கே) சர்வகாலத்திலும், சர்வ அவஸ்தையிலும் என்னை மறவாமலிருக்கிற. (ஸ்ரீ,வி) சகலதேச காலங்களிலும், மனோவாக் காயங்களினலிடைவிடாமல் என்னுடைய ஸேவையிலிருக்கிற.

‖ (ஶம்) அடையாததை யடைகிறது யோகம். அடைந்ததை ரக்ஷிக்கிறது க்ஷேமம். (ஸ்ரீ) தனுதிகளை யடைவது யோகம். அடைந்ததை ரக்ஷிப்பது க்ஷேமம். இப்படிப்பட்டதை அல்லது மோக்ஷத்தை. (ரா) என்னையடைவது யோகம். மறுபடி ஜநநமற்றுப்போவது க்ஷேமம். (ஸ்ரீ,வி) கிடையாதது கிடைத்தால் யோகம். அதை ரக்ஷிப்பது க்ஷேமம். அல்லது, மோக்ஷத்தில் சாசுவதமாயிருக்கிறது யோகக்ஷேமம். (ஸ்வா) அத் - ௨, சு - ௬௫, பார்க்க.

÷ (ரா) "யேऽப்யந்ய" என்றுபாடம்.

| | |
|---|---|
| 𑌕𑍌𑌂𑌤𑍇𑌯 | ஓ! குந்திபுத்திரா! |
| 𑌯𑍇𑌪𑌿 | எந்த |
| 𑌭𑌕𑍍𑌤𑌾𑌃 | பக்தர்கள் |
| 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾 𑌅𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌃 | விசுவாசத்துடன்கூடினவர்களாய் |
| 𑌅𑌨𑍍𑌯𑌦𑍇𑌵𑌤𑌾𑌃 | அன்னியதேவதைகளை |
| 𑌯𑌜𑌂𑌤𑍇 | ஆராதிக்கிறார்களோ |
| 𑌤𑍇𑌪𑌿 | அவர்களும் |
| 𑌅𑌵𑌿𑌧𑌿𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌂* | கிரமமானமார்க்கந்தப்பி |
| 𑌮𑌾𑌮𑍇𑌵 | என்னையே |
| 𑌯𑌜𑌂𑌤𑌿 | ஆராதிக்கிறார்கள். |

ஓ! குந்திபுத்திரா! எந்தபக்தர்கள் விசுவாசத்துடனே அன்னிய தேவதைகளை ஆராதிக்கிறார்களோ, அவர்களும் கிரமமான மார்க்கந் தப்பி யென்னையே ஆராதித்தவர்களாகிறார்கள்.

(ஸ்ரீ) அன்னிய தேவதைகளிடத்தில் பக்தியுள்ள யாதொருஜனங்கள் (பலன்கிடைக்கிறதென்கிற) நம்பிக்கையுடன்கூடி ஆராதிக்கிறார்களோ, அவர்களும் என்னையே ஆராதிக்கிறவர்களானாலும் அக்ஞான மார்க்கமாய் ஆராதிக்கிறார்கள்.

(ரா) இந்திராதி தேவதைகளிடத்தில் பக்தி சிரத்தையோடு கூடின யாதொரு ஜனங்கள் அந்த தேவதைகளை ஆராதித்தாலும் அவர்களு மென்னையே ஆராதித்தவர்களாகிறார்கள். எப்படியென்றால், இந்திராதி தேவதைக ளென்னுடைய சரீரமாகையாலும், இந்திராதி சப்தங்களுக்கு நானே விஷயமாகையாலும், அந்த தேவதாசரீர ஆராதனை யானது சரீரியான என்னை யாராதித்ததாகிறது. ஆனால், அவர்கள் சாக்ஷாத்தாக ஆத்மாவான என்னை யாராதிக்கவுமில்லை; அந்த தேவதைகள் என்னுடைய சரீரமென்று தெரிந்து ஆராதிக்கவுமில்லை: ஆகையால், கிரமமான விதமாய் ஆராதிக்கவில்லை யென்று சொல்லப்பட்டது.

---

௨௪. 𑌅𑌹𑌂 𑌹𑌿 𑌸𑌰𑍍𑌵𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌂 𑌭𑍋𑌕𑍍𑌤𑌾 𑌚 𑌪𑍍𑌰𑌭𑍁𑌰𑍇𑌵 𑌚 ।
𑌨 𑌤𑍁 𑌮𑌾𑌮𑌭𑌿𑌜𑌾𑌨𑌂𑌤𑌿 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑍇𑌨𑌾𑌤𑌶𑍍𑌚𑍍𑌯𑌵𑌂𑌤𑌿 𑌤𑍇 ॥

| | |
|---|---|
| 𑌸𑌰𑍍𑌵𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌂 𑌭𑍋𑌕𑍍𑌤𑌾 † | சகல யக்ஞங்களைப் (அவிஸ் முதலியவைகளை) புஜிக்கிறவனும் |

---

* (ஸா) இதன், ௧௧-வது அத்தியாயம், ௧௭-வது சுலோகம் பார்க்க.

† (ஸ்ரீ) சிரௌத ஸ்மார்த்த யக்ஞங்கள் (என்றால், சுருதியிலே விதிக்கப்பட்ட யக்ஞமும், ஸ்மிருதியினால் விதிக்கப்பட்ட யக்ஞமும்)

| | |
|---|---|
| ப்ரபு: | சுவாமியும் (யஜமானனும்) பலன்களைக் கொடுப்பவனும் |
| அஹமேவ ஹி | நானேயல்லவா |
| மாம் | என்னை |
| தத்த்வேந<br>நாபிஜாநந்தி | எதார்த்தமாக (ஜனங்கள்) அறிகிறதில்லை |
| அத: | ஆகையினாலே |
| தே | அவர்கள் |
| ச்யவந்தி | நழுவுகிறார்கள். |

சகல யக்ஞபலன்களை யனுபவிப்பவனும், பலனைக்கொடுக்கிற சுவாமியும், நானே. ஜனங்கள் என்னை யெதார்த்தமாக வறிகிறதில்லை. ஆகையால், (அன்னிய தேவதைகளைப் பூஜிக்கிற) அவர்கள் நழுவுகிறார்கள். (என்றால், புநர்ஜன்மத்தை யடைகிறார்கள்.) (௨௪)

---

௨௫. யாந்தி தேவவ்ரதா தேவாந் பித்ரூந்யாந்தி பித்ருவ்ரதா:।
பூதாநி யாந்தி பூதேஜ்யா யாந்தி மத்யாஜிநோ(அ)பி மாம்॥

| | |
|---|---|
| தேவவ்ரதா: | தேவதைகளை யுத்தேசித்து விரதங்களைச் செய்கிறவர்கள் |
| தேவாந் | தேவதைகளை |
| யாந்தி | அடைகிறார்கள் |
| பித்ருவ்ரதா: | பிதுருக்களைக்குறித்து விரதத்தைச் செய்கிறவர்கள் |
| பித்ரூந் | பிதுருக்களை |
| யாந்தி | அடைகிறார்கள் |
| பூதேஜ்யா: | (விநாயகாதி) பூதங்களைப் பூஜிக்கிறவர்கள் |
| பூதாநி | பூதங்களை |
| யாந்தி | அடைகிறார்கள் |
| மத்யாஜிநோ(அ)பி* | என்னைப்பூஜிக்கிறவர்களோ |
| மாம்† | என்னையே |
| யாந்தி | அடைகிறார்கள். |

தேவதைகளை யுத்தேசித்து விரதங்களைச் செய்கிறவர்கள் தேவதைகளையும், பிதுருக்களைக்குறித்து விரதங்களைச்செய்கிறவர்கள் பிது

* (ஸ௦) வைஷ்ணவா:—விஷ்ணுபக்தர்கள்.

† (ஸ்ரீ) நாசமற்ற பரமாத்ம ஸ்வரூபமான நாராயணனாகிய என்னை.

ருக்களையும், விநாயகாதி (பூதக்கூட்டங்களின் பெயர். விக்கினேசுவரரல்ல) பூதங்களைப் பூஜிப்பவர்கள் அந்த பூதங்களையு மடைகிறார்கள். என்னைப் பூஜிப்பவர்கள் என்னையே யடைகிறார்கள். தேவதை முதலியவர்களை யடைகிறார்களென்றால், அந்த தேவதைகள் முதலியவர்களுடைய லோகத்தை யடைகிறார்களென்பது தாத்பரியம். இதின் ௭-வது அத்தியாயம், ௨௩-வது சுலோகம் பார்க்க.

(ரா) இந்திராதி தேவதைகளைக் குறித்து யக்ஞஞ் செய்கிறேனென்று சங்கற்பம் செய்துகொண்டும், பிதருக்களைக்குறித்து சிராத்தாதி செய்கிறேனென்று சங்கற்பஞ் செய்துகொண்டும், யக்ஷராக்ஷஸாதி பூதங்களைப் பூஜிக்கிறேனென்று சங்கற்பஞ் செய்து கொண்டும், தேவாதிசரீரியும், பரமாத்மாவும், வாசுதேவனும், பகவானுமான என்னை உபாசிக்கிறதாக சங்கற்பஞ் செய்துகொண்டு மிருக்கிறவர்கள் யாரையுபாசிக்கிறார்களோ, அவர்களையே யடைகிறார்கள். (௨௫)

---

௨௬. 𑌪𑌤𑍍𑌰𑌂 𑌪𑍁𑌷𑍍𑌪𑌂 𑌫𑌲𑌂 𑌤𑍋𑌯𑌂 𑌯𑍋 𑌮𑍇 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌪𑍍𑌰𑌯𑌚𑍍𑌛𑌤𑌿।
𑌤𑌦𑌹𑌂 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑍁𑌪𑌹𑍃𑌤𑌮𑌶𑍍𑌨𑌾𑌮𑌿 𑌪𑍍𑌰𑌯𑌤𑌾𑌤𑍍𑌮𑌨𑌃॥*

| | |
|---|---|
| 𑌯𑌃 | எவன் |
| 𑌮𑍇 | என்பொருட்டு |
| 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 † | பக்தியோடு |
| 𑌪𑌤𑍍𑌰𑌂 | துளசிமுதலிய பத்திரத்தை |
| 𑌪𑍁𑌷𑍍𑌪𑌂 | புஷ்பத்தை |
| 𑌫𑌲𑌂 | பழத்தை |
| 𑌤𑍋𑌯𑌂 | ஜலத்தை |
| 𑌪𑍍𑌰𑌯𑌚𑍍𑌛𑌤𑌿 | கொடுக்கிறானோ (நிவேதனஞ் செய்கிறானோ) |
| 𑌪𑍍𑌰𑌯𑌤𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 (𑌤𑌸𑍍𑌯) ‡ | சுத்தமாயிருக்கிறமனதுள்ள அவனுடைய |
| 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑍁𑌪𑌹𑍃𑌤𑌂 | பக்தியினால்கொடுக்கப்பட்ட |
| 𑌤𑌤𑍍 | அதை (பத்திரபுஷ்பாதிகளை) |

---

* இந்த சுலோகத்தை ஸ்ரீபாகவதம் ௧0-அ௧-௫-ல் காண்க.

† (ரா) எனக்கு அர்ப்பணஞ் செய்யாவிட்டால் தன்பிராணதாரண மாகமாட்டாதென்கிற எண்ணத்தோடு.

‡ (ரா) பகவானுக் கர்ப்பணஞ் செய்வதையே பரமப்பிரயோசனமாக வெண்ணியிருக்கிற சுத்தமான மனதையுடைய. (ஸ்ரீ,வி) வைராக்கியத்தையுடைய.

| | |
|---|---|
| 𑌅𑌹𑌮𑍍* | நான் |
| 𑌅𑌶𑍍𑌨𑌾𑌮𑌿† | சுவீகரிக்கிறேன். |

எவன் என்பொருட்டு பக்தியோடு பத்திரம், புஷ்பம், பழம், ஜலம், இவைகளை நிவேதனஞ் செய்கிறானோ, சுத்தமாயிருக்கிற மனதை யுடையவனான அவனுடைய பக்தியினாலே கொடுக்கப்பட்ட அவைகளை நான் ஸ்வீகரிக்கிறேன் (சாப்பிடுகிறேன்.)

(ஸ்வா) பகவானைப் பூஜிக்க, விசேஷ திரவியம் முதலானவைகள் சம்பாதிக்கவும், செலவுசெய்யவும், பிரயாசையடையவும் அவசியமில்லை. பலாபேக்ஷையன்றி பக்திபூர்வமாய் சுத்தமான மனதுடன் ஒரு பக்தனால் கொடுக்கப்படும் வஸ்துக்கள் எவ்வளவு அற்பமானாலும், பகவான் அந்த வஸ்துக்களை அதிப்பிரியத்துடன் கிரகிக்கிறானென்பது இதனால் வெளியிடப்பட்டது. விதுரர் அதிகப் பிரீதியுடன் ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்குக் கஞ்சிகொடுத்த விஷயத்தில் பகவான் அடைந்த சந்தோஷத்தைப்பற்றி மகாபாரதம் உத்தியோக பருவத்தையும், ஸுதாமா - என்கிற மறுபெயருடைய குசேலர், அதிகப் பிரீதியுடன், கிருஷ்ணபகவானுக்கு அவல்கொடுத்த விஷயத்தில் பகவான் அடைந்த சந்தோஷத்தைப்பற்றி, பாகவதம் ௧௦-வது, ஸ்கந்தம் ௮௧-வது, அத்தியாயத்தையும் பார்க்க.

---

௨௭. 𑌯𑌤𑍍𑌕𑌰𑍋𑌷𑌿 𑌯𑌦𑌶𑍍𑌨𑌾𑌸𑌿 𑌯𑌜𑍍𑌜𑍁𑌹𑍋𑌷𑌿 𑌦𑌦𑌾𑌸𑌿 𑌯𑌤𑍍।
𑌯𑌤𑍍𑌤𑌪𑌸𑍍𑌯𑌸𑌿 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌤𑌤𑍍𑌕𑍁𑌰𑍁𑌷𑍍𑌵 𑌮𑌦𑌰𑍍𑌪𑌣𑌮𑍍॥‡

| | |
|---|---|
| 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 | ஓ! குந்திபுத்திரா! |
| 𑌯𑌤𑍍 | எதை |
| 𑌕𑌰𑍋𑌷𑌿 | செய்கிறாயோ |
| 𑌯𑌤𑍍 | எதை |
| 𑌅𑌶𑍍𑌨𑌾𑌸𑌿 | புஜிக்கிறாயோ |
| 𑌯𑌤𑍍 𑌜𑍁𑌹𑍋𑌷𑌿 | எதை ஹோமஞ் செய்கிறாயோ |

*-† (ரா) சர்வேசுவரனாயும், யாதொரு அபேக்ஷை முதலியவை யற்றவனாயு மிருந்தாலும், கிடைக்காதவஸ்து கிடைத்ததுபோல அங்கீகரிக்கிறேன். (இதற்கு ஆதாரம் மோக்ஷ தருமத்திலுள்ள அடியில்கண்ட சுலோகம்பார்க்க. "𑌯𑌾𑌃 𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌃 𑌸𑌂𑌪𑍍𑌰𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌃 𑌸𑍍𑌯𑍁𑌰𑍇𑌕𑌾𑌨𑍍𑌤𑌗𑌤𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌭𑌿𑌃 । 𑌤𑌾𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌾𑌶𑍍𑌶𑌿𑌰𑌸𑌾 𑌦𑍇𑌵𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌗𑍃𑌹𑍍𑌣𑌾𑌤𑌿 𑌵𑍈 𑌸𑍍𑌵𑌯𑌮𑍍"—ஏகாந்த பக்தியுள்ளவர்களால் (ஈசுவரன்பொருட்டு) எந்தக்கிரியைகள் சமர்ப்பிக்கப்படுகின்றனவோ, அவைகளை பகவான் சிரசினா லங்கீகரித்துக் கொள்ளுகிறார்.)

‡ (ஸ்வா) இதின் ௩-வது அத்தியாயம் ௩௦-வது சுலோகம் பார்க்க.

| | |
|---|---|
| 𑌯𑌤𑍍 | எதை |
| 𑌦𑌦𑌾𑌸𑌿 | தானஞ்செய்கிருயோ |
| 𑌯𑌤𑍍 𑌤𑌪𑌸𑍍𑌯𑌸𑌿 | எந்தத் தபசைச்செய்கிருயோ |
| 𑌤𑌤𑍍 | அதை |
| 𑌮𑌦𑌰𑍍𑌪𑌣𑌂 | எனக்கர்ப்பிதமாக |
| 𑌕𑍁𑌰𑍁𑌷𑍍𑌵 | செய். |

ஓ ! குந்திபுத்திரா ! எதைச்செய்தாலும், எதைப் புஜித்தாலும், எந்த ஹோமம் செய்தாலும், எதை தானஞ்செய்தாலும், எந்தத் தபசு செய்தாலும் அதை எனக்கு அர்ப்பணமாகச் செய்.

(ஸ்ரீ) முந்திய சுலோகத்தில் சொல்லப்பட்டிருக்கிற புஷ்பாதிகளைச் சம்பாதிக்கச் சொற்பப்பிரயாசை யாவதுண்டு; அந்தப்பிரயாசை கூட அவசியமில்லை. எவனெவனுக்கு எதெது கிடைக்கிறதோ, எவனெதைச்செய்கிருனே, அதையெல்லாம் பகவானுக்கு அர்ப்பணமாய்ச் செய்யலாமென்பது கருத்து.

(ரா) லௌகிக வைதிக மான சகல விஷயங்களிலும் செய்யப் படும்காரிய மெல்லாவற்றையும் பகவானுக்கு அர்ப்பணஞ் செய்யென்பது கருத்து. (உஎ)

---

உ௮. 𑌶𑍁𑌭𑌾𑌶𑍁𑌭𑌫𑌲𑍈𑌰𑍇𑌵𑌂 𑌮𑍋𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑍇 𑌕𑌰𑍍𑌮𑌬𑌨𑍍𑌧𑌨𑍈𑌃।
𑌸𑌨𑍍𑌨𑍍𑌯𑌾𑌸𑌯𑍋𑌗𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑍋 𑌮𑌾𑌮𑍁𑌪𑍈𑌷𑍍𑌯𑌸𑌿॥

| | |
|---|---|
| 𑌏𑌵𑌂 | இவ்விதமாய் |
| 𑌸𑌨𑍍𑌨𑍍𑌯𑌾𑌸𑌯𑍋𑌗𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 * | கருமங்களை யென்னிடத்தி லொப்பிவிக்கிறதாகிய சந்நியாசத்தோடு கூடினவனைல் |
| 𑌶𑍁𑌭𑌾𑌶𑍁𑌭𑌫𑌲𑍈𑌃 | சுபாசுபபலன்களுக்கு ஹேதுவான |
| 𑌕𑌰𑍍𑌮𑌬𑌨𑍍𑌧𑌨𑍈𑌃 | கருமபந்தங்களிலிருந்து |
| 𑌮𑍋𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑍇 | விடுபடுவாய் |
| 𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑌃 | (அப்படி) விடுபட்ட (நீ) |
| 𑌮𑌾𑌂 | என்னை |
| 𑌉𑌪𑍈𑌷𑍍𑌯𑌸𑌿 † | அடைவாய். |

---

* (𑌸𑍍𑌵𑌾) இதின் கூ - வது அத்தியாயம் - உ, க௮ - வது அத்தியாயம் - உ, இந்த சுலோகங்களினால், 𑌸𑌨𑍍𑌨𑍍𑌯𑌾𑌸𑌂, என்பதின் அர்த்தம் விளக்கப்படுகிறது.

† (𑌶𑌂) ஜீவன் முக்தனாயிருந்து, இந்த தேகம் போன உடனே என்சுவரூபமாவாய்.

இவ்விதமாய்க் கருமங்களை என்னிடத்தி லொப்பிவிப்பாயானல், சுபாசுபபலன்களுக்கு ஹேதுவான (புண்ணியபாப) கருமபந்தத்தி லிருந்து விடுபட்டு என்னை யடைவாய்.

(ரா) நீ என் சேஷபூதனென்றும், என்னால் ஏவப்படுகிறவனென்றும், தெரிந்து சகலகருமங்களும் பகவதாராதன மென்கிற அநுசந்தானத்தோடு வைதிக லௌகிக கருமங்களைச் செய்துகொண்டுவந்தால், பந்த நிவிருத்தியடைந்து மோக்ஷமடைவாய் என்பது கருத்து. (உஅ)

---

உ௯. ஸமோஹம்ஸர்வபூதேஷு நமே த்வேஷ்யோஸ்தி நப்ரிய:।
யெபஜந்திது மாம்பக்த்யா மயிதெதேஷுசாப்யஹம்॥*

| | |
|---|---|
| அஹம் | நான் |
| ஸர்வபூதேஷு | சகலப்பிராணிகளிடத்திலேயும் |
| ஸம: | சமமாயிருக்கிறவன் |
| மெ | எனக்கு |
| த்வேஷ்ய: | சத்துருவும் |
| ந | இல்லை |
| ப்ரியஃ | இஷ்டனும் |
| நாஸ்தி | இல்லை |
| யெது | யார் |
| மாம் | என்னை |
| பக்த்யா | பக்தியினாலே |
| பஜந்தி | பஜிக்கிறார்களோ |
| தெ | அவர்கள் |
| மயி | என்னிடத்தில் |
| (வர்த்தந்தெ) | இருக்கிறார்கள் |
| அஹமபி | நானும் |
| தேஷு | அவர்களிடத்தில் |
| (வர்த்தெ) | இருக்கிறேன். |

நான் சகலப்பிராணிகளிடத்திலும் சமமாயிருக்கிறேன். எனக்குச் சத்துருவுமில்லை. மித்திரனுமில்லை. யார் என்னை பக்தியினாலே பஜிக்கிறார்களோ அவர்கள் என்னிடத்திலிருக்கிறார்கள். நானும் அவர்களிடத்தி லிருக்கிறேன்.

(ஶம்) (ஸ்ரீ) சகலப்பிராணிகளுக்கும் சமமாயிருக்கிற ஈசுவரன் அவருடைய பக்தர்களுக்குமட்டும் பலனைக்கொடுப்பது பக்ஷபாத

---

* (ஸூ) இதின் ௯ - வது அத், ௯ - ௩௦, பார்க்க.

மல்லவோ என்றால், அல்ல. அக்கினியானது சகலருக்கும் பொதுவானலும், அதை அடுத்துப் போனவனுடைய குளிரைப் போக்குகிறதும் அதை ஆசிரயித்தவனுக்கு வெளிச்சத்தைக் கொடுக்கிறதும் எப்படியோ, பொதுவான கற்பகவிருக்ஷமானது தன்னை விரும்பிவந்தவனுக்கு மட்டும் பலனைக்கொடுப்பது எப்படியோ, அப்படிப்போல பகவானுடைய மகிமையானது அவனையடுத்தவனை ரக்ஷிக்கும்.

(ரா) தேவ, மனுஷிய, பசு, பக்ஷிமுதலிய பிராணிகளில் நான் சமமாயிருக்கிறேன். அவர்களுடைய (ஜாதி) ஆகாரம், சுவபாவம், ஞானம் இவைகளினலே இவன் சிரேஷ்டனென்று ஒருவனைச் சேர்த்துக் கொள்ளுகிற தில்லை நிகிருஷ்டனென்று ஒருவனை விலக்குகிறது மில்லை. (இதின்தாத்பரிய மென்னவென்றால், தேவதைகள் சிரேஷ்டர்கள் மனுஷியன் நிகிருஷ்டனென்பதும், மனுஷியன் சிரேஷ்டன் மிருகாதிகள் நிகிருஷ்டமென்பதும், பகவானுக்கில்லை யென்பதுதான்.)

(உ) (ஸ்ரீ,வி) அவரவர்களுடைய பக்தி, துவேஷ மிதுகளுக்குத் தக்கபடி பலனைக் கொடுப்பதால், நான் பக்ஷபாதியல்ல. "அவர்கள் என்னிடத்தி லிருக்கிறார்கள்" என்றால், அவர்கள் என்னுடைய அதீனமா யிருக்கிறார்கள். "நான் அவர்களிடத்தி லிருக்கிறேன்" என்றால்; நான் அவர்களுக்கு இஷ்டனும், பிரியனு மிருக்கிறேன். அல்லது அதீனனு யிருக்கிறேன். (உகூ)

---

௩௦. அபிசேத்ஸுதுராசாரோ பஜதே மாமநந்யபாக்।
ஸாதுரேவ ஸ மந்தவ்ய: ஸம்யக்வ்யவஸிதோ ஹி ஸ:॥*

| | |
|---|---|
| ஸுதுராசாரோபி | அதிகதுராசாரமுடையவனுனலும் |
| அநந்யபாக் † | அன்னியதேவதையைப் பஜிக்காதவனுய் |
| மாம் ‡ | என்னை |
| பஜதேசேத் | பஜிப்பானுனல் |
| ஸ: | அவன் |
| ஸாது: § | தெளிவான (சுத்தமான) |
| வ்யவஸிதோஹி ¶ | மனேநிச்சயமுள்ளவனுனதால் |

---

* இந்த சுலோகத்தை கருடபுராணம் அத் உகக-சு, உஎ-ல் காண்க.

† (ஸா) அன்னிய பக்தியற்றவனுய்.

‡ (ஸ்ரீ) நாராயணனுகிய என்னை.

§ (ஸ்ரீ) ஈசுவரபஜனை செய்வதினலேயே நான் கிருதார்த்தனுகவேண்டுமென்கிற நிச்சயமுடையவன்.

¶ (ஸா) சாதுநிச்சயமுள்ளவன். அதாவது, நல்ல நிச்சயம், அல்லது சாதுக்களுடைய நிச்சயமுள்ளவன்.

ஸ꞉ அவன்
ஸாது⁴ரேவ* சிரேஷ்டனாகவே
மந்தவ்ய꞉ தெரிந்துகொள்ளத்தக்கவன்.

அதிக துராசாரமுடையவ னானாலும் அன்னிய தேவதைகளைப் பஜிக்காமல் என்னைப் பஜிப்பானானால் அவன் தெளிவான மனநிச்சய முள்ளவனானதால் சிரேஷ்டனாகவே தெரிந்துகொள்ளத்தக்கவன்.

(ரா) வருணாசிரம தருமங்களுக்கு விரோதமாய் நடக்கிறதாகிய துராசாரமுடையவ னானாலும், பஜனைதவிர வேறே பிரயோஜனமில்லை யென்கிற நிச்சயத்துடன் என்னைப் பஜிப்பானானால், அவன் வைஷ்ணவ சிரேஷ்டன். (பஹு) மந்தவ்ய꞉ = வெகுமானிக்கத் தகுந்தவன். முந்திய சுலோகங்களில் சொல்லப்பட்டிருக்கிற மகாத்மாக்களில் சேர்ந்தவன். நல்ல நிச்சயத்தோடு கூடினவன். இதின் தாத்பரிய மென்ன வென்றால், சகல ஜகத்காரணனாயும், பரமாத்மாவாயும், சராசர சகலப் பிரபஞ்சத்திற்கும் சுவாமியாயு மிருக்கிற பகவானை நாராயண னனவர் எனக்கு குரு, சிநேகிதர், போக்கிய வஸ்துக்கள், என்கிறது முதலிய நிச்சயத்துடனே என்னைப் பஜிக்கிறதினால் சிரேஷ்டன்.

(ஸ்ரீ) (மீ,வி) சதாசாரமுள்ள சந்திரசூரியாதி தேவதைகளின் அம்சமான ரிஷிமுதலியவர்கள் தெய்வாதீனமாய் அதிகப் புண்ணியங்களைப் போக்கடிக்கும்படியான துராசாரமுள்ளவர்களாய் விட்டாலும், வேறே தேவதைகளைப் பஜிக்காமல், என்னையே பஜிப்பார்களாகில் அவர்களே சிரேஷ்டர்கள். ஏனென்றால், பகவத்தத்துவ நிச்சயமுள்ளவர்க ளானதினாலே. (௩௰)

---

௩௧. க்ஷிப்ரம் ப⁴வதி த⁴ர்மாத்மா ஶஶ்வச்சா²ந்திம் நிக³ச்ச²தி ।
கௌந்தேய ப்ரதிஜாநீஹி ந மே ப⁴க்த꞉ ப்ரணஶ்யதி ॥ †

(ஸ꞉) அவன்
க்ஷிப்ரம் சீக்கிரமாக
த⁴ர்மாத்மா‡ தருமத்தில்மனமுடையவனாக
ப⁴வதி ஆகிறான்

---

* (ஸம) சதாசாரமுடையவனாகவே.

† இந்த சுலோகம் கருடபுராணம் ௬, ௨அ-ல் காண்க.

‡ (ரா) பஜனையிலேயே மனதுடையவனாக.

| | |
|---|---|
| ஶஶ்வத்* | ஸ்திரமான |
| ஶாந்திம்† | நிஷ்டையை (பிரம்மஞானத்தை) |
| நிக³ச்ச²தி‡ | அடைகிறான் |
| கௌந்தேய | ஓ! குந்திபுத்திரா! |
| மே | என்னுடைய |
| ப⁴க்த: | பக்தன் |
| ந ப்ரணஶ்யதி§ | கெட்டுப்போகிறதில்லை |
| (இதி) | இவ்விதமாய் |
| ப்ரதிஜாநீஹி¶ | பிரதிக்ஞைசெய். |

முன்சொன்ன பக்தனானவன் சீக்கிரமாக தருமத்தில் மனமுடையவனாகிறான். ஸ்திரமான பிரம்மநிஷ்டையை யடைகிறான். ஓ! குந்திபுத்திரா! என்னுடைய பக்தன் கெட்டுப் போகிறதில்லை என்பதாய்ப் பிரதிக்ஞைசெய்.

(ஶ) (ஸ்ரீ,வி) இதில் சொல்லப்பட்டிருக்கிற பக்தன் தேவாம்சமுள்ளவன். (௩௧)

---

௩௨. மாம் ஹி பார்த² வ்யபாஶ்ரித்ய யே(அ)பி ஸ்யு: பாபயோநய:।
ஸ்த்ரியோ வைஶ்யாஸ்ததா² ஶூத்³ராஸ்தே(அ)பி யாந்தி பராங்க³திம்॥

| | |
|---|---|
| கௌந்தேய | ஓ! குந்திபுத்திரா! |
| ஸ்த்ரிய: | ஸ்திரீகளும் (பெண்களும்) |
| வைஶ்யா: | வைசியர்களும் |
| ஶூத்³ராஶ்ச | சூத்திரர்களும் |
| ததா² | அப்படியே |
| யே | எவர்கள் |
| பாபயோநய:‖ | நீசப்பிறவியாக |
| ஸ்யு: | இருக்கிறார்களோ |

---

* - † - ‡ (ரா) சாசுவதமாயும், புனர் ஜநநமற்றதாயுமிருக்கிற, என்னுடைய பிராப்திக்குத் தடையாயுள்ள துராசாரத்திலிருந்து நிவிருத்தியை அடைகிறான். (ஸ்ரீ,வி) சாசுவதமான மோக்ஷத்தை யடைகிறான்.

§ (ரா) பரிபூர்ணமான பக்தியையுடையவனாகவாகிறான். (ஸ்ரீ,வி) நரகம் முதலிய அநர்த்தத்தை யடைகிறதில்லை.

¶ (ஶ) நிச்சயமான பிரதிக்ஞைசெய். (ஸ்ரீ) வாதஞ்செய்கிற சபையில் நகாரா அடித்துக்கொண்டும், கையை உயரவெடுத்துக்கொண்டும், துராசாரமுடையவனாலும் என்பக்தன் கெட்டுப்போகிறதில்லையென்று சத்தியஞ்செய்.

‖ (ஶ்வா) உத்தம அதம ஜாதிகளின் சேர்க்கையாலுண்டானவர்களாக.

| | |
|---|---|
| தேऽபி | அவர்களுங்கூட |
| மாம் | என்னை |
| வ்யபாஶ்ரித்ய | விசேஷமாகஸேவித்து (ஆராதித்து) |
| பராம் | உத்தமமான |
| கதிம் | கதியை (பதவியை) |
| யாந்தி | நிச்சயமாயடைகிறார்கள் |

ஓ! குந்திபுத்திரா! ஸ்திரீகளும், வைசியர்களும், சூத்திரர்களும், அப்படியே, எவர்கள் நீசப்பிறவியா யிருக்கிறார்களோ அவர்களுங்கூட என்னை ஆராதித்து உத்தமமான கதியை நிச்சயமா யடைகிறார்கள்.

(ஸ்ரீ) வேதாத்தியயன மில்லாத ஸ்திரீ சூத்திரர்களும் பயிர்த் தொழில்செய்யும் வைசியரும் என்பது தாத்பரியம்.

(ஶம்) (ரா) (மீ,வி) பாபயோநய꞉ = பாப ஜன்மத்தையுடைய ஸ்திரீகளும் வைசியர்களும் சூத்திரர்களும் என்று தாத்பரியம். (இம் மூவருக்கும் பாபயோநய꞉ என்பதை விசேஷணமாய் வைத்திருக் கிறார்கள்.) (௩௨)

---

௩௩. கிம்புநர்ப்ராஹ்மணா꞉ புண்யா ப⁴க்தா ராஜர்ஷயஸ்ததா² ।
அநித்யமஸுக²ம் லோகமிமம் ப்ராப்ய ப⁴ஜஸ்வ மாம் ॥

| | |
|---|---|
| புண்யா꞉* | புண்ணியவான்களாயும் |
| ப⁴க்தா꞉ | பக்தியுடையவர்களாயுமுள்ள |
| ப்³ராஹ்மணா꞉ | பிராமணர்களும் |
| ததா² | அப்படியே |
| ராஜர்ஷய꞉ | இராஜரிஷிகளும் |
| கிம்புந꞉ (வக்தவ்யம்) | உத்தம கதியையடைவார்க ளென்றுசொ ல்லவும் வேண்டுமோ |
| அநித்யம் | நிலையற்றவும் |
| அஸுக²ம் | சுகமற்றவுமான |
| இமம் லோகம் † | இந்தஉலகத்தை அல்லது தேகத்தை |
| ப்ராப்ய | அடைந்து (அடைந்திருக்கிறநீ) |
| மாம் | என்னை |
| ப⁴ஜஸ்வ | பஜிக்கக்கடவாய். |

---

* (ஶம்) (ரா) புண்ணியஜன்மங்களை யுடையவர்கள்.

† (ஶம்) இந்த மனுஷியலோகத்தை. அதாவது, புருஷார்த்த சாதனமான மனுஷிய ஜன்மத்தை.

(ஸ்திரீ, சூத்திராதிகளே நற்கதி யடைவார்களாகில்) புண்ணிய வான்களாயும், பக்தியுடையவர்களாயு முள்ள பிராமணர்களும், அப்படியே இராஜரிஷிகளும், உத்தமகதியை யடைவார்களென்று சொல்லவேண்டுமோ? நிலையற்றவும், சுகமற்றவுமான இந்த வுலகத்தை யடைந்திருக்கிற நீ என்னை பஜனைசெய்.

(ஸ்ரீ,வி) (இந்தசுலோகத்தை முந்திய சுலோகத்துடன் சேர்த்து அந்வயஞ் செய்திருக்கிறார். அதாவது) பாபத்தினால் ஸ்திரீ ஜன்மமடைந்த புருஷர்களும், வைசிய சூத்திர ஜன்மமடைந்த பிராமணர்களும், பகவத் பக்தியினா லுத்தமகதியை யடைவார்கள், சுவபாவத்தினால் சூத்திராதி தாழ்ந்தவருணத்தார்களே பகவத் பக்தியினால் பிராமண, க்ஷத்திரிய ரிஷிமுதலிய உயர்ந்த பிறப்பையடைந்து கதியடையும் பக்ஷத்தில் பாபத்தினால் தாழ்ந்த ஜன்மமடைந்த, உயர்ந்த வருணத்தாராகிய பகவத் பக்தர்களுக்கு நற்கதியில் சந்தேகமென்ன? "ஸ்த்ரியோ வைஶ்யா:" என்கிறவிடத்தில் சுவபாவத்தில் புருஷன் முதலியவர்களாயிருந்து, பாவத்தினால் ஸ்திரீ முதலிய ஜன்மமடைந்தவர்கள் என்று அர்த்தமேயன்றி சுவபாவத்திலேயே ஸ்திரீ முதலியவர்களென்றர்த்தமல்ல. "நஸ்த்ரியோ யாந்தி வை ஸ்வர்க்கம் ஸ்வபாவாதேவ யாஸ்த்ரிய:" என்ற பிரமாணத்தினால் சுவபாவத்தில் ஸ்திரீகளுக்குப் புருஷஜன்மங் கிடையாது. (௩௩)

---

௩௪. மந்மநா பவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு।
மாமேவைஷ்யஸி யுக்த்வைவ மாத்மாநம் மத்பராயண:॥*

| | |
|---|---|
| மந்மநா: | என்னிடத்தில்மனதைவைத்தவனையும் |
| மத்பக்த: | என்னிடத்தில்பக்தியுடையவனையும் |
| மத்யாஜீ | என்னையாராதிக்கிறவனையும் |
| பவ | ஆகக்கடவாய் |
| மாம் | என்னை |
| நமஸ்குரு | நமஸ்காரஞ்செய் |
| ஏவம் | இவ்விதமாய் |
| மத்பராயண: | என்னைச்சரணமடைந்தவனாய் |
| ஆத்மாநம் | மனசை |
| (மயி) | என்னிடத்தில் |
| யுக்த்வா | வைத்து |
| மாமேவ | என்னையே |
| ஏஷ்யஸி | அடைவாய். |

---

* இந்த சுலோகத்தைப் பவிஷியபுராணம் அத்-௯௨, ௪-௧௮-௧௯-ல், காண்க,

என்னிடத்தில் மனதை வைத்தவனாகவும், என்னிடத்தில் பக்தியை யுடையவனாகவும், என்னை யாராதிக்கிறவனாகவு மாகக்கடவாய். என்னை நமஸ்காரஞ்செய். இவ்விதமாய்ச் சரணமடைந்தவனாய் மனசை என்னிடத்தில் வைத்தாயானால், என்னையே யடைவாய்.

(ஶ௦) ஏவம் = இவ்விதமாய், மத்பராயண꞉ = என்னைச் சரணமடைந்தவனாய், யுக்த்வா = சித்தத்தை நிற்கும்படிசெய்து, ஆத்மாநம் = (உன்) ஆத்மாவாகிய, மாமேவ = என்னையே, ஏஷ்யஸி = அடைவாய்.

(ஸா) மந்மநா꞉ = சர்வேசுவரன், குற்றமற்றவன், அநந்த கல்லியாண குணமுடையவன், சர்வக்ஞன், சத்தியசங்கற்பன், ஜகத்காரணன், பரப்பிரம்மம், புருஷோத்தமன், அரவிந்தாக்ஷன், நீலமேகவண்ணன், ஒரேகாலத்தி லுதயமான அனேக சூரியர்களுடைய பிரகாசத்தைவிட அதிகப் பிரகாசமுள்ளவன், மகா அழகுள்ளவன், சிரேஷ்டமான நான்கு கைகளை யுடையவன், மின்னற்கொடிபோலொத்த பீதாம்பரந் தரித்தவன், நிர்மலமான நவரத்தினங்களாலிழைத்த கிரீடகுண்டல ஹார கேயூர கடகங்கள் முதலிய ஆபரணங்களைத் தரித்தவன், அபாரகாருண்ணியம், சௌந்தரியம், நன்னடை, மதுரவாக்கு, கெம்பீரம், உதாரத்துவம், பக்தவாச்சல்லியம், இவைமுதலிய அநேககுண சாகரன், சரணமடையத் தகுந்தவன், சர்வசுதந்திரன் ஆகிய என்னிடத்தில் ஒருபாத்திரத்தி லிருந்து மற்றொருபாத்திரத்தில் எண்ணெயைவிட்டால் அந்த எண்ணெய்த் தாரையானது இரண்டு பாத்திரத்திற்கும் மத்தியி லிடைவிடாமல் ஒரேதாரையா யிருப்பதுபோல மனசை வைத்தவனாய், மத்யாஜீ = உனக்கிஷ்டமான சகல வஸ்துக்களையு மெனக்கு ஒப்பிவித்துவிடு. மாம் நமஸ்குரு = பரமாத்மாவாயும் சர்வசேஷியாயுமிருக்கிற என்னிடத்தில் எப்போதும் அதிக வணக்கத்துடனிரு, மத்பராயண꞉ = என்னையே எப்போதும் ஆசிரயித்திரு, என்பது தாத்பரியம். (௩௪)

ஓம் தத்ஸதிதி ஶ்ரீமத்பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம்

யோகஶாஸ்த்ரே ஶ்ரீக்ருஷ்ணார்ஜுநஸம்வாதே

ராஜவித்யா ராஜகுஹ்யயோகோ நாம

நவமோऽத்யாய꞉.

ஶ்ரீக்ருஷ்ணாயபரப்ரஹ்மணே நம꞉.

இராஜவித்தியா இராஜகுஹ்யயோகமென்கிற

ஒன்பதாவது அத்தியாயம்

முற்றிற்று.

𑌶𑍍𑌰𑍀𑌃.

𑌅𑌥 𑌦𑌶𑌮𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌪𑍍𑌰𑌾𑌰𑌮𑍍𑌭𑌃.

# பத்தாவது அத்தியாயம்.

---

𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚.

க. 𑌭𑍂𑌯 𑌏𑌵 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌶𑍃𑌣𑍁 𑌮𑍇 𑌪𑌰𑌮𑌂 𑌵𑌚𑌃।
𑌯𑌤𑍍𑌤𑍇𑌽𑌹𑌂 𑌪𑍍𑌰𑍀𑌯𑌮𑌾𑌣𑌾𑌯 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌹𑌿𑌤𑌕𑌾𑌮𑍍𑌯𑌯𑌾॥

| | |
|---|---|
| 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 | ஓ ! தோள்வலியுடையவனே |
| 𑌪𑍍𑌰𑍀𑌯𑌮𑌾𑌣𑌾𑌯* | பிரீதியோடுகூடியிருக்கிற |
| 𑌤𑍇 | உனக்கு |
| 𑌹𑌿𑌤𑌕𑌾𑌮𑍍𑌯𑌯𑌾† | நன்மைசெய்யவேண்டுமென்கிற உத்தேசத்தினல் |
| 𑌭𑍂𑌯 𑌏𑌵 | மறுபடியும் |
| 𑌯𑌤𑍍 𑌵𑌚𑌃 | எந்தவாக்கியத்தை |
| 𑌅𑌹𑌂 | நான் |
| 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 | சொல்லப்போகிறேனே |
| 𑌮𑍇 | என்னுடைய |
| 𑌪𑌰𑌮𑌂‡ | சிரேஷ்டமான |
| (𑌤𑌤𑍍𑌵𑌚𑌃) | அந்தவாக்கியத்தை |
| 𑌶𑍃𑌣𑍁 | கேள். |

ஓ ! அர்சுன ! பிரீதியோடு கூடியிருக்கிற வுனக்கு நன்மையைக் கருதினவனாய், மறுபடியு மெந்தவாக்கியத்தை நான்சொல்லுகிறேனே, என்னுடைய சிரேஷ்டமான அந்தவாக்கியத்தைக்கேள். (க)

---

உ. 𑌨 𑌮𑍇 𑌵𑌿𑌦𑍁𑌃 𑌸𑍁𑌰𑌗𑌣𑌾𑌃 𑌪𑍍𑌰𑌭𑌵𑌂 𑌨 𑌮𑌹𑌰𑍍𑌷𑌯𑌃।
𑌅𑌹𑌮𑌾𑌦𑌿𑌰𑍍𑌹𑌿 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌂 𑌮𑌹𑌰𑍍𑌷𑍀𑌣𑌾𑌂 𑌚 𑌸𑌰𑍍𑌵𑌶𑌃॥

---

* (𑌶𑌾𑌂) என்வார்த்தையைக்கேட்டு, அமிருதபானம் செய்தவன்போல் சந்தோஷிக்கிற. (ரா) என் மகிமைகளைக் கேட்டு பிரீதியடைந்திருக்கிற. (𑌮) (𑌶𑍍𑌰𑍀,𑌵𑌿) என்வார்த்தையைக்கேட்டு சந்தோஷித்திருக்கிற (𑌹𑌾) 𑌪𑍍𑌰𑍀𑌯𑌮𑌾𑌣𑌾𑌯 - என்றுசில பாடமுண்டு.

† (ரா) பக்தி அதிக விருத்தியாகிறதினலே யுண்டாகும்பலனை நீ யடைய வேண்டுமென்கிற இச்சையினலே.

‡ (𑌶𑌾𑌂) பரமாத்ம சுவரூபத்தைப் பிரகாசிப்பிவிக்கிற, (ரா) என்னுடைய மகிமையை யதிகமாய்த் தெரிவிக்கிற.

| | |
|---|---|
| மே | என்னுடைய |
| ப்ரபவம்* | உத்தமமான அவதாரமகிமையை |
| ஸுரகணா: | தேவசமூகங்கள் (தேவக்கூட்டங்கள்) |
| ந விது: | அறியவில்லை |
| மஹர்ஷய: | மகரிஷிகளும் |
| ந (விது:) | அறியவில்லை |
| ஹி | ஏனென்றால் |
| அஹம் | நான் |
| தேவாநாம் | தேவதைகளுக்கும் |
| மஹர்ஷீணாஞ்ச | மகரிஷிகளுக்கும் |
| ஸர்வஶ: | எல்லாவிதங்களினாலே |
| ஆதி: | காரணமாயிருக்கிறேன். |

என்னுடைய உத்தமமான அவதார மகிமையை தேவதைகளும் மகரிஷிகளும் அறியவில்லை. ஏனென்றால், நான் அவர்களுக்கு எல்லா விதத்திலும் காரணமாயிருக்கிறேன்.

(ரா) தேவதைகளும் ரிஷிகளும் கண்ணுக்குக் காணாதவஸ்துக் களையும், சென்றகாலம் வரும் காலங்களில் நடந்த நடக்குஞ் சங்கதி களையும், அறிய சக்தியுள்ளவர்கள். அவர்களுடைய ஞானமும் சக்தியும் மற்றவர்களைவிட அதிகமானது. அப்படியிருந்தும் அவர்கள் என்னு டைய நாம கரும சுவரூப சுவபாவாதி மகிமைகளை அறியவில்லை. ஏனென்றால், அவர்களுக்கு நான் ஆதிகாரணமா யிருக்கிறேன். என் னால் கொடுக்கப்பட்ட அவர்களுடைய ஞானாதிகள் அற்பமானவை. என்னுடைய சகல மகிமைகளையு மறியப்போதுமானவையல்ல, என் பது தாத்பரியம். (௨)

---

௩. யோ மாமஜமநாதிஞ்ச வேத்தி லோகமஹேஶ்வரம்।
அஸம்மூட⁴: ஸ மர்த்யேஷு ஸர்வபாபை: ப்ரமுச்யதே॥

| | |
|---|---|
| ய: | எவன் |
| மாம் | என்னை |
| அநாதிம்† | ஆதியற்றவனென்றும் |

---

* (ஶ்ரீ) (என்னுடைய) பிரபுசக்தியினதிசயம் அல்லது உற்பத்தியை.

† (ரா) ஆதியற்றவனென்பது மல்லாமல், பிறப்பற்றுப்போன முக்தாளைப் பார்க்கிலும் வேறானவன். முக்தானுக்குப் பிறப்பற்றுப்போனது, முக்தியை யடைந் தபின்பேயன்றி அவர்கள் அநாதியாய்ப் பிறப்பற்றவர்களல்ல. (ம) (ஶ்ரீ,வி) அநாதி—

| | |
|---|---|
| 𑌅𑌜𑌂* | பிறப்பற்றவனென்றும் |
| 𑌲𑍋𑌕𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌮𑍍† | சகலஉலகத்திற்குமீசனென்றும் |
| 𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 | அறிகிறுனோ |
| 𑌸𑌃 | அவன் |
| 𑌮𑌰𑍍𑌤𑍍𑌯𑍇𑌷𑍁 | மனிதர்களிலே |
| 𑌅𑌸𑌂𑌮𑍂𑌢𑌃 | அக்ஞான மில்லாதவன் |
| 𑌸𑌰𑍍𑌵𑌪𑌾𑌪𑍈𑌃 | சகலபாபங்களிலிருந்து |
| 𑌪𑍍𑌰𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 | விடுபடுகிறுன். |

எவன் என்னை ஆதியற்றவன் பிறப்பற்றவன் சகல உலகத்திற்கு மீசன் என்று அறிகிறுனோ, அவன் மனிதர்களிலே அக்ஞான மில்லாதவன்; சகலபாபங்களிலிருந்து விடுபடுகிறுன். (என்றல், இவ்விதமாகத் தியானித்து வந்தால், கருமபந்தத்திலிருந்து விடுபடுவானென்பது கருத்து) (௩)

---

௪. 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌸𑌂𑌮𑍋𑌹𑌃 𑌕𑍍𑌷𑌮𑌾 𑌸𑌤𑍍𑌯𑌂 𑌦𑌮𑌃 𑌶𑌮𑌃।
𑌸𑍁𑌖𑌂 𑌦𑍁𑌃𑌖𑌂 𑌭𑌵𑍋𑌽𑌭𑌾𑌵𑍋 𑌭𑌯𑌂 𑌚𑌾𑌭𑌯𑌮𑍇𑌵 𑌚॥

௫. 𑌅𑌹𑌿𑌂𑌸𑌾 𑌸𑌮𑌤𑌾 𑌤𑍁𑌷𑍍𑌟𑌿𑌸𑍍𑌤𑌪𑍋 𑌦𑌾𑌨𑌂 𑌯𑌶𑍋𑌽𑌯𑌶𑌃।
𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌭𑌾𑌵𑌾 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌮𑌤𑍍𑌤 𑌏𑌵 𑌪𑍃𑌥𑌗𑍍𑌵𑌿𑌧𑌾𑌃॥

| | |
|---|---|
| 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃‡ | நன்மைதீமைகளி னறிவு |
| 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂§ | ஆத்மசுவரூபஞானம் |

---

𑌪𑍍𑌰𑌭𑌵𑌂 = சகல லோகங்களையும் சேஷ்டிப்பிக்கிறவன். 𑌭𑌵 = சகல உலகங்களுக்கும் காரணன். (மீ,வி) அல்லது, 𑌪𑍍𑌰 = முக்கியப் பிராணனுக்கும் (வாயுவுக்கும்) 𑌭𑌵 = காரணன்.

* (ரா) பிறப்பற்றவனுமல்லாமல், உற்பத்தியையுடைய அசேதன வஸ்துக்கள், சமுசாரியான சேதனவஸ்துக்கள், இவைகளுக்கும் வேறுனவன்.

† (ரா) (பிரம்மா - இந்திரன் முதலிய) லோகாதிபதிகள் கருமங்களினுலே ஒவ்வொரு காலங்களிலே ஒவ்வொரு லோகாதி பத்தியத்தை யடைந்தார்கள்; அப்படியே யோகிகள் அணிமாதி அஷ்ட ஐசுவரியங்களை அடைந்தார்கள். பகவானே, அநாதியாய் சகலலோகங்களுக்கும் அந்த லோகாதிபதிகளுக்கும் ஈசுவரன் என்றும்.

‡ (சா) சூக்ஷ்ம வஸ்துக்களைக் கிரகிக்கிற அந்தக்கரணத்தினுடைய சாமர்த்தியம். (ரா) மனதினுடைய நிருபண சாமர்த்தியம். (ஸ்ரீ) (மீ,வி) காரியா காரியங்களை நிச்சயிக்கிறது.

§ (சா) ஆத்மாமுதலிய வஸ்துக்களைத் தெரிந்துகொள்ளுகிற அறிவு. (ரா) சித சித் வஸ்துக்களுடைய நிச்சயம். (ஸ்ரீ) அறிவு. (மீ,வி) சாமான்னியஞானம்.

| | |
|---|---|
| 𑌅𑌸𑌂𑌮𑍋𑌹𑌃 * | மோகமின்மை |
| 𑌕𑍍𑌷𑌮𑌾 † | பொறுமை |
| 𑌸𑌤𑍍𑌯𑌂 ‡ | சத்தியம் (உண்மை) |
| 𑌦𑌮𑌃 § | வெளியிந்திரியங்களையடக்குதல் |
| 𑌶𑌮𑌃 ¶ | அந்தக்கரணத்தையடக்குதல் |
| 𑌸𑍁𑌖𑌂 | சுகம் |
| 𑌦𑍁𑌃𑌖𑌂 | துக்கம் |
| 𑌭𑌵𑌃 + | உற்பத்தி |
| 𑌅𑌭𑌾𑌵𑌃 × | நாசம் |
| 𑌭𑌯𑌂 ∴ | பயம் |
| 𑌅𑌭𑌯𑌂 | பயநிவிருத்தி |
| 𑌅𑌹𑌿𑌂𑌸𑌾 | பிறருக்குத்துன்பஞ்செய்யாமை |
| 𑌸𑌮𑌤𑌾 | (சத்துரு மித்திராளிடத்தில்) சமமாயிருப்பது |
| 𑌤𑍁𑌷𑍍𑌟𑌿𑌃 $ | (கிடைத்தவரையில்) சந்தோஷம் |

* (ஶம்) தெரியவேண்டிய வஸ்துக்களைச் செவ்வையாய்த் தெரிந்துகொள்ளுதல். (ரா) பிரமை நிவிருத்தி. (ஸ்ரீ,வி) காரியங்களி லிச்சையின்மை. அல்லது, மித்தியாஞ்ஞானவின்மை.

† (ஶம்) (ரா) அவமானம் நேரிட்டாலும், அதினுல் மனசு விகாரப்படாமை (ஸ்ரீ,வீ) துவேஷமற்றிருப்பது மல்லாமல், அபகாரம் செய்தாலுங் கூட உபகாரமே செய்வது.

‡ (ஶம்) (ரா) தான் கேட்டு, பார்த்து, அனுபவித்திருக்கிறதைப் பிறருக்குச் சரியாய்ச்சொல்வது. (ஸ்ரீ,வீ) உண்மையான ஞானத்துடன் அனுஷ்டானஞ் செய்வது. அல்லது, உண்மையானவசனம்.

§ (ம) (ஸ்ரீ,வீ) இந்திரிய நிக்கிரகம்.

¶ (ம) (ஸ்ரீ,வி) பகவன்நிஷ்டை.

\+ (ரா) அநுகூலமான அனுபவத்தினுலுண்டாகிய மனநிலைமை.

× (ரா) பிரதிகூலமான அநுபவத்தினு லுண்டாகிய மன ழய்வு. (ஸ்ரீ,வி) 𑌭𑌵𑌃=இருப்பு.

∴ (ரா) இனி வரப்போகிற துக்கத்திற்கு ஏதுவான வஸ்துக்களைப் பார்ப்பதினு லுண்டாகும் துக்கம்.

$ (ஶம்) கிடைத்தவரையில் திருப்தி யடைதல். (ரா) காணப்படும் சகல ஆத்மாக்களிடத்திலும் சந்தோஷப்படுதல்.

| | |
|---|---|
| 𑌤𑌪𑌃* | தபசு |
| 𑌦𑌾𑌨𑌂† | (ஸத்பாத்திரத்தில்) தானஞ்செய்தல் |
| 𑌯𑌶𑌃‡ | கீர்த்தி |
| 𑌅𑌯𑌶𑌃§ | அபகீர்த்தி |
| 𑌪𑍃𑌥𑌗𑍍𑌵𑌿𑌧𑌾𑌃 | நானாவிதங்களான |
| 𑌭𑌾𑌵𑌾𑌃 | (மேற்கண்ட புத்திமுதல் அபகீர்த்திவரையிலுள்ள) வஸ்துக்கள் |
| 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌮𑍇𑌵 | பிராணிகளுக்காகவே |
| 𑌮𑌤𑍍𑌤𑌏𑌵¶ | என்னாலேயே |
| 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿‖ | உண்டாகின்றன. |

புத்தி, ஞானம், மோகமின்மை, பொறுமை, சத்தியம், இந்திரிய நிக்கிரகம், அந்தக்கரண நிக்கிரகம், சுகம், துக்கம், உற்பத்தி, நாசம், பயம், அபயம், துன்பஞ்செய்யாமை, சமமாயிருத்தல், சந்தோஷம், தபசு, தானம், கீர்த்தி, அபகீர்த்தி இவைகள் பிராணிகளுக்கு என்னாலேயே யுண்டாகின்றன. (௪-௫)

---

௬. 𑌮𑌹𑌰𑍍𑌷𑌯𑌃 𑌸𑌪𑍍𑌤 𑌪𑍂𑌰𑍍𑌵𑍇 𑌚𑌤𑍍𑌵𑌾𑌰𑍋 𑌮𑌨𑌵𑌸𑍍𑌤𑌥𑌾।
𑌮𑌦𑍍𑌭𑌾𑌵𑌾 𑌮𑌾𑌨𑌸𑌾 𑌜𑌾𑌤𑌾 𑌯𑍇𑌷𑌾𑌂 𑌲𑍋𑌕 𑌇𑌮𑌾𑌃 𑌪𑍍𑌰𑌜𑌾𑌃॥

| | |
|---|---|
| 𑌪𑍂𑌰𑍍𑌵𑍇 | பூர்வீகாளான (முன்னோர்களான) |
| 𑌸𑌪𑍍𑌤 𑌮𑌹𑌰𑍍𑌷𑌯𑌃 | (பிருகுமுதலிய) ஏழுரிஷிகளும் |
| 𑌤𑌥𑌾 | அப்படியே |

---

* (ஶ०) இந்திரியங்களை யடக்கி தேகத்தை வருத்துகிற விரதங்களைச் செய்தல். (ரா) ஏற்பட்டிருக்கிற போகங்களைக் குறைத்து சாஸ்திரப்படி விரதங்களினால் தேகத்தை வருந்தச்செய்தல். (ஸ்ரீ,வி) பிரம்மசாரி விரதமுதலியவை. (ஸூ) இதின் அத்-௯-௪-௪௯. பார்க்க.

† (ஶ०) தனக்குண்டாயிருக்கிற வஸ்துக்களில், தன்சக்திக் கியன்றமாத்திரம் தானஞ்செய்தல். (ரா) தனக்குச் சுகத்தைக் கொடுக்கிறதாகிய தன் சொந்தமான வஸ்துக்களைப் பிறருக்குக் கொடுத்தல். (ஸ்ரீ,வி) தருமமாய் சம்பாதித்த வஸ்துக்களைப் பிறருக்குக் கொடுத்தல்.

‡ (ஶ०) புண்ணியத்தினா லுண்டான கீர்த்தி. (ரா) பிறர் நல்லவனென்று சொல்லுதல்.

§ (ஶ०) பாபத்தினா லுண்டான அபகீர்த்தி. (ரா) பிறர் துஷ்டனென்று சொல்லுதல்.

¶ (ரா) என்சங்கற்பத்தினாலேயே.

‖ (ஶ०) கருமானுசாரமா யுண்டாகின்றன.

௰. 𑌅𑌨𑍇𑌕𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑌨𑌯𑌨𑌂 𑌅𑌨𑍇𑌕𑌾𑌦𑍍𑌭𑍁𑌤𑌦𑌰𑍍𑌶𑌨𑌂।
𑌅𑌨𑍇𑌕𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌭𑌰𑌣𑌂 𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌨𑍇𑌕𑍋𑌦𑍍𑌯𑌤𑌾𑌯𑍁𑌧𑌂॥

௧௧. 𑌦𑌿𑌵𑍍𑌯𑌮𑌾𑌲𑍍𑌯𑌾𑌮𑍍𑌬𑌰𑌧𑌰𑌂 𑌦𑌿𑌵𑍍𑌯𑌗𑌨𑍍𑌧𑌾𑌨𑍁𑌲𑍇𑌪𑌨𑌂।
𑌸𑌰𑍍𑌵𑌾𑌶𑍍𑌚𑌰𑍍𑌯𑌮𑌯𑌂𑌦𑍇𑌵 𑌮𑌨𑌨𑍍𑌤𑌂𑌵𑌿𑌶𑍍𑌵𑌤𑍋𑌮𑍁𑌖𑌂॥

| | |
|---|---|
| 𑌸𑌂𑌜𑌯 𑌉𑌵𑌾𑌚 | சஞ்சயன்சொல்வது |
| 𑌮𑌹𑌾𑌰𑌾𑌜 | ஓ! திருதராஷ்டரமகாராஜாவே ! |
| 𑌮𑌹𑌾𑌯𑍋𑌗𑍇𑌶𑍍𑌵𑌰𑌃 | மகாத்துமாவாயும், யோகிகளுக் கெல்லா மீசனுயுமிருக்கிற |
| 𑌹𑌰𑌿𑌃 | கிருஷ்ணசுவாமியானவர் |
| 𑌏𑌵𑌂 | இவ்விதமாய் |
| 𑌉𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 | சொல்லி |
| 𑌤𑌤𑌃 | அதற்குப்பிறகு |
| 𑌅𑌨𑍇𑌕𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑌨𑌯𑌨𑌂 | அநேக முகங்களையும், கண்களையு முடையவும் |
| 𑌅𑌨𑍇𑌕𑌾𑌦𑍍𑌭𑍁𑌤𑌦𑌰𑍍𑌶𑌨𑌂 | அநேக அற்புதங்களான காக்ஷிகளையுடையவும் |
| 𑌅𑌨𑍇𑌕𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌭𑌰𑌣𑌂 | அநேகங்களாயும் திவ்வியங்களாயு மிருக்கிற ஆபரணங்களையுடையவும் |
| 𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌨𑍇𑌕𑍋𑌦𑍍𑌯𑌤𑌾𑌯𑍁𑌧𑌂 | திவ்வியங்களாயு மநேகங்களாயு மிருக்கிற உயரவெடுக்கப்பட்ட ஆயுதங்களை யுடையவும் |
| 𑌦𑌿𑌵𑍍𑌯𑌮𑌾𑌲𑍍𑌯𑌾𑌮𑍍𑌬𑌰𑌧𑌰𑌂 | திவ்வியங்களான ஹாரங்களையும் வஸ்திரங்களையும் அணிந்திருக்கிறவும் |
| 𑌦𑌿𑌵𑍍𑌯𑌗𑌨𑍍𑌧𑌾𑌨𑍁𑌲𑍇𑌪𑌨𑌂 | சிரேஷ்டமான வாசனைத் திரவியங்களைப் பூசியிருக்கிறவும் |
| 𑌸𑌰𑍍𑌵𑌾𑌶𑍍𑌚𑌰𑍍𑌯𑌮𑌯𑌂 | சகலருக்கும் ஆச்சரியத்தை யுண்டாக்கிறவும் |
| 𑌦𑍇𑌵𑌂 | பிரகாசமானவும் |
| 𑌅𑌨𑌨𑍍𑌤𑌂* | முடிவில்லாதவும் |
| 𑌵𑌿𑌶𑍍𑌵𑌤𑍋𑌮𑍁𑌖𑌂 | சகலதிக்கிலும்முகங்களையுடையவும் |
| 𑌪𑌰𑌮𑌂 | உத்தமமுமான |
| 𑌐𑌶𑍍𑌵𑌰𑌂 𑌰𑍂𑌪𑌂 | விசுவரூபத்தை |

* (ஸ்ரீ) (ரா) (மீ,வி) சர்வகாலங்களிலு மிருக்கப்பட்ட சகல வஸ்துக்களுக்கும் ஆதாரமாயிருக்கிறதினால், சகலலோகங்களிலும் சர்வகாலங்களிலும் வியாபித்திருக்கிறவும்.

| | |
|---|---|
| 𑌪𑌾𑌰𑍍𑌥𑌾𑌯 | குந்திபுத்திரன் அர்ஜுனன் பொருட்டு |
| 𑌦𑌰𑍍𑌶𑌯𑌾𑌮𑌾𑌸 | காண்பிவித்தார். |

சஞ்சயன் சொல்வது—ஓ! திருதராஷ்டிர மகாராஜாவே! மகாத்துமாவாயும், யோகிகளுக்கெல்லா மீசனுயுமிருக்கிற கிருஷ்ணசுவாமியானவர் இவ்விதமாகச்சொல்லி அதற்குப்பிறகு அநேகமுகங்களையும் கண்களையும் உடையவும், அநேக அற்புதங்களான காக்ஷிகளையுடையவும், அநேகங்களாயும் திவ்வியங்களாயு முள்ள ஆபரணங்களை தரித்தவும், திவ்வியங்களாயும் அநேகங்களாயு மிருக்கிற உயரவெடுக்கப்பட்ட ஆயுதங்களை யுடையவும், திவ்வியங்களான ஹாரங்களையும் வஸ்திரங்களையும் அணிந்திருக்கிறவும், சிரேஷ்டங்களான வாசனைத் திரவியங்களைப் பூசியிருக்கிறவும், சகலருக்கும் ஆச்சரியத்தை யுண்டாக்குகிறவும், பிரகாசமானவும், முடிவில்லாதவும், சகலதிக்கிலும் முகங்க ளுடையவும், உத்தமமுமான விசுவரூபத்தை அர்ஜுனன்பொருட்டு காண்பிவித்தார். (௯-௧௦-௧௧)

---

௧௨. 𑌦𑌿𑌵𑌿 𑌸𑍂𑌰𑍍𑌯𑌸𑌹𑌸𑍍𑌰𑌸𑍍𑌯 𑌭𑌵𑌦𑍍𑌯𑍁𑌗𑌪𑌦𑍁𑌤𑍍𑌥𑌿𑌤𑌾।
𑌯𑌦𑌿 𑌭𑌾𑌃 𑌸𑌦𑍃𑌶𑍀 𑌸𑌾 𑌸𑍍𑌯𑌾𑌦𑍍𑌭𑌾𑌸𑌸𑍍𑌤𑌸𑍍𑌯 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌃॥

| | |
|---|---|
| 𑌦𑌿𑌵𑌿 | ஆகாசத்தில் |
| 𑌸𑍂𑌰𑍍𑌯𑌸𑌹𑌸𑍍𑌰𑌸𑍍𑌯 | அநேகஆயிரம் சூரியர்களுடைய |
| 𑌭𑌾𑌃 | காந்தியானது |
| 𑌯𑍁𑌗𑌪𑌤𑍍 | ஒரேகாலத்தில் |
| 𑌉𑌤𑍍𑌥𑌿𑌤𑌾 𑌭𑌵𑌤𑍍 | உண்டானால் |
| 𑌸𑌾 | அது |
| 𑌤𑌸𑍍𑌯 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 | அந்த விசுவரூபத்தைத்தரித்த மகாத்துமாவினுடைய |
| 𑌭𑌾𑌸𑌃 | காந்திக்கு |
| 𑌸𑌦𑍃𑌶𑍀 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 | சமானமாகும். |

ஆகாசத்திலநேக ஆயிரம் சூரியர்களுடைய காந்தியானது ஒரேகாலத்தி லுண்டானால், அது அந்த விசுவரூபத்தைத் தரித்த மகாத்துமாவினுடைய காந்திக்குச் சமானமாகும். (௧௨)

---

௧௩. 𑌤𑌤𑍍𑌰𑍈𑌕𑌸𑍍𑌥𑌂 𑌜𑌗𑌤𑍍𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌂 𑌪𑍍𑌰𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑌮𑌨𑍇𑌕𑌧𑌾।
𑌅𑌪𑌶𑍍𑌯𑌦𑍍𑌦𑍇𑌵𑌦𑍇𑌵𑌸𑍍𑌯 𑌶𑌰𑍀𑌰𑍇 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌸𑍍𑌤𑌦𑌾॥

| | |
|---|---|
| தத்ர | அப்போது |
| அநேகதா* | பலவிதங்களாயும் |
| ப்ரவிபக்தம்† | தனித்தனியாயுமிருக்கிற |
| க்ருத்ஸ்நம்‡ | சகலமான |
| ஜகத்§ | ஜகத்தை |
| தேவதேவஸ்ய | தேவதைகளுக்கெல்லாம் தேவனான கிருஷ்ணசுவாமியி னுடைய |
| தத்ர ஶரீரே | அந்த விசுவரூபத்தில் |
| ஏகஸ்தம்¶ | ஓரிடத்திலிருக்கிறதாக |
| பாண்டவ: | அர்சுனன் |
| அபஶ்யத் | பார்த்தான். |

அப்போது பலவிதங்களாயும் தனித்தனியாயு மிருக்கிற சகலமான ஜகத்தை, தேவதைகளுக்கெல்லாம் தேவனான கிருஷ்ணசுவாமியினுடைய அந்த விசுவரூபத்தி லோரிடத்தி லிருக்கிறதாக அர்சுனன் பார்த்தான் (௧௩)

---

௧௪. தத: ஸ விஸ்மயாவிஷ்டோ ஹ்ருஷ்டரோமா தநஞ்ஜய:।
ப்ரணம்ய ஶிரஸா தேவம் க்ருதாஞ்ஜலிரபாஷத॥

| | |
|---|---|
| தத: | (அப்படிப்பட்டரூபத்தைப்பார்த்த) பிறகு |
| விஸ்மயாவிஷ்ட: | ஆச்சரியமடைந்தவனும் |
| ஹ்ருஷ்டரோமா | மயிர்கூர்ச்ச முடையவனுமுள்ள |
| ஸ: தநஞ்ஜய: | அந்த அர்சுனன் |
| தேவம் | விசுவரூபத்தைத் தரித்திருக்கிற தேவனை |
| ஶிரஸா | தலையினாலே |
| ப்ரணம்ய | நமஸ்கரித்து |
| க்ருதாஞ்ஜலி: | கைகூப்பிக்கொண்டவனாய் |
| அபாஷத | பேசத்தொடங்கினான். |

---

* (ஶம்) தேவ பிதுரு மனுஷியாதி பேதங்களால் பலவிதங்களாயும்.

† - ‡ - § (ரா) பிரம்மாதி விவிதவிசித்திர தேவ, மனுஷிய, மிருக, ஸ்தாவராதி போகத்தை யனுபவிக்கிற சேதனர்களுடைய கூட்டமானவும், பிருதிவி, அந்தரிக்ஷம், சுவர்க்கம், பாதாளம், முதலிய போகஸ்தானங்களாகவும், போக யோக்கியமான பலவஸ்துக்களாகவும், போகத்திற்குச் சாதனங்களான பலவித தேகேந்திரியாதிகளாகவும், தனித்தனியே யிருக்கிற சகலமான ஜகத்தை.

¶ (ரா) ஏதோ ஒரு பாகத்தி லிருக்கிறதாக.

அப்படிப்பட்ட விசுவரூபத்தைப்பார்த்தபிறகு ஆச்சரியமடைந்தவனும், மயிர் கூர்ச்சமுள்ளவனுமிருக்கிற அந்த அர்சுனன், விசுவரூபத்தை தரித்திருக்கிற தேவனே சிரசினால் நமஸ்காரம் செய்து கைகூப்பிக்கொண்டு பேசத் தொடங்கினான். (௧௪)

---

𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚.

௧௫. 𑌪𑌶𑍍𑌯𑌾𑌮𑌿𑌦𑍇𑌵𑌾𑌂 𑌸𑍍𑌤𑌵𑌦𑍇𑌵𑌦𑍇𑌹𑍇 𑌸𑌰𑍍𑌵𑌾𑌂𑌸𑍍𑌤𑌥𑌾𑌭𑍂𑌤𑌵𑌿𑌶𑍇
𑌷𑌸𑌙𑍍𑌘𑌾𑌨𑍍 । 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌣𑌮𑍀𑌶𑌂 𑌕𑌮𑌲𑌾𑌸𑌨𑌸𑍍𑌥 𑌮𑍃𑌷𑍀𑌂𑌶𑍍𑌚𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍁
𑌰𑌗𑌾𑌂𑌶𑍍𑌚𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌨𑍍॥

| | |
|---|---|
| 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨𑌉𑌵𑌾𑌚 | அர்சுனன்சொல்வது |
| 𑌹𑍇𑌦𑍇𑌵 | ஓ ! தேவனே ! |
| 𑌤𑌵 | உம்முடைய |
| 𑌦𑍇𑌹𑍇 | விசுவரூபமாகியசரீரத்தில் |
| 𑌦𑍇𑌵𑌾𑌨𑍍 | இந்திராதிதேவதைகளையும் |
| 𑌤𑌥𑌾 | அப்படியே |
| 𑌈𑌶𑌂* | தேவதைகளுக்கெல்லாமீசனையும் |
| 𑌕𑌮𑌲𑌾𑌸𑌨𑌸𑍍𑌥𑌂† | கமலாசனத்திலிருக்கிறவராயுமுள்ள |
| 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌣𑌂 | சதுர்முகபிரம்மாவையும் |
| 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍 | சகலமான |
| 𑌋𑌷𑍀𑌂𑌶𑍍𑌚 | வசிஷ்டாதிரிஷிகளையும் |
| 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍 | சகலமான |
| 𑌭𑍂𑌤𑌵𑌿𑌶𑍇𑌷𑌸𑌙𑍍𑌘𑌾𑌨𑍍‡ | பலவித ஸ்தாவரஜங்கமங்களாயுள்ள பூதக் கூட்டங்களையும் |

---

* (𑌶𑌂) பிரஜைகளுக்கெல்லா மீசனையும்.

† (𑌶𑌂) (𑌶𑍍𑌰𑍀) தாமரைப் பூப்போலிருக்கிற பூமியில் கர்ண்ணிகையை (காயை) ப்போலிருக்கிற மேருபருவதத்தில் வாசஞ்செய்பவருமான அல்லது, (𑌶𑍍𑌰𑍀) உம்முடைய நாபிகமலமாகிய ஆசனத்திலிருக்கிறவருமான. (𑌰𑌾) (மீ,வி) 𑌕𑌮𑌲𑌾𑌸𑌨𑍇 = கமலாசனனான பிரம்மாவினுடைய அதீனத்தில், 𑌸𑍍𑌥𑌂 = இருக்கிற, 𑌈𑌶𑌂 = ருத்திரனையும்.

‡ (𑌶𑍍𑌰𑍀) பலவித பூதக்கூட்டங்களென்றால் ;—

𑌜𑌰𑌾𑌯𑍁𑌜𑌾𑌃 = (ஜராயுஜங்கள்) அதாவது கருப்பையிலிருந்து பிறக்கிற மனுஷியாதி ஜந்துக்கள்.

𑌅𑌣𑍍𑌡𑌜𑌾𑌃 = (அண்டஜங்கள்) முட்டையிலிருந்து ஜனிக்கிற பக்ஷிபாம்பு முதலியன.

| | |
|---|---|
| திவ்யாந்* | விசித்திரங்களான |
| உரகாம்ஶ்ச | சர்ப்பங்களையும் |
| பஶ்யாமி | பார்க்கிறேன். |

அர்சுனன் சொல்வது—ஓ! தேவனே! உம்முடைய விசுவரூபமாகிய சரீரத்தில் இந்திராதி தேவதைகளையும், அப்படியே தேவதைகளுக்கு ஈசனும் கமலாசனத்தி லிருப்பவருமான சதுர்முக பிரம்மாவையும், சகலமான ரிஷிகளையும், பலவித ஸ்தாவர சங்கமங்களாயுள்ள பூதக்கூட்டங்களையும், விசித்திரங்களான சர்ப்பங்களையும் பார்க்கிறேன்.

---

௧௬. அநேகபாஹூதரவக்த்ரநேத்ரம் பஶ்யாமி த்வாம் ஸர்வதோऽநந்தரூபம் । நாந்தம் ந மத்யம் ந புநஸ்தவாதிம் பஶ்யாமி விஶ்வேஶ்வர விஶ்வரூப ॥†

| | |
|---|---|
| ஹே விஶ்வேஶ்வர | ஓ! சகலஜகத்திற்குமீசனே! |
| ஹே விஶ்வரூப | ஓ! விசுவரூபத்தைத் தரித்திருக்கிறவரே! |
| அநேகபாஹூதரவக்த்ரநேத்ரம் | அநேகங்களான, கைகள், வயிறுகள், முகங்கள், கண்களையுடையவும |
| அநந்தரூபம் | அநேகரூபங்களையுடையவுமான |
| த்வாம்‡ | உம்மை |
| ஸர்வதஃ | எவ்விடத்திலும் |
| பஶ்யாமி | பார்க்கிறேன் |
| தவ | உம்முடைய |
| ஆதிம் | ஆதியை |
| நபஶ்யாமி | நான்காணவில்லை |
| புநஃ | அப்படியே |
| மத்யம் | மத்தியத்தை |
| ந | காணவில்லை |
| அந்தம் | முடிவை |
| ந | காணவில்லை. |

---

ஸ்வேதஜாஃ = (சுவேதஜங்கள்) வேர்வையிலிருந்துண்டாகிற தேள் மூட்டைப்பூச்சி பேன் முதலியன.

உத்பிஜ்ஜாஃ = (உத்பிஜங்கள்) பூமியைப் பிளந்துகொண்டு பிறக்கிற மரம் செடி கொடி முதலியன.

* (ரா) பிரகாசிக்கிற.

† (ஸூ) இந்த மாதிரியான ஸ்தோத்திரங்களை கூர்மபுராணம் ௧௬-வது அத்தியாயத்திலும் வராகபுராணம் பூர்வபாகம் ௧௦-வது அத்தியாயத்திலும் காண்க.

‡ (ஶ்ரீ) த்வாம்-என்று பாடம், அர்த்தமொன்றே.

ஓ! சகலஜகத்திற்கு மீசனே! ஓ! விசுவரூபத்தைத் தரித்திருக்கிறவரே! அநேகங்களான கைகள் வயிறுகள் முகங்கள் கண்களை யுடையவும் அநேகரூபங்களை யுடையவுமான உம்மை எவ்விடத்திலும் பார்க்கிறேன். உம்முடைய ஆதியையாவது மத்தியத்தையாவது முடிவையாவது நான் காணவில்லை.

(ரா) ஒரு தேகத்தில் அநேக வயிறு முதலியவை எப்படியிருக்கலாமென்றால், அந்த விசுவரூபத்திலுள்ள இடுப்பானது அளவற்ற விஸ்தாரத்தை யுடையது. அந்த இடுப்புக்குமேல் அநேக வயிறுமுதலியவைகளும் அந்த இடுப்புக்குக் கீழாக அநேக பாதமுதலியவைகளும் என்பது கருத்து. (இந்த அர்த்தத்தை இதின் ௧௬-வது சுலோகத்தின் பாஷியத்தில் காண்க.) (௧௬)

---

௧௭. கிரீடினம் கதினம் சக்ரிணம் ச தேஜோராசிம் ஸர்வதோ தீப்திமந்தம்।
பச்யாமி த்வாம் துர்நிரீக்ஷ்யம் ஸமந்தாத் தீப்தாநலார்கத்யுதிமப்ர
மேயம்॥

| | |
|---|---|
| கிரீடினம் | கிரீடத்தையுடையவும் |
| கதினம் | கதாயுதத்தையுடையவும் |
| சக்ரிணம் ச | சக்கராயுதத்தையுடையவும் |
| தேஜோராசிம் | தேஜஸ்கூட்டமாயும் |
| ஸர்வதஃ | எங்கும்பரவியிருக்கிற |
| தீப்திமந்தம் | காந்தியையுடையவும் |
| துர்நிரீக்ஷ்யம்* | அதிககஷ்டத்தினல்பார்க்கத்தக்கவும் |
| தீப்தாநலார்கத்யுதிம் | சுவலிக்கிற அக்கினி, சூரியன், இவர்களுடைய ஒளிபோலொத்த ஒளியை யுடையவும் |
| அப்ரமேயம்† | அளவிடக்கூடாதவுமான |
| த்வாம்‡ | உம்மை |
| ஸமந்தாத் | எவ்விடத்திலேயும் |
| பச்யாமி | பார்க்கிறேன். |

கிரீட கதாயுத சக்கராயுதங்களை யுடையவும், தேஜஸ் கூட்டமாயும், எங்கும் பரவிய காந்தியை யுடையவும், அதிக கஷ்டத்தினல் பார்க்கத்தக்கவும், சுவலித்துக்கொண்டிருக்கிற சூரியன், அக்கினி இவர்

---

* (ஸ்ரீ) (ஸ்ரீ,வி) துர்நிரீக்ஷ்யம் - என்று பாடம்=பார்க்க அசாத்தியமானவும்.

† (ஸ்ரீ,வி) அதிப்பிரகாசமுள்ளவும்.

‡ (ஸ்ரீ) (ஸ்ரீ,வி) த்வாம் - என்று பாடம். அர்த்தமொன்றே.

களைப்போலொத்த ஒளியை யுடையவும், அளவிடக் கூடாதவுமான உம்மை எவ்விடத்திலேயும் பார்க்கிறேன்.

(ஸ்வா) இந்த அத்தியாயத்தின் ௪௯-வது சுலோகம் பார்க்க. (௧௭)

---

௧௮. 𑌤𑍍𑌵𑌮𑌕𑍍𑌷𑌰𑌂𑌪𑌰𑌮𑌂 𑌵𑍇𑌦𑌿𑌤𑌵𑍍𑌯𑌂 𑌤𑍍𑌵𑌮𑌸𑍍𑌯𑌵𑌿𑌶𑍍𑌵𑌸𑍍𑌯 𑌪𑌰𑌂𑌨𑌿𑌧𑌾𑌨𑌂 ।
𑌤𑍍𑌵𑌮𑌵𑍍𑌯𑌯𑌶𑍍𑌶𑌾𑌶𑍍𑌵𑌤 𑌧𑌰𑍍𑌮𑌗𑍋𑌪𑍍𑌤𑌾 𑌸𑌨𑌾𑌤𑌨𑌸𑍍𑌤𑍍𑌵𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌮𑌤𑍋 𑌮𑍇 ॥*

| | |
|---|---|
| 𑌤𑍍𑌵𑌂 | நீர் |
| 𑌵𑍇𑌦𑌿𑌤𑌵𑍍𑌯𑌂† | மோக்ஷ இச்சையுள்ளவர்களா லறியத்தகுந்த |
| 𑌪𑌰𑌮𑌂 𑌅𑌕𑍍𑌷𑌰𑌂 | பரபிரம்மம் |
| 𑌤𑍍𑌵𑌂 | நீர் |
| 𑌅𑌸𑍍𑌯 𑌵𑌿𑌶𑍍𑌵𑌸𑍍𑌯 | இந்த சகலப்பிரபஞ்சத்திற்கும் |
| 𑌪𑌰𑌂 𑌨𑌿𑌧𑌾𑌨𑌂 ‡ | உத்தமமானஆதாரம் |
| 𑌤𑍍𑌵𑌂 | நீர் |
| 𑌅𑌵𑍍𑌯𑌯𑌃 § | நாசமற்றவர் |
| 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌧𑌰𑍍𑌮𑌗𑍋𑌪𑍍𑌤𑌾 ¶ | சாசுவதமானதருமத்தைரக்ஷிப்பவர் |
| 𑌤𑍍𑌵𑌂 | நீர் |
| 𑌸𑌨𑌾𑌤𑌨𑌃 | எப்போதுமுள்ள |
| 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 (𑌸𑌨) | பரமபுருஷனென்றே |
| 𑌮𑍇 \|\| | எனக்கு |
| 𑌮𑌤𑌃 $ | சம்மதராயிருக்கிறீர். |

நீர் முமுக்ஷுக்களா லறியத்தகுந்த பரப்பிரம்மம், இந்த சகலப் பிரபஞ்சத்திற்கு முத்தமமான ஆதாரம், நாசமற்றவர், சாசுவதமான தரு

---

* இந்த சுலோகத்தை கூர்மபுராணம் உத்தரபாகம் அத். ௫ - ல் காண்க.

† (ரா) வேதாந்தத்தில் அறியவேண்டியவராகச் சொல்லப்பட்டிருக்கிறவர் யாரோ அவர்.

‡ (ஸ்வா) இந்த அத்தியாயம் ௩௮, ௯-வது அத்தியாயம் ௧௮ - இந்த சுலோகங்களைப் பார்க்க.

§ (ரா) சுவரூப விபவ குணாதிகளுக்கு நாசமில்லாதவர். (மீ,வி) குறைதலற்றவர்

¶ (ரா) நித்தியமான வைதிக தருமாதிகளை ரக்ஷிப்பவர்.

|| $ (ரா) என்று லறியப்படுகிறீர்.

மத்தை ரக்ஷிப்பவர், எப்போதுமுள்ள பரம புருஷனென்று என்னால் நிச்சயம் செய்யப்பட்டிருக்கிறீர். (௧௮)

---

௧௯. 𑌅𑌨𑌾𑌦𑌿𑌮𑌧𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌮𑌨𑌨𑍍𑌤𑌵𑍀𑌰𑍍𑌯𑌮𑌨𑌨𑍍𑌤𑌬𑌾𑌹𑍁𑌂𑌶𑌶𑌿𑌸𑍂𑌰𑍍𑌯𑌨𑍇𑌤𑍍𑌰𑌂।
𑌪𑌶𑍍𑌯𑌾𑌮𑌿𑌤𑍍𑌵𑌾𑌦𑍀𑌪𑍍𑌤𑌹𑍁𑌤𑌾𑌶𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑌂 𑌸𑍍𑌵𑌤𑍇𑌜𑌸𑌾𑌵𑌿𑌶𑍍𑌵𑌮𑌿𑌦𑌂𑌤𑌪𑌨𑍍𑌤𑌂॥

| | |
|---|---|
| 𑌅𑌨𑌾𑌦𑌿𑌮𑌧𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌂 | உற்பத்தி ஸ்திதி நாசமற்றவராயும் |
| 𑌅𑌨𑌨𑍍𑌤𑌵𑍀𑌰𑍍𑌯𑌂* | அபரிமிதமான சாமர்த்திய முடையவராயும் |
| 𑌅𑌨𑌨𑍍𑌤𑌬𑌾𑌹𑍁𑌂† | மகாவீரியமுள்ள கைகளை யுடைத்தானவராயும் |
| 𑌶𑌶𑌿𑌸𑍂𑌰𑍍𑌯𑌨𑍇𑌤𑍍𑌰𑌂‡ | சந்திரசூரியர்களைக் கண்களாயுடையவராயும் |
| 𑌦𑍀𑌪𑍍𑌤𑌹𑍁𑌤𑌾𑌶𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑌂§ | ஜ்வலிக்கிற அக்கினியை முகமா யுடையவராயும் |
| 𑌸𑍍𑌵𑌤𑍇𑌜𑌸𑌾 | தன்னு (உம்மு) டையகாந்தியினாலே |
| 𑌇𑌦𑌂 𑌵𑌿𑌶𑍍𑌵𑌂 | இந்தசகலப்பிரபஞ்சத்தையும் |
| 𑌤𑌪𑌨𑍍𑌤𑌂 | தபிப்பிக்கிறவராயும் |
| 𑌤𑍍𑌵𑌾¶ | உம்மை |
| 𑌪𑌶𑍍𑌯𑌾𑌮𑌿 | பார்க்கிறேன். |

---

* (ரா) ஞானம், பலம், ஐசுவரியம், சக்தி, வீரியம், தேஜஸ் முதலியவைகளுக் கிருப்பிடமானவராயும்.

† (ரா) அநேககைகள், வயிறுகள், முகங்கள், பாதங்கள், இவைகளை யுடையவராயும். (இதிலுள்ள வயிறு விஷயமான அர்த்தம் இதின் ௧௬-வது சுலோகத்தினடியில் காண்க.)

‡ (ரா) சந்திரனைப்போல் குளிர்ந்தும் சூரியனைப்போல் தபித்துக்கொண்டுமிருக்கிற சகல நேத்திரங்களை யுடையவர். அதாவது - பக்தாளாயிருக்கிற தேவதைகள் முதலியவர்கள் விஷயத்தில் சந்திரனைப்போல் பிரசன்னமான கண்களையுடையவராயும், தன்னைத் துவேஷிக்கிற அசுராள் முதலியவர்கள் விஷயத்தில் தாபத்தை யுண்டாக்குகிற சூரியனைப்போல தபிப்பிக்கிற கண்களை யுடையவராயு மிருக்கிறதாகத் தாத்பரியம். (ஶ) (ஶ்ரீ, வீ) சந்திரன் சூரியன் இவர்கள் பரமாத்மாவினுடைய நேத்திரத்திலிருந்துண்டானவர்களாகையால் அவர்களே நேத்திரமென்று உபசாரமாய்ச் சொல்லப்பட்டதேயன்றி அவர்கள் நேத்திரமல்ல.

§ (ரா) பிரளய காலாக்கினியைப்போல ஜ்வலித்துக்கொண்டிருக்கிற முகத்தை யுடையவர்.

¶ (ஸ்ரீ) 𑌤𑍍𑌵𑌾𑌂 - என்று பாடம். அர்த்தமொன்றே.

உற்பத்தி ஸ்திதி நாசங்க ளற்றவராயும், அபரிமிதமான சாமர்த்திய முடையவராயும், மகாவீரியமுடைய கைகளை யுடையவராயும், சூரிய சந்திரர்களை கண்களா யுடையவராயும் சுவலிக்கிற அக்கினியை முகமா யுடையவராயும், உம்முடைய காந்தியினால் இந்த சகலப் பிரபஞ்சத்தை யும் தபிப்பிக்கிறவராயும் இருக்கிற உம்மைப் பார்க்கிறேன். (௧௯)

---

௨௦. 𑌦𑍍𑌯𑌾𑌵𑌾𑌪𑍃𑌥𑌿𑌵𑍍𑌯𑍋𑌰𑌿𑌦𑌮𑌨𑍍𑌤𑌰𑌂 𑌹𑌿 𑌵𑍍𑌯𑌾𑌪𑍍𑌤𑌂 𑌤𑍍𑌵𑌯𑍈𑌕𑍇𑌨 𑌦𑌿𑌶𑌶𑍍𑌚
𑌸𑌰𑍍𑌵𑌾𑌃 । 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾𑌽𑌦𑍍𑌭𑍁𑌤𑌂 𑌰𑍂𑌪𑌮𑍁𑌗𑍍𑌰𑌂 𑌤𑌵𑍇𑌦𑌂 𑌲𑍋𑌕𑌤𑍍𑌰𑌯𑌂
𑌪𑍍𑌰𑌵𑍍𑌯𑌥𑌿𑌤𑌂 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑍍 ॥

| | |
|---|---|
| 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑍍 | ஓ! மகாத்துமாவே! |
| 𑌦𑍍𑌯𑌾𑌵𑌾𑌪𑍃𑌥𑌿𑌵𑍍𑌯𑍋𑌃 | ஆகாசம் பூமி இவைகளுடைய |
| 𑌇𑌦𑌂 𑌅𑌨𑍍𑌤𑌰𑌂 𑌹𑌿 | மத்தியப் பிரதேசமான இந்த அந்தரிக்ஷமானது |
| 𑌤𑍍𑌵𑌯𑌾 𑌏𑌕𑍇𑌨 | உம்மொருவராலேயே |
| 𑌵𑍍𑌯𑌾𑌪𑍍𑌤𑌂 | வியாபிக்கப்பட்டிருக்கிறது |
| 𑌸𑌰𑍍𑌵𑌾𑌃 𑌦𑌿𑌶𑌶𑍍𑌚 | சகலமான திக்குகளும் |
| (𑌤𑍍𑌵𑌯𑌾) (𑌵𑍍𑌯𑌾𑌪𑍍𑌤𑌾𑌃) | உம்மாலே வியாபிக்கப்பட்டிருக்கின்றன |
| 𑌉𑌗𑍍𑌰𑌂 | பயங்கரமாயும் |
| 𑌅𑌦𑍍𑌭𑍁𑌤𑌂 | ஆச்சரியகரமாயுமிருக்கிற |
| 𑌤𑌵 | உம்முடைய |
| 𑌇𑌦𑌂 𑌰𑍂𑌪𑌂 | இந்த விசுவரூபத்தை |
| 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 | பார்த்து |
| 𑌲𑍋𑌕𑌤𑍍𑌰𑌯𑌂 | மூன்றுலோகமும் |
| 𑌪𑍍𑌰𑌵𑍍𑌯𑌥𑌿𑌤𑌂* | மிகப்பயத்தை யடைந்திருக்கின்றது. |

ஓ! பரமாத்மாவே! ஆகாச பூமிகளுக்கு மத்தியப் பிரதேசமான அந்தரிக்ஷமானது, உம்மொருவராலேயே வியாபிக்கப்பட்டிருக்கிறது. சகல திக்குகளும் உம்மாலே வியாபிக்கப்பட் டிருக்கின்றன. பயங்கரமாயும், ஆச்சரியகரமாயு மிருக்கிற உம்முடைய இந்த விசுவரூபத்தைப் பார்த்து மூன்றுலோகமும் மிகப்பயத்தை யடைந்திருக்கின்றது. என்றால், மூன்று லோகத்திலுள்ள பிரஜைகள் பயந்திருக்கிறதாக நான் உம்முடைய தேகத்தில் காணுகிறேனென்பது கருத்து.

---

* (𑌶𑌂) நடுங்கி யிருக்கிறது.

(ரா) "மூன்றுலோகமும் மிகப் பயந்திருக்கின்றது" என்றால், பிரம்மாதி தேவதைகள், அசுரர்கள், பிதுருக்கள், சித்தர்கள், கந்தர்வர்கள், யக்ஷர்கள், இராக்ஷஸர்கள், இவர்களில் சிலர் பாண்டவர்களுக்கனுகூலமாயும், சிலர் துரியோதனாதிகளுக்கனுகூலமாயும், சிலர் மத்தியஸ்தர்களாயுமிருக்கிறார்கள். இம் மூன்றுவகை ஜனங்களும் பயப்பட்டார்களென்பது தாத்பரியம். ஞானக்கண்ணன்றியில் விசுவரூபத்தைப் பார்க்கக்கூடாதே! விசுவரூபத்தைப் பார்த்தாலன்றி பயப்படக் காரணமில்லையே! என்றாலோ, அவர்களும் பார்த்து பயப்பட்டார்களென்பதை அர்சுனன் அறிந்துகொள்ளும் பொருட்டு பகவான் அந்த மூவ்வகை ஜனங்களுக்கும் அர்சுனனுக்குக் கொடுத்திருக்கிறதுபோல, ஞானக்கண்களைக் கொடுத்தார். ஆகையால், அந்த மூவ்வகைஜனங்களும் பயப்பட்டதாக அர்சுனன் தெரிந்துகொள்ளக் காரணமுண்டாயிற்று.

(ஸ்ரீ,வி) மூன்றுலகத்திலுள்ளவர்களும் பயந்தார்களென்றால், மூன்றுலகத்திலுள்ள பக்தஜனங்கள் பயமடைந்ததாகத் தாத்பரியம். பக்தர்களல்லாதவர்களுக்குப் பார்க்கிற யோக்கியதையில்லாதபடியால் அவர்கள் பயப்படக் காரணமில்லை. அல்லது மூன்றுலகத்திலுள்ளவர்கள் இந்த ரூபத்தைக் கண்ணால் பாராவிட்டாலும், மனதினால் அநுசந்தானம் செய்து, அதினால் அவர்கள் பயமடைந்ததை அர்சுனன் பார்த்து, அவர்களும் தன்னைப்போல பார்த்து பயப்படுகிறதாக எண்ணினானென்றாவது கிரகிக்கத்தக்கது. (௨௦)

---

௨௧. 𑌅𑌮𑍀 𑌹𑌿 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌸𑍁𑌰𑌸𑌂𑌘𑌾 𑌵𑌿𑌶𑌂𑌤𑌿 𑌕𑍇𑌚𑌿𑌦𑍍𑌭𑍀𑌤𑌾𑌃 𑌪𑍍𑌰𑌾𑌂𑌜𑌲𑌯𑍋 𑌗𑍃𑌣𑌂𑌤𑌿 । 𑌸𑍍𑌵𑌸𑍍𑌤𑍀𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌮𑌹𑌰𑍍𑌷𑌿𑌸𑌿𑌦𑍍𑌧𑌸𑌂𑌘𑌾𑌃 𑌸𑍍𑌤𑍁𑌵𑌂𑌤𑌿 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌸𑍍𑌤𑍁𑌤𑌿𑌭𑌿𑌃 𑌪𑍁𑌷𑍍𑌕𑌲𑌾𑌭𑌿𑌃॥

| | |
|---|---|
| 𑌅𑌮𑍀 𑌹𑌿 | இந்த |
| 𑌸𑍁𑌰𑌸𑌂𑌘𑌾𑌃* | தேவக்கூட்டங்கள் |
| 𑌤𑍍𑌵𑌾𑌂† | உம்மை |
| 𑌵𑌿𑌶𑌂𑌤𑌿 | சரணமடைகிறார்கள் |
| 𑌕𑍇𑌚𑌿𑌤𑍍 | சிலர் |
| 𑌭𑍀𑌤𑌾𑌃 | பயந்தவர்களாய் |
| 𑌪𑍍𑌰𑌾𑌂𑌜𑌲𑌯𑌃 | கைகூப்பிக்கொண்டவர்களாய் |
| 𑌗𑍃𑌣𑌂𑌤𑌿 | (இரக்ஷிக்கும்படி) பிரார்த்திக்கிறார்கள் |

---

* (ஸ்ரீ,வி) இவர்கள் அமுக்ததேவக்கூட்டங்கள். ௧௫ - சுலோகத்தில் கண்டவர்கள் முக்த தேவக்கூட்டங்கள்.

† (ரா) (ஸ்ரீ,வி) 𑌤𑍍𑌵𑌾 - என்று பாடம். அர்த்தமொன்றே.

| | |
|---|---|
| மஹர்ஷிஸித்தஸங்கா: | மகரிஷிகள்சித்தர்களின் கூட்டங்கள் |
| ஸ்வஸ்தி இதி உக்த்வா | க்ஷேமமுண்டாகட்டுமென்றுசொல்லி |
| புஷ்கலாபி: ஸ்துதிபி: | பூர்ணமானஸ்துதிகளினாலே |
| த்வாம் | உம்மை |
| ஸ்துவந்தி | ஸ்தோத்திரம்செய்கிறார்கள். |

இந்த தேவக்கூட்டங்கள் உம்மைச் சரணமடைகிறார்கள். சிலர் பயந்தவர்களாய் (தூரத்திலிருந்து) கைகூப்பிக்கொண்டு இரக்ஷிக்கும்படி பிரார்த்திக்கிறார்கள். மகரிஷிகள் சித்தர்களுடைய கூட்டங்கள் (உலகத்திற்கு) க்ஷேம முண்டாகட்டுமென்று சொல்லிப் பூர்ணமான ஸ்துதிகளினால் உம்மை ஸ்தோத்திரஞ் செய்கிறார்கள்.

(பூ) அமீ ஸுரஸங்கா ஹி—இந்த யுத்தகளத்தில் மனுஷியரூபமாயிருக்கிற தேவதைகள். இவர்கள் யாரென்றால், பகவான் கிருஷ்ணவதாரம் செய்யும் காலத்தில் பகவானுடைய ஆக்ஞைப்பிரகாரம் தேவதைகள் மனுஷியர்களாக அவதாரம் செய்திருக்கிறார்களல்லவா? அவர்கள்தான். த்வாம் விஶந்தி— (இந்ததேவதைகள்) உமக்குள் பிரவேசிக்கிறதாகக் காணப்படுகிறார்கள். இவர்களில் ஓட சக்தியற்ற சிலர் பயப்பட்டுக் கைகூப்பி ஸ்துதிக்கிறார்கள். மகரிஷிகள் சித்தர்கள், இந்த யுத்தம் நேரிட்டிருக்கிற இந்தகாலத்தில் காணப்படும் அபசகுனங்களைப் பார்த்து, ஜகத்திற்கு க்ஷேமமுண்டாகும் பொருட்டு விசேஷமாய் ஸ்துதி செய்கிறார்கள்.

(உ) இந்த தேவக்கூட்டங்கள் சகலத்திற்கும் ஆசிரயமாயிருக்கிற விசுவரூபத்தோடுகூடிய உம்மைப்பார்த்து மிகவும் சந்தோஷத்துடன் உம்முடைய சமீபத்திற்கு வருகிறார்கள். அவர்களில் சிலர் அதிக உக்கிரமும், அற்புதமுமான உம்முடைய ரூபத்தைப்பார்த்து பயப்பட்டு, கைகளைக் கூப்பிக்கொண்டு, தெரிந்தவரையில் ஸ்துதிக்கிறார்கள். இவர்களில் சேராத மகரிஷிகள், சித்தர்கள், இனிநடக்கப்போகிற விபரீதகாரியங்களை யறிந்து, க்ஷேமமுண்டாகட்டுமென்று அதிகமானவும் பகவத்குணங்களை யனுசரித்தவுமான ஸ்துதிகளினாலே ஸ்தோத்திரம் செய்கிறார்கள். (உக)

---

உஉ. ருத்ராதித்யா வஸவோ யே ச ஸாத்யா விஶ்வேऽஶ்விநௌ மருதஶ்சோஷ்மபாஶ்ச । கந்தர்வயக்ஷாஸுரஸித்தஸங்கா வீக்ஷந்தே த்வாம் விஸ்மிதாஶ்சைவ ஸர்வே ॥

| | |
|---|---|
| ருத்ராதித்யா: | ஏகாதச ருத்திரர்களும் துவாதசாதித்தியர்களும் |
| வஸவ: | வசுக்களும் |
| யே ச<br>ஸாத்யா: | சாத்திய தேவதைகள்யாரோ அவர்களும் |
| விஶ்வே | விசுவேதேவதைகளும் |
| அஶ்விநௌ | அசுவினி தேவதைகளும் |
| மருத: | மருத்துக்களும் |
| ச ஊஷ்மபா: ச * | பிதுருதேவதைகளும் |
| கந்தர்வயக்ஷாஸுரஸித்தஸங்கா: † | கந்தர்வாள், யக்ஷாள், அசுராள், சித்தாள் இவர்களுடைய கூட்டங்களும் |
| ஸர்வே ஏவ | சகலமான பெயர்களும் |
| விஸ்மிதா: | ஆச்சரியமடைந்தவர்களாய் |
| த்வாம் | உம்மை |
| வீக்ஷந்தே | (இடைவிடாமல்) பார்க்கிருர்கள். |

பதிஞெரு ருத்திரர்களும், பன்னிரண்டாதித்தியர்களும், வசுக்களும், சாத்தியர் என்கிற தேவதைகளும், விசுவே தேவதைகளும் அசுவினி தேவதைகளும் மருத்துக்களும், பிதுருதேவதைகளும், கந்தர்வ யக்ஷாசுர சித்தர்களுடைய கூட்டங்களும், சகலமான பெயர்களும், ஆச்சரியமடைந்து, உம்மை இடைவிடாமல் பார்க்கிருர்கள் (உஉ)

---

உங. ரூபம் மஹத்தே பஹுவக்த்ரநேத்ரம் மஹாபாஹோ பஹுபாஹூருபாதம் । பஹூதரம் பஹுதம்ஷ்ட்ராகராலம் த்ருஷ்ட்வா லோகா: ப்ரவ்யதிதாஸ்ததாஹம்॥

---

* (ஶ்ரோ) (அன்னம் முதலிய) ஆகாரவஸ்துக்கள் சூடாயிருக்கையில் சாப்பிடுகிறவர்களுக்கு ஊஷ்மபாள் என்று பெயர். அப்படிச் சூடாயிருக்கையில் சாப்பிடுகிறவர்கள் பிதுருதேவதைகளாகையால், பிதுருதேவதைகளென்று அர்த்தம் செய்யப்பட்டது (ஸ்ம்ரு) யாவதூஷ்மா ஸஹான்னஸ்ய யாவதஶ்நந்தி வாக்யதா: । பிதரஸ்தாவதஶ்நந்தி யாவந்நோக்தா ஹவிர்குணா:॥ = அன்னம் முதலிய புஜிக்கத்தகுந்த வஸ்துக்கள் எதுவரையில் சூடாயிருக்கின்றனவோ, எதுவரையில் பிராம்மணுள் பதார்த்தங்களுடைய (உப்பு, காரம், புளிப்பு, முதலிய) குணங்களைச் சொல்லாமல் மௌனமாக புஜிக்கிருர்களோ, அதுவரையில் பிதுருக்கள் புஜிக்கிருர்கள்.

† (ஸம்) கந்தர்வாள் - ஹாஹா - ஹூஹூ முதலியவர்கள்.
யக்ஷாள் - குபேரன் முதலியவர்கள்.
அசுராள் - விரோசனன் முதலியவர்கள்.
சித்தாள் - கபிலர் முதலியவர்கள்.

| | |
|---|---|
| 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 | ஓ! சிலாக்கியமான கைகளையுடையவரே! |
| 𑌬𑌹𑍁𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑌨𑍇𑌤𑍍𑌰𑌂 | அநேகமுகங்களையும் கண்களையு முடையவும் |
| 𑌬𑌹𑍁𑌬𑌾𑌹𑍂𑌰𑍁𑌪𑌾𑌦𑌂 | அநேககைகள், துடைகள், பாதங்களையுடையவும் |
| 𑌬𑌹𑍂𑌦𑌰𑌂 | அநேக வயிறுகளையுடையவும் |
| 𑌬𑌹𑍁𑌦𑌂𑌷𑍍𑌟𑍍𑌰𑌾𑌕𑌰𑌾𑌲𑌂 | அநேகக் கோரப்பல்லுகளால் பயங்கரமானவும் |
| 𑌤𑍇 | உம்முடைய |
| 𑌮𑌹𑌤𑍍 𑌰𑍂𑌪𑌂 | இந்தப் பெரிதானரூபத்தை |
| 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 | பார்த்து |
| 𑌲𑍋𑌕𑌾𑌃* | ஜனங்கள் |
| 𑌪𑍍𑌰𑌵𑍍𑌯𑌥𑌿𑌤𑌾𑌃 | அதிகபயத்தை யடைந்திருக்கிறார்கள் |
| 𑌅𑌹𑌂 | நானும் |
| 𑌤𑌥𑌾 | அப்படியே (பயப்பட்டிருக்கிறேன்.) |

ஓ! சிலாக்கியமான கைகளையுடையவரே! அநேக முகங்கள், கண்கள், கைகள், துடைகள், பாதங்கள், வயிறுகள், இவைகளையுடையவும், அநேகக் கோரப்பல்லுகளால் பயங்கரமுமான உம்முடைய இந்தப் பெரிதான ரூபத்தைப்பார்த்து, ஜனங்கள் அதிகபயத்தை யடைந்திருக்கிறார்கள். நானு மப்படியே பயத்தை யடைந்திருக்கிறேன். (௨௩)

---

௨௪. 𑌨𑌭𑌃𑌸𑍍𑌪𑍃𑌶𑌂 𑌦𑍀𑌪𑍍𑌤𑌮𑌨𑍇𑌕𑌵𑌰𑍍𑌣𑌂 𑌵𑍍𑌯𑌾𑌤𑍍𑌤𑌾𑌨𑌨𑌂 𑌦𑍀𑌪𑍍𑌤𑌵𑌿𑌶𑌾𑌲𑌨𑍇𑌤𑍍𑌰𑌮𑍍।
𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌹𑌿 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌪𑍍𑌰𑌵𑍍𑌯𑌥𑌿𑌤𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌤𑍍𑌮𑌾 𑌧𑍃𑌤𑌿𑌂 𑌨 𑌵𑌿𑌨𑍍𑌦𑌾𑌮𑌿 𑌶𑌮𑌂 𑌚
𑌵𑌿𑌷𑍍𑌣𑍋॥

| | |
|---|---|
| 𑌹𑍇 𑌵𑌿𑌷𑍍𑌣𑍋 | ஓ! மகாவிஷ்ணுவே! |
| 𑌨𑌭𑌃†𑌸𑍍𑌪𑍃𑌶𑌂 | ஆகாசத்தை அளாவியிருக்கிறவும் |

* (ஈ) இந்த அத்தியாயத்தின் ௨௦-வது சுலோகத்தில் சொன்னபடி, பாண்டவபக்ஷம் ஜயமுண்டாகவேண்டுமென்று சிலரும், கௌரவபக்ஷம் ஜயமுண்டாகவேண்டுமென்று சிலரும், இருபக்ஷத்திலும் சேராத மத்தியஸ்தர்களான சிலருமான மூவ்வகை ஜனங்களென்று தாத்பரியம்.

† (ஈ) முக்குணப் பிரகிருதிக்கு அதீதமான பரமாகாசம். ௨௦-வது சுலோகத்தில் சொன்ன ஆகாசமும் இதுதான். பிரகிருதியினாலுண்டான சகலப் பிரபஞ்சமும் இந்த விசுவரூபதேகத்தில் அடங்கிவிட்டபடியால், பிரகிருதியினா லுண்டான பிரபஞ்சத்திற்கு வெளிப்பட்ட பரமாகாசத்தை இவ்விடத்தில் கிரகிக்கவேண்டியது.

| | |
|---|---|
| தீப்தம் | சுவலித்துக்கொண்டிருக்கிறவும் |
| அநேகவர்ணம்* | பலவருணங்களுள்ளவும் |
| வ்யாத்தாநநம் | திறந்திருக்கிறவாய்களையுடையவும் |
| தீப்தவிஶாலநேத்ரம் | சுவலித்துக்கொண்டிருக்கிற விசாலமான கண்களை யுடையவும் |
| த்வாம் | உம்மை |
| த்ருஷ்ட்வா | பார்த்து |
| ப்ரவ்யதிதாந்தராத்மா | மிகப்பயந்தமனதையுடைய |
| (அஹம்) | நான் |
| த்ருதிம்† | தைரியத்தையும் |
| ஶமம்‡ | மனச்சமாதானத்தையும் |
| நவிந்தாமி§ | அடையவேயில்லை. |

ஓ! மகாவிஷ்ணுவே! ஆகாசத்தை யளாவியிருக்கிறவும், சுவலித்துக்கொண் டிருக்கிறவும், பலவருணங்க ளுள்ளவும், திறந்திருக்கிற வாய்களை யுடையவும், சுவலித்துக்கொண்டிருக்கிற விசாலமான கண்களையுடையவுமான உம்மைப்பார்த்து, மிகப்பயந்த மனதையுடைய நான் தைரியத்தையும், மனச்சமாதானத்தையும் அடையவில்லை. (௨௪)

---

௨௫. தம்ஷ்ட்ராகராலாநி ச தே முகாநி த்ருஷ்ட்வைவ காலாநலஸந்நிபாநி । திஶோ ந ஜாநே ந லபே ச ஶர்ம ப்ரஸீத தேவேஶ ஜகந்நிவாஸ ॥

| | |
|---|---|
| ஹே தேவேஶ | ஓ! தேவதைகளுக் கீசனானவரே! |
| ஹே ஜகந்நிவாஸ | ஓ! ஜகத்திற் காதாரமாயிருக்கிறவரே! |
| தம்ஷ்ட்ராகராலாநி | கோரப்பல்லுகளினால் பயங்கரமானவும் |
| காலாநலஸந்நிபாநி | பிரளயகால அக்கினிக்குச் சமானமாயுள்ளவும் |
| தே | உம்முடைய |
| முகாநி | முகங்களை |

---

* (ஶ) அநேகமானவும், பயங்கரமானவுமான அவயவங்களை யுடையவும்.

† - § (ரா) என்னுடைய தேகத்தைத் தரிக்க சத்தியற்றவனாயிருக்கிறேன்.

‡ - § (ரா) மயக்கத்தை யடைந்திருக்கிற இந்திரியங்களை யுடையவனாயிருக்கிறேன்.

‡ (ரா) சந்தோஷத்தையும். (ஶ்ரீ வி) சுகத்தையும்.

| | |
|---|---|
| த்₃ருஷ்ட்வா | பார்த்து |
| தி₃ஶ: | திக்குகளை (கிழக்குமேற்குமுதலிய திக்குகளை) |
| ந ஜாநே | நானறியவில்லை |
| ஶர்ம ச | சுகத்தையும் |
| ந லபே₄ | அடையவேயில்லை |
| ப்ரஸீத₃ | பிரசன்னராவீராக. |

ஓ! தேவதைகளுக் கீசனானவரே! ஓ! ஜகத்திற்கு ஆதாரமாயிருக்கிறவரே! கோரப்பல்லுகளால் பயங்கரமானவும், பிரளயகால அக்கினிக்குச் சமானமா யுள்ளவுமான உம்முடைய முகங்களைப் பார்த்து, திக்குகளை நான் அறியவில்லை. சுகத்தையும் அடையவேயில்லை. பிரசன்னராவீராக. என்றால் பயங்கரமில்லாத ரூபமாக வேண்டுமென்பது தாத்பரியம். (உரு)

---

உ௬. அமீ ச*த்வாம் த்₄ருதராஷ்ட்ரஸ்ய புத்ரா: ஸர்வே†ஸஹைவாவநி
பாலஸங்கை₄: । பீ₄ஷ்மோ த்₃ரோண: ஸூதபுத்ரஸ்ததா₂ஸௌ
ஸஹாஸ்மதீ₃யைரபி யோத₄முக்₂யை: ॥

உ௭. வக்த்ராணி தே த்வரமாணா விஶந்தி த₃ம்ஷ்ட்ராகராலாநி ப₄யாநகாநி ।
கேசித்₃விலக்₃நா த₃ஶநாந்தரேஷு ஸந்த்₃ருஶ்யந்தே சூர்ணிதைருத்த
மாங்கை₃: ॥

| | |
|---|---|
| ஸர்வே | சகலமான |
| அமீ | இந்த |
| த்₄ருதராஷ்ட்ரஸ்ய புத்ரா: | திருதராஷ்டரனுடைய குமாரர்களாகிய துரியோதனாதிகளும் |
| பீ₄ஷ்ம: | பீஷ்மாசாரியரும் |
| த்₃ரோண: | துரோணாசாரியரும் |
| அஸௌ ஸூதபுத்ர: | இந்த சூதபுத்திரனான கர்ணனும். (இந்தத் தேர்ப்பாகன்மகனான கர்ணனும்) |
| அவநிபாலஸங்கை₄: ஸஹ | இராஜாக்களுடைய கூட்டங்களுடன் கூடவே (சேர்ந்துகொண்டும்) |
| ததா₂ | அப்படியே |

---

* (பா) அமீஸர்வே - என்றுபாடம்.
† (பா) ஸர்வை: - என்றுபாடம். } அர்த்தபேதமில்லை.

| | |
|---|---|
| அஸ்மதீயை: | எங்களைச்சேர்ந்த |
| யோதமுக்யைரபி ஸஹ | யுத்தத்தில் முக்கியமானவர்களுடன் (சேர்ந்து கொண்டும்) கூடவும் |
| த்வாம்* | உம்மை (நோக்கி) |
| த்வரமாணா: | அவசரமுடையவர்களாக (சீக்கிரமாய்) |
| தம்ஷ்ட்ராகராளானி | கோரப்பல்லுகளினால் குரூரமாயிருக்கிறவும் |
| பயானகானி | பயங்கரங்களாயிருக்கிறவும் |
| தே | உம்முடைய |
| வக்த்ராணி | வாய்களை (வாய்களில்) |
| விசந்தி | பிரவேசிக்கிறார்கள் |
| கேசித் | சிலர் |
| தசனாந்தரேஷு | பற்களின் சந்துகளில் |
| விலக்னா: | அகப்பட்டு |
| சூர்ணிதை: | பொடியாய்ப்போயிருக்கிற |
| உத்தமாங்கை: | தலைகளுடன் |
| ஸந்த்ருச்யந்தே | காணப்படுகிறார்கள். |

சகலமான இந்த திருதராஷ்டர புத்திரர்களாகிய துரியோதனாதிகளும், பீஷ்மாசாரியரும், துரோணாசாரியரும், சூதபுத்திரனை கர்ணனும், இந்த (மற்ற) இராஜக்கூட்டங்களுடன் சேர்ந்துகொண்டும், அப்படியே எங்களைச்சார்ந்த யுத்தத்தில் முக்கியமானவர்களுடன் சேர்ந்துகொண்டும், உம்மை நோக்கி அவசரமுடையவர்களாய் கோர பல்லுகளினாலே குரூரங்களா யிருக்கிறவும் பயங்கரங்களா யிருக்கிறவுமான உம்முடைய வாய்களில் பிரவேசிக்கிறார்கள். சிலர் பற்களின் சந்துகளில் அகப்பட்டு, பொடியாய்ப் போயிருக்கிற தலைகளுடன் காணப்படுகிறார்கள். (உ௬-உ௭)

---

உ௮. யதா நதீனாம் பஹவோம்புவேகா: ஸமுத்ரமேவாபிமுகா த்ரவந்தி । ததா தவாமீ நரலோகவீரா விசந்தி வக்த்ராண்யபிவிஜ்வலந்தி ॥

| | |
|---|---|
| நதீனாம் | நதிகளுடைய |
| பஹவ: | அநேகங்களான |
| அம்புவேகா: | ஜலப்பிரவாகங்கள் |
| ஸமுத்ரமேவ | சமுத்திரத்தைத்தானே |

---

* (ஸ்ரீ) த்வாம் - என்று பாடம்.

| | |
|---|---|
| அபிமுகா: | நோக்கினவைகளாக |
| யதா | எப்படி |
| த்ரவந்தி | பிரவேசிக்கின்றனவோ |
| ததா | அப்படியே |
| அமீ | இந்த |
| நரலோகவீரா: | மனிதலோகத்திலுள்ள சூரர்கள் |
| அபிவிஜ்வலந்தி | மிகச்சுவலித்துக்கொண்டிருக்கிற |
| தவ | உம்முடைய |
| வக்த்ராணி | வாய்களை (வாய்களில்) |
| விஶந்தி | பிரவேசிக்கிறார்கள். |

நதிகளுடைய அநேகங்களான ஜலப்பிரவாகங்கள் சமுத்திரத்தைத் தானே நோக்கி யெப்படிப் பிரவேசிக்கின்றனவோ, அப்படியே இந்த மனிதலோகத்திலுள்ள சூரர்கள் மிகச் சுவலித்துக்கொண் டிருக்கிற உம்முடைய வாய்களில் பிரவேசிக்கிறார்கள். (௨௮)

---

௨௯. யதா ப்ரதீப்தம் ஜ்வலநம் பதங்கா விஶந்தி நாஶாய ஸம்ருத்தவேகா:। ததைவ நாஶாய விஶந்தி லோகா ஸ்தவாபி வக்த்ராணி ஸம்ருத்த வேகா:॥

| | |
|---|---|
| பதங்கா: | விளக்குவெட்டுப்பூச்சிகள் |
| ஸம்ருத்தவேகா: | அதிவேகமுள்ளவைகளாய் |
| நாஶாய | (தங்களுடைய) நாசத்தின்பொருட்டு |
| ப்ரதீப்தம் | சுவலித்துக்கொண்டிருக்கிறவும் |
| ஜ்வலநம் | அக்கினியை (விளக்கை) |
| யதா | எப்படி |
| விஶந்தி | பிரவேசிக்கின்றனவோ |
| ததைவ | அப்படியே |
| லோகா அபி | இந்தஜனங்களும் |
| தவ | உம்முடைய |
| வக்த்ராணி | வாய்களை (நோக்கி) |
| ஸம்ருத்தவேகா: | அதிவேகமுடையவர்களாய் |
| நாஶாய | (தங்களுடைய) நாசத்தின்பொருட்டு |
| விஶந்தி | பிரவேசிக்கிறார்கள். |

விளக்கு வெட்டுப்பூச்சிகள் அதிவேக முள்ளவைகளாய், தங்களுடைய நாசத்தின் பொருட்டு சுவலித்துக்கொண்டிருக்கிற அக்கினியை

யெப்படிப் பிரவேசிக்கின்றனவோ, அப்படியே யிந்த ஜனங்களு மும்முடைய வாய்களில் அதிவேக முடையவர்களாய்த் தங்களுடைய நாசத்தின் பொருட்டுப் பிரவேசிக்கிறார்கள். (௨௯)

---

௩௰. லேலிஹ்யஸே க்ரஸமான: ஸமந்தால்லோகான் ஸமக்ரான் வதனைர்ஜ்வலத்பி: । தேஜோபிராபூர்ய ஜகத்ஸமக்ரம் பாஸஸ்தவோக்ரா: ப்ரதபந்தி விஷ்ணோ ॥

| | |
|---|---|
| விஷ்ணோ | ஓ! மகாவிஷ்ணுவே |
| தேஜோபி: | தேஜஸ்ஸுகளினாலே |
| ஸமக்ரம் | சகலமான |
| ஜகத் | பிரபஞ்சத்தை |
| ஆபூர்ய | வியாபித்து |
| ஸமக்ரான் லோகான் | சகலமான ஜனங்களையும் |
| ஜ்வலத்பி: | சுவலித்துக்கொண்டிருக்கிற |
| வதனை: | முகங்களினாலே |
| ஸமந்தாத் | நாலுபக்கங்களிலேயும் |
| க்ரஸமான: | பக்ஷித்துக்கொண்டு |
| லேலிஹ்யஸே* | ருசிபார்க்கிறீர் |
| தவ | உம்முடைய |
| உக்ரா: | குரூரங்களான (தீக்ஷணங்களான) |
| பாஸ: | காந்திகள் |
| ப்ரதபந்தி | தபிப்பிக்கின்றன. |

ஓ! மகாவிஷ்ணுவே! தேஜஸ்ஸுகளினாலே சகலமானப் பிரபஞ்சத்தையும் வியாபித்து, சகலமான ஜனங்களையும் சுவலித்துக்கொண்டிருக்கிற முகங்களினாலே நாலுபக்கங்களிலேயும் பக்ஷித்துக்கொண்டு ருசிபார்க்கிறீர். உம்முடைய குரூரங்களான காந்திகள் தபிப்பிக்கின்றன.

---

௩௧. ஆக்யாஹி மே கோ பவானுக்ரரூபோ நமோஸ்து தே தேவவர ப்ரஸீத । விஜ்ஞாதுமிச்சாமி பவந்தமாத்யம் ந ஹி ப்ரஜாநாமி தவ ப்ரவ்ருத்திம் ॥

---

* (டீ,வி) உம்முடைய உதடுகளில் ஒட்டியிருப்பதாகிய, நீர் பக்ஷித்தஜனங்களுடைய இரத்தத்தை நாக்கினால் கிரகிக்கிறீர்.

| | |
|---|---|
| 𑌓 𑌦𑍇𑌵𑌵𑌰 | ஓ! தேவசிரேஷ்டனே! |
| 𑌉𑌗𑍍𑌰𑌰𑍂𑌪𑌃 | குரூரமானரூபத்தையுடைய |
| 𑌭𑌵𑌾𑌨𑍍 | நீர் |
| 𑌕𑌃 | யார்? |
| 𑌮𑍇 | எனக்கு |
| 𑌆𑌖𑍍𑌯𑌾𑌹𑌿 | சொல்லும் |
| 𑌤𑍇 | உம்மைக்குறித்து |
| 𑌨𑌮𑌃 | நமஸ்காரம் |
| 𑌅𑌸𑍍𑌤𑍁 | ஆகட்டும் |
| 𑌪𑍍𑌰𑌸𑍀𑌦 | பிரசன்னராவீராக |
| 𑌆𑌦𑍍𑌯𑌂 | ஆதியாயிருக்கிற |
| 𑌭𑌵𑌨𑍍𑌤𑌂 | உம்மை |
| 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑍁𑌂 | விசேஷமாயறிகிறதற்கு |
| 𑌇𑌚𑍍𑌛𑌾𑌮𑌿 | இச்சிக்கிறேன் |
| 𑌤𑌵 | உம்முடைய |
| 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌂 | செய்கையை |
| 𑌨 𑌹𑌿 𑌪𑍍𑌰𑌜𑌾𑌨𑌾𑌮𑌿 | நான்அறியவேயில்லை. |

ஓ! தேவசிரேஷ்டனே! குரூரமான ரூபத்தையுடைய நீர்யார்? எனக்குச் சொல்லும்; உம்மைக்குறித்து நமஸ்காரமாகக்கடவது; பிரசன்னராவீராக (பயங்கரமில்லாத பழய சுவரூபத்தை யடைவீராக); ஆதியாயிருக்கிற உம்மை விசேஷமாயறிகிறதற்கிச்சிக்கிறேன்; உம்முடைய செய்கையை நான் அறியவில்லை. (௩௧)

---

𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚.

௩௨. 𑌕𑌾𑌲𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌲𑍋𑌕𑌕𑍍𑌷𑌯𑌕𑍃𑌤𑍍𑌪𑍍𑌰𑌵𑍃𑌦𑍍𑌧𑍋 𑌲𑍋𑌕𑌾𑌨𑍍𑌸𑌮𑌾𑌹𑌰𑍍𑌤𑍁𑌮𑌿𑌹 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌃 । 𑌋𑌤𑍇𑌽𑌪𑌿 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌨 𑌭𑌵𑌿𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌯𑍇𑌽𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌃 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌨𑍀𑌕𑍇𑌷𑍁 𑌯𑍋𑌧𑌾𑌃॥

| | |
|---|---|
| 𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚 | ஸ்ரீ கிருஷ்ணபகவான் சொல்வது |
| 𑌲𑍋𑌕𑌕𑍍𑌷𑌯𑌕𑍃𑌤𑍍 | ஜனங்களுக்கு நாசத்தையுண்டாக்குகிற |
| 𑌪𑍍𑌰𑌵𑍃𑌦𑍍𑌧𑌃 * | மிகக்குரூரனை |
| 𑌕𑌾𑌲𑌃 𑌅𑌸𑍍𑌮𑌿 } † | காலனாயிருக்கிறேன் |
| 𑌲𑍋𑌕𑌾𑌨𑍍 | ஜனங்களை |

---

* (ஸ॰) மிகவும் விருத்தியாயிருக்கிற (௨) (ஸ்ரீ,வி) பூர்ணனாயிருக்கிற.

† (ஸ்ரீ,வி) சம்பூர்ண குணங்களோடுகூடியிருக்கிறேன்.

| | |
|---|---|
| ஸமாஹர்தும் | சம்ஹாரஞ் செய்வதற்காக |
| இஹ* | இப்போது |
| ப்ரவ்ருத்த: | பிரவிருத்தித்திருக்கிறேன் |
| ப்ரத்யநீகேஷு | அந்தந்தச்சேனைகளில் |
| யோதா: | யுத்தஞ்செய்கிறவர்கள் |
| யே அவஸ்திதா: | யாரிருக்கிறார்களோ |
| (தே) ஸர்வே | அந்தசகலரும் |
| ருதே(அ)பி த்வாம்† | உன்னையன்றியிலுங்கூட |
| ந பவிஷ்யந்தி‡ | இருக்கப்போகிறதில்லை. |

ஸ்ரீகிருஷ்ணபகவான் சொல்வது - ஜனங்களுக்கு நாசத்தையுண்டாக்குகிற மிகக் குரூரனை காலனையிருக்கிறேன். ஜனங்களை சம்ஹாரஞ் செய்வதற்காக விப்போது பிரவிருத்தித் திருக்கிறேன். அந்தந்தச் சேனைகளில் யுத்தஞ்செய்கிறவர்கள் யாரிருக்கிறார்களோ, அந்த சகலரும் உன்னை யன்றியிலுங்கூட இருக்கப்போகிறதில்லை. (என்றால், உன்னுடைய பிரயத்தினமில்லாவிட்டாலுங்கூடப் பிழைத்திருக்கப் போகிறதில்லை. என்பது கருத்து.)

(ஶா) முந்திய சுலோகத்தில் நீர்யார்? என்று கேட்டகேழ்விக்கு நான் காலனென்றும், உம்முடைய செய்கை இனனதென்று அறியவில்லை என்று கேட்டதற்கு ஜனங்களை சம்ஹாரம் செய்வதென் செய்கை யென்றும் பதில் சொல்லப்பட்டது. (௩௨)

---

௩௩. தஸ்மாத்த்வமுத்திஷ்ட யஶோ லபஸ்வ ஜித்வா ஶத்ரூந் புங்க்ஷ்வ ராஜ்யம் ஸம்ருத்தம் । மயைவைதே நிஹதா: பூர்வமேவ நிமித்தமாத்ரம் பவ ஸவ்யஸாசிந்॥

| | |
|---|---|
| தஸ்மாத் | ஆகையினாலே |
| த்வம் | நீ |
| உத்திஷ்ட | (யுத்தத்திற்கு) எழுந்திரு |
| ஶத்ரூந் | சத்துருக்களை |
| ஜித்வா | ஜயித்து |

---

* (ஶம்) (ஸ்ரீ) இந்தலோகத்தில் இந்தக்காலத்தில்.

† (ரா) உன்னுடைய பிரயத்தினமன்றியிலும். (ஸ்ரீ,வி) நீமுதலிய பாண்டவரைவரும், அசுவத்தாமா, கிருதவருமன், கிருபாசாரியார், இவர்களும் தவிர.

‡ (ரா) நாசமடைந்து போவார்கள்.

| | |
|---|---|
| 𑌯𑌶𑌃* | கீர்த்தியை |
| 𑌲𑌭𑌸𑍍𑌵 | அடை |
| 𑌸𑌮𑍃𑌦𑍍𑌧𑌂† | (சகலபோகங்களால்) நிறைந்திருக்கிற |
| 𑌰𑌾𑌜𑍍𑌯𑌂 | இராஜ்ஜியத்தை |
| 𑌭𑍁𑌙𑍍𑌕𑍍𑌷𑍍𑌵 | அனுபவி |
| 𑌏𑌤𑍇 | இவர்கள் |
| 𑌮𑌯𑍈𑌵 | என்னாலேயே |
| 𑌪𑍂𑌰𑍍𑌵𑌮𑍇𑌵 | முன்னாலேயே |
| 𑌨𑌿𑌹𑌤𑌾𑌃‡ | கொல்லப்பட்டிருக்கிறார்கள் |
| 𑌸𑌵𑍍𑌯𑌸𑌾𑌚𑌿𑌨𑍍 | இடதுகையினாலேயும் பாணங்களைப் பிரயோகிக்கும் வல்லமை யுள்ளவனே! (அர்சுனா) |
| 𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌮𑌾𑌤𑍍𑌰𑌂§ | நிமித்தமாத்திரமாக |
| 𑌭𑌵 | இரு. |

(சங்கரிக்கிற செய்கை யென்னுடையதாக இருக்கிறது) ஆகையினாலே நீ யுத்தத்திற் கெழுந்திரு. சத்துருக்களை ஜயித்துக் கீர்த்தியை அடை. சகலபோகங்களால் நிறைந்திருக்கிற இந்த இராஜ்ஜியத்தை யனுபவி. இவர்கள் (இந்தச் சேனைகளிலுள்ளவர்கள்) என்னால் முன்னாலேயே கொல்லப்பட்டிருக்கிறார்கள். ஓ! அர்சுனா! நீ நிமித்தமாத்திரமாகவிரு. என்றால், நிமித்தமாத்திரமாக யுத்தம்செய் என்பது கருத்து.) (௩௩)

---

௩௪. 𑌦𑍍𑌰𑍋𑌣𑌂𑌚 𑌭𑍀𑌷𑍍𑌮𑌂𑌚 𑌜𑌯𑌦𑍍𑌰𑌥𑌂𑌚 𑌕𑌰𑍍𑌣𑌂 𑌤𑌥𑌾𑌨𑍍𑌯𑌾𑌨𑌪𑌿 𑌯𑍋𑌧𑌵𑍀𑌰𑌾𑌨𑍍 । 𑌮𑌯𑌾 𑌹𑌤𑌾𑌂𑌸𑍍𑌤𑍍𑌵𑌂 𑌜𑌹𑌿 𑌮𑌾 𑌵𑍍𑌯𑌥𑌿𑌷𑍍𑌠𑌾 𑌯𑍁𑌧𑍍𑌯𑌸𑍍𑌵 𑌜𑍇𑌤𑌾𑌸𑌿 𑌰𑌣𑍇 𑌸𑌪𑌤𑍍𑌨𑌾𑌨𑍍 ॥

| | |
|---|---|
| 𑌮𑌯𑌾 | என்னாலே |
| 𑌹𑌤𑌾𑌨𑍍 | கொல்லப்பட்டிருக்கிற |
| 𑌦𑍍𑌰𑍋𑌣𑌂𑌚 | துரோணாசாரியரையும் |
| 𑌭𑍀𑌷𑍍𑌮𑌂𑌚 | பீஷ்மாசாரியரையும் |
| 𑌜𑌯𑌦𑍍𑌰𑌥𑌂𑌚 | ஜயத்திரதனையும் |

---

* (ஸ௦) (ஸ்ரீ) தேவதைகளாலுங்கூட ஜயிக்கவொண்ணாத பீஷ்மர், துரோணர், இவர்களை ஜயித்தாயென்கிற கீர்த்தியை.

† (ஸ௦) சத்துருக்களற்றிருக்கிற சம்பத்தோடுகூடிய.

‡ (ரா) கொல்லப்படுவதற்கு முன்னாலேயே உத்தேசிக்கப்பட்டிருக்கிறார்கள்.

§ (ரா) எனக்கு நீ ஒரு ஆயுதம்போல் நிமித்தமாக மட்டும்.

| | |
|---|---|
| 𑌕𑌰𑍍𑌣𑌂 | கர்ணனையும் |
| 𑌤𑌥𑌾 | அப்படியே |
| 𑌅𑌨𑍍𑌯𑌾𑌨𑌪𑌿 𑌯𑍋𑌧𑌵𑍀𑌰𑌾𑌨𑍍 | மற்ற சூராளாயிருக்கிற யுத்தஞ் செய்பவர்களையும் |
| 𑌤𑍍𑌵𑌂 | நீ |
| 𑌜𑌹𑌿 | கொல்லக்கடவாய் |
| 𑌮𑌾𑌵𑍍𑌯𑌥𑌿𑌷𑍍𑌠𑌾𑌃 | வியசனத்தையடையாதே |
| 𑌯𑍁𑌧𑍍𑌯𑌸𑍍𑌵 | யுத்தஞ்செய் |
| 𑌰𑌣𑍇 | யுத்தத்தில் |
| 𑌸𑌪𑌤𑍍𑌨𑌾𑌨𑍍 | சத்துருக்களை |
| 𑌜𑍇𑌤𑌾𑌸𑌿 | ஜயிப்பாய். |

என்னாலே கொல்லப்பட்டிருக்கிற துரோணர், பீஷ்மர், ஜயத்திரதன், கர்ணன், அப்படியே மற்ற சூராளாயிருக்கிற யுத்தம் செய்பவர்கள், இவர்களை நீ கொல்லுவாய்; வியசனத்தையடையாதே; யுத்தஞ் செய்; யுத்தத்தில் சத்துருக்களை ஜயிப்பாய்.

(ரா) துரோணர் பீஷ்மர் முதலியவர்கள் குரு பந்து என்கிற சம்பந்தத்தைக்கொண்டு அவர்களை எப்படிக் கொல்லுகிறதென்று நீ பயமடைந்தாயல்லவா? அவர்கள் சத்துரு பக்ஷத்திலுள்ளவர்களாயும், உங்களுக்குப் பலவித துன்பங்களைச் செய்பவர்களாயு மிருக்கிறதினால், அவர்களை நானே கொல்ல உத்தேசித்துவிட்டேன். 𑌮𑌾𑌵𑍍𑌯𑌥𑌿𑌷𑍍𑌠𑌾𑌃 — தருமாதருமங்களை யோசித்தும், பந்துக்களென்பதை யோசித்தும், தயவுடனும், எப்படி கொல்வேனென்று பயப்பட்டாயல்லவா? அப்படிபயப்பட அவசியமில்லை என்பது கருத்து.

(ஶா) இராஜாவாகிய துரியோதனன் முதலியவர்களைக் குறிப்பிட்டுச் சொல்லாமல் துரோணர், பீஷ்மர், ஜயத்திரதன், கர்ணன் இவர்கள்பெயரை மட்டும் குறிப்பிட்டுச்சொன்ன விஷயத்தைப் பற்றி (ம) (ஸ்ரீ,வி) இவர்கள் சொல்லியிருக்கும் முகாந்தரங்கள் சற்றே விரிவாய் அடியில் சொல்லப்படுகின்றன.

இந்நால்வரை ஜயிக்கும் விஷயத்தில்தான் அர்சுனனுக்கு சங்கையுண்டு. ஏனென்றால்:—

க. துரோணாசாரியார்யுத்தசாஸ்திரநிபுணர்; அஸ்திரசஸ்திரங்களைப் பிரயோகிப்பதின் மர்மங்களைச் செவ்வையா யறிந்தவர்; க்ஷத்திரியவம்சத்திற்குக்காலனும், யுத்தம்முதலிய சகலவிஷயங்களிலும் தேர்ந்தவருமான பரசுராமருக்குச் சிஷர்; யுத்தசாஸ்திர விஷயத்தில் தனக்கு (அர்சுனனுக்கு) குருவாயு மிருக்கிறார்; இப்படிப்பட்டவர் யுத்தஞ்செய்யத்

துணிந்துமிருக்கிறார்; ஆகையாலிவரை எப்படி கொல்லுவதென்கிற விஷயத்தில் அர்சுனன் கலங்கியிருக்கிறான்.

௨. பீஷ்மாசாரியர் தன்தேகத்தை விடவேண்டுமென றுத்தேசித்தாலன்றியில் மரண மடைகிறதில்லையென்று வரம் பெற்றவராகையால் அவரைக்கொல்ல முடியாது. அஸ்திர சஸ்திரங்களை மர்மங்களையறிந்துப் பிரயோகிப்பதில் மகாவல்லவர். பரசுராமருடைய சிஷர் என்பது மாத்திரமல்ல. அவருடன் யுத்தஞ்செய்து அவரை ஜயித்தவர். தனக்கு (அர்சுனனுக்கு) ப் பாட்டனுயுமிருக்கிறார். அல்லாமலும். எதிரி பக்ஷத்தில் சேனதிபதியாயு மிருக்கிறார். ஆகையால் இவரை எப்படி கொல்வதென்கிற விஷயத்தில் அர்சுனன் கலங்கியிருக்கிறான்.

௩. ஜயத்திரதனுடைய தகப்பன் ஒருவரம் பெற்றிருக்கிறான். அதாவது — தன் குமாரனுடைய ஜயத்திரதன் தலையை எவன் அறுத்து பூமியில் தள்ளுகிருனே, அவன் தலை ஆயிரம் துண்டுகளாக வெடித்து மரணமடைவானென்பதே. இப்படிப்பட்டவனைத் தலை பூமியில் விழாமல் எப்படி கொல்கிறதென்கிற விஷயத்தில் அர்சுனன் கலங்கியிருக்கிறான்.

௪. எவன்பேரில் பிரயோகிக்கப்பட்டதோ, அவனைக் கொல்லாமல் விடாததாகிய மகா மகிமைபொருந்திய சக்தி என்கிற ஆயுதத்தை அர்சுனனைக் கொல்லும்பொருட்டே இந்திரனிடத்திலிருந்து கர்ணன் பெற்றிருக்கிறான். அதை அவன் தன்பேரில் பிரயோகித்தால் எப்படி தப்புகிறதென்கிற விஷயத்தில் அர்சுனன் கலங்கியிருக்கிறான்.

இந்தக் காரணங்களை அறிந்திருக்கிற பகவான் அர்சுனனுக்குத் தைரிய முண்டாகும்பொருட்டு, காலசுவரூபத்தை வகித்திருக்கிற நான் பார்த்தமாத்திரத்தில் அந்த நால்வர்களும் தங்களுக்குள்ள சகல சக்தி சாமர்த்தியங்கள் அழிந்து கொல்லப்பட்டார்களென்று அர்சுனனுக்குக் குறிப்பிட்டுச் சொன்னதாகத் தாத்பரியம். (௩௪)

---

ஸஞ்ஜய உவாச.

௩௫. ஏதச்ச்ருத்வா வசநம் கேஸவஸ்ய க்ருதாஞ்ஜலிர்வேபமாந: கிரீடீ
நமஸ்க்ருத்வா பூய ஏவாஹ க்ருஷ்ணம் ஸகத்கதம் பீதபீத: ப்ரணம்ய ॥

ஸஞ்ஜய உவாச — சஞ்சயன்சொல்வது
வேபமாந: — நடுங்கிக்கொண்டிருக்கிற

| | |
|---|---|
| கிரீடீ | அர்சுனன் |
| கேசவஸ்ய | கேசவனுடைய (கிருஷ்ணசுவாமி) |
| ஏதத் வசனம் | இந்தவாக்கியத்தை |
| ச்ருத்வா | கேட்டு |
| க்ருதாஞ்ஜலி: | கைகூப்பிக்கொண்டவனுய் |
| க்ருஷ்ணம் | கிருஷ்ணசுவாமியை |
| நமஸ்க்ருத்வா | நமஸ்காரம்செய்து |
| பீதபீத: | மிகப்பயந்து |
| ப்ரணம்ய | வணங்கி |
| ஸகத்கதம்* | தழதழத்தவாக்குடன் |
| பூய ஏவ | மறுபடியும் |
| ஆஹ | சொல்லுகிறுன். |

சஞ்சயன் திருதராஷ்டரனை நோக்கிச்சொல்வது — நடுங்கிக்கொண்டிருக்கிற அர்சுனன் கிருஷ்ணசுவாமியினுடைய இந்த (மேல்சொன்ன) வாக்கியத்தைக்கேட்டு கைகூப்பிக்கொண்டு கிருஷ்ணசுவாமியை நமஸ்காரஞ்செய்து மிகப்பயந்து வணக்கத்துடனும் தழதழத்த வாக்குடனும் சொல்லுகிறுன். (௩௫)

---

அர்ஜுன உவாச.

௩௬. ஸ்தானே ஹ்ருஷீகேச தவ ப்ரகீர்த்யா ஜகத் ப்ரஹ்ருஷ்யத்யனுரஜ்யதே ச । ரக்ஷாம்ஸி பீதானி திசோ த்ரவந்தி ஸர்வே நமஸ்யந்தி ச ஸித்தஸங்கா:॥

| | |
|---|---|
| அர்ஜுன உவாச | அர்சுனன்சொல்வது |
| ஹே ஹ்ருஷீகேச | ஓ! கிருஷ்ணசுவாமியே! |
| தவ | உம்முடைய |
| ப்ரகீர்த்யா† | மகாகீர்த்தியினுலே |

* (பா) மிகப்பயமல்லது அதிக துக்கமுண்டாகும் போதும், பிரீதியான வஸ்துக்களைக்கண்டு அதிஞலதிக சுகமல்லது சந்தோஷமுண்டாகும் போதும், கண்களில் ஜலம் தொண்டையடைப்பு தேகப்பரபரப்பு முதலான துண்டாயிருக்கையில் பேசப்படும் சுவரமானது. "ஸகத்கதம்" என்று சொல்லப்படுகிறது.

† (ஸ்ரீ) மகாத்துமியத்தைக் கீர்த்தனஞ் செய்வதினுலே. (பா) மகாத்துமியத்தைக்கேட்டதினுலே.

ஜகத்* — பிரபஞ்சமானது
ப்ரஹ்ருஷ்யதி — மிகவும் சந்தோஷமடைகிறது
அநுரஜ்யதே ச — மிகப்பிரீதியுடனும் கூடுகிறது
ரக்ஷாம்ஸி — இராக்ஷஸர்கள்
பீதாநி — பயந்தவர்களாய்
திஶ꞉ — திக்குகளை நோக்கி
த்ரவந்தி — ஓடுகிறார்கள்
ஸர்வே ஸித்தஸங்கா꞉ — சித்தர்களுடைய கூட்டங்களெல்லாம்
நமஸ்யந்தி ச — நமஸ்காரஞ்செய்கிறார்கள்
(ஸ்தாநி) — இவைகள்
ஸ்தாநே — யுக்தமே (ஆச்சரியமல்ல.)

அர்சுனன் சொல்வது—ஓ! கிருஷ்ணசுவாமியே! உம்முடைய மகா கீர்த்தியினாலே பிரபஞ்சமானது மிகவும் சந்தோஷமடைகிறது மல்லாமல், மிகப் பிரீதியுடனும் கூடுகிறது. இராக்ஷஸர்கள் பயந்து திக்குகளைநோக்கி யோடுகிறார்கள். சித்தக்கூட்டங்கள் நமஸ்காரஞ் செய்கிறார்கள். இவைகள் யுக்தமே (உம்முடைய மகிமைக்குத் தகுந்தவைகளே என்பது கருத்து). (௩௬)

---

௩௭. கஸ்மாச்ச தே ந நமேரந் மஹாத்மந் கரீயஸே ப்ரஹ்மணோ(அ)ப்யாதிகர்த்ரே । அநந்த தேவேஶ ஜகந்நிவாஸ த்வமக்ஷரம் ஸதஸத் தத்பரம் யத்॥

ஹே மஹாத்மந்† — ஓ! மகாத்துமாவே!
ஹே அநந்த — ஓ! நாசமற்றவரே!
ஹே தேவேஶ — ஓ! தேவர்களுக்கீசனே!
ஹே ஜகந்நிவாஸ — ஓ! ஜகத்திற் காசிரயமானவரே!
ஸத்‡ — ஸ்தூலமும்
அஸத்§ — சூக்ஷ்மமும்
யத் — எதோ
தத்பரம் — அதற்குமூலகாரணமான

---

* (ரா) யுத்தத்தைப் பார்க்கவந்திருக்கிற சகலதேவதைகள், கந்தர்வாள் சித்தர்கள், யக்ஷர்கள், வித்தியாதரர்கள், கின்னரர்கள், கிம்புருஷர்கள் முதலிய ஜகத்தானது.

† (ஶ) பூர்ணமான ஆத்மா.

‡ - § (ஶ) காரியகாரணமானவரும். (ஸ்வா) இதின் ௯-வது, அத்தியாயம், ௧௩, ௧௮ - வது அத்தியாயம், ௧௩ - இந்த சுலோகங்களைப்பார்க்க.

| | |
|---|---|
| 𑌅𑌕𑍍𑌷𑌰𑌂 | பரபிரம்மம் |
| 𑌤𑍍𑌵𑌂 | நீரே |
| 𑌗𑌰𑍀𑌯𑌸𑍇 | சிரேஷ்டரும் |
| 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋𑌽𑌪𑌿 | சதுர்முகபிரம்மாவுக்குங்கூட |
| 𑌆𑌦𑌿𑌕𑌰𑍍𑌤𑍍𑌰𑍇 | ஆதிகாரணருமான |
| 𑌤𑍇 | உம்மைக்குறித்து |
| 𑌕𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 | ஏன்? |
| 𑌨 𑌨𑌮𑍇𑌰𑌨𑍍 | நமஸ்கரிக்காமலிருப்பார்கள். |

ஓ! மகாத்மாவே! ஓ! நாசமற்றவரே! ஓ! தேவர்களுக்கீசனே! ஓ! ஜகத்திற்காசிரயமானவரே! ஸ்தூலமும் சூக்ஷ்மமும் ஏதோ அதற்கு மூலகாரணமான பரபிரம்மம் நீரே. சிரேஷ்டரும் சதுர்முக பிரம்மாவுக்குங்கூட ஆதிகாரணருமான உம்மைக்குறித்து ஏன் நமஸ்கரிக்காம லிருப்பார்கள்!

(𑌸𑌂) ஓ! மகாத்மாவே! உத்தமரானவும் பிரம்மதேவனுக்கு ஆதி காரணரானவும் ஆன உம்மின்பொருட்டு ஏன் நமஸ்கரிக்காம லிருப்பார்கள்? தேவதேவரும் நாசமற்றவரும் ஜகத்திற் காதாரபூதருமாகிய ஓ! சுவாமி! அழிவற்றதும் இருக்கிறதென்று சொல்லப்படுவதும் இல்லையென்று சொல்லப்படுவதும் இதற்கு வேறானதும் எல்லாம் நீரே.

(𑌰𑌾) 𑌅𑌕𑍍𑌷𑌰𑌂 — நாசமற்ற ஜீவாத்மதத்துவமும், 𑌤𑍍𑌵𑌮𑍇𑌵 — நீரே, 𑌸𑌤𑍍 — நாமரூப விகாரத்தோடிருக்கிற காரியமானவஸ்துவும், 𑌅𑌸𑌤𑍍 — நாமரூபவிகாரமற்ற காரணப் பிரகிருதிரூபமும், 𑌤𑍍𑌵𑌮𑍇𑌵 — நீரே, 𑌤𑌤𑍍𑌪𑌰𑌂 — பிரகிருதி தத்துவம், பிரகிருதி சம்பந்தத்தோடுகூடிய ஜீவ தத்துவ மிவற்றைக்காட்டிலு மந்நியமான முக்தாத்ம தத்துவமும், 𑌤𑍍𑌵𑌮𑍇𑌵 — நீரே. (௩௭)

---

௩௮. 𑌤𑍍𑌵𑌮𑌾𑌦𑌿𑌦𑍇𑌵𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃𑌪𑍁𑌰𑌾𑌣 𑌸𑍍𑌤𑍍𑌵𑌮𑌸𑍍𑌯𑌵𑌿𑌶𑍍𑌵 𑌸𑍍𑌯𑌪𑌰𑌂𑌨𑌿𑌧𑌾𑌨𑌂 । 𑌵𑍇𑌤𑍍𑌤𑌾𑌸𑌿𑌵𑍇𑌦𑍍𑌯𑌂 𑌚𑌪𑌰𑌞𑍍𑌚𑌧𑌾𑌮 𑌤𑍍𑌵𑌯𑌾𑌤𑌤𑌂 𑌵𑌿𑌶𑍍𑌵𑌮𑌨𑌨𑍍𑌤𑌰𑍂𑌪 ॥

| | |
|---|---|
| 𑌹𑍇 𑌅𑌨𑌨𑍍𑌤𑌰𑍂𑌪 | ஓ! விசுவரூபத்தை யுடையவரே! |
| 𑌆𑌦𑌿𑌦𑍇𑌵𑌃 | தேவதைகளுக்காதியானவரும் |
| 𑌪𑍁𑌰𑌾𑌣𑌃 | } ஆதிபுருஷனும் |
| 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 | |
| 𑌤𑍍𑌵𑌂 | நீரே |

| | |
|---|---|
| அஸ்ய விஶ்வஸ்ய } * | இந்தப் பிரபஞ்சத்திற்கு |
| பரம் | சிரேஷ்டமானதாகிய |
| நிதா⁴நம் † | பிரளயகாலத்திலடைகிறஸ்தானமும் |
| வேத்தா | அறிகிறவனும் |
| வேத்³யம் | அறியத்தகுந்தவஸ்துவும் |
| பரஞ்ச தா⁴ம } ‡ | உத்தமமான (விஷ்ணு) ஸ்தானமும் |
| த்வமேவ | நீராகவேயிருக்கிறீர் |
| விஶ்வம் | சகலப்பிரபஞ்சமும் |
| த்வயா | உம்மாலே |
| ததம் | வியாபிக்கப்பட்டிருக்கிறது. |

ஓ! விசுவ ரூபத்தை யுடையவரே! தேவர்களுக்கெல்லா மாதியானவரும் ஆதிபுருஷனும் நீரே. இந்தப் பிரபஞ்சத்திற்கு சிரேஷ்டமானதாகிய பிரளயகாலத்தி லடைகிற ஸ்தானமும், அறிகிறவனும், அறியத்தகுந்த வஸ்துவும், உத்தமமான (விஷ்ணு) ஸ்தானமும், நீராகவே யிருக்கிறீர். சகலப் பிரபஞ்சமும் உம்மாலேயே வியாபிக்கப்பட்டிருக்கிறது. (௩௮)

---

௩௯. வாயுர்யமோऽக்³நிர்வருண: ஶஶாங்க: ப்ரஜாபதிஸ்த்வம் ப்ரபிதா
மஹஶ்ச । நமோ நமஸ்தேऽஸ்து ஸஹஸ்ரக்ருத்வ: புநஶ்ச பூ⁴யோऽபி
நமோ நமஸ்தே ॥

| | |
|---|---|
| வாயு: | வாயுவும் |
| யம: | யமனும் |
| அக்³நி: | அக்கினியும் |
| வருண: | வருணனும் |
| ஶஶாங்க: | சந்திரனும் |
| ப்ரஜாபதி: § | சதுர்முகபிரம்மாவும் |
| ப்ரபிதாமஹ: | சதுர்முகபிரம்மாவுக்குத்தகப்பனும் |
| த்வம் | நீரே |

---

* (ரா) இந்த உம்முடைய சரீரமான பிரபஞ்சத்திற்கு.

† (ரா) ஆதாரமாகவும். (ஸ்ரீ,வி) ஆசிரயமாகவும். (ஷா) இதின் ௯-வது அத்தியாயம் - ௧௮, இந்த அத்தியாயம் - ௧௮, இந்தச் சுலோகங்களைப்பார்க்க.

‡ (ஸ்ரீ,வி) தேஜஸ்ஸுகளுடைய கூட்டமும்.

§ (ஶம்) காசியபர்முதலிய பிரஜாபதிகளும்.

| | |
|---|---|
| தே | உம்மைக்குறித்து |
| ஸஹஸ்ரக்ருத்வ: | ஆயிரம்தடவை |
| நமோ நம: | நமஸ்காரம் நமஸ்காரம் |
| அஸ்து | ஆகக்கடவது |
| பூயோபி } * | |
| சாபி } | மறுபடியும் மறுபடியும் (ஆயிரம்தடவை) |
| தே | உம்மைக்குறித்து |
| நமோ நம: | நமஸ்காரம் நமஸ்காரம். |

வாயு யமன் அக்கினி வருணன் சந்திரன் சதுர்முகபிரம்மா சதுர்முகபிரம்மாவுக்குத் தகப்பன் இவர்கள் நீரே. உம்மைக்குறித்து ஆயிரம் தடவை நமஸ்காரமாகக் கடவது. மறுபடி ஆயிரம்தடவை உம்மைக் குறித்து நமஸ்காரம்.

இதில்கண்ட வாயு என்கிற பதத்திற்கு பலஞானரூபமானவும் என்றும், இப்படியே மற்றப்பதங்களுக்கும் பரமாத்ம பரமாகவே (மீ,வி) அர்த்தஞ் செய்திருக்கிறார். (௩௯)

---

௪௦. நம: புரஸ்தாதத ப்ருஷ்டதஸ்தே நமோஸ்து தே ஸர்வத ஏவ ஸர்வ। அனந்தவீர்யாமிதவிக்ரமஸ்த்வம் ஸர்வம் ஸமாப்னோஷி ததோஸி ஸர்வ:॥

| | |
|---|---|
| ஹே அனந்தவீர்ய | ஓ! அமிதமானசாமர்த்திய முடையவரே! |
| புரஸ்தாத் | முன்பக்கத்திலும் |
| ப்ருஷ்டத: | பின்பக்கத்திலும் |
| தே | உம்மின்பொருட்டு |
| நம: | நமஸ்காரம் |
| அத | அப்படியே |
| ஸர்வத ஏவ | சகலமான திக்குகளிலும் |
| தே | உம்மின்பொருட்டு |
| நம: } | நமஸ்காரமாகக்கடவது |
| அஸ்து } | |
| ஹே ஸர்வ | ஓ! சர்வாத்மாவே! |
| அமிதவிக்ரம: | அளவிடத்தகாத பராக்கிரமத்தை யுடைய |
| த்வம் | நீர் |
| ஸர்வம் | சகலத்தையும் |

---

* (பா०) அநேகம்தடவை.

| | |
|---|---|
| ஸமாப்நோஷி* | வியாபித்திருக்கிறீர் |
| ததஃ | அதினுலே |
| ஸர்வஃ | சர்வசுவரூபராய் |
| அஸி | இருக்கிறீர். |

ஓ! அமிதமான சாமர்த்திய முடையவரே! முன்பக்கத்திலும் பின் பக்கத்திலும் உம்மின்பொருட்டு நமஸ்காரம். அப்படியே சகலமான திக்குகளிலு மும்மின் பொருட்டு நமஸ்காரமாகக்கடவது. ஓ! சர்வாத்மாவே! அளவிடக்கூடாத பராக்கிரமத்தை யுடைய நீர் சகலத்தையும் வியாபித்திருக்கிறீர். அதினுலே சர்வ சுவரூபராயுமிருக்கிறீர்.

(ரா) சித் அசித் வஸ்துக்களான சகலப் பிரபஞ்சமும் உமக்கு சரீரமான படியாலும், ஸ்வ த்வ காரகாச = எல்லா மும்முடைய சேஷ (அம்ச) மா யிருக்கிறபடியாலும், நீர் சர்வாத்மாவாகவும் சர்வப்பிரகாரியாகவு மிருக்கிறபடியாலும், சர்வமென்று நீர் சொல்லப்படுகிறீர். என்பது தாத்பரியம்

(ஸ்ரீ, வி) இவ்விடத்தில் 'ஸர்வஃ' என்றுசொன்னதிலும் சுருதியில் "ஸர்வம்கல்விதம்ப்ரஹ்ம" என்றுசொல்லி யிருப்பதினுலும் சகலமும் பிரம்மமென்றர்த்தமல்ல. சர்வாசிரயம் பிரம்ம மென்பது தாத்பரியம். (என்ருல், சர்வசப்தங்களினுலும் அழைக்கப் படுகிறவர் என்பது தாத்பரியம்.) (௪௦)

---

௪௧. ஸகேதி மத்வா ப்ரஸபம் யதுக்தம் ஹே க்ருஷ்ண ஹே யாதவ ஹே ஸகேதி। அஜாநதா மஹிமாநம் தவேதம் மயா ப்ரமாதாத் ப்ரணயேந வாபி॥

௪௨. யச்சாவஹாஸார்த்த மஸத்க்ருதோஸி விஹாரஶய்யாஸந போஜநேஷு। ஏகோ(அ)தவாப்யச்யுத தத்ஸமக்ஷம் தத்க்ஷாமயே த்வாமஹமப்ரமேயம்॥

| | |
|---|---|
| ஹே அச்யுத | ஓ! நாசமற்ற சுவரூபசாமர்த்திய முடையவரே! |
| தவ | உம்முடைய |
| மஹிமாநம் | மகிமையையும் |
| இதம் | இந்த விசுவரூபத்தையும் |

* (மா) ஒரே ஆத்மாவினுல் வியாபித்திருக்கிறீர். (ரா) ஆத்மாவாக வியாபித்திருக்கிறீர்.

| | |
|---|---|
| அஜாநதா | அறியாத |
| மயா | என்னாலே |
| ப்ரமாதாத் | அக்ஞானத்தினாலாவது |
| ப்ரணயேந வா* | சிநேகத்தினாலாவது |
| ப்ரஸபம்† | அலக்ஷியமாய் |
| ஸகேதி மத்வா | தோழனென்றெண்ணி |
| ஹே க்ருஷ்ண | ஓ! கிருஷ்ண! |
| ஹே யாதவ | ஓ! யாதவனே |
| ஹே ஸகே | ஓ! சிநேகிதனே! |
| இதி | என்பதாகிய |
| யத் | எந்தவார்த்தையானது |
| உக்தம் | சொல்லப்பட்டதோ |
| விஹாரசய்யாஸந-போஜநேஷு | விளையாடும்போதும் படுக்கும்போதும் உட்காரும் போதும் சாப்பிடும்போதுமாவது |
| ஏக:‡ | ஒருவனாயிருக்கையிலாவது |
| அதவா | அல்லது |
| தத்ஸமக்ஷம்§ | பலர்முன்பாகவாவது |
| அவஹாஸார்த்தம் | பரிகாசத்திற்காக |
| அஸத்க்ருத: அஸி யத் | அவமதிக்கப்பட்டீரென்பதெதுண்டோ |
| தத் | அவைகளையெல்லாம் |
| அப்ரமேயம் | மகாமகிமைபொருந்திய |
| த்வாம் | உம்மை |
| அஹம் | நான் |
| க்ஷாமயே | க்ஷமிக்கும்படிபிரார்த்திக்கிறேன். |

ஓ! அச்சுதா! உம்முடைய மகிமையையும் இந்த விசுவரூபத்தையும் அறியாத என்னாலே அக்ஞானத்தினாலேயாவது சிநேகத்தினாலே

* (ரா) வெகுகாலபரிசயத்தினாலாவது,

† (ஶம்) ஆராய்ந்துபாராமல். (ரா) வணக்கமில்லாமல்.

‡ (ஶம்) புறம்பிலாவது. (ஶ்ரீ,வி) ஸர்வோத்தமனாக விருந்தும்.

§ (ஶம்) (ரா) எதிரிலாவது. (ஶ்ரீ,வி) தத்=அந்த அபராதத்தை - ஸமக்ஷம்= உம்மெதிராகவே - க்ஷாமயே=க்ஷமிக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

யாவது அலக்ஷியமாய்த் தோழனென்றெண்ணி, ஓ! கிருஷ்ண! ஓ! யாதவனே! ஓ! சிநேகிதனே! என்பதாகிய எந்த வார்த்தையானது என்னால் சொல்லப்பட்டதோ, (அதையும்) விளையாடும்போதாவது படுக்கும்போதாவது உட்காரும்போதாவது சாப்பிடும்போதாவது ஒருவனாயிருக்கையிலாவது அல்லது பலர் முன்பாகவாவது பரிகாசத்திற்காக அவமதிக்கப்பட்டதென்பதெதுண்டோ, அவைகளெல்லாவற்றையும் மகாமகிமைபொருந்திய உம்மை நான் க்ஷமிக்கும்படி பிரார்த்திக்கிறேன். (௪௧-௪௨)

---

௪௩. 𑌪𑌿𑌤𑌾𑌸𑌿 𑌲𑍋𑌕𑌸𑍍𑌯 𑌚𑌰𑌾𑌚𑌰𑌸𑍍𑌯 𑌤𑍍𑌵𑌮𑌸𑍍𑌯 𑌪𑍂𑌜𑍍𑌯𑌶𑍍𑌚 𑌗𑍁𑌰𑍁𑌰𑍍𑌗𑌰𑍀𑌯𑌾𑌨𑍍 । 𑌨 𑌤𑍍𑌵𑌤𑍍𑌸𑌮𑍋𑌽𑌸𑍍𑌤𑍍𑌯𑌭𑍍𑌯𑌧𑌿𑌕𑌃 𑌕𑍁𑌤𑍋𑌽𑌨𑍍𑌯𑍋 𑌲𑍋𑌕𑌤𑍍𑌰𑌯𑍇𑌽𑌪𑍍𑌯𑌪𑍍𑌰𑌤𑌿𑌮𑌪𑍍𑌰𑌭𑌾𑌵 ॥

| | |
|---|---|
| 𑌅𑌪𑍍𑌰𑌤𑌿𑌮𑌪𑍍𑌰𑌭𑌾𑌵 | ஓ! ஒப்பற்றபிரபாவமுடையவரோ! |
| 𑌤𑍍𑌵𑌮𑍍 | நீர் |
| 𑌚𑌰𑌾𑌚𑌰𑌸𑍍𑌯 | ஜங்கமஸ்தாவரங்களாகிய |
| 𑌅𑌸𑍍𑌯 𑌲𑍋𑌕𑌸𑍍𑌯 | இந்தப்பிரபஞ்சத்திற்கு |
| 𑌪𑌿𑌤𑌾 | பிதாவாயும் |
| 𑌪𑍂𑌜𑍍𑌯𑌃 | பூஜிக்கத்தக்கவராயும் |
| 𑌗𑍁𑌰𑍁𑌃* | குருவாயும் |
| 𑌗𑌰𑍀𑌯𑌾𑌨𑍍† | குருவைவிடசிரேஷ்டராயும் |
| 𑌅𑌸𑌿 | இருக்கிறீர் |
| 𑌲𑍋𑌕𑌤𑍍𑌰𑌯𑍇𑌽𑌪𑌿 | மூன்றுலோகங்களிலேயும் |
| 𑌤𑍍𑌵𑌤𑍍𑌸𑌮𑌃 | உமக்குசமானமானவன் |
| 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 | கிடையாது |
| 𑌅𑌭𑍍𑌯𑌧𑌿𑌕𑌃 | உமக்குமேலானவனாக |
| 𑌅𑌨𑍍𑌯𑌃 | வேறொருவன் |
| 𑌕𑍁𑌤𑌃 | ஏது. |

ஓ! ஒப்பற்ற பிரபாவமுடையவரோ! நீர் ஜங்கமஸ்தாவரங்களாகிய இந்தப் பிரபஞ்சத்திற்குத் தகப்பனும் பூஜிக்கத்தக்கவரும் குருவும் குருவைக்காட்டிலும் சிரேஷ்டருமா யிருக்கிறீர். மூன்றுலகங்களிலேயும் உமக்கு சமானமானவன் கிடையாது. உமக்கு மேலானவனாக வேறொருவனேது? (௪௩)

---

* † (ஶம) (ஸ்ரீ,வி) 𑌗𑌰𑍀𑌯𑌾𑌨𑍍 = சிரேஷ்டமான, 𑌗𑍁𑌰𑍁 = குருவாயும்.

† (ரா) 𑌗𑌰𑍀𑌯𑌾𑌨𑍍 = சிரேஷ்டமான பூஜ்ஜியனும்.

௪௪. 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌣𑌮𑍍𑌯 𑌪𑍍𑌰𑌣𑌿𑌧𑌾𑌯 𑌕𑌾𑌯𑌂 𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌯𑍇 𑌤𑍍𑌵𑌾𑌮𑌹𑌮𑍀𑌶𑌮𑍀
𑌡𑍍𑌯𑌂 । 𑌪𑌿𑌤𑍇𑌵 𑌪𑍁𑌤𑍍𑌰𑌸𑍍𑌯 𑌸𑌖𑍇𑌵 𑌸𑌖𑍍𑌯𑍁𑌃 𑌪𑍍𑌰𑌿𑌯𑌃 𑌪𑍍𑌰𑌿𑌯𑌾𑌯𑌾
𑌰𑍍𑌹𑌸𑌿𑌦𑍇𑌵 𑌸𑍋𑌢𑍁𑌮𑍍 ॥

| | |
|---|---|
| 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 | ஆகையினலே |
| 𑌈𑌶𑌂 | ஈசனையும் |
| 𑌈𑌡𑍍𑌯𑌂 | ஸ்துதிக்கத்தகுந்தவனையுமிருக்கிற |
| 𑌤𑍍𑌵𑌾𑌂 | உம்மை |
| 𑌅𑌹𑌂 | நான் |
| 𑌕𑌾𑌯𑌂 | சரீரத்தை |
| 𑌪𑍍𑌰𑌣𑌿𑌧𑌾𑌯 | கீழ்ப்படுத்தி |
| 𑌪𑍍𑌰𑌣𑌮𑍍𑌯 | நமஸ்காரஞ்செய்து |
| 𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌯𑍇 | மன்னிக்கும்படிபிரார்த்திக்கிறேன் |
| 𑌪𑍁𑌤𑍍𑌰𑌸𑍍𑌯 | புத்திரனுடைய |
| (𑌅𑌪𑌰𑌾𑌧𑌂) | அபராதத்தை (பிழையை) |
| 𑌪𑌿𑌤𑍇𑌵 | தகப்பன்போலவும் |
| 𑌸𑌖𑍍𑌯𑍁𑌃 | சிநேகிதனுடைய |
| (𑌅𑌪𑌰𑌾𑌧𑌂) | அபராதத்தை |
| 𑌸𑌖𑍇𑌵 | சிநேகிதன்போலவும் |
| 𑌪𑍍𑌰𑌿𑌯𑌾𑌯𑌾𑌃 | இஷ்டமானஸ்திரீயினுடைய |
| (𑌅𑌪𑌰𑌾𑌧𑌂) | அபராதத்தை |
| 𑌪𑍍𑌰𑌿𑌯𑌃 (𑌇𑌵) | பிரியமுள்ளபுருஷன்போலவும் |
| (𑌮𑌮) | என்னுடைய |
| (𑌅𑌪𑌰𑌾𑌧𑌂) | அபராதத்தை |
| 𑌹𑍇𑌦𑍇𑌵 | ஓ! சுவாமி! |
| 𑌸𑍋𑌢𑍁𑌂 | க்ஷமிக்கிறதற்கு |
| 𑌅𑌰𑍍𑌹𑌸𑌿 | யோக்கியராயிருக்கிறீர். |

(உமக்குச் சமானமானவரும், மேலானவரும், ஒருவருமில்லை.) ஆகையினலே, ஈசனையும் (சகலத்திற்கு மெஜமானன்) ஸ்துதிக்கத் தகுந்தவராயு மிருக்கிற உம்மை நான் சரீரத்தைக் கீழ்ப்படுத்தி நமஸ்காரம் செய்து மன்னிக்கும்படி பிரார்த்திக்கிறேன். அபராதஞ்செய்த புத்திரனைப் பிதாவும், சிநேகிதனைச் சிநேகிதனும், இஷ்டநாயகியை நாயகனும், க்ஷமிக்கிறதுபோல, என்னுடைய அபராதத்தை ஓ! சுவாமி! க்ஷமிக்கிறதற்கு யோக்கியரா யிருக்கிறீர்.

(ஸ்வா) "𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌯𑍇" என்கிறபதம் சுலோகத்திலிருக்கிறதினலே யே, 𑌅𑌪𑌰𑌾𑌧𑌂-என்கிற-பதம் தொக்கி யிருக்கிறதாக எண்ணப்படவே

ண்டும். வியாக்கியாதாக்களும் அப்படிப்பட்ட தாத்பரியங் கொண்டு தான் அபராதமென்கிற பதத்தை அவசியமான இடத்தில் சேர்த்திருக்கிறார்கள்.

“ப்ரிய: ப்ரியாயார்ஹஸி” இந்த வாக்கியத்திற்கு (ரா) ப்ரியாய = பிரியனை என்பொருட்டு, ப்ரிய: = பிரியரான நீர், ஸோடும் = தப்பெல்லாவற்றையும் பொறுக்க யோக்கியரா யிருக்கிறீர், என்று அர்த்தம் செய்திருக்கிறார். ஆனால், “ப்ரியாயார்ஹஸி” என்கிற வாக்கியத்தை ப்ரியாயா: என்று பிரிப்பதிலோ, முந்தியிருக்கிறமற்றப் பதங்களைப் போலவே ௪-வது விபக்திப்பொருளாக விருக்கிறது. ப்ரியாய என்றால் நான்காவது விபக்திப்பொருளைக் கொடுக்கும். ப்ரியாயா என்று பிரிக்க வேண்டுமானால் சுலோகத்தில் “ப்ரியாயாஸோடும்” என்றிருக்கவேண்டும்; ஆனால் இருஷிவாக்கியமானபடியினாலே “ப்ரியாயார்ஹஸி” என்றும் பிரயோகிக்கப்படலாமென்று ஆநந்தகிரி டீகாவில் சொல்லப்பட்டிருக்கிறது.

இப்படிப்பட்ட பிரயோகம் புராணாதிகளில் பலவிடங்களிலுண்டு. (௪௪)

---

௪௫. அத்ருஷ்டபூர்வம் ஹ்ருஷிதோஸ்மி த்ருஷ்ட்வா பயேந ச ப்ரவ்யதிதம் மநோ மே। ததேவ மே தர்ஶய தேவ ரூபம் ப்ரஸீத தேவேஶ ஜகந்நிவாஸ॥

| | |
|---|---|
| அத்ருஷ்டபூர்வம் | இதுவரையில் பாராமலிருந்த விசுவரூபத்தை |
| த்ருஷ்ட்வா | பார்த்து |
| ஹ்ருஷித: அஸ்மி | சந்தோஷித்தவனாகவிருக்கிறேன் |
| பயேந ச | பயத்தினாலேயும் |
| மே | என்னுடைய |
| மந: | மனதானது |
| ப்ரவ்யதிதம் | நடுங்கியிருக்கிறது |
| ஹே தேவேஶ | ஓ! தேவதைகளுக்கீசனே! |
| ஹே ஜகந்நிவாஸ | ஓ! ஜகத்திற்காதாரமானவனே! |
| ஹே தேவ | ஓ! சுவாமியே! |
| தத் ஏவ ரூபம் | அந்தப்பூர்வரூபத்தையே |
| மே | எனக்கு |

| | |
|---|---|
| 𑌦𑌰𑍍𑌶𑌯 | காண்பியும் |
| 𑌪𑍍𑌰𑌸𑍀𑌦 | பிரசன்னராவீராக. |

இதுவரையில் பாராமலிருந்த விசுவரூபத்தைப் பார்த்து சந்தோஷித்தவனாக விருக்கிறேன். பயத்தினாலேயு மென்னுடைய மனதானது நடுங்கியிருக்கிறது. ஓ! தேவதைகளுக்கீசனே! ஓ! ஜகத்திற்காதாரமானவனே! ஓ! சுவாமி! அந்தப் பூர்வரூபத்தையே எனக்குக் காண்பியும்; பிரசன்னராவீராக. (பிரசன்னராகவேண்டுமென்று பிரார்த்திக்கிறேன்.) (௪௫)

---

𑌶𑍍𑌲𑍋. 𑌕𑌿𑌰𑍀𑌟𑌿𑌨𑌂 𑌗𑌦𑌿𑌨𑌂 𑌚𑌕𑍍𑌰𑌹𑌸𑍍𑌤𑌮𑌿𑌚𑍍𑌛𑌾𑌮𑌿 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌮𑌹𑌂 𑌤𑌥𑍈𑌵।
𑌤𑍇𑌨𑍈𑌵 𑌰𑍂𑌪𑍇𑌣 𑌚𑌤𑍁𑌰𑍍𑌭𑍁𑌜𑍇𑌨 𑌸𑌹𑌸𑍍𑌰𑌬𑌾𑌹𑍋
𑌭𑌵 𑌵𑌿𑌶𑍍𑌵𑌮𑍂𑌰𑍍𑌤𑍇॥

| | |
|---|---|
| 𑌤𑌥𑍈𑌵 | முன்பார்த்தபடியே |
| 𑌤𑍍𑌵𑌾𑌂 | உம்மை |
| 𑌕𑌿𑌰𑍀𑌟𑌿𑌨𑌂 | கிரீடத்தை யுடையவராயும் |
| 𑌗𑌦𑌿𑌨𑌂 | கதாயுதத்தை யுடையவராயும் |
| 𑌚𑌕𑍍𑌰𑌹𑌸𑍍𑌤𑌂 | கையில் சக்கிராயுதத்தை யுடையவராயும் |
| 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌂 | பார்க்கிறதற்கு |
| 𑌅𑌹𑌂 | நான் |
| 𑌇𑌚𑍍𑌛𑌾𑌮𑌿 | இச்சிக்கிறேன் |
| 𑌹𑍇 𑌸𑌹𑌸𑍍𑌰𑌬𑌾𑌹𑍋 | ஓ! அநேககைகளை யுடையவரே! |
| 𑌹𑍇 𑌵𑌿𑌶𑍍𑌵𑌮𑍂𑌰𑍍𑌤𑍇 | ஓ! விசுவரூபத்தை யுடையவரே! |
| 𑌚𑌤𑍁𑌰𑍍𑌭𑍁𑌜𑍇𑌨 | நான்குகைகளுடன்கூடின |
| 𑌤𑍇𑌨𑍈𑌵 𑌰𑍂𑌪𑍇𑌣 | அந்தரூபத்துடனேயே |
| 𑌭𑌵 | ஆகக்கடவீர். |

முன்போலவே உம்மைக் கிரீடத்தை யுடையவராகவும் கதாயுதத்தை யுடையவராகவும் கையில் சக்கிராயுதத்தை யுடையவராகவும் பார்க்கிறதற்கு நானிச்சிக்கிறேன். ஓ! அநேக கைகளையுடையவரே! ஓ! விசுவரூபத்தை யுடையவரே! நான்கு கைகளுடன் கூடின அந்த (பூர்வ) ரூபமாகவே யாகக்கடவீர்.

(ஙா) இந்த சுலோகத்தினால் விசுவரூப மெடுப்பதற்கு முன் கிருஷ்ணபகவான் நான்கு கைகளையும் சங்கு சக்கிரம் முதலியவைகளையுமுடையவரா யிருந்தாரென்று காணுகிறது. வசுதேவருடைய புத்திரராக அவதாரம் செய்தகாலத்தில் இப்படிப்பட்ட ரூபத்துட னிருந்த

தாகவும், வசுதேவர் தேவகீ இவர்களுடைய பிரார்த்தனையின் பேரில் கம்சனை வதம்செய்கிறவரையி லிரண்டு கைகளுட னிருந்ததாகவும் பாகவதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. கம்சவதமானபிறகு ருக்குமிணி கல்லியாணகாலத்தில் சிசுபாலன் தியானித்த ரூபமானது சதுர்ப்புஜம் சங்குசக்கிர முதலியவையுடன் கூடினதென்றும், பாகவதத்தில் சொல்லப்பட் டிருக்கிறது. இதில் அர்சுனனும் அப்படியே சொல்லியிருக்கிறான். (இந்த அர்த்தத்தை இதின் ௫0-வது சுலோகத்திற்கு இவர் செய்திருக்கிற பாஷியத்தில் காண்க.) (௪௬)

---

ஸ்ரீபகவாநுவாச.

௪௭. மயா ப்ரஸந்நேந தவார்ஜுநேதம் ரூபம் பரம் தர்சிதமாத்மயோகாத் । தேஜோமயம் விச்வமநந்தமாத்யம் யந்மே த்வதந்யேந ந த்ருஷ்டபூர்வம் ॥

| | |
|---|---|
| ஸ்ரீபகவாநுவாச | ஸ்ரீ கிருஷ்ணபகவான் சொல்வது |
| தேஜோமயம் * | பிரகாசசுவரூபமானவும் |
| விச்வம் † | சகலப்பிரபஞ்சத்தையும் வியாபித்தவும் |
| அநந்தம் ‡ | நாசமற்றவும் |
| ஆத்யம் | ஆதியிலுள்ளவும் |
| த்வதந்யேந § | உன்னைத்தவிர மற்றொருவராலேயும் |
| நத்ருஷ்டபூர்வம் | முன்பார்க்கப்படாதவும் |
| மே | என்னுடைய |
| இதம்பரம்ரூபம் | இந்த உத்தமமானரூபம் |
| யத் | எதுவோ |
| (தத்) | அந்தரூபமானது |
| ப்ரஸந்நேந | அனுக்கிரகம்செய்ய இச்சையுள்ள |
| மயா | என்னாலே |
| ஹே அர்ஜுந | ஓ! அர்சுன! |
| தவ | உனக்கு |

---

* (ரா) தேஜஸ்ஸுகளின் கூட்டமாகவும்.

† (ரா) சகலத்திற்கும் ஆத்மாவானவும். (ஸ்ரீ,வி) பூர்ணமானவும்.

‡ (ரா) ஆதிமத்தியாந்த மில்லாதவும். (ஸ்ரீ,வி) சகல தேசகாலங்களிலுமிருக்கிறவும்.

§ (ஸ்ரீ,வி) உன்க்குத் தாழ்ந்தவர்களாலே.

| | |
|---|---|
| ஆத்மயோகாத்* | என்னுடைய யோகமாயா சாமர்த்தியத்தினாலே |
| தர்ஶிதம் | காண்பிவிக்கப்பட்டது. |

ஸ்ரீ கிருஷ்ணபகவான் சொல்வது—பிரகாச சுவரூபமானவும், சகலப் பிரபஞ்சத்தையும் வியாபித்தவும், நாசமற்றவும், ஆதியிலுள்ளவும், உன்னைத்தவிர மற்றொருவராலேயும் முன்பார்க்கப்படாதவுமான என்னுடைய இந்த உத்தமமான ரூபமெதுவோ, அந்த ரூபமானது அநுக்கிரகம்செய்ய இச்சையுள்ள என்னாலே ஓ! அர்சுனா! உனக்கு என்னுடைய யோக மாயா சாமர்த்தியத்தினால் காண்பிவிக்கப்பட்டது. (௪௭)

---

௪௮. நவேத³யஜ்ஞாத்⁴யயனைர்ந தா³னைர்ந ச க்ரியாபி⁴ர்ந தபோபி⁴ருக்³ரை: । ஏவம்ரூப: ஶக்ய அஹம் ந்ருலோகே த்³ரஷ்டும் த்வத³ன்யேன குருப்ரவீர ॥

| | |
|---|---|
| குருப்ரவீர | ஓ! குருசிரேஷ்டனே! |
| ந்ருலோகே | மனுஷியலோகத்தில் |
| த்வத³ன்யேன | உன்னைத்தவிரமற்றவனாலே |
| ஏவம்ரூப: | அந்தவிசுவரூபத்தை யுடையவனை |
| அஹம் | நான் |
| வேத³யஜ்ஞாத்⁴யயனை: | வேதங்கள், கல்பசூத்திரமுதலிய யக்ஞசாஸ்திரங்கள் இவைகளை அப்பியாசம் செய்வதினாலேயும் |
| த்³ரஷ்டும் ஶக்ய: | பார்க்கசாத்தியமானவனல்ல |
| தா³னை: ந | தானங்களினாலேயும் (சாத்தியமானவன்) அல்ல |
| க்ரியாபி⁴: ந | யக்ஞங்களினாலேயும் (சாத்தியமானவன்) அல்ல |
| உக்³ரை: | குரூரங்களான |
| தபோபி⁴: ந | தபசுகளினாலேயும் (சாத்தியமானவன்) அல்ல. |

ஓ! குருசிரேஷ்டனே! மனுஷியலோகத்தில் உன்னைத்தவிர மற்றவர்களினாலே இந்த விசுவரூபத்தை யுடையவனை நான் வேதங்கள் யக்ஞ சாஸ்திரங்கள் இவைகளுடைய அப்பியாசத்தினாலேயாவது, தானங்களினாலேயாவது, யக்ஞங்களினாலேயாவது, குரூரமான தபசுகளினாலேயாவது, பார்க்க சாத்தியமானவனல்ல. (௪௮)

* (ம०) என்னுடைய ஈசுவர சம்பந்தமான சாமர்த்தியத்தினாலே. (ரா) என்னுடைய சத்திய சங்கல்பத்தினாலே. (ஸ்ரீ:ஸ்ரீ) சுவரூப சாமர்த்தியத்தினாலே.

௪௯. மா தே வ்யதா மா ச விமூடபாவோ த்ருஷ்ட்வா ரூபம் கோரமீத்ருங்மமேதம் । வ்யபேதபீ: ப்ரீதமனா: புனஸ்த்வம் ததேவ மே ரூபமிதம் ப்ரபஶ்ய ॥

| | |
|---|---|
| ஈத்ருக் | இப்படிப்பட்ட |
| கோரம்* | பயங்கரமான |
| மம | என்னுடைய |
| இதம் ரூபம் | இந்தவிசுவரூபத்தை |
| த்ருஷ்ட்வா | பார்த்து |
| தே | உனக்கு |
| வ்யதா | பயமானது |
| மா | வேண்டியதில்லை |
| விமூடபாவ: | அக்ஞானமும் (மனக்குழப்பம்) |
| மா | வேண்டியதில்லை |
| த்வம் | நீ |
| வ்யபேதபீ: | பயத்தைவிட்டவனும் |
| ப்ரீதமனா: | மனச்சந்தோஷத்தை யடைந்தவனும் |
| மே | என்னுடைய |
| தத் இதம் ரூபமேவ | இப்போது நான் தரித்திருக்கிற ஸ்வரூபத்தைத்தானே |
| புன: | மறுபடியும் |
| ப்ரபஶ்ய | செவ்வையாகப்பார். |

இப்படிப்பட்ட பயங்கரமான என்னுடைய இந்த விசுவரூபத்தைப் பார்த்து உனக்கு பயமானது வேண்டியதில்லை; அக்ஞானமும் வேண்டியதில்லை. நீ பயத்தை விட்டவனும், மனச்சந்தோஷ மடைந்தவனும், என்னுடைய இப்போது நான் தரித்திருக்கிற ஸ்வரூபத்தைத் தானே மறுபடியும் செவ்வையாய்ப்பார். (௪௯)

---

ஸஞ்ஜய உவாச.

௫௦. இத்யர்ஜுனம் வாஸுதேவஸ்ததோக்த்வா ஸ்வகம் ரூபம் தர்ஶயாமாஸ பூய: । ஆஶ்வாஸயாமாஸ ச பீதமேனம் பூத்வா புன: ஸௌம்யவபுர்மஹாத்மா ॥

---

* (டீ,வி) சம்ஹாரம் செய்கிற ரூபமான.

| | |
|---|---|
| ஸஞ்ஜய உவாச | சஞ்சயன்சொல்வது |
| வாஸுதேவ: | கிருஷ்ணசுவாமியானவர் |
| அர்ஜுநம் | அர்சுனனைநோக்கி |
| இதி | இவ்விதமாய் |
| உக்த்வா | சொல்லி |
| ததா | அப்படியே |
| ஸ்வகம் ரூபம் | வசுதேவருடைய கிருகத்தி லவதரித்ததும் சதுர்ப்புஜங்களுடையதுமான தன்னுடைய பூர்வரூபத்தை |
| பூய: | மறுபடியும் |
| தர்ஶயாமாஸ | காண்பிவித்தார் |
| மஹாத்மா* | அபரிமிதமான தயவையுடையவரான கிருஷ்ணசுவாமியானவர் |
| ஸௌம்யவபு: பூத்வா | சாந்தமானரூபத்துடன்கூடினவராய் |
| பீதம் | பயந்திருக்கிற |
| ஏநம் | இந்த அர்சுனனை |
| புந: | மறுபடியும் |
| ஆஶ்வாஸயாமாஸ | சமாதானப்படுத்தினர். |

சஞ்சயன் திருதராஷ்டரனை நோக்கிச்சொல்வது—கிருஷ்ணசுவாமியானவர் அர்சுனனை நோக்கி இவ்விதமாய்ச் சொல்லி, அப்படியே வசுதேவகுமாரரூபமும் சதுர்ப்புஜ முடையதுமான தன்னுடைய பூர்வரூபத்தை மறுபடியும் காண்பிவித்தார். அபரிமிதமான தயவுடையவரான கிருஷ்ணசுவாமியானவர் சாந்தரூபத்துடன் கூடினவராய், பயந்திருக்கிற இந்த அர்சுனனை மறுபடியும் சமாதானப்படுத்தினர்.

(ஸா) பழயரூப மிப்படிப்பட்ட தென்பதை (ரா) இதில் குறித்துக் காட்டியிருக்கிறர். அந்த விவரத்தை இதின் ௪௬ - வது சுலோகத்தினடியில் காண்க. (௫௰)

---

அர்ஜுந உவாச.

(௫௧.) த்ருஷ்ட்வேதம் மாநுஷம் ரூபம் தவ ஸௌம்யம் ஜநார்தந।
இதாநீமஸ்மி ஸம்வ்ருத்த: ஸசேதா: ப்ரக்ருதிம் கத:॥

| | |
|---|---|
| அர்ஜுந உவாச | அர்சுனன்சொல்வது |
| ஹே ஜநார்தந | ஓ! ஜநார்தனா! |

---

* (ரா) ஸத்திய ஸங்கல்பரான அந்த கிருஷ்ணபகவான்,

| | |
|---|---|
| தவ | உம்முடைய |
| ஸௌம்யம் | சௌம்மியமான |
| இதம் மாநுஷம் * ரூபம் | இந்தமனுஷியரூபத்தை |
| த்ருஷ்ட்வா | பார்த்து |
| இதாநீம் | இப்போது |
| ஸசேதா: | சந்துஷ்டமனசையுடையவனாகவும் |
| ப்ரக்ருதிம் கத: | சுவபாவத்தையடைந்தவனாகவும் |
| ஸம்வ்ருத்த: அஸ்மி | ஆயிருக்கிறேன். |

அர்சுனன் கிருஷ்ணசுவாமியை நோக்கிச் சொல்வது—ஓ! ஜநார்த்தனா! உம்முடைய சௌம்மியமான இந்த மனுஷியரூபத்தைப் பார்த்து, இப்போது சந்துஷ்ட மனசை யுடையவனாகவும், சுபாவத்தை யடைந்தவனாகவும் ஆயிருக்கிறேன். (௫௧)

---

ஸ்ரீ பகவாநுவாச.

௫௨. ஸுதுர்தர்சமிதம்ரூபம் த்ருஷ்டவாநஸி யந்மம।
தேவா அப்யஸ்ய ரூபஸ்ய நித்யம் தர்சநகாங்க்ஷிண:॥

| | |
|---|---|
| ஸ்ரீ பகவாநுவாச | பகவான்சொல்வது |
| மம | என்னுடைய |
| யத் | எந்தரூபத்தை |
| த்ருஷ்டவாந் அஸி | பார்த்தாயோ |
| (தத்) இதம் | அந்த இப்படிப்பட்ட |
| ரூபம் | விசுவரூபமானது |
| ஸுதுர்தர்சம் † | சுத்தமாய்க்காணக்கிடையாதது |
| தேவா அபி | தேவதைகளுங்கூட |
| நித்யம் | எப்போதும் |

* (ஸ்ரீ,வி) மனிதனுடைய ரூபத்தைப்போல் காணப்படுகிறபடியால் மனுஷிய ரூபமென்று சொல்லப்பட்டது.

† (பா) அதிப்பிரயாசையினால் காணத்தகுந்தது. (ஸ்ரீ,வி) சுகத்தினாலும் துக்கத்தினாலும் காணத்தகுந்தது.

அஸ்ய
ரூபஸ்ய } இந்தரூபத்தினுடைய

தர்ஶநகாங்க்ஷிண: { தரிசனத்தின்பொருட்டு இச்சித்துக் கொண்டிருக்கிறார்கள்.

பகவானான கிருஷ்ணசுவாமியானவர் அர்ச்சுனனைநோக்கிச் சொல்வது—என்னுடைய எந்த ரூபத்தைப் பார்த்தாயோ, இப்படிப்பட்ட அந்த விசுவரூபமானது சுத்தமாய்க் காணக்கிடையாது. தேவதைகளுங்கூட எப்போது மிந்த ரூபத்தினுடைய தரிசனத்தின்பொருட்டு இச்சித்துக்கொண் டிருக்கிறார்கள். (ஆனால், காண்கிறதில்லை.) (௫௨)

---

௫௩. நாஹம்வேதைர்ந தபஸா ந தாநேந ந சேஜ்யயா।
ஶக்ய ஏவம்விதோ த்ரஷ்டும் த்ருஷ்டவாநஸி மாம்யதா॥ *

| | |
|---|---|
| மாம் | என்னை |
| யதா | எவ்விதமாய் |
| த்ருஷ்டவாந் அஸி | பார்த்தவனாயிருக்கிறாயோ |
| ஏவம்வித: | இந்தவிதமாய் |
| அஹம் | நான் |
| த்ரஷ்டும் | பார்க்கிறதற்கு |
| வேதை: | வேதங்களினாலே |
| ந ஶக்ய: | சாத்தியமானவனல்ல |
| தபஸா | தபசினாலே |
| ந | (சாத்தியமானவன்) அல்ல |
| தாநேந | தானத்தினாலே |
| ந | (சாத்தியமானவன்) அல்ல |
| இஜ்யயா | யக்ஞத்தினாலேயும் |
| ந ச | (சாத்தியமானவன்) அல்ல. |

என்னை (நீ) எவ்விதமாய்ப் பார்த்தவனா யிருக்கிறாயோ, இவ்விதமாய் நான் பார்க்கிறதற்கு வேதங்களினாலேயாவது, தபசினாலேயாவது, தானத்தினாலேயாவது, யக்ஞத்தினாலேயாவது, சாத்தியமானவனல்ல. (என்றால், இந்த விசுவரூபமானது தபசுமுதலியவை செய்வதினாலே காணக்கிடையாதென்பது கருத்து.

(௫௪) இந்த சுலோகத்துடன் அடுத்த சுலோகத்தையும் சேர்த்து அந்வயம்) வேதை: - என்றதினாலே வேதாத்தியயனம், பிரவசனம், அத்தியாபனம், சிரவணம், ஜபம் முதலியவைகளினாலேயும் ஹோமங்க

---

* இந்த சுலோகத்தை கூர்மபுராணம் உத்தரபாகம் ச - வது அத்தியாயத்தில் காண்க.

ளினலேயு மென்று கொள்ளவேண்டியது. பக்தியன்றி வேதாத்தியயனம் தபசு முதலியவைகளினல் சாத்தியமல்ல வென்பது கருத்து. "நாயமாத்மா ப்ரவசநேந லப்ய: — வ்ருணுதே தநூம் ஸ்வாம்" முதலிய சுருதிவாக்கியங்களைப் பார்க்க. (௫௩)

---

௫௪. பக்த்யா த்வநந்யயா ஶக்ய அஹமேவம்விதோऽர்ஜுந।
ஜ்ஞாதும் த்ரஷ்டும் ச தத்த்வேந ப்ரவேஷ்டும் ச பரந்தப॥

| | |
|---|---|
| ஹே அர்ஜுந | ஓ! அர்சுன! |
| ஹே பரந்தப | ஓ! சத்துருக்களைத்தபிப்பிக்கிறவனே! |
| ஏவம்வித: | இந்தவிசுவரூபியான |
| அஹம் | நான் |
| அநந்யயா* | என்னிடத்திலேயேவைக்கப்பட்ட |
| பக்த்யா | பக்தியினலேயே |
| தத்த்வேந | எதார்த்தமாக |
| ஜ்ஞாதும் | அறிகிறதற்கும் |
| த்ரஷ்டும் | பார்க்கிறதற்கும் |
| ப்ரவேஷ்டும்† | என்னுடைய சுவரூபத்தை யடைகிறதற்கும் |
| ஶக்ய: | தகுந்தவனயிருக்கிறேன். |

ஓ! அர்சுன! ஓ! சத்துருக்களைத் தபிப்பிக்கிறவனே! இந்த விசுவரூபியான என்னிடத்தில் வைக்கப்பட்ட பக்தியினலேயே எதார்த்தமாக அறிகிறதற்கும், பார்க்கிறதற்கும், என்னுடைய சுவரூபத்தை யடைகிறதற்கும் நான் தகுந்தவன யிருக்கிறேன்.

(ரா) இந்த சுலோகத்திலுள்ள "தத்த்வேந" என்கிற பதமானது அறிகிற, பார்க்கிற, அடைகிற, என்கிற பதங்களுக்கெல்லாம் விசேஷணமாகக் கொள்ளவேண்டியது. (௫௪)

---

௫௫. மத்கர்மக்ருந்மத்பரமோ மத்பக்த: ஸங்கவர்ஜித:।
நிர்வைர: ஸர்வபூதேஷு ய: ஸ மாமேதி பாண்டவ॥

---

* (ரா) சகல இந்திரியங்களுக்கும் வாசுதேவனைத் தவிர வேறே யாதொன்றும் விஷயமாகாததாயுள்ள அபேதமான. (ஶ்ரீ,வி) அநந்யஸாதாரண்யா = அந்நியர்களுக்கு சாதாரணமானதல்லாத. (ஸ்வா) இதின் ௯-வது அத்தியாயம் ௨௨-வது சுலோகம் பார்க்க.

† (ரா) மோக்ஷத்தை யடைகிறதற்கும், (ஶ்ரீ,வீ) சாயுஜ்ஜியமடைகிறதற்கும்,

| | |
|---|---|
| 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵 | ஓ! அர்ஜுனா! |
| 𑌮𑌤𑍍𑌕𑌰𑍍𑌮𑌕𑍃𑌤𑍍* | என்பொருட்டு கருமங்களைச்செய்கிறவனும் (என்னை உத்தேசித்துக் கருமங்களைச்செய்து பலனை எனக்கு அர்ப்பணம்செய்பவன்) |
| 𑌮𑌤𑍍𑌪𑌰𑌮𑌃† | என்னையே பரம புருஷார்த்தமென்று நம்பியிருக்கிறவனும் |
| 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑌃‡ | என்னிடத்திலேயே திருடமான பக்தியையுடையவனும் |
| 𑌸𑌂𑌗𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌃§ | சகலமான விஷயாபிமானங்களை விட்டவனும் |
| 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 | சகலப்பிராணிகளிடத்திலேயும் |
| 𑌨𑌿𑌰𑍍𑌵𑍈𑌰𑌃¶ | துவேஷமற்றவனும் |
| 𑌯𑌃 | எவனோ |
| 𑌸𑌃 | அவன் |
| 𑌮𑌾𑌂 | என்னை |
| 𑌏𑌤𑌿 | அடைகிறான். |

---

* (ரா) சகல கருமங்களையும் என்னுடைய ஆராதனரூபமாய்ச் செய்கிறவன்.

† (ரா) சகல காரியங்களுக்கும் என்னையே உத்தேசித்தவன். (ஸ்ரீ,வி) நானுத்தமனென்று எண்ணியிருக்கிறவன்.

‡ (மா) எல்லாவிதத்தினாலும் ஒரேநம்பிக்கையுடன் சந்தோஷத்தோடு எப்பவும் என்னைப் பூஜிக்கிறவன். (ரா) அதிகப் பிரீதியோடு என்னுடைய கீர்த்தனம், ஸ்துதி, தியானம், அர்ச்சனம், நமஸ்காரம், இவைகளை எப்போதும் செய்தாலன்றி தன்பிராணதாரண மில்லாதவன்.

§ (மா) தன்னுடைய புத்திர மித்திர களத்திர பந்து போகாதிகளில் பிரீதி சினேகங்களை விட்டவன். (ரா) என்னிடத்திலேயே அதிகப்பிரீதியுடையவனாய் வேறே விஷயங்களில் பிரவிருத்தியற்றவன். (ஸ்ரீ,வி) பலாபேக்ஷை யில்லாதவன்.

¶ (மா) தனக்கு விரோதியானவனிடத்திலுங்கூட துவேஷமில்லாதவன். (ரா) என்னைச் சார்ந்திருக்கிறது 'சுகம், என்னை விட்டிருக்கிறது' துக்கம் என்றும், தனக்குதுக்கம் நேரிட்டாலது தன்னுடைய அபராதத்தினா லுண்டானதென்றும், சகலப்பிராணிகளும் ஈசுவராதீனமென்றும், எப்போதும் அனுசந்தானத்துட னிருப்பதினாலே பிராணிகளிடத்தில் துவேஷத்திற்குக் காரணமில்லை; ஆகையால், துவேஷமற்றவன்.

ஓ! அர்சுனா! என்பொருட்டு கருமங்களைச் செய்கிறவனும், என்னையே பரமபுருஷார்த்தமென்று நம்பியிருக்கிறவனும், என்னிடத்திலேயே திருடமான பக்தியுடையவனும், சகலமான விஷயாபிமானங்களை விட்டவனும், சகலப் பிராணிகளிடத்திலேயும் துவேஷமற்றவனும் எவனோ, அவன் என்னை யடைகிறான். (௫௫)

𑍐 𑌤𑌤𑍍𑌸𑌦𑌿𑌤𑌿 𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌭𑌗𑌵𑌦𑍍𑌗𑍀𑌤𑌾𑌸𑍂𑌪𑌨𑌿𑌷𑌤𑍍𑌸𑍁 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌯𑌾𑌂

𑌯𑍋𑌗𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇 𑌶𑍍𑌰𑍀𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌰𑍍𑌜𑍁𑌨𑌸𑌂𑌵𑌾𑌦𑍇

𑌵𑌿𑌶𑍍𑌵𑌰𑍂𑌪𑌦𑌰𑍍𑌶𑌨𑌯𑍋𑌗𑍋 𑌨𑌾𑌮

𑌏𑌕𑌾𑌦𑌶𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃.

𑌶𑍍𑌰𑍀𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌯 𑌪𑌰𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍇 𑌨𑌮𑌃.

விசுவரூபஸந்தரிசனயோகமென்கிற

பதினோராவது அத்தியாயம்

முற்றிற்று.

---

𑌶𑍍𑌰𑍀𑌰𑌸𑍍𑌤𑍁.

𑌅𑌥 𑌦𑍍𑌵𑌾𑌦𑌶𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑌪𑍍𑌰𑌾𑌰𑌮𑍍𑌭𑌃.

# பன்னிரண்டாவது அத்தியாயம்.

---

𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚.

௧. 𑌏𑌵𑌂𑌸𑌤𑌤𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌯𑍇 𑌭𑌕𑍍𑌤𑌾𑌸𑍍𑌤𑍍𑌵𑌾𑌂𑌪𑌰𑍍𑌯𑍁𑌪𑌾𑌸𑌤𑍇।
𑌯𑍇𑌚𑌾𑌪𑍍𑌯𑌕𑍍𑌷𑌰𑌮𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌂 𑌤𑍇𑌷𑌾𑌂𑌕𑍇𑌯𑍋𑌗𑌵𑌿𑌤𑍍𑌤𑌮𑌾𑌃॥

| | |
|---|---|
| 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨𑌉𑌵𑌾𑌚 | அர்சுனன்சொல்வது |
| 𑌏𑌵𑌂 | இந்தப்படிக்கு |
| 𑌸𑌤𑌤𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌃 | எப்போது மும்மிடத்தில்மனதையுடைய |
| 𑌯𑍇𑌭𑌕𑍍𑌤𑌾𑌃 | எந்தபக்தர்கள் |
| 𑌤𑍍𑌵𑌾𑌂 | உம்மை |
| 𑌪𑌰𑍍𑌯𑍁𑌪𑌾𑌸𑌤𑍇 | உபாசிக்கிறார்களோ |
| 𑌯𑍇𑌚𑌾𑌪𑌿 | எவர்கள் |
| 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌂 | காணப்படாமலிருக்கிற |
| 𑌅𑌕𑍍𑌷𑌰𑌂 | நாசமற்றபிரம்மத்தை |
| (𑌪𑌰𑍍𑌯𑍁𑌪𑌾𑌸𑌤𑍇) | தியானஞ் செய்கிறார்களோ |
| 𑌤𑍇𑌷𑌾𑌂 | அவர்களுக்குள்ளே |
| 𑌕𑍇 | யார் |
| 𑌯𑍋𑌗𑌵𑌿𑌤𑍍𑌤𑌮𑌾𑌃 | யோகத்தையறிந்தவர்களில் சிரேஷ்டர்கள். |

அர்சுனன் சொல்வது—இப்படி யெப்போதும் உம்மிடத்தில் மனதையுடைய யாதொரு பக்தர்கள் உம்மை உபாசிக்கிறார்களோ, எவர்கள் காணப்படாமலிருக்கிற நாசமற்ற பிரம்மத்தைத் தியானஞ் செய்கிறார்களோ, அவர்களுக்குள்ளே யார் யோகத்தை யறிந்தவர்களில் சிரேஷ்டர்கள்,

(ஸ்ரீ) "𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑌃" (அத் - ௧௧, சு - ௫௫.) "𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌪𑍍𑌰𑌤𑌿𑌜𑌾𑌨𑍀𑌹𑌿" (அத் - ௯, சு - ௩௧.) இவைகளினால் பக்தி நிஷ்டையுடன்கூடியவன் சிரேஷ்டனென்றும், அப்படியே "𑌤𑍇𑌷𑌾𑌂𑌜𑍍𑌞𑌾𑌨𑍀𑌨𑌿𑌤𑍍𑌯𑌯𑍁𑌕𑍍𑌤𑌃" (அத் - ௭, சு - ௧௭.) "𑌸𑌰𑍍𑌵𑌂𑌜𑍍𑌞𑌾𑌨𑌪𑍍𑌲𑌵𑍇𑌨𑍈𑌵" (அத் - ௪, சு - ௩௬.) இவைகளினால் ஞானநிஷ்டன் சிரேஷ்டனென்றும் சொல்லப்பட்டது. இந்த இருவகை நிஷ்டாளும் சிரேஷ்டர்களானாலும், சகுணஉபாசகாள் நிர்குண உபாசகாள் இவர்களுக்குள்ளே யார் சிரேஷ்டரென்பது அர்சுனனுடைய கேள்வி. அதெப்படி என்றால்; 𑌸𑌤𑌤𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌃 = சத்கருமங்

களைச்செய்து பலாபேக்ஷையன்றி ஈசுவரார்ப்பணஞ்செய்கிற யாதொரு பக்தர்கள், த்வாம் — விசுவரூபியாயும் சர்வக்ஞராயும் சர்வசக்தியுள்ளவராயு மிருக்கிற சகுணப் பிரம்மமாகிய உம்மை, பர்யுபாஸதே — உபாசிக்கிறார்களோ, யே சாபி — எவர்கள், அவ்யக்தம் — அப்பிரத்தியக்ஷமான, அக்ஷரம் — நிர்குணப்பிரம்மத்தை, பர்யுபாஸதே — உபாசிக்கிறார்களோ, தேஷாம் — அவர்களில், கே — யார், யோகவித்தமா: — அதிகமாய் யோகத்தை யறிந்தவர்கள். (அவர்களில் சிரேஷ்டாள் யார் என்பது கருத்து.)

(௰) இரண்டாவது அத்தியாயம் முதல் விபூதி அத்தியாயம் வரையில் பரமாத்மாவாயும், நாசமற்றவராயும், மாயையைக் கடந்தவராயு மிருக்கிற நிர்விசேஷமான நிர்குணப் பிரம்மத்தினுடைய உபாசனையைப்பற்றிச் சொல்லப்பட்டது. சர்வைசுவரிய சர்வக்ஞான சர்வசக்தி முதலியவைகளுள்ள சர்வேசுவரனாகிய உம்முடைய உபாசனையும் மேற்கண்ட அத்தியாயங்களில் சிற்சிலவிடங்களில் சொல்லப்பட்டது. விசுவரூப அத்தியாயத்தில் சகல ஐசுவரியங்களையுடைய சமஸ்த ஜகத் சுவரூபமானவும் ஆதியிலுள்ளவுமான விசுவரூபமானது உபாசனையின் பொருட்டாகவே உம்மா லெனக்குக் காண்பிவிக்கப்பட்டது. அப்படிக் காண்பிவிக்கப்பட் டிருக்கையிலும், மத்கர்மக்ருத் - முதலியதைச் சொல்லியிருக்கிறீர்; ஆகையால், இப்போது மேற்சொன்ன சகுண நிர்குண உபாசனை இரண்டில் சிரேஷ்ட மெதென்பதை அறியவேண்டு மென்கிற இச்சையுடன் அர்சுனன் கேட்கிறான். அதெப்படி யென்றால் - ஸததயுக்தா: — இடைவிடாமல் பகவத் விஷயமான கருமங்களைச் செய்துவருகிற, யே பக்தா: — பகவானையே சரணமாக அடைந்த எவர்கள், த்வாம் — நீர் காண்பிவித்த விசுவரூபத்தை, பர்யுபாஸதே — தியானிக்கிறார்களோ, யே சாபி — எவர்கள் சகலத்திலும் அபிமானத்தை விட்டும், சகல கருமங்களை விட்டும், அவ்யக்தம் — காணப்படாமலும், அக்ஷரம் — நிர்குணமாயு மிருக்கிற பிரம்மத்தை, பர்யுபாஸதே — தியானிக்கிறார்களோ, இந்த இருவரில் அதிகமாய் யோகத்தை யறிந்தவர்கள் யார்?

(௱) பக்தியினால் பகவானை பஜிக்கிறவர்களா லடையத் தகுந்த பரபிரம்மமாகிய நாராயணனுடைய விசுவரூபத்தைப் பார்க்கவேண்டு மென்று பிரார்த்தித்த அர்சுனனுக்கு பகவானான கிருஷ்ணசுவாமி தன்னுடைய விசுவரூபத்தைக் காண்பிவித்தார். இந்த ஞானமும், தரிசனமும், பக்தியினாலேயே அடையத்தகுந்ததே யன்றி வேறொன்றினாலல்ல வென்பதையும் சொல்லியாய்விட்டது. இப்போது ஆத்மப் பிராப்திக்குச் சாதனமான ஆத்மோபாசனையைக் காட்டிலும் பக்திரூபமான பகவத் உபாசனையானது அந்த ஆத்மப் பிராப்தியை சீக்கிரமாயும்

சுகமாயு முண்டுபண்ணுகிற படியினுலே, பகவத் உபாசனைக்கு சிரேஷ்டத்துவமும், அதற்கு உபாயமும், அதில் அசக்தனுனவனுக்கு அக்ஷர உபாசனையும், அதற்கு வேண்டிய சாதனங்களும், சொல்லப்படுகின்றன. ஏனென்றுல், அடையவேண்டிய ஸ்தானத்தைக் காட்டிலும் உபாசனையே சிரேஷ்டமானதினுல்தான். யோகிநாமபி ஸர்வேஷாம் மத்கதேநாந்தராத்மநா । ஶ்ரத்தாவாந் பஜதே யோ மாம் ஸ மே யுக்ததமோ மத: ॥ (அத்-௬, ௬-௪௭.) என்ற விடத்தில் இந்த சிரேஷ்டத்துவம் சொல்லப் பட்டிருக்கிறது. (ஆகையால் இந்தசுலோகத்தின் அர்த்தமென்னவென்றுல்,) ஏவம்=ஸததயுக்தா: (அத்-௧௧, ௬-௫௫) என்கிறவிடத்தில் சொல்லியிருக்கிறபடிக்கு, ஸததயுக்தா:=பகவானுகிய உம்மையே அடையத் தகுந்த சிரேஷ்டமான ஸ்தானமென்று எண்ணியிருக்கிற, யே பக்தா:= எந்தபக்தர்கள், த்வாம் = அளவிடக்கூடாதவும், சிலாக்கியமானவும், சௌந்தரியம், சத்குணம், சர்வக்ஞத்துவம், சத்திய சங்கல்பம், இவை முதலிய குணசாகரமானவுமான உம்மை, பர்யுபாஸதே=பூர்ணமாயுபாசிக்கிறுர்களோ, யே சாபி = எந்த பக்தர்கள், அவ்யக்தம்=கண் முதலியவைகளுக்குக் காணப்படாத சுவரூபமாகிய, அக்ஷரம் = பிரத்தியகாத்ம சுவரூபத்தை (ஜீவசுவரூபத்தை), பர்யுபாஸதே = உபாசிக்கிறுர்களோ, தேஷாம் = அந்த இருவரில், கே யோகவித்தமா:=தாமிச் சித்ததைச் சீக்கிரமாக அடையத் தகுந்தவர்கள் யார்?

(உ) இந்த சுலோகத்தின் முதல் பாகமானது பரமாத்மாவான நாராயணனைப் பற்றியதென்றும், பிந்தியபாகமானது ஸ்ரீதேவியான இலக்ஷ்மியைப் பற்றியதென்றும், அறியத்தக்கது. எவர்கள் த்வாம்= பிரம்மமாகிய உம்மை உபாசிக்கிறுர்களோ, எவர்கள் (அவ்யக்தம்-அக்ஷரம்) அவ்வியக்தம் அக்ஷர மென்று சொல்லப்படுகிற இலக்ஷ்மியை உபாசிக்கிறுர்களோ, இவர்களில் சிரேஷ்டாள் யாரென்பது அர்சுனன் கேள்வி. அவ்வியக்தம் அக்ஷரம் என்றபதங்கள் இலக்ஷ்மியைக் குறித்தனவென்று எப்படிச் சொல்லலாமெனில் “ இந்த்ரியேப்ய: பரா ஹ்யர்தா அர்தேப்யஶ்ச பரம் மந: । மநஸஸ்து பரா புத்திர் புத்தேராத்மா மஹாந்பர: ॥ மஹத: பரமவ்யக்தம் அவ்யக்தாத் புருஷ: பர: । புருஷாந்ந பரம் கிஞ்சித் ஸா காஷ்டா ஸா பரா கதி: = இந்திரியங்களிலும் பொருள் சிறந்தது. பொருளிலும் சிறந்தது மனம். மனதில்சிறந்தது புத்தி. புத்தியில் சிறந்தவர் சதுர்முகப் பிரம்மா. சதுர்முகப்பிரம்மாவிலும் சிறந்தது அவ்வியக்தம் (இலக்ஷ்மி). அவ்வியக்தத்திலும் சிறந்தவன் புருஷன் (நாராயணன்). புருஷனில் சிறந்தது ஒன்றுமில்லை. இதுதான் கடைசியும் சிறந்ததும்”. இந்த (கடோபநிஷத் - ௩ - வது வல்லி, ௧௦ - ௧௧ - வாக்கியங்கள்) சுருதியினுல் அவ்வியக்தமென்பது இலக்ஷ்மி என்று சொல்

லப்பட்டிருக்கிறபடியால், அப்படிச் சொல்லக்கூடும். இலக்ஷுமியை உபாசிக்கிறதினால் மோக்ஷமடையலாமா வென்றாலோ, கடோபநிஷத்தில் "நிவாய்யதம் ஊதர்வோ வுருவுதெ" இருக்வேதத்தில் "ஸ்ரீயம்வஸாநா அம்ருதத்வமாயந்" ஸாமவேதத்தில் ஆக்கினிவேசிய சாகையில் "உபாஸ்யதாம்" இவை முதலிய வாக்கியங்களினால் அவ்வியக்த உபாசனை மோக்ஷத்திற்குக் காரணமென்று சொல்லப்பட் டிருப்பதால், இலக்ஷுமி உபாசனையினால் மோக்ஷமடையலாம். மேலும், இருக்வேதத்தில், "வதக்ஷவதா - வதஸ்ரீவம்ஸா-அஹம்ராஜெஜாஹ்ம்-யம்காமயெ - அஹம்ராஜாய" முதலிய பாகங்களினாலும், இலக்ஷுமிக்கு சகல தேவதைகளைக் காட்டிலும் உத்தமத்துவமும், மகிமையும் சொல்லப்பட்டிருப்பதாலும், யஜுர்வேதம் "அம்பவஸியபாரே" என்கிற உபநிஷத்தில் "ஸ்யாஜஷ ஜேஷிஹவதிஜெவி" இந்த வாக்கியத்தினாலும் இலக்ஷுமிக்கு மகிமை சொல்லப்பட் டிருக்கிறதினாலும், இலக்ஷுமியுபாசனை மோக்ஷகாரணமே. "அக்ஷராத்ஙாதபரஃ"—பரதஃ=மற்ற தேவதைகளைக் காட்டிலும் உத்தமமான, அக்ஷராத்=இலக்ஷுமியைக் காட்டிலும், பரஃ = நாராயணன் சிரேஷ்டனென்று சொல்லப்பட்டிருப்பதால் அக்ஷரமென்பதும் இலக்ஷுமியே. (க)

---

ஸ்ரீ ஹமவாநுவாவ.

உ. மய்யாவெஶ்ய மநொயெமாம் நித்யயுக்தா உபாஸதெ।
ஶ்ரத்தயாபரயொபெதா ஸ்தெமெயுக்ததமா மதாஃ॥

| | |
|---|---|
| ஸ்ரீ ஹமவாநுவாவ | ஸ்ரீ கிருஷ்ணசுவாமிசொல்வது |
| மயி | பரமேசுவரனாகியஎன்னிடத்தில் |
| மநஃ | மனசை |
| ஆவெஶ்ய | நிறுத்தி |
| நித்யயுக்தாஃ* | சகல கருமங்களையும் என்பொருட்டாகச் செய்து பலனை யெனக் கர்ப்பணம் செய்கிறவர்களும் |
| பரயா ஶ்ரத்தயா உபெதாஃ | சிரேஷ்டமான சிரத்தையுடன் கூடினவர்களுமான |

---

* (ஸம) ததஃஅஃ (அத் - கக, சு - ருரு,) என்கிற சுலோகத்தில் சொல்லிய விதமாய் என்னிடத்தில் எப்போதும் நிஷ்டையுடையவனாய். (ரா) எப்போதும் என்னிடத்திலிருக்கவேண்டுமென்கிற அபிப்பிராயமுடையவனாய். (மீ,வி) கருமயோகத் தியானயோகங்களுடன் கூடினவனாய்.

| | |
|---|---|
| யே | எவர்கள் |
| மாம் | பரமேசுவரனாகிய என்னை |
| உபாஸதே | உபாசிக்கிறார்களோ |
| தே | அவர்கள் |
| யுக்ததமா:* | சிரேஷ்டாளென்று |
| மே | எனக்கு |
| மதா: | சம்மதமானவர்கள். |

ஸ்ரீ கிருஷ்ணபகவான் சொல்வது—பரமேசுவரனாகிய என்னிடத்தில் மனசை நிறுத்தி சகல கருமங்களையும் என்பொருட்டாகச் செய்து பலனை யெனக்கர்ப்பணம் செய்தும், சிரேஷ்டமான சிரத்தையுடன் கூடியும், எவர்கள் பரமேசுவரனாகிய என்னை உபாசிக்கிறார்களோ, அவர்கள் சிரேஷ்டாளென்று எனக்குச் சம்மதமானவர்கள். (அவர்கள் சிரேஷ்டர்களென்று என்னுடைய நிச்சயமென்பது கருத்து.) (௨)

---

௩. யே த்வக்ஷரமநிர்தேஶ்யமவ்யக்தம் பர்யுபாஸதே।
ஸர்வத்ரகமசிந்த்யம் ச கூடஸ்தமசலம் த்ருவம்॥

௪. ஸந்நியம்யேந்த்ரியக்ராமம் ஸர்வத்ர ஸமபுத்தய:।
தே ப்ராப்நுவந்தி மாமேவ ஸர்வபூதஹிதே ரதா:॥

| | |
|---|---|
| இந்த்ரியக்ராமம் | இந்திரியங்களுடையகூட்டத்தை |
| ஸந்நியம்ய | செவ்வையாயடக்கி |
| ஸர்வத்ர | சகலத்திலேயும் |
| ஸமபுத்தய:† | சமபுத்தியையுடைத்தாயிருக்கிறவும் |
| ஸர்வபூதஹிதே ரதா: | சகலப்பிராணிகளுக்கும் நன்மை (ஹிதம்) யைக் கோருகிறவுமான |
| யே து | எவர்கள் |
| அநிர்தேஶ்யம் | வாக்குக்கெட்டாதவும் |
| அவ்யக்தம் | கண்களால்காணக்கூடாதவும் |

---

* (ஶம்) எப்போது மென்னிடத்தில் மனசைவைத்தும், இராப்பகலிடைவிடாம லென்னைத் தியானித்தும், இவ்விதமாகவே எப்போதும் காலத்தைச்செலவழிக்கிறபடியால் சிரேஷ்டாள். (ரா) சுகமாயும் சீக்கிரமாயும் என்னை யடையத்தக்கவர்கள். (ஸ்ரீ,வி) மோக்ஷ உபாயந் தெரிந்தவர்களில் சிரேஷ்டமானவர்கள்.

† (ஶம்) இஷ்டாநிஷ்டங்களில் சந்தோஷமும் விசனமுமில்லாமல் சமமாயிருப்பவர்கள்.

| | |
|---|---|
| அசிந்த்யம் | மனதினால்நினைக்கக்கூடாதவும் |
| கூடஸ்தம் | மாயாப்பிரபஞ்சத்திற்காதாரமானவும் |
| அசலம் | அசைவற்றவும் |
| த்ருவம் | சாசுவதமானவும் |
| ஸர்வத்ரகம் | சகலத்திலும்வியாபித்திருக்கிறவுமான |
| அக்ஷரம் | நிர்குணபிரம்மத்தை |
| பர்யுபாஸதே | உபாசிக்கிறார்களோ |
| தே | அவர்கள் |
| மாமேவ | என்னையே |
| ப்ராப்நுவந்தி | அடைகிறார்கள். |

இந்திரியங்களுடைய கூட்டத்தைச் செவ்வையா யடக்கி சகலத்திலேயும் சமபுத்தியை யுடைத்தா யிருக்கிறவும், சகலப்பிராணிகளுக்கும் நன்மையைக் கோருகிறவுமான எவர்கள் வாக்குக்கெட்டாதவும், கண்களால் காணக்கூடாதவும், மனதினால் நினைக்கத்தகாதவும், மாயாப் பிரபஞ்சத்திற் காதாரமானவும், அசைவு அல்லது விருத்திக்ஷயமற்றவும், சாசுவதமானவும், சகலத்திலும் வியாபித்திருக்கிறவுமான நிர்குண பிரம்மத்தை யுபாசிக்கிறார்களோ, அவர்கள் என்னையே யடைகிறார்கள்.

(ரா) (௩-௪-௫-சுலோகங்களுக்கு ஒரே அன்வயம்) யே து = எவர்கள், அக்ஷரம் = பிரத்தியகாத்ம (பிரகிருதி விமுக்த ஜீவாத்ம) சுவரூபத்தை, அநிர்தேஶ்யம் = தேகத்தைவிட அந்நியமானதால் தேவாதி சப்தங்களினாலே சொல்லக்கூடாதது, ஆகையினாலே, அவ்யக்தம் = கண்முதலிய காரணங்களினால் காணக்கூடாதது, ஸர்வத்ரகமசிந்த்யம் = தேவாதிதேகங்களி லிருந்தாலும், அந்த தேகாதிகளுக்கு விஜாதியமான படியினாலே அந்ததேவாதி ரூபங்களினால் சிந்திக்கக் கூடாதது, அதினால், கூடஸ்தம் = சர்வசாதாரணம், அப்படி யிருந்தாலும் தேவாதி தேகங்களுக்கு சம்பந்தப்படாம லிருக்கிறது, அசலம் = மாறாதசுவபாவமுடைய தாகையால், தன்னுடைய அசாதாரணமான ஆகாரத்திலிருந்து மாறுதலடையாதது, ஆகையினாலே, த்ருவம் = நித்தியமானது என்று ஸந்நியம்யேந்த்ரியக்ராமம் = கண்முதலிய இந்திரியங்களை யவைகளின் வியாபாரத்திலிருந்து அடக்கி, ஸர்வத்ர ஸமபுத்தய: = தேவாதி விஷமாகாரங்களான தேகாதிகளிலிருக்கிற ஆத்மாவை ஞானகாரத்தினால் சமமென்று அறிகிறவர்களாயும், ஆகையினாலே, ஸர்வபூதஹிதே ரதா: = சகலபூதங்களுக்கும் தேகாபிமானத்தால் அஹிதஞ்செய்யாம லிருப்பவர்களாயும், பர்யுபாஸதே = உபாசிக்கிறார்களோ, தேऽபி =

அவர்களும், ஊாஜ்ரூபவஂதெரு்வ = எனக்கு சமானமான ஆகாரத்தை யுடையதாகிய அசம்சாரியான ஆத்மசுவரூபத்தை யடைகிறார்கள். “ஊஊஸாயூஜி-ஆாமதாஃ” என்று இனி சொலலப்போகிறபடியாலும் “நிரஂஜநஃவராஊஂ ஸாஜ்ரூவெதி” என்று சுருதியில் சொல்லியிருக்கிறபடியாலும் “ஊாஂ” என்பதற்கு எனக்கு சமானமான ஆகாரமென்று அர்த்தஞ் செய்யப்பட்டது. அப்படியே “கூடஸ்லாக்ஷா உ்யதெ” - “உதஜஃவ-ா-ஷஸூநஃ” என்பவைகளில் அக்ஷரசப்தத்தினலே சொல்லப்படுகிற கூடஸ்தனைக்காட்டிலும் பரபிரம்மம் வேறேயென்று ஏற்படுகிறது. “அமவராயயா தஉக்ஷாஊயிமஜ)தெ” என்கிற உபநிஷத்தில் ஜகத்காரணமாகச் சொல்லப்படுவதா லவ்விடத்தில் அக்ஷரசப்தமானது பரபிரம்மத்தையே சொல்லுகிறது. தெஷாஊவு)கூஸகவெதஸாஂ ஜெ ஜ்ஷ-அயிக்தாஃ = அவ்வியக்தத்தி லாசையுடைய மனதுள்ளவர்களுக்குப் பிரயாசை யதிகம். ஏனென்றால், அவு)ாஹிமதிஃ = அவ்வியக்த விஷயமான மனோவிருத்தியானது, ஜெஹவ்ஃ = தேகமே யாத்மாவென்கிற அபிமான முடையவர்களாலே, ஊஃவெஊாவு)தெ = ஊஃவெஙவாவு)தெ = துக்கத்தினலே யடையப்படுகிறது.

(ஃ) (மேலாக அந்வயத்தில் குறிக்கப்பட்டிருக்கிறபடி) அநிஜெ-ஶ்ஃ முதல், அக்ஷாஂ வரையிலுள்ள எட்டுபதங்களும் ஸ்ரீவாசகமே அதாவது இலக்ஷ்மியைக் குறித்தவைகளே. அடியில்கண்ட சுருதி வாக்கியத்தைப் பார்க்க. “அஜாஊக்ஷாஊநிஜெ-ஶ்ஃ, ஸஷாஹெ்வக்ூகிஃ, ஸவஶ்மா அவிஜ்ூா அவு)தூ ஸவஶ்தூமா நிதூாகூடஸூா ஶா ஸூதா ஜெஷாவூகூகிஃ”॥

(ஸ்ரீ,வி) (ங-ச-சுலோகங்களுக்கு மட்டும்,) அவ்வியக்த (இலக்ஷ்மி) உபாசனையைவிட என்னுடைய உபாசனை சிரேஷ்டமென்று சொல்லப்பட்டது. அவ்வியக்த உபாசனைக்கு மோக்ஷம் கிடைக்காவிட்டால், ஸ்ரீயுபாசனை மோக்ஷத்திற்குக் காரணமென்று சொல்லுகிற “ஶ்ரீயஂவஸா நா அஜூதகுஊாயநு” முதலிய சுருதிகளுக்கு விரோதமாகிறது. ஸ்ரீயுபாசனைக்கு மோக்ஷமுண்டென்றால், என்னை உபாசிப்பவர்கள் சிரேஷ்டர்களென்று சொல்லவேண்டியதென்ன? என்றலோ, அவ்வியக்த உபாசனைக்கும் மோக்ஷம் கிடைக்குமானலும் அது அதிக கஷ்டத்தின லடையத்தகுந்தது. என்னுடைய உபாசனையினல் மோக்ஷமடைவது சுலபமானது. ஆகையால், என்னுடைய உபாசனை சிலாக்கியமானதென்று அறி என்பதாக ஐந்து சுலோகங்களினல் சொல்லப்படுகிறது.

யெத-=எவர்கள், அக்ஷாஂ = நாசமற்ற, அநிஜெ-ஶ்ஃ = சூக்ஷ்மமானதால் காணப்படாத, அவு)க்தஂ = பிரசித்த மில்லாததினலேயும்

ஜகத்திற்கு உபாதானகாரணமான பிரகிருதிக்கு அபிமானியானபடியி னுலேயும், அவ்வியக்தமென்று சொல்லப்படுகிற, ஸர்வத்ரகம் — சகல தேசங்களிலும் வியாபித்திருக்கிற, அசிந்த்யம் — அநேக குணங்களுடன் கூடியதானதால் சிந்திக்கக்கூடாத, கூடஸ்தம் — அவ்வியாகிருத ஆகா சத்தில் அபிமானியாயிருக்கிற, அசலம் — தன்னுடைய ஸ்தானத்திலிரு ந்து அசையாமலிருக்கிற, த்ருவம் — விகாரமில்லாமலிருக்கிற ஸ்ரீதத் துவத்தை (இலக்ஷ்மியை), ஸந்நியம்ய இந்த்ரியக்ராமம் — இந்திரியங்களை விஷயங்களிலிருந்து திருப்பி, ஸர்வத்ர ஸமபுத்தய: — நல்ல ஞானமுள்ளவர்களாயும் ஸர்வபூதஹிதே ரதா: — சகல பூதங்களுக்கும் ஹிதஞ்செய்ய திருஷ்டியுள்ளவர்களாயும், பர்யுபாஸதே — விஷ்ணு பக்தி விஷ்ணுசிரத்தை விஷ்ணு சர்வோத்தமத்துவஞானம் விஷ்ணு உபாசனை முதலியவைகளை முன்னிட்டுக்கொண்டு உபாசனை செய்கி றார்களோ, தே — அவர்கள், மாமேவ — என்னையே, ப்ராப்நுவந்தி — அடைகிறார்கள். (இதினால் விஷ்ணுவை முன்னிட்டுக்கொண்டு ஸ்ரீ யுபாசனை செய்கிறவர்களும் விஷ்ணுவை அடைகிறார்களென்பது கரு த்து.) (௩-௪)

---

௫. க்லேசோऽதிகதரஸ்தேஷாமவ்யக்தாஸக்தசேதஸாம்।
அவ்யக்தா ஹி கதிர்து:கம் தேஹவத்பிரவாப்யதே॥

| | |
|---|---|
| அவ்யக்தாஸக்தசேதஸாம் தேஷாம் | நிர்குணமான பிரம்மத்தினிடத்தில் மனோநிஷ்டையை யிச்சிப்பவர்களுக்கு |
| க்லேச: | பிரயாசம் |
| அதிகதர: | மிகவும் அதிகமானது |
| ஹி | ஏனென்றால் |
| அவ்யக்தா | நிர்குணவிஷயமான |
| கதி: | நிஷ்டையானது |
| தேஹவத்பி: | தேகாபிமானமுடையவர்களால் |
| து:கம் | கஷ்டத்தினால் |
| அவாப்யதே | அடையப்படுகிறது. |

நிர்குணப் பிரம்மத்தினிடத்தில் மனோநிஷ்டையை யிச்சிப்பவர் களுக்குப் பிரயாசை மிகவு மதிகமானது. ஏனென்றால், நிர்குண விஷய மான நிஷ்டையானது தேகாபிமான முடையவர்களா லடையப்படுவது கஷ்டம். (தேகாபிமானத்தை முற்றிலும் விடுவது அதிபிரயாசை யான

தினாலும் தேகாபிமானம் முற்றிலு மொழிந்தாலன்றி நிர்க்குணப் பிரம்மநிஷ்டை சாத்தியமல்ல வாகையாலும் அதிகபிரயாசை என்று சொல்லப்பட்டது.)

(ஶ்ரீ) சர்வேந்திரிய நிக்கிரகம், சர்வசமபுத்தி, சர்வபூதஹிதம், நல்ல ஆசாரம், திருடமான விஷ்ணுபக்தி, இவைமுதலிய சாதனங்களன்றி ஸ்ரீ பிரத்தியக்ஷமாகிறதில்லை யாகையால், ஸ்ரீயுபாசனை அதிபிரயாசை.

(ஸ்ரீ,வி) விஷ்ணு சம்பந்தமன்றியில், ஸ்ரீயைமட்டும் தனிமையில் உபாசனைசெய்து அதினால் விஷ்ணுவை யடைவது மிகவும் பிரயாசை; ஏனென்றால், இந்திரிய நிக்கிரகம், சமபுத்தி, சகல பூதஹிதம், ஆசாரம் முதலியவைகள் வேண்டுமானதினால்தான். (௫)

---

௬. 𑌯𑍇 𑌤𑍁 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌮𑌯𑌿 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌯 𑌮𑌤𑍍𑌪𑌰𑌾𑌃।
𑌅𑌨𑌨𑍍𑌯𑍇𑌨𑍈𑌵 𑌯𑍋𑌗𑍇𑌨 𑌮𑌾𑌂 𑌧𑍍𑌯𑌾𑌯𑌨𑍍𑌤 𑌉𑌪𑌾𑌸𑌤𑍇॥

௭. 𑌤𑍇𑌷𑌾𑌮𑌹𑌂 𑌸𑌮𑍁𑌦𑍍𑌧𑌰𑍍𑌤𑌾 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌸𑌂𑌸𑌾𑌰𑌸𑌾𑌗𑌰𑌾𑌤𑍍।
𑌭𑌵𑌾𑌮𑌿 𑌨𑌚𑌿𑌰𑌾𑌤𑍍𑌪𑌾𑌰𑍍𑌥 𑌮𑌯𑍍𑌯𑌾𑌵𑍇𑌶𑌿𑌤𑌚𑍇𑌤𑌸𑌾𑌮𑍍॥

| | |
|---|---|
| 𑌯𑍇 𑌤𑍁 | எவர்கள் |
| 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 * | சகலகருமங்களையும் |
| 𑌮𑌯𑌿 | என்னிடத்தில் |
| 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌯 | சமர்ப்பிவித்து |
| 𑌮𑌤𑍍𑌪𑌰𑌾𑌃 † | என்னைச்சரணமடைந்தவர்களாய் |
| 𑌅𑌨𑌨𑍍𑌯𑍇𑌨𑍈𑌵 𑌯𑍋𑌗𑍇𑌨 ‡ | ஒரேவிதமாயிருக்கிறபக்தியோகத்தினாலே |
| 𑌮𑌾𑌂 | என்னை |
| 𑌧𑍍𑌯𑌾𑌯𑌨𑍍𑌤𑌃 | தியானம்செய்கிறவர்களாய்க்கொண்டு |

---

* (ரா) இலௌகிக வைதிக கருமங்களை. அதாவது, தேகாதிகளை சம்ரக்ஷணை செய்யவேண்டியதற்கான ஆகாராதிகள் விஷயமான இலௌகிக கருமங்களையும், யாகம், தானம், ஹோமம், தபசு, ஜபம் முதலிய வைதிக கருமங்களையும், அவைகளுக்குக் காரணமானவும் அவைகளின் உத்தேசியங்களுடன் கூடிஉளவுமான மற்ற சகலகருமங்களையும்.

† (ஶ்ரீ) நானே உத்தமமானகதி என்று எண்ணினவர்களாய். (ரா) முக்தியமா யடையத்தகுந்தவன் நானென்கிற நிச்சயமுள்ளவர்களாய்.

‡ (ஶ்ரீ) விசுவரூபியாயிருக்கிற என்னைத்தவிர வேறொன்றையு மாசிரயிக்காமலிருக்கிற சமாதியினாலே. (ரா) என்னைத்தவிர வேறே பிரயோஜனமில்லாத பக்தியினாலே.

| | |
|---|---|
| 𑌉𑌪𑌾𑌸𑌤𑍇* | உபாசிக்கிறார்களோ |
| 𑌮𑌯𑌿 | என்னிடத்தில் |
| 𑌆𑌵𑍇𑌶𑌿𑌤𑌚𑍇𑌤𑌸𑌾𑌂† | வைக்கப்பட்டமனசையுடைத்தான |
| 𑌤𑍇𑌷𑌾𑌂 | அவர்களுடைய (அவர்களை) |
| 𑌪𑌾𑌰𑍍𑌥 | ஓ! அர்சுன! |
| 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌸𑌂𑌸𑌾𑌰𑌸𑌾𑌗𑌰𑌾𑌤𑍍 ‡ | மிருத்தியுவாகிறசமுசாரசாகரத்திலிருந்து |
| 𑌨𑌚𑌿𑌰𑌾𑌤𑍍 | சீக்கிரமாக |
| 𑌅𑌹𑌂 | நான் |
| 𑌸𑌮𑍁𑌦𑍍𑌧𑌰𑍍𑌤𑌾 | கரையேற்றுகிறவனாக |
| 𑌭𑌵𑌾𑌮𑌿 | ஆகிறேன். |

எவர்கள் சகல கருமங்களையும் என்னிடத்தில் சமர்ப்பிவித்து என்னைச் சரணமடைந்தவர்களா யொரேவிதமா யிருக்கிற பக்தியோகத்தினாலே என்னைத் தியானஞ்செய்துகொண்டு உபாசிக்கிறார்களோ, என்னிடத்தில் வைக்கப்பட்ட மனசை யுடைத்தான அவர்களை, ஓ! அர்சுன! மிருத்தியுவாகிற சமுசாரசாகரத்தி லிருந்து சீக்கிரமாக நான் கரையேற்றுகிறேன்.

(ஸ்ரீ,வி) பகவத் உபாசனையில் அவ்வளவு பிரயாசையில்லையென்பது சொல்லப்படுகிறது. 𑌯𑍇 𑌤𑍁 = எவர்கள், 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 = சகலகருமங்களையும், 𑌮𑌯𑌿 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌯 = "சர்வசுவதந்திரரான ஹரியே எனக்குள்ளிருந்து தன்னுடைய பூஜைமுதலிய கருமங்களைத் தன்னுடைய அதீனமான கர்த்தாவாகிய என்னாலே செய்விக்கிறார்" என்கிற அநுசந்தானத்துடன் என்னிடத்தில் சமர்ப்பிவித்து, 𑌮𑌤𑍍𑌪𑌰𑌾𑌃=நானே உத்தமனென்று தெரிந்தவர்களாய், 𑌅𑌨𑌨𑍍𑌯𑍇𑌨𑍈𑌵 𑌯𑍋𑌗𑍇𑌨 = பகவத் அதீனமென்றும், பகவத்பரிவாரமென்றும், இலக்ஷ்மி பிரம்மாதிகள் விஷயமானத்தியானயோகத்தினாலே, 𑌮𑌾𑌂 𑌧𑍍𑌯𑌾𑌯𑌨𑍍𑌤𑌃 = என்விஷயமானத் தியானத்தைச் செய்கிறவர்களாகவே, 𑌉𑌪𑌾𑌸𑌤𑍇 = உபாசிக்கிறார்களோ. அவ்வியக்த உபாசனை அதிபிரயாசை என்பதைக் காண்பிவிக்கும்பொருட்டு அந்தயிடத்தில் (முந்திய ௩ - ௪ சுலோகங்களில்)

* (ரா) தியானம், அர்ச்சனம், சிரவணம், கீர்த்தனம், ஸ்துதி, நமஸ்காராதிகளைச் செய்கிறார்கள்.

† (𑌶) ஏகாந்த பக்தியை யுடைத்தான.

‡ (𑌶𑌂) (ஸ்ரீ) மிருத்தியுவுடன் கூடியிருக்கிற சமுசாரமாகிய சமுத்திரத்திலிருந்து. (ரா) என்னை யடைகிறதற்கு விரோதமாயிருக்கிற சமுசாரமென்கிற சமுத்திரத்திலிருந்து.

வயர்யுபாஸதே என்கிறபதமும், பகவத்விஷயமான உபாசனை சுலப மென்பதைக் காண்பிவிக்கும் பொருட்டு இந்தவிடத்தில், உபாஸதே என்கிற பதமும் உபயோகிக்கப்பட்டிருக்கின்றன. பகவத் உபாசனைக்கு அவ்வியக்த உபாசனையைப்போல் இந்திரிய நிக்கிரகம் முதலியவை அவ் வளவு வேண்டியதில்லை. நசிராத் என்றதினுல் அவ்வியக்த உபாசனை யைவிடக் குறைந்த உபாசனை செய்தாலும், பகவத் பிரசாதம் சீக்கிரமா யுண்டாகிறது. இந்திரியநிக்கிரகம் ஆசாரம் முதலியவை குறைந்திருந்த போதிலும், என்பக்தர்களுக்கு நான் சுலபத்தையுண்டாக்கி சீக்கிர மாய் கிருதார்த்தர்களாகச் செய்கிறேன். ஆகையினுல் என்உபாசனை சிரேஷ்டம்.

அநந்யேநைவ - என்பதற்கு சித்பிரகிருதி (இலக்ஷ்மி) முத லிய பரிவார தேவதைகளைவிட்டு என்னைத் தியானஞ்செய்கிறதென்பது தாத்பரியமல்ல. இலக்ஷ்மி முதலிய பரிவாரதேவதைகளுடன் சேர்த் துத் தியானம் செய்யவேண்டுமென்பது கருத்து.

நசிராத் - என்பதற்கு என்னைத் தனிமையிலும் இலக்ஷ்மியைத் தனிமையிலும் உபாசித்தும் பிறகு இலக்ஷ்மிமுதலிய பரிவாரங்க ளுடன் என்னை உபாசித்தும் மோக்ஷமடைய வெகுகாலம் செல்லும். இலக்ஷ்மிமுதலிய பரிவாரங்களுடன் என்னை உபாசிக்கிறவர்கள் சீக்கிர மாக மோக்ஷமடைவார்களென்பது தாத்பரியம். (சு-எ)

---

அ. மய்யேவ மந ஆத்ஸ்வ மயி புத்திம் நிவேசய।
நிவஸிஷ்யஸி மய்யேவ அத ஊர்த்வம் நஸம்சய:॥

| | |
|---|---|
| மய்யேவ | என்னிடத்திலேயே |
| மந: | சங்கற்பவிகற்பமாயுள்ளமனசை |
| ஆத்ஸ்வ | ஸ்திரப்படுத்து |
| மயி புத்திம் * | என்னிடத்தில் நிச்சயாத்மகமான புத்தியை |
| நிவேசய | நிறுத்து |
| அத ஊர்த்வம் † | இதற்குமேல் |

* (ரா) பகவானுகிய நானே அடையத்தகுந்தவரென்கிற நிச்சயபுத்தியை (ஸ்ரீ,வி) என்விஷயமான ஞானத்தை, நிவேசய=சம்பாதி.

† (ஶம்) (ஸ்ரீ) இந்தச் சரீரம் போனபின். (ரா) (ஸ்ரீ,வி) அதின்பிறகு.

| | |
|---|---|
| மய்யேவ* | என்னிடத்திலேயே |
| நிவஸிஷ்யஸி† | வாசஞ்செய்வாய் |
| ந ஸம்ஶய: | சந்தேகமில்லை. |

என்னிடத்திலேயே மனதை ஸ்திரப்படுத்து. என்னிடத்தில் புத்தியை நிறுத்து. இதற்குமேல் என்னிடத்திலேயே வாசஞ்செய்வா யென்பதில் சந்தேகமில்லை. (௮)

---

௯. அத சித்தம் ஸமாதாதும் ந ஶக்நோஷி மயி ஸ்திரம்।
அப்யாஸயோகேந ததோ மாமிச்சாப்தும் தநஞ்ஜய॥

| | |
|---|---|
| ஹே தநஞ்ஜய | ஓ! அர்சுனா! |
| சித்தம் | மனதை |
| மயி | என்னிடத்தில் |
| ஸ்திரம் | நிலையாக |
| ஸமாதாதும் | நிறுத்துவதற்கு |
| ந ஶக்நோஷி அத‡ | சக்தியற்றவனானால் |
| தத: | பிறகு |
| அப்யாஸயோகேந§ | அப்பியாச யோகத்தினாலே |
| மாம் | என்னை |
| ஆப்தும் | அடைவதின் பொருட்டு |
| இச்ச | இச்சி. (பிரயத்தினஞ்செய்.) |

ஓ! அர்சுனா! மனதை யென்னிடத்தில் ஸ்திரமாய் நிறுத்துவதற்கு சக்தியற்றவனானால், பிறகு அப்பியாச யோகத்தினால் என்னை யடைவதின் பொருட்டு பிரயத்தினம்செய். (௯)

---

* (ஶம்) (ஸ்ரீ) என்னுடைய சுவரூபமாக விருப்பாய். (ம) என்னிடத்தில் நித்திய முக்தனாயிருப்பாய். (மீ,வி) நிர்துக்கமானதும் ஆநந்தானுபவ சுவரூப மானதுமாகிய இருப்பை அடைவாய்.

‡ (ரா) சீக்கிரம்.

§ (ஸ்ரீ) சலிக்கிறமனசைப் பின்னும் இழுத்து பகவானிடத்தில் நிறுத்தி நிறுத்திப் பழகுவது. (ரா) அதிக பிரீதியுடன் அடிக்கடி என்னை ஸ்மரிக்கிறதாகிய அப்பியாச யோகத்தினால். (ஷர்) இதின் அ-வது அத்தியாயம் அ-வது சுலோகம் பார்க்க.

௧௦. 𑌅𑌭𑍍𑌯𑌾𑌸𑍇𑌽𑌪𑍍𑌯𑌸𑌮𑌰𑍍𑌥𑍋𑌽𑌸𑌿 𑌮𑌤𑍍𑌕𑌰𑍍𑌮𑌪𑌰𑌮𑍋 𑌭𑌵।
𑌮𑌦𑌰𑍍𑌥𑌮𑌪𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌮𑌵𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑌸𑌿॥

| | |
|---|---|
| 𑌅𑌭𑍍𑌯𑌾𑌸𑍇𑌽𑌪𑌿 | அப்பியாசத்திலும் |
| 𑌅𑌸𑌮𑌰𑍍𑌥𑌃 𑌅𑌸𑌿 | அசமர்த்தனயிருப்பாயாகில் |
| 𑌮𑌤𑍍𑌕𑌰𑍍𑌮𑌪𑌰𑌮𑌃* | எனக்குப் பிரீதியையுண்டுபண்ணும் கருமங்களே உத்தமமென்று தெரிந்து அநுஷ்டிக்கிறவனாக |
| 𑌭𑌵 | ஆகக்கடவாய் |
| 𑌮𑌦𑌰𑍍𑌥𑌮𑌪𑌿 | என்னுடைய பிரீதிக்காகவே |
| 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 | கருமங்களை |
| 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍 | செய்கிற (நீ) |
| 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂† | மோக்ஷத்தை |
| 𑌅𑌵𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑌸𑌿 | அடைவாய். |

(முந்திச் சொன்னபடி மனதை யிழுத்து நிறுத்துவதாகிய) அப்பியாசத்திலும் அசமர்த்தன யிருப்பாயாகில், எனக்குப் பிரீதியையுண்டு பண்ணும் கருமங்களே உத்தமமென்று தெரிந்து அநுஷ்டிக்கிறவனாக ஆகக்கடவாய். என்னுடைய பிரீதிக்காகவே கருமங்களைச் செய்துவந்தால், மோக்ஷமடைவாய். (என்றால், சித்தசுத்தியும் பிறகு ஞானமு மடைந்து மோக்ஷமடைவாய் என்பது கருத்து. (௧௦)

---

௧௧. 𑌅𑌥𑍈𑌤𑌦𑌪𑍍𑌯𑌶𑌕𑍍𑌤𑍋𑌽𑌸𑌿 𑌕𑌰𑍍𑌤𑍁𑌂 𑌮𑌦𑍍𑌯𑍋𑌗𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌃।
𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌤𑍍𑌯𑌾𑌗𑌂 𑌤𑌤𑌃 𑌕𑍁𑌰𑍁 𑌯𑌤𑌾𑌤𑍍𑌮𑌵𑌾𑌨𑍍॥

| | |
|---|---|
| 𑌏𑌤𑌦𑌪𑌿 | இதையுங்கூட |
| 𑌕𑌰𑍍𑌤𑍁𑌂 | செய்கிறதற்கு |
| 𑌅𑌶𑌕𑍍𑌤𑌃 | சக்தியற்றவனாக |
| 𑌅𑌸𑌿 𑌅𑌥 | ஆவாயானால் |

* (ஸ்ரீ) ஏகாதசி உபவாசம், விரதானுஷ்டானம், நாமசங்கீர்த்தனம், முதலிய கருமங்களை உத்தமமாகத் தெரிந்து. (𑌶𑌂) எனக்காகச் செய்யவேண்டிய கருமங்களை முக்கியமாய் ஆசிரயிக்கிறவனாய். (ரா) 𑌮𑌤𑍍𑌕𑌰𑍍𑌮 = ஆலய நிர்மாணம், நந்தவனம்வைத்தல், அகண்டதீபம் வைத்தல், கோவில் பெருக்குதல் மெழுகுதல் தெளித்தல் கோலம் முதலியவைகளினால் அலங்கரித்தல், புஷ்பம் துளசி முதலியவை கொண்டுவந்து கொடுத்தல், பூஜை நடப்பித்தல், நாமசங்கீர்த்தனம், பிரதக்ஷிணம், நமஸ்காரம், ஸ்தோத்திரபாடம் முதலிய கருமங்கள்.

† (𑌶𑌂) அந்தக்கரண சுத்தியை. (ரா) என்னுடைய பிராப்தியை.

| | |
|---|---|
| ததஃ | அதற்குப்பிறகு |
| மத்யோகம் ஆச்ரிதஃ }* | என்னைச்சரணமடைந்தவனாய் |
| யதாத்மவாந் | நிச்சயமானமனதை யுடையவனாக |
| ஸர்வகர்மபலத்யாகம் | { சகலமான கருமங்களுடைய பலனை ஈசுவ ராப்பணஞ் செய்வதாகிய த்தியாக த்தை |
| குரு | செய். |

இதை (எனக்குப் பிரியமான கருமங்களை) யுங்கூட செய்கிறதற்குச் சக்தியற்றவனாக ஆவாயானால் அதற்குப்பிறகு என்னைச் சரணமாக வடைந்து நிச்சயமான மனதையுடையவனாய் சகல கருமங்களுடைய பலனை ஈசுவரார்ப்பணஞ் செய்வதாகிய த்தியாகத்தைச்செய்.

(ரா) மத்யோகமாச்ரிதஃ = என்னுடைய குணாநுசந்தானஞ் செய்துகொண்டு எனக்குப் பிரியமான பக்தியோகத்தை யாசிரயித்தவனாய், ஏதத்அபி = பக்தியோகத்திற்கு மூலையாயிருக்கிற இந்தக் கருமத்தையும், கர்த்தும் அசக்தோஸி = செய்ய அசக்தனானால், ததஃ = அதற்குப்பிறகு, யதாத்மவாந் = மனதை யடக்கினவனாய், ஸர்வகர்மபலத்யாகம் = ஆத்மசுவரூபானுசந்தான ரூபமாயும், பரம பக்தியை யுண்டுபண்ணுகிறதாயும், இதின் முதல் ஆறு அத்தியாயங்களில் சொல்லப்பட்டதாயு மிருக்கிற அக்ஷரயோகத்தை யாசிரயித்து, அதற்குபாயமான சகல கருமங்களின் பலன்களைத் தியாகஞ்செய். நானே மிகப்பிரியமான வஸ்து, நான் ஒருவனே முக்கியமா யடையத்தக்கவன் என்கிற புத்தியானது சகலபாபமும் நசித்துப்போயிருக்கிறவனுக் குண்டாகிறது. ஆகையினாலே, பலாபேக்ஷையன்றியில் என்னுடைய ஆராதனை ரூபமாயிருக்கிற கருமத்தினா லுண்டாகும் தன்னுடைய ஆத்மத்தியானத்தினாலே பிரத்தியகாத்தும சுவரூபசாக்ஷாத்காரமாகிறது. அதாவது, என்னுடைய சேஷபூதமான பிரகிருதி விமுக்தாத்ம சுவரூபத்தை அடைகிறான். அப்படி அடைந்தால் என்னிடத்தில் சிரேஷ்டமான பக்தி தானாகவே யுண்டாகிறது; இந்த அர்த்தத்தை அடியில்கண்ட சுலோகங்களில் காண்க.

"ஸர்வபூதேஷு சாத்மானம் ஸர்வபூதானி சாத்மனி" "விமுக்தஸ்ய ப்ரஸாதஃ" "ஸமஸ்ஸர்வேஷு பூதேஷு மத்பக்திம் லபதே பராம்॥" (இதின் ௧௮-வது அத்தியாயம், ௪௬ - ௫௩ - ௫௪ - சுலோகங்களைப்பார்க்க).

---

* (ரா) செய்யும் சகலகருமங்களையும் என்னிடத்தில் சமர்ப்பித்துச் செய்வது "மத்யோகம்" அதை ஆசிரயித்தவனாய்.

(ஸ்ரீ,வி) ஸர்வகர்மாணி = சகல ஜபம் ஆசமனம் முதலிய விஷ்ணு சம்பந்தமான கருமங்களை, கர்தும் அசக்தோஸி = செய்ய சக்தியற்றவனானல், தத: = அதற்குப்பிறகு, மத்யோகமாச்ரித: = அந்நியதேவதைகளைக்குறித்துக் கருமங்களைச் செய்து அதையெனக்கு அர்ப்பணஞ் செய்வதாகிய யோகத்தை ஆசிரயித்து, யதாத்மவாந் = மனதையடக்கி, ஸர்வகர்மபலத்யாகம் = சகல கருமபலன்களின் தியாகத்தை, குரு = செய். எவ்விதமாயாவது என்னை உபாசிக்க வேண்டுமென்பது தாத்பரியம்.

(ஸா) இந்தச் சுலோகார்த்தமானது சர்வசாதாரணமாய் சகலரும் அனுஷ்டிக்க யோக்கியமாகவும், சுலபமாகவு மிருக்கிறது மல்லாமல் அதிசீக்கிரமாய் மோக்ஷபலனை அடைய மார்க்கமாயு மிருக்கிறது. எப்படி என்றால், சகலகருமத்தையும் விட்டு மனதை வேறிடத்தில் செல்லவிடாமல் பரமாத்மா விடத்திலேயே நிறுத்தி ஸ்திரமான யோகத்திலிருக்கிறவனை சமுசாரத்திலிருந்து நிவர்த்திசெய்வதாக இந்த அத்தியாயம் ௬ - எ - சுலோகங்களினுலும், அந்த ஸ்திரமான யோகமானது மனது புத்தி இவைகளை பகவானிடத்தில் நிறுத்துவதினுலே அடையப்படுகிற தென்பது, அ - வது சுலோகத்தினுலும், அப்படி மனது புத்திகளை நிறுத்துவது மிகவும் பிரயாசையானதே, அதெப்படி சாத்தியமாகும்? என்றால் அப்பியாசத்தினுல் சாத்தியமாகுமென்பது, கூ - வது சுலோகத்தினுலும், அப்படி மனது புத்திகளை நிறுத்த சக்தியில்லாவிட்டால், என்விஷயமான கருமங்களையே முக்கியமாகச் செய்யவேண்டுமென்று, ௧0 - வது சுலோகத்தினுலும் சொல்லி, இப்படிப்பட்ட கருமங்களையுங்கூட செய்ய அசக்தனுனல், அவனும் கடைத்தேறவேண்டுமென்கிற பச்சாத்தாபத்துடன் கிருபாளுவான பகவான் இந்தச் சுலோகத்தினுல் மார்க்கம் கற்பிவிக்கிறார். இந்தமார்க்கத்தை யநுசரித்தவன் பகவத் கிருபையினுல் அதிசீக்கிரத்தில் சித்தசுத்தியும் பிறகு ஞானமும் அடைந்து கடைசியில் மோக்ஷமடைவான். இதையுங்கூட அனுஷ்டிக்காமல் வீணுய்க் காலங்கழிப்பானுகில், அப்படிப்பட்டவன் கணக்கற்ற ஜன்மங்களாகிய சமுசாரத்திலிருந்து நிவிருத்தியடையமாட்டான். இந்தமார்க்கம் சுலபமானதென எப்படி சொல்லக்கூடும்? இந்திரிய நிக்கிரகத்தைவிட மனோநிக்கிரகம் அதிகஷ்டமானது. அப்படிப்பட்ட மனோநிக்கிரகம் இதில் சொல்லப்படுகிறதே என்றாலோ, இவ்விடத்தில் சொல்லியிருக்கிற மனோநிக்கிரகமானது, ௬ - எ - அ - சுலோகங்களில் சொல்லியிருக்கிற அசஞ்சலமான மனோநிக்கிரகமல்ல. மனத்திருப்தியே. அதாவது, வீண்விஷயங்களில் மனதை விடாமலும் துராசை பேராசை முதலியவைகளை விட்டும், தனக்குக் கிடைத்தவரையில்கூடிய மட்டும் திருப்தி யடைவதுதான். இப்படிப்பட்ட மனதுடையவனுய்,

மத்யோகமாஶ்ரித: = என்விஷயமான யோகத்தை ஆசிரயித்து, என்றால், ஆஸ்திகபுத்தியோடு கூடினவனாய், ஸர்வகர்மபலத்யாகம் = தான் ஒவ்வொரு நிமிஷமும், செய்யும் வைதிகலௌகிகங்களான சகல சத்கருமங்களையும் தன்னுடைய அல்லது தன்னைச்சார்ந்தவர்களுடைய பிரயோஜனோத்தேசமாய்ச் செயயாமல் ஈசுவரார்ப்பணம் செய்வதுதான். எப்படிஎன்றால், சமயல் செய்யப்படு மிந்த அன்னம் பகவன் நிவேதனத்திற்கு; இந்த வியாபாரத்தில் கிடைத்த திரவியம் பகவத் ஆராதனார்த்தமாக ஆகக்கடவது; நான் கேட்கும் இந்த சங்கீதம் பகவத் பிரீதியாகட்டும்; என்பவைபோல. இதுதான் இவ்விடத்தில் சொல்லிய சகலகருமபலத்தியாகம். சகல கருமமென்றதினால் துஷ்கருமம் கூடசெய்யலாமென்றாகிறதே என்றாலோ, அது சரியல்ல. ஏனென்றால், துஷ்கருமங்கள் செய்யாம லிருக்கும் பொருட்டுத் தான் நிச்சயமான மனதுடையவனென்று இதில் பிரயோகிக்கப்பட் டிருக்கிறது. இந்தத்தியாகம் உத்தமமென்று அடுத்த சுலோகத்தினால் புகழப்பட்டதே யன்றி "ஏதாந்யபி து கர்மாணி ஸங்கம் த்யக்த்வா பலாநி ச" (அத் - கஅ, சு-சு,) "த்யாகீ ஸத்வஸமாவிஷ்ட: மேதாவீ சி²ந்நஸம்ஶய:" (அத் - கஅ, சு - க0,) இதுமுதலிய இடங்களில் சொல்லப்பட்ட ஞானநிஷ்டன் விஷயமான உத்தமத்தியாகமாகமாட்டாது. ஏனெனில் அசக்தன் விஷயமானதினால் தான். (கக)

---

கஉ. ஶ்ரேயோ ஹி ஜ்ஞாநமப்⁴யாஸாஜ் ஜ்ஞாநாத்³த்⁴யாநம் விஶிஷ்யதே।
த்⁴யாநாத்கர்மப²லத்யாக³ஸ்த்யாகா³ச்சா²ந்திரநந்தரம்॥

| | |
|---|---|
| அப்⁴யாஸாத் | உப்பியாசத்தைக் காட்டிலும் |
| ஜ்ஞாநம் | ஞானமானது |
| ஶ்ரேயோ ஹி | சிரேஷ்டமா யிருக்கிறது |
| ஜ்ஞாநாத் | ஞானத்தைப் பார்க்கிலும் |
| த்⁴யாநம் | தியானமானது |
| விஶிஷ்யதே | விசேஷமானதா யிருக்கிறது |
| த்⁴யாநாத் | தியானத்தைப்பார்க்கிலும் |
| கர்மப²லத்யாக³: | கருமபலத்தை ஈசுவரார்ப்பணஞ் செய்வது |
| (ஶ்ரேஷ்ட²:) | சிரேஷ்டமா யிருக்கிறது |
| த்யாகா³த் | கருமபலத்தை ஈசுவரார்ப்பணஞ் செய்வதினாலே |
| அநந்தரம் | சீக்கிரமாக |
| ஶாந்தி: | பந்தநிவிருத்தி (உண்டாகும்). |

மனசைப் பின்னும் பின்னும் நிறுத்துவதாகிய அப்பியாசத்தைக் காட்டிலும் ஞானமும், ஞானத்தைப் பார்க்கிலும் தியானமும், தியானத்தைப் பார்க்கிலும் கருமபலத் தியாகமும் சிரேஷ்டம். கருமபலத் தியாகத்தினாலே சீக்கிரமாக பந்தநிவிருத்தி யுண்டாகும்.

(ஸ்ரீ) ஞானமில்லாமல் செய்கிற அப்பியாசத்தைக் காட்டிலும் குருவினால் தகுந்த முகாந்திரங்களுடன் போதிக்கப்பட்ட ஞானம் சிரேஷ்டமானது. இந்த விதமான ஞானத்தைக்காட்டிலும் இந்த ஞானத்துடன் கூடியத் தியானஞ் சிரேஷ்டமானது. அந்தத் தியானத்தைக்காட்டிலும் முந்திய சுலோகத்தில் சொல்லப்பட்டிருக்கிற கருமபலத்தியாகம் சிலாக்கியமானது என்பது தாத்பரியம்.

(ஸம்) அவிவேகத்துடன் செய்யும் அப்பியாசத்தைக் காட்டிலும் ஞானம் சிரேஷ்டம். ஞானத்தைக் காட்டிலும் ஞானத்துடன் சேர்ந்தத் தியானம் சிரேஷ்டம். ஞானமுள்ளவனுக்கு அவ்விதத் தியானத்தைக் காட்டிலும் கருமபலத் தியாகம் சிரேஷ்டம். இவ்வித விசேஷங்களுடன் கருமபலத் தியாகஞ்செய்துவந்தால், உடனே சமுசார பந்தத்திலிருந்து (ஜனனமரண துக்கத்திலிருந்து) நிவிருத்தி யடைவான். இப்படி அனுஷ்டிக்க சக்தியற்ற அக்கியானிக்குச் சகல கருமபலத் தியாகமானது மோக்ஷ சாதனமென்று சொல்லப்பட்டது. தியாகமே முதன்மையானதல்ல. ஆகையினாலே, ஒன்றுக்கொன்று விசேஷமாகச்சொல்லிக் கடைசியாய்த் தியாகமானது ஸ்துதிக்கப்பட்டது. மேல்கண்ட விதமான சாதனத்தை யநுஷ்டிக்க சக்தியில்லாவிட்டால், கருமபலத் தியாகத்தை யநுஷ்டிக்க வேண்டியது. "யதாஸர்வே ப்ரமுச்யந்தே"- என்கிற சுருதியிலே சர்வகாமத்தையும் விட்டுவிடுவதினாலே மோக்ஷமடையலாமென்று சொல்லப்பட்டிருக்கிறது. காமங்கள் கருமபலமென்பதும், அதைவிட்ட ஞானநிஷ்டனுக்கு உடனே சாந்தியாகிய சமுசார நிவிருத்தி யுண்டாகிற தென்பதும் லோகப் பிரசித்தம். அக்கியானியினுடைய கருமபலத்தியாகத்தைக் காமத் தியாகத்திற்குச் சமானமாய்ச் சொன்னதை, அவனுக்கு அதில் ருசியுண்டாகும் பொருட்டு ஸ்துதிக்கப்பட்டதாக கிரகிக்கத்தக்கது. ஜீவேசுவர பேதத்தை யனுசரித்து விசுவரூபமுடைய ஈசுவரனிடத்தில் மனசை நிறுத்துகிற யோகமும், ஈசுவரன் பொருட்டு கருமானுஷ்டானம் முதலியவையும் சொல்லப்பட்டன. அசக்த னென்கிற வாக்கிய மிவ்விடத்தி லுபயோகிக்கப்பட்டிருப்பதினாலே, அபேதபாவனையுள்ள அக்ஷரோபாசகனை ஞானிவிஷயமாக கருமயோக முபயோகமாக மாட்டாது. அப்படியே கருமயோகி விஷயமாக அக்ஷரோபாசனை உபயோகமாக மாட்டாது என்பதை பகவான் காண்பிவிக்கிறார்.

அக்ஷரோபாசகர்களுக்குக்கைவல்லியப் பிராப்தி சுவதந்திரமா யிருக்கிறதென்பது "தெஷாநவஞிஊெவ" என்கிற வாக்கியத்தி னுலேயும், ஈசுவராதீனுளாயும், பரதந்திராளாயுமுள்ள மற்றவர்கள் விஷ யத்தில் அவர்களை நானே கரையேற்றுகிறே னென்பது "தெஷாஊஹம் ஸஊஜதத்ா" என்கிற வாக்கியத்தினுலேயும் பகவானுல் குறிப்பிடப்பட் டிருக்கிறது. அக்ஷரோபாசகாளான அபேத தரிசன முள்ளவர்கள் அக்ஷர சுவரூபமே. அவர்கள் விஷயத்தில் உத்தரிக்கிறே னென்பது பொருந்தாது. ஆகையால், பேததிருஷ்டி யுள்ளவர்கள் விஷயத்தில்தான் உத்தரிக்கிறே னென்பது உபயோக மாகவேண்டும். அர்சுனனிடத்தில் அதிகப் பிரேமையுள்ள பகவான் ஆத்மதரிசனமாகிற ஞானசம்பந்த மில்லாத பேததிருஷ்டியுள்ள கருமயோகத்தையே உபதேசம் செய் தார். ஈசுவரனே தானென்கிற ஞானமுடைய ஒருவன், மற்றொருவ னுக்கு பேதஞானத்தை யுபதேசிக்கிறது விரோதமல்லவா? என்றுலோ, அக்ஷரோபாஸகர்களாயும், ஆத்மதரிசன ஞானமுள்ளவர்களாயும், சர்வ சங்கபரித்தியாகஞ்செய்த சந்நியாசிகளாயும், ஈஷணுத்திரயங்க ளற்றவர் ளாயு மிருக்கிறவர்கள் விஷயத்திற்கு "அஹெஷாவஷூஹுதாநாம" என்கிறது முதலிய தர்மங்கள் சொல்லப்படுகின்றன. (என்றுல், அர் சுனன் அப்படிப்பட்ட ஞானியாகவில்லை யாகையால், அவனுக்கு பேத ஞானுபதேசமே தகுந்ததென்று பகவான் எண்ணினதாக தாத் பரியம்.)

(௱) பிரீதியற்ற அப்பியாசத்தைக் காட்டிலும் அக்ஷர (பிரகிரு தி விமுக்தாத்ம) சுவரூப நிச்சய அநுசந்தான பூர்வகமான திடப் படாத அக்ஷர அபரோக்ஷஞானம் சிரேஷ்டமானது. இந்த ஞானத் தைக்காட்டிலும் இந்த ஞானத்திற்குக் காரணமான திடப்படாத ஆத் மத்தியானம் சிரேஷ்டம். அந்தத் தியானத்தைக்காட்டிலும் ஈசுவ ரார்ப்பணமாகச்செய்யும் கருமபலத்தியாகம் சிரேஷ்டமானது. கரும பலத் தியாகத்தைச் சிரேஷ்டமாகச் சொன்ன காரணமென்னவென் றுல், பிரீதியற்ற அப்பியாசயோகம், திடப்படாத அக்ஷர அபரோக்ஷ ஞானம், திடப்படாத ஆத்மத்தியானம், இவைகள் அசக்தர்களின் பொ ருட்டு சொல்லப்பட்டபடியால், அவர்கள் பலாபேக்ஷையன்றி பகவ தர்ப்பணமாக கருமம் செய்வது சிரேஷ்டமே; அது மோக்ஷத்திற் காதிகாரணமா யிருக்கிறது. எப்படி என்றுல், கருமபலத் தியாகத்தினுல் பாபநிவிருத்தியாகும்; பாபநிவிருத்தியானுல் மனது சமாதானத்தை யடையும்; மனது சமாதானமடைந்தால் ஆத்மத்தியானம் திடப்படும். ஆத்மத்தியானம் திடப்பட்டால், ஆத்ம அபரோக்ஷஞான முண்டாகும்; அபரோக்ஷஞான முண்டானுல் திடபக்தி யுண்டாகும்; திடபக்தியினுல்

மோக்ஷமுண்டாகும்; என்பது தாத்பரியமேயன்றி கருமபலத்தியாகமே மோக்ஷமடைவிக்கு மென்பதால். அது மோக்ஷத்திற்கு ஆதிகாரணமென்பது கருத்து.

(8) கேவலம் ஞானமில்லாமல் செய்யும் அப்பியாசத்தைவிட அப்பியாச சகிதமான ஞானம் சிரேஷ்டம்; அதைவிட ஞானத்தோடு கூடினத் தியானம் சிரேஷ்டம்; தியானத்தைவிட அபரோக்ஷ ஞானம் சிரேஷ்டம்; இந்த அபரோக்ஷ ஞானத்தினால் தான் மோக்ஷ மடையலாம். இவைகளுக்கெல்லா மாதிகாரணமானதும் நிஷ்காம கருமஞ்செய்து ஈசுவரார்ப்பணம் செய்வதுமாகிய தியாகமே மோக்ஷசாதன மென்று ஸ்துதியாகச் சொல்லப்பட்டது. "𑌶𑍍𑌰𑍇𑌯𑍋𑌹𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌭𑍍𑌯𑌾𑌸𑌾𑌤𑍍" என்ற சுலோகத்திலும், இதற்கு அடுத்த முந்திய விரண்டு சுலோகங்களிலும் அசக்தன் விஷயமாகச் சொல்லப்பட்டது. ஏனென்றால், கருமபலத்தியாகமே மோக்ஷசாதனமென்றால், முந்திய கீதாவாக்கியங்களுக்கு விரோதமாகிறது ஆகையால், அசக்தனுக்கு சுலபத்தையும் விசுவாசத்தையும் உண்டாக்கும்பொருட்டு கருமபலத் தியாகம் மோக்ஷத்தை யுண்டாக்குவதாகச் சொல்லப்பட்டதென்று கிரகிக்கத்தக்கது. (இந்த அர்த்தத்தை (ஸ்ரீ,வி) யும் ஆதரிக்கிறார்.) (கஉ)

---

கங. 𑌅𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌟𑌾𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌮𑍈𑌤𑍍𑌰𑌃𑌕𑌰𑍁𑌣𑌏𑌵𑌚।
𑌨𑌿𑌰𑍍𑌮𑌮𑍋𑌨𑌿𑌰𑌹𑌂𑌕𑌾𑌰 𑌸𑌮𑌦𑍁𑌃𑌖𑌸𑍁𑌖𑌃𑌕𑍍𑌷𑌮𑍀॥*

கச. 𑌸𑌨𑍍𑌤𑍁𑌷𑍍𑌟𑌸𑌤𑌤𑌂𑌯𑍋𑌗𑍀 𑌯𑌤𑌾𑌤𑍍𑌮𑌾𑌦𑍃𑌢𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑌃।
𑌮𑌯𑍍𑌯𑌰𑍍𑌪𑌿𑌤𑌮𑌨𑍋𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌯𑍋 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑌸𑌮𑍇𑌪𑍍𑌰𑌿𑌯𑌃॥

| | |
|---|---|
| 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 | சகலப்பிராணிகளுக்கும் |
| 𑌅𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌟𑌾† | துவேஷஞ் செய்யாதவனும் |
| 𑌮𑍈𑌤𑍍𑌰𑌃‡ | மித்திரனும் |

---

* இந்த கங-கச-கரு-கசு-கஎ. சுலோகங்களை கூர்மபுராணம் உத்திரபாகம் கக - அத்தியாயத்தில் காண்க.

† (ஶம்) தனக்கு துக்கமுண்டாக்கினவனானாலும், அவனிடத்தில் துவேஷமில்லாதவன்; ஏனென்றால், சகலபூதங்களையும் தன் ஆத்மாவாகப் பார்க்கிறான்; ஆகையால் துவேஷிக்கக் காரணமேயில்லை. (ஸ்ரீ) உத்தமனிடத்தில் துவேஷமற்றவனாய். (ரா) உபகாரி, அபகாரி, துவேஷி இவர்களிடத்தில் துவேஷமற்றவன்; ஏனென்றால், தன்னுடைய கருமசாரமாய் பகவானால் ஏவப்பட்டவர்களாய்க் கொண்டு உபகாரம் அபகாரம் துவேஷம் செய்தவர்களேயன்றி அவர்களிடத்தில் அபராத மில்லையென்று அறிவதினால் துவேஷம் செய்கிறதில்லை. (ஸ்ரீ,வி) ஒருவருக்கும் அப்பிரியம் செய்யாதவன்.

‡ (ஸ்ரீ) தனக்கு சமானமானவர்களிடத்தில் பிரீதியுள்ளவன். (ரா) மேற்கண்ட காரணங்களால் எல்லாரிடத்திலும் பிரீதிசெய்கிறவன். (ஸ்ரீ,வி) ஒருவனுக்கு வரும் ஆபத்தைக்குறிப்பிட்டுச்சொல்லி, அந்த ஆபத்திலிருந்து அவனைரக்ஷிப்பவன்.

| | |
|---|---|
| கருண ஏவ ச* | கருணையுள்ளவனும் |
| நிர்மமோ† | மமதையில்லாதவனும் |
| நிரஹங்கார:‡ | அகங்காரமில்லாதவனும் |
| ஸமது:க்கஸுக:§ | சுகதுக்கங்களை சமமாயெண்ணினவனும் |
| க்ஷமீ¶ | பொறுமையுள்ளவனும் |
| ஸததம் | எப்போதும் |
| ஸந்துஷ்ட:‖ | சந்தோஷமுள்ளவனும் |
| யோகீ÷ | தியானஞ்செய்பவனும் |
| யதாத்மா+ | அடங்கின சுவபாவ முடையவனும். |

* (ஸ்ரீ) தாழ்ந்தவர்களிடத்தில் கருணையுள்ளவனும். (ரா) மேற் கண்டவர்களிலாராவது துக்கப்படும்போது தயவுபாராட்டுகிறவன். (மீ,வி) எப்பவும் எல்லாரிடத்திலும் தயவுடையவன்.

† (ரா) தேகேந்திரியங்களிலும், தேகசம்பந்தமாகிய புத்திரமித்திரகளத்திராதிகளிலும், தன்னுடையது தன்னுடையவர்களென்கிற மமதையற்றவன். (மீ,வி) தன்னுடையதென்கிற சுவதந்திர புத்தியற்றவன்.

‡ (ரா) தேகமேதான் என்கிற அபிமானமற்றவன். (மீ,வி) தன்னிடத்திலில்லாத குணங்கள் தன்னிடத்திலிருப்பதாக எண்ணி அக்ஞானமடையாதவன்.

§ (ஸ்ரீ) மற்றவர்களுடைய சுகதுக்கங்களைத் தன்னுடையதுபோல் எண்ணுகிறவன். (ரா) (மூ) சுகத்தில் சந்தோஷமும் துக்கத்தில் வெறுப்பு மில்லாதவன் (மீ,வி) விஷய சம்பந்த சுகமானது எவனுக்கு துக்கத்திற்குச் சமானமோ, அவன் (ஸ்வா) இதின் கசு-வது அத்தியாயம். உசு-வது சுலோகம் பார்க்க.

¶ (மூ) தன்னைத் துன்பம் செய்தாலுங்கூட விகாரமடையாதவன். (ரா) விஷய சம்பந்தங்களால் அநிஷ்டம்வந்தாலும் அப்போது மனோவிகார மில்லாதவன்.

‖ (ஸ்ரீ) கிடைத்தால் சந்தோஷமும் கிடைக்காவிட்டால் துக்கமுமின்றி திருப்தியாயிருக்கிறவன். (மூ) தேக தாரணைக்காகக் கிடைத்தது அற்ப மானாலும் அதுவே போதுமென்கிற திருப்தியும், கிடைத்தது நல்லதானாலும் கெட்டதானாலும் இதாவது கிடைத்ததே யென்கிற சந்தோஷமு முடையவன். (ரா) முயற்சி யன்றி தேகதாரணைக்காக எது எவ்வளவு கிடைக்குமோ, அவ்வளவில் திருப்தியுள்ளவன். (மீ,வி) திருப்தியுள்ளவன்.

÷ (மூ) சித்த சமாதானமுள்ளவன். (ஸ்ரீ) க்ஷேமோத்ஸாஹதவருதவன். (ரா) பிரகிருதியைக் காட்டிலும் அந்நியமாகிய தன்னுடைய சுவரூபாநு சந்தானத்தி லிருக்கிறவன். (மீ,வி) கருமம், தியானம், இவைகளாகிய ஞான உபாயமுள்ளவன்.

+ (ரா) (மீ,வி) மனதை விஷயங்களில் பிரவிருத்திக்க விடாமல் தன் சுவாதீனத்தில் வைத்திருக்கிறவன்.

| | |
|---|---|
| 𑌦𑍃𑌢𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑌃* | திருடமான என்னுடைய சுவரூப நிச்சய முடையவனும் |
| 𑌮𑌯𑌿 𑌅𑌰𑍍𑌪𑌿𑌤𑌮𑌨𑍋𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 † | மனசு புத்தி இவைகளை என்னிடத்தில் அர்ப்பித்தவனுயு மிருக்கிற |
| 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑌃‡ | என்னுடைய பக்தன் |
| 𑌯𑌃 | எவனோ |
| 𑌸𑌃 | அவன் |
| 𑌮𑍇 | எனக்கு |
| 𑌪𑍍𑌰𑌿𑌯𑌃 | பிரியமானவன். |

சகலப் பிராணிகளுக்கும் துவேஷஞ் செய்யாதவனையும், மித்திரனையும், கருணையுள்ளவனையும், அகங்கார மமகாரமற்றவனையும், சுகதுக்கங்களைச் சமமா யெண்ணுகிறவனையும், பொறுமை யுள்ளவனையும், எப்போதும் சந்தோஷமுள்ளவனையும், தியானஞ்செய்பவனையும், மனதை யடக்கும் சுவபாவமுள்ளவனையும், திருடமான என்னுடைய சுவரூப நிச்சயமுடையவனையும், மனது புத்தி இவைகளை யென்னிடத்தி லர்ப்பித்தவனுயு மிருக்கிற என்னுடைய பக்தன் எவனோ, அவன் எனக்குப் பிரியமானவன். (௧௩, ௧௪)

௧௫. 𑌯𑌸𑍍𑌮𑌾𑌨𑍍𑌨𑍋𑌦𑍍𑌵𑌿𑌜𑌤𑍇 𑌲𑍋𑌕𑍋 𑌲𑍋𑌕𑌾𑌨𑍍𑌨𑍋𑌦𑍍𑌵𑌿𑌜𑌤𑍇 𑌚 𑌯𑌃।
𑌹𑌰𑍍𑌷𑌾𑌮𑌰𑍍𑌷𑌭𑌯𑍋𑌦𑍍𑌵𑍇𑌗𑍈𑌰𑍍𑌮𑍁𑌕𑍍𑌤𑍋 𑌯𑌃 𑌸 𑌚 𑌮𑍇 𑌪𑍍𑌰𑌿𑌯𑌃॥

| | |
|---|---|
| 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍§ | எவனிடத்திலிருந்து |
| 𑌲𑍋𑌕𑌃 | ஜனம் (ஜனங்கள்) |
| 𑌨𑍋𑌦𑍍𑌵𑌿𑌜𑌤𑍇¶ | பயமடைகிறதில்லையோ |

* (ஶா) ஆத்மதத்துவ நிச்சயத்தி லுறுதியுள்ளவன். (ரா) வேதாந்த சாஸ்திரார்த்தங்களில் திருடமுடையவனும் அதின்படி நடக்கிறவன். (ஸ்ரீ,வி) அப்பிரமாணமென்கிற சந்தேகமில்லாத தத்துவநிச்சய முடையவன்.

† (ரா) பலாபேக்ஷையன்றி என்னு லநுஷ்டிக்கப்பட்ட கருமங்களால் ஆராதிக்கப்பட்ட பகவானுகிய வாசுதேவன் என்னுடைய ஆத்மதரிசனத்தை யுண்டாக்குவார் என்கிற மனோநிச்சயம் புத்தி இவைகளை யுடையவன்.

‡ (ரா) கருமயோகத்தினு லென்னை யாராதிக்கிறவனுகிய பக்தன்.

§ (ஶா) எந்த சந்நியாசியிடத்திலிருந்து. (ரா) எந்த கருமநிஷ்டன் நிமித்தமாய். என்றால், ஒருவனுக்கு பயத்தை யுண்டாக்கப்பட்ட கருமத்தைச் செய்யாதவன் நிமித்தியமாய் என்பது தாத்பரியம்.

¶ (ஶா) பயம்வருமென்கிற திகிலடைகிறதில்லை.

| | |
|---|---|
| 𑌲𑍋𑌕𑌾𑌤𑍍* | ஜனங்களிடத்திலிருந்து |
| 𑌯𑌃† | எவன் |
| 𑌨𑍋𑌦𑍍𑌵𑌿𑌜𑌤𑍇 𑌚‡ | பயமடைகிறதில்லையோ |
| 𑌹𑌰𑍍𑌷𑌾𑌮𑌰𑍍𑌷𑌭𑌯𑍋-𑌦𑍍𑌵𑍇𑌗𑍈𑌃 § | சந்தோஷம், கோபம், பயம், மனக்கலக்கம் இவைகளால் |
| 𑌯𑌃 | எவன் |
| 𑌮𑍁𑌕𑍍𑌤𑌃 | விடப்பட்டவனோ |
| 𑌸𑌚 | அவனும் |
| 𑌮𑍇 | எனக்கு |
| 𑌪𑍍𑌰𑌿𑌯𑌃 | பிரியன். |

எவனிடத்திலிருந்து ஜனங்கள் பயமடைகிறதில்லையோ, ஜனங்களிடத்திலிருந்தும் எவன் பயமடைகிறதில்லையோ, சந்தோஷம், கோபம், பயம், மனக்கலக்கம், இவைகளிலிருந்து எவன் விடப்பட்டவனோ, அவனுமெனக்குப் பிரியன்.

---

௧௬. 𑌅𑌨𑌪𑍇𑌕𑍍𑌷𑌃 𑌶𑍁𑌚𑌿𑌰𑍍𑌦𑌕𑍍𑌷 𑌉𑌦𑌾𑌸𑍀𑌨𑍋 𑌗𑌤𑌵𑍍𑌯𑌥𑌃।
𑌸𑌰𑍍𑌵𑌾𑌰𑌮𑍍𑌭𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌾𑌗𑍀 𑌯𑍋 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑌃 𑌸 𑌮𑍇 𑌪𑍍𑌰𑌿𑌯𑌃॥

| | |
|---|---|
| 𑌅𑌨𑌪𑍇𑌕𑍍𑌷𑌃¶ | அபேக்ஷையற்றவனும் |
| 𑌶𑍁𑌚𑌿𑌃‖ | சுத்தமுள்ளவனும் |

---

* - † - ‡ (ரா) ஒருவனுக்கு மிவன் விரோதியல்லவாகையால், ஒருவராலும் இவன் பயமடையக் காரணமில்லை என்பது தாத்பரியம்.

§ 𑌹𑌰𑍍𑌷𑌃 (𑌶𑌂) இஷ்டப்பிராப்தியினு லுண்டாகும் மயிர்கூர்ச்சம் ஆநந்தபாஷ்பம் முதலியவைகளினு லறியத்தக்க மனவிகாசம். (ஸ்ரீ) உற்சாகம். (மீ,வி) மதத்தினுல் அதருமத்தில் பிரவேசிக்கிறது. 𑌅𑌮𑌰𑍍𑌷𑌃 (ஸ்ரீ) பொறுமை. (மீ,வி) உரோஷம். 𑌉𑌦𑍍𑌵𑍇𑌗𑌃 (ஸ்ரீ) பயம் முதலியவைகளாலுண்டாகும் மனக்கலக்கம். (மீ,வி) மனநடுக்கம். (ரா) இவன் ஒருவனுக்கு விரோதியல்லவாகையால், ஒருவனைக்குறித்து சந்தோஷம், ஒருவனைக்குறித்து பொறுமை, ஒருவனைக்குறித்து பயம், ஒருவனைக் குறித்து மனக்கலக்கம் இவைகளால்.

¶ (ஸ்ரீ) தன் பிரயத்தினமன்றி கிடைத்த வஸ்துக்களிலுங்கூட அபேக்ஷையில்லாதவன். (𑌶𑌂) தேகேந்திரியாதி விஷயங்களில் ஆஸக்தி யற்றவன். (ரா) ஆத்மாவைத் தவிர மற்ற வஸ்துக்களில் விருப்பற்றவன். (மீ,வி) பகவத் பிரீதியை அடையவேண்டுமென்பதைத்தவிர வேறு விஷயங்களில் ஆசையில்லாதவன்.

‖ (𑌶𑌂) (ஸ்ரீ) (மீ,வி) உள்ளும் புறம்பும் சுத்தமாயுள்ளவன். என்றால், காமக்குரோத முதலில் மன அழுக்கையும், தேகத்தின் அழுக்கையும், நீக்கிக்கொண்டு சுத்தமா யிருப்பவன். (ரா) சாஸ்திரோக்த மார்க்கமாய் சம்பாதித்த ஆகாராதிகளால் தேகத்தை விருத்திசெய்து கொண்டிருக்கிறவன்.

| | |
|---|---|
| 𑌦𑌕𑍍𑌷𑌃 * | சோம்பலற்றவனும் |
| 𑌉𑌦𑌾𑌸𑍀𑌨𑌃 † | பக்ஷபாதமற்றவனும் |
| 𑌗𑌤𑌵𑍍𑌯𑌥𑌃 ‡ | மனோவியாதியற்றவனும் |
| 𑌸𑌰𑍍𑌵𑌾𑌰𑌮𑍍𑌭𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌾𑌗𑍀 § | சகலப் பிரயத்தினங்களையும் விட்டவனுயிருக்கிற |
| 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑌃 | என்னுடையபக்தன் |
| 𑌯𑌃 | எவனோ |
| 𑌸𑌃 | அவன் |
| 𑌮𑍇 | எனக்கு |
| 𑌪𑍍𑌰𑌿𑌯𑌃 | பிரியன். |

அபேக்ஷை யற்றவனும், சுத்தமுள்ளவனும், சோம்பல் பக்ஷபாதம் மனோவியாதி இவைகளற்றவனும் சகலப் பிரயத்தினங்களையும் விட்டவனுயிருக்கிற என்னுடைய பக்தனெவனோ, அவன் எனக்குப் பிரியன். (௧௬)

---

௧௭. 𑌯𑍋 𑌨 𑌹𑍃𑌷𑍍𑌯𑌤𑌿 𑌨 𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌟𑌿 𑌨 𑌶𑍋𑌚𑌤𑌿 𑌨 𑌕𑌾𑌂𑌕𑍍𑌷𑌤𑌿।
𑌶𑍁𑌭𑌾𑌶𑍁𑌭𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌾𑌗𑍀 𑌭𑌕𑍍𑌤𑌿𑌮𑌾𑌨𑍍𑌯𑌃 𑌸 𑌮𑍇 𑌪𑍍𑌰𑌿𑌯𑌃॥

---

* (ஶம்) சடுதியில் நேரிட்ட காரியத்தை யுடனே ஆராய்ந்தறிகிறவன். (ரா) மற்ற கருமங்களில் பற்றுதலற்றவனுய் சாஸ்திரோக்தமான கருமங்களைச் செய்வதில் ஆலசிய மில்லாதவன். (ஶ்ரீ,வி) பகவத் பிரீதியான கருமங்களைச் செய்வதில் ஜாக்கிரதையுள்ளவன்.

† (ஶம்) சிநேகிதர் முதலானவர்களிட பக்ஷத்திலுங்கூடப் பற்றுதலற்றவன் (ஶ்ரீ,வி) ஜனங்கள் தனக்குபகாரஞ் செய்தாலும், அபகாரம் செய்தாலும் அவ்விரண்டிலும் உபேக்ஷையா யிருப்பவன். (ஆ) அத்-௧௪, ௬-௨௩ பார்க்க.

‡ (ஶம்) பயமற்றவன். (ரா) சாஸ்திரோக்தமான கருமங்களைச்செய்யும் பொருட்டு ஸ்நாநாதிகள் செய்வதில், சீதம் உஷ்ணம் முதலியவைகளால் வருத்த மடையாதவன். (ஶ்ரீ,வி) பிறர்செய்த அபராதத்திஞல் மனவருத்த மடையாதவன்.

§ (ஶ்ரீ) திருஷ்டா திருஷ்ட வஸ்துக்களை யுத்தேசித்துப் பிரயத்தனஞ் செய்யாதவன். (ஶம்) இஹபரவிஷயங்களைக்குறித்த காம்மியகருமங்களை விட்டவன். (ரா) சாஸ்திரோக்த கருமங்களைத்தவிர மற்ற கருமங்களை விட்டவன். (ஶ்ரீ,வி) விஷ்ணு சம்பந்த மற்ற கருமங்களை விட்டவன். அல்லது, சகலகருமங்களிலும் அபிமான மற்றவன். அல்லது, சகல கருமங்களையும் பகவதர்ப்பணஞ் செய்தவன். (ஆ) அத்-௧௪, ௬-௨௫, பார்க்க.

| | |
|---|---|
| ய:* | எவன் |
| ந ஹ்ருஷ்யதி† | (இஷ்டமானதை யடைந்தாலும்) சந்தோஷிக்கிறதில்லேயோ |
| ந த்வேஷ்டி | (அநிஷ்ட முண்டானாலும்) வருத்தமடைகிறதில்லேயோ |
| ந ஶோசதி‡ | (இஷ்டமானவஸ்து நஷ்டமானல்) துக்கிக்கிறதில்லேயோ |
| ந காங்க்ஷதி§ | (ஒருவஸ்து வேண்டுமென்று) அபேக்ஷிக்கிற தில்லேயோ |
| ய: | எவன் |
| ஶுபாஶுபபரித்யாகீ¶ | சுபாசுபங்களில் பற்றற்றவனாய் |
| பக்திமாந் | (என்னிடத்தில்) பக்தியுள்ளவனே |
| ஸ: | அவன் |
| மே | எனக்கு |
| ப்ரிய: | பிரியமானவன். |

எவன் சந்தோஷம் துவேஷம் விசனம் விருப்பு இவைகளில்லாமல் சுபாசுபங்களில் பற்றற்றவனாய் பக்திசெய்கிறானோ அவன் எனக்குப் பிரியமானவன். (கஎ)

---

கஅ. ஸம: ஶத்ரௌ ச மித்ரே ச ததா மாநாபமாநயோ:।
ஶீதோஷ்ணஸுகது:கேஷு ஸம: ஸங்கவிவர்ஜித:॥

கசு. துல்யநிந்தாஸ்துதிர் மௌநீ ஸந்துஷ்டோ யேந கேநசித்।
அநிகேத: ஸ்திரமதிர் பக்திமாந் மே ப்ரியோ நர:॥

---

* (रा) எந்தக் கருமயோகியானவன்.

† (रा) சந்தோஷத்திற்குக் காரணமானவும் இஷ்டமானவும் வஸ்துக்கள் கிடைத்தாலும், சந்தோஷிக்காதவன். (ஸ்ரீ,வி) தன் தேகமுள்ளவனாயில் பகவானைத் தவிர மற்ற வஸ்துக்களில் சந்தோஷமில்லாதவன். (ஸ்வா) உ - வது அத்தியாயம் ருசு - வது சுலோகம் பார்க்க.

‡ (रा) புத்திர மித்திர களத்திராதி வியோகத்தினல் துக்கமடைகிற தில்லேயோ.

§ (रा) எந்த வஸ்து அழிந்தால் தனக்கு துக்கமுண்டாகுமோ, அது அழியாமலிருக்கக் கோருகிறதில்லே. (ஸ்ரீ,வி) ஞானம், பக்தி, வைராக்கியம், இவைகளுக்கு அந்நியமானதை அபேக்ஷிக்காதவன்.

¶ (रा) பாபத்தைப்போல் புண்ணியமும் பந்த ஹேதுவாகையால் பாபபுண்ணியங்க ளிரண்டையும் விட்டுவிடுகிறவன். (ஸ்ரீ,வி) ஞானம், பக்தி, வைராக்கியம் இவைகளுக்கு அந்நியமான சுபாசுபங்களேத் தியஜித்தவன். (ஸ்வா) கஉ-வது அத்தியாயம், உஅ - வது சுலோகம் பார்க்க.

| | |
|---|---|
| 𑌶𑌤𑍍𑌰𑍌 𑌚 | சத்துருவினிடத்திலும் |
| 𑌮𑌿𑌤𑍍𑌰𑍇 𑌚 | சிநேகிதனிடத்திலும் |
| 𑌤𑌥𑌾 | அப்படியே |
| 𑌮𑌾𑌨𑌾𑌪𑌮𑌾𑌨𑌯𑍋𑌃 | மாநாவமானங்களிலும் |
| 𑌸𑌮𑌃 | சமமாயிருக்கிறவனும் |
| 𑌶𑍀𑌤𑍋𑌷𑍍𑌣𑌸𑍁𑌖𑌦𑍁𑌃𑌖𑍇𑌷𑍁 | சீதம், உஷ்ணம், சுகம், துக்க மிவைகளிலும் |
| 𑌸𑌮𑌃 | சமமாயிருக்கிறவனும் |
| 𑌸𑌙𑍍𑌗𑌵𑌿𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌃 * | ஒன்றிலும் பற்றுதலற்றவனும் |
| 𑌤𑍁𑌲𑍍𑌯𑌨𑌿𑌨𑍍𑌦𑌾𑌸𑍍𑌤𑍁𑌤𑌿𑌃 † | நிந்தித்தாலும் புகழ்ந்தாலும் சமமாயெண்ணுகிறவனும் |
| 𑌮𑍌𑌨𑍀 ‡ | மௌநமாயிருப்பவனும் |
| 𑌯𑍇𑌨 𑌕𑍇𑌨𑌚𑌿𑌤𑍍 | (தன்முயற்சியன்றி) எது எவ்வளவு கிடைத்த போதிலும் அதினாலே |
| 𑌸𑌨𑍍𑌤𑍁𑌷𑍍𑌟𑌃 | சந்தோஷமடைந்தவனும் |
| 𑌅𑌨𑌿𑌕𑍇𑌤𑌃 § | ஓரிடத்திலாவது ஸ்திரமாய் வாசம் செய்யாதவனும் |
| 𑌸𑍍𑌥𑌿𑌰𑌮𑌤𑌿𑌃 ¶ | சலனமற்றபுத்தியையுடையவனும் |
| 𑌭𑌕𑍍𑌤𑌿𑌮𑌾𑌨𑍍 | பக்தியையுடையவனுமான |
| 𑌨𑌰𑌃 | மனுஷியன் |
| 𑌮𑍇 | எனக்கு |
| 𑌪𑍍𑌰𑌿𑌯𑌃 | பிரியமானவன். |

சத்துரு, சிநேகிதன், மாநாவமானங்கள், சீதோஷ்ண சுகதுக்கங்கள், இவைகளில் சமமா யிருப்பவனும், ஒன்றிலும் பற்றற்றவனும், நிந்தாஸ்துதிகளில் சமமாயிருப்பவனும், மௌநமாயிருப்பவனும், எவ்வளவு கிடைத்தாலும் அதில் சந்தோஷ மடைந்தவனும், ஸ்திரமான வாஸஸ்தான மில்லாதவனும், ஸ்திரபுத்தி யுடையவனுமான மனுஷியன் எனக்குப் பிரியமானவன்.

---

* (ஸ்ரீ,வி) பலாபேக்ஷை யற்றவன்.

† (ஸ்ரீ,வி) ஸ்துதியை நிந்தைபோ லெண்ணுகிறவன்.

‡ (ஶம்) 𑌸𑌂𑌯𑌤𑌵𑌾𑌕𑍍 = வாக்கை யடக்கினவன்.

§ (ஶம்) எப்பவும் வாசம்செய்ய ஓரிடத்தை யேற்படுத்திக் கொள்ளாதவன். (ஸ்ரீ,வி) 𑌅 = விஷ்ணு - 𑌨𑌿𑌕𑍇𑌤𑌃 = வாஸஸ்தானம். என்றால், விஷ்ணுவையே வாஸஸ்தானமா யுடையவன்.

¶ (ஶம்) பரமாத்மாவிஷயத்தில் ஸ்திரமான மனசையுடையவன். (ஸ்ரீ,வி) குதர்க்கத்தினால் சலிக்காத மனதையுடையவன்.

(ஸ்ரீ) யேநகேநசிதாச்சந்நோ யேநகேநசிதாசித꞉ । யத்ர க்வசந சாயீ ஸ்யாத் தம் தேவா ப்ராஹ்மணம் விது꞉ ॥—தானுய்க்கிடைத்த யெவ்வித மான வஸ்திராதிகளைத் தரிப்பதும், எது கிடைத்ததோ அதைப் புசிப்பதும், எந்தவிடத்தில் தூக்கம் வருகிறதோ, (அந்த இடம் எப்படிப்பட்டதென்பதை கவனியாமலே) அந்த இடத்தில் படுக்கிறதுமாயிருக்கிறவ னெவனோ, அவனை பிரம்மஞானி என்று சொல்லுவார்கள்.

(ரா) "அத்வேஷ்டா ஸர்வபூதாநாம்" என்கிறவிடத்தில் சொல்லப்பட்டவனைவிட இந்த சுலோகத்தில் சொல்லப்பட்டிருக்கிறவன் சமீபத்தில் நேரிட்ட துவேஷ முதலியவைகளினால் கலங்குகிறவனல்லவென்பதைக் காண்பிவிக்க, இந்த சுலோகத்தில் மறுபடியும் சொல்லப்பட்டது. (௧௮,௧௯)

---

௨௰. யே து தர்ம்யாம்ருதமிதம் யதோக்தம் பர்யுபாஸதே ।
ச்ரத்ததாநா மத்பரமா பக்தாஸ்தேऽதீவ மே ப்ரியா꞉ ॥

| | |
|---|---|
| யதோக்தம்* | மேலாகச்சொல்லியிருக்கிற |
| இதம் | இந்த |
| தர்ம்யாம்ருதம்† | சாஸ்திரத்தைவிட்டு விலகாத மோக்ஷ சாதனத்தை |
| ச்ரத்ததாநா꞉ | நம்பினவர்களாயும் |
| மத்பரமா꞉‡ | என்னையே உத்தமனென் றடைந்தவர்களாயும் |
| யே து | எவர்கள் |
| பர்யுபாஸதே | அநுஷ்டிக்கிறார்களோ |

---

* (ஸ்ரீ) அத்வேஷ்டா, முதலுள்ள சுலோகங்களில் சொல்லிவந்தவைகள்.

† (ஸ்ரீ) யஜ்ஞாம்ருதம், என்றுபாடம். இந்தத் தருமமெதுவென்றால், இதின் ௧௩-வது சுலோகம்முதல் ௧௯-வது சுலோகம் வரையில் சொல்லிவந்தவைகளே. அந்தத் தருமங்கள் மோக்ஷத்திற்குக் காரணமானதால், அமிருதமென்று சொல்லப்பட்டன. (ஸ்ரீ) தருமத்தோடு கூடினதாயும், மோக்ஷத்திற்குக் காரணமாயு மிருப்பதால், தர்ம்யாம்ருதம் என்று சொல்லப்பட்டது. (ம) (ஸ்ரீ,வி) யஜ்ஞ꞉ = விஷ்ணு - விஷ்ணு விஷயமானதா லிது, யஜ்ஞம் என்றும், அம்ருதம்=மரணம் - மரணம் முதலிய சகல துக்கங்களையும் போக்கடித்து முக்தியைக் கொடுக்கப்பட்ட தாகையால், அம்ருதம் என்றும் சொல்லப்பட்டது.

‡ (ஸ்ரீ) அக்ஷராத்மாவாகிய என்னையே உத்தமமான கதியாக அறிந்தவர்கள். (ஸ்ரீ,வி) என்னை சர்வோத்தமனென்று அறிந்தவர்கள்.

𑌤𑍇 } * அந்தபக்தர்கள்
𑌭𑌕𑍍𑌤𑌾𑌃 }
𑌮𑍇 எனக்கு
𑌅𑌤𑍀𑌵 மிகவும்
𑌪𑍍𑌰𑌿𑌯𑌾𑌃 பிரியமானவர்கள்.

மேலாகச் சொல்லியிருக்கிற அத்துவேஷம் முதலிய இந்தத் தருமங்களாகிய மோக்ஷ சாதனங்களை நம்பினவர்களாயும், என்னையே உத்தமனென் றடைந்தவர்களாயும், எவர்கள் அனுஷ்டிக்கிறார்களோ, அந்த பக்தர்கள் எனக்கு மிகவும் பிரியமானவர்கள். (௨௰)

𑌓𑌂 𑌤𑌤𑍍𑌸𑌦𑌿𑌤𑌿 𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌭𑌗𑌵𑌦𑍍𑌗𑍀𑌤𑌾𑌸𑍂𑌪𑌨𑌿𑌷𑌤𑍍𑌸𑍁 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌯𑌾𑌂

𑌯𑍋𑌗𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇 𑌶𑍍𑌰𑍀𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌰𑍍𑌜𑍁𑌨𑌸𑌂𑌵𑌾𑌦𑍇

𑌭𑌕𑍍𑌤𑌿𑌯𑍋𑌗𑍋 𑌨𑌾𑌮

𑌦𑍍𑌵𑌾𑌦𑌶𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃.

𑌶𑍍𑌰𑍀𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌯 𑌪𑌰𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍇 𑌨𑌮𑌃.

பக்தியோகமென்கிற பன்னிரண்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

* (𑌸𑌂) உத்தமமான பரமார்த்த ஞானமாகிற பக்தியை யடைந்த அந்த பக்தர்கள்

𑌶𑍍𑌰𑍀𑌰𑌸𑍍𑌤𑍁.

𑌤𑍍𑌰𑌯𑍋𑌦𑌶𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑌪𑍍𑌰𑌾𑌰𑌂𑌭𑌃.

# பதிமூன்றாவது அத்தியாயம்.

---

𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚.

௧. 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 𑌚𑍈𑌵 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌂 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌮𑍇𑌵 𑌚 ।
𑌏𑌤𑌦𑍍𑌵𑍇𑌦𑌿𑌤𑍁𑌮𑌿𑌚𑍍𑌛𑌾𑌮𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌚 𑌕𑍇𑌶𑌵 ॥

| | |
|---|---|
| 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚 | அர்சுனன்சொல்வது |
| 𑌹𑍇 𑌕𑍇𑌶𑌵 | ஓ! கேசவா! |
| 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 | பிரகிருதியையும் |
| 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 𑌚𑍈𑌵 | புருஷனையும் |
| 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌂 | க்ஷேத்திரத்தையும் |
| 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌂 𑌏𑌵 𑌚 | க்ஷேத்திரக்ஞனையும் |
| 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 | ஞானத்தையும் |
| 𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 | அறியவேண்டியதையும் |
| 𑌏𑌤𑌤𑍍 | இவைகளை |
| 𑌵𑍇𑌦𑌿𑌤𑍁𑌂 | தெரிந்துகொள்ள |
| 𑌇𑌚𑍍𑌛𑌾𑌮𑌿 | இச்சிக்கிறேன். |

அர்சுனன் கிருஷ்ணபகவானை நோக்கிச் சொல்வது - ஓ! கேசவா! பிரகிருதியையும், புருஷனையும், க்ஷேத்திரத்தையும், க்ஷேத்திரக்ஞனையும், ஞானத்தையும், அறியவேண்டியதையும் தெரிந்துகொள்ள இச்சிக்கிறேன்.

(𑌶𑍍𑌲𑍋) இந்த சுலோகமானது (𑌰𑌾) (ஸ்ரீ) (மீ,வி) இவர்களுடைய வியாக்கியானங்களுள்ள புஸ்தகங்களிலாவது, பின்னும் சில பழய புஸ்தகங்களிலாவது கிடையாது. சென்னையில் திராவிடாக்ஷரத்தி லச்சிடப்பட்டிருக்கிற 𑌶𑌂𑌕𑌰 பாஷிய மடங்கியிருக்கிற சில புஸ்தகங்களிலும் மூலமாத்திரமுள்ள சில புஸ்தகங்களிலும், பங்காளம் பெம்பாய் தேசங்களில் தேவநாகர அக்ஷரங்களில் அச்சிடப்பட்டிருக்கிற மூலமாத்திரமுள்ள சில புஸ்தகங்களிலும், கல்கத்தாவில் அச்சிடப்பட்டிருக்கிற மகா பாரதத்திலும், இந்த சுலோகமானது, க௩-வது அத்தியாயம் முதலாவது சுலோகமாக அச்சிடப்பட்டிருக்கிறது. (𑌶𑌂) பாஷிய பீடிகையில் (௭00) எழுநூறு சுலோகங்களாக இந்த கீதையானது வேத வியாச மகரிஷியால் செய்யப்பட்டதென்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த சுலோகத்தையும் சேர்த்துக் கணக்கிடும் பக்ஷத்தில் (௭0௧) எழுநூற்றொரு சுலோகங்களாகின்றன. ஒரு சுலோகம் அதிகமா யிருப்பதி

ஞலே, ஒன்று புதிதாய்ச் சேர்க்கப்பட்டிருக்கவேண்டும். அது இந்த சுலோகந்தானென்று பழைய புஸ்தகங்களைக்கொண்டு நிச்சயிக்கக் கூடியதாயிருக்கிறது. (௧)

---

𑌶𑍍𑌰𑍀 𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚.

௨. 𑌇𑌦𑌂 𑌶𑌰𑍀𑌰𑌂 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌮𑌿𑌤𑍍𑌯𑌭𑌿𑌧𑍀𑌯𑌤𑍇।
𑌏𑌤𑌦𑍍𑌯𑍋 𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 𑌤𑌂 𑌪𑍍𑌰𑌾𑌹𑍁𑌃 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞 𑌇𑌤𑌿 𑌤𑌦𑍍𑌵𑌿𑌦𑌃॥

| | |
|---|---|
| 𑌶𑍍𑌰𑍀 𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚 | ஸ்ரீ கிருஷ்ணபகவான் சொல்வது |
| 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 | ஓ! குந்திபுத்திரா! |
| 𑌇𑌦𑌂 𑌶𑌰𑍀𑌰𑌂 | (போகத்திற்குக் காரணமான) இந்தச் சரீரமானது |
| 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌮𑌿𑌤𑌿 | க்ஷேத்திரமென்பதாக |
| 𑌅𑌭𑌿𑌧𑍀𑌯𑌤𑍇 | சொல்லப்படுகிறது |
| 𑌏𑌤𑌤𑍍 | இந்தக்ஷேத்திரத்தை |
| 𑌯𑌃 | எவன் |
| 𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 | (தான், தன்னுடையது, என்று) எண்ணுகிறானோ |
| 𑌤𑌂 | அவனை |
| 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞 𑌇𑌤𑌿* | க்ஷேத்திரக்ஞனென்பதாக |
| 𑌤𑌦𑍍𑌵𑌿𑌦𑌃 | க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞர்களை யறிந்தவர்கள் |
| 𑌪𑍍𑌰𑌾𑌹𑍁𑌃 | சொல்லுகிறார்கள். |

ஸ்ரீ கிருஷ்ணபகவான் சொல்வது. ஓ! கௌந்தேயா! போகத்திற்குக் காரணமான இந்தச் சரீரமானது க்ஷேத்திரமென்பதாகச் சொல்லப்படுகிறது. இந்த க்ஷேத்திரத்தை யெவன், தான், தன்னுடையது, என்று எண்ணுகிறானோ, அவனை க்ஷேத்திரக்ஞனென்பதாக க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞர்களை அறிந்தவர்கள் சொல்லுகிறார்கள்.

(𑌸𑌂) இதின் ௭-வது அத்தியாயத்தில் (௪-௫-சுலோகங்களில்) ஈசுவரனுடைய இரண்டு பிரகிருதிகள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. அவைகளிலொன்று அபராப்பிரகிருதி. அதாவது - சமுசார ஏதுவானதும், எட்டுவிதமாய்ச் சொல்லப்பட்டதும், முக்குணங்களை யுடையதுந்தான். இதானது க்ஷேத்திரமென்று சொல்லப்படுகிறது. மற்றொன்று பராப்பிரகிருதி. அதாவது - ஜீவபாவத்தை யடைந்த ஈசுவரனுடைய சுவரூபமா யிருக்கிறது. இந்த இரண்டு பிரகிருதிகளால், ஈசுவரன் ஜெகத்தின் உற்பத்தி ஸ்திதி லயங்களுக்குக் காரணமாகிறார். க்ஷேத்

---

* (ஸ்ரீ) 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌮𑌿𑌤𑌿, என்று பாடம். அர்த்தத்தில் பேதமில்லை.

திரம் க்ஷேத்திரக்ஞன் என்கிற இந்த இரண்டு பிரகிருதிகளை யுடைத்தாயிருக்கிற ஈசுவரனுடைய தத்துவ நிச்சயத்தின் பொருட்டும், ஞானிகளெந்தத் தருமத்தை யனுஷ்டிக்கிறதினால் பகவானுக்குப் பிரியமானவராவார்களோ, அதைத் தெரிவிக்கும் பொருட்டும், இந்த அத்தியாய மாரம்பிக்கப்படுகிறது. (இந்த சுலோகத்தி னர்த்தமென்னவென்றால்,) முக்குணமுள்ளப் பிரகிருதியானது காரியகாரணரூபமாய்ப் பரிணமித்து தேகேந்திரியாதி ஆகாரங்களாய் புருஷனுக்குப் போகம் மோக்ஷம் இவைக ளுண்டாக வேண்டியதற்காக க்ஷேத்திரமா யாகிறது. அந்த க்ஷேத்திரமென்கிற தேகமானது குறைதல் முதலிய விகாரத்தை யடைகிறபடியினாலேயும், பூமி, பயிர்முதலிய பலனைக் கொடுப்பதுபோல் கருமமலனைக் கொடுப்பதினாலேயும், க்ஷேத்திரமென்று சொல்லப்படுகிறது. இந்த க்ஷேத்திரத்தை எவனறிகிறானோ, என்றால், சுவபாவ ஞானத்தினாலாவது உபதேச ஞானத்தினாலாவது பாதமுதல் சிரசுவரையிலிருக்கிற அந்தந்த அவயவங்களோடு கூடியிருக்கிற சரீரம் இப்படிப்பட்டதென்று எவன் அறிகிறானோ, அவன் க்ஷேத்திரக்ஞனென்று க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞர்களைத் தனித்தனியாய் அறிந்தவர்கள் சொல்லுகிறார்கள்.

(௲) இந்த அத்தியாயத்தில், தேகம் ஆத்மா (ஜீவன்) இவைளுடைய சுவரூபமும், தேகத்தின் வாஸ்தவஞானமும், தேகத்தை விட்டு ஆத்மசுவரூபத்தை அடையவேண்டிய உபாயமும், விமுக்தாத்மாவின் சோதனையும், ஆத்மாவுக்குப் பிரகிருதி சம்பந்தமுண்டானதற்குக் காரணமும், இவைகளை யறிந்து விவேகத்துடன் அநுசந்தானஞ் செய்யவேண்டிய விதமும் சொல்லப்படுகின்றன. (இந்த சுலோகத்தின் தாத்பரியமென்னவென்றால்,) போகத்திற்குக் காரணமானது தேகம். போகத்தை யனுபவிக்கிறவன் ஆத்மா (ஜீவன்). தேகமும் ஆத்மாவும் வெவ்வேறானாலும், அக்ஞானிகள், நான் தேவன், நான் மனிதன், நான் பெருத்திருக்கிறேன், நான் இளைத்திருக்கிறேன் என்று தேகத்தை ஜீவனுடன் சேர்த்து தேகமே ஆத்மாவென்று வியவகரிக்கிறார்கள், ஆத்மாவேறே தேகம்வேறே யென்றறிந்தவர்கள், அந்ததேகத்தை க்ஷேத்திரமென்று சொல்லுகிறார்கள். எவன் அவயவங்களுடன் கூடிய இந்த தேகந் தன்னுடைய தென்றும், தேகமே தானென்றும் அறிகிறானோ; அவனை (அந்த ஆத்மாவை) தேகம் வேறே ஆத்மாவேறேயென்று அறிந்தவர்கள், க்ஷேத்திரக்ஞனென்று சொல்லுகிறார்கள். ஜீவாத்ம சுவரூபமானது, இந்திரியங்களினால் அறியப்படாததாயும், மனதினால் தியானித்து அறியத்தகுந்ததாயு மிருக்கிறதினால், தியானித்து மனதினாலறிய சக்தியற்ற அவிவேகிகள் தேகமே ஆத்மாவென்று நினைக்கிறார்கள்.

(ஸ்ரீ,வி) முந்திய பன்னிரண்டு அத்தியாயங்களில் சொல்லியிருக்கிற சங்கதிகள் புத்தியில் பதியும்பொருட்டு சுருக்கி இந்த அத்தியாயத்தில் சொல்லப்படுகின்றன. "ஐதம்ஶரீரம்" என்றதினால், இந்த சரீரத்திற்குக் காரணமாயுள்ள அவ்வியக்த மகதகங்காராதிகள், என்று கிரகிக்கவேண்டியது. இந்த அவ்வியக்தாதிகள் க்ஷேத்திரமென்று சொல்லப்படுகின்றன. அவை (க்ஷேத்திரக்ஞராகிய) பகவானுக் கிருப்பிடமாகையால், அவைகளுக்கு க்ஷேத்திரமென்கிற பெயர்வந்தது. இந்த க்ஷேத்திரமாகிய அவ்வியக்தாதிகளை அறிகிறவர் (பகவான்) க்ஷேத்திரக்ஞர் என்று, க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞர்களை யறிந்தவர்கள் சொல்லுகிறார்கள். (௨)

---

௩. க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம் வித்தி ஸர்வக்ஷேத்ரேஷு பாரத।*
க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞயோர்ஜ்ஞாநம் யத்தஜ்ஜ்ஞாநம் மதம் மம॥

| | |
|---|---|
| ஹே பாரத | ஓ! பாரதகுலத்தி லுதித்தவனே! |
| ஸர்வக்ஷேத்ரேஷு | சகல க்ஷேத்திரங்களிலேயும் |
| மாம் ச அபி | என்னையே |
| க்ஷேத்ரஜ்ஞம் | க்ஷேத்திரக்ஞனை |
| வித்தி | அறி |
| க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞயோ: | தேகம் ஆத்மா இவைகளுடைய |
| யத் ஜ்ஞாநம் | விவேகஞானமெதோ |
| தத் | அதே |
| ஜ்ஞாநம் (இதி) | ஞானமென்பது |
| மம | என்னுடைய |
| மதம் | மதம் (நிச்சயம்.) |

ஓ! அர்சுனா! சகல தேகங்களிலேயும் என்னையே க்ஷேத்திரக்ஞனை அறி. தேகம் ஆத்மா இவைகளுடைய விவேக ஞானமெதோ, (ஆத்மா இப்படிப்பட்டவன், தேகமிப்படிப்பட்டது என்கிற பகுத்தறிவு) அதே ஞானமென்பது என்னுடைய நிச்சயம்.

(ஸ்ரீ) தேகாத்ம விவேகஞானத்தைத் தவிர மற்றஞானம் ஞானமல்ல. எப்படி நிஷ்காம கருமமே கருமம், மற்ற ஸகாமகருமம் கருமமல்லவோ; அப்படிப்போல் மோக்ஷசாதனமான ஆத்மாநாத்மஞானமே ஞானம். மற்ற ஞானமெல்லா மக்ஞானமே. அந்த ஆத்மாயார் என்றால்,

* இந்த முதல் அரைசுலோகத்தை கூர்ம்மபுராணம் உத்தரபாகம் அத் ௪-ல் காண்க.

"தத்த்வமஸி" என்றவாக்கியத்தின் லக்ஷியார்த்த மான சித்சுவரூபமாயும், சகல தேகத்திலும் தொடர்ச்சியாயுமிருக்கிற தெதோ அதுதான். இப்படிப்பட்ட அறிவுதான் ஞானம்.

(௱) க்ஷேத்திரக்ஞன் நானென்று சொன்னதினாலும், க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞ விவேகமே ஞானமென்று சொன்னதினாலும், ஈசுவரன்தான் க்ஷேத்திரக்ஞனென்றும், அந்த ஈசுவரன் இப்படிப் பட்டவன் க்ஷேத்திர மிப்படிப்பட்டது என்றறிகிறதே ஞானமென்றும் ஏற்படுகிறது. இதினாலே, ஈசுவரனுக்கே சமுசாரபந்தமு மோக்ஷமு மென்றாகிறது. சமுசார பந்தத்தை யுடையவன் ஈசுவரனாகமாட்டான். ஈசுவரனென்றால், அவனுக்கு சமுசாரபந்தமென்பது கூடாது. ஆகையால், ஈசுவரனே க்ஷேத்திரக்ஞனென்று சொல்வது கூடாது என்னும் ஆக்ஷேபனை சரியானதல்ல. ஈசுவரனுக்கு சமுசாரம் முதலியவை எப்பவும் கிடையாது. அவித்தையினால், ஈசுவரனிடத்தில் சமுசார முதலியன, ஆரோபிக்கப் படுகின்றன. அதெப்படி என்றால், கானலில் ஜலமும், கிளிஞ்சிலில் வெள்ளியும், பழுதையில் பாம்பும், அக்ஞானத்தினால் எப்படி ஆரோபிதமோ, அப்படிப்போல. சுவபாவமாக சமுசாராதி பந்தமுள்ள ஒரு வஸ்து இருக்குமானால், அதற்கு நிவிருத்தி என்பதே கூடாது. நிவிருத்தி யுண்டென்னும் பக்ஷத்தில் அது சுவபாவமல்ல. ஆகந்துக மென்றே சொல்லவேண்டும். எப்படி என்றால், அக்கினிக்கு உஷ்ணம் சுவபாவம், உஷ்ணம் நீங்கி அக்கினிக் கிருப்புண்டோ? இல்லை. ஜலத்திற்கு சீதளம் சுவபாவம். அக்கினி சம்பந்தப்பட்டால் சீதள சுவபாவம் மாறி அக்கினி சுவபாவமான உஷ்ணமாய் மாறுகிறது. அந்த உஷ்ணம் தணிந்தவுடன் மறுபடி சீதளமாய் விடுகிறது. ஜலத்திற்கு உஷ்ணம் ஆகந்துக மானதால், நிவிருத்தியுண்டு. ஆகையால், ஈசுவரனிடத்தில் சமுசாரம் ஆரோபிதம். அப்படி ஆரோபத்திற்குக் காரணம் அவித்தையாகிற அக்ஞானமே, ஆத்மா வாஸ்தவத்தில் அவித்தையை யுடையவனல்ல. சந்திரன் இரண்டாகக் காணப்பட்டால், அப்படிக் காணப்படுவது தோஷமாகிய கண்ணின் உபாதியினாலேயேயன்றி வாஸ்தவமல்ல. கண்ணின் தோஷமாகிய உபாதியை நீக்கிப்பார்த்தால், சந்திரனிரண்டென்பது ஆரோபிதமேயென்று விளங்கும், அப்படிப்போல சமுசாரம் முதலிய பந்தமும் மோக்ஷமும் வாஸ்தவத்தில் ஆத்மாவுக்ில்லை. ஆத்மா ஒன்றை விடவேண்டியது மில்லை; ஒன்றைப்போய் அடையவேண்டியது மில்லை. ஆகையால், ஆத்மாவாகிய ஈசுவரன் அவிக்கிரியன். அவித்தையினால், சமுசாரம் அவனிடத்தில் ஆரோபிக்கப் படுகிறது. சகலவிக்கிரியைகளும் அவித்தியா காரியம்; என்று அறிகிற ஞானமே ஞானமென்பது என் மதம் என்பது கருத்து.

(௧அ - வது அத்தியாயம் ௫௦ - வது சுலோகத்திற்கு இந்த பாஷியக்காரர் செய்திருக்கும் பாஷியத்தையும் பார்க்க.)

(ரா) க்ஷேத்திரக்ஞன் ஜீவனென்று முந்திய சுலோகத்தில் சொன்னதற்கு விரோதமாய் க்ஷேத்திரக்ஞன் நானென்று இந்தச் சுலோகத்தில் சொல்லப்பட் டிருக்கிறதே யென்றுலோ, விரோதமல்ல. எப்படி என்றுல், ஜீவன் பகவானுடைய சரீரம். ஜீவனுக்கு பகவான் சரீரி. ஆகையால், தன் சரீரமே தான் என்று சொல்லப்பட்டது. அப்படிச் சொல்லலாமாவென்றுல், ஜீவனும் பகவானும் வேறேயானாலும், ஜீவனைவிட்டு பரமாத்மாவும் பரமாத்மாவை விட்டு ஜீவனும் பிரியாதிருப்பதாகிய (அப்ருதக்ஸித்தம்) அபிருதக்சித்தத்துவத்தினலேயும், சரீரசரீரி பாவத்தினலேயும், விசேஷண விசேஷிய பாவத்தினலேயும் ஜீவனை நானென்றே பகவான் சொன்னுர். எப்படிப் போலென்றுல், நான் தேவன், நான் மனுஷியன் என்று சொல்லப்படுகையில் தேவமனுஷிய ஆகாரம் தேகத்தைப் பற்றியதே யன்றி ஆத்மாவைப் பற்றியதல்ல. தேகமும் ஆத்மாவும் வெவ்வேருயிருக்க அந்த தேகத்தை நான் என்று சொல்லுகிறதுபோல் பகவானையும் ஜீவனையும் அபேதமாகச் சொல்லப்பட்டது. ஆகையால், பகவான் தானே க்ஷேத்திரக்ஞனென்று சொல்லிக் கொள்ளுகிருர். க்ஷேத்திரக்ஞன் தானென்று எந்தக்காரணத்தினுல் பகவான் சொன்னுரோ, அதே காரணத்தினுல் க்ஷேத்திரமும் தானென்று பகவான் சொன்னதாக இந்த சுலோகத்திலுள்ள அபி (அபி) சப்தத்தினுல் கிரகிக்க வேண்டியது. க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞாளுடைய சுவரூப பேதத்தையும், அவைகள் பரமாத்மாவை ஆத்மாவாக உடையன வென்பதையும் அறிவதுதான் உத்தமமானதும் இந்த சுலோகத்தில் சொல்லியதுமான ஞானம்.

(மீ,வி) ஜீவனுக்கு அற்பக்ஷேத்திர ஞானமிருப்பதினுல் அவனை க்ஷேத்திரக்ஞனென்று சொல்லக்கூடாது. அவ்வியக்த மகதாதி சகல க்ஷேத்திரத்திலும் என்னை க்ஷேத்திரக்ஞனை அறி என்பதுதான் தாத்பரியம். க்ஷேத்திரக்ஞன் ஜீவனல்ல. இப்படித் தெரிகிறதுதான் ஞானம். (௩)

---

௪. தத்க்ஷேத்ரம் யச்ச யாத்ருக்ச யத்விகாரி யதஶ்ச யத்।
ஸ ச யோ யத்ப்ரபாவஶ்ச தத்ஸமாஸேந மே ஶ்ருணு॥

| | |
|---|---|
| தச்ச க்ஷேத்ரம் * | அந்தக்ஷேத்திரமானது |
| யச்ச † | எவ்விதசுவரூபமுள்ளதோ |
| யாத்ருக்ச ‡ | எப்படிப்பட்டகுணங்களையுடையதோ |
| யத்விகாரி | எவ்விதவிகாரத்தையுடையதோ |
| யதஸ்ச யச்ச § | எதினாலுண்டானதோ |
| ஸச ¶ | அந்தக்ஷேத்திரக்ஞனும் |
| ய: | எவ்விதசுவரூபமுடையவனோ |
| யத்ப்ரபாவஸ்ச ‖ | எப்படிப்பட்ட மகிமைகளையுடையவனோ |
| தத் + | அதை |
| ஸமாஸேந | சம்க்ஷேபமாக (சுருக்கமாய்) |
| மே | என்னுடைய (வாக்கியத்தால்) |
| ஸ்ருணு | கேள். |

அந்த க்ஷேத்திரமானது எவ்வித சுவரூப முள்ளதோ, எப்படிப் பட்ட குணங்களை யுடையதோ, எவ்வித விகாரத்தை யுடையதோ, எதினாலுண்டானதோ, அந்த க்ஷேத்திரக்ஞன் எவ்வித சுவரூப முடையவனோ, எப்படிப்பட்ட மகிமைகளை யுடையவனோ, அவைகளை சம்க்ஷேபமாக (சுருக்கமாக) என்னிடத்திலிருந்து கேள். (௪)

---

௫. ருஷிபிர்பஹுதா கீதம் சந்தோபிர்விவிதை:ப்ருதக்।
ப்ரஹ்மஸூத்ரபதைஸ்சைவ ஹேதுமத்பிர்விநிஸ்சிதை:॥

| | |
|---|---|
| பஹுதா | வெகுவிதமாய் |
| ருஷிபி: | இருஷிகளினாலேயும் |
| ப்ருதக் | பிரத்தியேகமாய் |
| விவிதை: | பலவிதங்களான |
| சந்தோபி: | வேதங்களினாலேயும் |

---

* (ஸ்ரீ,வி) அவ்வியக்த மகதாதிக ளானவை.

† (ரா) எந்த வஸ்து.

‡ (ரா) எவைகளுக்கு ஆசிரயமானதோ.

§ (ரா) யத: = என்னப் பிரயோசனத்திற்காக வுண்டானது. யச்ச = எப்படிப்பட்ட சுவரூபமுள்ளதோ (அ) (ஸ்ரீ,வி) எந்த புருஷனாலே நடத்தப்படுகிறதாக விருக்கிறதோ.

¶ (ஸ்ரீ,வி) அப்படி நடத்துகிறவன்.

‖ (மா) எப்படிப்பட்ட உபாதி கிருதமான சக்திகளை யுடையவனோ.

+ (மா) க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞர்களுடைய சுவரூபத்தை.

ஹேதுமத்³பி⁴: — யுத்திகளுடன்கூடின
விநிஶ்சிதை: — சந்தேகமற்ற அர்த்தங்களை ஸ்தாபிக்கிற
ப்³ரஹ்மஸூத்ரபதை³ஶ்சைவ * — பிரம்மசூத்திர பதங்களினலேயும்
கீ³தம் — சொல்லப்பட்டிருக்கிறது.

(க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞர்களுடைய சுவரூபமானது) வெகுவிதமாய் ரிஷிகளினலேயும், பிரத்தியேகமாய் பலவிதங்களான வேதங்களினலேயும், யுக்தியுடன் கூடினவும் ஸந்தேகமின்றி அர்த்தங்களை ஸ்தாபிக்கிறவுமான பிரம்ம சூத்திர பதங்களினலேயும் சொல்லப்பட் டிருக்கிறது.

(ஸ்ரீ) (க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞ சுவரூபமுதலியன) வசிஷ்டாதி ரிஷிகளால் யோகசாஸ்திரத்தில் தியானதாரணம் முதலிய விஷயங்களுக்கு யோக்கியமானவைகளாகச் சொல்லப்பட் டிருக்கின்றன. (வைராஜ) விராட்ரூபம் முதலிய பலரூபங்களாயுஞ் சொல்லப்பட் டிருக்கின்றன.

“பலவிதமான வேதங்களினலே” — நித்தியகருமங்களைச் சொல்வது, நைமித்திக கருமங்களைச் சொல்வது, காம்மிய கருமங்களைச் சொல்வது முதலிய பலவித வேதங்களினலே. “பிரத்தியேகமாயும்” — க்ஷேத்திரம் பலவித கருமானுஷ்டானங்களுக்கு யோக்கியமானதாகவும் க்ஷேத்திரக்ஞன், யக்ஞாதி கருமானுஷ்டானங்களில் பலவித தேவதா ரூபியாகவும் (சொல்லப்பட்டிருக்கின்றன).

“பிரம்ம சூத்திரபதங்கள்” — பிரம்மசூத்திர மென்பது பிரம்மத்தின் சுவரூபத்தைக் காண்பிக்கிற உபநிஷத்துகளில் † தடஸ்த லக்ஷணங்களாகிய, “யதோ வா இமாநி பூ⁴தாநி ஜாயந்தே” முதலிய வாக்கியங்கள். பதமென்பது ‡ ஸ்வரூபலக்ஷணங்களாகிய, “ஸத்யம் ஜ்ஞாநமநந்தம்” முதலிய வாக்கியங்கள். அல்லது வேதவியாசர் செய்திருக்கிற வேதாந்த சூத்திரங்களிலுள்ள பதங்கள்.

இவைகளினலே க்ஷேத்திரக்ஞனைப் பற்றி வெகுவிதமாய்ச் சொல்லப்பட் டிருக்கிறது, இப்படி விஸ்தாரமாய்ச் சொல்லப்பட் டிருக்கிறதினலே நான் சுருக்கமாய்ச் சொல்லுகிறேன் கேள். என்பது தாத்பரியம்.

---

* (ஶாம்) பிரம்மத்தைக் குறிப்பிடுகிற வாக்கியங்களாலும்.

† (ஸ்வா) தடஸ்த லக்ஷணமென்றால், சிலகாலத்தி லிருப்பது சிலகாலத்தி லில்லாமலிருப்பதுமாகிய சகுண பிரம்மலக்ஷணம்.

‡ (ஸ்வா) சுவரூப லக்ஷணமென்றால், எப்போதும் மாறாம லிருப்பதாகிய நிர்குண பிரம்மலக்ஷணம்.

(௱) க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞ சுவரூபமானது பராசரர் முதலிய ரிஷிகளால் வெகுவிதமாய்ச் சொல்லப்பட் டிருக்கிறது. (விஷ்ணு புராணத்தில உ-வது அம்சம் கங-வது அத்தியாயம் கூகூ-எ௦-எ௦க-சுலோகங்கள்) "அரசனே! நானும் நீயும் மற்றவர்களும் தேகங்களாய் மாறிநிற்கிற பிருதிவி முதலான பஞ்ச பூதங்களாலே சுமக்கப் படுகிறோம். இந்தப் பூதவர்க்கமும், குணங்களின் பிரவாகத்திலே வீழ்ந்து அதன் வசத்தினாலே நடத்தல் முதலிய வியாபாரங்களைப் பெற்றிருக்கின்றது. சத்துவமுதலான அந்த குணங்களும் கருமங்களுக்கு வசப்பட்டிருக்கின்றன. அந்தக் கருமங்கள் அவித்தையினாலே சம்பாதிக்கப்பட் டிருக்கின்றன. அவ்வவித்தை சகலப் பிராணிகளிடத்திலுமிருக்கின்றது. ஆத்மாவோ சுத்தமாயும் நாசமில்லாததாயும் பசிமுதலான ஷடூர்மிகளு மற்றதாயும் சத்துவாதி குணரகிதமாயும் குணமயமானப் பிரகிருதியைக் காட்டிலும் வேறானதாயு மிருக்கின்றது". (ஷை அத்தியாயம் அகூ-வது சுலோகம்) "தேகமே ஆத்மாவென்றால், அந்தத் தேகம் தலை, கால், கை, முதலான அனேக வஸ்துரூபமாகையால் எந்த அவயவத்திலே அந்தச் சொல்லைப் பிரயோகிக்கலாம்?". (ஷை அத்தியாயம் க௦உ - க௦ங - சுலோகங்கள்) "நீ யார்? சிரசா? கழுத்தா? வயிறா? அல்லது கால் முதலியவற்றுள் ஏதானுலுமா? சொல். இவ்வுடம்புக்கு நீ யார்? உனக்கு இவ்வுடம்பு யாது? ஓ! ராஜாவே! இவ்விதமாய் சகலவவயவங்களுக்கும் வேறாய் நிற்கிற நீ நன்றாய் ஆலோசித்து, நான் யார் என்று சிந்தித்துக்கொள்". விஷ்ணு சகஸ்ர நாமத்தில் (கஙகூ-வது சுலோகம்) "𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌮𑌨𑍋 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌤𑍇𑌜𑍋 𑌬𑌲𑌂 𑌧𑍃𑌤𑌿𑌃 । 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌾𑌤𑍍𑌮𑌕𑌾𑌨𑍍𑌯𑌾𑌹𑍁𑌃 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌂 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞 𑌏𑌵 𑌚 ॥" என்றதினால் இந்திரியாதி சகலமும் வாசுதேவ சுவரூபமென்றும், சொல்லப்பட்டிருக்கிறது, இப்படி ரிஷிகளால் வெகு விதமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது.

"வேதங்களினால் பிரத்தியேகமாயும், வெகு விதமாயுஞ் சொல்லப்பட்டிருக்கிறது" என்றால், இருக்-யஜுஸ், ஸாமம், அதர்வணம் முதலிய வேதங்களால் க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞ சுவரூபம் வெவ்வேறாகச் சொல்லப்பட் டிருக்கிறது. தைத்திரீயோபநிஷத்தினால் ஆத்மாவிடத்திலிருந்து ஆகாசம்; ஆகாசத்திலிருந்து வாயு; வாயுவிலிருந்து அக்கினி; அக்கினியிலிருந்து ஜலம்; ஜலத்திலிருந்து பிருதிவி (பூமி); பூமியிலிருந்து பயிர்கள்; பயிரினால் அன்னம்; அன்னத்தினால் தேகம்; என்று க்ஷேத்திரமாகிற சரீரத்தைச் சொல்லி, இந்தச் சரீரத்தைக் காட்டிலும் அந்நியனாய் உள்ளே யிருக்கிறவன் பிராணமயன்; அவனுக்கு முள்ளே யிருக்கிறவன்; மனோமயன்; என்று சொல்லி இவனைக் காட்டிலு முள்ளே யிருக்கிறவன் விக்ஞானமயன், இவன்தான் க்ஷேத்திரக்ஞன், இவன்தான் ஜீவன், க்ஷேத்திரத்தைக்காட்டிலும் அந்

நியனை ஜீவனைக்காட்டிலும் அந்நியன் ஆநந்தமயன், இவன்தான் பரமாத்மா என்று க்ஷேத்திரக்ஞனைப்பற்றி இவ்விதமாய் வேதாதிகளில் சொல்லப்பட்டிருக்கிறது.

"பிரம்ம சூத்திரபதங்கள்" என்றால், "நவியதஸ்ருதே:" முதலிய சூத்திரங்களால் க்ஷேத்திர சுவரூபமும், "ஜ்ஞோத ஏவ" முதலிய சூத்திரங்களால் க்ஷேத்திரக்ஞ சுவரூபமும், சொல்லப்பட் டிருக்கிறது. "பராத்து தச்ச்ருதே:" முதலிய சூத்திரங்களால் பகவானால் நியமனம் (ஏவல்) செய்யப்படுகிற நிமித்தத்தினாலே க்ஷேத்திரம் க்ஷேத்திரக்ஞனிரண்டும் பகவத் சுவரூபமே யென்று சொல்லப்பட்டிருக்கிறது.

இவ்விதமாய் விஸ்தாரமாய்ச் சொல்லப்பட் டிருக்கிறதை உனக்கு சுருக்கமாய்ச் சொல்லுகிறேன் என்று பகவான் சொன்னதாக தாத்பரியம்.

(ஸூ) இந்த சுலோகத்தில் குறித்த, "பிரம்ம சூத்திரபதங்கள்" என்றவை, ஸ்ரீ மகாவிஷ்ணு அம்சாவதாரமான வேதவியாஸ மஹரிஷியினால் வெளியிடப்பட்டவைகளும் ஸ்ரீமத் சங்கராசாரியர் முதலான பாஷியக்காரர்களால் பாஷியம் செய்யப்பட் டிருக்கிறவைகளுமான பிரம்ம சூத்திரங்களே. அந்த சூத்திரங்கள் பாராயண யோக்கியங்களாயும் கிரந்தாக்ஷரத்தி லிதுவரை அச்சிடப்படாமையாலும் மூலசூத்திரங்களை மட்டும் அச்சிட்டு இப்புஸ்தகத்தின் கடைசியில் சேர்த்திருக்கின்றன. (௫)

---

௬. மஹாபூதாந்யஹங்காரோ புத்திரவ்யக்தமேவ ச।
இந்த்ரியாணி தஸைகஞ்ச பஞ்ச சேந்த்ரியகோசரா:॥

௭. இச்சா த்வேஷ: ஸுகம் து:கம் ஸங்காதஸ்சேதநா த்ருதி:।
ஏதத்க்ஷேத்ரம் ஸமாஸேந ஸவிகாரமுதாஹ்ருதம்॥

| | |
|---|---|
| மஹாபூதாநி | ஆகாசாதி பஞ்சமகாபூதங்கள் |
| அஹங்கார: | அகங்காரதத்துவம் |
| புத்தி: | மகத்தத்துவம் |
| அவ்யக்தமேவ | மூலப்பிரகிருதியாகிய மாயை |
| தஸ இந்த்ரியாணி | ஞானகருமேந்திரியங்கள் பத்து |
| ஏகம் | மனதொன்று |
| பஞ்ச இந்த்ரியகோசரா: | இந்திரியங்களுடைய விஷயங்களாகிய சப்த ஸ்பரிச ரூப ரஸ கந்தங்கள் ஐந்து |
| இச்சா | இச்சை (விருப்பு) |

| | |
|---|---|
| த்வேஷ: | துவேஷம் (வெறுப்பு) |
| ஸுகம் | சுகம் |
| து:கம் | துக்கம் |
| ஸங்காத: | சரீரம் அல்லது தத்துவக்கூட்டம் |
| சேதநா | ஞானத்மகமான மனோவிருத்தி |
| த்ருதி: | தைரியம் |
| ஸவிகாரம் | (இந்திரியம் முதலிய இப்படிப்பட்ட) விகாரங்களோடு கூடின |
| ஏதத் க்ஷேத்ரம் | இந்த க்ஷேத்திரமானது |
| ஸமாஸேந | சம்க்ஷேபமாக |
| உதாஹ்ருதம் | சொல்லப்பட்டது. |

ஆகாசாதி பஞ்சமகா பூதங்கள், அகங்காரதத்துவம், மகத்தத்துவம், மாயை, ஞானேந்திரிய கருமேந்திரியங்கள்பத்து, மனதொன்று விஷயங்கள் ஐந்து, இச்சை; துவேஷம், சுகம், துக்கம், சரீரம், ஞானமென்ற மனோவிருத்தி, தைரியம், இப்படிப்பட்ட விகாரங்களோடு கூடிய இந்த க்ஷேத்திர (தேகம்) மானது சம்க்ஷேபமாகச் சொல்லப்பட்டது.

(ஸ்ரீ) இந்த இச்சை முதல் தைரியம்வரையிலுள்ளவைகள், மனதைச் சேர்ந்தவை. அவைகள் அசேதனங்களாகையால் ஆத்மாவைச் சேர்ந்தனவல்ல.

(ஙூ) மகா பூதங்களென்று ஏன் சொலலப்பட்டதென்றால், சகலவிதமான விகாரத்திலும் வியாபித்திருப்பதினால்தான். இந்திரியங்களுக்குக் காணப்படுவன இனி சொல்லப்படுவதினாலே, இவ்விடத்தில் சூக்ஷ்மபூதங்களைச் சொன்னதாகக் கொள்ளவேண்டியது. ஸ்தூலபூதங்களல்ல. இந்த பூதங்களுக்குக் காரணம் அகங்காரதத்துவம். நானென்று உண்டாகிற தோற்றமே அகங்காரமெனப் படுகிறது. அகங்காரத்திற்குக் காரணம் மகத்தத்துவம். நிச்சய சுவரூபமானபுத்தியே மகத்தத்துவமெனப் படுகிறது. மகத்தத்துவத்திற்குக் காரணம் அவ்வியக்தம். காணப்படாததினால் அவ்வியக்த மென்கிற பெயர்வந்தது. இதானது, அவ்வியாகிருதம் ஈசுவரசக்தி மாயை இத்தியாதி பெயர்களாலும் சொல்லப்படுகிறது. (எ - வது அத்தியாயம், ச - வது சுலோகத்தில்) " பிந்நா ப்ரக்ருதிரஷ்டதா " என்று சொல்லப்பட்டிருக்கிறதாகிய மேல்கண்ட எட்டு, சங்கல்ப விகல்பசுவரூபமான மனதுள்பட இந்திரியங்கள் பதினொன்று, விஷயங்களைந்து, இவை யிருபத்து நான்கு தத்துவங்களென்று சாங்கியர்களால் சொல்லப்படுகின்றன.

இச்சைமுதல், தைரியம் வரையிலுள்ள, (ஏழு) குணங்களும், ஆத்மாவைச் சேர்ந்தனவென்று தார்க்கிகர்கள் சொல்லியிருக்கிறார்கள்.

அப்படியல்ல. "காரேஸூம்கூூ ஃ—ஃநவஸவ" என்ற சுருதிப்படி அவைகள் மனதைச் சேர்ந்தனவென்று பகவான் சொன்னதாகவே தாத்பரியம், "ஊூமஸரீரம கஸவெணய" என்கிற (இதின் உ-வது சுலோகத்)தினுல், தேகமானது க்ஷேத்திரமாகச் சொல்லப்பட்டிருக்கிறதே யென்ருல், இந்த சுலோகங்களில், மகாபூதங்கள்முதல், தைரியம் வரையில், சொல்லப்பட்டிருக்கிற ஒவ்வொன்றும் க்ஷேத்திரம்தான். அந்த க்ஷேத்திரங்களெல்லாம் சேர்ந்த கூட்டமானது தேகமாகச் சொல்லப்படுகிறது. ஆகையால்தான் தேகம் க்ஷேத்திரமென்று பொதுவாய்ச் சொல்லப்பட்டது. தேகமே க்ஷேத்திரமென்று சொல்லக் கூடாது. தேகமும் க்ஷேத்திரம்தான்; மகா பூதம்முதல், தைரியம் வரையில் சொல்லப்பட்டிருக்கிற ஒவ்வொன்றும் க்ஷேத்திரம் தான்.

(ரா) சரீரமே க்ஷேத்திரம். மகாபூதாதிகள் க்ஷேத்திரமென்று சிலர் சொல்லி யிருக்கிருர்கள். அவைகள் க்ஷேத்திரமல்ல. பஞ்சமகாபூதங்கள், அகங்கார தத்துவம், மகத்தத்துவம், பிரகிருதி இந்த எட்டுகளினுலேயும் தேகமுண்டான படியினுலே அந்த எட்டுதத்துவங்களையும் க்ஷேத்திரமென்று உபசாரமாய்ச் சொல்லப்பட்டதாகக் கொள்ளவேண்டியது. இந்திரியங்கள், மனசு, விஷயங்கள் ஆகிய இந்தப் பதினுறும், க்ஷேத்திரத்தை யாசிரயித் திருக்கிறவைகள், இச்சை, துவேஷம், சுகம், துக்கம் இந்நான்கும் தேகத்தினு லுண்டாக்கப்பட்டவைகள். அந்த இச்சைமுதலிய நான்கும் ஆத்மாவைச் சார்ந்தனவேயன்றி தேகத்தைச் சார்ந்தனவல்ல வானுலும் ஆத்மா தேகத்தை யடைந்தபிறகுதான் அவனுக்கு இச்சைமுதலிய குணங்க ளுண்டாகிறபடியால், தேகத்தைச் சார்ந்தனவாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. இச்சைமுதலியவை ஆத்மாவைச் சார்ந்தன வென்பது, வுாரஷுவெஷூஃ வாநாம = (இந்த அத்தியாயம் உக-வது சுலோகம்) என்கிற இடத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. வெதநாயூகிஃ = சேதனுக் காதாரமானது, அதாவது - பஞ்சமகாபூதாதி தத்துவக் கூட்டங்களாகிய இந்தச் சரீரமானது சுவர்க்காதிகளையும் மோக்ஷத்தையு மடையும் சேதனுகிய ஆத்மாவுக்கு ஆதாரமாயிருக்கிறது. இந்த ஆதாரத்தின் மூலமாய் சுகதுக்காதிகளை ஆத்மா வனுபவிக்கிருன். பிரகிருதிமுதல், பூமி வரையிலுள்ள, எட்டு திரவியங்களினு லுண்டானதாயும், இந்திரியங்களுக்கு ஆசிரயமாயும், இச்சை முதலியவைகளை யுண்டுபண்ணுகிறதாயும், பூதம் முதலியவைகளுடைய கூட்டங்க ளடங்கிய சுவரூபமாயும், சுகதுக்காதிகளை யனுபவிக்கிறதற்கு ஆதாரமென்கிற பிரயோஜனத்தை யுடையதாயு மிருக்கிற க்ஷேத்திரமென்கிற சரீரமானது சம்க்ஷேபமாக சொல்லப்பட்டிருக்கிறது.

(ஃ)-(மீ,வி) இச்சைமுதலியன க்ஷேத்திரத்தினுடைய விகாரங்கள்,

(ஸ்ரீ,வி) மகாபூதாதி க்ஷேத்திராபி மானிகளேயும் அவைகளுடைய விகாரங்களான இச்சை முதலியவைகளின் அபிமானிகளேயும் தெரிய வேண்டிய தாகையால் அவர்களேப்பற்றி சொல்லப்படுகிறது.

| | | |
|---|---|---|
| ஆகாசத்திற்கு | அபிமானி | விக்கிநேசுவரன் |
| வாயுவுக்கு | ,, | முக்கியவாயுவினலுண்டான மரீசி |
| அக்கினிக்கு | ,, | வன்னி (வஹ்நி) |
| ஜலத்திற்கு | ,, | வருணன் |
| பூமிக்கு | ,, | பூமிதேவி |
| அகங்காரதத்துவத்திற்கு | ,, | சிவன் |
| மகத்தத்துவத்திற்கு | ,, | பிரம்மா |
| புத்திக்கு | ,, | உமை (பார்வதி) |
| அவ்வியக்தத்திற்கு | ,, | இலக்ஷ்மி |
| மனதிற்கு | ,, | ஸ்கந்த இந்திர அநிருத்தர்கள் |
| சுரோத்திரத்திற்கு (செவி) | ,, | சந்திரன் |
| துவக்குக்கு (தோல்) | ,, | வாயுவின்குமாரன் |
| நேத்திரத்திற்கு (கண்) | ,, | சூரியன் |
| ஜிக்குவைக்கு (நாவு) | ,, | வருணனுடைய மற்ருெருருபம் |
| கிராணத்திற்கு (மூக்கு) | ,, | அசுவினிதேவதைகள் |
| வாக்குக்கு | ,, | அக்கினி |
| கைக்கு | ,, | வாயுவின் குமார்களான இரண்டு மருத்துக்கள். |
| பாதத்திற்கு | ,, | விஷ்ணுவின் ஆவேசத்தை யுடையவர்களாயும், சசியின் குமாரர்களாயு மிருக்கிற யக்ஞன், சம்பு இவர்கள். |
| பாயுவுக்கு | ,, | எமன் |
| உபஸ்தத்திற்கு | ,, | சிவனும் - மனுவும் |
| சப்தாதி விஷயங்களுக்கு | ,, | சிவபுத்திரர்கள் ஐவர் |
| இச்சைக்கு | ,, | இலக்ஷ்மி பாரதி (வாயுவின் பெண்சாதி) கள் |
| துவேஷம் துக்கம் } இவைகளுக்கு | ,, | கலி - துவாபரர்கள் |
| சுகத்திற்கு | ,, | முக்கியவாயு |
| திருதிக்கு | ,, | ஸரஸ்வதி - பாரதி (வாயு பெண்சாதி) கள் |
| சேதனேக்கு (அறிவு) | ,, | இலக்ஷ்மி |
| ஸங்காதத்திற்கு | ,, | அநேகர்களுண்டு. |

இந்தத் தத்துவங்களும், அவைகளின் அபிமானி தேவதைகளும், பகவானுக் கிருப்பிடமாகையால், க்ஷேத்திரமென்று சொல்லப்படு கின்றன. (கூ-எ)

---

அ. அமாநித்வமதம்பித்வமஹிம்ஸா க்ஷாந்திரார்ஜவம்।
ஆசார்யோபாஸநம் ஶௌசம் ஸ்தைர்யமாத்மவிநிக்ரஹ꞉॥

கூ. இந்த்ரியார்தேஷு வைராக்யமநஹங்கார ஏவ ச।
ஜந்மம்ருத்யுஜராவ்யாதிது꞉கதோஷாநுதர்ஶநம்॥

க0. அஸக்திரநபிஷ்வங்க꞉ புத்ரதாரக்ருஹாதிஷு।
நித்யம் ச ஸமசித்தத்வமிஷ்டாநிஷ்டோபபத்திஷு॥

கக. மயி சாநந்யயோகேந பக்திரவ்யபிசாரிணீ।
விவிக்ததேஶஸேவித்வமரதிர்ஜநஸம்ஸதி॥

கஉ. அத்யாத்மஜ்ஞாநநித்யத்வம் தத்த்வஜ்ஞாநார்ததர்ஶநம்।
ஏதஜ்ஜ்ஞாநமிதி ப்ரோக்தமஜ்ஞாநம் யததோ(அ)ந்யதா॥

| | |
|---|---|
| அமாநித்வம்* | தன்னைப் புகழ்ந்துகொள்ளாமை |
| அதம்பித்வம்† | டம்பமின்மை |
| அஹிம்ஸா‡ | பரஹிம்சை செய்யாமை |
| க்ஷாந்தி꞉§ | பொறுமை |
| ஆர்ஜவம்¶ | கபடமின்மை |

---

* (ரா) பெரியோர்களை அவமதிக்காமலிருப்பது.

† (ஶம்) தன்னுடைய தருமங்களைப் பிரகடனை செய்வதாகிய டம்பமில்லா மை. (ரா) தானதிக தருமிஷ்டனென்று ஜனங்களால் கீர்த்திபெற வேண்டுமென்று உத்தேசித்து தருமங்களைச்செய்வது டம்பம்; அதில்லாமல் தருமம் செய்தல். (ஆ) (ஶ்ரீ,வி) தான் அற்பனானாலும் மிகத்தெரிந்தவனாகக் காட்டிக்கொள்ளாமை.

‡ (ரா) வாக்கு, மனசு, தேகமிவைகளால், பிறருக்குத் துன்பஞ் செய்யாமை.

§ (ஶம்) (ரா) தனக்குக் குற்றஞ்செய்தவனைக் குறித்து மனதில்கூட விகா ரமடையாமலிருத்தல்.

¶ (ஶம்) (ஶ்ரீ) நேரான மார்க்கத்திலிருக்குதல். (ருசுத்துவம்) (ரா) (ஆ) பிறர்விஷயத்தில், மனசு, வாக்கு, தேகங்களினால் ஒரேவிதமாய் நடக்குதல். (ஶ்ரீ,வி) சன்மார்க்கத்தில் மனோவாக்கு காயங்களால் ஒரேவிதமாய் நடககுதல்.

| | |
|---|---|
| [illegible] * | சத்குருசேவை |
| [illegible] † | மனச்சுத்தி, சரீரசுத்தி |
| [illegible] ‡ | சன்மார்க்கத்தில் விடாமுயற்சி |
| [illegible] § | தேகஸ்வாதீனம் |
| [illegible] ¶ | இந்திரியங்களுடைய விஷயங்களில் வெறுப்படைதல் |
| [illegible] ‖ | தானென்கிற அகங்காரமின்மை |
| [illegible] ÷ | பிறப்பு இறப்பு மூப்பு நோய் இவைகளில் துக்கத்தையும், தோஷத்தையும், அறிதல், அல்லது துக்கமாகிய தோஷத்தை அறிதல் |

* (ஸ) மோக்ஷத்திற்கு சாதனமான ஞானத்தை யுபதேசித்த குருவினுடைய சேவை. (ரா) தனக்கு ஞானோபதேசஞ் செய்த குருவினிடத்தில் நமஸ்காரஞ்செய்து, தன்னால் செய்யப்படவேண்டியதைக் கேட்டறிந்து, அவருடைய காரியங்களில் சரியாய் நடப்பது. (ஸ்ரீ,வி) ஞானிகளுடைய சேவைசெய்தல்.

† (ஸ) மண்ணினாலும், ஜலத்தினாலும், தேகத்திலுள்ள அழுக்குகளைச் சுத்தஞ் செய்துகொள்ளுதலும், மனதிலுள்ள காமக்குரோதாதிகளை விட்டு நிர்மலமாயிருக்குதலும். (ஸ்ரீ) பாக்கியந்தர சுத்தி. (ஸ்ரோ) "[illegible] ॥" — ஜலாதிகளினால் தேகசுத்தி, ஆசைமுதலியவற்றை விடுதலினால் மனச்சுத்தி என் றிருவகை. (ரா) ஆத்ம ஞானத்தையும், அதற்கு சாதனபூதமானதையும், சம்பாதிக்கவேண்டியதற்காக மனசு வாக்கு தேகங்களுக் குண்டாகவேண்டிய சாஸ்திரோக்தமானசுத்தி.

‡ (ஸ) மோக்ஷசாதனமான முயற்சியிலேயே ஸ்திரமாயிருக்குதல். (ரா) வேதாந்த சாஸ்திரார்த்தத்தில் எப்பவும் திருடமான நம்பிக்கையுடனிருக்குதல். (ஸ்ரீ,வி) பயம் முதலியவைகளினால் சுவதருமத்தை விடாமலிருக்குதல்.

§ (ஸ) அந்நியவிஷயத்திலிருக்கிற தேகேந்திரியாதிகூட்டங்களை மோக்ஷசாதனமான காரியத்திலேயே உபயோகித்தல். (ரா) ஆத்மசுவரூபத்தைவிட வேறான விஷயத்திலுள்ள மனதை சுவாதீனஞ் செய்து, ஆத்மாவிடத்திலேயே வைத்தல். (ஸ்ரீ,வி) விசேஷமான மனோநிக்கிரகம்.

¶ (ஸ) இஷ்டமான இஹபரவிஷயங்களில் ஆசையற்றிருக்குதல். (ரா) ஆத்மாவுக்கன்னியமான விஷயங்களிலிருக்கிற தோஷத்தை யறிந்து, அது தனக்குக் கெடுதியானதென்று தெரிந்து, பயத்துடன் அதில் எப்பவும் பற்றற்றிருக்குதல்.

‖ (ரா) தேகேந்திரியங்களில் தானென்கிற அகங்காரமற்றிருப்பதும், தன்னுடையதல்லாத வஸ்துக்களில், தன்னுடையதென்கிற அபிமானமற்றிருப்பதும். (ஸ்ரீ,வி) தன்னிடத்திலில்லாமலிருக்கிற குணங்கள் தன்னிடத்திலிருப்பதாகவெண்ணி அக்ஞானமடையாமலிருக்குதல்.

÷ (ஸ) பிறப்பிறப்பு, மூப்பு, நோய், துக்கம் - இவைகளில் தோஷத்தை யறிதல், அதாவது, பிறப்பிலுள்ள தோஷம் கெர்ப்பவாசம் முதலியன. இறப்பிலுள்ள

| | |
|---|---|
| 𑌪𑍁𑌤𑍍𑌰𑌦𑌾𑌰𑌗𑍃𑌹𑌾𑌦𑌿𑌷𑍁 | புத்திரன், தாரம், கிரகம், முதலியவைகளிலே |
| 𑌅𑌸𑌕𑍍𑌤𑌿𑌃* | பிரியமற்றிருக்குதல் |
| 𑌅𑌨𑌭𑌿𑌷𑍍𑌵𑌙𑍍𑌗𑌃† | (புத்திர தாராதிகளுடைய சுகதுக்கங்களில்) அபிமானமற்றிருக்குதல் |
| 𑌇𑌷𑍍𑌟𑌾𑌨𑌿𑌷𑍍𑌟𑍋𑌪𑌪𑌤𑍍𑌤𑌿𑌷𑍁 | இஷ்டா நிஷ்டங்கள் நேரிட்ட காலங்களிலேயும் |
| 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌚 | எப்போதும் |
| 𑌸𑌮𑌚𑌿𑌤𑍍𑌤𑌤𑍍𑌵𑌂‡ | ஒரேவிதமான மனதோடுகூடியிருக்குதல் |
| 𑌮𑌯𑌿 | பரமேசுவரனாகிய என்னிடத்தில் |
| 𑌅𑌨𑌨𑍍𑌯𑌯𑍋𑌗𑍇𑌨§ | சர்வமும் ஆத்மசுவரூபமென்று தெரிந்து |
| 𑌅𑌵𑍍𑌯𑌭𑌿𑌚𑌾𑌰𑌿𑌣𑍀¶ | ஸ்திரமான, அல்லது, சலனமற்ற |
| 𑌭𑌕𑍍𑌤𑌿𑌃‖ | பக்திசெய்தல் |
| 𑌵𑌿𑌵𑌿𑌕𑍍𑌤𑌦𑍇𑌶𑌸𑍇𑌵𑌿𑌤𑍍𑌵𑌂+ | ஜனங்களில்லாத தனியிடத்தில் வாசஞ்செய்தல் |

தோஷம் மரணவேதனை முதலியன. மூப்பிலுள்ளதோஷம் ஞாபகக் குறைவு, பலக்குறைவு, சுவஜனங்களாலவமதிப்பு முதலியன. நோயிலுள்ள தோஷம், கண்தலை முதலியவைகளில் வியாதிமுதலியதாலுண்டான துன்பங்கள். துக்கத்திலுள்ள தோஷம், ஆத்தியாத்மிக ஆதிபௌதிக ஆதிதெய்விக முதலிய துக்கங்கள். (இந்த அர்த்தங்களை யல்லாமல் அந்வயத்தில் போட்டிருக்கிற அர்த்தமும் சொல்லப்பட்டிருக்கிறது. (ஈா) தேகமிருக்கிறவரையில் பிறப்பு, இறப்பு, மூப்பு, நோய், துக்கம் முதலிய தோஷங்கள் விடாவென்கிற அநுசந்தானத்தோடிருக்குதல்.

* (ஈா) ஆத்மாவைத்தவிர அன்னியமான (புத்திரதாராதி) வஸ்துக்களில் சம்பந்த மற்றிருக்குதல்.

† (ஈா) சாஸ்திரோக்தமான கருமானுஷ்டான விஷயங்களில் தவிர மற்ற விஷயமான விவகாரமற்றிருப்பது. (ஐ) (மீ,வி) புத்திரதாராதிகளில் விசேஷசிநேகமற்றிருப்பது.

‡ (ஈா) (மீ,வி) சந்தோஷத்தையும் விசனத்தையும் விட்டிருக்குதல்.

§ (ஶ௦) வாசுதேவனைத் தவிர வேறே உத்தமமானதில்லை என்கிற நிச்சய பக்தியோடுகூடின அபேத சமாதியினாலே. (ஈா) ஏகாந்த யோகத்தினாலே. (மீ,வி) இலக்ஷுமி பிரம்மா முதலிய யாரும் சுவதந்திரரல்ல, ஈசுவரனே சுவதந்திரனென்கிற எண்ணத்துடன் ஏகாந்தபக்தி செய்வதினாலே.

¶ (ஶ௦) சலிக்காமலிருக்கிற. (ஈா) ஸ்திரமாயிருக்கிற.

‖ (ஶ௦) பஜனம்.

+ (ஸ்ரீ) சித்தசுத்தியை யுண்டாக்கும் தேசத்தில். (ஶ௦) சுவபாவத்தினாலேயாவது, சுத்திசெய்வதினாலே யாவது சுத்தமாயிருக்கிறவும் திருடர்கள், துஷ்டஜந்துக்கள், முதலியவை யில்லாதவும், காடு, நதிக்கரை, மணற்றிட்டு, கோவில் முதலிய விடங்களில் வசித்தல். (ஈா) இரகசியமான ஸ்தலத்தில் வசித்தல். (மீ,வீ) ஜனங்களில்லாதவும் சுத்தமானவுமான ஸ்தலத்தில் வசிப்பது.

| | |
|---|---|
| ஜநஸம்ஸதி * | (அவிவேகிகளான) ஜனங்களுடைய கூட்டத்தில் |
| அரதி: † | விருப்பற்றிருக்குதல் |
| அத்⁴யாத்மஜ்ஞாநநித்யத்வம் ‡ | ஆத்மதத்துவஞானத்தி லெப்போது மிருக்குதல் |
| தத்த்வஜ்ஞாநார்த²த³ர்ஶநம் § | தத்துவஞானத்திற்கு உத்தமபலன் மோக்ஷமென்றறிதல் |
| ஏதத் | இந்த இருபதும் |
| ஜ்ஞாநமிதி ¶ | ஞானமென்பதாக |
| ப்ரோக்தம் | சொல்லப்பட்டிருக்கிறது |
| அத: அந்யதா யத் | இதைவிட அந்நியமானது எதுவோ (அது) |
| அஜ்ஞாநமேவ ‖ | அக்ஞானமே. |

* (ஶம்) மூடர்களாயும், அசுத்தர்களாயும், வணக்கமற்றவர்களாயு மிருக்கிற பிராகிருத ஜனங்களுடைய கூட்டத்தில்.

† (ஶம்) (ஸ்ரீ) (ரா) பிரீதியற்றிருக்குதல்.

‡ (ஶம்) ஆத்மசுவரூப ஞானத்தி லெப்போது மிருக்குதல். (ரா) ஆத்மசுவரூப ஞானநிஷ்டையி லிருக்குதல். (மீ,வி) பரமாத்மஞானஞ் சம்பாதிப்பதிலேயே யெப்பவு மிருக்குதல்.

§ (ஶம்) மேல்சொன்ன, அமாநித்வாதிகளாலுண்டாகும் தத்துவஞானத்திற்கு உத்தமபலன் மோக்ஷமென்றறிதல். (ரா) தத்த்வஜ்ஞாநார்த²சிந்தநம் = எப்போதும் தத்துவஞானத்தினுடைய பிரயோசனத்தைச்சிந்தித்தல். (ஹ) (மீ,வி) தத்துவஞானத்தைச்சம்பாதிக்க சாஸ்திரவிசாரணை செய்தல், அல்லது (மீ,வி) தத்துவ ஞானத்திற்கு விஷயமு யிருக்கிற விஷ்ணுவின் தரிசனம்.

¶ (ஶம்) அமாநித்வாதி (௨௦) கள் ஞானத்திற்குக் காரணமாகையாலவைகளை யனுஷ்டிக்க வேண்டியதென்பதை உறுதிப்படுத்தும்பொருட்டு, ஞானசாதனமான அவைகள் ஞானமென்றே சொல்லப்பட்டன. (ஸ்ரீ) ஞானசாதனமானது. (ரா) அமாநித்வாதிகள் ஆத்மஞானத்திற்குக் காரணமானபடியால், ஞானமென்று சொல்லப்பட்டன. (மீ,வி) அமாநித்வாதிகள் ஞானமும், ஞானசாதனமு மானவைகள்.

‖ (ஶம்) (ஸ்ரீ) அமாநித்வாதி ஞானகாரணங்க ளானவைகளுக்கு எதிர்மறையா யிருப்பவைகள் எவையோ, அவைகள்தான் அக்ஞானம். துக்கத்தைக் கொடுக்கப்பட்டவைக ளாகையால், அவைகளை நிவர்த்திக்கும் பொருட்டு அறியவேண்டும். (ரா) அமாநித்வாதிகளுக்கு விரோதியானவைகள் துக்கத்தை யுண்டாககு மாகையால், அக்ஞானமே.

தற்புகழ்ச்சி யில்லாமை, டம்பமின்மை, பிறருக்குத் துன்பம் செய்யாமை, பொறுமை, கபடமின்மை, சத்குருசேவை, மனச்சரீரசுத்தி, சன்மார்க்கத்தில் விடாமுயற்சி, தேககசுவாதீனம், இந்திரியங்களுடைய விஷயங்களில் வெறுப்படைதல், அகங்காரமின்மை, பிறப் பிறப்பு மூப்பு நோய் இவைகளில் துக்கதோஷங்களை யறிதல், புத்திரதார கிரகங்களில் பிரியமற்றிருக்குதல், அபிமானமற்றிருக்குதல், இஷ்டா நிஷ்டங்கள் நேரிட்டபொழுதும் ஒரேவித மனதோடு கூடியிருக்குதல், சகலமும் ஆத்மசுவரூபமென்று தெரிந்து பரமேசுவரனாகிய என்னிடத்திலேயே ஸ்திரமான பக்திசெய்தல், ஜனங்களில்லாத இடத்தில் வாசஞ்செய்தல், அவிவேகிகளான ஜனங்களுடைய கூட்டத்தில் சேராமலிருக்குதல், ஆத்மதத்துவஞானத்தி லெப்போது மிருக்குதல், தத்துவஞானத்திற்கு உத்தமமான பலன் மோக்ஷமென்றறிதல், இந்த இருபதும் ஞானமென்பதாக சொல்லப்பட்டிருக்கின்றன. இதற்கு அன்னியமானது அக்ஞானமே. (அ-கூ-கO-கக-கஉ)

---

கங. ஜ்ஞேயம் யத்தத் ப்ரவக்ஷ்யாமி யஜ்ஜ்ஞாத்வாऽம்ருதமச்நுதே।
அநாதிமத்பரம் ப்ரஹ்ம நஸத்தந்நாஸதுச்யதே॥

| | |
|---|---|
| ஜ்ஞேயம் | ஞேயமென்பது (அறியவேண்டியது) |
| யத் | எதுவோ |
| யத் ஜ்ஞாத்வா | எதையறிந்து |
| அம்ருதம் | மோக்ஷத்தை |
| அச்நுதே | அடைவானோ |
| தத் | அதை |
| ப்ரவக்ஷ்யாமி | சொல்லுகிறேன் |
| அநாதிமத் | ஆதியற்ற |
| பரம் ப்ரஹ்ம | பரப்பிரம்மமான |
| தத் | அது |
| ஸத் | சத்தாக |
| ந உச்யதே | சொல்லப்படுகிறதில்லை |
| அஸத் ந | அசத்தாகசொல்லப்படுகிறதுமில்லை. |

ஞேயமென்ப தெதுவோ, எதையறிந்து (ஜிவன்) மோக்ஷமடைவானோ, அதைச் சொல்லுகிறேன். ஆதியற்ற பிரம்மமான அது சத்தாக சொல்லப்படுகிறதில்லை, அசத்தாக சொல்லப் படுகிறதுமில்லை, (ஏனென்றால், விதி நிஷேதங்களுக்கு அந்நியமானதென்பது கருத்து.)

(ஸ்ரீ) அநாதிமத் பரம்ப்ரஹ்ம, என்றவிடத்தில் ஆதியற்றதென்கிற அர்த்தமானது (அநாதி) அநாதி என்கிற பதத்தினாலேயே கிடைத்திருக்கையில் (மத்) மத் - என்பதற்குப் பிரயோஜன மில்லாவிடினும், சாந்தஸமானதால் (வேதத்தைப்போலொத்த தானதால்) இப்படி ஏன் பிரயோகிக்கப்பட்ட தென்கிற கேள்வி கூடாது. அல்லது, அநாதி — ஆதியற்ற, உத்தரம், மத் — விஷ்ணுவாகிய சகுணனாயிருக்கிற என்னுடைய, பரம் — நிர்குண சுவரூபம், ப்ரஹ்ம — பிரம்மம், தத் — அது, ஸத்ந்நாஸத் — பிரமாணத்தினாலே விதிக்கப்படுகிறதில்லை, நாஸத் — பிரமாணாதி விலக்கினாலே விலக்கப்படுகிறதுமில்லை; ஏனென்றால், இந்திரிய கோசரமல்ல வாகையால்தான்.

(ஶம்) அநாதிமத்பரம்ப்ரஹ்ம, என்கிற வாக்கியத்தைச் சிலர், அநாதி — ஆதியற்ற, மத் — அஹம்வாஸுதேவாக்யா — வாசுதேவனான நானே, பரம் — பராசக்தி: — உத்தமமான சக்தியாக, யஸ்ய — எதற்கிருக்கிறேனோ, தத் — அது, ப்ரஹ்ம — பிரம்மமென்று அர்த்தஞ் செய்திருக்கிறார்கள். இது சரியான அர்த்தத்தைக் கொடுக்குமாகில், இப்படிச் செய்ததுசரியே. அந்த அர்த்தத்தினால் வாசுதேவனாகிய என்னை உத்தமமான சக்தியாக உடைத்தாயிருப்பது பிரம்மமென் றாகிறது. அதாவது, சக்தியோடிருக்கிற சகுணத்தைச் சொன்னதாக வாகிறது. இந்த சுலோகத்தில் பிரயோகிக்கப்பட்டிருக்கிற "நஸத்தந்நாஸதுச்யதே" என்பதினாலே நிர்குணப் பிரம்மம் குறிப்பிடப் படுகிறதேயன்றி சகுணமல்ல. ஆகையாலந்த அர்த்தஞ் சரியல்ல. மத் - என்பது சுலோக பூர்த்திக்காக சேர்க்கப்பட்டதே யன்றி அதற்கு விசேஷமான அர்த்தமில்லையென்று அறியத்தக்கது. தெரியவேண்டிய பிரம்மமானது சத்துமல்ல, அசத்துமல்ல வென்று இந்த சுலோகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. (சத் - என்றால், இருக்கிறது. அசத் - என்றால், இல்லாதது) ஆகையாலிருக்கிறதும் பிரம்மமல்ல, இல்லாததும் பிரம்மமல்ல, என்று சொன்னதாக ஆகிறதே! இது சரியானதென்று சொல்லலாமா வென்றாலோ, அடியிற்கண்ட சுருதிப் பிரமாணங்களைக்கொண்டு அப்படிச் சொல்லலாம், (அந்த சுருதிகளை விரிவாக அடியில் குறித்து அதின் அர்த்தமும் எழுதப்படுகிறது.)

"ஸஏஷ: நேதிநேத்யாத்மா,
"அக்ருஹ்யோ நஹிக்ருஹ்யதே, அ
"ஶீர்யோ நஹிஶீர்யதே, அஸம்
"கோ நஹிஸஜ்யதே, அஸிதோ

"அந்த இந்த ஆத்மாவானவர் இல்லை இல்லையென்று சொல்லி உபதேசிக்கத்தக்கவர். (ஏனெனில்) இந்திரியங்களுக்கு விஷயமல்லாததினால் கிரகிக்கப்படத் தக்கவ

"நவ்யத²தே நரிஷ்யதி ஏ-
"தமு ஹைவைதே ந தரத இதி"
(பிரக தாரண்ணியக உபநிஷத் ௬-வது அத்தியாயம், ௪-வது பிராம்மணம் ௨௨-வது வாக்கியம்.)

"ரன்று. நாசமற்றவ ராகையால் "நாச மடைவிக்கத் தக்கவரன்று. "சங்கமற்றவ ராகையால் ஒன்றிலு "ம் ஒட்டுகிறவரன்று. கட்டுக்குள் "படாததினால் துன்ப மடைகிறதி "ல்லை. நசிக்கத்தக்கவரல்ல. இப்ப "டி யறிந்தவனைப் பாபபுண்ணியம் "தொடருகிறதில்லை."

"அஸ்தூ²லமநண்வஹ்ரஸ்வமதீ³ர்க⁴
"மலோஹிதமஸ்நேஹமச்சா²யமதமோ
"அவாய்வநாகாஶமஸங்க³மரஸ
"மக³ந்த⁴மசக்ஷுஷ்கமஶ்ரோத்ரமவாக்³
"அமநோऽதேஜஸ்கமப்ராணமமுக²
"மமாத்ரமநந்தரமபா³ஹ்யம் நதத³
"ஶ்நாதி கிஞ்சந நதத³ஶ்நாதி கஶ்சந"
(பிரக தாரண்ணியக உபநிஷத், ௫-வது அத்தியாயம், ௮-வது பிராம்மணம், ௮-வது வாக்கியம்.)

(அந்தப்பிரம்மம்) "ஸ்தூலமு "மல்ல, அணுவுமல்ல, குட்டையு "மல்ல, நெட்டையுமல்ல, செகப் "பல்ல, பசையுள்ளதல்ல (என்று "ல், எண்ணெய் முதலிய திரவமு "ள்ள வஸ்துவைப்போல ஒட்டத் "தக்கதல்ல,) நிழலுள்ளதல்ல, இ "ருட்டுமல்ல, வாயுவல்ல, ஆகாச "முமல்ல, ஒன்றுடன் சம்பந்தமுள் "ளதல்ல, இரஸமுள்ளதல்ல, வாச "னையு முள்ளதல்ல, கண்ணுடைய "தல்ல, காதுடைய தல்ல, வாக்கு "டையதல்ல, மனதுடைய தல்ல, "காந்தி யுடையதல்ல, பிராணனை "யுடையதல்ல, முகமுடையதல்ல, "பரிமாண முடையதல்ல, உள்ளே "யிருப்பதுமல்ல, வெளியி லிருப் "பது மல்ல, அதொன்றையும் சா "ப்பிடுகிற தில்லை, அதை (ஒரு "போதும்) ஒன்றும் சாப்பிடுகிறது "மில்லை".

இந்த சுருதிகளினால், விஶேஷப்ரதிஷேதே⁴நைவ நிர்தி³ஶ்யதே = விசேஷங்களை விலக்குவதினாலேயே பிரம்மம் நிரூபித்துக் காட்டப்படுகிறது. ஏனென்றால், வாக்கு முதலியவைகளுக்கு பிரம்மம் விஷயமல்ல வாகையால்தான். எந்தவஸ்துவானது இருக்கிறதோ, அது இருக்கிறதென்று சொல்லப்படுகிறது. இருக்கிறதென்று எது சொல்லப்படுகிற தில்லையோ, அது இலலவே யில்லை. சகலவஸ்துவும் இருக்கிறதென்பதையாவது, அல்லது, இல்லையென்பதை யாவது அனுசரித்தே யிருக்கிறது. அப்படி யிருக்க பிரம்மமானது இருக்

கிறதென்கிற புத்திக்கு (ஞானத்திற்கு) விஷயமானதா? அல்லது, இல்லையென்கிற புத்திக்கு (ஞானத்திற்கு) விஷயமானதா? என்னும் பக்ஷத்தில், இந்திரியாதிகளுக்கு விஷயமாக வெப்போதாகிற தில்லையோ, அப்போது இந்த இரண்டு புத்திக்கும் விஷயமானதல்ல. குடம் முதலிய வஸ்துக்கள் இருக்கிறதென்கிற புத்திக்கு விஷயமாகிறது. இல்லையென்கிற புத்திக்கும் குடம் முதலியவைதான் விஷயம். (அதெப்படி யென்றால், ஒரு வஸ்துவை என்றைக்கும் பாராமலும் கேட்காமலு மிருக்கையில், இல்லையென்றுமாத்திர மெப்படி சொல்லக்கூடும். எந்த வஸ்துவை இந்திரியாதிகளால் அறியக்கூடுமோ அதைத் தான் இல்லையென்றும் சொல்லக்கூடு மென்பதே) ஆகையால், அறிந்துகொள்ள வேண்டியதாகச் சொல்லப்பட்ட பரப்பிரம்ம மானது இந்திரியங்களுக்கு விஷய மல்லாதபடியால், சப்த (வேத) த்தினாலேயே யறியத் தகுந்தது. அதினால்தான் சத்துமல்ல அசத்துமல்ல வென்று சொல்லப்பட்டது. (இப்படியே கேனோபநிஷத் வாக்கியத்தில்) “அந்யதேவ தத்விதாத஥ோ அவிதாதயி — பிரம்மமானது தெரிந்தபொருளுக்கும், தெரியாத பொருளுக்கும் அந்நியமானது” என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஒரு வஸ்துவைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டு மானால், ஜாதி, கிரியை, குணம், சம்பந்தம், இவைகளை யொட்டித்தான் சொல்லவேண்டும். அதெப்படி யென்றால், மாடு குதிரை முதலியபதங்கள் ஜாதியை ஒட்டியும், பாடகன் சமயல் செய்கிறவன் முதலியபதங்கள் கிரியைகளை யொட்டியும், சிவப்பு கருப்பு முதலியபதங்கள் குணங்களை யொட்டியும், மிகச் செல்வமுடையவன் அதிகப் பசுக்களையுடையவன் முதலியன சம்பந்தத்தை யொட்டியும் சொல்லப்படுகின்றன. உலகத்திலுள்ள சகல சொற்களும் இப்பெயர்க்கொத்த ஒருவகையை யொட்டியே தானிருக்கின்றன. பிரம்மமோ, நிஷ்க்ரியம்—கிரியை யற்றது, நிஷ்களம் — அவயவமற்றது, ஶாந்தம் — சாந்தமானது, இதுமுதலான சுருதிவாக்கியங்க ளிருப்பதினால், ஜாதிமுதலிய சம்பந்தத்தில் சொல்லத்தக்கதல்ல; இரண்டு வஸ்துக்களிருந்தாலல்லவா ஒன்றுடன் மற்றொன்றுக்கு சம்பந்தம் சொல்லக்கூடும். “ஏகமேவாத்விதீயம் ப்ரஹ்ம — பிரம்ம மொன்றே இரண்டாவதில்லை” என்கிற சுருதி வாக்கியப்படி பிரம்மத்தைத்தவிர வேறே வஸ்துக்களே கிடையாதாகையால், பிரம்மத்திற்கு வேறொன்றுடன் சம்பந்தஞ் சொல்லக்கூடாது. ஆகையால், பிரம்மத்தை, சத் என்றாவது அசத் என்றாவது சொல்லக்கூடாது. “யதோ வாசோ நிவர்த்தந்தே, அப்ராப்ய மநஸா ஸஹ — வாக்கானது எதற்கு இலக்ஷணம் சொல்லமாட்டாமல் மனதுடன் பின்னடைகிறதோ” என்கிற இந்த சுருதிவாக்கியத்தைப்பார்க்க. அந்தப் பிரம்

மம் தன்னுடைய ஆத்மாவானபடியினாலே, அதை ஒரு பிரமாணமும் குறித்துக்காட்டவும் மாட்டாது. (அத்தி - கஅ, சுலோகம் - ருo, பாஷியம் பார்க்க.)

(ளா) "ஜ்ஞேயம்" ஜ்ஞேயமென்பது அமாநித்வம் முதலியவைகளாலறியத் தகுந்ததாகிய பிரத்தியகாத்ம சுவரூபம் (ஜீவசுவரூபம்). யஜ்ஜ்ஞாத்வாऽம்ருதமஶ்நுதே = எந்தசுவரூபத்தை யறிந்தால் ஜனனமரணம் முதலிய பிரகிருதி, சம்பந்தத்திலிருந்து விடுபட்டு சுத்தாத்ம சுவரூபத்தை அடைவானோ, தத் = அந்தஜ்ஞேய மென்கிற அறியவேண்டிய முக்தாத்ம சுவரூபமானது, அநாதி = ஆதியற்றது. இதினால் (அநந்தம்) அந்தமற்றதென்றும் கொள்ளவேண்டியது. "நஜாயதே ம்ரியதே" என்கிற சுருதியையும், இதன் அத்தியாயம் - உ, சுலோகம் - உo, யும் பார்க்க. மத்பரம்=என்னைப்பரமான (உத்தமமான) தெய்வமாக வுடையது. ஜீவசுவரூபம் வேறே என்பதைச் சொல்லியிருக்கிற "அவ்யக்தோऽயமசிந்த்யோऽயம்" என்கிற (இதின் எ - வது அத்தியாயம், ரு - வது சுலோகம் பார்க்க.) பிரத்தியகாத்ம சுவரூபமானது பகவானுக்கு சரீரமாயும் சேஷபூதமாயு மிருக்கிறது. "ய ஆத்மநி திஷ்டந் ஆத்மநோऽந்தரோ யமாத்மா ந வேத யஸ்யாத்மா ஶரீரம்" "ப்ரதாநக்ஷேத்ரஜ்ஞபதிர் குணேஶ:" இப்படிப்பட்ட சுருதிவாக்கியங்களினால், ஆத்மாவும் (ஜீவன்) ஜடவஸ்துக்களும் பரமாத்மாவுக்குச் சரீரமென்றும், பரமாத்மா ஜீவாதிகளுக்கு சுவாமியென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. "ப்ரஹ்ம"=ப்ருஹத்த்வம் (அதாவது, மகத்தான அல்லது பூர்ணமான பரிமாணத்தை) உடையதும் சரீரத்தைவிட அன்னியமுமான க்ஷேத்திரக்ஞத்துவம். "ஸசாநந்த்யாய கல்பதே" என்கிற சுருதியைப் பார்க்க. அந்த ஆத்மாவுக்குப் பல சரீரங்களுக்குள் ளடங்கிய குறைந்த அளவானது சுவபாவகருமத்தினால் வந்தது. கரும பந்தத்திலிருந்து விடுபட்டவன் மகத்தான அளவையுடைய சுவரூபத்தை யடைகிறான். ஆத்மா பூர்ணத்துவம் அல்லது மகத்துவ முடையவன் ஆகையால், ஆத்மாவுக்கு (ப்ரஹ்ம) பிரம்மம் என்கிற பதம் பிரயோகிக்கப்பட்டிருக்கிறது. எங்கே அப்படிப் பிரயோகிக்கப்பட்டிருக்கிறதென்றால், "ஸகுணாந் ஸமதீத்யைதாந் ப்ரஹ்மபூயாய கல்பதே" "ப்ரஹ்மணோ ஹி ப்ரதிஷ்டாஹமம்ருதஸ்யாவ்யயஸ்ய ச" (இதின் கச - வது அத்தியாயம், உசூ - உஎ - சுலோகங்கள்) "ப்ரஹ்மபூத: ப்ரஸந்நாத்மா ந ஶோசதி ந காங்க்ஷதி । ஸம: ஸர்வேஷு பூதேஷு மத்பக்திம் லபதே பராம்" (இதின் கஅ - வது அத்தியாயம், ருச - வது சுலோகம்) இவைகளில்தான், ஸத் = காரியம், அஸத் = காரணம். ஜீவன் தனது பிரகிருதி

விமுக்தாத்ம சுவரூபத்தை யடைந்தால், அப்போது அவனைக் காரிய மென்றாவது காரணமென்றாவது சொல்லக்கூடாது. அவன் காரியா வஸ்தையிலிருக்கும்போது தேவ மனுஷியாதி ரூபத்தை யடைகிறபடியால், அப்போது (ஸச) காரியமென்று சொல்லப்படுகிறான். அவன் காரணாவஸ்தையி லிருக்கும்போது தேவாதி நாமரூப மில்லையாகை யால் - அப்போது (அஸச) காரணமென்று சொல்லப்படுகிறான். "அஸதேவேதமக்ர ஆஸீத் ததோவை ஸதஜாயத" இத்தியாதி சுருதிகளைப் பார்க்க. இந்தக்காரிய காரண அவஸ்தையானது, கருமசுவரூபமான அவித்தையின் சம்பந்தத்தா லுண்டானதேயன்றி சுவபாவமல்ல. ஆயையால், ஸச அஸச சப்தங்களினால் ஆத்மசுவரூபம் சொல்லப்படுகிறதில்லை, "அஸதேவேதமக்ர ஆஸீத் என்கிறசுருதி வாக்கியத்தில், சகலத்திற்கும் காரணம் பிரம்மமென்று சொல்லியிருக்க, ஆத்மாவுக்குக் காரணத்துவ மெப்படி சொல்லலாமென்றாலோ, சர்வகாரணம் பிரம்மமென்பது சரியே; சூக்ஷ்மசிதசித் வஸ்துக்களான க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞர்களும் பிரம்மத்தினுடைய சரீரமானபடியால், அந்தச் சரீரத்துடன் சேர்ந்த பிரம்மத்தினால் செய்யப்படும் காரியங்களைச் சரீரமும் செய்ததாகவே யாகிறது - ஆனதினால், சரீரமான க்ஷேத்திரம், க்ஷேத்திரக்ஞன் இவ்விருவரும் காரணமாக சொல்லப்படுகிறார்கள்.

(மீ,வி) பிராகிருத தேகேந்திரியாதிகளை யுடையது (ஆதிமச) ஆதிமத் என்று சொல்லப்படுகிறது. பிராகிருத தேகேந்திரியாதிகளை யுடையதல்லாதது (அநாதிமச) அநாதிமத் என்று சொல்லப்படுகிறது. தெரிந்துகொள்ளத்தக்கது அந்த பரமாத்மாவே, நஸத்தந்நாஸதுச்யதே = அந்த பரமாத்மா, நஸச=காரியமாகிய பிரபஞ்சத்திற் சேர்ந்தவருமல்ல. நாஸச = காரணமான அவ்வியக்தாதிகளில் சேர்ந்தவருமல்ல. இரண்டுக்கும் அந்நியரான படியினாலே அவரை, ஸத் - அஸத் என்று சொல்லக்கூடாது. அல்லது, மூர்த்த அமூர்த்தங்களுக்கு அதிதரானபடியினாலே, ஸத் - அஸத் என்று சொல்லக்கூடாது.

(வ்யா) இந்த சுலோகத்தில் பிரயோகிக்கப்பட் டிருக்கிற (ஸச) ஸத் (அஸச) அஸத் என்கிற பதங்கள் முந்திய ௯ - வது அத்தியாயம், ௧௯, ௧௧ - வது அத்தியாயம் - ௩௭ இந்தச்சுலோகங்களிலும் பிரயோகிக்கப்பட்டிருக்கின்றன. மேற்படி ௧௯ - வது சுலோகத்தில் ஸத்தும் அஸத்தும் நான் என்று பகவான் சொல்லி யிருக்கிறார். மேற்படி ௩௭ - வது சுலோகத்தினால் அர்சுனன் ஸத் அஸத் இவைகளுக்கு அந்நியமான அக்ஷரம் நீர்தானென்று சொல்லியிருக்கிறான். இந்த சுலோ

கத்திலோ, பிரம்மத்தை சத்தென்றாவது அசத்தென்றாவது சொல்லக் கூடாதென்று சொல்லப்பட்டிருக்கிறது. இது பரஸ்பர விரோதமாய்க் காணப்படுகிறது. ஆனால் அப்படி விரோதமல்லவென்பதை அந்தந்த விடங்களில் பாஷியக்காரர்களும் வியாக்கியாதாக்களும் பல திருஷ்டாந்தங்களுடன் காண்பித்திருக்கிறார்கள். (கங)

---

கச. ஸர்வத꞉பாணிபாத³ம் தத் ஸர்வதோ(அ)க்ஷிஶிரோமுக²ம்।
ஸர்வத꞉ஶ்ருதிமல்லோகே ஸர்வமாவ்ருத்ய திஷ்ட²தி॥

| | |
|---|---|
| தத் | அந்த பிரம்மமானது |
| ஸர்வத꞉ பாணிபாத³ம் | எவ்விடத்திலேயும் கைகளையும் கால்களையுமுடையது |
| ஸர்வதோ(அ)க்ஷிஶிரோமுக²ம் | எவ்விடத்திலேயும் கண்களையும் தலைகளையும் முகங்களையு முடையது |
| ஸர்வத꞉ ஶ்ருதிமத் | எவ்விடத்திலேயும் காதுகளையுடையது |
| லோகே | உலகத்தில் |
| ஸர்வம் | சகலமானதையும் |
| ஆவ்ருத்ய | வியாபித்துக்கொண்டு |
| திஷ்ட²தி | இருக்கிறது. |

அறியவேண்டியதாய் (முன்சொன்ன) அந்த பிரம்மமானது எவ்விடத்திலும் கைகளையும் கால்களையும் தலைகளையும் முகங்களையும் காதுகளையும் உடையது. உலகத்தில் சகலத்தையும் வியாபித்துக்கொண்டிருக்கிறது.

(ஸ்ரீ) பிரம்மம் சத்துமல்ல அசத்துமல்லவென்று சொல்லக் கூடாது. ஏனெனில், உலகத்திலுள்ள சகலவஸ்துக்களும் சத்தாயாவது, அசத்தாயாவது இருக்கவேண்டுமே யன்றி வேறேயில்லையே; “ஸர்வம் க²ல்விதம் ப்³ரஹ்ம” “ப்³ரஹ்மைவேத³ம் ஸர்வம்” இதுமுதலிய சுருதிகளில் சகல வஸ்துக்களும் பிரம்மமென்று சொல்லப்படுகிறதே! அதினால் பிரம்மம் சத்தாகவாவது அசத்தாகவாவது இருக்கவேண்டுமென்றாகிறதே! என்றாலோ, “பராஸ்ய ஶக்திர்விவிதை⁴வ ஶ்ரூயதே” முதலிய சுருதிகளில் பிரம்மம் அசிந்திய சக்தியுடையதென்று பிரசித்தமாயிருப்பதால் பிரம்மமானது உபாதியினால் சத் - அசத் - என்றுசொல்லப்படுகிறதென்பது இதினால் வெளியிடப்படுகிறது.

(ஸம்) பிரம்மம் சத்தென்பதற்கு விஷயமல்லவென்று சொல்லப்பட்ட தாகையினாலே அசத்தென்று எண்ணப்படும். அப்படியென்

ணமை யிருக்கும்பொருட்டு பிரம்மமானது சகலப் பிராணிகளுடைய தேகேந்திரியாதி கரணங்களாகிற உபாதிமூலமா யிருக்கிற தென்பது சொல்லப்படுகிறது. அந்த உபாதி அத்தியாரோபிதம் (கல்பிதம்) ஆகையால், அது (உபாதி) மித்தை (பொய்). அந்த உபாதியைநீக்கி சுத்தப் பிரம்மத்தைத் தெரிவிக்க இதாரம்பிக்கப் படுகிறது.

(௱) கைமுதல் காதுவரை சொல்லப்பட்டவைகளெல்லாம் பரிசுத்த ஆத்மாவுக் குண்டென்பதல்ல. எவ்விடத்திலும் கைகால் முதலிய அவயவங்களிருந்தால், அந்த அவயவங்களினால் செய்துகொள்ள வேண்டியது காரியங்கள் எப்படிச் செய்துக்கொள்ளக் கூடுமோ, அப்படிப்போல, பிரகிருதி விமுக்தாத்ம சுவரூபத்தை யடைந்த ஜீவனானவன், அவயவங்களில்லாமலே அவைகளைச் செய்துகொள்ள சக்தியுள்ளவனென்பது தாத்பரியம். அந்த முக்தாத்மஜீவன் சகலத்தையும் வியாபித்துக்கொண் டிருக்கிறான். "அபாணிபாதோ ஜவநோ க்ருஹீதா பச்யத்யசக்ஷு: ஸ ச்ருணோத்யகர்ண: = காலில்லாமல் நடக்கிறவன், கையில்லாமல் கிரகிக்கிறவன், கண்ணில்லாமல பார்க்கிறவன், காது இல்லாமல் கேட்கிறவன்" என்கிற சுருதியினாலே மேற்கண்ட சக்தி பரமாத்மாவுக்குச் சொல்லப்பட்டிருக்கையில், ஆத்மாவுக்கு எப்படி அவ்வித சக்திகளைச் சொல்லலாமென்றால், பிரகிருதி விமுக்த ஆத்மாவுக்கு பரமாத்மாவுடன் (பரஸாம்யம்) பரமசாம்மியம் சொல்லப்பட்டிருக்கிறபடியால், அப்படிப்பட்ட சக்தியுண்டு "நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி" என்கிற சுருதிவாக்கியத்தினாலேயும், "இதம் ஜ்ஞாநமுபாச்ரித்ய மம ஸாதர்ம்யமாகதா:" என்கிற இந்த கீதாவாக்கியத்தினாலேயும், முக்தாத்மாவுக்குப் பரமாத்மாவுடன் பரமசாம்மியம் சொல்லப் பட்டிருக்கிறது.

(மீ,வி) அந்த பகவானுடைய மகிமையே மறுபடியும் சொல்லப் படுகிறது. ஹரியானவர் ஜகத்விலக்ஷணரா யிருக்கிறவர். எப்படியென்றால், தத் = அந்த பரமாத்ம வஸ்துவானது, ஸர்வத: = சகல அவயவங்களிலும், பாணிபாதம்=கைகால் முதலிய சக்தியுடையது. அதாவது ஒவ்வொரு அவயவமும் தனக் கன்னியமான ஒவ்வொரு அவயவத்தினுடைய சக்தியையுடையது என்பது கருத்து. அதெப்படிப்போலென்றால், வெளுப்பு கருப்புக் கேசங்களுடைய அவதாரமாகிய பலராம கிருஷ்ணன் இவர்களிடத்தில் கைமுதலிய அவயவசக்தி காணப் படுவதுபோல. இவ்விதமாகவே ஸர்வதோக்ஷிசிரோமுகம்= சகல அவயவங்களிலும் கண் சிரசு முகம் இவைகளுடைய சக்தியையுடையது, ஸர்வத:ச்ருதிமத்=சகல அவயவங்களிலேயும் சுரோத்திரேந்திரிய சக்தியையுடையது. இதின் கருத்தென்னவென்றால், சகல இந்திரியங்களுடைய விஷயங்களையும், கருமங்களையும், சகல இந்திரியங்

களினுலேயும் அறிகிறதும், செய்கிறதுமென்பதே; லொகெ— பிரபஞ்சத்திலே, ஸவ-ஂ—சகல வஸ்துக்களை, ஆவ்ரு-த்ய— வியாபித்து, திஷ்டதி— இருக்கிறது. மற்ருெரு அர்த்தம்—அந்த பரமாத்மாவானவர் சகல லோகங்களிலேயும் கண் தலை முகம் காது முதலியவையோடு சகலத்தையும் வியாபித்துக்கொண்டிருக்கிருர். அதாவது அந்த பரமாத்துமாவானவர் அணுவிலு மணுவான கைகால்முதலிய அவயவங்களோடு கூடிய அனேக ரூபங்களினுலே எல்லாவிடத்திலு மிருந்து கொண்டு வியாபகரூபத்தினுலே சகலத்திலும் வியாபித்திருக்கிரு ரென்பது தாத்பரியம்.

(ஸா) இந்த சுலோகத்தை லிங்கபுராணம் முதல்பாகம் அத்-எக சு-கOஎ லும் வாமனபுராணம் அத்-சுஎ சு-கூச லும் காண்க. (கச)

---

கரு. ஸவெ-ஂத்ரியகு-ணாஹாஸம் ஸவெ-ஂத்ரியவிவஜி-ஂதம்।
அஸக்தம் ஸவ-ஂப்ருச்சைவ நிகு-ஂணம் கு-ணஹொக்த்ரு ச॥

கசு. பஹிரந்தஸ்ச பூ-தாநாமசரம் சரமேவ ச।
ஸூக்ஷ்மத்வாத்தத்விஜ்ஞேயம் தூரஸ்தம் சாந்திகே ச தத்॥

கஎ. அவிபக்தஞ்ச பூ-தேஷு விபக்தமிவ ச ஸ்தி-தம்।
பூ-தப-ஂத்ரு ச தஜ்ஜ்ஞேயம் க்ரஸிஷ்ணு ப்ரபவிஷ்ணு ச॥

கஅ. ஜ்யோதிஷாமபி தஜ்ஜ்யோதி ஸ்தமஸ: பரமுச்யதெ।
ஜ்ஞாநம் ஜ்ஞேயம் ஜ்ஞாநகம்யம் ஹ்ருதி ஸவ-ஂஸ்ய விஷ்டிதம்॥

தத் ஜ்ஞேயம் } அந்த அறியத்தக்கவஸ்துவான பிரம்மமானது

ஸவெ-ஂந்த்ரிய கு-ணாஹாஸம்* { சகல இந்திரியங்களுடைய விஷயாகாரமான விருத்திகளில், அந்தந்த விஷயாகாரமாக விளங்குகிறதாயும், அல்லது சகல இந்திரியங்களையும் குணங்களையும் அததின் விஷயங்களையும் பிரகாசிப்பிவிக்கிறதாயும்

ஸவெ-ஂந்த்ரியவிவஜி-ஂதம்† சகலவித இந்திரியங்களற்றதாயும்

---

* (ஶம) ஞானேந்திரிய கருமேந்திரியங்கள், மனசு, புத்தி இவைகளுடைய செய்கையாகிய நிச்சயம், உத்தேசம், சிரவணம் முதலானவைகளால் பிரவிருத்தித்திருப்பதுபோல காணப்படுகிறது. (உ) (ஸ்ரீ) பிரம்மமானது சகல இந்திரியங்களையும் விஷயங்களையும் பிரகாசிப்பிவிக்கிறது.

* - † (ரா) முக்தாத்மா சகல இந்திரியங்களினுலேயும் விஷயங்களையறிய சக்தியுள்ளவனுயும், இந்திரியங்களன்றியிலேயே விஷயங்களையறிய சக்தியுடையவனுயுமிருக்கிருன்.

† (ஶம) (ஸ்ரீ) இந்திரியமற்றது. (என்ருல்), "அபாணிபாதொஜவநொ க்ரஹீதா" என்கிற சுருதிவாக்கியத்தினுல் கை கால் முதலியவையில்லை என்ருகிறது

| | |
|---|---|
| அஸக்தம்* | ஒன்றிலு மொட்டாததாயும் |
| ஸர்வப்⁴ருச்சைவ† | சகலத்திற்கும் ஆதாரமாயும் |
| நிர்கு³ணம்‡ | சத்துவாதிகுணங்களற்றதாயும் |
| கு³ணபோ⁴க்த்ரு ச§ | சத்துவாதிகுணங்களை ரக்ஷிப்பதாயும் |
| பூ⁴தாநாம்¶ | சராசரவஸ்துக்களுடைய |
| ப³ஹி:‖ | வெளியிலும் |
| அந்தஶ்ச+ | உள்ளேயும் (இருக்கிறதாயும்) |
| அசரம்÷ | ஸ்தாவரமாயும் |
| சரமேவ ச× | ஜங்கமமாயும் |
| ஸூக்ஷ்மத்வாத் தத³விஜ்ஞேயம் $ | ரூபம் முதலியவைகளில்லாததினாலே அறியக்கூடாததாயும் |

கிரகிக்கிறது நடக்கிறது முதலிய செய்கை சொல்லப்பட்டிருக்கிறதே, என்றாலோ, அந்த சுருதியானது, உபாதியை அனுசரித்துச் சொன்னதேயன்றியில் வாஸ்தவத்தில் கிரகிப்பது நடப்பது முதலிய செய்கை பிரம்மத்திற்கு இல்லை. (ஸ்ரீ,வி) பிராகிருதங்களாயும், பின்னங்களாயுமுள்ள இந்திரியங்களற்றது.

* (ரா) சுவபாவத்தினால் தேவாதிதேக சம்பந்தமில்லாதது.

† (ரா) தேவாதி தேகம் முதலிய சகலத்தையும் தரிக்க சாமர்த்தியமுள்ளது.

‡ - § (ஶம்) சத்வாதி குணங்களற்றதானாலும் அந்தக்குணங்களை யனுபவிப்பதுபோலுள்ளது, (ரா) ‡ - சுவரூபத்தினால்சத்வாதிகுணங்களற்றது. § - சத்வாதி குணங்களா லுண்டாகும் போகத்தை யனுபவிக்க வல்லமையுள்ளது. (ஸ்ரீ,வி) §-சகல கல்லியாண குணங்களுடையவன்.

¶ - ‖ (ரா) பிரகிருதி சம்பந்தமான பூதங்களைத் தியஜித்து, சரீரமில்லாமல் வெளியிலிருக்கிறதும்.

‖ - + (ஶம்) உள்ளும், வெளியிலும், மத்தியிலுமிருக்கிறது. மத்தியிலிருக்கிறது, சராசரமாகையால் மத்தியும் சேர்க்கப்பட்டது. (ரா) + - சரீரத்திற்குள்ளேயிருக்கிறதும்.

÷ (ரா) சுவபாவமாய் சஞ்சாரமில்லாதது. (ஸ்ரீ,வி) மாறுதலில்லாத சுவபாவமுடையது.

× (ரா) தேகத்தையுடையதானல் சஞ்சரிக்க சக்தியுள்ளது. (ஸ்ரீ,வி) எவ்விடத்திலும் சஞ்சரிக்கப்பட்டது.

$ (ஶம்) ஆகாசம்போல் சூக்ஷமமா யிருக்கிரதினாலே அக்ஞானிகளுக் கறியப்படாததாயும். (ரா) சுவரூபம் சூக்ஷமமானதால், சம்சாரியினால் தேகத்திற்கு அன்னியமானதென்று அறியப்படாததாயும். (ஸ்ரீ,வி) சூக்ஷமமானதால் இந்திரிய அகோசரமானது.

| | |
|---|---|
| தச<br>உ-ிரஷூஞ<br>சுனிகெவ * | அந்தப் பிரம்மமானது (அக்ஞானிகளுக்கு) தூரத்திலிருக்கிறதாயும் (ஞானிகளுக்கு) சமீபத்தி லிருக்கிறதாயும் |
| ஸகெதஷ- | ஸ்தாவரஜங்கமங்களாயுள்ளபூதங்களிலே |
| தச<br>கூவிஸக்கூ † | (காரண சுவரூபத்தினலே) அது பிரிவற்றதானலும் |
| விஸக்தூவவ<br>ஷூிதம் ‡ | (காரிய சுவரூபத்தினலே) பிரிந்திருப்பதுபோல் தோற்றுவதாயும் |
| ஸ-தஸதஜுவ § | (சம்ரக்ஷணைகாலத்தில்) பூதங்களை ரக்ஷிக்கிறதாயும் |
| ஹுஸிஷ்ணு ¶ | (பிரளயகாலத்தில்) சகலத்தையும் விழுங்குகிறதாயும் |
| ஷுஸவிஷ்ணு ‖ | (சிருஷ்டிகாலத்தில்) சகலத்தையு முண்டு பண்ணுகிறதாயும் |

* (ஸ்ரீ) அந்த பிரம்மமானது "தஜெதி தனைஜதி தகூஒொதஸ்ஷாகெ — அது அலைகிறது, அது அலைகிறதில்லை, (தியானமற்றவர்களுக்கு) தூரத்திலிருந்தாலும் (தியானிப்பவர்களுக்கு) சமீபத்தி லிருக்கிறது" (ஈசாவாஸ்யோபநிஷத் வாக்கியம் - ரு) என்கிற சுருதியி லிப்படிப்பட்டதாகவே சொல்லப்பட்டிருக்கிறது. (ரா) அந்த ஆத்மா அமாநித்வாதி குணங்களில்லாத அக்ஞானிகளால், தேகத்தி லிருந்தபோதிலும் தூரத்திலிருப்பதாகவேயெண்ணப்படத்தக்கவன். அமாநித்வாதிகுணமுள்ளவர்களுக்குச் சமீபத்திலுள்ளவனுக அறியத்தக்கவன். (மீ,வி) பிரம்மம் எவ்விடத்திலு மிருப்பதினுலே தூரத்திலுமிருக்கிறது சமீபத்திலு மிருக்கிறது.

† ‡ (மூல) சகலபூதங்களிலும் ஆகாச மெப்படி யொன்றுயிருக்கிறதோ அப்படிப்போல பிரிபடாமலொன்று யிருக்கிறது. தேகாதி உபாதிகளினல், பிரிபட்டிருப்பதுபோல் காணப்படுவது. (ரா) தேவமனுஷ்யாதி தேகங்களிலிருந்தாலும், சுவரூபமானது ஒரேவிதமாகையால், ஞானிகளுக்கு ஞானகாரமாய் ஒன்றுகத் தோற்றப்படுகிறது. அக்ஞானிகளுக்கு தேவமனுஷ்யாதி பலதேகங்களுடன் கூடியிருக்கையில் பலவாகக் காணப்படுகிறது. (மீ,வி) சகல பூதங்களிலும் தொடர்ச்சியாயிருந்தாலும் அக்ஞானிகளுக்குத் தனித்தனியா யிருப்பதுபோல் காணப்படுகிறது.

§ (ரா) பஞ்சமகா பூதங்களுடன்கூடிய தேகத்தைத் தரிக்கிறதாயும்.

¶ (ரா) பூதசம்பந்தமான அன்னாதிகளை புஜிக்கிறதாயும்.

‖ (ரா) புஜிக்கப்பட்ட அன்னம், வேறே சுவரூபமாய் மாறி மற்றென்று உற்பத்தியாகிறதற்குக் காரணமா யிருக்கிறதாயும்.

§ - ¶ - ‖(மூல) சிருஷ்டி ஸ்திதி சங்கார மென்பதெல்லாம் ஆரோபிதம். பழுதையில் பாம்பு ஆரோபிக்கப் படுகிறதுபோல். (ரா) பூதங்களைத் தரிப்பது புஜிப்

| | |
|---|---|
| ஜ்யோதிஷாமபி※ | (சூரியசந்திராதி) பிரகாசங்களுக்கும்கூட |
| தத் | அந்தப் பிரம்மமானது |
| ஜ்யோதி꞉ | பிரகாசத்தைக் கொடுக்கிறதாயும் |
| தமஸ꞉ பரம் } † | அக்ஞானத்திற்குப் புறம்பானதாயும் |
| ஜ்ஞானம்‡ | ஞான சுவரூபமானதாயும் |
| ஜ்ஞேயம்§ | { ஞானத்திற்கு விஷயமான தெதுவோ அந்த விஷய சுவரூபமாயும் |
| ஜ்ஞானகம்யம்¶ | { ஞானத்தினுலேயே யடையத்தகுந்த ஸ்தானமாயும் |
| ஸர்வஸ்ய‖ | சகலப் பிராணிகளுடைய |
| ஹ்ருதி+ | இருதயத்தில் |
| விஷ்டிதம்÷ | விசேஷமாக விருக்கிறதாயும் |
| உச்யதே | சொல்லப்படுகிறது. |

---

பது உற்பத்திசெய்வது இவைகள் ஜீவனற்ற தேகத்திற்கில்லை யாகையால் அவைகளுக்கு ஹேது தேகமல்லவென்பது நிச்சயம். ஆகையால் ஆத்மாவே அவைகளுக்கு ஹேது.

※ (ஸ்ரீ) "யேந ஸூர்யஸ்தபதி தேஜஸேத்த:", "ந தத்ர ஸூர்யோ பாதி" "ஆதித்யவர்ணம் தமஸ: பரஸ்தாத்" முதலிய சுருதிகளைப்பார்க்க. (ரா) சூரியன், சந்திரன், அக்கினி, மாணிக்கங்கள், இவைகளுக்குங்கூட பிரகாசத்தை யுண்டுபண்ணப் பட்டது. சூரியசந்திராதிகள், கண்களுக்கும் விஷயங்களுக்குமுண்டாகிற சம்பந்தத்தை மறைக்கிற இருளைமட்டும் போக்கடிக்கும்; ஆத்மாவோ, சூரிய சந்திராதி சகல வஸ்துக்களையும் பிரகாசிப்பிவிக்கும். என்றால், ஆத்மாவினுடைய பிரகாசரூபமான ஞானந்தான் சூரியாதிகளைப் பிரகாசிப்பிக்கிறது.

† (ரா) சூக்ஷ்மாவஸ்தையோடு கூடினப் பிரகிருதியைக் காட்டிலும் அந்நியமென்று சொல்லப்படுகிறது.

‡ - § (மூ) அமாநித்வம் முதலியது ஞானம் "ஜ்ஞேயம் யத் தத் ப்ரவக்ஷ்யாமி" முதலியவைகளால் சொல்லப்பட்டிருக்கிறது ஜ்ஞேயம். (ரா) ஆத்மாவானவன் ஞானத்தையே சுவரூபமாயுடையவனென்று அறிகிற. (தீ,வி) பிரகாசசுவரூபமாயுள்ளது ஞானம். தன்னாலேயே தன்னை யறிகிற சுவயம்பிரகாச ரூபம், ஜ்ஞேயம்.

¶ (ரா) அமாநித்வாதி ஞானசாதனங்களா லடையத்தகுந்தவன். (தீ,வி) அபரோக்ஷ ஞானத்தினால் முக்தர்களா லறியத்தகுந்தவன்.

‖ (ரா) தேவமனுஷியாதி சரீரங்களுடைய.

+ (ரா) ஹிருதயப் பிரதேசத்தில்.

÷ (ஸ்ரீ) நியாமகனாயிருக்கிற. திஷ்டிதம், என்ற பாடத்தில்,—ஏறியிருக்கிற.

அந்த அறியத்தக்க வஸ்துவான பிரம்மமானது, சகல இந்திரியங்களுடைய விஷயாகாரமான விருத்திகளில், அந்தந்த விஷயாகாரமாக விளங்குகிறதாயும், அல்லது சகல இந்திரியங்களையும் குணங்களையும் அததின் விஷயங்களையும் பிரகாசிப்பி விக்கிறதாயும், சகலவித இந்திரியங்களற்றதாயும், ஒன்றிலு மொட்டாததாயும், சகலத்திற்கும் ஆதாரமாயும், சத்துவாதி குணங்களற்றதாயும், சத்துவாதி குணங்களை ரக்ஷிக்கிறதாயும், சராசர வஸ்துக்களுக்கு வெளியிலும் உள்ளுமிருக்கிறதாயும், ஸ்தாவரமாயும், ஜங்கமமாயும், ரூபமுதலியவை யில்லாததினாலே (இந்திரியங்களால்) அறியக்கூடாததாயும் அஞ்ஞானிகளுக்குத் தூரத்திலிருக்கிறதாயும், ஞானிகளுக்குச் சமீபத்திலிருக்கிறதாயும், ஸ்தாவர ஜங்கமங்களாயுள்ள பூதங்களிலே பிரிவற்றதானாலும் பிரிந்ததுபோல் தோற்றப்பட்டதாயும், பூதங்களை ரக்ஷிக்கிறதாயும், சகலத்தையும் விழுங்குகிறதாயும், சகலத்தையு முண்டுபண்ணுகிறதாயும், சூரிய சந்திராதிகளுக்குக்கூடப் பிரகாசத்தைக் கொடுக்கிறதாயும், அஞ்ஞானத்திற்குப் புறம்பானதாயும், ஞானசுவரூபமாயும், ஞானத்தினா லறியத்தகுந்ததாயும், ஞானத்தினா லடையத்தகுந்ததாயும், சகலப் பிராணிகளுடைய ஹிருதயத்தில் விசேஷமா யிருக்கிறதாயும் சொல்லப்படுகிறது.

(ஸா) இந்த கரு - கசு - கஎ - கஅ - சுலோகங்களுக்கும் ஜீவபரமாகவே (ரா) அர்த்தஞ் செய்திருக்கிறதாக அறியத்தக்கது. (கரு, கசு, கஎ, கஅ)

---

ககூ. இதி க்ஷேத்ரம் ததா ஜ்ஞாநம் ஜ்ஞேயம் சோக்தம் ஸமாஸத:।
மத்பக்த ஏதத்விஜ்ஞாய மத்பாவாயோபபத்யதே॥

| | |
|---|---|
| இதி க்ஷேத்ரம் | இவ்விதமாய் க்ஷேத்திரமும் |
| ததா | அப்படியே |
| ஜ்ஞாநம் | ஞானமும் |
| ஜ்ஞேயஞ்ச | ஞேயமும் |
| ஸமாஸத: | சங்கிரகமாக |
| உக்தம் | சொல்லப்பட்டது |
| மத்பக்த:* | என்னுடைய பக்தனானவன் |

* (ஸா) பரமேசுவரனும், பரமகுருவாயும், வாசுதேவனும், சர்வக்ஞனுமிருக்கிற வென்னிடத்தில் கேட்டு, பார்த்து, அனுபவித்துவருகிற சகல காரியங்களையும் சமர்ப்பிவித்து, அவைகள் சர்வமும் வாசுதேவ சுவரூபமேயென்கிற உறுதியுடன் கூடினபக்தன்.

| | |
|---|---|
| ஏதத்* | இதை |
| விஜ்ஞாய | அறிந்து |
| மத்பாவாய† | என்னுடைய சுவரூபமாகிறதற்கு |
| உபபத்யதே | யோக்கியனாகிறான். |

இவ்விதமாய் க்ஷேத்திரமு மப்படியே ஞானமும் ஞேயமும் சங்கிரகமாக சொல்லப்பட்டது. என்னுடைய பக்தனவ னிதையறிந்து, என்னுடைய (பிரம்ம) சுவரூபமாகிறதற்கு யோக்கியனாகிறான்.

(ஸ) (ஸ்ரீ) "மஹாபூதாநி" முதல் "த்ருதி:" வரையில் க்ஷேத்திரத்தைப்பற்றியும் "அமாநித்வம்" முதல், "தத்வஜ்ஞாநார்த்ததர்சநம்" வரையில் ஞானத்தைப்பற்றியும், "ஜ்ஞேயம் யத்தத் ப்ரவக்ஷ்யாமி" முதல் "ஹ்ருதி ஸர்வஸ்ய விஷ்டிதம்" வரையில் ஞேயத்தைப்பற்றியும் சொல்லப்பட்டது. (ஸ்ரீ) இவைகளைக்குறித்து வஸிஷ்டாதிமகரிஷிகளால் விஸ்தாரமாய் சொல்லப்பட்டிருக்கிறதையே என்னால் சுருக்கமாய்ச் சொல்லப்பட்டது. இவைகளை முந்திய அத்தியாயத்திற் சொல்லப்பட்டிருக்கிற பக்தன் அறிந்து பிரம்ம சுவரூபமாகிறான். (கக)

---

உ0. ப்ரக்ருதிம் புருஷம் சைவ வித்த்யநாதீ உபாவபி।
விகாராம்ஶ்ச குணாம்ஶ்சைவ வித்தி ப்ரக்ருதிஸம்பவாந்॥

| | |
|---|---|
| ப்ரக்ருதிம் | பிரகிருதியையும் |
| புருஷம்சைவ | புருஷனையும் |
| உபாவபி | இருவரையுங்கூட |
| அநாதீ | அநாதிகளாக |
| வித்தி | அறி |
| விகாராம்ஶ்ச | தேகேந்திரியாதிவிகாரங்களையும் |
| குணாம்ஶ்சைவ | சுகதுக்கமோகாதிகளையும் |
| ப்ரக்ருதிஸம்பவாந் | பிரகிருதியிலிருந்துண்டானவைகளாக |
| வித்தி | அறி. |

---

* (ரா) க்ஷேத்திர சுவரூபநிச்சயம், க்ஷேத்திரக்ய சுவரூபநிச்சயம், க்ஷேத்திரத்தைக்காட்டிலு மன்னியமான (ஜீவ) ஆத்ம சுவரூபத்தை யடைகிறதற்கு வேண்டிய ஞானசாதனங்களுடைய நிச்சயம் இவைகளே.

† (ஸ) மோக்ஷத்திற்கு, (ரா) என்னைப்போல அசமுசாரித்துவ தர்மத்தையடைய, (ஸ்ரீ,வி) என்னிடத்தி லிருப்பை அடைய.

பிரகிருதிபுருஷன் இருவரையுங்கூட அநாதிகளாகஅறி. தேகேந்திரியாதி விகாரங்களையும், சுகதுக்க மோகாதிகளையும், பிரகிருதியிலிருந்துண்டானவைகளாக அறி.

(ஸ்ரீ) பிரகிருதியும், புருஷனென ஜீவனும், அநாதிகளா யிருக்கிறவர்களே யன்றி, ஒருகாலத்தி லுண்டானவர்களல்ல. எது உண்டானதாகச் சொல்லப்படுமோ, அதெல்லாம் பிரகிருதியினு லுண்டானதே. அந்தப் பிரகிருதியையு முண்டானதாகவே சொல்வோமென்ருல், பிரகிருதியை யுண்டாக்க வேறேயொருப் பிரகிருதியல்லவா இருக்கவேண்டும்! அப்படியு மிருக்கிறதென்ருல், அந்தப் பிரகிருதியை யுண்டாக்க மற்ருருப் பிரகிருதியிருக்கவேண்டும். இப்படியே ஒன்றுக் கொன்று தொடர்ந்து முடிவற்றதாக ஆய்விடும். ஆகையால், பிரகிருதி உண்டானதென்று சொல்லக்கூடாது. இப்படி யிருக்கிறதினுலேதான் பிரகிருதியானது ஆதியையுடைய தல்லவென்று சொல்லப்பட்டது. புருஷனோவென்ருல், அவன் பிரம்மத்தினுடைய அம்சமாகையாலும் நித்தியனுகையாலும் அவனையும் ஆதியற்றவனுக சொல்லலாயிற்று.

(ஹ) "விநூவெ, கூதிரஷயா" (அத்-எ, சு-ச,) என்கிறதினுல் மாயையானது ஈசுவரனுக்கும் அபரப்பிரகிருதி என்றும், "கவெரயமிக ஷஸ்ர் வூ கூஷிவிஷிவெஹரா । ஜீவஹ தா" (அத்-எ, சு-௫.) என்கிறதினுல் ஜீவன் ஈசுவரனுடைய பரப்பிரகிருதி என்றும் சொல்லப்பட்டிருக்கின்றன. இந்த மாயை ஜீவன் இவர்களை முறையே பிரகிருதி புருஷர்களாகவும், க்ஷேத்திர க்ஷேத்திரஞ்யர்களாகவும் சொன்னதுமல்லாமல், அநாதிகளாகவும் நித்தியர்களாகவும் இந்த அத்தியாயத்தில் சொல்லப்பட்டது. ஈசுவரனை நித்தியராகவும் அநாதி யாகவும் ஒப்புக்கொள்ளவேண்டிய நாம், அந்த ஈசுவரனுடைய பராபரப் பிரகிருதிகளான மாயை ஜீவன் இவர்களையும் நித்தியர்களாயு மனுதிகளாயு மொப்புக்கொள்ள வேண்டியதே. இந்த விரண்டுப் பிரகிருதிகளினுல், ஈசுவரனுக்கு சிருஷ்டி ஸ்திதி சங்காரம் முதலிய காரணத்துவம் சொல்லப்படுகிறது. இந்தப்பிரகிருதி புருஷர்களுக்கு அநாதி நித்தியத்துவம் சொல்லக்கூடாதென்ருல், ஈசுவரத்துவம், ஜகத் காரணத்துவம், பிரம்மத்திற்குச் சொல்லக்கூடாது. பிரகிருதி புருஷர்களை யுடையவனெவனே, அவன்தான் ஈசுவரன். ஏவுதலுக்கு வஸ்து வில்லாவிட்டால், ஏவும் எஜமானத்வமென்பதில்லை. பிரகிருதி புருஷர்கள் அநாதியல்ல. உண்டானவர்களேஎன்னும் பக்ஷத்தில் அவர்களுண்டான தற்கு முன் ஈசுவரத்துவமில்லாதிருக்கவேண்டும். புருஷனுக்கு அநாதியான கருமபந்த மென்பதுவுங் கூடாது. மேலு மீசுவரன் ஒருஜீவனை சுகியாகவும் மற்ருருவனை துக்கியாகவும் பூர்வகருமமாகிய காரணமின்றி சிருஷ்டிக்கும் பட்சத்தில் அவருக்கு பட்சபாதமும் தயையின்மை

யும் சம்பவிக்குமாகையால், பந்தமேயில்லையென்றாகும். பந்தமில்லாவிட்டால் மோக்ஷமேது? மோக்ஷாதிகளைச் சொல்லும் வேதத்தினால் என்னபிரயோஜனம்? ஆகையால், பிரகிருதிபுருஷர்கள் அநாதிகளென்று சொன்னது சரியே.

(ரா) ஒருவருக்கொருவர் பற்றுதலுள்ள பிரகிருதி புருஷர்களை அநாதிகளாக அறி. 'பந்தத்திற்கு ஹேதுவாகிய இச்சை, துவேஷம், முதலிய விகாரங்களையும், மோக்ஷத்திற்கு ஹேதுவாகிய அமாநித்வாதி குணங்களையும் பிரகிருதியிலிருந் துண்டானவைகளாகத் தெரிந்துகொள். அநாதியான இந்தப் பிரகிருதியானது அநாதியாய் புருஷனை சம்பந்தித்து, க்ஷேத்திராகாரமாய்ப் பரிணமித்து, தன்னுடைய விகாரங்களாகிய இச்சை, துவேஷம் முதலிய தோஷங்களால் புருஷனுக்கு பந்த ஹேதுவாகிறது. அமானித்துவாதி குணங்களால் மோக்ஷ ஹேதுவாகிறது.

(ஸ்ரீ,வி) பிரகிருதி என்பது இருபத்தைந்து தத்துவங்கள், அல்லது ஜகத்திற்குக் காரணமான பரமாத்மா. புருஷனென்றது ஜீவன். இவர்களநாதியென்று அறி. குணங்களும், விகாரங்களும், பிரகிருதியிலுண்டாயின என்று அறி. (௨௦)

---

௨௧. கார்யகாரணகர்த்ருத்வே ஹேது: ப்ரக்ருதிருச்யதே।
புருஷ: ஸுகது:கானாம் போக்த்ருத்வே ஹேதுருச்யதே॥

| | |
|---|---|
| கார்யகாரணகர்த்ருத்வே* | தேகேந்திரியாதிகளை யுண்டுபண்ணுகிற விஷயத்தில் |
| ப்ரக்ருதி: | மாயையானது |
| ஹேது: | காரணமாக |
| உச்யதே | சொல்லப்படுகிறது |
| புருஷ: | ஜீவன் |
| ஸுகது:கானாம் | சுகதுக்கங்களுடைய |
| போக்த்ருத்வே | அனுபவவிஷயத்தில் |
| ஹேது: | காரணமாக |
| உச்யதே. | சொல்லப்படுகிறான். |

தேகேந்திரியங்களை யுண்டுபண்ணுகிற விஷயத்தில் மாயையானது காரணமாகச் சொல்லப்படுகிறது. சுகதுக்கங்களை யனுபவிக்கிற விஷயத்தில் ஜீவன் காரணமாக சொல்லப்படுகிறான்.

---

* (பா) கார்யகாரணகர்த்ருத்வே - என்றுபாடம்.

(ஸ்ரீ) பிரகிருதி ஜடமாகையால், அதெப்படி ஒன்றை யுண்டாக்குகிறதாகச் சொல்லக்கூடும்? ஜீவ சுவபாவமோ விகாரத்தை யடையத் தகுந்ததல்ல; ஜீவனுக்கு இந்திரியங்கள் மனம், சித்தம், அகங்காரம் முதலியவைகளும், பசிமுதலியவைகளும் வாஸ்தவத்திலில்லை யாகையால், அவன் விகாரப்படக் காரணமேயில்லை. ஆனதினாலே, அவன் அனுபவிக்கிறதாக வெப்படி சொல்லக்கூடும்? என்கிற இந்த விரண்டு கேள்விகளுண்டாகின்றன. முதலாவது கேள்வியைப்பற்றியோ வென்றால் - பிரகிருதி ஜடமானாலும் ஜீவனுடைய அவித்தையின் காரியமான அனாதி கருமமாகிய அதிருஷ்டவசத்தினாலே அந்தப் பிரகிருதி விகாரப்பட்டு ஜீவனுக்குபயோகமாக தேகேந்திரியாதிகளாகப் பரிணமிக்கிறது. அதெப்படி என்றால், ஜீவனை குழந்தை பிறந்த உடனே அதின் ஆகாரத்திற்காக ஜடமானபால் உண்டாகிறதுபோல, ஜீவனுக்குபயோகமாக ஜடபதார்த்தங்கள் பலவுண்டாகின்றன. அப்படிப் பல வஸ்துக்களாகப் பரிணமிக்கிறது பிரகிருதியே. ஆகையால், பிரகிருதி காரணமாக சொல்லப்பட்டது.

இரண்டாவது கேள்வியைப்பற்றியோவென்றால், ஜீவன் ஞானத்தையே சுவரூபமாகவுடையவன் அவனுடைய ஞானமானது சுகதுக்காதி சம்பந்தமான விஷயஞானமல்ல. ஆனாலும், தேகேந்திரியாதிகள் மூலமாய் விஷயஞானமுண்டாகிறது. அந்த தேகேந்திரியாதிகள் கருமத்தினா லுண்டாகின்றன. தேகமுண்டான பிறகு சுகதுக்கங்களை அறிகிறதாகிய விஷயஞானத்தை அடைகிறான். இப்படி சுகதுக்காதி விஷயஞானத்தை அடைகிறதினால் அவன் சுகதுக்காதிகளை யனுபவிக்கிறதற்கு ஹேதுவாகச் சொல்லப்படுகிறான். புருஷ சந்நிதானத்தினால், பிரகிருதிக்கு கர்த்திருத்துவமும் பிரகிருதி சம்யோகத்தினால் புருஷனுக்குப் போக்திருத்துவமு முண்டாகிற தென்பது தாத்பரியம்.

(௨௦) சரீரம் காரியம். இந்திரியங்கள் மனசு புத்தி அகங்காரம் இப்பதின்மூன்றும் அதற்குக் காரணங்கள். அல்லது பூதங்களும் விஷயங்களும் காரியம். சத்துவாதி முக்குணங்களும் காரணங்கள். காரணமான பிரகிருதியை ஆசிரயித்ததினாலே குணங்கள் காரணமாக சொல்லப்பட்டன. இவ்வித காரியகாரண மிரண்டுக்கும் மூலம் மாயையாகையால், அந்த மாயையானது கர்த்தாவென்று சொல்லப்பட்டது. கார்ய-காரண கர்த்ருத்வே - என்று சிலபாடமுண்டு. அதற்கு மிதுவேதான் அர்த்தம். அல்லது, (சாங்கிய சித்தாந்தப்படிக்கு மனதுள்பட பதினொரு இந்திரியங்கள், மகாபூதங்கள் ஐந்து) பதினாறு விகாரங்களும் காரியம். பிரகிருதி விகாரங்கள் (புத்தி, அகங்காரம், பூததன் மாத்திரைகள் ஐந்து) ஏழும் காரணம். இவைகளுக்குக் காரணம் பிரகிருதியாகையால் பிரகிருதியானது கர்த்தாவாக சொல்லப்படுகிறது.

சுகதுக்காதிகளை ஜீவன் அறிகிறவனாகையால், சுகதுக்காதிகளுக்கு அவன் போக்தாவாகச் சொல்லப்பட்டான். பிரகிருதியானது தேகேந்திரிய ரூபமாயும் சுகதுக்காதி ரூபமாயும் பரிணமிக்காவிட்டால் ஜீவனுக்கு சமுசாரமாகிய பந்தமேயில்லையென்று சொல்லலாம். அவனுக்கு சமுசாரத்திற்குப் பிரகிருதியே காரணமாயிருக்கிறது. ஆகையால், பிரகிருதி கர்த்தாவாகச் சொல்லப்பட்டது. பிரகிருதி காரியமாகிய தேகேந்திரியாதிகளிலும் சுகதுக்கங்களிலும் தான் தன்னுடையதென்கிற அபிமான அகங்காரங்களோடு கூடியபடியால், புருஷன் சமுசாரத்திற்கு ஹேதுவாகிறான். ஆகையால், அவனை சமுசாரத்திற்கு ஹேதுவாகச் சொல்லப்பட்டது.

(ரா) காரியமென்றால் சரீரம். காரணமென்றால் ஞானேந்திரிய கருமேந்திரிய மனசுகள். கர்த்திருத்துவமென்றால் தேகேந்திரியாதிகளின் செய்கை. காரியகாரணங்களுக்குக் கர்த்திருத்துவத்தை யுண்டாக்குவது பிரகிருதியாகையால், காரிய காரணங்களுக்குக் கர்த்தா பிரகிருதி என்று சொல்லப்பட்டது. ஏனென்றால், ஜீவனுக்கு போக சாதனமாயிருக்கிற கிரியைகளானவை, அவனுக்கிருப்பிடமாயும் தேகாதிரூபமாயுமுள்ளப் பிரகிருதியை யாதாரமாயுடைத்தா யிருப்பதால் கிரியைகளுக்குக் கர்த்தாப்பிரகிருதி என்று சொல்லப்பட்டது. பார்க்கிற நடக்கிற பேசுகிறதாகிய செய்கைகளுக்கு ஜீவன் கர்த்தாவாக உலகத்தில் வியவகரிக்கப் படுகிறானே என்றாலோ, அந்த கிரியைகளுக்குக் காரணமான தேகத்தை இருப்பிடமாக ஜீவன் உடைத்தாயிருப்பதினாலும் அந்த இருப்பை யடையப் பிரயத்தினஞ்செய்கிற நிமித்தியத்தாலும் ஜீவன் கர்த்தாவென்று வியவகரிக்கப்படுகிறான். சுகதுக்கானுபவத்திற்கு ஆசிரயனாயிருக்கிறபடியால், சுகதுக்கானு பவத்திற்கு ஜீவனை ஹேதுவாகச் சொல்லப்பட்டது.

(ஸ்ரீ) காரியமென்றது தேகம். காரணமென்றது இந்திரியங்கள். கர்த்திருத்துவமென்றது கிரியை. பிரகிருதிதானிம்மூன்று ரூபமாயிருக்கிறது. ஆகையால், இம்மூன்றுக்கும் பிரகிருதியை ஹேதுவாக சொல்லுகிறார்கள். ஜீவன் ஞானசுவரூபியானதாலும் சுகதுக்கங்களை யறிகிறானானதாலும் சுகதுக்கானு பவத்திற்கு ஜீவனை ஹேதுவாகச் சொல்லப்பட்டது.

(மீ,வி) தேகேந்திரியங்களுடைய கர்த்திருத்துவத்திற்குக் காரணம், சித்பிரகிருதி (இலக்ஷ்மி). ஜீவன் பிரகிருதி விகாரங்களான சுகதுக்கங்களை யனுபவிக்கிறதற்குப் புருஷனை பகவான் ஹேதுவாகச் சொல்லப்படுகிறார். சர்வகர்த்தாவான பகவானுக்கு தேகேந்திரியாதி கர்த்திருத்துவ மிருந்தாலும், போகத்தைக் கொடுக்கும் விஷயத்தில் தேவிக்கு (இலக்ஷ்மிக்கு) ஹேதுத்வமிருந்தாலும் சுகதுக்கம் போக்

தைக் கொடுப்பதில் தேவிக்கு ஹேதுத்துவம் அற்பம். காரியகாரண விஷயங்களில் ஹேதுத்துவம் அதிகம். ஆகையால், தேவியான பிரகிருதியைக் காரியகாரண கர்த்திருத்துவ ஹேதுவாகச் சொல்லப்பட்டது. தேகேந்திரிய கர்த்திருத்துவ பிரவிருத்தியைப் பார்க்கிலும் பகவானுக்கு போகத்தைக் கொடுக்கும் விஷயத்தில் பிரவிருத்தி அதிகமாகையால், அதில் பகவானையே ஹேதுவாகச் சொல்லப்பட்டது. அல்லது, பிரகிருதி என்பது ஜடப்பிரகிருதி. புருஷனென்பது ஜீவன். தேகேந்திரிய வியாபாரத்திற்குக் காரணம் ஜடப்பிரகிருதி என்று சொல்லப்படுகிறது. சுகதுக்க அனுபவத்திற்குக் காரணம் ஜீவன் என்று சொல்லப்படுகிறான்.

(ஸூா) இதின் ந-வது அத்தியாயம் உஎ-வது சுலோகம் பார்க்க. (உக)

---

உஉ. 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌸𑍍𑌥𑍋 𑌹𑌿 𑌭𑍁𑌙𑍍𑌕𑍍𑌤𑍇 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌜𑌾𑌨𑍍 𑌗𑍁𑌣𑌾𑌨𑍍।
𑌕𑌾𑌰𑌣𑌂 𑌗𑍁𑌣𑌸𑌙𑍍𑌗𑍋𑌽𑌸𑍍𑌯 𑌸𑌦𑌸𑌦𑍍𑌯𑍋𑌨𑌿𑌜𑌨𑍍𑌮𑌸𑍁॥

| | |
|---|---|
| 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌸𑍍𑌥𑌃 | பிரகிருதிகாரியமானதேகத்திலிருக்கிற |
| 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 | ஜீவன் |
| 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌜𑌾𑌨𑍍 | தேகத்தினுலுண்டாகிற |
| 𑌗𑍁𑌣𑌾𑌨𑍍 | சுகதுக்காதிகளை |
| 𑌭𑍁𑌙𑍍𑌕𑍍𑌤𑍇 𑌹𑌿 | அனுபவிக்கிறான் |
| 𑌗𑍁𑌣𑌸𑌙𑍍𑌗𑌃* | (சுபாசுப காரியங்களைச்செய்கிற) இந்திரிய சம்பந்தமானது |
| 𑌅𑌸𑍍𑌯 | இந்தஜீவனுக்கு |
| 𑌸𑌦𑌸𑌦𑍍𑌯𑍋𑌨𑌿𑌜𑌨𑍍𑌮𑌸𑍁 | தேவ மிருகஜாதிகளில் பிறப்பையடைய |
| 𑌕𑌾𑌰𑌣𑌂 | காரணமாயிருக்கிறது. |

பிரகிருதிகாரியமான தேகத்தில் (தேகமே தான் என்கிற அபிமானத்தோடு) இருக்கிற ஜீவன், தேகத்தினுலுண்டாகிற சுகதுக்காதிகளையனுபவிக்கிறான். எது சுபாசுபகாரியங்களைச் செய்கிறதோ, அந்த இந்திரிய சம்பந்தமானது ஜீவனுக்கு (உத்கிருஷ்டநிகிருஷ்டமான) தேவ மிருக ஜாதிகளில் பிறப்பையடையக் காரணமா யிருக்கிறது.

(பா) 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌸𑍍𑌥𑌃 = காரியகாரண ரூபமா யிருக்கிற அவித்தியா லக்ஷணமான பிரகிருதியை, தானென்று எண்ணுகிற, 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 =

---

* (மீ,வி) சத்துவாதிகுண சம்பந்தம்.

(சுகதுக்காதிகளை) அனுபவிக்கிற புருஷன் (ஜீவன்), 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌜𑌾𑌨𑍍 = பிரகிருதியினு லுண்டான, 𑌗𑍁𑌣𑌾𑌨𑍍 = சுகதுக்க மோகாகாரங்களாய் காணப்படுகிற குணங்களை, 𑌭𑍁𑌙𑍍𑌕𑍍𑌤𑍇 𑌹𑌿 = அடைகிறுன். 𑌗𑍁𑌣𑌸𑌙𑍍𑌗𑌃 = தான் தன்னுடையதென்கிற மமகார அகங்காரமாகிற குணசம்பந்தமானது, 𑌅𑌸𑍍𑌯 = அனுபவிக்கிறவனுகிய இந்த ஜீவனுக்கு, 𑌸𑌦𑌸𑌦𑍍𑌯𑍋𑌨𑌿𑌜𑌨𑍍𑌮𑌸𑍁 = தேவ மனுஷிய பசு பக்ஷிமுதலிய ஜன்மங்களிலே, 𑌕𑌾𑌰𑌣𑌂 = காரணமாக விருக்கிறது. இப்படிச்சொன்ன இந்த சுலோகத்தின் உத்தேசமென்னவெனில், இவைகளையெல்லா மறிந்து பந்தத்திலிருந்து விடுபட முயற்சி செய்யவேண்டு மென்பதே.

(ஶா) பூர்வஜன்ம கருமத்தினுல் ஜீவனுனவன் தேவமனுஷிய தேகாதிகளி லிருந்துகொண்டு அந்த தேகங்களின் மூலமாய் சத்துவாதி குணங்களாலுண்டாகிற சுகதுக்காதிகளில் ஆசக்திகொண்டு தேகங்களையும் சுகதுக்காதிகளையும் அனுபவிக்கிறதற்குக் காரணமான புண்ணிய பாவங்களைச் செய்வதில் பிரவிருத்தித் திருக்கிறுன். அதினுல் உத்தம அதம ஜன்மங்களை யடைந்து, அந்த ஜன்மங்களில் சுகதுக்கங்களை யனுபவிக்கிறது மல்லாமல், மறுபடி கருமங்களைச் செய்கிறுன். அந்தக் கருமத்திற்குத் தக்கபடி தேகமும் சுகதுக்காதி அனுபவமும் அவனுக்குத் திரும்பித் திரும்பிவந்துகொண்டே யிருக்கிறது. அமானித்துவாதி குணங்களை யடைந்தாலன்றியில் ஜனனம் நீங்காது.

(மீ,வி) தேகத்தினு லுண்டாகிற சுகதுக்காதிகளை ஜீவன் அனுபவிக்கிறுனென்பது மித்தை (பொய்), அல்லவென்பதைத் தெரிவிக்கும் பொருட்டு "ஹி" என்கிற சப்தம் பிரயோகிக்கப்பட் டிருக்கிறது. (௨௨)

---

௨௩. 𑌉𑌪𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑌾𑌨𑍁𑌮𑌨𑍍𑌤𑌾 𑌚 𑌭𑌰𑍍𑌤𑌾 𑌭𑍋𑌕𑍍𑌤𑌾 𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌃।
𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑍇𑌤𑌿 𑌚𑌾𑌪𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑍋 𑌦𑍇𑌹𑍇𑌽𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌪𑌰𑌃॥

| | |
|---|---|
| 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃* | ஜீவனுனவன் |
| 𑌅𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌦𑍇𑌹𑍇 𑌅𑌪𑌿 | இந்ததேகத்தி லிருந்தாலும் |
| 𑌪𑌰𑌃† | (தேகத்தைக்காட்டிலும்) அந்நியனுயும் |

* (மீ,வி) உபத்திரஷ்டாவாயிருத்தல் முதலிய ஹேதுக்களால் பரமாத்மா புருஷனென்று சொல்லப்படுகிறுர்.

† (ஶ்ரீ) குணசம்பந்த மற்றவராயும். (மீ,வி) தேகியைக்காட்டிலுமன்னியன்.

| | |
|---|---|
| 𑌉𑌪𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑌾* | சமீபத்திலிருந்து பார்க்கிற மேல்விசாரணைக்காரனையும் |
| 𑌅𑌨𑍁𑌮𑌨𑍍𑌤𑌾 𑌚† | ஆமோதிக்கிறவனையும் |
| 𑌭𑌰𑍍𑌤𑌾‡ | தேகத்தைத்தரிக்கிறவனையும் |
| 𑌭𑍋𑌕𑍍𑌤𑌾§ | சுகதுக்கங்களை அறிகிறவனையும் |
| 𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌃¶ | பிரம்மாதிகளுக்கு எஜமானனையும் |
| 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑍇𑌤𑌿 𑌚𑌾𑌪𑍍𑌯‖ | பரமாத்மாவாயும் |
| 𑌉𑌕𑍍𑌤𑌃 | சொல்லப்பட்டிருக்கிறான். |

* (ஸ்ரீ) சமீபத்திலிருந்து பார்க்கிறவன். (ஶம்) யக்ஞாதிகளில் யஜமானன் ரித்துவிக்கு முதலியவர்களின் குணதோஷக்கிரியைகளைப் பார்த்துக்கொண்டிருக்கிற அன்னியன்போல் பார்த்துக்கொண்டிருக்கிறவன். (ரா) தேகப்பிரவிருத்திக் கனுகுணமான சங்கல்பாதி ரூபத்தினாலே பார்த்துக்கொண்டிருக்கிறவன். (ம) சமீபத்திலிருந்து பார்க்கிறவன். (மீ,வி) எல்லாவற்றிற்கும் மேலாக சர்வோத்தமனாயிருந்து பார்க்கிறவன்.

† (ஸ்ரீ) சந்நிதானமாத்திரத்தினால் நடக்கும் காரியத்தை நடக்க சம்மதித்தவன்போலிருக்கிறவன். (ஶம்) தேகேந்திரிய வியாபாரங்களில் தான் பிரவிருத்தியற்றவனானாலும் பிரவிருத்தியுள்ளவனைப்போல் தோற்றப்பட்டவன். அல்லது அந்த தேகேந்திரியாதிகளின் பிரவிருத்திக்கு சாக்ஷியாயிருக்கிறவன். என்றால், அவைகளைச் செய்யவொட்டாமல் தடுக்காதவன். (ரா) தேகாதிகளால் செய்யப்படும் காரியங்களை யாமோதிக்கிறவன். (ம) செவ்வையாய் ஏவுகிறவன். (மீ,வி) செய்யவேண்டிய காரியங்களில் ஆலோசனைசொல்லுகிறவன். அல்லது, புத்தி பூர்வமாய் அனுகூலமாயிருக்கிறவன்.

‡ (ஸ்ரீ) ஈசுவரரூபத்தினால் ஜகத்தைத் தரிக்கிறவன். (ஶம்) சத்தியமான தன் சுவரூபத்தினால் மித்தையான தேகேந்திரிய மனசு புத்திகளைத் தரிக்கிறவன். (மீ,வி) இரக்ஷகன்.

§ (ஸ்ரீ) பாலனஞ் செய்கிறவன். (ஶம்) அனுபவிக்கிறவன். என்றால், ஆத்மா சுகதுக்கங்களில் சம்பந்தமற்றவனானாலும், தேகேந்திரியாதி சம்பந்தத்தால் சுகதுக்காதிகளை அனுபவிக்கிறவன்போல் காணப்படுவதா லப்படிச் சொல்லப்படுகிறான். (ரா) தேகேந்திரியாதிகளின் பிரவிருத்தியினாலுண்டாகும் சுகதுக்கங்களை அனுபவிக்கிறவன். (மீ,வி) சர்வகருமபல சாரங்களையும் கிரகிக்கிறவன்.

¶ (ஶம்) சகலத்திற்கும் ஆத்மாவாயும் சுவதந்தரனாயு மிருக்கிறவன். (ரா) தேகத்தை ஏவுகிறது, தரிக்கிறது, தேகத்திற்கு சேஷியாயிருக்கிறது, இவைகளினாலே தேகேந்திரிய மனசு முதலியவைகளுக்கு யஜமானனா யிருக்கிறான். (மீ,வி) மகாசக்தியுள்ளவன்.

‖ (ஸ்ரீ) அந்தரியாமியாயும். (ஶம்) அவித்தியாசம்பந்தமான தேகாதிகளைக் காட்டிலும் அந்நியனாயும், "𑌉𑌤𑍍𑌤𑌮𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌸𑍍𑌤𑍍𑌵𑌨𑍍𑌯𑌃" (௧௫-வது அத், ௧௭-வது ச,)

[illegible]னானவன் இந்த தேகத்திலிருந்தாலும் தேகத்தைக்காட்டிலும் பின்னமானவனாயும், சமீபத்திலிருந்துபார்க்கிற மேல்விசாரணைக் காரனாய், அநுமோதிக்கிறவனாயும், (என்றால், தேகேந்திரியாதிகளால் செய்யப்படுகிற காரியங்களுக்கு தன்னுடைய சம்மதம் கொடுக்கிறவன்) தேகத்தைத் தரிக்கிறவனாயும், சுகதுக்கங்களை அறிகிறவனாயும் பிரமாதிகளுக் கெஜமானனாயும், பரமாத்துமாவாயும் சொல்லப் படுகிறான். (உ௩)

---

உ௪. யஏவம்வேத்தி புருஷம் ப்ரக்ருதிஞ்ச குணைஸ்ஸஹ।
ஸர்வதா வர்த்தமாநோऽபி ந ஸ பூயோऽபிஜாயதே॥

| | |
|---|---|
| ஏவம் * | இவ்விதமாய் |
| புருஷம் | புருஷனையும் |
| குணைஸ்ஸஹ | சுகதுக்கமோகாதிகளோடுகூடியிருக்கிற |
| ப்ரக்ருதிஞ்ச | பிரகிருதியையும் |
| ய: | எவன் |
| வேத்தி | அறிகிறானோ |
| ஸ: | அவன் |
| ஸர்வதா வர்த்தமாநோऽபி † | எவ்விதமா யிருந்தபோதிலும் (விதியைக் கடந்து நடந்தாலும்) |
| பூய: | மறுபடியும் |
| நாபிஜாயதே | பிறப்பை யடைகிறதில்லை. |

இவ்விதமாய் (முந்தியசுலோகத்தில் சொல்லியிருக்கிறபடி) புருஷனையும் சுகதுக்கங்களோடு கூடியிருக்கிற பிரகிருதியையும் எவனறிகிறானோ, அவன் விதியைக்கடந்து நடந்தாலும் மறுபடியும் பிறப்பை யடைகிறதில்லை.

(ஶம்) புருஷனாகிய பிரம்மம் தானென்றும், சுகதுக்காதிகளுடன்கூடிய பிரகிருதி ஞானத்தினால் நாசமடைந்ததென்றும் எவன் அறிகிறானோ, அந்தஞானி விதியைக் கடந்தவனானாலும் பிறப்பை யடைகிற தில்லையென்று சொல்லப்பட்டது. ஞானத்திற்கு முந்தி

---

என்கிறபடி உத்தமமான ஆத்மாவாயு மிருக்கிறவன். (ரா) இந்த தேகேந்திரியாதிகளுக்குப் பரமாத்மாவாகவிருக்கிறவன். அதாவது, தேகேந்திரிய சம்பந்தமாய்ப் பார்த்தால், அவைகளுக்கு அந்நியமான புருஷனாயும், அவைகளுக்கு மகேசனாயும் அவைகளுக்கு பரமாத்மாவாயு மிருக்கிறவன். (ஸ்ரீ,வி) உயர்ந்தசேதனன்.

* (ரா) (ஸ்ரீ,வி) ஏதம், என்று பாடம். இந்த என்று அர்த்தம்.

† (ஸ்வா) இதின் ௯-வது அத்தியாயம், ௩௧-வது சுலோகம் பார்க்க.

யும்பின்னியும்செய்த ஆகாமி சஞ்சித கருமங்கள் அவைகளின் பலனாகிய சுகதுக்காதிகளுடன்கூடிய ஜன்மங்களைக் கொடுக்கவேண்டியதல்லவா? அவைகளெப்படி ஜன்மங்களைக் கொடுக்காமல் போய்விடும்? என்றாலோ, "ஜ்ஞாநாக்நிஸ்ஸர்வகர்மாணி பஸ்மஸாத் குருதே" (ச-வது அத், கூஎ-வது-சு.) என்கிற வாக்கியத்தாலும் மற்றுமுள்ள சுருதிவாக்கியங்களாலும் ஞானமானது சகல கருமங்களையும் நாசப்படுத்தி விடுமென்று வெளியாகிற தாகையால், மறுபடி ஜனனத்திற்கு ஹேதுவில்லை என்பது தாத்பரியம்.

(௩௩) முன்சொன்ன சுவபாவத்தோடுகூடிய இந்தப் புருஷனையும் இனி சொல்லப்போகிற சுவபாவங்களையுடைய சத்துவாதி குணங்களுடன்கூடிய பிரகிருதியையும், எவன் விவேகத்தினா லறிகிறானோ, அவன் தேவாதி சரீரங்களில் அதிக அபிமானத்தோ டிருந்தபோதிலும் மறுபடியும் பந்தத்தை யடைகிறதில்லை. என்றால், இந்த தேகம்போன உடனே பூர்ணஞானமுள்ளவும் சகலகருமங்க ளற்றவுமானப் பிரகிருதி விமுக்தாத்ம சுவரூபத்தை யடைகிறானென்பதே.

(௪) முன்சொன்னபடிக்கு எவன் பரமாத்மாவைப் பிரத்தியக்ஷமா யறிகிறானோ அவன் பிறக்கிறதில்லை என்பதற்கு, எவன்தானே பிரம்மமென்று அறிகிறானோ அவன் பிறக்கிறதில்லையென்று சிலர் அர்த்தஞ் செய்திருக்கிறது சரியல்ல. புருஷனே நான் என்று சொல்லக்கூடாது. ஜனமேஜய மகாராஜாவுக்கும் வைசம்பாயனருக்கும் நடந்த உத்தரப் பிரத்தியுத்தரங்களான மகாபாரதம் மோக்ஷதர்மத்திலுள்ள அடியில் குறித்த வாக்கியங்களைப் பார்க்க.

| | |
|---|---|
| "பஹவ: புருஷா ப்ரஹ்ம<br>"உதாஹோ ஏக ஏவ து । கோ<br>"ஹ்யத்ர புருஷச்ச்ரேஷ்ட ஸ்தம்<br>"வாந்வக்தும் இஹார்ஹஸி॥" | ஓய் பிராம ணோத்தமரே! புருஷர்களநேகரா? அல்லது, ஒருவனா? வெகுபெயரானால் அவர்களில் சிரேஷ்டமானவன் யார் அவனை நீர் எனக்குச் சொல்லவேண்டும்? ✱ |
| "நைததிச்சந்தி புருஷ மே<br>"கம் குருகுலோத்வஹ । பஹூ<br>"நாம் புருஷாணாம் ஹி யதை<br>"கா யோநிருச்யதே ॥ ததா தம்<br>"புருஷம் விச்வம் ஆக்யாஸ்யாமி<br>"குணாதிகம்॥" | புருஷர்களெல்லோரும் ஒன்று என்கிறமதத்தை ஞானிகள் ஒப்புக்கொள்ளுகிறதில்லை. அநேக புருஷர்களில், சமஸ்தத்திற்கும் காரணமாய் ஒருவன்தான் சொல்லப்படுகிறான்; அப்படி சமஸ்தத்திற்கும் காரணனையும், அனேக குணங் |

✱ (ஸ்வா) இந்த மொழிபெயர்ப்பு மத்துவமதக்கொள்கையை யநுசரித்தது.

களுடன் கூடியுமிருக்கிற புருஷனை ஞானிகள் அங்கீகரிக்கிற பிரகாரம், நானுமக்குச் சொல்லுகிறேன் கேளும். *

(ஸ்ரீ,வி) ஜீவன், பரன், என்கிற இரண்டுவித புருஷர்களையும், ஜடம், அஜடம், (சித், அசித்) என்கிற இரண்டுப் பிரகிருதிகளையும், அவரவர்களுடைய குணங்களோடுகூட பிரத்தியக்ஷமாய் எவனறிகிருனே, அவன் அஜாக்கிரதையினுல் கிரமந்தப்பி நடந்தபோதிலும் மறுபடியும் ஜனனமடைகிறதில்லை.

(வ்யா) பிரகிருதி புருஷர்களுடைய சுவபாவகுணங்களை அறிவதினுலே, புனர்ஜனன மற்றுப்போவதாக இந்த சுலோகத்தின லர்த்தமாகிறது. ஆனல் இதைமுந்திய சுலோகத்துடனே சேர்த்துப் பொருள்செய்தால், புருஷனைவன் சகல வியவகாரத்திற்கும் அந்நியனென்றும், சகல வியவகாரமும் பிரகிருதியின் குணமென்றும், தெரிந்துகொள்ளுவது மாத்திரமல்ல; அவ்விதமாய்த் தெரிந்து, தான் சகலத்திலு மிருந்து நிவிருத்தியடைந்து, அனுபோகியா யிருக்கவேண்டுமென்று கிரகிக்க வேண்டும். (உச)

---

உரு. 𑌧𑍍𑌯𑌾𑌨𑍇𑌨𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌕𑍇𑌚𑌿𑌦𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌾।
𑌅𑌨𑍍𑌯𑍇 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑍇𑌨 𑌯𑍋𑌗𑍇𑌨 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍇𑌨 𑌚𑌾𑌪𑌰𑍇॥ †

| | |
|---|---|
| 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 | பரமாத்மாவை |
| 𑌕𑍇𑌚𑌿𑌤𑍍 | சிலர் |
| 𑌧𑍍𑌯𑌾𑌨𑍇𑌨 | தியானத்தினலேயும் |
| 𑌆𑌤𑍍𑌮𑌨𑌿 | தேகத்திற்குள்ளே |
| 𑌆𑌤𑍍𑌮𑌨𑌾 | மனதினலேயும் |
| 𑌅𑌨𑍍𑌯𑍇 | மற்றும்சிலர் |
| 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑍇𑌨 𑌯𑍋𑌗𑍇𑌨 ‡ | சாங்கிய யோகத்தினலேயும் |
| 𑌅𑌪𑌰𑍇 | மற்றும் சிலர் |
| 𑌕𑌰𑍍𑌮𑌯𑍋𑌗𑍇𑌨 | கருமயோகத்தினலேயும் |
| 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 | அறிகிருர்கள். |

* (வ்யா) இந்த மொழிபெயர்ப்பு மத்துவமதக்கொள்கையை யநுசரித்தது.

† (வ்யா) சிவபுராணம் வாயுஸம்ஹிதை உகூ-வது அத்தியாயத்தில் யோகவிஷயம் விஸ்தாரமாய் சொல்லப்பட்டிருக்கிறது.

‡ (வ்யா) இதின் மூன்றுவதத்தியாயம், கூ-முதல் சு-வரையிலுள்ள சுலோகங்களைப் பார்க்க,

பரமாத்மாவை சிலர் தியானத்தினாலேயும், தேகத்திற்குள்ளே மன தினாலேயும், சிலர் சாங்கிய யோகத்தினாலேயும் (என்றால், சாங்கி யம்=பிரகிருதிபுருஷர்களைப் பகுத்தறிதல் யோகமென்றால், அஷ்டா ங்கயோகம்) சிலர் கருமயோகத்தினாலேயு மறிகிறார்கள்.

(௨௰) ஆத்ம தரிசனத்திற்குபாயமானத் தியானாதிகள் சொல்லப் படுகின்றன - சிலர் விஷயங்களிலிருந்து இந்திரியங்களை யிழுத்து மன துடன்சேர்த்து அந்த மனதை ஆத்மாவிடத்தில் இடைவிடாமலும் சலிக்காமலும் நிறுத்தி புத்தியினால் தன்னை பரமாத்மாவாக அறிகி றார்கள். சிலர் சத்துவாதிகுணங்களுடைய காரியமாகிய வியாபாரங் களுக்கு தான் சாக்ஷியே யன்றி அந்த வியாபாரங்கள் தன்னைச்சேர்ந் தனவல்ல, தான் அவைகளுக் கன்னியனென்று சிந்திக்கிறதாகிய சாங் கிய யோகத்தினாலே தன்னைத்தானே யறிகிறார்கள். சிலர் ஈசுவரார்ப் பணபுத்தியா லநுஷ்டிக்கிற கருமயோகத்தினாலே சித்தசுத்தியும் அதி னால் ஞானமுமடைந்து தன்னைத்தானே அறிகிறார்கள்.

(௨௫) யோகநிஷ்டையை யடைந்த சிலர், சரீரத்திலிருக்கிற ஆத் மாவை (ஜீவனை) மனதினாலே தியானஞ் செய்து அறிகிறார்கள். யோக நிஷ்டையில் சித்தியடையாத சிலர், ஞானயோகத்தினால் மனதை யோ க்கியமாகச் செய்துகொண்டு பிறகு தியானயோகத்திற்கு முயன்று ஆத் மாவை யறிகிறார்கள். ஞானயோகத்தி லதிகார முள்ளவர்களும் அதி கார மில்லாதவர்களும் சுலபமான உபாயத்தைத் தேடுகிறவர்களாய் சிலர் கருமயோகத்தினால் அந்தக்கருமத்திற்குள் ளடங்கி யிருக்கிற ஞானத்தைச் சம்பாதித்துக்கொண்டு அந்த ஞானத்தினால் ஆத்மாவை யறிகிறார்கள்.

(௩) கருமயோகிக்கு, கருமயோகம், சாங்கியயோகம், தியானயோ கம், இம்மூன்றும் அவசியம் வேண்டியது. சாங்கிய யோகியானவன், வேதத்திற் சொல்லப்பட்ட ஈசுவர ரூபத்தை, கேட்டும், பார்த்தும், சிந்தித்தும், தியானித்தும், அறியவேண்டியது.

(மீ,வி) சிலர் சிரவண மனனத்துடன் கூடினவர்களாய்த் தியா னத்தினாலேயும், புத்தியினாலேயும், பகவானை தேகத்திலே பார்க்கிறார் கள். சிலர் வேதோக்தமான பகவத்சுவரூப அபரோக்ஷ (நேராய்ப் பார்க்குதல்) ஞானத்தினாலேயும், தியானத்தினாலேயும், பார்க்கிறார் கள். சாதுகருமத்தி லுண்டாவது பகவத் பிரஸாதம். அந்த பகவத் பிரஸாதத்தினாலுண்டாகும் சிரவண மனன தியானங்களினாலே பர மாத்மாவை யறிகிறார்கள். தியானத்திற்கு அசக்தாளான பின்னும் சிலர் சாங்கிய சம்பாதனத்தினாலே, தியானத்தை சம்பாதித்துக்கொ ண்டு பார்க்கிறார்கள். இதிலும் அசக்தாளானவர்கள், கரும உபாயத்தி

னால் சிரவண முதலியவை சம்பாதித்து அதினால் பரமாத்மாவைப் பார்க்கிறார்கள்.

(ஸ்ரீ) இந்த சுலோகத்தினால் உபாசகாளுடைய தாரதம்மியம் சொல்லப்பட்டது. (௨௫)

---

௨௬. அந்யே த்வேவமஜாநந்த: ஶ்ருத்வாऽந்யேப்ய உபாஸதே।
தேऽபி சாதிதரந்த்யேவ ம்ருத்யும் ஶ்ருதிபராயணா:॥

| | |
|---|---|
| ஏவம் | இவ்விதமாய் |
| அஜாநந்த: | தெரியாதவர்களாயிருக்கிற |
| அந்யே து | மற்றுஞ்சிலரோ |
| அந்யேப்ய: | குருமுதலிய இதராளிடத்திலிருந்து |
| ஶ்ருத்வா | (உபதேசிக்க) கேட்டு |
| உபாஸதே | உபாசிக்கிறார்கள் (தியானிக்கிறார்கள்) |
| தேऽபி | அவர்களுங்கூட |
| ஶ்ருதிபராயணா:* | குருஉபதேசத்தை யெப்பவு மாசிரயித்தவர்களாய் |
| ம்ருத்யும் | சமுசாரபந்தத்தை |
| அதிதரந்த்யேவ | தாண்டுகிறார்கள். |

இவ்விதமாய் (ஆத்மா உபதிரஷ்டாமுதலிய சுவபாவமுடையவன் என்பதாய்) தெரியாதவர்களா யிருக்கிற மற்றுஞ் சிலரோ, குருமுதலியவர்களினால் உபதேசம் பெற்றுத் தியானிக்கிறார்கள். அவர்களுங் கூட குரு உபதேசத்தை யாசிரயித்துவந்து சமுசாரபந்தத்தை நிவர்த்தித்துக்கொள்ளுகிறார்கள்.

(ரா) மேலாகசொன்ன சாங்கிய கருமயோகங்களில் அதிகாரமற்ற சிலர் ஞானிகளினா லுபதேசம்பெற்று, கரும யோகாதிகளினால் ஆத்மாவை யுபாசிக்கிறார்கள். சுருதிமுதலியவைகளைக் கேட்டறிந்தும் கருமயோகங்களை யனுஷ்டித்தும் அதினால் பாபத்தைப் போக்கடித்துக்கொண்டு சாங்கியாதி யோகங்களினால் மிருத்யுவை அதிக்கிரமிக்கிறார்கள். (௨௬)

---

௨௭. யாவத் ஸஞ்ஜாயதே கிஞ்சித் ஸத்த்வம் ஸ்தாவரஜங்கமம்।
க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞஸம்யோகாத் தத்வித்தி பரதர்ஷப॥

---

* (ஶம்) சாஸ்திரார்த்த உபதேசம்பெறுவதையே மோக்ஷத்திற்கு முக்கியசாதனமென்று நம்பியிருக்கிறவர்கள். (ஸ்ரீ,வீ) அநேககாலம் சிரவணம் செய்து வந்து.

| | |
|---|---|
| ஹே பரதர்ஷப | ஓ! பரதகுல சிரேஷ்டா! |
| ஸ்தாவரஜங்கமம் | ஸ்தாவரஜங்கமமாயிருக்கிற |
| கிஞ்சித் ஸத்வம் யாவத் | யாதொரு வஸ்துவானது |
| ஸஞ்ஜாயதே | உண்டாகிறதோ |
| தத் | அதை |
| க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞஸம்யோகாத் | க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞர்களுடைய சம்பந்தத்தாலுண்டாகிறதாக |
| வித்தி | அறி. |

ஓ! பரதகுல சிரேஷ்டா! ஸ்தாவரஜங்கமங்களாயிருக்கிற எந்த வஸ்துக்கள் உண்டாகின்றனவோ, அவை யெல்லாவற்றையும், க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞாளுடைய சம்பந்தத்தினுலே யுண்டாகிறவைகளாக அறி.

(ஸ்ரீ) அவிவேகத்தினல் தேகாதிகளில் ஆத்மபுத்திதான் க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞாளுடைய சம்பந்தமென்று சொல்லப்படுகிறது.

(மூ) (ஸம்யோக꞉) ஸம்யோக மென்பது (அத்யாஸ꞉) அத்தியாசமென்கிற சம்பந்தம். அதாவது, க்ஷேத்திரத்தினுடைய சுவபாவமான தருமங்களை க்ஷேத்திரக்ஞ னிடத்திலும், க்ஷேத்திரக்ஞனுடைய சுவபாவமான தருமங்களை க்ஷேத்திரத்தி னிடத்திலும் ஆரோபிக்கிறது. இப்படி ஆரோபமென்கிற அத்தியாஸ மானது அவிவேகத்தி ஞலுண்டானது. எப்படி என்ருல், தேகாதிகளின் காரியங்களான நடத்தல் பார்த்தல் முதலியவைகளை (ஆத்மாவான) தன்னுடைய காரியங்களாக தன்னிடத்திலும், தேகத்தைப்பார்த்து "நான் அறிகிறேன், நான் தெரிந்துகொண்டேன்" என்று தானே தேகம்போல் எண்ணுகிறபடியால், தன்னுடைய தருமங்களான ஞானம் முதலியவைகளை தேகத்தினிடத்திலும் ஆரோபிக்கிறதுதான் அத்தியாஸம். இதற்கு ஹேது அக்ஞானமே. கயிற்றில் பாம்பும், கிளிஞ்சிலில் வெள்ளியும், எப்படிப் பிரமையினுலுண்டாகின்றனவோ அப்படிப்போல.

(மீ,வி) சகல ஜகத்தும் சித்பிரகிருதி (லக்ஷ்மி) பரமாத்மா இவர்களுடைய சம்பந்தத்தினுலேயே யுண்டாகிறது. முக்கிய காரணம் பரமாத்மா என்பது தாத்பரியம். (௨௭)

---

௨௮. ஸமம் ஸர்வேஷு பூதேஷு திஷ்டந்தம் பரமேச்வரம்।
விநச்யத்ஸ்வவிநச்யந்தம் ய꞉ பச்யதி ஸ பச்யதி॥

| | |
|---|---|
| ஸமேஷு | (ஸ்தாவரஜங்கமமான) சகல பூதங்களிலே |
| பூதேஷு | யும் |
| ஸமம் | சமமாய் |
| திஷ்டந்தம் | இருக்கிற |
| பரமேஶ்வரம் | பரமேசுவரனை |
| விநஶ்யத்ஸு | (மேலாகசொன்னபூதங்கள்) நாசமடைகின் றவையாயிருக்க |
| அவிநஶ்யந்தம் | நாசமடையா திருக்கிறவரென்று |
| ய꞉ | எவன் |
| பஶ்யதி | அறிகிருனே |
| ஸ꞉ | அவன் |
| பஶ்யதி | அறிகிருன். |

ஸ்தாவர ஜங்கமமான சகல பூதங்களிலேயும் சமமா யிருக்கிற பரமேசுவரனை, அந்த பூதங்கள் நாசமடைந்தபோதிலும் நாசமடையாதவரென்று எவன் அறிகிருனே அவனே யறிந்தவன்.

(ஶம்) அவித்தையை நிவர்த்திக்கத்தக்க ஆத்மசுவரூப ஞானமானது முன்னமேயே சொல்லப்பட் டிருந்தாலும், வேறே சப்தங்களினு லிப்போது சொல்லப்படுகிறது — தேகேந்திரிய மனேபுத்தி அவ்வியக்தம் ஆத்மா இவைகளைக்காட்டிலும் விலக்ஷணராயும், நியந்தாவாயு மிருக்கிறதினுல், பரமேசுவரனென்று சொல்லப்பட்டது. அவர் பிரம்மாமுதல் ஸ்தாவரம் வரையிலுள்ள சகலபூதங்களிலும் சமமாயிருப்பவர். காணப்பட்ட சகலமான வஸ்துக்களும், அந்தவஸ்துக்கள் எதினுடைய விகாரங்களோ அந்த மூலமும், நாசமடையப் பட்டவைகளே. அவைகள் நாசமடைந்த போதிலும் பரமேசுவரன் நாசமடைகிறதில்லை. இப்படி சொன்னதினுல், அந்த காணப்பட்ட வஸ்துக்களுக்கும் அவைகளின் மூலத்திற்கும் பரமேசுவரன் விலக்ஷண மானவரென்று சொன்னதுபோலாச்சுது; இப்படிப்பட்ட பரமேசுவரனும் தானும் ஒன்றேயென்றும் ஆத்மா அநேக மல்லவென்றும், ஜீவேசுவரர்களை அபேதமாக எவன் அறிகிருனே அவன்தான் விஸ்தாரமா யறிந்தவன். பேதமாய்ப் பார்க்கிறவன் பார்க்கிறவனல்லவோ வென்ருல், அவனும் பார்க்கிறவனே; ஆனுல் பேததிருஷ்டியாய்ப் பார்க்கிறவன், பரமேசுவரனை சகலத்திலும் சமமாய் பார்க்கிறவனல்ல, எப்படியென்ருல், ஒருவனுகிய சந்திரனை, ஒரு சந்திரனுக ஒருவனும், இரண்டு சந்திரர்க ளிருப்பதுபோல் ஒருவனும், பார்க்கிருன். இருவரும் பார்க்கிறவர்களானுலும், ஒன்ருய் பார்த்தவன்தான் வாஸ்தவத்தை சரியாய் பார்த்தான். மற்ெருருவனே அவன் கண்ணிலுள்ள தோஷத்தினுல் ஒன்றையே யிரண்டாகப் பார்த்தான், அப்படிப்போ

லவே, அவித்தியா சம்பந்தத்தினு லுண்டானது பேததிருஷ்டியென்று தாத்பரியம்.

(ரா) பிரகிருதி புருஷர்களா லுண்டாயிருக்கிற தேவ மனுஷிய மிருக பக்ஷி முதலிய தேகங்களிலுள்ள ஜீவாத்மாக்கள் அவர்கள் எதுடன் சம்பந்தப்பட் டிருக்கின்றுர்களோ, அந்த அவித்தையை நீக்கி பார்த்தால் வித்தியாசமன்றியில ஞானுகாரத்தினுல் சமமாயிருக்கிறுர்கள். தேகேந்திரிய மனசுபுத்திகளுக்கு அந்நியர்களாயும் அவைகளுக் கெஜமானர்களாயு மிருப்பதால், பரமேசுவரராக விருக்கிறுர்கள் அப்படிப்பட்ட தன்னை, தேகாதிகள் நாசமடைந்தாலும் நாசமடையாத சுவபாவ முடையவனென்று அறிந்தவன்தான் தன்னை சரியாய் அறிந்தவன். தேகாதிகள் பலவித்தியாசமா யிருப்பதுபோல் ஆத்மாவும் வித்தியாச முடையவனென்றும், தேகாதிகள் நாசமடைவதுபோல் ஆத்மா நாசமடையப் பட்டவனென்றும், அறிகிறவன் சரியாயறிந்தவனல்ல வாகையால் அவன் சமுசார பந்தத்திற்கு அருகனு யிருக்கிறுன்.

(மீ,வி) உத்கிருஷ்ட நிகிருஷ்டமாயுள்ள சகலப் பிராணிகளிலுமிருக்கிற அசிந்திய சக்தியுள்ள பரமாத்மாவை, எல்லாவிடத்திலும் ஓரேவிதமா யிருக்கிறவராயும், ஜனனமரண துக்கதோஷங்களுடன் கூடினப் பிராணிகளிலிருக்கும் பரமாத்மாவுக்குப் பிராணிகளுடைய தோஷங்களில் சம்பந்த மில்லையென்றும் எவன் அறிகிறுனே அவன் தான் யதார்த்தமான ஞானியா யிருக்கிறுன். (௨௮)

---

௨௯. ஸமம் பஶ்யந் ஹி ஸர்வத்ர ஸமவஸ்தி²தமீஶ்வரம்।
ந ஹிநஸ்த்யாத்மநாத்மாநம் ததோ யாதி பராம் க³திம்॥*

| | |
|---|---|
| ஸர்வத்ர | சகலப்பிராணிகளிடத்திலேயும் |
| ஸமம் | சமமாய் |
| ஸமவஸ்தி²தம் | நாசமற்ற சுவரூபியாயிருக்கிற |
| ஈஶ்வரம் | ஈசுவரனை |
| பஶ்யந் | (அறிந்தவன்) பார்க்கிறவன் |
| ஆத்மநா | தன்னுலே |
| ஆத்மாநம் | தன்னை |
| ந ஹிநஸ்தி | தீங்குக்குள்ளாக்கிக் கொள்ளுகிறதில்லை |
| தத: | பிறகு |
| பராம் க³திம் | (மோக்ஷத்தை) உத்தமமானகதியை |
| யாதி | அடைகிறுன். |

* இந்த சுலோகத்தை கூர்ம்மபுராணம் உத்தரபாகம் அத்-அ-ல் காண்க.

சகலப் பிராணிகளிடத்திலேயும் சமமாய் நாசமற்ற சுவரூபியா யிருக்கிற ஈசுவரனை யறிந்தவன், தன்னாலே தன்னைக் கெடுத்துக்கொள்ளுகிறதில்லை. பிறகு மோக்ஷத்தை யடைகிறான்.

(ஸ்ரீ) எவனிவ்விதமா யறிகிறானோ, அவன் சச்சிதானந்த சுவரூபியான தன்னைக் கெடுத்துக்கொள்ளுகிறதில்லை. அப்படி யறியாதவன் தேகமே யாத்மாவென் றறிந்தவனாகையால், அவன் தேகத்தைப்போல் ஆத்மாவையும் கெடுத்துக்கொள்ளுகிறான்.

(ஶா) நிஜமான தன் ஆத்ம சுவரூபத்தை யறியாமல் வேறேவிதமா யறிகிறவன், தன்னைத்தானே சமுசார பந்தத்திற் குள்ளாக்கிக் கொள்ளுகிறான்.

(ரா) ந ஹிநஸ்தி — இரக்ஷித்துக்கொள்ளுகிறான். என்றால், பந்தத்திலிருந்து விடுவித்துக் கொள்ளுகிறான். தத: — தன் சுவரூபத்தை யிவ்விதமா யறிவதினால், பராம் — பந்தத்திருலிந்து விடுபட்ட, கதிம் — தான் அடையத்தகுந்த சுவரூபத்தை, யாதி — அடைகிறான். இப்படி யறியாதவன் தன்னை சமுசாரத்தில் முழுகடித்துக் கொள்ளுகிறான்.

(மீ,வி) பரமாத்மாவை சமமாய் பார்க்கிறவன் தன்னை, ந ஹிநஸ்தி— நரகத்தில் விழும்படி செய்துகொள்ளுகிறதில்லை. (௨௯)

---

௩௦. ப்ரக்ருத்யைவ ச கர்மாணி க்ரியமாணாநி ஸர்வஶ:।
யஃ பஶ்யதி ததாத்மாநமகர்தாரம் ஸ பஶ்யதி॥

| | |
|---|---|
| ஸர்வஶ: | பலவிதமான |
| கர்மாணி | கருமங்கள் |
| ப்ரக்ருத்யைவ | (தேகேந்திரியாதி சுவரூபமா யிருக்கிற) பிரகிருதியினாலேயே |
| க்ரியமாணாநி | செய்யப்படுகின்றன வென்றும் |
| ததா* | அப்படியே |
| ஆத்மாநம் | தன்னை (ஆத்மாவை) |
| அகர்தாரம் | (கருமங்களுக்கு) கர்த்தாவல்லவென்றும் |
| ய: | எவன் |
| பஶ்யதி | அறிகிறானோ |
| ஸ: | அவன் |
| பஶ்யதி | அறிகிறான். |

---

* (ஶா) ததா - என்று பாடம், அப்போது என்று அர்த்தம்.

பலவிதமான கருமங்கள் தேகேந்திரியாதி சுவரூபமாயிருக்கிற பிரகிருதியினலேயே செய்யப்படுகின்றனவென்று, அப்படியே ஆத்மாவை கருமங்களுக்குக் கர்த்தாவல்லவென்றும் எவனறிகிருனே, அவன் (செவ்வையாய்) அறிகிருன்.

(ஸ்ரீ) ஆத்மாவுக்கு கர்த்திருத்துவம் தேகாபிமானத்தினலேயேயன்றி சுவபாவத்தில் கர்த்திருத்துவமில்லை.

(ஶம்) மாயையானது தேகேந்திரியாதி ரூபமா யிருந்துகொண்டு கருமங்களைச் செய்கிறது; ஆத்மாவாகிய தான் கருமங்கள் செய்கிறதில்லை; "தான் சுத்தனையும் நிர்குணனையு முள்ளவன்" என்று எவன் எப்போது அறிகிருனே, அப்போதுதான் அவன் பரமாத்மாவை அறிந்தவனென்று சொல்லப்படுகிருன்.

(ரா) "கார்யகாரணகர்த்ருத்வே ஹேது: ப்ரக்ருதிருச்யதே" (இந்த அத்தியாயம் உக-வது சுலோகம்) என்கிறபடி சகல காரியங்களையுஞ் செய்வது பிரகிருதியே யன்றி தானல்ல வென்றும், தான் ஞானசுவரூபி யென்றும், தனக்குப் பிரகிருதி சம்பந்தமும் சரீரியாய் பிரகிருதியினிடத்தி லிருப்பு அது மூலமாய் சுகதுக்காதி அனுபவமும் கருமரூப அக்ஞானத்தின லுண்டாயிருக்கின்றனவென்றும் அறிகிறவன் அறியவேண்டிய தன் ஆத்மாவை உள்ளபடி அறிந்தவன்.

(ஸ்ரீ-வி) ப்ரக்ருத்யைவ — ப்ரக்ருத்யா - ஈச்வரேண தான் செய்கிற சகல கருமங்களும் தன்னுடைய பூர்வகருமானுசாரமாயே ஈசுவரன் செய்விக்கிருரென்றும், அந்த ஈசுவரனுக்குக் கர்த்தா (யஜமானன்) வேறே யாருமில்லையென்றும் எவனறிகிருனே அவன் ஈசுவரனைக்காணுகிருன். ஈசுவரன் ஜீவனுடைய பூர்வகருமத்தையனுசரித்து அந்தந்த கருமானுசாரமாய் கருமங்களைச் செய்விக்கிறபடியால் ஈசுவரனிடத்தில் வைஷம்மியம் (பக்ஷபாதம்) இல்லை. அல்லது, ப்ரக்ருத்யா — சித்பிரகிருதியினலேயும், ச — ஈசுவரனலேயும் கருமங்கள் செய்விக்கப்படுகின்றன வென்றும், ஜீவன், தான் சுவதந்தரனல்ல வென்றும் எவன் பார்க்கிருனே அவன் வாஸ்தவமானதைப் பார்த்தவன். (கூ0)

---

கூக. யதா பூதப்ருதக்பாவம் ஏகஸ்தமநுபச்யதி।
தத ஏவ ச விஸ்தாரம் ப்ரஹ்ம ஸம்பத்யதே ததா॥

பூதப்ருதக்பாவம் { பிரபஞ்சத்தின் வேற்றுமையை (நானுவித பேதங்களுள்ள பிரபஞ்சத்தை)

| | |
|---|---|
| ஏகஸ்தம்* | பிரகிருதியுடன் லயித்தொன்று யிருக்கிற தாகவும் |
| தத ஏவ† | அந்தப்பிரகிருதியிலிருந்தே |
| விஸ்தாரம்‡ | அதின் விரிவையும் (விரிவாயாகிறதாக வும்) |
| யதா | எப்போது |
| அநுபஶ்யதி§ | பார்க்கிறானோ |
| ததா | அப்போது |
| ப்ரஹ்ம | பிரம்மத்தை |
| ஸம்பத்யதே | அடைகிறான். |

(பிரகிருதியிலிருந்துண்டான) நானாவித பேதங்களுள்ள பிரபஞ்சத்தை (பிரளயகாலத்தில்) பிரகிருதியுடன் லயித்தொன்றாயிருக்கிறதாகவும், அந்தப் பிரகிருதியிலிருந்தே விரிவாயாகிறதாகவும், (சிருஷ்டிகாலத்தில் உற்பத்தியாகிறதாகவும்) எப்போது பார்க்கிறானோ, அப்போது பிரம்மத்தை யடைகிறான். (என்றால், பிரம்மமாகவாகிறான்.)

(ஸம்) ஏகஸ்தமநுபஶ்யதி = சாஸ்திராசாரி யோபதேசத்தினாலே மனனம் செய்து, காணப்படும் வஸ்துக்க ளெல்லாம் ஆத்மாவே (தானே) என்று பிர்த்தியக்ஷமாய் பார்க்கிறானே "ஆத்மைவேதம் ஸர்வமிதி = இந்த சகலமும் ஆத்மாவே என்று" (சாந்தோக்கிய உபநிஷத் ௭ - அத்தியாயம், ௨௫ - வது கண்டம் ௨ - வது வாக்கியம் பார்க்க.) விஸ்தாரமநுபஶ்யதி = சகல பிரபஞ்சமும் தன்னிடத்திலிருந்துண்டானதாக எவன் பார்க்கிறானோ "ஆத்மத: ப்ராண ஆத்மத ஆஶா "ஆத்மத: ஸ்மர ஆத்மத ஆகாஶ: ஆத்மதஸ்தேஜ: ஆத்மத ஆப: ஆத்மத ஆவி "ர்பாவ திரோபாவௌ ஆத்மதோ(அ)ந்நம் ஆத்மதோ பலம் ஆத்ம "தோ விஜ்ஞானம் ஆத்மதோ த்யானம் ஆத்மதஶ்சித்தம் ஆத்மத: ஸங்கல்ப: ஆத்ம "தோ மந ஆத்மதோ வாக் ஆத்மதோ நாம ஆத்மதோ மந்த்ரா: ஆத்மத: "கர்மாண்யாத்மத ஏவேதம் ஸர்வம் = ஆத்மாவினிடத்திலிருந்துப் பிரா "ணன் திக்குகள் இச்சை ஆகாசம் பிரகாசம் ஜலம் உற்பத்தி நாசங் "கள் பூமி அந்நம் பலம் பகுத்தறிவு தியானம் சித்தம் சங்கற்பம்

* (மீ,வி) ஒருவராயிருக்கிற விஷ்ணுவிடத்தில் ஆசிரயத் திருக்கிறதாகவும்.

† ‡ (மீ,வி) அந்த விஷ்ணுவிடத்திலேயேயிருந்து மறுபடி யுண்டாகிறதாகவும்.

§ (மீ,வி) ஜீவேசுவரபேதத்தையும்ஜீவர்களில்பரஸ்பர பேதத்தையும் தாரதம்மியமாய் பார்க்கிறானோ.

"மனசு வாக்கு பெயர் மந்திரங்கள் கருமங்கள் மற்ற சகலமானவஸ்
"துக்கள் உண்டாயின." (ஷை உபநிஷத் எ - உ௬ - க) இவ்விதமாய் எப்போது அறிகிருனே, அப்போது பிரம்மமாகிருன்.

(௩) பிரகிருதி புருஷனிவர்களில் பிரகிருதியொன்றே தேவமனுஷியாதி ரூபமா யிருக்கிறதென்றும், அந்தந்த தேகங்களிலுள்ள தேவத்துவம் மனுஷியத்துவம் வளர்தல் குறைதல் முதலிய கருமங்கள் தேகத்தைச் சார்ந்தவை ஆத்மாவைச் சார்ந்தனவல்ல வென்றும், பிரகிருதி ரூபமான தேகங்களிலிருந்தே புத்திரபௌத்திராதி ரூபங்களாய்ப் பிரபஞ்சம் விஸ்தாரமடைகிறதென்றும், எப்போது எவன் அறிகிருனே அப்போது அவன் பரிபூர்ண ஞானப்பிரகாசத்தோடுகூடின பிரகிருதி விமுக்தமான தன்னிஜசுவரூபத்தை யடைகிருன். (௩௧)

---

௩௨. அநாதித்வாந் நிர்கு³ணத்வாத் பரமாத்மாயமவ்யய:।
ஶரீரஸ்தோ²பி கௌந்தேய ந கரோதி ந லிப்யதே॥

| | |
|---|---|
| கௌந்தேய | ஓ! குந்திபுத்திரா |
| அநாதித்வாத் | அநாதியானபடியினலேயும் |
| நிர்கு³ணத்வாத்* | நிர்குணரானபடியினலேயும் |
| அவ்யய: | நாசமற்ற |
| அயம் பரமாத்மா } † | இந்தபரமாத்மாவானவர் |
| ஶரீரஸ்தோ²பி | தேகத்திலிருந்தபோதிலும் |
| ந கரோதி | ஒன்றுஞ்செய்கிறதில்லை |
| ந லிப்யதே‡ | ஒன்றிலுமொட்டுகிறதுமில்லை. |

ஓ! குந்திபுத்திரா! அநாதியானபடியினலேயும் நிர்க்குணரானபடியினலேயும் நாசமற்ற இந்த பரமாத்மாவானவர் தேகத்திலிருந்த போதிலும் ஒன்றுஞ் செய்கிறதில்லை; ஒன்றிலு மொட்டுகிறதுமில்லை.

(௩௦) கருமங்கள் செய்வதும் சுகதுக்காதிகளை யனுபவிப்பதும் யார்? ஜீவனு? அல்லது ஈசுவரனு? ஜீவனென்ருல், அவன் ஈசுவரனைவிட அந்நியனு? அல்லது ஒன்ரு? அந்நியனென்ருல், அப்பொழுது அத்துவயிதமல்ல. ஒன்றென்ருல், கருமம் செய்வதும் பலனை

* (௩) சத்துவாதி குணங்களில்லாதபடியினலேயும்.

† (௩) பிரகிருதி விமுக்தனுன ஆத்மா (ஜீவன்.)

‡ (௩) தேகதருமங்களில் ஒட்டுகிறதில்லை.

யனுபவிப்பதும் ஈசுவரனேயென்று சொல்லவேண்டியதாகிறது. ஆகையால், பரமாத்மா ஒன்றும் செய்கிறது மில்லை, ஒன்றில் ஒட்டுகிறது மில்லை, என்று எப்படிச் சொல்லக்கூடும்? என்ருலோ, "ஸ்வபாவஸ்து ப்ரவர்த்ததே" "ப்ரக்ருத்யைவ ச கர்மாணி க்ரியமாணானி ஸர்வச:" "அஹங்காரவிமூடாத்மா கர்தாஹமிதி மந்யதே" முதலிய சுலோகங்களில் கருமங்கள் செய்வது பிரகிருதியே யன்றி ஆத்மா செய்கிறதில்லை யென்று சொல்லியிருப்பதால், கருமம் செய்வதும் சுகதுக்காதி பலன்களை யனுபவிப்பதும் ஆத்மாவல்ல பிரகிருதிதானென்றும், அநாதி அவித்தையால் கர்த்திருத்துவம் முதலியன ஆத்மாவிடத்தில் ஆரோபிதமென்றும் நிச்சயிக்கப்பட் டிருக்கிறது.

(ஸ்ரீ.வி) அவ்யய: = நாசமற்ற - அயம்பரமாத்மா = இந்த விஷ்ணுவானவர் - சரீரஸ்தோ(அ)பி = தேகத்தில் சம்பந்தித் திருந்தாலும் - அநாதித்வாத் = அநாதியானதாலும் - நிர்குணத்வாத் = சத்துவாதி குணங்களற்றவரானதாலும் - நகரோதி = உலகத்தாரைப்போல் செய்கிறதில்லை. நலிப்யதே = சிந்தைமுதலிய துக்கங்களை யடைகிறதில்லை. "ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம" "வாஸுதேவஸ்ஸர்வம்" முதலிய சுருதி வாக்கியங்களால் பிரம்மத்திற்கும் பிரபஞ்சத்திற்கும் அபேதம் தோன்றுகிறதே யென்ருலோ, அந்த சுருதிகளி னர்த்தத்தைச் சரியாய் அறியாததினுல் அபேதம் தோற்றுகிற தென்பது பகவானுல் வெளிப்படுத்தப் படுகிறது. எப்படி என்ருல், அவ்யய: = நாசமற்ற, அயம்பரமாத்மா = இந்த விஷ்ணுவானவர், அநாதித்வாத் = தேகத்துடன் சேரவாவது அதைவிட்டுப் பிரியவாவது காரணமற்றவரானதாலும், நிர்குணத்வாத் = சத்துவாதி குணங்களற்றவ ரானதாலும், சரீரஸ்தோபிந = ஜீவனைக்கூட வாகமாட்டார்; அப்படி யிருக்க ஜடமாவாரென்று எப்படிச்சொல்லக்கூடும்? கரோதி = செய்கிறவராயிருக்கிறுர், லிப்யதே = கருமத்தில் சம்பந்தப் படுகிறதில்லை, அயம் = ஜீவனே, நாசவ்யய: = தேகநாசத்தினுல் நாசமுள்ளவன், சரீரஸ்த: = இந்தச்சரீரத்தையுடையவன், நஅநாதித்வாத் = தேகசம்பந்தம் அதின்பிரிவு இவைகளுக்கு காரணமுடையவனானதாலும், நநிர்குணத்வாத் = சத்துவாதிகுண முடையவனானதாலும், நபரமாத்மா = பரமாத்மாவல்ல, நகரோதி = சுவதந்திர னல்லாததினுலே செய்கியதில்லையானாலும், லிப்யதே = கருமபலத்தில் பற்றுதலை யடைகிறுன். என்ருல், பந்தத்தை யடைகிறுன். (௩௧)

௩௨. யதா ஸர்வகதம் ஸௌக்ஷ்ம்யாதாகாசம் நோபலிப்யதே।
ஸர்வத்ராவஸ்திதோ தேஹே ததாத்மா நோபலிப்யதே॥

| | |
|---|---|
| ஸர்வகதம் | சகலவிடத்திலும் வியாபித்திருக்கிற |
| ஆகாசம் | ஆகாசமானது |
| ஸௌக்ஷ்ம்யாத் | சூக்ஷ்மமாயிருக்கிறதினாலே |
| யதா | எப்படி |
| நோபலிப்யதே | ஒட்டுகிறதில்லையோ |
| ததா | அப்படியே |
| ஸர்வத்ர தேஹே }* | சகலதேகங்களிலும் |
| அவஸ்திதஃ | இருக்கிற |
| ஆத்மா | ஆத்மாவானவன் |
| நோபலிப்யதே | ஒட்டுகிறதில்லை. |

(சேறுமுதலிய) சகலவிடங்களிலும் வியாபித்திருக்கிற ஆகாசமானது, சூக்ஷ்மமாயிருப்பதினாலே எப்படி (அந்தச் சேறுமுதலியவைகளில்) ஒட்டுகிறதில்லையோ, அப்படியே சகல தேகங்களிலு மிருக்கிற ஆத்மாவானவன் ஒட்டுகிறதில்லை. (அந்த தேகாதிகளினுடைய குணங்களில் அல்லது விஷயங்களில் ஆத்மாவுக்குப் பற்றுதலில்லையென்பது கருத்து.)

(ரா) ஸர்வத்ர — தேவ மனுஷிய பசு பக்ஷி முதலிய, தேஹே அவஸ்திதஃ — தேகத்திலிருந்தபோதிலும், ஆத்மா — ஜீவாத்மாவானவன், நோபலிப்யதே — ஒட்டுகிறதில்லை. என்றால், அந்தந்ததேக சுவபாவமானது ஆத்மாவுக்கு ஒட்டுகிறதில்லை (பற்றுகிறதில்லை.)

(ஸா) ஆத்மா சகலவஸ்துக்களிலு மிருக்கிறவனானாலும் அந்த வஸ்துக்களுக்கும் ஆத்மாவுக்கும் சம்பந்தமில்லாமலும் அந்த வஸ்துக்களுக் கன்னியனாயும் ஆத்மாவிருக்கிறானென்பது ஆகாசதிருஷ்டாந்தத்தினால் காண்பிவிக்கப்பட்டது. (௩௩)

---

௩௪. யதா ப்ரகாஶயத்யேகஃ க்ருத்ஸ்நம் லோகமிமம் ரவிஃ।
க்ஷேத்ரம் க்ஷேத்ரீ ததா க்ருத்ஸ்நம் ப்ரகாஶயதி பாரத॥

| | |
|---|---|
| ஹே பாரத | ஓ! பரதவம்சத்திலுதித்தவனே! |
| ஏகஃ | ஒருவனாகிய |
| ரவிஃ | சூரியனானவன் |
| க்ருத்ஸ்நம் | சகலமான |

---

* (ஸ்ரீ) உத்தமமான அல்லது, நீசமானதேகங்களி லிருந்தபோதிலும்.

| | |
|---|---|
| 𑌇𑌮𑌂𑌲𑍋𑌕𑌂 | இந்தலோகத்தை |
| 𑌯𑌥𑌾 | எப்படி |
| 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌯𑌤𑌿 | பிரகாசிப்பிவிக்கிருனே |
| 𑌤𑌥𑌾 | அப்படியே |
| 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑍀 | க்ஷேத்திரக்ஞனவன் |
| 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌂 | சகலமான |
| 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌂 | சரீரத்தை |
| 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌯𑌤𑌿 | பிரகாசிப்பிவிக்கிருன். |

ஓ! பாரதா! ஒருவனுகிய சூரியனனவன் சகலமான இந்த லோகத்தை யெப்படிப் பிரகாசிப்பிக்கிருனே, அப்படியே க்ஷேத்திரக்ஞன் சகலமான சரீரத்தையும் பிரகாசிப்பிக்கிருன்.

(𑌶𑌂) ஓரே சூரியன் சகலலோகத்தையும் பிரகாசிப்பிவிக்கிறது போல், 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑍀 = பரமாத்மாவானவர், 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌂𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌂 = சகலமான மாயாப் பிரபஞ்சத்தைப் பிரகாசிப்பிக்கிருர். சூரியனுடைய பிரகாசம் எந்த வஸ்துவில் பட்ட போதிலும், அந்தவஸ்துவின்குணம் சூரியனை எப்படி யொட்டுகிறதில்லேயோ, அப்படிப்போல் ஆத்மா எந்த தேகத்தி லிருந்தாலும் அந்த தேக சுவபாவகுணங்க ளாத்மாவை யொட்டுகிறதில்லை யென்றும், ஓரே ஆத்மா சூரியனைப்போல சகலப் பிரபஞ்சத்தையும் பிரகாசிப்பிக்கிருனென்றும், திருஷ்டாந்தத்தினுல் கிரகிக்கத்தக்கது.

(𑌰𑌾) ஓரேசூரியன் சகல லோகத்தையும் பிரகாசிப்பிவிக்கிறது போல் ஆத்மாவானவன் தலைமுதல் கால்வரையிலுள்ள தன்தேகத்தைத் தன்னுடைய ஞானத்தினுல் உள்ளும் வெளியும் பிரகாசிப்பிக்கிருன். இதினுல், சூரியப்பிரகாசத்தினுல் பிரகாசிக்கிற வஸ்துக்களைக் காட்டிலும் சூரியன் எப்படி அந்நியனே, அப்படி தேகத்தைக்காட்டிலும் தேகத்தைப் பிரகாசிப்பிவிக்கிற ஆத்மா (ஜீவன்) வேறே என்று வெளியாகிறதென்பது தாத்பரியம். (௩௪)

---

௩௫. 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌯𑍋𑌰𑍇𑌵 𑌮𑌨𑍍𑌤𑌰𑌂𑌜𑍍𑌞𑌾𑌨𑌚𑌕𑍍𑌷𑍁𑌷𑌾।
𑌭𑍂𑌤𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌮𑍋𑌕𑍍𑌷𑌞𑍍𑌚 𑌯𑍇𑌵𑌿𑌦𑍁𑌰𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌿𑌤𑍇𑌪𑌰𑌮𑍍॥

| | |
|---|---|
| 𑌜𑍍𑌞𑌾𑌨𑌚𑌕𑍍𑌷𑍁𑌷𑌾 * | ஞானமாகிற கண்ணலே |
| 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌯𑍋𑌃 | க்ஷேத்திரக்ஷேத்திரக்ஞர்களுடைய |
| 𑌏𑌵𑌂 | இவ்வித |

---

* (𑌶𑌂) சாஸ்திராசாரி யோபதேசத்தினு லுண்டானசுவரூப ஞானமென்கிற கண்ணலே

| | |
|---|---|
| கஷர ० | பேதத்தையும் |
| ஸ்ரீதவு ப்ரக்ருதிமோக்ஷஞ்ச* | பூதங்களுக்குக் காரணமானப் பிரகிருதியி லிருந்து நிவிருத்தி செய்துகொள்ளு வதையும் |
| யெ | எவர்கள் |
| விது: | அறிகிருர்களோ |
| தெ | அவர்கள் |
| வர ० | பரமபதத்தை |
| யாந்தி | அடைகிருர்கள். |

ஞானமாகிற கண்ணுலே க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞர்களுடைய இவ்வித பேதத்தையும் பூதங்களுக்குக் காரணமான பிரகிருதியிலிருந்து நிவிருத்தி செய்துகொள்ளுவதையும் எவர்களறிகிருர்களோ, அவர்கள் பரமபதத்தை யடைகிருர்கள். (மறுபடி பிறக்கிறதில்லையென்பது தாத்பரியம்.)

(ரா) க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞருடைய விவேக ஞானத்தினுல் அவர்களுடைய சுவரூபத்தை யறிந்து, பூதசுவரூபமாயிருக்கிற பிரகிருதிபந்தத்தை விடுவித்துக் கொள்ளுவதற்கு உபாயமான அமானித்துவாதிகளை யார் அனுஷ்டிக்கிருர்களோ, அவர்கள் பந்தத்தைப் போக்கடித்துக் கொண்டு பூர்ண ஞானகாரமான சுவரூபத்தை யடைகிருர்கள். (கரு)

ஓம் தத்ஸதிதி ஸ்ரீமத்பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம்
யோகஶாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுநஸம்வாதே
க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞ விபாகயோகோ நாம
த்ரயோதஶோ அத்யாய:.
ஸ்ரீக்ருஷ்ணார்பணமஸ்து.
க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞ விபாகயோகமென்கிற
பதின்மூன்ருவது அத்தியாயம்
முற்றிற்று.

---

* (ஸ்ரீ,வி) (௨) பூதங்களிலிருந்தும் பிரகிருதியிலிருந்தும் விடுவித்துக்கொள்ளும் பொருட்டு அமானித்துவாதி உபாய ஞானத்தினுலே, அல்லது (ஸ்ரீ,வி) பூதாநாம் = ஜீவர்களுக்கு, ப்ரக்ருதி = அசேதனப் பிரகிருதியிலிருந்து, மோக்ஷம் = மோக்ஷத்தை.

ஶ்ரீரஸ்து.

அத சதுர்தஶோऽத்யாயப்ராரம்ப:.

# பதிநான்காவது அத்தியாயம்.

ஶ்ரீ பகவாநுவாச.

க. பரம் பூய: ப்ரவக்ஷ்யாமி ஜ்ஞாநாநாம் ஜ்ஞாநமுத்தமம்।
யஜ்ஜ்ஞாத்வா முநய: ஸர்வே பராம் ஸித்திமிதோ கதா:॥

| | |
|---|---|
| ஶ்ரீ பகவாநுவாச | ஸ்ரீகிருஷ்ணபகவான் சொல்வது |
| யத் | எதை |
| ஜ்ஞாத்வா | அறிந்து |
| ஸர்வே முநய: | சகலஞானிகளும் |
| இத: | இந்த பந்தத்திலிருந்து |
| பராம் ஸித்திம் | (மோக்ஷத்தை) உத்தமமானசித்தியை |
| கதா: | அடைந்தார்களோ |
| (தத்) | அப்படிப்பட்ட |
| பரம் | பரமாத்ம நிஷ்டமான (பிரம்மத்தைத் தெரிவிக்கிற) |
| ஜ்ஞாநாநாம் | பலவிதஞானங்களில் |
| உத்தமம் | சிரேஷ்டமான |
| ஜ்ஞாநம்* | ஞானத்தை |
| பூய: | மறுபடியும் |
| ப்ரவக்ஷ்யாமி | சொல்லுகிறேன். |

ஸ்ரீகிருஷ்ணபகவான் அர்சுனனைநோக்கிப் பின்னும் சொல்வது—எதையறிந்து சகல ஞானிகளும இந்த பந்தத்திலிருந்து மோக்ஷத்தை யடைந்தார்களோ, அபபடிப்பட்ட பிரம்மத்தைத் தெரிவிக்கிறதும் பலஞானங்களில் சிரேஷ்டமுமான ஞானத்தை மறுபடியும் சொல்லுகிறேன்.

(ஶ்ரீ) க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞானுடைய சம்பந்தத்தால் சகலமு முண்டாவதாகச் சொல்லப்பட்டது. அதெப்படி யுண்டாகிறதென்பது இந்த அத்தியாயத்தில் சொல்லப் படுகிறது. அல்லது,

* (ஸ்ரீ) பிரம்மோபதேசத்தை.

சாங்கிய நிரீசுவரவாதிகள் சொல்வதுபோல க்ஷேத்திர க்ஷேத்திரக் ஞானுக்கு சுவபாவமாய் ஜகத் காரணத்துவ மில்லையென்பதும், ஈசுவ ராதீனமாய் ஜகத் காரணத்துவ முண்டென்பதும், ஜீவனுக்குப் பிர கிருதியிலிருப்பும், குணங்களுடைய சம்பந்தமும், சமுசாரத்திற்குக் காரணமாகச் சொல்லப்பட் டிருப்பதினுலே, எந்தகுணத்தினுல் எப் படி சம்பந்தம்? அந்தகுணங்க ளெவை? அவைகள் ஜீவனை எப் படி பந்திக்கின்றன? குணங்களி லிருந்து விடுபடுவ தெப்படி? விடுவித்துக் கொண்டவன் எப்படியிருப்பான்? அவனுடைய லக்ஷண மென்ன? என்பவைகளுக் குத்தரங்களு மிந்த அத்தியாயத்தில் சொல் லப்படுகின்றன. "ஜ்ஞாநாநாஂஜ்ஞாநமுத்தமம்" என்றதினுல் அமானித்து வாதிஞானங்களைவிட உத்தம மென்பதல்ல. யக்ஞ தான தபசு கருமங் கள்முதலிய ஞானங்களைவிட உத்தமமென்பது தாத்பரியம்.

(ரா) சம்யோகத்தை யுடைய பிரகிருதி புருஷர்களுடைய சுவ ரூப நிச்சயத்தைத் தெரிந்து, பகவத் பக்தியோடுகூடிய அமானித்து வாதிகளால் பந்தத்தைப் போக்கடித்துக்கொள்ள வேண்டுமென்ப தும், "காரணஂ குணஸங்கோऽஸ்ய ஸதஸத்யோநிஜந்மஸு" (அத்-கங, சு - உஉ.) என்றதினுல் ஜீவனுக்கு பந்த ஹேதுவானது பூர்வ கரு மானுசாரமாய் சத்துவாதி குணமயமான சுகதுக்க சம்பந்தமென்றும் சொல்லப்பட்டது. இந்த அத்தியாயத்தில் குணசம்பந்தமானது இன்ன விதமாய் ஆத்மாவுக்கு பந்த ஹேதுவென்பதும், அந்த குணசம்பந் தத்தை இன்னவிதமாய்ப் போக்கடித்துக் கொள்ளவெண்டு மென்ப தும், முன் சொன்னதற்கு வேறுனவும் பிரகிருதி புருஷர்களுக்குள் ளே யிருக்கிறவுமான சத்துவாதிகுணங்கள் விஷயமான ஞானமும் சொல்லபபடுகின்றன. முன் சொல்லியிருக்கிற பிரகிருதி புருஷர்கள் விஷயமான சகல ஞானங்களிலும் இது உத்தமமானது.

(ஸ்ரீ,வி) பந்தத்தை நிவர்த்தித்துக்கொள்ள வேண்டுமானுல் அந்த பந்தம் வந்தவழியை அறியவேண்டியதாகையால், அந்த பந்தமா னது சத்துவாதிகுணங்களினுலுண்டாகிற தென்பதும், அதன் நிவிரு த்தியி னுபாயமும் சொல்லப்படுகின்றன. "ஜ்ஞாநாநாஂஜ்ஞாநமுத்தமம்" என்றால், அறியவேண்டியவைகளில் சிரேஷ்டமானதைச் சொல்லுகிற தாக தாத்பரியம். (க)

---

உ. இதஂஜ்ஞாநமுபாஶ்ரித்ய மம ஸாதர்ம்யமாகதா:।
ஸர்கேऽபி நோபஜாயந்தே ப்ரலயே ந வ்யதந்தி ச॥

இதஂ ஜ்ஞாநஂ } இந்த ஞானுேபாயத்தை

| | |
|---|---|
| உபாச்ரித்ய | அநுஷ்டித்து |
| மம | என்னுடைய |
| ஸாதர்ம்யம்* | சுவரூபத்தை |
| ஆகதா: | அடைந்தவர்கள் |
| ஸர்கே | சிருஷ்டிகாலத்தில் |
| அபி நோபஜாயந்தே | பிறப்பையடைகிறதில்லை |
| ப்ரளயே அபி ச | பிரளயகாலத்திலும் |
| ந வ்யதந்தி | வருத்தமடைகிறதில்லை. |

இந்த ஞானோபாயத்தை யனுஷ்டித்து என்னுடைய சுவரூபத்தை யடைந்தவர்கள் சிருஷ்டிகாலத்தில் பிறப்பை யடைகிறதுமில்லை. பிரளயகாலத்தில் வருத்தமடைகிறது மில்லை. (என்றால், அவர்களுக்கு பிறப்பிறப்பில்லை யென்பது கருத்து.) (௨)

---

௩. மம யோநிர் மஹத் ப்ரஹ்ம தஸ்மிந் கர்ப்பம் ததாம்யஹம்।
ஸம்பவ: ஸர்வபூதாநாம் ததோ பவதி பாரத॥

| | |
|---|---|
| ஹே பாரத | ஓ! பாரதா! |
| மஹத் | சகலதேசகாலங்களிலும்வியாபித்திருக்கிற |
| ப்ரஹ்ம | பிரகிருதியானது |
| மம யோநி: | எனக்கு கர்ப்பத்தை வைக்கிற ஸ்தானமாயிருக்கிறது |
| தஸ்மிந் | அதில் |
| கர்ப்பம் | கர்ப்பத்தை (ஜகத் விஸ்தாரத்தின் காரணத்தை) |
| அஹம் | நான் |
| ததாமி | வைக்கிறேன் |
| தத: | அதினலே |
| ஸர்வபூதாநாம் | பிரம்மாமுதலியசகலப்பிராணிகளுடைய |
| ஸம்பவ: | உற்பத்தியானது |
| பவதி | உண்டாகிறது. |

ஓ! பாரதா! சகலதேச காலங்களிலும் வியாபித்திருக்கிற பிரகிருதியானது, எனக்கு கர்ப்பத்தைவைக்கிறதற்கு ஸ்தானமாயிருக்கிறது. அதில் கர்ப்பத்தை நான்வைக்கிறேன். அதினல் பிரம்மாமுதலிய சகலப்பிராணிகளுடைய உற்பத்தியானதுண்டாகிறது.

---

* (ரா) சமத்துவத்தை (என்றால், எனக்குச் சமானமான ரூபாதிகளை) (ஓ) (ஸ்ரீ,வி) சாரூப்பிய முக்தியை.

(ஶ்ரீ) சகலப் பிரபஞ்சோற்பத்திக்குக் காரணமானதினால் பிரம்ம மென்கிற பெயருள்ள பிரகிருதியானது கர்ப்பஸ்தானமா யிருக்கிறது அவித்தை காமம் கருமங்கள் இவைகளோடு சம்பந்தித்துப் பிரளய காலத்தில் என்னிடத்தி லடங்கியிருக்கிற சிதாபாசனாகிய க்ஷேத்திரக் ஞனை, சிருஷ்டி சமயத்தில் அவனுக்கு போக்கியமாகிய பிரகிருதிரூப மான க்ஷேத்திரத்தில் (தேகத்தில்) சேர்ப்பிவிக்கிறேனென்பது தாத் பரியம்.

(ஶஂ) என்னுடைய அதீனமாகிய மாயையானது சகல பூதங்களுக் கும் காரணம்; அது காரியரூபமான பிரபஞ்சத்தைவிடப் பெரியதான தால் மகத்தென்றும், காரியவிருத்திக் கேதுவாகையால் பிரம்மமென் றும் சொல்லப்படுகிறது. அதில் சகலபூத சிருஷ்டிக்குங் காரணமான ஹிரண்ணிய கர்ப்பனுடைய உற்பத்திக்குக் காரணமான விதையைப் போடுகிறேன். அதுதான் கர்ப்பத்தை வைக்கிறேன் என்பது. க்ஷேத் திர க்ஷேத்திரக்ஞர்களாகிற இரண்டு சக்திகளையுடைய ஈசுவரனாகிய நான் அவித்தை காமம் கருமம் இவைகளோடு ஒட்டியிருக்கிற க்ஷேத் திரக்ஞனை க்ஷேத்திரத்துடன் சேர்ப்பிவிக்கிறேன். அந்த ஹிரண்ணிய கர்ப்பன் மூலமாய் சகலப்பிராணிகளு முற்பத்தியாகின்றன.

(ஶா) "ஐ-ஷிராவொ நஔாவாய-ஃ" (அத் - எ, சு - ச) என்கிற விடத்தில் சொல்லப்பட்டிருக்கிற எட்டுவிதமாயுள்ள பிரகிருதியானது மகதகங்காரங்களுக்குக் காரணமாகையால், மகத் என்றும் "தஸாஜெ தஜ ஹ.ாஊ ஹுவஊநஜாயதெ" என்கிற சுருதியில் இந்தப் பிரகிரு தியை பிரம்மமாகவே சொல்லிருப்பதால் பிரம்மமென்றும் சொல்லப் படுகிறது. இப்படிப்பட்ட அசேதனமான பிரகிருதியில் கர்ப்பத்தை வைக்கிறேன். என்றால், "ஜவெரயஜிதஸ நஂா" (இதின் அத்-எ-சு-ரு) என்கிற இடத்தில் சொல்லியபடி சேதன சமூகமான (சேதனக்கூட்டம்) பரப் பிரகிருதியானது சகலப் பிராணிகளுக்கும் விதையாயிருக்கிற தினால், இந்த பரப்பிரகிருதி என்ற சேதனனை, அபரப்பிரகிருதி என்ற அசேதனப் பிரகிருதியுடன் கூட்டிவைக்கிறே னென்பது தாத் பரியம். என் சங்கற்பத்தினா லுண்டான இவ் விருவிதப் பிரகிருதியின் சேர்க்கையினால், பிரம்மாமுதல் ஸ்தம்பம் (ஸ்ஂபஂ = புல்லு அல்லது மிகவும் சிறியதாகிய ஒரு பூச்சி) வரையிலுள்ள சகல பூதங்களுமுண் டாகின்றன.

(ஶ) மகத் பிரம்ம என்ற பதங்கள் சித்பிரகிருதியைக் குறிக்கின் றன. சித்பிரகிருதி என்றால், ஸ்ரீதேவி பூதேவி துர்க்கை இவர்களே. அவர்களிடத்தில் நான் கர்ப்பத்தை யுண்டுபண்ணுகிறேன் அவர்க ளிடத்திலிருந்து சகலப் பிரபஞ்சங்களு முற்பத்தியாகின்றன.

(ஸ்ரீ,வி) மகத் பிரம்ம என்கிற சித்பிரகிருதியாகிய என்னுடைய பாரியையிடத்தில் இருபத்துநான்கு தத்துவங்களோடு கூடியிருக்கிறவும், என்வயிற்றிலடங்கி யிருக்கிறவுமாகிய ஜீவர்களை, போதஸ்ரூபமாக சித்பிரகிருதியின் கர்ப்பத்தில் வைக்கிறேன். அவளிடத்திலிருந்து சகலப் பிரபஞ்சங்களு முண்டாகின்றன. (௩)

ச. ஸர்வயோநிஷு கௌந்தேய மூர்த்தய: ஸம்பவந்தி யா:।
தாஸாம் ப்ரஹ்ம மஹத்யோநி: அஹம் பீஜப்ரத: பிதா॥

| | |
|---|---|
| கௌந்தேய | ஓ! குந்திபுத்திரா! |
| ஸர்வயோநிஷு* | சகல ஜாதிகளிலும் |
| யா: மூர்த்தய: † | எந்தஸ்தாவரஜங்கமமானவஸ்துக்கள் |
| ஸம்பவந்தி | உற்பத்தி யாகின்றனவோ |
| தாஸாம் | அவைகளுக்கு |
| மஹத் ப்ரஹ்ம‡ | பிரகிருதியானது |
| யோநி: | தாயார் |
| அஹம் | நான் |
| பீஜப்ரத: பிதா § | விதைபோட்டவனான தகப்பன். |

ஓ! குந்திபுத்திரா! சகல ஜாதிகளிலும் எந்த ஸ்தாவர ஜங்கமமான வஸ்துக்களுற்பத்தியாகின்றனவோ அவைகளுக்குப் பிரகிருதியானது தாயார். நான் விதைபோட்ட தகப்பன்.

(ரா) கர்ப்பாதானத்திற்கிடமான ஜடப்பிரகிருதியில் பீஜமான (விதையான) சேதனப் பிரகிருதியை அதனுடைய கருமானுசாரமாய்ச் சேர்ப்பிவிக்கிறேன். ஆகையால் பிரகிருதி தாயார்; நான் தகப்பன். (ச)

---

* (ரா) தேவ பிதுரு மனுஷிய பசு பக்ஷி முதலிய ஜாதிகளிலும்.

† (ரா) எந்ததேகங்கள்.

‡ (ஸ்ரீ,வி) மகாலக்ஷ்மி.

§ (ஸ்ரீ) சகல உற்பத்திக்கும் காரணன். முதலில் ஆகும் உற்பத்திக்குமாத்திரமென்பதல்ல, ஒவ்வொரு உற்பத்திக்குமென்பது கருத்து. (ஹூ) இதின் அத் - எ, சு - கo, பார்க்க.

ரு. ஸக்வம்ரஜஸ்ஊஇதி ஶு-ணாஃப்ரக்ருதிஸம்ஸவாஃ।
நிவய்நம்திஃஹாவாஹொ ஜெஹெஜெஹிநஶவ்யயம்॥

| | |
|---|---|
| ஹெஹாவாஹொ | ஓ! பெரிதானகைகளை யுடையவனே! |
| ப்ரக்ருதிஸம்ஸவாஃ | பிரகிருதியிலிருந்துண்டாயிருக்கிற |
| ஸக்வம், ரஜஃ, தஃ, இதிஶு-ணாஃ | சத்துவம், இரஜஸ், தமஸ் என்கிற குணங்கள் |
| ஜெஹெ | தேகத்திலிருக்கிற |
| அவ்யயம் | நாசமற்றவனை |
| ஜெஹிநம் | ஆத்மாவை |
| நிவய்நம்தி | கட்டுகின்றன. |

ஓ! பெரிதான கைகளையுடையவனே! பிரகிருதியிலிருந்துண்டாயிருக்கிற சத்துவ ரஜஸ் தமோகுணங்கள் தேகத்தில் (தான் தன்னுடையதென்கிற அபிமானத்தோடுகூடி) இருக்கிற நாசமற்றவனை (தேகத்தையுடையவனை) ஆத்மாவைக் கட்டுகின்றன. (தங்களுடைய காரியங்களான சுகதுக்க மோகாதிகளுடன் சேர்ப்பிக்கின்றன.)

(மா) ஆத்மா ஒன்றிலும் ஒட்டுகிறதில்லையென்று முன் சொல்லப்பட்டிருக்கிறது. சுகதுக்க மோகாதிகளினால் கட்டப்படுகிறானென்றதினால் குணங்களிலும் அவைகளின் காரியங்களிலும் ஒட்டுகிறானென்றாகிறதேயென்றாலோ, ஆத்ம சுவபாவமானது ஒன்றிலும் பற்றுதலையுடையதே யல்ல: ஆனால் தேகசம்பந்தமுண்டான நிமித்தியத்தினால் அவன் கட்டுப்படுகிறதுபோல் காணப்படுகிறான்.

(ஸ்ரீ,வி) சத்துவ ரஜஸ் தமோகுணங்களுக்கு முறையே அபிமானிதேவதைகளான இலக்ஷ்மி பூதேவி துர்க்கை யிவர்களும் ஜடப்பிரகிருதியினாலுண்டான சத்துவாதி குணங்களும் ஜீவக்கூட்டங்களை சுகதுக்க மோகாதிகளினால் கட்டுகிறார்கள். என்றால், சத்துவாபிமானியான லக்ஷ்மி தேவதைகளையும், இரஜோபிமானியான பூதேவி மனிதர்களையும், தமோபிமானியான துர்க்கை தைத்தியர்களையும் பந்திக்கிறார்கள். (ரு)

---

சு. தத்ர ஸக்வம்நிஃஓலவா த்ப்ர காஶகஃநாஃயம்।
ஸு-வஸம்ஶெந வய்நாதி ஜ்ஞாநஸம்ஶெநசாநவ॥

| | |
|---|---|
| ஹெஅநவ | ஓ! பாபமற்றவனே! |
| தத்ர | அந்தசத்துவ ரஜஸ் தமஸ்களாகிய குணங்களுக்குள்ளே |
| நிஃஓலவாத் | பரிசுத்தத்தினாலே |

| | |
|---|---|
| ப்ரகாசகம் | (ஸ்படிகம்போல்) பிரகாசிக்கிறவும் |
| அநாமயம் | சாந்தமாயிருக்கிறவுமான |
| ஸத்வம் | சத்துவகுணமானது |
| ஸுகஸங்கேந | சுகத்தினுடைய சம்பந்தத்தினலேயும் |
| ஜ்ஞாநஸங்கேந ச | ஞானத்தினுடைய சம்பந்தத்தினலேயும் |
| பத்நாதி | கட்டுகிறது. |

ஓ! பாபமற்றவனே! அந்த சத்துவ ரஜஸ் தமோ குணங்களுக்குள்ளே பரிசுத்தத்தினலே ஸ்படிகம்போல் பிரகாசிக்கிறதாயும் சாந்தமாயுமிருக்கிற சத்துவகுணமானது சுகத்தினுடைய சம்பந்தத்தினலேயும் ஞானத்தினுடைய சம்பந்தத்தினலேயும் (ஆத்மாவை) பந்திக்கிறது.

(ஶ) சுகம் க்ஷேத்திர சம்பந்தமானது ஆத்மாவுக்கு சம்பந்தமில்லை. அப்படியிருக்க, ஆத்மாவை, சுகம் தன்னுடையதுபோல பிரமிக்கச்செய்கிறது ஞானமும் அப்படித்தான். இந்தஞானம் ஆத்மஸ்வரூப ஞானமல்ல. விருத்திஞானம். (ஆத்மஸ்வரூப ஞானமல்லாத மற்ற உலகவிஷயமான ஞானந்தான் விருத்திஞானமென்பது.)

(ரா) சத்துவம் ரஜஸ் தமஸ் என்கிற குணங்களுக்குள்ளே சத்துவ குணமானது பரிசுத்தத்தினல் ஆத்மாவுக்கு சுகத்தையும் ஞானத்தையும் பிரகாசப்பிக்கிறது. என்றல், வஸ்துக்களுடைய ஸ்வரூபங்களைத் தெரிந்துகொள்ளும்படி செய்கிறது. அநாமயம்—உரோகங்களைத் தடுக்கிறது. இப்படிப்பட்ட சத்துவகுணமானது ஆத்மாவை சுகசம்பந்தத்தினலேயும், ஞான சம்பந்தத்தினலேயும் பந்திக்கிறது. என்றல், சுகம் ஞானம் இவைகளைச் சம்பாதிக்க வைதிக லௌகிக காரியங்களைச் செய்வதற்கு, அதினுல் சுகம் ஞானம் இவைகளை யுண்டாக்குகிறது. அந்த கருமானுசாரமாய் பலன்களை யடைய மறுபடி ஜன்மத்தைக் கொடுக்கிறது. இதினுல்தான் பந்திக்கிறதாகச் சொல்லப்பட்டது.

(ம,வி) சத்துவப்ரியானவன் இலக்ஷ்மியானவள் சத்துவகுணத்துடன் சுகம் ஞானம் இவைகளினல் ஜீவனைகளை பந்திக்கிறுளென்பது தாத்பரியம்.

(வ்யா) இதில் கண்ட ஞானம் சுகம் இவைகள் பிரம்மஞானமுமல்ல, மோக்ஷ சுகமுமல்ல; விஷய ஞான சுகங்களே. (௬)

---

௭. ரஜோ ராகாத்மகம் வித்தி த்ருஷ்ணாஸங்கஸமுத்பவம்|
தந்நிபத்நாதி கௌந்தேய கர்மஸங்கேந தேஹிநம்||

| | |
|---|---|
| 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 | ஓ! குந்திபுத்திரா! |
| 𑌰𑌜𑌃 | இரஜோகுணத்தை |
| 𑌰𑌾𑌗𑌾𑌤𑍍𑌮𑌕𑌂 | ஆசாசுவரூபமானதாயும் |
| 𑌤𑍃𑌷𑍍𑌣𑌾𑌸𑌙𑍍𑌗𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑌵𑌮𑍍 | கிடைக்காத வஸ்துவில் ஆசையையும் கிடைத்த வஸ்துவில் அபிமானத்தையும் உண்டாக்கப்பட்டதாயும் |
| 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 | அறி |
| 𑌤𑌤𑍍 | அந்த ரஜோகுணமானது |
| 𑌕𑌰𑍍𑌮𑌸𑌙𑍍𑌗𑍇𑌨 | கருமசம்பந்தத்தினால் |
| 𑌦𑍇𑌹𑌿𑌨𑌮𑍍 | தேகத்தையுடைத்தாயிருக்கிற ஆத்மாவை |
| 𑌨𑌿𑌬𑌧𑍍𑌨𑌾𑌤𑌿 | கட்டுகிறது (பந்திக்கிறது.) |

ஓ! குந்திபுத்திரா! இரஜோகுணத்தை ஆசாசுவரூபமாயும் ஆசையையும் அபிமானத்தையுமுண்டாக்குகிறதாயும் அறி அது கருமசம்பந்தத்தினால் ஆத்மாவை பந்திக்கிறது (என்றால், இகபர சாதனங்களான கருமங்களில் ஆத்மாவுக்குப் பற்றுதலை யுண்டாக்குகிறது.)

(ர) 𑌰𑌾𑌗𑌃 = ஸ்திரீபுருஷர்களுக்குள் பரஸ்பர ஆசை, 𑌤𑍃𑌷𑍍𑌣𑌾 = வஸ்துக்களிலாசை, 𑌸𑌙𑍍𑌗𑌃 = புத்திரமித்திரகளத்திராதிகளிலாசை, 𑌕𑌰𑍍𑌮𑌸𑌙𑍍𑌗𑍇𑌨 = கருமஞ்செய்யவேண்டுமென்கிற ஆசையினால். என்றால், ஆசையினால் தான் (ஆத்மா) செய்கிற புண்ணியபாப கருமங்கள் அவைகளின் பலன்களை யனுபவிக்க ஜன்மங்களை யுண்டாக்குகின்றன. இந்த இரஜோகுணமானது 𑌰𑌾𑌗, 𑌤𑍃𑌷𑍍𑌣𑌾, 𑌸𑌙𑍍𑌗, 𑌕𑌰𑍍𑌮𑌸𑌙𑍍𑌗, இந்நான்குவித ஆசைக்கு மேதுவானதென்று அறியத்தக்கது.

(ஸ்ரீ,வி) இரஜோபிமானியான பூதேவி இரஜோகுணத்துடன் மனிதர்களைக் கருமத்தில் கட்டுப்படும்படி செய்கிறாள். (எ)

---

அ. 𑌤𑌮𑌸𑍍𑌤𑍍𑌵𑌜𑍍𑌞𑌾𑌨𑌜𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌮𑍋𑌹𑌨𑌂 𑌸𑌰𑍍𑌵𑌦𑍇𑌹𑌿𑌨𑌾𑌂 ।
𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑌾𑌲𑌸𑍍𑌯𑌨𑌿𑌦𑍍𑌰𑌾𑌭𑌿𑌸𑍍𑌤𑌨𑍍𑌨𑌿𑌬𑌧𑍍𑌨𑌾𑌤𑌿 𑌭𑌾𑌰𑌤 ॥

| | |
|---|---|
| 𑌭𑌾𑌰𑌤 | ஓ! பாரதா! |
| 𑌤𑌮𑌸𑍍𑌤𑍁 | தமோகுணத்தையோ |
| 𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑌜𑌂 | அஞ்ஞானத்திலிருந்துண்டானதாகவும் |
| 𑌸𑌰𑍍𑌵𑌦𑍇𑌹𑌿𑌨𑌾𑌂 | சகலப்பிராணிகளுக்கும் |
| 𑌮𑍋𑌹𑌨𑌂 | மோகத்தை யுண்டாக்கப்பட்டதாகவும் |
| 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 | அறி |

| | |
|---|---|
| தத் | அந்தத் தமோகுணமானது |
| ப்ரமாதாலஸ்ய-நித்ராபி: | அஜாக்கிரதை சோம்பல் நித்திரை இவைகளால் |
| நிபத்நாதி | கட்டுகிறது. |

ஓ! பாரதா! தமோகுணத்தையோ, அக்ஞானத்திலிருந்துண்டானதாகவும் சகலப் பிராணிகளுக்கும் மோகத்தை யுண்டாக்கப்பட்டதாகவும் அறி. அது அஜாக்கிரதை சோம்பல் நித்திரை இவைகளால் கட்டுகிறது. (என்றால், ஆத்மாவுக்கு அஜாக்கிறதை முதலியவைகளை யுண்டாக்குகிறது.)

(மீ,வி) தமோகுணபிமானியான துர்க்கையானவள் தமோகுணத்துடன் தைத்தியர்களைக் கட்டுகிறாள். (௮)

---

௯. ஸத்வம்ஸுகே ஸஞ்ஜயதி ரஜ꞉கர்மணி பாரத।
ஜ்ஞாநமாவ்ருத்ய து தம꞉ ப்ரமாதே ஸஞ்ஜயத்யுத॥

| | |
|---|---|
| பாரத | ஓ! அர்சுன! |
| ஸத்வம் | சத்துவகுணமானது |
| ஸுகே | சுகத்திலும் |
| ரஜ꞉ | இரஜோகுணமானது |
| கர்மணி | கருமத்திலும் |
| ஸஞ்ஜயதி | சேர்ப்பிவிக்கிறது (பந்திக்கிறது) |
| தமஸ்து | தமோகுணமோ |
| ஜ்ஞாநம் | ஞானத்தை |
| ஆவ்ருத்ய | மறைத்து |
| ப்ரமாதே உத | அஜாக்கிரதைமுதலியவைகளில் |
| ஸஞ்ஜயதி | சேர்ப்பிவிக்கிறது. |

ஓ! அர்சுன! சத்துவகுணமானது சுகத்திலும் இரஜோகுணமானது கருமத்திலும் தமோகுணமானது ஞானத்தை மறைத்து அஜாக்கிரதை முதலியவைகளிலும் சேர்ப்பிவிக்கின்றன. (என்றால், ஆத்மாவுக்கு அவைகளை யுண்டாக்குகின்றன.) (௯)

---

௧௦. ரஜஸ்தமஶ்சாபிபூய ஸத்வம்பவதி பாரத।
ரஜஸ்ஸத்வம் தமஶ்சைவ தமஸ்ஸத்வம் ரஜஸ்ததா॥

| | |
|---|---|
| பாரத | ஓ! அர்சுன! |
| ஸத்வம் | சத்துவகுணமானது |

| | |
|---|---|
| ரஜஃ | இரஜோகுணத்தையும் |
| தமஶ்ச | தமோகுணத்தையும் |
| ரஜஃ | இரஜோகுணமானது |
| ஸத்வம் | சத்துவகுணத்தையும் |
| தமஶ்ச | தமோகுணத்தையும் |
| ததா | அப்படியே |
| தமஃ | தமோகுணமானது |
| ஸத்வம் | சத்துவகுணத்தையும் |
| ரஜஶ்சைவ | இரஜோகுணத்தையும் |
| அபிபூய | நிராகரித்து (அடக்கி) |
| பவதி | உண்டாகிறது. (தலையெடுக்கிறது) |

ஓ! அர்சுன! சத்துவகுணமானது இரஜஸ் தமோகுணங்களையும், இரஜோகுணமானது சத்துவ தமோ குணங்களையும், அப்படியே தமோகுணமானது சத்துவ ரஜோகுணங்களையும் அடக்கித் தலையெடுக்கின்றன.

(ஶா) (ஶ்ரீ) (ரா) (மீ,வி) இந்த சுலோகத்தை முந்திய சுலோகத்துடன் ஒட்டிப் பொருள் செய்யவேண்டும். ஒவ்வொரு பிராணிகளிடத்திலும் சத்துவ ரஜஸ் தமோ குணங்கள் மூன்றுமுண்டு. அவைகளில் எந்தக்குணம் எந்தக்காலத்தில் மேலிடுகிறதோ, அப்போது அந்தகுணமானது மற்ற விரண்டுகுணங்களையு மடக்கிவிட்டுத் தன் காரியங்களையே அதிகமாய்ச் செய்விக்கும். எப்படி என்றால், சத்துவகுணம் மேலிட்டால் சுகத்தையும் ஞானத்தையு முண்டாக்கும்; இரஜோகுணம் மேலிட்டால் கருமத்திலேயே அதிகப் பிரவிருத்தியை யுண்டாக்கும்; தமோகுணம் மேலிட்டால் அஜாக்கிரதை சோம்பல் நித்திரை இவைகளை அதிகமாயுண்டாக்கும்.

(ரா) பூர்வகருமானுசாரமாயும் ஆஹாராதி பேதத்தினாலேயும் இந்தகுணங்களி லொன்று மேலிடுகிறது.

(மீ,வி) மேலிடுதல் குணங்களுக்கேயன்றி தேகிகள் அதில் சம்பந்தப் படுகிறதில்லையென்று அறியவும். (கO)

---

கக. ஸர்வத்வாரேஷு தேஹேऽஸ்மிந் ப்ரகாஶ உபஜாயதே।
ஜ்ஞாநம் யதா ததா வித்யாத் விவ்ருத்தம் ஸத்வமித்யுத॥

| | |
|---|---|
| அஸ்மிந் தேஹே | இந்ததேகத்தில் |
| ஸர்வத்வாரேஷு | காதுமுதலியசகல துவாரங்களிலேயும். |

| | |
|---|---|
| ஜ்ஞாநம் ப்ரகாச: உத* | ஞானசுவரூபமானப் பிரகாசமும் சுகமும் |
| யதா | எப்போது |
| உபஜாயதே | உண்டாகிறதோ |
| ததா | அப்போது |
| ஸத்த்வம் | சத்துவகுணமானது |
| விவ்ருத்தமிதி | மேலிட்டிருக்கிறதென்று |
| வித்யாத் | அறியவேண்டியது. |

இந்த தேகத்தில் காது முதலிய சகல துவாரங்களிலேயும், ஞான சுவரூபமானப் பிரகாசமும் சுகமும் எப்போதுண்டாகின்றனவோ, அப்போது சத்துவகுணமானது அபிவிருத்தியா யிருக்கிறதென்று அறிய வேண்டியது.

(ரா) இந்த தேகத்தில் இந்திரியங்களினால் வஸ்துக்களின் சுவரூப நிச்சயஞான மெப்போ துண்டாகுமோ, அப்போது சத்துவ குணம் அபிவிருத்தியா யிருக்கிறதென்பதை அறிந்துகொள்ளவேண் டியது. (௧௧)

---

௧௨. லோப: ப்ரவ்ருத்திராரம்ப: கர்மணாமஶம: ஸ்ப்ருஹா ।
ரஜஸ்யேதாநி ஜாயந்தே விவ்ருத்தே பரதர்ஷப ॥

| | |
|---|---|
| பரதர்ஷப | ஓ! பாரதசிரேஷ்டனே! |
| ரஜஸி | இராஜோகுணமானது |
| விவ்ருத்தே (ஸதி) | அபிவிருத்தியடைந்தால் |
| லோப:† | பொருளாசை |
| ப்ரவ்ருத்தி:‡ | காரியத்தில்முயற்சி |
| கர்மணாம் ஆரம்ப: § | கருமங்களைத்துடங்குதல் |

---

* (ரா) இந்தப் பதத்தைக்கொண்டு சுகம் என்னும் அர்த்தம் (ஸ்ரீ) செய்திருக்கிறார். ஆனால் அந்தப்பதம் அந்த அர்த்தத்தைக் கொடுக்காவிட்டாலும், உத, என்பது சேர்க்கை என்கிற அர்த்தத்தைக் கொடுக்கிறதாகையால் முன் ௬-வது சுலோகத்தில் சொன்ன சுகத்தையும் இதில் சேர்த்தார்.

† (ரா) பரத்திரவிய விஷயத்திலிச்சை. (சா) (மீ,வி) தன்னுடைய பொருளை சுத்தமாய்ச் செலவுசெய்யாமையாகிய கிருபணத்துவம். (ஸ்ரீ) பேராசை.

‡ (ரா) காரியங்களில் பிரவிருத்தி. (சா) (மீ,வி) பிரயோஜன மன்றி ஏதாவதொரு காரியத்தைச் செய்துகொண்டிருப்பது.

§ (ரா) (ஸ்ரீ) ஏதாவதொரு காரியத்தைச் செய்யத் தொடங்கிக்கொண்டேயிருத்தல். (சா) (மீ,வீ) பலாபேக்ஷையுடன் கருமங்களைச் செய்தல்.

| | |
|---|---|
| அஶம:* | சித்தசமாதானமின்மை |
| ஸ்ப்ருஹா † | இச்சை (விருப்பு) |
| ஏதாநி | இவைகள் |
| ஜாயந்தே | உண்டாகின்றன. |

ஓ! பரதசிரேஷ்டனே! இரஜோகுணமானது அபிவிருத்தியடைந்தால் பொருளாசை, காரியத்தில் முயற்சி, கருமங்களைத் தொடங்குதல், சித்தசமாதானமின்மை, இச்சை, இவைகளுண்டாகின்றன. (கஉ)

---

கங. அப்ரகாஶோऽப்ரவ்ருத்திஶ்ச ப்ரமாதோ மோஹ ஏவ ச।
தமஸ்யேதாநி ஜாயந்தே விவ்ருத்தே குருநந்தந॥

| | |
|---|---|
| குருநந்தந | ஓ! அர்சுன! |
| தமஸி | தமோகுணமானது |
| விவ்ருத்தே (ஸதி) | அபிவிருத்தியடைந்தால் |
| அப்ரகாஶ: ‡ | அவிவேகம் |
| அப்ரவ்ருத்தி: § | காரியத்தில் முயற்சியின்மை |
| ப்ரமாத: ¶ | அஜாக்கிறதை |
| மோஹ ஏவ ச | ஒன்றை மற்றொன்றாய்த் தெரிகிற விபரீத ஞானம் |
| ஏதாநி | இவைகள் |
| ஜாயந்தே | உண்டாகின்றன. |

ஓ! அர்சுன! தமோகுணமானது அபிவிருத்தி யடைந்தால் அவிவேகம், காரியத்தில் முயற்சியின்மை, அஜாக்கிரதை, விபரீதஞானம் இவைகளுண்டாகின்றன.

---

* (ஶா) இந்திரியங்களை யடக்காமை.

† (ஶா) சர்வசாதாரண வஸ்துக்களில் ஆசை. (ஸ்ரீ) பார்த்தவஸ்துக்களெல்லாம் உத்தமமானாலும் அதமமானாலும் அவைகள் தனக்கு வேண்டுமென்கிற இச்சை. (ஶா) விஷயங்களிலிச்சை. (தீ,வி) கிடைக்காத வஸ்துவிலிச்சை.

‡ (ஶா) ஞானமே யுண்டாகாமை. (தீ,வி) காதுமுதலிய இந்திரியங்களுக்குள்ள ஞானமின்மை. (ஸ்வா) சத்துவ குணத்தின் காரியமான பகுத்தறிவு சுகம் இவைக ளில்லாமை.

§ (ஶா) மதித்திருத்தல். (தீ,வி) ஒருகாரியத்திலும் பிரயத்தினமன்றியிருத்தல். (ஸ்வா) இரஜோகுணத்தினது காரியங்களில் முயற்சி முதலியவை யில்லாதிருத்தல்.

¶ (ஶா) அகாரியத்தில் கூட பிரவிருத்திக்கும்படியான அஜாக்கிரதை.

௧௪. யதா ஸத்த்வே ப்ரவ்ருத்தே து ப்ரலயம் யாதி தேஹப்ருத்।
ததோத்தமவிதாம் லோகாநமலாந் ப்ரதிபத்யதே॥

| | |
|---|---|
| யதா | எந்தக்காலத்தில் |
| ஸத்த்வே | சத்துவகுணமானது |
| ப்ரவ்ருத்தே து | விருத்தியடைந்திருக்கையில் |
| தேஹப்ருத் | தேகத்தையுடையவன் (ஜீவன்) |
| ப்ரலயம் | மரணத்தை |
| யாதி | அடைகிறானோ |
| ததா | அந்தக்காலத்தில் |
| உத்தமவிதாம் | உத்தமஞானிகளுடைய |
| அமலாந் | பரிசுத்தங்களான |
| லோகாந் | உலகங்களை |
| ப்ரதிபத்யதே | அடைகிறான். |

எப்போது சத்துவகுணமானது அபிவிருத்தி யடைந்திருக்கிறதோ, அப்போது மரணத்தை யடைகிற ஜீவன், உத்தமஞானிக ளடையத் தகுந்த பரிசுத்தங்களான உலகங்களை யடைகிறான்.

(ஸ்ரீ) ஹிரண்ணியகருப்பனை யுபாசிப்பவர்கள் அடையத்தகுந்தவும் பிரகாசமயமானவும் சுகானுபவத்திற்கு யோக்கிய மானவுமாகிய லோகங்களை யடைகிறான்.

(ஶம்) பிரகிருதி தத்துவத்தையறிந்த ஞானிக ளடையத்தகுந்த லோகங்களை யடைகிறான்.

(ரா) ஆத்துமசுவரூபத்தை யறிந்தவர்களுடைய பரிசுத்தமான கூட்டத்தில் சேருகிறான். என்றால், மரணத்திற்குப் பிறகு பிரம்மஞானிகளுடைய குலத்தில் பிறந்து ஆத்மஞானமடையத்தகுந்த புண்ணியகருமங்களைச் செய்ய அதிகாரமுடையவனாகிறான்.

(ஸ்ரீவி) விஷ்ணுஞானிக ளடையத்தகுந்த நிர்தோஷமான தேகத்தை யடைகிறான். என்றால், உத்தமர்களுடைய குலத்தில் தேகத்தை யடைகிறான். (௧௪)

---

௧௫. ரஜஸி ப்ரலயம் கத்வா கர்மஸங்கிஷு ஜாயதே।
ததா ப்ரலீநஸ்தமஸி மூடயோநிஷு ஜாயதே॥

| | |
|---|---|
| ரஜஸி | இரஜோகுணமானது |
| (ப்ரவ்ருத்தே ஸதி) | அபிவிருத்தி யடைந்திருக்கிறகாலத்தில் |
| ப்ரலயம் | மரணத்தை |

| | |
|---|---|
| கத்வா | அடைந்து |
| கர்மஸங்கிஷு ஜாயதே }* | கருமத்தில் விருப்பையுடைய மனிதவர்க்கத்தில் பிறக்கிறுன். |
| ததா | அப்படியே |
| தமஸி | தமோகுணமானது |
| (ப்ரவ்ருத்தே ஸதி) | அபிவிருத்தியடைந்தகாலத்தில் |
| ப்ரலீநஃ | மரணமடைந்தவன் |
| மூடயோநிஷு† | பசுமுதலிய ஜாதிகளில் |
| ஜாயதே | பிறப்பையடைகிறுன். |

இராஜோகுணமானது அபிவிருத்தி யடைந்திருக்கிற காலத்தில் மரணமடைந்தால் கருமத்தில் விருப்பையுடைய மனிதவர்க்கத்தில் பிறக்கிறுன். அப்படியே தமோகுணமானது அபிவிருத்தி யடைந்த காலத்தில் மரணமடைந்தவன் பசுமுதலிய ஜாதிகளில் பிறக்கிறுன். (கரு)

---

கசா. கர்மணஸ்ஸுக்ருதஸ்யாஹுஸ் ஸாத்விகம் நிர்மலம் பலம்।
ரஜஸஸ்து பலம் துஃகமஜ்ஞாநம் தமஸஃ பலம்॥

| | |
|---|---|
| ஸுக்ருதஸ்ய கர்மணஃ } | சாத்துவிககருமத்திற்கு |
| ஸாத்விகம் | சத்துவகுணத்தினுலுண்டான |
| நிர்மலம்‡ | பரிசுத்தமானசுகத்தை |
| பலம் | பலனுகவும் |
| ரஜஸஸ்து | இராஜோகுணத்தினுலுண்டாகிற கருமத்திற்கு |
| துஃகம்§ | துக்கத்தை |

---

* (ரா) பலாபேக்ஷயுடன் கருமங்கள் செய்கிறவர்களுடைய குலத்தில் பிறந்து பலாபேக்ஷயுடன் கருமங்களைச் செய்துகொண்டுவருகிறுன். (ஸ்ரீ,வி) காம்மிய கருமங்களைச் செய்கிறவர்களுடைய குலத்தில் பிறக்கிறுன்.

† (ரா) நாய் பன்றி முதலிய ஜாதிகளில். அதாவது.—தருமார்த்த காம மோக்ஷங்களாகிற புருஷார்த்தங்களுக்கு அயோக்கியனுகிறுனென்பது தாத்பரியம். (ஸ்ரீ,வி) தைத்தியர்களுடைய குலத்தில்.

‡ (ஸ்ரீ) பிரகாசாதிக்கமுள்ள சுகத்தை.

§ (ஸ்ரீ,வி) சுகமிச்ரமான துக்கத்தை (என்றுல், சுகமும் துக்கமும் கலந்திருப்பது.)

| | |
|---|---|
| ப²லம் | பலனாகவும் |
| தமஸ꞉ | தாமதகுணத்தினாலுண்டாகிற கருமத்திற்கு |
| அஜ்ஞாநம் | அக்ஞானத்தை (மோகம் அல்லது மூடத் தனத்தை) |
| ப²லம் | பலனாகவும் |
| ஆஹு꞉ | சொல்லுகிறார்கள். |

சாத்துவிகமாயுள்ள கருமத்திற்கு சத்துவகுணத்தினா லுண்டான பரிசுத்தமான சுகத்தையும், இரஜோகுணத்தினா லுண்டாகிற கருமத்திற்கு துக்கத்தையும், தமோகுணத்தினாலுண்டான கருமத்திற்கு அக்ஞானத்தையும் பலனாக (வித்வான்கள்) சொல்லுகிறார்கள். (௧௬)

---

௧௭. ஸத்த்வாத்ஸஞ்ஜாயதே ஜ்ஞாநம் ரஜஸோ லோப⁴ ஏவ ச।
ப்ரமாத³மோஹௌ தமஸோ ப⁴வதோ(அ)ஜ்ஞாநமேவ ச॥

| | |
|---|---|
| ஸத்த்வாத் | சத்துவகுணத்திலிருந்து |
| ஜ்ஞாநம்* | ஞானமும் |
| ரஜஸ꞉ | இரஜோகுணத்திலிருந்து |
| லோப⁴꞉† | எவ்வளவுகிடைத்தாலும் பின்னும் வேண்டுமென்கிற இச்சையும் |
| ஸஞ்ஜாயதே | உண்டாகிறது |
| தமஸ꞉ | தமோகுணத்திலிருந்து |
| ப்ரமாத³மோஹௌ | அஜாக்கிரதையும் விபரீதஞானமும் |
| ப⁴வத꞉ | உண்டாகின்றன |
| அஜ்ஞாநமேவ | அக்ஞானமும் |
| (ப⁴வதி) | உண்டாகிறது. |

சத்துவகுணத்திலிருந்து ஞானமும், இரஜோகுணத்தி லிருந்து ஆசையும், தமோகுணத்திலிருந்து அஜாக்கிரதை விபரீதஞானம் அக்ஞானம் இவைகளு முண்டாகின்றன.

(ரா) அபிவிருத்தியடைந்த சத்துவகுணத்திலிருந்து பிரகிருதி விமுக்தாத்ம தரிசனமும், அபிவிருத்தியடைந்த ரஜோகுணத்திலிருந்து சுவர்க்காதி லோகங்களி லாசையும், அபிவிருத்தியடைந்த தமோகுணத்திலிருந்து ஆலசியமும் அதினால் அகாரியத்தில் பிரவிருத்தியும் விபரீதஞானமும், அதின்பிறகு அறிவின்மையு முண்டாகின்றன. (௧௭)

---

* (ஸ்ரீ,வி) பரமாத்மா விஷயமானஞானம்.

† (ஸ்ரீ,வி) சுவர்க்காதி விஷயமான ஆசக்தி.

௧௮. 𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌂 𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌸𑍍𑌥𑌾 𑌮𑌧𑍍𑌯𑍇 𑌤𑌿𑌷𑍍𑌠𑌨𑍍𑌤𑌿 𑌰𑌾𑌜𑌸𑌾𑌃।
𑌜𑌘𑌨𑍍𑌯𑌗𑍁𑌣𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌸𑍍𑌥𑌾 𑌅𑌧𑍋 𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 𑌤𑌾𑌮𑌸𑌾𑌃॥*

| | |
|---|---|
| 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌸𑍍𑌥𑌾𑌃 | சத்துவகுணத்தை யடைந்திருப்பவர்கள் |
| 𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌂 | மேல்லோகத்தை |
| 𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 | அடைகிறுர்கள் |
| 𑌰𑌾𑌜𑌸𑌾𑌃 | இரஜோகுணமுடையவர்கள் |
| 𑌮𑌧𑍍𑌯𑍇 | மனுஷியலோகத்தில் |
| 𑌤𑌿𑌷𑍍𑌠𑌨𑍍𑌤𑌿 | இருக்கிறுர்கள் |
| 𑌜𑌘𑌨𑍍𑌯𑌗𑍁𑌣𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌸𑍍𑌥𑌾𑌃 | நீசகுணத்தில் பிரவிருத்தியுடைய |
| 𑌤𑌾𑌮𑌸𑌾𑌃 | தமோகுணமுடையவர்கள் |
| 𑌅𑌧𑌃 | கீழ்லோகத்தை அல்லது நரகத்தை |
| 𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 | அடைகிறுர்கள். |

சத்துவகுணமுடையவர்கள் மேல்லோகத்தையும், இரஜோகுணமுடையவர்கள் மனுஷியலோகத்தையும், தமோகுண முடையவர்கள் கீழ்லோகத்தையு மடைகிறுர்கள்.

(ஸ்ரீ) சத்துவகுணம் அபிவிருத்தியடைந்திருக்கிறபோது மரணமடைந்தவர்கள், ஒன்றுக்கொன்று நூறுமடங்கு அதிகமான ஆநந்தத்தையுடைய சத்தியலோகம்வரையிலுள்ள மேல்லோகங்களை (அவரவருடைய சத்துவாபிவிருத்திக்குத் தக்கபடி) அடைவார்கள். இரஜோகுண அபிவிருத்தி யடைந்தவர்கள் மனுஷியலோகத்தில் மறுபடி மறுபடி பிறப்பை யடைந்துகொண்டே யிருப்பார்கள். தமோகுண அபிவிருத்தி யடைந்தவர்கள் (அபிவிருத்திக்குத் தக்கபடி) மென்மேலும் நரகத்தை யடைவார்கள்.

(ஶம்) தமோகுண அபிவிருத்தி யடைந்தவர்கள் பசுபக்ஷிமுதலிய ஜந்துக்களில் பிறப்பை யடைகிறுர்கள்.

(ரா) சத்துவகுண அபிவிருத்தி யடைந்தவர்கள் கிரமமாய் சமுசார பந்தத்திலிருந்து மோக்ஷமடைகிறுர்கள். இரஜோகுண அபிவிருத்தி யடைந்தவர்கள் இரஜோகுணத்திற்குப் பலனை சுவர்க்கத்தை யடையும்பொருட்டு கருமத்தை யநுஷ்டித்து, சுவர்க்கத்தை யடைகிறதும் மறுபடி பூமியில் ஜனிக்கிறதுமாக விருக்கிறுர்கள். தமோகுண அபிவிருத்தியானவர்கள் முதலில் தாழ்ந்த ஜாதியிலும், பிறகு மிருகாதிஜாதிகளிலும், பிறகு புழுமுதலிய ஜந்துக்களிலும், பிறகு விருக்ஷம் கொடி கல் மண் புல் முதலியவைகளிலும் பிறப்பை யடைகிறுர்கள்.

* இந்த சுலோகத்தை கூர்மபுராணம் முதல்பாகம் ௨-வது அத் - லும் பவிஷ்யபுராணம் ௨ - ௧ - ௨௧ - லும் காண்க.

(ஸ்ரீ,வி) சத்துவாதிகுண அபிவிருத்தியடைந்தவர்கள், முறையே (சுவர்க்கத்திற்கு மேற்பட்ட) ஜனோலோகம் வரையிலுள்ள மேல்லோகங்களையும், சுவர்க்காதிமத்திய (பூலோகம்வரை) லோகங்களையும், நரகாதி கீழ்லோகங்களையும் அடைகிறார்கள்.

(ஸா) ஊர்த்வம்-மத்யே-அத:—மேலாக - நடுவில்-கீழாக, கச்சந்தி—போகிறார்கள். என்றால், பாஷியக்காரர்கள் சொல்லியிருக்கிறபடிக்கு அந்தந்த லோகங்களில் தேகங்களை யடைகிறார்க ளென்பது தாத்பரியம். இந்தச் சரீரங்கள் பதினான்குவகைப்படும். அவைகளில் எட்டுவகை முதல்வகுப்பு. அவைகள் மேலாகப்போகிற தேகங்கள்: அவை யாவன:—

க. பிரம்மாமுதலான சிரேஷ்டமானதேவதைகள்.
உ. மனிதர்களுடைய உற்பத்திக்குக் காரணமானப் பிரஜாபதிகள்.
௩. சந்திரன்முதலிய தேவதைகள்.
௪. இந்திரன்முதலிய தாழ்ந்ததேவதைகள்.
௫. கந்தர்வர்கள்.
௬. இராக்ஷஸர்கள்.
௭. யக்ஷர்கள்.
௮. பிசாசர்கள்.
௯. மனிதர்கள்.
க0. பசுவாதி.
கக. மிருகாதி.
கஉ. பக்ஷியாதி.
க௩. ஊர்வன மச்சியம்முதலியன.
க௪. செடிகொடி புல்முதலியன.

கபிலருடைய சாங்கியபிரவசனம் ௩-வது அத்தியாயம் ௪உ-வது சூத்திரத்தையும், அவருடைய சிஷியரான ஈசுவர கிருஷ்ணருடைய சாங்கியகாரிகை ௫௩-வது சுலோகத்தையும் பார்க்க. (க௮)

---

க௯. நாந்யம் குணேப்ய: கர்த்தாரம் யதா த்ரஷ்டாநுபஶ்யதி।
குணேப்யஶ்ச பரம் வேத்தி மத்பாவம் ஸோऽதிகச்சதி॥

த்ரஷ்டா — விவேகியானவன்
குணேப்ய: — புத்தியாதி ஆகாரங்களாய் பரிணமித்திருக்கிற குணங்களைப்பார்க்கிலும்
அந்யம் — வேறொருவனை

| | |
|---|---|
| கர்த்தாரம் | கர்த்தாவாக |
| யதா | எப்போது |
| நாநுபச்யதி | அறிகிறதில்லையோ |
| (த்ரஷ்டாநம்) | ஆத்மாவை |
| குணேப்ய꞉ | குணங்களைப்பார்க்கிலும் |
| பரம் | அந்நியனாக |
| வேத்தி | அறிகிறானோ |
| ஸ꞉ | அந்தவிவேகியானவன் |
| மத்பாவம் | என்னுடையசுவரூபத்தை |
| அதிகச்சதி | அடைகிறான். |

விவேகியானவன் புத்தியாதி ஆகாரங்களாய்ப் பரிணமித்திருக்கிற குணங்களைப்பார்க்கிலும் வேறொருவனைக் கர்த்தாவாக எப்போது அறிகிறதில்லையோ, குணங்களைப்பார்க்கிலும் அந்நியனாக ஆத்மாவை அறிகிறானோ, அப்போது என் சுவரூபத்தை யடைகிறான்.

(ஸ்ரீ) குணங்களுடைய செய்கைக்குத்தான் காரணமும் கர்த்தாவு மல்ல; குணங்கள்தான் கர்த்தா. தான் கேவலம் சாக்ஷிமாத்திரமாயிருக்கிறவன்; குணங்களைவிட அந்நியமானவன் என்று அறிகிறவன் பிரம்மமாகிறான்.

(ஶம்) சகல காரியங்களுக்கும் கர்த்தா குணங்களே யன்றி ஆத்மா வல்ல வென்று அறிகிறவன் வாசுதேவத்துவத்தை யடைகிறான். என்றால், சகலமும் வாசுதேவசுவரூபமென்று பார்க்கிறவனாக விருந்து வாசுதேவமயமாய் விடுகிறானென்பது தாத்பரியம்.

(ரா) த்ரஷ்டா=சாத்துவிக ஆகாரஞ்செய்து, பலாபேக்ஷையன்றி சகல கருமங்களையும் பகவத் ஆராதனை ரூபமாகவே செய்து, அதினால் சுத்தமாயும் அபிவிருத்தியடைந்து மிருக்கிற சத்துவகுணத்தையுடைய விவேகியானவன், வேத்தி = பரிசுத்தனை ஆத்மாவுக்கு, அநாதியான கருமசம்பந்தத்தினா லுண்டான குணங்களால் கர்த்திருத்துவமுண்டாயிருக்கிறது. இந்த குணசம்பந்தமேபந்தம். இந்த பந்தத்தை நிவிருத்திசெய்துகொண்ட சுத்தாத்மா வானவன் கர்த்தாவல்ல; அவன் பூர்ணமான ஞானசுவரூபி என்று எவன் தன்னை யறிகிறானோ, ஸ꞉ = அவன், மத்பாவம் = என்னுடைய தருமமாகிய துக்கமற்றிருத்தலை, அதிகச்சதி=அடைகிறான்.

(ம) குணங்கள் பரிணாமிகருத்தா * வென்றும், ஈசுவரன் சுவதந்திர கருத்தாவேயன்றி பரிணாமிகருத்தா வல்லவென்றும், அறிகிறவன்

* (ஶ்ரா) அநேக ஆபரணங்களாய் விகாரப்பட்டிருக்கிற தங்கமானது பரிணாமி கர்த்தா. அந்தத் தங்கத்தைக்கொண்டு ஆபரணங்களைச்செய்கிற தட்டான் சுவ

என்னை அடைகிருன். "யதா பஶ்ய: பஶ்யதே ருக்மவர்ணம் கர்த்தாரம்" என்கிற சுருதியில் ஈசுவரனைக் கர்த்தாவாக சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் ஈசுவரன் கர்த்தா அல்லவென்று சொல்லக்கூடாது. ஆனல் ஈசுவரன் பரிணுமிகர்த்தாவல்ல.

(ஸ்ரீ,வி) முன் சொல்லியவைகளால் குணங்களே சர்வகர்த்தாவென்று தோற்றப்படுமாகையால், அதை நிராகரித்து குணங்கள் பரிணுமிகர்த்தாவென்றும், சுவதந்திரகர்த்தா ஈசுவரனென்றும், இதிஞல் சொல்லப்படுகிறது. யதா = எப்போது, த்ரஷ்டா = பார்க்கிற புருஷனுன ஜீவன், குணேப்ய: = குணங்களைக்காட்டிலும், அந்யம் கர்த்தாரம் = அந்நியனுன ஈசுவரனைக் கர்த்தாவாக, அநுபஶ்யதி = பார்க்கிருனே, ய: எவன், குணேப்யஶ்ச = குணங்களைக்காட்டிலும், பரம் = சுவதந்திரனுன பரமாத்மாவை, வேத்தி = அறிகிருனே, ஸ: = அவன், மத்பாவம் = என்னிடத்திலிருப்பை, அதிகச்சதி = அடைகிருன். அல்லது, யதா = எப்போது, த்ரஷ்டா = ஜீவனுனவன், குணேப்ய: = குணங்களைக்காட்டிலும், அந்யம்கர்த்தாரம் = அந்நியனுன பரிணுமிகர்த்தாவை, நாநுபஶ்யதி = பார்க்கிறதில்லையோ. (மற்றது முன் அர்த்தமே.) (௧௯)

---

௨௦. குணாநேதாநதீத்ய த்ரீந் தேஹீ தேஹஸமுத்பவாந்।
ஜந்மம்ருத்யுஜராது:கைர் விமுக்தோऽம்ருதமஶ்நுதே॥

| | |
|---|---|
| தேஹீ | தேகத்தையுடைய ஆத்மாவானவன் |
| தேஹஸமுத்பவாந் | தேகத்தையுண்டாக்கப்பட்ட |
| த்ரீந் | மூன்ருன |
| ஏதாந் குணாந் | இந்தக்குணங்களை |
| அதீத்ய * | அதிக்கிரமித்து (கடந்து) |
| ஜந்மம்ருத்யுஜராது:கை: † | பிறப்பிறப்பு மூப்பு துக்கங்களிஞல் |
| விமுக்த: | விடப்பட்டவனுய் |

---

தந்திர கர்த்தா. இப்படிப்போல் குணங்கள் பரிணுமிகர்த்தா. அந்த குணங்களைக் கொண்டு சிருஷ்டி காரியங்களைச் செய்கிற பகவான் சுவதந்திர கர்த்தா.

* (ஶா) குணங்களைக்காட்டிலு மன்னியமாயும் ஞான சுவரூபமாயுமிருக்கிற ஆத்மாவை அறிந்து.

† (ஶ்ரீ) ௧௩ - வது அத், ௮. ௯ - பார்க்க.

அம்ருதம்* பிரம்மாநந்தத்தை
அஶ்நுதே அடைகிறான்.

தேகத்தையுடைய ஆத்மாவானவன் தேகத்தை யுண்டாக்கப்பட்ட இந்த முக்குணங்களை யதிக்கிரமித்து பிறப்பிறப்பு மூப்பு துக்கங்களினால் விடப்பட்டவனாய் பிரம்மாநந்தத்தை யடைகிறான். (உ௦)

---

அர்ஜுந உவாச.

உக. கைர்லிங்கைஸ்த்ரீந்குணாநேதாநதீதோ பவதி ப்ரபோ।
கிமாசார꞉ கதம் சைதாம்ஸ்த்ரீந்குணாநதிவர்ததே॥

அர்ஜுந உவாச — அர்சுனன்சொல்வது
ப்ரபோ — ஓ! பிரபுவே!
ஏதாந் / த்ரீந் / குணாந் — இந்த முக்குணங்களை
அதீத꞉ — அதிக்கிரமித்தவன்
கை꞉ / லிங்கை꞉ — எந்த இலக்ஷணங்களோடு
பவதி — இருப்பான்
கிமாசார꞉ — எவ்வித ஆசாரமுடையவன்
கதம் ச† — எப்படி
ஏதாந் / த்ரீந் / குணாந் — இந்த முக்குணங்களை
அதிவர்ததே — அதிக்கிரமிக்கிறான்.

அர்சுனன் சொல்வது—ஓ! பிரபுவே! இந்த முக்குணங்களை அதிக்கிரமித்தவன் எந்த இலக்ஷணங்களோடிருப்பான்? எவ்வித ஆசாரமுடையவன்? எப்படி முக்குணங்களை அதிக்கிரமிக்கிறான்? (உக)

---

ஸ்ரீபகவாநுவாச.

உஉ. ப்ரகாஶம் ச ப்ரவ்ருத்திம் ச மோஹமேவ ச பாண்டவ।
ந த்வேஷ்டி ஸம்ப்ரவ்ருத்தாநி ந நிவ்ருத்தாநி காங்க்ஷதி॥

உஙு. உதாஸீநவதாஸீநோ குணைர்யோ ந விசால்யதே।
குணா வர்தந்த இத்யேவ யோ(அ)வதிஷ்டதி நேங்கதே॥

---

* (ஶம்) என்னுடைய சுவரூபமாயிருத்தலை. (ரா) ஆத்மாநுபவத்தை (இது தான் அம்ருதம் - என்பது) (ஸ்ரீ,வி) பரபிரம்மத்தை.

† (ஸ்ரீ,வி) எந்த உபாயத்தினாலே.

உ௪. ஸமது:க்கஸுக: ஸ்வஸ்த: ஸமலோஷ்டாஶ்மகாஞ்சந:।
துல்யப்ரியாப்ரியோ தீர: துல்யநிந்தாத்மஸம்ஸ்துதி:॥

உ௫. மாநாபமாநயோஸ்துல்ய: துல்யோ மித்ராரிபக்ஷயோ:।
ஸர்வாரம்பபரித்யாகீ குணாதீத: ஸ உச்யதே॥

| | |
|---|---|
| ஸ்ரீ பகவாநுவாச | ஸ்ரீகிருஷ்ணபகவான் சொல்வது |
| ஹே பாண்டவ | ஓ! பாண்டுகுமாரா! |
| ய: | எவன் |
| ஸம்ப்ரவ்ருத்தாநி | தன்னிச்சையா யுண்டான (சுவபாவத்தினல்) |
| ப்ரகாஶஞ்ச | பிரகாசத்தையும் |
| ப்ரவ்ருத்திஞ்ச | பிரவிருத்தியையும் |
| மோஹமேவ ச | மோகத்தையும் |
| ந த்வேஷ்டி* | துவேஷிக்கிறதில்லையோ |
| நிவ்ருத்தாநி | நீங்கிப்போன அவைகளை |
| ந காங்க்ஷதி† | அபேக்ஷிக்கிறதில்லையோ |
| உதாஸீநவத்‡ | (பக்ஷபாதமில்லாத) சாக்ஷியைப்போல |
| ஆஸீந:§ | இருந்துகொண்டு |
| குணை:¶ | குணகாரியங்களாகிய சுகாதிகளால் |
| ந விசால்யதே‖ | சலிப்பிக்கப்படுகிறதில்லையோ |

* (ஶா) துவேஷிக்கிறதில்லை. என்றால், தமோகுண காரியமான மோகத்தினல் மோகமடைந்தேனென்றும், அக்ஞானத்தினல் அவிவேக மடைந்தேனென்றும், இரஜோகுண காரியமான கருமப் பிரவிருத்தியால் சுவரூபநிஷ்டைக்கு பாதகமூண்டாகும்படி கருமங்களைச் செய்துகொண்டிருக்கிறே னென்றும், சத்துவகுண காரியமாகிய பிரகாச முதலியவைகளால் சுவரூப நிஷ்டைக்கு பாதகமாய் விஷயசுகத்தில் பற்றுதலுண்டாகிற படியால் அதுவும் பந்த சுவரூபமாயிருக்கிறதென்றும், எண்ணி அவைகளைத் துவேஷிக்கிற தில்லையோ.

† (ஶா) மேற்கண்ட குணங்களுடைய காரியங்கள் தன்னைவிட்டு நீங்கிப் போயிருக்க அவைகள் மறுபடி வரவேண்டுமென்று அபேக்ஷிக்கிற தில்லையோ.

‡ - § (ரா) அத்மாவுக்கன்னியமான விஷயங்களில் பற்றுதலற்றிருக்கிறவனும். (ஸ்ரீ,வி) விஷ்ணு சம்பந்தமான கருமங்களைத்தவிர மற்றவைகளில் உதாசீனனுயிருக்கிறவனுயும்.

§ (ஶா) குணங்களை நிவர்த்திக்கும் முயற்சியி லிருக்கிறவனுயும்.

¶ - ‖ (ஸ்ரீ,வி) சத்துவாதி குணங்களா லுண்டான விகாரங்களை யடைகிற தில்லை.

‖ (ஸ்வா) இதின் கூ-வது. அத்தியாயம், கூ-வது. சுலோகம் பார்க்க.

| | |
|---|---|
| 𑌗𑍁𑌣𑌾 𑌏𑌵* | குணங்கள் தானே |
| 𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 𑌇𑌤𑌿 | பிரவிருத்தித்திருக்கின்றனவென்று |
| 𑌯𑌃 | எவன் |
| 𑌅𑌵𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿 | தெரிந்திருக்கிருனோ |
| (𑌯𑌃) | எவன் |
| 𑌨𑍇𑌙𑍍𑌗𑌤𑍇† | சுவரூபநிஷ்டையிலிருந்து சலிக்கிறதில்லையோ |
| 𑌸𑌮𑌦𑍁𑌃𑌖𑌸𑍁𑌖𑌃‡ | துக்கசுகங்களில்சமமாயும் |
| 𑌸𑍍𑌵𑌸𑍍𑌥𑌃§ | சுவரூபநிஷ்டையிலே சந்துஷ்டனு யிருக்கிறவனுயும் |
| 𑌸𑌮𑌲𑍋𑌷𑍍𑌟𑌾𑌶𑍍𑌮𑌕𑌾𑌞𑍍𑌚𑌨𑌃¶ | மண்கட்டி கல்லு சுவர்ணம் இவைகளிற் சமமாயும் |
| 𑌤𑍁𑌲𑍍𑌯𑌪𑍍𑌰𑌿𑌯𑌾𑌪𑍍𑌰𑌿𑌯𑌃 | இஷ்டாநிஷ்டங்களில் சமமாயும் |
| 𑌧𑍀𑌰𑌃+ | தைரியமுள்ளவனுயும் |
| 𑌤𑍁𑌲𑍍𑌯𑌨𑌿𑌨𑍍𑌦𑌾𑌤𑍍𑌮 𑌸𑌂𑌸𑍍𑌤𑍁𑌤𑌿𑌃 \|\| | (தன்னை) நிந்தித்தாலும் ஸ்துதித்தாலும் சமமாயும் |
| 𑌮𑌾𑌨𑌾𑌪𑌮𑌾𑌨𑌯𑍋𑌃 | மானுவமானங்களில் |

*(ஶ்ரீ,வி) சத்துவாதி குணங்கள் சுதந்தரமாயன்றி பரமேசுவர இச்சையாலேயே. (ஸ்வா) ரு-வது அத், உஅ-வது சு, பார்க்க.

† (ரா) குணங்களுடைய காரியத்தை யனுசரித்து நடக்கிறதில்லையோ. (ஶ்ரீ,வி) விஷ்ணுசம்பந்தமான காரியங்களைச் செய்வதில் சலிக்கிறதில்லையோ.

‡ (ஶ்ரீ,வி) துக்கத்திற்கு சமமான விஷயசுகத்தை யுடையவனுயும். அதாவது துக்கத்திற்போல சுகத்திலுமபிலாஷையற்றவன். (ஸ்வா) அத்-கஉ, சு-கரு, பார்க்க.

§ (ரா) ஆத்மநிஷ்டையிலிருப்பவன். என்றல், புத்திர மித்திராதி ஜனன மரணவிஷயங்களில் சமமாயிருப்பவனுயும். (ஶ்ரீ,வி) விகாரமற்றவனுயும்.

¶ (ஶ்ரீ,வி) சுவர்ணத்தை மண்கட்டி கல்லுகளுக்கு சமமாயெண்ணுகிறவனுயும். (ஸ்வா) அத்-சு, சு-அ, பார்க்க.

+ (ரா) பிரகிருதி இப்படிப்பட்டது, ஆத்மா இப்படிப்பட்டவனென்கிற விவேகமுடையவனுயும்.

|| (ரா) நிந்தை ஸ்துதிகள் ஆத்மாவைச் சேர்ந்தனவல்ல, தேகத்தைச்சேர்ந்தவையென்று அறிகிறவனுயும். மற்ற மானுவமானம் முதலியவைகளையும் இந்த அர்த்தத்தில் கிரகிக்கத்தக்கது. (ஶ்ரீ,வி) ஆத்மஸ்துதியை நிந்தைக்கு சமானமாயெண்ணுகிறவனுயும். (ஸ்வா) அத்-கஉ, சு-ககூ, பார்க்க.

| | |
|---|---|
| து-ல்ய:* | சமமாயும் |
| மித்ராரிபக்ஷயோ: | மித்திரசத்துருபக்ஷங்களில் |
| து-ல்ய: | சமமாயும் |
| ஸர்வாரம்பபரித்யாகீ† | சகலவிதபிரயத்தினங்களை விட்டவனுயும் |
| (ய:) | எவனிருக்கிருனே |
| ஸ: | அவன் |
| கு-ணாதீத: | குணுதீதனுக |
| உச்யதே | சொல்லப்படுகிருன். |

ஸ்ரீகிருஷ்ணபகவான் சொல்லுவது—ஓ! பாண்டுகுமாரா! எவன் சுவபாவத்தினு லுண்டானவைகளாகிய சத்துவகுண காரியங்களான பிரகாசம் முதலியவைகளையும், இரஜோகுண காரியங்களான பிரவிருத்தி முதலியவைகளையும், தமோகுணகாரியங்களான மோகம் முதலியவைகளையும் துவேஷிக்கிறதில்லையோ, நீங்கிப்போன அவைகளை (மறுபடியும்) அபேக்ஷிக்கிறதில்லையோ, எவன் சாக்ஷியைப்போலிருந்து கொண்டு குணகாரியங்களான சுகாதிகளால் சலிப்பிக்கப்படுகிறதில்லையோ, குணங்கள் (தம்தம்காரியங்களில்) தாமே பிரவிருத்தித்திருக்கின்றனவென்று எவன் தெரிந்திருக்கிருனே, எவன் சுவரூப நிஷ்டையிலிருந்து சலிக்கிறதில்லையோ, சுகதுக்கங்களில் சமமாயும் சுவரூபநிஷ்டையிலே யிருக்கிறவனுயும், மண்கட்டி கல்லு சுவர்ணம் இவைகளைச் சமமாய் நினைக்கிறவனுயும், இஷ்டாநிஷ்டங்களில் சமமாயும் தைரியமுள்ளவனுயும், தன்னை நிந்தித்தாலும் ஸ்துதித்தாலும் அதில் சமமாயும் மானுவமானங்களில் சமமாயும் சத்துருமித்திர பக்ஷங்களில் சமமாயும் சகலவித பிரயத்தனங்களையும் விட்டவனுயும், எவனிருக்கிருனே அவன் குணுதீதனென்று சொல்லப்படுகிருன். (௨௨-௨௩-௨௪-௨௫)

---

௨௬. மாம் ச யோ(அ)வ்யபிசாரேண பக்தியோகேன ஸேவதே।
ஸ கு-ணான்ஸமதீத்யைதான் ப்ரஹ்மபூ-யாய கல்பதே॥

| | |
|---|---|
| ய: | எவன் |
| மாம் | பரமேசுவரனுகிய என்னையே |

* (ஸ்ரீ,வி) விஷ்ணுபக்தியை விடாதவனுயும்.

† (மது) காணப்படுவதும் காணப்படாததுமான விஷயங்களுக்காக கருமங்களைச் செய்கிறவனல்ல. என்றால், ஆகாராதிகளுக்கு வேண்டியதைத்தவிர மற்றவைகள் வேண்டுமென்று பிரயத்தினம் செய்யாதவன். (ரா) தேகவிஷயமான சகல காரியங்களையும் விட்டவன். (ஸ்ரீ,வி) வைஷ்ணவகருமம் தவிர மற்ற கருமங்களைச் செய்யாதவன். (ஸ்வா) அத்- ௧௨, சு- ௧௫, பார்க்க.

| | |
|---|---|
| அவ்யபிசாரேண | சலிக்காமலிருக்கிற |
| பக்தியோகேந | பக்தியோகத்தினாலே |
| ஸேவதே | உபாசிக்கிறானோ |
| ஸ: | அவன் |
| ஏதாந் குணாந் | இந்த முக்குணங்களை |
| ஸமதீத்ய | அதிக்கிரமித்து |
| ப்ரஹ்மபூயாய | பிரம்மமாகிறதற்கு |
| கல்பதே | யோக்கியனாகிறான். |

எவன் பரமேசுவரனாகிய என்னையே சலிக்காமலிருக்கிற பக்தி யோகத்தினாலே யுபாசிக்கிறானோ, அவ னிந்த முக்குணங்களை யதிக்கிரமித்து பிரம்மமாகிறதற்கு யோக்கியனாகிறான்.

(ஶம்) எந்த யதி அல்லது கருமியானவன் சகல பூதங்களுடைய ஹிருதய வாசியான ஈசுவரனும் நாராயணனுமான என்னை, ஒருபோதும் வேறே விஷயங்களில் பிரவிருத்தியன்றியில் பஜிக்கிறதாகிய யோகத்தினாலே, என்றால், விவேக விஜ்ஞாந மாகிய யோகத்தினாலே (ஐக்கியாநுசந்தானத்தினாலே) உபாசிக்கிறானோ, அவன் பகவத் அநுக்கிரகத்திற்குப் பாத்திரனாய் குணங்களை அதிகரித்து பிரம்ம பவனமாகிய மோக்ஷத்தை யடைய யோக்கியனாகிறான்.

(ரா) நாந்யம் குணேப்ய: கர்த்தாரம் (அத்-கச, சு-ககூ.) என்கிறதினால் சொல்லப்பட்ட பிரகிருதி ஆத்மா இவைகளின் விவேகாநு சந்தானத்தினால் மாத்திரம் குணங்களை யதிக்கிரமிக்க மாட்டான். ஏனென்றால், பிரகிருதி வாசனையானது வெகுகாலமாய் தொடர்ந்துவந்திருப்பதினாலே அதைத் தாண்டுகிறது மிகவும் அரிது. ஆனதினாலே, பக்த வாச்சல்லியம், கிருபை முதலிய குணங்களோடு கூடிய என்னை எவன் ஆசிரயிக்கிறானோ, அவன் குணங்களை அதிக்கிரமித்து என்னைப்போலாக யோக்கியனாகிறான்.

(ம) (ஶ்ரீ,வி) "ப்ரஹ்மபூயாய கல்பதே" சித்பிரகிருதியைப்போலாக யோக்கியனாகிறான். என்றால், சித்பிரகிருதி எப்படி விஷ்ணுவுக்குப் பிரியமானவளோ அப்படி இந்தப்பக்தனும் பிரியமானவனாகிறான். அல்லது, சித்பிரகிருதியை யடைகிறான். (உசு)

---

உஎ. ப்ரஹ்மணோ ஹி ப்ரதிஷ்டாஹம் அம்ருதஸ்யாவ்யயஸ்ய ச।
ஶாஶ்வதஸ்ய ச தர்மஸ்ய ஸுகஸ்யைகாந்திகஸ்ய ச॥

| | |
|---|---|
| ஹி | ஏனென்றால் |
| அஹம் | நான் |

| | | |
|---|---|---|
| ப்ரஹ்மண: | | பரமாத்மாவுக்கு |
| ப்ரதிஷ்டா | | பிரதிபிம்பம் |
| அவ்யயஸ்ய<br>அம்ருதஸ்ய ச | } | அழிவற்றமோக்ஷத்திற்கும் |
| ஶாஶ்வதஸ்ய<br>தர்மஸ்ய ச | } | சாசுவதமானதருமத்திற்கும் |
| ஐகாந்திகஸ்ய<br>ஸுகஸ்ய ச | } | அகண்டமானசுகத்திற்கும் |
| (ப்ரதிஷ்டா) | | ஆசிரியன். |

(குணங்களை அதிக்கிரமிக்க என்னை உபாசிக்க வேண்டியது) ஏனென்றால், நான் பரமாத்மாவுக்குப் பிரதிபிம்பம். அழிவற்ற மோக்ஷத்திற்கும் சாசுவதமான தருமத்திற்கும் அகண்டமான சுகத்திற்கும் ஆசிரயன்.

(ஸம்) அவ்யயஸ்ய = விகாரமற்றவும், அம்ருதஸ்ய = நாசமற்றவும்; ஶாஶ்வதஸ்ய = நித்தியமானவும், தர்மஸ்ய = ஞானயோகமாகிறதருமத்தினு லடையத்தகுந்தவும், ஸுகஸ்ய = ஆநந்தசுவரூப மானவும், ஐகாந்திகஸ்ய = மாறாத சுவபாவமுள்ளவுமான, ப்ரஹ்மண: = பரபிரம்மத்தினுடைய, ப்ரதிஷ்டா = சுவரூபம், அஹம் = நானே. எந்த சக்தியினாலே பக்தானுக்கிரகார்த்தமாக பிரம்மம் பிரவிருத்தித்திருக்கிறதோ, அந்தசக்தியே பிரம்மம்; அந்தபிரம்மமேநான். சக்தியை யுடையவனுக்கும் சக்திக்கும் பேதமில்லையாகையா லிப்படிச் சொலலப் பட்டது.

(ஸ்ரீ) என்னை உபாசிக்கிறவன் பிரம்மமாக எப்படி யாவானென்றால், அதற்கேது சொல்லப்படுகிறது. பிரகாசங்களுடைய கூட்டமானது சூரியமண்டலமாக எப்படிகாணப்படுகிறதோ, அப்படிப்போல நான்பிரம்மத்திற்கு பிரிதிமையாகவிருக்கிறேன். என்றால், பிரம்மமே நான்என்பது தாத்பரியம். (ஸத், சித், ஆநந்தங்களாகிய பிரகாசக்கூட்டங்கள் சேர்ந்த ஒரு ரூபமாய் அவதாரம் செய்திருக்கிறே னென்பது கருத்து.)

(ரா) அவ்யயஸ்ய = விகாரமற்றவும், அம்ருதஸ்ய = நாசமற்றவுமான, ப்ரஹ்மண: = பரபிரம்மத்திற்கு, அஹம் = நான், ப்ரதிஷ்டா = சுவரூபமாயிருக்கிறேன், ஶாஶ்வதஸ்யதர்மஸ்ய=பூர்ணமான ஐசுவரியத்திற்கும், ஐகாந்திகஸ்ய=“வாஸுதேவஸ்ஸர்வமிதி” என்கிறவிடத்தில் சொன்ன ஞானியினு லடையத்தகுந்த, ஸுகஸ்ய = சுகத்திற்கும், ப்ரதிஷ்டா = ஆசிரயமா யிருக்கிறேன். “தைவீஹ்யேஷாகுணமயீ மமமாயாதுரத்யயா । மாமேவயேப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்திதே ॥”

(அத்-எ, சு-௧௪,) முதலியவைகளினால், குணங்களை யதிக்கிரமிக்கிறதற்கும், அக்ஷர ஐசுவரியத்திற்கும், பகவானை யடைகிறதற்கும் (ப்ரபத்தி:) பிரபத்தி என்கிற பகவானுடைய சரணாகதியே முக்கிய காரணமாக சொல்லப்பட்டிருக்கிறது. அதுதான் பிரம்மத்தைப்போலாகிற தற்கும் முக்கியகாரணமென்று கொள்ளவேண்டியது.

(ஸ்ரீ, வி) குணாதீதன் என்னை யடைகிறானென்றே சொல்லவேண்டியது. இலக்ஷ்மியை அடைவதை ஏன்சொல்லவேண்டும்? என்றால், இலக்ஷ்மி எப்போதும் என்னிடத்தி லிருப்பவளாகையால், அவளை யடைந்தால் என்னை யடைந்ததாகவே யாகிறதென்பது இதினால் சொல்லப்படுகிறது. அஹம் = நான், ப்ரஹ்மண:=சித்பிரகிருதியான இலக்ஷ்மிக்கும், அவ்யயஸ்ய அம்ருதஸ்ய=முக்தர்களுடைய கூட்டங்களுக்கும். சாஶ்வதஸ்ய தர்மஸ்ய = அக்ஷயமான பலத்தை யுண்டாக்குகிற தருமத்திற்கும், ஐகாந்திகஸ்ய ஸுகஸ்ய=மோக்ஷசுகத்திற்கும், ப்ரதிஷ்டா= ஆதாரமா யிருக்கிறேன். (உ௭)

ஓம் தத்ஸதிதி ஸ்ரீ பகவத்கீதா ஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம்

யோகஶாஸ்த்ரே ஸ்ரீ க்ருஷ்ணார்ஜுந ஸம்வாதே

குணத்ரய விபாகயோகோ நாம

சதுர்தஶோத்யாய:.

ஸ்ரீ க்ருஷ்ணாய பரப்ரஹ்மணே நம:.

குணத்திரய விபாகயோகமென்கிற

பதினான்காவது அத்தியாயம்

முற்றிற்று.

---

ஸ்ரீ:
ப ஞ் ச த ஶ ா ஐ்ெ ய ா ய ஆ ர ம் ப:
# பதினைந்தாவது அத்தியாயம்.

---

ஸ்ரீ ஹமவாநுவாச.

க. ஊர்த்வமூலமத:ஶாகமஶ்வத்தம் ப்ராஹுரவ்யயம்।
ஓந்தாம்ஸியஸ்யபர்ணாநி யஸ்தம்வேதஸவேதவித்॥

| | |
|---|---|
| ஸ்ரீ ஹமவாநுவாச | ஸ்ரீகிருஷ்ணபகவான்சொல்வது |
| ஊர்த்வமூலம் | மேலான புருஷோத்தமனாகிய நாராயணனை மூலமாயுடையதும் |
| அத:ஶாகம் | கீழ்ப்பட்ட பிரம்மாதிகளைக் கிளைகளாக உடையதுமாயிருக்கிற |
| அஶ்வத்தம் | ஸ்திரமில்லாத சமுசாரமாகிய அரசமரத்தை |
| அவ்யயம் | நாசமற்றதாக |
| ப்ராஹு: | வேதங்கள் சொல்லுகின்றன |
| ஓந்தாம்ஸி | வேதங்கள் |
| யஸ்ய | எந்தசமுசார விருக்ஷத்திற்கு |
| பர்ணாநி | இலைகளோ |
| தம் | அந்தவிருக்ஷத்தை |
| ய: | எவன் |
| வேத | அறிகிறானோ |
| ஸ: | அவன் |
| வேதவித் | வேதார்த்தத்தை யறிந்தவன். |

ஸ்ரீ கிருஷ்ணபகவான் அர்சுனனைநோக்கிச் சொல்வது — மேலான புருஷோத்தமனாகிய நாராயணனை மூலம் (வேர்) ஆகவும், கீழ்ப்பட்ட பிரம்மாதிகளைக் கிளைகளாகவுமுடையதா யிருக்கிற ஸ்திரமில்லாத சமுசார விருக்ஷத்தை (பிரவாகரூபத்தினால் *) நாசமற்றதாக

---

* (ஸா) பிரவாகரூபத்தினால் நாசமற்றதென்றால், நதிகளில் போகிற பிரவாகஜலம் பார்க்கையில் எப்போது மிருப்பதாகக் காணப்பட்டபோதிலும் ஒரு நிமிஷத்திற்குமுன் பார்த்த ஜலம் இப்போது அவ்விடத்திலில்லையானாலும், நதியில் ஜலம் எப்போது மிருக்கிறதாகவே சொல்லப்படுகிறது. போக்கும் வரத்துமா யிருந்தாலும் நேற்றுபார்த்தஜல மின்றைக்கில்லையேயன்றி ஜலத்தொடர்ச்சிஎப்படி அழிவற்றதோ அப்படிபோல் நேற்றிருந்த சமுசாரம் இன்றைக்கில்லா விட்டாலும், ஒன்றுபோக மற்றொன்றுவா இப்படியே தொடர்ந்திருப்பதினாலே பிரவாகரூபமாய் நாசமற்றதென்று சொல்லப்பட்டது.

வேதங்ககள் சொல்லுகின்றன வேதங்கள் எந்தவிருக்ஷத்திற்கு இலைக ளோ அந்தவிருக்ஷத்தை எவன் அறிகிருனே அவன் வேதார்த்தத்தை யறிந்தவன்.

(ஸ்ரீ) "ரோவஸெ்யாவ்யஹிசாரெண" (அத் - கச, சு - உஎ,) என்கிற சுலோகத்தினல், ஏகாந்தபக்தியினல் ஈசுவரனை பஜிப்பவன் ஞானத் தினல் பிரம்மபாவத்தை யடைகிறதாக சொல்லப்பட்டது. அந்த பக்தி ஞானம் இவைகள் சமுசாரத்தில் வைராக்கியம் (வெறுப்பு) அடையாதவனுக் குண்டாகமாட்டா. ஆகையாலந்த வைராக்கியத்தை அர்சுனனுக் குபதேசிக்கும் பொருட்டு இரண்டரை சுலோகங்களினல், சமுசாரத்தை விருக்ஷ (மரம்) ரூபமாகவருணித்து பகவான் சொல்லு கிருர். அவ்ஸ்தம் = நாளையிருக்கப்பட்டதல்ல. அதாவது, அ = அல்ல, ஸ்வ: = நாளைக்கு (அடுத்த நிமிஷத்திற்குங்கூடச் சொல்லலாம்,) ஸ்தம் - இருக்கிறது, "ஊர்த்வமூலோ(அ)வாக்ஶாக ஏஷோ(அ)ஶ்வத்த: ஸநாதந:" * இதுமுதலிய சுருதிவாக்கியங்களில் சமுசாரமானது அசுவ த்தவிருக்ஷமாக வருணிக்கப்பட் டிருப்பதினல், ச்சந்தாம்ஸி = என்ற பதத்திற்கு வேதங்கள் சொல்லுகிறதாகப் பொருள் கூறப்பட்டது.

(ஶ்ரீ) கருமானுஷ்டான முள்ளவர்களுக்கும் ஞானிகளுக்கும் அவ ரவர்களுடைய அனுஷ்டானத்தினு லுண்டாகும் பலன் தன் அதீன மான தென்பதையும், பக்தியோகத்தில் தன்னை பஜிக்கப்பட்டவன் தன்னுடைய பிரசாதத்தினல் கிரமக்கிரமமாய் பிரம்ம ஞானத்தை யடைந்து குணுதீதனய் மோக்ஷத்தை யடைகிருனென்பதையும் முந் திய அத்தியாயத்தில் பகவான் சொன்னர். அர்சுனன் கேட்காதிருந் தாலும் தன் நிஜசுவரூபத்தை அர்சுனனுக்குத் தெரிவிக்கக்கருதி, சமு சாரத்தில் விரக்தியடைந்தவன்தான் பிரம்ம ஞானத்திற்கு அதிகாரியா யிருக்கிருனுகையால், சமுசாரத்தில் விரக்தி யுண்டாகும் பொருட்டு அந்த சமுசார சுவரூபத்தை விருக்ஷ ரூபமாய் பகவான் வர்ணித்துச் சொல்லுகிருர். ஊர்த்வமூலம் = காலத்தினல் சூக்ஷ்மமாயும், அல்லது காலத்தைக் காட்டிலும் சூக்ஷ்மமாயும் நித்தியமாயும் சகலத்திற்கும் காரணமாயும் அவ்வியக்த மென்கிற மாயையை சக்தியா யுடையதாயு மிருக்கிற பிரம்மமானது ஊர்த்வம், அப்படிப்பட்ட பிரம்மத்தை மூல மாகவுடைய சமுசார விருக்ஷமானது, அதஶ்ஶாகம் = மகத்தத்துவம் அகங்காரதத்துவம் பஞ்சபூதங்கள் சப்தாதி விஷயங்கள் இவைகளைக் கிளைகளாக வுடையது. இந்தசமுசாரமாயா சுவரூபமானது, அவ்யயம் = நாசமற்றது, எப்படி என்ருல், மாயை அநாதியாகையால், அந்த மாயா மயமான சமுசாரமும் ஆதியும் அந்தமுமற்ற தொடர்ச்சியை யுடை

* (ஸ்வா) கடோபநிஷத் அத் - உ - வல்லி, சு - வாக்கியம் - க.

யது. யஸ்ய — எந்தசமுசாரவிருக்ஷத்திற்கு, ச²ந்தா³ம்ஸி பர்ணாநி — வேதங்கள் இலைகளைப்போலிருக்கின்றனவோ. எப்படியென்றால், மரத்தை யிலைகள் எப்படி வெய்யில் முதலியவைகளிலிருந்து பாதுகாக்கின்றனவோ அப்படிப்போல வேதங்கள் தருமாதருமங்களை வெளிப்படுத்தி சுகத்தையடையவும் துக்கத்தை நிவர்த்திக்கவும் வழிகாட்டியாயிருக்கிறதினாலே யிலைகளாகச் சொல்லப்பட்டன. இப்படிப்பட்ட சமூலமான சமுசாரவிருக்ஷத்தை எவனறிகிறானோ, அவன் வேதார்த்தத்தைப் பூர்ணமா யறிந்தவன். என்றால், பிரம்மமாகிய மூலத்தையும் அதற்கன்னியமாகிய பிரபஞ்சத்தையும் அறிந்த சர்வக்ஞனாகிறான். மற்ற விருக்ஷங்களி லொன்றைக் குறிப்பிடாமல், அசுவத்த விருக்ஷமென்று சொல்லவேண்டிய தென்னவெனில், அஶ்வத்த²ம், என்றால், அடுத்த நிமிஷத்திலிருக்கிற தல்லவென்கிற அர்த்தத்தைக் கொடுக்கிறபடியாலும் சமுசாரமும் அப்படிப்பட்ட சுவபாவமுள்ள தாகையாலும் அசுவத்தமென்று வருணித்துச் சொல்லப்பட்டது. சமுசாரத்திற்கும் அசுவத்த விருக்ஷத்திற்கும் அநேக ஒத்துமை யுண்டென்பது அடியில் குறிக்கப்படுகிற சுருதிவாக்கியத்தினாலும் புராண சுலோகங்களினாலும் விளக்கப்படுகிறது. (சுருதி வாக்கியமானது மேலாக (ஸ்ரீ) குறித்ததுதான்.) புராணவசனமாவது, "அவ்யக்தமூலப்ரபவ
"ஸ்தஸ்யைவாநுக்ரஹோத்தித꞉ । புத்திஸ்கந்தமயஶ்சைவ இந்த்ரியாந்
"தரகோடர꞉ ॥ மஹாபூதவிஶாகஶ்ச விஷயை꞉ பத்ரவாம்ஸ்ததா ।
"தர்மாதர்மஸுபுஷ்பஶ்ச ஸுகது꞉கபலோதய꞉ । ஆஜீவ்ய꞉ ஸர்வ
"பூதாநாம் ப்ரஹ்மவ்ருக்ஷ꞉ ஸநாதந꞉ । ஏதத் ப்ரஹ்மவநம் சைவ ப்ரஹ்ம
"வ்ருக்ஷஸ்ய தஸ்ய ச - (ப்ரஹ்மாசரதி நித்யஶ꞉ என்று கல்கத்தா
"பாடம்) ஏதச்சித்வா ச பித்வா ச ஜ்ஞாநேந பரமாஸிநா । ததஶ்சாத்மரதிம்
"ப்ராப்ய தஸ்மாந்நாவர்ததே புந꞉ — பிரம்மமாகிற வேரிலிருந்துண்
"டானதாயும் அதினுடைய யோக்கியதையால் வளர்ந்ததாயும் புத்தி
"யாகிய கிளைகள் பிரிகிற இடமான அடிமரத்தினுடைய மேல்பாகத்
"தை யுடையதாயும் இந்திரியங்களாகிய பொந்துகளை யுடையதாயும்
"மகாபூதங்களை அடிமரமாயுடைதாயும் சப்தாதிவிஷயங்களைக் கிளை
"களாகவும் இலைகளாகவு முடையதாயும் தருமாதருமங்களைப் புஷ்பங்
"களாயுடையதாயும் சுகதுக்கங்களைப் பழங்களா யுடையதாயும் சகல
"பூதங்களும் ஜீவித்திருக்கிறதற்கு ஆதாரமாயும் பிரம்மத்திற் கிருப்
"பிடமாயுள்ளதாயும் அநாதியாயுமிருக்கிற இந்த சமுசாரவிருக்ஷத்தி
"னுடைய கூட்டத்தை ஞானமாகிற கத்தியினால் வெட்டிப்பிளந்து எதி
"லிருந்து திரும்பி (சமுசாரத்திற்கு) வரமாட்டானோ (அப்படிப்பட்ட
"ஆநந்தத்தை யடைகிறான்.)"

(ரா) க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞர்களைக் குறித்துச்சொன்ன இதின் கங-வது அத்தியாயத்தில், பிரகிருதி புருஷர்களுடைய சுவரூபத்தை விசாரித்து, பரிசுத்தனும் பரிபூர்ண ஞானகாரனுமான ஜீவனுக்குப் பிரகிருதி சம்பந்தமான குணத்திரயங்களுடைய பரம்பரா சம்பந்தத்தினலுண்டான தேவமனுஷியாதி சரீரரூபமாயுள்ள பிரகிருதி சம்பந்தமானது, அநாதியென்று சொல்லப்பட்டது. கசு-வது அத்தியாயத்தில், அந்த ஜீவனுக்குக் காரியகாரண ரூபமாயுண்டான பிரகிருதி சம்பந்தமானது குணசம்பந்த மூலமாய் பகவானல் செய்யப்பட்டதென்பதும், அந்தக் குணசம்பந்த மிப்படிப்பட்டதென்பதை விவரித்துச்சொல்லி, அந்தக் குணநிவிருத்தியினல் ஆத்ம நிஜசுவரூபத்தை யடைய பகவத்பக்தி முக்கியமானதென்பதும் சொல்லப்பட்டன.

இந்த அத்தியாயத்திலோ, க்ஷரனென்கிற பெத்தஜீவன் (சம்சாரி) அக்ஷரனென்கிற முக்தஜீவன் இவர்கள் பகவானுடைய விபூதி ரூபங்களென்பதும், இந்த இருவரைக்காட்டிலும் விலக்ஷணரா யிருக்கிற பகவானனவர் நிர்தோஷியாயும் பரிபூர்ண கல்யாண குணங்களுடன் கூடினவராயும் சர்வோத்தமராயு மிருக்கிறரென்பதும் சொல்லப்படுகின்றன.

இந்த சுலோகத்தினல், அசங்கமென்கிற கத்தியினல் சேதிக்கப்பட்ட பந்தத்தைப் போக்கடித்துக்கொண்ட அக்ஷரனென்கிற விபூதியைச் சொல்லும்பொருட்டு சேதித்துக் கொள்ளவேண்டியதாயிருக்கிறதும், பிரகிருதி சம்பந்தரூபமாயும் பந்தரூபமாயும் க்ஷரனுக்கு சம்பந்தப்பட் டிருக்கிறதுமான சமுசாரத்தை அசுவத்த விருக்ஷரூபமாய் வர்ணிக்கிறர்.

மேலேழு லோகங்களில் சிரேஷ்டமான சத்தியலோகத்திலிருக்கிற சதுர்முக பிரம்மாவினல், இந்தப் பிரபஞ்சம் சிருஷ்டிக்கப்பட்டபடியால் இந்தப் பிரபஞ்சத்திற்கு சதுர்முகபிரம்மா, ஊர்த்⁴வம் = மேலாகவிருக்கிற, மூலம் = காரணமாயிருக்கிறர். அந்த ஏழுலகங்களில் கீழான பூலோகத்திலிருக்கிற மனிதன் பசு பக்ஷி பூச்சி புழு ஸ்தாவரம் முதலிய சகலமும், அத⁴ஶ்ஶாக²ம் = கீழாக விருக்கிற கிளைகள். ஞானேதயமாகிறவரையில், சமுசாரம் தொடர்ந்திருப்பதால் பிரவாகரூபத்தினல், அவ்யயம் = நாசமற்றது. ச²ந்தா³ம்ஸி = வாயவ்யம் ஶ்வேத "தமாலபே⁴த பூ⁴திகாம:" "ஐந்த்³ராக்³நமேகாத³ஶகபாலம் நிர்வபேத் ப்ரஜாகாம:" முதலிய வேதங்கள், யஸ்ய பர்ணாநி = எந்த விருக்ஷத்திற்கு இலைகளோ, என்றல், இலைகள் விருக்ஷங்களை எப்படி வளரச் செய்கின்றனவோ, அப்படிப்போல காம்மிய கருமங்களைச்

சொல்லுகிறவேதங்கள் சமுசாரமாகிய விருக்ஷத்தை வளரச்செய்கின்றன. ஆகையால், அப்படிப்பட்ட வேதங்கள் இலைகளாக வருணிக்கப்பட்டன. இப்படி விருக்ஷத்தை யறிந்தவனெவனோ, அவன்வேதத்தைத் தெரிந்தவன். என்றால், இந்த விருக்ஷத்தை முதலில் அறிந்து பிறகு அந்தவிருக்ஷத்தை வெட்டத்தகுந்த ஆயுதத்தைத் தேடவேண்டியது. சமுசாரமாகிற விருக்ஷத்தைத் தெரிந்தால், அதை நிவர்த்திக்கு மாயுதத்தைச்சொல்லுகிற வேதத்தையறிந்தவ னாகிறானென்பது தாத்பரியம்.

(௧) சமுசார சுவரூபமும் அதை நிவர்த்திக்கிறதற்குள்ள சாதனங்களும் அவைகளுடைய ஞானமும் இந்த அத்தியாயத்தில் சொல்லப்படுகின்றன. ஊர்த்வமூலம்=சர்வோத்தமரான விஷ்ணுவை மூலமாகவுடையது, அதச்சாகம் = விஷ்ணுவுக்குக் கீழ்ப்பட்ட சகலப் பிரபஞ்சங்களையும் கிளைகளாகவுடையது, அச்வத்தம் = ஒரே விதமாய் நாளைக்கிருக்கிற தல்லாதது, அவ்யயம் = பிரவாகரூபமாய் நாசமில்லாதது, என்றால், முன் பிரம்மகல்பத்திலிருந்தப் பிரபஞ்சமே அடுத்த கல்பத்திலு முண்டாய்க்கொண்டே பிரதி சிருஷ்டியிலு மிருக்கிறபடியால், நாசமற்றதாக சொல்லப்பட்டது. சந்தாம்ஸியஸ்யபர்ணாநி = வேதங்கள் இலைகள், என்றால், இலைகளுண்டானபிறகுதான் காய்முதலிய பலன்கள் உண்டாகின்றன. அப்படிப்போல் வேதங்களால் சுகிருத துஷ்கிருதபலன் (புண்ணியபாபபலன்) கள் உண்டாகின்றனவென்பது தாத்பரியம்.

(௨,௩) ஊர்த்வம் = உத்தமமானவர்களும் மேலானவர்களுமான விஷ்ணுவையும் சித் அசித் பிரகிருதிகளையும், மூலம் = மூலகாரணமாயுடையது, இவர்களுக்குக் கீழ்ப்பட்ட பஞ்சமகாபூதங்கள், மகத்தத்துவம், அகங்காரதத்துவம், புத்தி, இவைகளையும் இவைகளுக்கு அபிமானி தேவதைகளையும் கிளைகளாக வுடையது, ஒரே ரூபமாயிருக்கிற தல்ல, அல்லது சஞ்சலமாயிருக்கிற தாகையால், அச்வத்தம் என்கிற பெயரையுடையது, பிரவாகரூபமாய் நித்தியமாகையாலும், பூர்வகல்பத்திலிருந்தபடி யிந்தக் கற்பத்திலு மிருக்கிறபடியாலும், அவ்யயம்= நாசமற்றது, சந்தாம்ஸியஸ்யபர்ணாநி = வேதங்களையும் வேதாபிமானி தேவதைகளையும் இலைகளாகவுடையது. இப்படிப்பட்ட சமுசார விருக்ஷத்திற்கு பூமி எப்படி மூலமோ அப்படி ஜகத்விருக்ஷத்திற்கு விஷ்ணு தனிமையானமூலம், சத்துவாதி முக்குணமான அசித்பிரகிருதி பூமிபோல் பரிணமமூலம், சித்பிரகிருதி அசித்பிரகிருதிக்கு அதிஷ்டாதா (என்றால், நியாமகத்துவத்தை யுடையது) என்று அறியவேண்டும்,

௨. 𑌅𑌧𑌶𑍍𑌚𑍋𑌰𑍍𑌧𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌸𑍃𑌤𑌾𑌸𑍍𑌤𑌸𑍍𑌯 𑌶𑌾𑌖𑌾 𑌗𑍁𑌣𑌪𑍍𑌰𑌵𑍃𑌦𑍍𑌧𑌾 𑌵𑌿𑌷𑌯𑌪𑍍𑌰𑌵𑌾𑌲𑌾𑌃 । 𑌅𑌧𑌶𑍍𑌚 𑌮𑍂𑌲𑌾𑌨𑍍𑌯𑌨𑍁𑌸𑌨𑍍𑌤𑌤𑌾𑌨𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌨𑍁𑌬𑌨𑍍𑌧𑍀𑌨𑌿 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌲𑍋𑌕𑍇 ॥

| | |
|---|---|
| 𑌗𑍁𑌣𑌪𑍍𑌰𑌵𑍃𑌦𑍍𑌧𑌾𑌃 | சத்துவாதி குணங்களினுலே விருத்தி யடைந்தும் |
| 𑌵𑌿𑌷𑌯𑌪𑍍𑌰𑌵𑌾𑌲𑌾𑌃 | சப்தாதிவிஷயங்களைத் துளிர்களா யுடைத்தாயுமிருக்கிற |
| 𑌤𑌸𑍍𑌯 𑌶𑌾𑌖𑌾𑌃 | அந்தசமுசார விருக்ஷத்தினுடைய கிளைகள் |
| 𑌅𑌧𑌶𑍍𑌚 | கீழுலகங்களிலும் |
| 𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌂 | மேலுலகங்களிலும் |
| 𑌪𑍍𑌰𑌸𑍃𑌤𑌾𑌃 | பரவியிருக்கின்றன |
| 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌲𑍋𑌕𑍇 | மனுஷியலோகத்தில் |
| 𑌕𑌰𑍍𑌮𑌾𑌨𑍁𑌬𑌨𑍍𑌧𑍀𑌨𑌿 | கரும சம்பந்தத்தை யுண்டுபண்ணப்பட்ட |
| 𑌮𑍂𑌲𑌾𑌨𑌿 | (அனுபவித்து மிச்சமானதாயிருக்கிற கருமசேஷமென்கிற) வேர்கள் |
| 𑌅𑌧𑌶𑍍𑌚 | கீழ்மேலுலகங்களில் |
| 𑌅𑌨𑍁𑌸𑌨𑍍𑌤𑌤𑌾𑌨𑌿 | எவ்விடத்திலும் பரவியிருக்கின்றன. |

சத்துவாதி குணங்களினுலே விருத்தியடைந்தும் சப்தாதிவிஷயங்களைத் துளிர்களா யுடைத்தாயுமிருக்கிற அந்தசமுசார விருக்ஷத்தினுடைய கிளைகள் கீழ்மேலுலகங்களில் பரவி யிருக்கின்றன. கீழ்மேலுலகங்களி லனுபவித்து மிச்சமானதாயிருக்கிற கருமவிசேஷமென்றவும் பூலோகத்தில் தமக்கிசைந்தபடி கருமங்களை நடப்பிக்கின்றவுமான வேர்கள் மேலுங்கீழும் பரவியிருக்கின்றன.

(ஸ்ரீ) சதுர்முக பிரம்மாவும், அவருக்குக் கீழ்ப்பட்ட சகலஜீவ கோடிகளும், சமுசார விருக்ஷத்திற்குக் கிளைகளாக சொல்லப்பட்டார்கள். அந்த ஜீவகோடிகளில் பாபம் செய்தவர்கள்கீழ் (பூமி) லோகத்தில் பசு பக்ஷி முதலிய ஜன்மங்களை யடைந்து பரவியிருக்கிருர்கள். புண்ணியஞ் செய்தவர்கள் மேலுலகத்தில் தேவதை முதலிய ஜன்மங்களை யடைந்து பரவியிருக்கிருர்கள். இப்படி கீழும்மேலுமாய்ப் பரவியிருக்கிறவர்கள் தான் இந்த சமுசாரமாகிய விருக்ஷத்திற்கு மேலுங் கீழுமாயுள்ள கிளைகள். இந்தக்கிளைகள் சத்துவாதி குணங்களினுல் விருத்தியடைந் திருக்கின்றன. மரத்தின் கிளைகள் தண்ணீரால் விருத்தியடைவதுபோல, இந்த ஜீவர்களாகிய சமுசார விருக்ஷத்தின் கிளைகள் குணங்களினுல் விருத்தியடைந் திருக்கின்றன. அந்தக் கிளைகளுக்கு விஷயங்களாகிற சப்தாதிகள் துளிர்கள், அந்த

விருக்ஷத்தினுடைய வேர்கள் கீழ்மேலுலகங்களில் பரவி யிருக்கின்றன. அவைகளில் முக்கியமான ஆணிவேர் ஈசுவரன். மற்றப்பக்க வேர்களோ, ஜீவகோடிகள் கீழ்மேலுலகங்களி லனுபவித்ததுபோக மிச்சமான கருமவாசனைதான். அந்தக் கருமவாசனையானது தன்னுடைய பற்றுதலோடு பூலோகத்தில் ஜனனத்தை யுண்டாக்கித்தன் சுவபாவத்திற்குத் தக்கபடி கருமங்களை செய்விக்கிறது. கருமானுஷ்டானமானது பூலோகம் தவிர மற்ற எவ்விடத்திலு முண்டாவதில்லையாகையால், இந்த பூலோகத்திற் கருமங்களைச் செய்விக்கிறதாகச் சொல்லப்பட்டது.

(௱௦) ஞானகரும பலன்கள்தான் வியாபித்திருக்கிற கிளைகள். அந்தப்பலன்களில் சேர்ந்ததுதான் தேகம். அந்ததேகமும் கிளையில் சேர்ந்ததுதான். அந்த தேகத்தினால் விர்த்தியாகிற விஷயங்கள்தான் துளிர்கள். (மற்றது ஸ்ரீதருடைய அர்த்தமே.)

(௱௧) மனுஷிய பசுபக்ஷி முதலியவைகளைக் கிளைகளாகவுடைத்தான சமுசார விருக்ஷத்திற்குப் பின்னும் சிலகிளைகளுமுண்டு. அந்தக்கிளைக ளெவையென்றால், மனிதர்களால் செய்யப்பட்ட கருமங்களால் பின்னும் பின்னுமுண்டாகிறதும் கீழே வியாபித்திருக்கிறதுமான மனுஷிய பசு பக்ஷி முதலிய ரூபங்களே. மேலே வியாபித்திருக்கிறகிளைக ளெவையென்றால், தேவ கெந்தர்வ யக்ஷ கின்னராதி ரூபங்களே. இப்படிப்பட்ட கிளைகள்தான் குணங்களால் விர்த்தியடைந்த விஷயங்களைத் துளிர்களா யுடையவை. பிரம்மாவை மூலமாயும் மனுஷிய பசுவாதிகளைக் கிளைகளாயு முடைத்தான சமுசார விருக்ஷத்தினுடைய வேர்கள், கீழ்மேலுலகங்களில் வியாபித்திருக்கின்றன. புருஷனுக்கு பெந்தத்தை யுண்டுபண்ணுகிற கருமங்கள்தான் மூலமென்கிற வேர்கள். மனுஷியலோகத்தில் வியாபித்திருக்கிற வேர்களெவையென்றால், முந்தி மனுஷியனாக விருக்கையில் செய்த கருமங்களால் பின்னும் தனக்குண்டாகும் மனுஷியாதிரூபங்களே. மேல்லோகத்தில் வியாபித்திருக்கிற வேர்களெவையென்றால், முந்தி மனுஷியனாக விருக்கையில் செய்த கருமங்களால் தனக்குண்டாகிற தேவ கந்தர்வாதி ரூபங்களே.

(௨) கிளைகளாகிற பஞ்சமகா பூதங்கள், ஊர்த்வம் = முந்திய காரணப்பிரகிருதியில் சூக்ஷமமாயும், அத: = பிந்திய தேகாதிகாரியப்பிரகிருதியில் ஸ்தூலமாயும் வியாபித் திருக்கின்றன. பூதங்கள்தான் குணங்களினால் அபிவிருத்தி யடைந்திருக்கின்றன. பார்த்த மாத்திரத்தில் சுகமாய் தோன்றுகிறபடியால் விஷயங்கள் துளிர்களாக சொல்லப்பட்டன. மேலானமூலமென்கிற வேர் விஷ்ணுரூபங்கள். கீழான மூலமென்கிற வேர் விஷ்ணுவினுடைய அவதாராதி ரூபங்கள்.

கர்மானுபந்தீநி — ஜீவன்செய்கிற கருமங்களை யனுசரித்து பலன் கொடுக்கின்றன.

(ஸ்ரீ,வி) இந்த ஜகத் விருக்ஷத்திற்குக் கிளைகளுடைய ஸ்தானத்தில் சிதசித்ருபங்களான மகதாதி எட்டு பதார்த்தங்கள், சத்துவாதி குணங்களா லபிவிருத்தியடைந்தும், சூக்ஷ்மரூபத்தினல் அவ்வியக்தத்திலும் ஸ்தூலரூபத்தினல் தேகாதிகளிலும் வியாபித்திருக்கின்றன. தாத்காலிக சுக ஏதுவில் சாம்மியமிருப்பதால், சப்தாதி விஷயங்கள் துளிர்களென்று சொல்லப்பட்டன. விஷ்ணுரூபங்களும், சிதசித்பிரகிருதிகளும், சத்துவாதிகுணங்களும், ஜகத்விருக்ஷத்தினுடைய கீழ் பாகமாகிய மனுஷியலோகத்தில் கருமானுசாரமாய் பலனைக்கொடுக்கிறதாக மகதகங்காராதி சகல பதார்த்தங்களிலும் வியாபித்திருக்கின்றன. (௨)

---

௩. ந ரூபமஸ்யேஹ ததோபலப்⁴யதே நாந்தோ ந சாதி³ர்ந ச
ஸம்ப்ரதிஷ்டா² । அஶ்வத்த²மேநம் ஸுவிரூட⁴மூலமஸங்க³ஶஸ்த்ரேண
த்³ருடே⁴ந சி²த்வா ॥

௪. தத: பத³ம் தத்பரிமார்கி³தவ்யம் யஸ்மிந்க³தா ந நிவர்தந்தி பூ⁴
ய: । தமேவ சாத்³யம் புருஷம் ப்ரபத்³யே யத: ப்ரவ்ருத்தி: ப்ர
ஸ்ருதா புராணீ ॥

| | |
|---|---|
| இஹ | இந்தசமுசாரத்திலிருக்கிற ஜனங்களினலே |
| அஸ்ய | இந்த சமுசாரவிருக்ஷத்தினுடைய |
| ததா | மேல்சொன்ன விதமாயுள்ள |
| ரூபம் | சுவரூபமும் |
| ந உபலப்⁴யதே | அறியப்படுகிறதில்லை |
| ஆதி³: ந | ஆதியும் (உற்பத்தியும்) அறியப்படுகிற தில்லை |
| அந்த: ந | முடிவும் (நாசமும்) அறியப்படுகிற தில்லை |
| ஸம்ப்ரதிஷ்டா² ந | இருப்பும் (ஸ்திதி) அறியப்படுகிற தில்லை |
| ஸுவிரூட⁴மூலம்* | கெட்டியான வேர்களையுடைய |
| ஏநம் அஶ்வத்த²ம் | இந்த அசுவத்த விருக்ஷத்தை |

* (ஸ்ரீ,வி) விஷ்ணுமுதலியவர்களை மூலமாயுடைய.

| | |
|---|---|
| 𑌦𑍃𑌢𑍇𑌨* | திருடமான (பலமான) |
| 𑌅𑌸𑌙𑍍𑌗𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑍇𑌣 † | வைராக்கியமாகிற ஆயுதத்தினுல் |
| 𑌛𑌿𑌤𑍍𑌤𑍍𑌵𑌾 ‡ | வெட்டி |
| 𑌤𑌤𑌃 | பிறகு |
| 𑌯𑌤𑌃 | எந்தப்புருஷனிடத்திலிருந்து |
| 𑌪𑍁𑌰𑌾𑌣𑍀 | வெகுகாலமாய்த் தொடர்ந்துவந்திருக்கிற |
| 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃 | சமுசாரபிரவிருத்தியானது |
| 𑌪𑍍𑌰𑌸𑍃𑌤𑌾 | பரவியிருக்கிறதோ |
| 𑌤𑌮𑍇𑌵 𑌆𑌦𑍍𑌯𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 | அந்த ஆதிபுருஷனையே |
| 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑍇 (𑌇𑌤𑌿) | சரணுகதி யடைகிறேனென்று (ஏகாந்த பக்தியினுல்) |
| 𑌯𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 | எந்தஸ்தானத்தில் (ஸ்தானத்தை) |
| 𑌗𑌤𑌾𑌃 | அடைந்தவர்கள் |
| 𑌭𑍂𑌯𑌃 | மறுபடியும் |
| 𑌨𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑌿 | திரும்பி (சமுசாரத்திற்கு) வருகிறதில்லையோ |
| 𑌤𑌤𑍍 𑌪𑌦𑌂§ | அந்த ஸ்தானமானது |
| 𑌪𑌰𑌿𑌮𑌾𑌰𑍍𑌗𑌿𑌤𑌵𑍍𑌯𑌂. | தேடத்தக்கது. |

சமுசாரத்திலிருக்கிற ஜனங்களினுல் இந்த சமுசார விருக்ஷத்தினுடைய மேல்சொன்ன விதமாயுள்ள சுவரூபமானது, அறியப்படுகிறதுமில்லை. (அதினுடைய) ஆதி மத்தி அந்தம் அறியப்படுகிறதுமில்லை. கெட்டியான வேர்களையுடைய இந்த அசுவத்த விருக்ஷத்தைத் திருடமான வைராக்கியமாகிற ஆயுதத்தினுல் வெட்டி அதன்

* (ஶா) பரமாத்மாவையே நிச்சயமாய் நம்பி அந்த உறுதியோடு விவேகாப்பியாசமாகிற சாணையில் தீட்டப்பட்டிருக்கிற.

† (ஶா) புத்திரமித்திர திரவியாதிவஸ்துக்களிலுள்ள அபிமானத்தை விடுவது வைராக்கியம். இந்த வைராக்கியமென்கிற ஆயுதத்தினுலே. (ஶ்ரீ) மமகார அகங்காரங்களை விடுதலென்கிற ஆயுதத்தினுலே. (ஆ) ஸங்கத்தை விட்டுவிடுவதுடன் கூடிய ஞானமாகிற ஆயுதத்தினுலே.

‡ (ஶா) சமுசார விருக்ஷத்தை விதையுடனழித்து. (ஆ) சமுசாரத்தை நசிப்பித்து.

§ (ஆ) (ஶ்ரீ,வீ) 𑌤𑌤𑌃𑌪𑌰𑌂-என்று பாடம், பராபரதத்துவவிஷய விசாரணைக்குப்பிறகு என்று அர்த்தம்.

பிறகு எந்தப் புருஷனிடத்தினின்று வெகுகாலமாய்த் தொடர்ந்துவந் திருக்கிற சமுசாரப் பிரவிருத்தியானது பரவியிருக்கிறதோ, அந்தப் புருஷனையே சரணமடைகிறேன் என்று ஏகாந்த பத்தியுடன் எந்த ஸ்தானத்தை யடைந்தவர்கள் மறுபடியும் சமுசாரத்திற்கு வருகிறதில் லையோ, அந்த ஸ்தானத்தைத் தேடவேண்டியது.

(ஙா) சதுர்முக பிரம்மாவை ஆதியாக வுடையதாகையால் அவ ரை மேல்வேராகவும் சதுர்முக பிரம்மாவினுடைய புத்திரபௌத்திர பரம்பரையையுடைய மனுஷியாதிகளைக் கீழான கிளைகளாகவும் மனு ஷியஜன்மத்தில்செய்த கருமங்களாகிற மூலங்களா லுண்டான தேவ பசுவாதி தேகங்களைக் கீழும்மேலும் பரவின கிளைகளாகவு முடைத் தானதாயிருக்கிற இவ்வித சமுசார விருக்ஷத்தினுடைய சுவரூபமா னது மேலாக எவ்விதமாகச் சொல்லப்பட்டதோ, அவ்விதமாய் இந்த பூலோகத்திலிருக்கிற சமுசாரிகளால் அறியப்படுகிறதில்லை. என்றால், நான் அவனுக்குப் பிள்ளை, இவனுக்கு அவன் தகப்பன், இது என்னு டையது, அது அவனுடையது, என்று மட்டும் (சமுசாரிகள்) அறிகி றார்களேயன்றி, சமுசார விருக்ஷத்தினுடைய சுவரூபத்தைத் தெரி ந்துகொள்ளுகிறதில்லை என்பது தாத்பரியம். அந்த சமுசாரவிருக்ஷத் தின் முடிவையு மறிகிறதில்லை. என்றால், திரிகுணாத்மகமான விஷய போகங்களில் பற்றுதலை விடுவதினாலே முடிவை அறியலாமென்பதை யும் தெரியவில்லை. சமுசாரவிருக்ஷத்திற்கு ஆதியானது குணசம்பந் தத்தினால்தான் என்பதையும் அறிகிறதில்லை. அப்படியே, அதினு டைய இருப்பானது தேகமே ஆத்மாவென்கிற அக்ஞானத்தினாலென் பதையும் அறிகிறதில்லை. இவ்வித வேரூன்றியிருக்கிற அசுவத்த விருக்ஷமாகிற சமுசாரத்தை விவேக விக்ஞானத்தின லுண்டானவும் திருடமானவுமான விஷயாபிமான மற்றிருக்கிறதாகிய ஆயுதத்தினால் வெட்டி விஷயாசக்தியை விட்டபிறகு, எந்தஸ்தானத்தை யடைந்த வர்கள் திரும்பி வருகிறதில்லையோ, அந்தஸ்தானத்தைத் தேடவேண் டியது.

அநாதியாய்த் தொடர்ந்துவந்த முக்குணமயங்களான வஸ்துக்க ளில் போகாசக்தியும் அதினாலுண்டான விபரீதஞானமும் எப்படி நிவிருத்தியாகலா மென்பது (சு-வது சுலோகத்தின் பிந்திய பாகத்தில்) சொல்லப்பட்டிருக்கிறது.

புராணீ=ஜீவனை வெகுகாலமாய்த் துடர்ந்துவந்த, ப்ரவ்ருத்தி:= குணமயமான போகப் பிரவிருத்தியானது, யத: = எவனிடத்திலிரு ந்து, ப்ரஸ்ருதா = உண்டாயிருக்கிறதோ, தமேவசாத்யம்புருஷம்= அந்த ஆதிபரமபுருஷனையே அக்ஞான நிவிருத்தியின் பொருட்டு, ப்ரபத்யே=சரணாகதியடையவேண்டியது. "ப்ரபத்யேயத:" என்

று சிலபாடமுண்டு. அதன் அர்த்தமாவது-ஆத்யம் — ஆதியான, தம் புருஷம் ஏவ — அந்தப்புருஷனையே, ப்ரபத்யே — சரணமடைந்து, யத꞉ — அக்ஞான நிவிருத்திமுதலிய யாவத்திற்கும் (காரணமான) புராணீ ப்ரவ்ருத்தி꞉ — முன்னேர்களுடைய சாதனனுஷ்டானமானது, ப்ரஸ்ருதா — பிரவிருத்தித்திருக்கிறது.

(3) (ஸ்ரீ;வி) அஸ்ய — இந்த சமுசார விருக்ஷத்திற்கு, ஆதி꞉ — எவன் உற்பத்திகாரணனே, ஸம்ப்ரதிஷ்டா — எவன் ஸ்திதிகாரணனே, அந்த꞉ — எவன் நாசகாரணனே, சமுசாரவிருக்ஷத்தில் அனுப்பிரவேசித்திருக்கிற அந்த விஷ்ணுவினுடைய, ரூபம் — சுவரூபமானது, நோபலப்யதே — அறியப்படுகிறதில்லை. (௩-௪)

---

௫. நிர்மாநமோஹா ஜிதஸங்கதோஷா அத்யாத்மநித்யா விநிவ்ருத்தகாமா꞉ । த்வந்த்வைர்விமுக்தா꞉ ஸுகது꞉கஸம்ஜ்ஞைர் கச்சந்த்யமூடா꞉ பதமவ்யயம் தத் ॥

| | |
|---|---|
| நிர்மாநமோஹா꞉ | அகங்காரம் துரபிமான மிவைகளற்றவும் |
| ஜிதஸங்கதோஷா꞉ | புத்திரமித்திராதி அபிமானமாகிற தோஷமற்றவும் |
| அத்யாத்மநித்யா꞉ | பிரம்மஞானநிஷ்டையுள்ளவும் |
| விநிவ்ருத்தகாமா꞉ | ஆசையிலிருந்துநிவிருத்தியடைந்தவும் |
| ஸுகது꞉கஸம்ஜ்ஞை꞉ | சுகதுக்கமென்கிறபெயரையுடைய |
| த்வந்த்வை꞉ | இருமைகளால் |
| விமுக்தா꞉ | விடுபட்டவும் |
| அமூடா꞉ | அவித்தையை நிவர்த்தித்துக் கொண்டவுமானவர்கள் |
| தத் | முன்சொன்ன |
| அவ்யயம் | நாசமற்ற |
| பதம் | ஸ்தானத்தை |
| கச்சந்தி | அடைகிருர்கள். |

அகங்காரம் துரபிமான மிவைகளற்றவும் புத்திர மித்திராபிமான தோஷமற்றவும் பிரம்மஞான நிஷ்டையுள்ளவும் ஆசையிலிருந்து நிவிருத்தி யடைந்தவும் சுகதுக்கங்களென்ற பெயரையுடைய இருமைகளிலிருந்து விடுபட்டவும் அவித்தையை நிவர்த்தித்துக் கொண்டவுமானவர்கள், முன்சொன்ன நாசமற்ற ஸ்தானத்தை யடைகிருர்கள்.

(ரா) இவ்விதமாய் என்னை சரணகதியடைந்து, அநாத்மாவான தேகாதிகளில் ஆத்மாபிமான மாகிய மோகத்தை விட்டவர்களாயும் குணமயங்களாகிய வஸ்துக்களில் போகாசக்தி என்கிற தோஷத்தை ஜயித்தவர்களாயும் ஆத்மஞான பராளாயும் ஆத்மாவைத்தவிர இதர வஸ்துக்களிலுள்ள ஆசையை விட்டவர்களாயும் ஆத்மாநாத்ம விவேக சுவரூபஞானத்தை உடைத்தானவர்களாயு மிருக்கிறவர்கள் பூர்ணமான ஞானகாரமா யிருக்கிற சுவரூபத்தை யடைகிறார்கள். (ரு)

---

சு. 𑌨 𑌤𑌦𑍍𑌭𑌾𑌸𑌯𑌤𑍇 𑌸𑍂𑌰𑍍𑌯𑍋 𑌨 𑌶𑌶𑌾𑌙𑍍𑌕𑍋 𑌨 𑌪𑌾𑌵𑌕𑌃।
𑌯𑌦𑍍𑌗𑌤𑍍𑌵𑌾 𑌨 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 𑌤𑌦𑍍𑌧𑌾𑌮 𑌪𑌰𑌮𑌂 𑌮𑌮॥

| | |
|---|---|
| 𑌯𑌤𑍍 | எந்தஸ்தானத்தை |
| 𑌗𑌤𑍍𑌵𑌾 | அடைந்து |
| 𑌨 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 | மறுபடி திரும்புகிறதில்லையோ |
| 𑌤𑌤𑍍 | அந்தஸ்தானத்தை |
| 𑌸𑍂𑌰𑍍𑌯𑌃 | சூரியன் |
| 𑌨 𑌭𑌾𑌸𑌯𑌤𑍇 | பிரகாசிப்பிக்கிறதில்லை |
| 𑌶𑌶𑌾𑌙𑍍𑌕𑌃 | சந்திரன் |
| 𑌨 | பிரகாசிப்பிக்கிறதில்லை |
| 𑌪𑌾𑌵𑌕𑌃 | அக்கினி |
| 𑌨 | பிரகாசிப்பிக்கிறதில்லை |
| 𑌤𑌤𑍍* | அந்தஸ்தானமானது |
| 𑌮𑌮† | என்னுடைய |
| 𑌪𑌰𑌮𑌂‡ | உத்தமமான |
| 𑌧𑌾𑌮§ | சுவரூபம். |

எந்தஸ்தானத்தை அடைந்து மறுபடி திரும்புகிற தில்லையோ, அந்த ஸ்தானத்தை சூரியன் சந்திரன் அக்கினி இவர்கள் பிரகாசிப்பிக் கிறதில்லை. அந்த ஸ்தானமானது என்னுடைய உத்தமமான சுவ ரூபம்.

(ஸா) இந்தச் சுலோகத்திற் கொத்ததா யிருக்கிற 𑌕𑌠𑍋𑌪𑌨𑌿𑌷𑌤𑍍 - இரண்டாவது அத்தியாயம், ரு - வது வல்லி, கரு - வதும் - 𑌮𑍁𑌣𑍍𑌡𑌕𑍋𑌪𑌨𑌿𑌷𑌤𑍍, இரண்டாவது அத்தியாயம்; இரண்டாவது கண்

---

*-†-‡-§ (𑌸𑌂) தேஜோரூபமானதும் உத்தமமானதுமான விஷ்ணுவாகிய என்னுடைய ஸ்தானம். (ஸா) இதின் அத் - அ, சு. உக, பார்க்க.

டம், பதினேராவதுமான வாக்கியமானது அடியில் குறிக்கப்படுகிறது "ந தத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ரதாரகம் நேமா வித்யுதோ பாந்தி குதோऽயமக்நி:; தமேவ பாந்தமநுபாதி ஸர்வம் தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி." (பிரம்மத்தை) சூரியன் பிரகாசிப்பிக்க மாட்டான். சந்திர நட்சத்திரங்கள் பிரகாசிப்பிக்கமாட்டா. மின்னல்களும் பிரகாசிப்பிக்க மாட்டா. இந்த அக்கினி எப்படிப் பிரகாசிப்பிக்கும்? தானுகப் பிரகாசித்துக்கொண் டிருக்கிற (பிரம்மத்தை) அவரைப்பற்றி சகலமும் விளங்கிக்கொண்டிருக்கின்றன. இவையாவும்அவருடைய காந்தியினுல் விளங்குகின்றன. (௬)

---

எ. மமைவாம்சோ ஜீவலோகே ஜீவபூத: ஸநாதந:।
மந:ஷஷ்டா நீந்த்ரியாணி ப்ரக்ருதிஸ்தாநி கர்ஷதி॥

| | |
|---|---|
| மமைவ அம்ச: | என்னுடைய அம்சமாகவும் |
| ஸநாதந: | அநாதியாகவும் (இருக்கிற) |
| ஜீவபூத: | ஜீவனுனவன் |
| ப்ரக்ருதிஸ்தாநி | மாயையிலடங்கியிருக்கிற |
| மந:ஷஷ்டாநி | மனதை ஆருவதாகவுடைய |
| இந்த்ரியாணி | இந்திரியங்களை |
| ஜீவலோகே கர்ஷதி | சமுசாரத்திலே போகார்த்தமாக இழுக்கிருன். |

என்னுடைய அம்சமாகவும் அநாதியாகவும் இருக்கிற ஜீவனுனவன், மாயையிலடங்கியிருக்கிறவும்மனதை யாருவதாக வுடையனவுமான இந்திரியங்களை சமுசாரத்திலே போகார்த்தமா யிழுக்கிருன்.

(ஸ்ரீ) பிரகிருதி பெந்தத்தை நிவர்த்தித்துக் கொள்ளாதவர்கள், கருமசேஷங்களுடன் பிரளயகாலத்திலும் (சுஷுப்தி) நித்திரைகாலத்திலும் பிரகிருதியோடு கூடிய ஈசுவரனிடத்தில் (சகுணபிரம்மத்தினிடத்தில்) அடங்கியிருந்து, பிறகு சிருஷ்டிகாலத்தில் திரும்பிவிடுகிருர்களே யன்றி, கருமபெந்தத்தை நசிக்கச்செய்துகொண்டு சுத்த பிரம்மத்தை யடைந்தவர்கள் மறுபடி ஜனனத்தை யடைகிறதில்லை.

(ஶம்) பரமாத்மாவாகிய என்னுடைய அம்சமான ஜீவன் என்னுடைய ஒருபாகமா யிருக்கிருன். என்னைவிட அவன் அந்நியநல்ல. ஆனுல், அவன் அவித்தை என்கிற உபாதியினுலே சமுசாரத்தில் தான் கருத்தா தான் போக்தாவென்று வெகுகாலமாய் பிரசித்தியடைந்திருக்கிருன். அந்த ஜீவன் அகண்டாகாரமாயும் ஒரே வஸ்து

வாயுமுள்ள என்னுடைய அம்சமாகவும் அந்நியனல்லாமலும் எப்படியிருக்கலாமென்றால், அதற்குக்காரணம்—ஒன்றுன—சூரியன் ஜலத்தில் காணப்படுகிறன், அப்படி ஜலத்தில் காணப்படும் சூரியன் ஆகாச மார்கத்தில் காணப்படுகிற சூரியனுடைய பிரதிபிம்பமே யல்லாது அந்நியமானதல்ல. ஆனால் ஜலமென்கிற உபாதியினல் வேறுபோல் காணப்படுகிறது. அந்த உபாதியான ஜலமில்லாவிட்டால் சூரியப் பிரதிபிம்பம் காணப்படுகிறதில்லை. எந்த ஜலத்தில் காணப்பட்டதோ அந்த ஜலத்தை நீக்கிப்பார்த்தால் ஒரே சூரியனேயன்றி ஆகாசத்திலொன்று ஜலத்திலொன்று என்று இரண்டல்ல. அப்படியே ஒரு பாத்திரத்திலுள்ள ஆகாசமும் சர்வ வியாபகமான மகாகாசமும் ஒன்றுனலும் பாத்திரமாகிய உபாதியினல் கடாகாசம் மகாகாசத்தைவிட வேறென்று தோற்றுகிறது. கடமுடைந்தால் மகாகாசத்தைவிட அந்நியமான கடாகாச மென்பதேயில்லை. இப்படிப்போல பிரம்மத்தினுடைய அம்சமானவும் பிரமத்தைவிட அந்நியமல்லாதவுமான ஜீவன் மாயா காரியமான அவித்தையாகிய உபாதியினல் தேகாதிகளில் வேறுகக் காணப்பட்டபோதிலும், உபாதி நிவிருத்தியால் அந்த ஜீவன் எதினுடைய அம்சமோ அந்த அம்சியான பிரம்மமே. அம்சம் அம்சியை அடைந்தால் திரும்பி வருகிறதென்பதில்லை. ஜீவன் ஈசுவரனைவிட அந்நியன் அவன் கருத்தா போக்தா ஜனனமரண மடைகிறவன் என்கிற இப்படிப்பட்ட தோற்றமெல்லாம் அவித்தியா சுவரூபமான அக்ஞானத்தினலுண்டாயினவே. அவித்தை நீங்கினல் நிலைத்திருப்பது பிரம்ம சுவரூப மொன்றே இரண்டாவதில்லை.

(ரா) அநாதியாயும் என்னுடைய அம்சமாயுமிருக்கிற வொரு ஜீவனனவன், அநாதி கருமரூபமான அவித்தையினல் சூழப்பட்டு ஞானைசுவரியங்கள் குறைந்து ஜீவனென்கிற நாமம் பெற்று ஜீவர்கள் வசிக்கும் உலகங்களி லிருந்துகொண்டு பூர்வ கருமானுசாரமாய் பிரகிருதியிலிருந் துண்டான தேவ மனுஷியாதி தேகங்களிலிருக்கிற மனமுள்பட ஆறு இந்திரியங்களை விஷயங்களை அனுபவிக்கும் பொருட்டு இழுத்துக்கொள்ளுகிறன். மற்றொரு ஜீவன் மேலாகச்சொன்ன அவித்தையை நிவர்த்தித்துக்கொண்டு சுவசுவரூபத்தோடிருக்கிறன் (என்றால், பிரகிருதி விமுக்தாத்ம சுவரூபத்தை யடைகிறன்.)

(ஸ்ரீ,வி) ஜகத்விருக்ஷச் சேதம்செயும் விஷயத்திற்கு பிரம்மா முதலியவர்களை ஆசிரயிக்கலாமே என்றால், அவர்களை ஆசிரயிப்பதினல் சாத்தியமாக மாட்டாதென்பதும் பகவானையே ஆசிரயிக்கவேண்டு மென்பதும் சொல்லப்படுகிறது. பிரம்மாதி தேகங்களிலிருக்கிற ஜீவர்கள் என்னுடைய அம்சமே. அவர்கள் எனக்கு அன்னியராயிருந்தாலும் சூரியனுக்கு மின்மினிப் பூச்சிப்போல் (சூரியனை எனக்கு ஜீவர்களான

ஆபாசாம்சர்கள் மின்மினிப் பூச்சிக்கு சமானமானவர்கள்) என்னுடைய அம்சாபாசர்கள். ஆபாசாம்சர்களாகையால் அவர்களுக்குக் கருத்திருத்துவ மில்லையோவென்றால், மனதுள்பட இந்திரியங்களை விஷயங்களி லிழுத்துக்கொள்ளுகிற விஷயத்தில் மட்டும் கருத்திருத்துவ முண்டு. இழுத்துக்கொள்ளுகிற தென்றால்; விஷயங்களில் பிரவிருத்திக்கச்செய் கிறதென்பது தாத்பரியம். (௭)

---

௮. 𑌶𑌰𑍀𑌰𑌂 𑌯𑌦𑌵𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌯𑌚𑍍𑌚𑌾𑌪𑍍𑌯𑍁𑌤𑍍𑌕𑍍𑌰𑌾𑌮𑌤𑍀𑌶𑍍𑌵𑌰𑌃।
𑌗𑍃𑌹𑍀𑌤𑍍𑌵𑍈𑌤𑌾𑌨𑌿 𑌸𑌂𑌯𑌾𑌤𑌿 𑌵𑌾𑌯𑍁𑌰𑍍𑌗𑌨𑍍𑌧𑌾𑌨𑌿𑌵𑌾𑌶𑌯𑌾𑌤𑍍॥

| | |
|---|---|
| 𑌈𑌶𑍍𑌵𑌰𑌃 | தேகேந்திரியங்களுக்கெஜமானனுனஜீவன் |
| 𑌯𑌤𑍍* 𑌶𑌰𑍀𑌰𑌂 | எந்த சரீரத்தை |
| 𑌅𑌵𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 | அடைகிறானோ |
| 𑌯𑌚𑍍𑌚𑌾𑌪𑌿 𑌉𑌤𑍍𑌕𑍍𑌰𑌾𑌮𑌤𑌿 | எந்த சரீரத்திலிருந்து வெளிப்படுகிறானோ (அந்தசரீரத்திலிருந்து) |
| 𑌆𑌶𑌯𑌾𑌤𑍍 | வாசனைக்கிருப்பிடமான புஷ்பத்திலிருந்து |
| 𑌵𑌾𑌯𑍁𑌃 | காற்றானது |
| 𑌗𑌨𑍍𑌧𑌾𑌨𑌿𑌵 | வாசனைகளைப்போல |
| 𑌏𑌤𑌾𑌨𑌿 | மேற்சொன்ன இந்திரியங்களை |
| 𑌗𑍃𑌹𑍀𑌤𑍍𑌵𑌾 | கிரகித்து (இழுத்து) க்கொண்டு |
| 𑌸𑌂𑌯𑌾𑌤𑌿 | போகிறான். |

இந்திரியங்களுக் கெஜமானனுன ஜீவனுனவன், எந்தசரீரத்தை யடைந்தாலும் எந்த சரீரத்திலிருந்து வெளிப்பட்டாலும் வாசனைக் கிருப்பிடமான புஷ்பத்திலிருந்து காற்றானது வாசனையை (கிரகித்துக் கொண்டுபோவது)ப் போல, மேற்சொன்ன இந்திரியங்களைக் கிரகித் துக்கொண்டுபோகிறான்.

(௧௦) ஜீவன் இந்திரியங்களைக் கிரகித்துக்கொண்டு போகிறதாக முந்திச்சொல்லப்பட்டது. இந்த சுலோகத்தில், அப்படி கிரகித்துக் கொண்டுபோகிற கால மின்னதென்று சொல்லப்படுகிறது.

(௧௧) இந்திரியங்களைக் கிரகித்துக்கொண்டு போகிறு னென்ப தற்கு இந்திரியங்களை பூதசூக்ஷ்மங்களோடு கிரகித்துக்கொண்டுபோ கிறுனென்பது தாத்பரியம்.

---

* (ஸ்ரீ) 𑌯𑌤𑍍 = 𑌯𑌦𑌾 = எப்போது.

(௨) ஜீவன் எப்போது ஒரு சரீரத்தைவிட்டு வேறொரு சரீரத்தையடைகிறானோ அப்போது, 𑌈𑌶𑍍𑌵𑌰𑌃 = ஈசுவரனானவர் அவனுடன் கூடவே இந்திரியங்களை இழுத்துக்கொண்டு போகிறார். ஏனென்றால், கருமங்களுக்குப் பலன் கொடுப்பவர் ஈசுவரனாகையால் கருமபலனை யனுபவிக்கிறதற்காக அந்த ஜீவனுக்குக்கொடுத்த புதிய தேகத்தின் மூலமாய் அனுபவிக்கவேண்டிய கருமபலனை அனுபவிக்க அனுகூலமாயிருக்கும்படியாய் இந்திரியங்களையும் ஈசுவரன் கிரகித்துக்கொண்டு போகிறார். ஜீவனுக்கு கிரகித்துக்கொண்டுபோக சுவதந்திரமில்லை. சர்வசுவதந்திரன் ஈசுவரன்.

(ஸ்ரீ,வி) (மேல்கண்ட அர்த்தமுமல்லாமல்) ஈசுவரன் ஒருதேகத்தில் பிரவேசிக்கும்போதும் ஒருதேகத்தை விடும்போதும் ஜீவனையும் அவனைச்சேர்ந்த இந்திரியாதி சூக்ஷ்மங்களையும் கிரகித்துக்கொண்டு போகிறார். (௮)

---

௯. 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌂 𑌚𑌕𑍍𑌷𑍁𑌃 𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌨𑌂 𑌚 𑌰𑌸𑌨𑌂 𑌘𑍍𑌰𑌾𑌣𑌮𑍇𑌵 𑌚 ।
𑌅𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌯 𑌮𑌨𑌶𑍍𑌚𑌾𑌯𑌂 𑌵𑌿𑌷𑌯𑌾𑌨𑍁𑌪𑌸𑍇𑌵𑌤𑍇 ॥

| | |
|---|---|
| 𑌅𑌯𑌂 | இந்தஜீவனானவன் |
| 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌂 | காதையும் |
| 𑌚𑌕𑍍𑌷𑍁𑌃 | கண்ணையும் |
| 𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌨𑌂 | துவக்கையும் |
| 𑌰𑌸𑌨𑌂 | நாக்கையும் |
| 𑌘𑍍𑌰𑌾𑌣𑌮𑍇𑌵 | மூக்கையும் |
| 𑌮𑌨𑌃 | மனசையும் |
| 𑌅𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌯 | ஆசிரயித்து |
| 𑌵𑌿𑌷𑌯𑌾𑌨𑍍 | விஷயங்களை |
| 𑌉𑌪𑌸𑍇𑌵𑌤𑍇 | அநுபவிக்கிறான். |

இந்த ஜீவனானவன் காது கண் துவக்கு நாக்கு மூக்கு மனசு இவைகளை ஆசிரயித்து விஷயங்களை யனுபவிக்கிறான். என்றால், இந்திரியங்களன்றி விஷயங்களை ஜீவன் அனுபவிக்க ஹேதுவில்லை. கருமானுகுணமாய் விஷயானுபவத்திற்காகவே தேகம் வந்திருக்கிறது. அந்த விஷயபோகார்த்தமாகவே இந்திரியங்களைக் கிரகித்துக்கொண்டு போகிறதாக முன் சொல்லப்பட்டது.

(ஸ்ரீ,வி) இந்திரியங்களை விஷயங்களில் பிரவிருத்திக்கும்படி செய்து அதினாலுண்டாகும் பலனை ஈசுவரன் அனுபவிக்கிறார். (௯)

---

௧௦. உத்க்ராமந்தம் ஸ்திதம் வாபி புஞ்ஜாநம் வா குணாந்விதம்।
விமூடா நாநுபஶ்யந்தி பஶ்யந்தி ஜ்ஞாநசக்ஷுஷ:॥

| | |
|---|---|
| ஸ்திதம் | தேகத்திலேயே யிருக்கிறவும் |
| உத்க்ராமந்தம் | ஒருதேகத்தைவிட்டு மற்றொரு தேகத்தை யடைகிறவும் |
| புஞ்ஜாநம் வா | விஷயங்களை யனுபவிக்கிறவும் |
| குணாந்விதம் வாபி | இந்திரியங்களுடன் சேர்ந்திருக்கிறவுமான ஜீவனை |
| விமூடா: | அக்ஞானிகள் |
| நாநுபஶ்யந்தி | பார்க்கிறதில்லை |
| ஜ்ஞாநசக்ஷுஷ: | ஞானக்கண்ணுள்ளவர்கள் |
| பஶ்யந்தி | பார்க்கிறார்கள். |

(ஜீவனை) தேகத்திலே யிருக்கையிலும் வேறொரு தேகத்தை யடைகையிலும் விஷயங்களை யனுபவிக்கையிலும் இந்திரியங்களுடன் சேர்ந்திருக்கையிலும் அக்ஞானிகள் காண்கிறதில்லை. ஞானக் கண்ணுள்ளவர்கள் காண்கிறார்கள். (ஞானிகள்தவிர மற்றவர்களுக்கு ஜீவன் எந்த தெசையிலும் காணப்படுகிறதில்லை.)

(ஸ) குணாந்விதம்=சுகதுக்க மோகாதிகளுடன் கூடின. இதில் சொல்லப்பட்ட தெசைகளி லெல்லாம் பார்க்கக் கூடியவனாக விருக்கிற ஜீவனை, விமூடா: = காணப்படுவது கேட்கப்படுவது முதலிய வஸ்துக்களில் மனதைப்பரவ விடுகிறவர்கள் அறிகிறதில்லை.

(ரா) குணங்களால் சூழப்பட்ட தேகத்தையுடைய ஜீவனையாவது அந்த தேகத்தை விட்டுப் பிரிகிறவனையாவது அந்த தேகத்திலிருப்பவனையாவது குணமயமான விஷயங்களையனுபவிப்பவனையாவது தேகமே ஆத்மாவென்கிற ஞானத்தையுடைய மூடர்கள், தேகத்தைவிட அந்நியனும் ஞானகாரனுமான ஜீவனை ஒருபோதும் காண்கிறதில்லை. தேகாத்ம விவேகஞானிகள் காணுகிறார்கள்.

(மீ,வி) தேகத்தைவிட்டுப் போகிறவனையும் தேகத்தி லிருப்பவனையும் சுபபலனை யனுபவிக்கிறவனையும் அநேக குணங்களுடன் கூடினவனையு மிருக்கிற ஈசுவரனை அக்ஞானிகள் காண்கிறதில்லை. ஞானிகள் காணுகிறார்கள். (௧௦)

கக. யதந்தோ யோகினச்சைநம் பச்யந்த்யாத்மந்யவஸ்திதம்।
யதந்தோऽப்யக்ருதாத்மாநோ நைநம் பச்யந்த்யசேதஸ:॥

| | |
|---|---|
| யதந்த: | (தியானாதிகளால்) முயற்சிசெய்கிற |
| யோகிந: | ஞானிகள் |
| ஆத்மநி | தேகத்தில் |
| அவஸ்திதம் | இருக்கிற |
| ஏநம் | இந்தஜீவாத்மாவை |
| பச்யந்தி | பார்க்கிறார்கள் |
| யதந்தோऽபி | (சாஸ்திராப்பியாசாதிகளால்) முயற்சிசெய்துகொண்டிருந்தபோதிலும் |
| அக்ருதாத்மாந: | சித்தசுத்தியில்லாத |
| அசேதஸ: | அற்பஞானிகள் |
| ஏநம் | இந்தஜீவாத்மாவை |
| நபச்யந்தி | பார்க்கிறதில்லை. |

தியானாதிகளால் முயற்சிசெய்கிற ஞானிகள் தேகத்திலிருக்கிற ஜீவாத்மாவைப் பார்க்கிறார்கள். சாஸ்திராப்பியாசாதிகளால் முயற்சி செய்துகொண் டிருந்தபோதிலும். சித்தசுத்தியில்லாத அற்பஞானிகள் ஆத்மாவைப் பார்க்கிறதில்லை.

(ஶம்) முயற்சிசெய்கிற மன சமாதானமுடைய சிலர், புத்தியில் தோற்றுகிற ஆத்மாவை, இவன்தான் நானென்று அறிகிறார்கள். தபசு முதலியவை செய்துகொண்டிருந்தாலும், காமக்குரோதங்களை யடக்காமலும் நிஷித்த ஆசாரங்களை விடாமலு மிருக்கிற அசுத்த புத்தியுடன் கூடின அவிவேகிகள் ஆத்மாவைப் பார்க்கிறதில்லை.

(ரா) என்னுடைய சரணாகதி பூர்வமாகக் கருமயோகாதிகளில் பிரயத்தினம் செய்துகொண்டிருக்கிற சித்தசுத்தமுடைய யோகிகள், யோகமென்கிற கண்களினால், சரீரத்தைக்காட்டிலும் அந்நியனாகவும் சுவ சுவரூபத்தோடு கூடினவனாகவும் சரீரத்திலிருக்கிற ஜீவனைப் பார்க்கிறார்கள். என்னை சரணாகதி செய்யாமலும் அசுத்தமனதையுடையவும் ஆத்மாவைப்பார்க்க சக்தியுள்ள மனதில்லாமலு மிருக்கிற அவிவேகிகள் முயற்சிசெய்தாலும் பார்க்கிறதில்லை.

(ஸ்ரீ,வி) ஞானிகள் பரமாத்வைப் பார்க்கிறார்கள். அக்ஞானிகள் பரமாத்மாவைப் பார்க்கிறதில்லை. (கக)

௧௨. 𑌯𑌦𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌗𑌤𑌂 𑌤𑍇𑌜𑍋 𑌜𑌗𑌦𑍍𑌭𑌾𑌸𑌯𑌤𑍇𑌽𑌖𑌿𑌲𑌂।
𑌯𑌚𑍍𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌸𑌿 𑌯𑌚𑍍𑌚𑌾𑌗𑍍𑌨𑍌 𑌤𑌤𑍍𑌤𑍇𑌜𑍋 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌮𑌾𑌮𑌕𑌂॥

| | |
|---|---|
| 𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑌗𑌤𑌂 | சூரியனிடத்திலிருக்கிற |
| 𑌯𑌤𑍍 | எந்த |
| 𑌤𑍇𑌜𑌃 | தேஜஸ்ஸும் |
| 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌸𑌿 | சந்திரனிடத்திலிருக்கிற |
| 𑌯𑌤𑍍 | எந்தத்தேஜஸ்ஸும் |
| 𑌅𑌗𑍍𑌨𑍌 | அக்கினியினிடத்திலிருக்கிற |
| 𑌯𑌤𑍍 | எந்தத்தேஜஸ்ஸும் |
| 𑌅𑌖𑌿𑌲𑌂 | சகலமான |
| 𑌜𑌗𑌤𑍍 | ஜகத்தை |
| 𑌭𑌾𑌸𑌯𑌤𑍇 | பிரகாசிப்பிக்கிறதோ |
| 𑌤𑌤𑍍 | அந்த |
| 𑌤𑍇𑌜𑌃 | தேஜஸ்யாவற்றையும் |
| 𑌮𑌾𑌮𑌕𑌂 | என்னுடையதாக |
| 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 | அறி. |

எந்தெந்த தேஜஸ்ஸானது சகலலோகத்தையும் பிரகாசிப்பிக்கிறதோ, அந்த சூரியனிடத்தி லுள்ளவும் சந்திரனிடத்தி லுள்ளவும் அக்கினியினிடத்தி லுள்ளவுமான தேஜஸ்ஸை என்னுடையதென்று அறி.

(ஸ்ரீ) பரமாத்ம சுவரூபமானது விசித்திர சக்தியோடு கூடினதென்பது, இதுமுதல் நாலு சுலோகங்களினால் சொல்லப்படுகிறது.

(𑌭𑌾०) "𑌤𑌦𑍍𑌧𑌾𑌮 𑌪𑌰𑌮𑌂 𑌮𑌮" என்றதினால் எந்த பகவத் சுவரூபம் சொல்லப்பட்டதோ, அது சர்வாத் மகத்துவமும் சர்வவியாபகத்துவமு முடையதென்று இதுமுதல் நாலுசுலோகங்களினால் சொல்லப் படுகிறது.

சூரியன் சந்திரன் அக்கினி இவைகளிலுள்ளதும் உலகத்தைப் பிரகாசிப்பிக்கிறதுமான தேஜஸ் என்னுடையதென்று அறி. அல்லது சூரிய சந்திர அக்கினிகளிடத்திலுள்ள சைதன்னியம் (ஆத்மசுவரூபம்) எதுவோ, அதுதான் சகலலோகத்தையும் பிரகாசிப்பிக்கிறது; அந்த சைதன்னிய சுவரூபம் நானென்று அறி. சூரியன் சந்திரன் அக்கினி இவைகளில் தவிர மற்றவைகளில் சைதன்னிய சுவரூப மில்லையோ வென்றால், சகல வஸ்துக்களிலும் என்னுடைய சைதன்னிய பிரகாச

சுவரூப மிருந்தபோதிலும், சத்துவாம்சத்தை அதிகமாயுடைய சூரிய சந்திர அக்கினிகளில் என் சைதன்னியப்பிரகாச மதிகமென்று அறியத தக்கது. அதெப்படியென்றால், மரம் சுவர் முதலியவைகளில் முகம் தெரியாவிட்டாலும் கண்ணாடியி லதின் தாரதம்மியப்படிக்கு முகம் தெரிகிறதுபோல.

(ரா) இந்திரியங்கள் விஷயங்களில் பிரவிருத்திக்கிறதற்கு பாதகமாயிருக்கிற அந்தகாரத்தை (இருட்டை) ப்போக்கடித்து இந்திரியங்களை விஷயங்களில் பிரவிருத்திக்கும்படி செய்கிறவும் அகிசப்பிரகாசத்தோடு கூடியவுமாகிய சூரியன் சந்திரன் அக்கினி இவைகளைப் பிரகாசிப்பிக்கிற ஞானமாகிய ஜோதி சுவரூபனையும் பிரகிருதி விமுக்த (பிரகிருதியினின்று விடுபட்டவ) னையுமிருக்கிற ஆத்மாவும், பிரகிருதி சம்பந்தத்திலிருக்கிற ஆத்மாவும், பகவானுடைய விபூதிகள் என்கிறதாக "தஸீரவொரஉஜ" "உடுெவாஂஸஃ" முதலிய சுலோகங்களினால் சொல்லப்பட்டது. இப்போது பிரகிருதியினாலுண்டான பஞ்சமகாபூதங்களில்சேர்ந்த சூரியன் சந்திரன் அக்கினி முதலியவைகளிலுள்ள ஜோதிஸ்ஸும்கூடத் தன்னுடைய விபூதியென்பது சொல்லப்படுகிறது. சகல லோகத்தையும் பிரகாசிப்பிக்கிற சூரிய சந்திராதிகளிலுள்ள பிரகாசமானது அந்த சூரிய சந்திராதிகளால் நான் ஆராதிக்கப்பட்டு அவர்களுக்கு என்னால் கொடுக்கப்பட்டதென்றும் அந்தப் பிரகாசம் என்னுடைய விபூதியென்றும் அறி.

(ஸ்ரீ,வி) சூரியன் முதலியவைகளின் தேஜஸ்ஸானது என்னுடைய அதீன மென்றறி.

(ஸூ) இந்த சுலோகார்த்தத்தையே சொல்லுகிற கடவல்லி யுபநிஷத் - உ-ரு-கரு, வாக்கியம் வருமாறு.

நதத்ரஸூர்யொபாதிநசந்த்ரதாரகம் நேமாவித்யுதொபாந்தி குதொயமக்நிஃ। தமெவபாந்தமநுபாதி ஸர்வம் தஸ்யபாஸாஸர்வமிதம்விபாதி॥—சூரியனாவது சந்திரனாவது நக்ஷத்திரங்களாவது மின்னல்களாவது அந்த பரமாத்துமாவை பிரகாசிப்பிக்கமாட்டா. இந்த அக்கினி எங்கேபிரகாசிவிப்பான். அந்த பரமாத்துமாவினுடைய பிரகாசத்தை அநுசரித்து (பெற்று) சூரியன் முதலியவர்கள் பிரகாசிக்கிறார்கள். இந்தசகல ஜகத்தும் பரமாத்துமாவினுடைய பிரகாசத்தினால் விளங்குகிறது. (கஉ)

---

கங. காமாவிஶ்யசபூதாநி தாரயாம்யஹமொஜஸா।
புஷ்ணாமிசௌஷதீஸ்ஸர்வாஸ்ஸொமொபூத்வாரஸாத்மகஃ॥

| | |
|---|---|
| 𑌅𑌹𑌮𑍍 | நான் |
| 𑌓𑌜𑌸𑌾 | பலத்தினல் |
| 𑌗𑌾𑌮𑍍 | பூமியை |
| 𑌆𑌵𑌿𑌶𑍍𑌯 | பிரவேசித்து |
| 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 | பிராணிகளை |
| 𑌧𑌾𑌰𑌯𑌾𑌮𑌿 | தரித்துக்கொண்டுமிருக்கிறேன் |
| 𑌰𑌸𑌾𑌤𑍍𑌮𑌕𑌃* | இரஸஸ்வரூபமான |
| 𑌸𑍋𑌮𑌃 | சந்திரனுக |
| 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 | இருந்துகொண்டு |
| 𑌸𑌰𑍍𑌵𑌾𑌃 | சகலமான |
| 𑌓𑌷𑌧𑍀𑌃 | பயிர்களை |
| 𑌪𑍁𑌷𑍍𑌣𑌾𑌮𑌿 | போஷித்துக்கொண்டுமிருக்கிறேன். |

நான் பலத்தினல் பூமியைப் (பூமியில்) பிரவேசித்து, பிராணிகளை தரித்து (சுமந்து அல்லது தாங்கி) க்கொண்டிருக்கிறேன். இரஸ சுவரூபமான சந்திரனுக விருந்துகொண்டு சகலமான பயிர்களைப் போஷித்துக்கொண்டு மிருக்கிறேன்.

(ஸம்) பிராணிகளை தரிக்கிறே னென்றதினல் பிராணிகள் வசிக்கிற பூமியை சமுத்திரத்தில் அழுந்திப் போகாமலும் பிளந்துபோகாமலும் தரிக்கிறேன் என்றும், சந்திரகிரணங்களால் பயிர்கள் விருத்தியாகிறபடியால், சந்திர சுவரூபமாயிருந்து நான் விருத்தி செய்கிறேன் என்றும் கொள்ளவேண்டியது. (கங)

---

கச. 𑌅𑌹𑌂𑌵𑍈𑌶𑍍𑌵𑌾𑌨𑌰𑍋𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌨𑌾𑌂𑌦𑍇𑌹𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌃।
𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌪𑌾𑌨𑌸𑌮𑌾𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌪𑌚𑌾𑌮𑍍𑌯𑌨𑍍𑌨𑌂𑌚𑌤𑍁𑌰𑍍𑌵𑌿𑌧𑌮𑍍॥

| | |
|---|---|
| 𑌅𑌹𑌮𑍍 | நான் |
| 𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌨𑌾𑌮𑍍 | பிராணிகளுடைய |
| 𑌦𑍇𑌹𑌮𑍍 | தேகத்தை |
| 𑌆𑌶𑍍𑌰𑌿𑌤𑌃 | ஆசிரயித்தவனுய் |
| 𑌵𑍈𑌶𑍍𑌵𑌾𑌨𑌰𑌃 | அக்கினியாக |
| 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 | இருந்துகொண்டு |
| 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌪𑌾𑌨𑌸𑌮𑌾𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 | (அக்கினியை ஜ்வலிக்கச்செய்கிற) பிராணுபான வாயுக்களுடன் கூடியவனுய் |

* (பா) அமிர்த ரஸ சுவரூபியான.

| | |
|---|---|
| சதுர்விதம்* | நான்குவிதமான |
| அந்நம்† | அன்னத்தை |
| பசாமி | பக்குவம்செய்கிறேன். |

நான் பிராணிகளுடைய தேகத்தை ஆசிரயித்து, அக்கினியாக விருந்துகொண்டு அக்கினியை ஜ்வலிக்கச்செய்கிற பிராணுபானவாயுக்களுடன் கூடியவனுய் நான்குவிதமான அன்னத்தைப் பக்குவம் செய்கிறேன். (ஜீர்ணம் செய்விக்கிறேன்.) ‡ (கச)

---

கரு. ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸந்நிவிஷ்டோ மத்த ஸ்ம்ருதிர் ஜ்ஞாநமபோஹநஞ்ச । வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்யோ வேதாந்தக்ருத் வேதவிதேவ சாஹம் ॥

| | |
|---|---|
| ஸர்வஸ்ய | சகலப்பிராணிகளுடையவும் |
| ஹ்ருதி | இருதயத்தில் |
| அஹம் | நான் |
| ஸந்நிவிஷ்டஃ | அந்தரியாமிரூபமாயிருக்கிறேன் |
| மத்தஃ | என்னுலேயே |
| ஸ்ம்ருதிஃ | நினைவும் |
| ஜ்ஞாநம் | அறிவும் |

---

*-† (ஶம்)(ஶ்ரீ)(மீ,வி) க. பக்ஷ்யம் (ரா) ... ... பாக்ஷ்யம் } பற்களினுல் கடித்துச்சாப்பிடுகிற வஸ்துக்கள். (காய்கிழங்குமுதலியன.)

(ஶம்)(ஶ்ரீ)(மீ,வி) உ. போஜ்யம் (ரா) ... போஷ்யம் } பற்களினுல் கடிக்கவேண்டியதல்லாத நாக்கினுல் மெனறு விழுங்கும் வஸ்துக்கள், (அனனம் முதலியன.)

(ஶம்)(ஶ்ரீ)(ரா) (மீ,வி) } ந. லேஹ்யம் { நாக்கினுல் தடவி அல்லது நக்கி விழுங்கத்தக்க வஸ்துககள். (துவையல் முதலியன.)

(ஶம்)(ஶ்ரீ) ... ச. சோஷ்யம் (ரா) (மீ,வி) ... பேயம் } வாயினு லுறிஞ்சி சாப்பிடத்தக்க வஸ்துக்கள்; (பழ இரஸம் முதலியன.)

‡ (ஶா) அயமக்நிர்வைஶ்வாநரோயோயமந்த: புருஷே யேநேதமந்நம் பச்யதே யதிதமத்யதே । தஸ்யைஷ கோஷோ பவதியமேதத் கர்ணாவபிதாய ஶ்ருணோதி । ஸ யதோத்க்ரமிஷ்யந் பவதி நைநம் கோஷம் ஶ்ருணோதி" புருஷனுடைய தேகத்திற்குள்ளிருந்துகொண்டு புஜிக்கிற வஸ்துக்களாகிற அந்நத்தைப்பக்குவம் செய்கிறவனெவனே அவன்தான் பரமாத்மாவாகிற இந்த வைசுவாநராக்கினி, காதுகளில் கையை வைத்து மூடிக்கொண்டா லுண்டாகிற சப்தமானது அவனுடையதுதான் அந்தப் பரமாத்மாதேகத்திலிருந்து வெளிப்படுகையில் இந்த சப்தமுண்டாகிறதில்லை. பிரகதாரண்ணியகோபநிஷத் ஏ-கூ.

| | |
|---|---|
| அபோஹநஞ்ச | மறதியும் |
| (ஸம்பவதி) | உண்டாகின்றன |
| ஸர்வை: | சகலமான |
| வேதைஶ்ச | வேதங்களினுலேயும் |
| வேத்ய: | அறியத்தகுந்தவன் |
| அஹமேவ | நானே |
| வேதவித் | வேதார்த்தங்களையறிந்தவனும் |
| வேதாந்தக்ருத்* | வேதாந்தசம்பிரதாயத்தைச்செய்தகுருவும் |
| அஹமேவ | நானே. |

சகலப் பிராணிகளுடையவும் ஹிருதயத்தில் நான் அந்தரியாமியாயிருக்கிறேன். என்னுலேயே (அந்தப் பிராணிகளுக்கு) நினைவு அறிவு மறதி இவையுண்டாகின்றன. சகலமான வேதங்களினுலேயும் அறியத்தகுந்தவன் நானே. வேதார்த்தங்களை யறிந்தவனும் வேதாந்த சம்பிரதாயத்தைச் செய்தகுருவும் நானே.

(ஶம்) சகலப்பிராணிகளுடைய, ஹ்ருதி = புத்தியில், அஹம் = நான் ஆத்மாவாக, ஸந்நிவிஷ்ட: = இருக்கிறேன்.

(ரா) முந்தியசுலோகத்தில் சொன்ன சூரியன் சந்திரன் அக்கினி இவர்களுடையவும் சகலப்பிராணிகளுடையவும் இருதயத்தில், ஸந்நிவிஷ்ட: = நியாமகனாக விருக்கிறேன். இந்த அர்த்தமானது "அந்த:ப்ரவிஷ்ட: ஶாஸ்தா ஜநாநாம்" முதலிய சுருதி வாக்கியங்களினுலும் "ப்ரஶாஸிதாரம் ஸர்வேஷாம்" முதலிய ஸ்ம்ருதி வாக்கியங்களாலும் சொல்லப்படுகிறது. ஆகையால், நான் நினைவு ஞானம் மறதி இவைகளை யுண்டுபண்ணுகிறேன். முன் அனுபவித்தவைகளை ஞாபகத்துக்குக் கொண்டுவருவது நினைவு, வஸ்துக்களின் சுவரூபத்தை எதார்த்தமாயறிவது ஞானம. கொஞ்சகாலத்திற்குமுன் அறியப்பட்ட சங்கதியில் ஞாபகமில்லாதிருப்பது மறதி. வேதங்களினுலே அறியத் தகுந்தவனென்றால், வேதங்களால் சொல்லப்படுகிற வாயு அக்கினி சந்திரன் சூரியன் இந்திரன்முதலிய தேவதைகள், என்சரீரமாயும் அவர்களுக்கு நான் சரீரியாயும் இருப்பதால் என்னையே வேதங்கள் சொல்லுகின்றன வென்று தாத்பரியம். வேதாந்தக்ருத் = வேதோக்த கருமங்களைச் செய்கிறவர்களுக்குப் பலனைக் கொடுக்கிறவன், அஹம் = நானே. இந்தஅர்த்தமானது "யாம் யாம் யாம்" முதல் "லபதே ச தத: காமாந்" வரையிலுள்ள சுலோகங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. மேல் சொல்லப்பட்டிருக்கிறபடி வேதார்த்தங்களை யறிந்தவனும் நானே. (௧௫)

---

* (ஶ்ரீ,வி) வேதவியாசரூபராயிருந்து பிரம்மசூத்திரங்களைச் செய்தவரும்.

கசு. த்³வாவிமௌ புருஷௌ லோகே க்ஷரஶ்சாக்ஷர ஏவ ச।
க்ஷரஸ்ஸர்வாணி பூ⁴தாநி கூடஸ்தோ²(அ)க்ஷர உச்யதே॥*

| | |
|---|---|
| லோகே† | உலகத்தில் |
| க்ஷரஶ்ச ‡ | க்ஷரனென்றும் |
| அக்ஷர ஏவ சேதி | அக்ஷரனென்றும் |
| த்³வௌ இமௌ புருஷௌ | இவ்விருவகைப் புருஷர்களுண்டு |
| ஸர்வாணி பூ⁴தாநி | பிரம்மாதிதேகம்முதலாயுள்ள சகல அசேதனங்களும் |
| க்ஷர: | க்ஷரமென்று சொல்லப்படுகின்றன |
| கூடஸ்த²: | சேதனன் |
| அக்ஷர: | அக்ஷரனென்று |
| உச்யதே | சொல்லப்படுகிறுன். |

உலகத்தில் க்ஷரன் அக்ஷரன் என இருவகைப் புருஷர்களுண்டு. பிரம்மாதிதேகம் முதலாயுள்ள சகல அசேதனங்களும் (ஜடபதார்த்தங்களும்) க்ஷரமென்றும், சேதனன் அக்ஷரனென்றும் சொல்லப்படுகிறுர்கள்.

(ஸ்ரீ) கூடஸ்தனுகிய ஜீவனைத்தான் அக்ஷரனென்று சொல்லியிருக்கிறது. எப்படி என்ருல், கூட: = கல்லுகளுடைய இராசிகள் அடங்கியதாகிய மலைபோல, ஸ்த²: = இருக்கிறவன். என்ருல், தேகமழிந்தாலும் இவன் அசையாமல் மலைபோலிருக்கிறவன் என்பது தாத்பரியம்.

(ஶம்) "யத்³யத்³விபூ⁴திமத்ஸத்த்வம்" (இதின் கஉ - வது - சு,) முதல் உபாதியினு லுண்டான ஈசுவரனுகிய நாராயணனுடைய மகிமையின் சுருக்கம் சொல்லப்பட்டது. இப்போது க்ஷராக்ஷர உபாதியிலிருந்து பிரித்து, நிருபாதிகராகவும் கேவலராகவு மிருக்கிற அவருடைய தத்துவ நிச்சயத்தின் பொருட்டு ஆரம்பிக்கப்படுகிறது. இதின் மூந்தியும் பிந்தியு முள்ள அத்தியாயங்களின் சமுதாயார்த்தத்தை மூன்று வகுப்புகளாகப் பிரித்து அவைகளி லிரண்டு வகுப்புகள் இவ்விடத்

---

* இந்த சுலோகத்தை ஸ்காந்தபுராணம் ஸையாத்திரி கண்டம் - உ - கo - ல் காண்க.

† (ஶம்) சமுசாரத்தில்.

‡ (ஶம்) நாசமடையத்தகுந்த. (ரா) பிரகிருதி சம்பந்தத்திலிருக்கிற அமுக்த ஜீவன். (ஶ்ரீ) (ஸ்ரீ,வி) பிரம்மாதி ஜீவகோடிகள்.

தில் சொல்லப்படுகின்றன. லோகே = ஸம்ஸாரத்தில், க்ஷரஃ = நாசமடையத்தகுந்த வகுப்பென்றும், அக்ஷரஃ = பகவன்மாயாசக்தியான நாசமடையாத வகுப்பென்று மிரண்டுவிதம். அந்தபகவன்மாயா சக்தி எப்படிப்பட்டதென்றால், க்ஷரபுருஷனுடைய உற்பத்திக்கு விதையாயும், அநேக சம்சாரிகளான பிராணிகளுடைய காமகருமங்கள் முதலியவைகளின் வாசனை (கருமசேஷம்) களுக்கு ஆசிரயமாயுமிருக்கிறதுதான்.

அந்தப் புருஷர்க ளின்னார் என்பதை பகவான் சொல்லுகிறார். விகாரமடையப்பட்ட பூதங்களெல்லாம் க்ஷரமென்று சொல்லப்படுகின்றன, கூடஸ்தஃ—கூடஃ = இராசி (குப்பல்) போல, ஸ்தஃ = ஸ்திதஃ=இருக்கப்பட்டவன், அல்லது, கூடஃ=மாயை, (அதில்) ஸ்தஃ = இருக்கிறவன். ஞானமின்றி ஸம்ஸாரபீஜம் நசிக்கமாட்டாதாகையால் அக்ஷரனென்று சொல்லப்பட்டது.

(ரா) பிரகிருதி சம்பந்தத்தி லிருக்கிறவன் அமுக்த ஜீவன், அவன் க்ஷரனென்று சொல்லப்படுகிறான். பிரகிருதி சம்பந்தத்திலிருந்து விடுபட்ட விமுக்தஜீவனாகிய கூடஸ்தன் அக்ஷரனென்று சொல்லப்படுகிறான்.

(ஜ) (ஸ்ரீ,வி) பிரம்மாதிஜீவர்கள் க்ஷரம். ஏனென்றால், தேகம் நசிக்கிறபடியினாலே. இலக்ஷ்மி அக்ஷரம். இவள் விகாரமற்றிருப்பதாலும் புருஷனைப்போல சக்தியுடையவளாகையாலும் கூடஸ்தனென்ற புல்லிங்கபதத்தால் சொல்லப்பட்டாள். (௧௬)

---

௧௭. உத்தமஃ புருஷஸ்த்வந்யஃ பரமாத்மேத்யுதாஹ்ருதஃ।
யோ லோகத்ரயமாவிஶ்ய பிபர்த்யவ்யய ஈஶ்வரஃ॥

| | |
|---|---|
| அவ்யயஃ | நாசமற்ற |
| ஈஶ்வரஃ* | ஈசுவரனாகிய (எஜமானன்) |
| யஃ | எந்த ஆத்மாவானவர் |
| லோகத்ரயம்† | மூன்றுலகங்களையும் |
| ஆவிஶ்ய‡ | பிரவேசித்து |

---

* (ஶம்) சர்வக்ஞனை நாராயண னென்கிற பெயருள்ள நியாமகனாகிய. (ரா) நியாமகத்துவ முடையவன்.

† (ஶம்) (ஸ்ரீ,வி) பூலோக புவர்லோக சுவர்லோகங்களிலே. (ரா) அசேதனம் (ஜடம்) அத்துடன் சேர்ந்திருக்கிற பத்தஜீவன் முக்தஜீவன் இம்மூவரையும்.

‡ (ஶம்) தன்னுடைய பலசக்திகளினாலே பிரவேசித்து.

| | |
|---|---|
| 𑌬𑌿𑌭𑌰𑍍𑌤𑌿* | இரக்ஷிக்கிறரோ |
| (𑌸𑌃) | அப்படிப்பட்ட |
| 𑌉𑌤𑍍𑌤𑌮𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌸𑍍𑌤𑍁 } | பரமபுருஷனைவர் |
| 𑌅𑌨𑍍𑌯𑌃† | { க்ஷராக்ஷரங்களைப் பார்க்கிலு மன்னியரா யும் |
| 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑍇𑌤𑍍𑌯𑍁 | பரமாத்மாவாயும் |
| 𑌉𑌦𑌾𑌹𑍃𑌤𑌃 | வேதங்களில் சொல்லப்பட்டிருக்கிறர். |

நாசமற்ற ஈசுவரனுகிய எந்த ஆத்மாவானவர் மூன்று (சுவர்க்க மத்திய பாதாளம்) உலகங்களிலேயும் பிரவேசித்து இரக்ஷிக்கிறரோ, அப்படிப்பட்ட பரம புருஷனைவர் க்ஷராக்ஷரங்களைப் பார்க்கிலும் அந்நியராயும் பரமாத்மாவாயும் வேதங்களால் சொல்லப்பட்டிருக்கிறர். (௧௭)

---

௧௮. 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌕𑍍𑌷𑌰𑌮𑌤𑍀𑌤𑍋𑌽𑌹𑌮𑌕𑍍𑌷𑌰𑌾𑌦𑌪𑌿𑌚𑍋𑌤𑍍𑌤𑌮𑌃।
𑌅𑌤𑍋𑌽𑌸𑍍𑌮𑌿𑌲𑍋𑌕𑍇𑌵𑍇𑌦𑍇𑌚 𑌪𑍍𑌰𑌥𑌿𑌤𑌃𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌤𑍍𑌤𑌮𑌃॥

| | |
|---|---|
| 𑌅𑌹𑌂 | நான் |
| 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 | எதினுலே |
| 𑌕𑍍𑌷𑌰𑌂‡ | அசேதனத்தை |
| 𑌅𑌤𑍀𑌤𑌃§ | அதிக்கிரமித்தவனுயும் |
| 𑌅𑌕𑍍𑌷𑌰𑌾𑌦𑌪𑌿¶ | சேதனத்தைக்காட்டிலும் |
| 𑌉𑌤𑍍𑌤𑌮𑌶𑍍𑌚‖ | உத்தமனுயு மிருக்கிறேனே |
| 𑌅𑌤𑌃 | அதினுலே |
| 𑌲𑍋𑌕𑍇+ | பிரபஞ்சத்திலேயும் |

---

* (𑌶𑌂) (ஶ்ரீ,வி) தரிக்கிறரோ.

† (ரா) க்ஷரனுகிய பத்தஜீவனையும், அக்ஷரனுகிய முக்தஜீவனையும் காட்டிலும் அந்நியனுயும். (𑌶𑌂) க்ஷராக்ஷரோபாதிகளின் சம்பந்தமற்ற நித்திய சுத்த பத்தமுக்த சுவபாவமுள்ளவர்.

‡ (𑌶𑌂) அசுவத்தமென்று முன்சொல்லப்பட்டிருக்கிற ஸம்ஸாரமாயா விருக்ஷத்தை.

§ (ஶ்ரீ,வி) க்ஷராக்ஷரங்களை அதிக்கிரமித்தவனுயும்.

¶ - ‖ (𑌶𑌂) ஸம்ஸார விருக்ஷத்திற்கு மூலமாயிருக்கிற மாயையைக்காட்டிலும் மேலாயிருப்பவன்.

\+ (𑌶𑌂) பிரபஞ்சத்திலே ஜனங்களாலேயும், காவியாதிகளில் கவிகளினுலேயும். (ரா) (ஶ்ரீ,வி) ஸ்மிருதியிலேயும்.

| | |
|---|---|
| வேதே ச | வேதத்திலேயும் |
| புருஷோத்தம: (இதி) | புருஷோத்தமனென்று |
| ப்ரதித: | பிரசித்தியடைந்தவனாய் |
| அஸ்மி | இருக்கிறேன். |

நான் எதினாலே, அசேதனத்தை யதிக்கிரமித்தவனாயும் (அசேதனத்தைக்காட்டிலு மன்னியனாயும்) சேதனத்தைக்காட்டிலும் உத்தமனாயுமிருக்கிறேனோ, அதினாலே பிரபஞ்சத்திலேயும் வேதத்திலேயும் புருஷோத்தமனென்று பிரசித்தியடைந்தவனா யிருக்கிறேன். (க௮)

---

க௯. யோ மாமேவமஸம்மூடோ ஜாநாதி புருஷோத்தமம்।
ஸ ஸர்வவித்பஜதி மாம் ஸர்வபாவேந பாரத॥

| | |
|---|---|
| ஹே பாரத | ஓ! பரதவம்சத்திலுதித்தவனே! |
| ய: | எவன் |
| அஸம்மூட:* | நிச்சயஞானத்தோடுகூடியவனாய் |
| ஏவம் | முன்சொன்னவிதமாய் |
| மாம் | என்னை |
| புருஷோத்தமம் | புருஷோத்தமனாக |
| ஜாநாதி | அறிகிறானோ |
| ஸ: | அவன் |
| ஸர்வவித் | சர்வக்ஞன் (எல்லாவற்றையு மறிந்தவன்) |
| மாம் | என்னை |
| ஸர்வபாவேந† | சகலவிதத்தினாலேயும் |
| பஜதி | ஆராதிக்கிறான். |

ஓ! பரதவம்சத்தி லுதித்தவனே! எவன் நிச்சயஞானத்தோடு முன்சொன்ன விதமாய் என்னைப் புருஷோத்தமனாக அறிகிறானோ, அவன் சர்வக்ஞன் (சகலமும் தெரிந்தவன்). என்னை சகலவிதத்தினாலேயும் ஆராதிக்கிறான்.

(ஶா°) எவன் முன்சொன்னவிதமாக என்னைப் புருஷோத்தமனென்று, அஸம்மூட: = மோகத்தைவிட்டவனாய், ஜாநாதி = என்னையே தானென்று அறிகிறானோ, அவன் சர்வக்ஞன். அவனென்னை ஸர்வபாவேந = சகலத்திற்கும் ஆத்மாவாக, பஜதி = தியானிக்கிறான்.

---

* (டீ,வி) சர்வோத்தமத்துவமானது மித்தை (பொய்) என்கிற மோகமில்லாதவன்.

† (ஸ்வா) இதின் க௪-வது அத்தியாயம் கூஉ-வது சுலோகம் பார்க்க.

(ரா) ஜாநாதி — என்னைப் புருஷோத்தமனென்றும், நாசமற்றவனென்றும், க்ஷராக்ஷரங்களைவிட அன்னியனென்றும், பிரபஞ்சத்தில் வியாபித்திருக்கிறவனென்றும், அதைத் தரிக்கிறவனென்றும், ஈசுவரனென்றும் எவன் அறிகிறானோ அவன் ஸவவித் — சகலத்தையுமறிந்தவன். என்றால், என்னை அடைவதற்குள்ள சகல உபாயங்களையும் அறிந்தவன். ஸர்வபாவேந ஹஜதி — என்னை யடையவேண்டியதற்கு எங்கெந்த விதமாய் பஜிக்கவேண்டுமோ, அந்தந்தவிதமாய் பஜிக்கிறான். இவ்விதமா யறிகிறதினாலேயும் அறிந்தபடி பஜிக்கிறதினாலேயும் எனக்கு உண்டாகிற இருவகைப் பிரீதிக்கும் அவன் பாத்திரனாகிறான். (௧௯)

---

௨0. 𑌇𑌤𑌿 𑌗𑍁𑌹𑍍𑌯𑌤𑌮𑌂 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌮𑌿𑌦𑌮𑍁𑌕𑍍𑌤𑌂 𑌮𑌯𑌾𑌨𑌘।
𑌏𑌤𑌦𑍍𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌵𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌮𑌾𑌨𑍍𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌕𑍃𑌤𑌕𑍃𑌤𑍍𑌯𑌶𑍍𑌚 𑌭𑌾𑌰𑌤॥

| | |
|---|---|
| 𑌹𑍇 𑌭𑌾𑌰𑌤 | ஓ! பாரதா! |
| 𑌇𑌤𑌿 | இவ்விதமாய் |
| 𑌗𑍁𑌹𑍍𑌯𑌤𑌮𑌂 | அதிரகசியமான |
| 𑌇𑌦𑌂 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 | இந்த (கீதா) சாஸ்திரமானது |
| 𑌮𑌯𑌾 | என்னாலே |
| 𑌉𑌕𑍍𑌤𑌂 | சொல்லப்பட்டது |
| 𑌹𑍇 𑌅𑌨𑌘 | ஓ! விசனமற்றவனே! |
| 𑌏𑌤𑌤𑍍 | இந்த (சம்பூர்ணமான) சாஸ்திரத்தை |
| 𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌵𑌾 | அறிந்து |
| 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌮𑌾𑌨𑍍* | நல்லஞானத்தை யுடையவனாயும் |
| 𑌕𑍃𑌤𑌕𑍃𑌤𑍍𑌯𑌃† | (மோக்ஷத்திற்காக) செய்யவேண்டிய சகலத்தையுஞ் செய்து கொண்டவனாயும் |
| 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 | ஆவான். |

ஓ! பாரதா! இவ்விதமாக அதிரகசியமான இந்த கீதாசாஸ்திரமானது என்னாலே சொல்லப்பட்டது. ஓ! விசனமற்றவனே! இந்த சம்பூர்ணமான சாஸ்திரத்தை அறிந்தவன் நல்லஞான முடையவனாயும் மோக்ஷத்திற்காகச் செய்யவேண்டிய சகலத்தையும் செய்துகொண்டவனாயு மாவான். என்றால், நீ அவ்வித யோக்கியனாவா யென்பதைச் சொல்லவேண்டியதில்லை என்பது தாத்பரியம்.

---

* (மீ,வி) அபரோக்ஷஞானியாயும்.

† (மீ,வி) முக்தனாகவும்.

(ஸ0) ஊஉஂஶாஸ்த்ரஂ — இந்த அத்தியாயமானது, இதில் "யஸ்தஂ வேஉஸவேஉவித்" "வேஉெஶ்சஸவெவைரஹமேவவேஉ்யஃ" இந்த சுலோகங்களினாலே சகலவேத சாஸ்திரார்த்தங்களும் சொல்லப்பட்டிருப்பதால் இந்த அத்தியாயமே சாஸ்திரமென்று உபசாரமாக சொல்லப்பட்டது. அநவ—பாபமற்றவனே! இந்த சாஸ்திரத்தை யறிந்தவன் ஞானியாவான். வேறொன்றினாலுமல்ல. க்ருதக்ருத்யஸ்ச — பிராமணகுலத்தில் உத்தமனாய்ப் பிறந்தவனால் செய்துகொள்ளவேண்டிய சகலத்தையும் செய்துகொண்டவனாகவும், ஸ்யாத் — ஆவான். மற்றொருவிதத்திலுமல்ல. இந்த அர்த்தம் "ஸர்வஂகர்மாகிலஂபார்த" என்கிற சுலோகத்தினால் சொல்லப்பட்டிருக்கிறது. இதைத் தெரிந்தவனுடைய ஜன்மம் தான் சிரேஷ்ட மென்பதாக "ஏதத்விஜ்ஞஂஸாத்ரஜந்ம (ஜந்மஸாஃல்யஂ என்றும் பாடமுண்டு) ப்ராஹ்மணஸ்யவிஶேஷதஃ - ப்ராப்யைதத்க்ருதக்ருத்யோஹி த்விஜோபவதி நாந்யதா॥" என்கிற சுலோகத்தில் (மஹாபாரதம் அத் - கஉ, சு - கூஈ) மறுவும் சொல்லியிருக்கிறார். நீ இவைகளை யெல்லாம் என்னால் தெரிந்துகொண்டபடியால் கிருதகிருத்தியனாயிருக்கிறாய். (என்றால், செய்யவேண்டியதைச் செய்துகொண்டவனா யிருக்கிறாய்.

(ஈ) இந்தப்படி நான் (கிருஷ்ணபகவான்) புருஷோத்தம னென்று சொல்லுகிறதும் இரகசியங்களிலெல்லா மதிரகசியமானதுமாகிய இந்த சாஸ்திரமானது நீ பாபமற்ற யோக்கியனென்று தெரிந்து என்னாலுனக்குச் சொல்லப்பட்டது. இதையறிந்தவன் ஞானியாவான். என்றால், என்னை யடையவேண்டுமென்கிற இச்சையுள்ளவன் அவ்விதமாயடைவதற்கு வேண்டிய சகல சாஸ்திரங்களினா லுண்டான ஞானத்தை யடைந்தவனாகிறான். க்ருதக்ருத்யஸ்ச — செய்துகொள்ளவேண்டிய சகலத்தையும் செய்துகொண்டவனாகவு மாகிறான். (உ0)

ஓஂ தத்ஸதிதி ஶ்ரீமத்பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாஂ

யோகஶாஸ்த்ரே ஶ்ரீக்ருஷ்ணார்ஜுநஸஂவாதே

புருஷோத்தமப்ராப்தியோகோ நாம

பஞ்சதஶோऽத்யாயஃ.

ஶ்ரீக்ருஷ்ணாயபரப்ரஹ்மணே நமஃ.

புருஷோத்தமப் பிராப்தியோகமென்கிற

பதினைந்தாவது அத்தியாயம்

முற்றிற்று.

𑌶𑍍𑌰𑍀𑌰𑌸𑍍𑌤𑍁.

𑌷𑍋𑌡𑌶𑍋𑌧𑍍𑌯𑌾𑌯 𑌪𑍍𑌰𑌾𑌰𑌂𑌭𑌃.

## பதினாறாவது அத்தியாயம்.

---

𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚.

க. 𑌅𑌭𑌯𑌂𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌸𑌂𑌶𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌃।
𑌦𑌾𑌨𑌂𑌦𑌮𑌶𑍍𑌚𑌯𑌜𑍍𑌞𑌶𑍍𑌚 𑌸𑍍𑌵𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑌸𑍍𑌤𑌪𑌆𑌰𑍍𑌜𑌵𑌂॥

உ. 𑌅𑌹𑌿𑌂𑌸𑌾𑌸𑌤𑍍𑌯𑌮𑌕𑍍𑌰𑍋𑌧𑌸𑍍𑌤𑍍𑌯𑌾𑌗𑌃 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌰𑌪𑍈𑌶𑍁𑌨𑌂।
𑌦𑌯𑌾𑌭𑍂𑌤𑍇𑌷𑍍𑌵𑌲𑍋𑌲𑍁𑌪𑍍𑌤𑍍𑌵𑌂 𑌮𑌾𑌰𑍍𑌦𑌵𑌂𑌹𑍍𑌰𑍀𑌰𑌚𑌾𑌪𑌲𑌂॥

ங. 𑌤𑍇𑌜𑌃𑌕𑍍𑌷𑌮𑌾𑌧𑍃𑌤𑌿𑌃𑌶𑍌𑌚 𑌮𑌦𑍍𑌰𑍋𑌹𑍋 𑌨𑌾𑌤𑌿𑌮𑌾𑌨𑌿𑌤𑌾।
𑌭𑌵𑌂𑌤𑌿𑌸𑌂𑌪𑌦𑌂𑌦𑍈𑌵𑍀 𑌮𑌭𑌿𑌜𑌾𑌤𑌸𑍍𑌯 𑌭𑌾𑌰𑌤॥

| | |
|---|---|
| 𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚 | ஸ்ரீபகவான் சொல்வது |
| 𑌅𑌭𑌯𑌂* | பயமின்மை |
| 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌸𑌂𑌶𑍁𑌦𑍍𑌧𑌿𑌃† | மனநிர்மலம் அல்லது பிரசன்னமா யிருத்தல் |
| 𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌃‡ | ஆத்மஞான உபாயத்தை ஆராய்ந்து அந்த ஞானநிஷ்டையி லிருத்தல் |
| 𑌦𑌾𑌨𑌂§ | தானஞ்செய்தல் |

---

* (ரா) இஷ்டமான வஸ்துநஷ்டமாவதற்கும் அநிஷ்டமுண்டாவதற்கும் ஹேது காணப்படுகையிலுண்டாகிற துக்கம், பயம், இவைகளில்லாமை. (ஸ்ரீ,வி) தன்னாலாவது பிறராலாவது தனக்கு பயமுண்டாகாமலிருப்பது. "𑌯𑌸𑍍𑌮𑌾𑌨𑍍𑌨𑍋𑌦𑍍𑌵𑌿𑌜𑌤𑍇 𑌲𑍋𑌕𑌃" (கஉ-வது அத்தி, கரு-வது சுலோகம்) பார்க்க.

† (ஶம்) வியவகாரங்களில் வஞ்சனை மோசம் பொய் இவைகளில்லாம லிருக்கிற மனசுத்தி. (ரா) இரஜஸ் தமோகுணங்களின் காரியங்களை அந்தக்கரணத்தில் சேர்க்காமலிருக்கும் சுத்தி.

‡ (ஶம்) சாஸ்திரங்களினாலும் ஆசாரியோபதேசத்தினாலும் ஆத்மாமுதலிய பதார்த்தங்களுடைய தத்துவங்களை அறிவதுஞானம்; அப்படி யறிந்த ஞானத்தை விஷயங்களிலிருந்து இழுத்து ஒரே கவனமாக்த் தன்னுடைய ஆத்மாவை அறிகிற விஷயத்தில் உபயோகிப்பது யோகம்; இந்த ஞானம் யோகம் இவைகளில் ஸ்திரமான நிஷ்டைதான் வியவஸ்திதி; இதுதான் தெய்வசம்பத்து. இந்த சம்பத்தை யடைந்தவர்களுடைய சுபாவம்தான் சாத்துவிக சுவபாவம். (ரா) பிரகிருதி விமுக்தாத்ம சுவரூபத்திலேயே நிலைத்திருப்பது. (ஸ்ரீ,வி) ஞானோபாயத்தில் நிஷ்டையடைவது.

§ (ஶம்) (ஸ்ரீ) சக்திக்குத்தக்கபடி அன்னவஸ்திராதிகளை தானஞ்செய்வது. (ரா) ஞாயமாய் சம்பாதித்த திரவியத்தை சத்பாத்திரத்தில் கொடுப்பது.

| | |
|---|---|
| தம꞉* | வெளியிந்திரியங்களையடக்குதல் |
| யஜ்ஞஶ்ச† | தரிசபூர்ணமாசாதியக்ஞுஞ்செய்தல் |
| ஸ்வாத்யாய꞉‡ | பிரம்மயக்ஞுமுதலிய ஜபயக்ஞுஞ் செய்தல் |
| தப꞉§ | அடுத்த அத்தியாயத்தில் சொல்லப்போகிற மூன்றுவித தபசுசெய்தல் |
| ஆர்ஜவம்¶ | நேர்மை |
| அஹிம்ஸா | பிறருக்குத்துன்பஞ்செய்யாமை |
| ஸத்யம்‖ | பொய்யின்மை (உண்மை) |

* (ரா) மனசை விஷயங்களிலிருந்து நிவர்த்திப்பது. (ஸ்ரீ,வி) மதோன்மத்தமன்றியிலிருப்பது.

† (ஸம்) வேதங்களில் சொல்லப்பட்ட அக்கினிஹோத்திராதிகளையும் ஸ்மிருதியில் சொல்லப்பட்ட தேவ பிதுரு யக்ஞாதிகளையுஞ் செய்தல். (ரா) பலாபேக்ஷையன்றி பகவதாராதனரூபமாய் யக்ஞங்கள் செய்வது. (ஸ்ரீ,வி) தேவ பிதுரு யக்ஞங்கள் அல்லது ஜோதிஷ்டோமாதி யக்ஞங்கள் செய்வது.

‡ (ஸம்) இருக் வேதாதி அத்தியயனம். (ரா) சகலவேதங்களும், சகல ஜகத்தையும் விபூதியா யுடைத்தாயிருக்கிற பகவானுடைய ஆராதனைப் பிரகாரத்தைச் சொல்லுகிறதாகத் தெரிந்துகொள்ளும் பொருட்டு வேதாத்தியயனம் செய்வது. (ஸ்ரீ,வி) வேதாத்தியயனம்.

§ (ரா) பகவானுக்குப் பிரீதியை யுண்டாக்கப்பட்ட கிருச்சிர சாந்திராயண விரதங்கள் துவாதசி உபவாசம் முதலியவைகளை யனுஷ்டித்தல். (ஸ்ரீ,வி) பிரம்மசாரிவிரதம் முதலியன.

¶ (ரா) (ஸ்ரீ,வி) மனசு வாக்கு தேகம் இவைகளுடைய செய்கைகளை ஒரே விதமாய்ச் செய்துகொள்ளுதல்.

‖ (ஸம்) பொய்யின்மையும் பிறருக்கு அப்பிரியமின்மையும். (ரா) கண்டது கண்டபடி ஹிதமாய்ச் சொல்லும் வாக்கியம். (ஸ்வ) ஸம்ஶய்யாநக்தவ்யா ஹ்யேஷா வாக்வாச்யா ஸூந்ருதா । நாஸ்தி ஸத்யாத்பரோ தர்மோ நாந்ருதாத்பாதகம் பரம் ॥ ௧௫ ॥ ஸர்வேஷு கார்யேஷு ஸத்யமேவ விஶிஷ்யதே । அஶ்வமேதஸஹஸ்ரஞ்ச ஸத்யஞ்ச துலயா த்ருதம் ॥ ௧௬ ॥ அஶ்வமேதஸஹஸ்ராத்தி ஸத்யமேவ விஶிஷ்யதே । யாவதேதத்ஸர்வகார்யேஷு ஸத்யம் ஶ்ரேயஸ்கரம் பரம் ॥ ௧௭ ॥ — இவ்விதமா யுபதேசம் செய்யப்பட்டிருக்கிறபடியால், பொய் சொல்லக்கூடாது. பொய்யானது பாபத்தை யுண்டு பண்ணுகிறது. ஸத்தியத்தைவிட சிரேஷ்டமான தருமமில்லை. பொய்யைவிட பாபம் வேறேயில்லை. ஆகையால் எல்லாக்காரியங்களிலும் ஸத்தியமே மேலானதாயிருக்கிறது. ஆயிரம் அசுவமேதயாகபலனை ஒரு திராசிலும் ஸத்தியத்தை ஒரு திராசிலும் வைத்து நிறுத்தால் அசுவமேத பலனைக்காட்டிலும் ஸத்தியம் தான் அதிக பாரமுள்ளதாயிருக்கும். எவனும் எல்லாக்காரியத்திலும் ஸத்தியத்தையே

| | |
|---|---|
| அக்ரோத:* | கோபமின்மை |
| த்யாக:† | கொடை |
| ஶாந்தி:‡ | மனதையடக்குதல் |
| அபைஶுநம்§ | கோட்சொல்லாமை |
| பூதேஷு | பிராணிகளிடத்திலே |
| தயா¶ | தயவாயிருத்தல் |

சொல்லவேண்டியது. பொய்யைத்தள்ளி விடவேண்டியது. இந்தசுலோகங்களை பத்மபுராணம் சிருஷ்டிகண்டம் அத்-சரு-ல் காண்க. ஸத்யமூலம் ஜகத் ஸர்வம் லோகா: ஸத்யே ப்ரதிஷ்டிதா: | ஸத்யேந ருஷிபி: ப்ராப்தா ப்ராஹ்மீ ஸித்திர் யோ ப்ரஹ்மவாதிந: || சச || ஸத்யேந தீயதே கந்யா ஸத்யம் ஜல்பந்தி ப்ராஹ்மணா: | ஸத்யம் ஜயந்தி ராஜாந: ஸத்யே ஸ்வர்கம் ஸ்ம்ருதம் || சரு || ஸத்யேந ப்ராப்யதே ஸ்வர்கோ மோக்ஷ: ஸத்யேந லப்யதே | ஸத்யேந தபதே ஸூர்ய: ஸோம: ஸத்யேந ராஜ்யதே || சசு || — ஜகத்திற்கு ஸத்தியம் மூலகாரணம். உலகங்கள் ஸத்தியத்தினாலேயே நிலைத்திருக்கின்றன. பிரும்மவாதிகளாயிருக்கிற இருஷிகள் ஸத்தியத்தினாலேயே ஸித்தியையடைந்தார்களல்லவா. ஸத்தியத்தினாலேயே கன்னிகாதானம் செய்யப்படுகிறது. பிராம்மணர்கள் ஸத்தியத்தை விசேஷமாய் பேசுகிறார்கள். இராஜாக்கள் ஸத்தியத்தினால் ஜயமடைகிறார்கள். இம்மூன்றும் ஸத்தியத்தைத்தான் வற்புறுத்துகின்றன. ஸத்தியத்தினால்தான் சுவர்க்கம் அடையப்படுகிறது. ஸத்தியத்தினால்தான் மோக்ஷமுமடையப்படுகிறது. ஸத்தியத்தினால்தான் சூரியன் தபிப்பிக்கிறான். ஸத்தியத்தினால்தான் சந்திரன் சந்தோஷிப்பிக்கிறான். வராகபுராணம் உத்தரபாகம் அத்-கஉஎ-ல் காண்க.

* (ஶா) துன்பப்படுத்தப்பட்டதினால் உண்டாகும் கோபத்தை யடக்குதல். (ரா) பிறரால் ஹிம்சிக்கப்பட்டாலும் மனசு விகாரமடையாமலிருப்பது. (ஸ்ரீ) அடிக்கப்பட்டாலும் மனங் கலங்காமலிருப்பது. (ம,வி) பிறரை ஹிம்சிக்க மனதிலுண்டாகும் துடிதுடிப்பை விட்டிருப்பது.

† (ஶா) சந்நியாசம். முன்னாலேயே தானம் என்கிறபதம் வந்திருக்கிறதினால் இதற்கு சந்நியாசமென்று அர்த்தம் செய்யப்பட்டது. (ரா) ஆத்மாவினுடைய சுகத்திற்கு விரோதமான வஸ்துக்களைக் கிரகிக்காமலிருப்பது.

‡ (ரா) விஷயங்களிலிருக்கிற இந்திரியங்களை இழுத்து சுவாதீனம் செய்து கொள்ளுவது. (ஸ்ரீ) சித்தசமாதானம். (ம,வி) பகவன் நிஷ்டை.

§ (ஶா) ஒருவனுடைய குணதோஷங்களை வெளியிடாமை. (ஸ்ரீ) காணாத விடத்தில் பிறரை தூஷிக்காமை. (ரா) ஜனங்களுக்கு அப்ரீதியை யுண்டாகத் தக்க வார்த்தைகளைச் சொல்லாமலிருத்தல்.

¶ (ஶா) (ஸ்ரீ) (ரா) விசனமடைந்திருக்கிறவனிடத்தில் தயவாயிருத்தல் (ம,வி) பிறருக்கு அநுகூலஞ்செய்வது, அல்லது பிறர்துக்கத்தை சகியாமை.

| | |
|---|---|
| 𑌅𑌲𑍋𑌲𑍁𑌪𑍍𑌤𑍍𑌵𑌂* | விஷயங்களிலாசையற்றிருத்தல் |
| 𑌮𑌾𑌰𑍍𑌦𑌵𑌂† | குரூரமற்றதன்மை |
| 𑌹𑍍𑌰𑍀𑌃‡ | வெட்கம் |
| 𑌅𑌚𑌾𑌪𑌲𑌂§ | சபலமின்மை |
| 𑌤𑍇𑌜𑌃¶ | பெருந்தன்மை |
| 𑌕𑍍𑌷𑌮𑌾 ‖ | பொறுமை |
| 𑌧𑍃𑌤𑌿𑌃+ | தைரியம் |
| 𑌶𑍌𑌚𑌂× | சரீரமனசுத்தி |

* (ஸ்ரீ) (ரா) அலோலுப்த்வம் - என்றுபாடம். அலோலுபத்வம் - என்று சொல்லவேண்டியது. ஆனால் ரிஷியினால் சொல்லப்பட்டதாகையால், வ - என்கிற அக்ஷரத்திலுள்ள, அகரம் குறைந்து, அலோலுப்த்வம் - என்றுவந்தது. (இதின் அர்த்தம் அந்வயத்தில் சொன்னதுதான்.) (ஶம்) இந்திரியங்கள் விஷயங்களை சமீபத்திலடைந்தாயிருக்கையிலும் விகாரமடையாதிருப்பது. (என்றால்,மோகத்தை யுண்டாக்கக்கூடிய வஸ்துக்கள் சமீபத்திலிருக்கையிலும் கூட மனது சலிக்காமலிருப்பது.)

† (ரா) சாதுஜன சங்கத்திற்கு யோக்கியமாயிருத்தல். (மீ,வி) தன்னைத் துன்பப்படுத்தினவனிடத்திலும் விரோதமற்றிருத்தல்.

‡ (ஸ்ரீ) (ரா) (மீ,வி) செய்யக்கூடாத காரியத்தைச் செய்வதில் இலச்சை அல்லது வெட்கம்.

§ (ஶம்) (ஸ்ரீ) பிரயோஜனமற்ற காரியங்களைச் செய்யாமலிருத்தல். (ரா) ஆசையையுண்டாக்கும் வஸ்து எதிரிலிருந்தாலும் அதிலாசையற்றிருத்தல். (மீ,வி) உறுதி.

¶ (ரா) (மீ,வி) அயோக்கியர்களா லவமதிக்கப்படாமலிருத்தல்.

‖ (ஶம்) அடிக்கப்பட்டாலும் துன்பம் செய்யப்பட்டாலும் மனதில் துடிப்பு அல்லது விகாரமடையாமலிருத்தல். (ரா) பிறரால் துன்பம் செய்யப்பட்டாலும் மனம் கலங்காமலிருத்தல். (ஆ) அபகாரம் செய்தவரிடத்தில் கோபமும் பிரதி அபகாரமும் செய்யாமலிருத்தல். (மீ,வி) அபகாரஞ் செய்தவனிடத்தில் கோபமில்லாமலிருப்பதுடன் உபகாரமும் செய்தல்.

+ (ஶம்) தேகேந்திரியாதிகள் சோர்வடைந்தாலும் அதைப்பற்றிக் கவலையற்றிருக்கிற மனத்துணிவு. (ரா) மகா ஆபத்காலத்திலும் செய்யவேண்டியதை விடாமல் செய்தல். (மீ,வி) கவலையற்றிருத்தல்.

× (ஶம்) காமக்குரோதாதிகளை விடுவது மனசுத்தி; ஜலம் முதலியவைகளால் அழுக்குகளைப் போக்கடித்துக்கொள்வது தேகசுத்தி ; இப்படி சவுச மிரண்டுவிதம். (ரா) இந்திரியங்கள் மனசு இவைகளை சாஸ்திரோக்தமான கருமானுஷ்டானங்களுக்கு யோக்கியமாகச் செய்துகொள்ளுவது. (மீ,வி) பகவத்தியான முதலியது உள்சவுசம். மிருத்திகாதிகளினால் செய்துகொள்ளுவது வெளிசவுசம். (ஹா) இந்தபதத்தி னர்த்தத்தை. அத் - ௧௩, சு - ௮, ல் காண்க.

| | |
|---|---|
| 𑌅𑌦𑍍𑌰𑍋𑌹𑌃* | பிறருக்கு துரோகஞ்செய்யாமை |
| 𑌨𑌾𑌤𑌿𑌮𑌾𑌨𑌿𑌤𑌾† | கர்வமின்மை |
| (𑌭𑌵𑌨𑍍𑌤𑌿) | இவைகள் |
| 𑌹𑍇 𑌭𑌾𑌰𑌤 | ஓ! அர்சுந! |
| 𑌦𑍈𑌵𑍀𑌮𑍍 | தேவதைகள் அடையத்தகுந்த |
| 𑌸𑌮𑍍𑌪𑌦𑌮𑍍‡ | சம்பத்தை |
| 𑌅𑌭𑌿𑌜𑌾𑌤𑌸𑍍𑌯§ | { அடையத்தகுந்த யோக்கியதையுடன் பிறந்தவனுக்கு |
| 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿¶ | உண்டாகின்றன. |

ஸ்ரீ கிருஷ்ணபகவான் அர்சுனனைநோக்கிப் பின்னும் சொல்வது—பயமின்மை, மனநிர்மலம், ஆத்மஞான உபாயத்தை ஆராய்ந்து அந்த நிஷ்டையி லிருத்தல், சத்பாத்திரத்தில் தானஞ் செய்தல், வெளியிந்திரியங் (கருமேந்திரியங்) களை யடக்குதல், தரிசபூர்ண மாசாதி யக்ஞங்கள் செய்தல், பிரம்ம யக்ஞமுதலிய ஜபயக்ஞங்கள் செய்தல், தபஸ்செய்தல், நேர்மை (எப்போதும் சகலகாரியங்களையும் நேரானவிதமாய்ச்செய்தல்), பிறருக்குத் துன்பஞ்செய்யாமை, பொய்யின்மை, கோபமின்மை, கொடை (தியாகம்), மனதை நிறுத்தல், கோட்சொல்லாமை, பிராணிகளிடத்தில் தயவாயிருத்தல், விஷயங்களிலாசையின்மை, குரூரமற்றதன்மை, வெட்கம், சபலமின்மை, பெருந்தன்மை, பொறுமை, தைரியம், சரீரசுத்தி மனசுத்தி, பிறருக்கு துரோகஞ் செய்யாமை, கர்வமின்மை, இவைகள் ஓ! அர்சுந! தேவதைகளடையத்தகுந்த சம்பத்தை அடைகிறதற்கு யோக்கியதையுடன் பிறந்தவனுக்குண்டாகின்றன.

(ஶம்) பிராணிகளுடைய சுவபாவம், தைவம் ஆசுரம் இராக்ஷஸம் என்று மூன்றுவிதமாயுள்ள தென்பது இதின் ௯-வது அத்தியாயத்தில் குறிப்பிடப்பட்டது. அவைகளைப்பற்றி இந்த அத்தியாயத்தில் விஸ்தாரமாகச் சொல்லப்படுகிறது. தைவசம்பத்தினால் பந்தநிவிருத்தி யுண்டாகு மாகையால் அதையடைய முயலவேண்டும், ஆசுர இராக்ஷஸ சம்பத்துக்களினால் பந்தமுண்டாகு மாகையால் அவைகளைவிட முயலவேண்டும் என்பது கருத்து.

---

* (ஶம்) (ஸ்ரீ) பிறரைக்கொல்ல நினையாமை. (ரா) (ஸ்ரீ,வி) பிறருடைய காரியங்களுக்கு விரோதம் செய்யாமை.

† (ஶம்) (ஸ்ரீ) தன்னை மற்றவர்கள் பூஜிக்கவும் மரியாதைசெய்யவும் வேண்டுமென்கிற எண்ணமில்லாமை. (ஸ்ரீ,வி) அகங்கார மின்மை.

‡ - § - ¶ (ரா) பகவதாக்ஞையின்படி நடந்தவர்களான தேவர்களின் சம்பத்தை அடையப் பிறந்தவன். (ம) தெய்வசம்பத்தை அனுபவிக்கப் பிறந்தவன்.

(ரா) ௧௩-௧௪-௧௫-அத்தியாயங்களில், சேர்ந்தும் பிரிந்து மிருக்கிற பிரகிருதிபுருஷர்களுடைய சுவரூப நிச்சயமும், அவர்களுடைய சேர்க்கைக்கும் பிரிதலுக்கும் காரணமாகிய விஷயசம்பந்தமும் விஷய நிவிருத்தியும், அவர்கள் சேர்ந்திருந்தாலும் பிரிந்திருந்தாலும் அவர்கள் பகவானுடைய விபூதி என்பதும். அசேதனத்தையும் சேதனர்களான பெத்தமுக்த ஜீவர்களையும் பார்க்கிலும் பகவானுக்குள்ள விசேஷமும் சொல்லப்பட்டன. இதில் சாஸ்திரங்களினாலேயே அறியத்தகுந்த சில அர்த்தங்களைத் திடப்படுத்தும்பொருட்டு, தைவாசுர விபாகத்தைச் சொல்லுகிறார்.

(தீ) மோக்ஷசாதனங்களுக்கு விரோதியானதைப் பரிகரிக்கவேண்டுமென்பது இதினால் சொல்லப்படுகிறது. (௧-௨-௩)

---

௪. டம்போ தர்போ(அ)பிமாநஶ்ச க்ரோத: பாருஷ்யமேவ ச।
அஜ்ஞாநம் சாபிஜாதஸ்ய பார்த ஸம்பதமாஸுரீம்॥

| | |
|---|---|
| ஹே பார்த | ஓ! பார்த்தா! |
| டம்ப:* | டம்பமும் (கபடமானவேஷம்) |
| தர்ப:† | ஐசுவரியம் வித்தை முதலியவைகளினால் மதித்திருப்பதும் |
| அபிமாநஶ்ச ‡ | தற்புகழும் |
| க்ரோத:§ | கோபமும் |
| பாருஷ்யம்¶ | கொடூரத்தன்மையும் |
| அஜ்ஞாநமேவ ச|| | அக்ஞானமுமே |

---

* (ரா) கீர்த்திக்காக தருமம்செய்தல். (தீ,வி) தான் அற்பனாக இருக்கையில் தான் மகானென்று பிறர் நினைக்கவேண்டுமென்று எண்ணி அதற்குத்தகுந்தபடி செய்கிறது.

† (ரா) நன்மை தீமைகளை யறிகிற ஞானத்தைப் போக்கடிக்கப்பட்டதாகிய விஷயானுபவத்தினாலுண்டாகிற சந்தோஷம்.

‡ (ரா) கல்வி முதலியவைகளா லுண்டாகும் அகங்காரம். (தீ,வி) பிரமாணத்தை அதிக்கிரமித்தல் (வரம்பைக் கடந்து நடத்தல்.) (ஸ்ரீ) அதிமாந: - என்று பாடம், அர்த்தமொன்றே.

§ (ரா) (தீ,வி) பிறரைத் துன்பப்படுத்தும் விஷயத்திலுண்டாகிற துணிவு.

¶ (ஸம்) (ஸ்ரீ) கடினவசனம். (ரா) நல்லோருக்கு மனசங்கடமுண்டாக்கத் தக்க சுவபாவம். (தீ,வி) பிறருக்கு நிஷ்டூரத்தை யுண்டுபண்ணும் சுவபாவம்.

|| (ஸம்) தப்பெண்ணம். (ரா) பராபரஞானமாவது, காரியாகாரிய விவேகமாவதில்லாமை.

ஆஸுரீம் } *   அசுரசம்பத்தை
ஸம்பதம்
அபிஜாதஸ்ய   உடையவனாக ஜநித்தவனுக்கு
(ஸம்பவந்தி)   உண்டாகின்றன.

ஓ! பார்த்தா! டம்பமும், ஐசுவரியம் வித்தை முதலியவைகளால் மதித்திருப்பதும், தற்புகழும், கோபமும், கொடூரத்தன்மையும், அக்ஞானமும், அசுரசம்பத்தை யுடையவனாக (அடையத்தகுந்தவனாக) ஜநித்தவனுக் குண்டாகின்றன. (ச)

---

ரு. தைவீ ஸம்பத் விமோக்ஷாய நிபந்தாயாஸுரீ மதா।
மா ஶுச: ஸம்பதம் தைவீம் அபிஜாதோ(அ)ஸி பாண்டவ॥

தைவீ } †   தைவசம்பத்தானது
ஸம்பத்
விமோக்ஷாய ‡   பந்தநிவிருத்திக்கும்
ஆஸுரீ §   அசுரசம்பத்தானது
நிபந்தாய ¶   பெந்தமுண்டாகிறதற்கும்
மதா   காரணமென்று நிச்சயிக்கப்பட்டிருக்கிறது
பாண்டவ   ஓ! பாண்டுபுத்திரா!
தைவீம் }   தைவசம்பத்தை
ஸம்பதம்
அபிஜாத:   அடையப்பிறந்தவனாக
அஸி   இருக்கிறாய்
மா ஶுச:   விசனப்படாதே.

தைவசம்பத்தான (சமுசார) பெந்தநிவிருத்திக்கும், அசுர சம்பத்தானது (சமுசார) பெந்தமுண்டாகிறதற்கும், காரணமென்று நிச்சயிக்கப்பட்டிருக்கின்றன. ஓ! பாண்டுபுத்திரா! தைவசம்பத்தை யடையப் பிறந்தவனாக விருக்கிறாய். விசனப்படாதே. (ரு)

---

* (ஸ்ரீ) உபலட்சணமாக இராக்ஷஸ சம்பத்தையும் சொன்னதாக கிரகிக்க வேண்டியது. (ரா) பகவதாக்ஞையை அதிக்கிரமித்து நடக்கிற சுவபாவம்.

† (ரா) பகவானுடைய ஆக்ஞையை அநுசரிக்கிறதாகிய தைவசம்பத்தானது.

‡ (ஸ்ரீ,வி) நானாவிதமான மோக்ஷத்திற்கும். (ரா) பந்த நிவிருத்திக்கும் கிரமமாய் என்னை அடைகிறதற்கும்.

§ (ரா) ஈசுவராக்ஞையை மீறி நடக்கிறதாகிய அசுரசம்பத்தானது. (மது) அசுர ராக்ஷஸ சம்பத்தானது.

¶ (ஸ்ரீ,வி) தாழ்ந்தஸ்தானமாகிய இருட்டில் வாசம்பண்ணுவதற்கும் (அதோ கமனத்திற்கும்).

௬. த்வௌ பூதஸர்கௌ லோகேऽஸ்மிந் தைவ ஆஸுர ஏவ ச।
தைவோ விஸ்தரஶ: ப்ரோக்த ஆஸுரம் பார்த மே ஶ்ருணு॥

| | |
|---|---|
| அஸ்மிந் லோகே | இந்த உலகத்தில் |
| தைவ: | தைவமென்றும் |
| ஆஸுர ஏவ ச | ஆசுரமென்றும் |
| பூதஸர்கௌ | பூதங்களுடைய சிருஷ்டிகள் |
| த்வௌ | இரண்டுவிதமாயிருக்கின்றன |
| தைவ: | தைவசிருஷ்டியானது |
| விஸ்தரஶ: | விஸ்தாரமாய் |
| ப்ரோக்த: | சொல்லப்பட்டது |
| பார்த | ஓ! குந்திபுத்திரா! |
| ஆஸுரம் | அசுரசிருஷ்டியை |
| மே | என்னிடத்திலிருந்து |
| ஶ்ருணு | கேள். |

இவ்வுலகத்தில் தைவமென்றும் ஆசுரமென்றும் பூதசிருஷ்டிகளிரண்டுவிதமா யிருக்கின்றன. தைவ சிருஷ்டியானது விஸ்தாரமாய்ச் சொல்லப்பட்டது. ஓ! குந்திபுத்திரா! அசுரசிருஷ்டியை யென்னிடத்திலிருந்துகேள்.

(ஸ்ரீ) இதின் ௯-வது அத்தியாயம், ௧௨-வது சுலோகத்தில் அசுர ராக்ஷஸ சுவபாவங்களைக் குறித்துச் சொல்லியிருக்கிறார். இவ்விடத்தில் அசுர சுவபாவத்தை மட்டும் சொல்லி, இராக்ஷஸ சுவபாவத்தைச் சொல்லவில்லை. ஏனென்றால், இரண்டு சுவபாவத்திற்கும் பலனொன்றாகையால், ஒன்றைச் சொன்னதினாலேயே மற்றொன்றும் சொல்லப்பட்டதாகவே யாகிறதாகையால்தான்.

(ஶம்) சிருஷ்டிக்கப்பட்ட பூதங்களில், அசுரசுவபாவ முடையவும் தைவசுவபாவமுடையவுமான இருவகை பூதங்கள். (என்றால், தைவசம்பத்தை யடையத் தகுந்தவர்களாய்ச் சிலரும், அசுரசம்பத்தை யடையத்தகுந்தவர்களாய்ச் சிலரும், சிருஷ்டிக்கப் படுகிறார்கள் என்பது தாத்பரியம்) இவ்வுலகத்திலென்றால், சமுசாரத்தில் என்று தாத்பரியம். "அபயம் ஸத்வஸம்ஶுத்தி:" (இந்த அத்தியாயம் முதல் சுலோகம்) முதல் இதுவரையில் தைவசம்பத்து சொல்லப்பட்டது. இனி இந்த அத்தியாயமுடிவுவரையில் அசுரசம்பத்து விஸ்தாரமாய்ச் சொல்லப்படுகிறது. ஏன் அப்படி விஸ்தாரமாய் அசுரசம்பத்தைச் சொல்லவேண்டுமென்றால் அதைத்தெரிந்து நிவர்த்திக்கும் பொருட்டாகத்தான்.

(ரா) கருமாசிரயமான இந்த உலகத்தில், கருமிகளான பூதங்களுடைய பிறப்பானது, தைவம் ஆசுரமென இருவகையாயிருக்கிறது. பூர்வகருமானுசாரமாய் பகவதாக்ஞைப்படிக்கு நடந்தவர்கள் தைவப்பிறவியென்றும், பகவதாக்ஞையை மீறி நடந்தவர்கள் அசுரப்பிறவியென்றும் சொல்லப்படுகிறார்கள். தைவ சம்பந்தமான பிறவியானது எந்த ஆசாரத்தை அனுஷ்டிக்கும்பொருட்டோ, அந்த ஆசாரமானது கருமயோகம் ஞானயோகம் பக்தியோகம் என்பவைகள்தான். இவைகள் முன்னமே விஸ்தாரமாக சொல்லப்பட்டிருக்கின்றன. அசுரசம்பத்தை யடைந்தவர்களுடைய ஆசாரத்தை விஸ்தாரமாய்ச் சொல்லுகிறேனென்பது தாத்பரியம். (௬)

---

௭. 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌂 𑌚 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌂 𑌚 𑌜𑌨𑌾 𑌨 𑌵𑌿𑌦𑍁𑌰𑌾𑌸𑍁𑌰𑌾𑌃।
𑌨 𑌶𑍌𑌚𑌂 𑌨𑌾𑌪𑌿 𑌚𑌾𑌚𑌾𑌰𑍋 𑌨 𑌸𑌤𑍍𑌯𑌂 𑌤𑍇𑌷𑍁 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇॥

| | |
|---|---|
| 𑌆𑌸𑍁𑌰𑌾𑌃 𑌜𑌨𑌾𑌃 | அசுரசுவபாவமுடையஜனங்கள் |
| 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌂 𑌚* | தருமத்தில்பிரவிருத்தியையும் |
| 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌂 𑌚† | அதருமத்தினின்றுநிவிருத்தியையும் |
| 𑌨 𑌵𑌿𑌦𑍁𑌃 | அறியமாட்டார்கள் |
| 𑌤𑍇𑌷𑍁 | அவர்களிடத்தில் |
| 𑌶𑍌𑌚𑌂‡ | சுத்தமென்பது |
| 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 | கிடையாது |
| 𑌆𑌚𑌾𑌰𑌶𑍍𑌚¶ | ஆசாரமும் |
| 𑌨 | கிடையாது |
| 𑌸𑌤𑍍𑌯𑌮𑌪𑌿 | சத்தியமுங்கூட |
| 𑌨 | கிடையாது. |

அசுர சுவபாவமுடைய ஜனங்கள் தருமத்தில் பிரவிருத்தியையும் அதருமத்தினின்று நிவிருத்தியையும் அறியமாட்டார்கள். அவர்

---

* (ஶா) எந்தப் புருஷார்த்தமான காரியத்தில் பிரவிருத்திக்க வேண்டியதோ அதையும். (ரா) 𑌅𑌭𑍍𑌯𑍁𑌦𑌯𑌸𑌾𑌧𑌨𑌂 = பரலோகசவுக்கியத்திற்கு அனுகூலமானது. (ஶ்ரீ,வி) சத்காரியங்களில் பிரவேசித்தலையும்.

† (ஶா) புருஷார்த்தத்திற்குக் கெடுதியானதை நிவர்த்திக்கவும். (ரா) மோக்ஷஸாதனம். (ஶ்ரீ,வி) துஷ்காரியங்களினின்று நிவர்த்தித்தலையும்.

‡ (ரா) சாஸ்திரப்படிக்குள்ள வைதிககருமானுஷ்டான யோக்கியதை.

¶ (ரா) சந்தியாவந்தனாதிகள். "𑌸𑌂𑌧𑍍𑌯𑌾𑌹𑍀𑌨𑍋𑌽𑌶𑍁𑌚𑌿𑌰𑍍𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌨𑌰𑍍𑌹𑌃 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌸𑍁 = காலைமாலைகளில் செய்யவேண்டிய சந்தியாவந்தனங்களை விட்டுவிட்டவன் அசுத்தன். (அவன்) மற்ற சகலகருமங்களுக்கும் அனர்ஹனாகிறான்"

களிடத்தில் சுத்தமாவது ஆசாரமாவது சத்தியமாவது கிடையாது (இருக்கமாட்டாது). (௭)

---

௮. 𑌅𑌸𑌤𑍍𑌯𑌮𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌂 𑌤𑍇 𑌜𑌗𑌦𑌾𑌹𑍁𑌰𑌨𑍀𑌶𑍍𑌵𑌰𑌮𑍍।
𑌅𑌪𑌰𑌸𑍍𑌪𑌰𑌸𑌂𑌭𑍂𑌤𑌂 𑌕𑌿𑌮𑌨𑍍𑌯𑌤𑍍𑌕𑌾𑌮𑌹𑍈𑌤𑍁𑌕𑌮𑍍॥

| | |
|---|---|
| 𑌤𑍇 | அந்த அசுரசுவபாவமுடையஜனங்கள் |
| 𑌜𑌗𑌤𑍍 | ஜகத்தானது |
| 𑌅𑌸𑌤𑍍𑌯𑌂 | வேதாதிப் பிரமாணங்களை யுடையதல்ல வென்றும் |
| 𑌅𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌂 | தருமாதருமங்களுடைய வியவஸ்தையை யுடையதல்லவென்றும் |
| 𑌅𑌨𑍀𑌶𑍍𑌵𑌰𑌂 | ஈசுவரனையுடையதல்ல (இதற்கு ஒருகருத்தா இல்லை) என்றும் |
| 𑌅𑌪𑌰𑌸𑍍𑌪𑌰𑌸𑌂𑌭𑍂𑌤𑌂 | ஸ்திரிபுருஷ சம்பந்தத்தினு லுண்டானதென்றும் |
| 𑌕𑌾𑌮𑌹𑍈𑌤𑍁𑌕𑌂 * | ஸ்திரி புருஷர்களுடைய காமத்தையே காரணமாக வுடையதென்றும் |
| 𑌅𑌨𑍍𑌯𑌤𑍍 𑌕𑌿𑌂 | வேறென்னகாரண மிருக்கிறதென்றும் |
| 𑌆𑌹𑍁𑌃 | சொல்லுகிறார்கள். |

அந்த அசுர சுவபாவமுடைய ஜனங்கள், ஜகத்தானது வேதாதிப் பிரமாணங்களை யுடையதல்லவென்றும், தருமாதருமங்களுடைய வியவஸ்தையை யுடையதல்லவென்றும், ஸ்திரி புருஷ சம்பந்தத்தினு லுண்டானதென்றும், ஸ்திரி புருஷர்களுடைய காமமே அதற்குக் காரணமென்றும், வேறென்னகாரண மிருக்கிறதென்றும், சொல்லுகிறார்கள்.

(௰) நிரீசுவரவாதிகளான சார்வாக மதஸ்தர்களிப்படிச் சொல்லுலுகிறார்கள்.

(௱) ஜகத்தானது பிரம்மத்தினு லுண்டானது பிரம்மத்துக்கு சரீரமானது, பிரம்மத்தோடு கூடினது, ஆகையால், அது பிரம்ம சுவரூபமானது என்று நாம் சொல்வதை அசுர ஜனங்கள் அப்படிச் சொல்வது வாஸ்தவமானதல்லவென்று சொல்லி ஆட்சேபிக்கிறார்கள். ஜகத்தானது பிரம்மத்தினிடத்தி லிருந்து, அதாவது - பிரம்மத்தையே ஆசிரயமாக வுடையதென்று நாம் சொல்வதை நிராகரித்து, 𑌅𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌂 — பிரம்மத்தினிடத்தி லில்லை என்கிறார்கள். அல்லது ஜகத்தானது ஆதிசேஷனுல் தரிக்கப்பட் டிருக்கிறதென்று நாம் சொல்

---

* (௱) 𑌕𑌾𑌮𑌹𑍈𑌤𑍁𑌕𑌾 - என்றுபாடம். அர்த்தபேதமில்லை.

வதைத் தடுத்து, 𑌅𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌂—ஆதிசேஷனால் தரிக்கப்பட்டிருக்கவில்லை யென்கிறார்கள். ஈசுவரன் நியாமகனென்று நாம் சொல்வதை தூஷித்து, 𑌅𑌨𑍀𑌶𑍍𑌵𑌰𑌂 — நியாமகனாக ஒரு ஈசுவரனில்லை யென்கிறார்கள். ஸ்திரி புருஷ சம்பந்தத்தினால் மனுஷிய பசு பக்ஷியாதிகளுண்டாவதாகக் காணப்படுகிறதே யன்றி, வேறே ஹேது ஒன்றிருப்பதாகக் காணப்படவில்லை யென்றும் சொல்லுகிறார்கள்.

(௨) (ஹீ,வி) "𑌅𑌸𑌤𑍍𑌯𑌂 𑌅𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌂 𑌅𑌨𑍀𑌶𑍍𑌵𑌰𑌂"— விஷ்ணுவினால் சிருஷ்டி ஸ்திதி செய்யப்படுவதாவது அவர் நியாமகனாயிருக்கிறதாவது இல்லையென்றும் "𑌅𑌪𑌰𑌸𑍍𑌪𑌰𑌸𑌂𑌭𑍂𑌤𑌂" — 𑌅𑌨𑍍𑌨𑌾𑌦𑍍𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 (அத்-௩, சு-௧௪.) என்கிறபடி ஒன்றிலிருந்து ஒன்று உண்டாகிற தென்பதுமில்லை என்றும், அசுராள் சொல்லுகிறார்கள். (ஹீ,வி) அல்லது கிளிஞ்சிலில் வெள்ளிபோல அசத்திய மென்றும் ஞானத்தினால் பொய்யாகிறபடியால் அப்பிரதிஷ்ட மென்றும், அவித்தியா பரிணாம மானதால் பரஸ்பர சம்பூத மல்லவென்றும், சத்துமல்ல அசத்துமல்லவென்றும் சொல்லுகிறார்கள். (அ)

---

௯. 𑌏𑌤𑌾𑌂 𑌦𑍃𑌷𑍍𑌟𑌿𑌮𑌵𑌷𑍍𑌟𑌭𑍍𑌯 𑌨𑌷𑍍𑌟𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑍋𑌽𑌲𑍍𑌪𑌬𑍁𑌦𑍍𑌧𑌯𑌃।
𑌪𑍍𑌰𑌭𑌵𑌨𑍍𑌤𑍍𑌯𑍁𑌗𑍍𑌰𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌃 𑌕𑍍𑌷𑌯𑌾𑌯 𑌜𑌗𑌤𑍋𑌽𑌹𑌿𑌤𑌾𑌃॥

| | |
|---|---|
| 𑌏𑌤𑌾𑌂 𑌦𑍃𑌷𑍍𑌟𑌿𑌂 | இந்தக் சார்வாகமதத்தை |
| 𑌅𑌵𑌷𑍍𑌟𑌭𑍍𑌯 | ஆசிரயித்து |
| 𑌨𑌷𑍍𑌟𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌃* | கெட்டமனதையுடையவர்களாயும் |
| 𑌅𑌲𑍍𑌪𑌬𑍁𑌦𑍍𑌧𑌯𑌃† | அற்பபுத்தியுடையவர்களாயும் |
| 𑌉𑌗𑍍𑌰𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌃‡ | குரூரமானகருமங்களையுடையவர்களாயும் |
| 𑌅𑌹𑌿𑌤𑌾𑌃§ | உலகவிரோதிகளாயுமிருக்கிறவர்கள் |

* (ஶாம்) பரலோகசாதனமான காரியங்களைச் செய்துகொள்ளாத கெட்ட சுவபாவமுடையவர்கள். (ரா) தேகத்திற்கு அந்நியமான ஆத்மா இல்லை யென்கிறவர்கள்.

† (ஶாம்) விஷயங்களிலேயே புத்தியைச் செலுத்துகிறவர்கள். (ஸ்ரீ) காணப்படுகிற வஸ்துக்களில்மட்டும் புத்தியைச் செலுத்துகிறவர்கள். (ரா) பாண்டம்போலிருக்கிற தேகத்தில் அதற்கன்னியமாய் ஆத்மா இருக்கிறானென்கிற ஞானமில்லாதவர்கள்.

‡ (ஶாம்) (ஸ்ரீ) உலகத்திலுள்ள பிராணிகளுக்குத் துன்பத்தை யுண்டாக்கத்தக்க கருமங்கள் செய்கிறவர்கள்.

§ (ரா) 𑌅𑌹𑌿𑌤𑌾𑌃 - என்று ... அசுபமான காரியங்களைச் செய்கிறவரென்பது அர்த்தம்.

ஜகத꞉ — பிரபஞ்சத்தினுடைய
க்ஷயாய — நாசத்தின்பொருட்டு
ப்ரபவந்தி* — உண்டாகிறார்கள்.

இந்தச் சார்வாகமதத்தை யாசிரயித்துக் கெட்டமனதை யுடையவர்களாயும், அற்பபுத்தியை யுடையவர்களாயும், குரூரமான கருமங்களை யுடையவர்களாயும், உலகவிரோதிகளாயு மிருக்கிறவர்கள், பிரபஞ்சத்தினுடைய நாசத்தின்பொருட்டு உண்டாகிறார்கள். (௯)

---

௧௰. காமமாஶ்ரித்ய துஷ்பூரம் தம்பமாநமதாந்விதா꞉।
மோஹாத்க்ருஹீத்வா(அ)ஸத்க்ராஹாந் ப்ரவர்தந்தே(அ)ஶுசிவ்ரதா꞉॥

துஷ்பூரம்† — நிரப்பத் தகாத
காமம்‡ — காமத்தை
ஆஶ்ரித்ய — ஆசிரயித்து (தழுவி)
தம்பமாநமதாந்விதா꞉ — டம்பம், கர்வம், மதம், இவைகளுடன் கூடியவர்களாயும்
அஶுசிவ்ரதா꞉§ — அசுத்தமான விரதத்தை யுடைத்தானவர்களாயு மிருக்கிறவர்கள்
மோஹாத்¶ — அக்ஞானத்தினால்
அஸத்க்ராஹாந் க்ருஹீத்வா $ — துராக்கிரகங்களை அவலம்பித்துக்கொண்டு
ப்ரவர்தந்தே || — பிரவிருத்திக்கிறார்கள்.

சம்பூர்ண மாகாத காமத்தை யாசிரயித்து, டம்பம் அகங்காரம் கர்வம் இவைகளுடன் கூடினவர்களாயும், அசுத்தமான விரதத்தை யுடைத்தானவர்களாயு மிருக்கிறவர்கள், அக்ஞானத்தினால் துராக்கிரகங்களை கிரகித்துக்கொண்டு (துராக்கிரகங்களுடன் கூடினவர்களாய்) பிரவிருத்திக்கிறார்கள். (௧௰)

---

* (ஸ்ரீ,வி) கலியுகத்தின் ஆதியிலுண்டா யிருக்கிறார்கள்.

† - ‡ (ரா) தன்னா லடையத்தகாத வஸ்துக்கள் விஷயமான இச்சை. (ஸ்வா) அளவற்ற ஆசை.

§ (ஸ்ரீ) மது மாம்ஸங்களை புஜிக்கிற விரதங்களை யுடையவர்கள். (ரா) சாஸ்திரவிஷித்தமான விரதங்களைச் செய்கிறவர்கள்.

¶ (ஸ்ரீ,வி) மித்தியாஞான சுவபாவமடைந்து.

$ (ரா) அக்கிரமமாய் சம்பாதித்தவைகளை யடைந்து. (ஸ்ரீ,வி) துர்சாஸ்திரங்களைக் கற்று அதினாலுண்டான விபரீதஞானத்தை யடைந்து.

|| (மா) லோகத்தில் சஞ்சரிக்கிறார்கள்.

௧௧. 𑌚𑌿𑌨𑍍𑌤𑌾𑌮𑌪𑌰𑌿𑌮𑍇𑌯𑌾𑌞𑍍𑌚 𑌪𑍍𑌰𑌲𑌯𑌾𑌨𑍍𑌤𑌾𑌮𑍁𑌪𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃।
𑌕𑌾𑌮𑍋𑌪𑌭𑍋𑌗𑌪𑌰𑌮𑌾 𑌏𑌤𑌾𑌵𑌦𑌿𑌤𑌿 𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑌾𑌃॥

௧௨. 𑌆𑌶𑌾𑌪𑌾𑌶𑌶𑌤𑍈𑌰𑍍𑌬𑌦𑍍𑌧𑌾𑌃 𑌕𑌾𑌮𑌕𑍍𑌰𑍋𑌧𑌪𑌰𑌾𑌯𑌣𑌾𑌃।
𑌈𑌹𑌨𑍍𑌤𑍇 𑌕𑌾𑌮𑌭𑍋𑌗𑌾𑌰𑍍𑌥𑌮𑌨𑍍𑌯𑌾𑌯𑍇𑌨𑌾𑌰𑍍𑌥𑌸𑌞𑍍𑌚𑌯𑌾𑌨𑍍॥

| | |
|---|---|
| 𑌅𑌪𑌰𑌿𑌮𑍇𑌯𑌾𑌂 | அளவிடக்கூடாதவும் |
| 𑌪𑍍𑌰𑌲𑌯𑌾𑌨𑍍𑌤𑌾𑌂* | மரணம்வரையில் தொடர்ந்து வருகிறவுமான |
| 𑌚𑌿𑌨𑍍𑌤𑌾𑌂 | சிந்தையை (கவலையை) |
| 𑌉𑌪𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃 | அடைந்தவர்களாயும் |
| 𑌕𑌾𑌮𑍋𑌪𑌭𑍋𑌗𑌪𑌰𑌮𑌾𑌃 | காம அனுபவத்தையே புருஷார்த்தமாக எண்ணினவர்களாயும் |
| 𑌏𑌤𑌾𑌵𑌦𑌿𑌤𑌿¶ | இவ்வளவுதானென்று |
| 𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑌾𑌶𑍍𑌚 | நிச்சயித்தவர்களாயும் |
| 𑌆𑌶𑌾𑌪𑌾𑌶𑌶𑌤𑍈𑌃 | ஆசையாகிற அநேகங் கயிறுகளால் |
| 𑌬𑌦𑍍𑌧𑌾𑌃 | கட்டப்பட்டவர்களாயும் |
| 𑌕𑌾𑌮𑌕𑍍𑌰𑍋𑌧𑌪𑌰𑌾𑌯𑌣𑌾𑌃 | காமக்குரோதங்களை முக்கியமாய் ஆசிரயித்தவர்களாயு மிருக்கிறவர்கள் |
| 𑌕𑌾𑌮𑌭𑍋𑌗𑌾𑌰𑍍𑌥𑌂 | காமபோகத்திற்காகவே |
| 𑌅𑌨𑍍𑌯𑌾𑌯𑍇𑌨 | அநியாயத்தினால் |
| 𑌅𑌰𑍍𑌥𑌸𑌞𑍍𑌚𑌯𑌾𑌨𑍍 | திரவியக்குப்பல்களை |
| 𑌈𑌹𑌨𑍍𑌤𑍇§ | இச்சிக்கிறார்கள். |

அளவிடக்கூடாதவும், மரணவரையில் தொடர்ந்து வருகிறவுமான சிந்தையை அடைந்தவர்களாயும், காம அனுபவமே புருஷார்த்தம் என்று எண்ணினவர்களாயும், இவ்வளவுதான் (சிற்றின்ப அனுபவமே முடிவான பிரயோஜனம் அதைவிட சிரேஷ்டமான பிரயோஜனங் கிடையாது) என்கிற நிச்சயத்தை யுடையவர்களாயும், ஆசையாகிற அநேகங் கயிறுகளால் கட்டப்பட்டவர்களாயும், காமக்குரோதங்களை முக்கியமா யாசிரயித்தவர்களாயு மிருக்கிறவர்கள், காமத்தை அனுபவிக்கிறதற்காகவே அநியாயத்தினால் (திருட்டுமுதலிய துஷ்கிருத்தியத்தினால்) திரவியக்குப்பல்களை இச்சிக்கிறார்கள். (௧௧, ௧௨)

* (ரா) பிராகிருதப் பிரளயம் வரையிலும், 𑌚𑌿𑌨𑍍𑌤𑌾𑌂 = சிந்தையை, 𑌉𑌪𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃 = உடையவர்களாயும்.

¶ (ஸ்ரீ,வி) காமபோகத்தைத்தவிர வேறே சுவர்க்காதி போகங்கள் கிடையாதென்று.

§ (ஸா) முயற்சிசெய்கிறார்கள்.

௧௩. 𑌇𑌦𑌮𑌦𑍍𑌯 𑌮𑌯𑌾 𑌲𑌬𑍍𑌧𑌮𑌿𑌮𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑍇 𑌮𑌨𑍋𑌰𑌥𑌮𑍍।
𑌇𑌦𑌮𑌸𑍍𑌤𑍀𑌦𑌮𑌪𑌿 𑌮𑍇 𑌭𑌵𑌿𑌷𑍍𑌯𑌤𑌿 𑌪𑍁𑌨𑌰𑍍𑌧𑌨𑌮𑍍॥

௧௪. 𑌅𑌸𑍌 𑌮𑌯𑌾 𑌹𑌤𑌃 𑌶𑌤𑍍𑌰𑍁𑌰𑍍𑌹𑌨𑌿𑌷𑍍𑌯𑍇 𑌚𑌾𑌪𑌰𑌾𑌨𑌪𑌿।
𑌈𑌶𑍍𑌵𑌰𑍋𑌽𑌹𑌮𑌹𑌂 𑌭𑍋𑌗𑍀 𑌸𑌿𑌦𑍍𑌧𑍋𑌽𑌹𑌂 𑌬𑌲𑌵𑌾𑌨𑍍𑌸𑍁𑌖𑍀॥

௧௫. 𑌆𑌢𑍍𑌯𑍋𑌽𑌭𑌿𑌜𑌨𑌵𑌾𑌨𑌸𑍍𑌮𑌿 𑌕𑍋𑌽𑌨𑍍𑌯𑍋𑌽𑌸𑍍𑌤𑌿 𑌸𑌦𑍃𑌶𑍋 𑌮𑌯𑌾।
𑌯𑌕𑍍𑌷𑍍𑌯𑍇 𑌦𑌾𑌸𑍍𑌯𑌾𑌮𑌿 𑌮𑍋𑌦𑌿𑌷𑍍𑌯 𑌇𑌤𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌿𑌮𑍋𑌹𑌿𑌤𑌾𑌃॥

௧௬. 𑌅𑌨𑍇𑌕𑌚𑌿𑌤𑍍𑌤𑌵𑌿𑌭𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌾 𑌮𑍋𑌹𑌜𑌾𑌲𑌸𑌮𑌾𑌵𑍃𑌤𑌾𑌃।
𑌪𑍍𑌰𑌸𑌕𑍍𑌤𑌾𑌃 𑌕𑌾𑌮𑌭𑍋𑌗𑍇𑌷𑍁 𑌪𑌤𑌨𑍍𑌤𑌿 𑌨𑌰𑌕𑍇𑌽𑌶𑍁𑌚𑍌॥

| | |
|---|---|
| 𑌇𑌦𑌂 | இந்தப்பொருளானது |
| 𑌅𑌦𑍍𑌯 | இப்போது |
| 𑌮𑌯𑌾 | என்னாலே |
| 𑌲𑌬𑍍𑌧𑌂 | அடையப்பட்டது |
| 𑌇𑌮𑌂 𑌮𑌨𑍋𑌰𑌥𑌂 | இந்தக் கோரிக்கையை |
| 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑍇 | அடைவேன் |
| 𑌇𑌦𑌂 | இந்தப்பொருளானது |
| 𑌅𑌸𑍍𑌤𑌿 | இருக்கிறது |
| 𑌇𑌦𑌂 𑌧𑌨𑌂 | இந்தப்பொருளுங்கூட |
| 𑌮𑍇 | எனக்கு |
| 𑌪𑍁𑌨𑌃 | பின்னும் |
| 𑌭𑌵𑌿𑌷𑍍𑌯𑌤𑌿 | உண்டாகும் |
| 𑌅𑌸𑍌 𑌶𑌤𑍍𑌰𑍁𑌃 | இந்தச் சத்துருவானவன் |
| 𑌮𑌯𑌾 | என்னாலே |
| 𑌹𑌤𑌃 | கொல்லப்பட்டான் |
| 𑌅𑌪𑌰𑌾𑌨𑌪𑌿 | மற்றவர் (சத்துருக்கள்) களையும் |
| 𑌹𑌨𑌿𑌷𑍍𑌯𑍇 | கொல்லுவேன் |
| 𑌅𑌹𑌂 | நான் |
| 𑌈𑌶𑍍𑌵𑌰𑌃 | சாமர்த்தியமுடையவன் அல்லது பிரபு |
| 𑌅𑌹𑌂 | நான் |
| 𑌭𑍋𑌗𑍀 | போகத்தையனுபவிக்கிறவன் |
| 𑌅𑌹𑌂 | நான் |

| | |
|---|---|
| ஸித்த:* | உத்தேசித்தபடி காரியங்களைநிறைவேற்று கிறவன் |
| பலவாந் | பெலமுள்ளவனும் |
| ஸுகீ | சுகமுடையவனும் |
| ஆட்ய: | சம்பத்துடையவனும் |
| அபிஜநவாந்† | உயர்குலத்தோனும் |
| அஸ்மி | இருக்கிறேன் |
| மயா | என்னுடன் |
| ஸத்ருஶ: | சமானவன் |
| அந்ய: | வேறே |
| க: | எவன் |
| அஸ்தி | இருக்கிறான் |
| யக்ஷ்யே‡ | யாகஞ்செய்வேன் |
| தாஸ்யாமி§ | தானஞ்செய்வேன் |
| மோதிஷ்யே | சந்தோஷப்படுவேன் |
| இதி | இவ்விதமாய் |
| அஜ்ஞாநவிமோஹிதா: | அக்ஞானத்தினால் மோகித்தவர்களாயும் |
| அநேகசித்தவிப்ராந்தா: | பலவித சஞ்சலத்துடன் கூடியமனதினால் பிரமையடைந்தவர்களாயும் |
| மோஹஜாலஸமாவ்ருதா:¶ | மோகவலையினால் சூழப்பட்டவர்களாயும் |
| காமபோகேஷு | விஷயபோகங்களிலே |
| ப்ரஸக்தா: | அதிக ஆசை யுடையவர்களாயு மிருப்பவர்கள் |
| அஶுசௌ | அசுத்தமான |
| நரகே | நரகத்தில் |
| பதந்தி | விழுகிறார்கள். |

இந்தப்பொருளானது இப்போது என்னால் அடையப்பட்டது. இந்தக் கோரிக்கையை யடைவேன், இந்தப் பொருளான தெனக்கிரு

* (ஶம்) புத்திரபௌத்திராதி சம்பன்னன்.

† (ஶம்) ஏழுதலைமுறையாய் சிஷ்டாசாரமுள்ள குலத்தில் பிறந்தவன்.

‡ (ஶம்) நான் அதிகமாய் யாகங்களைச்செய்து என்னைப்போல் யாகஞ்செய்யாத மற்றவர்களை அவமானமடையும்படி செய்வேன்.

§ (ஶம்) (ஸ்ரீ) என்னைப் புகழ்கிறவர்களுக்குக் கொடுப்பேன். (ஶம்) நாட்டியம் முதலியவைகளுக்குக் கொடுப்பேன். (ஸ்ரீ,வி) மிகவுமதிகமாக தக்ஷிணை கொடுப்பேன்; அன்னதானம் செய்வேன்.

¶ (ஸ்ரீ,வி) புத்திர பௌத்திராதிகளிடத்தில் அபிமானம் கொண்டிருப்பது.

க்கிறது (என்றால், வேறே ஒருவருக்கு மில்லை), இந்தப் பொருளுங் கூட எனக்குப் பின்னுமுண்டாகும், இந்தச் சத்துருவானவன் என்னாலே கொல்லப்பட்டான், மற்றச் சத்துருக்களையும் கொல்லுவேன், நான் சாமர்த்தியமுடையவன், நான் போகத்தை யனுபவிக்கிறவன், நான் உத்தேசித்தபடி காரியங்களை நிறைவேற்றுகிறவன், பெலனுள்ளவனு யும் சுகமுடையவனுயும் சம்பத்துடையவனுயும் உயர்குலத்தோனுயு மிருக்கிறேன், எனக்குச் சமானமானவன் வேறே எவனிருக்கிறான், யாகஞ்செய்யப்போகிறேன், தானம் செய்யப்போகிறேன், சந்தோஷ மடையப் போகிறேன், என்று இவ்விதமாய் அஞ்ஞானத்தினாலே மோகமடைந்தும் மோகவலையினால் சூழப்பட்டும் பலவித சஞ்சலத் துடன் கூடியமனதினால் பிரமையடைந்தும் விஷய போகங்களிலே அதிக ஆசை யுடையவர்களாயும் இருப்பவர்கள் அசுத்தமான நரகத் தில் விழுகிறார்கள்.

(ஶ்ரு) "தேந விநா த்ருணமபி ந சலதி — அதினால் (பரமாத்மாவி னால்) அன்றியில் துரும்புகூட அசையாது" என்கிற வாக்கியத்தை நம்பாமல், தானே சகலத்தையும் செய்ததாயும், செய்கிறதாயும், செய் வதாயும் சகல வல்லமையும் தன்னிடத்தி லிருக்கிறதாயும் எண்ணி, ஈசுவரனும் சகலத்திற்கும் கருத்தாவாயும் ஒரு பரமாத்மா உண்டென் பதை நம்பாம லிருப்பவன், நரகத்தை யடைவானென்பது இதினால் வெளியிடப்பட்டது. (௧௩, ௧௪, ௧௫, ௧௬)

---

௧௭. ஆத்மஸம்பாவிதா: ஸ்தப்தா தநமாநமதாந்விதா:।
யஜந்தே நாமயஜ்ஞைஸ்தே தம்பேநாவிதிபூர்வகம்॥

௧௮. அஹங்காரம் பலம் தர்பம் காமம் க்ரோதம் ச ஸம்ஶ்ரிதா:।
மாமாத்மபரதேஹேஷு ப்ரத்விஷந்தோऽப்யஸூயகா:॥

௧௯. தாநஹம் த்விஷத: க்ரூராந் ஸம்ஸாரேஷு நராதமாந்।
க்ஷிபாம்யஜஸ்ரமஶுபாநாஸுரீஷ்வேவ யோநிஷு॥

ஆத்மஸம்பாவிதா: — தற்புகழுடையவர்களாயும்
ஸ்தப்தா:* — வணக்கமற்றவர்களாயும்
தநமாநமதாந்விதா:† — பொருளினாலுண்டான கர்வம் மதம் இவைகளுடன் கூடினவர்களாயும்

---

* (ரா) தமக்கு யாதொரு விஷயத்திலும் குறைவில்லையென்று எண்ணு கிறவர்கள்.

† (ரா) தனத்தினாலும் வித்தையினாலும் உயர்குலத்தினாலும் உண்டான மதம் அகங்காரம் அல்லது கர்வமுடையவர்கள்.

| | |
|---|---|
| 𑌅𑌹𑌙𑍍𑌕𑌾𑌰𑌂 | அகங்காரத்தையும் |
| 𑌬𑌲𑌂 | பெலத்தையும் |
| 𑌦𑌰𑍍𑌪𑌂* | அகந்தை அல்லது இறுமாப்பையும் |
| 𑌕𑌾𑌮𑌂 | ஆசையையும் |
| 𑌕𑍍𑌰𑍋𑌧𑌞𑍍𑌚 | கோபத்தையும் |
| 𑌸𑌂𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃 | ஆசிரயித்தவர்களாயும் |
| 𑌆𑌤𑍍𑌮𑌪𑌰𑌦𑍇𑌹𑍇𑌷𑍁† | தம்முடையவும் பிறருடையவும் தேகங்களிலேயிருக்கிற |
| 𑌮𑌾𑌂‡ | என்னை |
| 𑌪𑍍𑌰𑌦𑍍𑌵𑌿𑌷𑌨𑍍𑌤𑌃§ | துவேஷிக்கிறவர்களாயும் |
| 𑌅𑌭𑍍𑌯𑌸𑍂𑌯𑌕𑌾𑌃¶ | அவதூறுசெய்கிறவர்களாயுமிருக்கிற |
| 𑌤𑍇 | அவர்கள் |
| 𑌦𑌮𑍍𑌭𑍇𑌨‖ | டம்பத்தினால் |
| 𑌅𑌵𑌿𑌧𑌿𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌂 | வேதவிதிப்படியல்லாமல் |
| 𑌨𑌾𑌮𑌯𑌜𑍍𑌞𑍈𑌃 𑌯𑌜𑌨𑍍𑌤𑍇 + | பெயருக்குமாத்திர மெக்ஞமென்கிற கிரியைகளைச் செய்கிறார்கள் |
| 𑌦𑍍𑌵𑌿𑌷𑌤𑌃 | துவேஷமுடையவர்களாயும் |

* (ரா) எனக்குச் சமானமானவனில்லை யென்று நினைப்பது.

† - ‡ - § (ஸ்ரீ) தம்முடைய (என்னைத் துவேஷிக்கிறவர்களுடைய) ஆத்மாவும் அந்நியனுடைய ஆத்மாவும் சித் சுவரூபமாகிய நானே யாகையால், தம்மைத் துவேஷித்தாலும் பிறனைத் துவேஷித்தாலும் என்னைத் துவேஷித்தவர்களாகிறார்கள். மேலும் வேதோக்தமான யக்ஞத்தில் பசுஹிம்சை தோஷ மில்லாவிட்டாலும் வேதவிரோதமானயக்ஞத்தில் செய்யும் பசுஹிம்சை தோஷமே. அந்தஹிம்சையானது பசுரூபமான என்னை ஹிம்சித்ததாகிறது. ஆகையால், அவன் துவேஷியாகிறான். (ரா) சகல வஸ்துக்களிலுமிருக்கிற என்னை, குதர்க்கம் செய்து, நானில்லை நான் சர்வவியாபியல்ல சர்வசக்தியுள்ளவனல்ல என்று தூஷிக்கிறவர்கள்.

§ (மது) என் ஆக்ஞையை உல்லங்கனம் செய்வதினால் விரோதிகளாகிறார்கள். (நீ,வி) பகவானொருவனிருக்கிறதும் அவர் நியாமகரென்பதும் நிஜமானால் நான் செய்யுமிந்தக்காரியத்தைத் தடுக்கட்டும், அல்லது இன்னகாரியத்தை செய்யட்டுமென்று சொல்வதுதான் துவேஷம்.

¶ (ஸ்ரீ) சன்மார்க்கத்திலிருக்கிற பெரியோர்களிடத்தில் தோஷஞ்சொல்லுகிறவர்கள். (நீ,வி) சுவாமியேயில்லை என்று வாதிக்கும் வாதமாகிய அசூயையுள்ளவர்கள். (ரா) (மது) அசூயைப்படுகிறவர்கள்.

‖ (நீ,வி) தான் எல்லாரைப்பார்க்கிலும் சிரேஷ்டனென்று காட்டிக்கொள்வதினால்.

+ (ரா) யக்ஞம் செய்தானென்கிற பெயர் உண்டாகும் பொருட்டுச் செய்கிற யக்ஞங்களினாலே.

𑌕𑍍𑌰𑍂𑌰𑌾𑌨𑍍 குரூரசுவபாவமுள்ளவர்களாயும்
𑌅𑌶𑍁𑌭𑌾𑌨𑍍 அசுத்தமானவர்களாயும்
𑌨𑌰𑌾𑌧𑌮𑌾𑌨𑍍 மனிதரில் கடையோர்களாயுமிருக்கிற
𑌤𑌾𑌨𑍍 அப்படிப்பட்டவர்களை
𑌸𑌂𑌸𑌾𑌰𑍇𑌷𑍁 ஜனனமரணமார்க்கங்களிலே
𑌆𑌸𑍁𑌰𑍀𑌷𑍁 𑌯𑍋𑌨𑌿𑌷𑍍𑌵𑍇𑌵 } * அசுரயோநிகளிலேயே
𑌅𑌜𑌸𑍍𑌰𑌂 எப்பவும்
𑌅𑌹𑌂 நான்
𑌕𑍍𑌷𑌿𑌪𑌾𑌮𑌿 எறிகிறேன் (ஜனிப்பிக்கிறேன்).

தற்புகழுடையவர்களாயும், வணக்கமற்றவர்களாயும், பொருளினு லுண்டான கர்வம் மதம் இவைகளுடன் கூடினவர்களாயும், அகங்காரம் பெலம் இறுமாப்பு ஆசை கோபம் இவைகளை ஆசிரயித்தவர்களாயும், தம்முடையவும் பிறருடையவும் தேகத்திலே அந்தரியாமியாயிருக்கிற (பரமாத்மாவாகிய) என்னைத் துவேஷிக்கிறவர்க ளாயும், (என்னை) அவதூறு செய்கிறவர்களாயு மிருக்கிற அவர்கள் டம்பத்தினல் வேதவிதிப்படி யல்லாத பெயருக்குமாத்திர மெக்ஞமென்கிற கிரியைகளைச் செய்கிறார்கள். துவேஷ முடையவர்களாயும், குரூர சுவபாவ முள்ளவர்களாயும், அசுத்தமானவர்களாயும், மனிதரில் கடையோராயு மிருக்கிற அவர்களை ஜனனமரண மார்க்கங்களில் அசுரயோநிகளிலேயே எப்பவும் நான் ஜனிப்பிவிக்கிறேன். (கஎ,கஅ,கக)

---

உ௦. 𑌆𑌸𑍁𑌰𑍀𑌂 𑌯𑍋𑌨𑌿𑌮𑌾𑌪𑌨𑍍𑌨𑌾 𑌮𑍂𑌢𑌾 𑌜𑌨𑍍𑌮𑌨𑌿 𑌜𑌨𑍍𑌮𑌨𑌿।
𑌮𑌾𑌮𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑍈𑌵 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌤𑌤𑍋 𑌯𑌾𑌨𑍍𑌤𑍍𑌯𑌧𑌮𑌾𑌂 𑌗𑌤𑌿𑌮𑍍॥

𑌹𑍇 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 ஓ! குந்திபுத்திரா!
𑌜𑌨𑍍𑌮𑌨𑌿 𑌜𑌨𑍍𑌮𑌨𑌿 ஒவ்வொருஜன்மத்திலேயும்
𑌆𑌸𑍁𑌰𑍀𑌂 𑌯𑍋𑌨𑌿𑌂 } † அசுரசுவபாவமானபிறவியை
𑌆𑌪𑌨𑍍𑌨𑌾𑌃 அடைந்த
𑌮𑍂𑌢𑌾𑌃 மூடர்கள்
𑌮𑌾𑌂 என்னை

---

* (ஸ்ரீ) (ஶம்) குரூரமான புலிமுதலிய ஜன்மங்களில். (ரா) எனக்குப்பிரதிகூலமாயிருக்கிற, அதாவது என்னைத் துவேஷித்துக் கொண்டே யிருக்கிற ஜன்மங்களிலேயே.

† (ரா) எனக்குப் பிரதிகூலமான ஜன்மத்தை. (என்னை விரோதிக்கிற ஜன்மத்தை.)

| | |
|---|---|
| அப்ராப்யைவ* | அடையாமல்தானே |
| தத: | அதைக்காட்டிலும் |
| அதமாம் கதிம் } † | நீசமானஜன்மங்களை |
| யாந்தி | அடைகிறார்கள். |

ஓ! குந்திபுத்திரா! ஒவ்வொரு ஜன்மத்திலேயும் அசுரப்பிரவியையடைந்த மூடர்கள், என்னை யடையாமல்தானே அதைக்காட்டிலும் (அசுர ஜன்மத்தைக்காட்டிலும்) நீசமான (தாழ்ந்த) ஜன்மங்களையடைகிறார்கள். (உ0)

---

உக. த்ரிவிதம் நரகஸ்யேதம் த்வாரம் நாசநமாத்மந:।
காம: க்ரோதஸ்ததா லோபஸ்தஸ்மாதேதத்த்ரயம் த்யஜேத்॥

| | |
|---|---|
| காம: | காமம் (ஆசை) |
| க்ரோத: | குரோதம் (கோபம்) |
| ததா | அப்படியே |
| லோப: | உலோபம் (பொருளாசை அல்லது பிறர் பொருளில் அவா) |
| த்ரிவிதம் | மூன்றுவிதமான |
| இதம் | இவைகள் |
| நரகஸ்ய | நரகத்திற்கு |
| த்வாரம்‡ | வாசலாயும் |
| ஆத்மந:§ | தனக்கு |
| நாசநம்¶ | நாசத்தைக்கொடுக்க ஏதுவாயு மிருக்கின்றன |
| தஸ்மாத் | ஆகையினாலே |
| ஏதத் த்ரயம் } | இந்தமூன்றையும் |
| த்யஜேத் | விட்டுவிடவேண்டும். |

---

* (ரா) நான் ஒருவனிருக்கிறேனென்கிற ஞான மில்லாமலே.

† (ஸ்ரீ) கிருமி கீடாதிஜன்மங்களை. (மது) நிகிருஷ்டமான ஜன்மங்களை (நீ.வி) நித்திய நரகத்தை.

‡ (ரா) ஏதுவாயும். (நீ,வி) சாதனமாயும்.

§ - ¶ (மது) ஒருபுருஷார்த்தத்திற்கும் யோக்கியமில்லாமல்தன் ஆத்மாவைக் கெடுக்கின்றன வாயும். (ரா) தன் சுவருபத்தை யடையாமல் செய்கின்றன. (நீ,வி) அனர்த்தத்தை அடைவிக்கின்றன.

ஆசை கோபம் உலோபம் என மூன்றுவிதமான இவைகள் நரகத்திற்கு வாசலாயும், தனக்கு நாசத்தை (கெடுதியை)க் கொடுக்க ஹேதுவாயு மிருக்கின்றன. ஆகையா லிந்த மூன்றையும் விட்டுவிட வேண்டும்.

(ஸ்ரீ) (மீ,வி) அசுர சுவபாவத்திற்குள்ள அநேக தோஷங்களில் முக்கியமான மூன்று தோஷங்கள் ஆத்மநாசத்திற்குக் காரணமாகையால், அவைகளை அவசியம் நீக்கவேண்டு மென்பது இதினால் வெளியிடப்பட்டது. (௨௧)

---

௨௨. ஏதைர்விமுக்த꞉ கௌந்தேய தமோத்வாரைஸ்த்ரிபிர்நர꞉।
ஆசரத்யாத்மந꞉ ஶ்ரேயஸ்ததோ யாதி பராம் கதிம்॥

| | |
|---|---|
| கௌந்தேய | ஓ! குந்திபுத்திரா! |
| தமோத்வாரை꞉ | நரகத்திற்குக்காரணமான |
| ஏதை꞉ த்ரிபி꞉ | இந்த மூன்றுகளினாலே |
| விமுக்த꞉ | விடப்பட்ட |
| நர꞉ | மனுஷியன் |
| ஆத்மந꞉ | தனக்கு |
| ஶ்ரேய꞉ ஆசரதி * | நன்மையைச்செய்துகொள்ளுகிறான் |
| தத꞉ | அதினாலே |
| பராம் கதிம் † | மோக்ஷத்தை |
| யாதி‡ | அடைகிறான். |

ஓ! குந்திபுத்திரா! நரகத்திற்குக் காரணமான இந்த (காமக்குரோத லோபம்) மூன்றுகளினாலே விடப்பட்ட மனிதன், தனக்கு நன்மையைச் செய்துகொள்ளுகிறான், அதினாலே மோக்ஷத்தையடைகிறான். (௨௨)

---

௨௩. ய꞉ ஶாஸ்த்ரவிதிமுத்ஸ்ருஜ்ய வர்ததே காமகாரத꞉।
ந ஸ ஸித்திமவாப்நோதி ந ஸுகம் ந பராம் கதிம்॥

---

* (ரா) என்விஷயமான ஞானத்தை அடைந்து என்னை ஆராதிக்கிறதில் பிரவிருத்திக்கிறான். (மீ,வி) புருஷார்த்த சாதனத்தை அனுஷ்டிக்கிறான்.

† - ‡ (ரா) என்னை யடைகிறான்.

𑌯𑌃 — எவன்
𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌧𑌿𑌂 * — சாஸ்திரோக்தமான தருமத்தை
𑌉𑌤𑍍𑌸𑍃𑌜𑍍𑌯 — விட்டு
𑌕𑌾𑌮𑌕𑌾𑌰𑌤𑌃 — மனோபீஷ்டப்படி
𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 — பிரவிருத்திக்கிருனோ (நடக்கிருனோ)
𑌸𑌃 — அவன்
𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 † — தத்துவஞானத்தை
𑌨𑌾𑌵𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 — அடைகிறதில்லை
𑌸𑍁𑌖𑌂 ‡ — சுகத்தை
𑌨 — அடைகிறதில்லை
𑌪𑌰𑌾𑌂 𑌗𑌤𑌿𑌂 } ¶ — மோக்ஷத்தை
𑌨 — அடைகிறதில்லை.

எவன் சாஸ்திரோக்தமான தருமத்தைவிட்டு சுயேச்சையாய் பிரவிருத்திக்கிருனோ, அவன் தத்துவஞானத்தையாவது சுகத்தையாவது மோக்ஷத்தையாவது அடைகிறதில்லை. (உங)

---

உச. 𑌤𑌸𑍍𑌮𑌾𑌚𑍍𑌛𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌂 𑌤𑍇 𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌕𑌾𑌰𑍍𑌯𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑍌 ।
𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌧𑌾𑌨𑍋𑌕𑍍𑌤𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌕𑌰𑍍𑌤𑍁𑌮𑌿𑌹𑌾𑌰𑍍𑌹𑌸𑌿 ॥

𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 — ஆகையினாலே
𑌤𑍇 — உனக்கு
𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌕𑌾𑌰𑍍𑌯𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑍌 — { செய்யத்தகுந்தது செய்யத்தகாதது என்கிற வியவஸ்தையில்
𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 — சாஸ்திரமானது
𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌂 — பிரமாணமாயிருக்கிறது
𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌧𑌾𑌨𑍋𑌕𑍍𑌤𑌂 — சாஸ்திரவிதியில் சொல்லப்பட்டதை

---

* (𑌶𑌂) சாஸ்திரத்திலுள்ள விதி நிஷேதங்களை. (ரா) வேதரூபமான என் கட்டளையை.

† (𑌶𑌂) புருஷார்த்தத்திற்கு வேண்டியயோக்கியதையை. (ரா) சுவர்க்காதி பலத்தை. (ஶ்ரீ,வீ) புருஷார்த்தத்திற்கு வேண்டிய சாதனங்களை.

‡ (𑌶𑌂) (ஶ்ரீ,வீ) இந்த உலகசுகத்தை.

¶ (𑌶𑌂) சுவர்க்கத்தையாவது மோக்ஷத்தையாவது.

| | |
|---|---|
| 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 | அறிந்து |
| 𑌇𑌹 | இந்த உலகத்தில் |
| 𑌕𑌰𑍍𑌮 | கருமத்தை |
| 𑌕𑌰𑍍𑌤𑍁𑌮𑍍 | செய்கிறதற்கு |
| 𑌅𑌰𑍍𑌹𑌸𑌿 | யோக்கியனாயிருக்கிறாய். |

ஆகையினாலே, உனக்குச் செய்யத்தகுந்ததிது, செய்யத்தகாததிது, என்பதில் (சுருதி ஸ்மிருதி இதிஹாஸ*புராணங்களாகிய) சாஸ்திரமானது பிரமாணமா யிருக்கிறது. சாஸ்திரத்தில் விதிக்கப்பட்டிருக்கிறதை அறிந்து, இந்த உலகத்தில் கருமத்தைச் செய்கிறதற்கு யோக்கியனாயிருக்கிறாய். (இந்த பூலோகத்தில் முமுக்ஷுக்கள் கருமத்தினாலேயே சித்த சுத்தியையும் அதினாலே ஞானத்தையும் அதினாலே மோக்ஷத்தையும் அடையவேண்டியவர்களானதினாலும், நீ கருமாதிகாரியா யிருக்கிறதினாலும், சாஸ்திரோக்தமான கருமத்தைக் கிரமப்படி செய்யவேண்டியதென்பது கருத்து.) (௨௪)

𑍐 𑌤𑌤𑍍𑌸𑌦𑌿𑌤𑌿 𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌭𑌗𑌵𑌦𑍍𑌗𑍀𑌤𑌾𑌸𑍂𑌪𑌨𑌿𑌷𑌤𑍍𑌸𑍁 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌯𑌾𑌂

𑌯𑍋𑌗𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇 𑌶𑍍𑌰𑍀𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌰𑍍𑌜𑍁𑌨𑌸𑌂𑌵𑌾𑌦𑍇

𑌦𑍈𑌵𑌾𑌸𑍁𑌰𑌸𑌮𑍍𑌪𑌦𑍍𑌵𑌿𑌭𑌾𑌗𑌯𑍋𑌗𑍋 𑌨𑌾𑌮

𑌷𑍋𑌡𑌶𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃.

𑌶𑍍𑌰𑍀𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌯 𑌪𑌰𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍇 𑌨𑌮𑌃.

தைவாஸுரஸம்பத்விபாகயோகமென்கிற

பதினாறுவது அத்தியாயம்

முற்றிற்று.

---

* (ஸூ) இதிஹாஸம், என்பது மகா பாரதம்போலொத்தது.

ஶ்ரீரஸ்து.

ஸப்தத³ஶாத்⁴யாயப்ராரம்ப⁴:.

# பதினேழாவது அத்தியாயம்.

---

அர்ஜுந உவாச.

௧. யே ஶாஸ்த்ரவிதி⁴முத்ஸ்ருஜ்ய யஜந்தே ஶ்ரத்³த⁴யாந்விதா:।
தேஷாம் நிஷ்டா² து கா க்ருஷ்ண ஸத்த்வமாஹோ ரஜஸ்தம:॥

| | |
|---|---|
| அர்ஜுந உவாச | அர்சுனன் சொல்வது |
| ஹே க்ருஷ்ண | ஓ ! கிருஷ்ணா ! |
| யே | எவர்கள் |
| ஶாஸ்த்ரவிதி⁴ம் | சாஸ்திரவிதியை |
| உத்ஸ்ருஜ்ய | விட்டு |
| ஶ்ரத்³த⁴யா அந்விதா: | சிரத்தையோடு கூடினவர்களாய் |
| யஜந்தே | (பகவானை) ஆராதிக்கிறார்களோ |
| தேஷாம் | அவர்களுடைய |
| நிஷ்டா² து* | பிரவிருத்தியானது |
| ஸத்த்வம் | சாத்துவிகமா |
| ரஜ: | இராஜஸமா |
| ஆஹோ | அல்லது |
| தம: | தாமஸமா |
| கா | எப்படிப்பட்டது. |

அர்சுனன் சொல்வது—ஓ ! கிருஷ்ணா ! எவர்கள் சாஸ்திர விதியை விட்டு, சிரத்தை (முயற்சி அல்லது ஊக்கம்) யோடு கூடினவர்களாய் (பகவானை) ஆராதிக்கிறார்களோ (பூஜிக்கிறார்களோ), அவர்களுடைய (அந்த) பிரவிருத்தி (பூஜாநிலை) யானது சாத்துவிகமா? இராஜஸமா? அல்லது தாமஸமா? எப்படிப்பட்டது?

(ஸ்ரீ) (ஶம்) சாஸ்திரவிதியைத் தெரிந்திருந்தும், அந்த விதியை நிராகரித்து நடக்கிறவனுக்கு சிரத்தையே உண்டாகாது. சிரத்தை யென்பது ஆஸ்திகபுத்தி. (பகவானுண்டென்கிற நிச்சயம் அல்லது வேதாதிகளில் நம்பிக்கை) சாஸ்திர விதியை தெரிந்தவனுக்கு சாஸ்திர விரோதமான ஆராதனை முதலியவைகளில் சிரத்தை யுண்டாகமாட்டாது; ஆகையால், சாஸ்திரவிதியை யறிந்தவன் விஷயமாய் இந்தக்கேழ்வி யுண்டானதல்ல; ஏனென்றால், சிரத்தை மூன்று

* (ஸ்வா) நிஷ்டா², ௩-வது அத்தியாயம், ௩-வது சுலோகம் பார்க்க.

விதமானதென்றும், சாத்துவிகர்கள் தேவதைகளையும், இராஜஸர்கள் யக்ஷராக்ஷஸர்களையும், தாமஸர்கள் பிசாசாதிகளையும், சிரத்தையோடு பூஜிக்கிறார்களென்றும் பின்னால் சொல்லப்போகிற உத்தரம் சாஸ்திரவிதியை நிராகரித்தவன் விஷயத்திற்குப் பொருந்தாது. அசக்தியினாலாவது சோம்பலினாலாவது சாஸ்திரங்களைப் பாராமலும், அல்லது சாஸ்திரார்த்தங்களைத் தெரிந்துகொள்ளாமலும், வம்ச பரம்பரையாய் அனுஷ்டித்துவந்த ஆசாரத்தை (அல்லது சத் சகவாசத்தை) க் கொண்டு, சிரத்தையோடு பூஜாதிகளைச் செய்கிறவன் விஷயமாய்த்தான் இந்தக் கேள்வி யுண்டாயிருக்க வேண்டும். இப்படிப்பட்டவனுடைய சிரத்தையோடு கூடின பூசையானது, சாத்துவிகமா? அல்லது இராஜஸமா? அல்லது தாமஸமா? சாத்துவிகமென்றால், இவன் ஞானத்தையடைய அதிகாரியாகிறான். "நஸஸஸித்தி மவாப்னோதி நஸுகம் நபராம்கதிம்" (அத் - கசு, சு - உங.) என்றதினால், சாஸ்திரவிதியை விட்டவன் ஞானத்திற்கு அருகனல்லவென்று ஏற்படுகிறது; இராஜஸம் அல்லது தாமஸமென்றால், இவன் எப்பவும் ஞானாதிகாரியாகிறதில்லை; சிரத்தையோடு பகவானைப் பூஜிக்கிறவன் (சாஸ்திரவிதி தெரியாத நிமித்தியத்தினாலே) யாதொரு நன்மையையும் அடையமார்க்க மில்லாவிட்டால், இந்தப் பூஜையானது பிரயோஜனமற்றதாகிறதே என்கிற சந்தேகத்தைக்கொண்டு அர்ச்சுனன் கேட்கிறான். (ஸ்ரீ) சிரத்தையின் சுவரூபம் சாத்துவிகமானாலும், அசக்தி அல்லது சோம்பலினால் சாஸ்திரவிதியைத்தெரிந்து கொள்ளாமையோடு கூடின சிரத்தையானது இராஜஸதாமஸங்களில் சேருமோவென்கிற சந்தேகத்தினால், மூன்றையும் சேர்த்துக் கேட்டதாகக் கொள்ளத்தக்கது.

(ரா) தேவ அசுர சுவபாவங்களைப்பற்றி விவரித்ததினால், மனுஷியன் அடையவேண்டிய தத்துவஞானமும், அதற்குவேண்டிய உபாயமும், சாஸ்திரத்தினாலேயே அறியவேண்டியதென்பது முந்திய அத்தியாயத்தில் சொல்லப்பட்டது. இந்த அத்தியாயத்தில் சாஸ்திரவிதியைவிட்டுச் செய்யும் யக்ஞாதி ஆராதனைகள் நிஷ்பலமென்பதும், பலத்தைக் கொடுக்கத்தக்கதும் சாஸ்திரவிதியை அனுசரித்ததுமான ஆராதனை அனுஷ்டிக்கத் தக்கதென்பதும், சாஸ்திரோக்தமான யக்ஞாதி ஆராதனையுங்கூட குணங்களினால் மூன்றுவிதமானதென்பதும், சாஸ்திரவிதியின் லக்ஷணமும் சொல்லப்படுகின்றன. (இந்த சுலோகத்தின் தாத்பரியமாவது) சாஸ்திரவிதியைவிட்டுச் செய்கிற பூஜை நிஷ்பலமென்பதைத் தெரியாத அர்சுனன், சாஸ்திரோக்தமல்லாதவைவும் சிரத்தையோடு செய்யப்படுவனவுமாகிய யாகாதி ஆராதனைகளாலுண்டாகிறபலன் சாத்துவிகமா? இராஜஸமா? அல்லது தாமஸமா? என்று கேட்கிறான்.

(ம) (ஸ்ரீ,வி) கச-வது அத்தியாயத்தில் "நாந்யம் குணேப்ய꞉ கர்தாரம்" என்ற சுலோகத்தினல் சொல்லப்பட்ட குணங்க ளிப்படிப் பட்டவையென்பதும், அவைகளின் காரிய மிப்படிப்பட்ட தென்பதும், இந்த அத்தியாயத்தில் சொல்லப்படுகின்றன. (இந்த சுலோகத்திற்கு (ஶம்) தாத்பரியமே இவர்களுடையதும்.

---

ஶ்ரீ பகவாநுவாச.

உ. த்ரிவிதா பவதி ஶ்ரத்தா தேஹிநாம் ஸா ஸ்வபாவஜா।
ஸாத்விகீ ராஜஸீ சைவ தாமஸீ சேதி தாம் ஶ்ருணு॥

| | |
|---|---|
| ஶ்ரீ பகவாநுவாச | பகவான்சொல்வது |
| தேஹிநாம் | தேகத்தையுடைய வர்க (பிராணிகள்) ளுடைய |
| ஸ்வபாவஜா | பூர்வகருமவாசனையினலுண்டான |
| ஸா ஶ்ரத்தா | (முன்சொன்ன) அந்தசிரத்தையானது |
| ஸாத்விகீ | சாத்துவிகமென்றும் |
| ராஜஸீ சைவ | இராஜஸமென்றும் |
| தாமஸீ சேதி | தாமஸமென்றும் |
| த்ரிவிதா | மூன்றுவிதமாக |
| பவதி | இருக்கிறது |
| தாம் | அதை |
| ஶ்ருணு | கேள். |

பகவான்சொல்வது — பிராணிகளுடைய பூர்வஜன்ம கருமவாசனையினலே யுண்டான அந்த சிரத்தையானது, சாத்துவிகம், இராஜஸம், தாமஸமென்று மூன்றுவிதமாக விருக்கிறது, அதைக்கேள்.

(ஸ்ரீ) சாஸ்திரவிதியை அனுசரித்ததல்லாத பரம்பரை ஆசாரத்தை அனுசரித்த சிரத்தையானது முக்குணங்களுள்ளது; பிராணிகளுடைய பூர்வகருமவாசனையா லுண்டானது. அப்படிப்பட்ட சுவபாவத்தை சாஸ்திரஞானம் மாற்றிவிடும். சாஸ்திரஞானத்துடன் சேர்ந்த பரமேசுவர பூஜாதிவிஷயமான சிரத்தை சாத்துவிகமே. அது குணத்தினல் மூன்றுவிதமானதல்ல.

(ரா) சாஸ்திரவிரோதமான யாகாதிவிஷயமான சிரத்தைக்கும் அந்த சிரத்தையோடு செய்கிற யாகாதிகளுக்கும் பலனில்லையென்பதை மனதில் வைத்துக்கொண்டு, சாஸ்திரோக்தமானதும் சிரத்தையோடு செய்யப்படுவதுமாகிய யாகாதிகருமமே குணங்களினலே மூன்றுவிதமென்பதைத் தெரிவிக்கும்பொருட்டு பகவான் சொல்லுகிருர்.

சிரத்தை யென்பது உருசி அல்லது விசுவாசத்துடன் கூடிய பிரவிருத்தி. ஜன்மாந்தர ஸம்ஸ்காரத்தினுல், அந்த சிரத்தையானது தேகம் இந்திரியங்கள் அந்தக்கரணம் விஷயங்கள் இவைகளினு லுண்டாக்கப் படுகிறது.

(ஸ்வா) எவனுடைய பூர்வ கரும ஸம்ஸ்காரம் (கருமசேஷம்) எப்படிப்பட்டதோ, அப்படிப்பட்ட சிரத்தை யவனுக்குண்டாகிறது. எப்படியென்ருல், புண்ணிய கரும சேஷமானுல் சாத்துவிக சிரத்தையும், பாபகரும சேஷமானுல் தாமஸ சிரத்தையும், புண்ணிய பாப மிசிர கரும சேஷமானுல் இராஜஸ சிரத்தையுமா யிருக்கும். (௨)

---

௩. ஸத்த்வாநுரூபா ஸர்வஸ்ய ஶ்ரத்தா பவதி பாரத।
ஶ்ரத்தாமயோ(அ)யம் புருஷோ யோ யச்ச்ரத்த: ஸ ஏவ ஸ:॥

| | |
|---|---|
| பாரத | ஓ! அர்சுன! |
| ஸர்வஸ்ய | சகலப்பிராணிகளுக்கும் |
| ஸத்த்வாநுரூபா | (அவரவர்) அந்தக்கரணத்தை அனுசரித்த |
| ஶ்ரத்தா | சிரத்தையானது |
| பவதி | உண்டாகிறது |
| அயம் புருஷ: | இந்தப்புருஷனைவன் |
| ஶ்ரத்தாமய: | சிரத்தையோடுகூடினவன் |
| ய: | எவன் |
| யச்ச்ரத்த: | எப்படிப்பட்ட சிரத்தையோடு கூடினவனே |
| ஸ: | அவன் |
| ஸ ஏவ | அப்படிப்பட்ட சிரத்தையுடையவனே. |

ஓ! அர்சுன! சகலப்பிராணிகளுடைய அந்தக்கரணத்தை யனுசரித்து சிரத்தையான துண்டாகிறது. இந்த (சிரத்தையோடு பூஜிக்கிற சமுசாரியான ஜீவன்) புருஷனைவன் சிரத்தையையே சுவரூபமாக உடையவன். எவன் எப்படிப்பட்ட சிரத்தையோடு கூடினவனே, அவன் அப்படிப்பட்ட சிரத்தையை யுடையவனே. (என்ருல், எவன் எவ்விதப்பூஜையில் சிரத்தை வைக்கிருனே, அவனை அவ்வித சிரத்தை யுடையவனுக அறியவேண்டிய தென்பது தாத்பரியம். இதின் ௪-வது சுலோகம் பார்க்க.)

(ஸ்ரீ) சாஸ்திரவிதியை யநுசரித் தல்லாமல் முன்னோர்களுடைய சிஷ்டாசாரத்தை யநுசரித்து சிரத்தையோடு பூஜிக்கிறவனுடைய சிரத்தையானது முக்குணங்களோடு கூடினது. அக்குணங்களில் எந்தக்குணம்

விருத்தி யடைந்திருக்கிறதோ, அந்தக்குணமுள்ள சிரத்தை யுடையவன் அவ்வித சிரத்தை யுடையவனென்று சொல்லப்படுகிறுன். சாஸ்திர விதியை அறிந்து அதின்படி சிரத்தையோடு பூஜிக்கிறவனுடைய சிரத்தை சாத்துவிகமே. இராஜஸமாயாவது தாமஸமாயாவ திருக்கமாட்டாது. ஏனென்ருல், அவன் சாஸ்திர ஞானத்திஞல் இராஜஸ தாமஸ சிரத்தைகளில் பிரவிருத்தியை விலக்கிக்கொள்ளுவான்.

(ரா) ஸத்வாநுரூபா = ஸத்வம் = அந்தக்கரணம், அநுரூபா=அநுசரித்த, என்ருல், அந்தக் கரணத்தின் விருத்தி எப்படிப்பட்ட குணமுடையதோ, அப்படிப்பட்ட குணத்தை யனுசரித்து சிரத்தை பிறக்கிறது. அந்த சிரத்தை எப்படிப்பட்டதோ, அதற்குத் தகுந்த விதமான காரியங்களில் பிரவிருத்திக்கிறுன். அந்தக் காரியங்களுக்குத் தக்க பலனுண்டாகிறது. அப்படி யுண்டாகிற பலனெப்படிப் பட்டதோ, அதை யனுபவிக்கிற புருஷனும் அப்படிப்பட்டவனே.

(ஶா) ஸத்வாநுரூபா - என்கிற பதத்திற்கு (ஶ) சித்தத்தை யநுசரித்து என்று அர்த்தம் செய்திருக்கிருர். அது அந்தக்கரணத்தை யநுசரித்து என்று மற்றவர்கள் செய்திருக்கிறதுபோல்தா னிருக்கிறது. ஆனுல், (ஸ்ரீ,வி) ஜீவசுவரூபத்தை யனுசரித்து என்று அர்த்தம் செய்திருக்கிருர். இந்த மதசித்தாந்தப்படிக்கு இந்த அர்த்தம் சரியானதுதான். இந்த மதசித்தாந்தந் தெரிந்தாலன்றி இவருடைய தாத்பரிய மின்னதென்று தெரிந்துகொள்ளுவது சில அந்நிய மதஸ்தர்களுக்கு வருத்தமாயிருக்கு மாகையால், இந்த சுலோகத்திற்குத் தகுந்தமட்டில் இந்த மதசித்தாந்தத்தை எனக்குத் தெரிந்தவரையில் சுருக்கமாயெழுதுகிறேன். அதின்பிறகு (ஸ்ரீ,வி) இந்த சுலோகத்திற்குச் செய்திருக்கிற அர்த்தத்தையு மெழுதுகிறேன்.

ஜீவசுவரூபங்களில் சாத்துவிகஜீவசுவரூபம் இராஜஸஜீவசுவரூபம் தாமஸஜீவசுவரூபம் என்றுமூன்றுவகுப்புகளுண்டு. இந்த ஒவ்வொரு வகுப்பிலும் அநேகவகுப்புகளுண்டு. அவைகளை விவரிக்க வேண்டுமானுல் மிகவளருமாகையால் முக்கியமான மூன்றுவகுப்புகளைக் குறித்துமட்டும் பேசப்படும். முக்தியோக்கியர்களான ஜீவர்களுடைய சுவரூபமே சாத்துவிக ஜீவசுவரூபம். இவர்கள் யாரென்ருல், தேவதைகள் பிதுருக்கள் இருஷிகள் இராஜர்கள் சில மனுஷியோத்தமர்கள் இவர்களே. இப்படிப்பட்ட சாத்விக ஜீவசுவபாவமுள்ளவர்கள் அந்தந்த ஜன்மங்களில் செய்த பாபங்களினுலே இராஜஸ தாமஸ ஜன்மங்களை அடைந்திருந்தபோதிலும், ஜீவசுவரூபம் சத்துவகுணமுடைய தானதால் சாத்விகவிருத்தியே அதிகமாயிருக்கும். அனுலும் “வைஷ்ணநா

ஜந்நநாமஸம்ஸித்தோ ஜ்ஞாநவாந்மாம் ப்ரபத்யதே" (அத் - எ, சு - கக,) என்ற வாக்கியப்படி, இவர்கள் பலஜன்மங்களெடுத்துக் கிரமக்கிரமமாய் ஞான மடைந்து கடைசியாய் மோக்ஷத்தையே யடைவார்கள்.

நித்திய நரகயோக்கியர்களான ஜீவர்களுடைய சுவரூபமே தாமஸஜீவ சுவரூபம். இவர்களாரென்றால், பகவானிடத்தில் துவேஷமும், சிஷ்டர்களிடத்தில் அசூயையும், வேதசாஸ்திராதிகளில் அவநம்பிக்கையு முள்ளவர்களாய், பாபகிருத்தியங்களைச் செய்துகொண்டிருக்கிற ஜீவர்கள்தான். இவர்கள் வெகுஜன்மங்களில் பாபங்கள் செய்துகொண்டுவந்து அந்தப் பாபங்களும் பகவத்தூஷணையும் விருத்தியாய், கடைசியாய் நித்தியநரகத்தை அடைகிறார்கள். இப்படி நித்தியநரகத்தை யடைந்தவர்கள், மறுபடி வேறே ஜனனத்தை யடைகிறதில்லை. என்றென்றைக்கும் நரகத்திலேயே யிருக்கத்தக்கவர்கள். மேல்கண்ட இரண்டு வகுப்புகளிலும் சேராதவர்களே இராஜஸ சுவ பாவமுள்ள ஜீவர்கள். இவர்கள் பூமியில்செய்த பாபபுண்ணியங்களுக்குத்தக்கபடி சுவர்க்க நரகங்களுக்குப்போய், அந்தந்த பாபபுண்ணியங்களுக்கு விதிக்கப்பட்டிருக்கிற காலம்வரையில், சுவர்க்கநரகங்களை அனுபவித்து "க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விசந்தி" என்கிற வாக்கியப்படிக்கு பூமியில் ஜனன மடைகிறார்கள். மறுபடியும் தாம் செய்யும் பாபபுண்ணியங்களுக்குத் தக்கபடி சுவர்க்கநரகங்களை அனுபவித்துக் கொண்டே திரும்பித்திரும்பி வருகிறார்கள். இவர்கள் மோக்ஷமடைகிறதுமில்லை. நித்திய நரகத்தை யடைகிறதுமில்லை. இவர்களை நித்திய சமுசாரிகளென்று சொல்வதுண்டு.

இப்படி ஜீவசுவரூபம் மூன்றுவிதமா யிருக்கிறதென்பதை மனதில் கொண்டு, இந்த சுலோகத்திற்குச் செய்திருக்கிற அர்த்தத்தை விசாரிக்க வேண்டும். அதாவது - ஸர்வஸ்ய = சகலப் பிராணிகளுக்கும், ச்ரத்தா = உண்டாகும் சிரத்தையானது, ஸத்வாநுரூபா = ஜீவசுவரூப மெதுவோ அதற்குத் தக்கதாய், பவதி = உண்டாகிறது. அயம்புருஷ: = இந்த ஜீவனானவன், ச்ரத்தாமய: = சிரத்தையை சுவரூபமாக வுடையவனாக விருக்கிறான். அதெப்படி என்றால், ய:=எந்த ஜீவன், யச்ச்ரத்த:=எப்படிப்பட்ட சிரத்தை யுடையவனோ, ஸ:=அவன், ஸஏவ = அப்படிப்பட்டவன்தான். (௩)

---

மூ. யஜந்தே ஸாத்விகா தேவாந் யக்ஷரக்ஷாம்ஸி ராஜஸா:।
ப்ரேதாந்பூதகணாம்ஶ்சாந்யே யஜந்தே தாமஸா ஜநா:॥

ஸாத்விகா: சத்துவகுணமுடையவர்கள்
தேவாந் தேவதைகளை

| | |
|---|---|
| யஜந்தே | பூஜிக்கிறார்கள். |
| ராஜஸா: | இரஜோகுண முடையவர்கள் |
| யக்ஷரக்ஷாம்ஸி | யக்ஷ ராக்ஷஸர்களையும் |
| அந்யே தாமஸா: ஜநா: | மற்றத் தமோகுணமுடைய ஜனங்கள் |
| ப்ரேதாந் | பிரேதங்களையும் |
| பூதகணாம்ஶ்ச | பூதகணங்களையும் |
| யஜந்தே | பூஜிக்கிறார்கள். |

சத்துவ குணமுடையவர்கள் தேவதைகளைப் பூஜிக்கிறார்கள். இரஜோகுணமுடையவர்கள் யக்ஷ ராக்ஷஸர்களையும், தமோகுணமுடைய ஜனங்கள் பிரேதபூதங்களையும் பூஜிக்கிறார்கள். எவரெவர்கள் எந்த வகுப்பாரைப் பூஜிக்கிறதில் சிரத்தையுள்ளவர்களா யிருக்கிறார்களோ, அவரவர்களை அந்தந்த வகுப்பைச் சேர்ந்தவர்களாக அறியவேண்டு மென்பது கருத்து.

(ரா) சத்துவாதிகுண முடையவர்களென்றால், சத்துவகுணத்தைப் பிரதானமா யுடையவர்களென்றும், இரஜோகுணத்தைப் பிரதானமா யுடையவர்களென்றும், தமோகுணத்தைப் பிரதானமாயுடையவர்களென்றும் தாத்பரியம். தேவதைகளை சிரத்தையுடன் பூஜிப்பவர்கள் சிரேஷ்டமான சுகத்தையும், யக்ஷரக்ஷஸ்ஸுகளை சிரத்தையுடன் பூஜிப்பவர்கள் துக்கத்தையும் அற்பசுகத்தையும், பிரேதாதிகளை சிரத்தையுடன் பூஜிப்பவர்கள் மகாதுக்கத்தையும் அதி அற்பமான சுகத்தையும் அடைவார்கள்.

(ஸ்ரீ,வ) சாஸ்திரவிதி தெரியாமல் சாத்துவிக சிரத்தையோடு மட்டும் பூஜிக்கிறவர்கள், பிரம்மாதி தேவதைகளுடைய அந்தரியாமியா யிருக்கிற நாராயணனைப் பூஜிக்கிறார்கள். அவர்கள் மோக்ஷமடைவார்கள். இராஜஸ சிரத்தையோடு பூஜிக்கிறவர்கள் அனுஷ்டிக்கும் யக்ஞாதிகளில் யஜிக்கப்பட்டவர்கள் தேவதைகளே யானாலும், அவர்களுடைய அந்தரியாமியான நாராயணனைக் குறித்து யஜிக்காமல் அந்த தேவதைகளைக்குறித்தே யஜித்தபடியால், அவர்களுக்கு அந்த தேவதைகளுடைய பெயர்களைப்போல் பெயர்களையுடைய யக்ஷர்கள், கல்பிதமான சுவர்க்காதிபலனைக் கொடுக்கிறார்கள். ஆகையால், இந்தப்பூஜை ராஜஸமாகிறது. தாமஸசிரத்தை யுடையவர்கள் சிவ பரிசாரகர்களான பூத பிசாசாதிகளைப் பூஜிக்கிறார்கள். அவர்களையே அடைகிறார்கள். (ச)

---

௫. 𑌅𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌹𑌿𑌤𑌂 𑌘𑍋𑌰𑌂 𑌤𑌪𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌯𑍇 𑌤𑌪𑍋 𑌜𑌨𑌾𑌃।
𑌦𑌮𑍍𑌭𑌾𑌹𑌂𑌕𑌾𑌰𑌸𑌂𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌃 𑌕𑌾𑌮𑌰𑌾𑌗𑌬𑌲𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌃॥

௬. 𑌕𑌰𑍍𑌶𑌯𑌨𑍍𑌤𑌃 𑌶𑌰𑍀𑌰𑌸𑍍𑌥𑌂 𑌭𑍂𑌤𑌗𑍍𑌰𑌾𑌮𑌮𑌚𑍇𑌤𑌸𑌃।
𑌮𑌾𑌂 𑌚𑍈𑌵𑌾𑌨𑍍𑌤𑌃𑌶𑌰𑍀𑌰𑌸𑍍𑌥𑌂 𑌤𑌾𑌨𑍍𑌵𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑌾𑌸𑍁𑌰𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑌾𑌨𑍍॥

| | |
|---|---|
| 𑌶𑌰𑍀𑌰𑌸𑍍𑌥𑌂 | சரீரத்திலிருக்கிற |
| 𑌭𑍂𑌤𑌗𑍍𑌰𑌾𑌮𑌂* | பிருதிவி முதலிய பூதகூட்டங்களையும் |
| 𑌅𑌨𑍍𑌤𑌃𑌶𑌰𑍀𑌰𑌸𑍍𑌥𑌂† | சரீரத்தில் அந்தரியாமியாயிருக்கிற |
| 𑌮𑌾𑌂 𑌚 𑌏𑌵‡ | என்னையும் |
| 𑌕𑌰𑍍𑌶𑌯𑌨𑍍𑌤𑌃§ | துன்பஞ்செய்கிறவர்களாயும் |
| 𑌦𑌮𑍍𑌭𑌾𑌹𑌂𑌕𑌾𑌰𑌸𑌂𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌃 | டம்பாகங்காரங்களுடன் கூடினவர்களாயும் |
| 𑌕𑌾𑌮𑌰𑌾𑌗𑌬𑌲𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌃¶ | விஷயாபேக்ஷை, அபிமானம், பிடிவாதம், இவைகளையுடையவர்களாயும் |
| 𑌅𑌚𑍇𑌤𑌸𑌃 | அவிவேகிகளாயுமிருக்கிற |
| 𑌯𑍇 𑌜𑌨𑌾𑌃 | எந்த ஜனங்கள் |
| 𑌅𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌹𑌿𑌤𑌂 | சாஸ்திரத்தினால் விதிக்கப்பட்டதல்லாததாயும் |
| 𑌘𑍋𑌰𑌂$ | குரூரமானதாயுமிருக்கிற |
| 𑌤𑌪𑌃 | தபசை |
| 𑌤𑌪𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 | செய்கிறார்களோ |

* (ஶாம்) இந்திரியக்கூட்டங்கள். (மீ,வி) இந்திரியாபிமானி தேவதைகளாகிய இலக்ஷ்மி முதலியவர்கள்.

† - ‡ (ஶாம்) கருமம், புத்தி இவைகளுக்கு சாக்ஷிபூதனா யிருக்கிற நாராயணனாகிய என்னையும். (ரா) என்னுடைய அம்சமாயிருக்கிற ஜீவனையும். (மீ,வி) அந்த அபிமானி தேவதைகளையும், அவர்களுக்கு நியாமகனாயிருக்கிற என்னையும்.

§ (ஶ்ரீ) (ம) (மீ,வி) 𑌕𑌰𑍍𑌷𑌯𑌨𑍍𑌤𑌃 - என்றுபாடம் அர்த்தமொன்றே, (ஶாம்) (ஶ்ரீ) இந்தப்பதத்தை இந்திரிய பூதக்கூட்டங்களுக்கு உபயோகப்படுத்துகையில் (𑌕𑍃𑌶𑍀𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌤𑌃) இளைக்கச் செய்கிறவர்களென்றும், பகவானுக் குபயோகிக்கையில் (𑌮𑌦𑌨𑍁𑌶𑌾𑌸𑌨𑌾𑌕𑌰𑌣𑌮𑍇𑌵) ஆக்ஞையை நிராகரிக்கிறவர்களென்றும் கொள்ளவேண்டியது. (ரா) வருத்துகிறார்கள். (மீ,வி) அற்பகுணமுள்ளவர்களாக நினைக்கிறார்கள்.

¶ (ஶாம்) காமம் இராகம் இவைகளாலுண்டான பலத்தோடு கூடினவர்களாயும்.

$ (ஶாம்) தமக்கும் மற்றப்பிராணிகளுக்கும் துன்பத்தை யுண்டாக்குகிற. (மீ,வி) மகாகஷ்டரூபமான.

| | |
|---|---|
| தாந் | அவர்களை |
| ஆஸுரநிஶ்சயாந்* | அசுரசுவபாவமுள்ளவர்களென்று |
| வித்தி | அறி. |

சரீரத்திலிருக்கிற பிருதிவி முதலிய பூதக்கூட்டங்களையும், சரீரத்தில் அந்தரியாமியா யிருக்கிற என்னையும், துன்பஞ் செய்கிறவர்களாயும், டம்பம் அகங்காரம் விஷயாபேக்ஷை அபிமானம் பிடிவாதம் இவைகளை யுடையவர்களாயும், அவிவேகிகளாயும், இருக்கிற எவர்கள் சாஸ்திர விரோதமாயும் குரூரமாயு முள்ள தபசைச் செய்கிறார்களோ, அவர்களை அசுர சுவபாவமுள்ளவர்களென்று அறி. (௬)

---

௭. ஆஹாரஸ்த்வபி ஸர்வஸ்ய த்ரிவிதோ பவதி ப்ரிய:।
யஜ்ஞஸ்தபஸ்ததா தாநம் தேஷாம் பேதமிமம் ஶ்ருணு॥

| | |
|---|---|
| ஸர்வஸ்ய அபி | சகலமான பெயர்களுக்கும் |
| ப்ரிய: | பிரியமான |
| ஆஹார: து | ஆகாரமும் (உணவும்) |
| த்ரிவித: | மூன்று விதமாய் |
| பவதி | இருக்கிறது |
| யஜ்ஞ: | யக்ஞமும் |
| தப: | தபசும் |
| தாநம் | தானமும் |
| ததா | அப்படியே (மூன்று விதமாயிருக்கின்றன) |
| தேஷாம் | அவைகளுடைய |
| இமம் | இப்படிப்பட்ட |
| பேதம் | பேதத்தை |
| ஶ்ருணு | கேள். |

சகலமான பெயர்களுக்கும் பிரியமான ஆகாரமும், (சாத்துவிகம், இராஜஸம், தாமஸமென்று) மூன்றுவிதமா யிருக்கிறது. யக்ஞமும், தபசும், தானமும், அப்படியே மூன்றுவிதமா யிருக்கின்றன. அவைகளுடைய இப்படிப்பட்ட பேதத்தைக் (சொல்லுகிறேன்) கேள்.

(௱) சாஸ்திரோக்தமான யக்ஞாதிகளும், குணத்தினாலே பேதமுள்ளவைக ளென்பது சொல்லப்படுகிறது. அதாவது.—

---

* (ரா) என்னுடைய ஆக்ஞையை நிராகரித்து நடப்பவர்களென்று. (ஸாவ)

அத் - ௧௬ - ௬ - ௧௮, பார்க்க.

சத்துவாதிகுண விருத்திக்கு ஆகாரம் காரணமாயிருக்கிறது. எப்படி யென்றால், மனதானது அந்நத்தினுடைய குணத்தை யநுசரிக்கிறது. அந்நம் சுத்தமாயிருந்தால், மனதும் சுத்தமாகவே யிருக்கும். மனது சுத்தமானால் சத்துவகுணம் விருத்தியாகிறது. ஆகையால், ஆகாரமும் குணத்தினால் பேதமாக சொல்லப்பட்டது. பிராணிகளுடைய குணத்திற்குத் தக்கபடி அந்த ஆகாரத்தில் பிரியமுண்டாகிறது. யக்ஞாதிகளும் அப்படித்தான். "அந்நமயம் ஹி ஸோம்ய மந:" (என்கிற சாந்தோக்கிய உபநிஷசு) பார்க்க. (௭)

---

௮. ஆயு:ஸத்த்வபலாரோக்³ய ஸுக²ப்ரீதிவிவர்த⁴நா:।
ரஸ்யா: ஸ்நிக்³தா⁴: ஸ்தி²ரா ஹ்ருத்³யா ஆஹாரா: ஸாத்த்விகப்ரியா:॥

| | |
|---|---|
| ஆயு:ஸத்த்வ*பலாரோக்³ய ஸுக²†ப்ரீதி‡ விவர்த⁴நா: | ஆயுசு உற்சாகம் பெலம் ஆரோக்கியம் சுகம் பிரீதி இவைகளை விருத்தி செய்கிறவைகளாயும் |
| ரஸ்யா:§ | இரசமுள்ளவைகளாயும் |
| ஸ்நிக்³தா⁴: | பசைஅல்லது தைலமுள்ளவைகளாயும் |
| ஸ்தி²ரா:¶ | ஸ்திரமாயுள்ளவைகளாயும் |
| ஹ்ருத்³யா:$ | மனதிற்கின்பமானவைகளாயுமுள்ள |
| ஆஹாரா: | ஆகாரங்கள் (தின்பண்டங்கள்) |
| ஸாத்த்விகப்ரியா: | சாத்துவிக (புருஷ)ர்களுக்குப் பிரியமானவை. |

ஆயுசு உற்சாகம் பெலம் ஆரோக்கியம் சுகம் பிரீதி இவைகளை விருத்திசெய்கிறவும் இரசமுள்ளவும் தைலமுள்ளவும் ஸ்திரமாயுள்ளவும் மனதிற் கின்பமானவையாயுள்ள ஆகாரங்கள் சாத்துவிகர்களுக்குப் பிரியமானவைகள்.

---

* ஸத்த்வம் (ரா) ஞானம். (ஸ்ரீ,வி) சாதுத்துவம் அல்லது சித்தசுத்தி.

† (ஸ்ரீ,வி) ஒருகாலத்தில் அற்பம் சாப்பிட்டாலும் அதிலுண்டாகிறவும் வெகு காலமிருக்கிறவுமான சுகம்.

‡ (ஸ்ரீ,வி) சாப்பிடும்போதேயுண்டாகும் சுகம்.

§ (ரா) தித்திப்புள்ளது. (ஹா) மாம்பழம் முதலியன போன்ற இரசமுள்ளவை.

¶ (ஸ்ரீ) (ஶம்) (ரா) தேகத்தில் அதிககாலம் நிலையாயிருப்பதாகிய சாரமுள்ளவை. (ஹா) கோதுமை ரவைபோலொத்தவை. (௨) சில காலத்திற்குப் பிறகு ஜீர்ணமாகத் தக்கவை.

$ (ஸ்ரீ,வி) மனோகரமானவை, அதாவது - இன்னும் வேண்டுமென்கிற ஆசை கொள்ளத்தக்கவை.

௯. கட்வம்லலவணாத்யுஷ்ண தீக்ஷ்ணரூக்ஷவிதாஹிந:।
ஆஹாரா ராஜஸஸ்யேஷ்டா து:கசோகாமயப்ரதா:॥

| | |
|---|---|
| கட்வம்லலவணாத்யுஷ்ண தீக்ஷ்ணரூக்ஷவிதாஹிந: | அதிக கசப்பு, புளிப்பு, உப்பு, சூடு, காரம், பசையின்மை அல்லது வறட்சி, தாகத்தை யுண்டுபண்ணுகை, இவைகளுள்ளவும் |
| து:க*சோக†ஆமயப்ரதா: | துக்கம் சோகம் ரோகம் இவைகளை யுண்டாக்கத் தக்கவைகளாயு மிருக்கிற |
| ஆஹாரா: | ஆகாரங்கள் |
| ராஜஸஸ்ய | இராஜஸசுவபாவமுள்ளவனுக்கு |
| இஷ்டா: | இஷ்டமானவை. |

அதிகக் கசப்பு புளிப்பு உப்பு சூடு காரம் வறக்ஷி தாகத்தைக் கொடுத்தல் இவைகளுள்ளதாயும் துக்கம் சோகம் (விசனம்) ரோகம் (வியாதி) இவைகளை யுண்டாக்கத்தக்கவைகளாயுமிருக்கிற ஆகாரங்கள் இராஜஸ சுவபாவமுள்ளவனு (புருஷனு) க்கு இஷ்டமானவை. இப்படிப்பட்ட ஆகாரங்களையே அதிகப் பிரியமாய்ச் சாப்பிடப்பட்டவர்களை இராஜஸரென்று தெரிந்து கொள்ளத்தக்கது. (இந்த கசப்பு முதலியவைகளை அதிகமாக சாப்பிடக்கூடாதென்பது (ஸ்ரீ - ஸம்) இவர்கள் தாத்பரியம்.) (௯)

---

௧௦. யாதயாமம் கதரஸம் பூதி பர்யுஷிதம் ச யத்।
உச்சிஷ்டமபி சாமேத்யம் போஜநம் தாமஸப்ரியம்॥

| | |
|---|---|
| யாதயாமம்‡ | (சமையல்செய்து) ஒரு ஜாமநேரம் சென்றதாயும் |
| கதரஸம் | ஸாரமற்றுப் போனதாயும் |
| பூதி | துர்வாசனை யுள்ளதாயும் |
| பர்யுஷிதம்§ | சமையல்செய்து ஒரு இராத்திரி வைத்திருந்ததாயும் |

---

* (ஸ்ரீ) தற்காலத்தில் மனதிலுண்டாகும் விசனம். (ஸ்வா) தேகத்திற் குண்டாகிற துன்பம் என்றும் சொல்லலாம்.

† (ஸ்ரீ) நீடித்தகாலம் மனதிலுள்ள விசனம். (ஸ்வா) மனதிற்குண்டாகிற துன்பம் என்றுஞ் சொல்லலாம்.

‡ (ஸம்) மந்தபக்வம் = நன்றாய் வேகாதது. (ரா) சமையலாய் வெகுகாலமானது. (ஸ்ரீ) ஆறிப்போனது.

§ (ரா) அதிககாலம் வைத்திருந்ததினால் அதற்குள்ள சுவபாவமான ருசி கெட்டு வேறே ருசியுண்டானது.

| | |
|---|---|
| 𑌉𑌚𑍍𑌛𑌿𑌷𑍍𑌟𑌮𑌪𑌿* | (ஒருவன்) சாப்பிட்டு மிச்சம் விட்டதாயும் |
| 𑌚𑌾𑌮𑍇𑌧𑍍𑌯𑌂† | அசுத்தமானதாயுமிருக்கிற |
| 𑌯𑌤𑍍 𑌭𑍋𑌜𑌨𑌂 | ஆகாரமெதுவோ |
| (𑌤𑌤𑍍) | அதானது |
| 𑌤𑌾𑌮𑌸𑌪𑍍𑌰𑌿𑌯𑌮𑍍 | தாமஸனுக்குப் பிரியமானது. |

(சமையல்செய்து) ஒரு ஜாமநேரம் சென்றதாயும், ஸாரமற்றுப் போனதாயும், துர்வாசனை யுள்ளதாயும், சமையல்செய்து ஓரிரவு வைத்திருந்ததாயும், ஒருவன் சாப்பிட்டு மிச்சம் விட்டதாயும், அசுத்தமானதாயு மிருக்கிற ஆகார மெதுவோ, அதானது தாமஸகுண முடையவனுக்குப் பிரியமானது. என்றால், தாமதகுண முடையவன் இப்படிப்பட்ட ஆகாரங்களில் பிரியம் வைப்பானென்பது கருத்து. (௧௦)

---

௧௧. 𑌅𑌫𑌲𑌾𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑌿𑌭𑌿𑌰𑍍𑌯𑌜𑍍𑌞𑍋 𑌵𑌿𑌧𑌿𑌦𑍃𑌷𑍍𑌟𑍋 𑌯 𑌇𑌜𑍍𑌯𑌤𑍇।
𑌯𑌷𑍍𑌟𑌵𑍍𑌯𑌮𑍇𑌵𑍇𑌤𑌿 𑌮𑌨𑌃 𑌸𑌮𑌾𑌧𑌾𑌯 𑌸 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑌃॥

| | |
|---|---|
| 𑌯𑌷𑍍𑌟𑌵𑍍𑌯𑌮𑍇𑌵𑍇𑌤𑌿 | யக்ஞஞ்செய்யவேண்டியதுதானென்று |
| 𑌮𑌨𑌃‡ | மனசை |
| 𑌸𑌮𑌾𑌧𑌾𑌯§ | ஸ்திரப்படுத்திக்கொண்டு |
| 𑌵𑌿𑌧𑌿𑌦𑍃𑌷𑍍𑌟𑌃¶ | சாஸ்திரத்தினாலறியப்பட்ட |
| 𑌯𑌃 𑌯𑌜𑍍𑌞𑌃 | எந்தயக்ஞமானது |
| 𑌅𑌫𑌲𑌾𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑌿𑌭𑌿𑌃 | பலனிலிச்சையில்லாதவர்களால் |
| 𑌇𑌜𑍍𑌯𑌤𑍇 | அனுஷ்டிக்கப்படுகிறதோ |
| 𑌸𑌃 | அந்தயக்ஞமானது |
| 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑌃 | சாத்துவிகமானது. |

யக்ஞஞ் செய்யவேண்டியதுதானென்று மனசை ஸ்திரப்படுத்திக் கொண்டு சாஸ்திரத்தினாலறியப்பட்ட எந்த யக்ஞமானது பலனிலிச்சையில்லாதவர்களா லனுஷ்டிக்கப்படுகிறதோ, அந்த யக்ஞமானது சாத்துவிகமானது. (௧௧)

---

* (ரா) குருமுதலியவர்கள் அன்றி மற்றவர்கள் புஜித்து மிச்சம் விட்ட ஆகாரம்.

† (மூ) யக்ஞத்திற்கு யோக்கியமற்றது. (ரா) வைசுவதேவம் முதலிய யக்ஞம் செய்யாமல் புஜிக்கிறது அசுத்தமாகையால் அப்படிப்பட்ட அசுத்தமுள்ளது.

‡ - § (ரா) நான் செய்வது பகவதாராதனமாகவே பிரயோசனப்பட வேண்டுமென்று மனதைச் சமாதானம் செய்துகொண்டு.

¶ (ஸ்ரீ) 𑌵𑌿𑌧𑌿𑌦𑍃𑌷𑍍𑌟𑌃 — விதிக்கப்பட்டதாயுள்ள.

க௨. அபிஸந்தாய து பலம் தம்பார்த்தமபி சைவ யத்।
இஜ்யதே பரதஶ்ரேஷ்ட தம் யஜ்ஞம் வித்தி ராஜஸம்॥

| | |
|---|---|
| பரதஶ்ரேஷ்ட | ஓ! பரதகுலசிரேஷ்டனே! |
| பலம் | பலனை |
| அபிஸந்தாய து | அபேக்ஷித்தாவது |
| தம்பார்த்தமபி சைவ | டம்பத்திற்காகவேயாவது |
| யத்* | எந்த யக்ஞமானது |
| இஜ்யதே | அனுஷ்டிக்கப்படுகிறதோ |
| தம் யஜ்ஞம் | அந்தயக்ஞத்தை |
| ராஜஸம் | இராஜஸமென்று |
| வித்தி | அறி. |

ஓ! பரதகுல சிரேஷ்டனே! பலனை யபேக்ஷித்தாவது, டம்பத்திற்காகவேயாவது, எந்த யக்ஞமானது அனுஷ்டிக்கப் படுகிறதோ, அந்த யக்ஞத்தை இராஜஸமென்று அறி. (க௨)

---

க௩. விதிஹீநமஸ்ருஷ்டாந்நம் மந்த்ரஹீநமதக்ஷிணம்।
ஶ்ரத்தாவிரஹிதம் யஜ்ஞம் தாமஸம் பரிசக்ஷதே॥

| | |
|---|---|
| விதிஹீநம்† | விதியைவிட்டும் |
| அஸ்ருஷ்டாந்நம்‡ | அந்நதானமன்றியிலும் |
| மந்த்ரஹீநம்§ | மந்திரமன்றியிலும் |
| அதக்ஷிணம்¶ | தக்ஷிணையன்றியிலும் |
| ஶ்ரத்தாவிரஹிதம் | சிரத்தையன்றியிலும் (செய்யப்படுகிற) |
| யஜ்ஞம் | யக்ஞத்தை |
| தாமஸம் | தாமஸமென்று |
| பரிசக்ஷதே | சொல்லுகிறார்கள். |

விதியைவிட்டும், அந்நதானம் மந்திரம் தக்ஷிணை சிரத்தை இவைகளன்றியும், செய்யப்படுகிற யக்ஞத்தை தாமஸமென்று சொல்லுகிறார்கள்.

---

* (பா) யஃ - என்றுபாடம்.

† (பா) சதாசாரமுள்ள பிராமணனாலே யக்ஞம் செய்யென்று ஏவப்பட்டதல்லாததும்.

‡ (பா) யக்ஞத்திற்கு வேண்டியதாய் விதிக்கப்பட்டிருக்கிற வஸ்துக்களன்றியிலும்.

§ (ஸா) ஸ்வரம், வர்ணம், இவைகளைக் கிரமமா யுச்சரிக்காமலும்.

¶ (பா) அந்த யக்ஞத்திற்குக் குறிக்கப்பட்டிருக்கிற அவ்வளவு தக்ஷிணையன்றியிலும்.

(ஸ்வா) இன்ன யக்ஞத்திற்கு இவ்வளவு அந்நதானம், இவ்வளவு தக்ஷிணை, இன்னின்ன பதார்த்தங்களைக் கொண்டு ஹோமம் செய்ய வேண்டியது என்பது முதலிய விதி வேதத்திலும் ஸ்மிருதிகளிலும் ஏற்பட்டிருக்கிறது. அந்த விதியில் ஒன்றையாவது விட்டு யக்ஞம் நடத்தினல், அந்த யக்ஞம் பிரயோஜனமற்றுப் போகிறதுமாத்திர மல்ல, தோஷமு முண்டாகுமாகையால், இந்தவிதமான யக்ஞம் தாமஸ மென்று சொல்லப்பட்டது. (கங)

---

கச. தேவத்விஜகுருப்ராஜ்ஞபூஜநம் ஶௌசமார்ஜவம் ।
ப்ரஹ்மசர்யமஹிம்ஸா ச ஶாரீரம் தப உச்யதே ॥

| | |
|---|---|
| தேவத்விஜகுரு-ப்ராஜ்ஞபூஜநம் | தேவர்கள் பிராமணர்கள் குருக்கள் ஞானிகள் இவர்களைப் பூஜிப்பதும் |
| ஶௌசம்* | தேககசுத்தியும் |
| ஆர்ஜவம்† | நேர்மையும் |
| ப்ரஹ்மசர்யம்‡ | பிரம்மசரியமும் |

---

* (ரா) தேகத்திற்கு ஸ்நாநாதிகளினல் செய்துகொள்ளும் சுத்தி. (ஸ்ரீ,வி) தேகத்தின் உள்ளும் புறம்புமான சுத்தி.

† (ரா) மனதையொத்த சரீரநடத்தை.

‡ (ரா) ஸ்திரீகளிடத்தில் போக இச்சைகொண்டு அதற்குத் தகுந்தபார்வை முதலியவை யில்லாமலிருப்பது. (ஸ்வா) ஸ்மரணம் கீர்த்தநம் கேலி: ப்ரேக்ஷணம் குஹ்யபாஷணம் । ஸங்கல்போऽத்யவஸாயஶ்ச க்ரியாநிர்வ்ருத்திரேவ ச । ஏதந்மைதுநமஷ்டாங்கம் ப்ரவதந்தி மநீஷிண: । விபரீதம் ப்ரஹ்மசர்யமேததஷ்டாங்கலக்ஷணம்—

அடியில் சொல்லப்படு மெட்டுவிதமான காரியங்களி லொன்றையாவது செய்தால் ஸ்திரிபோகம் செய்த்தாகவே யாகிறதென்று ஞானிகள் சொல்லுகிருர்கள். (அவையாவன.)

(க) ஸ்திரியை நினைப்பது.

(உ) அவளுடையபெயரை வாயினு லுச்சரிப்பது.

(ங) ஸ்திரியினிடத்தில் போகத்திற் கனுகூலமானவிதமாய் விளையாடுவது.

(ச) அவ்விதமான கருத்துடன் அவளைப் பார்ப்பது.

(ரு) அவ்விதமான கருத்துடன் அவளிடத்தில் இரகசியமாய்ப் பேசுவது.

(சு) அதுவிஷயமாய் இன்னின்னது செய்யவேண்டுமென் றுத்தேசிப்பது.

(எ) அதுவிஷயமாய் ஒருவிதமான நிச்சயம் கொள்வது.

(அ) அதுவிஷயத்தில் எண்ணங்கொண்டு காரியத்தை நிறைவேற்றுவது. இந்த எட்டு செய்கைகளு மில்லாதிருப்பதுதான் பிரம்மசாரிவிரத மென்பது. இந்த மாதிரியான சுலோகங்களை கடோபநிஷத்திலும். அக்கினிபுராணம் அத் - கஎக. சு - கூ - க௦ - கக - ஸும்காண்க.

| | |
|---|---|
| அஹிம்ஸா ச | பிறருக்குத்துன்பம்செய்யாமையும் |
| ஶாரீரம் | சரீரத்திலுல்செய்யத்தகுந்த |
| தப: | தபசென்று |
| உச்யதே | சொல்லப்படுகிறது. |

(பிரம்ம விஷ்ணு ருத்திராதி) தேவதைகள் பிராமணர்கள் குருக்கள் ஞானிகள் இவர்களைப்பூஜிப்பதும், தேகத்தை சுத்தமாய் வைத்துக்கொண்டிருப்பதும், நேர்மையு (ஸன்மார்க்கத்தில் ஒரேவிதமாய் நடப்பது) ம், பிரம்மசரியமும், பிறருக்குத் துன்பம் செய்யாமையும், சரீரத்திலுலே செய்யத்தகுந்த தபசென்று சொல்லப்படுகின்றன. (௧௪)

---

௧௫. அநுத்3வேக3கரம் வாக்யம் ஸத்யம் ப்ரியஹிதம் ச யத் |
ஸ்வாத்4யாயாப்4யஸநம் சைவ வாங்மயம் தப உச்யதே ||

| | |
|---|---|
| அநுத்3வேக3கரம்* | பிறர்மனம்நோகச்செய்யாதவும் |
| ஸத்யம் | நிஜமானவும் |
| ப்ரிய† | இன்பம்தரத்தக்கவும் |
| ஹிதம்‡ | பிரயோஜனகரமுமான |
| வாக்யம் | வார்த்தையும் |
| ஸ்வாத்4யாயாப்4யஸநம் சைவ | வேதசாஸ்திரங்களுடைய அப்பியாசமும் |
| யத் | எதுவோ |
| (தத்) | அதானது |
| வாங்மயம் | வாக்கிலுல்செய்யத்தக்க |
| தப: | தபசென்று |
| உச்யதே | சொல்லப்படுகிறது. |

பிறர்மனதிற்கு நோவுண்டுபண்ணுதவும், நிஜமானவும், இன்பம் தரத்தக்கவும், பிரயோஜனகரமானவுமான வார்த்தையும், வேத சாஸ்திரங்களுடைய அப்பியாசமும், எவைகளோ, அவை வாக்கிலுல் செய்யத்தக்க தபசென்று சொல்லப்படுகின்றன.

(ஶம்) அநுத்3வேக3கரம் - ஸத்யம்-ப்ரியஹிதம் - இவைகளில் எதாவதொன்று இல்லாவிட்டாலும், அதுவாக்கிலுல் செய்கிற தபசாக மாட்டாது. (௧௫)

---

* (ஶ்ரீ,வி) பிறருக்குக் கெடுதியை யுண்டாக்காதவும்.

† (ஶ்ரீ,வி) கேட்கப் பிரியமுள்ளவும்.

‡ (ஶம்) (ஶ்ரீ) (ஶ்ரீ,வி) பிர்தியகாலத்தில் சுகத்தைக் கொடுக்கத்தக்கவும்.

கசு. 𑌮𑌨𑌃𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌃 𑌸𑍌𑌮𑍍𑌯𑌤𑍍𑌵𑌂 𑌮𑍌𑌨𑌮𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌃।
𑌭𑌾𑌵𑌸𑌂𑌶𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑌿𑌤𑍍𑌯𑍇𑌤𑌤𑍍 𑌤𑌪𑍋 𑌮𑌾𑌨𑌸𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇॥

| | |
|---|---|
| 𑌮𑌨𑌃𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌃* | மனது நல்ல விருத்தியில் நிலையாயிருப்பதும் |
| 𑌸𑍌𑌮𑍍𑌯𑌤𑍍𑌵𑌂† | குரூரமின்மையும் |
| 𑌮𑍌𑌨𑌂‡ | (பகவானை) தியானஞ்செய்து கொண்டிருப்பதும் |
| 𑌆𑌤𑍍𑌮𑌵𑌿𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌃§ | மனதை விஷயங்களிலிருந்து திருப்புவதும் |
| 𑌭𑌾𑌵𑌸𑌂𑌶𑍁𑌦𑍍𑌧𑌿𑌃¶ | கபடமின்மையும் |
| 𑌇𑌤𑍍𑌯𑍇𑌤𑌤𑍍 | இதானது |
| 𑌮𑌾𑌨𑌸𑌂 | மனதினாலே செய்யத்தக்க |
| 𑌤𑌪𑌃 | தபசென்று |
| 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 | சொல்லப்படுகிறது. |

மனது நல்லவிருத்தியில் நிலையாயிருப்பதும், குரூரமின்மையும், பகவானைத் தியானஞ்செய்து கொண்டிருப்பதும், மனதை விஷயங்களிலிருந்து திருப்புவதும், கபடமின்மையும், மனதினாலே செய்யத்தக்க தபசென்று சொல்லப்படுகின்றன. (கசு)

---

கஎ. 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾 𑌪𑌰𑌯𑌾 𑌤𑌪𑍍𑌤𑌂 𑌤𑌪𑌸𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌂 𑌨𑌰𑍈𑌃।
𑌅𑌫𑌲𑌾𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑌿𑌭𑌿𑌰𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑍈𑌃 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑌂 𑌪𑌰𑌿𑌚𑌕𑍍𑌷𑌤𑍇॥

---

* (ஶம்) மனதை சுத்தமாகவைத்துக்கொண்டிருப்பது. (ரா) கோபமுதலியவையன்றி யிருப்பது.

† (ஶம்). முகசௌமியத்தினால் அறிந்துகொள்ளத்தக்க அந்தக்கரணவிருத்தி அல்லது சாந்தமாயிருப்பது. (ரா) பிறருக்கு நன்மைசெய்ய அநுகூலமா யிருப்பது.

‡ (ஶம்) பேசாமலிருப்பது. பேசாமலிருப்பது வாக்கின்செய்கை யாகையால் மனசின்செய்கையாக எப்படிச் சொல்லலாமென்றால், மனதின் ஏவலால்தான் வாக்குப்பேசுகிறது; மனது வாக்கை ஏவாமல் தான் அடங்கிநின்றால், வாக்கும் நின்று விடுமாகையால், வாக்கைநிறுத்துவதாகிய மௌனமானது மனதின் செய்கையாக சொல்லப்பட்டிருக்கிறது. (ரா) மனதைக்கொண்டு வாக்கைத்தடுப்பது.

§ (ரா) தியானிக்கத்தகுந்த வஸ்துவினிடத்தில் மனதை நிறுத்துவது. (மீ,வி) பரமாத்மாவிடத்தில் மனதை ஸ்தாபிப்பது.

¶ (ஸ்ரீ) (ஶம்) பிறருடன் வியவகாரங்களை நடத்துவதில் மோசம் செய்யாமயிருப்பது. (ரா) ஆத்மாவைத்தவிர இதரவிஷயங்களில் சிந்தையற் றிருப்பது (மீ,வி) மனசுத்தியை யுண்டுபண்ணிக்கொள்ளுவது, அதாவது இச்சையற்றிருப்பது.

| | |
|---|---|
| 𑌅𑌫𑌲𑌾𑌕𑌾𑌂𑌕𑍍𑌷𑌿𑌭𑌿𑌃 | பலாபேக்ஷையற்றிருக்கிறவும் |
| 𑌯𑍁𑌕𑍍𑌤𑍈𑌃* | ஒரேமனதுடன் கூடியிருக்கிறவுமான |
| 𑌨𑌰𑍈𑌃 | ஜனங்களால் |
| 𑌪𑌰𑌯𑌾 | சிரேஷ்டமான |
| 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾 | சிரத்தையினாலே |
| 𑌤𑌪𑍍𑌤𑌂 | செய்யப்பட்ட |
| 𑌤𑌤𑍍 𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌂 | அம்மூன்றுவிதமான |
| 𑌤𑌪𑌃 | தபசை |
| 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑌂 | சாத்துவிகமானதென்று |
| 𑌪𑌰𑌿𑌚𑌕𑍍𑌷𑌤𑍇 | (பெரியோர்கள்) சொல்லுகிறார்கள். |

பலாபேக்ஷை யன்றியிலும் (வேறே விஷயங்களில் செல்லாத) ஒரேவிதமான மனதுடன் கூடியுமிருக்கிற ஜனங்களால் சிரேஷ்டமான சிரத்தையினாலே செய்யப்பட்ட (சாரீரம் வாசிகம் மானசம்) அம்மூன்றுவிதமான தபசை சாத்துவிகமான தென்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள்.

(ஸா) இந்த அத்தியாயம் கச-கரு-கசு-சுலோகங்களில் சொல்லப்பட் டிருக்கிற படிக்கு தேகம் வாக்கு மனது இவைகளினால் பலாபேக்ஷை யன்றியிலும், பரமாத்மா ஒருவரிடத்திலேயே நிறுத்தப்பட்டமனதுடனும், சிரத்தையோடுஞ் செய்யப்படும் தபசு, சாத்துவிகமென்று இந்த சுலோகத்தினால் வெளியிடப் பட்டது. (கஎ)

---

கஅ. 𑌸𑌤𑍍𑌕𑌾𑌰𑌮𑌾𑌨𑌪𑍂𑌜𑌾𑌰𑍍𑌥𑌂 𑌤𑌪𑍋 𑌦𑌮𑍍𑌭𑍇𑌨 𑌚𑍈𑌵 𑌯𑌤𑍍।
𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 𑌤𑌦𑌿𑌹 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌂 𑌰𑌾𑌜𑌸𑌂 𑌚𑌲𑌮𑌧𑍍𑌰𑍁𑌵𑌮𑍍॥

| | |
|---|---|
| 𑌸𑌤𑍍𑌕𑌾𑌰𑌮𑌾𑌨- 𑌪𑍂𑌜𑌾𑌰𑍍𑌥𑌂 † | வாக்கினாலும் தேகத்தினாலும் மரியாதையையும், பொருள் சம்பாதித்தலையும் உத்தேசித்தும் |

---

* (ரா) பரமபுருஷனுடைய ஆராதனமென்கிற நிச்சயத்துடன் கூடின. (தீ,வீ) பகவத்சுவரூபலக்ஷண ஞானயோகத்துடன்கூடின.

† (ஸ்ரீ) (ம॰) "இவன்தபசி" என்பது முதலியவைகளால் வாக்கினால் துதிப்பது, ஸத்காரம். கண்ட உடனே யெழுந்திருந்து நமஸ்காரம் முதலியனசெய்தல். தேகத்தினால் செய்கிற பூஜை, மானம். (ஸ்ரீ) வெகுமதிபெறுவது முதலியன, பூஜை, (ம॰) பாதபூஜைமுதலியன, பூஜை. (ரா) (தீ,வி) மனதினால் ஆராதிப்பது, ஸத்காரம். வாக்கினால் புகழுவது, மானம். சரீரத்தினால் நமஸ்காராதிசெய்வது பூஜை.

𑌦𑌂𑌭𑍇𑌨 𑌚𑍈𑌵* — டம்பத்தினாலேயும்
𑌯𑌤𑍍 — எந்த
𑌤𑌪𑌃 — தபசானது
𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 — செய்யப்படுகிறதோ
𑌚𑌲𑌂† — சஞ்சலமானதும்
𑌅𑌧𑍍𑌰𑍁𑌵𑌂‡ — ஸ்திரமற்றதுமான
𑌤𑌤𑍍 — அதானது
𑌇𑌹 — இந்த உலகத்தில்
𑌰𑌾𑌜𑌸𑌂 — இராஜஸமானதென்று
𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌂 — சொல்லப்பட்டிருக்கின்றது.

வாக்கினாலும் தேகத்தினாலும் மரியாதையையும் பொருள் சம்பாதித்தலையும் உத்தேசித்தும், டம்பத்தினாலேயும், எந்தத் தபசானது செய்யப்படுகிறதோ, சஞ்சலமானதும் ஸ்திரமற்றதுமான அந்தத்தபசானது, இந்த உலகத்தில் இராஜஸமானதென்று சொல்லப்பட்டிருக்கிறது. (௧௮)

---

௧௯. 𑌮𑍂𑌢𑌗𑍍𑌰𑌾𑌹𑍇𑌣𑌾𑌤𑍍𑌮𑌨𑍋 𑌯𑌤𑍍𑌪𑍀𑌡𑌯𑌾 𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 𑌤𑌪𑌃।
𑌪𑌰𑌸𑍍𑌯𑍋𑌤𑍍𑌸𑌾𑌦𑌨𑌾𑌰𑍍𑌥𑌂 𑌵𑌾 𑌤𑌤𑍍𑌤𑌾𑌮𑌸𑌮𑍁𑌦𑌾𑌹𑍃𑌤𑌮𑍍॥

𑌮𑍂𑌢𑌗𑍍𑌰𑌾𑌹𑍇𑌣§ — அவிவேகத்தினா லுண்டாகும் துராக்கிரகத்தினாலேயாவது
𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌪𑍀𑌡𑌯𑌾 ¶ — தன்தேகத்தை வருத்தப்படுத்திக் கொள்வதினாலாவது
𑌪𑌰𑌸𑍍𑌯 — அந்நியனுடைய
𑌉𑌤𑍍𑌸𑌾𑌦𑌨𑌾𑌰𑍍𑌥𑌂 𑌵𑌾 — நாசத்தின்பொருட்டாவது
𑌯𑌤𑍍 — எந்த
𑌤𑌪𑌃 — தபசானது

---

* (ஶ) நல்லயோக்கியனானவன் தான்செய்கிறது ஈசுவரப்பிரீதி யாகவேண்டுமென்கிற எண்ணத்துடன் எப்படி பயபக்தி விசுவாசத்துடன் நடப்பானோ, அப்படிப் போல பாவனைமட்டும் காட்டுவது.

† (ஶ்ரீ) நியமமில்லாதது. (ரா) சுவர்க்காதிபலனைக் கொடுப்பதினால் நித்திய மல்லாதது.

‡ (ம) ஏதோ ஒருகாலத்தில் பலனைகொடுக்கத்தக்கது.

§ (ஶ்ரீ,வி) அவிவேகத்துடன் கூடிய துராக்கிரகத்தினால்.

¶ (ரா) தன் சக்திக்கு மீறின காரியங்களைச் செய்வதினா லுண்டாகிய தன்னுடைய தேகபீடையினால். (ஶ்ரீ,வி) தன்போஷணைக்காக.

| | |
|---|---|
| க்ரியதே | செய்யப்படுகிறதோ |
| தத் | அந்தத்தபசானது |
| தாமஸம் | தாமஸமென்று |
| உதாஹ்ருதம் | சொல்லப்பட்டிருக்கிறது. |

அவிவேகத்தினு லுண்டான துராக்கிரகத்தினுலாவது தன்தேகத்தை வருத்தப்படுத்திக் கொள்ளுவதினுலாவது, அன்னியனுடைய நாசத்தின்பொருட்டு (ஆபிசார ரூபமான சூன்னியாதிகள் மூலமாய்) ஆவது எந்தத் தபசானது செய்யப்படுகிறதோ, அதானது தாமசமென்று சொல்லப்பட்டிருக்கிறது. (கக)

---

உ0. தாதவ்யமிதி யத்தாநம் தீயதே நுபகாரிணே।
தேசே காலே ச பாத்ரே ச தத்தாநம் ஸாத்விகம் ஸ்ம்ருதம்॥

| | |
|---|---|
| தாதவ்யமிதி* | கொடுக்கவேண்டுமென்கிறநிச்சயத்துடன் |
| யத் தாநம் | எந்ததானமானது |
| தேசே ச† | புண்ணியதேசத்திலேயும் |
| காலே ச‡ | இரகணுதிபுண்ணியகாலத்திலேயும் |
| அநுபகாரிணே§ | பிரதியுபகாரம் செய்யத்தகாத |
| பாத்ரே ச¶ | வேதசாஸ்திர சம்பன்னனுன பிராமணன் பொருட்டு |
| தீயதே | கொடுக்கப்படுகிறதோ |
| தத் தாநம் | அந்ததானமானது |
| ஸாத்விகம் | சாத்துவிகமானதென்று |
| ஸ்ம்ருதம் | சொல்லப்பட்டிருக்கிறது. |

---

* (ரா) பகவதர்ப்பணமாக வேண்டுமென்கிற நிச்சயத்துடன். (ஸ்ரீ,வி) ஆஸ்திகபுத்தியினுலே.

† (ஸ்ரீ) (மும) குருக்ஷேத்திரமுதலிய புண்ணியதேசத்திலே.

‡ (மும) சங்கிராந்திமுதலிய புண்ணியகாலத்திலே.

§ (மும) பிரதியுபகாரஞ் செய்யத்தகாதவன் அல்லது பிரதியுபகாரம் செய்யத்தக்கவனுனுலும் பிரதியுபகாரத்துக்காகத் தன்னுல் எதிர்பார்க்கப் படாதவன். (ஸ்வா) முன்தனக்குபகாரம் செய்தவன்பொருட்டு அல்லாமல்.

¶ (மும) வேதார்த்தங்களை யறிந்த பிரம்மஞானிகள் முதலியவர்களிடத்திலே. (ஸ்ரீ,வி) சுத்பாத்திரத்தில். (ஸ்ரீ) இரக்ஷிக்கிறவன்பொருட்டு. என்றுல், தானங்கொடுத்தவனை ஆபத்திலிருந்து நிவர்த்திக்கிறவனென்பது கருத்து.

கொடுக்கவேண்டு மென்கிற நிச்சயத்துடன், எந்த தானமானது புண்ணிய தேசத்திலேயும், கிரகணாதி புண்ணியகாலத்திலேயும் பிரதி யுபகாரம் செய்யத்தகாத, வேதசாஸ்திர ஸம்பன்னனான பிராமணன் பொருட்டு கொடுக்கப்படுகிறதோ, அந்த தானமானது சாத்துவிகமா னதென்று சொல்லப்பட் டிருக்கிறது. (௨௦)

---

௨௧. யத்து ப்ரத்யுபகாரார்த்த²ம் ப²லமுத்³தி³ஶ்ய வா புந꞉।
தீ³யதே ச பரிக்லிஷ்டம் தத்³ராஜஸமுதா³ஹ்ருதம்॥

| | |
|---|---|
| ப்ரத்யுபகாரார்த்த²ம்* | பிரதியுபகாரத்தை உத்தேசித்தாவது |
| ப²லம் உத்³தி³ஶ்ய வா | (சுவர்க்காதி) பலனை யுத்தேசித்தாவது |
| பரிக்லிஷ்டம்† | மனவருத்தத்தோடுகூடிய |
| யத் து புந꞉ | எந்ததானமானது |
| தீ³யதே ச | கொடுக்கப்படுகிறதோ |
| தத் | அதானது |
| ராஜஸம் | இராஜஸமென்று |
| உதா³ஹ்ருதம் | சொல்லப்பட்டிருக்கிறது. |

பிரதி யுபகாரத்தை யுத்தேசித்தாவது, சுவர்க்காதி பலனை யுத் தேசித்தாவது, மனவருத்தத்துட னாவது, எந்த தானமானது கொடுக் கப் படுகிறதோ, அது இராஜஸமென்று சொல்லப்பட்டிருக்கிறது. (௨௧)

---

௨௨. அதே³ஶகாலே யத்³தா³நமபாத்ரேப்⁴யஶ்ச தீ³யதே।
அஸத்க்ருதமவஜ்ஞாதம் தத்தாமஸமுதா³ஹ்ருதம்॥

| | |
|---|---|
| அதே³ஶகாலே‡ | அசுத்தமான தேசத்திலேயும் காலத்திலே யும் |
| அபாத்ரேப்⁴ய꞉§ | அயோக்கியர்களின்பொருட்டும் |

* (ஸா) முன்தனக்குச் செய்திருக்கிற உபகாரத்திற்கு பிரதிப்பிரயோஜன மாக.

† (ரா) அமங்களமான திரவியத்தையுடைய. (தீ,வி) அந்நியா யார்ஜிதத் தையுடைய.

‡ அதே³ஶே (ஶம்) மிலேச்சர்களுடையவும் அசுசிவியாபித்திருக்கிறவும் தே சத்தில், அகாலே – (ஶா) சங்கிராந்திமுதலிய விசேஷங்களல்லாதகாலத்தில். (ஸ்ரீ) தான் அசுத்தியா யிருக்கிறகாலத்தில்.

§ (ஶம்) மூர்க்கர்கள் திருடர்கள் முதலியவர்களின்பொருட்டு. (ஸ்ரீ) நடனம் செய்பவன், விடன், பாடகன் முதலியவர்களின் பொருட்டு.

| | |
|---|---|
| 𑌅𑌸𑌤𑍍𑌕𑍃𑌤𑌂 | பூஜைமுதலியவைசெய்யாமலும் |
| 𑌅𑌵𑌜𑍍𑌞𑌾𑌤𑌂 | அவமரியாதையுடனும் |
| 𑌯𑌤𑍍 𑌦𑌾𑌨𑌂 | எந்ததானமானது |
| 𑌦𑍀𑌯𑌤𑍇 | கொடுக்கப்படுகிறதோ |
| 𑌤𑌤𑍍 | அதானது |
| 𑌤𑌾𑌮𑌸𑌂 | தாமஸமானதென்று |
| 𑌉𑌦𑌾𑌹𑍃𑌤𑌂 | சொல்லப்பட்டிருக்கிறது. |

அசுத்தமான தேசத்திலும் காலத்திலும், அயோக்கியர்களின் பொருட்டும், பூஜை முதலியவை செய்யாமலும், அவமரியாதையோடும் எந்த தானமானது கொடுக்கப்படுகிறதோ, அது, தாமஸமென்று சொல்லப்பட்டிருக்கிறது.

(ஶம்) (ஸ்ரீ) தேசம் காலம் பாத்திரம் இவைகள் தகுந்தவையல்லாம லிருக்கையிலும் பூஜை மரியாதை இவைகளன்றியிலும் செய்யும் தானம், தாமஸமாய்விடும். (௨௨)

---

௨௩. 𑍐 𑌤𑌤𑍍𑌸𑌦𑌿𑌤𑌿 𑌨𑌿𑌰𑍍𑌦𑍇𑌶𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌃 𑌸𑍍𑌮𑍃𑌤𑌃।
𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌾𑌸𑍍𑌤𑍇𑌨 𑌵𑍇𑌦𑌾𑌶𑍍𑌚 𑌯𑌜𑍍𑌞𑌾𑌶𑍍𑌚 𑌵𑌿𑌹𑌿𑌤𑌾𑌃 𑌪𑍁𑌰𑌾॥

| | |
|---|---|
| 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌃 | பரப்பிரம்மத்திற்கு |
| 𑍐 | ஓம் |
| 𑌤𑌤𑍍 | தத் |
| 𑌸𑌤𑍍 | ஸத் |
| 𑌇𑌤𑌿 𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌃 | என்று மூன்றுவிதமான |
| 𑌨𑌿𑌰𑍍𑌦𑍇𑌶𑌃 | பெயர்கள் |
| 𑌸𑍍𑌮𑍃𑌤𑌃* | (ஞானிகளால்) சொல்லப்பட்டிருக்கின்றன |
| 𑌤𑍇𑌨 | அந்தப்பெயர்களினாலே |
| 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌾𑌃 | பிராமணர்களும் |
| 𑌵𑍇𑌦𑌾𑌶𑍍𑌚 | வேதங்களும் |
| 𑌯𑌜𑍍𑌞𑌾𑌶𑍍𑌚 | யக்ஞங்களும் |
| 𑌪𑍁𑌰𑌾 | ஆதிகலத்தில் |
| 𑌵𑌿𑌹𑌿𑌤𑌾𑌃 | சிருஷ்டிக்கப்பட்டார்கள். |

---

* (ஶம்) பிரம்மஞானிகளால் வேதாந்தங்களைக்கொண்டு நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. (ஸ்ரீ) சிஷ்டர்களால் சொல்லப்பட்டிருக்கிறது.

பரப்பிரம்மத்திற்கு ஓம், தத், ஸத், என்று மூன்றுவிதமான பெயர்கள் ஞானிகளால் சொல்லப்பட்டிருக்கின்றன. அந்தப்பெயர்களினுலே பிராமணர்களும் வேதங்களும் யக்ஞங்களும் ஆதிகாலத்தில் சிருஷ்டிக்கப் பட்டார்கள்.

(ஸ்ரீ) ஓம் - என்பது பிரம்மத்தினுடைய நாமமென்று, உபநிஷத்தில் பலவிடங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ஜகத்திற்குக் காரணமாயும், ஞானிகளினுலே பார்க்கப்பட்டதாயு மிருக்கிறதினுல், பரபிரம்மம் தத் என்று சொல்லப்படுகிறது. அழிவற்றவும், உண்மையானவும், உத்தமமானவும் வஸ்து எதுவோ, அது (பிரம்மம்) ஸத் - என்று சொல்லப்படுகிறது. இந்தப் பெயர்களைக்கொண்டு பிரம்மாவினுல், பிராமணுள் வேதம் யக்ஞம் இவர்கள் சிருஷ்டிக்கப்பட்டார்கள். அல்லது மேற்கண்ட மூன்று பெயர்களையுடைய பிரம்மத்தினுலே, பிராமணுதிகள் உற்பத்தி செய்யப்பட்டார்கள், அல்லது பரிசுத்தமாக சிருஷ்டிக்கப்பட்டார்கள், ஆகையால் பிரம்மத்தினுடைய பெயர்களாக சொல்லப்படுகின்றன.

(ரா) ப்ரஹ்மண꞉ — வேதோக்தமான யக்ஞாதி கருமத்திற்கு ஓம் தத் ஸத் என்கிற மூன்றுவிதமான சப்தங்களும், ஸூசித꞉ — ஒட்டினதாக விருக்கின்றன. எப்படி யென்முல், ஓம் என்கிற சப்தத்தை, யக்ஞாதி கருமங்களுக்கு அங்கமாக முதலில் உச்சரிக்கும்படியாகவும், தத் ஸத் இவைகளை, அக் கருமங்களுக்கு யோக்கியதையை யுண்டாக்குகிறதற்காக, கருமத்தின் முடிவில் உச்சரிக்கும்படியாகவும், வேதத்தில் விதிக்கப்பட்டிருக்கின்றது. ஆகையால், ஓம் தத் ஸத் என்பவைகள் வேதோக்த கருமங்களை யொட்டினவைகளாக சொல்லப்பட்டன. தேந — அந்த மூன்று சப்தங்களினுலே, ப்ராஹ்மணா꞉ — வேதாதிகாரிகளான (பிரம்ம க்ஷத்திரிய வைசியர்களான) மூன்று வருணத்தார்களும், வேதா꞉ — வேதங்களும், யஜ்ஞா꞉ — யக்ஞங்களும், புரா — ஆதியில், விஹிதா꞉ — சிருஷ்டிக்கப்பட்டார்கள்.

(மீ,வி) ஓம் தத் ஸத் என்கிற மூன்றும், ப்ரஹ்மண꞉ — பிரம்மத்தினுடைய பெயர்கள். அந்தப் பெயர்களை ஏன் பிரம்மத்திற்கு சொல்லவேண்டுமென்முல், சகல ஜகத்தையும் தரிக்கிறபடியினுலே ஓம் என்றும், குணங்களால் வியாபித்திருக்கிற அல்லது ஞானிகளால் பார்க்கப்படுகிறபடியினுலே தத் - என்றும், நிர்தோஷமாயும், சுபகுண பூர்ணமாயு மிருக்கிறபடியினுலே ஸத் - என்றும், சுருதிகளில் சொல்லப்பட் டிருக்கிறதினுல்தான். தேந — அந்த பிரம்மத்தினுலே, பிராமணுள் வேதங்கள் யக்ஞங்கள் இவை ஏற்படுத்தப்பட்டன.

(ஸ்ரா) மனோவாக்குக் காயங்களினுல் செய்யப்படுகிற யக்ஞதானதபசுகளாகிய கருமங்களில், இராஜஸ தாமஸ கருமங்களும்கூட,

பிரம்மத்தின் நாமங்களான ஓம் - தத் - ஸத் - என்பவைகளை முடிவில் உச்சரித்து விட்டால், சாத்விகமாய் விடுமென்பதே. இந்தத் தாத்பரியத்தை ஸ்ரீதரசுவாமிகள் ஆதரிக்கிறார். பின்னும், வேதம் முதலியன சிருஷ்டிக்கப்பட்ட தென்றதினால் வேத மனாதி என்ற வாக்கியத்திற்கு விரோதமாச்சுதேயென்றாலோ, விரோதமல்ல. பிரதி சிருஷ்டிகாலத்திலும் வேதம் முதலியன சிருஷ்டிகருத்தாமூலமாய் வெளிப்படுகின்றன. இதுதான் சிருஷ்டி எனப்படுகிறது. (உங)

---

உச. தஸ்மாதோமித்யுதாஹ்ருத்ய யஜ்ஞதாநதப:க்ரியா:।
ப்ரவர்த்தந்தே விதாநோக்தா: ஸததம் ப்ரஹ்மவாதிநாம்॥

| | |
|---|---|
| தஸ்மாத் | (ஓம் - தத் - ஸத் இம்மூன்றும் பரபிரம்மத்தினுடைய நாமம்) ஆகையினாலே |
| ப்ரஹ்மவாதிநாம் | வேதத்தைச் செவ்வையா யறிந்தவர்களுடைய |
| விதாநோக்தா: | சாஸ்திரோக்தங்களான |
| யஜ்ஞதாநதப:க்ரியா: | யக்ஞதானதபசுகளாகியகிரியைகள் |
| ஓமிதி | ஓ மென்பதாக |
| உதாஹ்ருத்ய | உச்சரித்து |
| ஸததம் | எப்போதும் |
| ப்ரவர்த்தந்தே | ஆரம்பிக்கப்படுகின்றன. |

ஓம் தத் ஸத் இவை பிரம்மத்தினுடைய நாமங்களாகையினாலே, வேதத்தைச் செவ்வையா யறிந்தவர்களுடைய சாஸ்திரோக்தங்களான யக்ஞ தான தபசுகளாகிய கிரியைகள், ஓம் என்பதாக உச்சரித்து எப்போதும் ஆரம்பிக்கப்படுகின்றன.

(ஸ்ரீ) (மீ,வி) யக்ஞாதிக் கிரியைகளை ஆரம்பிக்கையில் ஓம் என்பதை உச்சரிப்பதினால், அந்தக் கிரியைகளில், மந்திர தந்திராதிகளுடைய குறைவினாலுண்டாகும் தோஷங்கள் நீங்கி அக்கிரியைகள் சாத்குண்ணிய மடைகின்றன. (ஸபலமாகின்றன.) (உச)

---

உரு. ததித்யநபிஸந்தாய பலம் யஜ்ஞதப:க்ரியா:।
தாநக்ரியாஶ்ச விவிதா: க்ரியந்தே மோக்ஷகாங்க்ஷிபி:॥

| | |
|---|---|
| மோக்ஷகாங்க்ஷிபி: | மோக்ஷாபேக்ஷையுள்ளவர்களால் |
| தத் இதி (உதாஹ்ருத்ய) | தத் என்று உச்சரித்தும் |
| பலம் | பலத்தை |
| அநபிஸந்தாய | கோராமலும் |

| | |
|---|---|
| விவியாஃ | அநேக விதங்களான |
| யஜ்ஞதவஃக்ரியாஃ* | யக்ஞதபஸுகளாகிய கிரியைகளும் |
| தாநக்ரியாஸ்ச | தானக்கிரியைகளும் |
| க்ரியந்தே | செய்யப்படுகின்றன. |

மோக்ஷாபேக்ஷை யுள்ளவர்களால், தத் என்று உச்சரித்தும், பலத்தைக் கோராமலும் அநேகவிதங்களான யக்ஞ தபஸு தானங்களாகிய கிரியைகள் செய்யப்படுகின்றன. (௨௫)

---

௨௬. ஸத்பாவே ஸாதுபாவே ச ஸதித்யேதத்ப்ரயுஜ்யதே।
ப்ரஶஸ்தே கர்மணி ததா ஸச்சப்த: பார்த்த யுஜ்யதே॥

| | |
|---|---|
| பார்த்த | ஓ! பார்த்தா! |
| ஸத்பாவே† | உண்டென்னும்பொருளிலேயும் |
| ஸாதுபாவே‡ | யோக்கியமென்னும்பொருளிலேயும் |
| ஸத் இதி ஏதத் | ஸத் என்கிற இந்தப்பதமானது |
| ப்ரயுஜ்யதே | உபயோகிக்கப்படுகிறது |
| ததா | அப்படியே |
| ப்ரஶஸ்தே கர்மணி § | மங்களகரமான விவாகாதிகாரியங்களிலும் |
| ஸச்சப்த: | ஸத் என்கிற சப்தமானது |
| யுஜ்யதே | பிரயோகிக்கப்படுகிறது. |

ஓ! பார்த்தா! உண்டென்னும் பொருளிலேயும், யோக்கியமென்னும் பொருளிலேயும், ஸத் என்கிற இந்தப்பதமானது உபயோகிக்

---

* (ஸ்ரீ,வி) யஜ்ஞ:=அக்கினிஹோத்திரம் முதலியன - தவ:=சரீரவாக்கு மனசுகளினால் செய்யப்பட்டது.

† (ஸ்ரீ) (ஶம்) (ம) (ஸ்ரீ,வி) ஒருவனுக்கில்லாத வஸ்து உண்டானாலும், அல்லது கிடைத்தாலும், அப்படியுண்டான அல்லது கிடைத்த வஸ்துவானது ஸத்என்று சொல்லப்படுகிறது. எப்படி யென்றால், பிள்ளை யில்லாதவனுக்குப் பிள்ளையுண்டானால், அந்தப் பிள்ளையை ஸத் என்று சொல்வதுண்டு.

‡ (ஶம்) அயோக்கியன் யோக்கியனாய்விட்டால், அவனை ஸத் என்று சொல்லலாம். (ரா) நல்லதென்கிற அர்த்தத்திலும், (ம) உத்தமமான வஸ்துவிலேயும்.

§ (ரா) உலகத்தில் நல்ல காரியங்களிலேயும்.

கப்படுகிறது. அப்படியே மங்களகரமான விவாகாதி காரியங்களிலும், ஸத் என்கிற சப்தமானது பிரயோகிக்கப்படுகிறது. (உ௬)

---

உஎ. யஜ்ஞே தபஸி தாநே ச ஸ்திதி: ஸதிதி சோச்யதே।
கர்ம சைவ ததர்தீயம் ஸதித்யேவாபிதீயதே॥

| | |
|---|---|
| யஜ்ஞே | யக்ஞத்திலும் |
| தபஸி | தபசிலும் |
| தாநே ச | தானத்திலும் |
| ஸ்திதி:* | நிஷ்டையானது |
| ஸத் இதி உச்யதே† | ஸத் என்பதாக சொல்லப்படுகிறது |
| ததர்தீயம் கர்ம சைவ ‡ | பிரம்மோத்தேசமான பூஜாதிகளும், அவைகளுக் குதவியான கருமங்களுங் கூட |
| ஸத் இத்யேவ | ஸத் என்பதாகவே |
| அபிதீயதே | சொல்லப்படுகிறது. |

யக்ஞத்திலும் தபசிலும் தானத்திலும் (நிலையாகவும் உறுதியாகவும் செய்வதாகிய) நிஷ்டையானது ஸத் என்பதாக சொல்லப்படுகிறது. பிரம்மோத்தெசமான பூஜைகளும் அவைகளுக் குதவியான கருமங்களுங்கூட ஸத் என்பதாகவே சொல்லப்படுகின்றன. (உஎ)

---

உஅ. அஶ்ரத்தயா ஹுதம் தத்தம் தபஸ்தப்தம் க்ருதம் ச யத்।
அஸதித்யுச்யதே பார்த ந ச தத்ப்ரேத்ய நோ இஹ॥

---

* (ஸ்ரீ,வி) நிஷ்டை. அதாவது, செய்யப்படுகிற யக்ஞாதிகள் பகவதர்ப்பணமாக வேண்டுமென்கிற எண்ணம்.

† (ஶங்) ஞானிகளால் சொல்லப்படுகிறது.

‡ (ஶங்) (௧) யக்ஞ தான தபசுகளுக் கனுகூலமான கருமங்கள் அல்லது பிரம்மத்தினுடைய ஆராதனைக் கனுகூலமான கருமங்கள். (ஸ்ரீ) மனதினாலும் வாக்கினாலும் செய்கிற பூஜாதிகளுமன்றி, தேகத்தினாலே நமஸ்காராதிகளும் கோவில்கட்டுதல் கோவிலில் பகவதுத்தேசமாய் பணிவிடைசெய்தல் முதலியவைகளும் அதற்குதவியானதாகிய கோவில்கட்ட திரவியம் சம்பாதித்தல் பூஜைக்கு புஷ்பாதிகள் உண்டாகும் பொருட்டு நந்தவனம் வைத்தல் முதலியவைகளும். (ரா) மூன்று வருணங்களுக்கும் அடுத்த கருமங்களும்.

| | |
|---|---|
| 𑌅𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾 | அசிரத்தையினலே |
| 𑌹𑍁𑌤𑌂 | ஹோமமாவது |
| 𑌦𑌤𑍍𑌤𑌂 | தானமாவது |
| 𑌤𑌪𑌃 𑌤𑌪𑍍𑌤𑌂 | செய்யப்பட்டதபசாவது |
| 𑌕𑍃𑌤𑌂𑌚 | செய்யப்பட்ட மற்றகருமமாவது |
| 𑌯𑌤𑍍 | எதோ |
| 𑌤𑌤𑍍 | அதானது |
| 𑌪𑌾𑌰𑍍𑌥 | ஓ! பார்த்தா! |
| 𑌅𑌸𑌦𑌿𑌤𑌿 | அஸத்தென்று |
| 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 | சொல்லப்படுகிறது |
| 𑌪𑍍𑌰𑍇𑌤𑍍𑌯 | பரலோகத்திலும் |
| 𑌨 | (அவைகளுக்கு பிரயோஜனம்) இல்லை |
| 𑌇𑌹𑌚 | இந்தலோகத்திலும் |
| 𑌨𑍋 | (பிரயோஜனம்) இல்லை. |

சிரத்தையில்லாமல் செய்யப்பட்ட ஹோம (𑌹𑌵𑌨𑌂) மாவது தானமாவது தபஸாவது மற்ற கருமமாவது எதோ, அதானது ஓ! பார்த்தா! அஸத்தென்று சொல்லப்படுகிறது. (அப்படிப்பட்டதானதி கருமமானது) பரலோகத்திலும் இந்தலோகத்திலும் பிரயோஜன மில்லாமல் போகிறது.

(ரா) ஏன் அஸத் தென்றால், இந்தலோகத்திலாவது, பரலோகத்திலாவது பலனைக் கொடுக்காததினால் தான். (௨௮)

𑌓𑌂 𑌤𑌤𑍍𑌸𑌦𑌿𑌤𑌿 𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌭𑌗𑌵𑌦𑍍𑌗𑍀𑌤𑌾𑌸𑍂𑌪𑌨𑌿𑌷𑌤𑍍𑌸𑍁 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌯𑌾𑌂

𑌯𑍋𑌗𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇 𑌶𑍍𑌰𑍀𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌰𑍍𑌜𑍁𑌨𑌸𑌂𑌵𑌾𑌦𑍇

𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌤𑍍𑌰𑌯𑌵𑌿𑌭𑌾𑌗𑌯𑍋𑌗𑍋 𑌨𑌾𑌮

𑌸𑌪𑍍𑌤𑌦𑌶𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃

𑌶𑍍𑌰𑍀𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌯𑌪𑌰𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍇 𑌨𑌮𑌃.

சிரத்தாத்திரய விபாகயோகமென்கிற

பதினேழாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

ஸ்ரீ:

அஷ்டாதசாத்யாயப்ராரம்ப:

# பதினெட்டாவது அத்தியாயம்.

அர்ஜுந உவாச.

௧. ஸந்ந்யாஸஸ்ய மஹாபாஹோ தத்த்வமிச்சாமி வேதிதும்।
த்யாகஸ்ய ச ஹ்ருஷீகேச ப்ருதக்கேசிநிஷூதந॥

| | |
|---|---|
| அர்ஜுந உவாச | அர்சுனன் சொல்வது |
| ஹ்ருஷீகேச | இந்திரியங்களுக்கு நியாமகனும் |
| கேசிநிஷூதந* | கேசியென்கிற இராக்ஷதனைக் கொன்றவனுமான |
| மஹாபாஹோ | ஓ! தோள்வலியுடையவனே! |
| ஸந்ந்யாஸஸ்ய† | சந்நியாசத்தினுடையவும் |
| த்யாகஸ்ய‡ | தியாகத்தினுடையவும் |
| தத்த்வம் | உண்மையை |
| ப்ருதக் | பிரத்தியேகமாய் (விவரமாய்) |
| வேதிதும் | தெரிந்துகொள்ளுகைக்கு |
| இச்சாமி | இச்சிக்கிறேன். |

அர்சுனன் கிருஷ்ணபகவானைநோக்கிச் சொல்வது - இந்திரியங்களுக்கு நியாமகனும், கேசி என்ற இராக்ஷதனைக் கொன்றவனுமான ஓ! தோள்வலியை யுடையவனே! ஸந்நியாசத்தினுடையவும், தியாகத்தினுடையவும் உண்மையை (சுவபாவத்தை) பிரத்தியேகமா யறிய இச்சிக்கிறேன்.

(ஸ்ரீ) "ஸர்வகர்மாணி மநஸா ஸந்ந்யஸ்யாஸ்தே ஸுகம் வசீ" (அத் - ரு, சு - க௩.) என்பதினால் சகலகருமங்களையும் மனசினால் விட்டவன் சுகமா யிருப்பானென்றும், "ஸந்ந்யாஸயோகயுக்தாத்மா விமுக்தோ கர்மபந்தநை:" (அத - கூ, சு - உஅ.) என்பதினால் சகல

* (ஸ்ரீ) குதிரைரூபமாயும் வாயைத்திறந்துகொண்டும் யுத்தத்திற்கு வந்த கேசி என்கிற இராக்ஷதனை ஸ்ரீகிருஷ்ணபகவான் அவன் வாயில் தன்கையை நீட்டி அந்தக் கையைப் பெரிதாய் வளரச்செய்ய அதினாலவன் வாயபிளந்திறந்தானுகையால் இந்தப் பெயர்வந்தது. அதினால்தான் மகாகைகளையுடையவரென்றும் சொல்லப்படுகிறார்.

† - ‡ (ஸம்) சந்நியாசமென்கிற பதத்திற்கும் தியாகமென்கிற பதத்திற்கும், தத்த்வம் = சுவபாவமான அர்த்தத்தை.

கருமங்களையும் விட்டவன் மோக்ஷ மடைகிறானென்றும், "𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌾𑌸𑌂𑌗𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌤𑍃𑌪𑍍𑌤𑍋 𑌨𑌿𑌰𑌾𑌶𑍍𑌰𑌯𑌃" (அத் - ௪, சு - ௨௦) "𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌤𑍍𑌯𑌾𑌗𑌂 𑌤𑌤𑌃 𑌕𑍁𑌰𑍁 𑌯𑌤𑌾𑌤𑍍𑌮𑌵𑌾𑌨𑍍" (அத் - ௧௨, சு - ௧௧) இவைகளினால் சகல கருமங்களுடைய பலனைத் தியாகஞ் செய்யவேண்டுமென்றும் சொல்லப்பட் டிருக்கிறது. இதொன்றுக்கொன்று விரோதமாய்க் காணப்படுகிறது. ஆகையால், அர்சுனன் சந்தேகப்பட்டுக் கேழ்க்கிறான்.

(ஸ०) சகல வேதார்த்தமாகிய கீதார்த்த மெல்லாவற்றையும், சுருக்கி இந்த அத்தியாயத்தில் சொல்லுகிறார்.

(ரா) இந்த அத்தியாயத்தில் மோக்ஷஸாதனமாகக் குறிக்கப்பட் டிருக்கிற சந்நியாசம் தியாகம் இரண்டு மொன்றென்பதும், தியாகத்தின் சுவரூபமும், சகல கருமத்திற்கும் கருத்தா பகவானென்கிற அநுசந்தானமும், சத்துவம் ரஜஸ் தமஸ் என்கிற குணங்களை வருணிப்பதினால் சத்துவத்தை அவசியம் கிரகிக்கவேண்டு மென்பதும், அந்தந்த வருணத்தாருக்கு சுவபாவமாயுள்ள கருமத்தை அனுஷ்டிப்பதினால் பரமபுருஷப் பிராப்திக்கு அது ஏதுவா யிருக்கிற தென்பதும், சகல கீதாசாஸ்திரார்த்தஸாரமாகிய பக்தியோகமும் சொல்லப்படுகின்றன. இந்த சுலோகத்திலோ, அடியில் குறித்த சுருதிகளில் மோக்ஷ ஹேதுவாகச் சொல்லப்படுகிற சந்நியாசம் தியாக மிரண்டுமொன்றா? அல்லது வெவ்வேறா? என்பது கேட்கப்படுகிறது. "𑌨 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾 𑌨 𑌪𑍍𑌰𑌜𑌯𑌾 𑌧𑌨𑍇𑌨 𑌤𑍍𑌯𑌾𑌗𑍇𑌨𑍈𑌕𑍇 𑌅𑌮𑍃𑌤𑌤𑍍𑌵𑌮𑌾𑌨𑌶𑍁𑌃" "𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍁𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑌾𑌰𑍍𑌥𑌾𑌃 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌯𑍋𑌗𑌾𑌦𑍍𑌯𑌤𑌯𑌃 𑌶𑍁𑌦𑍍𑌧𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌃 । 𑌤𑍇 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌲𑍋𑌕𑍇𑌷𑍁 𑌪𑌰𑌾𑌨𑍍𑌤𑌕𑌾𑌲𑍇 𑌪𑌰𑌾𑌮𑍃𑌤𑌾𑌤𑍍 𑌪𑌰𑌿𑌮𑍁𑌚𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑍇" (கைவல்லியோபநிஷத்துப்பார்க்க.) (௧)

---

𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚.

௨. 𑌕𑌾𑌮𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌂 𑌨𑍍𑌯𑌾𑌸𑌂 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌂 𑌕𑌵𑌯𑍋 𑌵𑌿𑌦𑍁𑌃।
𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌤𑍍𑌯𑌾𑌗𑌂 𑌪𑍍𑌰𑌾𑌹𑌸𑍍𑌤𑍍𑌯𑌾𑌗𑌂 𑌵𑌿𑌚𑌕𑍍𑌷𑌣𑌾𑌃॥

| | |
|---|---|
| 𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚 | ஸ்ரீ கிருஷ்ணபகவான் சொல்வது |
| 𑌕𑌾𑌮𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌂 | காம்மியகருமங்களுடைய |
| 𑌨𑍍𑌯𑌾𑌸𑌂 | பரித்தியாகத்தை (விட்டுவிடுதலை) |
| 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌂 | சந்நியாசமென்பதாய் |
| 𑌕𑌵𑌯𑌃 | பண்டிதர்கள் (ஞானிகள்) |

| | |
|---|---|
| விது: | அறிகிருர்கள் |
| ஸர்வகர்மபலத்யாகம் | { சகல கருமங்களுடைய பலனைத் தியாகஞ் செய்வதை |
| த்யாகம் | தியாகமென்பதாய் |
| விசக்ஷணா: | வித்துவான்கள் |
| ப்ராஹு: | சொல்லுகிருர்கள். |

ஸ்ரீ கிருஷ்ணபகவான் அர்சுனனை நோக்கிச் சொல்வது.—

காம்மிய கருமங்களுடைய பரித்தியாகத்தை ஸந்நியாசமென்பதாய்ப் பண்டிதர்கள் அறிகிருர்கள். சகலகருமங்களுடைய பலனைத் தியாகஞ் செய்வதை த்தியாகமென்பதாய் வித்துவான்கள் சொல்லுகிருர்கள்.

(ஸ்ரீ) "ஜ்யோதிஷ்டோமேந ஸ்வர்க்ககாமோ யஜேத" — சுவர்க்கமடையவேண்டு மென்கிற இச்சையுடையவன், ஜெ்யாதிஷ்டோமமும் "புத்ரகாம: புத்ரேஷ்ட்யா யஜேத"— புத்திரனை யடைய வேண்டு மென்கிற இச்சை யுடையவன் புத்திரகாமேஷ்டி யென்கிறயாகமும் செய்யவேண்டு மென்று வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறதல்வா? அப்படிப்பட்ட பலனையுடைய கருமமானது காம்மிய கருமமெனப் படுகிறது. இந்தக் காம்மிய கருமத்தைச் செய்யாம லிருப்பதுதான் சந்நியாசம் என்று சிலரும், வேதோக்தமான நித்திய * நைமித்திக † காம்மியங்களான சகல கருமங்களைச்செய்து பலனை ஈசுவரார்ப்பணஞ் செய்வதே தியாகமென்று சிலரும் சொல்லுகிருர்கள். நித்திய கருமங்களுக்கும், சில நைமித்திக கருமங்களுக்கும், ஜெ்யாதிஷ்டோமாதிகளுக்குப் பலன் சொல்லப்பட் டிருப்பதுபோல வேதத்தில் பலன் சொல்லப்பட வில்லையே; அப்படி பலனேயில்லாத கருமத்தைச் செய்து பலனைத் தியாகம் செய்யென்று எப்படிச் சொல்லலா மென்ருல், அந்த நித்திய நைமித்திக கருமங்கள் விதிக்கப்பட்டிருக்கிற வேதபாகத்தில் பலன் சொல்லப்படா விட்டாலும் "ஸர்வ ஏதே புண்யலோகா பவந்தி" "கர்மணா பித்ருலோக:" இப்படிப்பட்ட வேத வாக்கியங்களினுல், விசேஷமான புண்ணியபலன்கள்

* (ஸ்வா) சுவர்க்காதிபலனைக் குறித்தல்லாமல் செய்யப்படுகிற ஸந்தியாவந்தனம் ஔபாசனம் அக்கினிஹோத்திரம் ஜ்யோதிஷ்டோமமுதலியன நித்தியகருமங்கள்.

† (ஸ்வா) ஜாதேஷ்டி க்ருஹணேஷ்டி, ஆக்ரயணம், சங்கிராந்தி சிராத்தாதிகள் நைமித்திககருமங்கள். பலோத்தேசமாய் செய்யப்படுகிற மேற்கண்ட நித்திய நைமித்திககருமங்களும் புத்திரகாமேஷ்டி ஸத்திரயாகம் முதலியனவும் காம்மிய கருமங்கள்.

சொல்லப்பட்டிருக்கிற படியால், பலனுண்டென்றே கொள்ளவேண்டியது.

இப்படிச் சொன்னதினால் கருமம் செய்யவேண்டியது அவசியமென்று ஏற்படுகிறது. "யஸ்த்வாத்மரதிரேவஸ்யா தாத்மத்ருப்தஶ்ச மாநவ:" (அத் - ங, சு - கஎ) என்கிறதினால் பரமாத்மாவிடத்தில் மனதை வைத்து, அந்த ஆத்மாவிடத்திலேயே திருப்தி யடைந்திருக்கிறவன் கருமம் செய்யவேண்டியதில்லை யென்றுகிறதே! இது பரஸ்பர விரோதமல்லவா என்றாலோ, ஆத்மாவிடத்திலேயே திருப்தியடைந்திருக்கிற ஆத்மத்தியான சமாதியி லிருப்பவனுக்குக் கருமம் தானகவே விட்டுப்போகிறது. அப்படிப்பட்டவன் கருமம் செய்யவேண்டுமென்பதில்லை.

(ஶ௦) அசுவமேதாதி காம்மிய கருமங்கள் அநுஷ்டிக்கவேண்டியதாய் நேரிட்டாலும் அநுஷ்டிக்காமல் விடுவதே சந்நியாசமென்று சிலரும், நித்திய நைமித்திகமான சகலகருமங்களையும் செய்து பலனை ஈசுவரார்ப்பணஞ் செய்வது தியாகமென்று சிலரும், சொல்லுகிறார்கள். காம்மியகருமத்தை விடுவதென்று சொன்னாலும், கருமபலத்தை விடுவதென்று சொன்னாலும், இவ்விரண்டும் தியாகமென்கிற ஒரே சப்தார்த்தமாகின்றன. (வட - வட) கட, பட, சப்தங்கள்போல விஜாதீயமான அர்த்தமல்ல. நித்திய நைமித்திக கருமங்களுக்குப பலனே யில்லையாகையால், பலனைத் தியாகஞ்செய்வது எப்படிப் பொருந்துமென்று சிலர் சொல்லுகிறார்கள். அதுசரியல்ல, அவைகளுக்குப் பல னுண்டென்பதே பகவானுடைய அபிப்பிராயம் "அநிஷ்டமிஷ்டம் மிஶ்ரஞ்ச - ந து ஸந்ந்யாஸிநாம்" (இந்த அத் - சு-கஉ) என்பதினால், பாமார்த்த சந்நியாசிக்குக் கருமபலன் ஒட்டமாட்டா தென்பதைக் காண்பிவித்துக்கொண்டு அசந்நியாசிக்குப் பலப்பிராப்தியுண்டென்பதைக் காண்பிவிக்கிறார்.

(ஶா) ஸர்வகர்மபலத்யாகம், என்றால், நித்திய நைமித்திக காம்மிய கருமபலத் தியாகமென்று சிலர் சொல்லுகிறார்கள். (மற்றவிஷயத்தில் (ஶ௦) அர்த்தத்தை யொத்திருக்கிறது.)

(உ) (ஸ்ரீ,வி) காம்யாநாம் கர்மணாம் ந்யாஸம் ஸந்ந்யாஸம் — ஸாமாநியயா, அகரணேநவா, காம்யகர்மந்யாஸ: ஸந்ந்யாஸ: — பலனி லிச்சையை விடுவதினாலாவது, செய்யாம லிருப்பதினாலாவது, காம்மிய கருமத்தை விடுவதுதான் சந்நியாசம்.

(உ) "த்யாகஸ்ஸர்வஸ்ய த்யாகரேவ" — தியாக மென்பது பலத்தியாகமே. (ஸ்ரீ,வி) "ஸர்வகாம்யகர்மணாம் ஸமஸ்தம் த்யந்த்யோ த்யாக:" —

பகவத்பிரீதி விஷயம் தவிர மற்ற விஷயத்தில் சகல காம்மிய கரும பலத்தை விடுவதே தியாகம். (௨)

---

௩. 𑌤𑍍𑌯𑌾𑌜𑍍𑌯𑌂 𑌦𑍋𑌷𑌵𑌦𑌿𑌤𑍍𑌯𑍇𑌕𑍇 𑌕𑌰𑍍𑌮 𑌪𑍍𑌰𑌾𑌹𑍁𑌰𑍍𑌮𑌨𑍀𑌷𑌿𑌣𑌃 ।
𑌯𑌜𑍍𑌞𑌦𑌾𑌨𑌤𑌪𑌃𑌕𑌰𑍍𑌮 𑌨 𑌤𑍍𑌯𑌾𑌜𑍍𑌯𑌮𑌿𑌤𑌿 𑌚𑌾𑌪𑌰𑍇 ॥

| | |
|---|---|
| 𑌏𑌕𑍇 𑌮𑌨𑍀𑌷𑌿𑌣𑌃 * | விவேகிகளான சிலர் |
| 𑌕𑌰𑍍𑌮 | கருமமானது |
| 𑌦𑍋𑌷𑌵𑌤𑍍 † | தோஷத்தை யுண்டாக்கப்பட்டது (ஆகையால்) |
| 𑌤𑍍𑌯𑌾𑌜𑍍𑌯𑌮𑌿𑌤𑌿 | விடத்தகுந்ததென்றும் |
| 𑌅𑌪𑌰𑍇 ‡ | பின்னும்சிலர் |
| 𑌯𑌜𑍍𑌞𑌦𑌾𑌨𑌤𑌪𑌃𑌕𑌰𑍍𑌮 | யக்ஞதான தபசுகளாகியகருமம் |
| 𑌨 𑌤𑍍𑌯𑌾𑌜𑍍𑌯𑌮𑌿𑌤𑌿 | விடத்தக்கதல்லவென்றும் |
| 𑌪𑍍𑌰𑌾𑌹𑍁𑌃 | சொல்லுகிறார்கள். |

விவேகிகளான சிலர், கருமமானது தோஷத்தை யுண்டாக்கப் பட்டதாகையால் விடத்தகுந்ததென்றும், பின்னும் சிலர், யக்ஞதான தபசுகளாகிய கருமம் விடத்தக்கதல்ல வென்றும் சொல்லுகிறார்கள்.

(ஶம்) பரமார்த்த சந்நியாசிகளாகிய பிரம்மஞானிகள் விஷயமாய் இந்த சுலோகம் பிரவிருத்தித்ததல்ல. கருமயோகிகள், கருமத்தை விட்டுவிடவேண்டியதென்று சிலரும், விடக்கூடாதென்று சிலரும், சொல்லுகிறார்கள்.

(ஸ்ரீ,வி) சில ஞானிகள் பெந்தகத்துவமான தோஷத்துடன் கூடியதாகையால், காம்மிய கருமம் விடத்தகுந்ததென்றும், அல்லது நித்திய நைமித்திக கருமங்களுடையபலனைத் தியாகஞ்செய்யவேண்டியதென்றும் சொல்லுகிறார்கள். (௩)

---

௪. 𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑌂 𑌶𑍃𑌣𑍁 𑌮𑍇 𑌤𑌤𑍍𑌰 𑌤𑍍𑌯𑌾𑌗𑍇 𑌭𑌰𑌤𑌸𑌤𑍍𑌤𑌮 ।
𑌤𑍍𑌯𑌾𑌗𑍋 𑌹𑌿 𑌪𑍁𑌰𑍁𑌷𑌵𑍍𑌯𑌾𑌘𑍍𑌰 𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌃 𑌸𑌂𑌪𑍍𑌰𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌃 ॥

---

* (ஶம்) (ஸ்ரீ) சாங்கியமதஸ்தர்கள். (பரமார்த்த சந்நியாசிகளல்ல.) (ரா) கபிலமகரிஷியினுடைய சிஷியர்களும் அந்தமதத்தை யநுசரித்தவர்களும்.

† (ஶம்) தோஷமுள்ளபொருளாசை முதலியவைகளைத் தள்ளவேண்டியது போல.

‡ (ஶம்) கருமயோகிகள். (ஸ்ரீ) மீமாம்சக மதஸ்தர்கள். (ரா) கபிலமதத்தை யநுசரியாத மற்றவர்கள்.

| | |
|---|---|
| ஹே பரதஸத்தம | ஓ! பரதகுலசிரேஷ்டனே! |
| தத்ர த்யாகே | மேற்சொன்ன தியாகவிஷயத்தில் |
| மே | என்னுடைய |
| நிஶ்சயம் | நிச்சயத்தை |
| ஶ்ருணு | கேள் |
| ஹே புருஷவ்யாக்ர | ஓ! புருஷசிரேஷ்டனே! |
| த்யாகோ ஹி | தியாகமானது |
| த்ரிவித:* | மூன்றுவிதமாய் |
| ஸம்ப்ரகீர்த்தித: | சொல்லப்பட்டிருக்கிறது. |

ஓ! பரதகுல சிரேஷ்டனே! மேற்சொன்ன தியாக விஷயத்தில் என்னுடைய நிச்சயத்தைக்கேள். ஓ! புருஷசிரேஷ்டனே! தியாகமானது, மூன்றுவிதமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது.

(ஸம்) தத்ர — (தியாகம் சந்நியாசம்) இந்த விஷயத்தில், த்யாகே — தியாக சந்நியாச சப்தங்களுடைய அர்த்தமானது ஒன்றே. கருமாதிகாரிகளுக்கு சத்துவாதிகுண பேதத்தால் மூன்றுவிதமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறதேயன்றி பிரம்மஞானி விஷயமாய்ச் சொன்னதல்ல. இந்த அர்த்தமானது சாதாரணமாய்த் தெரிந்துகொள்ளக் கூடாததலால், அதுவிஷயமான என்னுடைய நிச்சயத்தைக்கேள் என்பது தாத்பரியம். (௪)

---

௫. யஜ்ஞதாநதப:கர்ம ந த்யாஜ்யம் கார்யமேவ தத்।
யஜ்ஞோ தாநம் தபஶ்சைவ பாவநாநி மநீஷிணாம்॥

| | |
|---|---|
| யஜ்ஞதாநதப:கர்ம | யக்ஞ தான தபசுகளாகிற கருமமானது |
| ந த்யாஜ்யம் | விடத்தகுந்ததல்ல |
| தத் | அதானது |
| கார்யமேவ | செய்யப்படவேண்டியதே |
| யஜ்ஞ:† | யக்ஞமும் |

---

* (ஸ்ரீ) சத்துவ ரஜஸ் தமோகுண பேதத்தினால் மூன்றுவிதம். (ரா) (மீ,வி) பலத்தியாகம், அபிமானத்தியாகம், கருத்திருத்துவத்தியாகம் என மூன்றுவிதம். மயிஸர்வாணிகர்மாணி (அத் - ௩, சுலோ - ௩௦.) பார்க்க. (மீ,வி) மேல்சொன்ன அர்த்தமு மல்லாமல், குணத்தினால் மூன்று விதமென்று சிலர் சொல்லுகிறார்கள்.

† (ஆ) திரவிய யக்ஞாதிகள்.

| | |
|---|---|
| 𑌦𑌾𑌨𑌂 * | தானமும் |
| 𑌤𑌪𑌶𑍍𑌚𑍈𑌵 | தபசுமே |
| 𑌮𑌨𑍀𑌷𑌿𑌣𑌾𑌂 † | விவேகிகளுக்கு |
| 𑌪𑌾𑌵𑌨𑌾𑌨𑌿 | சித்தசுத்தியை யுண்டாக்கத்தக்கவை. |

யக்ஞ தான தபசுகளாகிற கருமமானது விடத்தகுந்ததல்ல; அது செய்யப்படவேண்டியதே. யக்ஞமும் தானமும் தபசுமே விவேகிகளுக்குச் சித்த சுத்தியை யுண்டாக்கத்தக்கவை.

(ரா) யக்ஞ தான தபசு முதலிய வேதோக்த கருமங்கள், முமுக்ஷுக்களாலே ஒருகாலத்திலும் விடத்தகுந்தவை யல்ல. தேகமுள்ள வரையில் செய்யவேண்டியவையே. ஏனென்றால், அந்தக்கருமங்கள், 𑌮𑌨𑍀𑌷𑌿𑌣𑌾𑌂 = மனனசீலர் (ஆராய்ந்தறிகிறவர்) களுக்குப் பரிசுத்தத்தை யுண்டாக்குகின்றன. என்றால், பிரம்மோபாசனை செய்கிற முமுக்ஷுக்களுடைய உபாசனைக்கு விரோதியான பிராசீன கருமங்களைப் போக்கடிக்கின்றன.

(ஸ்ரீ,வி) யக்ஞ தான தபசுகள் சகலமானவர்களும் செய்யவேண்டியவையே; யதிகளுக்கு ஞானம்தான் யக்ஞம். வித்தியாதானம் (அடுத்தவர்களைக் காப்பதாகிய) அபயப்பிரதானம். இவைகள்தான் தானம். பிரம்மசரியம் முதலியவைதான் தபசு. ஸ்திரீ சூத்திரர்களுக்கு, விஷ்ணு நாமாதிகீர்த்தனம் யக்ஞம். சத்தியவசனம் தானம். உபவாசாதிகள் தபசு. (௫)

---

௬. 𑌏𑌤𑌾𑌨𑍍𑌯𑌪𑌿 𑌤𑍁 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌸𑌂𑌗𑌂 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌫𑌲𑌾𑌨𑌿 𑌚 ।
𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌾𑌨𑍀𑌤𑌿 𑌮𑍇 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑌂 𑌮𑌤𑌮𑍁𑌤𑍍𑌤𑌮𑌂 ॥

| | |
|---|---|
| 𑌹𑍇 𑌪𑌾𑌰𑍍𑌥 | ஓ! பார்த்தா! |
| 𑌏𑌤𑌾𑌨𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌾𑌨𑌿 | இந்த யக்ஞ தான தபசுகளாகிய கருமங்கள் செய்யவேண்டியவைகளே |
| 𑌅𑌪𑌿 𑌤𑍁 | ஆனாலோ |
| 𑌸𑌂𑌗𑌂 | (தான் கருத்தாவென்கிற) அபிமானத்தையும் |
| 𑌫𑌲𑌾𑌨𑌿 𑌚 | பலன்களையும் |
| 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 | விட்டு (செய்யவேண்டியவைகள்) |
| 𑌇𑌤𑌿 | என்பதாக |

---

* (௪) அபயதானமுங்கூட.

† (மா०) பலாபேக்ஷயை விட்டுச்செய்கிறவர்களான விவேகிகளுக்கு.

நிஶ்சிதம் — நிச்சயிக்கப்பட்ட
மே — என்னுடைய
உத்தமம் — சிரேஷ்டமான
மதம் — அபிப்பிராயம் (தாத்பரியம்.)

ஓ! பார்த்தா! இந்த யக்ஞ தான தபசுகளாகிய கருமங்கள், அபிமானத்தையும் பலன்களையும் விட்டுச் செய்யவேண்டியவைகளென்பது நிச்சயிக்கப்பட்ட என்னுடைய சிரேஷ்டமான அபிப்பிராயம்.

(ஸ0) ஸங்கத்தையும் பலனையும் அபேக்ஷித்துச் செய்கிற யக்ஞ தான தபசுகளாகிய கருமங்கள் பெந்தத்தைக் கொடுக்கப்பட்டவையானாலும், ஸங்கத்தையும் பலனையும் அபேக்ஷிக்காமல் முமுக்ஷுவுங்கூட அக்கருமங்களைச் செய்யவேண்டு மென்பதற்காக (அபி) அபிசப்தம் சேர்க்கப்பட்டதேயன்றி, அந்நியமான கருமங்களைச் சேர்த்துக் கொள்ளவேண்டு மென்பதற்கல்ல. சிலர் நித்தியகருமங்களுக்குப் பலனில்லையென்றும் பலனில்லாத நித்தியகருமங்களைப் பலனையும் ஸங்கத்தையும்விட்டுச் செய்வதென்பது அசம்பாவிதமென்றும் ஆகையால், அபி, சப்தத்தினால் யக்ஞ தான தபசுகளாகிய கருமங்களும் காம்மிய கருமங்களுங்கூட ஸங்கத்தையும் பலனையும்விட்டுச் செய்யவேண்டியவை யென்று அர்த்தஞ் செய்கிறார்கள். அது சரியல்ல; "யஜ்ஞோ தாநம் தபஶ்சைவ பாவநாநி மநீஷிணாம் — (இதின் சு - ரு) யக்ஞ தான தபசுகளாகிய கருமங்கள் மனிதர்களைப் பரிசுத்தி செய்கின்றன" என்கிற இந்த வசனத்தினாலே நித்திய கருமங்களுக்குப் பலனுண்டென்று முன்னமேயே சொல்லப்பட் டிருக்கிறது. மேலும், நித்தியகருமங்கள் பெந்த ஹேதுவானவை யாகையால், நித்திய கருமங்களையே விட்டுவிட விச்சிக்கிற முமுக்ஷு, காம்மிய கருமத்தை யிச்சிப்பானென்பது சரியானதல்ல. "த்ரைகுண்யவிஷயா வேதா:" (அத் - உ, சு - சரு) "யாமிமாம் புஷ்பிதாம் வாசம்" (அத் - உ, சு - ௪உ) என்று காம்மியகருமம் நிந்திக்கப்பட்டிருக்கிறதினாலும், "யஜ்ஞார்த்தாத் கர்மணோऽந்யத்ர" (அத்-௩, சு - ௯) "தேஷாம் ஜ்ஞாநீ நித்யயுக்த:" (அத் - ௭, சு - ௧௭) "க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விஶந்தி" (அத்-௯, சு-௨௧) இவைகளினாலே காம்மியகருமம் பெந்த ஹேதுவென்று சொல்லப்பட் டிருக்கிறதினாலும், (அபி) அபிசப்தத்தினால் காம்மியகருமம் சேர்க்கத்தகாது.

(ரா) பிரம்மோபாசனையைப் போலவே யக்ஞதான தபசுகளாகிய கருமாதிகளை ஈசுவரார்ப்பண புத்தியாய் ஸங்கத்தையும் பலனையும்விட்டு

தேகமுள்ளவரையில் செய்துவரவேண்டுமென்பது நிச்சயமானதும் உத்தமமானதுமான பகவத் அபிப்பிராயம்.

(ஸ்ரீ,வி) கருமங்களை விடக்கூடாது செய்யவேண்டியதே என்று சொன்னதானது, கருமத்தை விட்டுவிட வேண்டுமென்று முன் ஞானிகள் சொல்லியிருக்கிறதற்கு விரோதமாகிற தென்று நினைக்க ஹேதுவில்லாமல், ஸங்கம், ஸ்நேகம், சுவர்க்காதி பலன், இவைகளை விட்டுச் செய்யவேண்டிய தென்பது உத்தமமான மதமென்று பகவான் சொல்லுகிறார். (சா)

---

எ. நியதஸ்ய து ஸந்ந்யாஸ꞉ கர்மணோ நோபபத்யதே।
மோஹாத்தஸ்ய பரித்யாகஸ்தாமஸ꞉ பரிகீர்த்தித꞉॥

| | |
|---|---|
| நியதஸ்ய து | அவசியஞ் செய்யவேண்டியதாய் விதிக்கப்பட்டிருக்கிற |
| கர்மண꞉ | கருமத்தினுடைய |
| ஸந்ந்யாஸ꞉ | பரித்தியாகமானது |
| நோபபத்யதே | கூடாது |
| மோஹாத் | அவிவேகத்தினலே |
| தஸ்ய | அதினுடைய (கருமத்தினுடைய) |
| பரித்யாக꞉ | பரித்தியாகமானது |
| தாமஸ꞉ | தாமதமென்று |
| பரிகீர்த்தித꞉ | சொல்லப்பட்டிருக்கிறது. |

அவசியஞ் செய்யவேண்டியதாய் விதிக்கப்பட்டிருக்கிற கருமத்தினுடைய பரித்தியாகமானது கூடாது. அவி வேகத்தினலே அதினுடைய பரித்தியாகமானது தாமதமென்று சொல்லப்பட் டிருக்கின்றது. (என்றால், காம்மிய கருமத்தை விடுவது யுக்தமேயன்றி சித்த சுத்தி துவாரா மோக்ஷஹேதுவும், முமுக்ஷுவானவன் பிரதிதினமுஞ் செய்யவேண்டியதுமான நித்திய கருமத்தை விடக்கூடாது. அப்படி விடுவது அவி வேகத்தினலே யாகையாலும் மோகமானது தாமதத்தின் சுவபாவ மாகையாலும், மோகத்தினல் விட்டதும் தாமதமென்றே சொல்லப்பட்டது.)

(ரா) நித்திய நைமித்திக கருமங்களாகிய பஞ்சமகா யஜ்ஞாதி கருமங்களை விடக்கூடாது. ஏனென்றால், நித்திய நைமித்திக கருமங்கள் தேகத்தைப் பரிசுத்தமாக்கத்தக்கவை. யஜ்ஞமும் வைசுவதேவம் பலிகரணம் முதலியவைகளும் செய்து மிச்சமான அந்நத்தைப் புஜிப்பதினல் தேகசுத்தியும் சத்துவகுண விருத்தியும் அதினல் சித்தசுத்தியும் அதினல் ஞானமும் பிறகு மோக்ஷமு முண்டாகும்.

ஆகையால், நித்திய நைமித்திக கருமங்களை விடக்கூடாது. அப்படி விட்டுவிட்டால், அது தாமஸமே. ஏனென்றால், நித்திய நைமித்திக கருமங்களைச்செய்து அதில் மிச்சமான அந்நத்தைத்தவிர மற்றவித மான அந்நத்தை புஜிப்பவன் பாபத்தை புஜிக்கிறானென்று முன்னமே (அத் - ௩, சு - ௧௩) சொல்லப்பட் டிருக்கிறதினால் தான். கருமம் பெந்தத்தை யுண்டாக்குகிறதென்று எண்ணி அதைவிடுவது, அக்ஞான த்தினால் விடுவதானதா லது தாமஸம்.

(ஸ்ரீ,வி) தியாகமென்பது பலத்தியாகமேயன்றி, கருமத்தியாக மல்ல என்பது மூன்று சுலோகங்களினால் சொல்லப் படுகிறது. நியதஸ்ய து = வருணாசிரமங்களுக்கு யோக்கியமான, இந்தக் கரும ங்களை விடக்கூடாது. சுவகருமங்களாகிய யக்ஞாதிகளை விட்டால் நரகமடைவான். தியாகமென்பது பலத்தியாகமல்ல வென்றும் கரும சுவரூபத்தியாகமென்றும் அக்ஞானத்தினால் எண்ணி எவனாவது கரு மத்தைவிட்டாலது தாமஸம். (௭)

அ. து:கமித்யேவ யத்கர்ம காயக்லேஶபயாத்த்யஜேத்।
ஸ க்ருத்வா ராஜஸம் த்யாகம் நைவ த்யாகபலம் லபேத்॥

| | |
|---|---|
| (ய:) | எவன் |
| து:கமித்யேவ | துக்கமுண்டாகுமென்றே |
| காயக்லேஶபயாத் | சரீரப்பிரயாசையின் பயத்தினால் |
| யத் | எந்த |
| கர்ம | கருமத்தை |
| த்யஜேத் | விடுகிறானோ |
| ஸ: | அவன் |
| ராஜஸம் த்யாகம் | இராஜஸத்தியாகத்தை |
| க்ருத்வா | செய்து |
| த்யாகபலம்* | தியாகபலத்தை |
| நைவ லபேத் | அடைகிறதேயில்லை. |

எவன் துக்க முண்டாகுமென்றும் சரீரப்பிரயாசைக்குப் பயந்தும் எந்தக்கருமத்தை விடுகிறானோ, அவன் இராஜஸமாகிய தியாகத்தைச் செய்து தியாகபலத்தை (தியாகத்தினுடைய பலனாகிய ஞானநிஷ்டை யை) அடைகிறதே இல்லை.

* (ஸ்ரீ,வி) பகவத்பிரீதி ரூபமான பலத்தை.

(௶௦) சகல கருமத்தையும் ஞானபூர்வமாய் விடுகிற ஞானியைப் போல, துக்காதிகளினுல் நித்தியநைமித்திக கருமங்களை விடுகிறவன் மோக்ஷமடையமாட்டான்.

(௱௱) கருமமானது பரம்பரையாய் மோக்ஷசாதனமா யிருந்தாலும், கருமம் செய்யும்பொருட்டு வருத்தப்பட்டுப் பொருள் சம்பாதிக்க வேண்டியதாயும் தேகப்பிரயாசைப்பட வேண்டியதாயு மிருக்கிறதினுல் மனசுக்குச் சங்கடமுண்டாக்கத்தக்கதா யிருக்கிறதென்கிற பயத்தினுலே, யோகசித்தியின் பொருட்டு ஞானுப்பியாசத்திலேயே முயல வேண்டுமென்று எவன் பஞ்சமகாயக்ஞாதி வருணுசிரம தருமங்களை விடுகிருனே, அந்தத் தியாகமானது இராஜஸம். என்றுல், சாஸ்திரார்த்தத்தை உள்ளபடி யறிந்துகொள்ளாததினுல் செய்தத்தியாகமாகிறது. இப்படிப்பட்ட இராஜஸத்தியாகத்தினுலே ஞானேற்பத்தி சுவரூபமாகிய தியாகபலனை யடையமாட்டான். இன்ன கருமத்திற்கு இன்னபலனென்று ஒருவன் தெரிந்துகொண்டதினுல் சித்தசுத்தி யுண்டாகமாட்டாது. கருமங்களைச்செய்து பலனைத் தியாகஞ் செய்வதினுல் பகவத்பிரசாதமுண்டாகி அதினுல் மனப்பிரசாத முண்டாகும். ஆகையால், தேகப்பிரயாசை முதலிய துக்கங்களை யோசித்துக் கருமங்களை விடக்கூடாது.

(ஷா) தாமஸத்தியாகமென்றுல், கருமம் செய்யாததினுல் இன்ன பாதகமென்று தெரியாமல் அவிவேகத்தினுல் கருமம் செய்யாமல் விட்டுவிடுவது. இராஜஸத்தியாகமென்றுல், கருமம் செய்யாததினுல் இன்ன பாதக முண்டாகுமென்று தெரிந்திருந்தும் தேகப்பிரயாசை முதலியவைகளுக்குப் பயந்து கருமத்தை விட்டுவிடுவது. (அ)

---

சூ. காயஂமித்யேவ யத்கஂம நியதஂ க்ரியதேஜுந।
ஸங்கஂ த்யக்த்வா ஃலஂ சைவ ஸ த்யாகஃ ஸாத்விகோ மத꞉॥

| | |
|---|---|
| ஹே அஜுந | ஓ! அர்சுன! |
| நியதஂ | நித்தியமாய்ச் செய்யவேண்டியதாய் விதிக்கப்பட்ட |
| யத் கஂம | எந்தக்கருமமானது |
| காயஂமித்யேவ | செய்யப்படவேண்டியதே என்று (தெரிந்து) |
| ஸங்கஂ | அபிமானத்தையும் |
| ஃலஂ சைவ | பலனையும் |
| த்யக்த்வா | விட்டு |

கிரியதே — செய்யப்படுகிறதோ
ஸ꞉ த்யாக꞉ — அந்தத்தியாகமானது
ஸாத்விக꞉ — ஸாத்துவிகமானதென்று
மத꞉ — நிச்சயிக்கப்பட்டிருக்கிறது.

ஓ! அர்சுனு! நித்தியமாய்ச் செய்யவேண்டியதாய் விதிக்கப்பட்டிருக்கிற எந்தக் கருமமானது, செய்யப்பட வேண்டியதென்று தெரிந்து, அபிமானத்தையும் பலனையும் விட்டுச் செய்யப்படுகிறதோ, அந்தத் (அபிமானம் பலன் இவைகளை விடுவதாகிய) தியாகமானது, சாத்துவிகமானதென்பது என்னுடைய அபிப்பிராயம்.

(ஸ்ரீ) பகவத் வாக்கியத்தினாலேயே நித்தியகருமத்திற்குப் பலனுண்டென்று ஏற்பட்டிருக்கிறது. அப்படிப் பலனில்லாமலிருந்தால், பலனைத் தியாகஞ்செய்ய வேண்டுமென்பது எப்படிப் பொருந்தும்? அக்ஞர்கள் நித்திய கருமத்திற்கு பலன்சித்த சுத்தி அல்லது தோஷ நிவிருத்தி யென்று கற்பிக்கிறார்கள். அப்படி கற்பிக்க அவசியமில்லை என்பதை இதினால் பகவான் வெளிப்படுத்துகிறார்.

கருமத்தியாகம் மூன்றுவிதமானதென்று (இதின் ச - வது சுலோகம்பார்க்க) சொல்லப்பட்டது. தாமஸத் தியாகமும், (இதின் எ - வது சுலோகம் பார்க்க) இராஜஸத்தியாகமும் (இதின் அ - வது சுலோகம் பார்க்க) சொல்லியாய் விட்டது. அவ்விரண்டுத் தியாகமும் (கருமம் செய்யாமலே விட்டுவிடுவதாகிய) கரும சுவரூபத்தியாகமாயிருக்கிறது. இந்த சாத்துவிகத் தியாகமோ கருமத்தியாகமல்ல; கருமத்தி னிடத்தில் அபிமானம் அதின் பலன் இவைகளைவிடுவ தென்பதாக விருக்கிறது. ஆகையால், கருமத்தியாகம் மூன்றுவித மென்று சொல்ல ஆரம்பித்து மூன்றுவதாக பலத்தியாகத்தைச் சொன்னது எப்படிப் பொருந்துமென்றால், கருமத்தை விட்டு விடுவதும், கருமத்தைச்செய்து பலனை விட்டுவிடுவதும் தியாகமென்கிற சப்தார்த்தத்தில் (விட்டுவிடுகிறதென்கிற அர்த்தத்தில்) இரண்டு மொன்றே.

(ரா) நியதம்கரு— என்றதினால் நித்திய நைமித்திகங்களான வருணாசிரமங்களுக்குத் தக்க கருமங்களை, ஸங்கத்தையும் பலத்தையும் விட்டு பகவதாராதனமென் றெண்ணியே செய்ய வேண்டியது. இந்த பலத்தியாகமானது சாத்துவிகம். என்றால் சத்துவ குணத்தினாலுண்டானதென் றறியத்தக்கது. அப்படிப்பட்ட தியாகம் செய்கிறவன் சாஸ்திரார்த்தத்தைச் சரியாய்த் தெரிந்துகொண்டவனாகிறான். என்பது தாத்பரியம்.

(ஸ்ரீ,வி) அவசியஞ் செய்யவேண்டியதாயும், வருணாசிரமத்திற்குத் தகுந்ததாயுமுள்ள கருமத்தைச் செய்யாமல் விட்டதால் தோஷ

முண்டாகுமென்று தெரிந்து சங்கத்தையும் சுவர்க்காதி பலனையும் விட்டு, அந்தந்த வருணாசிரமத்திற்குத் தகுந்த கருமங்களைச் செய்வது சாத்துவிகமான தியாகமாகிறது. (௯)

---

௧௦. 𑌨 𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌟𑍍𑌯𑌕𑍁𑌶𑌲𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌕𑍁𑌶𑌲𑍇 𑌨𑌾𑌨𑍁𑌷𑌜𑍍𑌜𑌤𑍇 ।
𑌤𑍍𑌯𑌾𑌗𑍀 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌸𑌮𑌾𑌵𑌿𑌷𑍍𑌟𑍋 𑌮𑍇𑌧𑌾𑌵𑍀 𑌛𑌿𑌨𑍍𑌨𑌸𑌂𑌶𑌯𑌃 ॥

| | |
|---|---|
| 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌸𑌮𑌾𑌵𑌿𑌷𑍍𑌟𑌃 | சத்துவகுணப்பிரதான முடையவும் |
| 𑌮𑍇𑌧𑌾𑌵𑍀 | ஸ்திரபுத்தியுள்ளவும் |
| 𑌛𑌿𑌨𑍍𑌨𑌸𑌂𑌶𑌯𑌃 | சமுசயமற்றவுமான |
| 𑌤𑍍𑌯𑌾𑌗𑍀 | தியாகியானவன் |
| 𑌅𑌕𑍁𑌶𑌲𑌂 | துக்ககரமான |
| 𑌕𑌰𑍍𑌮 | கருமத்தை |
| 𑌨 𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌟𑌿 | துவேஷிக்கிறதில்லை |
| 𑌕𑍁𑌶𑌲𑍇 | சுககரமான கருமத்தில் |
| 𑌨𑌾𑌨𑍁𑌷𑌜𑍍𑌜𑌤𑍇 | ஒட்டுகிறதில்லை. |

சத்துவகுணத்தை முக்கியமா யுடையவும், (சுகத்தை உண்டாக்குகிறதாகிய யாதொரு காரியத்தைச் செய்து அதினால் சுகத்தை யடையவேண்டுமென்கிற புத்தியாவது, துக்கத்தையுண்டாக்குகிற யாதொரு காரியத்தைச் செய்தால் துக்கமுண்டாகுமென்று பயந்து அதைச் செய்யாம லிருக்கவேண்டுமென்கிற புத்தியாவ தில்லாத) ஸ்திரபுத்தியுள்ளவும், (சுகமடையப்படுமோ, துக்கம் நிவிருத்தியாகுமோ, என்கிற பிராந்தியாகிற) சமுசயமற்றவுமான (அபிமானம் பலன் இவைகளை விட்டவனாகிய) தியாகியானவன் (தேகப் பிரயாசை முதலிய) துக்ககரமான கருமத்தைத் துவேஷிக்கிறது மில்லை. (சுவர்க்காதி பலனையுண்டாக்குகிற) சுககரமான கருமத்தில் ஒட்டுகிறதுமில்லை (என்றால், விரும்புகிறதுமில்லை.)

(𑌭𑌾) 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌸𑌮𑌾𑌵𑌿𑌷𑍍𑌟𑌃 = ஆத்மானாத்ம விவேக ஞானத்திற்குக் காரணமான சத்துவகுணத்தினால் சூழப்பட்டவனாயும், 𑌮𑍇𑌧𑌾𑌵𑍀 = ஆத்மஞான முடையவனாயும், 𑌛𑌿𑌨𑍍𑌨𑌸𑌂𑌶𑌯𑌃 = ஆத்மஞானமே மோக்ஷகாரணமா என்கிற சமுசயத்தைப் போக்கடித்துக் கொண்டவனாயு மிருந்துகொண்டு, 𑌤𑍍𑌯𑌾𑌗𑍀 = ஸங்கத்தையும் பலனையும் விட்டு நித்திய கருமத்தைச் செய்கிறவன், 𑌅𑌕𑍁𑌶𑌲𑌂 𑌕𑌰𑍍𑌮 = சமுசார பெந்த ஏதுவான காம்மிய கருமத்தை, 𑌨 𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌟𑌿 = துவேஷிக்கிறதில்லை, 𑌕𑍁𑌶𑌲𑍇 𑌨𑌾𑌨𑍁𑌷𑌜𑍍𑌜𑌤𑍇 = இந்த நித்தியகருமமானது சித்தசுத்தி மூலமாய் மோக்ஷ ஏதுவானதென்று அதில் விருப்பம் வைக்கிறதுமில்லை. இதின் தாத்பரிய மென்னவென்றால், நிஷ்காமமாய் கருமம் செய்கிற

வன் சித்தசுத்தியையும் சித்தசுத்தியினால் ஞானத்தையும் ஞானத்தினால் மோக்ஷத்தையும் அடைகிறானென்பதே.

(ரா) 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌸𑌮𑌾𑌵𑌿𑌷𑍍𑌟𑌃 = யதார்த்த ஞானமுள்ளவன், 𑌤𑍍𑌯𑌾𑌗𑍀 = ஸங்கம் கருத்திருத்துவம் பலம் இவைகளை விட்டவன். 𑌅𑌕𑍁𑌶𑌲𑌂 = பாபகருமம். (மற்றபதங்களின் அர்த்தத்தில் பேதமில்லை.)

பிரம்மஞானியான இப்படிப்பட்டவனுக்கு அநிஷ்டங்களுண்டாகவேண்டிய தென்னவென்றால், அவனுக்கு புத்திபூர்வமா யுண்டாகாது. ஆனால், அவனுடைய பிரயத்தினமன்றியில் அநிஷ்டங்களுண்டாகலாம். அப்படி யுண்டானதைத் தனக்குக் கெடுதியானதென்று எண்ணமாட்டான்.

(ஸ்ரீ,வி) 𑌅𑌕𑍁𑌶𑌲𑌂 = தாத்காலத்தில் சுகத்தைக் கொடுக்கப்பட்டதல்லாததாயும் தேகப்பிரயாசைமுதலிய துக்கத்தைக் கொடுக்கப்பட்டதாயுமிருக்கிற, 𑌕𑌰𑍍𑌮 = கருமத்தை, 𑌨 𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌟𑌿 = துவேஷஞ் செய்கிறதுமில்லை, 𑌕𑍁𑌶𑌲𑍇 = பூர்வார்ஜிதமான புண்ணியகருமத்தின் பலத்தில், 𑌨𑌾𑌨𑍁𑌷𑌜𑍍𑌜𑌤𑍇 = இச்சைப்படுகிறதுமில்லை. 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌸𑌮𑌾𑌵𑌿𑌷𑍍𑌟𑌃 = சுத்தசத்துவகுண முடையவன், 𑌮𑍇𑌧𑌾𑌵𑍀 = பகவத் தத்துவஞானி, 𑌛𑌿𑌨𑍍𑌨𑌸𑌂𑌶𑌯𑌃 = பராபர தத்துவ விஷயத்திலாவது பகவத்விஷயமான தருமங்களை யனுஷ்டிப்பதிலாவது சந்தேகமற்றவன், 𑌤𑍍𑌯𑌾𑌗𑍀 = சகல கருமங்களையும் பகவத்சமர்ப்பணம் செய்தவன். இவன்தான் சாத்துவிகத் தியாகியாகிறான். (௧௦)

---

௧௧. 𑌨 𑌹𑌿 𑌦𑍇𑌹𑌭𑍃𑌤𑌾 𑌶𑌕𑍍𑌯𑌂 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍁𑌂 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑍍𑌯𑌶𑍇𑌷𑌤𑌃।
𑌯𑌸𑍍𑌤𑍁 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌤𑍍𑌯𑌾𑌗𑍀 𑌸 𑌤𑍍𑌯𑌾𑌗𑍀𑌤𑍍𑌯𑌭𑌿𑌧𑍀𑌯𑌤𑍇॥

| | |
|---|---|
| 𑌦𑍇𑌹𑌭𑍃𑌤𑌾 | தேகாபிமானத்தையுடையஜீவனால் |
| 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 | கருமங்கள் |
| 𑌅𑌶𑍇𑌷𑌤𑌃 | முழுமையும் |
| 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍁𑌂 | விடுவதற்கு |
| 𑌨 𑌹𑌿 𑌶𑌕𑍍𑌯𑌂 | அசாத்தியமானவை |
| 𑌯𑌸𑍍𑌤𑍁 | எவன் |
| 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌤𑍍𑌯𑌾𑌗𑍀 | கருமபலனைவிட்டவனோ |
| 𑌸𑌃 | அவன் |
| 𑌤𑍍𑌯𑌾𑌗𑍀 𑌇𑌤𑌿 | தியாகியென்பதாக |
| 𑌅𑌭𑌿𑌧𑍀𑌯𑌤𑍇 | சொல்லப்படுகிறான். |

தேகாபிமானமுடைய ஜீவனுலே கருமங்கள் முழுமையும் விடுவதற்கு அசாத்தியமானவை. எவன் கருமபலனை விட்டவனே, அவன் தியாகியென்பதாக சொல்லப்படுகிறுன்.

(ஸ்ரீ) சகல கருமங்களின் பலனை விட்டவன்தான் முக்கியத்தியாகி. கருமங்களை விட்டவன் தியாகியாகமாட்டான்.

(ஸ்ம) தேகாபிமான முடையவன் விஷயத்தில் இந்தத்தியாகம் முக்கியத்தியாகமாக துதிக்கப்பட்டிருக்கிறது. தேகாபிமான மற்றவனுலேதான் சகல கருமங்களையும் விடுவது சாத்தியமாகும்.

(ரா) சகல கருமங்களையும் ஒருவன் விட்டுவிடுவது அசாத்தியமானது. ஏனென்றுல், ஆகாராதிகள் விஷயமான கருமங்கள் செய்யாவிட்டால், தேகசவரக்ஷணை நடவாது. ஆகாராதி கருமங்களைத் தொடர்ந்தே சகல கருமங்களும் செய்யவேண்டியவை யாகின்றன. கருமபலத்தியாகம்தான் தியாகமென்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. கருமபலத் தியாகமென்று சொல்லப்பட் டிருந்தாலும், கருத்திருத்துவ அபிமானத்தியாகங்களும்கூட சொல்லப்பட்டனவாக கிரகிக்கவேண்டியது.

(மீ,வி) தியாகமென்பது கருமபலத்தியாகமேயன்றி கருமத்தியாகமல்ல. இந்த அத்தியாயத்தின் மூன்றுவது சுலோகத்தின் தாத்பரியத்திற்கு இந்த சுலோக மாதாரமாயிருக்கிறது. (கக)

---

கஉ. அநிஷ்டமிஷ்டம் மிஶ்ரஞ்ச த்ரிவிதம் கர்மண: ப²லம்।
ப⁴வத்யத்யாகி³நாம் ப்ரேத்ய ந து ஸந்ந்யாஸிநாம் க்வசித்॥

அநிஷ்டம் — துக்ககரமானது (நரகம்முதலியது)
இஷ்டம் — சுககரமானது (சுவர்க்கம்முதலியது)
மிஶ்ரஞ்ச — சுகதுக்கக் கலப்புக்குக் காரணமானது (மனுஷியஜன்மம் முதலியது)
த்ரிவிதம் — (இப்படி) மூன்றுவிதமான
கர்மண: ப²லம் — (புண்ணியகருமம், பாபகருமம், புண்ணியபாப மிசிரகருமம், என்று மூன்று விதமா யிருக்கும்) கருமத்தினுடைய பலமானது
அத்யாகி³நாம் — பலாபேக்ஷயுடன் கருமம் செய்கிறவர்களுக்கு
ப்ரேத்ய — மரணத்திற்குபிறகு
ப⁴வதி — உண்டாகிறது

ஸந்ந்யாஸிநாம் — { பலாபேக்ஷயன்றி கருமம் செய்பவர்க்ளுக்கு
க்வசித் — ஒருபோதும்
ந — உண்டாகிறதில்லை.

துக்ககரமான நரகஜன்மம், சுககரமான தேவஜன்மம், சுகதுக்கங்களிரண்டிற்கும் காரணமான மனுஷியாதிஜன்மம் இப்படி மூன்றுவிதமான புண்ணிய பாப மிசிரகருமத்தினுடைய பலனானது பலாபேக்ஷயுடன் கருமம் செய்பவர்களுக்கு மரணத்திற்குப் பிறகுண்டாகிறது. பலாபேக்ஷயன்றி (ஈசுவரார்ப்பண புத்தியாய்) கருமம் செய்கிறவர்களுக்கு ஒருபோதும் (அந்த மூன்று பலன்களும்) உண்டாகிறதில்லை.

(ஶ்ரீ) அத்யாகிநாம் — அபரமார்த்த சந்நியாசிகளாகிய அஞ்ஞானிகளுக்கு, ஸந்ந்யாஸிநாம் — பிரம்மநிஷ்டையிலேயே நிலைத்திருப்பவர்களான பரமார்த்த சந்நியாசிகளுக்கு. (மற்ற பதங்களின் தாத்பரியத்தில் வித்தியாசமில்லை). ஏன் பரமார்த்த சந்நியாசிக்குப் பலனுண்டாகிறதில்லை என்றால், பிரம்ம ஞானத்தினால் சகல கருமங்களிலிருந்தும் அவன் விடுபட்டவனாயிருக்கிறானதினால் தான்.

(ஶ்ரீ) அநிஷ்டம் — நரகாதிபலன், இஷ்டம் — சுவர்க்காதிபலன், மிஶ்ரம் — புத்திர தன பசுவாதிபலன், அத்யாகிநாம் — கருத்திருத்துவம் அபிமானம் பலன் இவைகளைத் தியாகம் செய்யாதவர்களுக்கு, ப்ரேத்ய — கருமம்செய்தபிறகு, பவதி — உண்டாகும், ஸந்ந்யாஸிநாம் — கருத்திருத்துவாதிகளைத் தியாகம் செய்தவர்களுக்கு, க்வசித் — ஒருபோதும், ந — உண்டாகமாட்டாது. ஆகையால், கருத்திருத்துவாதி பரித்தியாகமே சந்நியாசம். தியாகம் சந்நியாச மிரண்டு மொன்றுதான். இவர்களுக்கு மோக்ஷவிரோதியான பலனுண்டாகாது.

(ம,வி) நியதகாம்மிய கருமம், அநியத காம்மியகருமம், என இரண்டுவிதம். நியதகாம்மிய கருமமென்பது பலோத்தேசமாகவே விதிக்கப்பட்டது. அநியதகாம்மியகருமமென்பது பலாபேக்ஷயுடன் செய்தால் காம்மியமாகமாறுகிற நித்தியகருமம்.

அநியதகாம்மியகருமத்தின் பலத்தியாகத்தையும், நியதகாம்மிய கருமத்தின் சுவரூபத்தியாகத்தையுஞ் செய்தவர்களாகிய சந்நியாசிகளுக்கு இஷ்டாநிஷ்ட மிசிரபலன் (சுவர்க்க நரக மனுஷியாதி ஜன்மங்க)ளுண்டாகிறதில்லை. மேலும் முக்தியில் ஆநந்தாதிசய முண்டென்று, து—என்னும் பதத்தால் குறிப்பிடப்படுகிறது. (௧௨)

கங. 𑌪𑌂𑌚𑍈𑌤𑌾𑌨𑌿 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌕𑌾𑌰𑌣𑌾𑌨𑌿 𑌨𑌿𑌬𑍋𑌧 𑌮𑍇।
𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑍇 𑌕𑍃𑌤𑌾𑌂𑌤𑍇 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌾𑌨𑌿 𑌸𑌿𑌦𑍍𑌧𑌯𑍇 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌂॥

| | |
|---|---|
| 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 | ஓ! பெரிதானகைகளையுடையவனே! |
| 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌂 | சகலகருமங்களுடைய |
| 𑌸𑌿𑌦𑍍𑌧𑌯𑍇 * | சித்தி (பூர்த்தி) யின்பொருட்டு |
| 𑌕𑍃𑌤𑌾𑌂𑌤𑍇 † | கருமத்தை நசிக்கச்செய்கிறதும் |
| 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑍇 ‡ | பிரம்ம சுவரூபத்தை விளக்குகிறதுமான வேதாந்தசாஸ்திரத்தில் |
| 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌾𑌨𑌿 | சொல்லப்பட்டவைகளும் |
| 𑌏𑌤𑌾𑌨𑌿 | (என்னாலே) சொல்லப்படப் போகிறவைகளுமாகிய |
| 𑌪𑌂𑌚 | ஐந்து |
| 𑌕𑌾𑌰𑌣𑌾𑌨𑌿 | காரணங்களை |
| 𑌮𑍇 (𑌵𑌚𑌨𑌾𑌤𑍍) | என்னுடைய வாக்கியத்தினால் |
| 𑌨𑌿𑌬𑍋𑌧 | அறிந்துகொள். |

ஓ! பெரிதான கைகளையுடையவனே! சகல கருமங்களுடைய சித்தியின்பொருட்டு கருமத்தை நசிக்கச்செய்கிறதும் (கருமபலத்தில் பற்றுதலுண்டாகாமல் செய்கிற) பிரம்மசுவரூபத்தை விளக்குகிறதுமான வேதாந்த சாஸ்திரத்தில் சொல்லப்பட்டவைகளும், என்னாலே சொல்லப்படப் போகிறவைகளுமாகிய ஐந்து காரணங்களை என்னுடைய வாக்கியத்தினால் அறிந்துகொள். (என்றால், ஒவ்வொரு கருமத்திற்கும், தான் கருத்தாவென்று அக்ஞானி நினைக்கிறான். அது தப்பிதம். கருத்தாக்கள் ஐந்துபெயர்க ளிருக்கிறார்களென்று அறி என்பது கருத்து.)

(ஶம்) ஆத்மஞானி யொருவனுக்கே சகல கருமங்களையும் விட்டுவிடுவது கூடுமேயன்றி, தேகத்தில் ஆத்மபுத்தியை யுடையவனுக்குக் கருமத்தைவிடுவதுகூடாதென்பது இது முதல்சொல்லப்படுகிறது. (கங)

---

* (ஈா) உற்பத்தியின்பொருட்டு.

† (ஸ்ரீ) (ஈா) நிர்ணயித்தில். (சாஸ்திரத்தில்)

‡ (ஸ்ரீ) தத்துவங்களை விவரிக்கிற சாங்கியசாஸ்திரத்தில். (ஶம்) வேதாந்த சாஸ்திரத்தில். (ஈா) வேதத்தினா லுண்டானஞானம். அதாவது - இந்திரியங்கள் பிராணன் ஜீவன் இவைகளைத் தன்னுடைய காரியங்களுக்குத் துணைப்பொருளாக உடைத்தான பரமாத்மாவே கருத்தாவென்கிற நிச்சயத்துடன்கூடிய. (மீ,வி) விஷ்ணு அவதாரமாகிய கபிலர்செய்த சாங்கியசாஸ்திரத்தில்,

௧௪. 𑌅𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌨𑌂 𑌤𑌥𑌾 𑌕𑌰𑍍𑌤𑌾 𑌕𑌰𑌣𑌂 𑌚 𑌪𑍃𑌥𑌗𑍍𑌵𑌿𑌧𑌮𑍍।
𑌵𑌿𑌵𑌿𑌧𑌾𑌶𑍍𑌚 𑌪𑍃𑌥𑌕𑍍𑌚𑍇𑌷𑍍𑌟𑌾 𑌦𑍈𑌵𑌂 𑌚𑍈𑌵𑌾𑌤𑍍𑌰 𑌪𑌞𑍍𑌚𑌮𑌮𑍍॥

| | |
|---|---|
| 𑌅𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌨𑌂* | சரீரமும் |
| 𑌤𑌥𑌾 | அப்படியே |
| 𑌕𑌰𑍍𑌤𑌾† | அகங்காரத்துடன் கூடியிருக்கிற ஆத்மாவும் |
| 𑌪𑍃𑌥𑌗𑍍𑌵𑌿𑌧𑌂 | அநேகவிதமான |
| 𑌕𑌰𑌣𑌂‡ | கண் வாய் முதலியவைகளும் |
| 𑌵𑌿𑌵𑌿𑌧𑌾𑌃 | பலவிதங்களாயும் |
| 𑌪𑍃𑌥𑌕𑍍 | வெவ்வேறாயு மிருக்கிற |
| 𑌚𑍇𑌷𑍍𑌟𑌾𑌃§ | பிராணுபாஞதி செய்கைகளும் (காரணங்கள்) |
| 𑌅𑌤𑍍𑌰 | இவைகளில் (ஐந்துகாரணங்களில்) |
| 𑌦𑍈𑌵𑌂 𑌚𑍈𑌵 ¶ | கண் வாய் முதலியவைகளுக்கு நியாமகர்களான சூரியாதிகள், அல்லது சர்வாந்தரியாமியான ஈசுவரன் |
| 𑌪𑌞𑍍𑌚𑌮𑌂 | ஐந்தாவது (காரணம்). |

சரீரமும், அப்படியே அகங்காரத்துடன் கூடியிருக்கிற ஆத்மா (ஜீவன்) வும், அநேகவிதமான கண் வாய் முதலிய உபகரணங்களும்,

* (ஶம்) இச்சாத் துவேஷ சுகதுக்கஞானுதிகள் பிரகாசிப்பதற்கு ஆசிரயமான தேகம். (ரா) ஜீவனுக்கிருப்பிடமான சரீரம். (ஸ்ரீ,வி) தேகம் பூமிமுதலியன.

† (ஶம்) உபாதிலக்ஷணபோக்தா. (ரா) ஜீவன். 𑌕𑌰𑍍𑌤𑌾 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌰𑍍𑌥𑌵𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌤𑍍, 𑌜𑍍𑌞𑍋𑌽𑌤 𑌏𑌵, என்கிற சூத்திரங்களினுல் ஜீவனை கருத்தாவென்றும் அறிகிறவனென்றும் சொல்லப்பட்டிக்கிறதினுல் ஜீவனென்று அர்த்தம் செய்யப்பட்டது. (ம) ஜீவனுக்கு கருத்திருத்துவமில்லையென்று முன்னமேயே சொல்லப்பட்டிருப்பதால் கருத்தா விஷ்ணு. (ஸ்ரீ,வி) விஷ்ணு, அல்லது பராதீனகருத்தாவான ஜீவன்.

‡ (ஶம்) கண்முதலிய பன்னிரண்டு (அதாவது, ஞானேந்திரியங்கள் ஐந்து, கருமேந்திரியங்கள் ஐந்து, புத்தி மனசு ஆகப் பன்னிரண்டு.) (ரா) கருமேந்திரியங்களும் மனசும். (ம) இந்திரியங்கள். (ஸ்ரீ,வி) ஞானேந்திரியங்கள் அல்லது 𑌸𑍍𑌰𑍁𑌕𑍍𑌸𑍍𑌰𑍁𑌵ாதிகள்.

§ (ஸ்ரீ,வி) கையினுடைய செய்கை, அல்லது மானஸகிரியையான தியானமும் மற்ற அவாந்தர கிரியைகளும்.

¶ (ஶம்) இந்திரியாதி நியாமகர்களான சூரியாதிகள். (ரா) முக்கியகாரணனும் அந்தரியாமியுமான பரமாத்மா. அத் - ௧௫, ௬ - ௧௫, இந்த அத்தியாயம் ௬-௬௧-பார்க்க. (ம) அதிருஷ்டமென்கிற புண்ணியபாபம். (ஸ்ரீ,வி) அதிருஷ்டம் அல்லது விஷ்ணு.

பலவிதமாயும் வெவ்வேறாயு மிருக்கிற பிராணபானுதி செய்கைகளும் காரணங்கள். இவைகளில் கண் வாய் முதலியவைகளுக்கு நியாமகர்களான சூரியாதிகள் அல்லது சர்வாந்தரியாமியான ஈசுவரன் ஐந்தாவது காரணம். (௧௪)

---

௧௫. 𑌶𑌰𑍀𑌰𑌵𑌾𑌙𑍍𑌮𑌨𑍋𑌭𑌿𑌰𑍍𑌯𑌤𑍍 𑌕𑌰𑍍𑌮𑌪𑍍𑌰𑌾𑌰𑌭𑌤𑍇 𑌨𑌰𑌃।
𑌨𑍍𑌯𑌾𑌯𑍍𑌯𑌂𑌵𑌾𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌂𑌵𑌾 𑌪𑌞𑍍𑌚𑍈𑌤𑍇 𑌤𑌸𑍍𑌯 𑌹𑍇𑌤𑌵𑌃॥

| | |
|---|---|
| 𑌨𑌰𑌃 | மனிதன் |
| 𑌶𑌰𑍀𑌰𑌵𑌾𑌙𑍍𑌮𑌨𑍋𑌭𑌿𑌃 | சரீரம் வாக்கு மனசு இவைகளால் |
| 𑌨𑍍𑌯𑌾𑌯𑍍𑌯𑌂𑌵𑌾* | யுக்தமானதாயாவது |
| 𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌂𑌵𑌾† | அயுக்தமானதாயாவது |
| 𑌯𑌤𑍍 | எந்த |
| 𑌕𑌰𑍍𑌮 | கருமத்தை |
| 𑌪𑍍𑌰𑌾𑌰𑌭𑌤𑍇 | தொடங்குகிருனே |
| 𑌤𑌸𑍍𑌯 | அந்தக்கருமத்திற்கு |
| 𑌏𑌤𑍇 𑌪𑌞𑍍𑌚 | (முந்திசொல்லப்பட்ட) இந்த ஐந்தும் |
| 𑌹𑍇𑌤𑌵𑌃 | காரணங்களாயிருக்கின்றன. |

மனிதன், சரீரம் வாக்கு மனசு இவைகளால் யுக்தமாயாவது அயுக்தமாயாவது எந்தக் கருமத்தைத் தொடங்குகிருனே, அந்தக்கருமத்திற்கு, முந்தி சொல்லப்பட்ட சரீரம் முதலான இந்த ஐந்தும் காரணங்களாயிருக்கின்றன.

(𑌶𑌂) சரீரம் வாக்கு மனசு இம்மூன்று காரணங்கள் மட்டும் எடுத்துச் சொல்லப்பட்டன. மற்ற கண் காது முதலியவை சொல்லப்படவில்லை. பார்ப்பது கேட்பது முதலியகருமங்கள், கண் காது முதலியவைகளுடையனவாயிருக்க, அவைகளைச் சொல்லாமைக்குக் காரண மென்னவென்ருல், கண் முதலியவைகள் சரீரம் வாக்கு மனதுகளுக்குத் துணைக்கருவிகள். எப்படியென்ருல், ரூப ரஸ கெந்தாதிகள் கண் முதலியவைகளுக்கு விஷயமானுலும் அவைகளைக் கிரகித்து அனுபவிக்க வேண்டியது மனதின் காரியம். மனது, கண் காதுகளுடன் பிரவிருத்தித்தா லன்றி கண் காது முதலியன ஒன்றை கிர

---

* (ஸ்ரீ) (𑌶𑌂) தருமத்திற்கு ஏதுவான அல்லது சாஸ்திரோக்தமானதாயாவது. (𑌰𑌾) சாஸ்திரோக்தமானதாயாவது.

† (ஸ்ரீ) (𑌶𑌂) அதருமத்திற்கு ஏதுவான அல்லது அசாஸ்திரமானதாயாவது. (𑌰𑌾) சாஸ்திர நிஷித்தமானதாயாவது.

கிக்கமாட்டா. ஆகையால், முக்கியங்களான மனது வாக்கு காயங்கள் இவ்விடத்தில் சொல்லப்பட் டிருக்கின்றன. மற்றவைகள் இந்த மூன்றுக்குள் அடங்கினவை யாகையால், அவைகள் சொல்லப்படவில்லை. (மேற்படி பாஷியத்தை ஆதாரமாய்கொண்டு விரிவாய் எழுதப்பட்டதாக கிரகிக்கத்தக்கது.) (கரு)

---

கசா. தத்ரைவம் ஸதி கர்த்தாரம் ஆத்மானம் கேவலம் து ய:।
பஶ்யத்யக்ருதபுத்தித்வாந் ந ஸ பஶ்யதி துர்மதி:॥

| | |
|---|---|
| தத்ர | அந்தக்கருமவிஷயத்தில் |
| ஏவம் ஸதி | இவ்வைந்து காரணங்களிருக்கையில் |
| கேவலம் ஆத்மானம் | நிருபாதிகனையும் ஸங்கமற்றவனையு மிருக்கிற ஆத்மாவை |
| கர்த்தாரம் | கருத்தாவாக |
| ய: | எவன் |
| பஶ்யதி | அறிகிறானோ |
| துர்மதி: | துர்ப்புத்தியையுடைய |
| ஸ: | அவன் |
| அக்ருதபுத்தித்வாத் | விவேகமற்ற புத்தியை யுடையவனானதால் |
| ந பஶ்யதி | அறிகிறதில்லை. |

அந்தக் கருமவிஷயத்தி லிவ்வைந்து காரணங்க ளிருக்கையில், நிருபாதிகனையும் ஸங்கமற்றவனையு மிருக்கிற ஆத்மாவைக் கருத்தாவாக எவனறிகிறானோ, துர்ப்புத்தியையுடைய அவன் விவேகமற்ற புத்தியை யுடையவனானதால் அறிகிறதில்லை.

(ஶம்) தேகம் வேறே ஆத்மா வேறே என்கிற ஞானமில்லாமல் தேகமே ஆத்மாவென்கிற ஞானமுடையவ னானதாலும், ஆத்மா வேறேயென்று அறிந்திருந்தாலும் கருத்தா ஐந்தாயிருக்கத் தான் கருத்தாவென்று நினைப்பதினாலும், நிந்திக்கத்தகுந்தவும் விபரீதமானவும் ஜனன மரணங்களுக்குக் காரணமானவுமான புத்தியை யுடையவனானதால், துர்மதி:= துர்ப்புத்தி யுடையவனாக சொல்லப் பட்டான். அவன் சாஸ்திர ஞானமாவது ஆசாரியோபதேச ஞானமாவ தில்லாதவனானதால், அக்ருதபுத்தி: = பயிற்சி செய்யப்பட்ட புத்தியை யுடையவனல்ல. ஆகையால் அவன் கரும சுவரூபத்தையாவது ஆத்ம சுவரூபத்தையாவது அறிகிறதில்லை.

(ஸ்ரீ,வி) (ரா) சகலகருமங்களையும், ஈசுவராதீனனாய்ச் செய்யத் தகுந்த ஜீவன், தானே கருத்தாவென்று நினைப்பதாலும், சாஸ்திரஞான

மில்லாததினுலும், துர்ப்புத்தியை யுடையவனுக சொல்லப்பட்டான். அவன் உண்மையை யறிந்தவனல்ல என்பது தாத்பரியம். (கசு)

---

கஎ. யஸ்ய நாஹங்க்ருதோ பாவோ புத்திர்யஸ்ய ந லிப்யதே।
ஹத்வாபி ஸ இமாம் லோகாந் ந ஹந்தி ந நிபத்யதே॥

| | |
|---|---|
| யஸ்ய | எவனுக்கு |
| அஹங்க்ருத: | தான்கருத்தாவென்கிற |
| பாவ: | எண்ணமானது |
| ந | இல்லையோ |
| யஸ்ய | எவனுடைய |
| புத்தி: | புத்தியானது |
| நலிப்யதே | விஷயங்களில் பற்றுகிறதில்லையோ |
| ஸ: | அவன் |
| இமாந் லோகாந் | இந்தலோகத்திலுள்ள பிராணிகளை |
| ஹத்வாபி | கொன்றபோதிலும் |
| நஹந்தி | கொன்றவனல்ல |
| நநிபத்யதே | கட்டப்படுகிறதுமில்லை. |

எவனுக்குத் தான் கருத்தாவென்கிற எண்ணமான தில்லையோ, எவனுடைய புத்தியானது விஷயங்களில் பற்றுகிறதில்லையோ, அவனிந்த லோகத்திலுள்ள பிராணிகளைக் கொன்றபோதிலும், கொன்றவனல்ல. கட்டப்படுகிறது மில்லை. (கொன்றதினுலுண்டாகும் பாபத்தினுல் பெந்தத்தை யடைகிறதில்லை என்பது கருத்து).

(ஸ்ரீ) கருமம்செய்கிறது தேகேந்திரியாதிகளே யன்றி நிஸ்ஸங்கனை ஆத்மா கருமம் செய்கிறதில்லையென்றும், தான் கருத்தாவல்லவென்றும் அறிந்த ஆத்மஞானமுடையவன் கொல்லுதலாகிய காரியத்தைச் செய்தாலும், பிறருக்கு அவனிடத்தில் கொல்லுதலாகிய செய்கையிருக்கிறதாகக் காணப்படுமேயன்றி ஆத்ம திருஷ்டியுள்ளவன், கொல்லுதலாகிய செய்கை தன்னுடையதென்ருவது தான் யாதொரு காரியத்தைச் செய்ததாகவாவது அறியமாட்டானுகையால் கொன்றதினு லுண்டாகும் தோஷம் அவனுக்கில்லை. அப்படியிருக்க நித்தியகருமத்தினுல் இவன் பெந்தமடையலாமென்று சொல்ல இடமேயில்லை.

(ஶம்) கொன்றவனைக் கொன்றவனல்லவென்று எப்படி சொல்லக்கூடுமென்ருலோ, தேகமே ஆத்மா என்றும், தானே சகலத்தையும் செய்கிறவன் என்றும் நினைக்கிறவ னெவனே, அவன் விஷயத்தில்

கொன்றவன் அவன்தானென்று சொல்வது சாதாரண மானாலும், ஆத்மாசுத்தன் கேவலன் சாக்ஷிமாத்திரன் செய்கை அவனுக்கில்லை செய்கைகள் தேகாதிகளைச் சேர்ந்தவை என்கிற ஆத்ம திருஷ்டியுடையவன் கொன்றதுபோல் ஆத்மதிருஷ்டி யற்றவனுக்குக் காணப்பட்டபோதிலும் கொல்லுதலென்னும் செய்கை தேகாதிகளைச் சேர்ந்ததானதால் ஆத்மஞானிக்கு அந்தசெய்கையின் தோஷம் ஒட்டுகிறதில்லை.

கேவல ஆத்மாவுக்கு கருத்திருத்துவமில்லை யென்றதினால், தேகாதிகளுடன் சேர்ந்த ஆத்மாவுக்குக் கருத்திருத்துவ முண்டென்றாகிறதே, அப்படி யிருக்க எப்படி கருத்திருத்துவ மில்லையென்று சொல்லலாமென்றாலோ, ஆத்மா அஸங்க சுவபாவனானதாலும் ஸங்கமென்பது ஆரோபிதமாகையாலும் கருத்திருத்துவம் சொல்ல இடமேயில்லை. அவித்தியா சம்பந்தத்தை ஒட்டி கருத்தாவாகச் சொல்லப்பட்டான். சுத்தாத்மாவுக்குக் கருத்திருத்துவம் சொல்ல இடமுமில்லை. ஐந்து கருத்தாக்களில் அவனொருவனுமல்ல. அவனைக் கருமங்கள் தொடருகிறதுமில்லை. "ஸ்வ்யக்தோயமசிந்த்யோயமவிகார்யோயம்" (அத்- உ, சு - உரு,) "ஶரீரஸ்தோபி கௌந்தேய நகரோதி நலிப்யதே" (அத்- கங, சு - கூஉ) இவைகளில், இந்த அர்த்தம் முன்னமேயே சொல்லப்பட்டிருக்கிறது. அவித்தியா சம்பந்தத்தினால், ஆத்மாவுக்குக் கருத்திருத்துவம் எப்படி ஆரோபிதமென்றால், கிளிஞ்சிலில் வெள்ளியென்கிற பிரமை தோற்றுவதுபோல். கேவலமென்ற சுத்தாத்ம ஞானிக்குத்தான் சர்வ கருமசந்நியாசம் சொல்லப்பட்டிருக்கிறது. "யஏனம் வேத்தி ஹந்தாரம்" (அத் - உ, சு - கக.) "வேதாவிநாஶிநம் நித்யம்" (அத் - உ, சு - உக.) இவைகளிலிருந்து, சுத்தாத்மாவான ஆத்மஞானிக்குச் சகல கருமத்தினுடைய சந்நியாசத்தை ஆரம்பித்து, பிறகு பலவிடங்களில் அதைப்பற்றிச் சொல்லி "நஹந்தி நநிபத்யதே" என்கிற இந்த சுலோகத்திலுள்ள பதங்களினால் முடிக்கப்பட் டிருக்கிறது. அதுபோல, தேகாபிமானமுடைய அவிவேகிக்குச் சகல கருமமு முண்டென்பதையும் சொல்லி யிதினால் முடிக்கப்பட்டு மிருக்கிறது.

(ரா) ஈசுவரன் சகல கருமங்களுக்கு முக்கிய கருத்தாவேயன்றி, தான் கருத்தாவல்ல வென்று எவன் அறிகிறானோ, அவன் கருமங்களினாலே கட்டப்படுகிறதில்லை. (இந்த யுத்தகளத்தில்) எதிராகவிருக்கிற பீஷ்மாதிகளை மாத்திரமல்ல, இன்னும் லோகத்திலுள்ள சகலமான பெயர்களையும் கொன்றாலும் உனக்குக் கொன்ற தோஷமில்லை யென்பது தாத்பரியம்.

(ஸ்ரீ,வி) "𑌲𑍋𑌕𑌸𑌂𑌹𑌾𑌰𑌾𑌰𑍍𑌥𑌂 — உலகத்தில் கொல்லுதலைச் செய்யவேண்டியதற்காகவே ஜனித்திருக்கிற ருத்திரர் - யமன் - இவர்களுக்குக் கொல்லுவதினு லுண்டாகும் தோஷமில்லையென்பது இச் சுலோகத்தின் தாத்பரியம். மற்றவர்கள் விஷயத்திலோ வென்றால் எவ்வளவு பிரம்ம ஞானியானுலும், சொற்பமாவது அபிமானமும் அகங்காரமு மில்லாமல் போகாது. மகா பிரம்ம ஞானியான தேவேந்திரனையுங்கூட விருத்திராசுரனைக் கொன்ற விஷயத்தில் பிரம்மஹத்தி தோஷம் பிடித்தது. ஆகையால், எப்படிப்பட்ட ஞானி யானுலும், கொல்லுதலாகிய தோஷமவனை விடாதாகையால், ஞானிகள் விஷயத்திற்கு இந்த சுலோகம் பொருந்தாது. இப்படிச் சொன்னதினுல், அபிமானத் தியாகந்தான் சந்நியாச சப்தார்த்தமென்று கிரகிக்கவேண்டும். (கஎ)

---

கஅ. 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌪𑌰𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑌾 𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌾 𑌕𑌰𑍍𑌮𑌚𑍋𑌦𑌨𑌾।
𑌕𑌰𑌣𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌕𑌰𑍍𑌤𑍇𑌤𑌿 𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌃 𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌗𑍍𑌰𑌹𑌃॥

| | |
|---|---|
| 𑌕𑌰𑍍𑌮𑌚𑍋𑌦𑌨𑌾* | கருமத்தைநடப்பிவிக்க ஏதுவானது |
| 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂† | அறிவு |
| 𑌜𑍍𑌞𑍇𑌯𑌂‡ | அறியத்தகுந்தவஸ்து |
| 𑌪𑌰𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑌾§ | அறிகிறவன்என்று |
| 𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌾 | மூன்றுவிதமாயிருக்கிறது |
| 𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌗𑍍𑌰𑌹𑌃¶ | கருமத்திற்கு ஆசிரயம் அல்லது ஆதாரமானது |

---

* (ரா) ஜோதிஷ்டோமாதி கருமங்களுடைய விதி. (ம) கருமவிதி.

† (ஸ்ரீ) இது தன்னுடைய இஷ்டத்திற்கு சாதனமென்கிற அறிவு. (ரா) இன்னது செய்யவேண்டிய தென்கிற அறிவு.

‡ (ஸ்ரீ) இஷ்டத்திற்கு ஏதுவானது. (ரா) செய்யத்தகுந்தது. இந்த ஜ்ஞேயந்தான், கரணம் கருமம் கருத்தா வென்று பிரிந்திருக்கிறது.

§ (ஸ்ரீ) இஷ்ட ஏதுவின்னதென்ற ஞானத்திற்கு ஆசிரயன். (ஶம்) அவித்தையிலிருக்கிற ஜீவன். (ரா) இன்னது செய்யவேண்டுமென்பதையும், இன்னது செய்யத்தகுந்த தென்பதையும் அறிகிறவன்.

¶ (ரா) 𑌕𑌰𑌣𑌂, 𑌕𑌰𑍍𑌮, 𑌕𑌰𑍍𑌤𑌾, இம்மூன்றும், ஜ்ஞேயமென்ற கருமத்திலடங்கியிருக்கிறது. (ம) கருமத்தினுடைய சுருக்கமானது, இதின் கசு-வது சுலோகத்தில் சொல்லப்பட்டிருக்கிற ஐந்து காரணங்களில் முக்கியமான மூன்று இவ்விடத்தில் சொல்லப்பட்டது.

கரணம்* { கண்முதலிய இந்திரியங்களாகிற முக்கிய சாதனம்

கர்ம† இஷ்டமானவஸ்து

கர்த்தா‡ செய்கிறவன்

இதி த்ரிவிதஃ } என இப்படி மூன்றுவிதமா யிருக்கிறது.

கருமத்தை நடப்பிவிக்க ஏதுவானது, அறிவு, அறியத்தகுந்த வஸ்து, அறிகிறவன் என மூன்றுவிதமாயிருக்கிறது. கருமத்திற் காசிரயமானது, கண்முதலிய இந்திரியங்களாகிய முக்கியசாதனம், இஷ்டமான வஸ்து, செய்கிறவன், என இப்படி மூன்றுவிதமா யிருக்கிறது.

(ஸ்ரீ,வி) கர்மசோதநா — கருமங்களைச் செய்யும்படியுள்ள பகவதாக்ஞை, த்ரிவிதா — மூன்றுவிதமாயிருக்கிறது. அதாவது, ஜ்ஞாநம் — பகவதாக்ஞை இப்படிப்பட்டதென்கிற அறிவு, ஜ்ஞேயம் — புருஷப்பிரவிருத்தி தேகாதிகள் கருமபலன் இவைகள், பரிஜ்ஞாதா — பகவதீனனான ஜீவன் இவர்களே. இவர்களை நிமித்தமாகக்கொண்டு பகவதாக்ஞைப் பிரவிருத்திக்கிறது. நிமித்தம் மூன்றுவிதமானாலும் பகவதாக்ஞையையும் மூன்றுவிதமென்று எப்படி சொல்லலா மென்றால், நிமித்தம் மூன்றுவிதமா யிருப்பதால் அந்த நிமித்தங்களை யுடைய விதியும் மூன்றுவிதமென்று உபசாரமாகச் சொல்லப்பட்டது. விதியானது நைமித்திகமாயும், ஞானதிமூன்றும் நிமித்தமாயு மிருக்கின்றன. எப்படி என்றால், விதியை யறிந்தபின்பு அதில்தான் பிரவிருத்திக்க வேண்டியதென்று பகவானுடைய பிரேரபணை யிருக்கிறதென்கிற அறிவுதான் ஞானம். அந்த ஞானத்தினால் பிரவிருத்திதான் ஞேயம் கிரியைகளைச்செய்கிற ஜீவன்தான் பரிஜ்ஞாதா. இந்த மூன்றுகளை நிமித்தமாகக்கொண்டு விதி பிரவிருத்திப்பதால் விதியானது நைமித்திகமாகச் சொல்லப்பட்டது. கர்மஸம்க்ரஹஃ — கருமங்களாகிற அதிஷ்டானம் முதலிய ஐந்துகளில் முக்கியமான மூன்றை சங்கிரமாகச் சொன்னதாகக் கொள்ளவேண்டியது, கரணம் — இந்திரியங்கள், யக்ஞத்தி லுபயோகிக்கிற பாத்திரங்கள் தர்ப்பை முதலியவைகள், தேகம், இம்மூன்றும், கர்ம — கருமேந்திரியங்களாகிய கைமுதலியவைகளுடைய செய்

* (௵) காது முதலிய இந்திர்யங்களும் புத்தியும். (ஈா) யக்ஞ சாதன வஸ்துக்கள்.

† (௵) தொழிலின் பயனுண்டாகு மிடம். (செயப்படுபொருள்). (ஈா) யாகாதி.

‡ (௵) இந்திரியங்களுக்கு வியாபாரங்களை யுண்டு பண்ணுகிறவனாகிய ஜீவன்.

கை, கர்தா—பராதீன கருத்தாவான ஜீவனும், சுவதந்திர கருத்தாவான பகவானும், இதி—இவ்விதமாய் த்ரிவிதா—மூன்றுவிதமானது. பராதீன கருத்தாவான ஜீவன் கருமங்களைச் செய்யும்படியாய் எப்படி விதிக்கப் படலாமென்றால், ஜீவன் எவனுக்கு அதீனனோ அந்த ஈசுவரனுடைய ஆக்ஞை என்கிற விதிநிஷேதங்களுக்குட்பட்டு நடப்பது இவன் கடமை யாதலால் பரதந்திரனாகவே கருமங்களை நடத்துகிறான். (கஅ)

---

கசு. ஜ்ஞாநம் கர்ம ச கர்தா ச த்ரிதைவ குணபேதத:।
ப்ரோச்யதே குணஸங்க்யாநே யதாவச்ச்ருணு தாந்யபி॥

| | |
|---|---|
| குணஸங்க்யாநே* | குணங்களுடைய சுவரூபத்தைச் சொல்லுகிற சாங்கியசாஸ்திரத்திலே |
| ஜ்ஞாநம் | ஞானமும் |
| கர்ம ச | கருமமும் |
| கர்தா ச | கருத்தாவும் |
| குணபேதத: | சத்துவாதி குணங்களுடைய பேதத்தினாலே |
| த்ரிதா ஏவ | மூன்றுவிதமாகவே |
| ப்ரோச்யதே | சொல்லப்பட்டிருக்கிறது |
| தாந்யபி | அவைகளையும் |
| யதாவத் | (கிரமமாக) உள்ளபடி |
| ச்ருணு | கேள். |

சத்துவ ரஜஸ் தமஸ்களாகிய குணங்களுடைய சுவரூபத்தைச் சொல்லுகிற சாங்கிய சாஸ்திரத்தில் ஞானமும் கருமமும் கருத்தாவும் குணங்களுடைய பேதத்தினால் மூன்றுவிதமாகவே சொல்லப்பட்டிருக் கின்றன. அவைகளையும் உள்ளபடி கேள்.

(ஸ்ரீ) இந்த சுலோகத்திலுள்ள த்ரிதா - என்கிற பதத்தினால் கருத் திருத்துவம் குணங்களுடைய சம்பந்தத்தினாலே யென்றும், ஆத் மாவுக்கு சுவபாவமாய் கருத்திருத்துவ மில்லையென்றும், சொல்லப் பட்ட தாகிறது. பெந்தத்திற்குக் குணங்கள்தான் காரண மென்று அத் - கச, சு - சுா - எ - அ - களினால் குறிப்பிடப்பட்டது. பதினே ழாவது அத்தியாயத்தில், முக்குணசுவபாவ நிரூபணத்தினால், சாத் துவிக ஆகாராதி செய்து சாத்துவிக சுவபாவத்தை யடையவேண்டு மென்று சொல்லப்பட்டது. இவ்விடத்திலோ, கிரியைகள் சாதன

---

* (ரா) குணங்களுடைய காரியங்களை கணக்கிடுவதில்.

ங்கள் பலன்கள் இவை ஆத்மாவுக்கில்லை யென்று காண்பிவிக்கும் பொருட்டு அவைகளுக்கு முக்குணங்களுடைய தன்மை சொல்லப்படுகிறது.

(ஸ்ரீ) 𑌗𑍁𑌣𑌸𑌂𑌖𑍍𑌯𑌾𑌨𑍇 = கபிலரால் செய்யப்பட்டிருக்கிற சாங்கிய சாஸ்திரத்தில். இந்த சாஸ்திரமானது, ஜீவேசுவராபேத விஷயத்தில் விருத்தமானாலும், குணங்களுடையவும் அதினாலுண்டான காரியங்களுடையவும் நிரூபண விஷயத்தில் பிரமாணமென்பதாக பிரகிருதத்தி லெடுத்துக்கொள்ளப்பட்டது. ஞானம், கிரியை, கருத்தா இம்மூன்றும் முக்குணங்களுக் குட்பட்டவையேயன்றி வெளிப்பட்டவையல்ல வென்பதைத் தெரிவிக்க - 𑌏𑌵 - என்கிற பதம் சேர்க்கப்பட்டதாக விருக்கிறது. (௧௯)

---

௨௦. 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌯𑍇𑌨𑍈𑌕𑌂 𑌭𑌾𑌵𑌮𑌵𑍍𑌯𑌯𑌮𑍀𑌕𑍍𑌷𑌤𑍇।
𑌅𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑌂 𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑍇𑌷𑍁 𑌤𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑌂॥

| | |
|---|---|
| 𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑍇𑌷𑍁 | வெவ்வேறாயிருக்கிற |
| 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 * | சகலவஸ்துக்களிலேயும் |
| 𑌅𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑌂 | இடைவிடாமல் தொடர்ந்திருக்கிறதாயும் |
| 𑌏𑌕𑌂 | ஒன்றாயும் |
| 𑌅𑌵𑍍𑌯𑌯𑌂 | விகாரமற்றதாயுமிருக்கிற |
| 𑌭𑌾𑌵𑌂 | பரமாத்மசுவரூபத்தை |
| 𑌯𑍇𑌨 | எதினால் |
| 𑌈𑌕𑍍𑌷𑌤𑍇 | பார்க்கிறானோ |
| 𑌤𑌤𑍍 | அந்த |
| 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 | ஞானத்தை |
| 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑌂 | சாத்துவிகமென்று |
| 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 | அறி. |

வெவ்வேறாயிருக்கிற சகல வஸ்துக்களிலேயும் இடைவிடாமல் தொடர்ந்திருக்கிறதாயும், ஒன்றாயும் விகார மற்றதாயு மிருக்கிற பரமாத்ம சுவரூபத்தை எதினால் பார்க்கிறானோ, அந்த ஞானத்தை சாத்துவிகமென்று அறி.

(ஸ்ரீ) ஒன்றாயிருக்கிற பரமாத்ம சுவரூபத்தை மாயைமுதல் ஸ்தாவரம் வரையிலுள்ள வெவ்வேறான சகல வஸ்துக்களிலேயும் பேதமில்லாமலும், அதாவது—ஆகாசமானது சகல வஸ்துக்களிலும் நிறைந்திருக்கிறதுபோல் நிறைந்திருக்கிறதாகவும், சத்தியமான வஸ்து பிர

* (ஸ்ரீ) பிரம்மாமுதல் ஸ்தாவரம் வரையிலுள்ள சகல வஸ்துக்களிடத்திலே,

ம்மமொன்றே என்பதாகவும், பிரம்மத்திற்காவது அதினுடைய தரு மத்திற்காவது விகார மில்லையென்பதாகவும், எந்த ஞானத்தினு லறி கிருனே, அந்த ஞானமானது சாத்துவிகமானதென்று அறி. இவ்வித அத்துவைத ஞானம்தான் சாக்ஷாத்மோக்ஷ ஏதுவானதும் சாத்துவிக மானதும். துவைத ஞானம் மோக்ஷ ஏதுவாகாது. ஆகையாலதை ராஜ ஸதாமஸமென்று அறியத்தக்கது.

(ரா) விபக்தேஷு = பிராம்மண க்ஷத்திரிய பிரம்மசாரி வானப் பிரஸ்த கிருகஸ்தர்கள் முதலிய பேதங்களால், பலவிதமானவர்களா யிருக்கிற வேதோக்த கருமாதி காரிகளான, ஸர்வபூதேஷு = சகலப் பிராணிகளிடத்திலேயு மிருக்கிற ஆத்மா, அவிபக்தம் = அப்படிப்பட்ட பிராம்மண க்ஷத்திரியாதி பேதத்தை யுடையவனல்ல வென்பதாகவும், ஏகம் = பூதங்கள் பலவிதங்களா யிருந்தபோதிலும், ஆத்மா பூதங்களைப்போல் உயரம் குட்டை முதலிய பலவித ஆகார முடையவனல்ல; ஓரேவிதமாயிருக்கிறவ னென்பதாகவும், அவ்யயம் = பூதங்கள் நாசமடையத் தகுந்தனவாகிலும் அவைகளிலுள்ள ஆத்மா நாசமடையத் தகுந்தவனல்ல வென்பதாகவும், அல்லது பூதங்கள் விகாரமடையத் தகுந்தனவாகிலும், ஆத்மா விகாரமடையத் தகுந்தவ னல்ல வென்பதாகவும், பின்னும் கருமத்திற்கும் அதின் பலனுக்கும், எப்படி பூதங்கள் பாத்தியப்பட்டனவோ, அப்படி ஆத்மா பாத்தியப் பட்டவனல்ல வென்பதாகவும், கருமபெந்த காலமாகிய சமுசார தெசையி லறிகிற அறிவு எதுவோ, அந்த (ஞானத்தை) அறிவை சாத் துவிகமானதென்று அறி. (இதில் ஆத்மாவென்றது ஜீவன் என்றறி யத்தக்கது).

(ஸ்ரீ,வி) விபக்தேஷு = பின்ன பின்னமாயும் தாரதம்மியத்தோடு மிருக்கிற, ஸர்வபூதேஷு = சகலஜீவ ஜடவஸ்துக்க ளிடத்திலு மிருக்கிறவனையும், ஏகம் = சர்வோத்தமனையும், அவிபக்தம் = எவ்விடத்தி லிருந்தபோதிலும் ஸ்தானபேதத்தினல் பேதப்படாதவனையும் என் றால், எப்பவும் நிர்தோஷனையும் ஷட்குண பரிபூரணனையும் ஓரேவித மாயு மிருக்கிருனென்பது தாத்பரியம். அவ்யயம் = சுவயமாயாவது, எதி லிருக்கிருனே அந்தவஸ்து அழிவதினுலாவது, அழிவற்றவனையும், பாவம் = எப்பவும் ஸ்திரமாயிருக்கிறவனையும், விஷ்ணுவை எவனறிகி ருனே, அப்படி அறிகிறதாகிய ஞானத்தை சாத்துவிகமென்றுஅறி. (உ0)

---

உக. ப்ருதக்த்வேந து யஜ்ஜ்ஞாநம் நாநாபாவாந்ப்ருதக்விதாந்|
வேத்தி ஸர்வேஷு பூதேஷு தஜ்ஜ்ஞாநம் வித்தி ராஜஸம்||

| | |
|---|---|
| ஸர்வேஷு பூதேஷு | சகலதேசங்களிலேயுமிருக்கிற |
| பாவாந் | ஜீவர்களை |
| நாநா | சுவரூபத்தினாலே பலரென்றும் |
| ப்ருதக்விதாந் | சுகதுக்காதி பேதங்களினாலே வெவ்வேறு விதமானவர்களென்றும் |
| ப்ருதக்த்வேந | தனித்தனியாக |
| யத் ஜ்ஞாநம் | எந்த ஞானம் |
| வேத்தி | தெரிகிறதோ |
| தத் ஜ்ஞாநம் | அந்த ஞானத்தை |
| ராஜஸம் | இராஜஸமென்று |
| வித்தி | அறி. |

சகல பூதங்களிலேயு மிருக்கிற ஜீவர்களை சுவரூபத்தினாலே வெவ்வேறென்றும் சுகதுக்காதி பேதங்களினாலே பலவிதமானவர்களென்றும் எந்தஞானம் தனித்தனியாகத் தெரிகிறதோ, அந்த ஞானத்தை இராஜஸமென்றறி.

(ரூo) ஸர்வேஷு பூதேஷு = சகலமான சரீரங்களிலேயும், ப்ருதக்த்வேந = ஒவ்வொரு சரீரத்தில் ஒவ்வொரு ஜீவன் என்று பிரத்தியேகமாயிருப்பதால், பாவாந் = ஜீவர்களை, நாநா = பின்னபின்னராயிருக்கிறதாகவும், ப்ருதக்விதாந் = பிரத்தியேகமான லக்ஷணங்களையுடையவர்களாயிருக்கிறதாகவும், யஜ்ஜ்ஞாநம் = எந்த ஞானத்தினாலே, வேத்தி = அறிகிறானோ, தஜ்ஜ்ஞாநம் = அந்தஞானத்தை, ராஜஸம் = இராஜஸமானதென்று, வித்தி = அறி.

(ரா) பாவாந் = ஆத்மாக்களை, ஸர்வேஷு பூதேஷு = பிராம்மணாதிகளில், ப்ருதக்த்வேந = பிராம்மணன் முதலிய பிரத்தியேகமான ஆகாரத்துடன், நாநா = பின்னர்களாகவும், ப்ருதக்விதாந் = வெளுப்பு கறுப்பு உயரம் குட்டை முதலியவைகளால் வேறுபட்டவர்களாகவும், கருமபலனையடைய யோக்கியர்களென்பதாகவும், சமுசாரத்திலிருக்கையில், யஜ்ஜ்ஞாநம் = எந்தஞானம், வேத்தி = அறிகிறதோ, தஜ்ஜ்ஞாநம் = அந்தஞானத்தை, இராஜஸமென்று அறி.

(மீ,வி) ஸர்வேஷு பூதேஷு ப்ருதக்த்வேந யஜ்ஜ்ஞாநம் — சகல ஜீவஜடங்களை பரஸ்பரம் பின்னபின்னங்களாகத் தெரிவிக்கிற ஞானமெதுவோ, அதாவது - நாநாபாவாந் — பலவிதங்களா யிருக்கிற ஜீவஜடரூப பதார்த்தங்களை - வ்யுத்தியாந் — ஒன்றுக்கொன்று பேத முள்ளவைகளாயும், தார தம்மிய முள்ளவைகளாயும், வேத்தி — விஷ்ணுவைப்பார்க்கிலும் வேறேயாகவும் யதார்த்தமாகவும் ஆனல் விஷ்ணு விஷயத்தில் சமுசயமாகவும் அறிகிறதெதோ, தஜ்ஜ்ஞாநம் — அந்தஞானத்தை, இராஜஸமென்றறி.

இதிலுள்ள தூ, சப்தத்தினுல் வேத்தி என்பதற்கு இவ்வித அர்த்தம் கிடைக்கிறது.

ஈசுவரவிஷயத்தில் சமுசய ரூபமானதினுல் இந்த ஜ்ஞாநம் இராஜஸமாச்சுது. (உக)

---

உஉ. யத்து க்ருத்ஸ்நவதேகஸ்மிந் கார்யே ஸக்தமஹைதுகம்।
அதத்வார்த்தவதல்பம் ச தத்தாமஸமுதாஹ்ருதம்॥

| | |
|---|---|
| ஏகஸ்மிந் கார்யே | யாதொரு தேகத்தில் அல்லது பிரதிமாதிகளில் |
| க்ருத்ஸ்நவத் | பரிபூர்ணத்திற்போல் |
| ஸக்தம் | ஜீவனுவது ஈசுவரனுவது இவ்வளவுதான் என்கிற அபிப்பிராயத்தோடு கூடினவும் |
| அஹைதுகம் | யுக்தியற்றவும் |
| அதத்வார்த்தவத் | உண்மையானவஸ்துவைத்தெரியாதவும் |
| அல்பம் ச | அற்பவிஷயமாயிருக்கிறவுமான |
| யத் ஜ்ஞாநம் | ஞானமெதுவோ |
| தத் | அது |
| தாமஸம் | தாமஸமென்று |
| உதாஹ்ருதம் | சொல்லப்பட்டிருக்கிறது. |

ஒரு தேகத்தில் அல்லது பிரதிமையில் பரிபூர்ணத்திற்போல் (பரிபூர்ணரான ஆத்மாவில் பரிபூர்ணரென்று வருகிற ஞானத்தைப்போல) ஜீவனுவது ஈசுவரனுவது இவ்வளவுதான் என்கிற அபிப்பிராயத்தோடு கூடினவும் யுக்தியற்றவும் உண்மையான வஸ்துவைத் தெரியாதவும் அற்பவிஷயமானவுமான ஞானமெதுவோ, அது தாமஸமென்று சொல்லப்பட்டிருக்கிறது.

(௩௦) யதகூறிநுகாயெ-ஃ — தேகத்தில் ஜீவனும் வெளியிலிருக்கிற பிரதிமாதிகளில் ஈசுவரனும், கூநுவசு — (ஸவஃஂவஜ்ஞிஃஂஜஃஷு) சகல வஸ்துக்களும் ஈசுவரன் என்கிற ஞானத்தைப்போல் - ஸக்தஂ — தேகம் எவ்வளவோ அவ்வளவுதான் ஜீவனு மிருக்கிறான், பிரதிமாதி (விக்கிரகம்) கள் எவ்வளவோ அவ்வளவுதான் ஈசுவரனிருக்கிறார் என்கிற அபிப்பிராயத்தோடு கூடியும், அஹெஹ தூகஂ—என் அப்படியிருக்க வேண்டுமென்கிற விஷயத்தில் யுக்தியில்லாமலும், அதகூாயஃவசு — உண்மையல்லாத விஷயத்தையுடையவும் அஜூஂவ — அற்பவிஷயமாயும் அற்பபலனையுமிருக்கிற ஞான மெதுவோ, அது தாமஸமென்று சொல்லப்படுகிறது. தாமஸாளான அவிவேகிகளுக்கு உண்டாகப்பட்ட ஞானம் இப்படிப்பட்டது.

(௩௧) யதகூஹிநுகாயெ-ஃ — பூதப் பிரேத பிசாசாதி ஆராதனரூபமான பூஜையென்கிற ஒரு கருமத்தில், கூநுவசு — பூர்ணபலத்தைக் கொடுக்குமென்று, ஸக்தஂ — அபிமானத்தோடுகூடியும், அஹெஹ தூகஂ (என்றுபாடம்) பூர்ணமானபலனைக் கொடுக்குமென்கிற விஷயத்தில் தகுந்த முகாந்திரமற்றதாயும்; அதகூாயஃவசு—தான் (ஆத்மா) பிராம்மணன் முதலிய வருணங்களுடையவ னில்லாவிட்டாலும் அவ்வித வருணமுதலியவை யுடையவனென்று அறிகிறதாயும், அஜூஂவ—மிகவும் அற்பமான பலனைக் கொடுக்கத்தக்கதாயும், அற்பமான தேவதையை அறிகிறதாயு மிருக்கிற, யதூ — எந்தஞானமுண்டோ, தசு — அது, தாஉஸஉகூா ஹூகஂ — தாமஸமானதென்று சொல்லப்பட்டிருக்கிறது.

(மீ,வி) சமுசாரியான ஜீவன், முக்தனைச் செய்யப்படுவதினாலே காரியமெனப்படுகிறான். காயெ-ஃ — ஜீவனாகிய தன்னிடத்தில், கூநுவசு — பரிபூர்ணமான பிரம்மமேதான் என்றறிகிறவும், பின்னும், கூநுவசு — ஜகத்சுவரூபமே தான் என்றறிகிறவும், யதகூஹிநுஸக்தஂ — ஒரே ஜீவன், அவனே பிரம்ம சுவரூபமென்றறிகிறவும், அவனே ஜகத்சுவரூபமென்றறிகிறவும், அஹெஹ தூகஂ — யுக்திக்குப் பொருந்தாததும், அதகூாயஃவசு—பொய்யானதும், அஜூஜூ—அநேக அக்ஞானங்களுடன் கூடியதாயு மிருக்கிற, ஜூாநஂ — ஞானமானது, தாமஸமென்று சொல்லப்படுகிறது. (உஉ)

௨௩. நியதம் ஸங்கரஹிதமராகத்வேஷத꞉ க்ருதம்।
அப²லப்ரேப்ஸுநா கர்ம யத்தத்ஸாத்த்விகமுச்யதே॥

| | |
|---|---|
| நியதம்* | நித்தியமாய்ச்செய்யவேண்டியதான |
| யத் கர்ம | எந்தக்கருமமானது |
| அப²லப்ரேப்ஸுநா | பலாபேக்ஷையில்லாதவனாலே |
| ஸங்கரஹிதம் | (தான்கருத்தாவென்கிற) அபிமானமில்லாமலும் |
| அராகத்வேஷத꞉† | இராகதுவேஷமில்லாமலும் |
| க்ருதம் | செய்யப்பட்டதோ |
| தத் | அந்தக்கருமமானது |
| ஸாத்த்விகம் | சாத்துவிகமானதென்று |
| உச்யதே | சொல்லப்படுகிறது. |

நித்தியமாய்ச் செய்யவேண்டியதான எந்தக்கருமமானது பலாபேக்ஷையில்லாதவனாலே அபிமானமில்லாமலும் இராகதுவேஷ மில்லாமலும் செய்யப்பட்டதோ, அந்தக் கருமமானது சாத்துவிகமென்று சொல்லப்படுகிறது. (௨௩)

---

௨௪. யத்து காமேப்ஸுநா கர்ம ஸாஹங்காரேண வா புந꞉।
க்ரியதே ப³ஹுலாயாஸம் தத்³ராஜஸமுதா³ஹ்ருதம்॥

| | |
|---|---|
| காமேப்ஸுநா | பலாபேக்ஷையுடையவனாலாவது |
| ஸாஹங்காரேண வா‡ புந꞉§ | தான் கருத்தாவென்கிற அகங்காரத்தை யுடையவனாலாவது |

---

* (ரா) அவனவனுடைய வருணாசிரமத்திற்கு யோக்கியமான. (ஸ்ரீ,வி) ஹரியே சர்வோத்தமனென்கிற ஞானபூர்வமாய், அவருடைய அர்ப்பணமாகவே செய்யப்படுகிறவும் வருணாசிரமத்திற் குசிதமானவுமான.

† (ஸ்ரீ) புத்திராதிகளிடத்திலே பிரீதியினாலேயாவது, சத்துருக்களிடத்தில் துவேஷத்தினாலேயாவது செய்யப்படாமல். (ரா) (ஸ்ரீ,வி) கீர்த்தி கிடைக்கவேண்டுமென்றும், அகீர்த்தி வரக்கூடாதென்றும் எண்ணமில்லாமல்.

‡ (ஸ்ரீ) (மம) என்னைத்தவிர சுரோத்திரியனெவனிருக்கிறான் என்கிற அகங்காரம். அகங்கார மிரண்டுவிதம். தான் கருத்தாவென்பதும், தான் சுரோத்திரியன் (வேதாத்தியயனம் செவ்வையாய்ச் செய்தவன்) என்பதும்.

§ (ஷா) இந்தப் பதம் சுலோகபூர்த்திக்காக சேர்க்கப்பட்டதென்று (மம) சொல்லுகிறார். வ - கார அர்த்தமாக வைத்துக்கொண்டு, பஹுலாயாஸம் = அதிகப்பிரயாசத்துடனும் என்று (ஸ்ரீ,வி) சொல்லுகிறார்.

| | |
|---|---|
| 𑌬𑌹𑍁𑌲𑌾𑌯𑌾𑌸𑌂* | அதிகப்பிரயாசத்துடன்கூடிய |
| 𑌯𑌤𑍍𑌤𑍁 𑌕𑌰𑍍𑌮 𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 | எந்தக்கருமமானது செய்யப்படுகிறதோ |
| 𑌤𑌤𑍍 | அந்தக்கருமமானது |
| 𑌰𑌾𑌜𑌸𑌂 | இராஜஸமென்று |
| 𑌉𑌦𑌾𑌹𑍃𑌤𑌂 | சொல்லப்பட்டிருக்கிறது. |

பலாபேக்ஷை யுடையவனாலாவது தான் கருத்தாவென்ற அகங்காரத்தை யுடையவனாலாவது அதிகப்பிரயாசத்துடன் கூடிய எந்தக் கருமமானது செய்யப்படுகிறதோ, அந்தக்கருமமானது இராஜஸமென்று சொல்லப்பட்டிருக்கிறது. (௨௪)

---

௨௫. 𑌅𑌨𑍁𑌬𑌨𑍍𑌧𑌂 𑌕𑍍𑌷𑌯𑌂 𑌹𑌿𑌂𑌸𑌾𑌮𑌨𑌪𑍇𑌕𑍍𑌷𑍍𑌯 𑌚 𑌪𑍌𑌰𑍁𑌷𑌂 ।
𑌮𑍋𑌹𑌾𑌦𑌾𑌰𑌭𑍍𑌯𑌤𑍇 𑌕𑌰𑍍𑌮 𑌯𑌤𑍍𑌤𑌤𑍍𑌤𑌾𑌮𑌸𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

| | |
|---|---|
| 𑌅𑌨𑍁𑌬𑌨𑍍𑌧𑌂 | இனிவரும்சுபாசுபங்களேயும் |
| 𑌕𑍍𑌷𑌯𑌂† | திரவிய (பொருள்) நாசத்தையும் |
| 𑌹𑌿𑌂𑌸𑌾𑌂 | பிறருக்குண்டாகுந்துன்பத்தையும் |
| 𑌪𑍌𑌰𑍁𑌷𑌂 | தன்னுடையசக்தியையும் |
| 𑌅𑌨𑌪𑍇𑌕𑍍𑌷𑍍𑌯‡ | யோசிக்காமல் |
| 𑌮𑍋𑌹𑌾𑌤𑍍§ | அக்ஞானத்தினலே |
| 𑌯𑌤𑍍 𑌕𑌰𑍍𑌮 | எந்தக்கருமமானது |
| 𑌆𑌰𑌭𑍍𑌯𑌤𑍇 | தொடங்கப்படுகிறதோ |
| 𑌤𑌤𑍍 | அந்தக்கருமமானது |
| 𑌤𑌾𑌮𑌸𑌂 | தாமஸமென்பதாக |
| 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇¶ | சொல்லப்படுகிறது. |

---

* (ஈா) மற்றவனுல் செய்யப்படாததாகிய இந்தக் கருமத்தை அதிகப்பிரயாசையுடன் நான் செய்கிறேன், என்பதாகிய அகங்காரம்.

† (மா) சக்திக்குறைவையும் திரவிய நாசத்தையும்.

‡ (ஸ்ரீ) 𑌅𑌨𑌵𑍇𑌕𑍍𑌷𑍍𑌯—என்றுபாடம். (அர்த்தத்தில் பேதமில்லை.) (மா) ஆரம்பித்த காரியத்தை முடிக்கக்கூடுமெல்லது கூடாது என்கிறதை யோசிக்காமல்.

§ (ஈா) ஈசுவரன் முக்கிய கருத்தாவென்கிற ஞானமன்றியில். (ஸ்ரீ,வி) தான் கருத்தா என்கிற அக்ஞானத்தினுல்.

¶ (ஸ்ரீ) 𑌉𑌦𑌾𑌹𑍃𑌤𑌂 - என்றுபாடம். (அர்த்தபேதமில்லை)

இனி தனக்குண்டாகப்போகிற சுபாசுபங்களையும் திரவியநாசத்தையும் பிறருக்குண்டாகுந் துன்பத்தையும் தனக்குள்ள சக்தியையும் யோசிக்காமல் அக்ஞானத்தினுலே எந்தக்கருமமானது ஆரம்பிக்கப் படுகிறதோ, அது தாமஸமென்று சொல்லப்படுகிறது. (உரு)

---

உசு. 𑌮𑍁𑌕𑍍𑌤𑌸𑌙𑍍𑌗𑍋𑌽𑌨𑌹𑌂𑌵𑌾𑌦𑍀 𑌧𑍃𑌤𑍍𑌯𑍁𑌤𑍍𑌸𑌾𑌹𑌸𑌮𑌨𑍍𑌵𑌿𑌤𑌃।
𑌸𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑌸𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑍋𑌰𑍍𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌕𑌾𑌰𑌃 𑌕𑌰𑍍𑌤𑌾 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇॥

| | |
|---|---|
| 𑌮𑍁𑌕𑍍𑌤𑌸𑌙𑍍𑌗𑌃 | பலாபேக்ஷையைவிட்டவனுயும் |
| 𑌅𑌨𑌹𑌂𑌵𑌾𑌦𑍀‡ | தான் கருத்தாவென்று சொல்வதைவிட்டவனுயும் |
| 𑌧𑍃𑌤𑍍𑌯𑍁𑌤𑍍𑌸𑌾𑌹𑌸𑌮𑌨𑍍𑌵𑌿𑌤𑌃§ | ஆரம்பித்த காரியத்தில் தைரியமும் விடாமுயற்சியுமுடையவனுயும் |
| 𑌸𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑌸𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑍋𑌃¶ | தொடங்கின காரியம் நிறைவேறினுலும் நிறைவேருவிட்டாலும் |
| 𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌕𑌾𑌰𑌃‖ | சந்தோஷம் விசனமற்றவனுகவு மிருக்கிற |
| 𑌕𑌰𑍍𑌤𑌾 | கருத்தாவானவன் |
| 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑌃 | சாத்துவிகனென்று |
| 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 | சொல்லப்படுகிருன். |

பலாபேக்ஷை அபிமான மிவைகளை விட்டவனுயும் தைரியமும் விடாமுயற்சியும் உள்ளவனுயும் தொடங்கின்கருமம் நிறைவேறினுலும் நிறைவேருவிட்டாலும் சந்தோஷம் விசனமற்றவனுயு மிருக்கிறவன், சாத்துவிக கருத்தாவென்று சொல்லப்படுகிருன். (உசு)

---

உஎ. 𑌰𑌾𑌗𑍀 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌪𑍍𑌰𑍇𑌪𑍍𑌸𑍁𑌰𑍍𑌲𑍁𑌬𑍍𑌧𑍋 𑌹𑌿𑌂𑌸𑌾𑌤𑍍𑌮𑌕𑍋𑌽𑌶𑍁𑌚𑌿𑌃।
𑌹𑌰𑍍𑌷𑌶𑍋𑌕𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌃 𑌕𑌰𑍍𑌤𑌾 𑌰𑌾𑌜𑌸𑌃 𑌪𑌰𑌿𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌃॥

---

‡ (ரா) தான் கருத்தாவென்கிற அபிமானத்தை விட்டவன். (ஸ்ரீ,வி) சர்வ கருத்தா பகவானென்கிற நிச்சயத்தினுல், தான் கருத்தாவென்ற அபிமானம் விட்டவன்.

§ (ரா) ஆரம்பித்த காரியத்தில், முடிவுவரையி லுண்டாகிற துன்பங்களை சகிப்பவனுயும். (ஸ்ரீ,வி) 𑌧𑍃𑌤𑌿𑌃=𑌧𑌾𑌰𑌣𑌂=எப்பவும் ஞாபகத்தில் வைத்திருப்பது.

¶ (𑌶𑌂) கருமபலன் கிடைத்தாலும் கிடைக்காவிட்டாலும்.

‖ (𑌶𑌂) சாஸ்திரப் பிரமாணத்தை நம்பினவனுய் பலனிலிச்சையன்றி பிரவிருத்திக்கிறவனுயும்.

| | |
|---|---|
| 𑌰𑌾𑌗𑍀* | அபிமானமுடையவனும் |
| 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌪𑍍𑌰𑍇𑌪𑍍𑌸𑍁𑌃 | கருமபலத்தில் ஆசையுள்ளவனும் |
| 𑌲𑍁𑌬𑍍𑌧𑌃† | பிறர்சொத்திலிச்சையுள்ளவனும் |
| 𑌹𑌿𑌂𑌸𑌾𑌤𑍍𑌮𑌕𑌃‡ | பரஹிம்ஸைசெய்யும் சுவபாவமுள்ளவனும் |
| 𑌅𑌶𑍁𑌚𑌿𑌃§ | சாஸ்திரோக்தமான ஆசாரமற்றவனும் |
| 𑌹𑌰𑍍𑌷𑌶𑍋𑌕𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌃¶ | காரியசித்தியில் சந்தோஷமும் அசித்தியில் விசனமுமுள்ளவனுமிருக்கிற |
| 𑌕𑌰𑍍𑌤𑌾 | கருத்தாவானவன் |
| 𑌰𑌾𑌜𑌸𑌃 | இராஜஸனென்று |
| 𑌪𑌰𑌿𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌃 | சொல்லப்பட்டிருக்கிறான். |

அபிமானம் கருமபலத்திலாசை பிறர்சொத்திலிச்சை பரஹிம்ஸைசெய்யும் சுவபாவம் இவைகளுள்ளவனும் ஆசாரமற்றவனும் சந்தோஷம் விசனமிரண்டுமுள்ளவனுமிருக்கிற கருத்தாவானவன் இராஜஸனென்று சொல்லப்பட்டிருக்கிறான். (உஎ)

---

உஅ. 𑌅𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌪𑍍𑌰𑌾𑌕𑍃𑌤𑌃 𑌸𑍍𑌤𑌬𑍍𑌧𑌃 𑌶𑌠𑍋 𑌨𑍈𑌷𑍍𑌕𑍃𑌤𑌿𑌕𑍋𑌽𑌲𑌸𑌃।
விஷாதீ 𑌦𑍀𑌰𑍍𑌘𑌸𑍂𑌤𑍍𑌰𑍀 𑌚 𑌕𑌰𑍍𑌤𑌾 𑌤𑌾𑌮𑌸 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇॥

| | |
|---|---|
| 𑌅𑌯𑍁𑌕𑍍𑌤𑌃‖ | மனஸ்ஸமாதானமற்றவனும் |
| 𑌪𑍍𑌰𑌾𑌕𑍃𑌤𑌃+ | விவேகமற்றவனும் |
| 𑌸𑍍𑌤𑌬𑍍𑌧𑌃× | வணக்கமற்றவனும் |

* (ஸ்ரீ,வி) (ரா) கீர்த்தியைக் கோருகிறவன்.

† (ஶம) பிறர்சொத்தி லாசை அல்லது தன்னுடைய திரவியத்தை யக்ஞாதிகளில் செலவழிக்க மனமில்லாதவன். (ரா) (ஸ்ரீ,வி) கருமத்திற்கு வேண்டிய திரவியத்தைச் செலவழிக்க இஷ்டமில்லாதவன்.

‡ (ரா) பிறரைத் துன்பம்செய்தே கருமத்தைச் செய்துகொள்ளுகிறவன்.

§ (ஶம) உள்ளும் புறம்பும் சுத்தியில்லாதவன். (ஸ்ரீ,வி) திரவியசுத்தி யில்லாதவன்.

¶ (ஶம) இஷ்டசித்தியில் சந்தோஷமும், அநிஷ்டப் பிராப்தியிலாவது இஷ்டசித்தி யாகாததினாலாவது விசனமுமுடையவன். (ரா) யுத்தத்தில் ஜயமுண்டானால் சந்தோஷமும் இல்லாவிட்டால் விசனமுமுடையவன்.

‖ (ரா) சாஸ்திரோக்தமான கருமத்திற்கு யோக்கியனல்லாதவன். (ஸ்ரீ,வி) பகவதர்ப்பணம் செய்யாதவன்.

+ (ரா) சாஸ்திரம் வாசிக்காதவன். (ஸ்ரீ,வி) பக்தியினால் சிரேஷ்டத்துவமடையாதவன்.

× (ரா) செய்யவேண்டிய காரியத்தைச் செய்யாமலிருக்கிறவன். (ஸ்ரீ,வி) தற்புகழுள்ளவனாய் வணக்கமற்றவன்.

| | |
|---|---|
| ஶட:* | மோசக்காரனும் அல்லது தன்சக்தி யிவ்வளவென்பதைப் பிறர் அறியாமல் மறைக்கிறவனும் |
| நைஷ்க்ருதிக:† | பிறரை அவமானஞ்செய்கிறவனும். |
| அலஸ:‡ | சோம்பலுள்ளவனும் |
| விஷாதீ§ | விசனமுள்ளவனும் |
| தீர்கஸூத்ரீ ச¶ | காலவிளம்பம்செய்கிறவனுமிருக்கிற |
| கர்த்தா | கருத்தாவானவன் |
| தாமஸ: | தாமஸனென்று |
| உச்யதே | சொல்லப்படுகிறான். |

மனநிலையற்றவனும் விவேகமற்றவனும் வணக்க மற்றவனும் மோசக்காரனும் பிறரை அவமானஞ்செய்கிறவனும் சோம்பலுள்ளவனும் விசனமுள்ளவனும் (ஒருகருமத்தை முடிக்கவேண்டிய காலத்திற்குள் முடிக்காமல்) காலவிளம்பம் செய்கிறவனு மிருக்கிற கருத்தா தாமஸனென்று சொல்லப்படுகிறான்.

(ஸ்ரீ) கருத்தா மூன்றுவிதமென்று சொன்னதினால் அறிகிறவன் மூன்றுவிதமென்றும், கருமம் மூன்றுவிதமென்று சொன்னதினால் அறியத்தகுந்த வஸ்து மூன்றுவிதமென்றும் சொல்லப்பட்டது. புத்தி மூன்றுவிதமென்று சொல்லப்போகிறபடியால் கரணம் மூன்றுவிதமென்று சொல்லப்போவதாக கிரகிக்கவேண்டியது. (உஅ)

---

உ௯. புத்தேர்பேதம் த்ருதேஶ்சைவ குணதஸ்த்ரிவிதம் ஶ்ருணு।
ப்ரோச்யமானமஶேஷேண ப்ருதக்த்வேன தனஞ்ஜய॥

---

* (ஶம்) மாயாவி. (ரா) ஆபிசாரம் (சூனியம்) செய்வதி லாசையுள்ளவன். (நீ,வி) வஞ்சகன்.

† (ஸ்ரீ) நைஷ்க்ருதிக: - என்றும் பாடம், (அர்த்தமொன்றே) (ஶம்) வஞ்சகன். (நீ,வி) கெட்டகாரியம் செய்பவன்.

‡ (ரா) ஆரம்பித்தகாரியத்தை முடிக்கவேண்டிய காலத்தில் முடிக்காமல் விட்டவன். (நீ,வி) காலத்தில் செய்யவேண்டியதைச் செய்யாதவன்.

§ (ரா) அதிக மனச்சலிப்புடையவன்.

¶ (ஶம்) ஒருநாளில் செய்யவேண்டியதை ஒருமாதத்தில்கூட செய்யாதவன். (ரா) சூனியத்தினால் பிறரை நீண்டகாலம் துன்பம்செய்ய நினைக்கிறவன். (நீ,வி) செய்யவேண்டிய கருமத்தைப் பிறகு செய்யலாமென்று நினைக்கிறவன்.

| | |
|---|---|
| 𑌧𑌨𑌞𑍍𑌜𑌯 | திக்விஜயத்தில்தனங்களைஜயித்தவனே ! |
| 𑌗𑍁𑌣𑌤𑌃 | சத்வாதிகுணங்களால் |
| 𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌂 | மூன்றுவிதமாயுள்ளவும் |
| 𑌅𑌶𑍇𑌷𑍇𑌣 | பூர்ணமாகவும் |
| 𑌪𑍃𑌥𑌕𑍍𑌤𑍍𑌵𑍇𑌨 | தனித்தனியாகவும் |
| 𑌪𑍍𑌰𑍋𑌚𑍍𑌯𑌮𑌾𑌨𑌂 | சொல்லப்படப்போகிறவும் |
| 𑌬𑍁𑌦𑍍𑌧𑍇𑌃 * | புத்தியினுடையவும் |
| 𑌧𑍃𑌤𑍇𑌶𑍍𑌚𑍈𑌵 † | தைரியத்தினுடையவும் |
| 𑌭𑍇𑌦𑌂 | பேதத்தை |
| 𑌶𑍃𑌣𑍁 | கேள். |

ஓ ! தனஞ்சயா ! சத்வாதிகுணங்களால் மூன்றுவிதமா யுள்ளவும் பூர்ணமாகவும் தனித்தனியாகவும் சொல்லப்படப்போகிறவும் புத்தியினுடையவும் தைரியத்தினுடையவும் பேதத்தைக்கேள். (௨௯)

---

௩0. 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌂𑌚𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌂𑌚 𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌕𑌾𑌰𑍍𑌯𑍇𑌭𑌯𑌾𑌭𑌯𑍇।
𑌬𑌨𑍍𑌧𑌂𑌮𑍋𑌕𑍍𑌷𑌂𑌚𑌯𑌾𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃𑌸𑌾𑌪𑌾𑌰𑍍𑌥𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑍀॥

| | |
|---|---|
| 𑌪𑌾𑌰𑍍𑌥 | ஓ ! குந்திபுத்திரா ! |
| 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌂 ‡ | தருமத்தில்பிரவிருத்தியையும் |
| 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌂 § | அதருமத்திலிருந்துநிவிருத்தியையும் |
| 𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌕𑌾𑌰𑍍𑌯𑍇 | காரியாகாரியங்களையும் |
| 𑌭𑌯𑌾𑌭𑌯𑍇 | பயாபயங்களையும் |
| 𑌬𑌨𑍍𑌧𑌂 | பெந்தத்தையும் |
| 𑌮𑍋𑌕𑍍𑌷𑌂𑌚 | மோக்ஷத்தையும் |
| 𑌯𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 | எந்தபுத்தியானது |
| 𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 | அறிகிறதோ |
| 𑌸𑌾 | அந்தபுத்தியானது |
| 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑍀 | சாத்துவிகமானது. |

ஓ ! குந்திபுத்திரா ! தருமத்தில் (சாஸ்திரோக்தமான காரியத்தில்) பிரவிருத்தியையும் அதருமத்திலிருந்து (சாஸ்திர விருத்தமான

* (ரா) விவேக பூர்வகமான நிச்சய ஞானத்தினுடைய.

† (ரா) ஆரம்பித்த கருமத்திற்குத் தடை யுண்டானும் அப்படிப்பட்ட தடையை நிவர்த்தித்துக்கொண்டு, கருமத்தை நடத்தும் விடாமுயற்சியினுடைய.

‡ (ஸ்ரீ,வி) பெந்த காரணத்தையும். (ஸூ) ௯ - வது அத்தியாயம் ௭ - வது, சுலோகம் பார்க்க.

§ (ஸ்ரீ,வி) மோக்ஷ காரணத்தையும்.

காரியத்தில்) நிவிருத்தியையும் (தேசகாலங்களையறிந்து இன்னது செய்யத்தகும் இன்னது செய்யத்தகாதென்பதாகிய) காரியா காரியங்களையும் (இன்னகாரியத்தில் பயமுண்டாகும் இன்னகாரியத்தில் பயமில்லை என்கிற) பயாபயத்தையும் பெந்தமிப்படிப்பட்ட தென்பதையும் (இன்னவிதமாய் நடந்தால்) மோக்ஷ மடையலாமென்பதையும் எந்தபுத்தியானது அறிகிறதோ, அதுதான் சாத்விகமானது.

(ஶா°) பெந்த ஏதுவாகிய சாஸ்திரவிகிதமான கருமமார்க்கமும் மோக்ஷ ஏதுவான சந்நியாசமார்க்கமும்தான் பிரவிருத்தி நிவிருத்தி என்பவை. இவைகளையும் அந்தந்த தேசகாலங்களில் திருஷ்டாதிருஷ்ட (இஹபர) பலன்களைக் கொடுக்கத்தக்க கருமங்களைச் செய்வதையும் செய்யாமல் விடுவதையும் பயத்திற்குக் காரணமான புலிமுதலியவைகளையும் பயமுண்டாக்காத வஸ்துக்களையும் பெந்தத்தையும் அதற்குக் காரணத்தையும் மோக்ஷத்தையும் அதற்குக் காரணத்தையும் அறிகிற புத்தி சாத்விகமானதென்பது தாத்பரியம்.

(ரா) சுவர்க்காதி பிரயோசனத்திற்கு அவசியமான தருமத்தையும் மோக்ஷகாரணமான தருமத்தையும் வருணாசிரம தருமத்தையும் தேசகால அவஸ்தைகளை அநுசரித்துச் செய்யவேண்டியதையும் விடவேண்டியதையும் சாஸ்திரவிரோதமாய் நடந்தால் பயமுண்டாகும் சாஸ்திரோக்தமாய் நடந்தால் பயமுண்டாகாதென்பதையும் சமுசாரத்தி னுண்மையையும் பெந்தத்தைப் போக்கடித்துக் கொள்ளுவதாகிய மோக்ஷத்தி னுண்மையையும் அறிகிற புத்தி சாத்துவிகமானது. (௩௰)

---

௩௧. यया धर्ममधर्मं च कार्यं चाकार्यमेव च।
अयथावत्प्रजानाति बुद्धिः सा पार्थ राजसी॥

| | |
|---|---|
| हे पार्थ | ஓ! அர்சுனா! |
| यया | எந்தபுத்தியினாலே |
| धर्मं* | தருமத்தையும் |
| अधर्मं च† | அதருமத்தையும் |
| कार्यं च | செய்யத்தகுந்ததையும் |
| अकार्यमेव च | செய்யத்தகாததையும் |
| अयथावत्‡ | சந்தேகமாக, உள்ளபடியன்றி |

---

* (ஶா°) சாஸ்திரோக்தமான கருமம்.

† (ஶா°) சாஸ்திர விருத்தமான கருமம்.

‡ (ஶா°) ஒவ்வொரு காரியத்திலும் நிச்சயபுத்தியன்றி. (ஶ்ரீ.வி) இதில் சொன்ன தருமாதிகளில் சிலதை சரியாகவும் சிலதை விபரீதமாயு மறிகிறது.

| | |
|---|---|
| प्रजानाति | அறிகிறானோ |
| सा | அந்த |
| बुद्धिः | புத்தியானது |
| राजसी | இராஜஸமானது. |

ஓ! அர்சுனா! எந்த புத்தியினாலே தருமாதருமங்களையும் காரியாகாரியங்களையும் சந்தேகமாக அறிகிறானோ, அந்த புத்தி இராஜஸமானது. (௩௧)

---

௩௨. अधर्मं धर्ममिति या मन्यते तमसावृता।
सर्वार्थान्विपरीतांश्च बुद्धिः सा पार्थ तामसी॥

| | |
|---|---|
| पार्थ | ஓ! குந்திபுத்திரா! |
| या | எந்தபுத்தியானது |
| तमसा | அக்ஞானத்தினாலே |
| आवृता | மூடப்பட்டு |
| अधर्मं | அதருமத்தை |
| धर्ममिति | தருமமென்றும் |
| सर्वार्थान् | சகலவஸ்துக்களையும் |
| विपरीतांश्च | விபரீதங்களாகவும் |
| मन्यते | நினைக்கிறதோ |
| सा | அந்த |
| बुद्धिः | புத்தி |
| तामसी | தாமஸமானது. |

ஓ! குந்திபுத்திரா! எந்தபுத்தியானது அக்ஞானத்தினாலே மூடப்பட்டு, அதருமத்தைத் தருமமென்றும், சகலவஸ்துக்களையும் விபரீதங்களாகவும் (ஒன்றை மற்றொன்றாக) நினைக்கிறதோ, அந்த புத்தி தாமஸமானது.

(ஸ்ரீ) முந்திய இரண்டு சுலோகங்களிலும் இதிலும் சொன்ன புத்தியென்பது அந்தக்கரணம். ஞானமென்பது அதினுடைய வியாபாரம். (த்ருதி) திருதி என்பதும் புத்தியின் வியாபாரந்தான். அல்லது புத்தியென்பது நிச்சயசுவரூபமான அந்தக்கரண வியாபாரமே. தருமாதருமங்களுக்கு முக்கியசாதனம் புத்திஞான திருதிகளாகையால் அவைகளைப்பற்றி மட்டும் இவ்விடத்தில் சொல்லப்பட்டது. அதினால், இச்சைமுதலியவைகளையும் முக்குணமுள்ளவைகளாக கிரகிக்க வேண்டியது.

(ரா) அக்ஞானத்தினால் மூடப்பட்டிருக்கிற தாமஸபுத்தியானது சகல வஸ்துக்களையும் விபரீதமாக அறிகிறது. எப்படியென்றால், தருமத்தை அதருமமாகவும் அதருமத்தை தருமமாகவும் இருக்கிறதை இல்லாததாகவும் இல்லாததை இருக்கிறதாகவும உயர்ந்ததைத் தாழ்ந்ததாகவும் தாழ்ந்ததை உயர்ந்ததாகவும் இப்படி சகலத்தையும் வித்தியாசமாக அறிகிறதுதான். (௩௨)

---

௩௩. 𑌧𑍃𑌤𑍍𑌯𑌾𑌯𑌯𑌾𑌧𑌾𑌰𑌯𑌤𑍇 𑌮𑌨𑌃𑌪𑍍𑌰𑌾𑌣𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌃।
𑌯𑍋𑌗𑍇𑌨𑌾𑌵𑍍𑌯𑌭𑌿𑌚𑌾𑌰𑌿𑌣𑍍𑌯𑌾 𑌧𑍃𑌤𑌿𑌸𑍍𑌸𑌾𑌪𑌾𑌰𑍍𑌥𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑍀॥

| | |
|---|---|
| 𑌪𑌾𑌰𑍍𑌥 | ஓ! பார்த்தா! |
| 𑌯𑍋𑌗𑍇𑌨 * | மனதொரேநிலையி லிருப்பதினாலே |
| 𑌅𑌵𑍍𑌯𑌭𑌿𑌚𑌾𑌰𑌿𑌣𑍍𑌯𑌾 † | சலிக்காமலிருக்கிற அல்லது விஷயங்களில் பிரவிருத்திக்காமலிருக்கிற |
| 𑌯𑌯𑌾 𑌧𑍃𑌤𑍍𑌯𑌾 | எந்த தைரியத்தினாலே |
| 𑌮𑌨𑌃𑌪𑍍𑌰𑌾𑌣𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌃 | மனசு பிராணன்கள் இந்திரியங்கள் இவைகளுடைய செய்கைகளை |
| 𑌧𑌾𑌰𑌯𑌤𑍇 ‡ | நிறுத்துகிறானோ |
| 𑌸𑌾 | அந்த |
| 𑌧𑍃𑌤𑌿𑌃 | தைரியம் |
| 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑍀 | சகத்துவிகமானது. |

ஓ! பார்த்தா! மனதொரேநிலையி லிருப்பதினாலே சலிக்காமலிருக்கிற எந்த தைரியத்தினால், மனது பிராணன்கள் இந்திரியங்கள் இவைகளுடைய செய்கைகளை நிறுத்துகிறானோ, அந்த தைரியம் சாத்விகமானது.

(𑌶𑌂) 𑌯𑍋𑌗𑍇𑌨 — யோகசமாதியினாலே, 𑌅𑌵𑍍𑌯𑌭𑌿𑌚𑌾𑌰𑌿𑌣𑍍𑌯𑌾 — சமாதியுடன் எப்பவும் கூடியிருக்கிற, 𑌯𑌯𑌾𑌧𑍃𑌤𑍍𑌯𑌾 — எந்த தைரியத்தினாலே, 𑌧𑌾𑌰𑌯𑌤𑍇 — மனது பிராணன்கள் இந்திரியங்கள் இவைகளை விஷயங்களினின்று திருப்பி ஆத்மத்தியானத்தில் நிறுத்துகிறானோ, அந்த தைரியம் சாத்விகமானது.

---

* (ரா) மோக்ஷ சாதனமான பகவதுபாசனையினாலே. (ஸ்ரீ,வி) பகவத்பக்தியோடுகூடிய யோகத்தினாலே.

† (ஸ்ரீ,வி) விஹிதமார்க்கத்தி லிருக்கிற.

‡ (ரா) பகவதுபாசனையிலேயே நிலைக்கச்செய்கிறானோ.

௩௪. 𑌯𑌯𑌾 𑌤𑍁 𑌧𑌰𑍍𑌮𑌕𑌾𑌮𑌾𑌰𑍍𑌥𑌾𑌨𑍍 𑌧𑍃𑌤𑍍𑌯𑌾 𑌧𑌾𑌰𑌯𑌤𑍇𑌽𑌰𑍍𑌜𑍁𑌨।
𑌪𑍍𑌰𑌸𑌙𑍍𑌗𑍇𑌨 𑌫𑌲𑌾𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑍀 𑌧𑍃𑌤𑌿𑌸𑍍𑌸𑌾 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌰𑌾𑌜𑌸𑍀॥

| | |
|---|---|
| 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 | ஓ! குந்திபுத்திரனாகிய அர்சுனா! |
| 𑌯𑌯𑌾 𑌧𑍃𑌤𑍍𑌯𑌾 | எந்தைதைரியத்தினாலே |
| 𑌧𑌰𑍍𑌮𑌕𑌾𑌮𑌾𑌰𑍍𑌥𑌾𑌨𑍍 | தருமார்த்தகாமங்களை |
| 𑌧𑌾𑌰𑌯𑌤𑍇* | தவறவிடுகிறதில்லையோ |
| 𑌪𑍍𑌰𑌸𑌙𑍍𑌗𑍇𑌨† | (தருமார்த்தகாமங்களுடைய) பற்றுதலினாலே |
| 𑌫𑌲𑌾𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑍀 𑌤𑍁 (𑌭𑌵𑌤𑌿) | பலனையபேக்ஷிக்கிறவனாகிறானோ |
| 𑌸𑌾 | அந்த |
| 𑌧𑍃𑌤𑌿𑌃 | தைரியம் |
| 𑌰𑌾𑌜𑌸𑍀 | இராஜஸமானது |

ஓ! குந்திபுத்திரனாகிய அர்சுனா! எந்த தைரியத்தினாலே தருமார்த்த காமங்களைத் தவறவிடுகிறதில்லையோ, தருமார்த்த காமங்களுடைய பற்றுதலினாலே பலனை யபேக்ஷிக்கிறவனாகிறானோ, அந்ததைரியம் இராஜஸமானது. (தருமாதிகள் முக்கியமென்றும் பலன் முக்கியமல்லவென்றும் கருத்து.)

(ரா) எந்ததைரியத்தினாலே, 𑌫𑌲𑌾𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑍀 𑌤𑍁—தருமார்த்தகாமங்களாகிய பலனை அபேக்ஷிக்கிற புருஷனானவன், 𑌪𑍍𑌰𑌸𑌙𑍍𑌗𑍇𑌨—அதிகமான பற்றுதலினாலே, 𑌧𑌰𑍍𑌮𑌕𑌾𑌮𑌾𑌰𑍍𑌥𑌾𑌨𑍍—தருமகாமார்த்தங்களுக்குக் காரணமான மனசு பிராணன்கள் இந்திரியங்களிவைகளுடைய செய்கைகளை, 𑌧𑌾𑌰𑌯𑌤𑍇—அனுகூலமாய்ச் செய்துகொள்ளுகிறானோ, அந்த தைரியம் இராஜஸமானது. (௩௪)

---

௩௫. 𑌯𑌯𑌾 𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌂 𑌭𑌯𑌂 𑌶𑍋𑌕𑌂 𑌵𑌿𑌷𑌾𑌦𑌂 𑌮𑌦𑌮𑍇𑌵 𑌚।
𑌨 𑌵𑌿𑌮𑍁𑌞𑍍𑌚𑌤𑌿 𑌦𑍁𑌰𑍍𑌮𑍇𑌧𑌾 𑌧𑍃𑌤𑌿𑌸𑍍𑌸𑌾 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌤𑌾𑌮𑌸𑍀॥

| | |
|---|---|
| 𑌪𑌾𑌰𑍍𑌥 | ஓ! பார்த்தா! |
| 𑌦𑍁𑌰𑍍𑌮𑍇𑌧𑌾𑌃 | துஷ்டபுத்தியையுடையவன் |
| 𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌂‡ | நித்திரையையும் |

* (ஶம்) எப்பவும் அநுஷ்டிக்கத் தக்கதென்றே மனதினால் நிச்சயிக்கிறானோ.

† (ஶ்ரீ,வி) தன்னுடைய தென்கிற அபிமானத்தினாலே.

‡ (ஶ்ரீ,வி) அதிக நித்திரை.

| | |
|---|---|
| பயம் | பயத்தையும் |
| ஶோகம்* | விசனத்தையும் |
| விஷாதம்† | வியாகுலத்தையும் |
| மதமேவ‡ | மயக்கத்தையும் |
| யயா | எந்ததைரியத்தினாலே |
| ந விமுஞ்சதி | விடுகிறதில்லையோ |
| ஸா | அந்த |
| த்ருதி꞉ | தைரியம் |
| தாமஸீ | தாமஸமானது. |

ஓ! பார்த்தா! துஷ்டபுத்தியை யுடைய ஒருவன் நித்திரை பயம் விசனம் வியாகுலம் மயக்கம் இவைகளை யெந்த தைரியத்தினால் விடுகிறதில்லையோ, அந்ததைரியம் தாமஸமானது.

(ரா) பயம் சோகம் முதலியவை எந்தவிஷயங்கள் மூலமாய் உண்டாகுமோ, அந்த விஷயங்களைத் தியஜிக்காமலிருக்கிறது.

(ஶ்ரீ,வி) நிஷித்த மானவைகளாகிய சுவப்னம் முதலியவைகளை எந்த தைரியத்தினாலே விடுகிறதில்லையோ, அந்த தைரியம் தாமஸமானது. (௩௫)

---

௩௬. ஸுகம் த்விதாநீம் த்ரிவிதம் ஶ்ருணு மே பரதர்ஷப।
அப்யாஸாத்ரமதே யத்ர து꞉காந்தம் ச நிகச்சதி॥

௩௭. யத்ததக்ரே விஷமிவ பரிணாமே(அ)ம்ருதோபமம்।
தத்ஸுகம் ஸாத்த்விகம் ப்ரோக்தமாத்மபுத்திப்ரஸாதஜம்॥

| | |
|---|---|
| ஹே பரதர்ஷப | ஓ! பரதகுலசிரேஷ்டா! |
| த்ரிவிதம் | மூன்றுவிதமான |
| ஸுகம் | சுகத்தை |
| இதாநீம் | இப்போது |
| மே (வசநாத்) | என்னுடையவாக்கியத்தினால் |
| ஶ்ருணு | கேள் |
| யத்ர§ | எதில் |

* (சூ) இஷ்டவஸ்து நசிப்பதினாலுண்டாகிற துக்கம்.

† (சூ) இந்திரியச்சோர்வு. (வா) சிந்தை, கவலை, மனோவிசாரம்.

‡ (ஶ்ரீ) (ரா) புத்தியைமயக்குகிற வஸ்துக்களை உண்பது அல்லது அடிப்பதினாலுண்டாகிற மயக்கம்.

§ (ஶ்ரீ) எந்த சுகானுபவத்தில்.

| | |
|---|---|
| 𑌅𑌭𑍍𑌯𑌾𑌸𑌾𑌤𑍍 | அப்பியாசத்தினல் (பழக்கத்தினல்) |
| 𑌰𑌮𑌤𑍇 | சந்தோஷத்தையடைவானே |
| 𑌦𑍁𑌃𑌖𑌾𑌨𑍍𑌤𑌂 𑌚 | துக்கத்தினுடைய பரிகாரத்தையும் |
| 𑌨𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 | செவ்வையாயடைவானே |
| 𑌯𑌤𑍍𑌤 | எந்தசுகமானது |
| 𑌦𑌗𑍍𑌰𑍇 * | துவக்கத்தில் |
| 𑌵𑌿𑌷𑌮𑌿𑌵 | (துக்கத்தை கொடுப்பதால்) விஷம்போலவும் |
| 𑌪𑌰𑌿𑌣𑌾𑌮𑍇 † | முடிவில் |
| 𑌅𑌮𑍃𑌤𑍋𑌪𑌮𑌮𑍍 | (சந்தோஷத்தைக் கொடுப்பதால்) அமிருதம்போலுமிருக்கிறதோ |
| 𑌆𑌤𑍍𑌮𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌜𑌮𑍍 ‡ | சுவசுவரூபத்தினுடைய ஞானத்தினல் அழுக்குகள்நீங்கி சுத்தமாயிருப்பதினுலுண்டான |
| 𑌤𑌤𑍍 𑌸𑍁𑌖𑌮𑍍 § | அந்தசுகமானது |
| 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑌮𑍍 | சாத்துவிகமானதென்று |
| 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌮𑍍 | சொல்லப்பட்டிருக்கிறது. |

ஓ! பரதசிரேஷ்டா! மூன்றுவிதமான சுகத்தை இப்போது என்னிடத்தி லிருந்துகேள். எதில் அப்பியாசத்தினல் சந்தோஷத்தையடைவானே, துக்கத்திலிருந்தும் நிவிருத்தியடைவானே, எந்த சுகமானது துவக்கத்தில் விஷம்போலிருந்து முடிவில் அமிருதம்போ

---

* (ஸ்ரீ) ஞானவைராக்கியத் தியானசமாதிகளை அநுஷ்டிக்கத் தொடங்கும் காலத்தில். (ரா) யோகாப்பியாசத்தில் தன்னுடைய சுவரூபசுகம் தெரியாதிருக்கிற காலத்தில்.

† (ஸ்ரீ) ஞான வைராக்கியாதிகளில் தேர்ந்தபின். (ரா) சுவரூபாநுசந்தானத்திலிருக்கையில்.

‡ (ஸ்ரீ) பரிசுத்தமான எந்த ஆத்மசுவரூப ஞானமுண்டோ, அந்த நிர்மலமான ஞானத்தினு லுண்டான, அல்லது, அகண்டாத்ம சுவரூபம்தவிர வேறே விஷயங்களில் பிரவிருத்திக்காத ஞானம் பூர்ணமாகும் காலத்திலுண்டான. (ரா) ஆத்மசுவரூபம் தவிர வேறேவிஷயம் தோற்றாம லிருக்கிற அப்படிப்பட்ட புத்தியினுலுண்டான. (மீ,வி) விஷ்ணுப்பிரசாதத்தினு லுண்டானது புத்தி பிரசாதம். அதெதுவென்றால், விஷ்ணுவைத்தவிர இதரவிஷயங்களை கிரகிக்காம லிருக்கிறதுதான். அதினுலுண்டான.

§ (ரா) முன்சொன்ன ஞானம் கருமம் கருத்தா இவைகளுக்கு சேஷியான சுகத்தை. (ஞானம் கருமம் கருத்தா இவைகளா லுண்டாகிய பிரயோஜனம் சுகமாகையால் அந்த சுகம் சேஷி, ஞானதிகள் சேஷம்.)

லாகுமோ, சுவசுவரூபத்தினுடைய ஞானத்தினல் மன அழுக்குகள் நீங்கி சுத்தமா யிருப்பதினலுண்டான அந்த சுகமானது சாத்துவிக மென்று சொல்லப்பட்டிருக்கிறது. (௩௬-௩௭)

---

௩௮. விஷயேந்த்³ரியஸம்யோகா³த்³யத்தத³க்³ரே(அ)ம்ருதோபமம்।
பரிணாமே விஷமிவ தத்ஸுக²ம் ராஜஸம் ஸ்ம்ருதம்॥

| | |
|---|---|
| தத் | பிரசித்தமான |
| யத் | எந்தசுகமானது |
| விஷயேந்த்³ரிய-ஸம்யோகா³த் | விஷயங்களும் இந்திரியங்களும் சம்பந்தப் படுவதினலே |
| அக்³ரே * | துவக்கத்தில் |
| அம்ருதோபமம் | அமிருதத்திற்குசமானமாயும் |
| பரிணாமே | முடிவில் |
| விஷமிவ | விஷத்தைப்போலுமிருக்குமோ |
| தத் ஸுக²ம் | அந்தசுகமானது |
| ராஜஸம் | இராஜஸமென்று |
| ஸ்ம்ருதம் | சொல்லப்பட்டிருக்கிறது. |

பிரசித்தமான எந்தசுகமானது விஷயேந்திரியங்களின் சம்பந்தத்தினலே துவக்கத்தில் அமிருதத்திற்கு சமானமாயும் முடிவில் விஷத்தைப்போலு மிருக்குமோ, அந்த சுகமானது இராஜஸமென்று சொல்லப்பட்டிருக்கிறது.

(ஸ்ரீ) ஸ்திரீ சம்போகாதிகள் ஆரம்பத்தில் சுகம்போலிருந்தாலும் விஷயானுபவமானபிறகு இஹபரங்களில் துக்கத்தை யுண்டாக்கும். ஆகையால் விஷம்போல் சொல்லப்பட்டது.

(ஶம்) விஷயசுகமானது சுவஸ்திரீமுதலிய விஷயத்தில் பெலம் பராக்கிரமம் ரூபம் ஞானம் (மேதா) ஞாபகசக்தி தனம் உற்சாகம் இவைகளைப் போக்கடித்துவிடும். பரஸ்திரீமுதலிய விஷயத்தில் பாப பலமான நரகத்திற்கும் ஏதுவாகும். ஆகையால் விஷத்திற்கொப்பாக சொல்லப்பட்டது.

(ரா) பசிமுதலியவற்றின் நிவிருத்திக்காக விஷயங்களை அனுபவித்த பின்பு அந்த அனுபவம் நரக ஏதுவானதால் விஷம் சாப்பிட்டதுபோ லிருக்குமென்பது கருத்து. (௩௮)

---

* (ரா) அனுபவகாலத்தில்.

௩௯. யதக்ரே சாநுபந்தே ச ஸுகம் மோஹநமாத்மந:।
நித்ராலஸ்யப்ரமாதோத்தம் தத்தாமஸமுதாஹ்ருதம்॥

| | |
|---|---|
| யத் | எந்தசுகமானது |
| அக்ரே | ஆரம்பத்திலும் |
| அநுபந்தே ச | முடிவிலும் |
| ஆத்மந: | தனக்கு |
| மோஹநம்* | மோகத்தையுண்டாக்குவதாயும் |
| நித்ராலஸ்யப்ரமாதோத்தம் † | நித்திரை சோம்பல் வீண்யோசனை இவைகளினு லுண்டானதாயு மிருக்கிறதோ |
| தத் | அந்த |
| ஸுகம் | சுகமானது |
| தாமஸம் | தாமசமானதென்று |
| உதாஹ்ருதம் | சொல்லப்பட்டிருக்கிறது. |

எந்த சுகமானது துவக்கத்திலும் முடிவிலும் தனக்கு மோகத்தையுண்டாக்குவதாயும் நித்திரை (தூக்கம்) சோம்பல் உபயோகமற்ற விஷயங்களைக்குறித்து மனதில் யோசிக்கிறதாகிய வீண்யோசனை இவைகளினு லுண்டானதாயுமிருக்கிறதோ, அந்த சுகமானது தாமஸமென்று சொல்லப்பட்டிருக்கிறது. (௩௯)

---

௪௦. ந ததஸ்தி ப்ருதிவ்யாம் வா திவி தேவேஷு வா புந:।
ஸத்த்வம் ப்ரக்ருதிஜைர்முக்தம் யதேபி: ஸ்யாத்த்ரிபிர்குணை:॥

| | |
|---|---|
| ப்ரக்ருதிஜை: | மாயையிலிருந்துண்டான |
| ஏபி: த்ரிபி: குணை: | இந்தசத்துவாதி முக்குணங்களால் |
| முக்தம் | விடப்பட்ட |

---

* (ஈா) எந்தெந்தவஸ்துக்க ளெப்படி யெப்படியிருக்கின்றனவோ, அவ்விதமாகத் தெரிந்துகொள்ள ஞானமில்லாமல் செய்வது.

† (ஶ௦) நித்திரையானது, அதை யனுபவிக்கும் (தூங்கும்) காலத்தில் வஸ்துக்களைத் தெரியவொட்டாமற் செய்யும். ஆலஸியமானது, இந்திரியங்களை விஷயங்களில் பிரவிருத்திக்காமல் நிறுத்தி, வஸ்துக்களைத் தெரியவொட்டாமற் செய்யும். பிரமாதமானது, மனது வீண்யோசனையி லிருப்பதால் செய்யவேண்டிய காரியத்தில் அதன் பிரவிருத்தியைத் தடுத்து, வஸ்துக்களின் சுவரூபத்தை யறிய வொட்டாமற் செய்யும். ஆகையால், இவைகளால் உண்டான சுகம் தாமஸமானது. (ஸ்ரீ, வி) ப்ரமாத:—வாஸ்தவமாய் கிரகிக்கத்தக்க ஏதையும் விபரீதமாய் கிரகிப்பது.

| | |
|---|---|
| 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 | ஸ்தாவரஜங்கமரூபமான வஸ்துவானது |
| 𑌯𑌤𑍍 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 | எதுண்டோ |
| 𑌤𑌤𑍍 | அது |
| 𑌪𑍃𑌥𑌿𑌵𑍍𑌯𑌾𑌂𑌵𑌾 | மனுஷியலோகத்திலாவது |
| 𑌦𑌿𑌵𑌿 | சுவர்க்கலோகத்தில் |
| 𑌦𑍇𑌵𑍇𑌷𑍁𑌵𑌾 | தேவதைகளிலாவது |
| 𑌪𑍁𑌨𑌃 | பின்னுமெவ்விடத்திலாவது |
| 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 | கிடையாது. |

மாயையி லிருந்துண்டான சத்துவாதி முக்குணங்களால் விடப்பட்ட (குணசம்பந்தமில்லாத) ஸ்தாவரஜங்கமமான வஸ்து எதுண்டோ, அப்படிப்பட்டது மனுஷியலோகத்தில் மனிதர் முதலியவர்களிலாவது சுவர்க்கத்தில் தேவதைகளிலாவது பின்னு மெவ்விடத்திலாவது கிடையாது. (என்றால், சுவர்க்கமும் அதற்குக் கீழ்ப்பட்ட எந்த உலகமும் சத்துவரஜஸ்தமோ குணங்களுடன் கூடினவைகளே.)

(ரா) பிரம்மாதி ஸ்தாவரபரியந்தம் யாவத்தும் முக்குணங்களால் வியாபிக்கப்பட்டவையே.

(மீ,வி) முக்தர்களுக்கு முக்குணசம்பந்தமில்லை யென்பதைக் காண்பிவிக்கும்பொருட்டு, மனுஷிய லோகத்திலும் தேவலோகத்திலும் குணங்கள் சம்பந்தப்படாத ஜீவஜந்துக்களில்லையென்று சொன்னதாகக் கொள்ளவேண்டியது. (௪0)

---

௪௧. 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯𑌵𑌿𑌶𑌾𑌂 𑌶𑍂𑌦𑍍𑌰𑌾𑌣𑌾𑌂 𑌚 𑌪𑌰𑌨𑍍𑌤𑌪।
𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌪𑍍𑌰𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑌾𑌨𑌿 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌪𑍍𑌰𑌭𑌵𑍈𑌰𑍍𑌗𑍁𑌣𑍈𑌃॥

| | |
|---|---|
| 𑌹𑍇 𑌪𑌰𑌨𑍍𑌤𑌪 | ஓ! அர்சுன! |
| 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯𑌵𑌿𑌶𑌾𑌂 | பிராம்மண க்ஷத்திரிய வைசியர்களுக்கும் |
| 𑌶𑍂𑌦𑍍𑌰𑌾𑌣𑌾𑌂𑌚 | சூத்திரர்களுக்கும் |
| 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌪𑍍𑌰𑌭𑌵𑍈𑌃 | சாத்துவிகாதி சுவபாவங்களுக்குக் காரணமாகிய அல்லது பூர்வகரும சேஷத்தினுலுண்டாகிய |
| 𑌗𑍁𑌣𑍈𑌃 | சத்துவாதிகுணங்களால் |
| 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 | கருமங்கள் |
| 𑌪𑍍𑌰𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑌾𑌨𑌿 | தனித்தனியாய் பிரித்துச் சொல்லப்பட்டிருக்கின்றன. |

ஓ! அர்சுன! பிராம்மணர்கள் க்ஷத்திரியர்கள் வைசியர்கள் சூத்திரர்கள் இவர்களுக்கு பூர்வகரும சேஷத்தினு லுண்டான சத்துவாதிகுணங்களால் கருமங்கள் தனித்தனியாய்ப் பிரித்துச் சொல்லப்பட்டிருக்கின்றன.

(ஸ்ரீ) சகலமும் குணத்தினால் சூழப்பட்டவையானால் மோக்ஷமடையும்வழி எப்படி என்னும் பக்ஷத்தில், வருணாசிரமத்திற்குத் தகுந்த கருமங்களைப் பரமேசுவராராதனமாகவே செய்துவந்தால் அந்த பரமேசுவர பிரசாதத்தினால் ஞானமடைந்து அதினால் மோக்ஷமடையலாமென்கிற கீதாசாரமானது இதுமுதல் அத்தியாயம் முடிவுவரை சொல்லப்படுகிறது.

(ஹா) இதில் * பிராம்மணாதி வருணங்களுடைய சுவபாவம் சத்துவாதி குணங்களினால் பகுக்கப்பட்டதாக சொல்லப்பட்டிருக்கிறதல்லவா? அதுவிஷயத்தைப்பற்றி பாஷியக்காரர்களும் வியாக்கியாதாக்களும் சொல்லியபடி அடியில் அட்டவணையாகக் குறிக்கப் படுகிறது. இந்த அட்டவணையை இதின் ச - வது அத்தியாயம், கங - வது சுலோகத்தினடியிலும் காணலாம். அதாவது.

| | | |
|---|---|---|
| பிராமணனுக்கு | (மூ) (ஸ்ரீ) | சத்துவகுணமதிகம். |
| | (ரா) | இராஜஸ்தமோகுணங்களை யடக்கி சத்துவகுணம் தலையெடுத்திருக்கு மாகையால் அவனுடையகருமம் சாத்துவிகமாகவிருக்கும். |
| க்ஷத்திரியனுக்கு | (மூ) (ஸ்ரீ) | சத்துவகுணம் சுவற்பம், இரஜோகுணமதிகம். |
| | (ரா) | சத்துவ தமோகுணங்களையடக்கி இரஜோகுணம் தலையெடுத்திருக்கு மாகையால் அவனுடைய கருமம் இராஜஸமாயிருக்கும். |
| வைசியனுக்கு | (மூ) (ஸ்ரீ) | தமோகுணம் சுவற்பம், இரஜோகுணமதிகம். |
| | (ரா) | சத்துவ ரஜோகுணங்களை யடக்கித் தமோகுணம் சுவற்பம் தலையெடுத்திருக்குமாகையால் அவனுடைய கருமம் சுவற்ப தமோகுண முள்ளதாயிருக்கும். |
| சூத்திரனுக்கு | (மூ) (ஸ்ரீ) | இரஜோகுணம் சுவற்பம், தமோகுணமதிகம். |
| | (ரா) | சத்துவ ரஜோகுணங்களையடக்கித் தமோகுணமதிகமாய்த் தலையெடுத்திருக்குமாகையால் அவனுடைய கருமம் தாமஸமாயிருக்கும். (சக) |

* இந்த பிராமமணாதி வருணங்களின் விவரங்களை மகாபாரதம் ஆதிபர்வம் அத்-அ - ச - ௫0 - முதல் ௫௫ - வரை. பாகவதம் - எ - கக - உ0 - முதல் உச - வரை. இலிங்கபுராணம். அத் - க௫௧ - இவைகளில்காண்க.

௪௨. ஶமோ தமஸ்தப: ஶௌசம் க்ஷாந்திரார்ஜவமேவ ச।
ஜ்ஞாநம் விஜ்ஞாநமாஸ்திக்யம் ப்ரஹ்மகர்ம ஸ்வபாவஜம்॥ *

| | |
|---|---|
| ஶம: † | மனதையடக்குதலும் |
| தம: ‡ | வெளியிந்திரியங்களையடக்குதலும் |
| தப: § | மனசு வாக்கு காயங்களால் செய்யப்படும் தபசும் |
| ஶௌசம் ¶ | மனச்சரீரசுத்தியும் |
| க்ஷாந்தி: ‖ | பொறுமையும் |
| ஆர்ஜவமேவ + | நேர்மையும் |
| ஜ்ஞாநம் ÷ | சாஸ்திரஞானமும் |
| விஜ்ஞாநம் $ | அனுபவஞானமும் |
| ஆஸ்திக்யம் × | வேதத்தில்நம்பிக்கையும் |

* (ஸ்வா) இந்த - ௪௨ - ௪௩ - ௪௪ - சுலோகங்களை மஹாஸம்ஹிதாமதுரா கண்டம் அத் - ௧௨ - ௬ - ௫ - ௯ - ௭ - இதில் கண்டசமதமாதி விவரம் சாண்டில் யோபநிஷத். தெரிசனோபநிஷத் இரண்டாவது கண்டம். பாகவதம் - ௧௧ - ௧௫ - ௧௯ - ௧௭ - பிரகத் நாரதீயபுராணம் - அத் - ௨௩ - கருடபுராணம் அத் - ௪௯ - இவைகளில் காண்க.

† (ஸ்ரீ,வி) பகவந்நிஷ்டை. (ரா) வெளியிந்திரியங்களை யடக்குதல்.

‡ (ஸ்ரீ,வி) இந்திரியங்களை யடக்குதல். (ரா) அந்தக்கரண மடக்குதல்.

§ (ரா) போகங்களையடக்கி சாஸ்திரோக்தமான விதமாய் தேகத்தை வருத்துவது. (ஸ்வா) இதின் அத் - ௯ - ௬ - ௪௧ - பார்க்க.

¶ (ரா) சாஸ்திரீயமான கருமயோக்கியதை.

‖ (ரா) பிறனால் துன்பம் செய்யப்பட்டபோதிலும் விகாரமடையாமை.

+ (ரா) மனதிலுள்ளபடி வெளியிலும் நடப்பது. (ஸ்ரீ,வி) மனது வாக்கு தேகம் இவைகளுடைய செய்கை ஒரேவிதமாயிருப்பது.

÷ (ரா) பராபர தத்துவஞானம். (ஸ்ரீ,வி) சாதாரண வஸ்துஞானம்.

$ (ரா) பகவானிடத்திலுள்ள அசாதாரண விசேஷங்களை யறிவது. (ஸ்ரீ,வி) வஸ்துக்களுடைய விசேஷஞானம்.

× (ஸ்ரீ) பரலோகமுண்டென்கிற நிச்சயம் (ரா) புருஷோத்தமனான வாசுதேவன் பரபிரம்மம். அவர் சகல தோஷமற்றவர்; சுவபாவமாயும் பூர்ணமாயும் அதிசயமாயுமிருக்கிற ஞானம் சக்தி முதலிய அநந்த கல்யாண குணங்களுடையவர்; முக்கியமாய் வேதாந்த சாஸ்திரங்களால் அறியத்தகுந்தவர்; ஜகத்திற்கு முக்கிய காரணமானவர்; சகல ஜகத்திற்கும் ஆதாரமானவர்; சகல ஜகத்திற்கும் நியாமகர்; இப்படிப்பட்ட பகவானுடைய ஆராதனைக்காக, சகலமான வேதோக்த கருமங்களையும் செய்யும்படியாய் வேதத்தில் விதிக்கப்பட்டிருக்கிறது; அப்படிப்பட்ட கருமங்களால் ஆராதிக்கப்பட்ட பகவானே தருமார்த்த காம மோக்ஷபலன்களைக் கொடுப்பவர்; என்கிற சகல வேதாந்தார்த்தத்திலும் நம்பிக்கை கொள்வது. அத் - ௮௩

| | |
|---|---|
| ஸ்வபாவஜம் | சுவபாவத்தினுலுண்டான |
| ப்ராஹ்மகர்ம* | பிராமணருடைய கருமங்களா யிருக்கின்றன. |

மனதையும் வெளியிந்திரியங்களையு மடக்குதலும் தபசும் மனோ தேகசுத்தியும் பொறுமையும் நேர்மையும் சாஸ்திரஞானமும் அனுபவ ஞானமும் வேதத்தில் நம்பிக்கையும் சுவபாவத்தினுலுண்டான பிராம் மணருடைய கருமங்களா யிருக்கின்றன. (சஉ)

---

சங. ஶௌர்யம் தேஜோ த்⁴ருதிர்தா³க்ஷ்யம் யுத்³தே⁴ சாப்யபலாயநம்।
தா³நமீஶ்வரபா⁴வஶ்ச க்ஷாத்ரம் கர்ம ஸ்வபா⁴வஜம்॥

| | |
|---|---|
| ஶௌர்யம்† | பராக்கிரமம் அல்லது வீரத்தன்மையும் |
| தேஜ:‡ | பிரதாபம் அலலது கீர்த்தியும் |
| த்⁴ருதி:§ | தைரியமும் |
| தா³க்ஷ்யம்¶ | சாதுரியம் அல்லது சாமர்த்தியமும் |
| யுத்³தே⁴ | யுத்தத்தில் |
| அபலாயநம்ச | புறங்கொடுத்தோடாமையும் |
| தா³நம்‖ | கொடையும் |
| ஈஶ்வரபா⁴வ:$ | செங்கோல் செலுத்துகிற அல்லது ஆளுகிற சக்தியும் |
| ஸ்வபா⁴வஜம் | சுவபாவத்தினுலுண்டான |
| க்ஷாத்ரம் கர்ம | க்ஷத்திரியருடைய கருமமாயிருக்கிறது. |

---

ரு - சு - உக, அத்-எ - சு - எ, அத் - க0 - சு - ௲அ, அத்-கரு - சு - கரு, அத் - கஅ- சு - சசு, இவைகளைப் பார்க்க. (ஸ்ரீ,வி) தருமம் முதலியவைகளால் பிரயோஜன முண்டென்கிற நம்பிக்கை.

* (ஸ்ரீ) ப்ராஹ்மகர்ம என்றுபாடம். பிராமணன் செய்யவேண்டிய கருமங்க ளென்று அர்த்தம்.

† (ரா) யுத்தத்தில் பயமின்றி சத்துருக்கள் பேரில் பிரவேசிக்கிற சாமர்த் தியம். (ஸ்ரீ,வி) பயப்படாமலிருப்பது.

‡ (ரா) பிறரால் தான்அபஜயப்படுத்தப்படாமலிருத்தல். (ஸ்ரீ,வி) தேககாந்தி.

§ (ரா) எத்தனித்த காரியத்தில் தடையுண்டானுலும் அதை நிவர்த்தித்து, காரியத்தை முடிக்கும் வல்லமை.

¶ (ஶம்) சமயத்தில் மோகமடையாமல் உடனே செய்வது. (ரா) சகல காரி யங்களையும் தானே நிருவகிக்கிற சாமர்த்தியம். (ஸ்ரீ,வி) சாமர்த்தியம்.

‖ (ரா) தன்னுடையவும் நியாயமாய் சம்பாதித்தவையுமான சொத்துக்களை தருமத்திற்குக் கொடுப்பது. (ஸ்ரீ,வி) சத்பாத்திரத்தில் கொடுப்பது.

$ (ஸ்ரீ,வி) தண்டனுதி கருத்திருத்துவம்.

பராக்கிரமம் கீர்த்தி தைரியம் சாமர்த்தியம் யுத்தத்தில் பின்வாங்காமை தானம்கொடுப்பது செங்கோல்செலுத்துகிற சக்தி இவைகள் க்ஷத்திரியருக்கு சுவபாவமாயுள்ள கருமங்களா யிருக்கின்றன. (௪௩)

---

௪௪. க்ருஷிகோரக்ஷ்யவாணிஜ்யம் வைச்யகர்ம ஸ்வபாவஜம்|
பரிசர்யாத்மகம் கர்ம சூத்ரஸ்யாபி ஸ்வபாவஜம்||

| | |
|---|---|
| க்ருஷிகோரக்ஷ்யவாணிஜ்யம் | பயிரிடுவதும் மாடுகளை சம்ரக்ஷணை செய்வதும் வியாபாரம் செய்வதும் |
| ஸ்வபாவஜம் | சுவபாவத்தினுலுண்டான |
| வைச்யகர்ம* | வைசியகருமமாயிருக்கிறது |
| பரிசர்யாத்மகம் | மற்றமூன்று வருணத்தாருக் கூழியஞ்செய்வது |
| சூத்ரஸ்யாபி | சூத்திரனுக்கு |
| ஸ்வபாவஜம் | சுவபாவமாயுண்டான |
| கர்ம | கருமமாயிருக்கிறது. |

பயிரிடுவதும் மாடுகளை இரக்ஷிக்கிறதும் வியாபாரம் செய்வதும் வைசியருக்கு சுவபாவத்தினுலுண்டான கருமங்களா யிருக்கின்றன. மற்ற மூன்றுவருணத்தாருக்கூழியம் செய்வது சூத்திரருக்குச் சுவபாவமாயுண்டான கருமமாயிருக்கிறது.

(ரா) பிரம்ம க்ஷத்திரியவைசியர்களுக்கு யக்ஞாதிகள் சுவபாவமான கருமங்களென்று வேதத்தில் சொல்லியிருக்கையில் அவைகளையும், பிராமணர்களுக்குச் சொல்லியிருக்கிற சமம் தமம் தபசு முதலியன க்ஷத்திரிய வைசியர்களுக்கு மிருக்கவேண்டியவைகளா யிருக்கையில் அவைகளையும் ஏன் சொல்லவில்லை யென்றுலோ, அவரவர்களுக்கு சுவபாவமான கருமங்கள்மட்டும் இவ்விடத்தில் சொல்லப்பட்டன, மற்றவைகள் விலக்கப்படவில்லை. (௪௪)

---

௪௫. ஸ்வே ஸ்வே கர்மண்யபிரத: ஸம்ஸித்திம் லபதே நர:|
ஸ்வகர்மநிரத: ஸித்திம் யதா விந்ததி தச்ச்ருணு||

| | |
|---|---|
| ஸ்வே ஸ்வே கர்மணி | அவனவனுக்கு விதித்திருக்கிற கருமத்தில் |
| அபிரத:† | சிரத்தையை உடைய |

---

* (ஸ்ரீ) வைச்யகர்ம - என்றுபாடம். அர்த்தமொன்றே.

† (ஸ்ரீ,வி) கருமத்தை யனுஷ்டித்து பகவதாராதனை செய்கிற.

| | |
|---|---|
| நர: | மனிதன் |
| ஸம்ஸித்திம்* | ஞானயோக்கியதையை |
| லபதே | அடைகிறான் |
| ஸ்வகர்மநிரத: | தன்னுடைய கருமானுஷ்டானத்திலேயிருப்பவன் |
| யதா | எவ்விதமாய் |
| ஸித்திம் | ஞானயோக்கியதையை |
| விந்ததி | அடைவானோ |
| தத் | அதை |
| ச்ருணு | கேள். |

அந்தந்த வருணத்தாருக்கு விதித்திருக்கிற கருமத்தில் சிரத்தையையுடைய மனிதன் ஞானயோக்கியதையை யடைகிறான். தன்னுடைய கருமானுஷ்டானத்திலே யிருப்பவன் எவ்விதமாய் ஞானயோக்கியதையை யடைவானோ அதை (சொல்லுகிறேன்) க்கேள்.

(ஸ்மா) ஸர்வேஷாமாச்ரமாணாஞ்ச ஸ்வதர்மஃ ச்ரேயஸாம் வரம் । ஸ்வதர்மத்யாகிநோ நாநரகே பததி மூடதிய: ॥ ௪௭ ॥ — எல்லா வருணத்திலுமுள்ள ஆசிரமிகளுக்கும் சுவதருமந்தான் உத்தமமான சிரேயஸ்ஸாயிருக்கிறது. சுவதர்மத்தை செய்யாமல் விட்டுவிடுகிற மூடபுத்தியுள்ளவர்கள் நரகத்தில் தள்ளப்படுகிறார்கள். பிரும்ம வைவர்த்த புராணம் உத்திரபாகம் - அத் - ௫௧. (௪௫)

---

௪௬. யத: ப்ரவ்ருத்திர்பூதாநாம் யேந ஸர்வமிதம் ததம் ।
ஸ்வகர்மணா தமப்யர்ச்ய ஸித்திம் விந்ததி மாநவ: ॥

| | |
|---|---|
| யத: | எந்த அந்தரியாமியான ஈசுவரனிடத்திலிருந்து |
| பூதாநாம் | பிராணிகளுக்கு |
| ப்ரவ்ருத்தி:† | பிரவிருத்தியுண்டாகிறதோ |
| யேந | எந்த ஈசுவரனால் |
| இதம் ஸர்வம் | இந்த சகலப்பிரபஞ்சமும் |
| ததம் | வியாபிக்கப்பட்டிருக்கிறதோ |

---

* (ஸ்ரீ) கருமானுஷ்டானத்திலே அகசிநிவிருத்தியாய் தேகேந்திரியங்களுக்கு ஞானநிஷ்டாயோக்கியதையை. (ரா) பரமபதப்பிராப்தியை, (மீ,வி) ஞானத்தின்மூலமாய் முக்தியை.

† (ஸ்ரீ) (ரா) உற்பத்தி அல்லது சேஷ்டை.

| | |
|---|---|
| தம் | அவனை |
| மாநவ꞉ | மனிதன் |
| ஸ்வகர்மணா* | தனக்குரியகருமத்தினுலே |
| அப்யர்ச்ய | ஆராதித்து |
| ஸித்தி꞉† | ஞானயோக்கியதையை |
| விந்ததி | அடைகிறுன். |

எந்த அந்தரியாமியான ஈசுவரனிடத்திலிருந்து பிராணிகளுக்குப் பிரவிருத்தி யுண்டாகிறதோ, எந்த ஈசுவரனுல் இந்த சகலப்பிரபஞ்சமும் வியாபிக்கப்பட்டிருக்கிறதோ, அந்த ஈசுவரனை மனிதன் தனக்குரிய கருமத்தினு லாராதித்து ஞானயோக்கியதையை யடைகிறுன்.

(ஸ்வா) பிராணிகளுக்கு உற்பத்திமுதலியன ஈசுவரனு லென்பதற்கும் ஈசுவரன் சர்வவியாபி என்பதற்கும் அத் - எ - சு - சு - எ - அத் - க - சு - கO - அத் - கO - சு - அ. இவை பிரமாணமா யிருக்கின்றன. (சசு)

---

ச௭. ச்ரேயாந்ஸ்வதர்மோவிகுண꞉ பரதர்மாத்ஸ்வநுஷ்டிதாத்।‡
ஸ்வபாவநியதம்கர்ம குர்வந்நாப்நோதிகில்பிஷம்॥

| | |
|---|---|
| ஸ்வதர்ம꞉ | தன்னுடைய தருமமானது |
| விகுண꞉ | குணமற்ற அல்லது கிரமப்படி செய்யப் படாததானபோதிலும் |
| ஸ்வநுஷ்டிதாத் | கிரமமாய் அநுஷ்டிக்கப்பட்ட |
| பரதர்மாத் | பிறருடைய தருமத்தைக்காட்டிலும் |
| ச்ரேயாந் | சிரேஷ்டமானது |
| ஸ்வபாவநியதம் | சுவபாவத்தினுலுண்டான |
| கர்ம | கருமத்தை |
| குர்வந் | செய்கிறவன் |
| கில்பிஷம் | பாபத்தை |
| நாப்நோதி | அடையமாட்டான். |

தன்னுடைய தருமமானது (தன்வருணத்திற்குறியதென்று விதிக்கப்பட்டிருக்கிற கருமமானது) குணமற்றதென்று காணப்பட்டபோதிலும் கிரமமாய் அனுஷ்டிக்கப்படும் பிறருடைய (அங்கியவருணத்தா

* (ஸ்ரீ) அந்தந்த வருணுசிரமத்திற்குரிய வேதோக்த கருமத்தினுல். (ஸ்ரீ,வி) சமதமாதிகளுடன் கூடியிருக்கிற கருமத்தினுல்.

† (ரா) பகவானுடைய பரமபதத்தை. (ஸ்ரீ,வி) மோக்ஷத்தை.

‡ (ஸ்வா) ௩ - வது அத்தியாயம். ௩ - ௩௫ பார்க்க.

ருடைய) தருமத்தைக்காட்டிலும் சிரேஷ்டமானது. சுவாபாவிகமான (சுவபாவத்தினுலுண்டான) கருமத்தைச்செய்கிறவன் பாபத்தை யடையமாட்டான். (இதினுல் பிறருடைய தருமத்தை அனுஷ்டித்தவன் சுவ தருமத்தை விட்டதினுலும் பிறர்தருமத்தை யனுஷ்டித்ததினுலு முண்டாகிற பாபத்தை யடைகிருனென்ருகிறது).

(ஶ௦) விஷத்திலுள்ள புழுக்களுக்கு விஷம் எப்படி தோஷமல்லவோ, மற்றபிராணிகளுக்கு விஷம் எப்படிதோஷமாகிறதோ, அப்படிப்போல் பிறர்கருமந்தோஷ ஏதுவானுலும் சுவகருமமப்படியல்ல.

(ஸ்ரீ) க்ஷத்திரியனுன உனக்கு யுத்தம்செய்து கொல்லுவது சுவ தருமமாயும் பிச்சையெடுத்துண்பது பரதருமமாயுமிருக்கிறது, என்பதை அர்சுனனுக்கு பகவான் குறித்துக்காட்டுகிறதாகிறது.

(ஶா) ஹயஶ஼ஃ — கருத்திருத்துவாபிமானத்தை விட்ட புருஷனுல் அவனுடைய தேகேந்திரியங்களினு லனுஷ்டிக்கத் தகுந்ததாயும் ஈசுவராராதனைரூபமாயு மிருக்கிற கருமயோகமானது அனுஷ்டிப்பதற்கு சுலபமானதா யிருக்கிறது. அப்படிப்பட்ட சுவதருமமான கருமயோகமானது, விமுணஂ — குணமற்ற தானுலும், ஸுநுஷிதாசு வாயஶுாசு — இந்திரியங்களை சுவாதீனம் செய்துகொண்ட புருஷனுல் அநுஷ்டிக்கத்தக்கதும் தவறுதல் வரக்கூடியதும் எப்போதாவதொருகாலத்தில் மட்டும் சரியாய் அனுஷ்டிக்கக் கூடியதுமான ஞானயோகமாகிற பரதருமத்தைக் காட்டிலும், ஶ்ரெயாநு — சுலபமாயடையத்தகுந்ததாகையால் சிலாக்கியமானது. ஸஹாவ஭ியதஂகஶ — பிரகிருதி சம்பந்தத்துடனிருக்கிற புருஷனுடைய தேகேந்திரியங்களுடைய செய்கை யாகையால் அவனுடைய பிறப்புடன் உண்டாயிருக்கிறதாக முன்சொன்ன சுவதரும மாகிற கரும யோகத்தை, கூவஶு—செய்கிறவன், கில்ஷஂ—சமுசாரபெந்தத்தை, நாவொதி— அடைகிறதில்லை. இதின் தாத்பரிய மென்னவென்ருல், கருமயோகமானது சுலபமானது. ஏனென்ருல், எப்போது தேகமுண்டாச்சுதோ, அதுமுதல் கருமஞ்செய்து வழக்கப்பட்ட டிருக்கிறது. இந்திரியங்கள் மனது இவைகளையடக்கிச் செய்யவேண்டியதாகிய ஞானயோகமானது பழக்கமில்லாததினு லதிகப்பிரயாசையாயும் வெகுகாலம் சிரமப்படவேண்டியதாயு மிருக்கிறதினுலே அதைவிட பலனிச்சையு மபிமானமு மில்லாமலும் ஈசுவரார்ப்பண புத்தியாயும் செய்யப்படும் கருமயோகம் சிரேஷ்டமானது. இதினுல் ஞானமும் ஞானத்தினுல் மோக்ஷமும் சீக்கிரமா யுண்டாகுமென்பதே. (சஎ)

---

சஅ. ஸஹஜஂகஶுகௌஷெய ஸஷொஷஶவி நதுஜெசு।
ஸவஶாரஂஹாஹிஷொஷெண யுஷெநாநிரிவாவூதாஃ॥

| | |
|---|---|
| கௌந்தேய | ஓ! குந்திபுத்திரா! |
| ஸஹஜம் | சுவபாவத்தினாலுண்டான அல்லது உடன் பிறந்த |
| கர்ம | கருமத்தை |
| ஸதோஷமபி | தோஷத்தோடு கூடியதானாலும் |
| ந த்யஜேத் | விட்டுவிடக் கூடாது |
| ஹி | ஏனென்றால் |
| தூமேந | புகையால் |
| அக்நிரிவ | அக்கினியைப்போல் |
| ஸர்வாரம்பா: | சகல கருமங்களும் |
| தோஷேண | தோஷத்தினாலே |
| ஆவ்ருதா: | சூழப்பட்டிருக்கின்றன. |

ஓ! குந்தி புத்திரா! சுவபாவத்தினா லுண்டானகருமத்தை, தோஷத்தோடு கூடியதானாலும் விட்டுவிடக்கூடாது. ஏனென்றால், அக்கினி யெப்படி புகையினால் மூடப்பட்டிருக்குமோ அப்படிப்போல, சகல கருமங்களும் தோஷத்தினால் சூழப்பட்டிருக்கின்றன. (புகையிருக்கிற தென்கிற காரணத்தினால், அக்கினியில் ஹோமஞ் செய்வது முதலிய காரியங்களை எப்படி விட்டுவிடுகிற தில்லையோ அப்படிப் போல, தோஷமுள்ள தென்கிறதினால் கருமத்தை விட்டு விடக் கூடாது. கருமம் செய்து பலனை இச்சிக்காமல் ஈசுவரார்ப்பணம் செய்துவந்தால், சித்த சுத்தி துவாரா மோக்ஷமடையலாம் என்பது தாத்பரியம்.)

(ஸம்) ஸஹஜம் = தன்னுடன் கூடவேஜனித்தது, ஸதோஷமபி = திரிகுணாத் மகமானதால் தோஷத்தோடு கூடியதானாலும், ஸர்வாரம்பா: = சுவகரும பரகருமங்களெல்லாம், தோஷேண = தோஷத்தினால் மூட (வியாபிக்க) ப்பட்டிருக்கின்றன. புகையினா லக்கினி மூடப்பட் டிருப்பது போல. தோஷத்தோடு கூடிய கருமத்தை ஏன் அனுஷ்டிக்கவேண்டு மென்றாலோ, கருமத்தை விட்டிருக்க மனுஷியன் சக்தனல்ல. ஒரு க்ஷணங்கூட கருமம் செய்யாமலிருக்க ஒருவனாலும் முடியா தென்பது முன்னாலேயே சொல்லப்பட் டிருக்கிறது. கருமம் தோஷமுள்ளதா யிருக்கையில் மற்றொருவனுடைய கருமத்தை யநுஷ்டிப்பதினால் பாதகமென்ன என்றாலோ, பிறருடைய கருமத்தை யனுஷ்டிப்பதினா லதிக பாதக முண்டென்று முன்னமே சொல்லப் பட்டிருக்கிறது. பரமார்த்த சந்நியாசியாகிற பிரம்ம ஞானிக்கு கருமங்களை விட்டுவிடுவது கூடுமானாலும், மற்றவர்கள் கருமங்களை விடக் கூடாது.

(ரா) ஸதோஷமபி — துக்கத்தைக் கொடுப்பதானாலும், ஸஹஜம் — கருமம் சுலபமாய்ச் செய்யத்தகுந்ததானதினால், ஞானமார்க்கத்திற்கு யோக்கியனானாலும் கருமத்தைச் செய்யாமல் விடக்கூடாது. ஸர்வாரம்பா: — ஞானாரம்ப கருமாரம்பங்கள், தோஷேண — துக்கத்தோடு, ஆவ்ருதா: — கூடியிருக்கின்றன. அக்கினியுடன் புகை பிறந்திருப்பதுபோல, கருமம் ஞானம் இவைகளும் துக்கத்துடன் பிறந்திருக்கின்றனவானாலும், கருமயோகம் சுலபமானதென்றும், ஞான யோகம் கடினமானதென்றும் தாத்பரியம். (௪௮)

---

௪௯. அஸக்தபுத்தி: ஸர்வத்ர ஜிதாத்மா விகதஸ்ப்ருஹ:।
நைஷ்கர்ம்யஸித்திம் பரமாம் ஸந்ந்யாஸேநாதிகச்சதி॥

| | |
|---|---|
| ஸர்வத்ர | சகலவஸ்துக்களிலேயும் |
| அஸக்தபுத்தி: | அபிமான மற்றிருக்கிற புத்தியையுடையவும் |
| ஜிதாத்மா | மனதை ஜயித்த அல்லது அகங்காரமற்றவும் |
| விகதஸ்ப்ருஹ: | பலாபேக்ஷையில்லாதவுமான புருஷனானவன் |
| ஸந்ந்யாஸேந | பலஸங்கத் தியாகமாகிற சந்நியாசத்தினாலே |
| பரமாம் | உத்தமமான |
| நைஷ்கர்ம்யஸித்திம் | சருவகருமநிவிருத்தியாகிய சித்தசுத்தியை |
| அதிகச்சதி | அடைகிறான். |

சகலவஸ்துக்களிலேயும் அபிமானமற்றிருக்கிற புத்தியையுடையவனும் மனதை ஜயித்தவனும் பலாபேக்ஷையில்லாதவனுமான புருஷனானவன் பலனையும் அபிமானத்தையும் விட்டுவிடுவதாகிய சந்நியாஸத்தினாலே உத்தமமான சருவகருமநிவிருத்தியாகிய சித்தசுத்தியையடைகிறான்.

(௯௦) ஸர்வத்ர — புத்திரமித்திர தனகனகாதி வஸ்துக்களிலே, அஸக்தபுத்தி: — தன்னுடையதென்கிற அபிமானத்தை விட்ட புத்தியையுடையவும், ஜிதாத்மா — மனதை ஜயித்தவும், விகதஸ்ப்ருஹ: — புத்திராதிகளில் ஆசையற்றவுமான ஆத்மஞானியானவன், பரமாம் — சிரேஷ்டமான, நைஷ்கர்ம்யஸித்திம் — ஞானநிஷ்டையை அல்லது சத்தியோமுக்தியை (தக்ஷணமே பிரம்ம சுவரூபமாவதை,) ஸந்ந்யாஸேந — செம்மையாய் அடைந்திருக்கிற பிரம்ம ஞானத்தினாலே அல்லது பிரம்ம

ஞானமுண்டாய் சகல கருமத்தையும் விட்டதினாலே, 𑌅𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿= அடைகிறான்.

(𑌰𑌾) 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰=கருமபலன் முதலியவைகளில், 𑌅𑌸𑌕𑍍𑌤𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃= அபிமானமற்றிருக்கிற புத்தியையுடையவும், 𑌜𑌿𑌤𑌾𑌤𑍍𑌮𑌾= மனதை ஜயித்தவும், 𑌵𑌿𑌗𑌤𑌸𑍍𑌪𑍃𑌹𑌃= தான்கருத்தாவல்ல ஈசுவரன் சர்வகருத்தாவென்று அறிந்து கருத்திருத்துவாபிமானத்தை விட்டவும், 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑍇𑌨= அபிமானபலத்தியாகங்களான சந்நியாசத்தோடு கூடினவும் புருஷன் மேல்கண்டபடி ஈசுவராராதனைரூபமான கருமங்களைச்செய்து வந்தால், 𑌪𑌰𑌮𑌾𑌂= உத்தமமான, 𑌨𑍈𑌷𑍍𑌕𑌰𑍍𑌮𑍍𑌯𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂= ஞானயோகத்திற்கு பலனான சகலகருமங்களுமற்ற தியானநிஷ்டையை, 𑌅𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿= அடைகிறான்.

(ஸ்ரீ,வி) 𑌵𑌿𑌗𑌤𑌸𑍍𑌪𑍃𑌹𑌃= இகபரசுகத்தில் ஆசையை விட்டவன், 𑌪𑌰𑌮𑌾𑌂 =பூர்ணமான, 𑌨𑍈𑌷𑍍𑌕𑌰𑍍𑌮𑍍𑌯𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂=𑌨𑍈𑌷𑍍𑌕𑌰𑍍𑌮𑍍𑌯=மோக்ஷத்திற்குபயோகமான, 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂=பிராரப்தம் தவிர மற்ற அநிஷ்ட கருமநாசத்தை, 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑍇𑌨=காம்மியகருமத் தியாகத்தினாலே அல்லது ஈசுவரார்ப்பணமாய்ச் செய்வதினாலே, 𑌅𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿=அடைகிறான். (௪௯)

---

௫௦. 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍋 𑌯𑌥𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌤𑌥𑌾𑌽𑌽𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌨𑌿𑌬𑍋𑌧 𑌮𑍇।
𑌸𑌮𑌾𑌸𑍇𑌨𑍈𑌵 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌨𑌿𑌷𑍍𑌠𑌾 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯 𑌯𑌾 𑌪𑌰𑌾॥

| | |
|---|---|
| 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 | ஓ! குந்திபுத்திரா! |
| 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯 | பிரம்மஞானத்தினுடைய |
| 𑌪𑌰𑌾 𑌨𑌿𑌷𑍍𑌠𑌾 | கடைசிமுடிவானது |
| 𑌯𑌾 | எதுவோ |
| 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂* | பிரம்மஞானசித்தியை |
| 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌃 | அடைந்தவன் |
| 𑌯𑌥𑌾† | எவ்விதமாய் |

---

* (𑌶𑌂) நிஷ்காம கருமத்தினாலே ஈசுவரனை ஆராதித்து தேகேந்திரியங்களுக்கு ஈசுவரப் பிரசாதத்தினா லுண்டான ஞானநிஷ்டா யோக்கியதையை. (𑌰𑌾) சரீரமிருக்கிறவரையில் அனுஷ்டிக்கப்பட்ட கருமயோகத்தினால் அடைந்தத் தியான சக்தியை.

† (𑌶𑌂) எவ்வித ஞானநிஷ்டையினாலே, (𑌰𑌾) எவ்விதமா யிருந்துகொண்டு.

| | |
|---|---|
| ப்ரஹ்ம* | பிரம்மத்தை |
| ஆப்நோதி | அடைவானோ |
| ததா† | அந்தவிதத்தை |
| ஸமாஸேநைவ | சம்க்ஷேபமாக |
| மே | என்னிடத்திலிருந்து |
| நிபோத | அறிந்துகொள். |

ஓ! குந்திபுத்திரா! பிரம்மஞானத்தினுடைய கடைசிமுடிவானது எதுவோ, பிரம்மஞான சித்தியை யடைந்தவன் எவ்விதமாய் பிரம்மத்தை யடைவானோ, அந்த விதத்தைச் சுருக்கமாய் என்னிடத்தி லிருந்து தெரிந்துகொள்.

(ரா) யா—எந்த பிரம்மமானது, ஜ்ஞாநஸ்ய பரா நிஷ்டா — தியானத்திற் குத்தமமான விஷயமானதோ.

(ஷ்ரா) இந்த சுலோகத்திலுள்ள "ஜ்ஞாநஸ்ய பரா நிஷ்டா — ஞானத்தினுடைய கடைசிமுடிவானது" என்கிற பதங்களுடைய அர்த்தமானது (ஸ) பாஷியத்தில் பூர்ணமாய் விசாரிக்கப்பட் டிருக்கிறது. அதினால் அத்துவைதசித்தாந்தம் வெளியிடப்படுகிறதாகையால் அந்த பாஷியக்காரருடைய தாத்பரியத்தை யனுசரித்து விரிவாயும் பலதிருஷ்டாந்தங்கள் பிரமாணங்களுடனும் அடியிலெழுதப்படுகிறது. அதாவது - இன்னவஸ்து இன்னவிதமா யிருக்கிறதென்கிற அறிவுஞானமென்றும் அந்தஞானத்தினா லறிந்ததெதுவோ அந்த வஸ்துவைத் தவிர இதரவஸ்துக்களைச் சிந்திக்காமல் அறிந்த வஸ்துவையே யெப்பவும் தியானிப்பது நிஷ்டை என்றும் சொல்லப்படும். திருஷ்டாந்தம் — கெடியாரம் என்பது இன்னதென்றறியாதவனிடத்தில் கெடியாரம் என்று சொன்னதினால் அதின்ரூபம் உபயோகம் முதலியன இப்படிப்பட்டவை யென்பதை அவன் அறியமாட்டான். அந்தரூப மிப்படிப்பட்டது, அதற்குள் சிலசக்கிர முதலியவைகளுண்டு, அவைகளின் உதவியால் கால அளவை காட்டுகிறது என்பது முதலிய விவரங்கள் அவனுக்குச் சொல்லப்பட்டால் அதினால் அப்படிக் கேட்டவனுக்கு கெடியாரத்தின்ரூபம் அதின் உபயோகம் இந்தவிஷயங்களிலுண்டாகும் அறிவுதான் ஞானம். அந்த அறிவுக்கு எட்டினவரையில் அந்தக் கெடியாரத்தைச் சிந்திப்பது நிஷ்டை. இது விஷயஞானமென்று சொல்லப்படுகிறது. அத்துவைத சித்தாந்தத்தில் பிர்ம்மஞானமானது சகுணபிர்ம்மஞானம் நிர்குண பிர்ம்மஞானமென

* (ஸ்ரீ,வி) இலக்ஷுமியை.

† (ஸ) பிரம்மஞானமடைவது எவ்விதமானதோ, பிரம்மத்தை யடைதல் எப்படிப்பட்டதோ, அந்த விதத்தை.

இரண்டு வகையாய்ச் சொல்லப்படுகிறது. சகுண பிர்ம்மஞானமும் விஷயஞானமே யானாலும் மற்றப் பிரபஞ்சஞானத்தைவிட சர்வசிரேஷ்டமானது. சகுணபிர்ம்ம மெதுவெனில், வியவகார தெசையில் உபாசகர்களுடைய அநுக்கிரகார்த்தமாய் மாயையில் பிரதிபலித்த பிர்ம்ம சைதன்னியமே. அதுதான் பிரும்மா விஷ்ணு ருத்திராதி ரூபங்களாய் வியவகரிக்கப்படுகிற ஈசுவரர்கள். இவர்கள் மாயோபாதிகர்களானாலும் மாயைக் குட்பட்டவர்களல்ல. மாயையை சுவாதீனத்தில் வைத்துக்கொண்டு அதின்மூலமாய் சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாராதி காரியங்களையும் துஷ்டநிக்கிரஹ சிஷ்டபரிபாலனார்த்தம் இராம கிருஷ்ணாதி அவதாரங்களையும் செய்கிற அநந்தகல்லியாண குணசக்தி சாமர்த்தியாதிகளை யுடையவர்கள். மலினசத்துவ மாயையாகிற அவித்தையில் பிரதிபலித்த பிர்ம்ம சைதன்னியமே ஜீவர்களானார்கள். இவர்களுக்கு ஈசுவராதிகளுக்குள்ள சக்தி சாமர்த்தியாதிகளில்லை. கிஞ்சிக்ஞர்களாயும் அவித்தைக்குட்பட்டவர்களாயு மிருக்கிறார்கள். இப்படிப்பட்ட ஜீவர்கள் ஈசுவரர்களை உபாசித்தே அவர்களுடைய அநுக்கிரஹத்தினால் சித்தசுத்தியை யடைந்து பிறகு நிர்குண பிர்ம்மஞானத்தையு மடையவேண்டும். ஸகுண பிர்ம்மஞான மெதுவெனில், அந்த ஈசுவரர்களில் யாரைக்குறித்து உபாசனை செய்யும்படி குருவினால் உபதேசிக்கப்படுகிறதோ அவரைக்குறித்து சுருதி ஸ்மிருதி புராணாதிகளில் சொல்லப்பட்டிருக்கிற விதமான ரூபம் சக்திமுதலியவைகளின்னதென்று அறிவதுதான். அப்படி அறிந்தவிதமாகவே பக்தி விசுவாசத்துடன் இடைவிடாமல் சிந்திப்பதே நிஷ்டையாகிறது. இந்த ஸகுண பிர்ம்மஞான நிஷ்டையைக்குறித்து புராணாதிகளில் பலவிடங்களில் சொல்லப்பட்டிருக்கின்றது. விஷ்ணுபுராணம் சு-வது அம்சம் சு-வது, எ-வது அத்தியாயங்களிலுள்ள கேசித்துவஜ காண்டிக்கியஸம்வாதத்தில் இது மிகவும் தெளிவாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. * நிர்குண பிர்ம்மமாவ தெதுவெனில், சகலப் பிரபஞ்சத்திற்கும் அதீதமாயும் பிரபஞ்சத்தி னெல்லாத் தோற்றங்களையும், "நேதி-நேதி = இதல்ல இதல்ல" என்று தள்ளிப்பார்க்கையில் மிச்சமானதாயும் இரண்டாவதற்ற வொன்றாயும் முக்காலத்திலும் ஓரேவிதமாயுள்ளதாயும் சகலப் பிரபஞ்சத்திற்கும் ஆதாரமாயும் எங்கும வியாபித்ததாயும் மனோவாக்குகளுக் கெட்டாததாயும் சகலத்தையும் பிரகாசிப்பிக்கிற சுவப்பிரகாசமாயும் சச்சிதானந்த கனமாயும் ஞானமேசுவ ரூபமாயுமுள்ள வஸ்துவே. இந்தவிதமாய்ப் பிர்ம்மத்தை யறிவதுதான் நிர்குணபிர்மமஞானம். எபபோதும் அந்த அறிவுடனிருப்பதுதான் நிஷ்டை. இந்த நிர்குண பிர்ம்மஞான நிஷ்டையை யுடையவனெவனோ அவன் ஜீவன்

* விஷ்ணு புராணமானது - பிர்ம்மஸ்ரீ - ஸ்ரீநிவாச ராகவாசாரியார் அவர்களால் தமிழ் பாஷையில் ஸர்த்தியாய் மொழிபெயர்க்கப்பட்டு அச்சிடப்பட்டிருப்பதால் அதை நான் இதில் சேர்க்காமல் விட்டுவிட்டேன்.

முக்தனென்று சொல்லப்படுகிருன். அவனுக்கு இந்ததேகம் போன உடனே மோக்ஷமே. இவன் விதேகமுக்தனென்று சொல்லப்படுகிருன். அதாவது - ஸ்தூல சூக்ஷ்மகாரண தேகங்களில்லாதவனுய் பிர்ம்மத்துடன் கலந்துபோகிருன். அதெப்படிப்போலென்ருல், மகாகாசத்தில் கெடாகாசமும் ஜலத்தில் ஜலமும் பாலில் பாலும் நெய்யில் நெய்யும் கலந்தால் வேற்றுமையற்றுப் போவதுபோ லென்றறியத்தக்கது. பிர்ம்மமே ஜீவேசுவரர்களென்ருல், சம்சாரமும் சுகதுக்காதிகளும் அந்தப் பிரம்மத்திற்கே யல்லவா சொல்லவேண்டும்? அப்படிப் பிரம்மத்திற்கு சமுசாராதிகள் சொல்லக்கூடாதல்லவா? ஆகையினுலே ஜீவேசுவரர்கள் பிர்ம்மத்தைத்தவிர அந்நியர்களென்றுதான் சொல்லவேண்டியதா யிருக்கிறதென்ருலோ, அப்படிச்சொல்வது சுருதிவாக்கியங்களுக்கும் அந்த சுருதிவாக்கியங்களை ஆதாரமாகக்கொண்டு அத்துவைத சித்தாந்தத்தை ஸ்தாபித்த மகாத்துமாக்களாகிய கௌடபிர்ம்மாநந்தர், சங்கராசாரியார் முதலானவர்களுடைய வாக்கியங்களுக்கும் விரோதமாகும். அக்ஞானமுள்ளவரையில் பிரபஞ்சமும் ஜீவேசுராதி பேதங்களும் வாஸ்தவம்போல் காணப்படுமேயன்றி ஞானமுண்டானல் சகலபேதமும் பொய்யாய் பிரம்மமொன்றே சத்தியமாய் மிஞ்சும். அதெப்படிப்போலென்ருல், கயிற்றில் பாம்பும் கானலில்ஜலமும் கிளிஞ்சிலில் வெள்ளியும் எப்படிப் பிரமையுள்ளவரையில் வாஸ்தவமாயும் பிரமை நிவிருத்தியானவுடன் தோற்றப்பட்ட பாம்பு முதலியன பொய்யாயும் விடுகின்றனவோ அப்படிப்போல்தான்.

மேலாக சொல்லப்பட்டிருக்கிறபடி எங்கெந்த சுருதிவாக்கியங்கள் ஜீவப்பிரம்மமொன்றென்பதையும் பிரம்மமே ஜீவேசுவரர்களென்பதையும் பிரபஞ்சம் பொய்யென்பதையும் பிரம்மத்தைத்தவிர இரண்டாவது வஸ்துவ்வ யில்லையென்பதையும் விளக்குகின்றனவோ அவைகளில் சில அடியில் உதகரிக்கப்படுகின்றன. அவையாவன:—

ஈஶாவாஸ்யோபநிஷத்.

யஸ்து ஸர்வாணி பூதாந்யாத்மந்யேவாநுபஶ்யதி । ***யஸ்மிந் ஸர்வாணி பூதாநி ஆத்மைவாபூத்விஜாநத: । தத்ர கோ மோஹ: க: ஶோக ஏகத்வமநுபஶ்யத: ॥௭॥ — எவனுனவன் சர்வபூதங்களையும் தன்னுத்மாவாகவே பார்க்கிருனே, ஞானிக்கு சகலபூதங்களும் தானுகவே எந்தக்காலத்திலாய்விட்டதோ அந்தக்காலத்தில் (சகலமும்) ஒன்ருகவே பார்க்கிற அவனுக்கு மோகமேது? சோகமேது?—ஈசாவாஸியோபநிஷத்.

கடவல்ல்யுபநிஷத் - சதுர்தவல்லீ.

யதேவேஹ ததமுத்ர யதமுத்ர ததந்விஹ । ம்ருத்யோ: ஸ ம்ருத்யுமாப்நோதி ய இஹ நாநேவ பஶ்யதி ॥௧௦॥ மநஸைவேதமாப்தவ்யம் நேஹ நா

நாஸ்தி கிஞ்சந । ம்ருத்யோ: ஸ ம்ருத்யும் கச்சதி ய இஹ நாநேவ பஶ்யதி ॥கக॥ = எது இவ்விடத்திலோ (இந்தப்பிரபஞ்சத்தில் காரியகாரண உபாதியோடு சம்சாரிபோல் விளங்குகிறதோ) அது (பிரம்மம்) தனக்குள்ளேயே (விளங்குகிறது). எது தனக்குள்ளேயோ அது இந்தப் பிரபஞ்சத்தில் (விளங்குகிறது). இவ்விடத்தில் (இந்தப்பிரபஞ்சத்தில்) பலவாக பார்ப்பவன் மரணத்திலிருந்து மரணத்தை யடைகிறான். (மறுபடி மறுபடி பிறப்பிறப்பையடைகிறான்).—கடவல்லியுபநிஷத் நான்காவதுவல்லி ௧௦-௧௧.

பஞ்சமீவல்லீ.

அக்நிர்யதைகோ புவநம் ப்ரவிஷ்டோ ரூபம் ரூபம் ப்ரதிரூபோ பபூவ । ஏகஸ்ததா ஸர்வபூதாந்தராத்மா ரூபம் ரூபம் ப்ரதிரூபோ பஹிஶ்ச ॥௯॥ = உலகத்தில் ஓரே அக்கினியானவன் பலரூபமாய்க் காணப்படுகிறான் (ஓரே அக்கினி பலகட்டைகளில் பிரவேசித்து அந்தந்தக் கட்டைரூபமாய்க் காணப்படுகிறான்). அப்படிப் போல சகலபூதங்களுக்குள்ளு மிருக்கிற ஓரே ஆத்மாவானவன் பலரூபமாய் ஆகாசம்போல் (கெடாகாசம் மடாகாசம் மகாகாசம்போல்) காணப்படுகிறான். மேற்படி ஐந்தாவதுவல்லி.

முண்டகோபநிஷத் ௨-௧-௧.

ததேதத் ஸத்யம் யதா ஸுதீப்தாத் பாவகாத் விஸ்புலிங்கா: ஸஹஸ்ரஶ: ப்ரபவந்தே ஸரூபா: । ததாக்ஷராத் விவிதா: ஸோம்ய பாவா: ப்ரஜாயந்தே தத்ர சைவாபியந்தி ॥ = ஓ! சௌமியா! அது சத்தியமானது. எரிந்துகொண்டிருக்கிற அக்கினியிலிருந்து அதேரூபமாய் அநேக பொறிகள் எப்படி யுண்டாகின்றனவோ அப்படி அக்ஷரத்திலிருந்து பலவிததேகத்தை உபாதியாயுடைய ஜீவர்களுண்டாகிறார்கள். அதினிடத்திலேயே லயமடைகிறார்கள்.—முண்டகோபநிஷத் ௨-௧-௧.

புருஷ ஏவேதம் விஶ்வம் கர்ம தபோ ப்ரஹ்ம பராம்ருதம் । ௧௦ । = இந்தப் பிரபஞ்சமும் கருமமும் தபசும் சிரேஷ்டமான அமிருதமும் புருஷனுகிற பிரம்மமே. மேற்படி ௨-௧-௧௦.

யதா நத்ய: ஸ்யந்தமாநா: ஸமுத்ரே அஸ்தம் கச்சந்தி நாமரூபே விஹாய । ததா வித்வாந் நாமரூபாத் விமுக்த: பராத்பரம் புருஷமுபைதி திவ்யம் । அ । ஸ யோ ஹ வை தத் பரமம் ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி । = பெருகிக்கொண்டிருக்கிற நதிகள் நாமரூபங்களைவிட்டு சமுத்திரத்தை யடைந்து எப்படி அதில் லயித்துப்போகின்றனவோ அப்படிப் பிரம்மஞானி யானவன் நாமரூபங்களிலிருந்து விடுபட்டு சர்வசிரேஷ்டமாயும் திவ்வியமாயுமிருக்கிற புருஷனை யடைகிறான். எவன் இப்

படிப் பிரம்மத்தை யறிகிறனோ அவன் பிரம்மமேயாகிறன். மேற்படி ௩-௨-௮-௯.

ஸாண்டூக்யோபநிஷத், ௧ - ௨.

ஸர்வம் ஹ்யேதத் ப்ரஹ்ம அயமாத்மா ப்ரஹ்ம ஸோயமாத்மா சதுஷ்பாத் = இதெல்லாம் பிரம்மம்தான் நான்கு பாதங்களையுடைய (ஜாக்கிர சுவப்ன சுஷுப்தி துரியமாகிற நான்கு அவஸ்தைகளையுடைய) அந்த இந்த ஆத்மா (ஜீவன்) பிரம்மம்தான். மாண்டூக்யோபநிஷத் ௧-௨.

ப்ரபஞ்சோ யதி வித்யேத நிவர்த்தேத ந ஸம்ஶய꞉ । மாயாமாத்ரமிதம் த்வைதமத்வைதம் பரமார்த்தத꞉ । ௧௭ । = பிரபஞ்ச மிருக்குமானல் அது நிவிருத்தியாகுமென்பதில் சந்தேகமில்லை. இந்த துவைதமானது (பலவாகத்தோற்றுகிறதானது) மாயாமாத்திரமே. இரண்டாவதற்றதாகிய ஒன்றே வாஸ்தவமாயுள்ளது. மேற்படி உபநிஷத் - ௧௭.

ஸ்வப்நமாயே யதா த்ருஷ்டே கந்தர்வநகரம் யதா । ததா விஶ்வமிதம் த்ருஷ்டம் வேதாந்தேஷு விசக்ஷணை꞉ । ௩௧ । ந நிரோதோ ந சோத்பத்திர்ந பத்தோ ந ச ஸாதக꞉ । ந முமுக்ஷுர்ந வை முக்த இத்யேஷா பரமார்த்ததா । ௩௨ । = சுவப்நம் மாயை கந்தர்வநகரம் இவைகளெப்படியோ அப்படிப்போல் இந்தப் பிரபஞ்சமானது வேதாந்தங்களிலே விவேகியானவர்களால் பார்க்கப்பட்டது. (௩௧) பிரளயமுமில்லை, உற்பத்தியுமில்லை, பெத்தனுமில்லை, சாதனஞ்செய்கிறவனுமில்லை, முமுக்ஷுவுமில்லை. இதுதான் வாஸ்தவமானது. (௩௨) மேற்படி காரிகை வைதத்தியப்பிரகரணம்.

ஆத்மா ஹ்யாகாஶவஜ்ஜீவைர்கடாகாஶைரிவோதித꞉ । கடாதிவச்ச ஸங்காதைர்ஜாதாவேதந்நிதர்ஶநம் । ௩ । கடாதிஷு ப்ரலீநேஷு கடாகாஶாதயோ யதா । ஆகாஶே ஸம்ப்ரலீயந்தே தத்வஜ்ஜீவா இஹாத்மநி । ௪ । யதைகஸ்மிந் கடாகாஶே ரஜோதூமாதிபிர்யுதே । ந ஸர்வே ஸம்ப்ரயுஜ்யந்தே தத்வஜ்ஜீவா ஸுகாதிபி꞉ । ௫ । ரூபகார்யஸமாக்யாஶ்ச பித்யந்தே தத்ர தத்ர வை । ஆகாஶஸ்ய ந பேதோ(அ)ஸ்தி தத்வஜ்ஜீவேஷு நிர்ணய꞉ । ௬ । ஜீவாத்மநோரநந்யத்வமபேதேந ப்ரஶஸ்யதே । நாநாத்வம் நிந்த்யதே யச்ச ததேவம் ஹி ஸமஞ்ஜஸம் ॥ ௧௩ ॥ அத்வைதம் பரமார்த்தோ ஹி த்வைதம் தத்பேத உச்யதே । தேஷாமுபயதா த்வைதம் தேநாயம் ந விருத்யதே । ௧௮ । [illegible] । ௧௯ । = ஆகாசமானது கடாகாசங்களாக சொல்லபபடுகிறதுபோல ஆத்மாவானவன் ஜீவர்க

ளாக சொல்லப்படுகிறுன். (மண்ணிலிருந்து) கெடம் முதலியவை யுண்டாகிறதுபோல (ஆத்மாவே) பிருதிவி முதலிய கூட்டங்களா யுண்டாகிறுன். இது உற்பத்தி விஷயத்தில் திருஷ்டாந்தம். (௩) கெடம் முதலியவை நசித்தால் கெடம் முதலியவைகளிலுள்ள ஆகாசம் எப்படி மஹாகாசத்தில் லயமடைகிறதோ அதுபோல் ஜீவன் ஆத்மாவில் லயமடைகிறுன். (௪) ஒரு கெடாகாசத்தில் தூசிகள் புகைமுதலியன சூழ்ந்திருக்கையில் மற்ற கெடாகாசங்களில் அவை (தூசிமுதலியன) சம்பந்தப்படாததுபோல சுகாதிவிஷயங்களில் ஜீவர்கள் (௫) ரூபம் காரியம் பெயர் இவைகள் அவ்வவ்விடத்தில் பேதமாகவிருக்கின்றன. ஆகாசத்திலோ பேதமில்லை. ஜீவர்கள் விஷயத்திலு மிப்படித்தான் நிச்சயம் (௬) ஜீவனும் ஆத்மாவும் பேதமற்றதென்கிற வேற்றுமையின்மை ஸ்துதிக்கத்தக்கது. வேற்றுமையாகிற பலவென்பது நிந்திக்கப்படுகிறது, அது சரியானதுதான். (௭) வாஸ்தவமானது அத்துவைதமேயல்லவா? அதற்கு பேதமானது துவைதமென்று சொல்லப்படுகிறது. அவர்களுக்கு (துவைதிகளுக்கு பாரமார்த்திகம் வியாவகாரிகம்) இவ்விருவகையிலும் துவைதந்தான், அதினல் இது (அத்துவைதம்) விரோதிக்கிறதில்லை. (௮) யாதொரு சராசரப் பிரபஞ்சமாகிற இந்த துவைதமானது மனத்தோற்றமே. மனோநாசமானல் துவைதம் விளங்குகிறதில்லை (௯) மேற்படி காரிகை அத்துவைதப்பிரகரணம். *

ஐதரேயோபநிஷதி த்ருதீயோऽத்யாய:.

கோऽயமாத்மேதி வயமுபாஸ்மஹே கதர: ஸ ஆத்மா யேந வா பஶ்யதி யேந வா ஶ்ருணோதி யேந வா கந்தாநாஜிக்ரதி யேந வா வாசம் வ்யாகரோதி யேந வா ஸ்வாது சாஸ்வாது ச விஜாநாதி । ௧ । யதேதத்த்ருதயம் மநஶ்சைதத் । ஸம்ஜ்ஞாநமாஜ்ஞாநம் விஜ்ஞாநம் ப்ரஜ்ஞாநம் மேதா த்ருஷ்டிர்த்ருதிர்மதிர்மநீஷா ஜூதி: ஸ்ம்ருதி: ஸங்கல்ப: க்ரதுரஸு: காமோ வஶ இதி ஸர்வாண்யேவைதாநி ப்ரஜ்ஞாநஸ்ய நாமதேயாநி பவந்தி । ௨ । ஏஷ ப்ரஹ்மைஷ இந்த்ர ஏஷ ப்ரஜாபதிரேதே ஸர்வே தேவா இமாநி ச பஞ்சமஹாபூதாநி ப்ருதிவீ வாயுராகாஶ ஆபோ ஜ்யோதீம்ஷீத்யேதாநீமாநி ச க்ஷுத்ரமிஶ்ராணீவ பீஜாநீதராணி சேதராணி சாண்டஜாநி ச ஜாருஜாநி ச ஸ்வேதஜாநி சோத்பிஜ்ஜாநி சாஶ்வா காவ: புருஷா ஹஸ்திநோ யத்கிஞ்சேதம் ப்ராணி ஜங்கமம் ச பதத்ரி ச யச்ச ஸ்தாவரம் ஸர்வம் தத்ப்ரஜ்ஞாநேத்ரம் ப்ரஜ்ஞாநே ப்ரதிஷ்டிதம் ப்ரஜ்ஞாநேத்ரோ லோக: ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டா ப்ரஜ்ஞாநம் ப்ரஹ்ம । ௩ । — ஆத்மாவென்று யாரை நாம் உபா

* இந்த காரிகை வாக்கியங்களில் அநேக வாக்கியங்களை அக்கிபுராணம் அத்-௩௭௧-௩௭௭-௩௭௮-௩௭௯-இவைகளில் காண்க.

[illegible] — "நான்" பிர்ம்மமென்கிற பாவனையினாலே பரமதேஜஸாகிற நதிப்பிரவாஹமானது பரம தேஜஸாகிற ஸமுத்திரத்தில் எப்படிப் பிரவேசிக்கிறதோ, பரமதேஜஸாகிற ஸமுத்திரத்தின் அலைகள் பரமதேஜஸாகிற சமுத்திரத்தை எப்படிப் பிரவேசிக்கின்றனவோ, அப்படியே சச்சிதாநந்த ஆத்மாவை யுபாசிக்கிறவன் சகல பரிபூர்ண அத்துவைத பரமாநந்த லக்ஷணமுடைய பரபிர்ம்மமாகிய நாராயணனாகிற என்னிடத்தில் "நான் சச்சிதாநந்த ஆத்மா பிறப்பற்றவன் பூர்ணனாயிருக்கிறேன்" என்று பிரவேசிக்கிறான்.

[illegible] — ஆகையினாலே என்னை உபாசிக்கிறவன் நிரதிசயாத்துவைத பரமாநந்தலக்ஷண பரபிர்ம்மமாகிறான். முமுக்ஷுவாகிற எவன் இந்த மார்க்கத்தினாலே செவ்வையா யாசரிக்கிறானோ அவன் பரமாநந்தலக்ஷண பரபிர்ம்மமாகிறான். எட்டாவதத்தியாயம்.

---

அத்வயதாரகோபநிஷத்.

[illegible] — ஜீவேசுவரர்கள் மாயாசுவரூபிகளென்றறிந்து சகல விசேஷத்தையும் இதல்ல இதல்ல என்கிறதாக விலக்கி எது மிஞ்சுகிறதோ அது அத்துவயபிர்ம்மம். அத்துவயதாரகோபநிஷத்.

---

ராமரஹஸ்யோபநிஷத்.

[illegible] *** [illegible] — இராமமந்திரங்களுடைய ஆவர்த்தியைச் செய்கிறவன் இராமசந்திரனாகிறான். * * * வாஸ்தவமாகவே "நான் ராமனாயிருக்கிறேன்" என்று எப்போதும் யார் சொல்லிக்கொண் டிருக்கிறார்களோ அவர்கள் ஸம்சாரிகளல்லவென்பது நிச்சயம். அவர்கள் இராமனே என்பதில் சந்தேகமில்லை. இராமரஹஸ்யோபநிஷத்.

---

ராமபூர்வதாபந்யுபநிஷத்.

ப்ரதமோபநிஷத்.

ரமந்தே யோகிநோऽநந்தே நித்யாநந்தே சிதாத்மநி । இதி ராமபதேநாஸௌ பரம் ப்ரஹ்மாபிதீயதே । சிந்மயஸ்யாத்விதீயஸ்ய நிஷ்களஸ்யாஶரீரிணஃ । உபாஸகாநாம் கார்யார்த்தம் ப்ரஹ்மணோ ரூபகல்பநா ॥— முடிவற்றவனும் நித்தியானந்தனும் சிதாத்மாவாயு மிருக்கிறவனிடத்தில் யோகிகள் ரமிக்கிறார்கள் (அதிபிரீதி யுடைவராகிறார்கள்) என்கிறதினாலே இவர் இராமனென்கிற பெயரினால் சொல்லப்படுகிற பரபிர்ம்மமாயிருக்கிறார். சின்மயனும் இரண்டாவதற்றவனும் கலைகளற்றவனுமிருக்கிற சரீரமற்ற பிர்ம்மத்திற்கு உபாசகர்களுடைய பிரயோஜனத்திற்காக ரூபம் கற்பிக்கப்பட்டிருக்கிறது.—இராமபூர்வதாபனீயுபநிஷித் முதலாவதுபநிஷத்.

---

ராமோத்தரதாபநீயோபநிஷத்.

த்ருதீயோவாகஃ.

தத்ஸத்யத்பரம் ப்ரஹ்ம ராமசந்த்ரஶ்சிதாத்மகஃ । ஸோऽஹமோம் தத்ராமபத்ரஃ பரஞ்ஜ்யோதீரஸோऽஹமோம் । இத்யாத்மாநமாதாய மநஸா ப்ரஹ்மணைகீகுர்யாத் । ஸதா ராமோऽஹமஸ்மீதி தத்த்வதஃ ப்ரவதந்தி யே । ந தே ஸம்ஸாரிணோ நூநம் ராம ஏவ ந ஸம்ஶயஃ ॥— சிதாத்துமகமான இராமசந்திரமென்கிற தேஜுண்டோ அது ஸத்தாகிற பிரம்மம். அவனே "நான்" ஓம், அந்த ராமசந்திரனானவன் பரம் ஜோதிரஸம் "நானே" என்று இந்தப்படி மனதினாலே ஆத்மாவை கிரகித்து பிரம்மத்துடன் சேர்க்கவேண்டியது. எவர்கள் உண்மையாய் "நானே ராமனாயிருக்கிறேன்" என்று எப்போது சொல்லுகிறார்களோ அவர்கள் சம்சாரிகளல்லவென்பது நிச்சயம். இராமனே சந்தேகமில்லை.—இராமோத்தரதாபினி யுபநிஷத் மூன்றாவது அன்வாகம்.

---

ஶாண்டில்யோபநிஷத்.

ப்ரதமோத்யாயஃ.

அத த்யாநம் । தத்த்விவிதம் । ஸகுணம் நிர்குணஞ்சேதி । ஸகுணம் மூர்த்தித்யாநம் । நிர்குணமாத்மயாதாத்ம்யம் ॥ ௧௧ ॥— தியான மானது ஸகுண நிர்குணமென இரண்டுவிதம், ஸகுணம் மூர்த்தித்தியானம். நிர்குணம் உண்மையான ஆத்மசுவரூபத்தியானம். (௧௧)

அத ஸமாதிஃ । ஜீவாத்மபரமாத்மைக்யாவஸ்தா த்ரிபுடீரஹிதா பரமாநந்தஸ்வரூபா ஶுத்தசைதந்யாத்மிகா பவதி ॥ ௧௨ ॥— சமாதியாவது - திருபுடி (பார்க்கிறவன், பார்வை, பார்க்கப்படுகிறவஸ்து, இந்த

வேற்றுமை) யற்றதாயும் பரமானந்த சுவரூபமாயும் சுத்த சைதன்னி யாத்து மகமாயுமிருக்கிற ஜீவாத்தும பரமாத்துமாக்களுடைய ஐக்கா வஸ்தைதான் (கஉ).—சாண்டில்லியோபநிஷத் முதலாவதத்தியாயம்.

---

பைங்கலோபநிஷத்.

சதுர்தோऽத்யாய꞉.

ஸஹமேவ பரம்ப்ரஹ்மேதி பச்யேத்பரம் ஸுகம். யதா ஜலே ஜலம் க்ஷிப்தம் க்ஷீரம் க்ஷீரே க்ருதம் க்ருதே. அவிசேஷோ பவேத்தத்வஜ்ஜீவாத்மபரமாத்மநோ꞉. *** யத்ர யத்ர ம்ருதோ ஜ்ஞாநீ யேந வா கேந ஹேதுநா. யதா ஸர்வகதம் வ்யோம தத்ர தத்ர லயம் கத꞉. கடாகாசமிவாத்மானம் விலயம் வேத்தி தத்வத꞉. ஸ கச்சதி நிராலம்பம் ஜ்ஞாநாலோகம் ஸமந்தத꞉. ***ஸோऽஹம்ப்ரஹ்மேதி நியதம் மோக்ஷஹேதுர்மஹாத்மநாம். *** நாஹம்ப்ரஹ்மேதி ஜாநாதி தஸ்ய முக்திர்ந ஜாயதே. — "நானே" பரமாயும் சகலமாயு மிருக்கிறேனென்று பார்ப்பதுவே சிரேஷ்டமான சுகம். ஜலத்துடன் சேர்க்கப்பட்ட ஜலமும் பாலுடன் சேர்க்கப்பட்ட பாலும் நெய்யுடன் சேர்க்கப்பட்ட நெய்யும்போல ஜீவாத்ம பரமாத்ம பேதமற்ற தாகிறது. *** ஞானியானவன் எங்கெங்க விடத்தில் எவ்விதமாய் மரணமடைந் தாலும் எங்கும் பரவிய ஆகாசம்போல் அந்தந்தவிடத்திலேயே லய மடைகிறான். வாஸ்தவமாய் கடாகாசம்போல் ஆத்மாவானவன் லய மடைகிறதாக அறியத்தக்கது. அவன் நிராலம்பமாகிய ஞானப்பிரகாசத் தை எவ்விடத்திலு மடைகிறான். ***"நானே பிர்ம்மம்" என்று எப் போது மிருக்கிறது மகாத்மாக்களுக்கு மோக்ஷ ஹேதுவாயிருக்கிறது. *** "நானே பிர்ம்மம்" என்றறியாதவனுக்கு முக்தியுண்டாகிறதில்லை. பைங்கலோபநிஷத் நான்காவது அத்தியாயம்.

---

தேஜோபநிஷத்.

த்விதீயோऽத்யாய꞉.

அஹம் ஸச்சிதானந்த ப்ரஹ்மைவாஸ்மி நசேதர꞉. — நான் ஸச்சித் பராநந்த பிர்ம்மமாகவே யிருக்கிறேன். வேறல்ல. இரண்டாவதத்தியாயம்.

சதுர்தோऽத்யாய꞉.

ப்ரஹ்மைவாஹமிதி ஜ்ஞாத்வா வீதசோகோ பவேந்முநி꞉. — முனி யானவன் "நானே" பிர்ம்மமென்றறிந்து சோகமற்றவனாகிறான்.

விநஷ்டதிக்ப்ரமஸ்யாபி யதாபூர்வம் விபாதி திக். ததா விஜ்ஞாநவித்வஸ்தம் ஜகந்நாஸ்தீதி பாவய. — திக்பிரமை நீங்கினவனுக்கு முன் தோற்றி யபடி திக்குத்தோற்றுவதுபோல விக்ஞானத்தினால் நாசமடைந்த ஜகத்

தானது தோற்றிக்கொண்டிருந்தாலும் இல்லையே இல்லையென்று பாவனைசெய்.

உத்வேலராஜவேதண்டஸ்ஸர்ஷபகோணகோடரே । மசகேந ஸிம்ஹயூதம் விக்ருஹ்ணாத்யணுகோடரே । பத்மாக்ஷஸ்தாபிதோ மேருர்நிகீர்ணோ ப்ருங்கஸூநுநா । நிதாக வித்தி தாத்ருக்ஷம் ஜகதேதத் ப்ரமாத்மகம் ॥—கடுகினுடைய ஒரு மூலையிலிருக்கிற துவாரத்திற்கு மதயானை கட்டப்பட்டது. அணுவினுடைய பொந்துக்குள் கொசுவானது சிம்மக்கூட்டத்துடன் யுத்தஞ்செய்கிறது. தாமரைவிதையில் வைக்கப்பட்டிருக்கிற மகமேரு பருவதத்தை வண்டுக்குஞ்சு விழுங்கிவிட்டது. (இவைகளெப்படிப் பொய்யாகவே யிருக்கவேண்டுமோ அப்படி) ஓ! நிதாகா! பிரமை சுவரூபமாயிருக்கிற ஜகத்தை அவைகளுக் கொப்பாகநினை.

ஸதா ப்ரஹ்மேதி நியதம் மோக்ஷஹேதுர்மஹாத்மநாம் ॥ — எப்போதும் "நானே" பிரம்மமென்றிருக்கு மிருப்பானது மகாத்துமாக்களுக்கு மோக்ஷஹேதுவா யிருக்கிறது.

ஜீவேச்வராதிரூபேண சேதநாசேதநாத்மகம் । ஈக்ஷணாதிப்ரவேசாந்தா ஸ்ருஷ்டிரீசேந கல்பிதா । ஜாக்ரதாதிவிமோக்ஷாந்தஸ்ஸம்ஸாரோ ஜீவகல்பித: ॥ — ஈக்ஷணம்முதல் பிரவேசம் வரையில் சொல்லப்பட்டிருக்கிற சேதனு சேதனுத்மகமான ஜீவேசுவராதி ரூபங்களாகிற சிருஷ்டிகள் ஈசுவரனுல் கற்பிக்கப்பட்டன. ஜாக்கிரம்முதல் மோக்ஷம்வரையிலுள்ள சம்சாரம் ஜீவனுலே கற்பிக்கப்பட்டன.

க்ஷீரமத்யே ஜலம் ஸர்வம் க்ஷீரமேவ ந சேதர: । ஜகத்த்ரயமிதம் ஸர்வம் சிந்மாத்ரம் ஸவிசாரத: ॥ — பாலகிலத்தில் தோற்றும் ஜலம் முழுதும் பாலே நிலமேதவிர வேறில்லை. மூன்றுலகமும் சகலப் பிரபஞ்சமும் விசாரணையினுல் சின்மாத்திரந்தானே. நான்காவதத்தியாயம்.

ஷஷ்டோத்யாய:.

ந ததஸ்தி ந யத்ராஹம் ந ததஸ்தி ந யந்மயம் । கிமந்யதபிவாஞ்சாமி ஸர்வம் ஸச்சிந்மயம் ததம் । ஸமஸ்தம் கல்விதம் ப்ரஹ்ம ஸர்வமாத்மேதமாததம் । அஹமந்ய இதம் சாந்யதிதி ப்ராந்திம் த்யஜாநக ॥ — நானில்லாத வஸ்துவே இல்லை. தன்மயமன்றியுள்ள பதார்த்தமே யில்லை. சகலமும் ஸத் சித் மயமாக வியாபித்திருக்கிறது. நான் வேறெதை யிச்சிக்கப்போகிறேன்? இந்த ஸகலப்பிரபஞ்சமும் பிரம்மமே. விஸ்தாரமாயிருக்கிற இந்தப் பிரபஞ்சமெல்லாம் ஆத்மாவே. ஓ! பாபமற்றவனே, நான் வேறே இந்தப் பிரபஞ்சம் வேறே என்ற பிராந்தியைத் தள்ளிவிடு. ஐந்தவதத்தியாயம்.

𑌯𑍋𑌗𑌶𑌿𑌖𑍋𑌪𑌨𑌿𑌷𑌤𑍍.

𑌪𑍍𑌰𑌥𑌮𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃.

𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑍌 𑌤𑌯𑍋𑌰𑍈𑌕𑍍𑌯𑌂 𑌯𑌦𑌾 𑌭𑌵𑍇𑌤𑍍 । 𑌤𑌦𑍈𑌕𑍍𑌯𑍇 𑌸𑌾𑌧𑌿𑌤𑍇 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌨𑍍 𑌚𑌿𑌤𑍍𑌤𑌂 𑌯𑌾𑌤𑌿 𑌵𑌿𑌲𑍀𑌨𑌤𑌾𑌮𑍍 । 𑌪𑌵𑌨𑌃 𑌸𑍍𑌥𑍈𑌰𑍍𑌯𑌮𑌾𑌯𑌾𑌤𑌿 𑌲𑌯𑌯𑍋𑌗𑍋𑌦𑌯𑍇 𑌸𑌤𑌿 । 𑌲𑌯𑌾𑌤𑍍 𑌸𑌂𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌤𑍇 𑌸𑍌𑌖𑍍𑌯𑌂 𑌸𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌨𑍍𑌦𑌂 𑌪𑌰𑌂 𑌪𑌦𑌮𑍍 । — க்ஷேத்திரக்ஞன் பரமாத்துமா இவ்விருவருக்கும் எப்போது ஐக்க முண்டாகிறதோ ஓ! பிராம்மணோத்தமா! அந்த ஐக்க மெப்போது உறுதிப்படுகிறதோ அப்போது சித்தம் லயமடைகிறது. லய யோக முறுதிப்படுமானல் வாயுவானது அசைவற்றதாகிறது. சுவாத்மானந்த பரமபதமாகிய சுகமானது (சித்த) லயத்தினு லடையப்படுகிறது. யோக சிகோபநிஷத் முதலாவதத்தியாயம்.

𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃.

௨. [illegible]

[illegible] ஓம், சைதன்னியம் ஒரேரூபமானதினாலே பேதமானது ஒருபோதும் யுக்தமல்ல. கயிற்றிற் பாம்பென்கிற தன்மைபோல் ஜீவத்துவத்தை யறியவேண்டியது. கயிறுஎன்கிற ஞானமில்லாததினாலே ஒரு க்ஷணத்திற்குள் கயிறு சர்ப்பமாய்க் காண்கிறது. அதுபோல் கேவலம் சித்தானது தானே பிரபஞ்சமாக விளங்குகிறது. பிரபஞ்சத்திற்கு உபாதானகாரணம் பிர்ம்மத்தைத்தவிர வேறில்லை. ஆகையால் இந்தசகலமான பிரபஞ்சமும் பிர்ம்மமாகவே யிருக்கிறது வேறேயில்லை. சகலமும் ஆத்மாஎன்கிற விதியினாலே பிரவேசிக்கப்படுகிறதென்பதும் பிரவேசிக்கிறதென்பதும்பொய். பரத்துவமானது இப்படி அறியப்பட்டால் பேதத்திற் கிடமேது? பரமாத்மாவாகிற பிர்ம்மத்தினிடத்திலிருந்து சகலபூதங்களு முண்டாகின்றன. ஆகையினாலே இவைகளெல்லாம் பிர்ம்மமேயாகிறதென்று நினை. விளங்குகிறதுபோலிருக்கிற சகலமானபெயர்களும் பலவிதமான ரூபங்களும் சகலமான கருமங்களும் பிர்ம்மமேயென்று பாவனைசெய். சுவர்ணத்தினாலுண்டான வஸ்துக்கள் சுவர்ணமேயென்பதெப்படி நிச்சயமோ அப்படி பிர்ம்மத்திலுண்டானது பிர்ம்மமேயாகிறது. ஜீவாத்ம பரமாத்மாக்களுக்குள்ளே அற்பமாவது எவன் பேதத்தை நினைத்திருக்கிறானோ அந்த மூடாத்துமாவுக்கே பயமுண்டென்று சொல்லப்படுகிறது. எதினுடைய அக்ஞானத்தினால் துவைத முண்டாகிறதோ அப்போது ஒன்றை யொன்று பார்க்கிறது, சகலமும் ஆத்மாவாக பார்க்கிற

போது அவ்விஷயத்தில் அணுஅவ்வளவுகூட வேறில்லை. இந்த லோக மானது அனுபவிக்கப்பட்டிருந்தாலும் அது வியவகாரத்திற்கு யோக்கியமானதாக விருந்தாலும் சுவப்னமானது அடுத்த நிமிஷத்தில் நசிப்பதுபோல அசத்ரூபமானதே. சுவப்னத்தில் ஜாக்கிருத அவஸ்தையில்லை. ஜாக்கிரத்தில் சுவப்னமில்லை. சுஷுப்தியிலிரண்டுமில்லை. அவ்விரண்டிற்கும் சுஷுப்தியில்லை. இம்மூன்றும் பொய்யே யாகிறது. (அவைகள்) முக்குணங்களினால் கற்பிக்கப்பட்டவைகள். இந்த ஞானத்தினால் இந்த ஆத்மாவானவன் சித்தாயும் நித்தியனாயும் குணங்களுக்கப்புறப்பட்டவனாயு மிருக்கிறான். மண்ணினிடத்தில் குடமென்கிற பிராந்தியும் கிளிஞ்சிலில் வெள்ளி என்கிற இருப்பும் எப்படியோ அப்படி பிர்ம்மத்தில் ஜீவத்துவம். அதை அறிந்தால் (ஜீவபாவம்) நசித்துப்போகிறது. மண்ணில் குடமென்கிற பெயரும் தங்கத்தில் குண்டலமென்கிற பெயரும் கிளிஞ்சிலில் வெள்ளி என்கிற பிரசித்தமும் எப்படியோ அப்படி பரபிர்ம்மத்தில் ஜீவனென்கிற சப்தமுண்டாயிருக்கிறது. ஆகாசத்தில் நீலத்தன்மையும் பாலைநிலத்தில் ஜலத்தோற்றமும் கட்டையில் புருஷன் என்கிற பிராந்தியும்போல சிதாத்மாவிடத்தில் பிரபஞ்சம்தோற்றுகிறது. வேதாளமென்பதும் கெந்தர்வ நகரமென்பதும் ஆகாசத்தி லிரண்டு சந்திரனும் எப்படி யில்லையோ அப்படி சத்தியமான பிர்ம்மத்தினிடத்தில் ஜகத்தினிருப்பு. ஜலமே அலையென்றும் பொங்குதலென்றும் எப்படி விளங்குகிறதோ மண்ணானது குடமென்கிற பெயரினால் எப்படி விளங்குகிறதோ நூல்கள் துணியென்கிற பெயரினால் எப்படியோ அப்படி ஜகத்தென்கிற பெயரினால் சித்தேவிளங்குகிறது. சகலமும் பிர்ம்ம மாத்திரமே. மலடிமைந்தன் கானல்ஜலம் ஆகாசவிருக்ஷம் இவைகள் எப்படி இல்லையோ அப்படி ஜகத்தினிருப்புமில்லை. குடத்தைப் பகுத்தறிகையில் பிரயத்தின மன்றி தானாகவே மண்ணாய் விளங்குகிறதுபோல பிரபஞ்சத்தை ஆராய்ந்து பார்த்தால் பிரகாசமான பிர்ம்மமே விளங்குகிறது. கயிறானது ஞானிக்கும் அக்ஞானிக்கும் இரண்டுவிதமாய் (ஞானிக்கு கயிறாகவும் அக்ஞானிக்குப் பாம்பாகவும்) தோற்றுவதுபோல எப்போதும் சுத்தனாகவே யிருக்கிற ஆத்மாவானவன் எப்போதும் அசுத்தன்போல் விளங்குகிறான். குடமானது மண்மயமாயிருக்கிற தெப்படியோ அப்படி தேகமும் சின்மயமாயிருக்கிறது, வித்வான்களால் ஆத்மானாத்தும விசாரமானது வீணாகவே செய்யப்படுகிறது. மூடனாலே கயிறானது பாம்பாகவும் கிளிஞ்சிலானது வெள்ளியாகவும் நிச்சயிக்கப்படுகிறது போல ஆத்மத்தன்மையானது தேகமாக நிச்சிக்கப்படுகிறது. மண்ணானது குடமாகவும் பாலைநிலத்தோற்றம் ஜலமாகவும் மரங்கள் வீடாகவும் இரும்பானது கத்தியாகவும் எப்படி கிரகிக்கப்படுகிறதோ அப்படிப்போல அக்ஞானத்தினால் ஆத்மாவிடத்தில் தேகத்துவத்தை அறிகிறான்.—யோகசிகோபநிஷத் நான்காவதத்தியாயம்.

ஷஷ்டோऽத்⁴யாய:.

சித்தசலிதஸம்ஸாரோ நிஶ்சலம் மோக்ஷ உச்யதே। தஸ்மாச்சித்தம் ஸ்தி²ரீகுர்யாத் ப்ரஜ்ஞயா பரயா பு³த⁴:। சித்தம் காரணமர்தா²நாம் தஸ்மிந்ஸதி ஜக³த்த்ரயம்। தஸ்மிந்க்ஷீணே ஜக³த்க்ஷீணம் தச்சிகித்ஸ்யம் ப்ரயத்நத:॥— சித்தம் சலித்துக்கொண்டிருக்கையில் சம்சாரமென்றும் சித்தம் சலிக்காமலிருக்கையில் மோக்ஷமென்றும் சொல்லப்படுகிறது. ஆகையால் சித்தத்தை சிரேஷ்டமான ஞானத்தினால் பரமாத்துமாவிடத்தில் ஸ்திரமாய் நிறுத்தவேண்டியது. சித்தமானது விஷயங்களுக்குக் காரணமா யிருக்கிறது. அது நசித்தால் ஜகத்தும் நசிக்கிறது. அதைப் பிரயத்தினத்தினாலே பரிசுத்தம் செய்யவேண்டியது. ஆறுவதத்தியாயம்.

---

ஸந்ந்யாஸோபநிஷத்.

த்³விதீயோऽத்⁴யாய:.

நிரஸ்தமநநாநந்த³ஸம்விந்மாத்ரபரோऽஸ்ம்யஹம்। உத³ஸ்யவேத்³யமலம் த்யாஜ்யம் மநோ நிர்மூல்ய ஸர்வஶ:। ஆஶாபாஶஶதோந்முக்த: ஸம்விந்மாத்ரபரோऽஸ்ம்யஹம்।—நான் மனனம் ஆநந்தம் என்பவைகளை விட்டவனாய் சின்மாத்திரமாக விருக்கிறேன். அறியவேண்டிய தென்பதாகிய மலத்தைத் தள்ளி மனது முழுதும் நாசம்செய்து ஆசையாகிற பாசத்தை வெட்டி சிரேஷ்டமான சின்மாத்திரமாகவே நானிருக்கிறேன்.— சந்நியாஸோபநிஷத் இரண்டாவதத்தியாயம்.

பரமஹம்ஸபரிவ்ராஜகோபநிஷத்.

ப்³ரஹ்மாஹமஸ்மீதி தத்த்வமஸ்யாதி³வாக்யார்த²ஸ்வரூபாநுஸந்தா⁴நம் குர்வந் *** க்ரமேண ப்³ரஹ்மாஹமஸ்மீதி பா⁴வயந் *** ஸச்சிதா³நந்த³ அத்³வய சித்³க⁴ந ஸம்பூர்ணாநந்தை³கபோ³தோ⁴ ப்³ரஹ்மைவாஹமஸ்மீதி அநவரதம் ப்³ரஹ்மப்ரணவாநுஸந்தா⁴நேந ய: க்ருதக்ருத்யோ ப⁴வதி ஸ பரமஹம்ஸபரிவ்ராட்।— "நான்" பிர்ம்மமாயிருக்கிறேனென்று தத்துவமஸி முதலிய வாக்கியார்த்தத்தை அனுசந்தானம் செய்துகொண்டு, * * * தேகம் மெலிந்தவனாய் "நானே" பிர்ம்மமென்று பாவனை செய்துகொண்டு. * * * ஸச்சிதாநந்த அத்துவய சித்கன ஸம்பூர்ணாநந்தமாயும் ஒன்றாயும் ஞானசுவரூபியாயு மிருக்கிற பிர்ம்மமே "நான்" என்று எப்போதும் பிர்ம்மப்பிரணவானு சந்தானத்தினாலே எவன் கிரதகிருத்தியனாகிறானோ அவன் பரமஹம்ஸனாகிய பரிவிராட்.— பிரமஹம்ஸ பரிவிராஜகோபநிஷத்.

---

[illegible]

[illegible]

[illegible] — பிரமையானது ஐந்துவிதமாக விளங்குகிறது. அது இவ்விடத்தில் சொல்லப்படுகிறது. ஜீவேசுவரர்கள் வேறுவேறு ரூபமென்பது முதலாவது பிரமை. கருத்திருத்துவ குணமானது வாஸ்தவமாய் ஆத்மாவிடத்திலுள்ளதென்பது இரண்டாவது. மூன்று சரீரத்துடன் கூடியிருக்கிற ஜீவன் அதிலொட்டியிருக்கிறானென்பது மூன்றாவது. ஜகத்காரண ரூபனுக்கு விகாரித்துவம் சொல்வது நான்காவது. காரணத்தைக்காட்டிலும் ஜகத் வேறென்றும் ஜகத் ஸத்தியமென்று முள்ளது ஐந்தாவது பிரமை. ஐந்து பிரமைகளும் மனதில் அப்போது நிவிருத்தியாயிற்று. (எப்போதென்றால்,) பிம்ப பிரதிபிம்ப தெரிசனத்தினாலே பேதப்பிரமை நிவிருத்தியாயிற்று. ஸ்படிகத்தில் செவப்பைப் பார்த்ததினாலே கருத்திருத்துவம் வாஸ்தவமென்கிற பிரமை நிவிருத்தியாயிற்று. கடாகாச மடாகாச தெரிசனத்தினாலே ஒட்டியிருக்கிறதென்ற பிரமை நிவிருத்தியாயிற்று. கயிற்றில் பாம்பைப் பார்த்ததினாலே காரியத்தைக் காட்டிலும் ஜகத் வேறு ஜகத் சத்தியம் என்ற பிரமை நிவிருத்தியாயிற்று. தங்கக்கிண்ணப் பார்வையினாலே விகாரித்துவப் பிரமை நிவிருத்தியாயிற்று. அதுமுதல் என்னுடைய சித்தமானது தானாகவே பிர்ம்மாகாரமாக வாயிற்று. * * * சகல வஸ்துக்களையும் தள்ளிவிடுவதினாலே மிஞ்சுகிறது ஆத்மாவென்று சொல்லப்படுகிறது. ஆகையினாலே ஆத்மாவைப் பார்க்கவேண்டியதின்பொருட்டு சகலத்தையும் விட்டுவிட வேண்டியது. எல்லாவற்றையும் செவ்வையாய்த் தள்ளிவிட்டு மிஞ்சின தெதுவோ

அந்த சுவரூபமாகவாகக் கடவாய். காணத்தக்க இந்த சகலமும் ஜகத்திலிருக்கிறதாக அறியப்படுமானால் அது சித்தினுடைய சஞ்சலமற்ற தன்மையின் அம்சம் மாத்திரந்தான். சாசுவதமானது வேறொன்றுமில்லை. அந்நபூர்ணோபநிஷத் முதல் அத்தியாயம்.

---

சதுர்த்தோऽத்யாய:.

[illegible] = அந்தப் பிர்ம்மமானது சகல பூதங்களுக்கும் ஆதாரமானது. பிரக்ஞானகனத்தை லக்ஷணமாகவுடையது. ஞானத்தினலறியத் தகுந்தது. சத்தியம், ஞானம், சுகம், அத்துவயம், ஏகம், இப்படிப்பட்ட பிர்ம்மமே "நான்" என்று முனியானவன் மோக்ஷமடையவேண்டியது. நான்காவதத்தியாயம்.

---

பஞ்சமோऽத்யாய:.

[illegible] = சின்மாத்திரமாயும் அக்ஷயமாயும் சாந்தமாயும் ஒன்றாயுமிருக்கிற பிர்ம்மமே "நான்" வேறல்ல. * * * சகலமும் பிர்ம்மமென்று பாவனைசெய்கிற புருஷன் பிர்ம்மமே. * * * ஆத்மாவைக்காட்டிலும் அந்நியமாய் ஒன்றுமில்லாததினாலே நான் ஸ்தோத்திரம் செய்கிறதுமில்லை. நிந்திக்கிறதுமில்லை.

[illegible] = ஒன்றானதாயும ஆதியந்தமற்றதாயும் சின்மாத்திரமாயும் சுத்தமாயும் வியாபக

மாயும் ஆகாசத்தைவிட அதிசூக்ஷ்மமாயு மிருக்கிற அந்தப் பிர்ம்மம் "நானுயிருக்கிறேன்" சமுசயமில்லை. திக்குக் காலம் முதலியவைகளால் பகுக்கப்படாததாயும் சுத்தமாயும் எப்போதும் பிரகாசமானதாயும் எங்கும் பரவினதாயும் சகலார்த்த சுவரூபியாயும் ஒரே அர்த்தமாயும் சின் மாத்திரமாயுமாய்விடு. இந்த ஸகலப்பிரபஞ்சமும் சாந்தமாயும் ஆதிமத்தியாந்தமில்லாததாயும் இருக்கிறது இல்லையென்பதில்லாததாயும் பிறப்பற்றதாயுமிருக்கிற ஒன்றான பிர்ம்மமென்று நினைத்து சுகியாகக்கடவாய். நான் பெத்தனுமல்ல. நான் முக்தனுமல்ல. துன்பமற்றதாகிய பிர்ம்மமாயிருக்கிறேன். இரண்டாவதென்கிற பாவனையற்றவன் ஸச்சிதாநந்த லக்ஷணன் என்று பிரயத்தினத்தினால் பாவனைசெய். ஜீவன் முக்தனுவாய் * * * ஆகாசமானது எப்படி கடாகாசமென்றும் மகாசமென்றும் சொல்லப்படுகிறதோ அப்படி ஆத்மாவானது ஜீவேசுவரர்களாக பிராந்தர்களா லிரண்டு விதமாய்ச் சொல்லப்படுகிறது. யோகியினுடைய மனதில் எப்போது எவ்விடத்திலும் இடைவிடாததாக சைதன்னியம் விளங்குகிறதோ அப்போது தான் அதாகவே ஆயிவிடுகிறான். சகலபூதங்களைத் தானுகவும் தன்னை சகலபூதங்களாகவும் எப்போது பார்க்கிறானோ அப்போது பிர்ம்மமாகிறான். சமாதியிலிருக்கிறவன் எப்போது சகலபூதங்களையும் பார்க்கிறதில்லையோ அப்போதவன் பிர்ம்மத்தோடு கேவலம் ஒன்றாய் விடுகிறான்.

கூமெவகொஹஜெரா நிராமஹ்ராஞவாஸநஃ । நிரஂபெரஹிவிஷா கூாஹ ஶிதிஜகூாநமெஹாவதி । கஷஂஜதுவிரஷிதஃ ஹஹெஸாவஹெஸாஉ ஜெராஉஜரஃ । ஹாஞ்ஹஜஸோஸாஸ உதிஜகூாநமெஹாவதி। தூணாெஹுஷஂ வெரஸாநள நரநாமாஜெரஷஹவ । யஹிஷதிதெஜவாஷ ஶிதிஜகூா நமெஹாவதி । ஸாவநாஂஸவஹஸாவெஹ் ஷஜஹதூஜெ்வஸஜஹஷிதஃ । கூவ ஹிஷஂவஹஂவஹுஹுெகவெவாஹீதிஸாவய। *** ஜாஸவஹாஷ்ஹாவாதூ ஹாஹகாதாவஜாஸவ । ஹாவநாஜவிஷாஞ்கூா யஹிஷஂதநெயாஸவ। —
நான் பற்றற்றவன். ஜரையற்றவன். ஆசையற்றவன். வாசனையற்றவன். அம்சமற்றவன். சிதாகாசமானவன். என்று அறிந்து துக்கப்படுகிறதில்லை. அகங்காரமில்லாதவன், சுத்தன், ஞானி, பிறப்பற்றவன், இறப்பற்றவன், சாந்தன், சமமுடையவன். (எங்கும்) ஸமமாயி விளங்கிறவன். என்று அறிந்து துக்கப்படுகிறதில்லை. திருணங்களின் நுனிகளிலேயும் ஆகாசத்திலேயும் சூரியனிலேயும் மனிதர்களிலேயும் நாகங்களிலேயும் தேவதைகளிலேயும் எவனிருக்கிறானோ அவனே "நான்" என்று அறிந்து துக்கப்படுகிறதில்லை. சகல வஸ்துக்களி லிருந்தும் பாவனையைவிட்டு வெளிப்பட்டு மிஞ்சுகிறதெதுவோ அந்த கேவலமான பிர்ம்மமே "நான்" என்று பாவனைசெய். * * * அறியப்படுகிறவனுகவும் அறிகிறவனுகவும் ஆகாதே. சகலபாவனைகளையும் தள்ளி

மிஞ்சுகிற தெதுவோ அந்த ஸ்வரூபமாக வாகக்கடவாய். ஐந்தாவ தத்தியாயம்.

---

அத்யாத்மோபநிஷத்.

அவித்யாதிமிராதீதம் ஸர்வாபாஸவிவர்ஜிதம் । ஆநந்தமமலம் ஶுத்தம் மநோவாசாமகோசரம் । ப்ரஜ்ஞாநகநமாநந்தம் ப்ரஹ்மாஸ்மீதி விபாவயேத் ।— அவித்தையாகிற அந்தகாரத்தை அதிக்கிறமித்ததாயும் சகலதோற்றமு மற்றதாயும் அநந்தமாயும் நிர்மலமாயும் சுத்தமாயும் மனோவாக்குக் கெட்டாததாயும் ஞானகட்டியாயும் ஆநந்தமாயு மிருக்கிற "பிர்மம் நானு யிருக்கிறேன்" என்று பாவனைசெய்யவேண்டியது. அத்யாத்மோபநிஷத்.

---

அந்நபூர்ணோபநிஷத்.

கடாகாஶம் மஹாகாஶ இவாத்மாநம் பராத்மநி । விலாப்யாகண்டபாவேந தூஷ்ணீம் பவ ஸதா முநே । *** யத்ரைஷ ஜகதாபாஸோ தர்பணாந்த:புரம் யதா । தத்ப்ரஹ்மாஹமிதி ஜ்ஞாத்வா க்ருதக்ருத்யோ பவாநக ।— ஓ! முனியே! கெடாகாசத்தை மகாகாசத்தில்போல ஆத்மாவை பரமாத்துமாவில் லயிக்கச்செய்து அகண்ட ஞானத்தினலே எப்போதும் தூஷ்ணீம் (இந்திரிய மனோவியாபாரமற்றிருக்கிற) பாவத்தை யடைந்திரு. * * * ஓ! பாபமற்றவனே! கண்ணாடிக்குள் காணப்படும் பட்டணம்போல் இந்த ஜகத்தினுடைய தோற்றமானது எவ்விடத்திலோ (எந்தப் பிர்மமத்தினிடத்திலோ) அந்தப் பிர்மமம் "நானே" என்றறிந்து மோக்ஷமடையக் கடவாய்.

ஸோ(அ)பி நாவிகல்போ ந [illegible] । [illegible] । [illegible] பாவோ(அ)திவச: । ப்ரஹ்மாதிஸ்தம்பபர்யந்தம் ம்ருஷாமாத்ரா உபாதய: । தத: பூர்ணம் ஸ்வமாத்மாநம் பஶ்யேதேகாத்மநா ஸ்திதம் । ஸ்வயம் ப்ரஹ்மா ஸ்வயம் விஷ்ணு: ஸ்வயமிந்த்ர: ஸ்வயம் ஶிவ: । ஸ்வயம் விஶ்வமிதம் ஸர்வம் ஸ்வஸ்மாதந்யந்ந கிஞ்சந । ஸ்வாத்மந்யாரோபிதாஶேஷாபாஸவஸ்துநிராஸத: । ஸ்வயமேவ பரம் ப்ரஹ்ம பூர்ணமத்வயமக்ரியம் । அஸத்கல்போ விகல்போ(அ)யம் விஶ்வமித்யேகவஸ்துநி । நிர்விகாரே நிராகாரே நிர்விஶேஷே பிதா குத: । த்ரஷ்ட்ருதர்ஶநத்ருஶ்யாதிபாவஶூந்யைகவஸ்துநி । கல்பார்ணவ இவாத்யந்தபரிபூர்ணைகவஸ்துநி । தேஜஸீவ தமோ யத்ர ப்ரலீநம் ப்ராந்திகாரணம் । அத்விதீயே பரே தத்த்வே நிர்விஶேஷே பிதா குத: । ஏகாத்மகே பரே தத்த்வே பேதவார்தா கதம் வஸேத் ।— அவிகற்பசமாதியினால் அத்துவைத

ஆத்மதரிசன மெப்போதுண்டாகிறதோ அப்போது அதில் ஆத்ம தன்மையை ஸ்திரப்படுத்தி அகங்காரம் முதலியவைகளில் ஆத்ம பாவனையைத்தள்ளி அவைகளில் அசட்டைசெய்து கெடபடாதிகள் போல அசைவற்றிருக்க வேண்டியது. பிர்ம்மாமுதல் ஸ்தம்பம்வரையி லுள்ள உபாதிகள் பொய்யே. அதற்குப்பிறகு ஒரே சுவரூபமாயிருக் கிற பூர்ணமான தன்னுடைய ஆத்மாவை பார்க்கவேண்டியது. தானே பிர்ம்மா தானே விஷ்ணு தானே இந்திரன் தானே சிவன். இந்த சகல ஜகத்தும் தானே தன்னைக்காட்டிலும் அந்நியமா யொன்றுமில்லை. தன் னிடத்தி லாரோபிக்கப்பட்டிருக்கிறதும் விளங்கிகொண் டிருக்கிறது மான சகல வஸ்துக்களையும் விலக்கிவிடுவதினாலே பூர்ணமாயும் இரண் டாவதற்றதாயும் கிரியையற்றதாயு மிருக்கிற பிர்ம்மம் தானாகவேயிருக் கிறான். ஒரே வஸ்துவிடத்தில் (பிர்ம்மத்தில்) பிரபஞ்சமென்கிற இந்த வேறுபாடு எண்ணக்கூடியதல்ல. விகாரமற்றதாயும் ரூபமற்ற தாயும் விசேஷமற்றதாயு மிருக்கிறதினிடத்தில் பேதமேது? பார்க் கிறவன் பார்வை பார்க்கப்படுகிற வஸ்து முதலிய தோற்றமில்லாத தும் துன்பமற்றதும் மகாப் பிரளய ஸமுத்திரத்தில்போல் பரிபூர்ண மாயும் தேஜஸில் இருள்போல பிராந்திக்குக் காரணமான அக்ஞான மானது எவ்விடத்தில் லயிக்கிறதோ அப்படிப்பட்ட அத்துவயபிர்ம்ம பரதத்துவமாயும் விசேஷமற்றதாயு மிருக்கிற சிதாத்துமாவிடத்தில் பேதமேது? ஏகாத்துமாவாகிய பரதத்துவத்தில் அந்த பேத மெப்படி யிருக்கக்கூடும்?

மாயாவித்யே விஹாயைவ உபாதீ பரஜீவயோ: । அகண்டம் ஸச்சிதாநந்தம் பரம் ப்ரஹ்ம விலக்ஷ்யதே । இத்யேவம் வாக்யதோ ஹ்யர்த்தாநுஸந்தாநம் ச்ரவணம் பவேத் ॥ — பரமாத்துமாவாகிற ஈசுவரனுக்கும் ஜீவனுக்கும் முறையே (பார்த்தால்) உபாதியாகிற மாயை அவித்தைகளைத் தள் ளியே அகண்ட சச்சிதானந்த பரபிர்ம்மம் லக்ஷியார்த்தமாகிறது. இந் தப்படி வாக்கியங்களினாலே அர்த்தத்தை அநுசந்தானம் செய்கிறது சிரவணமாகிறது.

அஹம்ப்ரஹ்மேதி விஜ்ஞாநாத் கல்பகோடிஸமார்ஜிதம் । ஸஞ்சிதம் விலயம் யாதி ப்ரபோதாத் ஸ்வப்நகர்மவத் ॥ — "நானே" பிர்ம்மமென்கிற விக்ஞானத் தினாலே நூறுகோடி கற்பங்களில் சம்பாதிக்கப்பட்டிருக்கிற சஞ்சித கருமங்கள் லயத்தை யடைகிறது. (அதெப்படிப்போலென்றால்) சுவப்ன கருமமானது விழித்தவுடன் (லயமடைகிறது) போல.

ஏகமேவாத்விதீயம் ப்ரஹ்ம நேஹ நாநாஸ்தி கிஞ்சந । ஸ்வாநுபூத்யா ஸ்வயம் ஜ்ஞாத்வா ஸ்வாத்மாநமகண்டிதம் । ஸ்வஸித்தஸ்ஸுஸுகம் திஷ்டேந் நிர்விகல்பாத்மநாத்மநி ॥ — பிர்ம்ம மொன்றே. இரண்டாவதில்லை. இவ்விடத் தில் பலவென்பதில்லை. சுவானுபவத்தினாலே அகண்டிதமான தன்

ஆத்மாவை தானகவே அறிந்த அந்த சித்தனனவன் தன்னிடத்தில் விகற்பமற்ற ஆத்மாவாக சுகமா யிருக்கிறான்.

[illegible] — நான் சங்கமற்றவன். நான் சங்கமற்றவன். நான் அடையாள மில்லாதவன். நான் ஹரி. நான் சாந்தியடைந்திருக்கிறவன். நான் முடிவற்றவன். பூர்ணமானவன். பழமையானவன். நான் கருத்தாவல்ல. போக்தாவல்ல. நான் விகாரமற்றவன். நான் அழிவற்றவன். நான் சுத்தஞானசுவரூபி. நான் மாத்திர முள்ளவன். எப்போதும் மங்கள சுவரூபி. அத்தியாத்து மோபநிஷத்.

---

[illegible]

[illegible] — ஆத்மாவென்றபெயரையுடையவன், மங்களகரனனவன், சுத்தமானவன், எப்போது மிரண்டாவதற்ற ஒருவனே பிர்ம்மரூபத்தினலே பிர்ம்மமாத்திரமாய் விளங்கிக்கொண்டிருக்கிறான். ஜகத் ரூபத்தினலே விளங்குகிறதும் பிர்ம்மமே. வித்தை அவித்தை முதலிய பேதமாகவும் குரு சிஷியன் முதலிய பேதமாகவும் பிர்ம்மமே விளங்குகிறது. தத்துவ தெரிசனத்தினலே சுத்தப்பிர்ம்ம மாத்திரமே விளங்குகிறது. வித்தையுமில்லை. அவித்தையுமில்லை. ஜகத்துமில்லை. மற்றொன்றுமில்லை. சத்தியம்போல் ஜகத் தோற்றுதல் சம்சாரப் பிரவிருத்தியை யுண்டாக்குகிறது. ஜகத் அஸத்தியமாக தோற்றுதல் சம்சாரத்தினுடைய நிவிருத்தியைச் செய்கிறது.

[illegible]

[illegible] — குறிப்புள்ளது குறிப்பற்றது என்கிற நடத்தையைவிட்டு ஆத்மமாத்திரமாக வெவனிருக்கிறானோ உத்தமனான இந்த பிர்ம்மவித்தானவன்தான் சாக்ஷாத் சிவனே. ஜீவித்துக்கொண்டிருந்தாலும் எப்போதும் முக்தனே. அந்தப் பிர்ம்மவித்தானவன் கிருதார்த்தனே. உபாதிநாசத்தினாலே பிர்ம்மமாகவே இருந்துகொண்டு இரண்டாவதில்லாத பிர்ம்மமாகவே யிருக்கிறான். நடனம் செய்கிறவன் வேஷம் போட்டுக்கொண்டிருந்தாலும் போடாமலிருந்தாலும் எப்படி அவன் புருஷனோ அப்படி சிரேஷ்டனான பிர்ம்மவித்தானவன் பிர்ம்மத்தைத்தவிர வேறில்லை. கெடாகாசமானது கெடம் போனதினாலே சுவயமாகாசமாகவே யிருக்கிறது போல் உபாதிநாசத்தினாலே பிர்ம்மவித்தானவன்தான் பிர்ம்மமேயாகிறான். பாலில் பாலையும் எண்ணெயில் எண்ணெயையும் ஜலத்தில் ஜலத்தையும் கலந்தால் எப்படி யொன்றாய்ச் சேர்ந்துபோகிறதோ அப்படியே ஆத்மவித்தாகிற முனியானவன் ஆத்மாவில் கலந்து போகின்றான். *** வஸ்து விருக்கிறதென்கிற நம்பிக்கை யேதோ இல்லையென்கிற நம்பிக்கையேதோ இவ்விரண்டும் புத்தியின்குணமேயன்றி நித்தியமான வஸ்துவுக்கில்லை. ஆகையால் அவைகளும் பெந்தமோக்ஷங்களும் ஆத்மாவுக்கில்லை. நிஷ்களனாயும் கிரியையற்றவனாயும் சாந்தனாயும் நிர்தோஷனாயும் பற்றற்றவனாயும் இரண்டாவதற்றவனாயும் ஆகாசத்தைப் போலுமிருக்கிற ஆத்மாவிடத்தில் கற்பனையேது? பிரளயமுமில்லை. உற்பத்தியுமில்லை. பெத்தனுமில்லை. ஸாதனை செய்கிறவனுமில்லை. முமுக்ஷுவுமில்லை. முக்தனுமில்லை. இதுதான் வாஸ்தவமானது. ஆத்மோபநிஷத்.

---

[illegible]

[illegible]

ஜகஜ்ஜீவாதிரூபேண பஶ்யந்நபி பராத்மவித் । ந தத்பஶ்யதி சித்ரூபம் ப்ரஹ்மவஸ்துவிபஶ்யதி *** ப்ரஹ்மவிச்ச ஸகிஞ்ஜாநாத் தஸ்ய ப்ரஹ்மாத்மைநவத: ।—இந்தவித்தை அவித்தைகள் வியவகார திருஷ்டியினலேயேயன்றி வேறில்லை. தத்துவமாய்ப்பார்த்தால் இல்லவேயில்லை. கேவலமான தத்துவம்தா னிருக்கிறது. * * * தனக்கு சகலமும் எப்போது சுவயமாகவே பிர்ம்மசுவரூபம் விளங்குகிறதோ அப்போது நிஜம்போல் விளங்கிக்கொண்டிருக்கிற துக்கம்முதலான இந்தபேதம் விளங்குகிறதில்லை. பரமாத்ம ஞானியானவன் ஜகத்தை ஜீவன்முதலான ரூபமாய்ப் பார்த்தாலும் அதை சித்ரூபமான பிர்ம்மவஸ்துவென்று பார்க்கிருனேயன்றி வேறே விதமாயல்ல. * * * பிர்ம்மஞானி யானவன் ஞானத்தினலே சகலமும் பிர்ம்மசுவரூபமென்றே கிரகிக்கிருன்.

அஸ்திபாதிப்ரியம் ரூபம் ப்ரஹ்மணோ லக்ஷணம் । அஸ்தி தல்லக்ஷணம் ஸத்தா ஸத்தா ப்ரஹ்ம ந சாபரா । நாஸ்தி ஸத்தாதிரிக்தஸ்ய நாஸ்தி மாயா ச வஸ்துத: । யோகிநாமாத்மநிஷ்டாநாம் மாயா ஸ்வாத்மநி கல்பிதா । ஸாக்ஷிரூபதயா பாதி ப்ரஹ்மஜ்ஞாநேந பாதிதா । ப்ரஹ்மஜ்ஞாநவதோ நைவ ப்ரதீதமகிலம் ஜகத் । பஶ்யந்நபி ஸதா நைவ பஶ்யதி ஸ்வாத்மந: ப்ருதக் ।—இருக்கிறதென்ருல் அந்த இருப்பே சுவரூபம். இருக்கிறதென்கிற சுவரூபம் பிர்ம்மலக்ஷணமே. இருக்கிறதென்கிற லக்ஷணம்தான் சத்தும். அந்த சத்தும் பிர்ம்மமேதவிர வேறல்ல. ஸத்தைக் காட்டிலும் வேறென்றுமில்லை. வாஸ்தவத்தில் மாயையென்பது மில்லை. ஆத்மநிஷ்டர்களாயிருக்கிற யோகிகளுக்கு மாயையானது ஆத்மாவிடத்தில் கற்பிக்கப்பட்டது. சாக்ஷிரூபமாய் மாயை விளங்குகிறது. பிர்ம்மஞானத்தில் அது பாதிக்கப்படுகிறது. பரப்பிர்ம்ம ஞானமுடையவன் தோற்றப்பட்ட சகல ஜகத்தையும் பார்த்துக்கொண்டிருந்தாலும் தனக்கன்னியமாக பார்க்கிறதில்லை. பாசுபதப் பிர்ம்மோபநிஷத்.

---

த்ரயோதசாத்யாயபரிசிஷ்டம்.

பஞ்சமபரிசிஷ்டம்.

ததேவ நிஷ்கலம் ப்ரஹ்ம நிர்விகல்பம் நிரஞ்ஜநம் । தத்ப்ரஹ்மாஹமிதி ஜ்ஞாத்வா ப்ரஹ்ம ஸம்பத்யதே த்ருவம் । *** ஸகலம் ஸகலாதாரம் ஸர்வாதாரமுபேக்ஷிதம் । ஸகலாபாஸமாத்மைவ த்ருஶ்யதே ஜகதம் த்ருவம் । ஸர்வவ்யாபகமாகாஶம் நீலரூபேண த்ருஶ்யதே । ஸம்பூர்ணமபி சாகாஶம் ததா ஜீவோ நிராமய: । *** ஸர்வதேஹகதம் ஜ்ஞாநம் க்ஷீரஸர்பிர்வதஞ்சிதம் । க்ஷீரவத்ஸர்வதோ ஜ்ஞாநம் ஸர்வதேஹேஷு ஸம்ஸ்திதம் । ஜ்ஞாநநேத்ரம் ஸமாதாய ஸமுத்தரேத்வஹ்நிவத் । நிஷ்கலம் நிஶ்சலம் ஶாந்தம் ப்ரஹ்மாஹமிதி ஸம்

ஹமேரச । — அந்தப்பிர்ம்மமே நிஷ்களமாயும் நிர்விகற்பமாயும் பாப மற்றதாயு மிருக்கிறது. அந்தப்பிர்ம்மம் "நானே" என்றறிந்து கிரமமா யந்தப் பிர்ம்மமேயாகிறான். *** ஒருவனே யாகிய பூதாத்மாவான வன் ஒவ்வொரு பூதங்களிலு மிருக்கிறான். ஜலத்தில் சந்திரன் போல ஒன்றாயும் பலவாயும் காணப்படுகிறான். கெடம்கொண்டு போகப் படுகையில் அதிலிருக்கிற ஆகாசம் கொண்டுபோகப் படுகிறதில்லை. கெடம் மட்டும் தான் கொண்டுபோகப்படுகிறதுபோல ஜீவனும் ஆகா சத்திற்கு உவமையாக விருக்கிறான். *** அநேக வருணங்களுள்ள பசுக்களானாலும் அவைகளின்பால் ஒரேவருண முள்ளது. ஞானமா னது பால்போல காணப்படுகிறது. லிங்கங்களோ (பிரபஞ்சத்தில் காணப்படுகிற பலவிதரூபங்களோ) பசுக்கள்போலிருக்கின்றன. (நெய் யானது பாலில் மறைந்திருப்பதுபோல ஞானமானது மறைந்திருக் கிறது.) ஞானநேத்திரத்தை யடைந்து நிஷ்களம் நிச்சலம் சாந்தம் இப்படியாயிருக்கிற மகத்தான பரமபதமாகிற பிர்ம்மம் "நானே" என்று ஸ்மரிக்கவேண்டியது. திருபுராதாபிந்தியுபநிஷத். ஐந்தாவதுபநிஷத். (இந்த உபநிஷத்திலுள்ள இந்தவாக்கியங்களை அமிருதபிந்தூபநிஷத்திலும் காண்க.)

---

கடோபநிஷத்.

ஜ்ஞாத்வா ப்³ரஹ்மாஹமஸ்மீதி ப்³ரஹ்மைவ ப⁴வதி ஸ்வயம் । *** ஸர்வத்ர பூர்ணம் ப்³ரஹ்ம நாந்யத³ஸ்தி கிஞ்சந । *** ஸத்³ரூபம் பரம் ப்³ரஹ்ம த்ரிபரிச்சே²த³வர்ஜிதம் । யதா³ஹ்யேவைஷ ஏதஸ்மிந்நுத³ரமந்தரம் குருதே । அஜ்ஞாநாத் ததா³ தஸ்ய ப⁴யம் ஸ்யாந்நாத்ர ஸம்ஶய: । — பிர்ம்மம் "நானாக விருக்கிறேன்" என்று தெரிந்தால் தானே பிர்ம்மமாகிறான். *** பிர்ம்மம் சகலத்திலும் பூர்ணமா யிருக்கிறது. வேறொன்று மில்லை. *** சத்ரூபமா யிருக்கிறதே பரபிர்ம்மம். அது (காலதேச வஸ்துவாகிற) மூன்று பரிச்சேதமுமற்றது. இந்த மனிதன் இந்தப் பிர்ம்மத்தினிடத்தில் எப்போது அற்பமாகிலும் பேதத்தை யறிகிறா னோ அப்போதவனுக்குப் பயமுண்டாகிறது. இதில் சந்தேகமில்லை. கடோபநிஷத்.

---

ஸ்ரீருத்ரஹ்ருத³யோபநிஷத்.

க⁴டாகாஶம் மடா²காஶம் யதா²காஶப்ரபே⁴த³த: । கல்பிதம் பரமௌ ஜீவஶிவரூபேண கல்பிதௌ । தத்த்வதஶ்ச ஶிவ: ஸாக்ஷாச்சிஜ்ஜீவஶ்ச ஸ்வத: ஸதா³ । *** த்ரிகைகஸ்ய பரிஜ்ஞாநே ந பே⁴தோ³ ப⁴வதி க்வசித் । ஏகமேவாத்³வயம் ப்³ரஹ்ம நாநா ஶிவம் யாதி தத்³ஏகத்வம் । அதி⁴ஷ்டா²நம் ஸமஸ்தஸ்ய ஜக³தஸ்ஸத்யசித்³க⁴நம் । அஹமஸ்மீதி நிஶ்சித்ய வீதஶோகோ ப⁴வேந்முநி: । *** ஆகாஶமேகம் ஸம்பூர்ணம் குத்ரசிந்நைவ க³ச்ச²தி । தத்³வத் ஸ்வாத்மபரிஜ்ஞாநீ குத்ரசிந்நைவ க³ச்ச²தி

மஹதி | யதாகாஶே கல்பிதௌ ஜீவஶிவஸ்வரூபேண | தத்த்வதஶ்ச ஶிவ: ஸாக்ஷாச்சிஜ்ஜீவஶ்ச ஸ்வத: ஸதா | — ஆகாசத்திலே கடாகாசம் மடாகாசம் என எப்படி பேதம் கற்பிக்கப்பட்டிருக்கின்றதோ அப்படிப் போல பரபிர்ம்மத்தினிடத்தில் ஜீவேசுவரர்கள் கற்பிக்கப்பட்டிருக்கிறார்கள். வாஸ்தவத்தில் சிவன் சாக்ஷாத்சித்தே. ஜீவனும் எப்போதும் சுவயம் சித்தே. * * * சித் ஒன்றே யென்கிற ஞானத்தினாலே (ஞானி) சோகத்தை யாவது மோகத்தை யாவது அடைகிறதில்லை. அத்துவைத பரமானந்த சிவனைமாத்திரமே யடைகிறான். சகல ஜகத்திற் காதாரமாயும் சத்தியமாயு மிருக்கிற சித்கனம் "நானாயிருக்கிறேன்" என்று நிச்சயித்து முனியானவன் சோகமற்றவனாகிறான். * * * சம்பூர்ணமாயிருக்கிற ஒன்றான ஆகாசமானது எவ்விடத்திற்கும் போகாததுபோல் தன் ஆத்மாவை யறிந்த ஞானியானவன் எப்போதும் எங்கும் போகிறதில்லை. எந்த முனியானவன் இந்தப் பரபிர்ம்மத்தை யறிகிறானோ தனக்குள்ளேயே பார்க்கிறவும் சச்சிதானந்த மாத்திரமானவும் அவன் பிர்ம்மமாகவே யிருக்கிறான். ருத்திரஹிருதய உபநிஷத்.

---

தர்ஶநோபநிஷத்.

ப்ரதம: கண்ட:.

ஸர்வம் ஸத்யம் பரம் ப்ரஹ்ம ந சாந்யதிதி யா மதி: | தத் ஸத்யம் பரமம் ப்ரோக்தம் வேதாந்தஜ்ஞாநபாரகை: | — சகலமும் சத்தியமான பிர்ம்மமேயன்றி வேறொன்றல்லவென்கிற புத்தி யெதுவோ அதுதான் மேலானதும் சத்தியமானதுமான பரபிர்ம்மமென்று வேதாந்த ஞானத்தை கரைகண்டவர்களால் சொல்லப்பட்டிருக்கிறது. தரிசனோபநிஷத் முதலாவதுகண்டம்.

சதுர்த்த: கண்ட:.

பேதஜநகேऽஜ்ஞாநே நஷ்டே ஜ்ஞாநபலாந்முநே | ஆத்மநோ ப்ரஹ்மணோ பேதமஸந்தம் க: கரிஷ்யதி | — ஓ! முனியே! பேதத்தை யுண்டு பண்ணுகிற அக்ஞானமானது ஞானபெலத்தினாலே நஷ்டமானால் தனக்கும் பிர்ம்மத்திற்கும் இல்லாத பேதத்தை எவன்தான் உண்டுபண்ணிக் கொள்ளுவான். நான்காவது கண்டம்.

நவம: கண்ட:.

ஊர்த்வரேதம் விரூபாக்ஷம் விஶ்வரூபம் மஹேஶ்வரம் | ஸோऽஹமித்யாதரேணைவ த்யாயேத்யோகீஶ்வரேஶ்வரம் | * * * ஆத்மாநமத்விதீயம் ச ... ஸர்வஸாக்ஷிணம் | ஸ்வஸ்வரூபம் ... — ஜிதேந்திரியனையும் முக்கண்ணுடையவனையும் விசுவரூபியாயும் யோகீசுவரர்களுக்கெல்லாம் ஈசுவரனாயு மிருக்கிற மகேச

வரனை விசுவாசத்துடன் அவனே "நான்" என்று தியானிக்கவேண்டியது. * * * ஓ! நல்ல விருதமுடையவனே! சச்சிதானந்தமாயும் அநந்தமாயும் தியானத்திற் கெட்டாததாயு மிருக்கிற ஆத்மாவாகிற பிர்ம்மத்தை முக்தியின்பொருட்டு "நான்-அதாகவிருக்கிறேன்" என்று தியானிக்கவேண்டியது. ஒன்பதாவது கண்டம்.

[illegible]

[illegible] — ஆகையால் அத்துவைதமேயுள்ளது. பிரபஞ்சமுமில்லை பிறப்பிறப்புமில்லை. ஆகாசமானது கடாகாசமென்றும் மடாகாசமென்றும் எப்படி சொல்லப்படுகிறதோ அப்படி அக்ஞானிகளாலே ஆத்மாவானவன் ஜீவனென்றும் ஈசுவரனென்றும் இரண்டுவிதமாய்ச் சொல்லப்படுகிறான். நான் தேகமல்ல. பிராணனுமல்ல. இந்திரியங்களுமல்ல. மனதுமல்ல, நான் எப்போதும் சாக்ஷி சுவரூபனா யிருக்கிறேனாகிறலே சிவனாகவே யிருக்கிறேனென்கிற புத்தி எதுண்டோ அது ஓ! முனிசிரேஷ்ட! சமாதியென்று சொல்லப்படுகிறது. அப்படிப்பட்ட நான் பிர்ம்மமேயன்றி ஸம்சாரியல்ல. என்னைக்காட்டிலும் வேறொன்றுமில்லை. ஸமுத்திரத்திலுண்டாகிற நுரைமுதலியன மறுபடி சமுத்திரத்திலேயே எப்படி லயமடைகிறதோ அப்படி ஜகத்தானது என்னிடத்திலேயே லயமடைகிறது. ஆகையால் ஜகத்தானது மனதை (மனக்கற்பனை) த்தவிர வேறேயில்லை. மாயையுமில்லை.

[illegible] — சகலபூதங்களையும் தன்னிடத்திலும் சகலபூதங்களில் தன்னையும் எப்போது பார்க்கிறானோ அப்போது பிர்ம்மமாகிறான். சமாதியிலிருக்கிறவன் எப்போது சகலபூதங்களையும் பார்க்கிறதில்லையோ (என்றால், தன்னைத்தவிர அந்நியமாக ஒன்றையும் பார்க்கிறதில்லையோவென்பது தாத்பரியம்). அப்போது அவன் பிர்ம்மத்துடனொன்றாகிறான். எப்போது உண்மையாய்த் தன்னை சுத்தனாகவும்

ஜகத் முழுமையு மாயாமாத்திரமாகவும் பார்க்கிறானோ அப்போது மோக்ஷமாகிறது. பத்தாவதுகண்டம்.

---

தாரஸாரோபநிஷத்.

ஓம் யோ ஹ வை ஸ்ரீ பரமாத்மா நாராயண: ஸ பகவாந் தத்பர: பரமபுருஷ: புராணபுருஷோத்தம: நித்யஶுத்தபுத்தமுக்தஸத்யபரமாநந்தாத்வயபரிபூர்ண: பரமாத்மா ப்ரஹ்மைவாஹம் ராமோऽஸ்மி। — ஓம் ஸ்ரீ பரமாத்துமாவாகிய நாராயணனெவனோ அவன் பரசுவரூபியான பகவான். பரமபுருஷன், புராண புருஷோத்தமன். நித்திய சுத்த புத்த முக்த சத்திய பரமானந்தானந்த அத்துவய பரிபூரணன். அப்படிப்பட்ட பிர்ம்மமாகிற இராமனே "நானாக விருக்கிறேன்" தாரஸாரோபநிஷத்.

---

பஞ்சப்ரஹ்மோபநிஷத்.

ஏகேனைவ து பிண்டேன ம்ருத்திகாயாஶ்ச கௌதம। விஜ்ஞாதம் ம்ருண்மயம் ஸர்வம் ம்ருதபிந்நம் ஹி கார்யகம்। ஏகேந லோஹமணிநா ஸர்வம் லோஹமயம் யதா। விஜ்ஞாதம் ஸ்யாதத்தைகேந நகாநாம் க்ருந்தநேந ச। ஸர்வம் கார்ஷ்ணாயஸம் ஜ்ஞாதம் ததபிந்நம் ஸ்வபாவத:। காரணாபிந்நரூபேண கார்யம் காரணமேவ ஹி। தத்ரூபேண ஸதா ஸத்யம் பேதேநோக்திர்ம்ருஷா கலு। தச்ச காரணமேகம் ஹி ந பிந்நம் நோபயாத்மகம்। பேத: ஸர்வத்ர மித்யைவ தர்மாதேரநிரூபணாத்। அதஶ்ச காரணம் நித்யமேகமேவாத்வயம் கலு। அத்ர காரணமத்வைதம் ஶுத்தசைதந்யமேவ ஹி। — ஓ! கௌதமா, ஒரே மண்கட்டியினா லுண்டான மண்பாத்திரம் முதலானவைகள் மண்ணைக்காட்டிலும் அன்னியமல்லவென்று எப்படி அறியப்படுகிறதோ, ஒரே தங்கத்திலிருந்துண்டான ஆபரணங்க ளெல்லாம் தங்கமயமென்று எப்படி யறியப்படுகிறதோ, இரும்பிலிருந்துண்டான நெகம்வாங்கி முதலானவைகளெல்லாம் இரும்பைத்தவிர வேறல்லவென்று எப்படி யறியப்படுகிறதோ, காரணத்தைக்காட்டிலும் வேறல்லாதகாரியமானது காரணமே யல்லவா? அந்த (க்காரண) ரூபமாய் எப்போது மிருக்கிறதுதான் சத்தியம். அதற்கு பேதமாய்ச் சொல்வது பொய்யே யாகிறது. அக் காரணமொன்றே காரியம் வேறல்ல. உபயாத்து மகமுமல்ல. எவ்விடத்திலும் பேதமென்பது பொய்யே. ஏனென்றால் அதற்கு இன்ன தருமமென்று விதிக்கப்படாததினாலேதான். அக்காரணமானது நித்தியமாயும் ஒன்றாயும் இரண்டாவ தற்றதாயு மிருக்கிறது. அக் காரணமானது இரண்டாவதில்லாத சுத்த சைதன்னியமே யல்லவா. பஞ்ச பிர்ம்மோபநிஷத்.

---

கோபாலதாபிந்யுபநிஷத்.

பரம்ப்ரஹ்மக்ருஷ்ணாத்மகோ நித்யாநந்தைகஸ்வரூப ஸோஹமோம் தத்ஸத் கோபாலோஹமேவ பரம்ஸத்யோபாதிதம் ஸோஹமித்யாத்மா நமேதாய தேநமேவைக்யம்கர்யாதாத்மானம் கோபாலமோஹமிதிபாவயேத் — கிருஷ்ண சுவரூபமாயும் நித்தியானந்த சுவரூபியாயு மிருக்கிற பரபிர்ம்மம் "நானே" அந்த ஓங்கார சுவரூபியான சத்தாகிற கோபாலன் "நானே" சிரேஷ்டமும் சத்தியமும் பாதிக்கப் படாததுமாகிய ஆத்மாவை அவனே நான்" என்று கிரகித்து மனதுடன் ஐக்கம் செய்யவேண்டியது. தன்னை கோபால னென்றே பாவிக்க வேண்டியது. கோபாலதாபினி யுபநிஷத்.

---

யாஜ்ஞவல்க்யோபநிஷத்.

ப்ரணமேத்தண்டவத் பூமாவாச்வசண்டாலகோகரம் । ப்ராஜ்ஞோ ப்ரவிச்ய ஸுமஹாநிதி । ப்ரணமேத்தண்டவத் பூமாவாச்வசண்டாலகோகரம் — ஆத்மஞானியானபோது யாருக்கு நமஸ்காரம் செய்யவேண்டியது? அப்போது அவனுக்குக் கருமத்தினு லாகவேண்டிய தென்னயிருக்கிறது ஒன்றுமில்லை. பகவானை ஈசுவரன் தன் அம்சத்தினுலே ஜீவனைப் பிரவேசித் திருக்கிறுனென்று குதிரை சண்டாளன் பசு கழுதை இவைகளை (பேதபுத்தியைவிட்டு) பூமியில் மரம்போல் விழுந்து நமஸ்காரம் செய்யவேண்டியது. (இதில் முந்தியபாகம் ஆரூடனைப்பற்றியும் பிந்தியபாகம் ஆருருக்ஷுவைப்பற்றியும் சொல்லப்பட்டிருக்கிறதாக கிரகிக்கவேண்டும்.) யாக்ஞ வல்க்கியோபநிஷத்.

---

வராஹோபநிஷத்.

த்விதீயோத்யாயஃ.

ஸ்வவர்ணாச்ரமதர்மேண தபஸா ஹரிதோஷணாத் । ஸாதநம் ப்ரபவேத்பும்ஸாம் வைராக்யாதிசதுஷ்டயம் । நித்யாநித்யவிவேகச்ச இஹாமுத்ரார்தபோகயோஃ । விராகோ ஜாயதே யேந ஸர்வதாஸ்வாமிசோதநம் । ப்ரஹ்மைவாஹமிதிஜ்ஞாநம் ஸர்வசாஸ்த்ரார்தஸங்க்ரஹஃ । ஸாதநேஷு ச ஸர்வேஷு மோக்ஷஹேதுஃ ப்ரகீர்திதஃ *** வித்யாந்தரம் ஸ்வரூபம் தத்ஸாதநம் ஸர்வஸம்மதம் । ஸாக்ஷாத்ப்ரஹ்மைவ நாந்யத்ர ஸர்வம் ப்ரஹ்மவிதாம்வரஃ । *** ஸர்வமேவம் தத்விந்தாம் ஸர்வபூதானி நாந்யதா । ஏகமேவாத்விதீயம் பரமாத்மா ஸ்ருஷ்டிமோசரஃ । ஸாத்விகோ நாந்யதா ஜாதம் பராத்பரமிதம் ஜகத் । ஸ்வாத்மாந்த்யதயா பாவ்யா

[illegible]

“என்னுடைய பூர்ணத்துமாவைத்தவிர ஜகத்ஜீவன் ஈசுவரன் மாயை முதலியவைகளில்லை. அவர்களுக்கு நான் விலக்ஷணன். தருமம் முதலிய லக்ஷணத்தை யுடையதாயும் அக்ஞானந்தகார ரூபமாயு மிருக்கிற கருமமானது சுவப்பிரகாசமாயிருக்கிற ஆத்மாவான என்னைத்தொட யோக்கியமானதல்ல. சர்வசாக்ஷியாயும் வருணாசிரம மற்றதாயுமிருக்கிற (தன்) ஆத்மாவை பிர்ம்ம சுவரூபமாகவே பார்க்கிறவன் பிர்ம்மமே யாகிறான். விளங்கிக்கொண் டிருக்கிற பிரபஞ்சத்தைப் பிரகாச ரூபமாயிருக்கிற பரமபதமாக வேதாந்தப் பிரமாணத்தினால் பார்க்கிறவன் உடனே மோக்ஷமடைகிறான். சின்மாத்திரமாயும் எங்கும் பாவியதாயும் நித்தியமாயும் சம்பூர்ணமாயும் சுகரூபமாயும் நாசமற்றதாயுமிருக்கிறதுதான் உண்மையான பிர்ம்மம். அதைத்தவிர வேறொன்று மில்லை யென்பதுதான் பிர்ம்மஞானிகளுடைய இருப்பு. * * * சகலமான தேகத்தை யுடையவர்களுடைய (ஜீவர்களுடைய) சுவசுவரூபமோ எப்போதும் சின்மாத்திரம்தான். கண்ணுக்குக் காணப்படுகிற (வடம்) குடம்போல் தேகாதி சங்காதங்கள் (தேகம் முதலாயுள்ள தத்துவக்கூட்டங்கள்) இல்லவே யில்லை. ஆத்மாவைவிட அந்நியமாகத் தோற்றுகிற சராசரப் பிரபஞ்சங்களை உன்னுடைய ஆத்மாவாகவே அறிந்து “அது நானாகி யிருக்கிறேன்” என்று பாவனைசெய். (அப்படி பாவனை செய்கிறவன்) சுவ சுவரூபத்தைத் தானே யனுபவிக்கிறான்,

தன்னைக் காட்டிலும் போக்கிய (அனுபவிக்கத்தக்க) வஸ்து வேறில்லை. இருக்கிறதென்கிற வஸ்து இருக்குமானால் அப்படி யிருக்கிற லக்ஷணத்தை யுடையது பிர்ம்மந்தான். பிர்ம்மஞானத்தை விசேஷமா யுடையவன் பிரசித்தமா யிருக்கிற ஜகத்தை எப்போதும் பார்த்துக்கொண் டிருந்தாலும் தன் ஆத்மாவைக் காட்டிலும் அந்நியமாகப் பார்க்கிறதில்லை. * * * "நானே" பிர்ம்மமென்று அறிந்தால் அது சாக்ஷாத்காரமென்று சொல்லப்படுகிறது. யோகியானவன் தன் ஆத்மாவைக் கேவலம் (பூர்ணம்) ஆக எப்போது அறிகிறானோ அதுமுதல் ஜீவன் முக்தனாகிறான். "நானே" பிர்ம்மமென்று (அஹம்ப்ரஹ்மேதி) எப்போது மிருப்பது மகாத்துமாக்களுக்கு மோக்ஷ ஹேதுவா யிருக்கிறது. * * * மகா காசத்தில் கடாகாச மடாகாசம்போல சிதாகாசமா யிருக்கிற என்னிடத்தில் ஜீவேசுவரர்கள் கற்பிக்கப்பட் டிருக்கிறார்கள். (ஜீவேசுவரர்களாகிய) ஆத்மாவின் சிருஷ்டிக்கு முந்தி எதானது இல்லையோ. அப்படியே முடிவிலும் எதானது தள்ளப்பட்டதோ, அதானது மாயையென்று விவேகத்தினாலே பிர்ம்ம ஞானிகளால் சொல்லப்படுகிறது. மாயையும் அதின் காரியமும் நசித்துப் போனால் ஈசுவரத்துவமு மில்லை. ஜீவத்துவமு மில்லை. * * * தனக்குள்ளே பிரம்மபாவத்தைச் சேர்க்காமல் (ஜீவ பிரம்ம ஐக்கியம் செய்யாமல்) போனால் ஜீவபாவம் போகிறதில்லை. உண்மையான அத்துவைதம் அறியப்பட்டதானால் (விஷய) வாசனை போய் விடுகிறது. (வாசனையற்றால்) பிராரப்தம் போனபின் தேகம் வருகிறதில்லை. இவ்விதமாய் மாயை முழுதும் நசித்துப்போகிறது நிச்சயம். ஜகத்திருக்கிறதென்றால (அப்படி) இருக்கிறதென்பது சத்ரூபமான பிரம்மமே. ஜகத்விளங்குகிறதென்றால். அப்படி விளங்குகிறது பிரம்மம் தான். பாலை நிலத்தின் தோற்றமான ஜலம் முழுதும் பாலை பூமியே யன்றி வேறில்லை. தன்சுவரூப விசாரத்தினால் இந்த மூன்றுலோகமும் (சுவர்க்க மர்த்திய பாதாளம்) சித்சுவரூப மாத்திரமே. ஜீவன், ஈசுவரன், குரு இப்படிப்பட்ட பேதமுள்ள கதைக்கு வெகுதூரத்தி லிருக்கிற ஏகாந்த கேவலசித்தேகரஸ சுவபாவமான பிர்ம்மத்தினிடத்தில் அக்ஞானமே இல்லை. (அப்படியிருக்க) ஜகத்தினுடைய பிரஸ்தாபமேது. பரிபூர்ணமாகவே யிருக்கிற (அந்த) பிர்ம்மம் நானாகி யிருக்கிறேன் வராகோபநிஷத் இரண்டாவதத்தியாயம்.

---

த்ருதீயோத்யாய:.

நஹி நாநாஸ்வரூபம் ஸ்யாதேகம் வஸ்து கதாசந । தஸ்மாதகண்ட ஏவாஸ்மி யந்மதந்யந்ந கிஞ்சந । த்ருஶ்யதே ஶ்ரூயதே யத்யத் ப்ரஹ்மணோ‍ந்யந்ந தத்பவேத் । நித்யஶுத்தவிமுக்தைகமகண்டாநந்தமத்வயம் । ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் யத்பரம்ப்ரஹ்மாஹமேவ தத் । — ஒரு வஸ்துவானது யா

தொருகாலத்திலும் பலசுவரூபமாக வாகமாட்டாது. அகண்டமாய் (இடைவிடாததாய்) இருக்கிறேனாகையால் என்னைத்தவிர வேறே யாதொன்று மில்லை. எதெது காணப்படுகிறதோ, எதெது கேட்கப்படுகிறதோ அவைகளெல்லாம் பிர்ம்மத்தைத்தவிர வேறேயா யிருக்கவில்லை. நித்தியமாயும் சுத்தமாயும் விமுக்தமாயும் ஏகமாயும் அகண்டானந்தமாயும அத்துவயமாயும் சத்தியமாயும் ஞானமாயும் அநந்தமாயுமுள்ள பரபிர்ம்ம மெதுவோ அதுவே நானாக விருக்கிறேன். மூன்றாவ தத்திபாயம்.

---

ஹயக்ரீவோபநிஷத்.

ப்ரஜ்ஞாநம் ப்ரஹ்ம, அஹம் ப்ரஹ்மாஸ்மி, தத்த்வமஸி அயமாத்மாந்தர்யாம்ய ம்ருத꞉, அஹம் ப்ரஹ்மாஸ்மீதி மஹாவாக்யை꞉ ப்ரதிபாதிதம் அர்த்தம் மந்த்ரா꞉ ப்ரதிபாதயந்தி — பிரக்ஞானமே பிர்ம்மம் "நான் பிர்ம்மமா யிருக்கிறேன்" அது நீயாயிருக்கிறாய் இந்த ஆத்மா அந்தர்யாமியாயும் அமிருதனாயு மிருக்கிறான். "நானே பிர்ம்மமாயிருக்கிறேன்" என்கிற மகாவாக்கியங்களினாலே வெளிப்படுத்தப்பட்ட அர்த்தத்தை அந்த இந்த மந்திரங்கள் வெளியாக்கின்றன. ஹயக்கிரீவோபநிஷத்.

---

ஸரஸ்வதீரஹஸ்யோபநிஷத்.

மயி ஜீவத்வமீஶத்வம் கல்பிதம் வஸ்துதோ நஹி । இதி யஸ்து விஜாநாதி ஸ முக்தோ நாத்ர ஸம்ஶய꞉॥ — என்னிடத்தில் ஜீவத்தன்மையும் ஈசுவரத் தன்மையும் கற்பிக்கப்பட் டிருக்கிறது. வாஸ்தவத்திலில்லை. இப்படி எவனறிகிறானோ அவன் முக்தனே சந்தேகமில்லை. ஸரஸ்வதீ ரஹஸ்யோபநிஷத்.

---

பஹ்வ்ருசோபநிஷத்.

ப்ரஜ்ஞாநம் ப்ரஹ்மேதி வா அஹம் ப்ரஹ்மாஸ்மீதி வா பாஷ்யதே தத்த்வமஸீத்யேவ ஸம்பாஷ்யதே । அயமாத்மா ப்ரஹ்மேதி வா ப்ரஹ்மைவாஹமஸ்மீதி வா । யோऽஹமஸ்மீதி வா ஸோऽஹமஸ்மீதி வா யோऽஸௌ ஸோऽஹமஸ்மீதி வா யா பாவ்யதே ஸைஷா ஷோடஶீ ஶ்ரீவித்யா பஞ்சதஶாக்ஷரீ । — பிரக்ஞானம் பிர்ம்மமென்றாவது, நான் பிர்ம்மமா யிருக்கிறேனென்றாவது சொல்லப் படுகிறதோ, அது நீயாயிருக்கிறாயென்றாவது சொல்லப் படுகிறதோ, இந்த ஆத்மா பிர்ம்மமென்றாவது, பிர்ம்மமே நானாக விருக்கிறேனென்றாவது. எவன் (உண்டோ அவன்) நானாக விருக்கிறேனென்றாவது, அவன் நானேயென்றாவது, யாதொரு இவனுண்டோ அவன் நானாக விருக்கிறேனென்றாவது எது பாவனைசெய்யப்படுகிறதோ அது (பிர்ம்

மம்) ஷோடசீ பஞ்சதசாக்ஷரீ யென்கிற ஸ்ரீவித்தையாக விருக்கிறது. பக்விருசோபநிஷத்.

---

முக்திகோபநிஷத்.

த்விதீயோऽத்யாய:.

கபிலெ வா வை வஹ்நிமுத்வம் ஹரிஸ்வரூபம் ஜ்யோதிஸ்வரூபம் ... ஹே மாருதே! உள்ளேயிருக்கிற ஜோதியை (ஜோதிசுவ ரூபமான ஆத்மாவை)ப் பிரயத்தினத்தினால் தேடவேண்டியது. ஓ! கபிசார்தூலா! ஞானக்ஞானங்களை விட்டு எவன் தானே பிர்ம்மமென் றிருக்கிருனே அவன் பிர்ம்மத்தை யறிந்தவனல்ல. அவன் பிர்ம்மமே. முக்திகோபநிஷத் இரண்டாவ தத்தியாயம்.

இதுவரையில் உதகரித்து வந்திருக்கிற (சஅ) சுருதிகளில் அத் துவைத சுவரூபமாயுள்ள அநேக வாக்கியங்களில் வெகு சிலவாக்கி யங்கள்மட்டும் இதில் எடுத்துரைக்கப்பட்டன. சில உபநிஷத்துக் களை விட்டுவிடவும் நேரிட்டன. ஏனென்றால், இப்புஸ்தகம் மிகவும் விரிந்துபோகிற தென்கிற காரணம் தான். இந்த சுருதிவாக்கியங்கள் ஜீவேசுவரர்கள் பிரபஞ்சம் முதலியன அக்ஞான கற்பிதமென்றும் பிர்ம் மமே சத்தியமா யுள்ளதென்றும் அந்தப் பிர்ம்மத்திற்கு ரூபாதிகளில் லையென்றும் கண்டோக்தமாய்ச் சொல்லியிருக்க, "ஆதித்யவர்ணம்", "ஸுவர்ணஜ்யோதி:" முதலிய சுருதிகள் பிர்ம்மத்திற்கு ரூபம் சொல் லுகின்றனவே என்றாலோ, பிர்ம்மம் அந்தகாரமல்லவென்பதை வெளி யிடவந்த சுருதிகளேயன்றி ரூபத்தை வெளியிடவந்த சுருதிகளல்ல. "உமாஸஹாயம்பரமேஶ்வரம் ப்ரபும் த்ரிலோசநம் நீலகண்டம் ப்ரஶாந்தம்" முதலிய சுருதிவாக்கியங்கள் ருத்திராதி ரூபங்களைச் சொல்லுகின்றன வே என்றாலோ, இப்படிப்பட்ட சுருதிவாக்கியங்களும் இவைகளை அநு சரித்தவைகளான ஸ்மிருதி புராணாதிகளும் வியவகார தெசையை யநுசரித்து நிர்குண பிர்ம்மோபாசனைக்கு அனர்காளான புருஷர்கள் கடத்தேரும் பொருட்டு சகுணோபாசனைக்கு யோக்கியமான ஈசுவரா திரூபங்களை சொல்லுகின்றன. இந்த அர்த்தத்தை "ஸர்வம்ஸந்தயஸ் தாம்ய" "ஸர்வக்ஷராதிமெதகுஹாஷ்யம்" "ஸகியமெதம்த்யகாஸம்" (இதில் அத்-கஉ, சு-க-ரு-ச) முதலிய சுலோகங்களில் காணலாம். இப்படிப் பட்ட நிர்குண உபாசனை சாதாரணமானவர்களுக்கு அசாத்தியமான தால் அவர்களின் பொருட்டு பக்தி விசுவாசம் பிரபஞ்சத்தில் விரக்தி சத்தியம் நம்பிக்கை முதலியவைகளை யுண்டாக்கி அதினால் சித்தசுத்தி யை கிரமக்கிரமமா யடைவிக்க சகுணோபாசனையை சுருதிகள் விதித் திருக்கின்றன. சகுணோபாசனையில் தேர்ச்சியடைந்தவன் நிர்குணோ

பாசனைக்கு யோக்கியனாகிறான். இதெப்படிப்போலென்றால், பூமியை உழுது பயிரிடுபவனுக்கும் நல்ல படிப்பாளியாய் உத்தியோகத்தில் முயல்பவனுக்கும் தன் முயற்சியின லடையவேண்டிய முக்கியமான உத்தேசம் பணமேயல்லவா? பயிரிடுபவன் முதலில் தான்னியாதி களை யடைந்து பிறகு அந்த தான்னியாதி மூலமாய்ப் பணத்தை யடைகிறான். இதற்கு காலதாமஸமும் அதிக சிரமு முண்டாகிறது. உத்தியோகம் செய்பவன் அந்தப்பணத்தை யதிசீக்கிரமா யடைகிறான். பயிரிடுபவன் உத்தியோகத்தை யிச்சித்தால் அதற்குத் தகுந்தபடிப்பு முதலியவைகளை சம்பாதிக்க வெகுகாலப் பழக்கம்வேண்டும். உத்தியோகத்தில் முயற்சி செய்யும்பொருட்டு பயிர்த் தொழிலைமட்டும் விட்டுவிடுவானாகில் தான்செய்த பயிர்த் தொழிலும்போய் உத்தியோகமும் சித்திக்காமல் இரண்டும்கெட்டவ னவான். ஆகையால் ஒவ்வொருவனும் தன்னுடைய புத்தி சக்திமுதலியவைகளை நிதானித்துக்கொண்டு தான் எதில் முயற்சிசெய்யவேண்டுமோ அதை தேடவேண்டிய தற்காக சுருதியானது பலவித உபாஸனைகளை விதிக்கின்றன.

மேல் சொல்லப்பட்ட ஈசுவராதிகளைப்போல ரூபமில்லாத பிரம்மத்தை அறிவதும் அறிந்தபடி நிஷ்டைசெய்வதும் எப்படிக் கூடுமென்றாலோ, பிரம்மஞானமானது பிரம்மத்தினுடைய ஆகார ரூபங்களை யறிவதல்ல, பிரம்மசுவரூபத்தை யறிவதே. ஆகாரமென்றால், உயரம் குட்டை முதலியன. ரூபமென்றால், கறுப்பு சிவப்பு முதலியன. சுவரூபமென்றால், அகண்டாகாரமாய் மாறுதலன்றி ஒரேவிதமா யெப்பவுமிருக்கிறது. ஆகாரம் ரூப மிவைகள் மாறுதலை யடையப்பட்டவைகள். சுவரூபம் மாறாத்தன்மையே. அதெப்படியென்றால், ஜலத்தி னகாரமானது இடத்திற்குத்தக்கபடி பெரியதாயும் சிறிதாயும் காணும். அப்படியே சேர்க்கைக்குத் தக்கபடி சிவப்பு வெளுப்பு முதலிய ரூபங்களையும் அடைந்ததாகக்காணப்படும். ஆனபோதிலும் ஜலசுவரூபம் மாறமாட்டாது. அந்த இடம் சேர்க்கைமுதலிய உபாதியை நீக்கிப்பார்த்தால், ஜலசுவரூபத்தில் மாறுதலே யிருக்கமாட்டாது. அப்படிப்போல பிரம்ம சுவரூபம்மாறாத சுவரூபமே. அந்த சுவரூபமெதென்றால், நிர்மலத்துவம் சூக்ஷ்மத்துவம் ஞானம் ஆநந்தமுதலியவைகளே. இப்படிப்பட்ட பிரம்மசுவரூபஞானத்தை குருபதேசத்தின லடைந்து பிரபஞ்சத்தை மறந்து உபதேசித்தபடி யிடைவிடாமல் தியானம் செய்வது தான் பிரம்மநிஷ்டை என்று சொல்லப்படுகிறது. சாதாரணமானவன் இந்தநிஷ்டையை அடைவது அசாத்தியம். ஏனென்றால், உலகத்திலுள்ள வர்களெப்போதும் விஷயஞான முள்ளவர்களாகவே யிருக்கிறார்கள். அதாவது - தேகமே ஆத்மாவென்று சிலரும் இந்திரியங்களே ஆத்மாவென்று சிலரும் விக்ஞானமே ஆத்மாவென்றும் சிலரும் தேகத்திற்குள் பிரகிருதி சம்பந்தமில்லாமல் அவ்வியக்தமாயும் (காணப்படாத தாயும்) அவித்தியாசுவ ரூபமாயும் அவ்வியாகிருதமென்கிற பெரையுடைய

தாயு மிருக்கிறதே ஆத்மாவென்று சிலரும் பலவித அக்ஞானங்களால் வாஸ்தவமான ஆத்மசுவரூபத்தை யறியாமல், விபரீதஞான முள்ள வர்களாயும் விஷயங்களில் ஆசையுள்ளவர்களாயு மிருக்கிறார்கள். அவர்களுக்கு வாஸ்தவமான ஆத்மஞான மெப்படியுண்டாகும்? இப்படிப் பட்ட அக்ஞானிகளுக்கு பிரம்மம் ஆத்மாவைவிட அந்நியமானதாயும் தூரத்திலிருக்கிறதாயும் அந்த பிரம்மஞானம் அசாத்திய மென்பதாயும் தோற்றும். குருபதேசம்பெற்ற ஒருவன் "ஸ்வதேஹமர
"ணிம்க்ருத்வா ப்ரணவம் சோத்தராரணிம் । த்யாந நிர்மத நாப்யாஸாத்
"தேவம் பஶ்யேந் நிகூடவத் । திலேஷு தைலம் ததநீவ ஸர்பி ராப
"ஸ்ஸ்ரோதஸ்ஸ்வரணீஷு சாக்நி: । ஏவமாத்மாத்மநி க்ருஹ்யதே ஸௌஸத்ய
"தேநம் தபஸா யோநுபஶ்யதி — தன்தேகத்தை அரணியாக
"வும் பிரணவத்தை (ஓம் என்ற அக்ஷரத்தை) மத்தாகவுஞ் செய்து
"கொண்டு கடைதலாகிய தியானப்பியாசத்தால் காணப்படாமலிரு
"க்கிற பிரம்மத்தை யறிவான். (எப்படியென்றால்), எள்ளில் எண்
"ணெய்யும் தயிரில் வெண்ணெய்யும் பூமிக்குள் ஜலமும் அரணியில்
"அக்கினியும் காணப்படாமலிருந்தாலும் அவைகள் வெளிப்படுவது
"போல சத்தியத்தினாலும் தபசினாலும் தேடுவோனுக்கு அவனுக்குள்
"ளேயே பிரம்மம் விளங்கும்" என்று சுவேதாசுவதர உபநிஷத்து முதல் அத்தியாயம் கச-கரு-வாக்கியங்களில் சொல்லப்பட்டிருக்கிறபடிக்கு, அப்பியாசம் செய்பவனுக்கு பிரம்மமானது சுவசுவரூபமாகவும் சமீபத்திலிருக்கிறதாகவும் ஆநந்தமய மாகவும் சுலப சாத்தியமானதாகவும் தோற்றும். இதே அர்த்தமானது "ப்ரத்யக்ஷாவகமம் தர்ம்யம் ஸுஸுகம் கர்துமவ்யயம்" (அத் - கூ, சு - உ.) என்கிற சுலோகத்தினால் சொல்லப்பட்டிருக்கிறது.

சிலர் பிரம்மஞானநிஷ்டை அசாத்தியமான தென்கிறார்கள். சத்குருவின் உபதேசம் பெறாமலும் பிரம்மத்தைத் தெரிவிக்கும் பிரமாணங்களை விசாரிக்காமலும், விஷயங்களிலாசை அவித்தையினாலுண்டாயிருக்கிற வஸ்துக்களில் கருத்திருத்துவாபிமானம் தன்னுடையதென்கிற மமதை இவைகளையுடையவர்களாயும், எப்பவும் விபரீத புத்தியுடன்கூடியு மிருக்கிறவர்களுக்கு நிராகார பிரம்மசுவரூப ஞானமுண்டாவது அசாத்தியமே. ஆனால், சத்குருபதேசம் பெற்று வேதசாஸ்திராப்பியாசங்கள் செய்து ஆசை அகங்கார மமகாரங்களை விட்டு துவைத பாவனையைத்தள்ளி ஆத்மாவைத்தவிர அந்நியமான வஸ்துக்களில்லை யென்கிற நம்பிக்கையுடன் முயல்பவனுக்கு பிரம்மஞானம் அதிசுலபமானது. இந்த அர்த்தமானது "யாநிஶா ஸர்வபூதா நாம்" என்கிற (அத் - உ, சுலோகம் - கூகூ,) இடத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

ஆத்ம சுவரூபஞான முண்டாக வேண்டுமானல் விஷய வாசனை (பற்றுதல்) விடவேண்டியது. விஷயவாசனை விடவேண்டு மானல் விஷயங்களில் வைராக்கிய முண்டாகவேண்டும். வைராக்கிய முண் டாகவேண்டுமானல் வேதாந்த சாஸ்திரத்தை குருமுகமாய் அறிந்து கொண்டு விஷயங்களை நசுவரமாக அறியவேண்டும். அப்படிச் செய் வதனல் விஷயவாசனை விட்டுப்போகும். ஒவ்வொருவனும் செய்ய வேண்டிய சகல முயற்சியும் விஷயவாசனையை விடும் பொருட்டே யன்றி ஆத்மசுவரூப பிரகாசமாகிய மோக்ஷத்தை யடையும் விஷ யத்தில் முயற்சிசெய்வது ஒன்றுமில்லை. பிரசித்தமாய் நானென்று பிரகாசித்துக்கொண்டே இருக்கிற ஆத்மசுவரூபமானது ஒருவனல் விடத்தகுந்ததுமல்ல. ஒருவனல் அடையத்தகுந்ததுமல்ல. தேகாதி களை ஆத்மாவென்று அறிவது பிரமை (தப்பபிப்பிராயம்). வாஸ்தவத் தில் தேகாதிகள் ஆத்மாவல்ல. ஒருவன்தன் தேகத்தின் அளவு எவ் வளவென்று தெரியவேண்டுமானலை சாஸ்திராதிகளை விசாரிக்காமலே எப்படி தன்கையினல் அளந்தறியக் கூடுமோ, அப்படிப்போல தன் ஆத்மசுவரூபத்தை அறிவதற்கு சுவாநுபவம் முக்கியமேயன்றி சாஸ் திரவிசாரணை அவசியமல்ல. உபாதியை நீக்கத்தான் சாஸ்திர விசா ரணை உபயோகப்படும். எப்படி யென்றால், தீபமானது ஒரு பாத் திரத்திற்குள் வைத்து மூடப்பட்டிருக்கிறது. அதினல் தீபத்திற் காவது அதின் பிரகாசித்திற்காவது குறைவாவது தோஷமாவது சுவ ரூபத்தில் மாறுதலாவதுண்டோ? ஆனல் அந்த தீபம் அதற்குள் ளிருப்பது நமக்கு விளங்கவில்லை. அந்ததீபம் எதினல் மறைக்கப் பட்டிருக்கிறதோ, அந்த மூடப்பட்டிருக்கிற பாத்திரமாகிய உபாதியை நீக்கினல் தீபம் பிரகாசித்துக்கொண்டிருக்கிறபடியே நமக்கு விளங் கும். தீபம் மூடப்பட்டிருந்தாலும் திறந்திருந்தாலும் அந்தப் பிர காசத்தினுடைய சுவரூபத்திலாவது ஸ்திதியிலாவது யாதொருமாறு தலுமில்லை யாகையால். தீபம் பிரகாசமாகவேண்டுமென்று தீபத்தி னிடத்தில் செய்யவேண்டிய முயற்சி யொன்றுமில்லை. அதின் உபாதி யாகிய மூடப்பட்டிருக்கிற பாத்திரத்தை நீக்கும் விஷயத்தில் தான் முயற்சிசெய்யவேண்டும். அப்படிப்போல அவித்தையினு லுண்டா யிருக்கிற விஷயவாசனை நீங்கத்தான் வேதசாஸ்திராதிகளில் முயற்சி செய்யவேணுமேயன்றி ஆத்மாவை யறிய முயற்சியொன்று மில்லை.

மேல்கண்ட சுருதிவாக்கியங்களால் பிரதிபாதிக்கப்படுகிற பிரம் மம் வாஸ்தவமாயுள்ளதானல் ஏன் நமக்கு விளங்கவில்லை யென்றாலோ குருபதேசம் வேதாந்தசாஸ்திரார்த்த விசாரம் சப்தாதி விஷயங்களில் பற்றுதலைவிடுதல் முதலியவைகளினல் "பஹூநாஂ ஜந்மநாமந்தே ஜ்ஞாநவாந்மாஂ ப்ரபத்யதே" (அத் - எ, சு - கக) என்கிற வாக்கியப்படி பலஜன்மங்களில் பிரயத்தினம்செய்து அப்பியாசத் (பழக்கம்) தினல்

சுவானுபவமடைந்து அதினால் பிரம்மசுவரூபம் விளங்கவேண்டிய தேயன்றி சாதாரணமா யறிந்துகொள்ளத்தக்கதுமல்ல, ஒருவனால் நிரூபித்துக் காட்டத்தக்கதுமல்ல. அப்படி நிரூபித்துக்காட்டக்கூடிய தல்ல வென்றதினாலேயே ஆத்மா இல்லையென்று சொல்லக்கூடாது. எப்படி என்றால். தேன் கற்கண்டு முதலிய வஸ்துக்களைப் புசித்த வன் அவைகள் ருசியாயிருக்கின்றன வென்றும் இராஜபோகத்தை யனுபவித்தவன் அதிகசுகம் அனுபவித்ததாகவும் சொல்லுகிறான். அதைக்கேட்ட தேன் கற்கண்டு சாப்பிட்டிராதவனும் போகத்தை யனுபவியாம லிருப்பவனும் ருசி எப்படியிருக்கும் சுகம் எப்படி யிருக்குமென்றுகேட்டால் அவனுக்கு எவ்விதமாய் நிரூபிக்கக்கூடும்? நிரூபித்துக் காட்டக்கூடவில்லை யென்றதினால் அப்படிப்பட்ட வஸ் துவேயில்லையென்று நிச்சயம் கொள்ளலாமோ? ருசியும் சுகமும் எப் படி அனுபவத்தால் அறியப்பட்டதோ, அனுபவிக்காதவன் அனுப வித்தபின் எப்படி அறிந்துக்கொள்ள கூடுமோ, இப்படிப்போல பிரம்ம சுவரூபமானது அனுபவத்தினாலேயே யறியத்தகுந்தது. ருசி க்கும் சுகத்திற்கும் எப்படி ஆகாரம் அல்லது ரூபமில்லாவிட்டாலும் அவ்வஸ்து இருக்கிறது வாஸ்தவமோ, அப்படிப்போல பிரம்ம சுவரூ பமும்வாஸ்தவமே. அதை ஞானத்தினா லறியக் கூடுமென்பதும் வாஸ் தவமே. அந்த ஞானநிஷ்டையை யடைந்தவன் பிரம்ம சுவரூபமாய் பிரகாசிப்பதும் வாஸ்தவமே.

பிரம்மஞானநிஷ்டையானது ஒரு ஆகாரம் ரூபம் இவைகளைப் பற்றியதல்ல வென்பதும் அதிப்படிப்பட்ட தென்பதும் உபநிஷத்து களில் பலவிடங்களில் சொல்லப்பட் டிருக்கின்றன. அவைகளில் சில இவ்விடத்தில் குறித்துக் காட்டப்படுகின்றன. சாந்தோக்கிய உபநிஷத் சு - வது அத்தியாயத்தில், உத்தாலகருடைய புத்திரராகிய சுவேதகேது என்பவர் பன்னிரண்டுவருஷம் வேதாத்தியயனம் செ ய்துவிட்டு அவர் பிதாவினிடம் சென்று தனக்கு பிரம்மவித்தையை உபதேசிக்க வேண்டுமென்று கேட்க அவர் அப்படியே சொல்லத் தொடங்கினார். அந்த அத்தியாயம் முழுவதும் அவருடைய உபதே சங்க ளடங்கி யிருந்தாலும் அவைகளில் மூன்றுவிதமான உபதேசங் கள்மட்டும் இவ்விடத்தில் குறிக்கப்படுகின்றன அவையாவன - மேற் படி அத்தியாயம் கஉ - கங - கச, கண்டங்கள்.

"ந்ருஹெராயஸயஉைத ஆஷமொகதி; ஐஉஂஹமவ ஐதி; ஹிஙீதி; ஹிந்நஂ
"ஹமவ ஐதி; கிஉதூவஶூஷீதி; கணூ ஐவெஉாயாநாஹமவ ஐதி; ஆ
"ஷாஉஂவெமகாஂஹிஙீதி; ஹிந்நாஹமவ ஐதி; கிஉதூவஶூஷீதி; நகிஜெந
"ஹமவ ஐதி; தஂவெஷாவாவ; யஂவெவெஷாவெஉூத உணிஉாநஂ நநிஷாஐ
"யஷ, வணதஷூவெவெஷா வெஉூஷெணி ஐணவஂ உஷாநூவெராய

"திஷ்டதி; ஶ்ரத்தத்ஸ்வ ஸோம்யேதி; ஸ ய ஏஷோ(அ)ணிமைததாத்ம்யமிதம் ஸர்வம்;
"தத்ஸத்யம்; ஸ ஆத்மா; தத்த்வமஸி ஶ்வேதகேதோ இதி; பூய ஏவ மா ப
"கவாந் விஜ்ஞாபயத்விதி; ததா ஸோம்யேதி ஹோவாச; லவணமேததுத
"கே(அ)வதாயாத ப்ராதர்மோபஸீதா இதி; ஸ ஹ ததா சகார; தம் ஹோ
"வாச- யத்தோஷா லவணமுதகே(அ)வாதா அங்க ததாஹரேதி; தத்தாவம்ருஶ்ய
"ந விவேத; யதா விலீநமேவ; அங்காஸ்யாந்தாதாசாமேதி; கதமிதி; லவண
"மிதி; மத்யாதாசாமேதி; கதமிதி; லவணமிதி; அந்தாதாசாமேதி; கதமிதி;
"லவணமிதி; அபிப்ராஸ்யைதமதமோபஸீதா இதி; தத்ததா
"சகார; தச்சஶ்வத் ஸம்வர்ததே; தம் ஹோவாசாத்ர வாவ கில ஸத் ஸோம்ய ந நி
"பாலயஸே(அ)த்ரைவ கிலேதி; ஸ ய ஏஷோ(அ)ணிமைததாத்ம்யமிதம் ஸர்வம்;
"தத்ஸத்யம் ஸ ஆத்மா தத்த்வமஸி ஶ்வேதகேதோ இதி; பூய ஏவ மா ப
"கவாந் விஜ்ஞாபயத்விதி; ததா ஸோம்யேதி ஹோவாச; யதா ஸோம்ய பு
"ருஷம் காந்தாரேப்யோ(அ)பிநத்தாக்ஷமாநீய தம் ததோ(அ)திஜநே விஸ்ருஜேத்;
"ஸ யதா தத்ர ப்ராங்வா உதங்வா அதராங்வா ப்ரத்யங்வா ப்ரத்மாயீதாபிநத்தாக்ஷ ஆ
"நீதோ(அ)பிநத்தாக்ஷோ விஸ்ருஷ்டஃ; தஸ்ய யதாபிநஹநம் ப்ரமுச்ய ப்ரப்ரூயா
"தேதாம் திஶம் காந்தாரா ஏதாம் திஶம் வ்ரஜேதி; ஸ க்ராமாத் க்ராமம் ப்ருச்சந்
"பண்டிதோ மேதாவீ காந்தாராநேவோபஸம்பத்யேதைவமேவேஹா
"சார்யவாந் புருஷோ வேத; தஸ்ய தாவதேவ சிரம் யாவந்ந விமோ
"க்ஷ்யே(அ)த ஸம்பத்ஸ்ய இதி; ஸ ய ஏஷோ(அ)ணிமைததாத்ம்யமிதம் ஸர்வம் த
"த்ஸத்யம் ஸ ஆத்மா தத்த்வமஸி ஶ்வேதகேதோ இதி" — (உத்தாலகர் புத்திர
ரைப்பார்த்து) "இந்த நியக்கிரோத (ஆலமரம்) மரத்தின் பழமொன்று
" கொண்டுவா என்றார். (புத்திரன்) இதோ கொண்டுவந்தேன் பக
" வானே என்றார் (பிதா) அதையுடையென்றார். (புத்திரன்) உடைத்
" தேன் பகவானே என்றார். (பிதா) அதில் என்ன காணப்படுகிற
" தென்றார். (புத்திரன்) வெகு சிறியவித்துக்கள் காணப்படுகின்றன
" வென்றார் (பிதா) அன்புள்ளவனே அவைகளிலொன்றை யுடையென்
" றார். (புத்திரன்) பகவானே இதோ உடைத்தேனென்றார். (பிதா)
" அதில் என்னகாண்கிறா யென்றார். (புத்திரன்) ஒன்றுமில்லை பகவா
" னே என்றார். (பிதா) அதிலிருக்கிற எந்த அணு உன்னால் காணப்பட
" வில்லையோ, அந்த அணுவிலிருந்துதான் இவ்வளவுபெரிய ஆலமா
" முண்டா யிருக்கிறது. (அதுபோலவே அணுவான சத்திலிருந்து
" இந்தப்பெரிதான ஜகத்துண்டா யிருக்கிறது) அன்புள்ளவனே பிர
" வசிப்பாயாக. இந்த அணுத்தான் இவற்றிற்கெல்லா மாத்மா. அதுசத்
" தியம். அது ஜகத்திற்கெல்லா மாத்மா. நீயதுவாயிருக்கிறாய் சுவே
" தகேதுவேயென்றார். (புத்திரன்) அதை மறுபடியும் விளக்குவீராக
" வென்று கேட்க (பிதா) அப்படியே யென்றார். (பிதா) இந்த உப்பை

" அந்த ஜலத்தில் போட்டுவிட்டு நாளைக்காலமே என்னிடம் வாவென்
" ஹுர். (புத்திரன்) அப்படியே செய்தார். (பிதா) குழந்தாய் நேற்று
" ராத்திரி நீ இந்த நீரில்போட்ட உப்பை யெடு என்ஹுர். உப்பு
" கரைந்துபோனபடியால் விளங்கவில்லை. (பிதா) அந்த நீரில் மேல்
" புறத்தில் கொஞ்சமெடுத் தாசமனம் செய்யென்ஹுர். (புத்திரன்)
" அப்படியே செய்தார். (பிதா) அதெப்படி யிருக்கிறதென்ஹுர். (புத்
" திரன்) அது உப்புக்கரிக்கிற தென்ஹுர். (பிதா) நடுவில் கொஞ்ச
" மெடுத் தாசமனம்செய்; எப்படி யிருக்கிறது என்ஹுர். (புத்திரன்)
" உப்புக் கரிக்கிறதென்ஹுர். (பிதா) அடியில் கொஞ்சமெடுத் தாசம
" னம்செய்; அதெப்படி யிருக்கிற தென்ஹுர். (புத்திரன்) அது உப்புக்
" கரிக்கிறதென்ஹுர். (பிதா) ஆனல் அதைக் கொட்டிவிட்டு, வாயைக்
" கழுவிவிட்டு என்னிடம் வா என்ஹுர். அவர் (புத்திரன்) அப்படி
" செய்துவிட்டு நீரில் கரைத்த உப்பு அதிலெங்கும் நித்தியமா யிருக்
" கிறதென்ஹுர். (பிதா) சத்தியமு மப்படியே குழந்தாய்! நீ அதைக்
" காணுவிடினும், அது இந்த தேகமெங்கும் வியாபித் திருக்கிறது.
" இவற்றிற் கெல்லாம் ஆத்மாவாகிய அணுசத்தியம். அது ஜகத்திற்
" கெல்லாம் ஆத்மா. நீ அதுவாக விருக்கிருய் சுவேதகேதுவே! என்
" ஹுர். (புத்திரன்) அதை மறுபடியும் விளங்குவீராக வென்ஹுர்.
" (பிதா) அப்படியே என்ஹுர். (பிதா) குழந்தாய்! ஒருவனைக் கண்
" ணைக்கட்டி காந்தார தேசத்தி னின்றும் வெளியில் கொண்டுபோய்
" விட்டுவிட்டால், அவன் நான் கண்ணைக்கட்டி காட்டில் விடப்பட்
" டேனென்று முறையிடுவான். பிறகு ஒருவன் அவன் கண்கட்டை
" யவிழ்த்து, காந்தார தேசத்திற் கிதுவழி—இந்தவழியே போ வென்
" கிஹுன். புத்தியுள்ளவன் ஊருக் கூர் கேட்டுக்கொண்டு கடைசி
" யாக காந்தாரத்தைச் சேருகிஹுன். இவ்வாறே தகுந்த ஆசாரியனை
" யுடையவன் அறிவான். பிராரப்தக்ஷய மாகிறதுதான் தாமசம்.
" அது ஆனவுடன் முக்தனுகிஹுன். இவற்றிற்கெல்லாம் ஆத்மாவாகிய
" அணுசத்தியம். அது ஜகதாத்மா. நீயதுவா யிருக்கிருய் சுவேத
" கேதுவே! என்ஹுர்."

கேநோப நிஷத்து முதல்கண்டம் மூன்ருவது வாக்கியம் முதல் எட்டாவது வாக்கியம் வரையில் இவ்வாறு சொல்லப் படுகிறது. அதாவது—

"𑌨 𑌤𑌤𑍍𑌰 𑌚𑌕𑍍𑌷𑍁𑌰𑍍𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 𑌨 𑌵𑌾𑌗𑍍𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 𑌨𑍋 𑌮𑌨𑌃; 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌮𑍋 𑌨 𑌵𑌿𑌜𑌾𑌨𑍀-
"𑌮𑍋 𑌯𑌥𑍈𑌤𑌦𑌨𑍁𑌶𑌿𑌷𑍍𑌯𑌾𑌤𑍍. 𑌅𑌨𑍍𑌯𑌦𑍇𑌵 𑌤𑌦𑍍𑌵𑌿𑌦𑌿𑌤𑌾𑌦𑌥𑍋 𑌅𑌵𑌿𑌦𑌿𑌤𑌾𑌦𑌧𑌿;
"𑌇𑌤𑌿 𑌶𑍁𑌶𑍍𑌰𑍁𑌮 𑌪𑍂𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂 𑌯𑍇 𑌨𑌸𑍍𑌤𑌦𑍍𑌵𑍍𑌯𑌾𑌚𑌚𑌕𑍍𑌷𑌿𑌰𑍇. 𑌯𑌦𑍍𑌵𑌾𑌚𑌾𑌨-
"𑌭𑍍𑌯𑍁𑌦𑌿𑌤𑌂 𑌯𑍇𑌨 𑌵𑌾𑌗𑌭𑍍𑌯𑍁𑌦𑍍𑌯𑌤𑍇; 𑌤𑌦𑍇𑌵 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌤𑍍𑌵𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌨𑍇𑌦𑌂 𑌯𑌦𑌿𑌦-
"𑌮𑍁𑌪𑌾𑌸𑌤𑍇 𑌯𑌨𑍍𑌮𑌨𑌸𑌾 𑌨 𑌮𑌨𑍁𑌤𑍇 𑌯𑍇𑌨𑌾𑌹𑍁𑌰𑍍𑌮𑌨𑍋 𑌮𑌤𑌂; 𑌤𑌦𑍇𑌵
"𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌤𑍍𑌵𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌨𑍇𑌦𑌂 𑌯𑌦𑌿𑌦𑌮𑍁𑌪𑌾𑌸𑌤𑍇. 𑌯𑌚𑍍𑌚𑌕𑍍𑌷𑍁𑌷𑌾 𑌨 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌯𑍇𑌨

“சக்ஷூம்ஷி பச்யதி; ததேவ ப்ரஹ்ம த்வம் வித்தி நேதம் யதிதமுபாஸதே.
“யச்ச்ரோத்ரேண ந ச்ருணோதி யேந ச்ரோத்ரமிதம் ச்ருதம்; ததேவ ப்ரஹ்ம
“த்வம் வித்தி நேதம் யதிதமுபாஸதே. யத்ப்ராணேந ந ப்ராணிதி யேந
“ப்ராண: ப்ரணீயதே; ததேவ ப்ரஹ்ம த்வம் வித்தி நேதம் யதிதமுபாஸதே.
“—அதை (பிரம்மத்தை)க் கண்ணாவது வாக்காவது மனதாவது எட்டு
“கிறதில்லை. அதை நாம் அறியோம். அதைத் தெரிவிக்கும் வழியும்
“நமக்குத் தெரியாது. அது தெரிந்ததற்கு வேறாயும் தெரியாத
“தற்குப் புறம்பாயு மிருக்கிறதென்று பெரியோர்சொல்லக் கேட்
“டிருக்கிறோம். எதுவாக்கினால் விளங்கவில்லையோ, எதினால் வாக்கு
“விளங்குகிறதோ, அதுவே பிரம்மமென்று நீயறி. எதை யிதுவென்
“று பாசிக்கிறார்களோ அது வல்ல. எது மனதினால் நினைக்கிறதில்லை
“யோ, எதினால் மனதானது நினைக்கப்பட்டதாகச் சொல்லப்படுகிற
“தோ, அதுவே பிரம்மமென்று நீயறி. எதை யிதுவென் றுபாசிக்
“கிறார்களோ அதுவல்ல. எது கண்களால் காணுகிறதில்லையோ,
“எதினால் (ஒருவன்) கண்களைக் காண்கின்றானோ, அதுவே பிரம்ம
“மென்று நீயறி. எதை இதுவென் றுபாசிக்கிறார்களோ, அதுவல்ல.
“எது காதினால் கேழ்க்கிறதில்லையோ, எதினாலிந்தக் காது கேட்கப்
“படுகிறதோ, அதுவே பிரம்மமென்று நீயறி. எதை யிதுவென்று
“உபாசிக்கிறார்களோ அதுவல்ல. எது பிராணவாயுவினால் சுவாசிக்
“கிறதில்லையோ, எதினால் பிராணவாயு சுவாசிக்கிறதோ, அதுவே
“பிரம்மமென்று நீயறி. எதை யிதுவென்று பாசிக்கிறார்களோ
“அதுவல்ல.”

முண்டகோபநிஷத்து ௩-வது அத்தியாயம் முதல்கண்டம் எட்டாவது வாக்யத்தி லிவ்வாறு சொல்லப்படுகிறது. அதாவது—

“நசக்ஷுஷா க்ருஹ்யதே நாபிவாசா நாந்யைர்தேவைஸ்தபஸா கர்மணா
“வா; ஜ்ஞாநப்ரஸாதேந விசுத்தஸத்வஸ்ததஸ்து தம் பச்ய
“தே நிஷ்கலம் த்யாயமாந:.—அவர் (பிரம்மம்) கண்களாலாவது வாக்
“கினாலாவது மற்ற இந்திரியங்களாலாவது தபசினாலாவது கருமத்தி
“னாலாவது கிரகிக்கப்படமாட்டார். அவரருளிய பிரசாதமான ஞா
“னத்தினாலே சித்தசுத்தியை யுடையவன் தியானித்துக் கொண்டே
“நிரவயவமான பிரமத்தை யறிகிறான்.”

கேநோபநிஷத்து இரண்டாவது கண்டம் ௧௧-வது வாக்யம் ௩-வது அனுவாகத்தி லிவ்வாறு சொல்லப்படுகிறது. அதாவது—

“யஸ்யாமதம் தஸ்ய மதம் மதம் யஸ்ய ந வேத ஸ:; அவிஜ்ஞாதம் விஜா
“நதாம் விஜ்ஞாதமவிஜாநதாம்.— (பிரம்மத்தை) அறியேன் என்பவன்

“ அறிவான். அறிவேன் என்பவ னறியான். (பிரம்மம்) தெரியு
“ மென்பவர்களுக்குத் தெரியாது. தெரியா தென்பவர்களுக்குத் தெ
“ ரியும்.”

மாண்டூக்கியோபநிஷத்து எ - வது வாக்கியத்தி லிவ்வாறு சொல்
லப்பட்டிருக்கிறது. அதாவது—

“நாந்த:ப்ரஜ்ஞம் ந பஹிஷ்ப்ரஜ்ஞம் நோபயத:ப்ரஜ்ஞம் ந ப்ரஜ்ஞாநக
“ நம் ந ப்ரஜ்ஞம் நாப்ரஜ்ஞம் அத்ருஷ்டம் அவ்யவஹார்யம் அக்ராஹ்யம் அலக்ஷ
“ ணம் அசிந்த்யம் அவ்யபதேஶ்யம் ஏகாத்மப்ரத்யயஸாரம் ப்ரபஞ்சோப
“ஶமம் ஶாந்தம் ஶிவம் அத்வைதம் சதுர்த்தம் மந்யந்தே ஸ ஆத்மா ஸ விஜ்ஞேய:.
“ —(அந்த பிரம்மமானது) சுவப்னுவஸ்தையை யுடையது (தைஜஸன்
“ என்கிற ஜீவன்) மல்ல, ஜாக்கிர அவஸ்தையையுடையது (விசுவ
“ னென்கிற ஜீவன்) மல்ல, ஜாக்கிர சுவப்னங்களுக்கு மத்தியமான அவ
“ ஸ்தையை யுடையதுமல்ல, நித்திராவஸ்தையை யுடையது (பிராக்கிய
“ னென்கிற ஜீவன்) மல்ல, இம்மூன் றவஸ்தைகளிலுள்ள வஸ்துக்களை
“ ஒரேகாலத்தில் அறிகிறதுமல்ல, ஜடமுமல்ல, பார்க்கக் கூடியது
“ மல்ல, நிரூபித்துக் காட்டத்தக்கதுமல்ல, கருமேந்திரியங்களால் கிர
“ கிக்கத்தக்கதுமல்ல, ஊஹத்தினுல் அறியத்தக்கதுமல்ல, நினைப்புக்
“ கெட்டினதுமல்ல, வாக்கினுல், (வேதங்களால்) அறியத்தக்கதுமல்ல,
“ (ஆனுலோ) சுவானுபவத்தினுலேயே யறியத்தகுந்தது, ஜாக்கிரம்
“ முதலிய அவஸ்தையற்றது, விகாரமற்றது, மங்களகரமானது, மூன்
“ றுவித பேதமற்றது. (அதாவது—ஸஜாதீயம் - விஜாதீயம் - ஸ்வகதம் -
“ என்கிற பேதங்களற்றது. ஸஜாதீய பேதமற்றதென்ருல், தன்னைப்
“ போல் சேதனமான வேறுவஸ்துவையுடைய தல்லாதது. விஜாதீய
“ பேதமற்றதென்ருல், தன்னைத்தவிர வேறு ஜடவஸ்துவையுடைய தல்
“ லாதது. சுவகதபேதமற்றதென்ருல், அவயவமற்றது.) இப்படிப்பட்
“ டதை (துரீயமென்கிற) நாலாவதாக எண்ணுகிருர்கள். (எண்ணுகி
“ ருர்க ளென்றதினுல் வாஸ்தவமல்ல வென்ருகிறது. ஏனென்ருல், மூந்
“ தியவைகளான ஜாக்கிரம் முதலிய மூன்றவஸ்தையும் வாஸ்தவமானு
“ லல்லவா இதை நாலாவது அவஸ்தையாகச் சொல்லக்கூடும். அந்த
“ மூன்றவஸ்தையும் வாஸ்தவமல்ல வாகையால் துரீயா வஸ்தையும்
“ வாஸ்தவமல்ல.) இதுதான் ஆத்ம சுவரூபம் இதைத்தான் அறிய
“ வேண்டியது.”

சாந்தோக்கிய உபநிஷத்து அ - வது அத்தியாயம் கஉ - வது கண்
டத்தில் இவ்வாறு சொல்லப்படுகிறது. அதாவது—

“ஆகாஶோ வை நாம நாமரூபயோர் நிர்வஹிதா தே யதந்தரா
“தத் ப்ரஹ்ம தத³ம்ருதம் — பெயரும் (பெயருக்குக் காரணமாகிய) ரூப
“மும் உடையது ஆகாசம். அவற்றிற்குப் புறம்பானது எதுவோ, அது
“பிரம்மம். அது அமிருதம்”

கடோபநிஷத்து ௬-வது வல்லி ௯-வது வாக்கிய மிவ்வாறு சொல்லுகிறது. அதாவது—

“ந ஸந்த்³ருஶே திஷ்ட²தி ரூபமஸ்ய ந சக்ஷுஷா பஶ்யதி கஶ்சனைந
“ம் ஹ்ருதா³ மனீஷா மனஸாபி⁴க்ல்ருப்தோ ய ஏதத்³விது³ரம்ருதாஸ்தே ப⁴வந்தி—
“இதற்கு (பிரம்மத்திற்கு) ரூபம் (நமது) பார்வையிலில்லை. இதை
“ஒருவனும் கண்ணால்பார்க்கிறதில்லை. நிச்சயரூபமான யதார்த்த ஞான
“த்தினாலே அறியப்படுகிறது. இதையறிந்தவர்கள் அமிருதத்துவத்தை
“(மோட்சத்தை) யடைகிறார்கள்.”

பிரசிநோப நிஷத் நாலாவது பிரசினம் ௧௦-வது வாக்கிய மிவ்வாறு சொல்லுகிறது. அதாவது—

“ஸ யோ ஹ வை தத³ச்சா²யமஶரீரமலோஹிதம் ஶுப்⁴ரமக்ஷரம் வேத³
“யதே யஸ்து ஸோம்ய ஸ ஸர்வஜ்ஞ: ஸர்வோ ப⁴வதி — ஓ! அன்புள்ளவ
“னே! எவன் அதை (பிரம்மத்தை) நிழலற்றது சரீரமற்றது வருணம
“மற்றது ஒளியுள்ளது அழிவற்றது என்று அறிகிறானோ, அவன் சக
“லத்தையும் அறிந்தவனாகவும் சகலமும் தானாகவு மாகிறான்.”

இந்த வாக்கியங்களினாலும் பின்னு மநேகப் பிரமாணங்களினாலும் பிர்ம்மமாகிற ஆத்ம சுவரூபம் இந்திரியங்களுக்குப் புலப்படாதென்றேற் படுகிறது. ஆத்ம சுவரூப பிரகாசமுண்டாகிறதற்குபாய மெதுவெனில், இந்திரியங்களை மனதுட னடக்கிக்கொண்டு ஒரே நிலையிலிருக்கிற சமாதிதான். ஆகையால் ஒவ்வொரு முமுக்ஷுவும் வமாந்தவனாய் வீண் காலம் போக்காமல் ஆத்மசுவரூபக்ஞானமடைய முயலவேண்டும். இந்த அர்த்தத்தை சுருதியே சொல்லுகிறது.

கடோப நிஷத் - ௩-வது வல்லி - ௧௪-வது வாக்கியம்.

“உத்திஷ்ட²த ஜாக்³ரத ப்ராப்ய வராந்நிபோ³த⁴த க்ஷுரஸ்ய தா⁴ரா
“நிஶிதா து³ரத்யயா து³ர்க³ம் பத²ஸ்தத் கவயோ வத³ந்தி — (அஞ்ஞான
“உறக்கத்தினின்றும்) விழித்து எழுந்திருங்கள். சிரேஷ்ட மானவர்
“களை யடைந்து பிரம்ம ஞானத்தை சம்பாதியுங்கள். (ஏனெனில்)
“அதை அறிந்துகொள்ளும் வழியானது வெகு கூரான கத்தியின்
“முனையில் நடப்பதுபோல வெகு கடினமானதென்று சான்றோர் சொ
“ல்லுகிறார்கள்”

கேனோபநிஷத்து ௨-வது கண்டம் ௫-வது வாக்கியம்—

“𑌇𑌹 𑌚𑍇𑌦𑌵𑍇𑌦𑍀𑌦𑌥 𑌸𑌤𑍍𑌯𑌮𑌸𑍍𑌤𑌿 𑌨 𑌚𑍇𑌦𑌿𑌹𑌾𑌵𑍇𑌦𑍀𑌨𑍍𑌮𑌹𑌤𑍀 𑌵𑌿𑌨𑌷𑍍𑌟𑌿𑌃
“𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌵𑌿𑌚𑌿𑌤𑍍𑌯 𑌧𑍀𑌰𑌾𑌃 𑌪𑍍𑌰𑍇𑌤𑍍𑌯𑌾𑌸𑍍𑌮𑌾𑌲𑍍𑌲𑍋𑌕𑌾𑌦𑌮𑍃
“𑌤𑌾 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 — இப்பிறப்பில் (பிரம்மத்தை) அறிந்துகொண்டால் பிறகு
“நிலையுண்டாகும். இப்பிறப்பில் அறியாவிட்டால் பெரும் நஷ்டமுண்
“டாகும். பூதங்கள்தோறும் பிரம்மத்தைக் காணும் தீரர்கள் இவ்வுல
“கத்தைவிட்டு நித்தியபதவியை அடைகிறார்கள்.”

---

௫௧. 𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌾 𑌵𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌯𑌾 𑌯𑍁𑌕𑍍𑌤𑍋 𑌧𑍃𑌤𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌨𑌿𑌯𑌮𑍍𑌯 𑌚।
𑌶𑌬𑍍𑌦𑌾𑌦𑍀𑌨𑍍𑌵𑌿𑌷𑌯𑌾𑌂𑌸𑍍𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌰𑌾𑌗𑌦𑍍𑌵𑍇𑌷𑍌 𑌵𑍍𑌯𑍁𑌦𑌸𑍍𑌯 𑌚॥

௫௨. 𑌵𑌿𑌵𑌿𑌕𑍍𑌤𑌸𑍇𑌵𑍀 𑌲𑌘𑍍𑌵𑌾𑌶𑍀 𑌯𑌤𑌵𑌾𑌕𑍍𑌕𑌾𑌯𑌮𑌾𑌨𑌸𑌃।
𑌧𑍍𑌯𑌾𑌨𑌯𑍋𑌗𑌪𑌰𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌂 𑌸𑌮𑍁𑌪𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌃॥

௫௩. 𑌅𑌹𑌂𑌕𑌾𑌰𑌂 𑌬𑌲𑌂 𑌦𑌰𑍍𑌪𑌂 𑌕𑌾𑌮𑌂 𑌕𑍍𑌰𑍋𑌧𑌂 𑌪𑌰𑌿𑌗𑍍𑌰𑌹𑌮𑍍।
𑌵𑌿𑌮𑍁𑌚𑍍𑌯 𑌨𑌿𑌰𑍍𑌮𑌮𑌃 𑌶𑌾𑌨𑍍𑌤𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌭𑍂𑌯𑌾𑌯 𑌕𑌲𑍍𑌪𑌤𑍇॥

| | |
|---|---|
| 𑌵𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌯𑌾* | பரிசுத்தமான |
| 𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌾† | நிச்சயத்துடன் |
| 𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 | கூடினவனும் |
| 𑌧𑍃𑌤𑍍𑌯𑌾‡ | தைரியத்தினாலே |
| 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂§ | புத்தியை |
| 𑌨𑌿𑌯𑌮𑍍𑌯¶ | விஷயங்களிலிருந்து அடக்கியும் |
| 𑌶𑌬𑍍𑌦𑌾𑌦𑍀𑌨𑍍 𑌵𑌿𑌷𑌯𑌾𑌨𑍍 ‖ | சப்தம் முதலிய விஷயங்களை |
| 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 | விட்டும் |
| 𑌰𑌾𑌗𑌦𑍍𑌵𑍇𑌷𑍌 + | விருப்புவெறுப்புகளை |
| 𑌵𑍍𑌯𑍁𑌦𑌸𑍍𑌯 | நீக்கியும் |

---

* (𑌶𑌂) 𑌮𑌾𑌯𑌾𑌰𑌹𑌿𑌤𑌯𑌾—கபடமற்ற. (ரா) ஆத்மசுவரூபத்தை கிரகிக்கிற. (ஸ்ரீ,வி) விஷயத்தில் பற்றுதலற்ற.

† (ஸ்ரீ) சாத்துவிகபுத்தியுடன்.

‡ (ஸ்ரீ) சாத்துவிக தைரியத்தினாலே. (ஸ்ரீ,வி) நிறுத்துகிற சக்தியினாலே.

§ (𑌶𑌂) காரியகாரணரூபமான அந்தக்கரணத்தை. (ரா) (ஸ்ரீ,வி) மனசை.

¶ (𑌶𑌂) சுவாதீனப்படுத்திக்கொண்டு.

‖ (𑌶𑌂) சரீரம் நிலைப்பதற்கு வேண்டிய ஆகாராதிகளைத்தவிர மற்றவிஷயங்களை. (ஸ்ரீ,வி) சப்தாதிகளை யனுபவிக்கவேண்டுமென்கிற இச்சைகளை.

+ (𑌶𑌂) சரீரசம்ரக்ஷணைக்காகத் தன்னுடைய பிரயத்தினமன்றி கிடைத்த அன்னபானாதிகளில் ருசியினாலாசையும் அருசியினால் துவேஷமும்.

| | |
|---|---|
| விவிக்தஸேவீ* | ஏகாந்தமான ஸ்தலத்தில் வாசம் செய்பவனையும் |
| லக்வாஸீ† | மிதமான ஆகாரம் செய்பவனையும் |
| யதவாக்காயமாநஸ:‡ | வாக்கு தேகம் மனசுகளை யடக்கினவனையும் |
| நித்யம்§ | எப்போதும் |
| த்யாநயோகபர:¶ | பிரம்மத்தியானத்தில் விருப்பமுள்ளவனையும் |
| வைராக்யம் ஸமுபாஸ்ரித:‖ | விஷய வைராக்கியத்தை யடைந்தவனையும் |
| அஹங்காரம்+ | அகங்காரத்தையும் |
| பலம்× | தூராக்கிரகம் அல்லது பிடிவாதத்தையும் |

* (ஶம்) காடுகள் நதிக்கரையிலுள்ளமணல்திட்டு பருவதங்களிலுள்ள குகைகள் இப்படிப்பட்ட தனிமையானவிடத்தில் வசிக்கிறவன். (ரா) தன்னுடைய தியானத்திற்கு விரோதமில்லாதவிடத்தி லிருக்கிறவன். (ஸ்ரீ) பரிசுத்தமானவிடத்தி லிருக்கிறவன்.

† (ரா) அதிக உணவு அல்லது சுத்தமாய் உணவையொழித்தல் இவ்விரண்டுமில்லாதவன்.

‡ (ரா) வாக்கு தேகம் மனசுகளைத் தியானத்திற்கு அனுகூலமாய் செய்துகொண்டவன் (ஶ்ரீ,வி) அயோக்கியமான விஷயத்தில் தவிர மற்ற விஷயத்தில் வாக்கு தேகம் மனசுகளை உபயோகிக்கிறவன்.

§ (ரா) தேக முடிவுவரையில் பிரதிதினமும்.

¶ (ஶம்) ஆத்மசுவரூப சிந்தனையானது தியானம், அதிலிடைவிடாம லிருப்பது யோகம், இவைகளில் விருப்பமுள்ளவன். (ரா) ஞானயோகத்தில் விருப்பமுள்ளவன். (ஶ்ரீ,வி) ஞானமாகிற உபாயத்தில் விருப்பமுள்ளவன்.

‖ (ஶம்) காணப்படுகிறவும் காணப்படாதவுமான வஸ்துக்கள் விஷயத்திலாசையை விட்டவன். (ரா) தியானிக்கத்தகுந்த வஸ்துவைத்தவிர மற்றவஸ்துக்களில் வைராக்கியத்தை நாளுக்குநாள் விருத்திசெய்து கொண்டவன்.

+ (ஶம்) தானென்கிற அகங்காரத்தை. (ஸ்ரீ) தான் விரக்தனென்கிற அகங்காரத்தை. (ரா) தேகாதிகளில் ஆத்மபுத்தியை (ஶ்ரீ,வி) தான் கருத்தாவென்கிற அபிமானத்தை.

× (ஶம்) காமராகங்களுடன் கூடிய சக்தியேயன்றி தேகசக்தியல்ல அதாவது—தன்னிடத்திலுள்ள வஸ்துக்கள் தன்னைவிட்டுப் போகாமலிருக்க முயலும் சாமர்த்தியம் காமத்துடன் கூடினசக்தி. தனக்கில்லாதவஸ்துவை சம்பாதிக்கமுயலும் சாமர்த்தியம் ராகத்துடன் கூடின சக்தி. (ரா) அநாத்மாவில் ஆத்மபுத்தியின் விருத்திக்குக் காரணமான வாஸனாபலம். (ஶ்ரீ,வி) தான் அதிக சாமார்த்திய முடையவனென்கிற அபிமானத்தை.

| | |
|---|---|
| 𑌦𑌰𑍍𑌪𑌂* | துன்மார்க்கத்தில் பிரவிருத்தியையும் |
| 𑌕𑌾𑌮𑌂† | ஆசையையும் |
| 𑌕𑍍𑌰𑍋𑌧𑌂‡ | கோபத்தையும் |
| 𑌪𑌰𑌿𑌗𑍍𑌰𑌹𑌂§ | அபிமானத்தையும் |
| 𑌵𑌿𑌮𑍁𑌚𑍍𑌯 | விட்டும் |
| 𑌨𑌿𑌰𑍍𑌮𑌮𑌃¶ | மமதையற்றவனும் |
| 𑌶𑌾𑌨𑍍𑌤𑌃\|\| | ஒழிவை யடைந்தவனுயு மிருக்கிறவன் |
| 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌭𑍂𑌯𑌾𑌯$ | தானே பிரம்மமென்கிற நிச்சயஞானத்தோடிருப்பதின்பொருட்டு |
| 𑌕𑌲𑍍𑌪𑌤𑍇 | யோக்கியனுயிருக்கிருன். |

பரிசுத்தமான நிச்சயத்துடன் கூடினவனும், தைரியத்தினுலே புத்தியை விஷயங்களிலிருந்து அடக்கினவனும், சப்தம் முதலிய விஷயங்களை விட்டவனும், விருப்பு வெறுப்புகளை நீக்கினவனும், ஏகாந்தஸ்தலத்தில் வாசம் மிதமான ஆகாரம் வாக்கு தேகம் மனசு

* (ஶ்ரீ) யோகசாமார்த்தியத்தினுல் துன்மார்க்கத்தில் பிரவிருத்தியை. (ஶம்) அதிக சந்தோஷத்தினுல் தர்ம்மவிரோதமா யுண்டாகிறமதத்தை. (ரா) தேகாபிமானத்தினு லுண்டாகிறமதத்தை. (மீ,வி) தான் பயப்படத்தக்க விஷயத்தில்கூடபயப்படாமலிருத்தலை.

† (ஶ்ரீ) பிராரப்தத்தினுல் கிடைத்த வஸ்துக்களிலாசையை. (ஶம்) விஷயங்களில் ஆசையை.

‡ (ஶ்ரீ) தான் அடைந்த வஸ்துக்களை யபகரித்த அல்லது அழித்தவன் பேரி லுண்டாகிற கோபத்தை. (ஶம்) துவேஷத்தை.

§ (ஶம்) தேகசம்ரக்ஷணத்திலாவது தருமானுஷ்டானத்திலாவது மத்தியில் நேரிடு மனுவசியமான விஷயத்தை.

¶ (ஶ்ரீ) வருந்தாமல் கிடைத்த வஸ்துகளிலும் கூட அபிமான மற்றவன். (ஶம்) தன்தேகத்திலுங்கூட அபிமானமற்றவன், (ரா) தன்னுடையதல்லாத தேகாதிக்கிரியைகளில் தன்னுடையவையென்கிற அபிமானமற்றவன். (மீ,வி) தான்செய்கிற கருமங்கள் தன்னுடையவை யென்கிற அபிமான மற்றவன்.

|| (ஶ்ரீ) சகலவிஷயங்களிலுமிருந்து நிவிருத்திஅடைந்தவன். (ரா) ஆத்மானுபவத்திலேயே சுகமடைந்தவன். (மீ,வி) கோபமுண்டாகத்தக்க விஷயத்திலும் கூட பொறுமையா யிருப்பவன்.

$ (ஶம்) பிரம்மமாகிறதற்கு. (ரா) பிரம்மத்தைப்போ லாகிறதற்கு (மீ,வி) பிரம்ம ஞானத்திற்கு.

களையடக்குதல் எப்போதும் பிர்ம்மத்தியானத்தில் விருப்பம் விஷய வைராக்கியத்தை யடைதல் அகங்காரம் பிடிவாதம் துன்மார்க்கத்தில் பிரவிருத்தி ஆசை கோபம் அபிமானம் இவைகளை விடுதல் மமதையற் றிருத்தல் ஒழிவடைந்திருத்தல் இப்படிப்பட்ட குணங்களை யுடையவனு யிருக்கிறவன் தானே பிரம்மமென்கிற நிச்சயஞானத்தோ டிருப்பதின்பொருட்டு யோக்கியனு யிருக்கிறான். (இவன்தான் ஞானத்தை யடைய யோக்கியனென்பது கருத்து.) (ருக) (ருஉ) (ருங).

---

ருச. ப்ரஹ்மபூத꞉ ப்ரஸந்நாத்மா ந ஶோசதி ந காங்க்ஷதி।
ஸம꞉ ஸர்வேஷு பூதேஷு மத்பக்திம் லபதே பராம்॥

| | |
|---|---|
| ப்ரஹ்மபூத꞉* | தான் பிரம்மமென்கிற நிச்சயமுள்ளவனு யும் |
| ப்ரஸந்நாத்மா† | சாந்தமான மனமுடையவனு யிருக்கிற வன் |
| ந ஶோசதி‡ | விசனப்படுகிறதுமில்லை |
| ந காங்க்ஷதி§ | விரும்புகிறதுமில்லை |
| ஸர்வேஷு பூதேஷு | சகலப்பிராணிகளிடத்திலேயும் |
| ஸம꞉ (ஸந்)¶ | சமமாயிருந்துகொண்டு |
| பராம் | சிரேஷ்டமான |

---

* (ஶம்) பிரம்மத்தை யடைந்தவன் (அதாவது ஜீவன்முக்தன்) (ரா) பிரகாசித்ததாயும் பரிபூர்ண ஞானகாரமாயும் என்னுடைய சேஷமாயுமிருக்கிற சுவரூபத்தை யுடையவன். (ஸ்ரீ,வி) தன்னுடைய மனதை பிரம்மத்தினிடத்திலேயே வைத்திருக்கிறவன், என்றால், இலக்ஷ்மியை அடைந்தவன்.

† (ஶம்) பிரகாசித்த ஆத்மசுவரூபத்தை யடைந்தவன். (ரா) துக்கம் முதலியவைகளிலிருந்து நிவிருத்தியடைந்த சுவரூபமுடையவன். (ஸ்ரீ,வி) தானாகவே விஷயங்களைவிட்டுப் பிரிந்த மனதையுடையவன்.

‡ (ஶம்) தான் தொடங்கினகருமம் முடிவை யடையாததற்காக விசனப்படுகிறதில்லை. (ரா) என்னைத்தவிர இதர வஸ்துக்களைக்குறித்து சோகப்படுகிறதில்லை.

§ (ஶம்) இல்லாததை வேண்டுமென்று அபேக்ஷிக்கிறதுமில்லை. ந ஹ்ருஷ்யதி என்றும் ஒருபாடமுண்டு. அதற்கு, இஷ்டப்பிராப்தியினால் சந்தோஷிக்கிறதில்லையென்று அர்த்தம். (ரா) என்னைத்தவிர வேறொன்றையும் அபேக்ஷிக்கிறதில்லை

¶ (ஶம்) தன்னிடத்தில் சுகதுக்கங்களை எப்படியோ, அப்படியே சகலப்பிராணிகளிடத்திலும் பார்க்கிறவன். (ரா) சகல வஸ்துக்களையும் பொருட்டாயெண்ணுகிறதில்லை, (என்றால், சகலவஸ்துக்களையும் திருணமாய் எண்ணுகிறவன்,)

பக்திம் * — என்னுடையபக்தியை
லபதே — அடைகிறான்.

தான் பிர்ம்மமென்கிற நிச்சயஞானமும், சாந்தமான மனதுமுடையவன் (எதாவது நஷ்டமானதைக் குறித்து) விசனப்படுகிறது மில்லை. (எதாவது தனக்கு வேண்டுமென்று) விரும்புகிறதுமில்லை. சகலப்பிராணிகளிடத்திலேயும் சமமா யிருந்துகொண்டு சிரேஷ்டமான என்னுடைய பக்தியையடைகிறான். (ருச)

---

ருரு. பக்த்யாமாமபிஜாநாதி யாவாந்யச்சாஸ்மி தத்த்வத:।
ததோமாம் தத்த்வதோஜ்ஞாத்வா விசதே ததநந்தரம்॥

| | |
|---|---|
| மாம் | என்னை |
| பக்த்யா | பக்தியினாலே |
| தத்த்வத: | உண்மையாக |
| யாவாந் | எவ்விதபரிமாணமுடையவனாகவும் |
| யச் அஸ்மி | எவ்வித சுவரூபமுடையவனாகவு மிருக்கிறேனோ (அவ்விதமாக) |
| அபிஜாநாதி | தெரிகிறான் |
| தத: | பிறகு |
| மாம் | என்னை |
| தத்த்வத: | உண்மையாக |
| ஜ்ஞாத்வா | அறிந்து |
| ததநந்தரம் | அவ்விதமாயறிந்தஉடன் |
| விசதே | பிரவேசிக்கிறான் (பரமானந்த சுவரூபியாகிறான்.) |

நான் எவ்வித பரிமாணம் சுவரூபம் இவைகளை யுடையவனாயிருக்கிறேனோ, அவ்விதமாக வென்னை பக்தியினா லறிகிறான். அப்படி யறிந்தபிறகு உடனே (தாமசமன்றியில்) பரமாநந்த சுவரூபியாய்விடுகிறான்.

(ஸம்) யாவாநஸ்மி—மாயை முதலான எந்தெந்த உபாதிகளுடன் கூடியிருக்கிறேனோ, யச்சாஸ்மி — உபாதியற்றதாயும் அகண்டமாயும்

---

* (ஸ்ரீ) எங்கும் பிரம்மமென்கிற பாவனையை. (ஸம்) மயி பரமேஸ்வரனாகிய என்னிடத்தில், பக்திம் — சதுர்விதா பஜந்தே மாம் ஜநா: ஸுக்ருதிநோர்ஜுந। ஆர்தோஜிஜ்ஞாஸுரர்தார்தீ ஜ்ஞாநீ ச பரதர்ஷப॥ (அத் - எ - சு - கசு.) என்பதில் நாலாவது வகுப்பாராகிய ஞானிகள்செய்யத்தகுந்த பஜனையை. (நா) அநேக மகிமைபொருந்திய என்னிடத்தில் பிரீதியை அநுபவிப்பதாகிய பக்தியை.

ஞானசுவரூபியாயும் சருவ வியாபியாயும் இருக்கிற எவ்வித சுவரூபமுடையவனு யிருக்கிறேனே அவ்விதமாக, ஊஷிஜாநாதி — தெரிகிருன். "தமெதாஜாoதகூமெதாஜ ஈகூாவிமுமெதத நoதரு" என்றுசொல்லப்பட் டிருப்பதினுலே, ஞானமடைந்து அதற்குப்பிறகு பிரம்மத்தில் பிரவேசிக்கிருனென்று அர்த்தமாகிறதுபோல் தோற்றும். ஞானத்திற்கு பலனெல்லாங் கூடி அவித்தையின் நிவிருத்தியே. அதற்குப்பிறகு அடையவேண்டியதாய் ஒன்றுமில்லே. "கெஷத்ரஜ்ஞoவாவிமாoவிஜிஸவ-ஷெதஷு-வாரத" (அத்-கூ-சு-உ.)என்றபடி க்ஷேத்திரக்ஞன் அகண்ட பிரம்மமாக சொல்லப்பட் டிருக்கிருன். ஜீவனென்கிற பெயரையுடையதானே அந்த அகண்ட பிரம்மமாகையால் அவன் அடையவேண்டிய தொன்றுமில்லே. வேறென்றிருந்தாலல்லவா அதை யடைகிருனென்று சொல்லக்கூடும். அடைகிறதென்ருல், அவித்தியா நிவிருத்தி அடைவதுதான். அதுதான் பிரம்மத்தை யடைகிறதென்று சொல்லப்படுகின்றது. (சுண்ணும்பின் சுவரூபத்தினுல் சுத்தஜலமானது சுண்ணும்பு நிறமாய்க் காணபட்டபோது சுண்ணும்பு ஜலமென்று வியவகரிக்கப்பட்டது. பிரிக்கிற சாதனத்தினுல் சுண்ணும்பு நீக்கப்பட்டபோது ஜலம் சுத்தத்தை யடைந்ததென்று வியவகரிக்கப்படுகிறது. சுண்ணும்பு நீங்கினபிறகு அந்த ஜலம் எதைப்போய் அடைந்தது? சுண்ணும்பு ஜலமென்கிற வியவகாரம் நீங்கியதென்பதே ஜலம் சுத்தத்தை யடைந்ததென்றதினுல் சொல்லப்படுகிறது. அப்படிப்போல) அவித்தியா வஸ்தையிலிருந்த பிரம்மமானது ஜீவனென்று வியவகரிக்கப்பட்டது. அவித்தை நிவிருத்தியாலும் பிரகாசமான ஜீவசுவரூபம் சுவப்பிரகாசமாகவே யிருக்கிறது. இதின் ௫௦-வது சுலோகத்தில் ஞானநிஷ்டையால் பிரம்மத்தை யடைகிருனென்று சொல்லப்பட்டிருக்கிறதே யென்ருல், அவ்விடத்திலு மிந்த அர்த்தந்தான் கிரகிக்கத்தக்கது. நிஷ்டை யின்னதென்று தெரிந்துகொள்ளுவதினுல், அக்ஞான நிவிருத்திக்குச் சாதகமுண்டு. குரு உபதேசித்த சாஸ்திரஞானத்தினுலுண்டானவும், (ஊாநிக்ஷo) அமானித்துவம் முதலிய குணங்களுடன் கூடினவும் ஆத்மாவைத்தவிர வேறே யாதொரு வஸ்துக்களும் தோன்ருமல் தானே பிரம்மமென்கிற நிச்சயத்தோடிருக்கிறவுமான திருடமான அகண்டத்தியான மெதுவோ, அதுதான் ஞானநிஷ்டையென்றுசொல்லப்படுகிறது. "வதுவிா்யாஜநாஃ ஸுக்ருதிநொ" (அத் - எ, சு - கசு.) என்றவிடத்தில் சொல்லப்பட்ட நாலுவித பக்தியில் நாலாவதான ஞானபக்தியே சிரேஷ்டமானது. இதுதான் ஞானநிஷ்டை. இதுதான் ஜீவேசுவர பேதத்தை நிவர்த்திக்கத் தகுந்தது. இதுதான் முடிவான பிரம்மஞானம். இப்படிப்பட்ட ஞானிக்குத்தான் சருவகரும சந்நியாசம் சொல்லப்பட்டிருக்கிறது. இப்படிப் பட்டவனுக்குத்தான் ஆத்ம சுவரூபமாகிற மோக்ஷம் சொல்லப்பட் டிருக்

கிறது. அதற்கு இதைவிட வேறே மார்க்கமில்லை. வேறுமார்க்க மிருப்பதாக நினைத்தால், மேற்கு சமுத்திரத்தை அடைய இச்சை கொண்டு கிழக்கே போவதுபோல் பிரயோஜனப்படாது. இப்போது சொல்லப்பட்ட ஞானநிஷ்டாமார்க்கம் ஒரு மலைபோ லிருக்கிறது. மற்றமார்க்கம் கடுகுபோ லற்பமாகும். ஆகையால், பிரம்மத்தில் பிர வேசிக்கிறதென்கிற வார்த்தைகளுக்கு அகண்டாகார பிரம்ம சுவரூப மாய் விளங்குவதென்பதுதான் தாத்பரியம்.

(ரா) யஶ்சாஸ்மி = சுவரூபத்தினாலேயும் சுவபாவத்தினாலேயும் எப்படிபட்டவனா யிருக்கிறேனோ, யாவாநஸ்மி = எவ்வளவு விபூதி களையுங் குணங்களையு முடையவனாக விருக்கிறேனோ, மாம் = அப் படிப்பட்ட என்னை, பக்த்யா = முன்சொல்லப்பட்ட பக்தியினாலே, தத்த்வத꞉ = உண்மையாக, அபிஜாநாதி = எவன் அறிகிறானோ, தத꞉ மாம் ஜ்ஞாத்வா தத³நந்தரம் = இவ்விதமாய் என்னை யறிந்தபிறகு, தத꞉ = மேல்சொன்ன பக்தியினாலே, மாம் = என்னை, விஶதே = அடை கிறான். இதிலுள்ள "தத꞉" என்கிற பதமானது மேல்சொன்னபக்தி யே மோக்ஷத்திற்கு முக்கிய காரணமென்பதைக் குறித்துக் காட்டு கிறது. "பக்த்யா த்வநந்யயா ஶக்ய꞉" (அத்-கக, சு-ருச;) என்கிற இடத் தில் இந்த அர்த்தம் தான் சொல்லப்பட்டிருக்கிறது.

(மீ,வி) யாவாநஸ்மி = எவ்வித பரிமாண முடையவனாக விருக் கிறேனோ, யஶ்சாஸ்மி = எவ்விதமான நாமரூபங்களோடு கூடியிருக் கிறேனோ, அப்படிப்பட்டவனாக, அதாவது - சகலதேசகாலவியாபியா கவும் சகலகுண பூர்ணனாகவும் திவ்விய நாமரூபங்க ளுடையவனாக வும், மாம் = என்னை, பக்த்யா = இந்த அத்தியாயம் ருச - வது சுலோ கத்தில் சொல்லப்பட்டிருக்கிற பரம பக்தியினாலே, அபிஜாநாதி = தன் யோக்கியதானுசாரமாய், அபிஜாநாதி = எவன் அறிகிறானோ அவன், தத꞉ = அந்த பக்தியினாலேயே, மாம் = என்னை, தத்த்வத꞉ = உண்மையாக, ஜ்ஞாத்வா தத³நந்தரம் = அறிந்தபின்பு, மாம்விஶதே = என்னையடைகிறான். என்றால், முக்தியை அடைகிறானென்று தாத் பரியம். (ருரு)

ருசா. ஸர்வகர்மாண்யபி ஸதா³ குர்வாணோ மத்³வ்யபாஶ்ரய꞉।
மத்ப்ரஸாதா³த³வாப்நோதி ஶாஶ்வதம் பத³மவ்யயம்॥ *

ஸர்வகர்மாண்யபி † { நித்திய நைமித்திகங்களாகிய சகல கருமங் களையும்

* இந்த சுலோகத்தை கூர்மபுராணம் உத்திரபாகம் அத்-கக-ல் காண்க.

† (ரா) நித்தியநைமித்திக காம்மியகருமங்களை, (மீ,வி) விஹிதமான சகல கருமங்களையும்.

| | |
|---|---|
| 𑌸𑌦𑌾 | எப்பவும் |
| 𑌕𑍁𑌰𑍍𑌵𑌾𑌣𑌃 | செய்கிற |
| 𑌮𑌦𑍍𑌵𑍍𑌯𑌪𑌾𑌶𑍍𑌰𑌯𑌃* | என்னையே ஆசிரயித்தவன் |
| 𑌮𑌤𑍍𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌾𑌤𑍍 | என்னுடைய அநுக்கிரகத்தினால் |
| 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌂† | சாசுவதமானவும் (அநாதி) |
| 𑌅𑌵𑍍𑌯𑌯𑌂‡ | நாசமற்றதானவும் |
| 𑌪𑌦𑌂§ | ஸ்தானத்தை |
| 𑌅𑌵𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 | அடைகிறான். |

நித்திய நைமித்திக கருமங்களை எப்பவும் செய்துகொண்டு என்னையே ஆசிரயித்திருக்கிறவன் என்னுடைய அநுக்கிரகத்தினால் சாசுவதமானவும் நாசமற்றதானவும் ஸ்தானத்தை யடைகிறான்.

(ஸ்ரீ,வி) இதிலுள்ள 𑌅𑌪𑌿 - சப்தமானது எந்தக் கருமத்தையும் ஈசுவராராதனை ரூபமாகவே செய்யவேண்டுமென்பதைக் குறிக்கிறது.

---

௫௭. 𑌚𑍇𑌤𑌸𑌾𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌮𑌯𑌿𑌸𑌨𑍍𑌨𑍍𑌯𑌸𑍍𑌯𑌮𑌤𑍍𑌪𑌰𑌃।
𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌯𑍋𑌗𑌮𑍁𑌪𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑍍𑌯 𑌮𑌚𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑌃𑌸𑌤𑌤𑌂𑌭𑌵॥

| | |
|---|---|
| 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿¶ | சகலகருமங்களையும் |
| 𑌚𑍇𑌤𑌸𑌾‖ | மனதினாலே |
| 𑌮𑌯𑌿 | என்னிடத்தில் |
| 𑌸𑌨𑍍𑌨𑍍𑌯𑌸𑍍𑌯+ | ஒப்பிவித்து (அர்ப்பித்து) |

---

* (ஶா०) வாசுதேவனாகிய என்னையே ஆசிரயமாகவுடைத்தானவன். என்றால், என்னிடத்தில் ஒப்பிவிக்கப்பட்ட மனது முதலியவைகளை யுடையவன். (ரா) பகவானே சகலத்திற்கும் கருத்தா என்று எண்ணி யிருக்கிறவன். (ஸ்ரீ,வி) என்னுடைய ஆராதனை ரூபமாக என்னிடத்தில் ஒப்பிவித்திருக்கிறவன்.

† (ஶா०) (ஸ்ரீ,வி) நித்தியமானது.

‡ (ஶா०) (ஸ்ரீ,வி) விகாரமற்றது.

§ (ஶா०) விஷ்ணுவின் ஸ்தானத்தை. (ரா) (ஸ்ரீ,வி) என்னை.

¶ (ஶா०) இகபரசாதனமான கருமங்களை (ரா) கருத்தா உத்தேசமான தேவதைகள் இவர்களுடன் கருமங்களை. (ஸ்ரீ,வி) சகலமான விஹித கருமங்களை.

‖ (ஶா०) விவேகபுத்தியினாலே. (ரா) தான் ஈசுவரனுடைய அதீனனென்றும், அவனாலேவப்பட்டவனென்றும் அவனுடைய தாசனென்றும் நிச்சயபுத்தியினாலே.

+ (ஶா०) 𑌯𑌤𑍍𑌕𑌰𑍋𑌷𑌿𑌯𑌦𑌶𑍍𑌨𑌾𑌸𑌿 (அத் - ௯, சு - ௨௭) என்கிற இடத்தில் சொல்லியபடி எனக்கர்ப்பித்து.

| | |
|---|---|
| மத்பர:* | என்னையே அடையவேண்டிய உத்தம மானஸ்தானமாக உடையவனும் |
| பு³த்³தி⁴யோக³ம்† | நிச்சயபுத்தியை |
| உபாஶ்ரித்ய‡ | அடைந்து |
| ஸததம்§ | எப்பவும் |
| மச்சித்த:¶ | என்னிடத்திலேயே சித்தத்தை வைத்தவனும் |
| ப⁴வ ‖ | ஆகக்கடவாய். |

சகல கருமங்களையும் மனதினாலே என்னிடத்தில் அர்ப்பித்து, நானே (வாசுதேவனே) அடையவேண்டிய உத்தமமான ஸ்தானமென்று நிச்சயபுத்தியை யடைந்து, எப்பவும் என்னிடத்திலேயே சித்தத்தை வைத்தவனும் ஆகக்கடவாய். + (ருஎ)

---

ருஅ. மச்சித்த: ஸர்வது³ர்கா³ணி மத்ப்ரஸாதா³த் தரிஷ்யஸி।
அத² சேத்த்வமஹங்காராந்ந ஶ்ரோஷ்யஸி விநங்க்ஷ்யஸி॥

| | |
|---|---|
| மச்சித்த: | என்னிடத்திலேயே மனதையுடைய நீ |
| மத்ப்ரஸாதா³த் | என்னுடைய அநுக்கிரகத்தினாலே |
| ஸர்வது³ர்கா³ணி × | சகலதுக்கங்களையும் |
| தரிஷ்யஸி | அதிக்கிரமிப்பாய் |
| த்வம் | நீ |
| அஹங்காராத் | நான்தான் தெரிந்தவனென்கிற அகங்காரத்தினாலே |
| ந ஶ்ரோஷ்யஸி அத² சேத் | நான்சொன்னதைக் கேட்காமல் போவாயாகில் அல்லது கவனிக்காமல்போவாயாகில் |
| விநங்க்ஷ்யஸி | கெட்டுப்போவாய். |

---

* (ஶம்) என்னையே உத்தமமான தெய்வமென்று நம்பி (ரா) முக்கியமா யடையத்தகுந்த பலன் நானேயென்கிற நம்பிக்கையுடன். (ஸ்ரீ,வி) நானே சருவோத்தமனென்கிற புத்தியோடு கூடினவனாய்.

† - ‡ (ஶம்) மனதை என்னிடத்தில் நிலையாய் நிற்கும்படி செய்துகொண்டு. என்றால், என்னையே சரணாகதி யடைந்து. (ரா) புத்தி யோகத்தை ஆசிரயித்து. (ஸ்ரீ,வி) புத்தியை விஷயங்களில் பிரவிருத்திக்காமல் தடுத்து என்னிடத்தில் நிறுத்தி.

§ - ¶ - ‖ (ஸ்ரீ,வி) என்னையே தியானம் செய்துகொண்டிரு.

+ (ஸ்வா) அத் - ரு, சு - கஉ. பார்க்க.

× (ஶம்) சமுசாரத்திற்கு ஏதுவான சகல கருமங்களையும். (ரா) சகலசமுசார துக்கங்களையும்.

நீ என்னிடத்திலேயே மனதை யுடையவனுனல் என்னுடைய அநுக்கிரகத்தினுல் சகல துக்கங்களையும் அதிக்கிரமிப்பாய். நீ தெரிந்தவனென்கிற அகங்காரத்தினுல் நான் சொன்னதைக் கேட்காவிட்டால் கெட்டுப்போவாய். (என்ருல், புருஷார்த்தத்தை யடையமாட்டா யென்பது கருத்து.) (௫௮)

---

௫௯. யத³ஹங்காரமாஶ்ரித்ய ந யோத்ஸ்ய இதி மந்யஸே।
மித்²யைஷ வ்யவஸாயஸ்தே ப்ரக்ருʼதிஸ்த்வாம் நியோக்ஷ்யதி॥

| | |
|---|---|
| யதி³* | ஒருவேளை அல்லது ஒருக்கால் |
| அஹங்காரம்† | அகங்காரத்தை |
| ஆஶ்ரித்ய | அடைந்து |
| ந யோத்ஸ்ய இதி | யுத்தஞ்செய்ய மாட்டேனென்று |
| மந்யஸே | நிச்சயம் கொள்ளுவாயானுல் |
| ஏஷ: தே வ்யவஸாய: | இந்த உன்னுடைய நிச்சயமானது |
| மித்²யா‡ | பொய் (தப்பானது) |
| ப்ரக்ருʼதி:§ | மாயையானது (ரஜோகுணருபமாய் பரிணமித்து) |
| த்வாம்¶ | உன்னை |
| நியோக்ஷ்யதி | (யுத்தத்தில்) பிரவிருத்திக்கும்படி செய்யும். |

ஒருக்கால் அகங்காரத்தை யடைந்து யுத்தம்செய்ய மாட்டேனென்று நிச்சயம் கொள்ளுவாயானுல், அந்த உன்னுடைய நிச்சயமானதுபொய். மாயையானது உன்னை யுத்தத்தில் பிரவிருத்திக்கச் செய்யும். (௫௯)

---

௬௦. ஸ்வபா⁴வஜேந கௌந்தேய நிப³த்³த⁴: ஸ்வேந கர்மணா।
கர்தும் நேச்ச²ஸி யந்மோஹாத் கரிஷ்யஸ்யவஶோ(அ)பி தத்॥

---

*-† (ஶ்ரீ) (நீ,வி) யத³ஹங்காரம் - என்றுபாடம். யச்சேதி மந்யஸே என்கிற நிச்சயம் கொள்ளுவாயோ. (ரா) ஒருக்கால், இஷ்டா நிஷ்டங்களை அறிகிறதில் (நீ) சுவதந்திரனென்கிற அபிமானத்தை.

‡ (நீ,வி) வீண் (வியர்த்தம்.)

§ (மூ) க்ஷத்திரிய சுவபாவமானது. (நீ,வி) ஈசுவர இச்சையானது.

¶ (ரா) எனக்கு அதீனமாகிறதில் பயமடைந்திருக்கிற உன்னை,

| | |
|---|---|
| கௌந்தேய | ஓ! குந்திபுத்திரா! |
| ஸ்வபாவஜேந | பூர்வகருமசேஷத்திலுண்டானதும் |
| ஸ்வேந | உன்னுடைய சுவதருமமுமான |
| கர்மணா | சௌரியம்முதலிய கருமத்தினாலே |
| நிபத்த: | கட்டுப்பட்ட நீ |
| மோஹாத்* | அவிவேகத்தினாலே |
| யத் | எந்தயுத்தத்தை |
| கர்தும் | செய்கிறதற்கு |
| நேச்சஸி | இச்சிக்கிறதில்லையோ |
| தத்அபி | அந்த யுத்தத்தையும்கூட |
| அவஶ:† | பராதீனனாய் |
| கரிஷ்யஸி | செய்யப்போகிறாய். |

ஓ! குந்திபுத்திரா! பூர்வகருமத்திலுண்டானதும் உன்னுடைய சுவதர்மமுமாகிய சௌரியம் முதலிய கருமத்தினாலே கட்டுப்பட்ட நீ, அவிவேகத்தினாலே எந்தயுத்தம்செய்ய இச்சிக்கிறதில்லையோ, அந்த யுத்தத்தையும்கூட பராதீனனாய் செய்யப்போகிறாய். (சூ0)

---

சூக. ஈஶ்வர: ஸர்வபூதாநாம் ஹ்ருத்தேஶேர்ஜுந திஷ்டதி।
ப்ராமயந் ஸர்வபூதாநி யந்த்ராரூடாநி மாயயா॥

| | |
|---|---|
| ஹேஅர்ஜுந‡ | ஓ! அர்ஜுனா! |
| யந்த்ராரூடாநி (இவ)§ | எந்திரத்திலேறியவஸ்துக்களைப்போல் |
| ஸர்வபூதாநி‖ | சகலப்பிராணிகளையும் |
| மாயயா¶ | தன்னுடையசக்தியினாலே |

---

* (மீ,வி) பெந்துக்களென்கிற சிநேகத்தினால்.

† (ஶம்) அவஶோஸி = பராதீனனாகவே. (ரா) அவஶ: = பிறருடைய அவமதித்தலை சகியாமல். (மீ,வி) பகவத் இச்சாதீனனா யிருந்துகொண்டு.

‡ (ஶம்) சுத்தாந்தக்கரண முள்ளவனே!

§ (ஶ்ரீ) சரீரமாகிற எந்திரத்தில் ஏறின. (ரா) தன்னாலுண்டாக்கப்பட்டதாயும் பிரகிருதியென்கிற பெயரை யுடையதாயும், தேகேந்திரிய ரூபமாயு மிருக்கிற எந்திரத்திலேறின. (மீ,வி) சரீரத்திலிருக்கிற.

‖ (ஶ்ரீ) தேகாபிமானத்துடன்கூடிய சகலப்பிராணிகளையும்.

¶ (ரா) சத்துவாதி குணங்களுள்ள விஷ்ணு மாயையினாலே. (மீ,வி) என்னுடைய சுவரூபமான இச்சாசக்தியினாலே.

| | |
|---|---|
| ப்ராமயந்* | கருமங்களில் பிரவிருத்திக்கச் செய்து கொண்டு |
| ஈஶ்வர: | ஈசுவரனானவர் |
| ஸர்வபூதாநாம் | சகலப்பிராணிகளுடைய |
| ஹ்ருத்தேஶே† | இருதயத்தில் |
| திஷ்டதி | இருக்கிறார். |

ஓ! அர்சுனா! எந்திரத்திலேறிய வஸ்துக்களைப்போல் சகலப் பிராணிகளையும் தன்னுடைய சக்தியினாலே கருமங்களில் பிரவிருத்திக்கச் செய்துகொண்டு ஈசுவரனானவர் சகலப் பிராணிகளுடைய ஹிருதயத்திலு மிருக்கிறார்.

(ஸ்ரீ) முந்திய ௫௯-௬௦-ம் ஶ்லோகங்களால் சாங்கியாள் முதலானவர்களுடைய சித்தாந்தத்தை யநுசரித்து ஜீவர்கள் பிரகிருதிக்குட்பட்டவர்களென்றும் சுவபாவமாகிய கருமத்திற் குட்பட்டவர்களென்றும் சொல்லி, இந்த ௬௧-௬௨-ம் ஶ்லோகங்களால் ஜீவர்கள் தன்னுடைய அதீனரென்கிற சுவமதத்தை பகவான் சொல்லுகிறார்.

(ரா) சகலபூதங்களும் பூர்வகருமானுசாரமாய் மாயைக்குட்பட்டு நடக்கும்படி என்னால் நியமிக்கப்பட்டிருக்கின்றனவென்பதைச் சொல்லுகிறார். (௬௧)

---

௬௨. தமேவ ஶரணம் கச்ச ஸர்வபாவேந பாரத।

தத்ப்ரஸாதாத் பராம் ஶாந்திம் ஸ்தாநம் ப்ராப்ஸ்யஸி ஶாஶ்வதம்॥

| | |
|---|---|
| பாரத | ஓ! பரதவம்சத்தி லுதித்தவனே! |
| ஸர்வபாவேந | தேகேந்திரியாதிகளால் |

---

* (ரா) பூர்வகருமானுசாரமாய் பிரவிருத்தி செய்வித்துக்கொண்டு.

† (ரா) பிரவிருத்தி நிவிருத்தி மூலமான ஞானமுற்பத்தியாகிற இடமாகிய ஹிருதயத்தில். (ஸ்ரீ) "ஏகோ தேவ: ஸர்வபூதேஷு கூட: ஸர்வவ்யாபீ ஸர்வ "பூதாந்தராத்மா; கர்மாத்யக்ஷ: ஸர்வபூதாதிவாஸ: ஸாக்ஷீ சேதா கேவலோ "நிர்குணஶ்ச — சகல பூதங்களிலும் அந்தரியாமியாயும் ஸர்வ வியாபியாயும் சகல "பூதங்களுக்கும் அந்தராத்மாவாகவும் தொழில்களுக் கிறைவனாகவும் சர்வ பூதங் "களிலும் உறைந்துகொண்டும் சாக்ஷியாகவும் கேவலம் சேதன சுவரூபியாகவும் "குணங்களற்றவ னாகவுமுள்ள தேவ னொருவனே. சுவேதா சுவதர உபநிஷத்து "௬-வது அத்தியாயம், ௧௧-வது வாக்கியம்.) "ய: ப்ராணே திஷ்டந் ப்ராணமந்தரோ "யமயதி, ஏஷ த ஆத்மா(அ)ந்தர்யாம்யம்ருத: — எவன் பிராணனிலிருந்துகொண்டு பிராணனை "நியமிக்கிறானோ, அவன்தான் அழிவற்றவு மந்தரியாமியுமான உன்னுடைய ஆத்மா". ப்ருஹதாரண்யக உபநிஷத்து அந்தரியாமி பிராமணம் பார்க்க.

| | |
|---|---|
| தமேவ* | அந்த ஈசுவரனைத்தானே |
| ஶரணம் | சரணமாக |
| கச்ச | அடை |
| தத் ப்ரஸாதாத் | அந்த ஈசுவரானுக்கிரகத்தினாலே |
| பராம்† | உத்தமமான |
| ஶாந்திம்‡ | சகல விஷயங்களிலிருந்து நிவிருத்தியடைந்த சித்தத்தையும் (சித்தசமாதானத்தையும்) |
| ஶாஶ்வதம் | நித்தியமான |
| ஸ்தானம்§ | ஸ்தானத்தையும் |
| ப்ராப்ஸ்யஸி | அடைவாய். |

ஓ! பாரதவம்சத்தி லுதித்தவனே! தேகேந்திரி யாதிகளால் அந்த ஈசுவரனைத்தானே சரணுகெதியடை. அந்த ஈசுவரானுக்கிரகத்தினுல் உத்தமமான சித்தசமாதானத்தையும் நித்தியமான ஸ்தானத்தையும் அடைவாய்.

(ஶா) முந்தியசுலோகத்தில் ஈசுவரன் சகலப் பிராணிகளுடைய ஹிருதயத்திலிருந்து கருமங்களில் ஏவுகிறவராகச் சொல்லப்பட்டார். இந்த சுலோகத்திலுள்ள "தம்—அவரை" என்கிறபதம் அந்த ஈசுவரனைத்தான் குறிக்கிறது. அந்த ஈசுவரனே கிருஷ்ணபகவானுகவிருக்க "என்னை" என்றுசொல்லாமல் கிருஷ்ணசுவாமியைவிட அந்நியமான ஒரு ஈசுவரனிருப்பதுபோல் 'அவரை' என்றுசொல்லக் காரணமென்னவெனில், அந்தரியாமியாய் சகலபூதங்களிலு மிருந்து ஏவுகிற ஈசுவரன் கிருஷ்ணபகவானைவிட வேறேயல்ல. ஆகிலும் ஒவ்வொருவனும் சுவாமி எங்கேயிருக்கிருரென்று தேடவேண்டியதில்லை. அவனவனுடைய ஹிருதயத்திலேயே நியந்தாவாயிருக்கிருர். அந்த அந்தரியாமி சுவரூபமும் பிரம்மமே யென்பதைக் குறித்துக்காட்ட, "தம்—அவரை" என்கிறபதம் உபயோகிக்கப்பட்டது. (சுஉ)

---

* (ரா) சகல லோகத்திற்கும் நியாமகனுயும், ஆசிரித வாத்ஸல்லியத்தினுல் உனக்கு சாரதியாயும், எதிரிலிருந்து உன்னை ஏவுகிறவனுயுமிருக்கிற என்னையே.

† - ‡ (ஶ்ரீ) (ஶம்) உத்தமமான உபசாந்தியை. (ரா) சருவகரும பெந்த நிவிருத்தியை. (மீ,வீ) புத்தியை எப்பவும் பகவானிடத்தில் நிறுத்துதலை.

§ (ஶம்) விஷ்ணுவாகிய என்னுடைய ஸ்தானததை. (ரா) பரமபதத்தை. (மீ,வீ) என்னுடைய வைகுண்ட லோகத்தை.

௬௩. இதி தே ஜ்ஞாநமாக்யாதம் குஹ்யாத்குஹ்யதரம் மயா।
விம்ருஶ்யைததஶேஷேண யதேச்சஸி ததா குரு॥

| | |
|---|---|
| இதி | இவ்விதமாய் |
| குஹ்யாத் | இரகசியங்களுக்கெல்லாம் |
| குஹ்யதரம் | அதிரகசியமான |
| ஜ்ஞாநம்* | ஞானஏதுவான சாஸ்திரமானது |
| மயா | என்னாலே |
| தே | உனக்கு |
| ஆக்யாதம் | சொல்லப்பட்டது |
| ஏதத் | இந்தகீதாசாஸ்திரத்தை |
| அஶேஷேண | பூர்த்தியாய் |
| விம்ருஶ்ய† | ஆராய்ந்து |
| யதா | எப்படி |
| இச்சஸி | இச்சிக்கிறாயோ |
| ததா | அப்படி |
| குரு | செய். |

இவ்விதமாய், இரகசியங்களுக்கெல்லாம் அதிரகசியமான ஞானத்தை யுண்டாக்கத்தக்க கீதாசாஸ்திரமானது, என்னாலே உனக்குச் சொல்லப்பட்டது. இந்த கீதாசாஸ்திரத்தைப் பூர்த்தியா யாராய்ந்து, (அதின் பிறகு) எப்படி இச்சிக்கிறாயோ, அப்படிச்செய். (௬௩)

---

௬௪. ஸர்வகுஹ்யதமம் பூய: ஶ்ருணு மே பரமம் வச:।
இஷ்டோऽஸி மே த்ருடமிதி ததோ வக்ஷ்யாமி தே ஹிதம்॥

| | |
|---|---|
| மே | எனக்கு |
| த்ருடம்‡ | அத்தியந்தம் (மிகவும்) |
| இஷ்ட: அஸி | இஷ்டனா யிருக்கிறாய் |

---

* (ரா) கருமயோகம் ஞானயோகம் பக்தியோகம் இவைகளை விளக்குகிற கீதாசாஸ்திரமானது. (ஸ்ரீ,வி) அறியவேண்டியதானது.

† (ரா) நீ யெந்தயோகத்திற்குத் தகுந்தவனென்பதை நீயாக ஆராய்ந்து அறிந்து.

‡ (ஸ்ரீ) த்ருடமதி:, என்றும் பாடமுண்டு. நிச்சயபுத்தி யுள்ளவன் என்று அர்த்தம். (மத்) த்ருடம் = தவறாமல். (ரா) த்ருடமதி:, என்று பாடம். உறுதி யுள்ளவனென்று அர்த்தம்.

| | |
|---|---|
| 𑌇𑌤𑌿 𑌤𑌤𑌃 | இந்தநிமித்தியத்தினாலே |
| 𑌤𑍇 | உனக்கு |
| 𑌹𑌿𑌤𑌂 | அநுகூலமானதை |
| 𑌭𑍂𑌯𑌃* | மறுபடியும் |
| 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 | சொல்லப்போகிறேன் |
| 𑌸𑌰𑍍𑌵𑌗𑍁𑌹𑍍𑌯𑌤𑌮𑌂 | சகலரகசியங்களிலும் மகாரகசியமான |
| 𑌮𑍇 | என்னுடைய |
| 𑌪𑌰𑌮𑌂 | உத்தமமான |
| 𑌵𑌚𑌃 | வாக்கியத்தை |
| 𑌶𑍃𑌣𑍁 | கேள். |

எனக்கு அத்தியந்தம் இஷ்டனாயிருக்கிறாய். இந்த நிமித்தியத்தினாலே உனக்கு அனுகூலமானதை மறுபடியும் சொல்லப்போகிறேன். சகல ரகசிங்களிலும் மகாரகசியமானதும் உத்தமமானதுமாகிய என்னுடைய வாக்கியத்தைக்கேள். (௬௪)

---

௬௫. 𑌮𑌨𑍍𑌮𑌨𑌾 𑌭𑌵 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑍋 𑌮𑌦𑍍𑌯𑌾𑌜𑍀 𑌮𑌾𑌂 𑌨𑌮𑌸𑍍𑌕𑍁𑌰𑍁।
𑌮𑌾𑌮𑍇𑌵𑍈𑌷𑍍𑌯𑌸𑌿 𑌸𑌤𑍍𑌯𑌂 𑌤𑍇 𑌪𑍍𑌰𑌤𑌿𑌜𑌾𑌨𑍇 𑌪𑍍𑌰𑌿𑌯𑍋𑌽𑌸𑌿 𑌮𑍇॥

| | |
|---|---|
| 𑌮𑌨𑍍𑌮𑌨𑌾𑌃 | என்னிடத்தில் மனசுள்ளவனாயும் |
| 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑌃 | என்னிடத்தில் பக்தியுள்ளவனாயும் |
| 𑌮𑌦𑍍𑌯𑌾𑌜𑍀 | என்னை ஆராதிக்கிறவனாயும் |
| 𑌭𑌵 | ஆகக்கடவாய் |
| 𑌮𑌾𑌮𑍇𑌵 | என்னையே |
| 𑌨𑌮𑌸𑍍𑌕𑍁𑌰𑍁 | நமஸ்காரம்செய் |
| 𑌮𑌾𑌂 (𑌏𑌵) | என்னையே |
| 𑌏𑌷𑍍𑌯𑌸𑌿 | அடைவாய் |
| 𑌮𑍇 | எனக்கு |
| 𑌪𑍍𑌰𑌿𑌯𑌃 | பிரியனாய் |
| 𑌅𑌸𑌿 | இருக்கிறாய் |
| 𑌤𑍇 | உனக்கு |
| 𑌸𑌤𑍍𑌯𑌂 | உண்மையாக |
| 𑌪𑍍𑌰𑌤𑌿𑌜𑌾𑌨𑍇 | உறுதிசொல்லுகிறேன் |

---

* (கு) மறுபடியும் முன்சொன்னதில் சேர்க்கெடுத்து. (ஶ்ரீ,வீ) முன்சொல்லியிருந்தாலும் மறுபடியும்.

என்னிடத்தில் மனசுள்ளவனாயும் பக்தியுள்ளவனாயும் என்னை ஆராதிக்கிறவனாயும் ஆகக்கடவாய். என்னையே நமஸ்காரம்செய். என்னையே யடைவாய். எனக்குப்பிரியனாயிருக்கிறாய். உனக்குண்மையாக வுறுதி சொல்லுகிறேன்.

(ரா) மந்மநா = இடைவிடாததும் சலிக்காததுமான வேதாந்தார்த்த ஸ்மரணையுள்ளவனாயும், மத்பக்த = எனக்கு மிகவும் பிரியமானதும் இடைவிடாததும் சலிக்காததுமான சுவரூப ஸ்மரணை யுள்ளவனாயும், மத்யாஜீ = மிகவும் பிரியமாக என்னை யாராதனை செய்கிறவனாயும், பவ = ஆகக்கடவாய், நமஸ்குரு = மிகவும் பிரியமான மிகுந்த வணக்கம் செய், மாமேவைஷ்யஸி = என்னையே யடைவாய், ஸத்யம் = இதுண்மைதான். இப்படி என்னிடத்தில் எவன் பிரீதி வைக்கிறானோ, அப்படியே நானுமவனிடத்தில் பிரீதியை யுடையவனாக விருக்கிறேன். அவனுடைய பிரிவை சகியாமல் அவன் என்னை அடையும்படி செய்வேன்.

(ஸ்ரீ,வி) இதில் சொல்லப்பட்டிருக்கிற நமஸ்காரம் வரையிலுள்ள நான்குதான் சாதன சதுஷ்டய மென்பது. (கூரு)

கூகூ. ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் ஶரணம் வ்ரஜ।
அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா ஶுச:॥

| | |
|---|---|
| ஸர்வதர்மாந் | சகலதருமங்களையும் |
| பரித்யஜ்ய | விட்டு |
| மாம் ஏகம் | என்னொருவனையே |
| ஶரணம் | சரணமாக |
| வ்ரஜ | அடை |
| அஹம் | நான் |
| த்வா | உன்னை |
| ஸர்வபாபேப்ய: | சகலபாபங்களிலிருந்தும் |
| மோக்ஷயிஷ்யாமி | விடுவிப்பேன் |
| மா ஶுச: | விசனப்படாதே. |

சகல தருமங்களையும் (சந்தியாவந்தனம் முதலிய நித்திய நைமித்திகங்களான சகல கருமங்களையும்) விட்டு என்னையே சரணமடை. நானுன்னை (அந்த சகலகருமங்களை விட்டதினா லுண்டாகும்) சகல பாபங்களிலிருந்தும் விடுவிப்பேன். (அப்படி விட்டதினால் உன்னை பாபமடையுமென்று) விசனப்படாதே.

(ஶம்) சகல கரும யோகநிஷ்டையைப் பார்க்கிலும் பரமரகசியமாகிய ஈசுவர சரணாகதியை முடிவாகச்சொல்லி யாய்விட்டது.

இப்போது கருமயோக நிஷ்டையின் பலமாயும் சகல வேதாந்தசார மாயு மிருக்கிற பூர்ண ஞானமானது இந்த சுலோகத்தினால் சொல்லப் படுகிறது.

ஸவ-ஒயஜெ-ராநு — சகல தருமாதருமங்களையும், அதாவது—சகல கருமங்களையும், வரிதூஜூ — விட்டு, ஐமெகெ० — சருவாத்மாவாயும் சமமாய் சருவபூதங்களி லிருக்கிறவனும் ஈசுவரனுயு மிருக்கிற என்னை நீயேயென்று (அதாவது-நீயே அப்படிப்பட்ட பிரம்மமென்று), ஶர ணம்வ ஜ — என்னைத்தவிர வேறேயில்லையென்று நிச்சயம் கொள்ளு. க்ஷா — இப்படிப்பட்ட நிச்சயமுள்ள உன்னை, அஹம் — நான், ஸவ-ஃ வாவெஹ்ஃ — பெந்தரூபமான சகல கருமங்களிலிருந்தும், மொக்ஷ யிஷ்ராமி — என்னுடைய சுவரூபப் பிரகாசம் செய்விக்கிறதினால் விடு விக்கிறேன். இந்த அர்த்தமானது "நாஶயாமொ்ரத்மாவஸ்தொ ஜ்ஞாநதீ வெநஹாஸ்தா" (அத் - க0, சு - கக.) என்கிற இடத்தில் சொல்லப் பட்டிருக்கிறது. மாஶுவஃ — ஆகையால் விசனப்படாதே.

* இந்த கீதாசாஸ்திரத்தில் "யஜ்ஜ்ஞாத்வாஶ்ரூதமஶ்நுதே" (அத் - கந, சு-கந.) "தஜ்ஜ்ஞாநாம விஶதெநந்தரம்" (இதின் - சு - ருரு.) இந்த சுலோகங்கள் ஞானம் மோக்ஷத்திற்குக் காரணமென்று சொல்லுகின்றன. "கமெண்ஃவாயிகாரஸ்தெ" (அத் - உ, சு - சஎ.) "குருகமெஃவதஸாதும்" (அத் - ச, சு-கரு.) இவைமுதலிய சுலோ கங்கள் கருமங்களை அவசியம் செய்யவேண்டுமென்று சொல்லுகின் றன. இப்படி ஞான கருமங்க ளிரண்டையும் செய்ய உபதேசித்த படியினாலே ஞானம் மாத்திரமா, அல்லது கருமம்மாத்திரமா, அல் லது இரண்டும் சேர்ந்தா, மோக்ஷத்திற்கு ஏது என்பதில் சந்தேக முண்டாகிறது, ஆகையால். அநுஷ்டிக்கவேண்டியவன் இன்னதைத் தான் அநுஷ்டிக்கவேண்டு மென்பதைத் தெரிந்துகொள்ளும் பொ ருட்டு ஒன்றை நிச்சயிக்கவேண்டியது அவசியம். ஞானமானது சகல பேத புத்தியையும் நிவர்த்தித்து மோக்ஷத்தைக் கொடுக்கத் தக்கதா யிருக்கிறது. கருமமோ, கிரியை, காரணமான வஸ்துக்கள், பலன், இவைகளுடைய பேதபுத்தியை மூலமாக வுடைத்தா யிருக்கிறது. நான் எனது நான்கருத்தா நான்போக்தா நான் பிராமணன் கிரகஸ் தன் என்கிற பேதபுத்திகள் அவித்தையினால் ஆத்மாவினிடத்தில் அநாதியாய் வியாபித்திருக்கின்றன. நான் மாயையற்றவன் கருத்தா வல்ல கிரியையற்றவன் அடையவேண்டியதாக யாதொரு பலனுமில் லாதவன் என்னைக்காட்டிலும் வேறே வஸ்து கிடையாது என்கிற ஞா

* இதுமுதல் (சா) அடையாளம்வரை (ஶம) பாஷியத்தின் சுருக்கமான கருத்து.

ஊமானது, மேல்சொன்ன கருமத்தில் பிரவிருத்திக்கு ஏதுவான பேத புத்தியையும் அதின் காரணமான அவித்தையையும் போக்கடிக்கும். கேவலம் கருமமானது, ஒரு இருட்டு மற்றொரு இருட்டைப் போக்காததுபோல், பேதபுத்தியையும் அவித்தையையும் நிவர்த்திக்கமாட்டாது. ஞானமோ, அதுண்டானவுடனே (சூரியன் உதயமான உடனே இருட்டைப் போக்கிவிடுவதுபோல்) கருமத்திற்குக் காரணமான பேதபுத்தியையும் அதற்குக் காரணமான அவித்தையையும் நீக்கிவிடுகிறது. ஆகையால், ஞானத்திற்கு கருமத்துடன் சேர்க்கையென்பதே அசம்பாவிதம். ஆகையினாலே ஞானம் மாத்திரமே மோக்ஷத்திற்குக் காரணம்.

(ரா) ஸவ-ுயஃுாந — ஞானயோக கருமயோக பக்தியோகங்களின் பலனை அல்லது பக்தியோகாரம்பத்திற்கு விரோதியான பாபங்களை நிவர்த்திக்கும்படியான பிராயச்சித்தங்களை, வஷிதாூஜாூ — விட்டு, ஊெஃகம் — கருத்தாவாகிய என்னையே, ஶரணம் — சேவிக்கத் தக்கவனும் அடையத் தக்கவனும் அடையு முபாயமாயும், வ்ரஜ — அநுசந்தானம்செய். அஹம் — நான், க்வா — உன்னை, ஸவ-ுவாபெ ஜாூஃ — அநாதிகாலமாய், செய்யக்கூடாததைச் செய்தும் செய்யவேண்டியதைச் செய்யாமலும் சம்பாதிக்கப்பட்டவும் என்னை யடைவதற்கு விரோதிகளுமான சகல பாபங்களிலிருந்து, அல்லது பக்தியோகாரம்பத்திற்கு விரோதிகளான சகல பாபங்களிலிருந்து, மொக்ஷயிஷ்ூாஜி — விடுவிப்பேன். ஊாஶு-வஃ — விசனப்படாதே அல்லது அற்ப ஆயுசுள்ள நான் அவ்வளவு பாபங்களுக்கும் எப்படி பிராயச்சித்தம் செய்வேன் என்கிற விசனமடையாதே.

(ஸ்ரீ,வி) ஸவ-ுயஃுாந — சாதன சதுஷ்டயம் தவிர மற்ற தருமங்களை அல்லது சருவ கருமபலன்களை அல்லது அவைஷ்ணவ தருமங்களை, வஷிதாூஜாூ — விட்டு, ஊெஃகம்— என்னை யொருவனையே, ஶரணம்வ்ரஜ—சரணமாக அடை, அஹம்—நான், ஸவ-ுவாபெஜாூஃ — சகல பாபங்களிலிருந்தும், மொக்ஷயிஷ்ூாஜி — விடுவிப்பேன், ஊாஶு-வஃ — சமுசாரபயத்தினால் துக்கப்படாதே. (கூகூ)

---

கூஎ. ஜுஃஂதெ நாதவஸ்ாய நாஸக்தாயகஷாவந।
நவாஶு-ஶ்ரூஷவெவாவா்ூஂ நவஊஂெபாஸூ்ஸைூயதி॥

| | |
|---|---|
| ஜுஃஂ | இந்த கீதார்த்த தத்துவமானது |
| அதவஸ்ாய | தபசில்லாதவனுக்கு |
| கஷாவந | ஒருபோதும் |
| தெ | உன்னாலே |

| | |
|---|---|
| 𑌨𑌵𑌾𑌚𑍍𑌯𑌂 | சொல்லத்தக்கதல்ல |
| 𑌅𑌭𑌕𑍍𑌤𑌾𑌯 | ஈசுவரன் குரு இவர்களிடத்தில் பக்தியில்லாதவனுக்கு |
| 𑌨 | சொல்லத்தக்கதல்ல |
| 𑌚𑌾𑌶𑍁𑌶𑍍𑌰𑍂𑌷𑌵𑍇 | ஈசுவர குரு சிசுரூஷை செய்யாத அல்லது கீதாதத்துவத்தைக்கேட்க இஷ்டமில்லாதவனுக்கும் |
| 𑌨 | சொல்லத்தக்கதல்ல |
| 𑌯𑌃 | எவன் |
| 𑌮𑌾𑌂 | என்னை |
| 𑌅𑌭𑍍𑌯𑌸𑍂𑌯𑌤𑌿 | தூஷிக்கிருனோ |
| (𑌤𑌸𑍍𑌮𑍈) 𑌚 | அவனுக்கும் |
| 𑌨 | சொல்லத்தக்கதல்ல. |

இந்த கீதார்த்த தத்துவமானது சுவதருமானுஷ்டானம் அல்லது தபசு இல்லாதவனுக்கும் ஈசுவரன் குரு இவர்களிடத்தில் பக்தியும் அவர்களுடைய சிசுரூஷையும் அல்லது இதைக்கேட்க இஷ்டமும் இல்லாதவனுக்கும் என்னை நிந்திக்கிறவனுக்கும் ஒருபோதும் உன்னாலே சொல்லத்தக்கதல்ல.

(𑌸𑌂) (ரா) (ஸ்ரீ,வி) உன்பொருட்டு சொல்லப்பட்ட இந்த கீதார்த்த தத்துவத்தை தபசு செய்யாதவனுக்குச் சொல்லாதே. தபசு செய்கிறவனானாலும் ஈசுவரன் குரு இவர்களிடத்தில் பக்தி யில்லாதவனுக்குச் சொல்லாதே. தபசு பக்திக ளிருந்தாலும் குரு சிசுரூஷை அல்லது கேட்க இச்சை இல்லாதவனுக்குச் சொல்லாதே. தபசு பக்தி சிசுரூஷை இம்மூன்று மிருந்தாலும் ஈசுவரநிந்தை யுள்ளவனுக்கு ஒருபோதும் சொல்லாதே என்பது தாத்பரியம்.

(𑌸𑌂) தபசில்லாவிட்டாலும் மற்ற குணங்களிருக்கிற பக்ஷத்தில் (ஜெயாவீ) சூக்ஷ்மபுத்தி யுள்ளவனால் சொல்லலாம். (சுஎ)

---

சுஅ. 𑌯 𑌇𑌮𑌂 𑌪𑌰𑌮𑌂 𑌗𑍁𑌹𑍍𑌯𑌂 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑍇𑌷𑍍𑌵𑌭𑌿𑌧𑌾𑌸𑍍𑌯𑌤𑌿।
𑌭𑌕𑍍𑌤𑌿𑌂 𑌮𑌯𑌿 𑌪𑌰𑌾𑌂 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌮𑌾𑌮𑍇𑌵𑍈𑌷𑍍𑌯𑌤𑍍𑌯𑌸𑌂𑌶𑌯𑌃॥

| | |
|---|---|
| 𑌯𑌃 | எவன் |
| 𑌪𑌰𑌮𑌂 𑌗𑍁𑌹𑍍𑌯𑌂 | பரமரகசியமான |
| 𑌇𑌮𑌂 | இந்த கீதாசாஸ்திரத்தை |
| 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑍇𑌷𑍁 | என்னுடைய பக்தர்களிடத்திலே |

| | |
|---|---|
| கஹியாஸ்ரு)தி | சொல்லுவானே அல்லது உபதேசிப்பானே |
| (ஸஃ) | அப்படிப்பட்டவன் |
| ஊயி | என்னிடத்தில் |
| வுரா॰ | சிரேஷ்டமான |
| ஹக்தி॰ | பக்தியை |
| க்ருக்வா | செய்து |
| அஸ॰ஶய꞉* | சகல சமுசயமுமற்றவனாய் |
| ஊாமேவ | என்னையே |
| ஸஷ்ரு)தி | அடைவான். |

எவன் பரமரகசியமான இந்த கிரந்தத்தை என்னுடைய பக்தர்களிடத்திலே சொல்லுவானே, அல்லது (அவர்களுக்கு) உபதேசிப்பானே, அப்படிப்பட்டவன் என்னிடத்தில் சிரேஷ்டமான பக்தியைச் செய்து சகலசமுசயமுமற்றவனாய் என்னையே அடைவான்.

(ஶ॰) கஹியாஸ்ரு)தி = கீதா சுலோகங்களையாவது அவைகளின் அர்த்தங்களையாவது பதிப்பிக்கிறானே (மனதில் பதியும்படி சொல்லுகிறானே). ஹக்தி॰ஊயிவுரா॰க்ருக்வா = என்னிடத்தில் அதிகபக்திவைத்து, என்றால், வாசுதேவனாகிய பகவானுடைய சேவையை இவ்விதமாய் நான் செய்கிறேனென்கிற எண்ணத்துடன் உபதேசிக்க வேண்டியதென்பது தாத்பரியம்.

(ரா) (ஸ்ரீ) யஊஇ॰வுரஊ॰ம-ஹ்ய॰ - என்றுபாடம். யஃ=எவன், ஊஇ॰வுரஊ॰ம-ஹ்ய॰ = இந்தப் பரமரகசியத்தை. (சுஅ)

---

சா கூ. நவ தஸ்மா நுஷ்யேஷு கஸ்சிநே ப்ரியக்ருத்தம꞉।
ஹவிதா நவமே தஸ்மா தந்ய꞉ ப்ரியதரோ புவி॥

| | |
|---|---|
| ஊநுஷ்யேஷு | மனிதர்களில் |
| தஸ்மாத் | என் பக்தர்களிடத்தில் கீதையை உபதேசிக்கிறவனைப்பார்க்கிலும் |
| மே | எனக்கு |
| ப்ரியக்ருத்தம꞉ | மிகப்பிரியஞ்செய்தவன் |
| கஸ்சித் | ஒருவனும் |
| ந ச | கிடையாது |

---

* (ஶ॰) (ரா) சந்தேகமில்லாதவனாய்.

| | |
|---|---|
| 𑌮𑍇 | எனக்கு |
| 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 | அவனைக்காட்டிலும் |
| 𑌅𑌨𑍍𑌯𑌃 | அந்நியனானவன் |
| 𑌪𑍍𑌰𑌿𑌯𑌤𑌰𑌃 | மிகவும் பிரியமுள்ளவனாக |
| 𑌭𑍁𑌵𑌿 | பூமியில் |
| 𑌭𑌵𑌿𑌤𑌾 𑌨 | உண்டாகப்போகிறதுமில்லை. |

மனிதர்களில் என் பக்தர்களிடத்தில் கீதையை உபதேசிக்கிறவனைக் காட்டிலும் எனக்கு பிரியத்தைச் செய்தவன் ஒருவனும் கிடையாது. எனக்கு அவனைக்காட்டிலும் அந்நியனானவன் மிகவும் பிரியமுள்ளவனாக பூமியிலுண்டாகப் போகிறது மில்லை.

(ரா) அதிகாரியை முந்திச்சொல்லாமல் அனதிகாரியை முந்திச் சொல்லவேண்டிய தேனெனில், இந்த கீதாசாஸ்திரத்தை யோக்கியனுக்குச் சொல்லாமலிருப்பதைப் பார்க்கிலும் அயோக்கியனுக்குச் சொல்வது மிகவும் அப்பிரிய மென்பதுதான்.

(ஸ்ரீ,வி) மனிதர்களில் பிரியமுள்ளவன் கிடையாதென்று சொன்னதினால் தேவதைகளி லிருக்கலாமென்று துவனிக்கிறது. (௬௯)

---

௭0. 𑌅𑌧𑍍𑌯𑍇𑌷𑍍𑌯𑌤𑍇 𑌚 𑌯 𑌇𑌮𑌂 𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌂 𑌸𑌂𑌵𑌾𑌦𑌮𑌾𑌵𑌯𑍋𑌃।
𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑌜𑍍𑌞𑍇𑌨 𑌤𑍇𑌨𑌾𑌹𑌮𑌿𑌷𑍍𑌟𑌃 𑌸𑍍𑌯𑌾𑌮𑌿𑌤𑌿 𑌮𑍇 𑌮𑌤𑌿𑌃॥

| | |
|---|---|
| 𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌂 | தருமமார்க்கத்தைவிட்டு விலகாததாகிய |
| 𑌆𑌵𑌯𑍋𑌃 | நம்மிருவருடைய |
| 𑌇𑌮𑌂 𑌸𑌂𑌵𑌾𑌦𑌂 | இந்த சம்வாதத்தை (ஸம்பாஷணையை) |
| 𑌯𑌶𑍍𑌚 | எவன் |
| 𑌅𑌧𑍍𑌯𑍇𑌷𑍍𑌯𑌤𑍇 | படிப்பானோ |
| 𑌤𑍇𑌨 | அவனால் |
| 𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑌜𑍍𑌞𑍇𑌨 | ஞானமாகிற உத்தமமான யக்ஞத்தினாலே |
| 𑌅𑌹𑌂 | நான் |
| 𑌇𑌷𑍍𑌟𑌃 𑌸𑍍𑌯𑌾𑌂 𑌇𑌤𑌿 | ஆராதிக்கப்பட்டவனாவேனென்பது |
| 𑌮𑍇 | என்னுடைய |
| 𑌮𑌤𑌿𑌃 | நிச்சயம். |

தருமத்தைவிட்டு விலகாததாகிய நம்மிருவருடைய இந்த (கேள்வி உத்தரரூபமா யிருக்கிற கீதாசாஸ்திரமாகிய) சம்வாதத்தை எவன் படிப்பானோ, அவனால் ஞானமாகிற உத்தமமான யக்ஞத்தினாலே நான் ஆராதிக்கப் பட்டவனாவேனென்பது என்னுடைய நிச்சயம்.

(ஸ்ரீ) இந்த கீதார்த்தத்தைத் தெரியாமல் வெறும் பாராயணம்மட்டும் செய்தவனுங்கூட என்னை ஆராதித்தவனென்பது கருத்து. எப்படிப்போலென்றால், தன்னை யின்னானென்று தெரியாமல் ஒருவன் தன் பெயரைச்சொல்லிக் கூப்பிட்ட மாத்திரத்தில் அவன் தன்னைக் கூப்பிடா விட்டாலும் தன்னைக் கூப்பிட்டதுபோல், எப்படி நினைப்பானோ, அப்படியே தெரியாமலே என் நாமத்தை உச்சரித்தாலுங் கூட அவனிடத்தில் நான் பிரசன்னனாவேன். (நாராயண நாமத்தின் மகிமை தெரியாமல், அந்தியகாலத்தில் நாராயண நாமத்தை வாயினால் சொன்ன அஜாமிளனுக்கு பிரசன்னமானது போலவும், நெருப்பென்று தெரியாமல் அதை மிதித்தவனை நெருப்பு சுடுவது போலவும், மருந்தென்று தெரியாமல் அதைச் சாப்பிட்டவனுடைய வியாதியை அந்தமருந்து குணப்படுத்துவதுபோலவும் கொள்க).

(மூ०) ஜ்ஞாநயஜ்ஞேந - என்றதினால் இந்த கீதாசாஸ்திரத்தை ஞானயக்ஞத்திற்கு சமானமானதென்று ஸ்துதித்ததாகவாவது அல்லது தேவாதிவிஷயமான யக்ஞாதிகளைப்போல் பலனைக் கொடுக்கத்தக்கதாகவாவது, கொள்ளவேண்டியது. ஏனென்றால், (யஜ்ஞ:) யக்ஞம் நாலுவிதம். (௧) (விதியஜ்ஞ:) விதியக்ஞம், அதாவது—சரீரத்தினால் செய்யத்தக்க பிரம்மயக்ஞாதிகள். (௨) (ஜபயஜ்ஞ:) ஜபயக்ஞம், அதாவது—பாராயணாதிகளாகிய வாயினா லுச்சரிப்பது. (௩) (உபாம்சு-யஜ்ஞ:) உபாம்சுயக்ஞம், அதாவது—பிறருக்குக் கேட்காம லிருக்கும் படி வாய்க்குள்ளாகவே உச்சரிப்பது. (௪) (மாநஸயஜ்ஞ:) மானஸயக்ஞம், அதாவது—மனதினால் தியானிப்பது. இந்த நாலாவதாகிய மானஸயக்ஞம் தான் ஞானயக்ஞம். (படிக்கிறது ஞானயக்ஞ மாகிறதில்லையாகையால் ஸ்துதியாக சொல்லப்பட்டது).

(மீ,வி) பலனைச்சொல்லி கீதார்த்தமானது ஸ்துதிக்கப் படுகிறது. யஜ்ஞம் = சகல ஜகத்தையும் தரிக்கிற பகவான் விஷயமான, அல்லது தருமத்திற்குக் காரணமாயிருக்கிற. (மற்ற அர்த்தத்தில் பேதமில்லை).

(எ०)

எக. 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌵𑌾𑌨𑌨𑌸𑍂𑌯𑌶𑍍𑌚 𑌶𑍃𑌣𑍁𑌯𑌾𑌦𑌪𑌿 𑌯𑍋 𑌨𑌰𑌃।
𑌸𑍋𑌽𑌪𑌿 𑌮𑍁𑌕𑍍𑌤𑌃 𑌶𑍁𑌭𑌾𑌁𑌲𑍍𑌲𑍋𑌕𑌾𑌨𑍍𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍁𑌯𑌾𑌤𑍍𑌪𑍁𑌣𑍍𑌯𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌮𑍍॥

| | |
|---|---|
| 𑌯𑌃 𑌨𑌰𑌃 | எந்தமனிதனானவன் |
| 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌵𑌾𑌨𑍍* | சிரத்தை யுடையவனும் |
| 𑌅𑌨𑌸𑍂𑌯𑌶𑍍𑌚 | அசூயை யற்றவனும் |
| 𑌶𑍃𑌣𑍁𑌯𑌾𑌦𑌪𑌿† | கேட்கவாவது செய்வானே |
| 𑌸𑍋𑌽𑌪𑌿 | அவனுங்கூட |
| 𑌮𑍁𑌕𑍍𑌤𑌃 | சகலபாபங்களிலிருந்து விடுபட்டவனாய் |
| 𑌪𑍁𑌣𑍍𑌯𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌮𑍍‡ | புண்ணிய கருமங்களைச் செய்த வர்களுடைய |
| 𑌶𑍁𑌭𑌾𑌨𑍍 𑌲𑍋𑌕𑌾𑌨𑍍 § | நல்லலோகங்களை |
| 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍁𑌯𑌾𑌤𑍍 | அடைவான். |

எந்த மனிதனானவன் சிரத்தை (விசுவாசம்) யுடையவனும் (பிறர்படிக்கையில், இவன் டம்பத்திற்குப் படிக்கிறான், பணத்திற்காகப் படிக்கிறான், தப்பாகப் படிக்கிறானென்று சொல்லுவதாகிய) அசூயை யற்றவனும் கேட்கவாவது செய்வானே, அவனுங்கூட சகல பாபங்களிலிருந்தும் விடுபட்டவனாய் புண்ணியகருமங்களைச் செய்தவர்களுடைய (புண்ணிய கருமங்கள் செய்தவர்கள் அடையத்தகுந்த சுவர்க்காதி) நல்லலோகங்களை யடைவான். (எக)

---

எஉ. 𑌕𑌚𑍍𑌚𑌿𑌦𑍇𑌤𑌚𑍍𑌛𑍍𑌰𑍁𑌤𑌂 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌤𑍍𑌵𑌯𑍈𑌕𑌾𑌗𑍍𑌰𑍇𑌣 𑌚𑍇𑌤𑌸𑌾।
𑌕𑌚𑍍𑌚𑌿𑌦𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌮𑍍𑌮𑍋𑌹𑌃 𑌪𑍍𑌰𑌣𑌷𑍍𑌟𑌸𑍍𑌤𑍇 𑌧𑌨𑌞𑍍𑌜𑌯॥

| | |
|---|---|
| 𑌹𑍇 𑌪𑌾𑌰𑍍𑌥 | ஓ! அர்சுன! |
| 𑌏𑌤𑌤𑍍 | இதுவரையில் சொல்லிவந்தது |

* (ஸ்ரீ,வி) ஆஸ்திகபுத்தி யுடையவன்.

† (ஶம்) அர்த்தஞானமில்லாமல்கேட்டாலும். அபி - என்றதினால்,அர்த்த ஞானத்துடன் கேட்டவன் நல்லலோகத்தை யடைவானென்பதில் சந்தேகமில்லை யென்கிற கைமுதிகநியாயம் சொல்லப்பட்டது. (ஸ்ரீ,வி) இந்த அபி - சப்தத்தினால் கேட்டவனைப் பார்க்கிலும் படித்தவனுக்கும், படித்தவனைப்பார்க்கிலும் பிறருக்குச் சொன்னவனுக்கும், அவனைப்பார்க்கிலும் தேவதைகளுக்கும், முக்தியில் அதிக சுக முண்டென்று குறிப்பிடப்படுகிறது.

‡ - § (ரா) புண்ணிய கருமங்களைச் செய்து என்னை யாராதித்தவர்களான என் பக்தர்களுடைய நல்ல கூட்டங்களை.

| | |
|---|---|
| 𑌤𑍍𑌵𑌯𑌾 | உன்னாலே |
| 𑌏𑌕𑌾𑌗𑍍𑌰𑍇𑌣 𑌚𑍇𑌤𑌸𑌾 | ஒரேவிதமான மனதுடன் |
| 𑌶𑍍𑌰𑍁𑌤𑌂 𑌕𑌚𑍍𑌚𑌿𑌤𑍍 | கேட்கப்பட்டதா? |
| 𑌧𑌨𑌂𑌜𑌯 | ஓ! தனஞ்சயனே! |
| 𑌤𑍇 | உன்னுடைய |
| 𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌂𑌮𑍋𑌹𑌃 | அவிவேகத்தினாலுண்டான மோகமானது |
| 𑌪𑍍𑌰𑌣𑌷𑍍𑌟𑌃 𑌕𑌚𑍍𑌚𑌿𑌤𑍍 | போய்விட்டதா? |

ஓ! அர்சுனா! இதுவரையில் சொல்லிவந்தது உன்னாலே ஒரேவித மான மனதுடன் கேட்கப்பட்டதா? ஓ! தனஞ்செயனே! உன்னுடைய அவிவேகத்தினா லுண்டான (பெந்து சிநேகிதனென்கிற) மோகமானது போய்விட்டதா?

(ஸ॰) தன்னா லுபதேசிக்கப்பட்டதை அர்சுனன் செவ்வையாய்த் தெரிந்துகொண்டானா என்பதை அறியும் பொருட்டு பகவான் கேட்கிறார். (௭௨)

---

𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚.

௭௩. 𑌨𑌷𑍍𑌟𑍋𑌮𑍋𑌹𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌰𑍍𑌲𑌬𑍍𑌧𑌾 𑌤𑍍𑌵𑌤𑍍𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌾𑌨𑍍𑌮𑌯𑌾𑌚𑍍𑌯𑍁𑌤।
𑌸𑍍𑌥𑌿𑌤𑍋𑌽𑌸𑍍𑌮𑌿𑌗𑌤𑌸𑌨𑍍𑌦𑍇𑌹𑌃 𑌕𑌰𑌿𑌷𑍍𑌯𑍇𑌵𑌚𑌨𑌂𑌤𑌵

| | |
|---|---|
| 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨𑌉𑌵𑌾𑌚 | அர்சுனன்சொல்வது |
| 𑌅𑌚𑍍𑌯𑍁𑌤 | ஓ! நாசமற்றவரே |
| 𑌤𑍍𑌵𑌤𑍍𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌾𑌤𑍍 | உம்முடைய அநுக்கிரகத்தாலே |
| 𑌮𑌯𑌾 | என்னாலே |
| 𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌃 | ஆத்மசுவரூபானுசந்தானமானது |
| 𑌲𑌬𑍍𑌧𑌾 | அடையப்பட்டது |
| 𑌮𑍋𑌹𑌃 | அக்ஞானமானது |
| 𑌨𑌷𑍍𑌟𑌃 | போய்விட்டது |
| 𑌗𑌤𑌸𑌂𑌦𑍇𑌹𑌃 | சந்தேகமிவிருந்து யடைந்தவனாய் |
| 𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 𑌅𑌸𑍍𑌮𑌿 | இருக்கிறேன் |

தவ உம்முடைய
வசநம் வாக்கியத்தை
கரிஷ்யே நிறைவேற்றுவேன்.

அர்சுனன் ஸ்ரீ கிருஷ்ணபகவானை நோக்கிச் சொல்வது - ஓ! அச்சுதா! உம்முடைய அநுக்கிரகத்தினாலே என்னால் ஆத்மசுவரூபாநுசந்தானமானது அடையப்பட்டது. அக்ஞானம் போய்விட்டது. சந்தேக நிவிருத்தி யடைந்தவனா யிருக்கிறேன். உம்முடைய வாக்கியத்தை நிறைவேற்றுவேன். (நீர் சொன்னபடி செய்வேன் என்பது கருத்து).

(ஙு०) அவிவேகம் போய்விட்டதா என்கிற கேழ்விக்கு அக்ஞானம் போய்விட்டதென்று உத்தரம் சொல்லப்பட்டது. இந்த உத்தரத்தினால், சாஸ்திர விசாரத்திற்கு அக்ஞாந நிவிருத்தியும் ஆத்ம சுவரூபாநுசந்தானமும் தான் பலனென்று வெளியிட்டதாகிறது.

"உம்முடைய வாக்கியத்தை நிறைவேற்றுவேன்" என்றதினால், எனக்கு ஆகவேண்டியதாக ஒன்றுமில்லை, உம்முடைய உத்தரவை நிறைவேற்றுவது என்னுடைய கடமையென்று எண்ணுகிறேன், என்கிற தாத்பரியம் கிடைத்தது.

(ஙா) ஸ்ம்ருதிர்லப்தா — தத்துவஞான மடைந்தேன். அதாவது - ஆத்மா பிரகிருதி விலக்ஷணனென்றும் பிரகிருதி சுவபாவ முடையவனல்லவென்றும் ஞான சுவபாவ முடையவனென்றும் பரம புருஷனுக்கு சேஷனென்றும் பரமபுருஷனால் நியமிக்கப்படத் தக்கவனென்றும் இப்படிப்பட்ட ஞானமும், சகல ஜகத்தின் சிருஷ்டி ஸ்திதி சங்காரம் முதலிய லீலையை யுடையவும், சகல தோஷங்களுக்கும் விரோதியான கல்லியாண சுவரூபியானவும், அளவற்ற ஒப்பில்லாத ஞானம் பெலம் ஐசுவரியம் வீரியம் சக்தி தேஜஸ் முதலிய சகல கல்லியாணகுண சாகரமும் பிரம்ம சப்தத்தினாலே சொல்லப்படுகிறவுமான பரமபுருஷன் விஷயமான யதார்த்த ஞானமும், இப்படிப்பட்ட பராவர தத்துவங்களுடைய யதார்த்த ஞானாப்பியாசத்தினாலே நாளுக்குநாள் விருத்தி யடைகிற பரமபுருஷனுடைய பிரீதியையே முக்கியபலனா யுடைய நித்திய நைமித்திக கருமாநுஷ்டானம் நிஷித்தபரிகாரம் சமதமாதி முதலிய ஆத்ம குணங்களால் சம்பவிக்கிற பக்தியென்ற பரமபுருஷ உபாசனையினாலேயே வேதாந்தங்களா லறியத்தக்கவரும் பரமபுருஷரும் வாசுதேவருமாகிய நீர் அடையப்படத் தக்கவரென்கிற ஞானமும் கிடைத்தது. அதினாலே, கதஸந்தேஹ: — பெந்து சிநேகம் கருணை இவைகளினால் விருத்தியடைந்த விபரீதஞானத்தினா லுண்டான சகல

சந்தேகமும் நீங்கினவனுனேன். நஷ்டோமோஹ:—அநாத்மாவான பிர கிருதியில் ஆத்மாவென்றும், பரமபுருஷ சரீரமானதால் அவரையே ஆத்மாவாக உடைத்தான சகல சேதனு சேதன வஸ்துக்களை அப்படி யல்லவென்றும், பரமபுருஷனுடைய ஆராதனமா யிருக்கிறதினுலே பர மபுருஷப் பிராப்திக்கு ஏதுவான நித்திய நைமித்திக கருமங்கள் பெந்த ஏது வென்றும் உண்டாயிருந்த மோகமானது போய்விட்டது.

(ஸ்ரீ,வி) ஸ்ம்ருதிர்லப்தா — நாராயணதுவேஷிகளையும் அவர்களைச் சார்ந்தவர்களையும் கொல்லுவது அவசியமென்றும் அது பரம தரும மென்றும் ஞான மடையப்பட்டது.

(ஸூ) இந்த சுலோகத்தில் பகவானுடைய அநுக் கிரகத்தினுல் தானடைந்தப் பிரயோஜனங்களைச்சொல்லி கடைசியாய் பகவதாக்ஞை யை நிறைவேற்றுகிறதாகவும் அர்சுனன் சொல்லுகிறுன். "ஸ்ம்ருதி லப்தா—ஞாபகம் அல்லது நினைப்புண்டாயிற்று" இந்த ஞாபகமாவ தெதுவெனில் - தன் ஆத்மசுவரூப மிப்படிப்பட்ட தென்பது இப் போது ஞாபகத்திற்கு வந்தது. ஞாபகத்திற்கு வந்த தென்றதினுலே யே மறந்துபோன சுவரூபம் இப்போது ஞாபகம்வந்த தென்பது தெ ளிவாயிருக்கிறது. பிரகாசமான ஆத்ம சுவரூபம் மறந்துபோகிற தென் பது சம்பாவிதமோவென்றுல், அது சம்பாவிதமே. அற்பகாலம் வே ஷம் தரித்து நடனமாடுகிறவனுக்கு நடனகாலத்தில் தன்பூர்வ சுவரூப ஞானம் மறந்துபோகிறது. தன் சுபாஷையைவிட்டு அந்நியபாஷையி லேயே விவகரித்துக்கொண் டிருக்கிறவனுக்கு சுபாஷை மறந்துபோகி றது. பிரயத்தினத்தினுல் பூர்வசுவரூபமும் பூர்வபாஷையும்ஞாபகத்திற்கு வருகிறது. அப்படியிருக்க எத்தனைகோடி ஜன்மங்களாய் மறந்துபோ யிருந்த ஆத்ம சுவரூபம் சாக்ஷாத் பகவ தனுக்கிரகத்தினுலும் உபதே சத்தினுலும் ஞாபகம் வந்தது.

" நஷ்டோமோஹ:—மோகம் போய்விட்டது." மோகமாவதெதென் றுல், தேகமே யாத்மா என்கிற அக்ஞானம்தான். ஜீவன் முக்தன் போலொத்த ஞானிகள்தவிர மற்றவர்கள் தேகமே ஆத்மாவென்கிற விபரீதஞான முடையவர்களா யிருக்கிறுர்கள். தேகநாசத்தினுல் ஆத் மாவுக்கு நாசமுண்டாவதாக எண்ணுகிறுர்கள். புத்திரன் சகோதரன் குரு சிநேகிதன் முதலியவர்களை யெப்படி கொல்லுவேனென்று முத லில் அர்சுனன் சொன்னது தேகமே ஆத்மாவென்கிற அக்ஞானத்தி னுல் தான். "வாஸாம்ஸிஜீர்ணாநி"

ஆத்மா அழிவற்றவனென்றும் பழைய துணியைவிட்டு புதுத்துணியை கிரகிப்பதுபோல் ஆத்மா ஒரு தேகத்தைவிட்டு மற்ருெரு தேகத்தை கிரகிப்பதாகவும் அறிந்து தேகமே ஆத்மா என்கிற மோகம் போய் விட்டது.

"𑌗𑌤𑌸𑌂𑌦𑍇𑌹𑌃 — சந்தேகம் நீங்கியது" பிர்ம்மம் வேறேஜீவன் வேறேயா, பிர்ம்மமே ஜீவனு, என்கிற விஷயத்திலிருந்த சந்தேகமானது "𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌂𑌚𑌾𑌪𑌿𑌮𑌾𑌂𑌵𑌿𑌦𑍍𑌧𑌿" "𑌮𑌮𑍈𑌵𑌾𑌂𑌶𑍋𑌜𑍀𑌵𑌲𑍋𑌕𑍇" முதலிய பகவத்வாக்கியத்தினுல் பிர்ம்மத்தைதவிர ஜீவன் வேறேயல்லவென்கிற அபேதஞான முண்டானதினுல் சந்தேகம் போய்விட்டது.

"𑌤𑌵𑌵𑌚𑌨𑌂𑌕𑌰𑌿𑌷𑍍𑌯𑍇 — உம்முடைய வாக்கியத்தை நிறைவேற்றுகிறேன்" "𑌸𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑌮𑌪𑌿𑌚𑌾𑌵𑍇𑌕𑍍𑌷𑍍𑌯" முதலிய வாக்கியங்களால்உன் க்ஷத்திரிய தருமத்திலிருந்து நீ விலகக்கூடாது. "𑌯𑍁𑌦𑍍𑌧𑌾𑌯𑌕𑍃𑌤𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑌃 — யுத்தம் செய்யவேண்டியவனு யிருக்கிருய்" "𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑍇𑌵𑌾𑌧𑌿𑌕𑌾𑌰𑌸𑍍𑌤𑍇 — நீ கருமம் செய்வதிலேயே அதிகாரியாயிருக்கிருய்" முதலிய வாக்கியங்களினுல் யுத்தமாகிற கருமத்தைச் செய்யவேண்டியதாக பகவதாக்ஞையா யிருக்கிறபடியால் அதை நிறைவேற்றுவதாக அர்சுனன் சொன்னுன். (எ௩)

---

𑌸𑌂𑌜𑌯 𑌉𑌵𑌾𑌚.

எ௪. 𑌇𑌤𑍍𑌯𑌹𑌂𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌸𑍍𑌯 𑌪𑌾𑌰𑍍𑌥𑌸𑍍𑌯𑌚𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌃।
𑌸𑌂𑌵𑌾𑌦𑌮𑌿𑌮𑌮𑌶𑍍𑌰𑍌𑌷 𑌮𑌦𑍍𑌭𑍁𑌤𑌂𑌰𑍋𑌮𑌹𑌰𑍍𑌷𑌣𑌂॥

| | |
|---|---|
| 𑌸𑌂𑌜𑌯 𑌉𑌵𑌾𑌚 | ஸஞ்சயன்சொல்வது |
| 𑌅𑌹𑌂 | நான் |
| 𑌇𑌤𑌿 | இவ்விதமாக |
| 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 | மகாத்மாவான |
| 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌸𑍍𑌯 | வாசுதேவனுடையவும் |
| 𑌪𑌾𑌰𑍍𑌥𑌸𑍍𑌯𑌚 | அர்சுனனுடையவும் |
| 𑌅𑌦𑍍𑌭𑍁𑌤𑌂 | ஆச்சரியமானதும் |
| 𑌰𑍋𑌮𑌹𑌰𑍍𑌷𑌣𑌂 | மயிர்க்கூச்சமுண்டாக்கத்தக்கதுமான |
| 𑌇𑌮𑌂 𑌸𑌂𑌵𑌾𑌦𑌂 | இந்தசம்வாததை (சம்பாஷணையை) |
| 𑌅𑌶𑍍𑌰𑍌𑌷𑌂 | கேட்டேன். |

ஸஞ்சயன் திருதராஷ்டிர மகாராஜாவைநோக்கிச் சொல்வது—
நான் இவ்விதமான மகாத்மாவாகிய வாசுதேவனுடையவும் அர்சுனனுடையவும் ஆச்சரியமானதும் மயிர்க்கூர்ச்ச முண்டாக்கத் தக்கதுமான இந்த சம்வாதத்தைக் (அவர்க ளிருவருக்கும் நடந்த உத்தர பிரத்தியுத்தரங்களை) கேட்டேன். (௭௪)

---

௭௫. 𑌵𑍍𑌯𑌾𑌸𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌾𑌚𑍍𑌛𑍍𑌰𑍁𑌤𑌵𑌾𑌨𑍇𑌤𑌦𑍍𑌗𑍁𑌹𑍍𑌯𑌮𑌹𑌂𑌪𑌰𑌂।
𑌯𑍋𑌗𑌂𑌯𑍋𑌗𑍇𑌶𑍍𑌵𑌰𑌾𑌤𑍍𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌤𑍍 𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌤𑍍 𑌕𑌥𑌯𑌤𑌃 𑌸𑍍𑌵𑌯𑌂॥

| | |
|---|---|
| 𑌵𑍍𑌯𑌾𑌸𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌾𑌤𑍍 * | வியாஸமகரிஷியினுடைய அநுக்கிரகத்தினுலே |
| 𑌗𑍁𑌹𑍍𑌯𑌂 | இரகசியமானவும் |
| 𑌪𑌰𑌂 | உத்தமமானவும் |
| 𑌯𑍋𑌗𑌂 𑌏𑌤𑌤𑍍 | யோகசாஸ்திரமாகிய இந்த கீதையை |
| 𑌸𑍍𑌵𑌯𑌂 | தானுகவே |
| 𑌕𑌥𑌯𑌤𑌃 | அர்சுனனுக்குச்சொன்னவரும் |
| 𑌯𑍋𑌗𑍇𑌶𑍍𑌵𑌰𑌾𑌤𑍍 † | சகலயோகங்களுக்கு மீசனுனவருமான |
| 𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌤𑍍 | கிருஷ்ணபகவானிடத்திலிருந்து |
| 𑌅𑌹𑌂 | நான் |
| 𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌤𑍍 | நேராகவே |
| 𑌶𑍍𑌰𑍁𑌤𑌵𑌾𑌨𑍍 | கேட்டேன். |

வியாஸ மகரிஷியினுடைய அனுக்கிரகத்தினுலே, இரகசியமும் உத்தமமுமான யோகசாஸ்திரமாகிய இந்த கீதையை, தானுகவே அர்சுனனுக்குச் சொன்னவரும் சகலயோகங்களுக்கு மீசனுமான கிருஷ்ணபகவானிடத்திலிருந்து நான் நேராகவே கேட்டேன். (௭௫)

---

* (மீ,வி) பாரதயுத்தம் நடக்கும் காலத்தில், குருக்ஷேத்திரத்தில் யுத்தகளத்தில் நடக்கும் சகல சங்கதிகளும் எனக்கு நேராய்த் தெரியும்படியாயும் தெரிந்த சகலத்தையும் உமக்குச் சொல்லும்படியாயும் வியாஸபகவான் எனக்கு ஞானக்கண் காதுகளைக் கொடுத்திருக்கிறதாகிய அனுக்கிரகத்தினுல்.

† (நா) ஞானம் பெலம் சௌரியம் வீரியம் சக்தி தேஜஸ் முதலியவைகளுக்கு நிதியாயிருக்கிறவரான.

